லியோ டால்ஸ்டாய்

# போரும் அமைதியும்

## முதல் பாகம்



சீதை பதிப்பகம்

லியோ டால்ஸ்டாய்

# போரும் அமைதியும்

# WAR AND PEACE

(முதல் பாகம்)

பதிப்பாசிரியர் :

**எஸ். கௌமாரீஸ்வரி,**

எம்.ஏ., எம்.எல்.ஐ.எஸ்.

**சீதை பதிப்பகம்**

6, தோப்பு வெங்கடாசலம் தெரு, (பாரதி சாலை ஸ்டேட் வங்கி அருகில்),
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.
✆ : 28443791

**சி. மகேந்திரன்**
*ஆசிரியர், தாமரை*

# அணிந்துரை

பன்முகத்தோடு தன்னை உணர்ந்து வளர்த்தெடுக்கும் தேவை இன்றைய தமிழக வாசகர் உலகத்திற்கு அவசியமாகி விட்டது. சின்னத்திரை, பெரியத் திரை என்று மக்களின் கவனமெல்லாம் எங்கேயோ கடத்திச் செல்லப்படும் காலத்தில் மனிதனை மனிதனாக காப்பாற்றி வைத்திருப்பதே நெருக்கடி மிகுந்த ஒன்றாக மாறிவிட்டது.

மனிதனின் இந்த மனிதத் தன்மையைக் காப்பாற்றும் மருந்து நூல்களில்தான் இருக்கின்றது. தமிழ்ப் படைப்புலகு எல்லையில்லா நூல்களை வெளியிட்டுக் கொண்டிருந்தாலும், இன்றைய தமிழகத்தின் தேவைக்கு இது போதுமானதாக இல்லை. எனவே அயல் மொழிகளிலிருந்து தமிழாக்கம் செய்யப்படுவதும், இன்றைய காலத்தின் அவசியமாக இருக்கிறது.

தமிழாக்கி பின் அச்சாக்கும் முயற்சிகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று சமகாலப் படைப்புகளை மொழிபெயர்த்து வெளியிடுவது. மற்றொன்று, ஆரம்ப கால நூல்களை (முன்னரே மொழியாக்கம் செய்யப்பட்டவை) மீண்டும் இன்றைய நவீன புரிதலுக்கேற்ப தமிழாக்கம் செய்து வெளியிடுதல். அண்மைக் காலங்களில் மொழியாக்கங்களில் மீண்டும் மீளாக்கம் செய்தல் கூடுதலாகவுள்ளது. சிறிய மூலதனத்தில் கணிணியின் துணையுடன் நூல்களை வெளியிட முடியும் என்பது இந்த நூல்களின் வருகைக்கு முக்கியமான காரணமாகிறது.

கடந்த காலத்தின் அரிய மொழியாக்கங்கள் பல, இப்பொழுது மீண்டும் வந்து நம்மை திகைக்க வைக்கின்றன. சில புத்தகங்கள் மீண்டும் வாசிக்க இயலுமா, என்ற ஏக்கத்தை இந்த நூல்களின் வருகை மாற்றியமைத்துள்ளது. இது வரவேற்கத்தக்கது. ஆனாலும், சில நூல்களில், இந்த நூல் பற்றிய மொழியாக்க வரலாறுத் தொடர்ச்சி குறிப்பிடப்படுவதில்லை. ஆரம்ப கால மொழியாக்க வாழ்க்கை மிகவும் கடினம் நிறைந்தது. அத்தகைய முன்னோடிகளின் முயற்சிகள் பதிவு செய்யப்பட வேண்டியவை. சில நூல்களில், இந்த குறிப்புவிடுபட்டு விடுகின்றது. இது வரவேற்கக் கூடியதல்ல.

லியோ டால்ஸ்டாய், உலக ஞானிகளில் ஒருவர். இந்தியத் தந்தை மகாத்மாவிற்கே வழிகாட்டிய பெருமையைப் பெற்றவர். இவரது

புகழ்மிக்க 'போரும் அமைதியும்' என்ற மொழியாக்க நூலை இப்பொழுது வெளியிட்டுள்ளார்கள்.

திரு. ராஜசேகரன் துடிப்பு மிக்கவர். இவர் வெளியிட்டுள்ள பல நூல்கள் மிகக் குறைந்த விலையில் மக்களை சென்றடைந்திருக் கிறது. இவரது 'சீதை பதிப்பகம்' லியோ டால்ஸ்டாயின் 'போரும் அமைதியும்' என்ற மொழியாக்க நூலை வெளியிட்டுள்ளது. இம் மொழிபெயர்ப்பை, பதிப்பகக் குழு செம்மைப்படுத்தியுள்ளது.

லியோ டால்ஸ்டாயின் ஆங்கிலத்தில் வெளியிட்ட War & Peace என்னும் நூல், அறிஞர் டி. எஸ். சொக்கலிங்கம் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இந்த நூல் சக்தி பிரசுராலயத்தின் நிறுவனர் திரு. வை.கோவிந்தன் அவர்களால், பதிப்பிக்கப்பட்டது. விற்பனை உரிமை என். சி. பி. எச்.யிடம் அளிக்கப்பட்டுள்ளது. இந்த மொழிபெயர்ப்பைப் பற்றி பதிப்பாளர் வை.கோவிந்தன் குறிப்பிடும் போது, ''பேராசிரியர் டி.எஸ்.சொக்கலிங்கம் அவர்களைத் தமிழாக்கித் தருமாறு கேட்டோம். பேராசிரியர் என்றால் 'புரபொசர்' என்ற ஆங்கிலச் சொல்லின் மொழிபெயர்ப்பு அன்று. உள்ளபடியே அவர் பேராசிரியர். தமிழ்நாட்டில் தமிழ் வளம்பெறச் செய்தவர்களில் இவர் முக்கியமானவர். மொழி பெயர்ப்பில் ஐம்பது சதவீதம் மார்க் கிடைத்து விட்டால் அது நல்ல மொழிபெயர்ப்பு என்பது என் கருத்து. ஸ்ரீ சொக்கலிங்கம் அவர்கள் தம் மொழிபெயர்ப்பில், பெரிதும் வெற்றி கண்டிருக்கிறார் என்பது என் கருத்து'' என்று கூறியுள்ளார்.

'லியோ டால்ஸ்டாய் நூலை, தாய் மொழியான ரஷ்ய மொழியில் தான் எழுதினார். லூய்சா, அயில்மிர் மாட் ஆகியோர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்கள். இந்த இருவரின் மொழிபெயர்ப்புதான் சிறப்பிற்குரியது' என்று, உலக அறிஞர்களில் ஒருவரான பெர்னாட்ஷா குறிப்பிட்டுள்ளார். இந்த ஆங்கில மொழியாக்கத்தைத் தான் திரு. டி. எஸ். சொக்கலிங்கம் அவர்கள் தமிழ்ப்படுத்தியிருக்கிறார்கள்.

பதிப்பின் நிறைகுறைகளைப் பற்றி வாசகர்கள் தீர்மானிப்பது தான் நியாயமானதாக இருக்க முடியும். நூல் சம்பந்தப்பட்ட இறுதி தீர்ப்புக் கூறும் நீதிபதிகள் வாசகர்கள்தான். ஆனாலும் உலகப் புகழ்பெற்ற, இந்த நூலை தமிழ் வாசகர்கள் கட்டாயம் படிக்க வேண்டும் என்று கேட்டு கொள்ளும் உரிமை எனக்கிருக்கிறது. இந்த நூலை, அனைவரும் வாசித்து, பயன் பெறுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

22.7.2003

சென்னை

**சி. மகேந்திரன்**

# நன்றி !

இந்நூல் வெளிவர பெரிதும் உதவியாய் அமைந்த அமரர் டி.எஸ். சொக்கலிங்கம் அவர்களுக்கும், ‘சக்தி காரியாலயம்’ பதிப்பாளர் அமரர் வை. கோவிந்தன் அவர்களுக்கும், **N.C.B.H.** நிறுவனத்தாருக்கும் மொழிபெயர்ப்பை காலத்திற்கு ஏற்ப செம்மைபடுத்திய மொழிபெயர்ப்பு குழுவினர்க்கும், இந்நூல் அட்டைப் படங்கள் தந்து உதவிய சிங்காரவேலர் நூலகம், சென்னை-17 நூலகர் தோழர் கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும், அணிந்துரை வழங்கி ஊக்கப்படுத்திய ‘தாமரை’ இதழ் ஆசிரியர் சி. மகேந்திரன் அவர்களுக்கும்

**நன்றி ! நன்றி ! ! நன்றி ! ! !**

# போரும் அமைதியும்

1

1

'நல்லது, இளவரசே, அப்படியானால் ஜினோவா, லூக்கா ஆகிய பிரதேசங்கள் போன பார்ட்டுகளின் குடும்பச் (நெப்போலியன் குடும்பம்) சொத்துகளாய் விட்டன. உம்மை ஒரு விஷயத்தில் எச்சரிக்க விரும்புகிறேன். (நெப்போலியன்) அவன் இப்படிச் செய்ததற்கு அர்த்தம் யுத்தமே தான் என்று நீர் சொல்லாவிட்டால் அல்லது அந்தக் கிறிஸ்து துரோகி இருக்கிறானே அவன் செய்துவருகிற அக்கிரமங்களையும், கொடுமைகளையும் தாங்கிப் பேசுவதாய் இருந்தால் உமக்கும் எனக்கும் இனி ஒன்றும் இல்லை. நீர் எனக்கு இனி நண்பரும் இல்லை. என்னுடைய 'விசுவாசமுள்ள அடிமை' என்று உம்மை வருணித்துக்கொள்ளுவீரே அதுவும் இனி இல்லை. சரி, சௌக்கியமா? உம்மைப் பயமுறுத்திவிட்டேன் என்று தோன்றுகிறது. உட்காரும், செய்திகளையெல்லாம் சொல்லும்.'

இம்மாதிரிப் பேச்சு நடந்த காலம் 1805-ஆம் ஆண்டு, சூலை மாதம். பேசியவர் பெயர் அன்னா பாவ்லாவ்னா ஷெரெர். ருஷ்ய சக்கரவர்த்தினி மரியா பெடாராவ்னாவின் அபிமான தோழி. அவள் இம்மாதிரிப் பேசி இளவரசர் வாசைலியை வரவேற்றாள். இளவரசர் உயர்ந்த தகுதியும், முக்யத்துவமும் வாய்ந்தவர். அவர்தாம் முதன்முதலில் அவளது வரவேற்புக்கு வந்தவர். அன்னா பாவ்லாவ்னாவுக்குச் சில நாள்களாக இருமல். பிரஞ்சு மொழியில் 'இலாகிரிப்' என்று அவள் சொன்னாள். செயின்ட் பீட்டர்ஸ்பர்க் நகரத்தில் அச்சமயம் அந்த வார்த்தை புதிதாக அடிபட்டது. உயர்ந்த நிலையிலுள்ளவர்கள் மட்டும் அதை உபயோகித்துவந்தார்கள்.

அவளுடைய அழைப்புகளையெல்லாம் ஒன்றுகூட விடாமல் பிரஞ்சு மொழியிலேயே எழுதியிருந்தாள். அன்று காலையிலே சிவப்புப் பட்டைச் சேவகன் அந்த அழைப்புகளைப் பட்டுவாடா செய்தான். அந்த அழைப்பில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

'இளவரசே, (கோமகனே) வேறு முக்கியமான வேலை உங்களுக்கு இல்லாமல் இருந்தால், இந்த நோயாளியோடு இன்று மாலை வரவேற்பில் கலந்துகொள்ளுவதில் தங்களுக்குச் சள்ளையாக இல்லாமல் இருந்தால், தாங்கள் இன்றிரவு 7-மணி முதல் 10-மணி வரையில் வருகை செய்தால் நான் மிக்க மகிழ்ச்சி அடைவேன். -அனெட்டி ஷெரெர்'

'அட கடவுளே, என்ன கடுமையான தாக்குதல்' என்று இந்த வரவேற்பைப் பற்றிக் கொஞ்சமும் இலட்சியமில்லாமல் இளவரசர் பதிலளித்தார். அவர் அப்பொழுதுதான் வந்தார். அரசு உடை அணிந்து மார்பில் பதக்கங்களை அணிந்திருந்தார். அவர் முகம் களங்கமற்று விளங்கியது. நம்முடைய மூதாதையர்கள், பேசியது மட்டுமல்ல, நினைப்பதைக்கூடப் பிரஞ்சு மொழியில்தான் செய்துவந்தார்கள். அதே பிரஞ்சு மொழியில்தான் இளவரசரும் பேசினார். அரசவையிலும் உயர்ந்தநிலையில் உள்ளவர்கள் கூட்டங்களிலும் பழகி அநுபவப்பட்ட தகுதி மிகுந்த ஒருவருக்கு இயற்கையாய் இருக்கக்கூடிய அமைதியும் ஆதரவும் காட்டும் குரல் அவருடைய பேச்சில் இருந்தது. அன்னா பாவ்லாவ்னாவின் பக்கமாகச் சென்று அவள் கையை எடுத்து முத்தமிட்டு, அவளுக்குத் தம்முடைய மணமும் ஒளியும் உள்ள வழுக்கைத் தலையைத் தாழ்த்தி மரியாதை காட்டிவிட்டுக் கம்பீரமாய் இருக்கையில் அமர்ந்தார்.

'அருமை நண்பரே, உம்முடைய உடல்நலம் எப்படி இருக்கிறதென்று முதலில் சொல்லி, உம்முடைய நண்பரின் மனக் கவலையைப் போக்குவீராக' என்று தமது குரலை மாற்றாமல் கூறினார்.

மரியாதையும், அநுதாபமும் இருப்பதாக அவருடைய வார்த்தைகள் தோன்றினாலும் அவர் பேச்சில் அலட்சியமும், கிண்டலும் இருப்பது தெளிவாய்த் தெரிந்தன.

'மனக்குறை இருக்கும்போது யாராவது சௌக்கியமாய் இருக்க முடியுமா? இம்மாதிரிக் காலங்களில் உணர்ச்சி என்பது கொஞ்சமாவது இருக்கிற யாரும் அமைதியாய் இருக்கத்தான்

முடியுமா? வரவேற்பு முடிகிறவரையில் நீர் இங்கு தங்குவீரென்று நம்புகிறேன்' என்றாள் அன்னா பாவ்லாவ்னா.

'இங்கிலீஷ் ஸ்தானாதிபதியின் விருந்து என்னாவது? இன்று புதன் கிழமையல்லவா? போய்த் தலையைக் காட்டிவிட்டு வருதல் வேண்டும். என் மகள் இங்கே வந்து என்னை அழைத்துப் போவாள்' என்றார் இளவரசர்.

'இன்றைய விருந்து விலக்கப்பட்ட தென்று நான் நினைத்திருந்தேன். இந்த விழாக்களும், வாண வேடிக்கைகளும் எனக்கு அலுத்துப் போயின' என்றாள் அன்னா.

'உம்முடைய விருப்பம் அதுவென்று அவர்களுக்குத் தெரிந்திருந்தால் அவர்கள் விருந்தை விலக்கியிருப்பார்கள்' என்று சாவி கொடுத்த கடிகாரம் ஒரே மாதிரி ஓடுவதுபோலத் தான் சொன்னவற்றில் கொஞ்சமும் நம்பிக்கை இல்லாமற் சொன்னார் இளவரசர்.

'கிண்டல் செய்தது போதும். அந்த நோவோசில்ட்செவ்வரின் அறிக்கையைப்பற்றி என்ன முடிவாயிற்று? உமக்குத்தான் எல்லாம் தெரியுமே' என்றாள் அன்னா.

'அதைப்பற்றி யார் என்ன சொல்ல முடியும்? என்ன முடிவாயிற்று? போனபார்ட்டுக்கு இனி பின்வாங்க வழியில்லை என்று அவர்கள் தீர்மானித்திருந்தார்கள். அதே மாதிரி நாமும் பின் வாங்கப் போவதில்லை என்றே நினைக்கிறேன்' என்று உற்சாகமில்லாத அலட்சியமான குரலில் பதிலளித்தார்.

ஒரு நடிகர் சாரமில்லாத கட்டத்தில் பேசுவதைப்போல வாசைலி மெதுவாய் முனகினார். ஆனால், அன்னாவோ நாற்பது வயதாகியுங்கூட உணர்ச்சியும், கலகலப்பும் கொண்டிருந்தாள். எப்பொழுதும் உற்சாகத்தோடு காணப்படுவது அவளுடைய சுபாவம். உற்சாகமாய் இல்லாத சமயங்களிலும்கூட, அவளிடம் உற்சாகத்தையே எதிர்பார்ப்பவர்கள் ஏமாந்து விடக்கூடாது என்பதற்காக உற்சாகத்தை உண்டுபண்ணிக்கொள்வாள். கவர்ச்சிகரமான அவள் புன்னகை, அவளுடைய தேய்ந்து வரும் அழகிற்கு பொருத்தமில்லாமல் இருந்தாலும், அவள் உதடுகளில் அந்தப் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது. அந்தப் புன்னகை அவளுடைய அழகின் குறையைச் செல்லப் பிள்ளைப் போலக் காட்டிக் கொண்டிருந்தாலும் அதைத் திருத்த அவளுக்கு விருப்பமோ அல்லது அவசியமென்ற நினைப்போ இல்லை.

அரசியல் செய்திகளைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது திடீரென்று அன்னா பொங்கி எழுந்து சொன்னாள்:- 'ஓ! ஆஸ்திரியாவைப் பற்றி என்னிடம் பேசாதீர்கள். ஒருவேளை எனக்கு செய்தி விளங்காமல் இருக்கலாம். ஆனால், ஆஸ்திரியா எப்பொழுதும் போரை விரும்பியதுமில்லை, தற்போழுது விரும்பவும் இல்லை. அது நம்மை காட்டிக் கொடுக்கிறது. ருஷ்யா ஒன்றினால்தான் ஐரோப்பாவைக் காப்பாற்ற முடியும். நமது மதிப்புயர்ந்த மன்னர் தமது உயரிய கடமையை அறிவார். அதற்குத் தக்கபடி அவர் நடக்கவும் செய்வார். அது ஒன்றினால்தான் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. உலகிலேயே ஒரு பெரிய கௌரவமான வேலையை நமது ஆச்சரியமான மன்னர்தாம் செய்ய வேண்டியிருக்கிறது. அவர் நேர்மையும், கண்ணியமும் மிக்கவராதலால் கடவுள் அவரைக் கைவிட மாட்டார். அவர் தமது கைங்கரியத்தைச் செய்து அந்தப் புரட்சிப் பூதத்தை நசுக்கிவிடுவார். அந்தக் கொலைகாரன், சண்டாளன் இருக்கிறானே அவனால்தான் இந்தப் பூதம் இன்னும் படுமோசமாகி விட்டது. நாம்தாம் தனியாக நின்று, அவன் நிரபராதியைக் கொன்றதற்குப் பழிவாங்குதல் வேண்டும் - அப்படியானால், நமக்குத் துணையாக யாரை நாம் நம்பலாம்? - இங்கிலாந்து அதனுடைய வாணிகப் புத்தியைக் கொண்டு நம்முடைய சக்கரவர்த்தி அலெக்சாண்டரின் பெருந்தன்மையான உள்ளத்தை அறிந்துகொள்ளப்போவதில்லை. அறியவும் முடியாது. மால்ட்டாவிலிருந்து வெளியேற அது மறுத்துவிட்டது. நமது செய்கைகளில் ஏதோ கமுக்க நோக்கங்கள் இருப்பதுபோல நினைத்து அவற்றைக் கண்டுபிடிக்க முயற்சி செய்கிறது. நோவோசில்ட்செவ்விற்கு என்ன பதில் கிடைத்தது? ஒன்றுமில்லை. தன்னலத் தியாகியான நம் சக்கரவர்த்தி தமக்கென்று எதையும் கேட்கவில்லை. மனித சமூகத்தின் நன்மை ஒன்றையே அவர் விரும்புகிறார். அவருடைய தியாக புத்தியை ஆங்கிலேயர் அறிந்துகொள்ளவில்லை. அறியவும் அவர்களால் முடியாது. அவர்கள் என்ன வாக்குறுதி கொடுத்து விட்டார்கள்? ஒன்றுமில்லை. ஏதோ அற்ப சொற்பமாய் அவர்கள் கொடுத்த வாக்குறுதியையும் நிறைவேற்றப் போவதில்லை. போனபார்ட்டை ஒருவராலும் வெல்ல முடியாது என்றும், ஐரோப்பாவே அவன் முன்னால் சக்தியற்று நிற்பதாகவும் பிரஷ்யா எப்பொழுதுமே சொல்லிக்கொண்டிருக்கிறது. ஹார்டன்பர்க் சொல்லுவதிலோ ஒரு வார்த்தையைக்கூட நான் நம்பத் தயாராகவுமில்லை. பிரஷ்யாவின் நடுநிலைமை என்று பிரபலப்படுகிறதே அது வெறும் வலை.

கடவுளிடமும் நமது மதிப்பிற்குரிய சக்கரவர்த்தியின் பெருந்தன்மையிலும்தான் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. அவர் ஐரோப்பாவைக் காப்பாற்றுவார்.'

மடமடவென்று பேசி வந்த அன்னா தன்னுடைய படபடப்பைத் திடீரென்று அறிந்து பேச்சை நிறுத்திப் புன்னகை கொண்டாள்.

'பிரஷ்ய மன்னரிடம் வின்ட்சிங்கெரோடை அனுப்பியதற்குப் பதிலாக உம்மை அனுப்பியிருந்தால் மன்னரின் சம்மதத்தை உடனே சுலபமாய்ப் பெற்றிருப்பீர். நீர் மிகுந்த வாய்ச் சாலகம் உடையவர்' என்று புன்சிரிப்புடன் கூறிய இளவரசர் 'எனக்கு ஒரு கோப்பை தேநீர் கொடுக்கிறீர்களா?' என்று கேட்டார்.

'இதோ ஒரு நொடியில். ஒரு செய்தி' என்று அமைதியடைந்து அவள் சொன்னாள். 'இரண்டு சுவையான ஆள்களை இன்று எதிர்பார்க்கிறேன். ஒருவர் மார்ட்டிமார்ட் கோமகன். மான்ட்மாரென்ஸி என்ற பிரபல பிரஞ்சு குடும்பத்தோடு ரோஹன் குடும்பத்தாரால் சம்பந்தப்பட்டவர். பிரஞ்சு நாட்டை விட்டு இங்குக் குடியேறிய உண்மையான குடியேறிகளில் ஒருவர். மற்றொருவர் மாரியா பாதிரியார். அந்த ஆழ்ந்த சிந்தனைக்காரரை உமக்குத் தெரியுமா? சக்கரவர்த்தி அவருக்குப் பேட்டி கொடுத்தார். நீர் கேள்விப்பட்டிருக்கிறீரா?'

'அவர்களைச் சந்திக்க மகிழ்ச்சி அடைவேன். ஆனால்,' என்று ஏதோ அப்பொழுதுதான் நினைவுக்கு வந்ததுபோல் அலட்சியமாய்ப் பேச ஆரம்பித்தார் இளவரசர். ஆனால், அன்று அவர் அங்கே வந்ததன் முக்கிய நோக்கமே அதற்காகத்தான். 'இலார்ட் பங்க்கு என்பவரை வியன்னா நகரத்தில் முதல் செயலாளராக நியமிக்க வேண்டும் என்று சக்கரவர்த்தியின் தாயார் விரும்புவது உண்மையா? அவர் எந்தவிதத்திலும் உபயோகம் இல்லாத ஒரு அப்பாவி?.'

தன்னுடைய மகனுக்கு இந்தப் பதவியை வாங்கிக் கொடுக்க இளவரசர் வாசைலி விரும்பினார். ஆனால், மற்றவர்கள் சக்கரவர்த்தினி மரியா பெடாராவ்னா மூலம் இது இலார்ட் பங்கிற்குக் கிடைக்குமாறு முயற்சி செய்து வந்தார்கள்.

சக்கரவர்த்தியின் விருப்பங்களையோ, ஆசைகளையோ பற்றிக் மன வேறுபாட்டைக் கூற அவளுக்கோ, அல்லது வேறு யாருக்குமோ உரிமை கிடையாது என்பதனைக் காட்டும்

அறிகுறியாக, இளவரசர் வாசைலியின் பேச்சுகளைக் கேட்டவுடன் அன்னாவின் கண்கள் இடுங்கின.

'இலார்ட் பங்கின் பெயரைச் சக்கரவர்த்தினிக்கு அவருடைய சகோதரி சிபாரிசு செய்தார்' என்று மட்டும் சோகக் குரலில் அன்னா பதிலளித்தாள்.

சக்கரவர்த்தியின் பெயரை அவள் உச்சரித்தபோது திடீரென்று அவள் முகத்தில் ஆழ்ந்த உண்மையான பக்தியும், மதிப்பும் சோகமும் கலந்து விளங்கின. சக்கரவர்த்தினியின் பெயரை உச்சரிக்கிற ஒவ்வொரு தடவையும் அவள் முகபாவம் இப்படி மாறுவது வழக்கம். 'இலார்ட் பங்கிற்கு மிகுந்த மதிப்புக் காட்ட வேண்டுமென்று சக்கரவர்த்தினி முடிவு செய்திருக்கிறார்' என்று அவள் கூறியபோது அவள் முகம் மீண்டும் சோகத்தில் ஆழ்ந்தது.

இளவரசர் மௌனமாய் இருந்தார். பாராமுகமாய் இருப்பது போலத் தோன்றியது. ஆனால், அன்னா விடவில்லை. சக்கரவர்த்தினிக்குச் சிபாரிசு செய்யப்பட்டவரைப்பற்றி இளவரசர் பேசியதைக் கண்டிக்கவும் அதே சமயத்தில் அவரைச் சமாதானப்படுத்தவும் விரும்பியவளாய்ப் பெண்களுக்கும் அரசவையில் உள்ளவர்களுக்கும் உரிய திடீர் வேகத்துடனும், அவளுக்கு இயல்பாயுள்ள சாமர்த்தியத்துடனும், பேச ஆரம்பித்தாள்:-

'இப்பொழுது உமது குடும்ப விவகாரத்தைப்பற்றிப் பேசப்போகிறேன். உம்மகள் பருவ மங்கையானதிலிருந்து அவளுடைய அழகு ஒவ்வொருவரையும் கவர்ந்துவிட்டதென்பது உமக்குத் தெரியுமா? அவள் பேரழகியாய் இருக்கிறாள் என்று எல்லோரும் சொல்லுகிறார்கள்.'

இதைக் கேட்டதும் தனது மரியாதையையும், நன்றியையும் தெரிவிப்பதற்காக இளவரசர் தலை வணங்கினார்.

'நான் அடிக்கடி நினைப்பதுண்டு' என்று சொல்லிக்கொண்டு கவர்ச்சிப் புன்னகையுடன் இளவரசரை நெருங்கி உட்கார்ந்தாள். அரச, உயர் வட்டாரப் பேச்சுகள் முடிந்து சொந்தப் பேச்சுகள் ஆரம்பமாகின்றன என்பதை இது காட்டியது. அவள் சொன்னாள்:-

'வாழ்க்கையின் இன்பங்கள் சில சமயங்களில் எவ்வளவு வேறுபாடாக விநியோகிக்கப்படுகின்றன என்று நான் அடிக்கடி நினைப்பதுண்டு. உமக்கு எதற்காக அந்த இரண்டு குழந்தை இரத்தினங்களை விதி கொடுத்தது? உம் இளைய மகன்

அனடோலைப்பற்றி நான் குறிப்பிடவில்லை. அவனை எனக்குப் பிடிக்கவில்லை. (அதனை யாரும் மறுக்கத்தான் இடங்கொடுக்கப் போவதில்லை என்பதனைக் காட்டுவதுபோலத் தனது இமைகளை உயர்த்தினாள்.) என்ன அருமையான இரண்டு குழந்தைகள்! அவர்களின் அருமை மற்றவர்களுக்குத் தெரிந்ததைவிட உமக்குக் குறைவாகவே தெரிந்திருக்கிறது. அதனால் அவர்களைப் பெற நீர் அருகரல்லர்.'

உடனே மகிழ்ச்சி பொங்கித் தனது புன்னகையை முறுவலித்தாள்.

'நான் என்ன செய்வது? புத்திரப் பேற்றுக்குண்டான வேகம் என்னிடம் இல்லை என்று ஒரு வேளை இலாவாட்டர் சாஸ்திரி சொல்லலாம்.'

'விளையாடாதீர். நான் உம்முடன் முக்கியமான பேச்சுப் பேச விரும்புகிறேன். உமது இளைய மகன் மீது எனக்கு வெறுப்பு என்பது உமக்குத் தெரியுமல்லவா? (சோர்வான முகத்தோடு) நம் இருவருக்கும் மட்டும் தெரிந்ததாய் இருக்கட்டும். உம் இளைய மகனைப்பற்றிச் சக்கரவர்த்தினியிடம் தெரிவித்த போது உமக்காக நிரம்பவும் இரங்கினார்.'

இளவரசர் பதில் சொல்லவில்லை. ஆனால் பதிலுக்காக அவர் முகத்தை அவள் பார்த்தாள். அவர் முகத்தைச் சுளித்தார்.

'என்னை என்ன செய்யச் சொல்லுகிறீர்? அவர்களின் கல்விக்காக ஒரு தந்தை என்ன செய்ய முடியுமோ அவ்வளவையும் செய்தேன். கடைசியில் அவர்கள் முட்டாள்களாய் வந்து முடிந்தார்கள். ஹிப்பாலைட் ஒரு அமைதியான முட்டாள். அனடோலோ ஒரு படபடத்த முட்டாள். இருவருக்குள்ளும் இஃது ஒன்றுதான் வேறுபாடு' என்றார் இளவரசர்.

இயற்கையான புன்சிரிப்புடனும் ஆனால் வழக்கத்திற்கு அதிகமான படபடப்புடனும் அவர் இதைச் சொன்னார். அவர் பேசியபோது அவர் வாயைச் சுற்றி ஏற்பட்ட சுருக்கங்கள் அருவருப்பையும் முரட்டுத் தன்மையையும் தெளிவாய்க் காட்டின.

'உம்மைப் போன்றவர்களுக்கெல்லாம் குழந்தைகள் ஏன் பிறக்க வேண்டும்? நீர் ஒரு தகப்பனாராய் மட்டும் இல்லாமல் இருந்தால் உம்மீது நான் வருத்தப்படுவதற்கு ஒன்றுமே இருக்காது.'

இம்மாதிரி சொல்லிவிட்டுச் சிந்தனையோடு இள்வரசரை அன்னா நோக்கினாள்.

'நான் உம்முடைய விசுவாசமுள்ள அடிமை. அதனால் என் குழந்தைகள் என் வாழ்க்கையிலேயே ஒரு சாபக்கேடு என்பதனை

உம்மிடம் மட்டும் ஒப்புக்கொள்ளுகிறேன். அந்தப் பாரத்தை நானேதான் சுமந்தாதல் வேண்டும். இப்படித்தான் நான் என் மனத்திற்குச் சமாதானம் கூறிக்கொள்கிறேன். வேறு வழியில்லை!'

அதற்கு மேல் அவர் பேசவில்லை. கொடுமையான விதிக்கு உட்படவேண்டிய தம்முடைய திக்கற்ற நிலைமையைத் தம்முடைய சமிக்கையால் காட்டினார். அன்னா ஆழ்ந்து சிந்தித்தாள்.

'உம்முடைய ஊதாரி மகன் அனடோலின் திருமணத்தைப் பற்றி நீர் நினைப்பதே இல்லையா? திருமண முடிச்சுகள் போடுவதற்குக் கிழவிகளுக்கு ஒரு தனியான ஆசை உண்டு என்று சொல்லுவதுண்டு. எனக்கு அந்தக் குறை கிடையாது என்றாலும் எனக்கு ஓர் இளம் பெண்ணைத் தெரியும். அவளுக்கும் அவள் தந்தைக்கும் ஒத்துக்கொள்ளவில்லை. அவள் உங்கள் சொந்தந்தான். அவள்தான் இளவரசி மேரி பால்கோன்ஸ்கயா.

இளவரசர் வாசைலி பதில் பேசவில்லை. ஆனாலும், உலகமறிந்த ஒருவருக்குள்ள சட்டென்று அறியும் நினைவோடும், கவனத்தோடும் அந்தச் செய்தியை ஆலோசிப்பதாகக் காட்டுவதற்குத் தலையை மட்டும் அசைத்தார்.

தம்முடைய மனத்துயரமான நினைப்புகளை இளவரசர் வாசைலியால் அடக்க முடியவில்லை. 'அனடோலுக்காக ஆண்டுக்கு நாற்பதாயிரம் ரூபிள்கள் நான் செலவிடுகிறேன் என்பது உமக்குத் தெரியுமா?' கொஞ்ச நேரம் மௌனமாய் இருந்துவிட்டு மீண்டும் சொல்லலானார். 'இம்மாதிரியே போய்க்கொண்டிருந்தால் 5 ஆண்டுகளுக்கு எவ்வளவு பணமாகிவிடும்! தந்தைகளாகிய எங்களுக்கு இதுதான் கதி உம்முடைய இளவரசி பணக்காரிதானா?'

'அவள் தந்தை பெரிய பணக்காரர். ஆனால், கஞ்சன். கிராமத்தில் வசிக்கிறார். அவர்தாம் இளவரசர் பால்கோன்ஸ்கி. காலஞ்சென்ற சக்கரவர்த்தியிடம் இராணுவத்தில் வேலை பார்த்து விலகியவர். ''பிரஷ்யாவின் மன்னர்'' எனறு அவருக்கு ஒரு கேலிப் பெயர் உண்டு. நிரம்ப புத்திசாலி. ஆனால், கிறுக்கன்; வெறும் தொண தொணப்புக்காரன். பாவம் அந்தப் பெண்ணுக்கு மகிழ்ச்சி என்பதே கிடையாது. அவளுக்கு ஒரு சகோதரன் உண்டு. உமக்கு அவரைத் தெரியும் எனறு நினைக்கிறேன். அவர் லிசா மைனனை திருமணம் செய்திருக்கிறார். குட்டுஜோவின் மெய்க்காப்பாளனாக இருக்கிறார். இன்றிரவு வரவேற்புக்கு வருவார்.'

திடீரென்று அன்னாவின் கையைப் பற்றி இழுத்துக்கொண்டு 'அன்புள்ள அன்னெட்டி, நான் சொல்லுவதைக் கேள். அதனை ஏற்பாடு செய்துவிடு. நான் எப்பொழுதுமே உம்முடைய விசுவாசமுள்ள அடிமையாய் இருப்பேன். அவள் பணக்காரி, நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவள். அவைதாம் எனக்கு வேண்டியவை' என்றார் இளவரசர்.

தமக்கே உரித்தான நெருங்கிய தொடர்புடனும், வசீகரத்துடனும் அன்னாவின் கையை மெதுவாக உதடுகளிடம் கொண்டுபோய் முத்தமிட்டு சோபாவில் சாய்ந்து வேறு பக்கமாய்த் திரும்பிக் கொண்டு கையை விடாமல் ஊஞ்சலாட்டிக்கொண்டிருந்தார்.

'கவனியும். பால்கோன்ஸ்கியின் மனைவி லிசாவிடம் இன்றிரவே பேசுகிறேன். காரியத்தை முடித்துவிடலாம். உமது குடும்பத்தின் சார்பாக நான் பேசி, கல்யாண முடிச்சுப் போடுகிற தொழிலில் பயிற்சி பெற ஆரம்பித்துவிடுகிறேன்' என்றாள் அன்னா.




அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பு அறை மெதுவாக நிறைய ஆரம்பித்தது. பீட்டர்ஸ்பர்க்கின் உயர்ந்த உயர் வட்டாரம் அங்கே கூடியிருந்தது. அவர்கள் வயதிலும் குணத்திலும் மிகுந்த மாறுபட்டவர்களாய் இருந்தாலும் அவர்கள் சேர்ந்துள்ள உயர் வட்டாரத்தைப் பொறுத்தவரை எல்லாரும் ஒரே மாதிரி இருந்தார்கள். இளவரசர் வாசைலியின் குமாரியான அழகிய ஹெலன் தன்னுடைய தகப்பனாரை ஸ்தானாதிபதியின் விருந்துக்கு அழைத்துப்போக வந்தாள். அவள் நடன உடையையும் 'கௌரவமுள்ள தோழி' என்ற பதக்கத்தையும் அணிந்திருந்தாள். பீட்டர்ஸ் பர்க்கில் மிகுந்த கவர்ச்சியான பெண் என்று விளங்கிய வாலிப சிறிய இளவரசி பால்கோன்ஸ்கயாவும் அங்கே இருந்தாள். கடந்த குளிர் காலத்தில் அவளுக்கு திருமணம் ஆயிற்று. அவள் கர்ப்பவதியாய் இருந்தபடியால் பெரிய கூட்டங்களுக்குப் போவதில்லை. சிறிய வரவேற்புகளுக்குத்தான் போவாள். இளவரசர் வாசைலியின் குமாரர் ஹிப்பாலைட், மார்ட்டிமார்ட்டுடன் அங்கு வந்து அவரை அறிமுகப்படுத்தினார். மாரியா பாதிரியார், வேறு பலரும் கூட வந்திருந்தார்கள்.

புதிதாய் வரும் ஒவ்வொருவருடனும் அன்னா பாவ்லாவ்னா, 'நீர் என் சித்தியை இன்னும் பார்க்கவில்லையே' என்றோ, அல்லது 'எனது சித்தியை உமக்குத் தெரியாதே' என்றோ, அவரையோ, அவளையோ மிகுந்த அடக்கத்துடன் அந்த சிறிய வயதான சீமாட்டியிடம் அழைத்துப் போவாள். அந்த சீமாட்டி தன் தலையில் உள்ள தொப்பியில் பெரிய ரிப்பன் கட்டியிருந்தாள். விருந்தினர்கள் விஜயம் செய்ய ஆரம்பித்ததும் பக்கத்து அறையிலிருந்து கிளம்பி வந்து அங்கு உட்கார்ந்தாள். அன்னா பாவ்லாவ்னா விருந்தாளியை அவளிடம் அழைத்து வந்ததும் தனது பார்வையை விருந்தாளியிடமிருந்து சித்தியிடம் திருப்பி ஒவ்வொருவரின், பெயரையும் சொல்லிய பின்பு அவர்களை அங்கே விட்டுப் போவாள்.

இந்த கிழட்டு சித்தியை அங்கு வந்த விருந் நாளிகள் ஒருவருக்கும் தெரியாது. அவள் யாரென்று அவர்கள் தெரிந்து கொள்ளவும் விரும்பவில்லை. அவளைப்பற்றி ஒருவருக்கும் கவலையுமில்லை என்றாலும் ஒவ்வொருவரும் முகமன் கூறும் சடங்கைச் செய்து வந்தார்கள். இந்த முகமன்களை அன்னா பாவ்லாவ்னா சோகமும் பவித்திரமும் கலந்த நோக்கோடும் மௌனமான சம்மதத்தோடும் கவனித்து வந்தாள். ஒவ்வொருவரிடமும் அந்த சித்தி ஒரே மாதிரி வார்த்தைகளையே பேசி வந்தாள். அதாவது, அவர்களுடைய சௌக்கியம், தன்னுடைய சௌக்கியம், 'கடவுள் கிருபையால் அவர் இன்று நன்றாய் இருக்கிறார்' என்ற வார்த்தைகளோடு மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியின் சௌக்கியம் ஆகியவைகளைப் பற்றிப் பேசினாள். தமது பொறுமையின்மையைக் காட்டுவதை மரியாதை தடுத்ததால், ஒவ்வொரு விருந்தாளியும் தமது எரிச்சலான கடமையைச் செய்து முடித்தவுடன் தப்பித்தோம் என்ற உணர்வுடன் அந்தக் கிழவியை விட்டுப் போனார்கள். ஒருவராவது அன்று மாலை முழுவதிலும் அவளிடம் திரும்பவில்லை.

அந்த வாலிப இளவரசி பால்கோன்ஸ்கயா தங்க வேலைப்பாடுள்ள தனது வெல்வெட்டுப் பையில் பின்னல் சாமான்களைக் கொண்டுவந்திருந்தாள். மெல்லிய கருப்பு ரோமங்கள் அரும்பிக் கொண்டிருந்த அவளுடைய அழகிய சிறிய மேல் உதடு, பற்களை விட குட்டையாய் இருந்தபடியால் அது மேலேயே அழகாய் நின்றது. முக்கியமாகச் சமயா சமயங்களில் அதனைக் கீழ் உதட்டோடு தொடுவதற்கு அவள் இழுக்கும்போது, சிறப்பாக இருந்தது. முற்றிலும் அழகான பெண்களுக்குண்டான

செய்தியைப் போலவே, அவளுடைய குறை-குட்டையான அவளுடைய மேல் உதடும் அவளுடைய பாதி திறந்த வாயும்-அவளுக்கு சிறப்பான தனியான ரகமுள்ள அழகாய் விளங்குவதுபோலத் தோன்றியது. சீக்கிரம் தாயாராகப் போகும் அவள் நிறைந்த உயிர்த் துடிப்பும் நலமும் கொண்டு மிக எளிதாக தனது பொறுப்பை நிறைவேற்றி வந்தாள். இந்த அழகிய இளம் பெண்ணைப் பார்த்த ஒவ்வொரு முகத்திலும் களி துலங்கியது. வயோதிகர்களும், உற்சாகமற்ற இளைஞர்களும் அவளைப் பார்த்த பின்பும் அவளுடன் சிறிது நேரம் பேசிய பின்பும் அவளைப்போலவே தங்களுக்கும் முழு உயிர்த் துடிப்பும் ஆரோக்கியமும் வந்துகொண்டிருப்பதாக உணர்ந்தார்கள். அவளுடன் பேசியவர்கள் எல்லாரும் ஒவ்வொரு வார்த்தையிலும் அவளுடைய ஒளிமயமான புன்முறுவலையும் விடாமல் ஒளி வீசி வந்த அவளுடைய வெள்ளைப் பற்களையும் கண்டார்கள். தாங்கள் இன்று ஒரு தனிப்பட்ட அழகான மனோநிலைமையில் இருப்பதாக உணர்ந்தார்கள்.

மேசையைச் சுற்றி வேகமான, சுருக்கமான ஆடிய நடையில், தன்னுடைய பையைக் கையில் எடுத்துக்கொண்டு, வெள்ளித் தேநீர் பாத்திரத்திற்கு அருகில் இருந்த சோபாவில் தமது உடையை மகிழ்ச்சியோடு பரப்பி சின்ன இளவரசி அமர்ந்தாள். அவள் செய்வதெல்லாம் அவளுக்கும் அவளைச் சுற்றி இருப்பவர் களுக்கும் மகிழ்ச்சி கொடுப்பதாக அவள் நினைப்பதைப்போல் இருந்தது. 'நான் எனது பின்னல் வேலையைக் கொண்டுவந்திருக் கிறேன்' என்று அவள் தனது பையைக் காட்டி அங்கிருப்பவர்களை யெல்லாம் பார்த்து, பிரஞ்சு மொழியில் பேசினாள். 'கவனி அன்னெட்டி, ஒரு மோசமான தந்திரத்தோடு என்னுடன் நீ நடந்துகொள்ளவில்லை என்று நம்புகிறேன்' என விருந்து கொடுப்பவளைப் பார்த்துப் பேசினாள். 'முற்றிலும் சிறிய ஒரு வரவேற்பாய்த்தான் இருக்கும் என்று நீ எழுதினாய். இப்பொழுது பார், நான் எவ்வளவு மோசமாக ஆடை அணிந்திருக்கிறேன் என்பதனை?' பின்னல் வேலை செய்த இடுப்பளவு உள்ள அழகிய சாம்பல் வண்ணமான சட்டையையும், அதன் மேல் மார்புக்குக் கீழாகக் கட்டப்பட்டிருந்த அகலமான ரிப்பனையும் காட்டு வதற்காக அவள் தன் கைகளைப் பரப்பினாள்.

'அமைதியாய் இரு லிசா, வேறு யாரையும்விட நீ எப்பொழுதும் அழகாகவே இருப்பாய்' என்று அன்னா பாவ்லாவ்னா

பதிலளித்தாள். அதே நிலையிலும் இன்னமும் பிரஞ்சு மொழியிலும் இராணுவத் தளபதியைப் பார்த்து 'என் கணவர் என்னைக் கைவிட்டுப் போகிறார் என்பது உமக்குத் தெரியுமா?' என்று கேட்டார். இளவரசர் வாசைலியைப் பார்த்து 'அவர் தம்மையே கொன்று கொள்ளப்போகிறார். இந்தப் போர் யுத்தம் எதற்காக என்பதனை எனக்குச் சொல்லும்' என்று அவள் சொல்லிப் பதிலை எதிர்பார்க்காமல் அவளுடைய மகளான அழகிய ஹெலனிடம் பேசுவதற்குத் திரும்பினாள்.

'இந்தச் சிறிய இளவரசி எவ்வளவு மகிழ்ச்சியான பெண்ணாய் இருக்கிறாள்,' என்று இளவரசர் வாசைலி அன்னா பாவ்லாவ்னாவிடம் சொன்னார்.

அடுத்தாற்போல் வந்தவர்களுள் ஒரு வாலிபர் கனமாகவும், கட்டுக்கோப்பான உடம்பும் கொண்டு, தலையை ஒட்டிய கிராப்பும் கண்ணாடியும் அணிந்து, அச்சமயம் புதுமையாய் இருந்த மெல்லிய வண்ண கால் சட்டைகளும் அணிந்து, பழுப்பு நிறச் மேல்சட்டையும் போட்டிருந்தார். இந்தத் தடித்த வாலிபர் காத்தரைன் காலத்தில் பிரபலமாய் விளங்கியவரும் தற்சமயம் மாஸ்கோவில் மரணப் படுக்கையில் கிடப்பவருமான கோமகன் பெஜுகாவ் என்பவரின் சோர மக்களுள் ஒருவர். இந்த வாலிபர் இன்னும் இராணுவத்திலோ, சிவில் சர்விஸிலோ சேரவில்லை. அப்பொழுதுதான் தாம் படித்துவந்த வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்திருந்தார். வரவேற்பில் அவர் கலந்துகொள்வது இது முதல் தடவை. இந்த வரவேற்பு அறையில் இருந்த கீழ்த்தரமான ஒருவருக்கு அவள் கொடுக்கும் முகமனாகிய தலை அசைப்பையே, இவரிடமும் அன்னா பாவ்லாவ்னா காட்டினாள். இந்தக் கீழ்த்தரமான வரவேற்பை அவள் கொடுத்தபோதிலும், ஏதோ அந்த இடத்திற்குப் பொருத்தமில்லாத பிரம்மாண்டமான ஒன்றை அவ்ள் பார்ப்பதைப்போல, பீயர் அங்கு நுழைந்ததைப் பார்த்ததும், அவள் முகத்தில் கவலையும், பயமும் தோன்றின. அந்த அறையில் இருந்த மற்றவர்கள் எல்லாரையும்விட அவர் அதிகப் பருமனாய் இருந்தார். என்றாலும் அவருடைய நாணத்துடன் கூடிய புத்திசாலித்தனம், இயற்கையாய்க் கவனித்து அறியக்கூடிய சாமர்த்தியம் ஆகியவை அங்கு வரவேற்பு அறையில் இருந்த ஒவ்வொருவரையும் விடத் தனித்துக் காட்டும்படியாய் இருந்தன. இதுதான் அவளுடைய கவலைக்குக் காரணம்.

'திருவாளர் பீயரே, ஓர் ஏழை நோயாளியைப் பார்ப்பதற்கு நீர் வந்தது உம்முடைய சிறந்த குணமே ஆகும்' என்று அன்னா பாவ்லாவ்னா சொல்லி கலவரத்தோடு தன்னுடைய சித்தியுடன் கண்ணடித்து அவளிடம் அவரை அழைத்துக்கொண்டு போனாள்.

புரியாத விதத்தில் எதையோ பீயர் முணுமுணுத்துக்கொண்டு, எதையோ தேடுபவர்போலச் சுற்றிலும் பார்த்துக்கொண்டிருந்தார். சித்தியைப் பார்க்கப் போகிற வழியில், நன்கு பழக்கமானவர்கள் செய்வதைப் போன்ற ஓர் இனிய புன்னகையுடன் சின்ன இளவரசியைப் பார்த்துத் தலை வணங்கினார்.

அன்னா பாவ்லாவ்னாவின் கலவரம் உறுதியாய்விட்டது. ஏனெனில் மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியின் சௌக்கியத்தைப் பற்றிச் சித்தி பேசிக் கேட்பதற்கு முன்பாகப் பீயர் அவளை விட்டுத் திரும்பிவிட்டார். அன்னா பாவ்லாவ்னா அச்சத்தோடு அவரை நிறுத்தி, 'உமக்கு மாரியா பாதிரியாரைத் தெரியுமா? அவர் மிகுந்த சுவாரஸ்யமான மனிதர்' என்று கூறினாள்.

'ஆம், நிரந்தர சமாதானத்திற்கான அவருடைய திட்டத்தைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அது நிரம்ப வியப்பானது. ஆனால், அது முடிவது கடினம்.'

'நீர் அப்படியா நினைக்கிறீர்?' என்று அவரிடம் எதையாவது பேசிவிட்டு விருந்து கொடுப்பவர் என்ற முறையில் தனது கடமையைச் செய்வதற்குத் தப்பித்துக்கொள்ள விரும்புவள்போல அன்னாபால்வானா கேட்டாள். ஆனால், பீயர் மரியாதைக் குறைவை மீண்டும் செய்தார். முதலில் ஒரு சீமாட்டி பேசி முடிக்கும் முன்பாக அவளை விட்டுத் திரும்பினார்; இரண்டாவதாக, அங்கிருந்து தப்பிப் போக விரும்பும் ஒருவளிடம் தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தார். தமது தலையைத் தாழ்த்தி, பெரிய பாதங்களைப் பரப்பி,பாதிரியின் திட்டம் எப்படி முடியாதவை என்று தாம் நினைப்பதற்கான காரணங்களை விளக்க ஆரம்பித்தார்.

'அதைப்பற்றி நாம் பின்னால் பேசுவோம்' என்று ஒரு புன்சிரிப்போடு அன்னா பாவ்லாவ்னா சொன்னாள்.

எப்படி நடக்கவேண்டுமென்று அறியாத இந்த வாலிபரை உதறிவிட்ட பின்பு,விருந்து கொடுப்பவர் என்ற முறையில் தனக்குள்ள வேலைகளைத் தொடர்ந்து செய்ய ஆரம்பித்தாள். எங்காவது பேச்சுகளின் சுவை குறைந்து வரும்பொழுது, உடனே உதவி செய்வதற்காக அவற்றைக் கேட்டுக் கொண்டும், கவனித்துக்

கொண்டும்இருந்தாள். ஒரு நூற்பு மில்லில் வேலையை ஆரம்பித்த பின்பு எப்படி ஒரு போர்மேன் சுற்றி வந்து, நின்றுபோன கதிரைச் சரிப்படுத்தவும், அவசியத்திற்கு அதிகமானக் கூச்சல் போடுவதைக் குறைக்கவும், இயந்திரத்தைச் சரிசெய்யவும், அல்லது சரியாய் ஓடவும் கவனித்துச் செய்வானோ, அதே மாதிரி அன்னா பாவ்லாவ்னா வரவேற்பு அறையைச் சுற்றி வந்தாள். இங்கே ஒரு மௌனமான கூட்டத்தையோ அல்லது அங்கே மிகுந்த கூச்சல் போடும் கூட்டத்தையோ அணுகுவாள். பொருத்தமான ஒரு வார்த்தை சொல்லுவதன் மூலமாகவோ அல்லது கூட்டத்தை பிரித்து அமைப்பது மூலமகவோ பேசும் இயந்திரம் உறுதியான,சரியான, ஒழுங்கான வேகத்தில் இருக்கும்படி கவனித்தாள். இந்தக் கவனிப்புகளுக்கு இடையில், பீயரைப் பற்றிய அவளுடைய கவலை தெளிவாய்த் தெரிந்தது. அவர் மார்ட்டிமார்ட்டை சுற்றியுள்ள குழுவினர் என்ன பேசிக்கொண்டு இருக்கிறார்கள் என்று கவனிப்பதற்காக அங்கே சென்றபோதும், மறுபடியும் பாதிரியாரைச் சுற்றியுள்ள மற்றொரு கூட்டத்தை அவர் போனபோதும், அவள் கவலையோடு அவரைக் கவனித்து வந்தாள்.

வெளிநாடுகளில் பீயர் கல்வி கற்றார். ருஷ்யாவில் அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பில்தான் அவர் முதலாவதாகக் கலந்து கொண்டார். பீட்டர்ஸ்பர்க்கில் உள்ள அறிவுத் தீபங்களெல்லாம் அங்கே கூடியிருந்தார்கள் என்பதனை அவர் அறிவார். ஆகவே, கேட்கப்பட வேண்டிய புத்திசாலித்தனமான உரையாடல்களை எங்கே தாம் இழந்துவிட நேரிடுமோ என்று பயந்து, ஒரு பொம்மைக் கடையில் நுழைந்த குழந்தையைப் போல எப்பக்கம் போவது என்று தெரியாமல் இருந்தார். அங்கிருந்தவர்களின் முகத்தில் காணப்பட்ட தன்னம்பிக்கையையும், உயர்ந்த பண்பாட்டையும் கொண்டு அவர்களிடமிருந்து ஆழ்ந்த கருத்துகளைக் கேட்க முடியும் என அவர் எப்பொழுதும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். கடைசியாக மாரியாவிடம் வந்தார். இங்கே நடைபெற்ற உரையாடல் சுவையாய் இருப்பதாய்த் தோன்றியது. இளைஞர்கள் விரும்புவதைப்போலத் தம்முடைய கருத்துகளை வெளிப்படுத்த ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்தார்.

# 1
## 3

அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பு நிகழ்ச்சி முழு மூச்சுடன் சுழன்று கொண்டிருந்தது. எல்லாப் பக்கமும் பேச்சுகள் ஓய்வு ஒழிவு இன்றி நடந்து வந்தன. அன்னாவின் சித்தி இதற்கு விதி விலக்கு. அவளுடன் கவலை நிறைந்த முகத்தோடு ஒரு மெலிந்த பெண் உட்கார்ந்து இருந்தாள். இவர்கள் இருவரும் இந்தப் புகழ்மிக்க கூட்டத்திற்குப் பொருத்தமில்லாதவர்கள் போலத் தோன்றினார்கள். அந்தக் கூட்டம் மூன்று பிரிவுகளாகப் பிரிந்து இருந்தது. முற்றிலும் ஆண்களே கொண்ட ஒரு கூட்டம் மாரியா பாதிரியாரைச் சுற்றி இருந்தது. இளைஞர்களைக் கொண்ட மற்றொரு கூட்டம் இளவரசர் வாசைலியின் குமாரத்தியான அழகிய இளவரசி ஹெலனையும் அழகு மிகுந்த இளைய இளவரசி பால்கோன்ஸ்கயாவையும் சுற்றி இருந்தது. பால்கோன்ஸ்கயா அழகாக இருந்தாலும் அவளுடைய வயதிற்கு அதிகமான பருமனுடன் இருந்தாள். மூன்றாவது கூட்டம் மார்ட்டிமார்ட் கோமகனையும் அன்னா பாவ்லாவ்னாவையும் சுற்றி இருந்தது.

மார்ட்டிமார்ட் கோமகன் அழகிய இளைஞர். சாந்தமான முகச்சாயல்களையும், நாசுக்கான நடத்தைகளையும் கொண்டிருந்தார். அவர் தம்மை ஒரு முக்கியமானவராகக் கருதியபோதிலும் மரியாதைக்காக அந்தக் கூட்டத்தின் விருப்பப்படி நடந்துகொள்ளத் தயாராக இருந்தார். தன்னுடைய விருந்தாளிகளுக்கு அவரை ஒரு விருந்தாக அன்னா பாவ்லாவ்னா அளிக்க விரும்பியது நன்றாய்த் தெரிந்தது. சமையலறையில் நாம் பார்த்தால் கையினால் கூடத் தொட விரும்பாத ஒரு பதார்த்தத்தை ஒரு கெட்டிக்கார சமையல்காரர் அதை விசேஷ பதார்த்தமாக எப்படிச் செய்ய முடியுமோ அதே மாதிரி, அன்னா பாவ்லாவ்னா தனது விருந்தாளிகளுக்கு முதலில் கோமகனையும், அடுத்தபடியாகப் பாதிரியாரையும் சிறப்பான பதார்த்தங்களாக அளித்தாள். கோமகன் மார்ட்டிமார்ட்டைச் சுற்றி இருந்த கூட்டம், எனின் கோமகனின் கொலையைப் பற்றி விவாதிக்க ஆரம்பித்தது. எனின் கோமகன் தம்முடைய பெருந்தன்மையால்தான் அழிந்தார் என்று மார்ட்டிமார்ட் கூறினார். போனபார்ட் அவர் மீது வெறுப்புக் கொண்டிருந்ததற்கு முக்கியமான காரணங்கள் உண்டு என்று சொன்னார்.

'ஆ! அப்படியா! அதைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் சொல்லுங்கள் கோமகனே?' என்றாள் அன்னா.

தாம் சொல்லுவதற்குத் தயாராக இருப்பவர் போலத் தலைவணங்கி புன்முறுவல் கொண்டார். கோமகன் சொல்வதை எல்லாரும் கேட்பதற்கு அன்னா அங்கிருந்தவர்களை அருகில் வரும்படி அழைத்தாள். ஒரு விருந்தாளியிடம், 'மார்ட்டிமார்ட்டுக்கு எனின் கோமகனை நேரடிப் பழக்கமுண்டு' என்று சொன்னாள். மற்றொருவரிடம், 'மார்ட்டிமார்ட் நடந்த செய்திகளை அற்புதமாகக் கதை சொல்லக்கூடியவர்' என்று கூறினாள். 'எவ்வளவு உயர்ந்த வட்டாரத்தை இவர் சேர்ந்தவராய் இருக்கிறார்' என்று மூன்றாவது ஒருவரிடம் பேசினாள்.

காரமான துணைக் கருவிகளோடு கூடிய நன்கு அலங்கரிக்கப்பட்ட வறுத்த மாட்டிறைச்சி சந்துக்கறியை விருந்தாளிகளுக்குப் பரிமாறினால் எப்படி இருக்குமோ, அதே மாதிரி மார்ட்டிமார்ட் கோமகனை அந்தக் கூட்டத்திற்கு விரும்பத்தக்க விதத்தில் அறிமுகப்படுத்தி வைத்தாள்.

தம்முடைய கதையைச் சொல்ல ஆரம்பிப்பதற்கு மார்ட்டிமார்ட் விரும்பி புன்னகை கொண்டார்.

இளவரசி ஹெலன் மற்றொரு கூட்டத்தின் மத்தியில் உட்கார்ந்திருந்தாள். அவளைப் பார்த்து அன்னா 'இங்கே வந்து உட்காரு, என் அருமை ஹெலன்' என்று அழைத்தாள்.

புன்னகையோடு வீற்றிருந்த இளவரசி அதே புன்னகையோடு எழுந்து, அவளுடைய வெள்ளை ஆடை சலசலக்க வெண் தோள்கள் ஒளிவீச அவளுடைய கூந்தல் பளபளக்க அவள் அணிந்திருந்த வைரங்கள் மினுமினுக்க அன்னாவை நோக்கி நடக்க ஆரம்பித்தாள். அங்கிருந்த ஆண்களுக்கு மத்தியில் அவள் நடந்து வந்தபோது, தனிப்பட்ட எவரையும் பார்க்காமல், ஆனால், எல்லோருக்கும் சேர்த்துப் புன்முறுவல் காட்டினாள். அங்கிருந்தவர்கள் தன்னுடைய அழகிய தோள்களையும், முதுகையும் பார்த்து அதிசயிக்கும்படி (அந்தக் காலத்தில் தோள், முதுகு, மார்பு இவை பெரும்பாலும் தெரியும்படியாகத்தான் உடை அணிவது வழக்கம்.) நடன மண்டப மயக்கத்தைக் கொண்டு வருபவள் போன்று அன்னாவை நோக்கி நடந்துவந்தாள். இளவரசி ஹெலன் மிகவும் அழகாய் இருந்தாள். மிடுக்கான அடையாளம் எதையும் அவள் காட்டவில்லை. அவளுடைய கவர்ச்சிகரமான

அழகினால் அவள் நாணம் மிகுந்தவள்போல் தோன்றினாள். தன் அழகுக் கவர்ச்சியை அவள் குறைக்க முயற்சித்தவள்போலவும், அதை அவளால் செய்ய முடியாதது போலவும் காணப்பட்டாள்.

'ஆஹா! என்ன அழகு' என்று அவளைப் பார்த்த ஒவ்வொருவரும் சொன்னார்கள். மார்ட்டிமார்ட் அவளைப் பார்த்ததும் ஏதோ எதிர்பாராத ஒரு ஆச்சரியத்தைக் கண்டதுபோலத் தோள்களைத் தூக்கிக் கண்களைத் தாழ்த்தி வியப்படைந்தார். மார்ட்டிமார்ட்டுக்கு எதிராக ஹெலன் அமர்ந்து தனது மாறாத புன்னகையை அவர் மீது வீசினாள்.

'சீமாட்டியே, இப்பேர்ப்பட்ட சபை முன்பு பேசும் திறமை எனக்கிருக்கிறதோ என்று சந்தேகப்படுகிறேன்' என்று அவர் தலை சாய்த்துப் புன்னகையோடு கூறினார்.

மேசை மீது தனது கையை வைத்துச் சாய்ந்துகொண்டிருந்த இளவரசி இதற்குப் பதில் சொல்லவேண்டிய அவசியமில்லை என்று நினைத்தாள். கதையைக் கேட்கப் புன்சிரிப்போடு காத்திருந்தாள். கதையைக் கேட்டுக்கொண்டிருந்த நேரம் முழுவதிலும் இளவரசி நிமிர்ந்து உட்கார்ந்து அடிக்கடி தன் கை அழகைப் பார்ப்பதும் தன் மார்பழகைப் பார்த்துக் கழுத்தில் அணிந்திருந்த வைர அட்டிகையைச் சரி செய்வதுமாய் இருந்தாள். அடிக்கடி தன் ஆடைகளின் சுருக்கங்களைத் தட்டிவிட்டுக்கொண்டு எங்காவது கதையில் சுவையான பாகம் வரும்போது அன்னாவின் முகபாவத்தைப் பார்ப்பதும், அன்னாவின் முகத்தில் தோன்றும் குறிகளைப்போலவே தானும் மேற்கொள்ளுவதும், மறுபடியும் தன் அழகிய புன்முறுவலுக்குத் திரும்புவதுமாய் இருந்தாள்.

இளவரசி பால்கோன்ஸ்கயாவும் ஹெலனைப் பின்பற்றி அன்னாவின் பக்கம் வந்து உட்கார்ந்தாள்.

'ஒரு நிமிடம் பொறுங்கள், என்னுடைய பின்னல் பொருள்களைக் கொண்டு வருகிறேன்... நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று சொன்ன பால்கோன்ஸ்கயா ஹிப்பாலைட்டைப் பார்த்து, 'என்னுடைய பின்னல் பொருள்களை எடுத்து வா' என்று கூறினாள். இளவரசி அங்கிருந்தவர்களிடம் மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டு தனது இருக்கையில் அமர்ந்து, 'சரி, நான் தயாராக இருக்கிறேன். இப்போழுது ஆரம்பிக்கலாம்' என்று மார்ட்டிமார்ட்டைப் பார்த்துக் கூறிவிட்டுத் தனது பின்னல் வேலையில் இறங்கினாள். பின்னல் பையைக் கொண்டுவந்து

கொடுத்த ஹிப்பாலைட்டும் ஒரு நாற்காலியை அவள் பக்கத்தில் இழுத்துப் போட்டுக்கொண்டு அமர்ந்தார்.

தன் அழகிய சகோதரி ஹெலனின் அச்சு அடையாளம் அப்படியே ஹிப்பாலைட்டுக்கு இருந்தது. இந்த அச்சு அடையாளம் ஒன்றைத் தவிர, அவன் மிகவும் கோரமாய் இருந்தான். சகோதரியின் முகச்சாயல்கள் அவனுக்கு இருந்தன. ஆனால் சகோதரி சம்பந்தப்பட்ட ஒவ்வொன்றிலும் மகிழ்ச்சியும் நிறைவும், இளமையும், துடிதுடிப்பான புன்சிரிப்பும் காணப்பட்டன. கவிகள் வருணிக்கக்கூடிய அபூர்வமான உடல் அழகும் கொண்டவளாய் இருந்தாள். ஆனால், அவன் முகத்திலோ அசட்டுத்தனமும், சோகமான தன்னம்பிக்கையும் தோன்றியதோடு, அவன் உடலும் நலக்குறைவாகவும், ஒல்லியாகவும் இருந்தது. அவனுடைய கண்களும் மூக்கும் வாயும் எல்லாம் சேர்ந்து சுளித்து ஒரு வெறித்த களைப்பான தோற்றத்தோடு விளங்கின. கைகளையும், கால்களையும் கோணலாக வைத்துக்கொண்டு ஒரு மாதிரியாக உட்கார்ந்திருந்தான்.

அவனுடைய கையில் கண்ணாடி இல்லாவிட்டால் அவ்ன் பேச முடியாதோ என்று நினைக்கிற மாதிரி அந்தக் கண்ணாடியைச் சரிசெய்துகொண்டு 'இது பேய்க் கதையாய் இருக்காது என்று நினைக்கிறேன்' என்று சொன்னான்.

'அப்படியெல்லாம் ஒன்றும் இல்லையப்பா' என்று வியப்படைந்த மார்ட்டிமார்ட் தம்முடைய தோள்களைக் குலுக்கிக்கொண்டு சொன்னார்.

'ஏனெனில், பேய்க் கதைகள் என்றால் எனக்குப் பிடிக்காது' என்றான் ஹிப்பாலைட்.

அவன் பேசிய விதத்தைப் பார்த்தால் அவன் பேசிய பின்புதான் அவன் பேசிய வார்த்தைகளுக்குப் பொருளைப் புரிந்து கொள்ளுகிறான் என்று தோன்றியது. அவன் நகைச்சுவையாகப் பேசினானா அல்லது முட்டாள்தனமாகப் பேசினானா என்பதனை அங்கிருந்தவர்களால் அறிந்துகொள்ள முடியாது. அவன் இருண்ட கறுப்புக் கோட்டு அணிந்திருந்தான். அவன் கால் சட்டையின் வண்ணத்திற்கு 'கன்னியின் நாணம்' எனப் பெயர் என்று கூறினான். பட்டு மேஜோடும் ஜோடுகளும் அணிந்திருந்தான்.

மார்ட்டிமார்ட் தமது கதையை வெகு அழகாய்ச் சொன்னார். அச்சமயம் வதந்தியில் இருந்த அந்தக் கதையாவது:- 'பாரிஸ்

நகரத்தில் குமாரி ஜார்ஜ் என்பவளின் வீட்டிற்கு ஒரு நாள் எனின் கோமகன் மறைமுகமாகச் சென்றார். அந்த நடிகையை நெப்போலியனுக்கும் பழக்கம் உண்டு. கோமகன் போன சமயத்தில் அங்கு நெப்போலியனும் இருக்கக்கண்டார். அங்கே நெப்போலியனுக்கு வழக்கமாக வருகிற வலிப்பு நோய் வந்தது. அச்சமயம் கோமகன் அவரைக் கொன்றிருக்கலாம். ஆனால், அவர் அப்படிச் செய்யவில்லை. அம்மாதிரிப் பெருந்தன்மை காட்டியதற்குப் பதிலாகப் பின்னால் போனபார்ட் அவர் உயிரை வாங்கினான்.'

கதை நிரம்ப அழகாகவும், சுவையாகவும் இருந்தது. நடியையின் வீட்டில் இருபோட்டியாளர்கள் திடீரென்று சந்தித்த இடம் கதையில் ரொம்ப ரொம்ப சுவாரஸ்யமாய் இருந்தது. அதனைக் கேட்ட சீமாட்டிகள் பரபரப்பு அடைந்தார்கள்.

'பலே பேஷ்! என்று சொல்லி அன்னா இளவரசியைப் பார்த்தாள். இளவரசி பால்கோன்ஸ்கயாவும் 'பலே பேஷ்' என்று கூறிவிட்டு தன்னுடைய பின்னல் துணியில் ஊசியைச் சொருகிக் கதையின் சுவைஅவளுடைய பின்னல் வேலையைத் தடுத்துவிட்டதுபோலக் காட்டினாள்.

மார்ட்டிமார்ட் கோமகன் இந்த அமைதியான புகழை நன்றி உணர்வோடு பாராட்டிக் கதையைத் தொடரத்தயாரானார். ஆனால், அந்தச் சமயத்தில் எந்த வாலிபர் அவளை அச்சமடையும்படி செய்தாரோ, எவர் மீது கவனமான கண்காணிப்பு வைத்திருந்தாளோ, அவர் வேகமாகவும் உரத்த கூச்சலுடன் பாதிரியோடு பேசிக் கொண்டிருந்ததைக் கண்டாள். ஆகவே, அந்த இடத்தைவிட்டு நிலைமையைச் சமாளிப்பதற்காகப் புறப்பட்டுப் போனாள். 'சமபலம்' என்ற கொள்கையைப்பற்றி பாதிரியோடு உரையாடலைப் பீயர் ஆரம்பித்தார். இளைஞரின் வெள்ளை மனத்தின் ஆவலைக் கண்டு மகிழ்ந்த பாதிரியார் தம்முடைய சிறந்த கொள்கையை விளக்கிக்கொண்டிருந்தார். இருவரும் ஆவலோடும், இயற்கையோடும் பேசிக்கொண்டும், கேட்டுக்கொண்டும் இருந்தார்கள். இதுதான் அன்னாவுக்குப் பிடிக்கவில்லை.

'ஐரோப்பாவில் சமபலம், மக்களின் உரிமைகள் இவைதாம் வழிகள். ருஷ்யாவைப் போன்ற ஒரு வல்லரசு-அது அநாகரீகமானது என்று சொல்லப்படுகிறது-சுயநன்மை ஏதுமின்றி ஐரோப்பாவில் சமபலத்தை நிலைநாட்டும் கொள்கைக்காக ஏற்படும்

கூட்டுறவுக்குத் தலைமையாய் நிற்றல்வேண்டும். அப்படிச் செய்வதுதான் உலகத்தைக் காப்பாற்றும் என்றார் பாதிரி.

'ஆனால், எந்த வழியாக நீங்கள் சமபலத்தைப் பெற முடியும்?' என்று பீயர் ஆரம்பித்தார்.

அச்சமயத்தில் அன்னா அங்கே வந்த கடுமையான பீயரை விழித்துப் பார்த்து, இத்தாலியரிடம் (பாதிரி) 'ருஷ்ய தட்பவெப்பம் ஒத்துக்கொள்ளுகிறதா?' என்று கேட்டாள். இத்தாலியரின் முகம் உடனே மாறி கனிந்த இனித்த சாயலைக் காட்டியது. பெண்களுடன் பேசும்போது அம்மாதிரி மாறுவது அவருடைய வழக்கமாய் இருக்கலாம் என்று தோன்றியது.

'நான் கலந்துகொள்ளப் பெருமை பெற்ற உயர் வட்டாரத்தில், முக்கியமாகப் பெண்களின் புத்திக் கூர்மையையும், பண்பையும் கண்டு நான் மிகுந்த பரவசம் அடைந்துவிட்டேன். அதனால் பருவநிலை பற்றி நினைப்பதற்கு எனக்கு இன்னும் நேரம் கிடைக்கவில்லை' என்றார் பாதிரி.

பாதிரியையும், பீயரையும் தப்புவதற்கு விடாமல் தன்னுடைய கண்காணிப்பில் சௌகர்யமாக வைத்துக்கொள்ளுவதற்கு அவர்களைப் பெரிய கூட்டத்திற்கு அன்னா அழைத்துவந்தாள்.




சின்ன இளவரசியின் கணவரான இளவரசர் ஆண்ட்ரூ பால் கோன்ஸ்கி மற்றொரு விருந்தாளியோடு அச்சமயம் வரவேற்பு மண்டபத்தில் நுழைந்தார். அவர் மிகுந்த அழகான வாலிபர். மத்திமமான உயரம். உறுதியான தெளிவான முகச் சாயல்கள். அவரைப் பற்றிய ஒவ்வொரு செய்தியும் அவருடைய சலித்துப்போன முகபாவத்திலிருந்து அவருடைய அமைதியான அளவோடு கூடிய நடை வரையில் அவருடைய உற்சாகம் மிகுந்த சின்ன மனைவியின் குணங்களுக்கு நேர் விரோதமாய் இருந்தன. அங்குக் கூடியிருந்த ஒவ்வொருவரையும் அவருக்குத் தெரிந்ததோடு மட்டுமல்ல, தொணதொணப்பான அவர்களுடைய சுபாவத்தையும் அறிந்திருந்தார் என்பது தெளிவாய்த் தெரிந்தது. அதனால் அவர்களைப் பார்ப்பதோ அல்லது அவர்களுடைய பேச்சைக் கேட்பதோ அவருக்கு எரிச்சலாய் இருந்தது. அவருக்கு எரிச்சலாய்த்

தோன்றிய முகங்களில், அவருடைய அழகிய மனைவியின் முகத்தைவிட அதிகமான எரிச்சல் கொடுத்த முகம் வேறில்லை. எரிச்சலோடு அவளிடமிருந்து முகத்தைத் திருப்பினார். அந்தச் செய்கை அவருடைய முகத்தின் அழகைக் குறைத்தது. அன்னா பாவ்லாவ்னாவின் கையை அவர் முத்தமிட்டுவிட்டு, அங்கிருந்த கூட்டத்தைக் கண்களை இடுக்கிக்கொண்டு கண்ணோட்டமிட்டார்.

'நீர் போர்க்குப் போகிறீரா, இளவரசே?' என்று அன்னா கேட்டாள்.

பால்கோன்ஸ்கி பிரஞ்சுக்காரர்கள் பேசுவதைப்போலப் பிரஞ்சு மொழியில் 'ஜெனரல் குட்டுஜோவ் என்னை ஒரு மெய்க்காப்பாளனாக எடுத்துக்கொள்ள அன்பு கூர்ந்தார்' என்று பதிலளித்தார்.

'அப்படியானால் உமது மனைவி லிசா?'

'அவள் கிராமத்திற்குப் போவாள்.'

'உம்முடைய அழகான மனைவியின் சகவாசத்தை எங்களுக்குக் கிடைக்க விடாமல் செய்வது உமக்கு வெட்கமாய் இல்லையா?'

அதுவரை அங்கிருந்தவர்களிடம் எம்மாதிரிப் பேசிக் கொண்டிருந்தாளோ, அதே பாணியில் தன் கணவனைப் பார்த்து மனைவி (இளவரசி பால்கோன்ஸ்கயா) பேசலுற்றாள்:- ஆண்டிரி, போனபார்ட்டைப் பற்றியும் குமாரி ஜார்ஜைப் பற்றியும் என்ன அழகான கதை கோமகன் எங்களுக்குச் சொல்லிக்கொண்டிருந்தார் தெரியுமா?

ஆண்ட்ரு இளவரசர் கண்களை இடுக்கிப் பார்த்துவிட்டுத் திரும்பிக்கொண்டார். இளவரசர் ஆண்ட்ரூ அந்த அறையில் நுழைந்ததிலிருந்து அவரை மகிழ்ச்சியுடனும், அன்பான பார்வையுடனும் கவனித்து வந்த பீயர், இளவரசர் ஆண்ட்ரூ திரும்பிப் பார்ப்பதற்கு முன்னால், தம் கையை யாரோ தொட்டதற்காக முகத்தைச் சுளித்துக் கொண்டார். அவர் பீயரின் மகிழ்ந்த முகத்தைப் பார்த்ததும் எதிர்பாராதவிதத்தில் அன்பும் இனிமையும் கலந்த புன்முறுவல் காட்டினார்.

'அப்படியா?...ஆகவே நீர் கூட இந்தப் பெரிய உலகத்தில் இருக்கிறீரா?' என்று அவர் பீயரைக் கேட்டார்.

'நீர் இங்கே வருவீர் என்பது எனக்குத் தெரியும்' என்று சொல்லிவிட்டு, 'நான் இன்று இரவு உம்முடன் சாப்பாட்டிற்கு

வருகிறேன். வரலாமா?' என்று தாழ்ந்த குரலில் அங்குக் கோமகனின் கதையைக் கேட்டுக் கொண்டிருப்பவர்களுக்குத் தொந்தரவு இல்லாத விதத்தில் பேசினார்.

'இல்லை, முடியாது' என்று சிரித்துக்கொண்டு, இந்தக் கேள்வியைக் கேட்கவேண்டிய அவசியமே இல்லை என்று காட்டும் விதத்தில் பீயரின் கையை அழுத்தி, இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொன்னார். அவர் இன்னும் கொஞ்சம் பேச விரும்பினார். ஆனால், அச்சமயத்தில் இளவரசர் வாசைலியும், அவர் குமாரியும் போவதற்காக எழுந்தபடியால் அந்த இரண்டு இளைஞர்களும் எழுந்து அவர்கள் போவதற்கு வழிவிட்டார்கள்.

'எங்களை மன்னிக்கவேண்டும், அருமைக் கோமகனே' என்று இளவரசர் வாசைலி பிரஞ்சுக்காரரிடம் சொல்லி, அவரை எழுந்திருக்க விடாமல் நட்பு முறையில் அவருடைய சட்டையைப்பற்றிக் கீழே இழுத்து இருத்தி வைத்தார். தலைவரின் வேண்டாத விருந்து இங்குத் தொடர்ந்து இருக்கக்கூடிய இன்பத்தைத் தடுக்கிறதோடு, இம்மாதிரி உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கவும் நேரிட்டுவிட்டது. உங்களுடைய பரவசமான கூட்டத்தை விட்டுப் பிரிவதற்கு நான் மிகவும் வருந்துகிறேன்' என்று அன்னா பாவ்லாவ்னாவைப் பார்த்துச் சொன்னார்.

அவருடைய குமாரி இளவரசி ஹெலன் தன்னுடைய ஆடையைக் கொஞ்சம் தூக்கிக்கொண்டு நாற்காலிகளின் நடுவே நடந்து சென்றாள். அவளுடைய புன்னகை அவளுடைய அழகான முகத்தில் இன்னும் பிரகாசமாகவே வீசியது. அவள் அவரைக் கடந்தபோது உள்ளம் பொங்கிய, அநேகமாய் அதிர்ச்சியடைந்த கண்களோடு பீயர் அவளை நோக்கினார்.

'என்ன அழகு! என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

'அழகே உருவம்தான்' என்றார் பீயர்.

போகும்போது இளவரசர் வாசைலி பீயரின் கையைப் பற்றி, அன்னா பாவ்லாவ்னாவைப் பார்த்துச் சொன்னார்:- எனக்காக இந்தக் கரடிக்கு வேண்டியதை கற்றுக்கொடும். ஒரு மாதம் முழுவதும் என்னுடன் இவன் தங்கியிருந்தபோதிலும் இன்றுதான் முதன் முதலாக உயர் வட்டாரத்தில் இவனைப் பார்க்கிறேன். ஓர் இளைஞனுக்கு, புத்திசாலிப் பெண்களின் வட்டாரத்தைவிட வேறு அவ்வளவு அவசியமானது எதுவும் இல்லை.

அன்னா பாவ்லாவ்னா புன்னகை புரிந்து பீயரை அப்படியே செய்வதாக வாக்களித்தாள். அவருடைய தகப்பனாரும் வாசைலி இளவரசரும் நெருங்கிய உறவினர் என்பதை அவள் அறிவாள். வயோதிக சித்தியுடன் உட்கார்ந்திருந்த வயதான சீமாட்டி அவசரமாய் எழுந்து வெளியறையில் இளவரசர் வாசைலியிடம் நெருங்கினாள். அவளுடைய சோகமான, இனிமையான முகத்தில் அவள் காட்டிக்கொண்ட சிரத்தையெல்லாம் திடீரென்று விலகியது. அந்த முகம் இப்பொழுது ஆவலையும், அச்சத்தையும் வெளியிட்டது.

'இளவரசே, என்னுடைய மகன் போரிசைப்பற்றி என்ன?' என்று சொல்லிக்கொண்டு அவசரமாய் அவரைப் பின்தொடர்ந்தாள். 'பீட்டர்ஸ்பர்க்கில் நான் தங்க முடியாது. பாவம், என்னுடைய பையனுக்கு நான் போய் என்ன கூறலாம் என்பதனைச் சொல்லும்?'

இளவரசர் வாசைலி தயக்கத்துடன் கேட்டுக்கொண்டிருந்தார். அந்த வயதான சீமாட்டிக்கு அதிக மரியாதை காட்டவும் இல்லை. அவருடைய பொறுமை கொஞ்சம் இழந்ததாகவும் தோன்றியது. கெஞ்சலான விண்ணப்பிக்கும் முறையில் அவள் புன்னகை காட்டி, அவர் போய்விடாமல் தடுப்பதற்காக, அவர் கையைப் பற்றிக்கொண்டாள்.

'சக்கரவர்த்தியிடம் ஒரு வார்த்தை நீர் சொல்வதானால் உமக்கு என்ன இழப்பு வந்துவிடப் போகிறது? அப்படி நீர் சொல்லிவிட்டால் உடனே மெய்க்காப்பாளர் படைக்கு அவனை மாற்றிவிடுவார்கள்' என்றாள் அவள்.

'என்னை நம்புங்கள், இளவரசியே. என்னால் கூடியதையெல்லாம் நான் செய்யத் தயார். ஆனால், சக்கரவர்த்தியைக் கேட்பது என்பது எனக்குச் சிரமமான விஷயம் இளவரசர் காலிட்சின் மூலமாக ரும்யான்ட்சேவுக்கு விண்ணப்பிக்கும்படி உமக்குக் கூறுகிறேன். அதுதான் சிறந்த வழியாய் இருக்கும்' என்று இளவரசர் வாசைலி பதில் சொன்னார்.

அந்த வயதான சீமாட்டி, ஒரு ட்ரூபெட்ஸ்கயா இளவரசி. ருஷ்யாவில் உள்ள சிறந்த குடும்பங்களில் ஒன்றைச் சேர்ந்தவள். ஆனால், அவள் ஏழை. வெகுகாலமாக உயர் வட்டாரத் தொடர்பிலிருந்து விலகியிருந்ததால் அவளுடைய முன்னைய செல்வாக்கான தொடர்புகளை இழந்துவிட்டாள். மெய்க்காப்பாளர் படையில் தனது ஒரே மகனுக்கு வேலை தேடித் தருவதற்காக

இப்பொழுது பீட்டர்ஸ்பர்க்குக்கு வந்திருக்கிறாள். இளவரசர் வாசைலியைச் சந்திப்பதற்காகவென்றே அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பு வைபவத்திற்கு ஓர் அழைப்பைப் பெற்றுக்கொண்டு அங்கு வந்து உட்கார்ந்து கோமகனின் கதையைக் கேட்டுக்கொண்டிருந்தாள். இளவரசர் வாசைலியின் வார்த்தைகள் அவளுக்கு அச்சத்தை ஊட்டின. ஒரு காலத்தில் அழகாய் இருந்த அவள் முகத்தில் கசப்பான தோற்றம் கவிந்தது. ஆனால், ஒரே வினாடிதான். மறுபடியும் அவள் சிரித்துக்கொண்டே இளவரசர் வாசைலியின் கரத்தை அழுத்திப் பிடித்தாள்.

‘நான் சொல்வதைக் கேளுங்கள், இளவரசே, நான் இதுவரை உம்மிடம் எதையும் கேட்டதில்லை. எதையும் இனி கேட்கப் போவதுமில்லை. என் தகப்பனாருக்கும், உமக்கும் உள்ள நட்பைப்பற்றி நான் எப்பொழுதும் சுட்டிக் காட்டியதில்லை. ஆனால், இப்பொழுது கடவுளுக்காக என் மகனுக்கு இதைச் செய்யும்படி உம்மைக் கெஞ்சுகிறேன்’ என்று சொல்லிவிட்டு, ‘உம்மை எப்பொழுதும் ஒரு தரும தாதா என்றே நான் கொள்ளுவேன்’ என்று அவசரமாய்க் கூறினாள். ‘இல்லை, கோபம் கொள்ளுதல் வேண்டாம். ஆனால், எனக்கு உறுதி கூறும் நான் காலிட்சினைக் கேட்டேன். அவர் மறுத்துவிட்டார். எப்பொழுதும் போலவே அன்புள்ளம் கொண்டவராய் இரும்’ என்று சொன்ன அவள் கண்களில் நீர் நிறைந்திருந்தபோதிலும், சிரிப்பைக் காட்ட முயற்சி செய்தாள்.

கதவுக்கு அருகில் காத்து நின்ற இளவரசி ஹெலன் கவிகளின் வர்ணிப்புப்படி அமைந்த தன்னுடைய தோள்களைப் பார்த்துக்கொண்டு, தன் அழகிய தலையைத் திருப்பி, ‘அப்பா நேரமாகிவிட்டதே?’ என்று சொன்னாள்.

உயர் வட்டாரத்திலுள்ள செல்வாக்கு என்பது மூலதனம். அந்த மூலதனம் அதிக நாள்கள் நிலைத்தல் வேண்டும் என்றால், அதைச் செலவிடுவதில் சிக்கனமாய் இருத்தல் வேண்டும். இளவரசர் வாசைலிக்கு இது தெரியும். அவரை வந்து கெஞ்சுபவர்களுக்கெல்லாம் அவர் சிபாரிசு செய்ய ஆரம்பித்தால், அவர் தமக்கென்று ஒரு சிபாரிசைக் கேட்பதற்குச் சீக்கிரமாக முடியாமல் போய்விடும். அதனால் அவருடைய செல்வாக்கை உபயோகிப்பதில் அவர் வெகு சிக்கனமாகவே இருந்தார். ஆனால், இளவரசி ட்ரூபெட்ஸ்கயா விஷயத்தில் அவர் இரண்டாவது தடவையாகக் கொஞ்சம் மனச்சாட்சி உறுத்தியதுபோல உணர்ந்தார். அவள் அவருக்கு

நினைப்பூட்டியதெல்லாம் முழுதும் உண்மை. அவருடைய பணித் துறையில் முதல் படி எடுத்து வைத்ததற்கு அவளுடைய தகப்பனாருக்கு அவர் கடமைப்பட்டிருக்கிறார். தவிர, அவளுடைய நடத்தையிலிருந்து ஒரு செய்தியாளர் கண்டார். அதாவது, ஒரு முடிவிற்கு வந்துவிட்ட பெண்கள்-அநேகமாகத் தாயார்கள்-தாங்கள் விரும்பியதைப் பெற்றாலொழிய அவர்கள் சும்மா இருக்கப் போவதில்லை. அவசியமானால் தங்கள் கோரிக்கையைத் தினந்தோறுமோ அல்லது ஒவ்வொரு மணியிலுமோ வற்புறுத்திக்கொண்டு, சண்டை போடக்கூடத் தயாராய் இருப்பார்கள். அந்தக் கூட்டத்தை அவள் சேர்ந்தவள். இந்தக் காரணம் அவரை அசைத்தது.

இளவரசர் தமது வழக்கமான உணர்வுடனும், எரிச்சலுடனும் கூடிய குரலில் பேசியதாவது:- 'என் அருமை மிக்காய்லாவ்னா, நீர் கேட்கிறபடி செய்வது என்பது எனக்கு அநேகமாய் முடியாத காரியம். ஆனால், உம்மிடம் எவ்வளவு அன்பு இருக்கிறது என்பதனைக் காட்டுவதற்காகவும் உனது தகப்பனாரை நான் எவ்வளவு மதிக்கிறேன் என்பதை காட்டுவதற்காகவும் அந்த முடியாத காரியத்தை நான் செய்து முடிப்பேன். உம் மகன் மெய்க்காப்பாளர் படைக்கு மாற்றப்படுவான். இதோ, கையடித்துச் சொல்லுகிறேன். உமக்குத் திருப்திதானா?'

'என் அருமை தருமதாதா, இதைத்தான் நான் உம்மிடமிருந்து எதிர்பார்த்தேன். உம்முடைய அன்பு எனக்குத் தெரியும்.'

இளவரசர் போவதற்காகத் திரும்பினார்.

'பொறுங்கள், ஒரு வார்த்தை. அவனை மெய்க்காப்பாளர் படைக்கு மாற்றியதும்...' அவள் தயங்கினாள். 'நீர் குட்டுஜோவுடன் நண்பராய் இருக்கிறீர்...போரிசை அவருக்கு உதவியாளனாக இருக்கும்படி சிபாரிசு செய்யும். அப்புறம் நான் கவலையில்லாமல் இருப்பேன். அப்புறம்...'

இளவரசர் வாசைலி சிரித்தார். 'முடியாது, அதற்கு நான் வாக்குறுதி கொடுக்க முடியாது. குட்டுஜோவ் படைத்தலைவராக நியமிக்கப்பட்டதிலிருந்து அவரை எப்படித் தொந்தரவு செய்கிறார்கள் என்பது உமக்குத் தெரியாது. மாஸ்கோவில் உள்ள சீமாட்டிகளெல்லாம் தங்கள் குமாரர்களை அவருக்கு உதவியாளர்களாகக் கொடுப்பதற்குச் சதி செய்து இருக்கிறார்களோ என்று அவரே என்னிடம் சொன்னார்.'

'விடமாட்டேன், வாக்குக் கொடுங்கள். உம்மைப் போக 'விட மாட்டேன், என் தருமதாதாவே...'

'அப்பா, நேரமாகிவிட்டதே' என்று அவருடைய அழகு மகள் முன்னால் சொல்லிய அதே குரலில் சொன்னாள்.

'நல்லது, மறுபடியும் சந்திப்போம். வணக்கம். அவள் சொல்வதை கேட்டீரல்லவா?'

'அப்படியானால் நாளை நீர் சக்கரவர்த்தியிடம் பேசுவீர் அல்லவா?'

'கட்டாயமாக; ஆனால் குட்டுஜோவைப்பற்றி நான் வாக்குக் கொடுக்க முடியாது.'

'வாக்குக் கொடுங்கள், வாக்குக் கொடுங்கள், வாசைலி' என்று அன்னா மிக்காய்லாவ்னா அவர் போகும்போது கெஞ்சினாள். அவள் முகத்தில் சிணுங்குதல் சிறுமியின் புன்னகை தோன்றியது. ஒரு காலத்தில் அவளுக்கு அந்தப் புன்னகை இயற்கையாய் வருவதாய் இருந்திருக்கலாம். ஆனால், இப்பொழுது அவளது கவலை நிறைந்த முகத்திற்கு அது மிகவும் பொருத்தமில்லாமல் இருந்தது. ஒருவேளை அவளுடைய வயதை அவள் மறந்திருக்கலாம். அவளுடைய வழக்கமான சுபாவத்தினால் பெண்களின் பழைய கைத்திறமைகளையெல்லாம் அவள் காட்டினாள். ஆனால், இளவரசர் அங்கிருந்து போனதும் அவளுடைய முகம் மீண்டும் உற்சாகமற்ற செயற்கைத் தோற்றங்களைக் காட்டியது. இன்னமும் கோமகன் பேசிக்கொண்டிருந்த அந்தக் கூட்டத்திற்குத் திரும்பி வந்து உட்கார்ந்தாள். பேசுவதைக் கேட்பதுபோலப் பாசாங்கு செய்து, அதை விட்டு எப்பொழுது வெளியே போகலாம் என்று காத்துக்கொண்டிருந்தாள். அவள் வந்த வேலை முடிந்துவிட்டது.

9

## 1 5

அண்மையில் நடந்த நகைச்சுவை இருக்கிறதே, மிலான் நகரில் நடந்த பட்டாபிஷேகம், அதைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? ஜினோவா, லூகாவின் மக்கள் திருவாளர் போனபார்ட் முன்பு தங்கள் விண்ணப்பங்களை அளிப்பதும், அந்தத் திருவாளர் போனபார்ட் ஓர் அரியணையில் அமர்ந்து, மக்களின் கோரிக்கைகளுக்கு நன்மை புரிந்த நகைச்சுவைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? போற்றத்தக்கது!

ஒருவரின் தலையை கிறுகிறுக்க வைப்பதற்கு இது போதும்! உலகம் முழுவதுமே பைத்தியம் பிடித்துவிட்டது போலல்லவா இது இருக்கிறது? என்று அன்னா பாவ்லாவ்னா பேசினாள்.

இளவரசர் ஆண்ட்ரூ கேலிப் புன்னகையுடன் அன்னா பாவ்லாவ்னாவின் முகத்தை நேராகப் பார்த்தார். 'கடவுள் இதை எனக்குக் கொடுத்தார். அதைத் தொடுபவர்கள் ஜாக்கிரதை' என்று போனபார்ட் கூறியபோது, அவர் பொலிவுடன் விளங்கினார் என்று சொல்லுகிறார்கள்; இம்மாதிரி சொல்லிவிட்டு நெப்போலியன் கூறிய வார்த்தைகளை இத்தாலிய மொழிகளில் திரும்பவும் பேசினார்.

'இனிமேல் பொறுக்க முடியாது. எல்லாவற்றிற்குமே ஆபத்தாய் நிற்கும் இந்த மனிதனை மன்னர்கள் இனி சகித்துக்கொண்டிருக்க முடியாது' என்று தொடர்ந்து பேசினாள் அன்னா பாவ்லாவ்னா.

'மன்னர்கள்? நான் ருஷ்யாவைப்பற்றிப் பேசவில்லை' என்று கோமகன் பணிவாகவும், நம்பிக்கையில்லாமலும் சொல்லிவிட்டு, 'சீமாட்டியே, மன்னர்கள்... 17 ஆவது லூயிஸ், அரசி அல்லது எலிசபெத்துச் சீமாட்டி இவர்களுக்கு அவர்கள் என்ன செய்து விட்டார்கள்? ஒன்றுமில்லை. (அவர் பரபரப்படைந்து) பூர்பான் விஷயத்தில் அவர்கள் செய்த துரோகத்திற்கு இப்பொழுது பலனை அனுபவிக்கிறார்கள். மன்னர்கள்! இந்த ஆக்கிரமிப்புக் காரனைப் பாராட்டுவதற்காக அவர்கள் தலைவர்களை அனுப்புகிறார்கள்' என்றார்.

வெறுப்பான பெருமூச்சோடு அவர் நிலை மாறி அமர்ந்தார். தமது கைக்கண்ணாடி மூலமாகக் கோமகனைச் சிறிது நேரமாக பார்த்துக்கொண்டிருந்த இளவரசர் ஹிப்பாலைட் சின்ன இளவரசி பக்கம் திடீரென்று முற்றிலும் திரும்பினார். அவளிடமிருந்து ஒரு பின்னல் ஊசியை வாங்கிக் கொண்டே குடும்பத்தின் சின்னத்தை மேசை மீது வரைய ஆரம்பித்தார். அதனுடைய அர்த்தத்தை அவள் விளக்கும்படி கேட்டதுபோல் வெகு சிரத்தையோடு வியாக்கியானத்தில் இறங்கினார். அவர் கூறிய செய்தி மொழி பெயர்க்கப்பட முடியாத வெறும் அசட்டுப் பேச்சு. இளவரசி அதைக் கேட்டுச் சிரித்தாள்.

'பிரான்சின் அரியணையில் போனபார்ட் தொடர்ந்து இன்னும் ஓர் ஆண்டு இருப்பானானால் செய்தி வெகுதூரம் போய்விடும். சூழ்ச்சிகள், பலாத்காரம், நாடு கடத்தல், உயிர் வாங்குதல் இவற்றின்

மூலம் பிரஞ்சு சமூகம்-உண்மையான பிரஞ்சு சமூகம்-அடியோடு நிருமூலமாக்கப்படும். அப்புறம்...' என்று கோமகன் கூறினார். அவர் பேசியது இந்த விஷயத்தில் வேறு எவரையும்விட அவருக்கு அதிகம் தெரிந்திருந்தது போலவும், வேறு எவர் பேச்சையும் கேட்காமல் தம் சொந்த யோசனையையே பின்பற்றுபவர் போலவும் இருந்தது. அவர் பேசி முடித்ததும் தோள்களைக் குலுக்கிக் கைகளை விரித்துக் காட்டினார். இந்த உரையாடலில் தமக்கு மகிழ்சி இருந்ததால் பீயர் அச்சமயம் ஒரு வார்த்தை கூற விரும்பினார். ஆனால், அவரையே கவனித்துக்கொண்டிருந்த அன்னா பாவ்லாவ்னா இடைமறித்துப் பேசினாள்.

சக்கரவர்த்தியின் குடும்பத்தைப்பற்றிப் பேசும்போதெல்லாம் அவள் முகத்தில் தோன்றும் சோகக் குறியோடு, 'தங்களுக்கு எந்தவிதமான அரசு வேண்டும் என்பதனைத் தாங்களே தீர்மானித்துக்கொள்வதற்கு விட்டுவிடப் போவதாக அலெக்சாண்டர் சக்கரவர்த்தி பிரகடனப்படுத்தியிருக்கிறார். அந்த ஆக்கிரமிப்புக்காரனிடமிருந்து முதலில் விடுதலை பெற்றுவிட்டால் முழு சமுதாயமும் நியாயமான மன்னருக்குப் பக்கபலமாய் நிற்குமென்று நான் நம்புகிறேன்' என்று அரச குடும்பத்தைச் சேர்ந்த குடியேறியை நிறைவு செய்ய முயற்சிக்கும் விதத்தில் பேசி முடித்தாள்.

'அதுதான் சந்தேகம்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. 'திருவாளர் கோமகன் விஷயங்கள் வெகுதூரம் போய்விட்டன என்பதனைச் சரியாகச் சொன்னார். பழைய அரசாட்சிக்கு மீண்டும் திரும்புவது கஷ்டமாய் இருக்குமென்று நான் நம்புகிறேன்.'

சிறிது நாணத்துடன் உரையாடலில் இடைமறித்து பீயர், 'நான் கேள்விப்பட்டதிலிருந்து செல்வர்கள் அநேகமாய்ப் போனபார்ட்டுக் கட்சிக்கு போய்விட்டார்கள்' என்றார்.

'போனபார்ட்டைச் சேர்ந்தவர்கள்தாம் அம்மாதிரி சொல்லுகிறார்கள்' என்று பீயரைப் பார்க்காமல் கோமகன் பதிலளித்தார். 'தற்கால நிலைமையில் பிரஞ்சுப் பொதுமக்களின் உண்மையான எண்ணத்தை அறிந்துகொள்ளுவது சிரமம்.'

இளவரசர் ஆண்ட்ரூ கேலிச் சிரிப்போடு 'போனபார்ட் அப்படிச் சொன்னார்' என்றார்.

அவர் கோமகனை விரும்பவில்லை என்பது தெளிவாய்த் தெரிந்தது. அவர் கோமகனுக்கே அந்தப் பதிலைச் சொல்லிய போதிலும், கோமகனைப் பார்க்காமலேயே பேசினார்.

சிறிது நேரம் மௌனத்திற்குப் பின்னால் இளவரசர் ஆண்ட்ரூ, நெப்போலியன் சொன்ன வார்த்தைகளை எடுத்துச் சொல்லியதாவது:- 'கீர்த்தியடையும் வழியை அவர்களுக்குக் காட்டினேன். அதனைப் பின்பற்ற அவர்கள் மறுத்துவிட்டார்கள். எனது வெளியறையைத் திறந்து வைத்தேன்; அங்கே வந்து கூடினார்கள்.'

'அவர் சொல்லியது எவ்வளவுதூரம் உண்மை என்பது எனக்குத் தெரியாது' என்று ஆண்ட்ரூ கூறி முடித்தார்.

'கொஞ்சம்கூடக் கிடையாது' என்றார் கோமகன். 'கோமகனின் கொலைக்குப் பின்னால், நெப்போலியன் கட்சியைப் பலமாய் ஆதரிப்பவர்கள்கூட நெப்போலியனைப் பெரிய வீரன் என்று போற்றுவதை நிறுத்திவிட்டார்கள். (அன்னா பாவ்லாவ்னா பக்கம் திரும்பி) சிலருக்கு எப்பொழுதாவது அவர் வீரராய் இருந்திருந்தால், கோமகனின் கொலைக்குப் பின்னால் வானுலகத்தில் ஒரு தியாகி அதிகரித்து, பூவுலகில் ஒரு வீரனைக் குறைத்துவிட்டான்' என்றார்.

கோமகனின் சாமர்த்தியமான பேச்சைக் கேட்டுப் பாராட்டி அன்னா பாவ்லாவ்னாவும் மற்றவர்களும் மகிழ்ச்சி கொள்ளுவதற்கு முன்னால், பீயர் மறுபடியும் உரையாடலில் இறங்கினார். அவர் ஏதோ பொருத்தமில்லாமல் பேசப் போகிறார் என்பதனை அன்னா பாவ்லாவ்னா உறுதியாக அறிந்திருந்தாலும் அவளால் அவர் பேசுவதனைத் தடுக்க முடியவில்லை.

'எனின் கோமகனின் உயிரைப் பறித்தது ஓர் அரசியல் அவசியமாகும்' என்றார் பீயர். 'அந்தக் காரியத்திற்கு முழுப் பொறுப்பையும் நெப்போலியன் பயமின்றித் தாமே மேற்கொண்டது அவருடைய பெருந்தன்மையைக் காட்டுகிறது என்றே எனக்குத் தோன்றுகிறது.'

'கடவுளே, அட கடவுளே' என்று அன்னா பாவ்லாவ்னா நடுங்கிய குரலில் முணுமுணுத்தாள்.

'என்ன, திருவாளர் பீயர்,...படுகொலை செய்வது பெருந்தன்மையைக் காட்டுகிறது என்றா நீர் நினைக்கிறீர்?' என்று சின்ன இளவரசி தனது பின்னல் வேலையைத் தன்னிடம் இழுத்து வைத்துச் சிரித்துக்கொண்டே சொன்னாள்.

'ஓஹோ' என்று பல குரல்கள் கூவின.

'உயர்ந்த கருத்து' என்று இளவரசர் ஹிப்பாலைட் தமது கையால் கால் முட்டைத் தட்டிக்கொண்டு ஆங்கிலத்தில் பேசினார்.

கோமகன் தமது தோள்களைக் குலுக்கினார். பீயர் பவித்திரமாய்த் தம் முன்னால் இருப்பவர்களை மூக்குக் கண்ணாடிக்கு மேல் வழியாகப் பார்த்து, தொடர்ந்து சொன்னார்:- 'நான் அப்படித்தான் சொல்லுகிறேன். ஏனென்றால், புரட்சி தோன்றியதும் மக்களை அராஜகத்திற்கு விட்டுவிட்டு பூர்பான்கள் வெளியே ஓடினார்கள். நெப்போலியன் ஒருவன்தான் புரட்சி அறிந்து அதை அடக்கினான். ஆகவே, ஒருவனின் உயிருக்காகப் பொதுவான நன்மையை அவர் விட்டுவிட முடியாது.'

'இந்தப் பக்கத்து மேசைக்கு நீர் வரமாட்டீரா?' என்று அன்னாபாவ்லாவ்னா கேட்டாள்.

ஆனால், அவளை இலட்சியம் செய்யாமல் பீயர் பேசிக்கொண்டே இருந்தார். வர வர ஆவல் பெருகி அவர் சொன்னதாவது:-'இல்லை, நெப்போலியன் உயர்ந்தவர். ஏனெனில், புரட்சிக்கு மேலாக அவர் வளர்ந்து, புரட்சியினால் ஏற்படக்கூடிய கெடுதல்களை அவர் அடக்கினார். நன்மைகளான மக்களின் சமத்துவம், பேச்சு சுதந்திரம், பத்திரிகை சுதந்திரம் ஆகியவற்றை அவர் காப்பாற்றினார். அந்த ஒரே காரணத்திற்காக அவர் அதிகாரத்தைக் கைக்கொண்டார்.'

'ஆமாம். அதிகாரத்தைக் கைப்பற்றிய பின்பு கொலை செய்வதற்கு அதனை உபயோகப்படுத்தாமல் அந்த அதிகாரத்திற்கு உரியவரான மன்னரிடம் அதனை ஒப்பித்திருந்தால் அவரை ஒரு பெரிய மனிதன் என்று நான் அழைப்பேன்' என்று கோமகன் கூறினார்.

'அவரால் அப்படிச் செய்ய முடியாது. பூர்பான்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றுவார் என்றும், அவர் ஒரு பெரிய மனிதர் என்றும் நினைத்தே மக்கள் அவருக்கு அதிகாரத்தைக் கொடுத்தார்கள். புரட்சி இருக்கிறதே, அது ஒரு பிரமாதமான காரியம்' என்று திருவாளர் பீயர் தம்முடைய இளமையையும் தம் மனத்தில் இருப்பதையெல்லாம் வெளியிடுதல் வேண்டும் என்ற ஆசையையும் காட்டும் விதத்தில் இந்தத் துணிகரமான, கோபமூட்டக்கூடிய சிந்தனைகளை வெளியிட்டார்.

'என்ன ! புரட்சியும் மன்னரைக் கொல்வதும் பிரமாதமான விஷயமா?...நல்லது. அதற்கப்புறம்...ஆனால், நீர் இந்த மேசைக்கு வரமாட்டீரா?' என்று அன்னா பாவ்லாவ்னா மீண்டும் கேட்டாள்.

'ரூசோ எழுதிய 'சமுதாய ஒப்பந்தம்' என்ற புத்தகம்' என்று புன்சிரிப்போடு கோமகன் கூறினார்.

'மன்னரைக் கொல்வதைப்பற்றி நான் பேசவில்லை. நான் கொள்கைகளைப்பற்றியே பேசுகிறேன்.'

'ஆமாம். திருட்டு, கொலை, மன்னரைக் கொல்லுதல் ஆகிய கொள்கைகள்' என்று கேலியாக ஒரு குரல் ஒலித்தது.

'அவையெல்லாம் அதீதமானவை என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அவை மிக முக்கியமானவை அல்ல. முக்கியமானது என்னவென்றால், மக்களின் உரிமைகள், வேறுபாட்டிலிருந்து விடுதலை பெறுதல், மக்களின் சம உரிமை இவைதாம். இந்த எல்லாக் கொள்கைகளையும் நெப்போலியன் முழு வேகத்தோடு நிலைநிறுத்திருக்கிறார்.'

இந்த இளைஞனின் வார்த்தைகள் எவ்வளவு அறிவீனமானவை என்று காட்டுவதற்கு முடிவு செய்தவர்போல, துச்சமாகப் பேசக் கோமகன் தொடர்ந்தார். 'விடுதலை, சமத்துவம் என்ற ஆடம்பரமான வார்த்தைகள் மதிப்பிழந்து வெகு காலமாயிற்று. யார்தாம் விடுதலையையும் சமத்துவத்தையும் விரும்பாமல் இருக்க முடியும். நமது ரட்சகர்கூட விடுதலையையும், சமத்துவத்தையும்தாம் உபதேசித்தார். புரட்சிக்குப் பின்னால் மக்கள் மகிழ்ச்சியடைந்து விட்டார்களா? அப்படியில்லை. நாம் விடுதலையை விரும்பினோம். ஆனால், போனபார்ட் அதனை அழித்துவிட்டார்.'

இளவரசர் ஆண்ட்ரூ சுவைக்கும் புன்னகையோடு முதலில் பீயரைப் பார்ப்பதும், அப்புறம் கோமகனைப் பார்ப்பதும், பின்னால் அன்னாவைப் பார்ப்பதுமாக மாறி மாறிச் செய்துவந்தார். பீயரின் வேகமான வார்த்தைகள் வெளிப்பட ஆரம்பித்தபோது, அன்னா பாவ்லாவ்னா தனக்குப் பரந்த உலக அனுபவம் இருந்துகூட முதலில் திகில் கொண்டாள். ஆனால், பீயரின் பாவகரமான வார்த்தைகளைக் கண்டு கோமகன் பொறுமை இழக்கவில்லை என்பதைக் கண்டபோது, இனி பீயரைப் பேசாமல் நிறுத்துவது முடியாத காரியம் என்பதை அறிந்து அந்தப் பேச்சாளரை வேகமாய் தாக்குவதற்கு கோமகனுடன் சேர்ந்துகொண்டாள். அவள் சொன்னாள்:- 'எனது அன்புள்ள திருவாளர் பீயரே. குற்றமற்ற, விசாரிக்கப்படாத ஒரு கோமகனின் அல்லது ஒரு சாதாரண

மனிதனின் உயிரை, ஒரு பெரிய மனிதர் பறிப்பதென்றால், அதற்கு என்ன சமாதானம் சொல்லுகிறீர்?'

*'ப்ரூமோ 18-ஆம் தேதியைப்பற்றி என்ன சமாதானம் சொல்லுகிறார் என்பதனைத் திருவாளரிடம் கேட்க விரும்புகிறேன். அது ஒரு வஞ்சகமல்லவா? அது ஒரு மோசடியல்லவா? இவையெல்லாம் ஒரு பெரிய மனிதர் செய்யக்கூடிய செய்கைகள் அல்லவே' என்றார் கோமகன். (*ராணுவ ஜெனரலாய் இருந்த நெப்போலியன் புரட்சி செய்து நாடாள்பவனாக வந்த தினம்.)

*'ஆப்பிரிக்காவில் கைதிகளை அவர் கொன்றதையும் சேர்த்துக் கொள்ளுங்கள்! அது ரொம்ப பயங்கரமான விஷயம்' என்று சின்ன இளவரசி தமது தோள்களை குலுக்கிக்கொண்டு சொன்னாள். (*நெப்போலியனுக்கு விரோதமாக எகிப்தில் கிளம்பிய கலகத்தை அடக்குவதற்கு நெப்போலியன் கையாண்ட கொடுமைகளை இது குறிப்பிடுகிறது.)

'நீங்கள் என்ன சொன்னாலும் சரி, அவன் ஒரு கீழ்த்தரமான மனிதன்' என்று இளவரசர் ஹிப்பாலைட் சொன்னார்.

யாருக்குப் பதில் சொல்லுவது என்று தெரியாமல் எல்லாரையும் பார்த்துப் பீயர் சிரித்தார். அவர் சிரிப்பு மற்றவர்களின் அரைச் சிரிப்பைப் போன்றதல்ல. அவர் புன்னகை கொண்டால், அவருடைய கவலை தோய்ந்த இருண்ட தோற்றம் நொடிப் பொழுதில் மாறி, மன்னிப்பைக் கோருவது போன்ற குழந்தை மனம், அன்பு, இரக்கம் இந்தப் பார்வைகள் தோன்றுகின்றன.

இதைப் பார்த்ததும் அவரை இப்பொழுதுதான் முதன் முதலாக சந்திக்கிற கோமகனுக்கு இந்த ★ஜாக்கோபின், அவருடைய வார்த்தைகள் காட்டுவதைப்போல அவ்வளவு பயங்கரமானவர் அல்லர் என்பது தெளிவாய்த் தெரிந்தது. எல்லாரும் மௌனமாய் இருந்தார்கள். (★பிரஞ்சுப் புரட்சிக் காலத்தில் புரட்சியை ஆதரித்து வளர்த்து வந்த சங்கத்திற்கு ஜாக்கோபின் கிளப் என்று பெயர். அதைச் சேர்ந்தவர்களை ஜாக்கோபின்கள் என்று அழைத்துவந்தார்கள்).

'உங்கள் எல்லாருக்கும் ஒரே சமயத்தில் பதில் சொல்லுவார் என்று நீங்கள் எப்படி எதிர்பார்க்க முடியும்?' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. 'தவிரவும், ஒரு இராஜதந்திரிகளின் செய்கைகளைப்பற்றி ஆராயும்போது தனிப்பட்ட முறையில் செய்கிற அவருடைய செய்கைகளுக்கும் ஒரு இராணுவ ஜெனரல், ஒரு சக்கரவர்த்தி என்று செய்கிற செய்கைகளுக்கும் வித்தியாசம் கண்டு ஆராய்தல் வேண்டும். அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது.'

'ஆமாம், ஆமாம்,' அப்படித்தான் என்று தமக்குக் கிடைத்த பக்கபலத்தைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தவராக பீயர் மொழிந்தார்.

'ஆர்க்கோலா பாலத்தில் மனிதன் என்ற முறையில் நெப்போலியன் மிகவும் பிரமாதமாய் இருந்தார்' என்று இளவரசர் ஆண்ட்ரூ தொடர்ந்து கூறினார். 'ஜாபா ஆஸ்பத்திரியில் பிளேக் நோயினால் துன்பமடைந்தவர்களுக்கு அவர் கைகொடுத்தபோதும் அப்படியே. இதனை எல்லோரும் ஒப்புக்கொண்டுதான் ஆதல்வேண்டும். ஆனால்...ஆனால் அவருடைய மற்றும் சில செய்கைகளுக்கு நியாயம் கூறுவது சிரமமான செயல்.'

பீயரின் பேச்சுகளால் ஏற்பட்ட விகாரமான நிலைமையைத் தணிக்க விரும்புபவர்போல இளவரசர் ஆண்ட்ரூ எழுந்து, 'போகலாம்' என்று தம் மனைவிக்குச் சைகை காட்டினார்.

உடனே இளவரசர் ஹிப்பாலைட் எல்லாரையும் உட்காரும்படி கேட்டுக்கொண்டு, தான் சொல்வதைக் கவனிக்கும்படி சைகை காட்டினார். அவர் சொல்லியதாவது:-

'ஒரு கவர்ச்சிகரமான மாஸ்கோ கதையை இன்று நான் கேள்விப்பட்டேன். அதை இன்று உங்கள் எல்லோருக்கும் சொல்ல விரும்புகிறேன். கோமகனே, மன்னிக்க வேண்டும். நான் அதை இரழ்சியமொழியில்தான் சொல்லுதல்வேண்டும். இல்லாவிடில் அதன் சுவையான பாகம் மறைந்துவிடும்' என்று இளவரசர் ஹிப்பாலைட் தமது கதையை ருஷ்ய மொழியில் சொல்ல ஆரம்பித்தார். அவர் பேசிய மொழி, ஒரு பிரஞ்சுக்காரர் ஓராண்டு ருஷ்யாவில் இருந்த பின்பு எம்மாதிரி ருஷ்ய மொழியைப் பேசுவாரோ, அம்மாதிரி இருந்தது. அழுத்தமாகவும், ஆவலோடும் தம் கதையைக் கேட்டல்வேண்டும் என்று அவர் விரும்பியதால், ஒவ்வொருவரும் கேட்கத் தயாராய் இருந்தார்கள்.

அவர் சொன்னார்:- 'மாஸ்கோவில் ஒரு சீமாட்டி இருக்கிறாள். அவள் பெரிய கஞ்சப் பேர்வழி. அவளுடைய வண்டியின் பின்னால் நிற்பதற்கு இரண்டு பருமனான சேவகர்கள் அவளுக்கு வேண்டும். அது அவளுடைய ஆசை. அவளுக்கு மிக தடித்த வேலைக்காரி ஒருத்தியும் உண்டு. அவள் சொன்னாள்...'

இங்கே இளவரசர் ஹிப்பாலைட் தாம் சொல்லவேண்டிய செய்தியை மிகுந்த சிரமத்தோடு யோசித்துக்கொண்டிருந்தார்.

'அவள் சொன்னாள்...ஆமாம், அவள் சொன்னாள். வேலைக்காரியைப் பார்த்து, ''நீ ஒரு டவாலியைப் போட்டுக்

கொண்டு நான் போகிற இடங்களுக்கு என் வண்டியின் பின்னால் நின்றுகொண்டு வா'' என்று சொன்னாள்.'

இங்கே இளவரசர் ஹிப்பாலைட், சபையினர் சிரிக்கும் முன்பே எச்சில் தெறிக்கும்படி தாம் விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தார். அங்கிருந்தவர்களுக்கு இதைக் கண்டு சகிக்கவில்லை. இருந்தாலும், அன்னா பாவ்லாவ்னாவும் அகவை முதிர்ந்த பெண்ணும் வேறு பலரும் புன்னகை காட்டினார்கள்.

'அவள் போனாள். திடீரென்று ஒரு பெருங் காற்றுத் தோன்றியது. இந்தத் வேலைக்காரப் பெண்ணின் தொப்பியை அடித்துக்கொண்டு போயிற்று. அவளுடைய நீண்ட கூந்தல் அவிழ்ந்து வீழ்ந்தது...' இதற்கு மேலே அவரால் அடக்க முடியாமல் சிரிப்புகளுக்கிடையே 'உலகம் முழுவதும் அறியும்...' என்றார்.

இதோடு அவருடைய கதை முடிந்தது. அவர் எதற்காக இதைச் சொன்னார், இதை இரழ்சிய மொழியில் எதற்காகச் சொல்லுதல்வேண்டும் என்பது புரியாதபடி இருந்தாலும், அன்னா பாவ்லாவ்னாவும் மற்றவர்களும் இதைச் சுவைத்தார்கள். பீயரின் வெறுப்பான, பொருத்தமில்லாத பேச்சுகளுக்குப் பின்னால், அன்றைய உரையாடலை முழுமையான திருப்தியான முறையில் முடிப்பதற்கு இளவரசர் ஹிப்பாலைட் கையாண்ட இந்தச் சாமர்த்தியத்தைச் சுவைத்தார்கள். இந்தக் கதைக்குப் பின்னால் அங்கே உரையாடல்கள் பலவிதமாகப் பிரிந்தன. நடந்துபோன நடனம், நடக்கப்போகிற நடனம், நாடகங்கள், யார் யர்ரைச் சந்திப்பது, எங்கே சந்திப்பது என்பன போன்ற சில்லரைச் செய்திகளில் உரையாடல்கள் திரும்பின.

## 1 6

மனோரம்மியமான மாலை கச்சேரிக்காக அன்னா பாவ்லாவ்னாவுக்கு நன்றி தெரிவித்து விட்டு விருந்தாளிகள் விடை பெற்றுக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

பீயர் என்னவோ மாதிரியாக இருந்தார். பருமனான உடல், பரந்த தோள்கள், சராசரி உயரம், பெரிய சிவப்பான கைகள், ஒரு வரவேற்பு மண்டபத்திற்குள் நுழைந்து எப்படிக் கலந்துக் கொள்வது என்று அவருக்குத் தெரியாது. அதைவிட மோசம் அதைவிட்டு வெளியேறும்போது, எப்படிப் பொருத்தமான வார்த்தைகள்

சொல்லி வெளியேறுதல் வேண்டும் என்பதும் அவருக்குத் தெரியாது. இதைத் தவிர, அவர் ஒரு பராக்குப் போக்குள்ளவர். போவதற்காக அவர் எழுந்தபோது, தமது தொப்பிக்குப் பதிலாக இராணுவ ஜெனரலின் முக்கோண வடிவமான தொப்பியை எடுத்து வைத்துக்கொண்டார். அந்த ஜெனரல் அவர் கையிலுள்ள தொப்பியைக் கைப்பற்றுகிறவரையில் அந்தத் தொப்பியிலுள்ள தோகையை இழுத்துக்கொண்டிருந்தார். அவருடைய இனிய எளிய அடக்கமுள்ள முகபாவம், அவருடைய பராக்குப் புத்தி, வரவேற்பு மண்டபத்தில் கலந்து உரையாடல் செய்யக் கூடிய திறமையின்மை ஆகியவைகளுக்குப் பரிகாரம் செய்வதாய் இருந்தது. அவருடைய அசந்தர்ப்பமான வார்த்தைகளுக்கு மன்னிப்புக் கொடுப்பதைப் போன்ற கிறித்துவ சாந்தத்துடன் அன்னா பாவ்லாவ்னா அவரை நோக்கிச் சொன்னாள்:- 'என் அருமைத் திருவாளர் பீயரே, உம்மை மறுபடியும் பார்ப்பேன் என்று நம்புகிறேன். ஆனால், உம்முடைய அபிப்பிராயங்களை மாற்றிக்கொள்வீர் என்றும் நம்புகிறேன்.'

அவள் இதைச் சொன்னதும் அவர் பதில் சொல்லவில்லை; தலை மட்டும் வணங்கினார். ஆனால், ஒவ்வொருவரும் அவருடைய இளமுறுவலைக் கண்டார்கள். அந்த இளமுறுவல் 'அபிப்பிராயங்கள் அபிப்பிராயங்கள்தாம். ஆனால், நான் எவ்வளவு உயர்ந்த இனிய சுபாவம் உள்ளவன் என்பதை நீங்கள் அறிவீர்கள்' என்று சொல்லுவதைப்போல் இருந்தது. ஒவ்வொருவரும், அன்னா பாவ்லாவ்னா உட்பட இதை உணர்ந்தார்கள்.

இளவரசர் ஆண்ட்ரூ வெளி மண்டபத்திற்கு வந்து தமது மேலங்கியைத் தம்மீது அணிவதற்குச் சேவகனிடம் தமது தோள்களைக் காட்டினார். அங்கு வந்து தமது மனைவி இளவரசர் ஹிப்பாலைட்டுடன் பேசிக்கொண்டிருந்ததை அலட்சியமாய்க் கேட்டுக்கொண்டிருந்தார். சினைகொண்ட அந்த அழகிய இளவரசியிடம் நெருங்கி நின்றுகொண்டு இளவரசர் ஹிப்பாலைட் தமது கைக்கண்ணாடியின் மூலம் வெறித்தாற்போலப் பார்த்தார்.

'அன்னெட்டி, உள்ளே போம். இல்லையானால் நீர்க்கோவை பிடித்துக்கொள்ளும்' என்று அன்னா பாவ்லாவ்னாவிடம் விடை பெற்றுக் கொண்டு குஞ்சு இளவரசி கூறினாள். தணிந்த குரலில் 'அது முடிந்துவிட்டது' என்றும் சொன்னாள். அனடோலுக்கும், குஞ்சு இளவரசியின் மைத்துனிக்கும் திருமணம் செய்வதைப்பற்றிய செய்தியை அன்னா பாவ்லாவ்னா முன்னதாகவே லிசாவுடன் பேசிவிட்டாள்.

‘உன்னைத்தான் நம்பியிருக்கிறேன். அவளுக்கு எழுதி இதைப் பற்றி அவளுடைய தகப்பனார் என்ன நினைக்கிறார் என்று எனக்குத் தெரிவி. போய் வா’ என்று அன்னா பாவ்லாவ்னா தணிந்த குரலில் சொன்னாள்.

அவள் அந்த மண்டபத்தைவிட்டு நீங்கினாள்.

இளவரசர் ஹிப்பாலைட் குஞ்சு இளவரசியை நெருங்கி, அவளுடைய முகத்துக்குச் சமீபமாகத் தம்முடைய முகத்தைக் கொண்டுபோய் ஏதோ முணுமுணுக்க ஆரம்பித்தார்.

இளவரசியின் சேவகன் அவளுடைய சால்வையை அவள் மீது போர்த்திவிடுவதற்குத் தயாராகவும், இளவரசரின் சேவகன் அவருடைய மேலங்கியை அவர் மீது அணிவதற்குத் தயாராகவும் உரையாடல் முடிவதற்காகக் காத்துக்கொண்டு நின்றார்கள். அவர்கள் கேட்ட பிரஞ்சு மொழிகள் அவர்களுக்கு பொருளற்றதாய் விளங்கின. ஆனால், எல்லாம் தெரிந்ததுபோலவும், ஆனால், தெரிந்ததைக் காட்டிக்கொள்ள விருப்பமில்லாதவர்கள் போலவும் அவர்கள் காணப்பட்டார்கள். இளவரசி வழக்கம்போல இளமுறுவலுடன் பேசிச் சிரிப்புடன் செவிசாய்த்தாள்.

‘தலைவரின் விருந்திற்கு நான் போகாததற்கு மகிழ்ச்சி அடைகிறேன்-நிரம்ப அழுதுவடிந்தது-இங்கே இன்று மாலை மகிழ்ச்சியானதாய் இருந்தது அல்லவா? மகிழ்ச்சி, மகிழ்ச்சி!’ என்றார் இளவரசர் ஹிப்பாலைட்.

இளவரசி தன்னுடைய அரும்பு மயிர் படர்ந்த மேல் உதட்டைக் கீழே இழுத்துக்கொண்டே சொன்னதாவது:- ‘அங்கே நடனம் நிரம்ப நன்றாய் இருக்கும் என்று சொல்லுகிறார்கள். உயர் வட்டாரத்தைச் சேர்ந்த எல்லா அழகிகளும் அங்கே கூடியிருப்பார்கள்.

‘எல்லாரும் அல்லர். ஏனெனில், நீ அங்கே இருக்கமாட்டாய். எல்லாரும் அல்லர்’ என்று இளவரசர் ஹிப்பாலைட் மகிழ்ச்சிப் புன்னகையொடு சொன்னார். கையில்ச் சால்வையை வைத்துக்கொண்டு நின்ற சேவகனிடமிருந்துச் சால்வையைப் பிடுங்கி அவனையும் கொஞ்சம் அங்கிருந்து தள்ளிச் சால்வையை இளவரசியின் மீது போர்த்தினார். சால்வையை அவள் மீது போர்த்திய பின்பும் அசட்டுத்தனத்தினாலோ அல்லது வேண்டுமென்றோ தமது கைகளை எடுக்காமல் அவளை அணைவதைபோல நின்றுகொண்டிருந்தார்.

இன்னமும் புன்முறுவல் கொண்டு அவள் ஒயிலோடு அப்புறம் நகர்ந்து, திரும்பித் தன் கணவனைப் பார்த்தாள். இளவரசர் ஆண்ட்ரூவின் கண்கள் மூடியிருந்தன. களைப்பும், தூக்கமும் கொண்டவர்போல அவர் காணப்பட்டார்.

'நீ தயார்தானா?' என்று அவளைப் பார்க்காமலே தூரமாகப் பார்த்து அவர் தம் மனைவியைக் கேட்டார்.

இளவரசர் ஹிப்பாலைட் வேகமாகத் தமது மேலங்கியை அணிந்துகொண்டார். அக்காலத்து மோஸ்தர்படி அந்த மேலங்கி அவருடைய குதிகால் வரை தொங்கி நின்றது. அதில் தடுமாறிக்கொண்டு இளவரசியைப் பின்பற்றி முற்றத்திற்கு ஓடினார். அங்கே ஒரு சேவகன் இளவரசி வண்டியில் ஏறுவதற்கு உதவி செய்துகொண்டிருந்தான்.

'இளவரசியே, போய்வாருங்கள்!' என்று நடையிலும் வார்த்தைகளிலும் தடுமாறிக்கொண்டே கூச்சலிட்டார்.

இளவரசி தமது உடைகளைச் சுருட்டிக்கொண்டு அந்த இருண்ட வண்டிக்குள் அமர்ந்தாள். அவளுடைய கணவன் தமது உடைவாளைச் சரி செய்துகொண்டிருந்தார். உதவி செய்கிற பாசாங்கில் இளவரசர் ஹிப்பாலைட் ஒவ்வொருவருக்கும் இடையூறாய் இருந்தார்.

தான் வண்டியில் ஏறவிடாமல் வழியில் இடையூறாய் நின்ற இளவரசர் ஹிப்பாலைட்டைப் பார்த்து, இரழ்சிய மொழியில் அதிருப்தியும் அலட்சியமும் உள்ள தொனியில் 'எனக்கு வழி விடுங்கள் ஐயா' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

ஆனால், அன்பும் அமைதியும் கலந்த மொழியில் 'உம்மை எதிர் பார்த்துக்கொண்டிருப்பேன், பீயர்' என்று அதே குரல் பேசியது.

வண்டி கிளம்பியது. வண்டிச் சக்கரங்கள் கலகலவென சப்தமிட்டன. வீட்டிற்கு அழைத்துப் போவதாகக் கோமகனுக்கு இளவரசர் ஹிப்பாலைட் சொல்லியிருந்தார். அவருக்காக முற்றத்தில் காத்துக்கொண்டிருந்த இளவரசர் ஹிப்பாலைட் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்.

ஹிப்பாலைட்டுடன் கோமகன் வண்டிக்குள் அமர்ந்ததும் 'நல்லது, என் அன்பரே! உமது குஞ்சு இளவரசி நிரம்ப இனிமையானவள். நிரம்ப நிரம்ப இனிமையானவள். அசல் பிரஞ்சுப் பாணி' என்று சொல்லிக்கொண்டு தம்முடைய விரல் நுனிகளை முத்தமிட்டார். ஹிப்பாலைட் கடகடவென்று சிரித்தார்.

'நீர் அப்பாவிபோலத் தோன்றினாலும், நீர் ஒரு பொல்லாத ஆசாமி. அந்த ஏழைக் கணவனுக்காக நான் இரங்குகிறேன். அந்தச் சிறிய அதிகாரி ஒரு பெரிய சக்கரவர்த்தி என்று நினைத்து நடமாடுகிறார்.'

ஹிப்பாலைட் மறுபடியும் உளற ஆரம்பித்தார். சிரிப்புகளுக் கிடையே 'இரஷ்சிய சீமாட்டிகள் பிரஞ்சு சீமாட்டிகளுக்கு இணையாகமாட்டார்கள் என்று நீர் சொல்லிக்கொண்டிருந்தீர் அல்லவா? அவர்களை எப்படிக் கையாள வேண்டும் என்பது தெரிந்திருக்க வேண்டும். அவ்வளவுதான்' என்று சொன்னார்.

மற்றவர்களுக்கு முன்னாள் வீடு வந்து சேர்ந்த பீயர், பழக்க மானவர்போல இளவரசர் ஆண்ட்ரூவின் படிப்பு அறைக்குள் போனார். அவர் வழக்கப்படி ஒரு சோபாவில் சாய்ந்து புத்தக அலமாரியிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்தார். அவர் கையில் அகப்பட்ட 'சீசரின் வியாக்கியானங்கள்' என்ற புத்தகத்தை நடுமத்தியில் திருப்பி முழங்கையை ஊன்றிக்கொண்டு படிக்க ஆரம்பித்தார்.

தமது வெண்மையான கைகளைத் தேய்த்துக்கொண்டே அறைக்குள் நுழைந்த இளவரசர் ஆண்ட்ரூ, 'குமாரி (அன்னா பாவ்லாவ்னா) ஷெரெருக்கு நீர் என்ன செய்துவிட்டீர் தெரியுமா? இந்நேரம் அவள் தவித்துக்கொண்டிருப்பாள்' என்று கூறினார்.

தாம் படுத்திருந்த சோபாவில் பீயர் அப்படியே திரும்பினார். சோபா க்ரீச்சிட்டது. ஆவலுடன் இளவரசர் ஆண்ட்ரூவை நோக்கிச் சிரித்துக்கொண்டு தமது கையை ஆட்டினார். அவர் சொன்னார்:

'அந்தப் பாதிரி ரொம்ப சுவாரஸ்யமானவர். ஆனால், சரியான பாதையில் அவர் விஷயங்களைப் பார்ப்பதில்லை...என்னுடைய அபிப்பிராயத்தில் நிரந்தர சமாதானம் என்பது சாத்தியமானதே. ஆனால்-அதை எப்படிச் சொல்வதென்றே தெரியவில்லை...ராஜீய சமபலத்தால் அல்ல...'

இம்மாதிரி தத்துவார்த்த உரையாடல்களில் இளவரசர் ஆண்ட்ரூவுக்கு விருப்பமில்லை என்பது தெளிவாய்த் தெரிந்தது. ஒரு வினாடி மௌனமாய் இருந்துவிட்டு அவர் சொன்னதாவது:-

'அன்பரே, ஒருவர் நினைக்கிற எல்லாவற்றையும் எல்லா இடங்களிலும் சொல்லிவிட முடியாது. நல்லது நீர் ஏதாவது ஒரு முடிவுக்கு வந்துவிட்டீரா? நீர் ஒரு மெய்க்காப்பாளராக இருக்கப் போகிறீரா அல்லது ஒரு இராஜதந்திரியாக விளங்கப் போகிறீரா?'

படுத்திருந்த பீயர் சோபாவிலிருந்து எழுந்து கால்களை மடக்கி உட்கார்ந்து கொண்டார்.

'உண்மையாகவே எனக்கு ஒன்றும் தெரியாது. எனக்கு இதுவும் பிடித்தமில்லை. அதுவும் பிடித்தமில்லை.'

'ஆனால், ஏதாவதொன்றை நீர் முடிவு செய்தாதல் வேண்டும். உம் தந்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்.'

பத்தாவது வயதில் ஒரு பாதிரி வாத்தியாரொடு வெளிநாட்டுக்குப் பீயர் அனுப்பப்பட்டார். இருபது வயதுவரை அவர் வெளியே தங்கியிருக்கிறார். அவர் மாஸ்கோவுக்குத் திரும்பியதும் அவர் தந்தை பாதிரி வாத்தியாரை நீக்கிவிட்டு அந்த இளைஞரிடம் சொல்லியதாவது:- 'இப்பொழுது பீட்டர்ஸ்பர்க்குக்குப் போ. அங்கே சுற்றிப் பார்த்து உனது தொழிலை முடிவு செய்துகொள். நீ எது செய்தாலும் எனக்குச் சம்மதமே. இளவரசர் வாசைலிக்கு இதோ ஒரு கடிதம் கொடுக்கிறேன். உனக்கு வேண்டிய பணத்தையும் இதோ தருகிறேன். நீ அங்கு போன பின்பு எல்லாவற்றையும் பற்றி எனக்கு எழுது. ஒவ்வொரு விஷயத்திலும் உனக்கு வேண்டிய உதவியை நான் செய்கிறேன்.'

மூன்று மாதங்களாகத் தமக்கு ஒரு தொழிலைத் தேர்ந்தெடுக்கப் பீயர் முயற்சித்துக்கொண்டிருந்தார். ஆனால், எதிலும் அவர் ஒரு முடிவுக்கு வரவில்லை இதைப்பற்றித்தான் இளவரசர் ஆண்ட்ரூ மேலே பேசினார். பீயர் தமது நெற்றியைத் தேய்த்துக் கொண்டிருந்தார்.

'ஆனால், அவர் ஒரு பிரீ மேஸனாய் இருக்கவேண்டும்' என்று அன்று மாலை சந்தித்த பாதிரியைப்பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார்.

இளவரசர் இடைமறித்துச் சொன்னார்:- 'அதெல்லாம் அசட்டுப் பேச்சு. நமது காரியத்தைப்பற்றி நாம் பேசுவோம். குதிரைப் படைக்கு நீர் போயிருந்தீரா?'

'இல்லை, நான் போகவில்லை. நான் இதைத்தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். இதை உம்மிடம் சொல்ல விரும்பினேன். நெப்போலியனுக்கு விரோதமாக ஒரு போர் நடந்து கொண்டிருக்கிறது. அது சுதந்திரத்திற்காக நடக்கிற போராக இருந்தால் அதை என்னால் புரிந்துகொள்ள முடியும். இராணுவத்தில் சேருவதற்கு நானே முதலாவ்தாக நிற்பேன். ஆனால்,

உலகில் உள்ள மிகப் பெரிய மனிதன் ஒருவனுக்கு எதிராக இங்கிலாந்துக்கும் ஆஸ்திரியாவுக்கும் உதவி செய்யப்போவது நியாயமானது அல்ல' என்றார் பீயர்.

பீயரின் சிறுபிள்ளைத்தனமான பேச்சுகளைக் கேட்டு இளவரசர் ஆண்ட்ரூ தமது தோள்களைக் குலுக்கினார். இந்த அசட்டுத்தனமான பேச்சுக்குப் பதில் சொல்லுவது அசாத்தியம் என்று நினைப்பவரைப்போல அவர் காணப்பட்டார். ஆனால், உண்மையில் இந்தக் குழந்தைத்தனமான கேள்விக்கு இளவரசர் ஆண்ட்ரூ கொடுத்த பதிலைத் தவிர, வேறு எந்தப் பதிலைக் கொடுப்பதற்கும் சிரமமாய் இருக்கும்.

அவர் சொன்னார்:-'ஒவ்வொருவரும் தம்முடைய கொள்கைக்காகவேயன்றி வேறு எதற்கும் போர் செய்வதில்லை என்று ஆரம்பித்தால் போர்களே ஏற்பட முடியாது.'

'அப்படி ஒரு நிலைமை ஏற்பட்டால் அது நிரம்ப சிலாகிக்கத்தக்கதாய் இருக்கும்' என்றார் பீயர்.

இளவரசர் ஆண்ட்ரூ கேலியாகப் புன்னகை கொண்டார்.

'அது அநேகமாய்ச் சிலாகிக்கத்தக்கதாய் இருக்கலாம். என்றாலும் அம்மாதிரி காலம் எக்காலமும் வாராது.'

'நல்லது, நீர் ஏன் போர்க்குப் போகிறீர்?' என்று கேட்டார் பீயர்.

'எதற்காகவா? எனக்குத் தெரியாது. நான் போகவேண்டும். தவிர நான் போகிறேன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லி நிறுத்தி மீண்டும், 'இங்கு வாழும் வாழ்க்கை எனக்குப் பிடித்தமானதாய் இல்லை. அதனால் நான் போகிறேன்' என்று கூறினார்.

## 1 7

பக்கத்து அறையில் ஒரு பெண்ணினுடைய ஆடையின் சலசலப்பு ஒலி கேட்டது. தூக்கத்தில் இருந்து விழித்ததுபோல இளவரசர் ஆண்ட்ரூ தம்மை உதறிக்கொண்டு அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பறையில் அவருடைய முகம் எம்மாதிரி தோன்றியதோ, அதே பார்வையை முகத்தில் தோற்றுவித்தார். சோபாவில் மடித்து வைத்திருந்த தமது கால்களைப் பீயர் கீழே எடுத்துவிட்டார். இளவரசி உள்ளே வந்தாள். அவளுடைய கௌன் ஆடையை

மாற்றிவிட்டு வீட்டு உடையை அணிந்திருந்தாள். என்றாலும் கௌன் உடையில் இருந்தது போலவே புத்துணர்ச்சியோடும், அழகாகவும் காணப்பட்டாள். இளவரசர் ஆண்ட்ரூ எழுந்து அவளுக்கு ஒரு நாற்காலியை மரியாதையுடன் இழுத்துப் போட்டார்.

பரபரப்போடும் அவசரமாகவும் இளவரசி தனது சாய்வு நாற்காலியில் அமர்ந்து வழக்கம்போல் பிரஞ்சு மொழியில் பேசலுற்றாள்:- 'என்ன இது! அன்னெட்டிக்குக் கல்யாணமே கிடையாதா? அவளுக்கு இன்னும் திருமுணம் செய்துவைக்காமல் நீங்கள் ஆண்கள் எல்லாரும் எவ்வளவு முட்டாள்களாய் இருக்கிறீர்கள்! நான் இப்படிப் பேசுவதற்காக மன்னியுங்கள். ஆனால், பெண்களைப்பற்றி உங்களுக்கு ஒன்றுமே தெரிவதில்லை. திருவாளர் பீயரே, நீர் எப்பேர்ப்பட்ட பேச்சாளராய் இருக்கிறீர்!'

'நான் இன்னமும் உமது கணவரோடு வாக்குவாதம் செய்து கொண்டுதான் இருக்கிறேன். அவர் போர்க்கு ஏன் போக விரும்புகிறார் என்பதனை என்னால் அறிய முடியவில்லை' என்று இளம் பெண்களுடன் வாலிபர்கள் பேசும்போது ஏற்படக்கூடிய வெட்கம் சிறிதுமின்றிப் பீயர் சொன்னார்.

இளவரசி அதிர்ச்சி அடைந்தாள். பீயர் சொல்லிய வார்த்தைகள் அவளுடைய உள்ளத்தைத் தொட்டுவிட்டன என்று தோன்றியது.

'ஆ, அதேதான் நானும் அவருக்குச் சொல்லுகிறேன். என்னால் அதை அறிய முடியவில்லை. யுத்தங்கள் இன்றி ஆண்கள் ஏன் உயிர் வாழ முடியாது என்பதனைக் கொஞ்சம்கூட என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. அம்மாதிரியான செய்திகளைப் பெண்களாகிய நாங்கள் ஏன் விரும்புவதில்லை, ஏன் அவர்களுக்கு அவசியமுமில்லை? இப்பொழுது எங்களுக்குள் உள்ள செய்தியைப் பற்றி நீரே முடிவு சொல்லும். நான் எப்பொழுதும் அவருக்கு இதைத்தான் சொல்லுகிறேன். இங்கே அவர் என்னுடைய சித்தப்பாவின் மெய்க்காப்பாளராக இருக்கிறார். அது ஒரு சிறப்பான பதவி. அவர் மிகப்பிரபலமாயும் இருக்கிறார். அவரை எல்லாரும் பாராட்டுகிறார்கள். அன்றொரு நாள் அப்ராக்சின் நடத்திய வரவேற்பு நிகழ்ச்சியில் ஒரு சீமாட்டி ''இவர்தாம் அந்தப் புகழ்பெற்ற இளவரசர் ஆண்ட்ரூவா?'' என்று கேட்டதும் என் காதுகளில் விழுந்தது. நானே அதைக் கேட்டேன். (சிரித்துக்கொண்டு) ஒவ்வோர் இடத்திலும் அவரை விரும்பி

வரவேற்கிறார்கள். வெகு எளிதாக அவர் சக்கரவர்த்தியின் மெய்க்காப்பாளராக வந்துவிடலாம். அவரிடம் சக்கரவர்த்தி மிகுந்த பரிவொடு பேசியது உமக்குத் தெரியுமா? அதை எப்படிச் செய்து முடிப்பது என்பதைப் பற்றி அன்னெட்டியும் நானும் பேசிக்கொண்டிருந்தோம். நீர் என்ன நினைக்கிறீர்?' என்றாள் அவள்.

பீயர் தமது நண்பரைப் பார்த்தார். இந்த உரையாடல் அவருக்குப் பிடிக்கவில்லை என்பதை அறிந்ததும், தாமும் பதில் பேசாமல் சும்மா இருந்தார்.

'எப்பொழுது நீர் புறப்படப் போகிறீர்?' என்று அவர் கேட்டார்.

'ஓ, அவர் போவதைப் பற்றிப் பேசாதீர்கள். அதைப்பற்றிப் பேசுவதை என்னால் கேட்க முடியாது. பேசாதீர்கள்' என்று வரவேற்பு அறையில் ஹிப்பாலைட்டுடன் அவள் பேசியபோது எம்மாதிரிக் கோபமாகவும் விளையாட்டாகவும் பேசினாளோ, அதேமாதிரி இளவரசி பேசினாள். ஆனால், குடும்பத்தில் ஒருவராய்க் கருதப்படும் பீயர் கலந்துள்ள இந்தக் குடும்பக் கூட்டத்தில் அந்தப் பேச்சு பொருத்தமானதாய் இல்லை.

'இந்த மனோகரமான தொடர்புகளையெல்லாம் அறுத்து எறிந்து விட்டுப் போகவேண்டி இருக்கிறதே என்று அதைப்பற்றி மீண்டும் இன்று நான் நினைத்தபோது...உமக்குத் தெரியுமல்லவா, ஆண்டிரி...' (அர்த்த புஷ்டியோடு அவள் தனது கணவனைப் பார்த்தாள்) 'எனக்குப் பயமாய் இருக்கிறது, எனக்குப் பயமாய் இருக்கிறது' என்று முணுமுணுத்தாள். ஒரு நடுநடுக்கம் அவளுடைய முதுகில் மேலே இருந்து கீழே இறங்கியது.

அந்த அறையில் தம்மையும் பீயரையும் தவிர, வேறு ஒருவர் இருப்பதைக் கண்டு ஆச்சரியப்படுவதைப்போல அவள் கணவன் அவளைப் பார்த்து உற்சாகமற்ற மரியாதையொடு பேசினார்.

'எதைப் பார்த்து நீ பயப்படுகிறாய், லிசா? எனக்குப் புரியவில்லை' என்றார் அவர்.

'அதுவேதான். ஆண்கள் எல்லாரும் எவ்வளவு அகங்காரம் கொண்டவர்கள்! எல்லாரும், எல்லாருமே அகங்காரர்கள்! ஏதோ ஓர் ஆசையை நிறைவு செய்துகொள்வதற்காக, அது ஏன் என்பது கடவுளுக்குத்தான் தெரியும், அவர் என்னை கிராமத்தில் தனியாகப் போட்டு அடைத்துவிட்டுப் பிரிந்து போகிறார்.'

'அங்கு என் தகப்பனாரும் சகோதரியும் இருப்பதை மறந்துவிட வேண்டாம்' என்று இளவரசர் ஆண்ட்ரூ மெதுவாகச் சொன்னார்.

'எனது நண்பர்கள் இல்லாமல் போனால் நான் எப்படியும் தனிமைதான்...இந்த நிலைமையில் நான் பயப்படாமல் இருக்க வேண்டுமென்று அவர் எதிர்பார்க்கிறார்.'

அவளது குரல் இப்பொழுது சண்டை போடுவதாய் இருந்தது. அவளுடைய மேல் உதடு மேலே போயிற்று. மகிழ்ச்சியான முகபாவத்தை அது கொடுக்கவில்லை. விலங்குத் தன்மையை, அணில் போன்ற தன்மையை அவள் தோற்றம் காட்டியது. தான் கருப்பமாய் இருப்பதைப் பீயர் முன்பு சொல்வது மரியாதைக் குறைவு என்று உணர்ந்ததைப்போலச் சிறிது நேரம் பேசாமல் இருந்தாள். என்றாலும் அந்தச் செய்தி அதில் அடங்கியே இருந்தது.

தனது மனைவி மீது வைத்த விழிகளை எடுக்காமல் இளவரசர் ஆண்ட்ரூ மெதுவாக 'எதற்காக நீ பயப்படுகிறாய் என்பது இன்னமும் எனக்குப் புரியவில்லை' என்றார்.

இளவரசி நாணிக்கோணினாள். தனது துணிவின்மையைக் காட்டும் அறிகுறியாகக் கைகளை உயர்த்தினாள்.

'இல்லை ஆண்ட்ரூ, நீர் மாறிவிட்டீர். ஓ, எவ்வளவு தூரம்...'

'நீ சீக்கிரம் படுத்துக்கொள்ளுதல் வேண்டும் என்று உன்னுடைய டாக்டர் சொல்லுகிறார். நீ சீக்கிரம் போவது நல்லது' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

இளவரசி ஒன்றும் சொல்லவில்லை. ஆனால், திடீரென்று அவளுடைய குறுகிய மேலுதடு துடித்தது. இளவரசர் ஆண்ட்ரூ எழுந்து தோள்களைக் குலுக்கிக்கொண்டு அறையில் முன்னும் பின்னும் உலாவினார்.

அப்பாவியான வியப்புக்குரிய தோற்றத்தொடு தமது கண்ணாடிக்கு மேலாகப் பீயர் முதலில் அவரையும், பின்னால் அவளையும் பார்த்துவிட்டு எழுந்திருப்பதற்காக அசைந்தார். ஆனால், உடனே மனத்தை மாற்றிக்கொண்டார்.

'திருவாளர் பீயர் இங்கே இருக்கிறார் என்பதற்காக நான் ஏன் கவலைப்படுதல் வேண்டும்?' என்று குஞ்சு இளவரசி திடீரென்று கூச்சலிட்டாள். அவளுடைய அழகிய முகம் கண்ணீர் கொண்ட முகச் சுழிப்பினால் விகாரமடைந்தது.

'ஆண்ட்ரூ, நீர் ஏன் என்னிடம் இப்படி மாறிவிட்டீர் என்று வெகுகாலமாகக் கேட்க நினைத்ததுண்டு. நான் உமக்கு என்ன செய்துவிட்டேன்? என் மீது கொஞ்சம்கூட இரக்கம் இல்லாமல், நீர் போர்க்குப் போகிறீரே. எதற்காக அப்படி?'

'லிசா' என்று மட்டும் இளவரசர் ஆண்ட்ரூ கூறினார். அந்த ஒரு வார்த்தையில் அவள் பேசியவற்றிற்காக வருந்தவேண்டியிருக்கும் என்று அவர் கொண்ட தீர்மானமும், பயமுறுத்தலும், அவளை இரங்கிக் கேட்பதும் அடங்கி இருந்தன. ஆனால், அவள் வேகமாக மறுபடியும் பேசலுற்றாள்:- 'நீர் என்னை ஒரு நோயாளியைப் போலவோ குழந்தையைப் போலவோ நடத்துகிறீர். எனக்கு அதெல்லாம் தெரிகிறது. ஆறு மாதங்களுக்கு முன்னால் நீர் இம்மாதிரி நடந்ததுண்டா?'

'லிசா, இம்மாதிரிப் பேசுவதை நிறுத்தும்படி உன்னைக் கெஞ்சுகிறேன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ இன்னும் அதிக அழுத்தமாகக் கூறினார்.

இவற்றை யெல்லாம் கேட்டு வரவர அதிகம் பரபரப்படைந்த பீயர் எழுந்து இளவரசி பக்கம் சென்றார். கண்ணீரைக் கண்டு சகிக்க முடியாதவர் போலவும், அவரே அழுவதற்கு ஆரம்பித்து விடுபவர் போலவும் தோன்றினார்.

'இளவரசியே, சாந்தமாய் இரும். உமக்கு அப்படித் தோன்றுவது எதனால் என்றால்...நானும் இம்மாதிரி அனுபவப்பட்டிருக் கிறேன்... ஆகையினாலே... ஏனென்றால்...இல்லை, மன்னி யுங்கள். ஒரு வெளியானுக்கு இங்கு வேலையில்லை...இல்லை, சிரமப்படுத்திக் கொள்ளாதீர்கள்...நான் போய் வருகிறேன்.'

இளவரசர் ஆண்ட்ரூ அவர் கையைப் பற்றிப் பிடித்தார்.

'இல்லை பீயர், பொறுங்கள். இன்று மாலை உம்முடன் அளவளாவுவதனால் கிடைக்கக்கூடிய இன்பத்தை என்னிடமிருந்து பறிப்பதற்கு இளவரசி விரும்பமாட்டாள்; அவள் நல்லவள்.'

'இல்லை, அவர் தம்மைப்பற்றியேதான் நினைத்துக்கொண்டு இருக்கிறார்' என்று தன்னுடைய கோபக் கண்ணீரை அடக்காமல் இளவரசி மொழிந்தாள்.

தமது பொறுமையின் அளவு முடிந்துவிட்டது என்று காட்டும் தோரணையில், தமது தொனியை மிகவும் அதிகமாய் உயர்த்தி, 'லிசா' என்று இளவரசர் ஆண்ட்ரூ அழைத்தார்.

உடனே கோபமும் அணில் போன்ற சுபாவமும் இளவரசியின் அழகிய முகத்திலிருந்து மாறி, பயத்தொடு கூடிய பரிதாபமான பார்வைக்கு இடமளித்தது, அவளுடைய அழகிய கண்கள் தன் கணவனைக் கடைக்கண்ணால் நோக்கின. ஒரு நாய் தனது தொங்கிய வாலை லேசாக ஆட்ட ஆரம்பிக்கும்போது அதன் முகபாவம் எப்படி இருக்குமோ, அதேமாதிரி இளவரசியின் முகம் பணிவும் பரிதாபமும் கொண்ட தோற்றத்தை அளித்தன.

'அட கடவுளே, அட கடவுளே' என்று முனங்கிக்கொண்டு, தனது ஆடையை ஒரு கையில் பற்றிக் கணவ்னிடம் சென்று அவனுடைய நெற்றியில் முத்தமிட்டாள்.

'நல் இரவு லிசா' என்று அவர் கூறி எழுந்து, ஒரு பழக்கமில்லாத வருக்குக் காட்டும் மரியாதையோடு அவள் கையை முத்தமிட்டார்.



நண்பர்கள் பேசாமல் இருந்தார்கள். எவரும் பேச விரும்பவில்லை. இளவரசர் ஆண்ட்ரூவைப் பீயர் தொடர்ந்து பார்த்துக் கொண்டே இருந்தார். இளவரசர் ஆண்ட்ரூ தமது சிறிய கையால் நெற்றியைத் தடவிக்கொண்டிருந்தார்.

'போவோம், சாப்பிடலாம்' என்று ஒரு பெருமூச்சோடு வாசலை நோக்கிப் போனார்.

ஓர் அழகான, புதிதாய் அலங்கரிக்கப்பட்ட, சுகபோகங்களொடு கூடிய சாப்பாட்டு அறையில் அவர்கள் நுழைந்தார்கள். மேசைத் துணியிலிருந்து வெள்ளிச் சாப்பாட்டுப் பொருள்கள் வரையில், போர்சிலேன் பளிங்குப் பொருள்கள் எல்லாம், புதிதாய் மணமானவர்கள் வீடுகளில் காணப்படுபவைகள்போலப் புத்தம் புதிதாய் விளங்கின. பாதி சாப்பிட்டானதும் இளவரசர் ஆண்ட்ரூ முழங் கைகளை மேசையில் வைத்துக் கொண்டு பீயர் இதற்குமுன் எப்பொழுதும் அவர் முகத்தில் பார்த்திராத பரபரப்பான பார்வையொடு பேச ஆரம்பித்தார். வெகுகாலமாக மனத்தில் ஏதோ ஒன்று இருந்து வந்தது போலவும், அதைத் திடீரென்று பேச ஆரம்பிக்கத் தீர்மானித்திருப்பதைப்போலவும் காணப்பட்டார்.

'அன்புள்ள நண்பரே, எக்காலமும், திருமணம் செய்யாதீர். அதுதான் எனது புத்திமதி. உம்மால் செய்யக்கூடியதை எல்லாம் நீர்

செய்து முடித்துவிட்டதாக நீர் அறியும்வரையில், நீர் காதலித்த பெண் மீதுள்ள உமது காதல் முடியும்வரையில், நீர் காதலித்த பெண்ணின் உண்மைச் சொரூபத்தை அறிந்து முடியும் வரையில் நீர் கல்யாணமே செய்யாதீர். இல்லாவிடில் நீர் ஓர் கொடூரமான, மாற்ற முடியாத தவற்றைச் செய்யும்படி நேரிடும். நீர் கிழ வயது அடைந்த பின்பு, உம்மால் ஒன்றும் செய்ய முடியாது என்ற நிலைமை வந்த பின்பு திருமணம் செய்யும். அல்லது உம்மிடமுள்ள நன்மையானவையும் பெருமையயானவையுமான எல்லாம் தொலைந்து போம். சில்லறைச் செய்திகளில் அவையெல்லாம் வியர்த்தமாகிவிடும். ஆம், ஆம், ஆம்! அம்மாதிரி ஆச்சரியத்தோடு என்னை நீர் பார்க்கவேண்டா. எதிர்காலத்தில் உம்மால் ஏதாகிலும் செய்ய முடியும் என்ற நம்பிக்கையொடு திருமணம் செய்துகொண்டால் ஒவ்வொரு படியிலும், உம்மைப் பொறுத்தவரையில், எல்லாம் முடிந்துவிட்டது. எல்லாம் அடைபட்டு விட்டது என்பதை நீர் உணர்வீர். வரவேற்பு அறை ஒன்றுதான் உமக்குத் திறந்திருக்கும். அங்கும் முட்டாளுடனும் தர்பார் சேவகனுடனும்தான் நீர் கலந்திருக்க வேண்டியிருக்கும்...ஆனால், இதனால் என்ன நன்மை...?' என்று சொல்லிக்கொண்டு கைகளை ஆட்டினார்.

பீயர் தமது கண்ணாடியைக் கழற்றினார். கழற்றியதும் அவர் முகம் வேறு விதமாய்த் தோன்றியது. என்றாலும் அவரது நற்குணமான முகபாவம் இன்னும் தெளிவர்க விளங்கியது. ஆச்சர்யத்தோடு தமது நண்பரை நோக்கினார்.

இளவரசர் ஆண்ட்ரூ தொடர்ந்து சொன்னார்:- 'என் மனைவி ஒரு சிலாக்கியமான பெண். கணவனின் கௌரவத்தைக் காப்பாற்றக் கூடிய அபூர்வமான பெண்களில் அவள் ஒருத்தி. ஆனால், கடவுளே, நான் திருமணம் ஆகாமல் இருப்பதற்கு என்னதான் இப்பொழுது கொடுக்கமாட்டேன்! முதலாவது உம்மிடம்தான், உம் ஒருவரிடம்தான் இதை நான் தெரிவிக்கிறேன். ஏனெனில் உம்மை எனக்குப் பிடித்திருக்கிறது.'

இதை இளவரசர் ஆண்ட்ரூ சொல்லும்போது, அன்னா பாவ்லாவ்னா வீட்டில், சாய்வு நாற்காலியில் சாய்ந்து பாதிக் கண்களை மூடிப் பற்களின் வழியாகப் பிரஞ்சு மொழியைச் சொன்ன அவராக அப்பொழுது அவர் தோன்றவில்லை. அவருடைய ஒல்லிய முகத்தில் ஒவ்வொரு தசையும் பரபரப்பினால் துடித்துக்கொண்டிருந்தன. வாழ்க்கையின் வேகம் மடிந்து விட்டதாகத் தோன்றிவிட்ட அவர் கண்கள் இப்பொழுது

ஒளிமயமாய் ஒளிவீசின. சாதாரண சமயங்களில் எவ்வளவுக்கு எவ்வளவு மகிழ்ச்சியற்றவராய் அவர் தோன்றினாரோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவருக்கு எரிச்சல் தோன்றியபோது பரபரப்புப் பொங்கியது.

அவர் மேலும் சொன்னார்:- 'நான் இதை எதற்காகச் சொல்லுகிறேன் என்பதை நீர் அறியவில்லை. ஆனால், இதுதான் வாழ்க்கையின் முழு உருவம். போனபார்ட்டைப் பற்றியும் அவருடைய செய்கைகளைப் பற்றியும் நீர் பேசுகிறீர். (ஆனால், போனபார்ட்டைப்பற்றிப் பீயர் தெரிவிக்கவில்லை.) ஆனால், போனபார்ட் வேலை செய்தபோது படிப்படியாகவே தம்முடைய இலட்சியத்திற்குப் போனார். அவர் சுதந்திரமாய் இருந்தார். தம்முடைய இலட்சியத்தைத் தவிர, வேறு ஆலோசிக்கவேண்டிய செய்தி எதுவும் அவருக்குக் கிடையாது. அதனால், அவர் இலட்சியத்தை அடைந்தார். ஆனால், ஒரு பெண்ணோடு உம்மை இணைத்துக்கொண்டால், விலங்குப் பூட்டிய கைதியைப்போல் உம்முடைய சுதந்திரமெல்லாம் போய்விடும். உமக்குள்ள நம்பிக்கையும், பலமும் உமக்குப் பாரமாய் அமைந்து உமக்கு வருத்தத்தையே கொடுக்கின்றன. வரவேற்பு அறைகள், வம்பளத்தல், நடன மண்டபங்கள், பெருமைப் பீத்தல்கள், அற்பச் செயல் இவையெல்லாம்தான் நான் தப்பமுடியாத மந்திர வட்டாரம். நான் இப்பொழுது போர்க்குப் போகிறேன். இது, இதற்கு முன்னால் எப்பொழுதும் நடந்திராத பெரிய போர். எனக்கு ஒன்றும் தெரியாது. நான் எதற்கும் அருகதை இல்லாதவன். சுமுகமான தன்மையும், கிண்டலான பேச்சு சாமர்த்தியமும் எனக்கு உண்டு. அதனால்தான் அன்னா பாவ்லாவ்னாவின் வீட்டில் எல்லாரும் என்னைக் கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். அந்த முட்டாள் கூட்டம்-அது இல்லாமல் உயிர் வாழ முடியாது என்று என் மனைவி நினைக்கிறாள்- அந்தப் பெண்கள்... அந்த உயர் வட்டாரப் பெண்களோ அல்லது பொதுவாகப் பெண்களோ எப்பேர்ப் பட்டவர்கள் என்பது உமக்கு மட்டும் தெரிந்திருந்தால்! என் தகப்பனார் சொல்லியது சரி. சுயநலம், வீண் பெருமை, முட்டாள்தனம், ஒவ்வொன்றிலும் அற்ப புத்தி-இவைதாம் பெண்கள். அவர்களுடைய உண்மை உருவத்தை நீர் பார்க்கும் போது, இவைதாம் தோன்றும். வரவேற்புகளில் அவர்களைப் பார்க்கும்போது அவர்களிடம் ஏதோ ஒன்று இருப்பதுபோலத் தோன்றும். ஆனால், அங்கே ஒன்றும் இல்லை, ஒன்றும் இல்லை.

இல்லை, என் அருமை நண்பரே, திருமணம் செய்து கொள்ள வேண்டாம். திருமணம் செய்துகொள்ள வேண்டாம்.'

'நீர் உம்மால் ஒன்றும் செய்ய முடியவில்லை என்று நினைப்பதைப் பார்க்கும்போதும், உமது வாழ்க்கை வியர்த்தமாய்விட்டது என்று நீர் நினைப்பதைப் பார்க்கும்போதும் எனக்கு வேடிக்கையாகவே தோன்றுகிறது. உமக்கு என்ன வேண்டுமோ, அவ்வளவும், அவ்வளவும் உம்மிடம் இருக்கின்றன. நீர்...' என்றார் பீயர்.

வாக்கியத்தை அவர் முடிக்கவில்லை. ஆனால், அவருடைய குரல், தமது நண்பரைப்பற்றி எவ்வளவு உயர்வாய் அவர் நினைத்திருந்தார் என்பதன்னையும், எதிர்காலத்தில் மேலும் உயர்வாய் அவரிடமிருந்து எதிர்பார்த்தார் என்பதனையும் காட்டியது.

'அவர் இப்படி ஏன் பேசுதல்வேண்டும்' என்று பீயர் நினைத்தார். தம் நண்பரைப் பூரணத்துவத்துக்கு ஓர் எடுத்துக்காட்டாக அவர் கருதிவந்தார். ஏனெனில், பீயரிடம் எந்தக் குணங்கள் குறைவாய் இருந்தனவோ, அவற்றையெல்லாம் இளவரசர் ஆண்ட்ரூ உயர்ந்த அளவில் பெற்றிருந்தார். அந்தக் குணங்களை உள்ளத்தின் உரம் என்று வருணிக்கலாம். இளவரசர் ஆண்ட்ரூ ஒவ்வொருவரையும் அமைதியான முறையில் நடத்துவதையும், அவருடைய அசாதாரணமான ஞாபகசக்தியையும், அவருடைய பரந்த வாசிப்பையும் (அவர் ஒவ்வொன்றையும் வாசித்திருக்கிறார். ஒவ்வொன்றும் அவருக்குத் தெரியும். ஒவ்வொன்றைப்பற்றியும் அவருக்குச் சொந்த எண்ணம் உண்டு.) எல்லாவற்றிற்கும் மேலாக வேலை செய்வதிலும், செய்திகளை ஆராய்ந்து அறிந்து கொள்வதிலும் அவருக்குள்ள சாமர்த்தியத்தைக் கண்டு பீயர் எப்பொழுதுமே ஆச்சர்யப்பட்டதுண்டு. தத்துவார்த்தங்களில் ஆண்ட்ரூவுக்குப் பிடிப்பு இல்லை என்பது பீயருக்குப் பல தடவை புலனாயிற்று. என்றாலும் இதையும்கூட ஒரு குறையாக அவர் எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால், பலத்தின் அறிகுறி என்றே இதை எடுத்துக்கொண்டார். சக்கரங்கள் அமைதியாய் ஓடுவதற்கு எப்படி மை அவசியமோ, அதேமாதிரி, வாழ்க்கையில் உயர்ந்த உறவுகளிலும் சரி, நட்பான உறவுகளிலும் சரி, சாதாரண உறவுகளிலும் சரி, புகழ்ச்சியும் பாராட்டுதலும் அவசியமானவை யாய் இருக்கின்றன.

'என்னுடைய வாழ்க்கை விளையாடி முடிந்துவிட்டது' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். சிறிது மௌனத்திற்கு அப்புறம்

சிரித்துக்கொண்டு-'என்னைப்பற்றியே பேசிக்கொண்டிருப்பதால் என்ன பயன்? உம்மைப்பற்றிப் பேசுவோம்' என்றார்.

அந்தச் சிரிப்பு உடனே பீயரின் முகத்தில் பிரதிபலித்தது.

பீயர் கவலையற்ற முகத்தோடும், மகிழ்ச்சியான இளமுறுவலோடும் 'என்னைப்பற்றிப் பேசுவதற்கு என்ன இருக்கிறது?' என்று சொன்னார். 'நான் யார்? ஒரு சோர புத்திரன்.' அவர் முகம் உடனே நாணத்தால் சிவந்தது. அடுத்தபடியாக அவர் மேலும் பேசுவதற்கு மிகுந்த சிரமப்பட்டார் என்று தோன்றியது. 'ஒரு பெயரோ பொருளோ கிடையாது...உண்மையாகவே...' எது உண்மையாகவே என்பதை அவர் சொல்லவில்லை. 'தற்காலத்தில் நான் சுதந்திரமாகவும், நன்றாகவும் இருக்கிறேன். நான் என்ன செய்தல்வேண்டும் என்பதைப் பற்றித்தான் எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. அதைப்பற்றி உம்மொடு முக்கியமாய் ஆலோசிக்க விரும்புகிறேன்.'

இளவரசர் ஆண்ட்ரூ அன்போடு அவரை நோக்கினார். என்றாலும் அவர் பார்வையில் அன்பும், பரிவும் கலந்திருந்தாலும் பெருமைப் பித்தும் தோன்றியது.

'உம்மிடம் எனக்கு மிகுந்த அன்பு உண்டு. முக்கியமாக நம் குழுவில் நீர் ஒருவர்தாம் உயிருள்ளவராய் இருக்கிறீர். ஆம், நீர் சொல்லுவது சரி. எந்தத் துறையில் நீர் இறங்குதல் வேண்டும் என்பதை நீரே நிருணயித்துக்கொள்ளும். எல்லாம் ஒன்றுதான். எதில் இறங்கினாலும் நீர் சமாளித்துக்கொள்வீர். ஆனால், இங்கே பாரும். அந்தக் குராகின்களைச் சந்திப்பதையும், அம்மாதிரி வாழ்க்கை நடத்துவதையும் உடனே விட்டுவிடும். அது உமக்குக் கொஞ்சம்கூட நன்றாயில்லை-இந்த விபசாரம், வியர்த்தம், இத்தியாதி காரியங்கள்.'

பீயர் தமது தோள்களைக் குலுக்கிக்கொண்டே 'உமக்கு என்ன வேண்டும், அன்புள்ள நண்பரே? பெண்கள். பெண்கள்தானே!' என்றார்.

இளவரசர் ஆண்ட்ரூ பதிலளித்தார்:- 'என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. பெண்கள் நல்லவர்களாய் இருந்தால், அது வேறு செய்தி. ஆனால், இந்தக் குராகின் பெண்கள் இருக்கிறார்களே 'மங்கையும் மதுவும்', அதை என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை.'

இளவரசர் வாசைலி குர்ராகின் வீட்டில் பீயர் தங்கி அவருடைய மகன் அனடோலின் வியர்த்த வாழ்வில் கலந்துகொண்டிருந்தார். அந்த மகனுக்குத்தான் இளவரசர் ஆண்ட்ரூவின் சகோதரியைத் திருமணம் செய்வித்து அவரைச் சீர்திருத்த வேண்டுமென்று திட்டம் போட்டுக்கொண்டிருந்தார்கள்.

திடீரென்று ஒரு அய்யமான செய்தி தோன்றியதுபோல, 'உமக்குத் தெரியுமா!' என்று கேட்டுப் பீயர் ஆரம்பித்தார். உண்மையிலேயே அதைப்பற்றி நான் நீண்ட காலமாகவே சிந்தித்துக்கொண்டிருக்கிறேன்... அம்மாதிரி வாழ்க்கை நடத்துவதால், எதைப் பற்றியும் நன்றாய் யோசிக்கவோ, முடிவு செய்யவோ சாத்தியப்படுவதில்லை. தலையையும் வலிக்கிறது. எல்லாப் பணமும் வீணாகிறது. இன்று வருதல்வேண்டும் என்று என்னை அழைத்தார். ஆனால், நான் போகப்போவதில்லை.'

'போகமாட்டேன் என்று பிரமாணம் செய்து கொடுப்பீரா?'

'இதோ பிரமாணம்.'



பீயர் தமது நண்பரை விட்டுப் புறப்படும்போது இரவு ஒரு மணிக்கு மேலாகிவிட்டது. அன்று மேகமில்லாத வடக்கத்தி வசந்த இரவாய் இருந்தது. நேராக வீட்டிற்குப் போவதற்காக ஒரு திறந்த வண்டியில் பீயர் ஏறிக்கொண்டார். வீடு நெருங்க நெருங்க அத்தகைய இரவில் தூங்குவது என்பது அசாத்தியம் என்பதை உணர்ந்தார். சந்தடியற்ற அந்த இரவில் வெகுதூரம் வரையில் பார்க்கக்கூடிய மாதிரியில் வெளிச்சம் இருந்தது. காலையோ அல்லது மாலையோ மாதிரி இருந்ததே தவிர, இரவாய்த் தோன்றவில்லை. அன்றிரவு சீட்டாட்டத்திற்கும், அதற்குப் பின்னால் நடக்கும் குடியாட்டத்திற்கும், கடைசியாக பீயர் மிகவும் விரும்பக்கூடிய சந்திப்புகளுக்கும் வழக்கமான கோஷ்டியை அனடோல் குராகின் எதிர்பார்த்துக்கொண்டிருப்பார் என்பது போகிற வழியில் பீயருக்கு நினைவு வந்தது.

'குராகின் வீட்டிற்குப் போக விரும்புகிறேன்' என்று அவர் நினைத்தார்.

அங்கே போவதில்லை என்று இளவரசர் ஆண்ட்ரூவுக்கு வாக்குறுதி கொடுத்தது உடனே அவரது ஞாபகத்திற்கு வந்தது. அவருக்குப் பழக்கமாகிவிட்ட அந்த வியர்த்த வாழ்க்கையை, மறுபடியும் அனுபவிக்க வேண்டும் என்று-பலவீனமானவர்களுக்கு எல்லாம் நேரக்கூடிய மாதிரி-மிகுந்த ஆசையோடு அவர் விரும்பியதால் அங்கே போவதென்று தீர்மானித்தார். இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அவர் கொடுத்த வாக்குறுதி அர்த்தமற்றது என்று அவருக்குத் தோன்றியது. ஏனெனில், அந்த வாக்குறுதியை அவருக்குக் கொடுப்பதற்கு முன்பே இளவரசர் அனடோலுக்கு வாக்குறுதி கொடுத்துவிட்டதாக அவர் மனம் எண்ணியது. தவிரவும், இம்மாதிரி வாக்குறுதிகளெல்லாம் ஏதோ சம்பிரதாயங்களே தவிர, தெளிவான அர்த்தம் எதுவும் கிடையாது என்றும் அவர் நினைத்தார். முக்கியமாக நாளை சாவோ, வேறு அசாதாரணமான ஒன்றோ நேரிடும் என்பதை ஒருவர் யோசித்துப் பார்க்கும்போது கௌரவமோ அகௌரவமோ எல்லாம் ஒன்றுதான் என்று அவர் எண்ணினார். தமது முடிவுகளையோ, விருப்பங்களையோ மாற்றுவதற்கு இம்மாதிரி வழியில் அடிக்கடி பீயர் நினைப்பது வழக்கம். அவர் குராகின் வீட்டிற்குப் போனார்.

குதிரைப் படையின் படைவீட்டிற்குப் பக்கத்தில் உள்ள ஒரு பெரிய மாளிகையில் அனடோல் வசித்தார். வெளிச்சம் போடப்பட்டிருந்த முற்றத்தில் அவர் நுழைந்ததும், நேராக படிக்கட்டு மெத்தையில் ஏறி உள் நுழைந்து கதவைத் திறந்தார். வெளிப்புற அறையில் ஒருவரையும் காணோம். காலி புட்டிகளும் மேலங்கிகளும் ஜோடுகளும் கண்ட இடங்களில் பரந்து கிடந்தன. சாராய நாற்றமும் அங்கு கமழ்ந்ததோடு, தூரத்தில் சத்தங்களும் கத்தல்களும் கேட்டன.

சீட்டு விளையாட்டுகளும் நள்ளிரவு சாப்பாடும் முடிந்து விட்டன. ஆனால், விருந்தாளிகள் இன்னும் கலைந்து போகவில்லை. தமது மேலங்கியைக் கழற்றி எறிந்துவிட்டு முதல் அறைக்குள் பீயர் நுழைந்தார். நள்ளிரவு உணவின் மீதங்கள் அங்கே காணப்பட்டன. தன்னை ஒருவரும் கவனிக்கவில்லை என்று நினைத்துக்கொண்டு கோப்பையில் தங்கி நின்ற மதுவகைகளை ஒரு சேவகன் ரகசியமாய் குடித்துக்கொண்டிருந்தான். பழக்கமான குரலில் கூச்சல்களும், ஒரு கரடியின் உறுமலும், பொதுவான பரபரப்பும், சிரிப்புகளும் மூன்றாவது அறையிலிருந்து வந்துகொண்டிருந்தன. ஒரு திறந்த ஜன்னலைச் சுற்றி ஏழெட்டு

இளைஞர்கள் ஆவலோடு கூடி நின்றுகொண்டிருந்தார்கள். மூன்று பேர்கள் சங்கிலியில் கட்டப்பட்டிருந்த கரடியை மற்றவர்கள் மீது ஏவிவிட்டு விளையாடிக்கொண்டிருந்தார்கள்.

'நான் ஸ்டீவன்ஸ் மீது நூறு கட்டுகிறேன்' என்று ஒருவர் கத்தினார்.

'ஆனால், நீர் அவருக்கு உதவி செய்யக்கூடாது' என்று இன்னொருவர் கத்தினார்.

'நான் டோலாகாவ் மீது கட்டுகிறேன். குராகின், எங்கள் கைகளைப் பிரித்துவிடுங்கள்' என்று மூன்றாமவர் கத்தினார். (பந்தயம் கட்டும்போது கை குலுக்குவதும் பந்தயம் கட்டியதற்கு சாட்சியாக மூன்றாமவர் வந்த கையைப் பிரித்து விடுவதும் ருஷ்யாவில் வழக்கம்).

'கரடியை விட்டுவிடுங்கள். இதோ பந்தயம்.'

'ஒரே மூச்சில் குடிக்கவேண்டும். அல்லது அவனுக்குத் தோல்வி' என்று நாலாவது ஆசாமி கத்தினார். கோட் இல்லாமல் முன்புறம் திறந்துவிட்ட ஷர்ட் மட்டும் அணிந்துகொண்டு, கூட்டத்தின் மத்தியில் நின்றுகொண்டிருந்த உயரமான அழகான ஒரு ஆசாமி 'ஜாகோப் ஒரு புட்டி கொண்டுவாரும்' என்று கத்தினார். அவர்தான் வீட்டுக்காரர். 'ஒரு நிமிஷம் பொறுங்கள். ஆசாமிகளே...இதோ பெட்டியா வந்துவிட்டார். நல்ல மனிதர் என்று பீயரைப் பார்த்து அவர் மேலும் கூச்சலிட்டார்.

தெளிந்த நீல நிறக் கண்களும் மத்திம உயரமும்கொண்ட ஒருவர், இந்த குடிகாரக் கூச்சல்களுக்கு மத்தியில் நிதானத்தோடு பேசிய எடுப்பான குரல் ஒன்று ஜன்னலில் இருந்து கேட்டது. அவர் சொன்னார்:- 'இங்கே வாரும்; கைகளைப் பிரித்துவிடும்.' இவர்தான் டோலாகாவ். செமெனாவ் பட்டாளத்தில் ஒரு அதிகாரி. பிரபலமான சூதாடி. தனித்து இருவர் போடும் 'டூயல்' சண்டைகளிலும் பிரபலமானவர். அனடோலுடன் வசித்து வந்தார். பீயர் இளநகைகொண்டு ஆனந்தமாய்த் தன்னைச் சுற்றிலும் பார்த்தார்.

'எனக்கு ஒன்றும் புரியவில்லை. இதெல்லாம் எதற்காக?'

'கொஞ்சம் பொறுங்கள். அவர் இன்னும் குடிக்கவில்லை. இங்கே ஒரு புட்டி கொண்டுவாருங்கள்!' என்று அனடோல் கூறிவிட்டு மேஜை மேலிருந்த ஒரு கோப்பையோடு பீயரை நெருங்கினார்.

'எல்லாவற்றிற்கும் முதலாக நீர் குடித்து ஆகவேண்டும்.'

அங்கிருந்த குடிகார விருந்தாளிகள் ஜன்னலைச் சுற்றி கூடிநின்று கொண்டிருப்பதை தமது கீழ்நோக்கால் பார்த்துக்கொண்டும், அவர்களது உளறல்களைக் கேட்டுக்கொண்டும், ஒரு கோப்பைக்குப் பின் மற்றொரு கோப்பையாக பீயர் குடித்துக்கொண்டே இருந்தார். பீயர் குடிக்கக் குடிக்க அவருடைய கோப்பையை அனடோல் நிரப்பிக் கொண்டே இருந்தார். அச்சமயம் பிரிட்டிஷ் கடற்படை அதிகாரியான ஸ்டீவென்ஸிடம் டோலாகாவ் பந்தயம் கட்டியிருப்பதை விளக்கினார். அதாவது மூன்றாவது மெத்தையில் உள்ள ஜன்னலுக்கு வெளியே கால்களைத் தொங்கவிட்டு ஜன்னலில் உட்கார்ந்துகொண்டு ஒரு புட்டி ரம் மதுவைக் குடித்துவிட வேண்டும் என்பதுதான் பந்தயம் என்று சொன்னார்.

'குடியும். இது எல்லாவற்றையும் நீர் குடித்தே ஆக வேண்டும். இல்லாவிடில் உம்மைப் போகவிடமாட்டேன்' என்று சொல்லிக்கொண்டே கடைசிக் கோப்பையை பீயரிடம் அனடோல் கொடுத்தார்.

'இல்லை, என்னால் முடியாது' என்று பீயர் சொல்லிவிட்டு அனடோலை ஒதுக்கித் தள்ளிக்கொண்டு ஜன்னல் அருகே போனார்.

டோலாகாவ் ஆங்கிலேயனின் கைகளைப் பற்றியிருந்தார். அனடோலையும் பீயரையும் பார்த்து தமது பந்தயத்தைத் தெளிவாகவும் விளக்கமாகவும் சொல்லிக்கொண்டிருந்தார்.

டோலாகாவ் மத்திமமான உயரமும், சுருள் சுருளான தலைமுடியும், இள நீலநிறக் கண்களும் உடையவர். அவருக்கு சுமார் 25 வயதிருக்கும். மற்ற காலாட்படை அதிகாரிகளைப் போலவே அவரும் மீசை வைத்துக்கொள்ளவில்லை. அதனால் அவருடைய முகத்தில் மிகவும் எடுப்பான சாயலாய் விளங்கிய அவருடைய வாய் தெளிவாய்த் தெரிந்தது. அவருடைய வாயின் வளைவுகள் அழகாய் அமைந்திருந்தன. மேல் உதட்டின் மத்திய பாகம் ஆப்புப்போல் அமைந்து, உறுதியான கீழ் உதட்டோடு இறுக மூடியிருந்தது. இரண்டு தெளிவான இளநகைகள், அவருடைய இரு கடைவாய்களில் தொடர்ந்து விளங்கிக்கொண்டிருந்தன. இவற்றோடு அவருடைய உறுதியையும் கர்வம்கொண்ட புத்திசாலித்தனத்தையும் காட்டும் அவருடைய கண்களும் சேர்ந்து ஏற்படுத்தும் பலனால் அவருடைய முகத்தை யாராலும் பார்க்காமல் இருக்கமுடியாது. டோலாகாவ் மிகவும் சொற்பமான வருமானம்

உள்ளவர். அவருக்கு விசேஷமான தொடர்பும் கிடையாது. இருந்தும், அனடோல் ஆயிரக்கணக்காக செலவழித்தபோதிலும், அனடோல் உள்பட அவர்களைத் தெரிந்தவர்கள் எல்லாரும் அனடோலைவிட அதிகமாகத் தம்மை மதிக்கும்படி நடந்து வந்தார். எல்லா விதமான விளையாட்டுகளும் அவருக்குத் தெரியும். அநேகமாக எல்லாவற்றிலும் அவரே வெற்றி பெறுவார். எவ்வளவுதான் அவர் குடித்தாலும் அவர் மூளை குழப்பம் அடைவதில்லை. குராகின், டோலாகாவ் இருவரும் அச்சமயத்தில் பீட்டர்ஸ்பர்க்கில் இருந்த விபசாரர்களிலும் போக்கிரிகளிலும் பிரபலமாய் இருந்தார்கள்.

ரம் புட்டி கொண்டுவரப்பட்டது. ஜன்னலின் வெளிப் பக்கத்து சுவரில் உட்காருவதற்கு ஜன்னல் சட்டம் இடையூறாய் நின்றது. அதைப்பிடுங்கி எறிய இரண்டு சேவகர்கள் முயன்றுகொண்டிருந் தார்கள். சுற்றி நின்றவர்கள் அவர்களுக்குக் கொடுத்துவந்த நாலா விதமான உத்தரவுகளினாலும் கூச்சல்களினாலும் அவர்களுக்குக் குழப்பமும் இடையூறுமே ஏற்பட்டன.

அனடோல் ஜம்பமான பார்வையோடு ஜன்னல் அருகில் போனார். எதையாவது உடைக்கவேண்டும் என்பது அவருக்கு ஆசை. அங்கு நின்ற சேவகர்களைத் தள்ளிவிட்டு ஜன்னல் சட்டத்தைப் பற்றி இழுத்தார். ஆனால், சட்டத்தை அவரால் அசைக்க முடியவில்லை ; ஒரு கண்ணாடியை உடைத்தார்.

'ஹெர்குலிசே, நீர் ஒரு கை பாருமே' என்று பீயரைப் பார்த்துச் சொன்னார். (பீமனைப் போன்ற ஒரு கிரேக்க புராண வீரன்.)

பீயர் ஜன்னல் கம்பியைப் பற்றி இழுத்துச் சட்டத்தைப் பெயர்த்துவிட்டார்.

'அதை வெளியே எடுத்துவிடும். இல்லாவிடில் அதை நான் பற்றிக்கொள்ளுவேன் என்று நினைப்பார்கள்' என்று டோலாகாவ் சொன்னார்.

'ஹே ! இன்னும் அந்த இங்கிலீஷ்காரர் ஜம்பம் அடிக்கிறாரா? எல்லாம் சரிதானா?' என்று அனடோல் கேட்டார்.

'எல்லாம் முதல்தரமாய் விட்டது' என்று ஒரு புட்டி ரம்முடன் ஜன்னலை நெருங்கிக் கொண்டிருந்த டோலாகாவைப் பார்த்து பீயர் கூறினார். ஜன்னல் வழியாகக் காலை ஒளியும் மாலை ஒளியும் கலந்த வெளிச்சம் தோன்றியது.

கையில் ரம் புட்டியுடன் ஜன்னல் சுவரில் குதித்து ஏறினார். அதில் நின்றுகொண்டு அறையில் நிற்பவர்களைப் பார்த்து 'கேளுங்கள்' என்று கூவினார். எல்லோரும் அவ்வேளையில் அமைதியாய் இருந்தார்கள்.

ஆங்கிலேயர் தெரிந்துகொள்ளவேண்டும் என்பதற்காக அவர் பிரஞ்சு மொழியில் பேசினார். ஆனால், அவரால் நன்றாய்ப் பேச முடியவில்லை. 'நான் ஐம்பது இம்பீரியல்கள் (ஒரு இம்பீரியல் என்றால் பத்து ரூபிள்கள்) பந்தயம் வைக்கிறேன்... அல்லது நீர் அதை நூறாக உயர்த்த விரும்புகிறீரா?' என்று ஆங்கிலேயரைப் பார்த்துக் கேட்டார்.

'ரொம்ப சரி, ஐம்பது இம்பீரியல்கள்... (தாம் நின்ற ஜன்னலின் அடிச்சுவரைத் தொட்டுக்காட்டி) இந்த ஜன்னலின் அடிச்சுவரில் வெளிப்பக்கம் பார்க்க உட்கார்ந்துகொண்டு எதையும் பிடிக்காமல் ஒரு புட்டி ரம்மையும் வாயைவிட்டு எடுக்காமல் குடித்துவிடவேண்டும். அது சரிதானே?'

'ரொம்பவும் சரி' என்று ஆங்கிலேயர் பதில் அளித்தார்.

அனடோல் ஆங்கிலேயர் பக்கம் திரும்பி அவருடைய கோட்டின் ஒரு பொத்தானைப் பற்றிக்கொண்டு அவரைக் குனிந்துபார்த்து (ஆங்கிலேயர் குள்ளமாக இருந்தார்) பந்தயத்தின் நிபந்தனைகளை மறுபடியும் ஆங்கிலத்தில் சொல்ல ஆரம்பித்தார்.

' பொறுங்கள், என்று அங்கிருந்தவர்களின் கவனத்தை இழுப்பதற்காகத் தம் கையில் இருந்த புட்டியை ஜன்னலில் தட்டி டோலாகாவ் என்று கூவினார். 'ஒரு நிமிஷம், குராகின், கவனியுங்கள். வேறு யாராவது இதே மாதிரி செய்யும் பட்சத்தில், அவருக்கு நான் நூறு இம்பீரியல்கள் கொடுப்பேன். புரிந்ததா?'

ஆங்கிலேயர் தலையை அசைத்தார். ஆனால் அவர் இந்த பந்தயத்தை ஒப்புக்கொள்ளுவதாகவோ மறுப்பதாகவோ எதையும் காட்டிக்கொள்ளவில்லை. தாம் அறிந்துகொண்டதாக அனடோல் தலையை அசைத்துக்கொண்டிருந்தாலும் ஆங்கிலேயரை அவர் பிடியிலிருந்து விடாமல் டோலாகாவ் சொல்லியவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கொண்டிருந்தார். மெய்க் காப்பாளர் படையைச் சேர்ந்த குதிரைப்படை வீரரான ஒரு மெலிந்த வாலிபர், அன்றிரவு முழுவதும் சீட்டாட்டத்தில் தோல்வியுற்றவர், அந்த ஜன்னல் சுவரில் ஏறிக் குனிந்து கீழே பார்த்தார்.

கீழே தரையில் தெரிந்த கல் தளவரிசைகளைப் பார்த்ததும் அவர் 'ஓ, ஓ, ஓ' என்று கூவினார்.

'வாயை மூடும்' என்று டோலாகாவ் கூறி அவரை ஜன்னலில் இருந்து அப்புறமாகத் தள்ளினார். அந்த வாலிபர் தமது தார்ச்சக்கரம் இடறிப் பின்னோக்கி விகாரமாக அறைக்குள் குதித்தார். ஜன்னல் சுவரில் புட்டியை வைத்துவிட்டு, மெதுவாகவும் ஜாக்கிரதையாகவும் சுலபமாகத் தாம் எடுக்கக்கூடிய விதத்தில் ஜன்னல் சுவரில் ஏறி உட்கார்ந்து தமது கால்களை டோலாகாவ் வெளியே தொங்கவிட்டார். ஜன்னலின் இரு பக்கங்களையும் அமுக்கிக் கொண்டு தமது இருப்பை நன்றாய்ச் சரிசெய்து, கைகளைத் தொங்கவிட்டு, முதலில் வலப்பக்கம் கொஞ்சமாகவும், அப்புறம் இடப்பக்கம் கொஞ்சமாகவும் அசைந்து கொடுத்து புட்டியைக் கையில் எடுத்தார். அச்சமயம் நன்கு வெளிச்சம் இருந்தபோதிலும் இரண்டு மெழுகுவத்திகளைக் கொண்டுவந்து ஜன்னல் சுவரில் அனடோல் வைத்தார். வெள்ளைச் சொக்காய் அணிந்த டோலாகாவின் முதுகையும் சுருண்ட தலைமயிரையும் அவரது இருபக்கத்திலும் வைக்கப்பட்ட வெளிச்சம் எடுத்துக்காட்டியது. ஒவ்வொருவரும் ஜன்னலைச் சூழ்ந்து நின்றார்கள். ஆங்கிலேயர் முன்னால் நின்றார். பீயர் புன்முறுவலோடு மௌனமாக நின்றார். அங்கிருந்தவர்களில் எல்லாம் வயதான ஒருவர் பயத்தோடும் கோபப்பார்வையோடும் திடீரென்று முன்னால் நுழைந்து வந்து டோலாகாவின் சொக்காயைக் கைப்பற்ற விரும்பினார்.

'இதேன்ன முட்டாள்தனம்! அவர் கொல்லப்படுவார்' என்று அங்கிருந்தவர்களில் புத்திசாலியான அவர் சொன்னார்'.

அனடோல் அவரை நிறுத்தினார்.

'அவரைத் தொடாதீர்கள். தொட்டால் நீங்கள் அவரை பயமுறுத்தி அதனால் கொன்று விடுவீர்கள். ஹே... அப்புறம் என்ன? ஹே...'

டோலாகாவ் திரும்பிப்பார்த்து இரண்டு கைகளாலும் மறுபடியும் சுவரைப் பற்றித் தம்முடைய இருப்பைச் சரிசெய்துகொண்டார்.

'யாராவது இனி என் விஷயத்தில் தலையிட்டால் அவரைக் கீழே தூக்கி எறிந்துவிடுவேன். இனி பார்க்கலாம்' என்று தம்முடைய இறுக மூடிய உதடுகள் மூலமாக ஒவ்வொரு வார்த்தையாக உச்சரித்தார்.

இம்மாதிரி சொல்லிக்கொண்டு மறுபடியும் திரும்பி தமது கைகளைக் கீழே தொங்கவிட்டு புட்டியை எடுத்து, தலையைப் பின்னால் சாய்த்துக்கொண்டு, ஒரு கையால் புட்டியை உதடுகளில் வைத்து, மற்றொரு கையால் மற்றொரு கையை உயரே தூக்கி, தாம் சாய்ந்துவிடாமல் சரிசெய்துகொண்டார். கீழே கிடந்த உடைந்த கண்ணாடித் துண்டுகளைப் பொறுக்குவதற்காகக் குனிந்த ஒரு சேவகன், நிமிராமல் அதே நிலைமையில் வைத்த கண் வாங்காமல் ஜன்னலையும், டோலாகாவின் முதுகையும் பார்த்துக்கொண்டே நின்றான். விழித்த கண்களுடன் அனடோல் நிமிர்ந்து நின்றுகொண்டிருந்தார். ஆங்கிலேயர் பக்கவாட்டாகப் பார்த்து உதடுகளைப் பிதுக்கிக் கொண்டிருந்தார். இந்தக் காரியத்தை நிறுத்திவிடுவதற்கு முயற்சிசெய்த மனிதர் ஓர் மூலைக்கு ஓடி அங்கிருந்த சோபாவில் படுத்து, சுவர் பக்கமாகத் தமது முகத்தைத் திருப்பிக்கொண்டார். பீயர் முகத்தை மூடிக்கொண்டார். அவர் முகத்தில் நடுக்கமும் பயமும் தோன்றயபோதிலும் மெல்லிய புன்னகை மட்டும் மறையாமல் நின்றுகொண்டிருந்தது. எல்லாரும் அப்படியப்படியே அசையாமல் இருந்தார்கள். கண்களை மூடியிருந்த கையை பீயர் எடுத்துப் பார்த்தபோது, டோலாகாவ் இன்னும் அதே நிலைமையில் உட்கார்ந்திருப்பதையும், அவர் தலை மட்டும் இன்னும் சிறிது பின்பக்கம் சாய்ந்து அவருடைய சுருண்ட முடி சொக்காவின் காலரைத் தொட்டுக் கொண்டிருப்பதையும், கையில்பிடித்த புட்டி மேலுக்குமேல் உயர்ந்துகொண்டிருப்பதையும், அந்த முயற்சியில் கை நடுங்கிக்கொண்டிருப்பதையும் கண்டார். புட்டி காலியாகக் காலியாக மேலுக்கு மேல் உயர்ந்தது. அவருடைய தலையும் பின்பக்கம் மேலும் மேலும் சாய்ந்துகொண்டு வந்தது. 'ஏன் இது இவ்வளவு நேரம் ஆக வேண்டும்?' என்று பீயர் நினைத்தார். அரை மணி நேரத்திற்கு மேல் ஆகிவிட்டது என்று அவருக்குத் தோன்றியது. திடீரென்று டோலாகாவ் இன்னும் கொஞ்சம் பின்பக்கமாகச் சாய்ந்தார். அவருடைய கைகள் பலமாய் நடுங்கிக் கொண்டிருந்தன. சாய்வான அடிச்சுவரில் உட்கார்ந்துகொண்டிருந்த அவர் உடல், நழுவி விழுவதற்கு அது போதுமானதாய் இருந்தது. அவர் உடல் நழுவ ஆரம்பித்ததும் அவர் தலையும் கையும் இன்னும் அதிகமாய் நடுங்க ஆரம்பித்தன. ஜன்னல் சுவரைப் பற்றுவதற்கென்று ஒரு கை கிளம்பியது. ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. பீயர் கண்களை மறுபடியும் மூடிக்கொண்டு இனி

கண்களைத் திறக்கப்போவதில்லை என்று நினைத்தார். திடீரென்று அவரைச் சுற்றி ஒரு பரபரப்பு ஏற்பட்டதை உணர்ந்தார். நிமிர்ந்துபார்த்தார். வெளிறிய ஆனால் சந்தோசமான முகத்தோடு கூடிய டோலாகாவ் ஜன்னல் சுவரில் நின்று கொண்டிருந்தார்.

'புட்டி காலியாய் விட்டது'.

புட்டியை ஆங்கிலேயனைப் பார்த்து வீசினார். அவர் அழகாய் அதைப் பிடித்துக்கொண்டார். டோலாகாவ் அறைக்குள் குதித்தார். அவரைச் சுற்றி ரம் வாடை வீசியது.

'நன்று செய்தாய்... பலே ஆசாமி... இதோ உனக்கு ஒரு பந்தயம்... உன்னைப் பிசாசு பிடிக்க' என்று நாலா பக்கங்களிலும் இருந்து வார்த்தைகள் கிளம்பின.

ஆங்கிலேயர் தம் பணப்பையை எடுத்துப் பணத்தை எண்ண ஆரம்பித்தார். டோலாகாவ் முகத்தைச் சுளித்துக் கொண்டு நின்றார். ஆனால், அவர் பேசவில்லை. பீயர் ஜன்னல் சுவரில் குதித்து ஏறினார்.

'கனவான்களே, என்னுடன் பந்தயம் போட யார் விரும்புகிறீர்கள். அதே காரியத்தை நான் செய்கிறேன்,' என்று கூவினார். 'பந்தயம் இல்லாமலும் செய்யத்தயார். எனக்கு ஒரு புட்டி கொண்டுவரச் சொல்லுங்கள். நான் செய்கிறேன்...புட்டியைக் கொண்டு வாருங்கள்.

'அவர் செய்யட்டும், அவர் செய்யட்டும்' என்று டோலாகாவ் புன்சிரிப்புடன் சொன்னார்.

'அடுத்தபடி என்ன? உமக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?... உம்மை ஒருவரும் விடமாட்டார்கள்... ஏன், படிக்கட்டுகளில் ஏறும்போதுகூட உமக்குத் தலை சுழலுமே' என்று பல குரல்கள் ஆச்சரியத்தோடு ஒலித்தன.

'நான் குடித்துவிடுவேன். ஒரு புட்டி ரம் கொண்டு வாருங்கள்' என்று பீயர் கூச்சலிட்டு உறுதியுடனும் குடிகார சைகையுடனும் மேசையில் அடித்து ஜன்னலுக்கு வெளியே கால்களைத் தொங்கவிடத் தயாரானார்.

அங்கே இருந்தவர்கள் அவருடைய கையைப் பற்றினார்கள். ஆனால் அவர் மிகுந்த பலசாலியானதால் அவரைத் தொட்ட ஒவ்வொருவரையும் கீழே வீழ்த்தினார்.

'இல்லை, அம்மாதிரி அவரை உங்களால் சரிக்கட்டமுடியாது. ஒரு நிமிஷம் பொறுங்கள். அவரை சரிக்கட்டுகிறேன்... கேளுங்கள். உமது பந்தயத்தை நாளை வைத்துக்கொள்வோம். இப்பொழுது நாங்கள் எல்லோரும் - வீட்டிற்குப் போகிறோம்.'

'அப்படியானால் போகலாம். போகலாம் வாருங்கள்... கரடியையும் நம்முடன் கொண்டுபோவோம்' என்று கத்தினார் பீயர்.

அவர் கரடியைப் பிடித்துத் தம் கைகளில் தூக்கிக் கொண்டு அறையைச் சுற்றிச் சுற்றி நடனம் ஆட ஆரம்பித்தார்.

## 1 10

அன்னா பாவ்லானாவின் வரவேற்பு வைபவத்தில் தனது மகன் போரிஸுக்காகப் பேசிய இளவரசி ட்ரூபெட்ஸ்கயாவுக்குத் தாம் கொடுத்த வாக்குறுதியை இளவரசர் வாசைலி நிறைவேற்றி வைத்தார். சக்கரவர்த்தியிடம் இதுபற்றி விளக்கப் பட்டது. உடனே செமெனாவ் காவல் பட்டாளத்திற்குக் கார்னட் என்ற பதவியில் போரிஸ் மாற்றப்பட்டார். ஆனால் அன்னா மிக்காய்லாவ்னா என்னதான் முயற்சி செய்தாலும், கெஞ்சினாலும் குட்டு ஜோவின் காப்பாளர்களில் ஒருவராக அவருக்கு வேலை கிடைக்கவில்லை. அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பு வைபவம் முடிந்தவுடன் அன்னா மிக்காய்லாவ்னா மாஸ்கோவுக்குத் திரும்பி அவளுடைய பணக்கார உறவினரான ராஸ்டோவ் குடும்பத்தாரிடம் நேராகச் சென்றார். பட்டணத்திற்கு வரும்போது அவள் அங்குதான் தங்குவாள். அப்பொழுதுதான் ராணுவத்தில் சேர்ந்து உடனே காப்பாளர் படைக்குக் கார்னட்டாக மாற்றப்பட்ட அவளுடைய அருமை மகன் போரிஸ் சிறுவயது முதலே அங்கேதான் கல்வி கற்று வருடக்கணக்காக அங்கு வாழ்ந்து இருக்கிறார். காப்பாளர் படை பீட்டர்ஸ்பர்க்கை விட்டு ஆகஸ்டு 10ஆம் தேதியே புறப்பட்டு விட்டது. அவளுடைய மகன் தமக்கு வேண்டிய உபகரணங்களைத் தயாரிப்பதற்காக மாஸ்கோவில் தங்கினார். ராட்ஜிவிலாவை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும் காப்பளார் படையில் இவர் போய்ச்சேரவேண்டும்.

அன்று மகாத்மா நட்டாலியாவின் திருநாள். ராஸ்டோவ் குடும்பத்தில்-தாயாருக்கும், கடைசி குமாரிக்கும் நட்டாலி என்று

பெயரிடப்பட்டிருக்கிறது. அதனால் அன்று அவர்களின் பெயரிட்ட தினமுமாகிறது. காலையில் இருந்து ஆறு குதிரைகள் பூட்டிய வண்டிகளில் கோமகள் ராஸ்டோவின் மாளிகைக்கு விருந்தாளிகள் வருவதும் போவதுமாய் இருந்தார்கள். இந்த மாளிகை பாவார்ஸ்கயாவில் இருந்தது. மாஸ்கோவில் எல்லாருக்கும் அது தெரியும். கோமகளும், அவளுடைய அழகிய மூத்தகுமாரியும் வரவேற்பு அறையில் உட்கார்ந்து, அவர்களைப் பாராட்டுவதற்காக ஒருவருக்குப் பின் ஒருவராகத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த வர்களிடம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

கோமகளுக்கு சுமார் 45 வயதிருக்கும். மெல்லிய உருவம். கீழ்த்திசை முகவெட்டு. குழந்தைகள் பெற்றதால் அயர்ந்துபோன உடம்பு. பன்னிரண்டு குழந்தைகள் பெற்றெடுத்தாள். நடையிலும் பேச்சிலும் பலவீனத்தால் ஏற்பட்ட உற்சாகக் குறைவு அவளுக்கு ஒரு கௌரவத்தைக் கொடுத்து மற்றவர்கள் மரியாதை செய்யும்படி செய்தது. இளவரசி அன்னா மிக்காய்லாவ்னா ட்ருபெட்ஸ்கயா இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவளானபடியால் அவளும் வரவேற்பு அறையில் உட்கார்ந்து வரவேற்கவும், உபசரிக்கவும் உதவியாய் இருந்தாள். வீட்டில் உள்ள இளைஞர்கள் வரவேற்பு வேலையில் தாங்கள் கலந்துகொள்ள வேண்டியது அவசியமில்லை என்று நினைத்துப் பின் அறைகளில் இருந்தார்கள். விருந்தாளிகளைக் கோமகன் வரவேற்று வழியனுப்பும்போது ஒவ்வொருவரையும் விருந்துக்கு வரவேண்டும் என்று அழைத்தார்.

'அன்பரே, நான் உமக்கு மிக மிகக் கடமைப்பட்டிருக்கிறேன் - அவர் சந்தித்த ஒவ்வொருவரையும் அவருடைய அந்தஸ்த்திற்கு மேற்பட்டவர்களையும் கீழ்ப்பட்டவர்களையும் ஒரு வித வித்தியாசமும் இல்லாமல் ஒரே தொனியில் அன்பரே என்று அழைத்துவந்தார் - எனக்காகவும், யாருடைய பெயர் தினமாக இன்று கொண்டாடுகிறோமோ அந்த இரு செல்வங்களுக்காகவும் நான் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆனால் மறந்துவிடவேண்டாம். டின்னருக்கு வாருங்கள். இல்லையானால், அன்பரே, எனக்கு மிகுந்த வருத்தமாய் இருக்கும். என்னுடைய முழுக் குடும்பத்தின் சார்பாக நீங்கள் வரவேண்டும் என்று கெஞ்சுகிறேன், அன்பரே.' இதே வார்த்தைகளை ஒவ்வொரு வருக்கும் ஒரு மாறுதலும் இல்லாமல் அவருடைய மகிழ்ச்சியுள்ள முகத்தில் தோன்றிய பாவத்தில் எவ்வித வேற்றுமையும் இல்லாமல் ஒரே விதமான கைக்குலுக்குதல்களுடனும், ஒரே விதமான தலை

வணங்குதல்களுடனும் அவர் செய்துவந்தார். ஒரு விருந்தாளியை வெளியனுப்பியதும் திரும்பி வந்து வரவேற்பு அறையில் உள்ள மற்றொரு விருந்தாளியின் பக்கமாக நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்துகொண்டு கால் மொட்டுகளைத் தம் கைகளால் தட்டி வாழ்க்கையை அவர் அனுபவிப்பதுபோலவும், எப்படி வாழ்க்கையை நடத்த வேண்டும் என்பதை அறிந்திருப்பதைப் போலவும் போன்ற ஒரு பாவனைக் காட்டிவந்தார். முன்னும் பின்னும் கௌரவத்தோடு ஊசலாடிக் கொண்டு, காலநிலையைப் பற்றிய ஹேஷ்யங்களையும், ஆரோக்கியம் பற்றிய விஷயங்களையும், ஒரு சமயம் ருஷ்ய மொழியிலும், மற்றொரு சமயம் மிக மோசமான பிரஞ்சு மொழியிலும் பேசிவந்தார். மிகவும் களைப்புற்றவர்போலவும் அதே சமயம் தமது கடமையைச் செய்து முடிப்பதைப் போலவும் அவர் எழுந்து விருந்தாளிகளை வழியனுப்பி தமது தலையைத் தடவிக் கொண்டு விருந்துக்கு வரும்படி அழைத்துக்கொண்டும் இருந்தார். சில சமயம் முன் அறையிலிருந்து அவர் திரும்பும்போது செடிக் கூடம் வழியாகவும், உக்கிராணம் வழியாகவும் மிகப்பெரிய சலவைக் கல் விருந்து மண்டபத்திற்குள் நுழைவார். அங்கே எண்பது பேர்களுக்கு மேசைகள் போடப்பட்டிருந்தன. மேசை மீது சாப்பாட்டு வெள்ளிச் சாமான்களையும், பீங்கான் சாமான்களையும் வைத்துக் கொண்டிருந்த சேவகர்களையும் மேசைகளை நகர்த்தி மேசை மீது துணிகளை விரித்துக்கொண்டிருந்த சேவகர்களையும் பார்த்தார். நல்ல குடும்பத்தில் தோன்றிய டிமிட்ரி வாசைலிவிச் என்பவர்தான் அவருடைய காரியங்களைக் கவனித்துவந்த மேனேஜர். பரந்த மேசைகளை மிகுந்த மகிழ்ச்சியோடு பார்த்துவிட்டு 'நல்லது டிமிட்ரி, எது எது எப்படி இருக்கவேண்டுமோ, அது அது அப்படி இருக்கும்படி நீ பார்த்துக்கொள்ளுவாய் அல்லவா ? அவ்வளவு தான். எல்லாவற்றிலும் பெரிய விஷயம் பரிமாறுவதுதான். அதுவே தான்' என்று திருப்தியடைந்த பெருமூச்சோடு வரவேற்பு அறைக்குத் திரும்புவார்.

'மேரியா லோவ்னா காரேக்கினாவும் அவளுடைய குமாரியும்' என்று கோமகளின் பிரம்மாண்டமான சேவகன் அழுத்தமான குரலில் வரவேற்பு அறைக்குள் நுழைந்துகொண்டே சொன்னான். கோமகள் சிறிதுநேரம் யோசித்தாள். தனது கணவனின் உருவப் படம்கொண்ட தங்கப் பொடி டப்பியிலிருந்து ஒரு சிமட்டா

எடுத்தாள். (வரவேற்பு அறையில் நுழையும் ஒவ்வொருவரின் பெயரையும் சேவகன் சொல்லுவது மேல்நாட்டு முறை.)

'இந்த விருந்தாளிகளால் எனது உயிர் போய்விட்டது. என்றாலும் அவளைப் பார்க்கிறேன். இனி வேறு ஒருவரையும் பார்க்க முடியாது. அவள் ஒரு பெருமைக்காரி. அவளை உள்ளே அனுப்பு' என்று சோர்ந்த தொனியில் அவள் சேவகனுக்குச் சொல்லியது 'சரி, என்னைத் தொலைத்துவிடுங்கள்' என்று கூறுவதைப் போல் இருந்தது.

ஒரு உயரமான பருத்த கர்வமுள்ள பெண், சிரிப்பும் உருண்டை முகமும் உள்ள தன் குமாரியோடு உடைகள் சலசலக்க வரவேற்பு அறைக்குள் நுழைந்தாள்.

'இனிய கோமகளே, இத்தனை யுகமாயிற்று... பாவம், அவளுக்கு உடம்புக்கு சரியில்லாமல் படுத்துவிட்டாள்... அந்த ரஜுமோவ்ஸ்கி நடனத்தில்... கோமகள் அப்ராக்ஸினா... நான் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன்...' இம்மாதிரியாகப் பரபரப்படைந்த பெண் குரல்கள், ஒன்றை ஒன்று தடுத்துக் கொண்டு ஆடைகளின் சலசலப்பு சத்தத்துடனும், நாற்காலிகளை இழுத்துப் போடும் சத்தத்துடனும் கலந்துவந்தன. அப்புறம் வேறு ஏதாவது உரையாடல்கள் ஆரம்பமாகும். அதிலிருந்து தப்புவதற்கு முதல் சந்தர்ப்பம் கிடைத்தவுடன் உடைகள் சலசலக்க விருந்தாளிகள் கிளம்பிவிடுவார்கள். போகும்போது 'எனக்கு எவ்வளவு சந்தோசம் தெரியுமா... அம்மாவின் உடல்நிலை... கோமகள் அப்ராக்ஸினா' இம்மாதிரி பேசுவார்கள். மறுபடியும் உடைகள் சலசலக்க முன் அறைக்குப் போய் அங்கிருந்து தங்கள் மேலங்கிகளையோ சல்லாடைகளையோ எடுத்துக்கொண்டு கிளம்பிவிடுவார்கள். அன்றைய உரையாடல்களில் முக்கியமான விஷயம் இதுதான் :- காத்ரைன் ராணி காலத்தில் மிகப் பிரபலமாகவும், அழகாகவும், பணக்காரராகவும் இருந்த கோமகன் பெஜுகாவின் சுகவீனத்தைப் பற்றியும் அன்னாபாவ்லவ்னாவின் வரவேற்பு வைபவத்தில் முறைதவறி நடந்துகொண்ட அவருடைய சோரபுத்திரன் பீயரைப் பற்றியுமே ஆகும்.

'பாவம் அந்த கோமகனுக்காக நான் மிகவும் வருந்துகிறேன். அவர் மிகுந்த மோசமான நிலைமையில் இருக்கிறார். அதோடு கூட அவர் பையனைப் பற்றிய இந்தத் துயரமும் சேருமானால் அவரைக் கொல்லுவதற்கு இதுவே போதுமானது' என்றாள் வந்தவள்.

'அது என்ன விஷயம்?' என்று விருந்தாளி சொல்லுவது என்னது என்பதை அறியாதவள்போலக் கோமகள் கேட்டாள். அதற்கு முன்னால் குறைந்தது பதினைந்து தடவைகளாவது கோமகன் பெஜுகாவின் கஷ்டத்தைப் பற்றி அவள் கேள்விப்பட்டிருப்பாள்.

வந்தவள் சொன்னாள் :- 'நவீனப் படிப்பினால் ஏற்படக் கூடிய பலன் அதுதான். வெளிநாட்டில் இந்த வாலிபர் இருந்தபோது, அவர் இஷ்டப்படி நடக்கவிட்டு விட்டதாகத் தெரிகிறது. இப்பொழுது பீட்டர்ஸ்பர்க்கில் பயங்கரமான காரியங்களை அவர் செய்துவந்ததாகவும் அதனால் அவரைப் போலீசார் வெளியேற்றிவிட்டதாகவும் நான் கேள்விப்படுகிறேன்' என்றாள் வந்தவள்.

'நிஜமாகவா நீ சொல்லுகிறாய்?' என்று கேமகள் கேட்டாள்.

'அவன் கெட்டவர்களைச் சிநேகம் பிடித்தான். இளவரசர் வாசைலியின் குமாரனும் அவனும் ஒரு டோலாகாவ் என்பவனும் சேர்ந்து என்னதான் செய்ய முயற்சித்தார்கள் என்பது கடவுளுக்கே வெளிச்சம். ஆனால் அதற்காக அவர்கள் தண்டனையை அனுபவித்துத்தான் ஆகவேண்டும். டோலாகாவ் பதவியில் இறக்கப்பட்டார். பெஜுகாவின் மகனைத் திரும்பவும் மாஸ்கோவிற்கு அனுப்பினார்கள். அனடோலின் தகப்பனார் தன் மகனின் குற்றத்தை அமுக்குவதற்கு எப்படியோ வேலைசெய்துவிட்டார். என்றாலும் அவன் பீட்டர்ஸ்பர்க்கை விட்டுப் போய்விடவேண்டும் என்று உத்தரவிட்டிருக்கிறார்கள்' என்று சொன்னாள் அன்னா மிக்காய்லாவ்னா.

'அவர்கள் என்னதான் செய்ய முயற்சித்தார்கள்?' என்று கோமகள் கேட்டாள்.

'அவர்கள், முக்கியமாக டோலாகாவ், அசல் கொள்ளைக்காரர் கள்' என்று வந்தவள் பதிலளித்தாள். 'அவன், மரியா ஜவானாவ்னா டோலாகாவாவின் மகன். எப்பேர்ப்பட்ட பெண் அவள்; கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். அந்த மூன்று பேர்களும் எங்கிருந்தோ ஒரு கரடியைப் பிடித்துக்கொண்டு ஒரு வண்டியில் போட்டுச் சில நடிகைகளைப் பார்க்கப் போனார்களாம். இதைத் தடுக்க போலீஸ் முயற்சித்தது. அந்த வாலிபர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? அந்தப் போலீஸ்காரனையும் கரடியையும் முதுகுக்கு முதுகாக வைத்துக்கட்டி மாய்க்கா கால்வாயில் விட்டுவிட்டார்கள். அந்தக்

கரடி முதுகின் மேல் உள்ள போலீஸ்காரனைச் சுமந்துகொண்டு நீந்தியது.'

'அச்சமயம் அந்த போலீஸ்காரன் எம்மாதிரி தோன்றியிருக்க வேண்டும், என் அன்பே' என்று கோமகன் உரக்கக் கத்தி விழுந்துவிழுந்து சிரித்தார்.

'ஓ, எவ்வளவு பயங்கரமானது ! இதைக் கண்டு எப்படி நீர் சிரிக்கலாம், கோமகனே?'

என்றாலும் அங்கிருந்த சீமாட்டிகளுக்குத் தங்கள் சிரிப்பை அடக்கமுடியவில்லை.

'அந்த பீயரைக் காப்பாற்ற அவ்வளவுதான் அவர்களால் செய்யமுடிந்தது. அவன் பெஜுகாவின் மகன் என்பதை நினைக்கும்போதும், அந்த மகன் தனக்கு விளையாட்டுக்காக இம்மாதிரிக் காரியங்களைச் செய்யும்போதும் அவற்றை நினைக்கத்தான் முடிகிறதா? இருந்தும் அவன் நன்றாய்ப் படித்தவன் என்றும், அவன் புத்திசாலி என்றும் சொல்லுகிறார்கள். வெளிநாட்டுப் படிப்பால் அவன் அடைந்த பலன் இதுதான் போலிருக்கிறது. இங்கே மாஸ்கோவில் அவன் எவ்வளவுதான் பணக்காரனாய் இருந்தாலும் அவனை ஒருவரும் வரவேற்கமாட்டார்கள் என்று நான் நம்புகிறேன். எனக்கு அவனை அறிமுகம் செய்துவைக்கச் சிலர் விரும்பினார்கள். நான் மறுத்துவிட்டேன். எனக்குக் குமாரத்திகள் இருக்கிறார்களே, அவர்களை நான் கவனிக்க வேண்டாமா?' என்றாள் வந்தவள்.

'இந்த வாலிபன் மிகுந்த பணக்காரன் என்று ஏன் சொல்லுகிறீர்?' என்று அங்கிருந்த பெண்களிடமிருந்து தனது பார்வையைத் திருப்பிக் கோமகள் கேட்டாள். அங்கிருந்த பெண்கள் தாங்கள் உரையாடலைக் கேட்காததுபோலப் பாவனை செய்தார்கள். 'அவருடைய குழந்தைகள் எல்லாமே சோரக் குழந்தைகள். பீயர் கூட சோர புத்திரன் என்றுதான் நான் நினைக்கிறேன்.'

'அம்மாதிரி இருபதுபேர் இருக்கும்' என்று தனது கையால் செய்கை காட்டி வந்தவள் சொன்னாள்.

உயர் வட்டாரங்களில் தமக்குள்ள தொடர்புகளையும் அங்கு நடக்கும் விஷயங்களைப் பற்றித் தனக்குள்ள ஞானத்தையும் காட்டிக்கொள்ள விரும்புபவள்போல இளவரசி அன்னா மிக்காய்லாவ்னா இந்த உரையாடலில் குறுக்கிட்டாள். 'உண்மை

என்னவென்றால் என்று பெரிதாய் அவள் ஆரம்பித்து குசுகுசுப்புத் தொனியில் 'கோமகன் சிரிலினுடைய புகழ்தான் எல்லாரும் அறிந்ததாயிற்றே. அவர் குழந்தைகளின் எண்ணிக்கை என்ன என்பது அவருக்கே தெரியாது. ஆனால் பீயர் அவருடைய செல்லபுத்திரன் என்றாள்.

'ஒரு வருடத்திற்கு முன்னால்கூட அந்தக் கிழட்டு மனிதர் எவ்வளவு அழகாய் இருந்தார் தெரியுமா? அவர் மாதிரி அழகான ஆணை நான் பார்த்ததேயில்லை' என்றாள் கோமகள்.

'இப்பொழுது அவர் வெகுதூரம் மாறிவிட்டார். நான் சொல்லி வந்தபடி இளவரசர் வாசைலி தமது மனைவி மூலம் அவருக்கு அடுத்த வாரிசுதாரர். ஆனால் கோமகனுக்குப் பீயர் மீது மிகுந்த பிரியம். அதனால் அவருடைய படிப்புக்கு ஏற்பாடு செய்தார். அவனைப்பற்றி சக்கரவர்த்திக்குக் கடிதம் எழுதினார். அவருடைய மரணத்திற்குப் பின்னால் - அவர் மிகுந்த மோசமாய் இருக்கிறார். எந்த நிமிடமும் மரணமாகலாம். பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து டாக்டர் லோரைன் வந்திருக்கிறார் - அவருடைய அளவற்ற செல்வத்திற்கு வாரிசுதாரர் யார்? பீயரா அல்லது இளவரசர் வாசைலியா என்பது யாருக்கும் தெரியாது. நாற்பதினாயிரம் அடிமைகள், பத்து லட்சக்கணக்கான ரூபிள்கள்! எனக்கு இவையெல்லாம் நன்றாய்த் தெரியும். இளவரசர் வசைலியே என்னிடம் சொல்லியிருக்கிறார். தவிர சிரில் விளாடி மிராவிச் எனது தாயாருக்கு ஒன்றுவிட்ட சகோதரர். அதோடு என் மகன் போரிசுக்கு அவர்தான் ஞானப் பிதா' என்று அதைப் பற்றி முக்கியத்துவம் கொடுக்காதவள்போலப் பேசினாள் அன்னா மிக்காய்லாவ்னா.

'இளவரசி வாசைலி நேற்று மாஸ்கோ வந்திருக்கிறார். சில பரிசோதனை வேலைக்காக அவர் வந்திருக்கிறார்' என்று கேள்விப்படுகிறேன்' என்றாள் வந்தவள்.

'ஆம், நமக்குள்ளே பேசிக்கொள்ளுவோம். அது ஒரு தந்திரம். உண்மை என்னவென்றால், கோமகன் சிரில் ரொம்ப மோசமான நிலையில் இருப்பதாகக் கேள்விப்பட்டு, அவர் எப்படி இருக்கிறார் என்பதை அறிந்துபோகவே வந்திருக்கிறார்' என்று கூறினாள் இளவரசி.

'ஆனால் உங்களுக்குத் தெரியுமா? அது முதல்தரமான தமாஷ்' என்று கோமகன் சொன்னார். அங்கிருந்த பெரிய விருந்தாளிகள் அவர் சொல்லியதைக் கவனிக்கவில்லை என்பதை அறிந்ததும் இள

மங்கைகள் பக்கம் திரும்பினார். 'அந்தப் போலீஸ்காரன் அச்சமயத்தில் எவ்வளவு வேடிக்கையாய் இருந்திருப்பான்! அது எனக்குப் புரிகிறது.'

அம்மாதிரி சொல்லிக்கொண்டே போலீஸ்காரன் பட்ட துன்பங்களை - கைகளை ஆட்டி - நடித்துக் காட்டிக்கொண்டிருந்தார். அவருடைய தடித்த உருவம் ஆழ்ந்த கணீரென்ற சிரிப்பினால் குலுங்கியது. நன்றாய் உண்டு, முக்கியமாக நன்றாய்க் குடித்து வளர்ந்த ஒருவரின் சிரிப்பு எப்படி இருக்குமோ அப்படி அந்தச் சிரிப்பு இருந்தது. 'ஆகவே, கண்டிப்பாய் வந்து எங்களுடன் உணவு அருந்துங்கள்' என்று அவர் சொன்னார்.

## 1

## 11

அமைதி நிலவியது. கோமகள் தமது விருந்தினர்களைப் பரிவான புன்னகையோடு பார்த்தாள். ஆனால் அவள் பார்வையில் விருந்தாளிகள் எழுந்து விடைபெற்றுக்கொண்டுபோனால் அதைப் பற்றி அவள் வருந்தப் போவதில்லை என்று தோன்றிய உண்மையை அவள் மறைக்கவில்லை. வந்தவளின் குமாரி தனது உடையின் மடிப்பைத் தடவிவிட்டுக்கொண்டு கேள்விக்குறியோடு தாயாரை நோக்கினாள். அச்சமயம் பக்கத்து அறையிலிருந்து சிறுவர்களும் சிறுமிகளும் வாசலுக்கு ஓடிவரும் சத்தமும் நாற்காலி கீழே விழுந்த சத்தமும் கேட்டன. தனது குட்டையான மஸ்லின் பாவாடை மடிப்புகளுக்குள் எதையோ ஒளித்து வைத்துக் கொண்டிருந்த ஒரு பதின்மூன்று வயதுப்பெண் உள்ளே ஓடிவந்து அறையின் மத்தியில் நின்றுவிட்டாள். அவ்வளவு தூரம் வரவேண்டும் என்ற நினைப்போடு அவள் ஓட்டத்தை ஆரம்பிக்கவில்லை என்பது தெளிவாய்த் தெரிந்தது. அவளுக்குப் பின்னால் வாசற்படியில் சிகப்பு கோட்டுக் காலர் அணிந்திருந்த ஒரு மாணவனும், காப்பாளர் படையைச் சேர்ந்த அதிகாரியும், ஒரு பதினைந்து வயதுப் பெண்ணும், குட்டையான கோட்டுத் தரித்த சிகப்பு முகம் கொண்ட குண்டான ஒரு பையனும் காணப்பட்டார்கள்.

கோமகன் குதித்தெழுந்து இப்பக்கமும் அப்பக்கமும் ஆடி அசைந்து கைகளைப் பரப்பி, உள்ளே ஓடிவந்த சிறிய பெண்ணை வளைத்துப் பிடித்துக் கொண்டார்.

'ஆ, இதோ வந்துவிட்டாள்' என்று சிரிப்போடு கூறினார்.

'எனது செல்வமே, இன்று உனது பெயர் - தினம், எனது அருமைச் செல்வமே!'

'என் நண்பரே, ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு நேரம் உண்டு' என்று கோமகள் போலியான கடுமையோடு கூறினாள். 'நீர் அவளைக் கெடுக்கிறீர், இல்லையா!' என்று தனது கணவனைப் பார்த்துச் சொன்னாள்.

'நலமாய் இருக்கிறாயா, என் அன்பே? உன் பெயர்த் திருநாள்கள் பலப்பல வரவேண்டுமென்று நான் விரும்புகிறேன்' என்றாள் வந்தவள். பின்னால் தாயாரைப் பார்த்து, 'என்ன ரம்மியமான குழந்தை!' என்று சொன்னாள்.

கருங்கண்ணும் அகன்ற வாயும் அழகின்றியும் ஆனால் மிகுந்த உயிர்த்துடிப்போடும் கூடிய அந்தக் குழந்தை ஓடிவந்ததனால் பெருமூச்சு ஏற்பட்டு அவளுடைய திறந்த தோள்களையும் சட்டையையும் குலுக்கியது. பின்னால் தொங்கிய கறுத்துச் சுருண்ட தலைமுடியும் மெலிந்த, சட்டையால் மறைக்கப்படாத கைகளும், பின்னல் வேலை செய்த சல்லடத்தை அணிந்திருந்த அவளின் சிறிய கால்களும், மிதியடிக்குள் விளங்கிய அவள் பாதங்களுமாகக் காட்சியளித்தாள். அவள் ஒரு பருவ மங்கையாக இன்னும் ஆகாவிட்டாலும், அவள் இனிமேல் ஒரு குழந்தையல்ல என்ற ரம்மியமான வயதில் அச்சமயம் அவள் இருந்தாள். தகப்பனாரிடமிருந்து அவள் தப்பி, நாணங்கொண்ட தன் முகத்தைத் தன் தாயாரின் சல்லாவில் மறைத்துக்கொண்டாள். தாயாரின் கடுஞ்சொற்களைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் அவள் சிரிக்க ஆரம்பித்தாள். அரைகுறைப் பேச்சுகளால் ஒரு பொம்மையைப் பற்றி அவள் சிரித்துக்கொண்டே பேச முயற்சித்து, தன் பாவாடையில் மறைத்து வைத்திருந்த பொம்மையை வெளியே எடுத்தாள்.

'இதைப் பார்த்தாயா... எனது பொம்மை... மிம்மி... இதோ பார்' இவ்வளவுதான் நட்டாஷாவால் பேசமுடிந்தது. (அவளுக்கு எதைப் பார்த்தாலும் வேடிக்கையாயத் தோன்றியது.) அவள் தாயார் மீது சாய்ந்துகொண்டு உரக்க விழுந்து விழுந்து சிரித்தாள். கணீர் என்ற அந்தச் சிரிப்பில், நாசூக்கான அந்த வந்தவள் கூடக் கலந்து கொள்ளாமல் இருக்க முடியவில்லை.

'இப்பொழுது போய்விடு. இந்தப் பூதத்தையும் உன்னோடு எடுத்துக்கொண்டுபோ' என்று பொய்யான கடுமையோடு தன் மகளைத் தள்ளிவிட்டு, வந்தவளைப் பார்த்து, 'அவள்தான் என் கடைசி மகள்' என்று சொன்னாள்.

நட்டாஷா ஒரு விநாடி தனது தாயாரின் சல்லாவிலிருந்து முகத்தை மேலே தூக்கித் தன் சிரிப்புக் கண்ணீன் வழியாக அவளைப் பார்த்துவிட்டு, மறுபடியும் தன் முகத்தை மறைத்துக்கொண்டாள்.

இந்தக் குடும்பக் காட்சியைக் கட்டாயமாய்ப் பார்த்தாக வேண்டும் என்ற நிலையில் இருந்து வந்தவள் தானும் அதில் கலந்துகொள்ளவேண்டியது அவசியம் என்று நினைத்தாள்.

நட்டாஷாவைப் பார்த்து அவள் சொன்னாள் :- 'எனக்குச் சொல்லி, என் அன்பே, இந்த மிம்மி உன் ஹவா? உன் மகள் என்று நினைக்கிறேன்.'

குழந்தைத்தனமான காரியங்களில் இந்த வந்தவள் இம்மாதிரி வக்காலத்து வாங்கும் தோரணையில் பேசியது நட்டாஷாவுக்குப் பிடிக்கவில்லை. அவள் பதில் சொல்லவில்லை. ஆனால், அவளைக் கடுமையாகப் பார்த்தாள்.

இதற்கிடையில், குடும்பத்தைச் சேர்ந்த இளைஞர்கள்; அன்னாமிக்காய்லாவ்னாவின் மகன் ராணுவ அதிகாரியான போரிஸ்; கோமகனின் மூத்த குமாரனான கலாசாலை மாணவன் நிக்கலஸ்; கோமகனின் பதினைந்து வயதான மருமகள் சோனியா; கோமகனின் கடைசி மகன் பெட்டியா ஆகியவர்கள் எல்லாரும் வரவேற்பு அறையில் அமர்ந்தார்கள். தங்களுடைய முகத்தில் தோன்றிய உற்சாகமும் கேளிக்கைகளும், மரியாதையை மீறிப் போய் விடாதபடி அவர்கள் தடுக்க முயற்சித்துக் கொண்டிருந்தது தெளிவாய்த் தெரிந்தது. இந்த வரவேற்பு அறையில் பேசப்பட்டு வந்த ஊர்வம்புகள், காலநிலைகள், கோமகள் அபராக்சினா போன்ற விஷயங்கள் இவைகளைவிட அந்த இளைஞர்கள் அவசரமாய் ஓடிவந்தார்களே அந்தப் பின்னறைகளில் அவர்களுடைய உரையாடல்கள், மிகுந்த ருசிகரமாய் இருந்தன என்பது தெரிந்தது. அவர்களுடைய சிரிப்பை அடக்கமுடியாமல் அடிக்கடி ஒருவரை ஒருவர் பார்த்துவந்தார்கள்.

மாணவரும் ராணுவ அதிகாரியுமான இரண்டு வாலிபர்களும் குழந்தைப் பருவத்திலிருந்தே நண்பர்கள். இருவருக்கும் ஒரே வயது. இருவரும் ஒரே மாதிரி இல்லாவிட்டாலும் பார்க்க அழகானவர்கள்.

போரிஸ், உயரமும் அழகான நிறமும், அவருடைய அமைதியான அழகான முகத்தில் ஒழுங்கான நாசூக்கான சாயல்களும் கொண்டிருந்தார். நிக்கலஸ் சுருண்ட முடியும் குள்ள உருவமும் கபடமற்ற முகத்தோற்றமும் கொண்டிருந்தார். அவருடைய மேல் உதட்டில் மெல்லிய ரோமங்கள் அரும்பியிருந்தன. அவசரத்தையும் உற்சாகத்தையும் அவர் முகம் காட்டியது. வரவேற்பு அறையில் நுழைந்தபோது அவர் முகம் நாணியது. எதையாவது சொல்ல வேண்டுமென்று அவர் முயற்சித்தார். ஆனால் முடியவில்லை. ஆனால் போரிஸ் உடனே தன்னைச் சமாளித்துக்கொண்டு, அந்த மிம்மி பொம்மையை அதன் மூக்கு உடைவதற்கு முன்னால் பருவ மங்கையாக இருந்தபோதே தமக்கு எப்படித் தெரியும் என்பதையும், அவளையறிந்த கடந்த ஐந்து வருடங்களாக அவள் எப்படி வயதானாள் என்பதையும், அதனுடைய உச்சிக்கு நேராக மண்டை எப்படி உடைந்தது என்பதையும் அமைதியாகவும் விளையாட்டாகவும் சொல்லிவந்தார். இதைச் சொல்லிவிட்டு நட்டாஷாவைப் பார்த்தார். அவள் இவர் பார்வையில் அகப்படாமல் தன் தம்பியைப் பார்த்தாள். அவன் உருட்டி விழித்துக்கொண்டு சிரிப்பை அடக்க முடியாமல் உடம்பு குலுங்கிக் கொண்டு இருந்தான். அதற்குமேல் அவளால் அடக்கமுடியவில்லை. குதித்தெழுந்து தன்னுடைய சிறிய கால்களால் எவ்வளவு வேகமாய் ஓடமுடியுமோ, அவ்வளவு வேகமாக அறையிலிருந்து ஓடினாள். போரிஸ் சிரிக்கவில்லை.

'நீ வெளியே போக விரும்புகிறாய் இல்லையா, அம்மா? உனக்கு வண்டி வேண்டுமா?' என்று புன்சிரிப்போடு தன் தாயைக் கேட்டார்.

'ஆமாம். போய்த் தயாராய் இருக்கச் சொல்லு' என்று புன்முறுவலோடு அவள் பதிலளித்தாள்.

போரிஸ் அமைதியாய் அறையைவிட்டுப் புறப்பட்டு நட்டாஷாவைத் தேடிக்கொண்டு போனார். தங்கள் திட்டமெல்லாம் வியர்த்தமாய் விட்டது கண்டு வருந்தியது போலக் கோபத்தோடு அந்தக் குண்டுப் பையன் அவர்களுக்குப் பின்னால் ஓடினான்.

1

12

கோமகளின் மூத்த குமாரி தன் சகோதரியைவிட நான்கு வயது அதிகமானவள். என்றாலும் பெரியவளாய் வளர்ந்து விட்டவள் போல நடந்துவந்தாள். வந்தவளின் குமாரியான இளஞ்சீமாட்டியும் அங்கிருந்தாள். இந்த இருவரைத் தவிர நிக்கலஸ், மருமகள் சோனியா ஆகிய இளைஞர்களே அங்கிருந்தார்கள். கருத்த கூந்தலும், மென்மையான பார்வையும், அந்தப் பார்வையை மறைக்கும் நீண்ட இமை ரோமங்களும், தலையில் இருமுறை சுற்றப்பட்ட பின்னல் ஜடையும், முக்கியமாகக் கைகளிலும் கழுத்திலும் காணப்பட்ட வெண்மை கலந்த நிறமும் கொண்டவளாய் சோனியா காணப்பட்டாள். அவளுடைய அசைப்புகளில் காணப்பட்ட ஒயிலும், மிருதுத்துவமும் துவளும் தன்மையும் கொண்ட அவளின் சிறு கால்களும் கைகளும், நாணமும் அடக்கமும் கொண்ட அவள் நடத்தையும் ஒன்றை ஞாபகமூட்டின. அதாவது, முற்றிலும் வளர்ந்த பின்பு அழகாய்த் தோன்றக் கூடிய ஒரு பூனை, பாதி வளர்ச்சியில் எப்படி இருக்குமோ அதையே ஞாபகமூட்டின. அங்கு நடந்து வந்த உரையாடல்களில் கலந்து கொள்வதுதான் முறையாய் இருக்குமென்று அவள் நினைத்து அதற்காகத் தன் புன்முறுவலைக் காட்டிவந்தாள். ஆனால் நீண்ட அடர்ந்த அவளுடைய இமை ரோமங்களுக்கு அடியிலுள்ள கண்கள், ராணுவத்தில் சேரப்போகும் அவளுடைய மைத்துனரையே கவனித்துவந்தன. இளம் பெண்ணின் பெருமையோடு கூடிய அவளுடைய ஆர்வம் அவர்மீது மிகுந்து இருந்ததால், அவளுடைய புன்னகையை ஒரு விநாடிகூட ஒருவர் மீதும் நிலைத்து நிறுத்தமுடியவில்லை. அந்தப் பூனைக்குட்டி அங்கே அமர்ந்திருந்தாலும் சந்தர்ப்பம் கிடைக்கும்போது மிகுந்த வேகத்தோடு அங்கிருந்து குதித்தெழுந்து வரவேற்பு அறையில் இருந்து தப்பித்து, எப்படி நட்டாஷாவும் போரிசும் விளையாடுகிறார்களோ அதே மாதிரித் தன் மைத்துனருடன் விளையாடத் தயாராக இருந்ததென்று தெளிவாகத் தெரிந்தது.

வந்தவளைப் பார்த்து, நிக்கலசைச் சுட்டிக் காட்டிக்கொண்டு, ஆமாம், என் அன்பரே இவனுடைய நண்பர் போரிஸ் ஒரு அதிகாரியாக வந்துவிட்டார். இவனும் அந்த நட்புரிமைக்காக வேண்டி கலாசாலைப் படிப்பையும் வயதான தந்தையையும் விட்டு

ராணுவத்தில் சேரப் போகிறான். தஸ்தாவேஜீ இலாகாவில் இவனுக்காக ஒரு வேலை காத்துக் கொண்டிருக்கிறது. அப்படி இருந்தும் இவன் ராணுவத்திற்குப் போக விரும்புவது நட்புரிமையைக் காட்டவில்லையா?' என்று கோமகன் பேசினார்.

'யுத்தம் ஆரம்பமாகி விட்டது என்று சொல்லுகிறார்களே?' என்று வந்தவள் கேட்டாள்.

'அம்மாதிரிதான் அவர்கள் வெகுகாலமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் மறுபடியும் மறுபடியும் அப்படியேதான் சொல்லிக்கொண்டிருப்பார்கள். அதோடு சரி. அவனுடைய சிநேகத்துவம் இதில் நன்றாய்த் தெரிகிறது. அவன் குதிரைப் படையில் சேரப்போகிறான்' என்றார் கோமகன்.

வந்தவள் பதில் என்ன சொல்லுவது என்று தெரியாமல் தலையை ஆட்டினாள்.

'சிநேகத்துவத்துக்காக அப்படிச் செய்யவில்லை' என்று நிக்கலஸ் வெகுண்டு ஒரு வெட்கப்படக்கூடிய குற்றச் சாட்டிலிருந்து தப்பித்துக்கொள்ள முயல்பவன் போலத் திரும்பிக்கொண்டார். 'நான் செய்வது சிநேகத்துவத்துக்காக அல்லவே அல்ல. ராணுவ சேவைதான் எனக்குப் பொருத்தமான வேலை என்று நான் நினைக்கிறேன்.'

அவர் தம்முடைய மைத்துனியையும் வந்தவளின் மகளாகிய இளஞ்சீமாட்டியையும் நோக்கினார். அவர்கள் இருவரும் அவரை ஆதரிப்பதைப் போலப் புன்னகையால் தெரிவித்தார்கள்.

கோமகன் தமது தோள்களைக் குலுக்கிக்கொண்டு தம்மை வருத்திவந்த விஷயத்தைப் பற்றி விளையாட்டாகப் பேசுவது போலக் கூறினார்:- 'பாவ்லாகிராட் குதிரைப்படையின் கர்னல் ஷுபர்ட் என்பவர் இன்றிரவு நம்முடன் விருந்து உண்பார். அவர் இங்கே விடுமுறையில் வந்திருக்கிறார். திரும்பிப் போகும்போது நிக்கலஸை அழைத்துக்கொண்டு போவார். அதைத் தவிர்க்க முடியாது.'

'என்னைப் போகவிட உங்களுக்கு விருப்பம் இல்லையென்றால், நான் தங்கிவிடுகிறேன் என்று உங்களுக்கு முன்பே சொல்லியிருக்கிறேனே, அப்பா. ஆனால், ராணுவத்தைத் தவிர வேறு எதற்கும் நான் உபயோகம் இல்லை என்பது எனக்குத் தெரியும். நான் ஒரு ராஜதந்திரி அல்ல. சர்க்காரின் குமாஸ்தாவும் அல்ல. ஏனெனில், நான் என்ன நினைக்கிறேன் என்பதை

மறைப்பதற்கு எனக்குத் தெரியாது' என்றார் நிக்கலஸ். இம்மாதிரிப் பேசும்போது ஒரு அழகான வாலிபனுக்குரிய சல்லாபப் பார்வையோடு அழகிய சோனியாவையும் இளஞ்சீமாட்டியையும் பார்த்துக்கொண்டே இருந்தார்.

தன் கண்களால் அவரையே பார்த்துப் பருகிக்கொண்டிருந்த அந்தச் சிறிய பூனைக்குட்டி, எந்த நிமிடமும் துள்ளி விளையாடித் தன்னுடைய பூனைக்குட்டியின் சுபாவத்தைக் காட்டத் தயாராய் இருந்ததைப் போலக் காணப்பட்டது.

'சரி, சரி' என்று வயதான கோமகன் சொன்னார். அவன் எப்பொழுதுமே வெகுளுகிறான்! போனபார்ட் இவர்கள் தலைகளையெல்லாம் கிறுக்கும்படி செய்துவிட்டான். சாதாரண சேவகனாய் இருந்து எப்படி சக்கரவர்த்தியானான் என்பதைப் பற்றியே அவர்கள் எல்லாரும் நினைக்கிறார்கள். நல்லது, கடவுள் அருள்புரியட்டும்' என்று கூறினார். ஆனால் இதைக்கேட்டு வந்தவள் புரிந்த கேலிப் புன்னகையை அவர் கவனிக்கவில்லை.

வயது முதிர்ந்தவர்கள் எல்லாரும் போனபார்ட்டைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்கள். ஜூலி காராகீனா ராஸ்டோவ் பக்கம் திரும்பினாள்.

'ஆர்காராவ்ஸ் வரவேற்பிற்குச் சென்ற வியாழன் அன்று நீர் வராமல் போனது என்ன துர்பாக்கியம்! நீர் இல்லாமல் எனக்கு அன்று சுவாரஸ்யமாகவே இல்லை' என்று அவள் சொல்லி அவருக்கு ஒரு கனிந்த புன்னகை காட்டினாள்.

வாலிபனுக்கு உச்சி குளிர்ந்தது. ஒரு பிலுக்குப் புன்னகையோடு அவளுடன் நெருங்கி உட்கார்ந்து, இளநகை கொண்ட அந்த ஜூலியுடன் அந்தரங்கமாய்ப் பேச ஆரம்பித்தார். இவருடைய இயற்கையான புன்னகை சோனியாவின் நெஞ்சைக் குட்டியதை அவர் கவனிக்கவில்லை. சோனியா நாணமடைந்து இயற்கையற்ற குறுநகை காட்டினாள். பேச்சுக்கு மத்தியில் அவர் அவளைத் திரும்பிப் பார்த்தார். ஆசை கொண்ட கோபப் பார்வையை அவள் அவர் மீது வீசினாள். அவளாள் தன் கண்ணீரை அடக்கவும் முடியாமல் உதடுகளில் உண்டாக்கிக்கொணட செயற்கைக் குறுநகையைத் தொடர்ந்துசெய்யவும் முடியாமல், ஆசனத்தை விட்டு எழுந்து அறையிலிருந்து வெளியேறினாள். நிக்கலஸின் உற்சாகம் எல்லாம் பறந்தது. அவள் ஆரம்பித்த வாக்கியம் முடிந்ததும் வருந்திய முகத்தோடு அறையைவிட்டுப் புறப்பட்டு சோனியாவைக் கண்டுபிடிக்கப் போனார்.

'இந்த இளைஞர்களின் அந்தரங்கங்களெல்லாம் என்ன இவ்வளவு வெட்ட வெளிச்சமாய் இருக்கின்றன' என்று அன்னா மிக்காய்லாவ்னா நிக்கலஸைப் பார்த்துச் சொல்லிவிட்டு, 'மைத்துனி உறவு மகா ஆபத்தானது' என்ற பழமொழியையும் எடுத்துச் சொன்னாள்.

இளைஞர்கள் அறைக்குள் வந்ததால் ஏற்பட்ட மகிழ்ச்சி மறைந்ததும், ஏதோ தன் மனதிற்குள்ளேயே தோன்றிக் கொண்டிருந்த ஒரு கேள்விக்குப் பதில் சொல்வதைப் போலவும் கோமகள் சொல்லலுற்றாள்:- 'ஆம், இவர்களை இன்று பார்த்து அடையும் மகிழ்ச்சிக்காக எவ்வளவு கஷ்டங்கள் பட்டோம், எவ்வளவு கவலைகள் பட்டோம். இன்றும் எனக்கு மகிழ்ச்சியை விட அவர்களைப் பற்றிய கவலையே அதிகமாக இருக்கிறது. எப்பொழுதும், எப்பொழுதுமே கவலை வாட்டம்தான். அதிலும் வாலிபர்களுக்கும் இளம்பெண்களுக்கும் ஆபத்தான இந்த வயதில்!'

'அதெல்லாம் வளர்ப்பைப் பொறுத்துத்தான் இருக்கிறது' என்றாள் வந்தவள்.

'ஆம், நீ சொல்லுவது முற்றிலும் சரி,' என்று தொடர்ந்தாள் கோமகள். 'இதுவரை என் குழந்தைகளுக்கு நண்பராகவும் அவர்கள் என்மீது பூரண நம்பிக்கை கொள்ளும்படியுமே நடந்து வந்திருக்கிறேன். (தங்களுடைய ஒளித்த ரகசியங்கள் தங்கள் குழந்தைகளிடம் கிடையாது என்றே பல பெற்றோர்கள் கனவு காண்கிறார்கள். அதே தவறைத்தான் இவளும் செய்தாள்.) என் குமாரிகள் என்னிடம்தான் தங்கள் ரகசியங்களை முதலில் சொல்வார்கள் என்பது எனக்குத் தெரியும். நிக்கலஸ் அவனுடைய படபடப்பான சுபாவத்தினால் எதாவது சேட்டைகளில் மாட்டிக்கொண்டாலும், அவன் ஒருக்காலும் பீட்டர்ஸ்பர்க் வாலிபர்களைப் போலக் கெட்டுவிடமாட்டான்.'

'ஆமாம், அவர்கள் சிலாக்கியமானவர்கள்; சிலாக்கியமான வாலிபர்கள். பாருங்களேன், குதிரைப் படையில் சேரவேண்டும் என்கிறார். யாரால் என்ன செய்யமுடியும்?' என்று சொன்னார் கோமகன். தீர்க்க முடியாது எனத் தோன்றும் பிரச்சனைகளில் 'எல்லாம் மிக நன்றாய்த்தான் இருக்கும்' என்று தீர்ப்புக் காண்பது கோமகனின் வழக்கம்.

'உமது கடைசிப் புத்திரி என்ன ரம்மியமாய் இருக்கிறாள்! ஒரு சிறிய எரிமலையேதான்' என்றாள் வந்தவள்.

'ஆமாம், ஒழுங்கான எரிமலை. என்னைப்போல் இருக்கிறாள். அவளுக்கு எப்பேர்ப்பட்ட குரல் இருக்கிறது? அவள் என் மகளாய் இருந்தாலும் இரண்டாவது சாலமனியாக-அவள் ஒரு பாடகியாக விளங்குவாள் என்ற உண்மையை நான் சொல்லியே ஆகவேண்டும். அவளுக்கு சங்கீதம் கற்றுக்கொடுக்க ஒரு இத்தாலியரை ஏற்பாடு செய்திருக்கிறோம்' என்றார் கோமகன். *(1805ஆம் வருடத்தில் மாஸ்கோவில் இருந்த ஜெர்மன் இசைக் குழுவில் சாலமனிதான் முதன்மையாக விளங்கினாள். அவள் ருசியாவில் பிறந்தவள். வயலின்-பியனோ, நடனம் ஆகியவற்றை மனங்கவரும் வகையில் கையாண்டுவந்தாள்.)*

'அவள் மிகவும் குழந்தையல்லவா? இந்த வயதில் சங்கீதப் பயிற்சியை ஆரம்பித்தால் குரலைக் கெடுத்துவிடும் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.'

'ஓ, இல்லை. அப்படியெல்லாம் அவள் சின்னக் குழந்தையல்ல. நமது தாயார்கள் பன்னிரண்டு வயதிலும் பதின்மூன்று வயதிலும் கல்யாணம் செய்துகொண்டிருந்தார்களே!' என்று கோமகன் சொன்னார்.

'அவள் போரிஸை அதற்குள்ளாகவே காதல்கொள்ள ஆரம்பித்துவிட்டாள். என்ன வேடிக்கை!' என்று போரிசின் தாயாரைப் பார்த்து மெல்லிய புன்னகையோடு சொல்லிய கோமகள், தமது மனதில் எப்பொழுதும் உறுத்திக் கொண்டிருந்த ஒரு விஷயத்தைச் சொல்லுபவள் போல் மேலும் பேசினாள்:- இப்பொழுது பாருங்கள், அவளிடம் நான் கடுமையாக இருந்து, அதைச் செய்யக் கூடாது என்று தடுப்பேனானால், அவர்கள் என்னதான் செய்யமாட்டார்கள் என்பது கடவுளுக்கே தெரியும். *(அவர்கள் முத்தமிட ஆரம்பித்து விடுவார்கள் என்பதைத்தான் அவள் நினைத்துக் கூறுகிறாள்)* இப்பொழுதெல்லாம் அவள் சொல்லுகிற ஒவ்வொரு வார்த்தையும் எனக்குத் தெரியும். மாலைவேளைகளில் அவளாகவே என்னிடம் வந்து ஒவ்வொன்றையும் சொல்லி விடுகிறாள். ஒருவேளை நான் அவளைச் செல்லம் கொடுத்துக் கெடுப்பதாய் இருக்கலாம். என்றாலும் இது தான் சிறந்த வழியென்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், அவளுடைய அக்காளிடம் நான் அதிகக் கண்டிப்பாய் இருந்தேன்.'

பக்கத்திலிருந்த மூத்த மகள் கோமகள் வெரா இளநகையோடு, 'ஆமாம், நான் வேறுவிதமாய்த்தான் வளர்க்கப்பட்டேன்' என்றாள்.

ஆனால், பொதுவாக இளநகைகள் அழகை அதிகரிப்பதுபோல வெராவின் இளநகை அவளின் அழகை அதிகரிக்கவில்லை. அது இயற்கைக்கு விரோதமான மனோரம்மியமற்ற பார்வையைக் கொடுத்தது. வெரா பார்ப்பதற்கு மிக்க அழகானவள். அவள் முட்டாளுமல்ல; படிப்பிலும் வெகுசுட்டி. நன்கு வளர்க்கப் பட்டவள். இனிமையான குரலும் அவளுக்குண்டு. அவள் சொன்னது உண்மையும் பொருத்தமானதுமே என்றாலும் வந்திருந்தவர்களும் கோமகளும் அவள் எதற்காக அப்படிச் சொன்னாள் என்று ஆச்சரியம் கொண்டு அவளைத் திரும்பிப் பார்த்தார்கள். அவர்கள் எல்லோருமே தர்ம சங்கடமான நிலைமையில் இருப்பதாக உணர்ந்தார்கள்.

'எல்லாருமே தங்கள் முதல் குழந்தைகளிடம் ரொம்பப் புத்திசாலித்தனமாய்த்தான் இருப்பார்கள். அவர்களை ரொம்பப் பிரமாதமாக்கிவிட வேண்டுமென்று முயற்சிப்பார்கள்' என்று சொன்னாள் வந்தவள்.

'நமது கோமகள்கூட வெராவை வளர்ப்பதில் ரொம்ப புத்திசாலித்தனமாய்த்தான் இருந்தாள். அதை மறுப்பதில் என்ன பிரயோசனம், என் அன்பே? நல்லது, அதனால் என்ன, மிகச்சிறந்த விதமாக அவளை வளர்த்துவிட்டாள்' என்று கூறிக்கொண்டு வெராவைப் பார்த்துக் கண்சிமிட்டினார் கோமகன்.

விருந்தாளிகள் எழுந்து டின்னருக்கு வருவதாக உறுதி கூறி விட்டு விடைபெற்றுச் சென்றார்கள்.

'என்ன ஜென்மங்கள்? அவர்கள் போகவே மாட்டார்கள் என்றல்லவா நினைத்தேன்' என்று தனது விருந்தாளிகளை வழியனுப்பிய பின்பு கோமகள் கூறினாள்.

## 1 – 13

வரவேற்பு அறையிலிருந்து வெளியே ஓடிய நட்டாஷா, செடிக் கூடம் வரையில்தான் ஓடினாள். அங்கே நின்று வரவேற்பு அறையில் நடக்கும் உரையாடல்களைக் கேட்டுக்கொண்டு, போரிஸ் வெளியே வருவதற்காகக் காத்திருந்தாள். அவளுடைய பொறுமை

யின்மை அதிகரித்துக்கொண்டு போனதால் அவள் கால்களைப் பூமியில் உதைத்துக்கொண்டு, போரிஸ் உடனே வராததற்காகக் கதறக்கூடத் தயாராய் இருந்தாள். அச்சமயம் அந்த வாலிபன் மெதுவாகவும் இல்லாமல் வேகமாகவும் இல்லாமல் ஜாக்கிரதையுடன் நடந்துவந்ததை அவள் கேட்டாள். உடனே வேகமாய் ஓடிப் பூந்தொட்டிகளுக்குப் பின்னால் போய் மறைந்துகொண்டாள். (இளஞ் செடிகளையும் பூச் செடிகளையும் பாதுகாத்து வளர்ப்பதற்குக் கண்ணாடியாலான அறை ஒன்றைப் பெரிய பங்களாக்களில் நிர்மாணிப்பது உண்டு. அதற்குப் பெயர் 'கிரீன் ரூம்' என்று சொல்லுவார்கள்.)

அறையின் மத்தியில் போரிஸ் வந்து நின்று சுற்றிலும் பார்த்தார். தன்னுடைய சீருடையின் கைச் சட்டையில் ஒட்டியிருந்த சிறு தூசியைத் தட்டிவிட்டு, அங்கிருந்த நிலைக்கண்ணாடி முன்பாகச் சென்று தன் அழகிய முகத்தைப் பார்த்துக்கொண்டார். தான் ஒளிந்திருந்த இடத்தில் அசையாமல் இருந்து அவர் என்ன செய்யப்போகிறார் என்பதை நட்டாஷா கவனித்துவந்தாள். அவர் சிறிதுநேரம் நிலைக்கண்ணாடி முன்பு நின்று புன்முறுவல் செய்துவிட்டு இன்னொரு வாசலைப் பார்த்து நடந்தார். நட்டாஷா அவரைக் கூப்பிடப் பார்த்தாள். உடனே மனதை மாற்றிக்கொண்டாள். 'என்னை அவர் தேடட்டும்' என்று நினைத்தாள். போரிஸ் அந்த இடத்தைவிட்டுப் போனவுடனேயே அழுத கண்களோடும், நாணத்தோடும், கோபமாக முனங்கிக் கொண்டும் மற்றொரு வாசல் வழியாக சோனியா உள்ளேவந்தாள். அவளிடம் எழுந்து ஓடவேண்டும் என்று முதலில் நினைத்த நட்டாஷா, மறைவிடத்திலிருந்தே என்ன நடக்கப்போகிறது என்பதைக் கவனிக்க விரும்பினாள். அவளுக்கு ஒரு புதிய விசித்திரமான ஆனந்தம் தோன்றியது. சோனியா தனக்குத்தானே முனங்கிக் கொண்டு அடிக்கடி வரவேற்பு அறைக் கதவைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கதவு திறந்தது. நிக்கலஸ் உள்ளே வந்தார்.

'சோனியா, உனக்கு என்ன வந்தது? நீ இப்படிச் செய்யலாமா?' என்று கேட்டுக்கொண்டே சோனியாவிடம் ஓடிவந்தார்.

'ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை. என்னைத் தனியாக விட்டுவிடு' என்று சோனியா தேம்பினாள்.

'ஆ, அது என்னவென்று எனக்குத் தெரியும்.'

'நல்லது, உமக்குத் தெரியுமானால் ரொம்ப நல்லது. நீர் அவளிடமே திரும்பிப் போகலாம்.'

'சோன்...னியா, இங்கே பார். எதோ ஒன்றை நினைத்துக் கொண்டு, உன்னையும் என்னையும் இப்படி வதைக்கலாமா?, என்று நிக்கலஸ் கூறி அவள் கையைப் பற்றினார்.

சோனியா தன் கையை இழுத்துக் கொள்ளவில்லை; தேம்பலை நிறுத்தினாள். நட்டாஷா அசையாமல், மூச்சுக்கூட விடாமல் மறைவிடத்திலிருந்து ஜொலிக்கும் கண்களோடு கவனித்துவந்தாள். 'இப்பொழுது என்ன நடக்கும் ?' என்று அவள் நினைத்தாள்.

'சோனியா, இந்த உலகத்தில் யாரைப் பற்றியும் எனக்கென்ன? எனக்கு எல்லாமும் நீதான். அதை நான் நிரூபித்துக் காட்டுவேன்' என்று நிக்கலஸ் கூறினார்.

'அம்மாதிரி நீர் பேசுவது எனக்குப் பிரியமில்லை.'

'அப்படியானால் சரி, நான் பேசவில்லை. என்னை மன்னித்து விடு, போதும், சோனியா' என்று சொல்லி அவளைத் தன் அருகில் இழுத்து முத்தமிட்டார்.

'ஓ, என்ன இனிமை' என்று நட்டாஷா நினைத்தாள். சோனியாவும் நிக்கலஸும் அந்தச் செடிக்கூடத்தைவிட்டு வெளியே போனதும் அவளும் பின்னால் சென்று போரிஸைக் கூவி அழைத்தாள்.

'போரிஸ், இங்கே வாரும்' என்று திருட்டுத்தனமும் முக்கியத்துவமும் நிறைந்த பார்வையோடு அவள் கூப்பிட்டாள். 'உமக்கு ஒரு செய்தி சொல்லவேண்டும். இங்கே, இங்கே' என்று கூறி, அவரைக் கண்ணாடி அறைக்குள் தான் மறைந்திருந்த தொட்டிகளுக்குப் பக்கத்தில் அழைத்துச் சென்றாள்.

போரிஸ் சிரித்துக்கொண்டே பின் தொடர்ந்தார். 'என்ன செய்தி?' என்று கேட்டார்.

அவள் குழம்பினாள். சுற்றிலும் பார்த்தாள். தொட்டிக்குள் வீசப்பட்டிருந்த தனது பொம்மையை எடுத்து, 'இதை முத்தமிடும்' என்று கூறினாள்.

போரிஸ் கவனத்தோடும் அன்போடும் அவளுடைய ஆவல் முகத்தைப் பார்த்தார். ஆனால், பதில் சொல்லவில்லை.

'உமக்கு அப்படிச் செய்ய விருப்பம் இல்லையா? அப்படியானால் இங்கே வாரும்' என்று அவள் கூறி மேலும் செடிகளின் நடுவே சென்று பொம்மையைக் கீழே வீசினாள்.

நெருங்கி வாரும், நெருங்கி வாரும்' என்று குசுகுசுவென்று சொன்னாள்.

அந்த இளம் அதிகாரியின் கைச் சட்டையைப் பற்றினாள். அவளுடைய சிவந்த முகத்தில் பவித்திரமும் பயமும் தோன்றியிருந்தன.

'என்னை ? என்னை முத்தமிட உமக்குப் பிரியமா?' என்று அநேகமாய்க் காதுக்குக் கேட்காத மெல்லிய குரலில் முனங்கி, அவர் முகத்தை ஏறிட்டுப் பார்த்துப் புன்முறுவல் கொண்டு பரபரப்பினால் துடித்துக்கொண்டிருந்தாள்.

போரிஸ் வெட்கங்கொண்டார்.

'நீ எவ்வளவு வேடிக்கையாய் இருக்கிறாய்' என்று அவர் கேட்டு, அவளிடம் குனிந்து, இன்னும் அதிகமாக வெட்கம் கொண்டு பார்த்துக்கொண்டிருந்தார். ஆனால் எதுவும் செய்யவில்லை.

அவருக்கு மேல் உயரமாய் இருப்பதற்காக உடனே அவள் ஒரு தொட்டி மீது தாவினாள். தனது மெல்லிய கைகளால் அவர் கழுத்தை அணைந்து தன் கருங்கூந்தலைப் பின்னால் உதறி அவர் இதழ்களில் பூரணமாய் முத்தமிட்டாள்.

உடனே பூந்தொட்டிகளின் மறுபுறமாக அவள் கீழே இறங்கி, தலையைக் கவிழ்ந்து நின்று கொண்டிருந்தாள்.

'நட்டாஷா, நான் உன்னைக் காதலிக்கிறேன் என்பது உனக்குத் தெரியும். ஆனால்...' என்று ஆரம்பித்தார் அவர்.

'நீர் என்னைக் காதலிக்கிறீரா?' என்று குறுக்கிட்டாள் நட்டாஷா.

'ஆம், நான் காதலிக்கிறேன். ஆனால், தயவுசெய்து இம்மாதிரி நாம் செய்யவேண்டாம்... இன்னும் நான்கு வருடங்களில்... அப்புறம் உன்னை மணம் செய்வேன்' என்று அவர் சொன்னார்.

நட்டாஷா யோசித்தாள்.

'பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து, பதினாறு' என்று தனது மெல்லிய விரல்களால் அவள் எண்ணினாள். 'ரொம்ப சரி, அப்படியானால் அது முடிவடைந்தது தானே?'

மகிழ்ச்சிப் புன்னகையும் சந்தோசமும் அவளின் ஆவல் கொண்ட முகத்தில் ஒளிவிட்டன.

'ஆம், முடிவடைந்த விஷயம்' என்றார் போரிஸ்.

'என்றென்றும்... மரணம் வரையில் அல்லவா?' என்றாள் நட்டாஷா.

அவள் அவர் கையைப் பற்றி சந்தோச முகத்தோடு பக்கத்து அறைக்குள் நுழைந்தாள்.

1

14

வரவேற்புக்குப் பின்னால் கோமகள் மிகவும் களைத்துப் போயிருந்தாள். அதனால் இனி யாரையும் உள்ளே விடவேண்டாம் என்று உத்தரவிட்டு, ஆனால் பாராட்டுவதற்காக வருகிறவர்களை எல்லாம் தவறாமல் விருந்துக்கு அழைக்குமாறு சேவகனிடம் கூறினாள். தனது பால்ய நண்பரான, இளவரசி அன்னா மிக்காய்லாவ்னா பீட்டர்ஸ்பர்க்கிற்குத் திரும்பிய பின்பு அதுவரை அவளிடம் சரியாகப் பேசியதில்லை. அதனால் அவளோடு கொஞ்சம் பேச விரும்பினாள். கவலை தோய்ந்த ஆனால் இனிமை பொருந்திய முகத்தோடு அன்னா மிக்காய்லாவ்னா கோமகள் பக்கம் தன் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டாள். (ருஷ்யர்கள் ஒவ்வொருவர் பெயரோடும் ஒரு மகாத்மாவின் பெயரையும் சேர்த்துக்கொள்ளுவதுண்டு. அந்த மகாத்மாவின் தினம் என்று வருகிறதோ அன்று அவருடைய பெயரிடப்பட்ட எல்லோரும் பிறந்த தினம் மாதிரிக் கொண்டாடுவார்கள்.)

'உன்னிடம் நான் எப்போதுமே ஒளிவு மறைவு இன்றிப் பேசுவேன். என்னுடைய பழைய நண்பர்கள் கூட்டத்தில் இப்போது உயிரோடு இருப்பவர்கள் மிகக் குறைவு. அதனால் உன்னுடைய நட்பை நான் மிகவும் மதிக்கிறேன்' என்று சொன்னாள் அன்னா.

அன்னா மிக்காய்லாவ்னா அங்கிருந்த வெராவைப் பார்த்து விட்டுப் பேச்சை நிறுத்தினாள். கோமகள் தன் நண்பரின் கையை அழுத்தினாள்.

கோமகள் தன் மூத்த குமாரியை நோக்கி - அவள் அவளுக்கு செல்லக் குமாரி அல்ல - 'வெரா, உனக்கேன் இதுகூடத் தெரியவில்லை? போ, மற்ற பெண்களோடு, அல்லது...'

அழகிய வெரா இகழ்ச்சியோடு சிரித்தாள். ஆனால், அவள் ஒன்றும் வருந்தியதாய்த் தெரியவில்லை.

அவள் தன்னுடைய அறைக்குப் போவதற்காக எழுந்து, 'அம்மா, இதை முன்பே சொல்லியிருந்தால், நான் அப்பொழுதே போயிருப்பேனே' என்று பதில் சொன்னாள்.

அவள் உட்காரும் அறை வழியாகப் போனபோது இரண்டு ஜோடிகள், ஒவ்வொன்றும் ஒவ்வொரு ஜன்னலில், உட்கார்ந்திருப்பதைக் கவனித்தாள். அவள் நின்று அவர்களைப் பார்த்து வெறுப்போடு சிரித்தாள். சோனியா நிக்கலஸுடன் நெருங்கி உட்கார்ந்திருந்தாள். நிக்கலஸ் அவளுக்காக முதல்முதலாக அவர் கட்டிய பாட்டுகளை எழுதிக்கொண்டிருந்தார். மற்றொரு ஜன்னலில் உட்கார்ந்திருந்த போரிஸும் நட்டாஷாவும் வெரா அந்த அறையில் நுழைந்தவுடன் தங்கள் பேச்சை நிறுத்திக்கொண்டார்கள். சோனியாவும் நட்டாஷாவும் குற்றமும் சந்தோசமும் கொண்ட முகத்தோடு வெராவைப் பார்த்தார்கள்.

அந்தச் சிறு பெண்கள் காதலில் திளைத்திருந்தது, பார்ப்பதற்கு இனிமையாகவும் மனங்கனிவாகவும் இருந்தன. ஆனால், வெராவுக்கு அந்தக் காட்சி இனிமையான உணர்ச்சியைக் கொடுக்கவில்லை என்பது தெளிவாய்த் தோன்றியது.

'என்னுடைய சாமான்களைத் தொடக்கூடாது என்று எத்தனை தடவை உங்களுக்குச் சொல்வது? உங்களுக்குத்தான் தனி அறை இருக்கிறதே' என்று சொல்லிக்கொண்டு, நிக்கலஸ் பக்கம் இருந்த மைக்கூட்டைக் கையில் எடுத்தாள் வெரா.

'ஒரு நிமிடம், ஒரு நிமிடம்' என்று சொல்லிக்கொண்டு, அவர் தமது பேனாவை மைக்கூட்டில் தோய்த்தார்.

'எப்பொழுதும் காலம் அறியாமல் காரியங்களைச் செய்வதே உங்களுக்கு வழக்கம். வரவேற்பு அறைக்குள் வெகுவேகமாய் ஓடிவந்தீர்கள். அதனால் ஒவ்வொருவரும் உங்களைப்பற்றி வெட்கப்படநேர்ந்தது' என்றாள் வெரா.

அவள் சொல்லியது முற்றிலும் நியாயமாய் இருந்தது - அதனால்தான் ஒருவருமே பதில் சொல்லவில்லை - நான்குபேரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டிருந்தார்கள். கையில் மைக்கூட்டை எடுத்துக்கொண்டு, அவள் அந்த அறையிலேயே தயங்கிக்கொண்டிருந்தாள்.

'ஏன் நட்டாஷா - போரிஸ், அல்லது நீங்கள் இருவரும்தான், இந்த வயதில் உங்களுக்குள் என்ன ரகசியம் இருக்கமுடியும் ? இதெல்லாம் அபத்தம்.'

'வெரா, அதைப்பற்றி உனக்கென்ன?' என்று நட்டாஷா மெதுவாகத் தற்காப்புக்காகப் பதிலளித்தாள்.

அன்று அவள் ஒவ்வொருவரிடமும் எப்பொழுதையும்விட அதிக அன்போடும் அரவணைப்போடும் பேசியதாகக் காணப்பட்டாள்.

'வெறும் அசட்டுத்தனம். உங்களைப் பார்த்து நான் வெட்கம் அடைகிறேன். ரகசியங்களாம் ரகசியங்கள் !' என்று கூறினாள் வெரா.

'எல்லோருக்கும் தங்கள் சொந்த ரகசியங்கள் இருக்கும். நீயும் பெர்க்கும் பேசும்போது நாங்கள் தலையிடுவதில்லை' என்று கொஞ்சம் உஷ்ணத்தோடு பதில் சொன்னாள் நட்டாஷா.

'வேறு எப்படி நீங்கள் நடந்துகொள்ளமுடியும்? ஏனெனில் என் நடத்தையில் எவ்விதமான தவறும் கிடையாது. போரிஸோடு நீ நடந்துகொள்ளும் விதத்தைப் பற்றி அம்மாவிடம் நான் சொல்லப்போகிறேன்' என்று சொன்னாள் வெரா.

'நட்டாலயா இல்லினிஷ்னா என்னிடம் நன்றாய்த்தான் நடந்துகொள்ளுகிறாள். நான் குறை கூறுவதற்கு எதுவுமே இல்லை' என்று குறிப்பிட்டார் போரிஸ்.

நட்டாஷாவின் வருந்திய குரல் மெதுவாகச் சிலிர்த்தது. 'இல்லை, போரிஸ்; நீர் எனக்கு உண்மையிலேயே வருத்தத்தைக் கொடுக்கக்கூடிய மாதிரியுள்ள ஒரு ராஜதந்திரி. (ராஜதந்திரி என்ற வார்த்தை அச்சமயம் குழந்தைகளிடம் வெகு பழக்கமாய் இருந்தது. அவர்கள் என்ன விசேஷ அர்த்தத்தில் பயன்படுத்தி வந்தார்களோ அதே அர்த்தத்தில் நட்டாஷா உபயோகித்தாள்.) அவள் என்னை ஏன் தொந்தரவு செய்யவேண்டும்?' என்று சொன்ன நட்டாஷா வெராவைப் பார்த்து, 'உன்னால் ஒருநாளும் புரிந்து கொள்ளமுடியாது. ஏனெனில், நீ எப்பொழுதும் எவரையும் காதலித்ததே இல்லை. உனக்கு இருதயமே கிடையாது. நீதான் திருமதி ஜென்லிஸ், வேறு யாருமில்லை. (திருமதி. ஜென்லிஸ் என்ற கேலிப்பெயரை நிக்கலஸ் வெராவுக்கு வைத்திருந்தார். அது ரொம்ப விஷத்தனமானது என்று கருதப்பட்டது. மற்றவர்களிடம் அதிருப்தியாய் நடந்துகொள்வதுதான் உனக்கு மிக உயர்ந்த இன்பத்தைக் கொடுப்பது. நீ போய், நீ பிரியப்பட்ட அளவு பெர்க்குடன் சல்லாபம் செய்துகொண்டிரு' என்று வேகமாய்ச் சொல்லி முடித்தாள்.

'எப்படியானாலும் விருந்தாளிகளுக்கு முன்பாக ஒரு வாலிபன் பின்னால் நான் ஒருக்காலும் ஓடமாட்டேன்...'

'அல்லது; உனக்கு என்னவேண்டுமோ அதைச் செய்துவிட்டாய். வெறுப்பான விஷயங்களை ஒவ்வொருவருக்கும் சொல்லி எல்லாரையும் மனம் குலையும்படி செய்துவிட்டாய். நாம் குழந்தைகள் அறைக்குப் போகலாம்' என்றார் நிக்கலஸ்.

பயங்கொண்ட பறவைக் கூட்டத்தைப் போல நால்வரும் எழுந்து அறையைவிட்டுப் போனார்கள்.

'என்னை வெறுப்பாய்ப் பேசினார்கள். நான் ஒருவரையும் அப்படிப் பேசவில்லை' என்று சொன்னாள் வெரா.

'திருமதி ஜென்லிஸ், திருமதி ஜென்லிஸ்' என்று வாசல் வழியாக சிரிப்புக் குரல்களில் கூச்சலிட்டார்கள்.

ஒவ்வொருவருக்கும் அவ்வளவு கோபத்தையும் வெறுப்பையும் உண்டுபண்ணிய அழகிய வெரா இளநகை கொண்டாள். அவளிடம் பேசியதைக் கண்டு அவள் அசைந்ததாகத் தெரியவில்லை. நேராக நிலைக்கண்ணாடிக்குச் சென்று, தனது கழுத்துச் சவுக்கத்தையும் தலைமுடியையும் சரிசெய்துகொண்டாள். அவள் தன் அழகிய முகத்தைப் பார்க்கப் பார்க்க இன்னமும் அதிகமாய் அமைதியுடனும் உற்சாகமின்றியும் வருவதுபோலத் தோன்றியது.

வரவேற்பு அறையில் உரையாடல் இன்னமும் நடந்து கொண்டிருந்தது.

'ஆ, என்து அன்பே, எனது வாழ்க்கையிலும் எல்லாம் ரோஜாப் பூக்கள் அல்ல. நாம் தற்காலம் நடத்திவரும் விதத்தில் வாழ்க்கையை நடத்திக்கொண்டு போனால், நமது சொத்துக்கள் வெகுகாலம் நீடிக்காது என்பது எனக்குத் தெரியாதா? எல்லாம் அந்தக் கிளப்பும், அவருடைய சுகபோக சுபாவமும் தான் காரணம். கிராமத்திற்குப் போனாலும் நமக்கு ஓய்வு கிடைக்கிறதா? நாடகங்கள், வேட்டைகள், அடக் கடவுளே! இன்னும் என்னென்னவோ! ஆனால் என்னைப் பற்றிப் பேசவேண்டாம். நீ எப்படி எல்லாவற்றையும் சமாளிக்கிறாய் என்பதைச் சொல்லு. அன்னெட்டி, உன்னுடைய இந்த வயசில் மாஸ்கோவிற்கோ, பீட்டர்ஸ்பர்க்குக்கோ, அந்த மந்திரிகளிடமோ, பெரிய மனிதர்களிடமோ தனியாக வண்டியில் ஓடுவதையும், அவர்களிடம் எப்படி நடந்துகொள்ளுவது என்பதைத் தெரிந்திருப்பதையும் கண்டு, நான் அடிக்கடி

ஆச்சரியப்படுகிறேன். அது மிகவும் பிரமிக்கத்தக்கது. காரியங்களை நீ எப்படிச் செய்து முடிக்கிறாய். என்னால் அம்மாதிரி செய்வது சாத்தியப்படாது' என்று சொன்னாள் கோமகள்.

'ஆ, என் அன்பே!, என்றாள் அன்னா மிக்காய்லாவ்னா. 'வாஞ்சை கொண்ட ஒரு மகனோடு, எந்த வழியும் இல்லாமல் ஒரு விதவை விடப்படுவாளானால், அது எப்படி இருக்கும்? அதை நீ அறியும்படி கடவுள் ஒருக்காலும் உன்னை வைக்காதிருக்கட்டும். அந்த நிலைமை ஏற்படும்போது, பல காரியங்களை ஒருவர் தெரிந்து கொள்ளுகிறார்' என்று பெருமையோடு சொன்னாள் அன்னா. 'அந்த வழக்கினால் நான் அதிகம் கற்றுக்கொண்டேன். யாராவது பெரிய மனிதர்களைப் பார்க்க விரும்பும்போது 'இன்ன இளவரசி இன்னாரைப் பேட்டி காண விரும்புகிறார்' என்று ஒரு குறிப்பு எழுதிக் கொள்ளுவேன். ஒரு வண்டியில் ஏறி நான் விரும்பியது கிடைக்கிறவரையில் இரண்டு தடவையோ, மூன்று தடவையோ அல்லது நாலு தடவையோ நானே போவேன். அவர்கள் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்பதைக் குறித்து நான் கவலை கொள்வதில்லை' என்று சொன்னாள் அன்னா.

'சரி, போரிக்காக யாரிடம் நீ கேட்டுக்கொண்டாய்?' என்று கேட்டாள் கோமகள். 'காப்பாளர் படையில் அதற்குள் அவன் அதிகாரியாய் விட்டான். என்னுடைய நிக்கலஸோ, தொண்டனாய்த் தான் போய்ச் சேருகிறான். அவனுக்காக சிரத்தை கொள்ளுகிறவர் யாரும் இல்லை. நீ யாரிடம் கேட்டுக் கொண்டாய்?' (நல்ல குடும்பங்களிலிருந்து ராணுவத்திற்குச் சேர்க்கப்படுகிறவர்களை முதலில் தொண்டர்களாகச் சேர்ப்பது வழக்கம். அதிகாரிகளாக அவர்கள் நியமனம் ஆகிறவரையில் அவர்களுடைய அந்தஸ்து அதிகாரிகளின் அந்தஸ்தாக இருக்குமேயொழிய சிப்பாய்களின் அந்தஸ்தாக இருக்காது.)

'இளவரசர் வாசைலியைக் கேட்டேன். அவர் மிகுந்த பிரியமாய் இருந்தார் அவர் உடனே ஒவ்வொன்றையும் ஒப்புக்கொண்டு சக்கரவர்த்தியிடம் சமர்ப்பித்தார்' என்று தன்னுடைய காரியத்தில் வெற்றி பெறுவதற்காகத் தான் அடைந்த அவமானங்களை எல்லாம் அடியோடு மறந்து, உற்சாகமாய் இளவரசி அன்னா மிக்காய்லாவ்னா கூறினாள்.

'இளவரசர் வாசைலி அதிக வயதானவராய் விட்டாரா? நாங்கள் இருவரும் ரும்யாண்ட்சாவ் நாடகங்களில் சேர்ந்து நடித்ததற்குப்

பின்னால், அவரை நான் பார்க்கவில்லை. என்னை அவர் மறந்திருப்பார் என்று நினைக்கிறேன். அக்காலத்தில் என்னை வளைந்து வந்துகொண்டிருந்தார்' என்று புன்முறுவலோடு கூறி முடித்தாள் கோமகள்.

'அவர் எப்பொழுதும் ஒரே மாதிரித்தான் இனிய சுபாவம் பொங்குவதாய் இருக்கிறார். அவருடைய பதவி அவர் தலையைத் திருப்பிவிடவில்லை. 'அருமை ராஜகுமாரியே, இந்த சொற்பமான உதவியைத்தான் என்னால் செய்யமுடிவதற்காக நான் வருந்துகிறேன். உனது உத்தரவுக்குக் காத்திருக்கிறேன்' என்று அவர் என்னிடம் சொன்னார். ஆம், அவர் சிறந்த மனிதர். ஒரு மிகப் பிரியமான பந்து. ஆனால், நட்டாலி, என்னுடைய மகன் மீது எனக்குள்ள வாஞ்சையை நீ அறிவாய். அவனுடைய சந்தோசத்திற்காக நான் எதையும் செய்வேன். என்னுடைய காரியங்கள் எல்லாம் மோசமானபடி இருக்கிறபடியால், என்னுடைய நிலைமை பயங்கரமாய் இருக்கிறது' என்று துயரத்தோடு சொல்லிவிட்டு குரலைத்தாழ்த்தினாள் அன்னா. 'பாழாய்ப் போகிற என்னுடைய கோர்ட் வழக்கு என்னிடம் உள்ளதையெல்லாம் விழுங்குகிறது. ஆனால் முன்னேற்றம் எதுவுமில்லை. என்னிடம் உண்மையிலேயே ஒரு காசுகூட இல்லை என்பதை நீ நம்புவாயா? போரிஸுக்கு வேண்டிய உபகரணங்களை எப்படிச் சேகரிப்பது என்பது தெரியவில்லை' என்று கூறித் தன் கைக்குட்டையை எடுத்துக்கொண்டு கதற ஆரம்பித்தாள். 'எனக்கு ஐநூறு ரூபிள்கள் வேண்டும். ஆனால் என்னிடம் ஒரே இருபத்தைந்து ரூபிள் நோட்டு ஒன்றுதான் இருக்கிறது. அப்பேர்ப்பட்ட நிலையில் நான் இருக்கிறேன். கோமகன் பெஜுகாவிடம்தான் எனது ஒரே நம்பிக்கை இருக்கிறது. அவர்தான் போரிஸுக்கு ஞானப்பிதா. அவருடைய ஞானப் புத்திரனுக்கு அவர் உதவி செய்யாவிட்டால், அவனுடைய வாழ்க்கைச் செலவுக்கு அவர் கொஞ்சம் கொடுக்காவிட்டால், இதுவரை நான் பட்ட துன்பங்கள் எல்லாம் வீணாய்ப் போய்விடும்... அவனுக்கு வேண்டிய உபகரணங்களை என்னால் வாங்கமுடியாமல் போய்விடும்.'

கோமகளின் கண்கள் கண்ணீரால் நிறைந்தன. மௌனமாய்ச் சிந்தித்தாள்.

'கோமகன் பெஜுகாவ் பெரிய பணக்காரர். தனியாய் இருக்கிறார்... ஏராளமான செல்வம்... அவர் உயிர் வாழ்ந்து என்ன

பிரயோசனம்? அவருக்கு அது ஒரு சுமையாய் இருக்கிறது. ஆனால், போரிஸின் வாழ்வோ இப்பொழுதுதான் ஆரம்பமாகிறது... பாபமானதுதான், என்றாலும் இம்மாதிரி நான் அடிக்கடி நினைக்கிறேன்' என்றாள் இளவரசி.

'நிச்சயமாகப் போரிஸுக்கு ஏதாவது அவர் கொடுப்பார்' என்றாள் கோமகள்.

'கடவுளுக்குத்தான் தெரியும், என் அன்பே, இந்தப் பெரிய பணக்காரர்கள், ரொம்ப சுயநலமுள்ளவர்கள். இருந்தாலும் நான் போரிஸை அழைத்துக்கொண்டு அவரைப் பார்ப்பதற்கு உடனே போவேன். வெளிப்படையாக அவரிடம் பேசுவேன். என்னைப் பற்றி மக்கள் என்ன வேண்டுமோ நினைத்துக் கொள்ளட்டும். எனது குமாரனின் விதி தொங்கிக் கொண்டிருக்கும்போது அவர்கள் எதை நினைத்தாலும் எனக்கு அது ஒன்றுதான்' என்று கூறி இளவரசி எழுந்தாள். 'இப்பொழுது இரண்டு மணி ஆகிறது. நீ நாலு மணிக்குத்தான் டின்னர் சாப்பிடுவாய்; அதற்குள் போய்வருவதற்கு நேரமிருக்கிறது.'

நேரத்தை வீணாக்காத காரியக்காரிகளான பீட்டர்ஸ்பர்க் சீமாட்டிகளைப் போல, அன்னா மிக்காய்லாவ்னா தன் மகனை ஒரு ஆளைவிட்டு அழைத்துவந்து, அவனோடு முன் அறைக்குப் போனாள். போகும்போது 'போய் வருகிறேன், எனது அன்பே' என்று தன்னை வழியனுப்ப வாசலில் நின்றிருந்த கோமகளைப் பார்த்துச் சொல்லிவிட்டுத், தன் மகன் காதுக்குக் கேட்காமல் இருப்பதற்காக மெதுவாக 'எனக்கு ஆசி கூறு' என்று முனங்கினாள்.

விருந்து மண்டபத்திலிருந்து முன் அறைக்கு வந்து கொண்டிருந்த கோமகன், 'கோமகன் பெஜுகாவிடம் போகிறாயா என் அன்பே?' என்று கேட்டு, மேலும் சொன்னார்:- 'அவர் சௌக்கியமாய் இருந்தால் நம்முடன் விருந்துண்ண பீயரை அழைத்து வா. இந்த வீட்டிற்கு அவர் முன்னால் வந்திருக்கிறார். குழந்தைகளுடன் நடனமாடியிருக்கிறார். என் அன்பே, கட்டாயம் அழைத்துவா. இன்று டாராஸ் எப்படி சிறப்பாய் நடந்துகொள்ளுகிறான் என்பதை நாம் பார்ப்போம். நமது டின்னரைப் போல, கோமகன் ஆர்லோ எப்பொழுதும் கொடுத்ததில்லை என்று அவன் சொல்லுகிறான்.'

1

15

வைக்கோல் விரிக்கப்பட்ட தெருவழியாகக் கோமகள் ராஸ்டோவாவின் வண்டியில், கோமகன் பெஜுகாவின் வீட்டிற்கு இளவரசி அன்னாவும் அவள் மகனும் ஏறி அமர்ந்து போய்க் கொண்டிருந்தார்கள். தெருவிலிருந்து கோமகன் மாளிகையின் அகன்ற முற்றத்திற்குள் வண்டி திரும்பியது. அச்சமயம், வண்டியில் தன் பழைய போர்வைக்குள்ளிருந்து கையை எடுத்துத், தன் மகன் கை மீது தயக்கத்தோடும் மெதுவாகவும் வைத்துப் பேசினாள்:- 'எனது அன்புள்ள போரிஸ், அவரிடம் பிரியத்தோடு இரு. அவர் சொல்வதைக் கவனமாய்க் கேள். கோமகன் சிரில் உன்னுடைய ஞானப்பிதா. உன்னுடைய எதிர்காலம் அவரைச் சார்ந்திருக்கிறது; ஞாபகத்தில் வைத்துக்கொள். எனது அன்பே, அவரிடம் இனிமையாய் இரு. எப்படி நடக்கவேண்டும் என்பது உனக்கு நன்றாய்த் தெரியும்.'

மகன் உற்சாகமில்லாமல் கூறியதாவது:- 'அவமானத்தைத் தவிர வேறு எதுவும் ஏற்படக்கூடுமென்று எனக்குத் தெரியுமானால்... ஆனால் உனக்கு நான் உறுதி கொடுத்துவிட்டேன். உனக்காக நீ கேட்கிறபடி செய்வேன்.'

வாசலில் யாரோ ஒருவருடைய வண்டி நிற்பதை ஹால் சேவகன் பார்த்தான். தாயாரையும் மகனையும், குறிப்பாக அந்த சீமாட்டி அணிந்திருந்த பழைய மேலங்கியையும், அவன் பார்த்துவிட்டு, 'யாரைப் பார்க்க வேண்டும்? கோமகனையா? இளவரசிகளையா?, என்று கேட்டான். அதற்குள்ளாகக் கண்ணாடி போட்ட முற்றத்தின் வழியாகத், தங்களுடைய பெயர்களைச் சொல்லாமல் இருபுறங்களிலும் மாடக் குழிகளில் வைக்கப்பட்டிருந்த சிலைகளுக்கு இடையே, அவர்கள் போனார்கள். கோமகனைப் பார்க்க வேண்டும் என்று அவர்கள் சொல்லக்கேட்டு, மேன்மை தங்கிய அவரின் உடல்நிலை இன்று மோசமாய் இருப்பதாகவும், அவர் ஒருவரையும் பார்க்க முடியாதென்றும் சேவகன் சொன்னான்.

'நாம் திரும்பிப் போகலாமே?' என்று மகன் பிரஞ்சு மொழியில் சொன்னான்.

'எனது அன்பே' என்று கொஞ்சலோடு மொழிந்த தாயார், அவன் கைமீது தன் கரத்தை வைத்தாள். அந்த ஸ்பரிசத்தால் அவனைச்

சமாதானப்படுத்தவோ அல்லது உற்சாகப்படுத்தவோ முடியும் என்பதைப் போல் தோன்றியது.

அதற்குமேல் போரிஸ் பேசவில்லை. ஆனால் தன் மேலங்கியைக் கழற்றாமல் கேள்விக் குறியோடு தாயாரை நோக்கினான்.

அன்னா மிக்காய்லாவ்னா அமைதியான மொழிகளில் ஹால் சேவகனைப் பார்த்து மொழிந்தாள் :- 'எனது நண்பரே, கோமகன் சிரில் விளாடிமிராவிச் மிகவும் அசௌக்கியமாய் இருக்கிறார் என்பது எனக்குத் தெரியும்... அதனால்தான் நான் வந்திருக்கிறேன். நான் ஒரு உறவினள். எனது நண்பரே, அவருக்குத் தொந்தரவு கொடுக்கமாட்டேன். இளவரசர் வாசைலி செர்கேவிச்சையே நான் பார்க்கவிரும்புகிறேன். அவர் இங்கே தங்கியிருக்கிறார், இல்லையா? தயவுசெய்து நான் வந்திருப்பதைச் சொல்லுங்கள்.'

ஹால் சேவகன் வேண்டா வெறுப்பாக ஒரு மணிக்கயிற்றை இழுத்தான். மாடியில் எங்கோ ஓரிடத்தில் மணி அடித்ததும் அவன் திரும்பினான்.

மாடிப் படிக்கட்டு வழியாகக் கால்சட்டையும் நீளக்கோட்டும் ஜோடும் அணிந்திருந்த ஒரு சேவகன் பாதிப் படிக்கட்டுகளில் வந்து நின்று கீழே பார்த்தான். அவனைப் பார்த்துக் கீழே நின்ற சேவகன், 'இளவரசர் வாசைலி செர்கேவிச்சைப் பார்ப்பதற்காக இளவரசி ட்ருபெட்ஸ்கயா வந்திருக்கிறார்' என்று சொன்னான்.

தன்னுடைய சாயம் போட்ட பட்டு உடையின் மடிப்புகளைச் சுவரில் தொங்கிய ஒரு பெரிய வெனிசியன் கண்ணாடியின் முன்பு நின்று தடவிவிட்டுக்கொண்டு, நடந்து அமுங்கிப்போன ஜோடுகளோடு ஜமுக்காளம் விரிக்கப்பட்டிருந்த படிக்கட்டுகளில் வேகமாகத் தாயார் ஏறினாள்.

மறுபடியும் மகனை உற்சாகப் படுத்துவதற்காக அவனைத் தொட்டு, 'என் அன்பே, நீ எனக்கு வாக்குறுதி கொடுத்திருக்கிறாய்' என்று சொன்னாள்.

கீழ் நோக்கிப் பார்த்துக்கொண்டு அமைதியாக மகன் அவளைப் பின்தொடர்ந்தான்.

அவர்கள் ஒரு பெரிய ஹாலுக்கு வந்து சேர்ந்தார்கள். இளவரசர் வாசைலி தங்கும் ஜாகைகளுக்கு அங்கேதான் வாசல் இருந்தது.

தாயும் மகனும் ஹாலின் மத்தியில் வந்து சேர்ந்ததும், அங்கிருந்த ஒரு வயதான சேவகன் துள்ளி எழுந்தான். அவனைப் பார்த்து

'எப்பக்கம் போகவேண்டும்?' என்று அவர்கள் கேட்க நினைத்த சமயத்தில், ஒரு கதவில் இருந்த வெண்கலக் கைப்பிடி திரும்பியது. இளவரசர் வாசைலி வெளியே வந்தார். அவர் வீட்டிலிருக்கும்போது அணிந்துகொள்ளும் வழக்கப்படி, ஒரு வெல்வெட் கோட் அணிந்திருந்தார். அவருடைய மார்பில் ஒரு ஒற்றை நட்சத்திரப் பதக்கம் தொங்கிக் கொண்டிருந்தது. அவருடன் வெளிவந்த, கருங்கூந்தலும் அழகிய பார்வையும் கொண்ட ஒருவரை வெளி அனுப்பிக்கொண்டிருந்தார். இவர்தான் பீட்டர்ஸ்பர்க்கில் பிரபலமான டாக்டர் லொரேய்ன்.

'அப்படியானால் அது நிச்சயம்தான்?' என்று இளவரசர் சொன்னார்.

'இளவரசே, தவறு செய்வது மனித சுபாவம். ஆனால்,...' என்று அந்த டாக்டர் லத்தீன் மொழியில் பிரஞ்சு உச்சரிப்பில் பதிலளித்தார்.

'ரொம்ப சரி, ரொம்ப சரி...'

அன்னா மிக்காய்லாவ்னாவையும் அவள் மகனையும் பார்த்த இளவரசர் வாசைலி, டாக்டருக்கு சிரம் தாழ்த்தி வழியனுப்பிவிட்டுக், கேள்விக்குறியோடு மெதுவாக அவர்களிடம் அணுகினார். தன் தாயின் முகத்தில் திடீரென்று பரந்த மிகுதியான சோகத்தைக் கண்டு மகன் இலேசாகக் குறுநகை கொண்டான்.

'ஆ, இளவரசே ! என்ன துக்கமான சந்தர்ப்பங்களில் நாம் மறுபடியும் சந்திக்கிறோம்! நமது அன்பான நோயாளி எப்படி இருக்கிறார்?' என்று தன் மீது திரும்பிய அலட்சியக் கோபப் பார்வையை அவள் அறியாதவள்போலப் பேசினாள்.

இளவரசர் வாசைலி அவளையும் போரிஸையும் கேள்விக்குறியோடு விழித்துப் பார்த்து மனம் குழம்பினார். அவருக்கு ஒன்றும் புரியவில்லை. மரியாதையாகப் போரிஸ் சிரம் தாழ்த்தினான். அதைக் கவனிக்காமல் அன்னா மிக்காய்லாவ்னா பக்கம் இளவரசர் திரும்பி அவள் கேட்ட கேள்விக்குத் தலையசைப்பாலும் உதடுகளாலும் நோயாளியின் நிலைமை ரொம்ப மோசமாய் இருப்பதைக் காட்டினார்.

'அப்படியும் நேருமா?' என்று அன்னா மிக்காய்லாவ்னா கூவினாள். 'ஓ, என்ன பயங்கரம். அதை நினைக்கவே பயங்கரமாய் இருக்கிறது... இவன்தான் என்னுடைய மகன்' என்று போரிஸைச்

சுட்டிக்காட்டிவிட்டு, 'அவன், தானே உமக்கு நன்றி தெரிவிக்க விரும்புகிறான்' என்றாள். போரிஸ் மீண்டும் மரியாதையோடு தலைவணங்கினான்.

'இளவரசே, நீர் எங்களுக்குச் செய்ததை ஒரு தாயுள்ளம் ஒருக்காலும் மறக்காது. என்னை நம்பும்.'

'எனது அருமை அன்னா மிக்காய்லாவ்னா, உனக்கு ஒரு சேவை செய்ய முடிந்ததைப் பற்றி நான் சந்தோசப்படுகிறேன்' என்று இளவரசர் வாசைலி உடையின் விளிம்புகளை இழுத்துவிட்டுக் கொண்டு பேசினார். பீட்டர்ஸ்பர்க்கில் அன்னாஷெரெரின் வரவேற்பு வைபவத்தில் அவர் தோன்றியதைவிட இப்பொழுது மாஸ்கோவில் தம்மிடம் ஒரு காரியத்திற்காகக் கடமைப் பட்டிருக்கும் அன்னா மிக்காய்லாவ்னாவிடம் அவர் பேசிய தொனியும் நடத்தையும் மிகப் பெரிய எடுப்பாய் இருந்தது.

போரிஸைப் பார்த்துக் கடுமையோடு, 'நன்றாய்ச் சேவை செய்ய முயற்சி செய். நீ தகுதியுள்ளவன் என்பதைக் காட்டிக்கொள். நான் சந்தோசப்படுகிறேன்... நீ விடுமுறையில் இங்கே வந்திருக்கிறாயா?' என்று அவருடைய வழக்கமான பராமுகத் தொனியில் பேசினார்.

'எனது ராணுவத்தில் சேருவதற்கு உத்தரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன், மேன்மை தங்கியவரே' என்று போரிஸ் பதலளித்தார். இளவரசரின் மொட்டையான நடத்தையைக் கண்டு தமது வருத்தத்தை அவர் வெளிக்காட்டவுமில்லை, அல்லது அவருடன் உரையாடலில் இறங்கும் விருப்பத்தைக் காட்டவு மில்லை. மிகுந்த மரியாதையாகவும் அமைதியாகவும் அவர் பேசினார். அதனால் இளவரசர் அவரைக் கவனத்தோடு உற்றுப் பார்த்தார்.

'உன்னுடைய தாயாரோடு தங்கி வருகிறாயா?'

'கோமகள் ராஸ்டோவ் வீட்டில் தங்குகிறேன், மேன்மை தங்கியவரே' என்று போரிஸ் பதிலளித்தார்.

'அதுதான் இலியா ராஸ்டோவ். நட்டாலி ஷின்ஷினாவைக் கல்யாணம் செய்திருக்கிறவள்' என்று அன்னா மிக்காய்லாவ்னா சொன்னாள்.

'எனக்குத் தெரியும், எனக்குத் தெரியும்' என்று அவருடைய சுவையற்ற தொனியில் இளவரசர் வாசைலி கூறினார். 'எப்படி

நட்டாலி அந்த அசுத்தமான கரடியை மணஞ்செய்ய மனம் கொண்டாள் என்பது எனக்குப் புரியவில்லை. அசல் அசடு. முட்டாள் மனிதன். சூதாடியும் கூட என்று நான் கேள்விப் படுகிறேன்.

கோமகன் ராஸ்டோவ் இந்தக் கண்டனத்திற்குப் பொருத்தமானவர் என்பதை அவள் அறிந்திருந்தபோதிலும், அந்தப் பாவம் வயதான மனிதனிடம் மிகுந்த கடுமை காட்டவேண்டாம் என்று சொல்லுவதைப்போல, ஒரு பரிதாபமான குறுநகையோடு அன்னா மிக்காய்லாவ்னா, 'ஆனால் அவர் ஒரு அன்பான மனிதர், இளவரசே' என்று சொன்னாள். சிறிதுநேரம் கழித்து, தனது கவலை தோய்ந்த முகத்தில் மறுபடியும் ஆழ்ந்த துக்கத்தைக் காட்டிக்கொண்டு, 'டாக்டர்கள் சொல்லுகிறார்கள்?' என்று கேட்டாள்.

'அவர்கள் நம்பிக்கை கொடுக்கவில்லை' என்று இளவரசர் பதில் சொன்னார்.

'என்னிடமோ போரிஸிடமோ காட்டிய அன்பிற்கு நான் மாமாவிடம் நன்றி செலுத்த விரும்புகிறேன். அவன்தான் அவருக்கு ஞானமகன்.' இந்தத் தகவல் வாசைலிக்கு மிகுந்த திருப்தியைக் கொடுக்கும் என்று குறிப்பிடுவதைப் போன்ற தொனியில், அவள் பேசினாள்.

இளவரசர் வாசைலி சிந்தனையில் ஆழ்ந்தார். முகத்தைச் சுளித்தார். கோமகன் பெஜுகாவின் செல்வத்திற்கு, இவளும் போட்டிபோட வந்துவிட்டாளோ என்று அவர் பயப்படுவதைப் போல அன்னா மிக்காய்லாவ்னா கண்டபடியால் அவருக்குத் தைரியமூட்ட விரைந்தாள்.

'என்னுடைய மாமா மீது எனக்குள்ள உண்மையான பற்றுதலுக்காகவும் பக்திக்காகவும் இல்லாவிட்டால்' என்று அவள் கூறியபோது 'மாமா' என்ற வார்த்தையைத் தனிப்பட்ட உறுதியுடனும் அசிரத்தையுடனும் அவள் பயன்படுத்தினாள். 'அவருடைய குணம் எனக்குத் தெரியும். மேன்மையானவர், நேர்மையானவர்... ஆனால், இந்தச் சிறிய இளவரசிகளைத் தவிர அவரோடு வேறு யாருமில்லை... இளவரசிகளோ மிகவும் சிறுமிகள்...' தன்னுடைய தலையைக் குனிந்து குசுகுசுத் தொனியில், 'தம்முடைய இறுதிச் சடங்கை முடித்துவிட்டாரா? இளவரசே? அந்தக் கடைசி விநாடிகள் எவ்வளவு விலைமதிக்க

முடியாதவை. அந்தச் சடங்கைச் செய்வதால் கெடுதல் எதுவுமில்லை. ஆனால் அவருடைய நிலைமை அவ்வளவு அபாயமாய் இருக்குமானால் அவரைத் தயாராக்கி வைப்பது மிகுந்த அவசியமாகும். இளவரசே, பெண்களாகிய எங்களுக்கு இவற்றை எப்படிச் சொல்ல வேண்டும் என்பது தெரியும்' என்று கனிவோடு புன்னகை புரிந்தார். 'நான் அவசியம் அவரைப் பார்க்கவேண்டும். அது எனக்குக் கஷ்டமானதாய் இருந்தாலும் சரி; கஷ்டங்கள் எனக்குப் பழக்கமானவைதான்.'

இளவரசர் அவளை அறிந்துகொண்டார். அன்னா பாவ்லாவ்னா வீட்டில் அவர் புரிந்துகொண்டதைப்போல, அன்னா மிக்காய்லாவ்னாவிடம் இருந்து தப்புவதும் கஷ்டமானது என்பதையும் அறிந்து கொண்டார்.

'அவரைச் சந்திப்பதால் அவருக்கு ரொம்ப கஷ்டமாய் இருக்காதா? இன்று மாலை வரை பொறுப்போம். ஒரு நெருக்கடி ஏற்படும் என்று டாக்டர்கள் எதிர்பார்க்கிறார்கள்' என்றார் இளவரசர்.

'ஆனால், இந்த மாதிரி சந்தர்ப்பத்தில் தாமதிக்கக் கூடாது, இளவரசே. அவருடைய ஆத்மாவின் நன்மை தொங்கிக் கொண்டிருக்கிறது என்பதை யோசித்துப் பாரும். ஆ, பயங்கரமானது! ஒரு கிறித்தவரின் கடமைகள்...'

உள்ளிருந்த ஒரு அறைக்கதவு திறந்து ஒரு இளவரசி, கோமகனின் மருமகள், கடுமையான முகத்தோடு உள்ளே வந்தாள். அவளுடைய நீண்ட உடம்பு, அவளுடைய குட்டைக் கால்களுக்குக் கொஞ்சம் கூடப் பொருத்தமில்லாமல் தெளிவாய்க் காட்டியது. இளவரசர் வாசைலி அவளிடம் திரும்பினார்.

'நல்லது, எப்படி இருக்கிறார்?'

'இன்னமும் அதே மாதிரிதான். ஆனால் நீர் என்ன எதிர்பார்க்க முடியும்? இந்த சத்தங்கள்...' என்று அன்னா மிக்காய்லாவ்னாவை ஒரு அந்நியரைப் பார்ப்பதைப் போலப் பார்த்துக்கொண்டு இளவரசி பேசினாள்.

'ஆ, என் அன்பே, உன்னை அடையாளமே தெரியவில்லையே!' என்று ஒரு இனிய இளநகையுடன் கோமகனின் மருமகளிடம் முன்னால் சாய்ந்து அன்னா மிக்காய்லாவ்னா சொன்னாள். 'என்னுடைய மாமாவுக்குச் சிசுருஷை செய்வதில் உனக்கு உதவியாய் இருந்து, நீ சொல்லுகிறபடி கேட்பதற்காகவே நான்

வந்திருக்கிறேன். நீங்கள் என்ன கஷ்டம் அடைந்திருப்பீர்கள் என்பது எனக்குத் தெரிகிறது' என்று பரிவோடு தன் கண்களை உயர்த்தினாள்.

இளவரசி பதில் சொல்லவில்லை. இளநகை கூடக் காட்டவில்லை. ஆனால் உடனே அறையை விட்டுப் போய்விட்டாள். அன்னா மிக்காய்லாவ்னா தன் கை உறைகளை எடுத்துவிட்டுத், தான் வெற்றி பெற்ற நிலையில் சாய்வு நாற்காலியில் நன்றாய் அமர்ந்துகொண்டு, தன் பக்கத்தில் உட்காருமாறு இளவரசர் வாசைலியை அழைத்தாள்.

தன் மகனைப் பார்த்துப் புன்முறுவலோடு, 'போரிஸ், எனது மாமா கோமகனைப் பார்க்கப் போகிறேன். ஆனால் எனது அன்பே, நீ போய் இதற்கிடையில் பீயரைப் பார்ப்பது நல்லது. ராஸ்டோவின் அழைப்பைக் கொடுப்பதற்கு மறந்துவிடாதே. அவரை விருந்துக்கு அவர்கள் அழைக்கிறார்கள்' என்று சொல்லிவிட்டு, 'இவர் போகமாட்டார் என்று நான் நினைக்கிறேன்' என்று இளவரசரைப் பார்த்துக் கூறினாள். இளவரசர் சோர்ந்து போயிருந்தது தெளிவாய்த் தெரிந்தது. அவர் சொன்னார்:- 'அப்படி அல்ல, அந்த வாலிபரிடமிருந்து என்னை விடுவித்துவிட்டால் நான் மிகுந்த சந்தோசம் அடைவேன்... இங்கே அவர் இருக்கிறார். ஆனால் கோமகன் ஒரு தடவைகூட அவரைப் பற்றி விசாரிக்கவில்லை.'

அவர் தமது தோள்களைக் குலுக்கிக்கொண்டார். ஒரு சேவகன் போரிஸை, ஒரு படிக்கட்டுகள் வழியாக இறங்கி, இன்னொரு படிக்கட்டுகள் வழியாக ஏறி, பீயரின் அறைகளில் கொண்டுவிட்டான்.

## 1 16

பீட்டர்ஸ்பர்க்கில் இருந்தபோது பீயர் தமக்கு ஒரு பிரவர்த்தியைத் தேடிக்கொள்ளவில்லை. அவருடைய கலகத்தனமான நடத்தைக்காக அங்கிருந்து வெளியேற்றி அவரை மாஸ்கோவுக்கு அனுப்பிவிட்டார்கள். அவரைப் பற்றி கோமகன் ராஸ்டோவ் வீட்டில் சொல்லிய கதை உண்மையானது. ஒரு கரடியோடு ஒரு போலீஸ்காரனைக் கட்டிப் போட்டதில் பீயரும் கலந்திருந்தார். சில தினங்களாக இப்பொழுது மாஸ்கோவில் வழக்கம்போல அவருடைய தகப்பனார் வீட்டில்

இருக்கிறார். அவருடைய வெகுளித்தனமான நடத்தை அதற்குள்ளாக மாஸ்கோவில் தெரிந்திருக்கும் என்பதை அவர் எதிர்பார்த்தாலும், அவருடைய தகப்பனாரைச் சுற்றியுள்ள சீமாட்டிகள் - அவர்கள் எப்பொழுதுமே பீயரிடம் பிரியமாய் இருந்ததில்லை - அந்தச் சம்பவத்தைப் பயன்படுத்தி, கோமகனை அவருக்கு விரோதமாகத் திருப்பி இருக்கக் கூடும் என்பதை எதிர்பார்த்திருந்தாலும், அவர் விஜயம் செய்த அதே தினத்தில் அவருடைய தகப்பனார் தங்கியிருந்த பகுதிக்குப் போனார். இளவரசிகள் மிகுதியாக நேரம் போக்கும் வரவேற்பு அறையில் நுழைந்ததும், அங்கிருந்த சீமாட்டிகளுக்கு முகமன் கூறினார். இருவர் பின்னல் வேலை செய்து கொண்டிருந்தார்கள். மூன்றாமவள் உரக்க வாசித்துக் கொண்டிருந்தாள். மூத்தவள் தான் வாசித்துக் கொண்டிருந்தவள். அவள்தான் அன்னாமிக்காய்லாவ்னாவைச் சந்தித்தவள். இளையவர்கள் இருவரும் பின்னல் வேலையைச் செய்துகொண்டிருந்தார்கள். இருவரும் ரோஜாப்பூ வண்ணம் கொண்டு அழகாய் இருந்தார்கள். ஒரு விதத்தில்தான் அவர்களுக்குள் வித்தியாசம் இருந்தது. அதாவது ஒருத்தியின் உதட்டின்மேல் ஒரு சிறு மச்சம் இருந்தது. அது அவளுடைய அழகை அதிகரித்தது. பீயரை ஒரு பிணத்தையோ அல்லது குஷ்டரோகக்காரனையோ வரவேற்பதைப் போல வரவேற்றார்கள். மூத்த இளவரசி தான் படிப்பதை நிறுத்தி பீதியுள்ள கண்களோடு மௌனமாக அவரை வெறித்துப் பார்த்தாள். இரண்டாமவள் அதேவித முகபாவமே கொண்டாள். ஆனால் எல்லாருக்கும் இளையவளான, மச்சம் அமைந்தவள், சந்தோசமும் துடிப்புமுள்ள சுபாவம் உள்ளவளாய் இருந்தாள். வரப்போகும் வேடிக்கையான காட்சியை நினைத்து அவள் கொண்ட புன்னகையை மறைப்பதற்காகத் தன் பின்னல் சட்டத்தைப் பார்த்துக் குனிந்துகொண்டாள். சிரிப்பதைத் தடுக்க முடியாதபடி கையிலுள்ள கம்பளி நூலைப் பின்னலில் கீழே இழுத்து, பின்னல் வேலையைச் சரிபார்ப்பதைப் போலக் குனிந்தாள்.

‘சௌக்கியமாக இருக்கிறாயா, மைத்துனியே? என்னை உனக்கு அடையாளம் தெரியவில்லை?’ என்று கேட்டார் பீயர்.

‘ரொம்ப நன்றாக, ரொம்ப நன்றாக உம்மை எனக்கு அடையாளம் தெரிகிறது.’

‘கோமகனின் உடலும் உள்ளமும் சௌக்கியமாய் இல்லை. அவருடைய உள்ளக் கஷ்டத்தை அதிகரிப்பதற்கு உம்மால் கூடியவரை செய்துவிட்டீர் என்று தோன்றுகிறது.’

'நான் கோமகனைப் பார்க்கலாமா? என்று பீயர் மறுபடியும் கேட்டார்.

'ஹிம்... அவரைக் கொல்லுவதற்கு உமக்கு விருப்பம் இருந்தால், உடனே கொல்லவேண்டுமானால் நீர் அவரைப் பார்க்கலாம்... ஆல்கா, மாமாவுக்குத் தேயிலை தயாராய் இருக்கிறதா என்று போய்ப்பார் - அநேகமாய்ச் சாப்பிடுகிற நேரமாகிவிட்டது' என்று சொல்லி அவருடைய தகப்பனாரின் சௌக்கியத்திற்காகத் தாங்கள் எல்லோரும் மிகுந்த சுறுசுறுப்பாய் இருப்பதுபோலவும், ஆனால் பீயர் அவருக்குத் துன்பம் கொடுப்பதற்கே சுறுசுறுப்பாய் இருப்பதுபோலவும் தொனிக்கும்படி செய்தாள்.

ஆல்கா வெளியே போனாள். சகோதரிகளைப் பார்த்துக்கொண்டு பீயர் நின்றார். அப்புறம் தலைவணங்கி அவர் சொன்னதாவது:- 'அப்படியானால் நான் எனது அறைகளுக்குப் போகிறேன். நான் அவரை எப்பொழுது பார்க்கலாம் என்பதைத் தெரிவியுங்கள்.'

அறையைவிட்டு அவர் போனார். உதட்டில் மச்சத்தோடுகூடிய சகோதரியின் மெதுவான, ஆனால் கணீரென்ற சிரிப்பு அவரைப் பின்தொடர்ந்தது.

மறுநாள் இளவரசர் வாசைலி அங்குவந்து கோமகனின் வீட்டில் தங்கினார். பீயருக்கு அவர் சொல்லியனுப்பி வரவழைத்துப் பேசியதாவது:- 'எனது அன்புள்ளவரே, நீர் பீட்டர்ஸ்பர்க்கில் நடந்துகொண்டதைப்போல, இங்கேயும் நடப்பதாய் இருந்தால் உமக்குக் கெடுதலாகவே வந்துமுடியும். அவ்வளவுதான் நான் உமக்குச் சொல்லக்கூடியது. கோமகன் மிகமிக அசௌக்கியமாய் இருக்கிறார். நீர் அவரைப் பார்க்கவே கூடாது.'

அதன் பின்னால் பீயரை யாரும் தொந்தரவு செய்யவில்லை. முழுநேரமும் மாடியில் உள்ள தமது அறைகளிலேயே அவர் தங்கியிருந்தார்.

பீயர் தங்கியிருந்த அறையின் வாசலுக்குப் போரிஸ் போனார். அச்சமயம் பீயர் தமது அறையில் மேலும் கீழும் நடந்துகொண்டு, இடையிடையே ஒரு மூலையின் பக்கத்தில் நின்று, கண்ணுக்குத் தெரியாத ஒரு எதிரியை, வாள்கொண்டு குத்துவதைப் போலப் பயமுறுத்தும் சைகைகளைச் சுவரை நோக்கிக் காட்டிக்கொண்டு, தன் மூக்குக் கண்ணாடிக்கு மேலாக மூர்க்கத்தனமாக வெறித்துப் பார்த்து, மீண்டும் மேலும் கீழும் தமது நடையை ஆரம்பித்து, தெளிவற்ற வார்த்தைகளை முனங்கிக்

கொண்டு, தமது தோள்களைக் குலுக்கிக் கையையும் காலையும் ஆட்டிக்கொண்டிருந்தார்.

'இங்கிலாந்து முடிந்தது' என்று அவர் சொல்லி, முகத்தைச் சுளித்துக், கண்ணுக்குத் தெரியாத ஒருவரைத் தமது விரலால் சுட்டிக்காட்டினார். 'திருவாளர் பீட் சமுதாயத்தினுடையவும் மனித உரிமைகளினுடையவும் துரோகியாகத் தண்டிக்கப்பட்டார்...' அச்சமயம் தம்மைத்தாமே நெப்போலியன் என்று நினைத்துக் கொண்டு, டோவர் ஜலசந்தியைக் கடக்கும் ஆபத்தான வேலையைச் செய்து முடித்தது போலவும், இலண்டனைக் கைப்பற்றியது போலவும் பீயர் நினைத்து, திருவாளர் பிட்டுக்கு உண்டான தண்டனையைப் பிரகடனப்படுத்துவதற்கு முன்பாக, ஒரு திடகாத்திரமுள்ள அழகிய வாலிப அதிகாரி தமது அறைக்குள் நுழைவதைப் பார்த்தார். பீயர் தயங்கினார். போரிஸுக்குப் பதினான்கு வயது இருக்கும்போது மாஸ்கோவைவிட்டு அவர் போனார். அவரை அடியோடு மறந்துவிட்டார். ஆனால், அவருடைய வழக்கமான உணர்ச்சியுள்ள மனங்கனிந்த வழியில் நட்பான இளநகையோடு போரிஸின் கையைப் பற்றினார்.

இனிமையான புன்முறுவலோடு அமைதியாகப் போரிஸ் கேட்டார்:- 'என்னை உமக்கு ஞாபகம் இருக்கிறதா? என் தாயாரோடு கோமகனைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறேன். ஆனால், அவர் சௌக்கியமாய் இல்லை என்று தோன்றுகிறது.'

'ஆம், அவர் அசௌக்கியமாய் இருக்கிறார். மக்கள் எப்பொழுதும் அவருக்குத் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள்' என்று இந்த வாலிபர் யார் என்பதை அறிய நினைத்துப் பார்த்துக்கொண்டே பீயர் பதிலளித்தார்.

பீயர் தம்மை அடையாளம் கண்டுகொள்ளவில்லை என்று போரிஸ் உணர்ந்தார். ஆனால், தம்மை அறிமுகப்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியமில்லை என்று கருதினார். கொஞ்சமும் சங்கோசமில்லாமல் பீயரின் முகத்தை நேராக உற்றுப்பார்த்தார்.

'கோமகன் ராஸ்டோவ் இன்று விருந்துக்கு வரும்படி உம்மை அழைக்கிறார்' என்று வெகுநேர மௌனத்திற்குப் பின்னால் அவர் சொன்னார். அந்த மௌனம் பீயருக்குச் சகிக்க முடியாததாய் இருந்தது.

'ஆ, கோமகன் ராஸ்டோவ்' என்று பீயர் மகிழ்ச்சியோடு கூறினார். 'அப்படியானால் நீர் அவருடைய மகன், இல்லையா அல்லவா?

முதலில் உம்மை நான் அறிந்துகொள்ளாமல் போனது, என்ன ஆச்சரியம்! ஸ்பேரோ குன்றுகளுக்குத் திருமதி ஜாக்கெட்டுடன் எப்படி நாம் போனோம் என்பதை உமக்கு நினைவு இருக்கிறதா?... எவ்வளவு காலமாகிவிட்டது!

'நீர் சொல்வது தவறு' என்று போரிஸ் துணிந்து தைரியமான கொஞ்சம் கிண்டலான புன்னகையோடு சொன்னார். 'நான் போரிஸ், இளவரசி அன்னா மிக்காய்லாவ்னா ட்ருபெட்ஸ்கயாவின் மகன். ராஸ்டோவ் குடும்பத்தில் தந்தையின் பெயர் இல்லையா. மகனின் பெயர் நிக்கலஸ். எந்தத் திருமதி ஜாக்கெட்டையும் எனக்கு ஒருபொழுதும் தெரியாது.'

கொசுக்களோ, ஈக்களோ தாக்கியதுபோல பீயர் தமது தலையையும் கைகளையும் குலுக்கினார்.

'ஓ, அன்பரே, நான் எதைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறேன். எல்லாவற்றையும் கலந்துவிட்டேன். மாஸ்கோவில் ஏராளமான பந்துக்கள் இருக்கிறார்கள். அப்படியானால் நீர்தான் போரிஸா? ஆமாம். நல்லது. இப்பொழுது நமக்கு நிலைமை தெரிந்துவிட்டது. போலோன் படையெடுப்பைப் பற்றி நீர் என்ன நினைக்கிறீர்? நெப்போலியன், கால்வாயைக் கடந்துவிட்டால் இங்கிலீஷ் காரருக்கு மிகுந்த கஷ்டம் தான் என்பது உமக்குத் தெரியும். படையெடுப்பு முற்றிலும் சாத்தியமானது என்று நான் நினைக்கிறேன். வில்லனாவ் மட்டும் குளறுபடி செய்யாமல் இருக்கவேண்டுமே!'

போலோன் படையெடுப்பைப் பற்றிப் போரிஸுக்கு எதுவும் தெரியாது. அவர் பத்திரிகைகளைப் படிக்கவில்லை. வில்லனாவ் பெயரை அவர் இப்பொழுதுதான் முதன்முதலாகக் கேட்டார்.

'இங்கே மாஸ்கோவில் நாம் அரசியல் விஷயங்களை விட விருந்துகளிலும் ஊர்வம்புகளிலும் அதிகமாய் ஈடுபட்டிருக் கிறோம்' என்று அமைதியான கேலித்தொனியில் அவர் பேசினார். 'அதைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது. நான் சிந்தித்துப் பார்த்ததுமில்லை. அரட்டைகளில்தான் மாஸ்கோ மிகுந்த சுறுசுறுப்பாய் இருக்கிறது. தற்சமயம் உம்மைப்பற்றியும் உமது தகப்பனாரைப் பற்றியும் அவர்கள் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.'

அவர் எதையாவது பேசி அதற்காகப் பின்னால் வருத்தப்படக் கூடாதே என்று தமது நண்பருக்காகக் கவலைப்படுவதுபோல, தமது இனிய சுபாவப்படி பீயர் இளநகைகொண்டார். ஆனால், போரிஸ்

தெளிவாகவும் அப்பட்டமாகவும் கனிவின்றியும் பேசி, பீயரின் கண்களில் நேராக உற்றுப் பார்த்தார்.

'அரட்டையைத் தவிர மாஸ்கோவிற்கு வேறு எதுவும் செய்வதற்கு இல்லை. கோமகன் தமது செல்வத்தை யாருக்கு விட்டுப் போவார் என்பதைப் பற்றி ஒவ்வொருவரும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஒருவேளை அவர் நம்மெல்லாரையும் விட அதிகக் காலம் உயிர் வாழ்வதாய் இருக்கலாம். அம்மாதிரி அவர் இருப்பதையே நான் உண்மையாய் விரும்புகிறேன்...' என்று சொன்னார் போரிஸ்.

'ஆம். அதெல்லாம் பயங்கரமானது, ரொம்ப பயங்கரமானது' என்றார் பீயர்.

இந்த அதிகாரி தமது அமைதியைக் குலைக்கும் விதத்தில் எதையாவது அஜாக்கிரதையாய்ச் சொல்லிவிடக் கூடாதே என்று பீயர் இன்னமும் பயந்துகொண்டிருந்தார்.

போரிஸ் சிறிது நாணத்தோடு, ஆனால் தமது குரலையோ போக்கையோ மாற்றிக்கொள்ளாமல் கூறினார்:- 'ஒவ்வொருவரும் அந்தச் செல்வந்தரிடம் இருந்து ஏதாவது கொஞ்சம் பெற்றுக் கொள்வதற்கு முயற்சி செய்வதாய் உமக்குத் தோன்றலாம்.'

'அப்படியே' என்று பீயர் நினைத்தார்.

'ஆனால், தப்பபிப்பிராயத்தைத் தவிர்ப்பதற்காக நான் இதைச் சொல்ல விரும்புகிறேன். அம்மாதிரி முயற்சி செய்யும் கூட்டத்தில் என்னையோ எனது தாயாரையோ நீர் சேர்ப்பதாய் இருந்தால், அது முற்றிலும் தவறாகும். நாங்கள் ஏழைகள். ஆனால், என்னைப் பொருத்தமட்டிலுமாவது உமது தகப்பனார் செல்வந்தர் என்ற காரணத்திற்காக நான் அவருடைய பந்து என்று என்னைக் கருதிக்கொள்ளவில்லை. நானோ எனது தாயாரோ எப்பொழுதும் அவரை எதுவும் கேட்கவோ எதையும் அவரிடமிருந்து எடுத்துக்கொள்ளவோ போவதில்லை.'

வெகுநேரம் வரையில் பீயரால் புரிந்துகொள்ள முடியவில்லை. புரிந்துகொண்டதும், சோபாவிலிருந்து குதித்தெழுந்தார். வேகமாய் அப்பாவி முறையில் தமது கையால் போரிஸின் கையை முழங்கைக்குக் கீழாகப் பற்றி, போரிஸைவிட அதிகமாக முகம் நாணி, வெட்கமும் எரிச்சலும் கலந்த உணர்ச்சியோடு பேச ஆரம்பித்தார்.

'நல்லது, இது ஆச்சர்யமாய் இருக்கிறது. நீர் நினைக்கிறீரா, நான்... அப்படி நினைப்பேன் என்று?... எனக்கு நன்றாய்த் தெரியும்...'

ஆனால், போரிஸ் மறுபடியும் இடைமறித்தார்.

'நான் வெட்ட வெளிச்சமாய்ப் பேசிவிட்டதைக் குறித்து சந்தோசம் அடைகிறேன். ஒருவேளை உமக்குப் பிடித்தமில்லாமல் இருக்கலாம். நீர் என்னை மன்னிக்கவேண்டும்' எனக்கூறித், தம்மை அவர் சமாதானப் படுத்துவதற்குப் பதிலாக, அவரைச் சமாதானப் படுத்தும் பொருட்டு, 'ஆனால், உம்மை நான் புண்படுத்தவில்லை என்று நம்புகிறேன். உள்ளதைப் பேசிவிடவேண்டும் என்பதைத் தான் நான் எப்பொழுதும் விதியாய் வைத்திருக்கிறேன்... நான் என்ன பதில் சொல்லுவது? ராஸ்டோவ் விருந்திற்கு வருகிறீரா?'

ஒரு தொந்தரவான கடமையிலிந்து தாம் விடுதலை அடைந்ததைப் போலவும், ஒரு தர்மசங்கடமான நிலைமையிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டு, மற்றவரை அதில் வைத்துவிட்டதைப் போலவும் போரிஸ் காணப்பட்டார். மீண்டும் முற்றிலும் இனிமையாய்த் தோன்றினார்.

சாந்தமடைந்த பீயர் சொன்னார்:- 'இல்லை, ஆனால் நீர் ஒரு ஆச்சரியமான பேர்வழி என்று சொல்லுகிறேன். நீர் இப்பொழுது என்ன சொன்னீரோ அது நல்லது; மிகவும் நல்லது. ஆமாம். உமக்கு என்னைத் தெரியாது. நாம் குழந்தைகளாய் இருந்ததிலிருந்து வெகுகாலமாக நாம் சந்திக்கவில்லை. நீர் நினைக்கலாம் எனது... எனக்குப் புரிகிறது; நன்றாய்ப் புரிகிறது. என்னால் அம்மாதிரி செய்திருக்கமுடியாது. அந்தத் தைரியம் எனக்கு ஏற்பட்டிருக்காது. ஆனால், மிகவும் சிலாக்கியம், உம்முடன் அறிமுகம் ஏற்பட்டது பற்றி நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். ஆச்சரிமாய் இருக்கிறது. சிறிதுநேரம் நிறுத்தி, மீண்டும், 'என்னை நீர் சந்தேகிப்பது ஆச்சரியமாயிருக்கிறது,' என்று சொல்லி அவர் சிரிக்க ஆரம்பித்தார். 'நல்லது அதனால் என்ன... நாம் இருவரும் ஒருவரையொருவர் நன்றாய் உணர்ந்துகொள்வோம் என்று நம்புகிறேன்' என்று போரிஸின் கையை அவர் அழுத்தினார். 'கோமகளை நான் ஒரு தடவைகூடப் பார்க்கவில்லை என்பது உமக்குத் தெரியுமா? அவர் என்னை அழைக்கவில்லை... அவர் மனிதர் என்ற முறையில் நான் மிகவும் வருந்துகிறேன். ஆனால் என்ன செய்யமுடியும்?'

புன்சிரிப்போடு போரிஸ், 'அப்படியானால், கடல்கடந்து ஓர் ராணுவத்தை நெப்போலியன் கொண்டுபோய்விட முடியும் என்றா நீர் நினைக்கிறீர்?' என்று கேட்டார்.

பேச்சை மாற்றுவதற்குப் போரிஸ் விரும்புகிறார் என்பதைப் பீயர் கண்டுகொண்டார். அவருக்கும் அதேமாதிரி எண்ணம் இருந்ததால், போலோன் படையெடுப்பில் உள்ள சாதகபாதகங்களைப் பற்றி விளக்கிக் கூற ஆரம்பித்தார். அச்சமயம் ஒரு சேவகன் அங்கே வந்து 'இளவரசி போகிறாள்' என்று போரிஸை அழைத்தான். போரிஸோடு நன்றாகப் பழகிக் கொள்ளுவதற்காக விருந்துக்குத் தாம் வருவதாக பீயர் சொல்லி, அவருடைய கையைப் பிரியத்தோடு அழுத்தி, தம் கண்ணாடிகளுக்கு மேலாகப் போரிஸின் கண்களில் உள்ளம் கனிந்த பார்வையோடு பார்த்தார். போரிஸ் போன பின்பு, தமது அறையில் பீயர் மேலும் கீழும் வெகுநேரம் நடந்தார். ஆனால் கற்பனை எதிரியைக் கற்பனை வாள்கொண்டு குத்தவில்லை. உறுதியும் புத்திசாலித்தனமும் உள்ள அந்த இனிமையான இளைஞரை நினைத்து முறுவல் கொண்டார்.

இளம் வயதில் ஒவ்வொருவருக்கும் ஏற்படுகிற, முக்கியமாகத் தனிமை வாழ்க்கை நடத்துகிறவர்களுக்கு ஏற்படுகிறதைப் போலவே, ஒரு சொல்ல முடியாத உள்ளக் கனிவை இந்த வாலிபருக்காக அவர் உணர்ந்தார். தாங்கள் இருவரும் நண்பர்களாய் இருப்பது என்று அவர் மனதில் முடிவுசெய்துகொண்டார்.

இளவரசர் வாசைலி இளவரசியை வழியனுப்பினார். அவள் ஒரு கைக்குட்டையைக் கண்களில் வைத்துக்கொண்டிருந்தாள். அவள் முகத்தில் கண்ணீர் வடிந்திருந்தது.

அவள் சொன்னாள் :- 'இது பயுங்கரமானது, பயங்கரமானது. எனக்கு என்ன நேர்ந்தாலும் சரி, நான் எனது கடமையைச் செய்வேன். நான் வந்து இரவு பூராவாக இங்கேயே இருப்பேன். அவரை அம்மாதிரி விட்டுவிட்டிருக்கக் கூடாது. ஒவ்வொரு விநாடியும் விலைமதிப்பற்றது. அவருடைய மருமக்கள் எதற்காக அதை ஒத்திப்போடுகிறார்கள் என்பதை என்னால் நினைக்க முடியவில்லை. அவரைத் தயார் செய்வதற்கு ஒரு வேளை கடவுள் எனக்கு உதவி செய்யலாம். போய் வருகிறேன், இளவரசே! கடவுள் உம்மைக் காப்பாற்றட்டும்...'

போய் வா பாட்டியே என்று இளவரசர் வாசைலி பதில் அளித்து, அவளிடமிருந்து திரும்பிவிட்டார்.

வண்டிக்குள் ஏறியதும் தாய் மகனைப் பார்த்து, 'ஓ, ரொம்ப மோசமான நிலைமையில் இருக்கிறார். ஒருவரையும் அவரால் அடையாளம் கண்டுகொள்ளமுடியவில்லை' என்றாள்.

'எனக்குப் புரியவில்லை, அம்மா. பீயரைப் பற்றி அவருடைய நோக்கம் என்ன?' என்று மகன் கேட்டார்.

'அதைப்பற்றி உயில்தான் சொல்லமுடியும். நமது விதிகூட அதில்தான் சார்ந்திருக்கிறது.'

'நமக்கு ஏதாவது கொடுப்பாரென்று நீ ஏன் எதிர்பார்க்கிறாய்?'

'ஆ, என் கண்ணே, அவர் மிகுந்த பணக்காரர். நாம் மிகுந்த ஏழைகள்.'

'நல்லது, அது ஒரு சரியான காரணமாய்த் தோன்றவில்லை, அம்மா.'

'ஓ கடவுளே, அவர் எவ்வளவு அசௌக்கியமாய் இருக்கிறார்!' என்று கூவினாள்.




கோ கோமகன் சிரில் பெஜுகாவைப் பார்ப்பதற்காக அன்னாமிக்காய்லாவ்னா தனது மகனோடு புறப்பட்டுப் போன பின்பு, கோமகள் ராஸ்டோவ் வெகுநேரம் வரையில் தன் கண்களில் கைக் குட்டையை வைத்துக்கொண்டு தனியாக இருந்தாள். கடைசியாக மணியடித்தாள்.

'வேலைக்காரி வருவதற்கு சில நிமிஷங்கள் ஆயின. அவள் வந்ததும் கோபத்தோடு அவளைப் பார்த்து, 'உனக்கு என்ன வந்து விட்டது, என் அன்பே? எனக்கு வேலை செய்ய உனக்கு விருப்பம் இல்லையா? அப்படியானால் உனக்கு இன்னொரு இடம் பார்க்கிறேன்' என்றாள்.

தனது நண்பரின் இளப்பமான வறுமையையும், துக்கத்தையும் கண்டு கோமகள் கலங்கிப்போனாள். அதனால் அவளுடைய மனம் நிலைகுலைந்து போயிருந்தது. அம்மாதிரி மனநிலைமை ஏற்படும் போதெல்லாம் அவள் தனது வேலைக்காரியை 'என் அன்பே' என்று அழைத்து மிகைப்படுத்திய மரியாதையுடன் பேசுவாள்.

'நான் ரொம்பவும் வருந்துகிறேன், அம்மா' என்றாள் வேலைக்காரி.

'கோமகனை என்னிடம் வரச்சொல்லு.'

கோமகன் ஆடி அசைந்துகொண்டு, வழக்கம்போல் குற்றமுள்ள தோற்றத்தோடு, தமது மனைவியைப் பார்க்க வந்தார்.

'நல்லது, சிறிய கோமகளே? என் அன்பே, மாதரேயுடன் புறாக்கறி நாம் உண்ணப்போகிறோம், என் கண்னே. நான் அதை ருசி பார்த்தேன். (ஒரு வகை ஒயின்.) டாராஸுக்கு ஆயிரம் ரூபிள்கள் நான் கொடுத்தது வீணல்ல. அதற்கு அவன் பெருமதியானவன்' என்று கூறி அவர் தமது மனைவி பக்கத்தில் அமர்ந்தார். முழங்கைகளை முட்டுகளில் வைத்துக்கொண்டு தமது வெள்ளைத் தலை முடியை கலைத்துக் கொண்டிருந்தார். (டாராஸ் என்பவன் விலைக்கு வாங்கப்பட்ட ஒரு அடிமை).

'உன்னுடைய உத்தரவுகள் என்ன, குஞ்சு கோமகளே?'

'இதோ பாரும், எனது அன்பரே...இதென்ன அசட்டுத்தனம்' என்று சொல்லி அவள் அவருடைய உள் சட்டையைச் சுட்டிக் காட்டினாள். 'அநேகமாய் புறாக்கறியாய் இருக்கலாம்' என்று முறுவலோடு கூறினாள். 'நல்லது, இங்கே பாரும், கோமகனே. எனக்குக் கொஞ்சம் பணம் வேண்டும்.'

அவளுடைய முகம் சோகமாயிற்று.

'ஓ, குஞ்சு கோமகளே' என்று சொல்லி கோமகன் தமது பணப் பையை கோட்டிலிருந்து பரபரப்போடு வெளியே எடுக்க ஆரம்பித்தார்.

'எனக்கு ரொம்பப் பணம் வேண்டும், கோமகனே. எனக்கு ஐந்நூறு ரூபிள்கள் வேண்டும்' என்று சொல்லிவிட்டு தன்னுடைய் கைக்குட்டையை எடுத்து, கணவனின் உள் சட்டையில் காட்டியதைத் துடைக்க ஆரம்பித்தாள்.

'ஆம், உடனே உடனே. ஏ, அங்கு யார் இருக்கிறார்கள்?' என்று தாம் கூப்பிட்டவுடன் ஓடிவருவார்கள் என்ற நிச்சயத்துடன் அழைப்பவர்கள் கூப்பிடுவதைப் போன்ற தொனியில் அழைத்தார். 'டிமிட்ரியை என்னிடம் அனுப்பு.'

டிமிட்ரி ஒரு நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர். கோமகனின் வீட்டிலேயே வளர்ந்து இப்பொழுது அவருடைய காரியங்களை மேல் பார்த்து வருகிறார். அவர் மெதுவாக அறைக்குள் வந்தார்.

'எனக்கு வேண்டியது இதுதான், எனது அன்பான பேர் வழியே' என்று அங்கு வந்த அந்த மரியாதையுள்ள வாலிபரிடம் கூறினார்.

'கொண்டு வா'. அவர் ஒரு வினாடி யோசித்து விட்டு, 'ஆம், எழுநூறு ரூபிள்கள் கொண்டு வா, ஆம். ஆனால் ஜாக்கிரதை. போன தடவை எனக்கு கொடுத்தமாதிரி கிழிந்த அழுக்கடைந்த நோட்டுகளைக் கொண்டு வராதே. சுத்தமான அழகிய நோட்டுகளாகக் கோமகளுக்குக் கொண்டுவந்து கொடு.'

'ஆம், டிமிட்ரி, சுத்தமானவைகளாக தயவு செய்து கொண்டு வா' என்று டிமிட்ரி கேட்டார். 'நான் சொல்லுவதற்கு உத்தரவு அளியுங்கள்' என்று சொல்லியதும் கோமகன் அழுத்தமாகவும் வேகமாகவும் பெருமூச்சு வாங்க ஆரம்பித்தார். அவருக்குக் கோபம் வரப்போகிறது என்பதற்கு எப்பொழுதும் இது அடையாளம். இதைக் கண்டதும், 'ஆயாசம் கொள்ள வேண்டாம். நான் மறந்துவிட்டேன்...உடனே கொண்டு வரட்டுமா?'

'ஆமாம், அப்படியே செய், கொண்டு வா. கோமகளிடம் கொடுத்துவிடு.'

'இந்த டிமிட்ரி, எப்பேர்ப்பட்ட பொக்கிஷம்' என்று அந்த இளைஞர் போன பின்பு புன்சிரிப்போடு கோமகன் கூறினார், ''முடியாது'' என்ற விஷயமே இவனிடம் எப்பொழுதும் கிடையாது என்பதை நான் எப்பொழுதும் வெறுக்கிறேன். ஒவ்வொன்றும் சாத்தியமே.'

'ஆ, பணம், கோமகனே, பணம். உலகத்தில் அது எவ்வளவு துக்கத்தைக் கொடுக்கிறது! ஆனால், எனக்கு இந்தப் பணம் ரொம்ப அவசியமாய் இருக்கிறது' என்றாள் கோமகள்.

'எனது குஞ்சு கோமகளே, நீ எப்பொழுதும் ஒரு பொல்லாத ஊதாரி' என்று கோமகன் சொல்லி, தமது மனைவியின் கையை முத்தமிட்டு தமது படிப்பு அறைக்குத் திரும்பினார்.

கோமகன் பெஜுகாவைப் பார்த்து விட்டு, அன்னா மிக்காய்லாவ்னா திரும்பியதும், கோமகளின் சிறிய மேஜையில் ஒரு கைக் குட்டைக்கு அடியில் எல்லாம் சுத்தமான நோட்டுகளாகப் பணம் இருந்தது. கோமகனின் மனதை எதுவோ அலட்டிக்கொண்டு இருப்பதை அன்னா மிக்காய்லாவ்னா கவனித்தாள்.

'நல்லது, என் அன்பே?' என்று கோமகள் கேட்டாள்.

'ஓ, என்ன பயங்கரமான நிலைமையில் அவர் இருக்கிறார். அவரை அடையாளமே தெரியவில்லை. அவ்வளவு அசௌக்கியமாய் இருக்கிறார். நான் சில வினாடிகள்தான் அங்கே இருந்தேன். ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை...'

‘அன்னெட்டி, கடவுளுக்காக, நான் கொடுப்பதை மறுக்காதே’ என்று கோமகள் நாணத்தோடு ஆரம்பித்தபோது, அந்த நாணம் அவளுடைய மெலிந்த கம்பீரமான வயதான முகத்தில் மிகுந்த அதிசயமாய்த் தோன்றியது. கைக்குட்டைக்குக் கீழே இருந்த பணத்தை எடுத்தாள்.

அவளுடைய உத்தேசத்தை அன்னா மிக்காய்லாவ்னா உடனே அறிந்துகொண்டாள். பொருத்தமான நேரத்தில் கோமகளை ஆலிங்கனம் செய்துகொள்ள அவள் குனிந்தாள்.

‘போரிஸின் உபகரணங்களுக்காக, போரிஸுக்காக என்னிடமிருந்து இதைப் பெற்றுக்கொள்.’

அன்னா மிக்காய்லாவ்னா அதற்குள்ளாக அவளைத் தழுவிக் கொண்டு அழுதாள். கோமகளும் அழுதாள். அவர்கள் அழுதார்கள். ஏனென்றால், அவர்கள் நண்பர்கள்; அவர்கள் அன்புள்ளம் படைத்தவர்கள்; குழந்தையில் இருந்தே நண்பர்களானவர்கள்; இந்தக் கேவலமான பணத்தைப் பற்றி யோசிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது; அவர்கள் இளமை முடிந்து விட்டது... ஆனால் அவர்களுடைய கண்ணீர் அவர்கள் இருவருக்கும் இனிமையாய் இருந்தது.



கோ கோமகள் ராஸ்டோவ் தனது குமாரிகளுடனும் ஏராளமான விருந்தாளிகளுடனும் வரவேற்பு அறையில் ஏற்கனவே அமர்ந்துவிட்டாள். வந்திருந்த கனவான்களை கோமகன் அழைத்துக் கொண்டு தம்முடைய படிப்பு அறைக்குச் சென்று தாம் சேர்த்துவைத்திருந்த பலரகமான துருக்கிய சுங்கான்களை அவர்களுக்குக் காட்டிக்கொண்டிருந்தார். இடையிடையே வெளியே வந்து ‘அவள் இன்னும் வரவில்லையா?’ என்று கேட்டார்.

மரியா டிமிட்ரிவ்னா அக்ராசிமாவா என்பவளை அவர்கள் எதிர் பார்த்துக்கொண்டிருந்தார்கள். உயர் வட்டாரங்களில் அவளுக்கு ‘பயங்கரமான பூதம்’ என்று பெயர். செல்வத்தினாலோ, அந்தஸ்தினாலோ இல்லாமல் அவளுடைய பகுத்தறிவிற்கும், ஒளிவு மறைவு இல்லாத பேச்சிற்கும் அவள் தனிச் சிறப்புற்று விளங்கினாள். மரியா டிமிட்ரிவ்னா ராஜ குடும்பத்திற்கும்

பழக்கமானவன் அதைப் போலவே மாஸ்கோ, பீட்டர்ஸ்பர்க்கிலும் அவளை எல்லாரும் அறிவார்கள். அந்த இரண்டு நகரங்களும் அவளைக் கண்டு ஆச்சரியப்படும். அவளுடைய முரட்டுத்தனத் திற்காக அந்தரங்கத்தில் சிரிப்பார்கள்; அவளைப்பற்றி நல்ல கதைகள் சொல்லுவார்கள். ஆனால், ஒருவர்கூட விலக்கில்லாமல் எல்லாரும் அவளிடம் மரியாதையையும் பயத்தையும் காட்டிவந்தார்கள்.

கோமகனின் அறையில் புகையிலைப் புகை நிறைந்திருந்தது. பிரகடனத்தில் அறிவிக்கப்பட்டிருந்த யுத்தத்தைப் பற்றியும், படைக்கு ஆள் சேர்த்தலைப் பற்றியும் அவர்கள் பேசினார்கள். அவர்களில் ஒருவராவது பிரகடனத்தை இன்னும் பார்த்ததில்லை. ஆனால், அது பிரசுரமாய்விட்டது என்பதை அவர்கள் எல்லாரும் அறிவார்கள். புகைக்குடித்துக்கொண்டும் பேசிக்கொண்டும் இருந்த இரண்டு விருந்தாளிகளுக்கு மத்தியில் கோமகன் உட்கார்ந்தார். அவர் புகைக்கவும் இல்லை, பேசவும் இல்லை. ஆனால் ஒருவர் பக்கத்தில் முதலில் தலையைச் சாய்த்து, பிறகு மற்றொருவர் பக்கம் தலையைச் சாய்த்து, அந்த புகைக்க குடியர்களை மகிழ்ச்சியோடு பார்த்து, அவர்களை ஒருவருக்கொருவர் மோதவிட்டு, அவர்களின் உரையாடல்களைக் கவனித்து வந்தார்.

அவர்களில் ஒருவர் சிவிலியன். வெளிறிய நிறமுடையவராய் இருந்தார். அவருடைய மெலிந்த சுருக்கங்கள் விழுந்த முகம் நன்றாய் க்ஷவரம் செய்யப்பட்டு விளங்கியது. ஏற்கனவே கிழப் பருவத்தை அடைந்திருந்தபோதிலும் நவீன மோஸ்தரான வாலிபனைப்போல் உடை அணிந்துகொண்டிருந்தார். சங்கோஜ மில்லாமல் இருப்பவரைப்போல தமது கால்களைச் சோபாவின் மேல் போட்டுக்கொண்டு, அம்பர் நிற புகைக் குழாயை வாயில் வெகுதூரம் அமுக்கிக்கொண்டு, இடையிடையே புகையை உள்ளே இழுத்துத் தம் கண்களை இடுக்கிக்கொண்டிருந்தார். அவர் ஒரு பழைய பிரம்மச்சாரி. அவர் பெயர் ஷின்ஷைன்; கோமகளின் மைத்துனர். மாஸ்கோ உயர் வட்டாரங்களில் சொல்லப்பட்டு வந்ததைப்போல் அவர் ஒரு துடுக்கான வாயுள்ளவர். தமது பக்கத்தில் இருந்த தோழருக்குத் தயவு காட்டுபவரைப்போல அவர் காணப்பட்டார். அந்தத் தோழர் காப்பாளர் படையைச் சேர்ந்தவர். உற்சாகமும் சிவந்த நிறமும் கொண்ட அதிகாரி. நன்றாய்க் குளித்து, ஒழுங்காய் தலைவாரிவிட்டு, அழகான பித்தான்களைத் தமது சட்டையில் மாட்டி, தமது சுங்கானை வாயின் மத்தியில் வைத்து,

தமது சிவந்த உதடுகளின் வழியாக, மெதுவாகப் புகையை இழுத்து தமது அழகிய வாயின் மூலம் அந்தப் புகை வளைவு வளைவாக வெளியே போகும்படி விட்டு வந்தார். இவர்தான் லெப்டினன்ட் பெர்க். செமெனாவ் பட்டாளத்தில் ஒரு அதிகாரி. இவருடன் தான் ராணுவத்தில் சேருவதற்கு போரிஸ் பிரயாணம் செய்வதாய் இருந்தது. இவரைப் பற்றித்தான் தன்னுடைய மூத்த சகோதரி வெராவைப் பார்த்து, 'உன்னுடைய ஆள்' என்று நட்டாஷா பரிகாசம் செய்தாள். இந்த இருவருக்கு மத்தியில் கோமகன் உட்கார்ந்து கவனத்தோடு கேட்டுவந்தார். 'பாஸ்டன்' என்ற சீட்டு விளையாட்டு அவருக்குப் பிரியமானது. அது இல்லாத சமயத்தில், அவருக்குப் பிடித்தமான மற்றொரு பொழுதுபோக்கு உண்டு. அதாவது மற்றவர்கள் பேசுவதை, முக்கியமாக, இரண்டு வாய்ச்சாலகர்களை ஒருவர் மீது ஒருவர் மோதும்படி செய்து அந்த உரையாடல்களைக் கேட்பதேயாகும்.

'நல்லது, பழைய பேர்வழியே, எனது மிகுந்த மதிப்புள்ள அல்பான்ஸே கார்லாவிச்' என்று ஷின்ஷைன் கேலியாகச் சிரித்துக்கொண்டு, ரொம்ப சாதாரணமான ருஷ்ய கொச்சை மொழிகளையும் மிக உயர்ந்த பிரஞ்சு வாக்கியங்களையும் அவர் பேசுவதில் அது ஒரு சிறப்பு கலந்து, 'சர்க்காரிடமிருந்து ஒரு வரும்படியை உண்டு பண்ண நீர் எதிர்பார்க்கிறீர்? உமது பட்டாளத்தைக் கொண்டு எதையாவது சம்பாதிக்க நீர் விரும்புகிறீர்?' என்று கூறினார்.

'இல்லை, பீட்டர் நிக்காலாய்விச், குதிரைப் படையில் காலாட் படையைவிட அனுகூலங்கள் ரொம்பக் குறைவாய் இருக்கின்றன என்பதை காட்டவே நான் விரும்புகிறேன். முதலில் என்னுடைய நிலைமையை இப்பொழுது கவனியுங்கள், பீட்டர் நிக்காலாய் விச்...'

பெர்க் எப்பொழுதுமேஅமைதியாயும், மரியாதையாயும் மிகுந்த ஜாக்கிரதையுடனும் பேசுவார். அவருடைய உரையாடல் எப்பொழுதும் முற்றிலும் அவரைப் பற்றியதாகவே இருக்கும். அவருக்கு சம்பந்தமில்லாத எந்த விஷயத்தைப் பற்றியும் பேச்சுகள் நடந்து வந்தால், அவர் அமைதியாகவும், மௌனமாகவும் இருப்பார். கொஞ்சங்கூட தமது பொறுமையை இழக்காமல் அல்லது மற்றவர்களுக்குத் தொந்தரவாய் இல்லாமல் மணிக்கணக்காக அவர் மௌனமாய் இருக்கமுடியும். ஆனால்

உரையாடல்கள் தம்மைப் பற்றிய விஷயங்களில் திரும்பிய உடனே முழு திருப்தியோடு சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி அவர் பேச ஆரம்பித்துவிடுவார்.

'என்னுடைய நிலைமையை கவனியுங்கள், பீட்டர் நிக்காலாய் விச். நான் குதிரைப் படையில் இருந்திருந்தால் இந்த லெப்டினன்ட் அந்தஸ்து இருந்தபோதிலும் நான்கு மாதங்களுக்கு ஒரு தடவை இருநூறு ரூபிள்களுக்கு மேலாக நான் வாங்கியிருக்க முடியாது. ஆனால் இப்பொழுதுள்ளபடி நான் இருநூற்று முப்பது வாங்குகிறேன்' என்று சொல்லி ஷின்ஷைனையும் கோமகனையும் மகிழ்ச்சியும், இனிமையும் கொண்ட புன்முறுவலோடு பார்த்துக் கொண்டு சொன்னார். அங்கிருந்த ஒவ்வொருவருக்கும் இவருடைய வெற்றியே அவர்களுக்கு மிக முக்கியமான விருப்பமாக இருந்தாக வேண்டும் என்று அவருக்குத் தோன்றுவதைப்போல அவர் பேசியது இருந்தது.

'பீட்டர் நிக்காலாய்விச், அதைத் தவிர, காப்பாளர் படைக்கு நான் போவதன் மூலமாக மிக முக்கியமான பதவியில் இருக்க முடியும். ஏனெனில், பதவிகள் காலியாவது காப்பாளர் படையைச் சேர்ந்த காலாட் படையில் அடிக்கடி நேரிடும். இந்த இருநூற்று முப்பது ரூபிள்களைக் கொண்டு என்ன செய்யமுடியும் என்பதை கொஞ்சம் யோசியுங்கள். எனது தகப்பனாருக்குக் கொஞ்சம் அனுப்பவும், நான் கொஞ்சம் சேர்த்து வைப்பதற்கும்கூட சாத்தியமாகிறது' என்று புகையை ஊதிக்கொண்டே அவர் சொன்னார்.

'அப்படியானால் மீதம்கூட ஏற்படுகிறது. கல்லிலிருந்து தோல் உரிப்பதற்கு ஒரு ஜெர்மனியனுக்குத் தெரியும் என பழமொழி உண்டு' என்று தமது வாயில் இருந்த சுங்கானை ஒரு பக்கத்திலிருந்து எடுத்து இன்னொரு பக்கமாக வைத்துக்கொண்டு கோமகனைப் பார்த்துக் கண் சிமிட்டி ஷின்ஷைன் கூறினார்.

கோமகன் விழுந்து விழுந்து சிரித்தார். ஷின்ஷைன் பேசுகிறார் என்பதை மற்ற விருந்தாளிகள் பார்த்ததும் அவர் பேசுவதைக் கேட்பதற்காக நெருங்கி வந்தார்கள். கேலியையோ, பாராமுகத்தையோ பொருட்படுத்தாமல், எப்படி காப்பாளர் படைக்குத் தம்மை மாற்றிக்கொண்டதன் மூலமாகத் தம்முடைய பழைய தொண்டர் படையிலுள்ள தோழர்களுக்கும் மேலாக ஒரு படியைத் தாம் அடைய முடிந்தது என்பதையும்; எப்படி யுத்த காலத்தில் தளகர்த்தர் கொல்லப்படும்போது தாம் ஒரு மூத்த அதிகாரி

என்ற நிலைமையில் அந்தப் பதவியை சுலபமாய் அடைய முடியும் என்பதையும் எப்படி அந்தப் பட்டாளத்தில் தாம் செல்வாக்கோடு இருக்கிறார் என்பதையும்; எப்படி தமது தகப்பனார் தம்மைப்பற்றி திருப்தி அடைந்திருக்கிறார் என்பதையும் விளக்கமாய் தொடர்ந்து பேசினார். இவற்றையெல்லாம் விவரிப்பதற்கு பெர்க் மகிழ்ச்சி அடைந்தார் என்பது தெரிந்தது. மற்றவர்களுக்கும் தங்களுக்குப் பிடித்தமான விஷயங்கள் இருக்கும் என்பதை பெர்க் கொஞ்சம்கூட யோசித்ததாகத் தெரியவில்லை. ஆனால், அவர் சொல்லியவை யெல்லாம் அழகாய் நிதானமாய் இருந்தன. அவரது அப்பாவித் தனமான இளமையின் தற்பெருமை தெளிவாய்த் தெரிந்தது. ஆகையால் மற்றவர்கள் ஒன்றும் பேசவில்லை.

'நல்லது, எனது சிறுவனே, காலாட் படையோ குதிரைப் படையோ நீ எங்கு சென்றாலும் சரி, சமாளித்துக்கொள்ளுவாய் என்று நான் உறுதி அளிக்க முடியும்' என்று ஷின்ஷைன் கூறி அவருடைய தோளில் தட்டிக்கொடுத்து தமது கால்களைச் சோபாவிலிருந்து கீழே இறக்கினார்.

பெர்க் மகிழ்ச்சியோடு 'சிரித்தார். விருந்தாளிகள் பின்தொடர கோமகன் வரவேற்பு அறைக்குள் போனார்.

ஒரு பெரிய விருந்து ஆரம்பிப்பதற்கு முன்னால், கூடியிருந்த விருந்தாளிகள் ஜக்குஸ்கா என்ற பதார்த்தத்தை எதிர்பார்க்கிற நேரம் வந்தது. (விருந்திற்கு முன் பசியை கிளப்புவதற்காக உண்ணும் ஒரு பதார்த்தம்). அச்சமயம் நீண்ட உரையாடல்களில் இறங்காமல், அங்கும் இங்கும் நடமாடி, ஒருவருக்கொருவர் பேசி, உணவைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படாதவர்களைப்போல காட்டிக்கொள்ளுவார்கள். விருந்து அளிப்பவரும் விருந்து அளிப்பவளும் வாசல் கதவைப் பார்த்தும் தங்களுக்குள் ஒருவரையொருவர் நோட்டமிட்டுக்கொண்டும் இருந்தார்கள். இந்த நோட்டங்களைக்கொண்டு யாரை அல்லது எதை அவர்கள் எதிர்பார்க்கிறார்கள் இன்னும் வந்து சேராத முக்கியமான பந்துவா அல்லது இன்னும் தயாராகாத முக்கியமான பதார்த்தா-என்பதை யூகிப்பதற்கு விருந்தாளிகள் முயற்சிப்பார்கள்.

விருந்து சாப்பிடப் போகிற நேரத்தில்தான் பீயர் அங்கு வந்து, வரவேற்பு அறையில் தாம் கண்ட முதல் நாற்காலியில் அமர்ந்தார். அந்த நாற்காலி வரவேற்பு அறையின் மத்தியில் போகிற வருகிறவர்களைத் தடை செய்கிற மாதிரிக் கிடந்தது. அதில் பீயர்

நாசூக்கில்லாமல் உட்கார்ந்திருந்தார். அவரைப் பேச வைப்பதற்கு கோமகள் முயற்சித்தாள். ஆனால் அவர் தமது மூக்குக் கண்ணாடியின் வழியாக யாரையோ தேடுவதுபோல குழந்தை மாதிரி சுற்றிலும் பார்த்துக்கொண்டு அவளுடைய கேள்விகளுக்கு ஒற்றை வார்தைகளில் பதிலளித்தார். போகிற வருகிற வழியில் அவர் உட்கார்ந்திருந்த உண்மையை அவர் ஒருவர்தான் கண்டு கொள்ளவில்லை. கரடியைப் பற்றிய அவரது திருவிளையாடல் களை அறிந்திருந்த விருந்தாளிகளில் பலர், ஆச்சரியத்தோடு இந்தப் பெரிய கனத்த அமைதியான மனிதரைப் பார்த்து, 'இந்த நாசூக்கில்லாத நாணமுள்ள பேர்வழி எப்படி அந்த பரிகாசமான செயலைப் போலீஸ்காரன் மீது செய்திருக்க முடியும்?' என்று வியப்படைந்தார்கள்.

'இப்பொழுதுதான் வந்தீரோ' என்று கோமகள் கேட்டாள்.

'ஆம், அம்மா' என்று அவர் பதிலளித்துத் தம்மைச் சுற்றலும் பார்த்தார்.

'எனது கணவரை நீர் இன்னும் பார்க்கவில்லையா?'

'இல்லையம்மா' என்று கூறி பொருத்தம் இல்லாமல் சிரித்தார்.

'சமீபத்தில் நீர் பாரிஸில் இருந்தீர் என்று நினைக்கிறேன். அது மிகுந்த சுவாரஸ்யமுள்ளதாய் இருக்கிறதென்று எண்ணுகிறேன்.'

'ரொம்ப சுவாரஸ்யம் உள்ளது.'

கோமகளும் அன்னா மிக்காய்லாவ்னாவும் ஒருவருக்கொருவர் நோட்டமிட்டார்கள். அன்னா மிக்காய்லாவ்னா இந்த இளைஞரிடம் தம்மைப் பேசிக்கொண்டிருக்கும்படி கோமகள் விரும்புகிறாள் என்பதை அறிந்துகொண்டாள். அவர் பக்ககத்தில் வந்து உட்கார்ந்து அவர் தகப்பனாரைப் பற்றிப் பேச ஆரம்பத்தாள். ஆனால் அவர் சொல்லிய பதிலெல்லாம் கோமகளுக்கு சொல்லியதைப்போலேவே ஒற்றை வார்த்தைகளாகவே இருந்தன. மற்ற விருந்தாளிகள் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருந் தார்கள். 'ரஜுமோவ்ஸ் கீஸ்...அது மனோரம்மியமமாய் இருந்தது...நீர் ரொம்ப அன்புள்ளவர்...கோமகள் அப்ராக்ஸினா...' இம்மாதிரி பல பக்கங்களிலிருந்தும் ஒலித்தன. கோமகள் எழுந்து நடன அறைக்குள் போனாள்.

'மரியா டிமிட்ரிவ்னா?' என்று அவளுடைய குரல் அங்கிருந்து கேட்டது.

'அவளேதான்' என்று முரட்டுக் குரலில் பதில் வந்தது. மரியா டிமிட்ரிவ்னா அறைக்குள் நுழைந்தாள்.

எல்லா கன்னிகளும் திருமணம்மானவர்களும்கூட மிகுந்த வயதானவர்களைத் தவிர எழுந்து நின்றார்கள். மரியா டிமிட்ரிவ்னா வாசலில் தயங்கினாள். உயரமாகவும் பருமனாகவும் இருந்தாள். நரைத்த சுருண்டமுடிகளைக் கொண்ட தனது ஐம்பது வயதான தலையை உயர்த்தி நிமிர்ந்து, அங்கே நின்று விருந்தாளிகளைக் கண்ணோட்டமிட்டாள். சாவகாசமாக தனது அகன்ற கைச் சட்டையை மேலே சுருட்டுவதுபோல ஒழுங்கு செய்தாள். மரியா டிமிட்ரிவ்னா எப்பொழுதும் ருஷ்ய மொழியிலேயே பேசுவாள்.

'இன்று யாருடைய பெயர் தினத்தை நாம் கொண்டாடு கிறோமோ அவளுக்கும் அவள் குழந்தைகளுக்கும் ஆரோக்கியமும் சந்தோஷமும் ஏற்படுவதாக' என்று முழுத் தொண்டையில் உரத்த குரலில் மற்றவர்களின் பேச்சை எல்லாம் அமுக்கிய விதத்தில் அவள் பேசினாள். 'நல்லது, பழம் பெருச்சாளியே' என்று தமது கையை முத்தமிட்ட கோமகனைப் பார்த்துச் சொன்னாள். 'மாஸ்கோவில் உமக்கு நேரம் போகிறதே கஷ்டமாய் இருக்கிறது என்று நான் சொல்ல முடியும். உமது நாய்களைக் கொண்டு வேட்டை யாடுவதற்கு ஒரு இடமும் இல்லை. ஆனால் என்ன செய்வது, பழைய ஆசாமியே! இந்த குஞ்சுகளெல்லாம் எப்படி வளர்ந்து வருகின்றன என்பதைப் பாரும்' என்று பெண்களைச் சுட்டிக்காட்டினாள். 'உமக்குப் பிரியம் இருக்கிறதோ இல்லையோ அவர்களுக்கெல்லாம் நீர் க்ணவர்களைப் பார்த்தாகவேண்டும்'.

'நல்லது, எங்கே என் கோசாக்?' என்றாள். (மரியா டிமிட்ரிவ்னா எப்பொழுதும் நட்டாஷாவை கோசாக் என்றே அழைப்பாள்.) நட்டாஷா குஷியோடும் பயமின்றியும் அவள் பக்கத்தில் வந்து அவள் கையை முத்தமிட்டபோது அவள் கையைத் தட்டிக் கொடுத்தாள். 'அவள் ஒரு போக்கிரி என்பது எனக்குத் தெரியும். என்றாலும் அவள் மீது எனக்குப் பிரியமுண்டு.'

தனது பெரிய அழகுப் பையிலிருந்து பேரிக்காய் உருவத்தில் அமையப்பெற்றிருந்த ஒரு ஜோடி சிகப்புக் கல் காதணிகளை எடுத்தாள். அவள் பெயருடைய மகாத்மா தின விருந்தாகிய அன்று, சந்தோஷத்தோடு முகம் மலர்ந்திருந்த சிவந்த நட்டாஷாவிடம் கொடுத்தாள். மரியா உடனே திரும்பி பீயரைப் பார்த்துப் பேசினாள்.

'ஏ, ஏ, நண்பரே, இங்கே கொஞ்சம் வாரும்' என்று மிருதுவான உயர்ந்த தொனியில் அவள் அழைத்தாள். 'இங்கே வாரும். என் நண்பரே...' அவள் பயமுறுத்துவதுபோல தன்னுடைய கைச் சட்டையை இன்னமும் உயரமாக மடித்தாள். அவளைத் தமது கண்ணாடிகள் மூலம் குழந்தையைப்போல் பார்த்துக்கொண்டு பீயர் நெருங்கினார்.

★ருஷ்யாவில் ஒவ்வொருவருக்கும் ஒரு மகாத்மா பெயரை இடுவதுண்டு. அந்த மகாத்மாவின் தினம் என்று வருகிறதோ அன்று அப்பெயரிடப்பட்டவர்கள் எல்லாரும் அதைப் பிறந்த தினம்போல விசேஷமாய் கொண்டாடுவார்கள்.

'நெருங்கி வாரும், நெருங்கி வாரும், நண்பரே! உமது தகப்பனாரிடம், அவர் சுமுகமாய் இருக்கும்போது, அவரிடம் உண்மையைக் கூறுவது நான் ஒருவளேதான். உமது விஷயத்தில் அது எனது தெளிவான கடமை.'

அவள் நிறுத்தினாள். இது முன்னுரை என்பது தெளிவாய்த் தெரிந்தது. இதற்குப் பின்னால் என்ன வரப்போகிறது என்பதை எதிர்பார்த்ஏ எல்லாரும் மௌனமாய் இருந்தார்கள்.

'ஒரு நல்ல வாலிபர்! நான் சொல்லுகிறேன்! ஒரு நல்ல வாலிபர்!... அவருடைய தகப்பனார் மரணப்படுக்கையில் கிடக்கும்போது அவர் ஒரு கரடியின் மீது ஒரு போலீஸ்காரனைக் கட்டி தமாஷ் செய்துகொண்டிருக்கிறார்! வெட்கம், ஐயா, வெட்கம்! நீர் யுத்தத்துக்குப் போயிருந்தால் நன்றாய் இருந்திருக்கும்.'

அவள் திரும்பி, அங்கே தமக்கு வருகிற சிரிப்பைத் தடுக்க முடியாமல் நின்றுகொண்டிருந்த கோமகனிடம் தமது கையை நீட்டினாள்.

'நல்லது, நாம் மேஜை முன்பு அமர்வதற்கு நேரமாய்விட்டது என்று நினைக்கிறேன்' என்றாள் மரியா டிமிட்ரிவனா.

மரியா டிமிட்ரிவ்னாவுடன் கோமகன் முதலில் நுழைந்தார். குதிரைப் படை கர்னலின் கையில் சாய்த்துகொண்டு கோமகள் பின்னால் போனாள். அவருடன்தான் ராணுவத்திற்கு நிக்கலஸ் போகவேண்டும். அதனால் அவர்களுக்கு அவர் முக்கியமானவராய் தோன்றினார். பின்னால் அன்னா மிக்காய்லாவ்னா ஷின்ஷைனுடன் நுழைந்தாள். வெராவுக்கு பெர்க் தமது கையைக் கொடுத்தார். புன்னகை பூத்த ஜுலி காராகின் நிக்கலஸுடன் போனாள்.

அவர்களுக்குப் பின்னால் மற்ற ஜோடிகள் பின்தொடர்ந்து விருந்து மண்டபம் முழுவதையும் நிறைத்ததார்கள். கடைசியாகக் குழந்தைகளும் வாத்தியார்களும் வாத்திச்சிகளும் தனி வரிசையில் பின்தொடர்ந்தார்கள். சேவகர்கள் இங்கும் அங்கும் போக ஆரம்பித்தார்கள். நாற்காலிகள் சத்தமிட்டன. காலரியில் பேண்டு வாத்தியம் ஆரம்பித்தது. விருந்தாளிகள் தங்கள் இடங்களில் அமர்ந்தார்கள். அப்புறம் உண்ணும்போது உபயோகிக்கும் கத்திகள், கரண்டிகளின் சப்தங்களும் விருந்தாளிகளின் பேச்சுக் குரல்களும், சேகவர்களின் மெதுவான காலடி ஓசைகளும் சேர்நது கோமகனின் பேண்டு வாத்திய சத்தத்தை அமுக்கிவிட்டன. மேஜையின் ஒரு பக்கத்தில் மரியா டிமிட்ரிவ்னாவை தனது வலப் பக்கமும் அன்னா மிக்காய்லாவ்னாவை தனது இடப் பக்கமும் வைத்து கோமகள் அமர்ந்தாள். மற்ற சீமாட்டிகள் கீழே தள்ளியிருந்தார்கள். மற்றொரு பக்கத்தில் குதிரைப் படைக் கர்னலை நமது இடப் பக்கமும் ஷிவ்ஷைனையும் மற்ற ஆண் விருந்தாளிகளையும் வலப் பக்கமும் வைத்து கோமகன் அமர்ந்தார். அந்த நீளமான மேஜையின் மத்தியில் ஒரு பக்கத்தில் வயது வந்த இளைஞர்கள் அமர்ந்திருந்தார்கள். பெர்க் பக்கத்தில் வெராவும், பீயர் பக்கத்தில் போரிஸூம், மற்றொரு பக்கத்தில் குழந்தைகளும், வாத்தியார்களும், வாத்திச்சிகளும் அமர்ந்திருந்தார்கள். கண்ணாடி ஒயின் ஜாடிகள், பழத் தட்டுகள் இவைகளுக்குப் பன்னால் இருந்த கோமகன் தமது மனைவியையும் அவளுடைய உயரமான தொப்பியையும் அதில் உள்ள இள நீல ரிப்பன்களையும் அடிக்கடி நோட்டமிட்டுக்கொண்டிருந்தார். தமது பக்கத்தில் உள்ளவர்களின் கோப்பைகளை நிரப்புவதில் சுறுசுறுப்பாய் இருந்தார். தமது கோப்பையை அவர் மறந்து விடவில்லை. கோமகள், விருந்தளிப்பவள் என்ற முறையில் தனது கடமைகளை மறக்கவில்லை. அதோடு தனக்கு முன்னால் இருந்த அன்னாசிப் பழக் குவியல்களின் வழியாக தனது கணவரை அர்த்த புஷ்டியோடு அடிக்கடி நோட்டமிட்டாள். அவருடைய முகமும் வழுக்கைத் தலையும் அதிகமாய் சிவந்திருந்ததால் அவருடைய தலையிலுள்ள நரைத்த ரோமம் வழக்கத்திற்கு அதிகமாக வித்தியாசம் காட்டியதாய்த் தோன்றியது. சீமாட்டிகள் பகுதியில் எந்நேரமும் ஒரே மாதிரியான பேச்சுக்குரல் கேட்டு வந்தது. கனவான்கள் பகுதியில் பேச்சுக் குரல்கள் வரவர அதிக சப்தத்தைக் கொடுத்தன. முக்கியமாகக் குதிரைப் படையின் கர்னல் மிகவும் அதிகமாக உண்டு குடித்து வந்ததால், வரவர முகம் அதிகமாய் சிவந்து வந்தது. தமது மற்ற விருந்தாளிகளுக்கு அவரை

எடுத்துக்காட்டாக கோமகன் காட்டி வந்தார். காதல் என்பது பூலோக விஷயமல்ல, தேவலோக உணர்ச்சி என்று இளஞ்சிரிப்போடு வெராவிற்கு பெர்க் சொல்லி வந்தார். எதிரே உட்கார்ந்திருந்த நட்டாஷாவுடன் கண்ணடித்துக்கொண்டு போரிஸ் தமது புதிய நண்பர் பீயருக்கு விருந்தாளிகள் யார் யார் என்பதைச் சொல்லிக்கொண்டிருந்தார். பீயர் சொற்பமாகவே பேசினார். ஆனால் புது முகங்களை உன்னிப்பாய் கவனித்து உணவை அதிகமாய் உட்கொண்டு வந்தார். இரண்டுவித சூப்புகள் கொண்டுவரப்பட்டன. ஆனால் ஆமை சூப்பையும் கார பதார்த்தத்தையும் அவர் எடுத்துக்கொண்டார். பின்னால் எந்த பதார்த்த வகைகளையும் எந்த ஒயினையும் விட்டுவிடாமல் உண்டுவந்தார். அடுத்தவரின் தோளுக்குப் பின்னால் மறைத்துகொண்டு நின்ற பட்லர், துணியால் சுற்றிய புட்டியை ஆச்சிரமாய் விருந்தாளிக்கு முன்னால் நீட்டி, அதன் பெயர்களை 'மடீரா... ஹங்கேரியன்... நைன் ஒயின்' என்று சொல்லி வந்தான். தமது தட்டுக்கு முன்னால் கோமகனின் முன்னெழுத்துக்கள் செதுக்கப்பட்ட நான்கு பளிங்குக் கோப்பைகள் இருந்தன. அவற்றில் கையில் அகப்பட்டது ஒன்றை எடுத்து நீட்டி ஒயினை வாங்கித்தமது மனம் திருப்தி அடையும் வரை பீயர் குடித்து வந்தார். வர வர அதிகமான சுமுகத்தோடு மற்ற விருந்தாளிகளை அவர் நோக்கி வந்தார். பதின்மூன்று வயதுப் பெண்கள், தாங்கள் காதலிக்கும் பையன் தங்களை அப்பொழுதுதான் முதன் முதலாக முத்தம் இட்டிருநதால் எப்படிப் பார்ப்பார்களோ, அந்த மாதிரி எதிரே உட்கார்ந்திருந்த நட்டாஷா போரிஸைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். சில வேளைகளில் அதேமாதிரி பார்வை பீயர் மீதும் விழுந்தது. அந்த வேடிக்கையான உயிர்துடிப்புள்ள சிறிய பெண்ணின் பார்வை அவரைக் காரணம் அறியாமல் சிரிக்கும்படி செய்தது.

சோனியாவுக்கு சிறிது தூரத்தில் ஜுலி காராகின் பக்கத்தில் நிக்கலஸ் அமர்நதிருந்தார். அவளோடு மீண்டும் தம்மை அறியாத புன்னகையோடு பேசிக்கொண்டிருந்தார். சோனியா பொதுவாக் புன்சிரிப்பு காட்டினாலும் பொறாமையால் துன்புறுவது தெரிந்தது. ஒரு சமயம் அவள் வெளிறிப் போவாள். சமயம் அவள் நாணமடைந்து முகம் சிவப்பாள். நிக்கலஸும் ஜுலியும் ஒருவருக்கொருவர் என்ன பேசிக்கொள்ளுகிறார்கள் என்பதை அறிய மிகுந்த உன்னிப்பாய் கவனிப்பாள். குழந்தைகளை யாராவது

சிறிது அவமதித்தாலும் உடனே அதை எதிர்ப்பதற்குத் தயாராய் இருப்பதுபோல, வாத்திச்சி சுற்றிலும் பார்த்துக்கொண்டிருந்தாள். அந்த விருந்தைப்பற்றி ஜெர்மனியில் உள்ள தமது வீட்டாருக்கு முழு விவரங்களை அனுப்புவதற்காக அங்கு வைக்கப்பட்ட எல்லா பதார்த்தங்களின் பெயர்களையும் எல்லா ஒயின்களின் பெயர்களையும் எல்லா பழ வர்க்கங்களின் பெயர்களையும் ஞாபகத்தில் வைக்க ஜெர்மன் வாத்தியார் முயற்சி செய்து கொண்டிருந்தார். மேஜைத் துணியில் சுற்றிய புட்டியைத் தனது கையில் வைத்துக்கொண்டு தமக்குக் கொடுக்காமல் தம்மைக் கடந்துபோன பட்லரின் செய்கையைப் பார்த்து அவர் மிகவும் மன வருத்தம் அடைந்தார். அந்த ஒயின் தமக்கு வேண்டாம் என்று காட்டுவதைப்போல அவர் முகத்தைச் சுளித்தார். ஆனால் தமக்குத் தாகத்திற்காகவோ ஆசைக்காகவோ தாம் அந்தத ஒயினை விரும்பவில்லை என்பதையும் அந்த ஒயினைப் பற்றிய விஷயத்தை அறிந்து கொள்ளுவதற்காகவே தாம் அதை விரும்பியதையும் ஒருவரும் அறிந்துகொள்ள மாட்டார்களே என்பதற்காக அவர் அவமானம் அடைந்தார்.



ஆண்கள் அமர்ந்து இருந்த மேஜை பக்கத்தில் வர வரப் பேச்சு சூடுகொண்டது. யுத்தப் பிரகடனம் பீட்டர்ஸ்பர்க்கில் ஏற்கனவே பிரசுரமாய் விட்டதென்றும், அன்றைய தினம் அதில் ஒரு பிரதியைத் தூதன்மூலம் சேனாதிபதிக்கு அனுப்பியதைத் தாமே நேரில் பார்த்ததாகவும் கர்னல் சொன்னார்.

'என்ன அவசியத்திற்காக நாம் போனபார்ட்டோடு யுத்தம் செய்யவேண்டும்?' என்று ஷின்ஷைன் கேட்டார். 'ஆஸ்திரியாவின் கொக்கரிப்பை அவர் அடக்கினார். அடுத்தபடியாக நமது முறை வருமென்று நான் பயப்படுகிறேன்.'

நரம்புகளில் இரத்தம் பொங்கித் ததும்பிக்கொண்டிருந்த அந்தக் கர்னல் உயரமாகவும் பருமனாகவும் இருந்தார். அவர் ஒரு ஜெர்மனியர். சேவைக்காக தம்மை அர்ப்பணம் செய்து, ருஷ்யாவிடம் தேச பக்திகொண்டவர் என்பது தெளவாய்த தெரிந்தது. ஷின்ஷைனின் பேச்சைக் கண்டு அவர் ஆத்திரம் அடைந்தார்.

ஜெர்மன் உச்சரிப்போடு அவர் பேசியதாவது:- 'அந்தக் காரணத்திற்காகத்தான், எனது அன்புள்ள ஐயா, அந்தக் காரணத்தை நமது சக்கரவர்த்தி அறிவார். அவர் தமது பிரகடனத்தின் ரூஷ்யாவை பயமுறுத்தும் ஆபத்தையும், ஏகாதிபத்தியத்தின் பாதுகாப்பிற்கும் கௌரவத்திற்கும் ஏற்பட்டிருக்கும் ஆபத்தையும் கண்டு அலட்சியமாய் இருக்க முடியாது என்று சொல்கிறார்...' ஒப்பந்தங்கள் என்ற வார்த்தையில்தான் அந்தப் பிரகடனத்தின் முழு அர்த்தமும் அடங்கி இருப்பதுபோல, அதைத் தனியாக அழுத்திச் சொன்னார்.

அவருடைய உத்தியோக ஞாபக சக்தி இருக்கிறதே அது எப்பொழுதும் தவறியதே இல்லை. அது அவருக்கு தனிச் சிறப்பாய் இருந்தது. அந்த ஞாபக சக்தியோடு பிரகடனத்தின் ஆரம்ப வார்த்தைகளை அவர் ஒப்புவித்தார். அதாவது;

'சக்கரவர்த்தியின் ஒரே முழு நோக்கமானது பலமான அடிப்படையில் ஐரோப்பாவில் சமாதானத்தை நிலைநாட்டுவது அவரை இப்பொழுது ராணுவத்தின் ஒரு பகுதியை வெளிநாட்டிற்கு அனுப்பவும், அவர நோக்கத்தை அடைவதற்கான புதிய நிலைமையை உண்டு பண்ணவும் அவர் தீர்மானம் கொள்ளும்படி செய்தது.'

'அதுதான், எனது அன்புள்ள ஐயா, அதற்குக் காரணம்...' என்று அவர் முடித்து ஒரு டம்ளர் ஒயினை கம்பீரத்தோடு குடித்துவிட்டு, கோமனின் ஆதரவை எதிர்பப்ரப்பதைப்போல அவரைப் பார்த்தார்.

'ஜெரோம், ஜெரோம், வீட்டிலுள்ள ராட்டினத்தை சுற்றிக் கொண்டிரு வெளியே ஊர் சுற்றாதே, என்ற இந்தப் பழமொழி உமக்குத் தெரியுமா?' என்று புருவத்தை நெரித்துக்கொண்டு புன்முறுவலோடு ஷின்ஷைன் கேட்டார்.

'இந்தப் பழமொழி நமக்கு முற்றிலும் பொருத்தமானது. சுவோராவை எடுத்துக்கொள்ளுவோம். என்ன செய்யவேண்டும் என்பது அவருக்குத் தெரியும் அப்படி இருந்தும் அவர் அடியோடு முறியடிக்கப்பட்டார். சுவோராவ்களை இப்போது நாம் எங்கே கண்டுபிடிப்பது?' என்று பிரஞ்சு மொழியிலும் ருஷ்யமொழியிலும் மாறி மாறிப் பேசினார்.

'கடைசி சொட்டு இரத்தம் இருக்கறவரையில் நாம் யுத்தம் செய்ய வேண்டும்' என்று மேஜையை அடித்துக்கொண்டு கர்னல் கூறினார். 'நமது சக்கரவர்த்திக்காக நாம் மடிய வேண்டும். அப்புறம் எல்லாம்

சரியாய்விடும். அதைப்பற்றி கூடியவரையில் குறைவாகவே நாம் விவாதிக்க வேண்டும். பழைய குதிரைப் படை வீரர்களாகிய நாங்கள் அப்படித்தான் அதை நோக்குகிறோம். அதுதான் முடிவு' என்று சொன்னார். அங்கே யுத்ததைப் பற்றிய விவாதம் நடப்பதைக் கேட்டு, தம்முடைய கூட்டாளியிடமிருந்து நிக்கலஸ் திரும்பி, தமது காதுகளாலும் கண்களாலும் கர்னல் பேசுவதை கவனித்தார். அச்சமயம் அவரைப் பார்த்து, 'இளைஞராகிய நீர், வாலிப குதிரைப் படை வீரராகிய நீர் இதைப்பற்றி என்ன சொல்லுகிறீர்?' என்று கர்னல் கேட்டார்.

'உமது கருத்துப்படியே நானும் நினைக்கிறேன்' என்று தாம் சாப்பிட்டு வந்த தட்டை சுற்றிக்கொண்டு ஒயின் கோப்பகைளை நகர்த்திக்கொண்டு முகத்தில் ஒளிவீச நிக்கலஸ் பதிலளித்தார். அவர் பேசியபோது ஏதோ ஒரு பெரிய ஆபத்தை எதிர்த்து நிற்பதைப் போலவும் அதற்கான துணிவும் முடிவும் செய்ததைப்போலவும் தோன்றியது. 'ருஷ்யர்களாகிய நாம் வெல்லவேண்டும் அல்லது மடியவேண்டும் என்பதில் எனக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது' என்று அவர் முடித்தார். அவர் வார்த்தைகளைப் பேசிய பின்பு அந்த சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமில்லாத உற்சாகமும் அழுத்தமும் அவற்றில் காணப்பட்டதால், அங்கு அவை விகாரமாய்த் தோன்றியதை அவரும் மற்றவர்களும் உணர்ந்தார்கள்.

'இப்பொழுது நீர் என்ன சொன்னீரோ அது ரொம்ப சிலாக்கியமானது' என்று அவருடைய கூட்டாளியான ஜூலி சொன்னாள்.

நிக்கலஸ் பேசியபோது சோனியாவுக்கு உடன்பெல்லாம் சிலிர்த்தது. அவள் நாணி முகம் சிவந்தாள். அந்த சிவப்பு காது வரையில் பரவி, பின்னால் அங்கிருந்து கழுத்திற்கும் தோள்களுக்கும் பரவிற்று.

கர்னலின் பேச்சை பியர் கவனித்தார். தாம் ஒப்புக்கொள்ளுவதைப் போல தலையை ஆட்டினார். 'அதுதான், பேஷ்' என்றார் அவர்.

மறுபடியும் மேஜையைத் தட்டிக்கொண்டு, 'இந்த இளைஞன் உண்மையான குதிரை வீரன்;' என்று கர்னல் கூவினார்.

'அங்கு எதற்காக இவ்வளவு சத்தத்தை உண் டு பண்ணுகிறீர்கள்?' என்று மேஜையின் மற்றொரு மூலையில் உட்கார்ந்திருந்த மரியா டிமிட்ரிவ்னா ஆழ்ந்த குரலில் திடீரென்று கேட்டாள். 'எதற்காக

மேசைமீது குத்துகிறீர்கள்? நீர் ஏன் இவ்வளவு பரபரப்பு அடைகிறீர்? பிரஞ்சுக்காரர்கள் இங்கே இருக்கிறார்கள் என்று நினைக்கிறீரா?' என்று குதிரை வீரரைப் பார்த்துக் கேட்டாள்.

'நான் உண்மையைப் பேசுகிறேன்' என்று குதிரை வீரர் புன்முகுறுவலோடு பதிலளித்தார்.

'எல்லாம் இந்த யுத்தத்தைப் பற்றித்தான்' எனறு கோமகன் மேஜை முழுவதும் கேட்கும்படி கத்தினார். 'எனது மகன் போகிறான் என்பது உனக்குத் தெரியுமா, மரியா டிமிட்ரிவ்னா? எனது மகன் போகிறான்.'

'என்னுடைய நான்கு குமாரர்கள்கூட ராணுவத்தில்தான் இருக்கிறார்கள். இருந்தும் நான் ஆர்ப்பாட்டம் செய்யவில்லை. எல்லாம் கடவுளின் கையில் இருக்கிறது. படுத்திருக்கும்போதே ஒருவன் மரணம் அடைவதும் உண்டு. கடவுள் விரும்பினால் யுத்தகளத்தில் கூட ஒருவனின் உயிரைக் காப்பாற்றலாம்' என்று ஆழ்ந்த தொனியில் மரியா டிமிட்ரிவ்னா பதிலளித்தாள். அவள் பேசியது மேஜை முழுவதிலும் சுலபமாய் கேட்டது.

'அது உண்மை!'

மீண்டும் உரையாடல்களை,சீமாட்டிகள் ஒரு பக்கத்திலும் புருஷர்கள் மற்றொரு பக்கத்திலுமாக ஆரம்பித்தனர்.

நட்டாஷாவின் தம்பி,' நீ கேட்கமாட்டாய். நீ கேட்கமாட்டாய் என்பது எனக்குத் தெரியும்' என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

'நான் கேட்பேன்' என்று நட்டாஷா பதிலளித்தாள்.

அவளுடைய முகம் திடீரென்று பொறுப்பற்ற, மகிழ்ச்சி நிறைந்த தீர்மானத்தால் சிவந்தது. அவள் பாதி எழுந்து, வரப்போவதைக் கவனிக்கும்படி தனது பார்வையால் எதிரே உட்கார்ந்திருந்த பீயரின் கவனத்தைத இழுத்தாள். தன் தாயாரைப் பார்தது 'அம்மா' என்று தெளிவான, தணிந்த குழத்தைக் குரலில் அந்த மேஜை பூராவும் கேட்கும்படி கணீரென்று அழைத்தாள்.

'அது என்ன?' என்று பதறிய கோமகள் கேட்டாள். ஆனால், தனது குமாரியின் முகத்தைப் பார்த்தபோது, அது வெறும் குறும்புத்தனம் என்பதை அறிந்து, அவளைப் பார்த்துக் கடுமையாக ஒரு விரலை ஆட்டி, பயமுறுத்தலோடு 'வேண்டாம்' என்ற முறையில் தனது தலையை ஆட்டினாள்.

உரையாடல் நிசப்தமாயிற்று.

'அம்மா! எந்தவிதமான இனிப்புப் பண்டங்களை இன்று நாம் சாப்பிடப் போகிறோம்?' என்று நட்டாஷாவின் குரல் இன்னும் அதிகமான உறுதியோடும் தீர்மானத்தோடும் ஒலித்தது.

கோமகள் முகத்தைச் சுளிக்க முயற்சித்தாள். ஆனால் முடியவில்லை. மரியா டிமிட்ரிவ்னா தனது பருத்த விரலை ஆட்டினாள்.

'கோசாக்' என்று பயமுறுத்தலோடு சொன்னாள்.

இந்த திடீர் சலசலப்பைப் பற்றி என்ன நினைப்பது என்று விருந்தாளிகளில் அநேகருக்குப் புரியாமல், வயதில் முதிர்ந்தவர்களை நோக்கினார்கள்.

'நீ ஜாக்கிரதையாய் நடந்துகொள்' என்று கோமகள் சொன்னாள்.

'அம்மா, நாம் இன்று என்ன இனிப்புப் பதார்த்தங்களை சாப்பிடப் போகிறோம்?' என்று மறுபடியும் நட்டாஷா அடங்காத்தனமான மகிழ்ச்சியோடும், தனது வேடிக்கைச் செயலைப் பார்த்து ஒருவரும் கோபித்துக்கொள்ளமாட்டார்கள் என்ற நம்பிக்கையோடும் தைரியமாக மறுபடியும் இரைந்தாள்.

சோனியாவும் பருத்த சிறிய பெட்டியாவும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

'இப்பொழுது பார், நான் கேட்டுவிட்டேன்' என்று தனது தம்பிக்கும் பீயருக்கும் கேட்கும்படி மெதுவாய் சொல்லிவிட்டு, பீயரை மறுபடியும் நோக்கினாள்.

'சர்க்கரைப் பொங்கல். ஆனால், உனக்கு எதுவும் கிடையாது' என்றாள் மரியா டிமிட்ரிவ்னா.

அங்கு பயப்படுவதற்கு எதுவும் இல்லை எனக் கண்டாள், நட்டாஷா. ஆகவே அவள் மரியா டிமிட்ரிவ்னாவையும்கூட தைரியமாக எதிர்த்தாள்.

'மரியா டிமிட்ரிவ்னா! என்ன விதமான சர்க்கரைப் பொங்கல்? எனக்கு ஐஸ்கிரீம் பிடிக்காது.'

காரட் கலந்தது.'

'இல்லை, என்ன தினுசு, மரியா டிமிட்ரிவ்னா? என்ன தினுசு?' என்று அவள் அநேகமாய்க் கதறினாள். 'எனக்குத் தெரிய வேண்டும்.'

மரியா டிமிட்ரிவ்னாவும் கோமகளும் பலமாய் சிரித்தார்கள். அதைப் பார்த்து மற்ற விருந்தாளிகளும் சிரித்தார்கள். ஒவ்வொருவரும் சிரித்தார்கள்; ஆனால், மரியா டிமிட்ரிவ்னாவின் பதிலுக்காக அல்ல; மரியா டிமிட்ரிவ்னாவைக்கூட இந்த மோஸ்தரில் நடத்தத் துணிந்த அந்தச் சிறிய பெண்ணின் ஆச்சரியமான தைரியத்தையும் புத்திசாலித்தனத்தையும் கண்டே சிரித்தார்கள்.

அன்னாசிப் பழ சர்க்கரைப் பொங்கல் என்று சொல்லிய பின்பே நட்டாஷா தனது கேள்வியை நிறுத்திக்கொண்டாள். பொங்கலுக்கு முன்பாக ஷாம்பைன் கொடுத்தார்கள். பாண்டு வாத்தியம் மறுபடியும் முழங்கியது. கோமகனும் கோமகளும் முத்தமிட்டுக் கொண்டார்கள். விருந்தாளிகள் தங்கள் ஆசனங்களைவிட்டு எழுந்து சென்று கோமகளைப் பாராட்டிவிட்டு மது வகைகள் வைக்கப்பட்டிருந்த மேஜை அருகே சென்றார்கள். கோமகனின் ஒயின் கிண்ணத்தோடும் குழந்தைகளின் கிண்ணத்தோடும், ஒருவருக்கொருவர் மற்றொருவரின் கிண்ணத்தோடும் தங்கள் கிண்ணங்களைத் தொட்டுக் கொண்டார்கள். மறுபடியும் சேவகர்கள் இங்கும் அங்கும் ஓடினார்கள். நாற்காலிகள் கிரீச்சிட்டன. எப்படி உள்ளே வந்தார்களோ அதே ஒழுங்கில், அதிகமான சிவந்த முகங்களுடன், விருந்தாளிகள் வரவேற்பு அறைக்கும் படிப்பு அறைக்கும் திரும்பினார்கள்.




சீட்டாட்டத்திற்காக மேசைகள் போடப்பட்டன. பாஸ்டன் என்ற விளையாட்டுக்கு ஜோடிகள் சேர்ந்தனர். கோமகளின் விருந்தாளிகள், சிலர் இரண்டு வரவேற்பு அறைகளிலும், சிலர் உட்காரும் அறையிலும், சிலர் வாசக சாலையிலும் அமர்ந்தார்கள்.

கோமகன் தனது சீட்டுகளை விசிறிமாதிரி வைத்துக்கொண்டு சாப்பாட்டிற்குப் பின்னால், வழக்கமாக அவர் ஆரம்பிக்கும் தூக்கத்தில் விழுந்துவிடாமல் கஷ்டத்தோடு சமாளித்துக்கொண்டு, ஒவ்வொன்றைப் பற்றியும் சிரித்ததுக்கொண்டிருந்தார். கோமகளின் தூண்டுதலின் பேரில் கிளாவிகார்டு, ஹார்ப் என்ற வாத்தியங்களைச் சுற்றி இளைஞர்கள் கூடினார்கள். எல்லோரும் கேட்டுக்

கொண்டபடி ஜூலி முதலில் வாசித்தாள். அவள் ஹார்ப் வாத்தியத்திற்கிணங்க சிறிது வாசித்த பின்பு மற்ற வாலிப சீமாட்டிகளோடு சேர்ந்துகொண்டு சங்கீதத் திறமைக்கு பேர்பெற்றிருநத நட்டாஷாவையும் நிக்கலஸையும் பாடும்படி கெஞ்சினார்கள். வளர்ந்த பெண்ணைப்போல தன்னை நடத்ததுவதைக்கண்டு நட்டாஷாவுக்கு மிகுந்த பெருமையாய் இருப்பது தெளிவாய் இருந்தாலும், அதே சமயத்தில் அவள் நாணமும் கொண்டாடள்.

'நாம் என்ன பாடலாம்?' என்று அவள் கேட்டாள்.

'நீரோடை' என்று நிக்கலஸ் கூறினார்.

'நல்லது, சீக்கிரமாக ஆரம்பிப்போம். போரிஸ், இங்கே வாரும்' என்றனாள் நட்டாஷா. 'ஆனால், சோனியா எங்கே?'

அவள் சுற்றிப் பார்த்து, தன்னுடைய தோழியை அந்த அறையில் காணாததால், அவளைப் பார்ப்பதற்கு ஓடினாள்.

சோனியாவின் அறைக்குள் ஓடினாள். அங்கு அவளைக் காணாததால், நட்டாஷா குழந்தைகளின் அறைக்குள் ஓடினாள்; அங்கேயும் அவளைக் காணவில்லை. ஆளோடி (பாதை)யில் கிடந்த பெரிய பெட்டியில்தான் அவள் இருக்கவேண்டும் என்று நட்டாஷா முடிவு செய்தாள். ராஸ்டோ வீட்டிலுள்ள இளம் பெண்களுக்கெல்லாம், தங்கள் வருத்தத்தைத் தீர்த்துக்கொள்ளும் இடமாக ஆளோடியில் கிடந்த அந்தப் பெரிய பெட்டி விளங்கியது. உண்மையில் அந்தப் பெரிய பெட்டியின்மீது கிடந்த தாதியின் அழுக்கடைந்த இறகுப் படுக்கையில், தன்னுடைய சிகப்பு உடை கசங்கிக் கிடக்க, தனது முகத்தைமெல்லிய விரல்களால் மறைத்துக்கொண்டு, தன்னுடைய திறந்த சிறிய தோள்கள் பலமாய்க் குலுங்குமாறு, விம்மி விம்மி அழுதுகொண்டு சோனியா முகம் குப்புறப்படுத்திருந்தாள். அந்த மகாத்மா தினத்ததில் நாள் பூராவாக சந்தோஷத்துடன் ஒளிர்ந்த நட்டாஷாவின் முகம் திடீரென்று மாறியது. அவளுடைய கண்கள் நிலைத்து நின்றன. அவளுடைய பரந்த கழுத்து வழியாக ஒரு நடுக்கம் கீழே இறங்கியது. அவளுடைய வாயின் ஓரங்கள் தொங்கின.

'சோனியா, என்ன இது?... என்ன விஷயம்?... ஊ..ஊ..ஊ..' நட்டாஷாவின் பெரிய வாய் விரிந்து அவளை அழகற்றவளாய்க் காட்டியது. சோனியா அழுகிறாள் என்பதைத் தவிர, வேறு என்ன காரணம் என்பதை அறியாமல் அவள் அறியாமல் அவள்

குழந்தையைப்போல ஓலமிட ஆரம்பித்தாள். சோனியா பதில் சொல்லுவதற்காகு தன் தலையை உயர்த்த முயன்றாள். ஆனால், முடியவில்லை. இன்னும் ஆழமாகப் படுக்கையில் தன் முகத்தை மறைத்துக்கொண்டாள். அந்த நீலக்கோடிட்ட இறகு மெத்தையில் உட்கார்ந்து, தன்னுடைய தோழியைக் கட்டிக்கொண்டு நட்டாஷா அழுதாள். சிரமத்தோடு சோனியா எழுந்து உட்கார்ந்து, தன்னுடைய கண்களைத் துடைத்துக் கொண்டு விளக்க ஆரம்பித்தாள்.

'நிக்கலஸ் ஒரு வாரத்தில் போகப்போகிறார். அவருடைய... தஸ்தாவேஜுகள் வந்துவிட்டன... அவரே எனக்குச் சொன்னார்... என்றாலும் நான் அழக்கூடாது' என்று கூறி தன் கையில் இருந்த காகிதத்தைக் காட்டினாள். அதில் நிக்கலஸ் எழுதிய கவிகள் இருந்தன. 'இருந்தாலும் நான் அழக்கூடாது. ஆனால் உனக்குத் தெரியாது... ஒருவராலும் அறிந்துகொள்ள முடியாது... அவர் எப்பேர்ப்பட்ட ஆத்மா!'

அவருக்கு அவ்வளவு உதாரமான ஆத்மா இருந்ததால், அவள் மீண்டும் கதற ஆரம்பித்தாள்.

'உனக்கு எல்லாம் நல்லதுதான்... நான் பொறாமைப் படவில்லை... உன்னை நேசிக்கிறேன். போரிஸையும்கூட நான் நேசிக்கிறேன்' என்று கூறி கொஞ்சம் ஆசுவாசப் படுத்திக்கொண்டு மீண்டும் சொன்னாள். 'அவர் இனிமையானவர்... உன்னுடைய வழியில் இடையூறுகள் இல்லை.. ஆனால், நிக்கலஸ் எனது ஒன்றுவிட்ட சகோதரர்... உத்தரவு வாங்கவேண்டும்... பிஷப்தான் கொடுக்கவேண்டும்... அப்படியிருந்ததாலும் அதைச் செய்ய முடியாதே. தவிரவும் அம்மாவிடம் சொன்னால், (கோமகளை சோனியா தன் தாயாகவே மதித்து அப்படியே அழைத்து வந்தாள்) நான் நிக்கலஸின் எதிர் காலத்தைப் பாழாக்குகிறேன். நான் இறக்கமற்றவள், நன்றி கெட்டவள் என்றெல்லாம்...ஆனால் உண்மையில் கடவுள்தான் என்சாட்சி (இந்த இடத்தில் அவள் சிலுவைக் குறி காட்டினாள்) அவள் மீது எனக்கு மிகுந்த பிரியமுண்டு. உங்கள் எல்லார்மீதும் எனக்குப் பிரியமுண்டு. வெராமட்டும்... எதற்காக? நான் அவளுக்கு என்ன செய்தேன்? நான் உங்களுக்கு மிகுந்த நன்றியுள்ளவளாய் இருப்பதால் ஒவ்வொன்றையும் விருப்பத்தோடு நான் தியாகம் செய்வேன். ஆனால், என்னிடம் எதுவும் இல்லை...' (ஒன்றுவிட்ட சகோதர சகோதரிகள் திருமண செய்ய வேண்டுமானால் விசேஷ அனுமதி பெறவேண்டும்).

சோனியாவால் தொடர்ந்து பேச முடியவில்லை. மறுபடியும் தன் முகத்தைத் தன் கைகளிலும் இறகுப் படுக்கையிலும் மறைத்துக் கொண்டாள். நட்டாஷா அவளுக்கு ஆறுதல் சொல்ல ஆரம்பித்தாள். ஆனால் அவளுடைய முகம் அவளுடைய தோழியினுடைய கஷ்டங்களை உணர்ந்ததாய்க் காட்டியது.

தனது தோழியின் துக்கத்திற்கு உண்மையான காரணத்தை அவள் யூகித்து அறிந்ததுபோல திடீரென்று, 'சோனியா, விருந்திற்கு அப்புறம், வெரா உன்னிடம் ஏதோ சொன்னாள் என்பது எனக்கு நிச்சயமாகிறது. அவள் சொல்லவில்லையா?' என்று கேட்டாள்.

'ஆம், இந்தக் கவிகளை நிக்கலஸ் தாமே எழுதினார். நான வேறு சிலவற்றிற்கு நகல் எடுத்துக்கொண்டிருந்னே. அவைகளை என் மேஜைமீது அவள் பார்த்தாள். அவைகளை அம்மாவிடம் காட்டப்போவதாகவும், நான் நன்றி கெட்டவள் என்றும், அவர் என்னை மணக்கும்படி அம்மா ஒருநாளும் அனுமதிக்கப் போவதில்லை என்றும், அவர் ஜூலியைத்தான் மணப்பார் என்றும் சொன்னாள். அவளுடன் நாள்பூராவாக அவர் இருந்து வருவதை, நீ பார்த்தாய்... நட்டாஷா, இம்மாதிரி எனக்கு ஏற்படுவதற்கு நான் என்ன செய்து விட்டேன்?'

முன்னைவிட அதிகக் கசப்போடு அவள் மீண்டும் தேம்ப ஆரம்பித்தாள். நட்டாஷா அவளைத் தூக்கிக் கட்டிக்கொண்டு தன் கண்ணீரோடு புன்சிரிப்பும் காட்டி அவளைத் தேற்ற ஆரம்பித்தாள்.

'சோனியா, அவளை நம்பாதே, தஎன் பொக்கிஷமே! அவளை நம்பாதே! நாமும் நிக்கலஸூம், நாம் மூன்று பேரும் இராச் சாப்பாட்டுக்குப் பின்னால் எப்படிப் பேசிக்கொண்டிந்தோம் என்பது உனக்கு நினைவு இருக்கிறதா? ஒவ்வொரு விஷயத்தையும் எப்படிச் செய்யவேண்டும் என்பதை நாம் முடிவு செய்தோம் அல்லவா? எனக்கு எப்படி என்பது பூராவாக ஞாபகம் இல்லை. ஆனால், உனக்கு எப்படி அவற்றையெல்லாம் செய்துவிடலாம், எவ்வளவு இனிமையாய் அவையெல்லாம் இருக்கும் என்பது ஞாபகம் இல்லையா? இதோ, ஷின்ஷைன் மாமாவின் சகோதரர் தன் ஒன்று விட்ட சகோதரியை மணந்துகொள்ளவில்லையா? இவ்வளவிற்கும் அவள் முதலாவது முறை. நாமோ இரண்டாவது முறை என்பது உனக்குத் தெரியும். அது முயற்சியும் சாத்தியம் என்றே போரிஸ் சொல்லுகிறார். அவரிடம் நான் அதைப்பற்றி யெல்லாம் சொல்லி இருக்கிறேன் என்பது உனக்கு தெரியும். அவர்

மிகுந்த புத்திசாலி, மிகுந்த நல்லவர். சோனியா, எனது அன்பே, சோனியா பொக்கிஷமே, நீ அழாதே' என்று சொல்லித அவளை முத்தமிட்டுச் சிரித்தாள்.

'வெரா பழிகாரி. அவளைப் பற்றிக் கவலைப்படாதே. எல்லா விஷயங்களும் சரியாக வரும். அவள் அம்மாவிடம் ஒன்றும் சொல்லமாட்டாள். நிக்கலஸ் தாமே அவளிடம் சொல்வார். ஜூலியைப்பபற்றி அவர் தலையில் கவலை கொள்ளவேயில்லை.'

நட்டாஷா அவள் தலையில் முத்தமிட்டாள்.

சோனியா எழுந்து உட்கார்ந்தாள். அந்தச் சிறிய பூனைக்குட்டி முகம் ஒளிர, கண்கள் பிரகாசித்தன, ஒரு பூனைக்குட்டி செய்வதைப் போல வாலை உயர்த்தி தன்னுடைய மெல்லிய பாதங்களால் கீழே குதித்து, பினனால் நூல் பந்தோடு விளயைாடுவதற்குத் தயாராய் இருக்கும் ஒரு பூனைக்குட்டியைப்போல் தோன்றியது.

'நீ அப்படி நினைக்கிறாயா?...நிஜமாகவோ? உண்மையாகவா?' என்று அவள் சொல்லி தனது சட்டையையும் தலை முடியையும் வேகமாய்த் தடவி சரி செய்தாள்.

'நிஜமாக, உண்மையாக!' என்று நட்டாஷா கூறி தனது தோழியின் ஜடைக்கு வெளியே விழுந்திருந்த ஒரு முடிச்சுருளையை எடுத்து, ஜடைக்குள்ளே சொருகி வைத்தாள்.

இருவரும் சிரித்தார்கள்.

'நல்லது, நாம்போய் ''நீரோடை'' என்ற பாட்டைப்பாடுவோம்.'

'போகலாம் வா'

நட்டாஷா திடீரென்று நின்று, 'எனக்கு எதிராக உட்கார்ந் திருந்தாரே, அந்த தடித்த பீயர், அவர் ரொம்ப தமாஷாய் இருக்கிறார்; உனக்குத் தெரியுமா? நான் ரொம்ப மகிழச்சி அடைகிறேன்' என்றாள்.

ஆளோடி வழியாக அவள் ஓடினாள்.

சோனியா தன்மேல் ஒட்டியிருந்த சிலஇறகுகளை உதறி விட்டு, கவிதைக்காகிதத்தைத் தனது மெலிந்தே சிறிய மார்பை ஒட்டியதாய்ப் போலிருந்த சட்டைக்குள் சொருகிவைத்து, ஆளோடி வழியாக நட்டாஷாவுக்குப் பின்னால், உட்காரும் அறைக்கு சிவந்த முகத்தோடு மெல்லிய மகிழ்ச்சியான நடையோடு ஓடினாள். விருந்தாளிகளின் வேண்டுகோளின்படி, நால்வரும் சேர்ந்து

பாடக்கூடிய 'நீரோடை' எனற பாட்டை, ஒவ்வொருவரும் மகிழ்ச்சியடையும் விதத்தில் இந்த சிறுவர், சிறுமியர் பாடினார்கள். பின்னால் அப்பொழுதுதான் கற்றுக்கொண்ட ஒரு பாட்டை நிக்கலஸ் பாடினார்.

இரவு நேரத்தில் சந்திரனின் ஒளியில், மனக்கோட்டைகள் சுதந்திரமாய் உலாவும்போது, இந்த உலகத்தில் ஒருவர் இருக்கிறார். அவர் இன்னும் உன்னைப் பற்றியேதான் நினைத்துக் கொண்டிருக்கிறார் என்பதை உணரும்போது, எவ்வளவு இனிமையாய் இருக்கிறது.

அவளுடைய விரல்கள் ஹார்ப்பை மீட்டி, புல்வெளித் மைதானத்தின் வழியாக இங்கே இனிய சங்கீதத்தை பறக்க விடும்போது, உனக்காகவே அவளுடைய இருதயம் விம்முகிறது. அந்தச் செய்தியை உனக்கு அனுப்ப பெரு மூச்சுவிடுகிறாள்.

ஒரு நாள், இரண்டு நாள், அப்புறம் கலப்பற்ற ஆனந்தம். ஆனால், ஒ, அதுவரை என் உயிர வாழமுடியாதே...

கடைசிப் பாட்டை அவர் முடிப்பதற்கு முன்பாகவே, பெரிய மண்டபத்தில் நடனம் ஆடுவதற்கு வாலிபக் கூட்டத்தினர் தயாராக ஆரம்பித்தார்கள். காலடி ஓசைகளும், வாத்தியக்காரர்களின் கனைப்புகளும் காலரியில் இருந்து கேட்டன.

பீயர் வரவேற்பு அறையில் உட்கார்நதிருந்தார். அவர் சமீபத்தில்தான் வெளிநாட்டிலிருந்து திரும்பியபடியால், அவரோடு ஷின்ஷைன் அரசியலைப் பற்றிப் பேசி வந்தார். மற்றவர்களும் அந்த உரையாடலில் கலந்துகொண்டாலும், அவையெல்லாம் பீயருக்கு மிகுந்த சலிப்பாய் இருந்தன. சங்கீதம் ஆரம்பித்ததும் நட்டாஷா உள்ளே வந்து நேராக பீயரிடம் போய் சிரித்துக்கொண்டும் நாணி முகம் சிவந்து கொண்டும் பேசினாள்:

'நடனத்தில் நீர் கலந்துகொள்ள வேண்டும் என்று உம்மைக் கேட்கும்படி அம்மா என்னிடம் சொன்னாள். நடனங்களை ஒன்றைக் கொண்டு குழப்பிவிடுவேன் என்று எனக்குப் பயமாய் இருக்கிறது. ஆனால் நீ எனக்கு வாத்தியராய் இருந்தால்...' என்று பீயர் பதில் அளித்து தமது பெரிய கையை கீழே இறக்கி அந்த ஒல்லிய சிறிய பெண்ணுக்கு அளித்தார்.

ஜோடிகள் தயாரரிக் கொண்டிருந்தார்கள். வாத்தியக்காரர்கள் சுருதி கூட்ட ஆரம்பித்தார்கள். பீயர் தமது சிறிய ஜோடியோடு

அமர்ந்தார். ஒரு வயது வந்த மனிதரோடு, அதிலும் வெளிநாடு சென்று திரும்பியவரோடு, தான் ஆடப்போகிறோம் என்பதனால் நட்டாஷா முற்றிலும் சந்தோஷமாய் இருந்தாள். எல்லாரும் கவனிக்கும்படியான ஒரு இடத்தில் அவள் அமர்ந்து வயது வந்த சீமாட்டியைப்போல அவரோடு பேசிக்கொண்டிருந்தாள். கொஞ்ச நேரம் வைத்திருக்கும்படி அங்கு வந்த சீமாட்டிகளில் ஒருவள் அவளிடம் கொடுத்திருந்த விசிறியைத் தன் கையில் பிடித்துக்கொண்டிருந்தாள். ஒரு உயர் வட்டாரப் பெண் மாதிரி அமர்ந்து கொண்டு (அவள் எப்பொழுது எங்கே அதைக் கற்றுக்கொண்டாள் என்பது கடவுளுக்குத்தான் தெரியும்) விசிறியால் தனக்கு வீசிக்கொண்டு, விசிறிக்கு மேலாகப் புன்னகை காட்டி, தனது ஜோடியோடு பேசிக்கொண்டிருந்தாள்.

'அம்மம்மா! இதோ அவளைப் பாருங்கள்! என்று நடன மண்டபத்தைக் கடந்துபோகும்போது நட்டாஷாவைச் சுட்டிக் காட்டி கோமகள் கூவினாள்.

நட்டாஷா நாணிக்கோணி சிரித்தாள்.

'நல்லது, உண்மையாகவே, அம்மா! ஏன் நீ அப்படிச் சொல்ல வேண்டும்? அங்கே ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது?'

அவர்கள் மூன்றாவது நடனம் ஆடிக்கொண்டிருந்தபோது, உட்காரும் அறையில் நாற்காலிகளைப் பின்னால் இழுத்துப் போடும் சத்தம் கேட்டது. அங்கேதான் கோமகனும் மரியா டிமிட்ரிவ்னாவும் வயதானவர்களும் பிரபலஸ்தர்களில் பெரும்பான்மையோரும். சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். வெகு நேரம் உட்கார்ந்திருந்தபடியால், அவர்கள் இப்பொழுது தங்கள் கைகால்களை நீட்டி உடம்பை முறித்துவிட்டுக் கொண்டு, தங்களுடைய பணப் பைகளையும், புத்தகங்களையும் சரியாய் வைத்துக்கொண்டு நடன மண்டபத்திற்குள் நுழைந்தார்கள். முதலில் மரியா டிமிட்ரிவ்னாவும் கோமகனும் மலர்ந்த முகங்களோடு வந்தார்கள். கோமகன் விளையாட்டு நடன மோஸ்தரில் தமது வளைந்த கரத்தை மரியா டிமிடரிவ்னாவிடம் நீட்டினார். அவர் நிமிர்ந்தார். கலப்பற்ற மகிழ்ச்சிப் புன்னகை அவர் முகத்தில் ஒளர்ந்தது. கடைசி ஆட்டம் முடிந்ததும், வாத்தியக்காரர்களுக்கு தமது கைகளைத் தட்டி, காலரியைப் பார்த்துக் கூவி, முதலாவது வயலின்காரரிடம், 'சிமென்! டானியல் கூப்பர் உமக்குத் தெரியுமா?' என்று கேட்டார்.

இதுதான் கோமகனின் மனதிற்குகந்த நடனம். அது தமது வாலிப காலத்தில் ஆடிய நடனம். (அது ஒரு ஆங்கில நடனம்.)

'அப்பாவைப் பாருங்கள்' என்று அங்கிருந்தவர்களை எல்லாம் பார்த்து நட்டாஷா, தான் ஒரு வளர்ந்த ஜோடியோடு நடனமாடிக்கொண்டிருப்பதை மறந்து, சுருண்ட தலை முடியுள்ள தனது தலையைத் தனது முட்டுவரையில் குனிந்து கூவினாள். அதைக் கேட்டு அந்த அறை முழுவதும் சிரிப்பால் அதிர்ந்தது.

அந்த மகிழ்ச்சியுள்ள வயதான கனவான், உயரமான, கனமான தமது ஜோடி, மரியா டிமிட்ரிவ்னாவிடம் வளைந்த கரங்களோடு நின்று தாளம் போட்டுக்கொண்டு, தோள்களை நிமிர்த்தி, முன் பாதங்களை உயர்த்தி, கால்களினால் மெதுவாக தரையைத் தட்டிக் கொண்டிருந்ததை, உண்மையாகவே அறையில் இருந்த ஒவ்வொருவரும் மகிழ்ச்சிப் புன்னகையோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவருடைய உருண்டை முகத்தை வரவர விரிவாக்கிக்கொண்டுவந்த புன்னகை, என்ன வரப் போகிறது என்பதை அங்கு பார்த்தவர்களுக்குத் தெளிவாக்கியது. மன மகிழ்ச்சியைக் கொடுக்கும் அந்த டானியல் கூப்பர் ராகம் ஆரம்பித்தது. உடனே நடன மண்டபத்தின் எல்லா வாயில்களிலும், ஒரு பக்கம் வீட்டு வேலை செய்யும் ஆண் அடிமைகளும், மற்றொரு பக்கம் பெண் அடிமைகளும் திடீரென்று கூடி நின்றார்கள். மலர்ந்த முகங்களோடு தங்கள் எஜமானர் செய்யப்போகும் கேளிக்கைகளைப் பார்ப்பதற்கு அவர்கள் வந்தார்கள்.

'எஜமானைப் பாருங்கள்! அவர் ஒரு அசல் கழுகுதான்!' என்று ஒரு வாயிலில் நின்றிருந்த தாதி உரக்கப் பேசினாள்.

கோமகன் அழகாய் நடனமாடினார். அவருக்கு ஆடத்தெரியும். ஆனால் அவருடைய ஜோடி நன்றாய் ஆடமுடியவில்லை, விரும்பவுமில்லை. அவளுடைய மிகப் பெரிய உடல் நிமிர்ந்து நின்றது. வலிமை பொருந்திய கரங்கள் கீழே தொங்கின. (அவளுடைய அழகுப் பையை சீமாட்டியடம் கொடுத்து விட்டாள்). ஆனால் அவளுடைய அழுத்தமான, அழகான முகந்தான் உண்மையில் நடனத்தில் கலந்துகொண்டது. கோமகனின் தடித்த முழு உருவமும் எந்த பாவத்தைக் காட்டியதோ, அதே பாவத்தை மரியா டிமிட்ரிவ்னாவின் மலர்ந்த முகமும் ஆடிய மூக்கும் காட்டின. கோமகன் வரவர அதிகமாய் ஆடிய போது

அவருடைய எதிர்பாராத சாமர்த்தியமான ஆட்டங்களையும் தமது பாதங்களை மெதுவாக எடுத்துவைத்துப் பாய்ந்து ஆரய லாவகத்தையும் கண்டு, அங்கிருந்த பார்வையாளர்கள் மனம் களிந்தார்கள் என்றாலும் மரியா டிமிட்ரிவ்னாவும் பார்வையாளர்களின் மனம் களிக்கும்படி செய்வதில் குறைந்து விடவில்லை. அவளுடைய வழக்கமான விறைப்புத்தன்மையும் அவளுடைய பருமனையும் கொண்டு பார்த்தபோது, தனது தோள்களை அவள் அசைப்பதற்குச் சிறிதளவு முயற்சி செய்தாலும், திரும்புவதற்குத் தன் கைகளை சிறிதளவு வளைத்தாலும், அல்லது சிறிதளவு தன் பாதங்களைப் பூமியில் உதைத்தாலும், அவ்வளவும் அங்கிருந்தவர்களுக்கு அதேமாதிரி மகிழ்ச்சியைக் கொடுத்தன. நடனம் வரவர அதிக உற்சாகமாகிக்கொண்டு வந்தது. மற்ற ஜோடிகள் தங்கள் ஆட்டங்களுக்கு மற்றவர்களிடமிருந்து ஒரு வினாடிகூட கவனத்தைப் பெறமுடியவில்லை; பெறுவதற்கு அவர்கள் முயற்சி செய்யவுமில்லை. எல்லாரும் கோமகனையும் மரியா டிமிட்ரிவ்னாவையும் கவனித்ததுக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொருவரும் அந்த ஜோடியின் மீதிருந்து தங்கள் கண்களை எடுக்காமல் இருந்தபோதிலும், நட்டாஷா ஒவ்வொருவரையும் கைச்சட்டையையோ உடையையோ பிடித்திழுத்து, 'அப்பாவைப் பாருங்கள்!' என்று தூண்டிக்கொண்டே இருந்தாள். நடனத்தின் மத்தியில் இருந்த ஓய்வு நேரத்தில், கோமகன் வேகாய் மூச்சு விட்டுக்கொண்டு, வாத்தியக்காரர்களைப் பார்த்து, துரிதமாய் வாசிக்கும்படி கையை ஆட்டிக் கூச்சலிட்டார். வேகமாய், மகவும் வேகமாய், இன்னும் வேகமாய், லேசாய், மிகவும் லேசாய், இன்னும் அதிகமாய் லேசாய், மரியா டிமிட்ரிவ்னாவைச் சுற்றி, ஒரு சமயம் தமது முன் பாதங்களாலும், மற்றொரு சமயம் தமது குதிகால்களாலுமாகக் கோமகன் சுழன்றார். ஆசனத்திற்கு தமது ஜோடியைக் கொண்டுபோய் சேர்க்கிற வரையில் அம்மாதிரி சுழன்று, தமது கடைசிச் செய்கையாக பின்பக்கமாக காலைத்தூக்கி, வியர்த்துக் கொட்டிய தலையைத் தாழ்த்தி, புன்சிரிப்பு கொண்டு தமது கையால் அங்கிருந்தவர்களுக்கெல்லாம் ஒரு பரந்த வீச்சு வீசியபோது, நட்டாஷா உட்பட எலாரும் இடிபோல் கைதட்டி சிரித்தார்கள். ஜோடிகள் இருவரும் வேகமாய் மூச்சு வாங்கிக் கொண்டுத் தங்களுடைய மெல்லிய கைக்குட்டைகளால் முகங்களைத் துடைத்துக் கொண்டு அசையாமல் நின்றார்கள்.

'எங்கள் காலத்தில் இப்படித்தான் நாங்கள் நடனம் ஆடுவது வழக்கம், எனது அன்பே' என்றார் கோமகன். பலமாய் மூச்சுவிட்டுக் கொண்டு சட்டைக்கைகளை மேலே மடக்கிவிட்டு, 'அதுதான் ஒரு டானியல் கூப்பர்' என்று மரியா டிமிட்ரிவ்னா சொன்னாள்.

1

21

ராஸ்டோவின் நடன மண்டபத்தில் சலித்துப்போன வாத்தியக்காரர்கள் குளறுபடி செய்து வாசித்து, ஆறாவது நடனம் நடந்து கொண்டிருந்தபோது, சோர்வடைந்த சேவகர்களும் சமையற்காரர்களும் இராச் சாப்பாட்டைச் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது கோமகன் பெஜுகாவிற்கு ஆறாவது தடவையாக நோய் தாக்கியது. பிழைப்பது அசாத்தியம் என்று டாக்டர்கள் கூறினார்கள். வாய்பேசாத பாவ அறிக்கையையும் நற்கருணையையும் செத்துக் கொண்டிருப்பவருக்குச் செய்த பின்பு, அபிஷேகத்திற்கான ஞானானுமானத்திற்கு வேண்டிய ஆயத்தங்கள் நடந்துகொண்டிருந்தன. அம்மாதிரி சந்தர்ப்பங்களில் வழக்கமாய் ஏற்படக்கூடிய பரபரப்பும் எதிர்பார்க்கும் ஆவலும் அந்த வீட்டில் இருந்தன. வீட்டுக்கு வெளியே, வாசல் கதவுகளுக்கு அப்பால் சவப்பெட்டி தயாரிப்பவர்களின் கூட்டம் ஒன்று காத்திருந்தது. வீட்டை நோக்கி ஒரு வண்டி வரும்போது அவர்கள் ஒளிந்து கொள்ளுவார்கள். மிக உயர்ந்த செலவில் ஒரு சவ ஊர்வலத்திற்கான ஆர்டர் தங்களுக்குக் கிடைக்கும் என்று நம்பினார்கள். மாஸ்கோவின் ராணுவ கவர்னர் விடாமல் தமது மெய்க் காப்பாளர்களை அனுப்பி, கோமகனின் தேக நிலை பற்றி விசாரித்து வந்தார். காத்ரைன் தர்பாரில் மிகப் பிரபலமாய் விளங்கிய கோமகன் பெஜுகாவிற்கு கடைசி மரியாதையை செய்வதற்காக அன்று மாலை அவரே நேரில் வந்தார்.

அந்த அற்புதமான வரவேற்பு மண்டபத்தில் கூட்டம் நிறைந்து இருந்தது. மரண வாயிலில் இருந்தவரோடு தனியாக அரை மணி நேரம் ராணுவ கவர்னர் தங்கிவிட்டு, வெளியே போகும்போது அங்கிருந்த எல்லோரும் மரியாதையாக எழுந்து நின்றார்கள். தம்மீது டாக்டர்களும் பாதிரிகளும் கோமகனின் பந்துக்களும் திருப்பிய பார்வையிலிருந்து தப்பித்துக் கொள்ளுவதற்காக, அங்கிருந்தவர்களின் தலைவணங்கிய மரியாதைகளை லேசாக அங்கீகரித்துவிட்டு வெளியேறினார். சென்ற தினங்களில் மெலிந்தும் வெளிறியும்

போன இளவரசர் வாசைலி, அவருடன் வாசல் வரையில் சென்று தணிந்த குரலில் எதையோ பல தடவைகள் திருப்பித் திருப்பிச் சொன்னார்.

ராணுவ கவர்னர் போன பின்பு நடன மண்டபத்தில் கிடந்த ஒரு நாற்காலியில் இளவரசர் வாசைலி தன்னந்தனியாக உட்கார்ந்து, கால் மேல் கால் போட்டு, முழங்கால் மீது முழங்கையை வைத்து தமது கையால் முகத்தை மறைத்துக்கொண்டார். சிறிது நேரம் அப்படியே இருந்த பின்பு அவர் எழுந்தார். பயந்த பார்வையோடு, தம்மைச் சுற்றிலும் அவர் பார்த்துவிட்டு, வழக்கமில்லாத வேகமான நடையில், வீட்டின் பின் பக்கத்திற்குச் செல்லும் நீண்ட தாழ்வாரத்தின் வழியாகச் சென்று மூத்த இளவரசியின் அறையை அடைந்தார்.

மங்கிய விளக்கொளி கொண்ட வரவேற்பு அறையில் இருந்தவர்கள் பரபரப்போடு குசுகுசுவென்று பேசினார்கள். யாராவது ஒருவர், மரண வாயிலில் இருக்கும் அந்த மனிதரின் அறைக்குள் போகும் போதோ, அல்லது வரும்போதோ அவர்கள் மௌனம் அடைந்து ஆச்சரியக் கண்களோடு நோக்குவார்கள். அல்லது திறக்கும்போது லேசாக க்ரீச்சிடும் அந்தக் கதவை ஆவலோடு பார்ப்பார்கள்.

'மனித வாழ்க்கையின் அளவு...நிச்சயிக்கப்பட்டது. அதை மீற முடியாது' என்று ஒரு கிழப் பாதிரியார், தமது பக்கத்தில் வந்து அமர்ந்து, தாம் சொல்லும் வார்த்தைகளை வெள்ளை மனதோடு கவனித்துக் கேட்ட ஒரு சீமாட்டி சொன்னார்.

'அபிஷேகம் செய்வதற்கு காலமாகிவிடவில்லையா?' என்று அந்த சீமாட்டி பாதிரியின் பட்டப் பெயரோடு அவரை அழைத்து, இந்த விஷயத்தில் தனக்கு சொந்தமாக அபிப்பிராயம் எதுவும் இல்லாததுபோல அவரைக் கேட்டாள்.

'ஆ, அம்மா, அது ஒரு பெரிய ஞானானுமானம்' என்று கூறிய பாதிரியார் தமது வழுக்கைத் தலைமீது சீவி விடப்பட்ட மெல்லிய நரைத்த ரோமங்களைக் கையால் தடவினார்.

'யாரது? ராணுவ கவர்னரேதானா? அவர் எவ்வளவு இளமையாய் தோன்றுகிறார்' என்று அந்த அறையில் மற்றொரு பக்கத்தில் பேச்சு கேட்டது.

'ஆம், அவருக்கு அறுபதுக்கு மேலாயிற்று. கோமகனுக்கு இப்பொழுது யாரையுமே அடையாளம் தெரியவில்லை என்று

கேள்விப்படுகிறேன். ஞானானுமான அபிஷேகத்தைச் செய்துவிட அவர்கள் விரும்புகிறார்கள்.'

'ஏழு தடவைகள் ஞானானுமானத்தைப் பெற்ற ஒருவரை எனக்குத் தெரியும்.'

இரண்டாவது இளவரசி அப்பொழுதுதான் சீக்காளியின் அறையில் இருந்து வெளியே வந்தாள். அழுததினால் அவள் கண்கள் சிவந்திருந்தன டாக்டர் லொரெய்ன் பக்கத்தில் அமர்ந்தாள். அவர் காத்ரைன் படத்திற்குக் கீழாக தன் முழங்கையை ஒரு மேஜை மீது வைத்துக்கொண்டு ஒய்யார முறையில் உட்கார்ந்திருந்தார்.

காலநிலையைப்பற்றி யாரோ கேட்டதற்கு பதிலாக 'அழகாய் இருக்கிறது' என்று டாக்டர் பதிலளித்தார். 'இளவரசியே, காலநிலை அழகாய் இருக்கிறது. தவிர மாஸ்கோவில் இருப்பவர்கள் கிராமத்தில் இருப்பதைப்போலவே உணர்கிறார்கள்.'

'ஆம், நிச்சயமாக' என்று ஒரு பெருமூச்சுடன் இளவரசி பதிலளித்தாள்.

'இப்பொழுது அவருக்குக் குடிப்பதற்கு ஏதாவது கொடுக்கலாமா?'

லொரெய்ன் யோசனை செய்தார்.

'அவர் மருந்து சாப்பிட்டாரா?'

'ஆம்'

டாக்டர் தமது கடிகாரத்தைப் பார்த்தார்.

'ஒரு டம்ளர் சுடவைத்தத் தண்ணீரில் ஒரு சிட்டிகை டார்டார் கிரீமைப் போட்டுக் கொடு' என்று சொல்லி தமது மெல்லிய விரல்களால் ஒரு சிட்டிகை என்றால் என்ன என்பதை காட்டினார்.

ஒரு ஜெர்மன் டாக்டர், ஒரு மெய்க்காப்பாளரிடம், 'இந்த நோய் மூன்று முறை ஒருவரைத் தாக்கிய பின்பு அவர் உயிர் வாழ்ந்ததாக இதுவரை நடந்ததே கிடையாது' என்றார்.

'எவ்வளவு ஜாக்கிரதையாய் அவர் தமது உடம்பைப் பாதுகாத்திருக்கிறார்!' என்று அந்த மெய்க்காப்பாளர் சொல்லிவிட்டு, 'இந்த சொத்தெல்லாம் யாருக்குப் போய்ச் சேரும்?' என்று குசுகுசுத்தார்.

'அதற்கு வாரீசு இல்லாமல் போய்விடாது' என்று அந்த ஜெர்மனியர் புன்னகையோடு பதிலளித்தார்.

லொரெய்ன் சொல்லியபடி தயாரித்த பானத்தை எடுத்துக் கொண்டு, இரண்டாவது இளவசரசி உள்ளே போனபோது கதவு மறுடியும் க்ரீச்சிட்டது. அதைக் கேட்டதும் ஒவ்வொருவரும் மீண்டும் கதவை நோக்கிப் பார்த்தார்கள். லொரெய்னிடம் ஜெர்மன் டாக்டர்போனார்.

மோசமான உச்சரிப்பில் லொரெய்னைப் பார்த்து பிரஞ்சு மொழியில் ஜெர்மனியர், 'காலை வரையில் அவர் பிழைப்பார் என்று நீர் நினைக்கிறீரா?' என்று கேட்டார்.

லொரெய்ன் தமது உதடுகளைக் குவித்துக்கொண்டு 'இல்லை' என்று காட்டும்படி மூக்கின் முன்பாக விரலை ஆட்டினார்.

'இன்று இரவு அது கடக்காது' என்று தணிந்த குரலில் அவர் சொல்லிவிட்டு, நோயாளியின் நிலைமையை நன்றாய் அறிந்து சொல்லக்கூடிய தமது திறமையில் ஏற்பட்ட சுயதிருப்தியைக் காட்டக் கூடிய மரியாதையான சிரிப்போடு அங்கிருந்து நகர்ந்தார்.

இதற்கிடையில் இளவரசியின் அறைக் கதவைத் திறந்து கொண்டு இளவரசர் வாசைலி நுழைந்தார்.

இந்த அறை அநேகமாய் இருட்டாய் இருந்தது. தெய்வச் சிலைகளுக்கு முன்பாக இரண்டு சிறிய விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. புஷ்பங்களின் நறுமணமும் சாம்பராணிப் புகையின் வாசனையும் அங்கு பரவி நின்றன. மேஜைகள், நாற்காலிகள், பீரோக்கள் இவைகளால் அந்த அறை நிறைந்திருந்தது. உயரமான வெள்ளை இறகு மெத்தை தட்டிக்குப் பின்னால் கொஞ்சம் தெரிந்துகொண்டிருந்தது. ஒரு சிறிய நாய் குலைக்க ஆரம்பித்தது. 'ஆ, நீரா! மைத்துனரா!'

அவளுடைய தலை மயிர் வழக்கம் போல மிகுந்த மெதுவாய் இருந்தது. தலையோடு சேர்க்கப்பட்டு வார்ணிஷ் அடிக்கப்பட்டது போல அது ஒன்றியிருப்பதாய் தோன்றியது. அதைத் தடவிக் கொண்டு அவள் எழுந்தாள்.

'எதுவும் நடந்துவிட்டதா? எனக்கு மிகுந்த பயமாய் இருக்கிறது' எனறு அவள் கேட்டாள்.

'இல்லை, ஒரு மாறுதலும் இல்லை. குடும்ப விஷயத்தைப்பற்றி பேசுவதற்காகவே நான் வந்தேன், கட்டிஷே' என்று இளவரசர் முனங்கிக்கொண்டு, அவள் அப்பொழுதுதான் எழுந்த நாற்காலியில் களைப்போடு அமர்ந்தார்.

'இந்த இடம், எவ்வளவு உஷ்ணமாய் இருக்கிறது. நல்லது, உட்கார், நாம் பேசுவோம்.'

'ஏதோ நடந்துவிட்டது என்று நான் நினைத்தேன்' என அவள் தனது மாறாத கடுமையான முகக்குறியோடு சொல்லி, இளவரசருக்கு எதிரே உட்கார்ந்து கேட்கத் தயாரானாள். 'எனது மைத்துனரே, நான் கொஞ்சம் தூங்கலாம் என்று விரும்பினேன். ஆனால் என்னால் முடியவில்லை.'

'நல்லது, என் அன்பே' என்று இளவரசர் வாசைலி சொல்லி, அவருடைய சுபாவப்படி அவள் கையைப் பற்றி கீழ் நோக்கி இழுத்தார்.

அவர் சொல்லிய 'நல்லது' என்ற வார்த்தை, விஷயம் என்ன என்பதைச் சொல்லாமலே, அவர்கள் இருவரும் புரிந்து கொள்ளக்கூடியதாய் இருந்தது.

கால்களைவிட மிக அதிகமாக நீண்டிருந்த அவளுடைய நிமிர்ந்த அசையாத உடம்போடுகூடிய இளவரசி,அவளுடைய சாம்பல் வர்ணக் கண்களில் எவ்விதமான பரபரப்புமின்றி, நேராக இளவரசர் வாசலியை நோக்கினாள். பின்னால் தன் தலையை ஆட்டி தெய்வச் சிலைகளை ஒரு பெருமூச்சோடு ஏறிட்டுப் பார்த்தாள். இதை துக்கத்தையும் பக்தியையும் காட்டும் அடையாளமாக எடுத்துக் கொள்ளலாம். அல்லது களைப்பும் சீக்கிரம் தூங்கலாம் என்ற நம்பிக்கையையும் கலந்த அடையாளமாக எடுத்துக்கொள்ளலாம். இளவரசர் வாசைலி அதை ஒரு களைப்பின் அடையாளமாகவே கருதினார்.

'எனக்கு மட்டும்? எனக்கு அது எளிது என்று நினைக்கிறாயா? தபால் வண்டிக் குதிரை மாதிரி நான் களைத்துப் போயிருக்கிறேன். இருந்தாலும் ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றி உன்னுடன் பேசவேண்டும், கட்டிஷே.'

இளவரசர் வாசைலி அதற்குமேல் ஒன்றும் சொல்லவில்லை. அவருடைய கன்னங்கள் ஒன்று மாற்றி ஒன்று சுழித்து, ஒரு வரவேற்பு அறையில் எப்பொழுதுமே கண்டிராததான ஒரு அவலட்சணத் தோற்றத்தை, அவரது முகத்தில் ஏற்படுத்தின. அவருடைய கண்கள்கூட வியப்பாய் தோன்றின. ஒரு வினாடி வெட்கமற்ற தந்திரத்தைக் காட்டின. அடுத்த வினாடி பயத்தோடு சுற்றிப்பார்த்தன.

இளவரசி தன்னுடைய மெல்லிய கைகளால் தன்னுடைய மடியில் அவளுடைய சிறிய நாயை வைத்துக்கொண்டு, கவனத்தோடு இளவரசர் வாசைலியின் கண்களைப் பார்த்தாள். காலைவரையில் காக்கவேண்டியிருந்தாலும் சரி, தான் முதலில் அந்த மௌனத்தைக் கலைக்கப் போவதில்லை என்று தீர்மானித்தது போல தோன்றியது.

மனதில் ஏற்பட்ட ஒரு குழப்பத்தோடு, இளவரசர் வாசைலி மீண்டும் பழைய பல்லவிக்குத் திரும்பி ஆரம்பித்தார்: 'நல்லது, எனது அன்புள்ள மைத்துனியே, இளவரசியே, காத்ரைன் செமனாவ்னாவே, நீ யோசி. அம்மாதிரி ஒரு சந்தர்ப்பத்தில் எல்லாவற்றையும் பற்றி நாம் சிந்திக்க வேண்டும். எதிர்காலத்தைப் பற்றியும் உங்கள் எல்லாரையும் பற்றியும் யோசிக்க வேண்டும்... உங்கள் எல்லாரையும் நான் நேசிக்கிறேன். என்னுடைய குழந்தைகளைப் போல என்பது உனக்குத் தெரியும்.'

இளவரசி அசையாமல் உற்சாகமற்ற தோற்றத்தோடு அவரைப் பார்த்துக்கொண்டே இருந்தாள்.

'தவிர, எனது குடும்பத்தைப் பற்றியும் சிந்திக்கவேண்டும்' என்று இளவரசர் வாசைலி கூறி, அவளைப் பார்க்காமலே பக்கத்தில்கிடந்த சிறிய மேஜையைக் கோபமாகத் தள்ளினார். 'உனக்குத் தெரியும், கட்டிஷே, நாம் - நீங்கள் மூன்று சகோதரிகள், மாமண்டாவ், என்னுடைய மனைவி - ஆகியவர்கள்தான் கோமகனின் நேரான வாரீசுகள். இம்மாதிரி விஷயங்களைப்பற்றி பேசவோ, நினைக்கவோ உனக்கு எவ்வளவு, கஷ்டமாய் இருக்கும் என்பதை நான் அறிவேன். எனக்கும் அது சுலபமானது அல்ல. ஆனால், என் கண்ணே, எனக்கு அறுபது ஆகிவிட்டபடியால் எதற்கும் தயாராக இருக்கவேண்டும். பீயரை அழைத்துவர நான் ஆள் அனுப்பி யிருக்கிறேன் என்பது உனக்குத் தெரியுமா? (அங்கு காணப்பட்ட கோமகனின் படத்தைச் சுட்டிக்காட்டி) பீயரை அழைக்கவேண்டும் என்று கோமகன் உறுதியாய் சொன்னார்.'

தாம் சொல்லியதை அவள் சிந்திக்கிறாளா, அல்லது சும்மா தம்மையே பார்த்துக்கொண்டு இருக்கிறாளா என்பதை அறிய முடியாமல் இளவரசியை இளவரசர் வாசைலி கேள்விக்குறியோடு நோக்கினார்.

அவள் பதிலளித்தாள்:- எனது மைத்துனரே, நான் இடை விடாமல் கடவுளை பிரார்த்திப்பது ஒன்று உண்டு. கடவுள் கருணை

கூர்ந்து அவருடைய கௌரவமான ஆத்மா சாந்தியோடு பிரிந்து போகும்படி செய்யவேண்டும் என்பதுதான் அந்த பிரார்த்தனை.

'ஆமாம், ஆமாம். அப்படித்தான்' என்று இளவரசர் வாசைலி ஆத்திரத்தோடு தமது வழுக்கைத் தலையைத் தேய்த்துக்கொண்டு அவர் முன்னால் தூரத்தள்ளிய அந்த சிறிய மேஜையை கோபத்தோடு தம் பக்கம் இழுத்துக்கொண்டு இடைமறித்துச் சொன்னார்: 'ஆனால்... சுருக்கமாய்ச் சொன்னால் விஷயம் இதுதான்...சென்ற குளிர் காலத்தில் கோமகன் ஒரு உயில் செய்தார் என்பது உனக்குத் தெரியும். அந்த உயிலின்படி அவருடைய சொத்துக்களை எல்லாம் நேர் வாரிசுதாரர்களான நமக்குக் கொடுக்கவில்லை. ஆனால் பீயருக்குக் கொடுத்துவிட்டார்.'

'அவர் ஏராளமாய் உயில்கள் செய்திருக்கிறார்' என்று அமைதியாக இளவரசி பேசினாள். 'ஆனால் பீயர் சோரபுத்திரர். சொத்துக்களை பீயருக்கு அவர் கொடுக்க முடியாது.'

'ஆனால்,என் கண்ணே' என்று இளவரசர் வாசைலி திடீரென்று அந்த சிறிய மேஜையைப் பற்றிப் பிடித்துக்கொண்டு, அதிக பரபரப்படைந்து மிகுந்த வேகமாய் பேசினார்: 'பீயரை சட்டப்படி தமது குமாரனாக்கவேண்டும் என்று சக்கரவர்த்திக்கு கோமகன் எழுதியிருந்தால் என்ன ஆகும் தெரியுமா? கோமகனின் சேவைகளை உத்தேசித்து அவருடைய வேண்டுகோள் நிறை வேற்றப்படும் என்பது உனக்குத் தெரிகிறதா?...'

இளவரசி புன்னகை செய்தாள். தங்களிடம் பேசிக்கொண்டிருப்ப வர்களைவிட, பேசப்படும் விஷயத்தைப் பற்றி தங்களுக்கு அதிகமாகத் தெரியும் என்று நினைப்பவர்கள் செய்கிற புன்னகையைப் போல அந்தப் புன்னகை இருந்தது.

அவளுடைய கையைப் பற்றிக்கொண்டு, இளவரசர் வாசைலி தொடர்ந்து பேசினார்: 'இன்னும் அதிகமாய் உனக்கு நான் சொல்ல முடியும். அம்மாதிரிக் கடிதம் எழுதப்பட்டது உண்மை. அதை அனுப்பவில்லை. என்றாலும் அதைப்பற்றி சக்கரவர்த்திக்குத் தெரியும். இப்பொழுதுள்ள ஒரே கேள்வி என்னவென்றால், அந்தக் கடிதத்தை அழித்தாய்விட்டதா இல்லையா? இல்லை என்றால் எல்லாம் முடிந்தபின்பு (எல்லாம் முடிந்த பின்பு என்ற வார்த்தைகளை தாம் என்ன அர்த்தத்தில் சொல்லுவதாகக் காட்டுவதற்கு இளவரசர் வாசைலி பெருமூச்சுவிட்டார்) கோமகனின் தஸ்தாவேஜுகளை எடுத்துப் பார்க்கும்போது அந்த

உயிலையும் கடிதத்தையும் எடுத்து சக்கரவர்த்தியிடம் சேர்ப்பிப்பார்கள். அவர் கோரிக்கை நிச்சயமாக அனுமதிக்கப்படும். சட்டபூர்வமான புத்திரனைப்போல எல்லாவற்றையும் பீயர் பெறுவார்.'

'அப்படியானால் நமது பங்கு?' என்று பரிகாசப் புன்னகையோடு இளவரசி கேட்டாள். அவள் கேட்டது, எது வேண்டுமானாலும் நடக்கும். ஆனால் இளவரசர் வாசைலி சொல்லுவது நடக்காது என்பதைப்போல் இருந்தது.

'ஆனால், எனது அப்பாவி கட்டிஷே, பட்டப்பகல்போல அது தெளிவாய் இருக்கிறதே. பீயர்தான் அதன் பின்னால் எல்லாவற்றிற்கும் சட்டபூர்வமான வாரீசு ஆவார். உனக்கு ஒன்றும் கிடைக்காது. என்கண்ணே, உயிலும் கடிதமும் எழுதப்பட்டனவா? அவை அழிக்கப்பட்டனவா, இல்லையா? என்பவை உனக்கு தெரிந்திருக்கவேண்டும். அவை மறக்கப்பட்டிருக்குமானால், அவை எங்கிருக்கின்றன என்பது உனக்குத் தெரிந்திருக்க வேண்டும். அவற்றை நீ கண்டுபிடிக்க வேண்டும். ஏனென்றால்...' 'அப்புறம் என்ன?' என்று, அவளுடைய கண்களில் தோன்றிய தோற்றம் மாறாமல் வெறுப்பு இளமுறுவலோடு, இளவரசிகுறுக்கிட்டாள். 'நான் ஒரு பெண். நாங்கள் எல்லாரும் முட்டாள்கள் என்று நீர் நினைக்கிறீர். ஆனால், ஒரு சோர புத்திரன் வாரீசு ஆகமுடியாது என்பது எனக்குத் தெரியும்' என்று சொல்லிவிட்டு, 'சோர புத்திரன்' எனற வார்த்தையை மறுபடியும் அழுத்தமாய்ச் சொல்லி, இளவரசர் வாசைலியின் வாதம் செல்லாது என்பதை அசைக்க முடியாமல் காட்டுவதற்கு ஒன்றே போதும் என்பதுபோலக் கூறினாள்.

'நல்லது, உண்மையாக, கட்டிஷே! உனக்குப் புரியவில்லையா? நீ ரொம்ப புத்திசாலியாயிற்றே. கோமகன் சக்கரவர்த்திக்கு ஒரு கடிதம் எழுதி, பீயரை சட்டபூர்வமான வாரீசு ஆக்கவேண்டும் என்று விண்ணப்பித்தால் பீயர் வெறும் பீயராய் இருக்கமாட்டார். கோமகன் பெஜூகாவாக அவர் மாறி, பின்னால்உயிலில் கண்டபடி எல்லாவற்றிற்கும் வாரீசு ஆவார் என்பதை உன்னால் ஏன் தெரிந்து கொள்ள முடியவில்லை. அந்த கடிதத்தையும் உயிலையும் அழிக்காவிட்டால் உனக்கு ஒன்றும் கிடைக்காது. கடமையைச் செய்தோம் என்ற மனத் திருப்தி, இத்தியாதிகள் ஆகியவைதான் கிடைக்கும். அது நிச்சயம்.'

‘உயில் செய்திருப்பது எனக்குத் தெரியும். அது செல்லாது என்பதும் எனக்குத் தெரியும். நீர், என் மைத்துனரே, என்னை சர்வமுட்டாள் என்று நினைப்பதாகத் தோன்றுகிறது’ என்று பெண்கள் தாங்கள் வேடிக்கையாகவும் துடுக்காகவும் பேசுவதாக நினைத்துக் கொள்ளும்போது மேற்கொள்ளும் தோற்றத்தோடு இளவரசி பதிலளித்தாள்.

‘எனது அன்புள்ள இளவரசி காத்ரைன் செமனாவ்னா’ என்று பொறுமையின்றி இளவரசர் வாசைலி ஆரம்பித்தார். ‘நான் உன்னுடன் வாய்ச்சண்டை போடுவதற்காக இங்கே வரவில்லை. ஒரு நல்ல, அன்பான, உண்மையான பந்துவாகிய உன்னோடு உன் நலன்களைபற்றி பேசுவதற்காகவே வந்தேன். மறுபடியும் பத்தாவது தடவை உனக்குச் சொல்லுகிறேன். சக்கரவர்த்திக்கு எழுதிய கடிதமும் பீயருக்குச்சாதகமாக எழுதிய உயிலும் கோமகனின் தஸ்தாவேஜுகளுடன் காணப்படுமானால், அப்புறம் என் அன்பான பெண்ணே, நீயும் உன் சகோதரிகளும் வாரீசுகள் அல்ல. என்னை நீ நம்பாவிட்டால், ஒரு நிபுணரை நம்பு. இப்பொழுதுதான் டிமிட்ரி ஓனுபிரிஷ் (குடும்ப வக்கீல்) உடன் பேசினேன்; அவரும் அதையே சொல்லுகிறார்.’

இச்சமயம் திடீரென்று இளவளரசியின் கருத்துக்களில் ஒரு மாறுதல் ஏற்பட்டது தெளிவாயிற்று. அவளுடைய கண்கள் மாறவில்லையானாலும் அவளுடைய மெல்லிய உதடுகள் வெண்மையாயின. அவள் பேச ஆரம்பித்தபோது, அவள் குரல்களில் ஏற்பட்ட மாறுதல்களை அவளே எதிர்பார்த்திருக்கமாட்டாள்.

‘அது ரொம்ப அழகான காரியமாய் இருக்கும். நான் எதையும் எப்பொழுதும் விரும்பியதில்லை. இப்பொழுதும் எனக்கு வேண்டாம்’ என்றாள்.

தன் மடியிலிருந்த சிறிய நாயைக் கீழே தள்ளிவிட்டு தனது உடையைத் தடவிவிட்டாள்.

‘அப்படியானால் இதுதான் நன்றி-அவருக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்தவர்களுக்கு இதுதான் பதில் நன்றி’ என்று அவள் கதறினாள். ‘அது ரொம்ப சிலாக்கியமாய் இருக்கிறது! அழகுதான்! எனக்கு ஒன்றும் வேண்டாம், இளவரசே’.

‘ஆம், ஆனால் நீ ஒருவன் மட்டுமல்ல, உன்னுடைய சகோதரிகளும் இருக்கிறார்கள்...’ என்று பதிலளித்தார் இளவரசர் வாசைலி.

ஆனால் இளவரசி அவர் பேசியதைக் கவனிக்கவில்லை.

'ஆம், வெகுகாலத்திற்கு முன்பே எனக்கு அது தெரியும். ஆனால் மறந்துவிட்டேன். இந்த வீட்டில் நீசத்தனம், ஏமாற்று, பொறாமை, சூழ்ச்சி, விசுவாசத் துரோகம்-வடிகட்டிய விசுவாசத் துரோகம் - இவைகளைத் தவிர வேறு எதையும் நான் எதிர்பார்க்க முடியாது என்பது எனக்குத் தெரியும்...'

'அந்த உயில் எங்கே இருக்கிறது என்பது உனக்குத் தெரியுமா? தெரியாதா?' என்று தமது கன்னங்கள் முன்னைவிட அதிகமாக சுழிக்க, இளவரசர் வாசைலி வற்புறுத்திக் கேட்டார்.

'ஆம், நான் ஒரு முட்டாளாய் இருந்தேன். நான் மக்களிடம் நம்பிக்கை வைத்திருந்தேன்; அவர்களை நேசித்தேன்; அவர்களுக்காக என்னைத் தியாகம் செய்தேன். ஆனால், இழிகுணமும் அற்பத்தனமும் வெற்றிபெற்றன. யார் சூழ்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும்.'

இளவரசி எழுந்திருக்க விரும்பினாள். ஆனால், இளவரசர் தமது கையால் அவளை நிறுத்தினார். மனித சமூகத்தினிடமே அவளுக்குத் திடீரென்று நம்பிக்கை இழந்துவிட்டமாதிரி காணப்பட்டாள். தனதுதோழரை கோபத்தோடு ஒரு நோட்டமிட்டாள்.

'இன்னமும் நேரம் இருக்கிறது, என் கண்ணே. கட்டிஷே, அவையெல்லாம் கோபமான ஒரு வேளையிலோ, அல்லது அசௌக்கியமான வேளையிலோ செய்யப்பட்டு, பின்னால் மறந்துவிடப்பட்டவை என்பதை நீ ஞாபகத்தில் வைக்கவேண்டும். அவருடைய தவறுக்குப் பரிகாரம் செய்து, இந்த அநியாயத்தை அவர் செய்யவிடாமல் தடுத்து, அவருடைய கடைசி வினாடிகள் சாந்தமாய் இருக்கும்படி செய்யவேண்டியது நமது கடமை. என் கண்ணே, அவர் மரணமாகும்போது, சிலரை துயரத்தில் வைத்துவிட்டதாக, அவர் நினைக்கும்படி விடக்கூடாது...'

'யாரை? அவருக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்தவர் களைத்தானே?' என்று இளவரசி குறுக்கிட்டுப் பேசினாள். அவளை இளவரசர் பலமாய்ப் பிடித்துக்கொண்டிருக்காவிட்டால், அவள் மீண்டும் எழுந்திருந்து இருப்பாள். 'ஆனால், அவர் எப்பொழுதும் பாராட்டப்போவதில்லை. இல்லை, என் மைத்துனரே' என்று பெருமூச்சோடு மேலும் பேசினாள். 'இந்த உலகத்தில் ஒருவரும் கைம்மாறை எதிர்பார்க்கக்கூடாது என்பதையும், இந்த உலகத்தில் கௌரவமோ நியாயமோ கிடையாது என்பதையும் நான்

எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்திருப்பேன். இந்த உலகத்தில் ஒருவர் தந்திரமாகவும் கொடுமையாகவுமே இருக்கவேண்டும்.'

'பொறு, பொறு! நிதானமாய் இரு. உனது சிறப்பான உள்ளத்தை நான் அறிவேன்.'

'இல்லை, நான் கொடிய உள்ளம் கொண்டவள்.'

'உனது உள்ளத்தை நான் அறிவேன். உனது நட்பை நான் மதிக்கிறேன். என்னைப்பற்றியும் அதேமாதிரி நீ நல்லெண்ணம் கொள்ளும்படி நான் விரும்புகிறேன். ஆயாசம் வேண்டாம். இன்னும் அவகாசம் இருக்கும்போது, அது ஒரு நாளாய் இருந்தாலும் சரி, அல்லது ஒருமணியாய் இருந்தாலும் சரி, நாம் விவேகமாய் பேசுவோம். உயிலைப் பற்றி உனக்குத் கடைவெளி குறைக்க தெரிந்ததையெல்லாம் எனக்குச் சொல்லு. முக்கியமாக, அது இப்பொழுது எங்கிருக்கிறது? உனக்குத் தெரிந்திருக்கவேண்டும். நாம் அதனை உடனே எடுத்து, கோமகனிடம் காட்டுவோம். அவர் மறந்திருப்பார் என்பதில் சந்தேகமே இல்லை. அதனால் அவர் அதை அழித்துவிடவே விரும்புவார். அவருடைய விருப்பங்ளை மனசாட்சி பூர்வமாக நிறைவேற்றுவதே எனது ஒரே ஆசை என்பதை நீ அறிவாய். அவருக்கும் உனக்கும் உதவி செய்வதற்காகவே நான் வந்திருக்கிறேன்.'

'இப்பொழுது எனக்கு எல்லாம் தெரிகிறது! யார் சூழ்ச்சி செய்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும் - எனக்குத் தெரியும்!' என்று இளவரசி கத்தினாள்.

'விஷயம் அதுவல்ல, என் கண்ணே.'

'அவள்தான், அந்த உமது ஆசையுள்ளவள், அந்த இனிமையான இளவரசி ட்ரூபெட்ஸ்கயா, அந்த அன்னாமிக்காய்லாவ்னா! அவளை என் வேலைக்காரியாகக்கூட நான் சேர்த்துக்கொள்ள மாட்டேன். கேடுகெட்ட இழிவான பெண்!'

'நாம் நேரத்தை இழக்கவேண்டாம்...'

'ஆ, என்னிடம் பேசவேண்டாம். சென்ற குளிர் காலத்தில், எப்படியோ தாஜா செய்து, இங்கே உள்ளே நுழைந்தாள். அவள் கோமகனிடம் எங்களைப்பற்றி, முக்கியமாக சோபியைப்பற்றி இழிவான, மரியாதைக் குறைவான காரியங்களைச் சொன்னாள். அவற்றை நான் திரும்பச் சொல்லக்கூட முடியாது. அதனால் கோமகன் மிகுந்த அசௌக்கியமானார். எங்களை இரண்டு வாரம்

பார்க்கவிடவில்லை. அப்பொழுதுதான், இந்த இழிவான மானங்கெட்ட உயிலை அவர் எழுதினார். ஆனால் அது செல்லாது என்று நான் நினைத்தேன்.'

'கடைசியாக நமது விஷயத்திற்கு வந்துவிட்டோம். அதைப்பற்றி சீக்கிரமாக ஏன் சொல்லவில்லை.'

'அவருடைய தலையணைக்குக் கீழே வைத்துக்கொண்டிருக்கிற சிறிய பெட்டியில் அது இருக்கிறது' என்று இளவரசி அவருடைய கேள்வியை மதியாமல் சொன்னாள். 'இப்பொழுது எனக்குத் தெரியும். ஆம், என்னிடம் ஒரு பாவம் இருக்குமானால், ஒரு பெரிய பாவம் இருக்குமானால், அதுதான் அந்த இழிவான பெண் மீது எனக்குள்ள வெறுப்பாகும்' என்று அநேகமாகக் கூச்சலிட்டுப் பேசிய இளவரசி, இப்பொழுது முற்றிலும் மாறினாள். 'அவள் இங்கே எதற்காக புழு மாதிரி நுழைந்துகொண்டு வருகிறாள்? ஆனால் என் மனதில் உள்ளதை அவளிடம் காட்டப்போகிறேன். அந்தக் காலம் வரும்.'

## 1

## 22

வரவேற்பு அறையிலும், இளவரசியின் அறையிலும், இம்மாதிரியான உரையாடல்கள் நடந்துகொண்டிருந்தபோது, ஒரு வண்டியில் பீயரும் (அவருக்குச் சொல்லி அனுப்பி இருந்தார்கள்) அன்னா மிக்காய்லாவ்னாவும் (அவருடன் வரவேண்டியது அவசியம் என்று அவள் நினைத்தாள்) கோமகன் பெஜுகாவ் தவீட்டின் முற்றத்தில் வந்துகொண்டிருந்தார்கள். வண்டியின் சக்கரங்கள் ஜன்னலுக்குக் கீழே வைக்கோலின்மேல் சத்தம் இல்லாமல் வந்துகொண்டிருந்தபோது, ஆறுதல் மொழிகளோடு தனது கூட்டாளியுடன் பேசத் திரும்பினாள். ஆனால் வண்டியின் மூலையில் அவர் தூங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவரை எழுப்பிவிட்டாள். விழித்துக்கொண்ட பீயர், அன்னா மிக்காயலாவ்னாவுடன் வண்டியைவிட்டு இறங்கினார். அப்பொழுதுதான் மரண வாயிலில் இருக்கும் தம்முடைய தகப்பனாருடன் பேசப்போவதைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தார். வீட்டின் முன் வாசலுக்கு அவர்கள் வரவில்லை என்பதையும் பின் வாசலுக்கே வந்தார்கள் என்பதையும் அவர் கவனித்தார். வண்டிப் படியில் இருந்து, அவர் கீழே இறங்கும்போது இரண்டு மனிதர்கள்,

வியாபாரிகளைப் போலத் தோன்றியவர்கள், வாசலில் இருந்து வேகமாய் ஓடி, சுவர் நிழலில் மறைந்தார்கள். ஒரு வினாடி அவர் நின்றதும், அதே மாதிரி இன்னும் பல மனிதர்களும் வீட்டின் இரு புறங்களிலும் உள்ள நிழலில் ஓடி மறைவதைப் பார்த்தார். இந்த மனிதர்களைப்பற்றி, இவர்களைப் பார்த்த அன்னாமிக்காய் லாவ்னாவோ, அல்லது சேவகனோ, அல்லது வண்டிக்காரனோ கொஞ்சமும் பொருட்படுத்தவில்லை. 'எல்லாம் சரியாய் இருப்பதாகவே தோன்றுகிறது' என்று பீயர் முடிவு செய்துகொண்டு, அன்னா மிக்காய்லாவ்னாவைப் பின்தொடர்ந்தார். ஒடுங்கிய மங்கலாய் வெளிச்சம் கொண்ட கல் படிக்கட்டு வழியாக, அவள் வேகமாய் ஏறினாள். பீயர் பின்தங்கும்போதெல்லாம், அவரைக் கூவி அழைப்பாள். கோமகனிடம் அவர் போகவேண்டிய அவசியம் என்ன இருக்கிறது என்பதையோ, அதற்கு மேலாக பின் படிக்கட்டு வழியாக எதற்காகப் போகவேண்டும் என்பதைப் பற்றியோ, அவரால் அறிந்து கொள்ள முடியவில்லை. என்றாலும் அன்னா மிக்காய்லாவ்னாவின் உறுதியையும் அவசரப் போக்கையும் பார்த்த பீயர், அவையெல்லாம்மிகுந்த அவசியம்போல் இருக்கின்றன என்று முடிவு செய்தார். படிக்கட்டுகளில் பாதி தூரம் அவர்கள் போகும்போது, வாளிகளைக் கைகளில் தூக்கிக்கொண்டு, படிக்கட்டின் வழியாக, தங்களுடைய ஜோடுகள் சப்திக்க, கீழே ஓடிவந்த சிலர் அவர்கள்மீது மோத இருந்தார்கள். ஆனால் அவர்களைப் பார்த்ததும் இந்த மனிதர்கள் சுவர் ஓரமாக ஒண்டிக்கொண்டு, பீயரையும் அன்னாமிக்காய்லாவ்னாவையும் மேலேபோக வழி விட்டார்கள். அங்கே அவர்களைப் பார்த்ததைப்பற்றி துளிகூட ஆச்சர்யம் அடைந்ததாக அவர்கள் காட்டவில்லை.

'இளவரசிகளின் அறைகளுக்குப் போவதற்கு இதுதான் வழியா?' என்று அன்னா மிக்காய்லாவ்னா அவர்களில் ஒருவனைக் கேட்டாள்.

இப்பொழுது என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்பது போல உரத்தக் குரலில், அந்த சேவகன் 'ஆம், இடது பக்கமுள்ள வாசல் அம்மா' என்றான்.

'என்னைக் கோமகன் ஒரு வேளை அழைக்காமல் இருந்திருக்கலாம். நான் என் அறைக்குப் போவது நல்லது' என்று பீயர் சொன்னார்.

தன்னிடம் பீயர் மேலே வந்து சேருவதற்காக அன்னா மிக்காய்லாவ்னா மேல் தளத்தில் காத்திருந்தாள்.

அன்று மாலை தனது மகனிடம் பேசியதைப்போல, பீயரின் கரத்தைத் தொட்டுக்கொண்டு, அவள் பேசினாள். ‘ஆ, எனது நண்பரே! உமக்கு என்ன கஷ்டமோ, அதேமாதிரிதான் எனக்கும். ஆனால், ஆண்மகனைப்போல் நடந்துகொள்ளும்.’

‘ஆனால் உண்மையாகவே நான் போய்விடுவது நல்லதல்லவா?’ என்று தமது கண்ணாடிகளுக்கு மேலாக அன்போடு அவர் பார்த்துக்கொண்டு கேட்டார்.

‘ஆ, எனது அன்புள்ள நண்பரே! உமக்கு செய்யப்பட்டு இருக்கக்கூடிய தீங்குகளை மறந்து விடும். அவர் உமது தந்தை என்பதை நினையும். அவர் மரண வேதனையில் இருக்கிறார்.’ அவள் பெரு மூச்சு விட்டாள். ‘ஆரம்பத்திலிருந்தே, உம்மை எனது மகன் மாதிரி நான் அன்புகொண்டேன். என்னை நம்பும், பீயர். உமது நலன்களை நான் மறக்கமாட்டேன்.’

ஒரு வார்த்தைகூட பீயருக்குப் புரியவில்லை. ஆனால், இவற்றையெல்லாம் செய்தாகவேண்டும் என்ற நம்பிக்கை பலமடைந்தபடியால், அவர் அன்னா மிக்காய்லாவ்னாவை, பதில் பேசாமல் பின் தொடர்ந்தார். அவள் ஒரு கதவைத் திறந்தாள்.

இந்த வழி பின் பக்கமுள்ள ஒரு வெளி அறைக்குப் போவதாய் இருந்தது. இளவரசிகளின் சேவகன், ஒரு வயதான மனிதன், ஒரு மூலையில் உட்கார்ந்து கால் உறையைப் பின்னிக்கொண்டிருந்தான். வீட்டின் இந்தப் பகுதிக்கு, பீயர் எப்பொழுதும் வந்ததில்லை. இந்த அறைகள் இருக்கின்றன என்பதுகூட அவருக்குத் தெரியாது. ஒரு தட்டில் தண்ணீர் ஜாடியை வைத்து வேகமாய் போய்க்கொண்டிருந்த ஒரு சேடியைப் பார்த்து, அன்னா மிக்காய்லாவ்னா, ‘எனது அன்பே, எனது இனிமையே’ என்று அழைத்து, இளவரசிகளின் நலனைப் பற்றி விசாரித்துவிட்டு, ஒரு கல் பாதை வழியாக பீயரை அழைத்துக்கொண்டு மேலும் நடந்தாள். இடது பக்கமுள்ள முதல் கதவு, இளவரசிகளின் அறைகளுக்குப் போகும் பாதைக்குரியது. தட்டில் தண்ணீர் ஜாடியுடன் போன சேடி, தனது அவசரத்தில் அந்தக் கதவை அடைக்கவில்லை. (அச்சமயத்ததில், வீட்டில் எல்லாக் காரியங்களுமே அவசரத்தோடு செய்யப்பட்டன) பீயரும் அன்னா மிக்காய்லாவ்னாவும் அதைக் கடக்கும்போது, தங்களை அறியாமலேயே அறைக்குள் நோக்கினார்கள். அங்கே இளவரசர்

வாசைலியும் மூத்த இளவரசியும் நெருங்கி உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் போவதைப் பார்த்ததும், வெளிப்படையான வெறுப்போடு இளவரசர் வாசைலி பின்னால் சாய்ந்தார். இளவரசி குதித்தெழுந்து, துணிகர கோலம்கொண்டு, தன் முழு பலத்தோடு கதவைத் தடாரென்று சாத்தினாள்.

அவளது இந்தச் செய்கை, அவளுடைய வழக்கமான அடக்கத்திற்கு விரோமாய் இருந்தது. இளவரசர் வாசைலியின் முகத்தில் தோன்றிய பீதி, அவருடைய பெருந்தன்மைக்குப் பொருத்தமில்லாததுபோலக் காட்டியது. அதனால் பீயர் நின்று தனது கண்ணாடிகளின் மேல் வழியாகத் தமது வழிகாட்டியைக் கேள்விக்குறியோடு பார்த்தார். அன்னா மிக்காய்லாவ்னா ஒரு ஆச்சர்யத்தையும் காட்டவில்லை. தாம் எதிர்பார்த்ததே தவிர வேறு எதுவுமில்லை என்று சொல்லுவதைப்போல மெல்லிய புன்னகை காட்டி பெருமூச்செறிந்தாள்.

'ஒரு ஆண் மகனாய் இரும், என் நண்பரே, உமது நலன்களை நான் கவனித்துக்கொள்ளுகிறேன்' என்று அவருடைய பார்வைக்குப் பதிலாகக் கூறிவிட்டு, இன்னும் வேகமாக அந்தப் பாதை வழியாக நடந்தாள்.

இதெல்லாம் என்ன என்பதை பீயரால் அறிந்துகொள்ள முடியவில்லை. 'நலன்களைப் பார்த்துக்கொள்ளுகிறேன் ' என்று சொல்லப்படுவதற்கும் என்ன அர்த்தம் என்பது அவருக்குப் புரியவில்லை. ஆனால் இவைகளையெல்லாம் செய்து ஆகவேண்டியவைதான் என்று அவர் முடிவு செய்தார். பாதையிலிருந்து கோமகனின் வரவேற்பு அறைக்கு அடுத்ததாய் உள்ள, மங்கல் ஒளிகொண்ட ஒரு பெரிய அறைக்குள் அவர்கள் போனார்கள். சொகுசான, ஆனால், கவர்ச்சியில்லாத அறைகளில் அது ஒன்று. முன்பாதை வழியாகத்தான் பீயருக்கு இந்த அறைக்கு வந்து பழக்கமுண்டு. இந்த அறையில்கூட ஒரு காலியான ஸ்நானத் தொட்டி இருந்தது. கீழே விரிக்கப்பட்டிருந்த கம்பளத்தில் தண்ணீர் சிந்தியிருந்தது. புகை தூபம் வைத்துக்கொண்டிருந்த ஒரு பாதிரியையும், முன் பாதங்களை ஊன்றி இவர்களைக் கவனியாமல் வெளியே போய்க்கொண்டிருந்த ஒரு சேவகனையும், அவர்கள் அங்கே பார்த்தார்கள். பீயருக்குப் பழக்கமான வரவேற்பு அறைக்குள் அவர்கள் பின்னால் போனார்கள். செடிக்குடத்தைப் பார்த்த இரண்டு இத்தாலிய ஜன்னல்கள், அந்த அறையில் இருந்தன. காத்ரைன்

சக்கரவர்த்தினியின் பெரிய உருவச்சிலையும், முழு அளவுள்ள வர்ணப்படமும் அங்கே இருந்தன. பழைய ஆட்கள், அநேகமாய் பழைய இடங்களிலேயே இன்னமும் உட்கார்ந்து, ஒருவருக்கொருவர் குசுகுசுவெனப் பேசிக்கொண்டிருந்தார்கள். கவலையால் அடிபட்ட, வெளிறிய அன்னா மிக்காய்லாவ்னா நுழைந்தபோது, அவளைப் பார்ப்பதற்காகவும், தலையைத் தொங்க விட்டுக்கொண்டு, வாய் பேசாமல் அவளைப் பின்பற்றி வந்து கொண்டிருந்த பெரிய தடித்த பீயரைப் பார்ப்பதற்காகவும், எல்லாரும் பேச்சைவிட்டுத் திரும்பினார்கள்.

முக்கியமான நேரம் வந்துவிட்டது என்பதை அறிந்தது போன்ற பாவத்தை, அன்னாமிக்காய்லாவ்னாவின் முகம் காட்டியது. பீட்டர்ஸ்பர்க்கின் சாமர்த்தியமுள்ள சீமாட்டி என்ற தோரணையில், பீயரை தன்னோடு ஒட்ட அழைத்துக்கொண்டு, அன்று மாலை வந்ததைவிட அதிக தைரியத்தோடு அறைக்குள் நுழைந்தாள். சாகும் மனிதர் பார்க்கவேண்டும் என்று விரும்பிய பேர்வழியை தாம் அழைத்து வந்திருப்பதால் தனக்கு அனுமதி நிச்சயம் என்று அவள் உணர்ந்தாள். அறையிலிருந்தே எல்லாரையும் அவசரமாய் அவள் கண்ணோட்டமிட்டபோது, கோமகனின் பாவ அறிக்கையைச் செய்துவைப்பவர் அங்கிருந்ததைக் கவனித்தாள். நன்றாய் குனிந்து வணங்காமல், ஒரு தினுசாகக்குனிந்துகொண்டு அவரிடம் அவள் நகர்ந்து சென்றபோது, சிறியவளாய் குறுகிவிட்டதுபோல் காணப்பட்டாள். இரண்டு பாதிரிகளும் ஒருவர்பின் ஒருவராகக் கொடுத்த ஆசீர்வாதங்களை மரியாதையோடு ஏற்றுக்கொண்டாள்.

'சரியான சமயத்தில் நீங்கள் வந்து சேர்ந்ததற்காக, கடவுளுக்கு நன்றி கூறுகிறேன். பந்துக்களாகிய நாங்கள், அவ்வளவு கவலையோடு இருந்தோம். இந்த வாலிபர் கோமகனின் குமாரர்' என்று அவள் ஒரு பாதிரியைப் பார்த்து சொல்லிவிட்டு, பின்னால் மெதுவான குரலில், 'என்ன பயங்கரமான நேரம்!' என்றாள்.

இம்மாதிரி சொல்லிவிட்டு, டாக்டரிடம் போனாள்.

'அன்பார்ந்த டாக்டரே, இந்த வாலிபர் கோமகனின் குமாரர். ஏதாவது நம்பிக்கை இருக்கிறதா?' என்று கேட்டாள்.

டாக்டர் துரிதமாகத் தமது பார்வையை மேலே நோக்கி, தமது தோள்களைக் குலுக்கிக்கொண்டார். அன்னா மிக்காய்லாவ்னா அதே மாதிரி செய்து, தனது தோள்களையும் கண்களையும் மேலே உயர்த்தினாள். கண்கள் அநேகமாய் மூடியிருந்தன. பெரு மூச்சோடு

பீயரைத் திரும்பிப்பார்த்தாள். அவரிடம், குறிப்பாக மரியாதையும் மனங்கனிவும் கொண்ட சோகக்குரலில், சொன்னாள்:-

'கடவுளின் கிருபையில் நம்பிக்கை வையும்' என்று கூறி, ஒரு சிறிய சோபாவைக்காட்டி, தான் வரும் வரையில் அதில் காத்திருக்கும்படி கூறினாள். எல்லாரும் கவனித்துக்கொண்டிருந்த கதவை நோக்கி அவள் சென்று அதைத் திறந்து உள்ளே மறைந்தாள். கதவு மெதுவாகக் க்ரீச்சிட்டது. தமது வாத்தியார் சொல்லுவதற்கு அப்படியே கீழ்ப்படிவது என்று பீயர் முடிவு செய்திருந்தபடியால், அவள் காட்டிய சோபாவைப் பார்த்துப் போனார். அன்னா மிக்காய்லாவ்னா மறைந்ததும், அறையில் இருந்த எல்லாருடைய கண்களும், ஆச்சரியத்தையும் அனுதாபத்தையும்விட இன்னும் ஏதோ அதிகமான நோக்கத்தோடு, தம்மைப் பார்ப்பதை அவர் கவனித்தார். அவர்கள் ஒருவருக்கொருவர் குசுகுசுவென்று பேசிக்கொள்ளுவதையும், வியப்பும் பணிவும் கொண்ட அர்த்தம் மிகுந்த நோக்கோடு தம்மைப் பார்ப்பதையும் அவர் கவனித்தார். இதற்கு முன்னால் எப்பொழுதும் அவருக்குக் கிடைத்திராத ஒரு மரியாதையை, அவர்கள் காட்டினார்கள். பாதிரிகளிடம் பேசிக்கொண்டிருந்த அறிமுகமில்லாத ஒரு சீமாட்டி, இருப்பிடம் விட்டு எழுந்து, ஆசனத்தை அவருக்கு வழங்கினார். பீயர் கீழே போட்டுவிட்ட ஒரு கையுறையை, ஒரு மெய்க்காப்பாளர் எடுத்து அவரிடம் கொண்டு வந்து கொடுத்தார். பீயர் தங்கள் பக்கம் போகும்போது, அவருக்கு டாக்டர்கள் வழிவிட்டு மரியாதையோடு மௌனமாய் இருந்தார்கள். முதலில் அந்த சீமாட்டிக்குத் தொந்தரவு கொடுக்காமல், வேறு ஒரு ஆசனத்தில் அமரவே பீயர் நினைத்தார். கீழே விழுந்த கையுறையைத் தாமே எடுக்கவே விரும்பினார். டாக்டர்களை சுற்றிப் போகவுமே அவர் விரும்பினார். அவருடைய வழியிலும் அவர்கள் இல்லை. ஆனால் அம்மாதிரியெல்லாம் செய்யமுடியாது என்பதை அவர் திடீரென்று உணர்ந்தார். அன்றிரவு ஒவ்வொருவரும், அவரிடம் எதிர்பார்க்கக்கூடிய சடங்குகளை அவர் செய்வதற்குக் கடமைப்பட்டிருப்பது போலவும், ஆகவே அவர்களுடைய சேவைகளை அவர் அங்கீகரித்தே ஆகவேண்டும் என்பது போலவும் அவர் உணர்ந்தார். மௌனமாகக் காப்பாளரிடம் இருந்து கையுறையைப் பெற்றுக்கொண்டார். சீமாட்டியின் நாற்காலியில் அமர்ந்தார். தமதுபெரிய கைகளை முட்டு மீது ஒழுங்காய் வைத்துக்கொண்டு, ஒரு எகிப்திய சிலையைப் போன்ற வெள்ளை மனத்துடன் தோன்றினார். என்னென்ன

நடக்கவேண்டுமோ அவற்றைச் செய்ய வேண்டும் என்றும், திடீரென்று தமது தலை திரும்பி அசட்டுத்தனமான காரியங்களை செய்யவிடாமல் தடுப்பதற்காக, அன்றிரவு தமது சொந்தக் கருத்துக்களின்படி எதையும் செய்வதில்லை என்றும், தம்மை நடத்திக்கொண்டிருப்பவர்களின் விருப்பப்படியே செய்வதற்குப் பூராவாக இணங்கிவிடுவதென்றும், அவருடைய மனதில் தீர்மானம் செய்துகொண்டார்.

இரண்டு நிமிஷங்கள் கூட ஆகவில்லை; அதற்குள் இளவரசர் தமது தலையைக் கம்பீரமாக நிமிர்த்திக்கொண்டு, அறைக்குள் நுழைந்தார். அவர் தமது நீளக்கோட்டை அணிந்து, மார்பில் மூன்று நட்சத்திரப் பதக்கங்களை மாட்டியிருந்தார். காலையில் இருந்ததை விட இப்பொழுது அவர் மெலிந்து போனதாகக் காணப்பட்டார். அவர் சுற்றிப்பார்த்து பீயரைக் கவனித்ததும், அவருடைய கண்கள் வழக்கத்திற்கு அதிகமாகப் பெரியதாய்விட்டன போலத் தோன்றின. அவரிடம் போய் அவருடைய கையைப்பற்றி (இம்மாதிரி அவர் எப்போதுமே செய்ததில்லை) கீழ்நோக்கி இழுத்தார். அந்தக் கை பலமாய் பொருத்தப்பட்டிருக்கிறதா என்று சோதிக்க விரும்புவதைபோல, அவர் இழுப்பு இருந்தது.

'தைரியம், தைரியம், எனது நண்பரே! அவர் உம்மைப் பார்க்க வேண்டும் என்று கேட்டார். அது நல்லதுதான்' என்று கூறி, போவதற்காகத் திரும்பினார்.

ஆனால், தாம் கேட்கவேண்டியது அவசியம் என்று பீயர் நினைத்து, 'எப்படி?...' என்று கேட்டு, மரண வாயிலில் இருக்கும் அவரை 'தந்தை' என்று அழைப்பதற்கு நாணிக்கொண்டு, 'கோமகன்' என்று அழைப்பது பொருத்தமாய் இருக்குமா என்பது தெரியாமல் அவர் தயங்கினார்.

'அரை மணி நேரத்திற்கு முன்னால் அவருக்கு மற்றொரு தாக்குதல் ஏற்பட்டது. தைரியமாய் இரும், என் நண்பரே...'

பீயரின் மனம் குழம்பி இருந்தபடியால், 'தாக்குதல்' என்ற வார்த்தை, யாரோ அடிப்பதுபோன்ற நினைப்பைக் கொடுத்தது. ஒன்றும் புரியாமல், இளவரசர் வாசைலியை அவர் பார்த்தார். பின்னால் தான் 'தாக்குதல்' என்ற வார்த்தை, நோயினுடைய தாக்குதல் என்று புரிந்து கொண்டார். போகிற வழியில் லொரெய்னிடம் இளவரசர் வாசைலி ஏதோ சொல்லிவிட்டு, வாசல் வழியாக முன் பாதங்களால் நடந்து வெளியே போனார். அவரால்

முன் பாதங்களால் நடப்பது கஷ்டமாய் இருந்தது. ஒவ்வொரு அடியை எடுத்துவைக்கும்போதும், அவருடைய முழு உடம்பும் குலுங்கியது. மூத்த இளவரசியும் பாதிரிகளும் சில வேலையாட்களும் அவர்களோடு உள்ளே போனார்கள். அந்த வாசல் கதவு வழியாக உள்ளே சாமான்களை நகர்த்திவைக்கும் சப்தம் கேட்டது. கடைசியாக அன்னா மிக்காய்லாவ்னா, அதே முகபாவத்தோடு, வெளிறிய ஆனால் தன் கடமையை செய்து முடிக்கும் உறுதியோடு, வெளியே ஓடிவந்தாள். வந்து பீயரின் கரத்தை மெதுவாய்த் தொட்டு சொன்னாள்:- 'கடவுளின் கிருபை கரைகாணாதது! அபிஷேகத்தை ஆரம்பிக்கப் போகிறார்கள், வாரும்.'

பீயர் உள்ளே போய், அங்கிருந்த மெதுவான கம்பளத்தை மிதித்ததும், அந்த முன்பின் அறியாத சீமாட்டியும் காப்பாளரும் சேவகர்களும், தம்மைப் பின் தொடர்வதைக் கண்டார். அந்த அறைக்குள் வருவதற்கு அனுமதி ஏதும் இனி அவசியமில்லை என்பதுபோல் அவர்களின் செய்கை இருந்தது.




அந்தப் பெரிய அறையை பீயருக்கு நன்றாய்த் தெரியும். அறையின் மத்தியில் தூண்களும் வளைவுகளும் அந்த அறையை இரண்டாய்ப் பிரித்தன. சுவர்களில் பாரசீகக் கம்பளங்கள் தொங்கிக்கொண்டிருந்தன. தூண்களுக்குப் பின்னால் இருந்த அறையின் பாகத்தில், ஒரு பக்கத்தில் பட்டு படுதாக்கள் கொண்ட உயர்ந்தசருங்காலிக் கட்டில் இருந்தது. மற்றொரு பக்கத்தில், ஒரு பிரம்மாண்டமான பெட்டியில் தெய்வச் சிலைகள் இருந்தன. அந்த பிரம்மாண்டமான பெட்டியில், பிரகாசமான சிவப்பு விளக்கு மிளிர்ந்து, மாலைப் பிரார்த்தனைக் காட்சியில் தோன்றும் ஒரு ருஷ்ய மாதாக் கோயிலைப் போலக் காணப்பட்டது. மின்னிக்கொண்டிருந்த அந்த தெய்வச்சிலைகளுக்குக் கீழே ஒரு நீளமான பிணியாளியின் நாற்காலி கிடந்தது. அந்த நாற்காலியில் பனிபோன்ற மிருதுவான வெள்ளைத் தலையணைகள் புதியதாய் மாற்றியவைபோல் காணப்பட்டன. இடுப்புவரை பிரகாசமான பச்சை மெத்தையால் மூடப்பட்ட, தாம் நன்றாய் அறிந்துள்ள அவருடைய தந்தை கோமகன் பெஜுகாவின் கம்பீரமான உருவத்தையும், அவருடைய அகன்ற நெற்றிக்கு மேலாகக் காணப்பட்ட கத்தையான சாம்பல் நிற

பிடரிமுடியையும் - இது சிங்கத்தை நினைப்பூட்டியது - அவருடைய அழகிய சிவந்த முகத்தில் காணப்பட்ட ஆழ்ந்த கம்பீரமான மடிப்புகளையும் பீயர் கண்டார். அவர் தெய்வ சிலைகளுக்கு நேர் கீழாகப்படுத்திருந்தார். அவருடையபெரிய கனத்த கைகள் மெத்தைக்கு வெளியே கிடந்தன. உள்ளங்கை கவிழ்ந்து கிடந்த அவரது வலது கையில், ஒரு மெல்லிய மெழுகுவத்தி, ஆள்காட்டி விரலுக்கும் பெரு விரலுக்கும் மத்தியில் சொருகப்பட்டிருந்தது. நாற்காலிக்குப் பின்னால் இருந்து குனிந்து, ஒரு வயதான வேலைக்காரன் அதைச் சரியாகப் பிடித்துக் கொண்டிருந்தான். தங்களுடைய நீண்ட கேசம், தங்களின் எடுப்பான பளபளப்பான உடைகளில் விழுந்து புரள, கைகளில் மெல்லிய மெழுகுவத்திகளைப் பொருத்தி வைத்துக்கொண்டு, நாற்காலியின் பக்கத்தில் பாதிரிகள் நின்று, மெதுமாகவும் பவித்திரமாகவும் தங்கள் சடங்கைச் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்குச் சிறிது பின்னால், இரண்டு இளவரசிகளும் கைக்குட்டைகளை தங்கள் கண்களில் வைத்துக் கொண்டு நின்றார்கள். அவர்களுக்கு முன்னால் அவர்களுடைய மூத்த சகோதரி, கட்டிஷே சூழ்ச்சியும் உறுதியும் நிறைந்த தோற்றத்தோடு, தெய்வச்சிலைகளை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டு நின்றாள். அவள் நின்ற நிலை, அவளது பார்வையை அவைளிலிருந்து அகற்றி சுற்றிப் பார்த்தால், அவளுடைய உணர்ச்சிகளை அவளால் அடக்க முடியாமல் போய் விடும் என்று நினைத்ததாய்த் தோன்றியது. அன்னா மிக்காய்லாவ்னா பணிந்த, துக்கம் நிறைந்த, எல்லாம் துறந்த தோற்றங்கள் முகத்தில் விளங்க, கதவின் அருகில் அந்த பழக்கமில்லாத சீமாட்டியின் பக்கத்தில் நின்றாள். இளவரசர் வாசைலி கதவுக்கு முன்னால், நோயாளியின் பக்கத்தில் நின்று, தமது இடது கையில் ஒரு மெல்லிய மெழுகு வத்தியைப்பற்றி, ஒரு வெல்வெட் நாற்காலியை இழுத்துப்போட்டு அதன் முதுகின் மீது இடது கையை வைத்து, வலது கையால் சிலுவைக்குறி காட்டி ஒவ்வொரு தடவையும் தமது நெற்றியைத் தொடும்போதெல்லாம் கண்களை மேல்நோக்கிப் பார்த்தார். எல்லாம் கடவுளின் விருப்பப்படி நடக்கும் என்ற, தம்மை மறந்த தெய்வபக்தியோடு கூடிய சாந்தமான பார்வை முகத்தில் தோன்றியது. 'இந்த உணர்ச்சிகளை உன்னால் அறிய முடியவில்லை என்றால், அது உனக்குத்தான் கெடுதல்' என்று அவர் சொல்லுவதைப்போல் தோன்றியது.

அவருக்குப் பின்னால் மெய்க்காப்பாளரும் டாக்டர்களும் வேலைக்காரர்களும் நின்றார்கள். மாதாக்கோயிலில் உள்ளதைப் போல ஆண்களும், பெண்களும் பிரிந்து நின்றார்கள். எல்லாரும் மௌனமாக சிலுவைக்குறி காட்டிக்கொண்டிருந்தார்கள். மாதாக் கோயிலில் பிரார்த்தனைகளை வாசிப்பது, மெல்லிய குரலில் கூட்டுப் பிரார்த்தனை செய்வது, இடையிடையே பெருமூச்சு விடுவது, கால்களை மாற்றி வைப்பதால் ஓசை ஏற்படுவது, ஆகிய இந்த சப்தங்களை மட்டுமே கேட்க முடிந்தது. அன்னா மிக்காய்லாவ்னா, தான் அங்கே எதற்காக வந்திருக்கிறாள் என்பதை முற்றிலும் அறிந்தவள் போலக் காட்டக்கூடிய ஒரு முக்கியத்துவத் தோரணையில், பீயர் நின்று கொண்டிருந்த இடத்திற்கு அறையின் குறுக்காகப்போய், அவர் கையில் ஒரு மெழுகுவத்தியைக் கொடுத்தாள். அதை அவர் பொருத்தி, தம்மைச்சுற்றியுள்ளவர்களை கவனிப்பதில் ஞாபகம் மறந்தவராய், அந்த மெழுகுவத்திக் கையாலேயே சிலுவைக்குறி காட்ட ஆரம்பித்தார்.

சிரிப்பில் பிரியமுள்ள, ஒரு மச்சத்தையுடைய அந்த சிவந்த இளைய இளவரசி சோபி அவரைக் கவனித்தாள். முகத்தைக் கைக்குட்டையால் மூடினாள். சிறிது நேரம் மூடியபடியே இருந்தாள். மீண்டும் அவள் முகத்தைத் திறந்தபோது பீயரைக் கண்டாள். மறுபடியும் அவள் சிரிக்க ஆரம்பித்தாள். அவரைப் பார்க்கும் போதெல்லாம், சிரிக்காமல் இருக்க முடியவில்லை என்று அவள் உணர்ந்ததாய்த் தோன்றியது. ஆனால் அவரைப் பார்ப்பதையும் அவளால் தவிர்க்க முடியவில்லை. ஆகவே, இந்த ஆசையிலிருந்து விடுபடுவதற்காக தூணுக்குப் பின்னால் நழுவினாள். சடங்கின் மத்தியில் பாதிரியின் குரல்கள் திடீரென்று நின்றன. அவர்கள் ஒருவருக்கொருவர் குசுகுசுவென்றார்கள். கோமகனின் கையைப் பிடித்துக் கொண்டிருந்த வயதான வேலைக்காரன் எழுந்து சீமாட்டிகளிடம் ஏதோ சொன்னான். அன்னா மிக்காய்லாவ்னா முன்னால் அடியெடுத்து வைத்து, சாகிறவர் மீது குனிந்து, தனக்குப் பின்னால் நின்ற லொரெய்ன்னை வரும்படி அழைத்தாள். பிரஞ்சு டாக்டரின் கையில் மெழுகுவத்தி இல்லை. மரியாதையான பாவனையோடு ஒரு தூணில் சாய்ந்து நின்றார். எவ்வளவோ மதவித்தியாசங்கள் இருந்தும், அந்நியரான அவர், அப்பொழுது நடக்கும் சடங்கின் முழு முக்கியத்துவத்தையும் அறிந்திருப்பது போலவும், அவற்றை அங்கீகரிப்பது போலவும் அவரது பாவனை காட்டியது. வாழ்க்கையில் முழுத் தெம்போடு

இருக்கும் ஒருவரின் சப்தமில்லாத நடையைப்போல அடியெடுத்து வைத்து, நோயாளியை நெருங்கி, தமது மெல்லிய வெள்ளை விரல்களால் பச்சை மெத்தை மீது கிடந்த அவருடைய கையைத் தூக்கி, பக்கவாட்டில் திரும்பி, நாடியைச் சோதித்து, ஒரு வினாடி சிந்தனை செய்தார். நோயாளிக்குக் குடிப்பதற்கு எதையோ கொடுத்தார்கள். அவரைச் சுற்றி பரபரப்பு தோன்றி, மீண்டும் மக்கள் தங்கள் இடங்களில் அமர்ந்து, சடங்கும் ஆரம்பமாயிற்று. இந்த இடைவெளியில் இளவரசர் வாசைலி, தாம் சாய்ந்து கொண்டிருந்த நாற்காலியை விட்டு விலகிப்போவதை பீயர் கவனித்தார். அவர் போன தோரணை, அவர் என்ன செய்ய வேண்டும் என்பது அவருக்குத் தெரிந்திருப்பது போலவும், அவரை மற்றவர்கள் அறியவில்லை என்றால், அது அவர்களுக்குத்தான் கெடுதல் என்று கூறுவதைப்போலவும் காட்டியது. அவர் இறந்துகொண்டிருப் பவரின் பக்கத்தில் போகவில்லை. ஆனால், அவரைக் கடந்து மூத்த இளவரசியிடம் போய்ச் சேர்ந்து, அவளோடு பட்டுப்படுதாவோடு இருந்த கட்டில் கிடந்த,அறையின் மற்றொரு பகுதிக்குப் போனார். அந்த இடத்தை விட்டு இளவரசர் வாசைலியும் இளவரசியும் பின் வாசல் வழியாக வெளியே போய், மறுபடியும் ஒருவர் பின் ஒருவராக சடங்கு முடியும் முன்பு, தங்கள் இடங்களுக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்கள். அங்கு நடந்த மற்றவைகளைவிட, இந்த சம்பவத்திற்கு பீயர் அதிகமாக கவனம் செலுத்தவில்லை. தம்மைச் சுற்றி அன்றிரவு நடப்பவையெல்லாம், சில வழிகளில் ரொம்பவும் முக்கியமானவை என்று, அவர் மனதில் முடிவு செய்து கொண்டதே அதற்குக் காரணம்.

சடங்கின் பிரார்த்தனை முடிந்தது. சாகும் மனிதர் நற்கருணையைப் பெற்றுக்கொண்டதற்காக, மரியாதையோடு பாராட்டிய பாதிரியின் குரல் கேட்டது. சாகும் மனிதர் உயிரற்றவர்போல அசையாமல் முன்போலக் கிடந்தார். அவரைச் சுற்றி ஒவ்வொருவரும் அசைய ஆரம்பித்தார்கள். காலடி ஓசைகளும் குசுகுசுப் பேச்சுகளும் காதில் கேட்க ஆரம்பித்தன. அவற்றில் அன்னா மிக்காய்லாவ்னாவின் தொனி மிகுந்த தெளிவாய் கேட்டது.

'கண்டிப்பாக அவரை படுக்கைக்கு மாற்ற வேண்டும். இங்கே அது சாத்தியமில்லை...' என்று அவள் சொல்லியதை பீயர் கேட்டார்.

நோயாளியைச் சுற்றி டாக்டர்களும் இளவரசிகளும் வேலைக்காரர்களும் கூடிச் சூழ்ந்து கொண்டபடியால், சாம்பல்

நிறப் பிடரியைக் கொண்ட அந்த சிவந்த மஞ்சள் முகத்தை பீயரால் இப்பொழுது பார்க்க முடியவில்லை. சடங்கு முழுவதிலும் அவர் மற்ற முகங்களைப் பார்த்த போதிலும், அந்த முகத்தை மட்டும் ஒரு வினாடி கூடப் பார்க்காமல் இருக்கவில்லை. அந்த நோயாளியின் நாற்காலியைச் சுற்றி நின்றவர்களின் ஜாக்கிரதையான அசைவுகளிலிருந்து, அவரை அவர்கள் தூக்கிவிட்டார்கள் என்றும், எடுத்துக்கொண்டு போகிறார்கள் என்றும் அறிந்து கொண்டார்.

'என்னுடைய கையைப் பிடியுங்கள். இல்லையானால் அவரைக் கீழே போட்டுவிடவீர்கள்' என்று ஒரு வேலைக்காரன் பீதியோடு தாழ்ந்த குதலில் பேசியதை அவர் கேட்டார். 'கீழிருந்து பிடியுங்கள். இங்கே' என்று வெவ்வேறு குரல்கள் ஒலித்தன. தூக்கியவர்கள் ஆழ்ந்து மூச்சு விடுவதும் அவர்களுடைய காலடிகள் வேகமாய் போவதும் அவர்களின் சுமை அவர்கள் தாங்கக்கூடியதற்கு அதிகமாய் இருப்பதுபோல் காட்டின.

தூக்கியவர்கள், அன்னா மிக்காய்லாவ்னா உட்பட, அவரைக் கடந்தபோது, அந்த இளைஞர் அவர்களுடைய தலைகளுக்கும் முதுகுகளுக்கும் இடையே பளிச்சென்று ஒரு வினாடி கண்டார். அதாவது கைகளுக்குக் கீழே பிடித்து அவரைத் தாங்கிக்கொண்டிருந்த போது மரணமாய்க் கொண்டிருப்பவரின் உயர்ந்த பருத்த மூடப்படாத மார்பையும், வலிமை பொருந்திய தோள்களையும், சாம்பல் நிறமான சுருண்ட கேசமுடைய சிங்கம் போன்ற தலையையும் கண்டார். விசேஷமான அகன்ற நெற்றியும், கன்ன எலும்புகளும், அழகிய சுகபோக வாயும், நிலை கலங்காத கடுமையும் கம்பீரமான தோற்றமும் கொண்ட இந்தத் தலை, மரணம் நெருங்கி வந்தும்கூட கொஞ்சமும் மாறவில்லை. மூன்று மாதங்களுக்கு முன்னால் அவரை பீட்டர்ஸ்பர்க்கிற்கு கோமகன் அனுப்பியபோது, அவர் கண்ட மாதிரியேதான் இப்போதும் இருந்தது. ஆனால், இப்பொழுது தூக்குகிறவர்களின் மேல் கீழ் அசைப்பிற்குத் தக்க படி, அந்தத் தலை ஆதாரம் இல்லாமல் ஆடிக்கொண்டிருந்தது. அவருடைய நிலை கலங்காத பார்வை இப்பொழுது எதையும் பார்க்கவில்லை.

அந்த உயரமான கட்டிலின் பக்கத்தில், சில நிமிஷங்கள் பரபரப்பாய் இருந்தது. பின்னால், அந்த நோயாளியைத் தூக்கிச் சென்றவர்கள் கலைத்தார்கள். அன்னா மிக்காய்லாவ்னா பீயரின் கையைத் தொட்டு, 'வாரும்' என்று கூவினாள். அப்பொழுது தான் முடிந்த சடங்கிற்குப் பொருத்தமாக, கம்பீரமான நிலையில் படுக்க

வைக்கப்பட்டிருந்த நோயாளியின் கட்டிலுக்கு பீயர் அவர்களுடன் சென்றார். தலையை உயரமாக தலையணைகளில் சாய்த்து அவர் படுக்கவைக்கப்பட்டிருந்தார். உள்ளங்கைகளை கீழே கவிழ்த்து, இரண்டு கைகளையும் ஒரே மாதிரியாகப் பச்சைப் பட்டு மெத்தையில் பரப்பி வைத்திருந்தார்கள். பீயர் கோமகனின் பக்கத்தில் வந்ததும், கோமகன் அவரை நேராகப் பார்த்தார். அந்தப் பார்வையின் அர்த்தத்தை மனிதர்களால் அறிந்து கொள்ளமுடியாது. இந்தப் பார்வைக்கு அர்த்தம் இல்லாமல் இருக்கலாம். ஒருவருக்குக் கண்கள் இருக்கிற வரையில் அவர் எங்காவது பார்த்தாகவேண்டும் அல்லது அதற்கு மிகுந்த அர்த்தம் இருக்கலாம். என்ன செய்வதென்று தெரியாமல் பீயர் தயங்கினார். கேள்விக்குறியோடு தமது வழிகாட்டியைப் பார்த்தார். அன்னா மிக்காய்லாவ்னா கண்களால் வேகமாய் சைகை செய்து, நோயாளியின் கையைப் பார்த்து, அதற்கு முத்தமிடும்படி சொல்லுவதுபோல உதடுகளை அசைத்தாள். பீயர் ஜாக்கிரதையாகத் தலையை நீட்டி, மெத்தையைத் தொடாமல் அவருடைய யோசனைப்படி, அந்த நீண்ட புஷ்டி உள்ள உதடுகளை அழுத்தினார். கையோ அல்லது கோமகனின் முகத்திலிருந்த ஒரு தசையோ ஆடவில்லை. மீண்டும் ஒரு தடவை அன்னா மிக்காய்லாவ்னாவை, அடுத்தபடியாக என்ன செய்ய வேண்டும் என்பதை அறியக் கேட்பதுபோல கேள்விக்குறியோடு பீயர் பார்த்தார். படுக்கையின் பக்கத்தில் இருந்த ஒரு நாற்காலியை, தனது கண்களால் அன்னா மிக்காய்லாவ்னா காட்டினாள். பீயர் பணிவோடு அதில் அமர்ந்தார். தான் செய்தது சரிதானா என்று அவரது கண்கள் கேட்டன. அன்னா மிக்காய்லாவ்னா அங்கீகரிப்பது போலத் தலையை அசைத்தாள். மறுபடியும் பீயர் எகிப்திய சிலையைப்போல வெள்ளை உள்ளத்தோடு ஒழுங்காய் அமர்ந்தார். அவருடைய பருத்த நாசுக்கற்ற உடம்பு, அந்த அறையில் அவ்வளவு இடத்தை அடைத்துக்கொண்டிருப்பதைப் பற்றி அவர் மனக் கஷ்டம் அடைந்ததுபோலவும், சாத்தியமானவரையில் குறுகி இருக்க அவரால் முடிந்ததையெல்லாம் செய்வதைப்போலவும் காணப்பட்டார். அவர் கோமகனைப் பார்த்தார். பீயர் கீழே உட்காருவதற்கு முன்பாக பீயரின் முகம் எந்த இடத்தில் இருந்ததோ, அதே இடத்தையே கோமகன் இன்னும் பார்த்துக்கொண்டிருந்தார். தந்தையும் மகனும் சந்திக்கும் இந்தக் கடைசி வினாடிகளின் பரிதாபமான முக்கியத்துவத்தை அறிந்திருப்பது போல அன்னா மிக்காய்லாவ்னா தனது பாவனையால் காட்டிக்கொண்டாள்.

இம்மாதிரி இரண்டு நிமிஷங்கள் கடந்திருக்கும். ஆனால் பீயருக்கு அவை ஒரு மணி நேரம் போலத் தோன்றியது. திடீரென்று கோமகன் முகத்தில் உள்ள அகன்ற தசைகளும் மடிப்புகளும் சுளிக்க ஆரம்பித்தன. சுளிப்புகள் அதிகமாகி அந்த அழகிய வாய் ஒரு பக்கமாக இழுத்தது. (இப்பொழுதுதான் தமது தந்தை எவ்வளவு தூரம் மரணத்திடம் நெருங்கிவிட்டார் என்பதை பீயர் உணர்ந்தார்.) அந்த சுளித்த வாயிலிருந்து தெளிவற்ற கரகரப்பான குரல் வெளிப்பட்டது. அன்னா மிக்காய்லாவ்னா கவனத்தோடு நோயாளியின் கண்களைப் பார்த்து, அவர் என்ன விரும்புகிறார் என்பதை யூகிக்க முயற்சித்தாள். அவள் முதலில் பீயரைக் காட்டினாள். பின்னால் தண்ணீரைக் காட்டினாள். பின்னால் இளவரசர் வாசைலியின் பெயரை குசுகுசுவென்று சொன்னாள். பின்னால் மாடியைக் காட்டினாள். நோயாளியின் கண்களும் முகமும் பொறுமையின்மையைக் காட்டின. படுக்கையின் தலைப்பில் நின்றுகொண்டிருந்த வேலைக்காரனைப் பார்க்க ஒரு முயற்சி செய்தார்.

'மற்றொரு பக்கம், திருப்ப வேண்டுமா?' என்று வேலைக்காரன் மெதுவாய்க் கேட்டு, கோமகனின் கனத்த உடம்பை சுவர் பக்கமாகத் திருப்ப எழுந்து நின்றான்.

அவனுக்கு உதவி செய்ய பீயர் எழுந்தார்.

கோமகனைத் திருப்பும்போது அவருடைய கை ஆதாரமின்றி பின்னால் விழுந்தது. அதை முன்னால் எடுப்பதற்கு அவர் ஒரு பயனற்ற முயற்சி செய்தார். அந்த உயிரற்ற கையை பீதியோடு பார்த்த பீயரை அவர் கவனித்தாரா? அல்லது அவரின் மூளையில் வேறு ஏதாவது எண்ணம் உதித்ததா? எதுவானாலும் அவர் மீண்டும் அந்தக் கீழ்ப்படியாத கையையும், பீயரின் பீதியடைந்த முகத்தையும், மீண்டும் கையையும் அவர் பார்த்தார். அவர் முகத்தில் ஒரு மெல்லிய பரிதாபமான புன்னகை தோன்றியது. அவருடைய கம்பீரமான சாயல்களுக்கு அது பொருத்தமற்றதாகக் காணப்பட்டது. தம்முடைய திக்கற்ற நிலைமையைக் கண்டு ஏளனம் செய்வதுபோல அந்தப் புன்னகை காட்டியது. அந்தப் புன்னகையைப் பார்த்ததும் பீயருக்கு அவருடைய நெஞ்சில் எதிர்பாராத ஒரு நடுக்கமும், மூக்கிற்குள் ஒரு துடிப்பும் ஏற்பட்டு அவருடைய கண்களைக் கண்ணீர் மறைத்தது. நோயாளியை ஒரு பக்கமாகத் திருப்பி சுவர் பக்கம் அவர் முகம் இருக்கும்படி செய்தார்கள். அவர் பெருமூச்சு விட்டார்.

இளவரசிகளில் ஒருவள் அவரைக் கவனிப்பதற்காக அவள் முறைப்படி வருவதைப் பார்த்த அன்னா மிக்காய்லாவ்னா 'அவர் தூங்குகிறார். நாம் போகலாம்' என்றாள். பீயர் வெளியே போனார்.



இளவரசர் வாசைலியும் மூத்த இளவரசியும் அங்கிருந்தனர். வரவேற்பு அறையில் இருந்த காத்ரைன் வர்ணப் படத்திற்குக் கீழே உட்கார்ந்து, ஆவலோடு பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களைத் தவிர அங்கு வேறு யாரும் இல்லை. பீயரையும் அவருடைய தோழியையும் அவர்கள் பார்த்ததும் மௌனமானார்கள். எதையோ இளவரசி மறைக்கிறாள் என்று பீயர் நினைத்தார். இளவரசி மெதுவாக, 'அந்தப் பெண்ணைப் பார்க்க எனக்கு சகிக்கவில்லை' என்றாள்.

'கட்டிஷே, சிறிய வரவேற்பு அறையில் தேநீர் சாப்பிட்டாகி விட்டது' என்று இளவரசர் வாசைலி அன்னா மிக்காய்லாவ்னா விடம் கூறினார். 'பாவம், எனது அன்னா மிக்காய்லாவ்னாவே, போய் எதையாவது சாப்பிடு. இல்லையானால், உன்னால் தாக்குபிடிக்க முடியாது'.

பீயரிடம் அவர் எதுவும் பேசவில்லை. தோளுக்குக் கீழே அவர் கையைப் பரிவோடு அழுத்தினார். அன்னா மிக்காய்லாவ்னாவுடன் சிறிய வரவேற்பு அறைக்குள் பீயர் சென்றார்.

'தூக்கமற்ற ஒரு இரவிற்குப் பின்னால் ஒரு கோப்பை இனிமையான ருஷ்யத் தேநீரைத் தவிர தெம்பு கொடுப்பது வேறு எதுவுமில்லை' என்று லொரெய்ன் அடக்கிய பரபரப்புடன் கைப்பிடியில்லாத மெல்லிய சீனாக் கோப்பையில் தேநீரைக் குடிக்கும்போது சொன்னார். அவர் முன்னால் ஒரு மேஜையில், அந்த வட்டமான அறையில் இராச்சாப்பாடு வைக்கப்பட்டிருந்தது. கோமகன் பெஜுகாவின் வீட்டில் அன்றிரவு இருந்த எல்லாரும் தங்களைத் தெம்பு செய்து கொள்வதற்காக மேஜையைச் சுற்றி நின்றார்கள். இந்த வட்டமான அறையையும் அதிலிருந்த நிலைக்கண்ணாடிகளையும் சிறிய மேஜைகளையும் பீயருக்கு நன்றாய் தெரியும். அந்த வீட்டில் நடனக் கச்சேரிகள் நடக்கும் போதெல்லாம், நடமாடத் தெரியாத பீயர் அந்த அறையில்தான்

இருக்க விரும்புவார். அவ்வழியாகத்தான் நடன மண்டபத்திற்கு போவார்கள். நடன உடைகள் அணிந்து, முத்துக்களையும் வைரங்களையும் கழுத்தில் அலங்கரித்து, பிரகாசமான ஒளிகொண்ட அந்த நிலைக்கண்ணாடிகளில், தங்கள் உருவங்கள் பல இடங்களில் பிரதிபலிப்பதை சீமாட்டிகள் பார்த்துக்கொள்ளுவதை அவர் கவனித்துக் கொண்டிருப்பார். இப்போது இதே அறை இரண்டு மெழுகுவத்திகளால் மங்கலான வெளிச்சம் கொண்டிருந்தது. ஒரு சிறிய மேஜையில் தேநீர் - பண்டங்களும், இராச்சாப்பாட்டு பதார்த்தங்களும் தாறுமாறாய் கிடந்தன. அந்த நடுச்சாமத்தில் பல விதமான மனிதர்கள் அங்கே உட்கார்ந்திருந்தார்கள். அங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது, படுக்கை அறையில் என்ன நடக்கப் போகிறது, என்பதை அறிந்தவர்களாய் அவர்களுடைய ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொரு செய்கையும் இருந்தன. அவர்கள் அங்கே தமாஷ் செய்யவில்லை. ஆனால் வருத்தம் தோய்ந்த குரலில் குசுகுசுவென்று மெதுவாய் பேசிக்கொண்டிருந்தார்கள். சாப்பிடுவதற்கு பீயருக்கு மிகவும் விருப்பம் இருந்தாலும் அவர் எதையும் உண்ணவில்லை. தமது வாத்தியாரை கேள்விக்குறியோடு நோக்கினார். அவள் மீண்டும் முன் பாதத்தால் நடந்து, இளவரசர் வாசைலியும் மூத்த இளவரசியும் இருந்த வரவேற்பு அறைக்குப் போவதைப்பார்த்தார். இதுவும் அவசியம் போலிருக்கிறது என்று பீயர் முடிவு செய்து, சிறிது நேரத்திற்கு அப்புறம் அவளைப் பின் தொடர்ந்தார். அங்கே இளவரசிக்குப் பக்கத்தில் அன்னா மிக்காய்லாவ்னா நின்றுகொண்டு, இருவரும் பரபரப்போடு மெதுவான குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள்.

‘இளவரசியே, எது அவசியம், எது அவசியமற்றது என்பது எனக்குத் தெரியும்’ என்று அவர்களில் இளையவளானவள், எந்த பரபரப்போடு முன்னால் தன் அறையில் கதவைச் சாத்தினாளோ, அதே பரபரப்போடு பேசிக்கொண்டிருந்தாள்.

அன்னா மிக்காய்லாவ்னா படுக்கை அறைக்குப் போகிற வழியை மறித்துக்கொண்டு, அவளைப் போகவிடாமல் தடுத்து, மரியாதை யோடு, ஆனால் மனதில் பதியும்படியாக பேசினாள்:‘ஆனால், எனது அன்புள்ள இளவரசியே, தொந்தரவில்லாமல் படுத்திருக்க வேண்டிய அவசியமுள்ள உனது மாமாவுக்கு இது மிகுந்த கஷ்டமல்லவா? அவருடைய ஆத்மா தயாராகிக்கொண்டிருக்கிற இச்சமயத்தில் இம் மாதிரி லௌகீக விஷயங்களைப் பற்றிய பேச்சுக்களில்...’

தமது வழக்கமான மோஸ்தரில் இளவரசர் வாசைலி ஒரு கால் மீது மற்றொரு காலைப் போட்டுக்கொண்டு, ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார். அவ்ருடைய கன்னங்கள் தொளதொளப்பாய் இருந்தபடியால் கீழே கனமாய் தொங்கி கடுமையாய் சுழித்துக் கொண்டிருந்தன. ஆனால் அந்த இரண்டு சீமாட்டிகளும் பேசிக் கொண்டிருப்பதைப் பற்றி அவருக்குக் கொஞ்சமும் கவலை இல்லாதது போன்ற தோற்றத்தோடு இருந்தார்.

'இங்கே வா, எனது அருமை அன்னா மிக்காய்லாவ்னா. கட்டிஷேயின் இஷ்டபடி செய்யும்படி விட்டுவிடு. கோமகன் அவளிடம் எவ்வளவு பிரியமாய் இருந்தார் என்பது, உனக்குத் தெரியும்.'

'இந்தக் காகிதத்தில் என்ன இருக்கிறது என்பதுகூட எனக்குத் தெரியாது' என்று அந்த இரண்டு சீமாட்டிகளில் இளையவள் இளவரசர் வாசைலியைப் பார்த்து,தன் கையில் இருந்த சிறிய பெட்டியைக் காட்டிக்கொண்டு கூறினாள். 'எனக்குத் தெரிந்தவரை அவருடைய உண்மையான உயில் அவருடைய எழுதும் மேஜைக்குள் இருக்கிறது. இந்தக் காகிதம் அவர் மறந்து போனது...' அவள் அன்னா மிக்காய்லாவ்னாவை கடக்க முயற்சித்தாள். ஆனால் பின்னவள் அவள் பாதையை மறிப்பதற்காகப் பாய்ந்தாள்.

அந்தச் சிறிய பெட்டியை தான் சுலபமாய் விடப் போவதில்லை என்பதைக் காட்டுவதுபோல பலமாய்ப் பற்றிக்கொண்டு அன்னா மிக்காய்லாவ்னா பேசினாள்:-'எனக்குத் தெரியும். எனது அன்பான பிரியமுள்ள இளவரசியே! அன்பான இளவரசியே, அவரிடம் கொஞ்சம் இரக்கம் காட்டு; உன்னைக் கெஞ்சுகிறேன், வேண்டுகிறேன். உன்னைக் கேட்டுக்கொள்கிறேன்...'

இளவரசி பதில் பேசவில்லை. அந்தச் சிறிய பெட்டியைப் பிடுங்கிக் கொள்ளுவதற்கு அவர்களுடைய போராட்ட சப்தம் ஒன்றுதான் அங்கே கேட்டது. இளவரசி அப்பொழுது பேசியிருந்தால் அந்தப் பேச்சுக்கள் அன்னா மிக்காய்லாவ்னாவுக்கு பெருமையாய் இருக்காது என்பது தெளிவாய்த் தெரிந்தது. பின்னவள் பிடிவாதமாகப் பெட்டியைக் கைப்பற்றியிருந்தாலும், அவளுடைய பேச்சுக்கள் மட்டும் தேன்மொழியிலும் உறுதியிலும் மிருதுத் தன்மையிலும் கொஞ்சமும் குறையவில்லை.

'பீயர், என் கண்ணே, இங்கே வாரும் இளவரசே, குடும்ப ஆலோசனைகளில் அவரும் இருக்க வேண்டியதுதான் இல்லையா?'

'மைத்துனரே, நீர் ஏன் பேசாமல் இருக்கிறீர்?' என்று இளவரசி திடீரென்று கூச்சலிட்டாள். அந்தக் கூச்சல் பலமாய் இருந்ததால்,

வரவேற்பு அறையில் இருந்த எல்லாரும் அதைக் கேட்டுப் பதறினார்கள். 'இறந்து கொண்டிருப்பவரின் அறையின் பக்கத்திலேயே, இம்மாதிரி ஒரு சம்பவம் நடப்பதற்கு இவளுக்கு யார் அனுமதி கொடுத்தார்கள் என்பதை கடவுளே அறிவார். இந்தச் சமயத்தில் நீர் ஏன் மௌனமாய் இருக்கிறீர்? சூழ்ச்சிக்காரர்!' என்று துவேஷத்தோடு சீறி, தன் முழு பலம் கொண்டு பெட்டியை இழுத்தாள்.

ஆனால், அன்னா மிக்காய்லாவ்னா பெட்டியை விடாமல் இருப்பதற்காக, ஒன்றிரண்டு அடிகள் முன்னால் எடுத்து வைத்து, தன் பிடியை மாற்றிக்கொண்டாள்.

இளவரசர் வாசைலி எழுந்தார். ஆச்சரியத்தோடும் கண்டிப்போடும், 'ஓ, இது அசட்டுத்தனம், இங்கே வா. அதைவிட்டு விடு. நான் சொல்லுகிறேன்' என்றார்.

இளவரசி விட்டுவிட்டாள்.

'நீயும் கூட!'

ஆனால் அன்னா மிக்காய்லாவ்னா அவர் சொல்லியபடி கேட்கவில்லை.

'விட்டு விடு, நான் சொல்லுகிறேன்! பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். நானே போய் அவரைக் கேட்கிறேன், நான்... அது உனக்கு திருப்திதானா?'

அன்னா மிக்காய்லாவ்னா:- 'ஆனால், இளவரசே, அம்மாதிரி யான பவித்திரமான நற்கருணைக்குப் பின்னால், அவருக்கு ஒரு வினாடி அமைதியைக் கொடுங்கள். இங்கே, பீயர், உமது அபிப்பிராயத்தை அவர்களுக்குச் சொல்லும்!'

அங்கே நெருங்கி வந்த பீயர், கம்பீரத்தையெல்லாம் இழந்த இளவரசியின் கோபமான முகத்தையும், இளவரசர் வாசைலியின் சுழித்து வலித்துக்கொண்டிருந்த கன்னங்களையும், ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண்டிருந்தார்.

'ஞாபகம் வைத்துக்கொள்; இதன் பலாபலன்களுக்கெல்லாம், நீ தான் ஜவாப்தாரி. நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்பது உனக்குத் தெரியவில்லை' என்று கடினமாக இளவரசர் வாசைலி பேசினார்.

'இழிவான பெண்' என்று இளவரசி கத்திக்கொண்டு, எதிர்பாராமல் திடீரென்று அன்னா மிக்காய்லாவ்னாவிடம் துள்ளிக் குதித்து அந்தப் பெட்டியைப் பிடுங்கினாள்.

இளவரசர் வாசைலி தலையைத் தொங்கவிட்டு கைகளை விரித்தார்.

அந்த வினாடியில், பீயர் வெகு நேரமாகக் கவனித்துக் கொண்டிருந்த, எப்பொழுதும் அமைதியாய் திறக்கப்பட்டு வந்த, அந்த பயங்கரமான தகவு, பலமான சப்தத்தோடு திறந்து சுவரைப் போய் மோதியது. மூன்று சகோதரிகளில் இரண்டாமவளான இளவரசி கைகளைப் பிசைந்துகொண்டு வெளியே ஓடி வந்தாள்.

'என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்' என்று வேகமாய் அவள் கூச்சலிட்டு, 'அவர் செத்துக்கொண்டிருக்கிறார். என்னை அவரிடம் தனியாக விட்டு விட்டீர்கள் ' என்றாள்.

அவள் சகோதரி பெட்டியை நழுவவிட்டாள். அன்னா மிக்காய்லாவ்னா குனிந்து சண்டைக்குக் காரணமான அந்தப் பொருளை வேகமாகக் கைப்பற்றி படுக்கை அறைக்குள் ஓடினாள். மூத்த இளவரசியும் இளவரசர் வாசைலியும் மீண்டும் தங்கள் நினைவிற்கு வந்து அவள் பின்னால் போனார்கள். சில நிமிஷங்களுக்குப் பின்னால் மூத்த சகோதரி வெளிறிய கடினமான முகத்தோடும் கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டும் வெளியே வந்தாள். பீயரைப் பார்த்ததும் ஒரு அடக்க முடியாத வெறுப்பை அவள் முகம் காட்டியது.

'ஆம், இப்பொழுது நீர் சந்தோஷமாய் இருக்கலாம். இதைத்தான் நீர் எதிர்பார்த்துக்கொண்டிருந்தீர்' என்று சொல்லி கண்ணீர் பொங்க தனது கைக்குட்டையில் முகத்தை மறைத்துக்கொண்டு அந்த அறையை விட்டு வெளியேறினாள்.

இளவரசர் வாசைலி அடுத்தாற்போல் வந்தார். பீயர் உட்கார்ந்திருந்த சோபாவிற்கு தள்ளாடிக்கொண்டு வந்து, அதில் விழுந்து தமது முகத்தைக் கையால் மறைத்துக்கொண்டார். அவருடைய முகம்வெளிறிப்போய் இருப்பதையும் அவருடைய நாடி பதறுவதையும் ஜுரம் வந்திருப்பவர்களைப்போல அவர் நடுங்குவதையும் பீயர் கவனித்தார்.

'ஆ, என் நண்பரே' என்று சொல்லி பீயரின் முழங்கையைப் பற்றினார். அவருடைய குரலில், அவர் முன்பு எப்பொழுதும் கண்டிராத, சிரத்தையும் பலவீனமும் இருப்பதைக் கண்டார். 'நாம் எத்தனை தடவை பாவம் செய்கிறோம், எவ்வளவு ஏமாற்றுகிறோம் இவையெல்லாம் எதற்காக? நான் அறுபதுக்கு நெருங்குகிறேன், என் நண்பரே... நான்கூட....எல்லாம் மரணத்திலேயே முடியும், எல்லாம்! மரணம் பயங்கரமானது...' என்று சொல்லி கண்ணீர் பெருக்கினார்.

அன்னா மிக்காய்லாவ்னா கடைசியாக வெளியே வந்தாள். மெதுவாய் அமைதியாய் அவள் பீயரிடம் நடந்து வந்தாள்.

'பீயர்' என்றாள்.

பீயர் கேள்விக்குறியோடு அவளைப் பார்த்தார். அந்த வாலிபரின் நெற்றியில் அவள் முத்தமிட்டு கண்ணீரால் நனைத்தாள். சில வினாடிகள் கழித்து அவள் சொன்னாள்: 'அவர் போய்விட்டார்.'

அந்தக் கண்ணாடிகளுக்கு மேலாக பீயர் அவளைப் பார்த்தார்.

'வாரும், உம்முடன் நான் வருகிறேன். அழுவதற்கு முயற்சி செய்யும். கண்ணீரைப்போல பரிகாரம் கொடுப்பது வேறு எதுவுமில்லை.'

இருண்ட வரவேற்பு அறைக்கு அவரை அழைத்துச் சென்றாள். தமது முகத்தை ஒருவரும் பார்க்கமுடியாது என்பதற்காக பீயர் திருப்தி அடைந்தார். அன்னா மிக்காய்லாவ்னா அவரை அங்கே விட்டு விட்டுப்போய் திரும்பி வந்து பார்த்தபோது, கையின் மீது தலையை வைத்து ஆழ்ந்த தூக்கத்தில் அவர் இருப்பதைக் கண்டாள்.

காலையில் பீயரிடம் அன்னா மிக்காய்லாவ்னா சொன்னாள்:-

'ஆம், என் கண்ணே, நாம் எல்லாருக்கும் இது ஒரு பெரிய நஷ்டம். உம்மைப்பற்றியோ சொல்ல வேண்டியதேயில்லை. ஆனால் கடவுள் உம்மை ரட்சிப்பார். நீர் இளமையில் இருக்கிறீர். இப்பொழுது அளவற்ற செல்வமும் உம்மிடம் வந்திருக்கிறது. உயிலை இன்னும் பார்க்கவில்லை. இந்த செல்வங்களால் உமது தலை திரும்பிவிடாது என்பதை உம்மை நன்றாய் அறிந்திருக்கும், நான் நிச்சயமாய் அறிவேன். ஆனால் அவை உம்மீது கடமைகளை சுமத்தியிருக்கின்றன. நீர் ஒரு ஆண் பிள்ளையாய் நடந்துகொள்ள வேண்டும்.

பீயர் மௌனமாய் இருந்தார்.

'எனது அன்பான சிறுவரே, ஒரு வேளை பின்னால் நான் உமக்குச் சொல்லலாம். நான் மட்டும் அங்கில்லாமல் இருந்திருந்தால், என்ன நடந்திருக்கும் என்பதை கடவுளே அறிவார். நேற்று முன் தினம் தான் போரிஸை மறக்கமாட்டேன் என்று மாமா வாக்குறுதி கொடுத்ததை நீர் அறிவீர். ஆனால் அவருக்கு அவகாசம் இல்லை. எனது இனிய நண்பரே, உமது தந்தையின் விருப்பத்தை நீர் நிறைவேற்றுவீர் என்று நான் நம்புகிறேன்.'

இதைப்பற்றி ஒன்றும் பீயருக்குப் புரியவில்லை. நாணங் கொண்டு மௌனமாக இளவரசி அன்னா மிக்காய்லாவ்னாவை நோக்கினார். பீயருடன் அவள் பேசிய பின்பு, அன்னா

மிக்காய்லாவ்னா ராஸ்டோவ் வீட்டிற்குச் சென்று படுத்துக் கொண்டாள். மறுநாள் எழுந்ததும், ராஸ்டோவ்களிடமும் அவளுக்குப் பழக்கமானவர்களிடமும், கோமகன் பெஜுகாவின் மரணத்தைப் பற்றிய விவரங்களைக் கூறினாள். கோமகனின் மரணம், தான்கூட அம்மாதிரி மரணத்தை விரும்பக்கூடிய விதத்தில் இருந்ததென்றும், அவருடைய முடிவு உள்ளத்தைத் தொடுவதாக இருந்ததோடு மட்டுமல்லாமல், ஆத்மீக உயர்வைக் காட்டுதாகவும் இருந்தது என்றும் கூறினாள். தந்தைக்கும் மகனுக்கும் நடந்த கடைசி சந்திப்பு, உள்ளத்தை உருக்குவதாய் இருந்ததென்றும், அதை நினைக்கும்போது கண்ணீர் விடாமல் இருக்க முடியவில்லை என்றும், அந்த பரிதாபகரமான வினாடிகளில் அவர்களில் யார் உயர்வாய் நடந்து கொண்டார்கள் என்பதை அறிய முடியவில்லை என்றும் சொன்னாள். தந்தை கடைசியில் ஒவ்வொன்றையும் ஒவ்வொருவரையும் நன்றாய் நினைவு கூர்ந்து தமது குமாரரிடம் பேசிய வார்த்தைகள் பரிதாபமாய் இருந்தன. பார்ப்பதற்குப் பரிதாபமாய் இருந்த பீயர், துக்கத்தினால் மிகவும் அடிபட்டு இருந்ததால் மரணமாகும் தம்முடைய தந்தைக்கு தமது துக்கத்தைக் காட்டி வருத்தத்தைக் கொடுக்கக் கூடாது என்று அவர் பலமாய் முயற்சி செய்தார்.

'அது மனக்கஷ்டமானது. என்றாலும் அதனால் நன்மை உண்டு. கோமகனையும் அவருடைய சிறந்த குமாரரையும் போன்ற மனிதர்களைப் பார்ப்பதால் ஒருவரின் ஆத்மா உயர்வடைகிறது' என்று அவள் சொன்னாள். மூத்த இளவரசி, வாசைலி ஆகியவர்களின் நடத்தைகளைப் பற்றி ஆட்சேபித்து அவள் பேசியபோது, அதை ஒருபரம ரகசியம் போல மெதுவாய் குசுகுசுவென்று கூறினாள்.




இளவரசர் நிக்கலஸ் ஆண்ட்ரிவிச் பால்கோன்ஸ்கியின் எஸ்டேட்டான பால்ட் ஹில்ஸ் என்ற இடத்தில், வாலிப இளவரசர் ஆண்ட்ரூவையும் அவரது மனைவியையும் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் இம்மாதிரி எதிர்பார்த்துக் கொண்டிருந்ததால், வயதான இளவரசரின் வீட்டில் நடக்கும் நித்திய வேலை முறைகள் எதுவும் மாறுபடவில்லை. 'பிரஷ்யாவின் மன்னர்' என்று கேலியாக உயர் வட்டாரங்களில் அழைக்கப்படும், பிரதம ஜெனரல் இளவரசர் நிக்கலஸ் ஆண்ட்ரிவிச், தாம் பால் சக்கரவர்த்தியால் தமது

கிராமாந்திர எஸ்டேட்டுக்கு நாடு கடத்தப்பட்டதில் இருந்து, தொடர்ச்சியாக அங்கேயே தனது குமாரி இளவரசி மேரியுடனும், அவளுடைய தோழி குமாரி பௌரியன் உடனும் வசித்து வந்தார். புதிய சக்கரவர்த்தியின் ஆட்சியில் அவர் நகரத்திற்குத் திரும்புவதற்கு உரிமை பெற்றிருந்தாலும், அவர் கிராமத்திலேயே தொடர்ந்து வசித்து வந்தார். அவரை யாருக்காவது பார்க்க விருப்பம் இருந்தால், மாஸ்கோவிலிருந்து நூறு மைல் கடந்து 'பால்ட் ஹில்'ஸுக்கு வரட்டும் என்றும் தமக்கு யாரும், எதுவும் தேவையில்லை என்றும் சொல்லிவந்தார். மனிதரின் கெட்ட செய்கைகளுக்கு சோம் பேறித்தனம், மூட நம்பிக்கை ஆகிய இரண்டும்தான் மூல காரணங்கள் என்றும் நல்ல, செய்கைகளுக்கு சுறுசுறுப்பும் புத்திசாலித்தனமுமே காரணங்கள் என்றும் அவர் சொல்வதுண்டு. தமது குமாரிக்கு தாமே படிப்பு சொல்லிக்கொடுத்தார். இந்த அடிப்படையான இரண்டு நல்ல குணங்கள் அவளிடம் வளர்வதற்காக அட்சர கணிதத்தையும் க்ஷேத்திர கணிதத்தையும் அவளுக்கு அவர் இருபது வயதாகிற வரையில் சொல்லிவைத்து வந்தார். அவளுடைய நேரம் முழுவதிலும் அவளுக்கு வேலை இருக்கும்படி அவர் ஏற்பாடு செய்தார். தாமும் எப்பொழுதும் வேலை செய்துகொண்டே இருப்பார். தமது ஞாபகக் குறிப்புகளை எழுதுவதும், உயர் கணிதங்களில் கணக்குகள் செய்வதும், கடைசல் யந்திரத்தில் பொடி டப்பிகளை செய்வதும், தோட்ட வேலை செய்வதும், அல்லது அவருடைய எஸ்டேட்டில் எப்பொழுதுமே வளர்ந்து கெண்டிருக்கும் கட்டிட வேலைகளை மேற்பார்வை யிடுவதுமாய் இருந்துவந்தார். ஒழுங்கு என்பது காரியங்களைச் செய்வதற்கு ஒரு முக்கியமான அடிப்படை அவசியமாதலால், அவருடைய வீட்டு வேலைகளில் ஒழுங்கு என்பது உச்சஸ்தானத்தை அடைந்திருந்தது. அவர் எப்பொழுதும் ஒரே மாதிரியான நிலைமையில், அதே மணியில், அதே நிமிஷத்தில் தமது மேஜைக்கு வருவார். அவரைச் சுற்றியுள்ளவர்களிடம், குமாரியிலிருந்து அடிமைகள் வரையில், எப்பொழுதும் இளவரசர் கண்டிப்பாகவும், விடாமல் வேலைகளை வாங்குபவராகவும் இருந்தபடியால், கடினசித்தம் அவர் கொள்ளாமலேயே, சில கடினசித்தம் கொண்டவர்களுக்குக் கிடைக்கக்கூடிய பயத்தையும் மரியாதையையும் அவர் பெற்றுவந்தார். அவர் வேலையிலிருந்து விலகி ஓய்வு பெற்றுவந்தபோதிலும், அரசியல் விவகாரங்களில் தற்சமயம் எந்தவிதமான செல்வாக்கும் அவருக்கு இல்லாமல் இருந்தபோதிலும், அவருடைய எஸ்டேட் உள்ள மாகாணத்திற்குப் புதிதாக நியமிக்கப்படும் ஒவ்வொரு உயர்தர அதிகாரியும் அவரை

வந்து பார்ப்பது தமது கடமை என்று கருதினார். அப்படி வரும் அதிகாரிகள், உயர்தரமான அவருடைய முன் அறையில் அவருடைய தோட்டக்காரர்களோ, கட்டிட நிபுணர்களோ, அல்லது இளவரசி மேரியோ காத்துக்கொண்டிருப்பது போல, குறிப்பிட்ட நேரத்தில் இளவரசர் அங்கே வருகிறவரையில் காத்திருப்பார்கள். இந்த முன் அறையில உட்காரும் ஒவ்வொருவரும், அவருடைய படிப்பு அறையிலிருந்து பிரம்மாண்டமான கதவைத் திறந்து கொண்டு அவர் வரும்போது, ஒரே மாதிரியான மரியாதையையும் பயத்தையும் கூட அவர்கள் அனுபவித்தார்கள். கதவைத் திறந்து கொண்டு அந்த சிறிய கிழவர், பௌடர் போட்ட டோபாவோடும், மெலிந்த சிறிய கைகளோடும், அடர்த்தியாய் வளர்ந்த நரைத்த புருவங்களோடும் காட்சியளிப்பார். அவர் முகத்தைச் சுளிக்கும்போது, சிலசமயம் அவருடைய புருவங்கள் அவருடைய புத்திகூர்மையும் இளைமையும் கொண்ட மினுமினுப்பான கண்களின் பிரகாசத்தை மறைத்துவிடுவதுண்டு.

இளம் தம்பதிகள் வந்து சேரவேண்டிய அன்றையதினம் காலையில், இளவரசிமேரி வழக்கம்போல குறிப்பிட்ட நேரத்தில் காலை வந்தனத்திற்காக முன் அறைக்குள் நடுக்கத்தோடு, சிலுவைக்குறி காட்டிக்கொண்டு, தணிந்த குரலில் பிரார்த்தித்துக் கொண்டு வந்தாள். ஒவ்வொரு காலையிலும் அதே மாதிரிதான் அவள் வருவாள். ஒவ்வொரு காலையிலும் அன்றயைதினப் பேட்டி நல்லவிதமாய் நடந்து முடியவேண்டும் என்று பிரார்த்திப்பாள். அந்த முன் அறையில் உட்கார்ந்து இருந்த ஒரு வயதான பௌடர் போட்ட வேலைக்காரன், மெதுவ்வாய் எழுந்து தணிந்த குரலில், 'தயவுசெய்து உள்ளே போங்கள்' என்றான்.

கதவின் வழியாக கடைசல் யந்திரத்தின் ஒழுங்கான ரீங்காரம் கேட்டது. இளவரசி பயத்தோடு கதவைத் திறந்தாள். சப்தம் இல்லாமலும் சுலபமாகவும் கதவு திறந்தது. வாசலில் இவள் நின்றாள். இளவரசர் கடைசல் யந்திரத்தில் வேலை செய்து கொண்டிருந்தார். அவர் திரும்பிப்பார்த்துவிட்டு தமது வேலையைத் தொடர்ந்து செய்தார்.

அந்த பிரம்மாண்டமான படிப்பு அறை முழுவதும் சாமான்கள் நிறைந்திருந்தன. அடிக்கடி அவை உபயோகப்படுபவை என்று தோன்றியது. ஒரு பெரிய மேசை மீது புத்தகங்களும் பிளான்களும் கிடந்தன. உயரமான, முன்னால் கண்ணாடி போட்ட, புஸ்தக பீரோக்களில் பூட்டுகளிலேயே சாவிகள் காணப்பட்டன. ஒரு உயரமான எழுதும் மேசை மீது ஒரு பாடப்புத்தகம் திறந்து கிடந்தது. கடைசல் யரந்திரமும், அதற்குப் பக்கத்தில் தயாராக ஆயுதங்களும்,

சுற்றிலும் மரத்தூள்கள் சிதறியும் கிடந்தன. இவையெல்லாம் தொடர்ச்சியான பலதரப்பட்ட ஒழுங்கான வேலைகளைக் காட்டின. வெள்ளி வேலைப்பாடுள்ள, டார்டார் ஜோடு அணிந்த அந்த காலின் மிதிகளும், மெலிந்த தசைகொண்ட கையின் உறுதியான அழுத்தமும், அந்த இளவரசர் அந்தக் கிழ வயதிலும் உறுதியான சரீர வலிமையும் வேகமும் கொண்டிருக்கிறார் என்பதைக் காட்டின. கடைசல் யந்திரத்தை மேலும் சில சுற்றுகள் சுற்றிய பின்பு, அவர் பெடலில் இருந்த தமது பாதத்தை எடுத்து, உளியை சுத்தம் செய்து, கடைசல் யந்திரத்தில் தொங்கிக் கொண்டிருந்த ஒரு தோல் பைக்குள் அதைப்போட்டுவிட்டு, மேஜைக்கு வந்து தமது குமாரியை அழைத்தார். அவர் எப்பொழுதும் தமது குழந்தைகளுக்கு அசீர்வாதம் செய்வதில்லை. ஆகவே க்ஷவரம் செய்யாத கட்டை ரோமங்கள் நிறைந்த தமது கன்னத்தை அவளுக்குக் காட்டி, அவளைப் பரிவோடும் கவனத்தோடும் பார்த்து, ஆனால் கண்டிப்பான குரலில் சொன்னார்:- 'சௌக்கியமா? அப்படியானால் சரிதான்; கீழே உட்கார்.'

க்ஷேத்திரக் கணிதத்தில் தாம் எழுதி வைத்திருந்த பாடல்கள் அடங்கிய புத்தகத்தை எடுத்துக்கொண்டு, காலினால் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டார்.

வேகமாய் பக்கத்தைத் திருப்பி ஒரு பாராவில் இருந்து மற்றொரு பாரா வரையில் தமது கடினமான நகத்தால் கோடு கிழித்து, 'இது நாளைய பாடம்' என்று சொன்னார்.

மேஜை மீதிருந்த பாடப் புத்தகத்தை இளவரசி குனிந்து பார்த்தாள்.

'ஒரு வினாடி பொறு. இதோ உனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது' என்றுஅந்தக் கிழவர் திடீரென்று சொல்லி பெண் கையெழுத்தால் விலாசமிடப்பட்ட ஒரு கடிதத்தை மேஜைக்கு மேல் தொங்கிக் கொண்டிருந்த ஒரு பையில் இருந்து மேஜைமீது வீசினார்.

அக்கடிதத்தைப் பார்த்ததும் இளவரசியின் முகத்தில் சில சிவப்புப் புள்ளிகள் தோன்றின. உடனே அக்கடிதத்தை எடுத்து அதன் மீது தலை குனிந்தாள்.

*ஹெலாய்ஸ் (*அவருக்குப் பிடிக்காத ஒரு நாவலில் உள்ள ஜூலி ஹெலாய்ஸ் என்ற கதாபாத்திரத்தைக் கேலியாகக் குறிப்பிடுகிறார்.) இடமிருந்தா?' என்று கேலிப் புன்னகையோடு இளவரசர் கேட்டார். அவர் சிரித்தபோது, இன்னமும் உறுதியாய் இருந்த அவருடைய மஞ்சள் பற்கள் வெளியே தெரிந்தன.

இளவ

'ஆம், ஜூலியிடமிருந்துதான்' என்று இளவரசி ஒரு பயந்த பார்வையோடும், பயந்த குறுநகையோடும் பதிலளித்தாள்.

'இன்னும் இரண்டு கடிதங்களை அனுமதிப்பேன். ஆனால், மூன்றாவது கடிதத்தை நான் வாசிப்பேன்' என்று இளவரசர் கண்டிப்பாய் கூறினார். 'நீ ரொம்ப அபத்தங்களை எழுதுகிறாய் என்று நான் நினைக்கிறேன். மூன்றாவது கடிதத்தை நான் வாசிப்பேன்'

'உங்களுக்கு வேண்டுமானால், இதை வாசியுங்கள், அப்பா' என்று இளவரசி இன்னும் அதிகமாய் நாணங்கொண்டு,கடிதத்தை நீட்டினாள்.

'மூன்றாவது, மூன்றாவது என்றே நான் சொன்னேன்' என்று இளவரசர் துடுக்காய் கூவி கடிதத்தைத் தள்ளிவிட்டு, முழங்கைகளை மேஜைமீது வைத்துக்கொண்டு க்ஷேத்திரக் கணித இலக்கங்கள் கொண்ட பாடப்புத்தகத்தை தம் பக்கத்தில் இழுத்தார்.

தமது குமாரி பக்கத்தில் நெருக்கமாய் குனிந்து அந்தப் புத்தகத்தை அவர் பார்த்து, அவள் உட்கார்ந்திருந்த நாற்காலியின் முதுகில் ஒரு கையை வைத்துக்கொண்டு, 'நல்லது, அம்மா' என்று அவர் ஆரம்பித்தார். தான் வெகு காலமாய் தெரிந்துகொண்டிருந்த, கிழ வயதினாலும் புகையிலையை உபயோகிப்பதினாலும் ஏற்படக் கூடிய அருவருப்பான வாசனை தன்னைச் சூழ்ந்து கொண்டதாக அவள் உணர்ந்தாள். 'இப்பொழுது, அம்மா, இந்த முக்கோணங்கள் சமமானவை. தயவு செய்து கவனி. இந்த ஏ.பி.சி. கோணம்...'

தனக்கு சமீபமாக மினுமினுத்த அவளுடைய தந்தையின் கண்களை இளவரசி பீதியோடு நோக்கினாள். அவளுடைய முகத்தில் சிவந்த சின்னங்கள் வருவதும் போவதுமாய் இருந்தன. அவளுக்கு ஒன்றும் புரியவில்லை என்பது தெளிவாய்த் தோன்றியது. தன் தந்தை மேலே சொல்லப்போகும் விளக்கங்களை, அவை எவ்வள்வு தெளிவாய் இருந்தாலும் சரி, அவற்றை அறிய முடியாமல் தனது பீதி செய்துவிடுமோ என்று அவள் பயந்தாள். அது வாத்தியாரின் குற்றமாயிருந்தாலும் சரி, அல்லது மாணவியின் குற்றமாயிருந்தாலும் சரி, இதே மாதிரி காரியம் தினம் நடந்துகொண்டிருந்தது. இளவரசியின் கண்கள் இருண்டன. அவள் எதையும் பார்க்கவோ கேட்கவோ முடியவில்லை. ஆனால் அவளுடைய கண்டிப்பான தகப்பனாரின் சுருங்கிய முகம் அவளுக்குப் பக்கத்தில் இருப்பதையும், அவர் மூச்சுவிடுவதையும் அவர் வாசனையையும் அறியக் கூடிய பிரக்ஞை மட்டும் அவளுக்கு இருந்தது. எப்படி வேகமாக அதைவிட்டுத் தப்பி தன்

அறைக்குப் போய் அமைதியாக அந்தக் கணக்கை செய்யலாம். என்பதைப் பற்றியே அவளால் நினைக்க முடிந்தது. பின்னால் இருந்த அந்தக் கிழவர், தாம் உட்கார்ந்திருந்த நாற்காலியை முன்னும் பின்னும் சப்தத்தோடு இழுத்து, தாம் முரட்டுத்தனமாய் மாறி விடக்கூடாதே என்று தம்மைக் கட்டுப்படுத்த முயற்சி செய்தார். ஆனால், அநேகமாய் அவர் முரட்டுத்தனமாய் மாறிஅவளைக் கண்டிப்பதும், சில சமயங்களில் கணக்குப் புத்தகத்தை தூக்கி எறிவதுமாய் இருப்பார்.

இளவரசி தவறாக கணக்குப் போட்டாள்.

'சரி, சரி, எப்பேர்ப்பட்ட முட்டாள்' என்று புத்தகத்தைத் தள்ளிவேகமாய் முகத்தைத் திருப்பி இளவரசர் கூச்சலிட்டார். ஆனால், உடனே எழுந்து மேலும் கீழுமாக நடந்து தமது குமாரியின் தலையை இலேசாகத் தடவிவிட்டு, மீண்டும் கீழே அமர்ந்தார்.

தமது நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு விளக்க ஆரம்பித்தார்.

'இது பிரயோஜனம் இல்லை, இளவரசி, இது பிரயோஜனம் இல்லை' என்று, இளவரசிமேரி மறுநாள் பாடத்தோடு கணக்குப் புத்தகத்தை மூடி எடுத்துக்கொண்டு புறப்படும்போது, அவர் சொன்னார்.

'கணிதங்கள் ரொம்பவும் முக்கியமானவை, அம்மா. நமது சீமாட்டிகள் முட்டாள்களாய் இருப்பதைப்போல, நீயும் இருக்க நான் விரும்பவில்லை. அவற்றில் பழக்கம் கொண்டாயானால் நீ அவைகளை விரும்புவாய்' என்று சொல்லி அவளது கன்னத்தில் தட்டிக்கொடுத்தார். 'உனது மண்டையில் உள்ள அபத்தங்களை யெல்லாம் அவை விரட்டிவிடும்'

அவள் போவதற்குத் திரும்பினாள். ஆனால், சைகையால் அவளை நிறுத்தி அந்த உயர்ந்த எழுத்து மேஜையில் இருந்த ஒரு புது புத்தகத்தை எடுத்தார்.

'ரகசியங்களுக்கு திறவுகோல் என்று ஒரு வகையான புத்தகம் இதோ! உன்னுடைய ஹெலாய்ஸ் உனக்காக அனுப்பியிருக்கிறாள். மத சம்பந்தமானது! ஒருவருடைய நம்பிக்கைகளில் நான் குறுக்கிடுவதில்லை...நான் அதைப் படித்துப் பார்த்தேன். வைத்துக்கொள். சரி இப்பொழுது போ, போ.'

அவளுடைய தோள்களில் அவர் தட்டிக்கொடுத்து, அவள் வெளியேறிய பின்பு அவரே கதவை சாத்திக்கொண்டார்.

இளவரசி மேரி அவள் அறைக்குத் திரும்பினாள். துக்கமும் [illegible] விலகவில்லை.

அவளுடைய சீக்கான சாதாரண முக விலசத்தை, அந்த தோற்றம் இன்னும் அதிக மட்டமாக்கியது. அவளுடைய எழுதும் மேஜை முன்பு அவள் உட்கார்ந்தாள். அந்த மேஜைமீது சிறு படங்கள் இருந்தன. புத்தகங்களும் காகிதங்களும் இறைத்துக் கிடந்தன. அவளின் தந்தை எவ்வளவுக்கு எவ்வளவு லட்சணமாய் வைத்திருப்பாரோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவலட்சணமாய் இளவரசி வைத்திருப்பாள். கணக்குப் புத்தகத்தை கீழே வைத்துவிட்டு, அவளுக்கு வந்த கடிதத்தை ஆவலோடு பிரித்தாள். அந்தக் கடிதம், குழந்தைப் பருவத்திலிருந்தே அவளுடைய மிகுந்த அத்யந்த தோழியாய் இருந்து வருபவளிடமிருந்து வந்தது. அவள்தான்,ராஸ்டோவ் வீட்டில் நடந்த பெயர்-தின விருந்தில் காணப்பட்ட அதே, ஜூலி காராகின் ஆகும்.

ஜூலி பிரஞ்சு மொழியில் எழுதியிருந்தாள்.

'அன்பும் அருமையுமான தோழியே, பிரிவு என்பது எவ்வளவு பயங்கரமாய், எவ்வளவு பீதியுள்ளதாய் இருக்கிறது! என்னுடைய வாழ்வில் பாதியும், என்னுடைய மகிழ்ச்சியில் பாதியும், உன்னோடு கலந்து நிற்கிறதென்று நான் எனக்குள்ளே சொல்லிக்கொண்டிருந்தபோதிலும், நமது இருதயங்கள் அவிழ்க்க முடியாத தளைகளால் பிணைக்கப்பட்டிருப்பதால், நமக்கிடையில் உள்ள தூரம் நம்மைப் பிரித்து வைத்திருந்த போதிலும்,என்னுடைய இருதயம் இந்த விதியின் செய்கைக்கு விரோதமாக புரட்சி செய்கிறது. என்னைச் சுற்றிலும் இன்பங்களும், வேடிக்கைளும் இருந்தபோதிலும், நாம் பிரிந்தது முதல் எனது இருதயத்தில் இருந்துவரும் ஒரு குறிப்பிட்ட அந்தரங்கமான துக்கத்தை மட்டும், என்னால் வெல்ல முடியவில்லை. உன்னுடைய பெரிய படிப்பு அறையில், அந்த நீல வர்ண சோபாவில், அந்த அந்தரங்க சோபாவில்,சென்ற வேனீர் காலத்தில் கூடியிருந்ததைப்போல, ஏன் இருக்கக்கூடாது? மூன்று மாதங்களுக்கு முன்னால், உன்னுடைய பார்வையிலிருந்து நான் பெற்ற புதிய தார்மீக பலத்தை, இப்போது ஏன் நான் பெறக்கூடாது? மிகுந்த அமைதியும் சாந்தமும் ஊடுருவிப் பார்க்கும் தன்மையும் கொண்ட அந்தப் பார்வையில் எப்பொழுதுமே எனக்கு மிகுந்த பிரியமுண்டு. இதை எழுதும்போது என் முன்னால்அதைப் பார்ப்பதைப்போல எனக்குத்தோன்றுகிறது.'

இவ்வளவு தூரம் வாசித்த பின்பு, இளவரசி மேரி பெருமூச்சு விட்டு தனது வலப்பக்கம் நின்ற நிலைக்கண்ணாடியில் உற்றுப் பார்த்தாள். ஒரு பலவீனமான ஒயிலற்ற உருவத்தையும் மெலிந்த முகத்தையும் அது பிரதிபலித்தது. எப்பொழுதுமே சோகமாயுள்ள அவளது கண்கள், கண்ணாடியிலுள்ள அவளுடைய பிரதிபிம்பத்தில்

குறிப்பான மோசமான தன்மையோடு காட்டின. 'அவள் என்னை முகஸ்துதி செய்கிறாள்' என்று இளவரசி நினைத்து, அதை விட்டுத் திரும்பி வாசிக்க ஆரம்பித்தாள். ஆனால், ஜுலி அவளுடைய தோழியை முகஸ்துதி செய்யவில்லை. இளவரசியின் கண்கள் பெரியவைகளாய், ஆழ்ந்த சிந்தனையுள்ளவைகளாய், பிரகாசம் உள்ளவைகளாய் (சில சமயங்களில் அன்பான ஒளியை அவை வீசுவது போலத் தோன்றும்), ரொம்ப அழகானவைகளாய் இருந்தன. அழகான முகத்திற்குள்ள கவர்ச்சியைவிட அதிகமான கவர்ச்சியை, அவளுடைய சாதாரண முகத்திற்கு அநேகமாய் அந்த கண்கள் கொடுப்பதுண்டு. ஆனால், அவளுடைய சொந்த கண்களின் அந்த அழகிய தோற்றத்தை--தன்னைப்பற்றி அவள் நினைக்காமல் இருக்கும்போது அவை காட்டும் தோற்றத்தை--அவள் ஒரு பொழுதும் பார்த்ததில்லை. ஒவ்வொருவருக்கும் உள்ள வழக்கபடி, அவள் கண்ணாடியைப் பார்த்ததும் அவளுடைய முகம் ஒரு பலவந்தமான, இயற்கைக்கு விரோதமான தோற்றத்தை மேற்கொண்டுவிடுகிறது. அவள் மேலும் வாசிக்க ஆரம்பித்தாள்.

'மாஸ்கோ பூராவும் யுத்தத்தைத் தவிர வேறு எதையும் பேசுவதில்லை. எனது சகோதரர்களில் ஒருவர் ஏற்கனவே வெளிநாடு போய்விட்டார். மற்றொருவர் காப்பாளர் படையில் இருக்கிறார். அந்தப் படை எல்லைப்புறத்திற்கு புறப்பட்டுப் போகிறது. நமது அருமை சக்கரவர்த்தி பீட்டர்ஸ்பர்க்கைவிட்டு புறப்பட்டு விட்டார். அவர் தமது விலைமதிப்பற்ற சமுகத்தை யுத்தகளத்தில் காட்டப் போவதாக நினைக்கப்படுகிறது. நமக்கு, எல்லாம் வல்ல அந்தக் கடவுள் கருணை கூர்ந்து கொடுத்திருக்கிற சக்கரவர்த்தியான அந்த தேவதை, ஐரோப்பாவில் சமாதானத்தை நாசமாக்கிவரும் அந்த கார்சிகன் பூதத்தை, முறியடிக்கும்படி கடவுள் அருள் புரிவாராக. எனது சகோதரர்களைத் தவிர, எனது நெஞ்சிற்கு நெருங்கிய தொடர்புள்ள ஒருவரையும் இந்த யுத்தம் என்னிடமிருந்து பிடுங்கிக்கொண்டது. இளைஞரான நிக்கலஸ் ராஸ்டோவையே குறிப்பிடுகிறேன். அவருடைய உற்சாகமானது அவர் அமைதியாய் இருக்க இடங்கொடுக்கவில்லை. அதனால் சர்வ கலாசாலையை விட்டு ராணுவத்தில் சேர்ந்து விட்டார் அவர். மிருந்த இளைஞராய் இருந்த போதிலும், அவர் ராணுவத்தில் போய் சேர்ந்தது எனக்கு மிகுந்த துக்கத்தைக் கொடுக்கிறது என்பதை, எனது அன்புள்ள மேரி, உன்னிடம் சொல்லுகிறேன். சென்ற வேனீர் காலத்தில் இந்த வாலிபரைப்பற்றி உன்னிடம் பேசியிருக்கிறேன். அவர் மிகுந்த பெருந்தன்மை கொண்டவர். இந்தக் காலத்தில் இருபது வயதான கிழவர்களிடம் காணக்கிடைக்காத உண்மையான

இளைமை அவரிடம் நிறைந்து நிற்கிறது. முக்கியமாக கொஞ்சமும் ஒளிவு மறைவில்லாத பெரிய இருதயம் படைத்தவர். அவர் பரிசுத்தமும் கவிதை மனப்பான்மையும் கொண்டிருந்தபடியால், அவருடன் எனக்கிருந்த தொடர்புகள், அவை தற்காலிகமாக இருந்தபோதிலும், மிகுந்த கஷ்டம் அடைந்த என்னுடைய ஏழை இருதயத்திற்கு, அவை இனிய சுகம் கொடுப்பவைகளில் ஒன்றாய் அமைந்தன. எங்களுடைய பிரிவைப் பற்றியும், அச்சமயம் நாங்கள் பேசியவைகளைப் பற்றியும் ஒரு நாள் உனக்குச்சொல்வேன். அவை இன்னும் என் மனதில் அப்படியே நிற்கின்றன. ஆ, எனது தோழியே, இந்த வருத்துகிற இன்பத்தையும் துன்பத்தையும் அறிந்துகொள்ளாத நீ சந்தோஷமாய் இருக்கிறாய்; நீ பாக்கியசாலி. ஏனென்றால், இன்பத்தைவிட துன்பமே பலமானதாய் இருக்கும். எனக்கு நண்பராய் இருப்பதைத் தவிர, அதற்குஅதிகமாக வேறு எவ்விதத்திலும் இருக்க முடியாதப்டி, கோமகன் நிக்கலஸ் ரொம்பவும் இளைஞர் என்பது எனக்கு நன்றாய் தெரியும். என்றாலும், இந்த இனிமையான நட்பும் கவித்துவமும் பரிசுத்தமுமான நெருங்கிய உறவுமே எனது இருதயத்திற்கு மிகவும் தேவையானவையாய் இருக்கின்றன. இதைப்பற்றி இவ்வளவு போதும். மாஸ்கோ முழுவதும் அரட்டை அடித்துவரும் முக்கியமான செய்தி கோமகன் பெஜுகாவின் மரணமும் அவளுடைய வாரீசுமேயாகும். ஆச்சரியம்! மூன்று இளவரசி களுக்கும் கிடைத்தது ரொம்ப சொற்பம். இளவரசர் வாசைலிக்கு ஒன்றுமே கிடையாது. திருவாளர் பீயருக்குத்தான் எல்லா சொத்துக்களும் கிடைத்தன. அவர் சட்டபூர்வமான புத்திரர் என்பதும் அங்கீகாரமாகி விட்டது. ஆகவே ருஷ்யாவிலேயே சிறந்த சொத்துகளைக் கொண்ட கோமகன் பெஜுகாவ் ஆக அவர் இப்பொழுது இருக்கிறார். இளவரசர் வாசைலி இந்த விஷயத்தில் ரொம்ப அருவருக்கத் தக்க விதமாய் நடந்துகொண்டதாக வதந்தி உலாவுகிறது. அவர் கௌரவம் குலைந்து பீட்டர்ஸ்பர்க்கிற்கு திரும்பிவிட்டார்.

‘ இந்த உயில்கள், வாரீசுகள் ஆகிய இந்த விஷயங்களைப்பற்றி எனக்குப் புரிகிறது வெகு சொற்பம் என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால், ஒன்று எனக்குத் தெரியும். அதாவது, திருவாளர் பீயர் என்ற பெயரில் நாமெல்லாம் அறிந்து வந்த இந்த வாலிபர், இப்பொழுது கோமகன் பெஜுகாவாக மாறி, ருஷ்யாவில் மிகப் பெரிய பணக்காரர்களில் ஒருவராக வந்துவிட்டார். நமக்குள்ளே பேசிக்கொள்ளுவது என்றால், அவர் ஒரு அப்பாவி தினுசான மனிதர் என்றே எனக்கு எப்பொழுதுமே தோன்றுகிறது.

ஆனால், அவர் கோமகனான பின்பு, திருமணமாக வேண்டிய குமாரிகளின் அம்மாக்களும், அந்த வாலிப சீமாட்டிகளும் அவரிடம் பேசும் தொனியிலும் நடக்கும் நடத்தைகளிலும் மாறுதல் கொண்டதைக் கண்டு எனக்கு வேடிக்கையாய் இருக்கிறது. கடந்த இரண்டு வருஷங்களாக எனக்கு கணவன்மார்களைத் தேடுவதில், பலர் குஷிகொண்டிருக்கிறார்கள். (அந்தக் கணவன்மார்களில் பலரை யார் என்றுகூட எனக்குத் தெரியாது): இப்பொழுது மாஸ்கோவில் உள்ள திருமண முடிச்சுப் போடுகிற கூட்டம் என்னை எதிர்கால கோமகன் பெஜுகாவா என்று பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு கல்யாணச் செய்தி. சிறிது காலத்திற்கு முன்னால், ரொம்ப ரகசியமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்ற வாக்குறுதியோடு, உன் திருமண திட்டத்தைப்பற்றி அந்த சகலருக்கும் மாமியான அன்னா மிக்காய்லாவ்னா என்னிடம் ஒன்று கூறினாள். இளவரசர் வாசைலியின் குமாரரான அனடோல் என்பவர் இருக்கிறாரே அவரைப் பற்றியதுதான். ஒரு மேன்மையான பணக்கார பெண்ணுக்குஅவரை திருமணம் செய்துவைத்து, அவரை சீர்திருத்த வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். இதைப்பற்றி நீ என்ன நினைப்பாய் என்பது எனக்குத் தெரியாது. ஆனால், உனக்கு இதைத்தெரிவிக்கவேண்டியது எனது கடமை என்று நான் கருதுகிறேன். அவர் மிகுந்த அழகானவர் என்றும் ஒருதறிதலை என்றும் சொல்லப்படுகிறது. அவரைப்பற்றி இவ்வளவுதான் என்னால் அறிய முடிந்தது.

'போதும் இந்த அரட்டை, இந்த கடிதத்தின் இரண்டாவது பக்கம் முடிந்துவிட்டது. அப்ராக்சின்ஸ் குடும்பத்தாரோடு விருந்து உண்ணப் போவதற்கு அம்மா இதோ அழைக்கிறாள். உனக்கு அனுப்பியுள்ள அந்த வேதாந்தப் புத்தகத்தை படித்துப் பார். இங்கே அப்புத்தகம் மிகுந்த பிரபலமாய் இருக்கிறது. பலவீனமான மனித மனம் புரிந்துகொள்ள முடியாத பல கஷ்டமான விஷயங்கள் அதில் இருந்தாலும், ஆத்மாவை அமைதிகொள்ளச் செய்து உயர்த்து வதற்கு, அது ஒருஅபூர்வமான புத்தகமாய் இருக்கிறது. வணக்கம். என்னுடைய மரியாதைகளை உன்னுடைய தகப்பனார் திருவாளருக்கும், என்னுடைய வாழ்த்துக்களை குமாரி பௌரியனுக்கும் கொடுப்பாயாக. உன்னை நேசிப்பது போலவே ஆலிங்கனம் செய்துகொள்ளுகிறேன்.

-ஜூலி.

பிகு: உனது சகோதரரைப் பற்றியும், அவரது ரம்மியமான குஞ்சு மனைவியைப் பற்றியும் எனக்கு எழுது.

இளவரசி சிந்தனைப் புன்கையோடு சிறிது நேரம் யோசித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய பிரகாசமான கண்கள் ஒளிர் விட்டன. அதனால் அவளுடைய முகம் முற்றிலும் மாறியது. பின்னால் அவள் திடீரென்று எழுந்து உறுதியான நடையோடு மேஜை அருகில் சென்றாள். அவள் ஒரு காகிதத்தை எடுத்தாள். அதன்மீது அவள் கை வேகமாய் ஓடியது. இதுதான் அவள் எழுதிய பதில். பிரெஞ்சு மொழியிலேயே எழுதினாள்:-

‘அன்பும் அருமையுமான தோழியே,

உன்னுடைய 13-ந் தேதி கடிதம் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. அப்படியானால் என்னை இன்னமும் நீ நேசிக்கிறாய் அல்லவா, என் கற்பனா ஜுலியே? பிரிவு என்பது துன்பமானது என்று நீ வெகுவாய் பேசுகிறாய். ஆனால்,அதன் வழக்கமான பலன் உன்னைத் தாக்கியதாகத் தெரியவில்லை. நமது பிரிவைப் பற்றி நீ வருந்துகிறாய். நானும் வருந்துவது என்றால், எனக்குப் பிரியமான எல்லாருமே என்னை விட்டுப் பிரிந்த பின்பு நான் எப்படித்தான் சொல்ல முடியும்? ஆ, நம்மை ஆறுதல் செய்வதற்கு மதம் என்பது இல்லாவிட்டால் நமது வாழ்க்கையே மிகவும் துக்கமாய் போயிருக்கும். அந்த வாலிபர் மீது நீ கொண்டுள்ள அன்பிற்காக நான் கண்டிப்பேன் என்று நீ ஏன் நினைக்கிறாய்? அம்மாதிரி விஷயங் களில் என்னைத்தான் நான் கண்டிப்பாக்கிக் கொள்ளுவேன். அம்மாதிரி உணர்ச்சிகள் மற்றவர்களிடம் இருப்பதை நான் புரிய முடியும். ஆனால், அவற்றை ஆதரிப்பதோ அல்லது கண்டு பிடிப்பதோ என்னால் முடியாது எனக்கு ஒன்றுதான் தோன்றுகிறது. அதாவது அந்த கிருஸ்துவ அன்பு இருக்கிறதே, அடுத்த வீட்டுக்காரரை நேசி- விரோதியை நேசி என்பவைகள். அவை ஒரு வாலிபனின் அ்ழகிய கண்கள், ஒரு கற்பனையும் காதலும் கொண்ட உன்னைப் போன்ற இளம் மங்கையிடம் தோற்றுவிக்கக்கூடிய உணர்சியைவிட, மிக சிலாக்கியமானவை, இனிமையானவை, உயர்ந்தவை என்றே எனக்குத் தோன்றுகிறது.

‘கோமகன் பெஜுகாவின் மரணத்தைப் பற்றிய செய்தி, உன் கடிதம் கிடைக்கும் முன்பே, இங்கு தெரிந்துவிட்டது. அதைக் கேட்டு என் தந்தை மிகுந்த வருத்தம்அடைந்தார். உன்னதமான மகா பெரிய நூற்றாண்டின் பிரதிநிதிகளில் தங்கி நின்ற இருவரில் ஒருவர் போய்விட்டதாகவும், அடுத்த முறை தம்முடையதுதான் என்றும் அவர் சொல்லுகிறார். அந்த முறை கூடியவரை தாமதமாகவே தம்மிடம் வரும்படி தாம் பார்த்துக் கொள்ளப் போவதாக அவர் சொல்லுகிறார். அந்த பயங்கர துர்அதிர்ஷ்டத்திலிருந்து கடவுள் நம்மைக் காப்பாராக.

'பீயரைப் பற்றி நீ சொல்லுவதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. அவரைக் குழந்தையிலிருந்து எனக்குத் தெரியும். அவர் உன்னதமான உள்ளம் கொண்டவர் என்று எப்பொழுதுமே எனக்குத் தோன்றுகிறது. மனிதர்களிடம் அந்த குணத்தையே நான் உயர்வாய் மதிக்கிறேன். அவர் வாரீசு விஷயத்தில் இளவரசர் வாசைலி நடந்து கொண்டது, இருவருக்கும் மிக்க துக்ககரமானது. என் அன்பான தோழியே, நமது தெய்வீக ரட்சகர் சொல்லிய வார்த்தைகள்--ஊசியின் காது வழியாக ஒரு ஒட்டகை நுழைவது ஒரு வேளை சுலபமாக இருந்தாலும் இருக்கலாம். ஆனால், ஒரு பணக்காரன், தேவனின் ராஜ்யத்திற்குள் நுழைவது சாத்தியமல்ல--எவ்வளவு பயங்கரமான உண்மைகளாய் இருக்கின்றன. இளவரசர் வாசைலிக்காக நான் இரங்குகிறேன். இன்னும் அதிகமாக பீயருக்காக நான் வருந்துகிறேன். இவ்வளவு இளமையில், இவ்வளவு ஏராளமான சொத்துக்களுக்கு அதிபதியான அவர் - என்னென்ன சோதனைகளுக்கெல்லாம் ஆளாக வேண்டி யிருக்குமோ! இந்த உலகத்தில் நான் அதிகமாக விரும்புவது எது என்று என்னைக் கேட்டால், மிக மிக எளிமையான பிச்சைக்காரியை விட, எளியவளாய் இருப்பதையே நான் விரும்புகிறேன் என்று சொல்லுவேன். மாஸ்கோவில் மிகுந்த பிரபலமாய் விளங்கிய அந்தப் புத்தகத்தை எனக்கு நீ அனுப்பியதற்காக, அருமைத் தோழியே, ஆயிரம் வந்தனங்கள். அதில் பல நல்ல விஷயங்கள் இருப்பதோடு, பலவீனமான மனித மனம் புரிந்துகொள்ள முடியாத விஷயங்கள் இருப்பதாய், நீ சொல்லுகிறாய். புரியாத விஷயங் களைப் படிப்பது, அதனால் பலன் ஏற்படாததோடு, காலத்தை வீணாக்குவதுமாகும் என்றே எனக்குத் தோன்றுகிறது. வேதாந்த ரகசியப் புத்தகங்களைப் படித்து தங்கள் மனதைக் குழப்பிக் கொள்ளுவதற்கு சிலருக்கு இருக்கும் ஆர்வத்தைப் பற்றி என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவை அவர்களின் சந்தேகங்களைக் கிளப்பிவிட்டு, அவர்களின் மனோராஜ்யத்திற்கு இடமளித்து, விஷயங்களை மிகைப்படுத்தும் வழியில் மனதைத் திருப்புகிறது. எளிய முறையை விரும்பும் கிறிஸ்தவ தத்துவத்திற்கு இது மிகவும் முரண்பட்டதாகும். நாம் சுவிசேஷங்களையும் ஸ்ரீ முகங்களையும் படிப்போமாக அவைகளில் என்ன ரகசியங்கள் இருக்கின்றன என்பதனை நாம் துளைத்துப் பார்க்க வேண்டியதில்லை. ஏனெனில், பரிதாபமான பாவிகளாகிய நாம் எப்படி கடவுளின் பயங்கரமான பரிசுத்தமான ரகசியங்களை அறிய முடியும்? இந்த பூத உடலில் நாம் இருக்கிற வரையில், கடவுளுக்கும், நமக்கும் மத்தியில் துளைக்கப் படமுடியாது ஒரு

திரையாக அது விளங்குகிறது. பூலோகத்தில் உள்ள நாம், நமது தேவ ரட்சகர் நமக்கு வழி காட்டுவதற்காக விட்டுப்போயிருக்கும் பரிசுத்த விதிகளை அறிவதோடு நாம் நிறுத்திக்கொள்ளுவோமாக. அவற்றை அனுசரித்து, அவற்றின்படி நடக்க நாம் முயற்சிப்போமாக. நமது பலவீனமான மனித உள்ளத்தை தன் விருப்பம்போல் அலையும்படி விடாமல், எவ்வளவுக்கு எவ்வளவு நாம் தடுக்கிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு நாம் கடவுளை பிரீதி செய்கிறோம் என்பதை அறிவோமாக. அவரிடமிருந்து வராத ஞானத்தை அவர் நிராகரிக்கிறார். நம்மிடம் இருந்து அவர் மறைந்து வைத்திருப் பவைகளை, நாம் அறிந்து கொள்ள எவ்வளவுக்கு எவ்வளவு முயற்சிக்காமல் இருக்கிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு சீக்கிரமாக அதைப்பற்றி நாம் அறிவதற்கு அவருடைய பரிசுத்த ஆவியின் மூலம் அவர் அருள் புரிவார்.

‘எனக்குப் பார்க்கும் கணவரைப்பற்றி என் தகப்பனார் என்னிடம் எதுவும் பேசவில்லை. ஆனால், இளவரசர் வாசைலியிடமிருந்து கடிதம் வந்ததாகவும், அவர் சீக்கிரம் வருவார் என்றும் மட்டும் அவர் எனக்குச் சொன்னார். எனது திருமணத்தைப் பற்றிய இந்த திட்டம் சம்பந்தமாக், உனக்குச் சொல்லுகிறேன். பிரியமுள்ள இனிய தோழியே. கல்யாணம் என்பது ஒரு தெய்வீக ஏற்பாடு என்றுமே, அதைஅனுசரித்தே நாம் நடக்கவேண்டும் என்றும்நான் நினைக்கிறேன். எனக்கு எவ்வளவு துன்பத்தைக் கொடுப்பதாய் இருந்தாலும் சரி, கடவுள் எப்பொழுதாவது ஒரு மனைவி யினுடையவும் தாயாரினுடையவும் கடமைகளை என்மீது சுமத்துவாரானால், அவற்றை விசுவாசத்தோடு நடத்திவைக்க நான் முயற்சிப்பேன். கடவுள் யாரை எனக்குக் கணவராக்க கொடுத்தாலும், அவரைப் பற்றிய எனது உணர்ச்சிகள் என்ன என்பதை ஆராய்ந்து நான் மனதை துன்பப்படுத்திக்கொள்ளப் போவதில்லை.

‘எனது சகோதரரிடம் இருந்து ஒரு கடிதம் வரப் பெற்றேன். அவர் சீக்கிரமாக தமது மனைவியோடு பால்ட் ஹல்ஸுக்கு வரப் போவதாகச்சொல்லுகிறார். இந்த மகிழ்ச்சி குறுகியதாகவே இருக்கும். ஏனெனில், இந்த துக்கமான யுத்தத்தில் சேருவதற்காக அவர் எங்களைவிட்டு மீண்டும் திரும்பிப் போவார். இந்த யுத்தத்தில் நாம் எப்படி ஈடுபட்டோம், எதற்காக ஈடுபட்டோம் என்பதை கடவுளே அறிவார். காரியங்களுக்கும் உலகத்திற்கும் கேந்திரமாய் உள்ள நீ இருக்கிற இடத்தில் மட்டுமல்ல; கிராமாந்திரத்தின் விசேஷத் தன்மை என்று பட்டணவாசிகளால் கருதப்படும் இயற்கையின் அமைதியான இடத்திலும், வயல்

வேலைகளிலும்கூட, யுத்தத்தைப் பற்றிய வதந்திகள் கேட்கப் படுகின்றன. வருத்தத்தோடு அவை உணரவும் படுகின்றன. என்னுடைய தந்தை ராணுவ பவனிகளைப்பற்றியும், எதிர் பவனிகளைப் பற்றியும் தவிர, வேறு எதையும் பேசுவதில்லை அவற்றைப் பற்றி எனக்கு புரிவதில்லை. நேற்று முன்தினம் கிராமம் வழியாக நான் நடந்து போனபோது, மனம் வெடிக்கக்கூடிய ஒரு காட்சியைக் கண்டேன்... நமது மக்களிடமிருந்து ராணுவத்திற்கு சேர்க்கப்பட்ட ஆட்கள் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய தாயார்கள், மனைவிகள், குழந்தைகளுடைய நிலைமையையும், அவர்களுடைய தேம்பல்களையும் நீபார்க்க வேண்டுமே! நமது ரட்சகரின் விதிகளை மனித சமூகம் மறந்து விட்டதோ என்று தோன்றும்படியாய் இருக்கின்றது. அவர் அன்பை உபதேசித்தார். பிறர் செய்யும் கெடுதிகளை மன்னிக்கச் சொன்னார். ஆனால், மனிதர்கள் ஒருவரை மற்றொருவர் கொல்லும் திறமைக்குத்தான் உயர்ந்த மதிப்பு கொடுக்கிறார்கள்.

'வணக்கம். அருமையும் அன்புமான தோழியே, நமது தேவ ரட்சகரும் தேவ மாதாவும் உன்னை தங்களுடைய பரிசுத்தமான பராக்ரமமான பாதுகாப்பில் வைப்பார்களாக.

மேரி.

'ஆ, நீ ஒரு கடிதம் அனுப்பவேண்டுமா, இளவரசியே? என்னுடையதை நான் ஏற்கனவே அனுப்பிவிட்டேன். பாவம், என்னுடைய தாயாருக்கு நான் எழுதியிருக்கிறேன்' என்று புன்னகை கொண்ட குமாரி பௌரியன் வேகமாக தன்னுடைய இனிய மிருதுவான குரலில் சொன்னாள். இளவரசி மேரியின் கடினமான சோகமான உற்சாகமற்ற உலகத்தில், அதற்கு நேர் விரோதமான சுற்றுணர்சியையும் கவலையின்மையையும் சுய திருப்தியையும் உல்லாசத்தையும் கொண்டிருந்தாள். 'இளவரசியே, உன்னை எச்சரிக்கிறேன்' என்று அவள் தனது குரலைத் தாழ்த்திக்கொண்டு, தன் குரலைக் கேட்பதில் திருப்தி அடைந்தவள்போல பேசினாள். 'மைக்கேல் ஐவானாவிச்சை இளவரசர் கண்டித்துக் கொண்டி ருக்கிறார். ஜாக்கிரதையாய் இருந்துகொள்.'

'ஆ, அன்புள்ள தோழியே' என்று இளவரசி மேரி ஆரம்பித்தாள். 'என்னுடைய தந்தை, எந்தவிதமான சுபாவத்தில் இருக்கிறார் என்பதை எப்பொழுதும் எனக்குக் கூற வேண்டாம் என்று உனக்குச் சொல்லி இருக்கிறேன். அவரின் குணங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்ய என் மனம் எப்பொழுதும் இடம் கொடுக்காது. அதைப் போலவே மற்றவர்கள் ஆராய்ச்சி செய்வதையும் என் மனம் சம்மதிக்காது.'

இளவரசி தனது கடிகாரத்தைப் பார்த்தாள். கிளாவிகார்ட் வாத்தியத்தில் அவள்தனது பயிற்சியைஆரம்பிப்பதற்கு ஐந்து நிமிடம் தாமதமாய் விட்டபடியால், கலவரம் அடைந்த நோக்கோடு உட்காரும் அறைக்குப் போனாள். நித்திய திட்டப்படி பன்னிரண்டு மணிக்கும் இரண்டு மணிக்கும் இடையில் இளவரசர் சிரம பரிகாரம் செய்துகொள்ளவேண்டும்; இளவரசி கிளாவிகார்ட் வாசிக்க வேண்டும்.

1

26

நரை முடிகொண்டசேவகன் அரைத் தூக்கத்தோடு உட்கார்ந்து கொண்டு, தமது பெரிய படிப்பு அறையில் இளவரசர் போட்டு வந்த குறட்டையைக் கேட்டுக் கொண்டிருகுந்தான். வீட்டின் மற்றொரு பக்கத்தில் அடைக்கப்பட்டிருந்த கதவுகளின் வழியாக, டூசெக்கின் கீர்த்தனை யில் உள்ள கடினமான பாகங்களைஇருபது தடவைகள் திருப்பித் திருப்பிப் பாடும் குரல் கேட்டுக்கொண்டிருந்தது.

அப்பொழுது ஒரு மூடிய வண்டியும், மேலே திரையிடப்பட்ட மற்றொரு வண்டியும் முற்றத்தில் வந்து நின்றன. இளவரசர் ஆண்ட்ரூ வண்டியை விட்டு இறங்கி தமது குஞ்சு மனைவி இறங்குவதற்கு உதவி செய்து, தமக்கு முன்பாக வீட்டிற்குள் போவதற்கு அவளுக்கு வழி விட்டார். தலையில் டோபா தரித்திருந்த வயதான டைக்கன், தனது தலையை முன் அறையிலிருந்து வாசல் வழியாக வெளியே நீட்டி, மெதுவான குரலில், இளவரசர் தூங்கிக்கொண்டிருக்கிறார்' என்று சொல்லிவிட்டு, அவசரமாகக் கதவை சாத்தினான். மகன் வந்தாலும் சரி, பேறு வழக்கமில்லாத சம்பவம் நடந்தாலும் சரி, குறிப்பிட்ட வேலையைக் குறிப்பிட்ட நேரத்தில் செய்வதற்கு இடையூறாக எதுவும் இருக்கக்கூடாது என்பதை டைக்கன் அறிவான். டைக்கனைப் போலவே இளவரசர் ஆண்டரூவும் இதை அறிவார். அவர்தமது தகப்பனாரின் வழக்கங்களில், சென்ற தடவை தாம் வந்துவிட்டுப்போன பின்பு, மாறுதல் உண்டா என்பதை அறிந்துகொள்ளுவதற்காக தமது கடிகாரத்தைப் பார்த்தார். மாறுதல் இல்லை என்பதை தெரிந்து கொண்டதும், தமது மனைவி பக்கம் திரும்பினார்.

'அவர் இன்னும் 20 நிமிஷங்களில் எழுந்து விடுவார். மேரியின் அறைக்கு நாம் போகலாம்' என்றார்.

குஞ்சு இளவரசி இப்பொழுது கொஞ்சம் கனத்து இருந்தாள். ஆனால், அவளுடைய கண்களும், மெல்லிய கருப்பு ரோமங்கள் அரும்பி, அவள் பேச ஆரம்பிக்கும்போது மேலே தூக்கி நிற்கும் அவளுடைய குட்டையான மேல்உதடும், எப்பொழுதும் போலவே குஷியாகவும் அழகாவும் இருந்தன.

'என்ன, இது அரண்மனையே தான்!' என்று அவள் கணவரைப் பார்த்துச் சொன்னாள். நடனக் கச்சேரிகளில் விருந்தளிப்பவர்களைப் பாராட்டுவது போன்ற தோற்றத்தோடு, அந்தக் கட்டிடத்தை கண்ணால் சுற்றி நோக்கிப் பேசினாள். 'நாம் போவோம்; சீக்கிரம், சீக்கிரம்.' மறுபடியும் பார்வையைச் சுழற்றி டைக்கனையும், தனது கணவரையும், தங்களுடன் வந்த சேவகனையும் பார்த்து இளநகை கொண்டாள்.

'இதென்ன, மேரியா சாதகம் செய்கிறாள்? நாம் மெதுவாகச் சென்று, திடீரென்று அவளுக்கு ஆச்சரியத்தைக் கொடுப்போம்.

மரியாதையான, ஆனால் சோகமான தோற்றத்தோடு, இளவரசர் ஆண்ட்ரூ அவளைப் பின் தொடர்ந்தார்.

'உன்க்கு வயதாகிவிட்டது, டைக்கன்' என்று போகும்போது, அவன்இவரது கையை முத்தமிட்ட சமயம் கூறினார். கிளாவிகார்ட் ஒலிகள் வந்துகெண்டிருந்த அறைக்கு இவர்கள் போய்ச் சேரும் முன்பாக, அந்த ரம்மியமானஅழகிய தலைமுடி கொண்ட பிரஞ்சுப் பெண் குமாரி பௌரியன் மகிழ்ச்சி பொங்க ஓடிவந்தாள்.

'ஆ, இளவரசிக்கு எவ்வளவு சந்தோஷமாய் இருக்கும். இப்பொழுதாவது வந்து சேர்ந்தீர்கள். நான் அவளிடம் போய் சொல்லுகிறேன்' என்றாள்.

'வேண்டாம், வேண்டாம், தயவுசெய்து வேண்டாம்... நீதான்குமாரி பௌரியன், அல்லவா' என்று குஞ்சு இளவரசி சொல்லி அவளை முத்தமிட்டாள். 'என்னுடைய மைத்துனி உன்னிடம் கொண்ட நட்பின் மூலமாக,உன்னைப்பற்றி ஏற்கனவே எனக்குத் தெரியும். அவள் இன்று எங்களை எதிர்பார்க்கவில்லை, அல்லவா?'

கீர்த்தனையின் வரிகள் திரும்பத் திரும்ப சொல்லப்படும் சப்தம் வந்து கொண்டிருந்த உட்காரும் அறையின் வாசலுக்கு அவர்கள் போனார்கள். ஏதோ அருவருப்பான ஒன்றை எதிர்பார்ப்பது போல, இளவரசர் ஆண்ட்ரூ அங்கே நின்று முகத்தைச் சுளித்தார்.

குஞ்சு இளவரசிஅறைக்குள் போனாள். கீர்த்தனை மத்தியில் நின்றது. ஒரு கூச்சல் கேட்டது. பின்னால்மேரியின் காலடி ஓசையும் முத்தமிடும் சப்தமும் ஒலித்தன. இளவரசர் ஆண்ட்ரூ உள்ளே

போனபோது, இரண்டு இளவரசிகளும் அவர்கள் அவருடைய திருமணத்தின்போது ஒரு தடவை, வெகு சொற்ப நேரம்தான் பழகி இருந்தார்கள். ஒருவரை ஒருவர் கட்டிக்கொண்டு, தங்கள் உதடுகளை ஆவலோடு தங்களுக்கு அகப்படுகின்ற இடங்களில் முத்தமிட்டுக் கொண்டிருந்தார்கள். குமாரி பௌரியன், அவர்களுக்குப் பக்கத்தில் நின்று தனது கையால் இருதயத்தை அழுத்தி அழகான புன்சிரிப்போடு அழுவதற்கோ அல்லது சிரிப்பதற்கோ, தயாராய் இருப்பதாய்த் தோன்றினாள். இளவரசர் ஆண்ட்ரூ தமது தோள்களைக் குலுக்கிக்கொண்டு முகத்தைச் சுளித்தார். சங்கீத ரசிகர்கள் ஒரு அபசுரத்தைக் கேட்கும்போது எப்படி காணப்படுவார்களோ அம்மாதிரி அவர் தோன்றினார். இரண்டு பெண்களும் அரவணைப்பிலிருந்து பிரிந்தார்கள். உடனே மீண்டும் ஒருவர் கையை ஒருவர் பற்றி முத்தமிட்டுக் கைகளை இழுத்தார்கள். மீண்டும் முகத்தில் முத்தமிட ஆரம்பித்தபோது அழத் தொடங்கினார்கள். மறுபடியும் முத்தமிட ஆரம்பித்தார்கள். இளரவசர் ஆண்ட்ரூவுக்கு இது ஆச்சரியமாய் இருந்தது. குமாரி பௌரியனும்கூட அழ ஆரம்பித்தாள். இளவரசர் ஆண்டரூவின் மனதிற்கு கஷ்டமாய் இருந்தது. ஆனால், அவர்கள் அழுவது மிகவும் இயற்கையானதுபோல அவர்களுக்குத் தோன்றியது. இந்த சந்திப்பில் இப்படி அழுவதைத் தவிர, வேறு எதையும் செய்ய முடியும் என்று அவர்கள் தலையில் ஏறவில்லை.

'ஆ, என் அன்பே... ஆ, மேரி...' அவர்கள் திடீரென்று இம்மாதிரி சொல்லி, பிறகு சிரித்தார்கள். 'நேற்றிரவுதான் நான் கனாக் கண்டேன்...' 'நீங்கள் எங்களை எதிர்பார்க்கவில்லை அல்லவா?...' 'ஆ. மேரி நீ மெலிந்து விட்டாய்... ஆனால், நீ பருத்து விட்டாய்...'

'இளவரசியை நான் உடனே தெரிந்து கொண்டேன்' என்றாள் குமாரி பௌரியன்.

'நீங்கள் இவ்வளவு சீக்கிரம் வருவீர்கள் என்பது எனக்குத் தெரியாது...' என்றாள் இளவரசி மேரி. 'ஆ, ஆண்ட்ரூ, நான் உம்மை கவனிக்கவில்லையே!'

இளவரசர் ஆண்ட்ரூம் அவர் சகோதரியும் கைகளைப் பற்றிக் கொண்டு, ஒருவருக்கொருவர் முத்தமிட்டார்கள். 'எப்பொழுதும் போலவே, நீ இன்னமும் அழுகிற குழந்தையாகவே இருக்கிறாய்' என்று அவளைப் பார்த்து அவர் சொன்னார். இளவரசி மேரி தன் சகோதரரை நோக்கினாள். அவளுடைய பெரிய பிரகாசமான கண்கள் அச்சமயம் மிகவும் அழகாய் இருந்தன. கண்ணீருக்கிடையில் அவற்றில் தோன்றிய மனம் பொங்கிய அமைதியான பார்வை, இளவரசர் ஆணட்ரூவின் முகத்தை நோக்கியது. குஞ்சு இளவரசி

விடாமல் பேசினாள். அவளுடைய குட்டையான மேல் உதடு, விடாமலும் வேகமாகவும் சிவந்த கீழ் உதட்டை அவசியமான போது தொட்டுக்கொண்டும், அவள் முகத்தில் புன்னகை ஏற்படும்போது மேலே போய்க்கொண்டும் இருந்தது. அவள் இளநகை செய்யும்போது,அவளுடைய பற்கள் ஒளிர்விட்டு, கண்கள் பிரகாசித்தன. ஸ்பாஸ்கி ஹில் என்ற இடத்தில் அவர்களுக்கு நேர்ந்த ஒரு சம்பவத்தைச் சொன்னாள். அவளுடைய தற்கால நிலைமையில் அது மிகுந்த ஆபத்தாய் இருந்திருக்கும் என்றும் சொன்னாள். பின்னால் தன்னுடைய உடைகளையெல்லாம் பீட்டர்ஸ்பர்க்கில் வைத்துவிட்டதாகவும், இங்கே உடுப்பதற்கு என்ன இருக்கிறது என்பது கடவுளுக்குத்தான் தெரியும் என்றும் கூறினாள். ஆண்ட்ரூ ரொம்ப மாறிவிட்டதாகவும், அந்த கிட்டி ஓடின்ட்சாவா ஒரு கிழவரைக் கல்யாணம் செய்து கொண்டதாகவும், மேரிக்கு ஒரு கணவரை-ஒரு உண்மையான பேர்வழியைப் பார்த்திருப்பதாகவும், ஆனால், அதைப்பற்றி பின்னால் பேசிக்கொள்ளலாம் என்றும் அவள் சொன்னாள். இளவரசி மேரி இன்னமும் அமைதியாக தன் சகோதரரைப் பார்த்துக்கொண்டே இருந்தாள். அவளுடைய அழகிய கண்களில் அன்பும், சோகமும் நிறைந்து நின்றன. அவளுடைய மைத்துனி பேசும் வார்த்தைகளுக்கு சம்பந்தமில்லாத எதையோ ஒன்றை அவள் சிந்தித்துக் கொண்டு இருக்கிறாள் என்பது தெளிவாய்த தெரிந்தது. பீட்டர்ஸ்பர்க்கில் கடைசியாக நடந்த விருந்தைப் பற்றி வர்ணிப்பு நடந்தபோது, அவள் தன் சகோதரரைப் பார்த்து, 'அப்படியானால், நீர் உண்மையாகவே யுத்தத்திற்குப் போகிறீரா, ஆண்ட்ரூ?' என்று பெருமூச்சோடு கேட்டாள்.

லிசாவும் பெருமூச்செறிந்தாள்.

'ஆம், நாளையேதான்' என்று சகோதரர் பதில் அளித்தார்.

'என்னை அவர் இங்கேவிட்டு விட்டுப் போகிறார். ஏன் என்பது கடவுளுக்குத்தான் தெரியும். அவருக்கு உத்தியோக உயர்வு கிடைக்கும்போது...'

கடைசிவரை இளவரசி மேரி அவள் பேச்சை கவனிக்கவில்லை. ஆனால், தன் சிந்தனையிலேயே அவள் ஆழ்ந்திருந்தாள். மைத்துனி பக்கம் திரும்பி, அவளுடைய உருவத்தை கனிந்த நோக்கோடு பார்த்தா[illegible]மணியர்கள் உங்களு[illegible] கிறார்கள்?

இளவரசர் ஆண்ட்ரூ குறுநகை காட்டினார்.

அவளுடைய மேல் உதடு கீழே இறங்கியது. மைத்துனியின் முகத்தின் பக்கத்தில் தன் முகத்தை வைத்துக்கொண்டு எதிர்பாராத விதத்தில் அழ ஆரம்பித்தாள்.

'அவளுக்கு ஓய்வு தேவை' என்று முகத்தைச்சுளித்துக்கொண்டு இளவரசர் ஆண்ட்ரூ கூறினார். 'இல்லையா, லிசா? அவளை உன் அறைக்கு அழைத்துப்போ. நான் அப்பாவைப் பார்க்கப் போகிறேன். அவர் எப்படி இருக்கிறார்? பழைய மாதிரிதானா?'

'ஆம், பழைய மாதிரிதான். ஆனால், நீர் என்ன நினைப்பீர் என்பது எனக்குத்தெரியாது' என்றாள் மகிழ்ச்சியோடு இளவரசி.

'மணி நேரங்களெல்லாம், பழைய மாதிரியேதானா? சாலையில் உலவுதல்? இந்த கடைசல் யந்திரம்?' என்று வெளியே தெரியாத புன்னகையோடு இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

தந்தையிடம் அவருக்கு மதிப்பும் மரியாதையும் இருந்த போதிலும் கூட அவருடைய பலவீனங்களையும் அவர் அறிவார் என்பதையே அது காட்டியது.

மணி நேரங்களெல்லாம் பழைய மாதிரியேதான். கடைசல் யந்திரம், என்னுடைய கணிதங்கள், க்ஷேத்திரக் கணிதப் பாடங்கள் எல்லாம் அப்படியே' என்று சிரித்தவாறு இளவரசி மேரி கூறினாள். அவன் சொல்லியது, அவளுடைய க்ஷேத்திரக் கணிதப் பாடங்கள் அவளுடைய வாழ்க்கையிலேயே மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுப்பவைகளில் ஒன்று என்பதுபோலத் தோன்றியது.

இருபது நிமிஷங்கள் கழிந்தன. வயதான இளவரசர் எழுந்திருக்கும் நேரம் வந்தது. வாலிப இளவரசரை அவருடைய தந்தையிடம் அழைத்துப்போக டைக்கன் வந்தான். தமது குமாரரின் வருகையைச் சிறப்பிப்பதற்காக அந்த வயதான மனிதர் தமது வேலை முறைகளில் ஒரு மாறுதல் செய்தார். அதாவது, அவர் உணவிற்காக உடை அணிந்துகொள்ளும்போது, தமது மகனைத் தமது அறைக்கு வரும்படி அழைத்தார். அந்த வயதான இளவரசர் எப்பொழுதுமே பழங்கால மோஸ்தரிலேயே உடை அணிவார். ஒரு பழங்கால கோட்டு அணிந்து, டோபாவிற்குப் பௌடர் போட்டிருந்தார். இளவரசர் ஆண்ட்ரூ வரவேற்பு அறைகளில் காட்டும் அவமதிப்பான முகத்தோற்றத்துடன் இல்லாமல், அவர் பீயரோடு பேசியபோது என்ன உணர்ச்சியோடு இருந்தாரோ; அதே தோற்றத்தோடு, தகப்பனாரின் உடை அணியும் அறைக்குள் போனார். அந்தக் கிழவர் [illegible] சொன்னார். இளவரசி [illegible]லியில் அமர்ந்து, நோக்கினாள். அவளுடைய பெரிய பிரகாசமான கண்கள் அச்சமயம் மிகவும் அழகாய் இருந்தன. கண்ணீருக்கிடையில் அவற்றில் தோன்றிய மனம் பொங்கிய அமைதியான பார்வை, இளவரசர் ஆண்ட்ரூவின் முகத்தை நோக்கியது. [illegible]

'ஆ! இதோ வந்துவிட்டார், வீரர்! போனபார்ட்டைதோற்கடிக்கப் போகிறாயா?' என்று கிழவர் சொல்லி, தமது பௌடர் போட்டத் தலையை எவ்வளவு ஆட்ட முடியுமோ, அவ்வளவு ஆட்டினார். டோபாவின் ஜடையை டைக்கன் பலமாய் பிடித்துக் கொண்டிருந்தான்.

'குறைந்தது அவனை சரியானபடி சமாளிக்க வேண்டும். இல்லாவிடில் இம்மாதிரியே அவன் போய்க்கொண்டிருந்தால், சீக்கிரம் நம்மைக்கூட அவனது பிரஜைகளாக்கி விடுவான். நீ சௌக்கியமா?' என்று கேட்டு முத்தமிடுவதற்காக தமது கன்னத்தைக் காட்டினார். டின்னருக்கு முன்னால் தூக்கத்திற்குப் பின்பு கிழவர் நல்ல சுபாவத்தில் இருந்தார். டின்னருக்குப் பின்னால் தூங்குவது வெள்ளி என்றும் டின்னருக்கு முன்னால் தூங்குவது தங்கம் என்றும் அவர் சொல்வதுண்டு. அவருடைய அடர்ந்த புருவ ரோமங்களின் வழியாக சந்தோஷமான கடைக்கண் பார்வைகளால் மகனை நோக்கிக்கொண்டிருந்தார். இளவரசர் ஆன்ட்ரூ தந்தையிடம் சென்று அவர் காட்டிய இடத்தில் முத்தமிட்டார். அக்காலத்தில் உள்ள ராணுவ வீரர்களைப் பற்றியும், முக்கியமாக போனபார்ட்டைப் பற்றியும், அவர் கேலி செய்யும் அவருக்குகந்த விஷயத்தைப் பற்றி தந்தையிடம் மகன் எவ்வித பதிலும் சொல்லவில்லை.

'ஆம்,அப்பா நான் உங்களை பார்க்க வந்திருக்கிறேன். எனது மனைவியையும் கூட்டிவந்திருக்கிறேன். அவள் கர்ப்பம். நீங்கள் சௌக்கியம்தானே?' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. அவர் பேசியபோது, தந்தையின் முகத்தில் காணப்பட்ட ஒவ்வொரு அசைவையும் ஆவலோடும் மரியாதையோடும் கவனித்து வந்தார்.

'முட்டாள்களும் ஒழுக்கங்கெட்டவர்ளும்தான் நோயில் விழுவார்கள், எனது புத்திரனே. என்னை உனக்குத் தெரியும். காலையிலிருந்து இரவு வரையில் நான் சுறுசுறுப்பாய் இருக்கிறேன். அளவுக்கு மீறி உண்பதுமில்லை. அதனால் நான் சௌக்கியமாய் இருக்கிறேன்.'

'கடவுளுக்கு நன்றி' என்றார் புன்சிரிப்புடன் குமாரர்.

'இதில் கடவுள் செய்வதற்கு எதுவுமில்லை. சரி, சொல்லு. யுத்த தந்திரம் என்ற இந்தப்புதிய சாஸ்திரம் இருக்கிறதே, அதைக் கொண்டு போனபார்ட்டை எப்படித் தோற்கடிப்பது என்பதைப் பற்றி, ஜெர்மனியர்கள் உங்களுக்கு என்ன சொல்லிக் கொடுத்திருக் கிறார்கள்?

இளவரசர் ஆண்ட்ரூ குறுநகை காட்டினார்.

‘எனக்கு கொஞ்சம் அவகாசம் கொடுங்கள், அப்பா’ என்று புன்னகையோடு பதிலளித்தார். அவருடைய தந்தையிடம் பல வீனங்கள் இருந்தபோதிலும், அவற்றால் அவரை மதிப்பதோ அல்லது நேசிப்பதோ எதுவும் குறையவில்லை என்பதை அவருடைய புன்னகை காட்டியது.

‘இன்னும் நான் வந்து உட்காரக்கூட இல்லையே.’

‘அசட்டுத்தனம், அசட்டுத்தனம், என்று தமது டோபாவும் அதில் பின்னால் கட்டியிருந்த ஜடையும் சரியாய் இருக்கிறதா என்பதை அறிவதற்காக தலையை ஆட்டிக்கொண்டு கிழவர் பேசி தமது குமாரரின் கையைப் பற்றினார். ‘உனது மனைவி தங்குவதற்கு வீடு தயாராய் இருக்கிறது. இளவரசி மேரி அவளை அழைத்துக்கொண்டு போய் அவற்றையெல்லாம் காட்டுவாள். இருவரும் சேர்ந்து பேச்சுப் பேச்சென்று பேசிக்கொண்டே இருப்பார்கள். அதுதானே பெண்களின் சுபாவம். அவள் இங்கு வந்தது பற்றி எனக்கு மகிழ்ச்சி. உட்காரு, என்னுடன் பேசு. மைக்கேல்சன்னின் ராணுவமும் டால்ஸ்டாய் ராணுவமும் ஏககாலத்தில் படையெடுப்பு... ஆனால் தெற்கே உள்ள படை என்ன செய்யப்போகிறது? ரஷ்யாவோ நடுநிலைமை... அது எனக்குத் தெரியும். ஆஸ்திரியாவைப் பற்றி என்ன?’ என்று நாற்காலியிலிருந்து அவர் எழுந்து மேலும் கீழும் நடந்துகொண்டிருந்தார். அவர் பின்னாலேயே டைக்கனும் ஓடி அணியவேண்டிய உடைகளை ஒவ்வொன்றாய் கொடுத்தான். ‘ஸ்வீடன் என்ன செய்யப்போகிறது? பாமேரானியாவை அவர்கள் எப்படிக் கடிக்கப்போகிறார்கள்?’

தந்தை பிடிவாதமாய் இருப்பதைப் பார்த்து இளவரசர் ஆண்ட்ரூ முதலில் தயக்கத்தோடு பேச ஆரம்பித்தார். ஆனால் கொஞ்சம் கொஞ்சமாக, வர வர அதிகமான உணர்ச்சியோடும், அவருடைய வழக்கப்படி ருஷ்ய மொழியிலும், பிரஞ்சு மொழியிலும் பேச ஆரம்பித்து வரப்போகும் போராட்டத்தைப் பற்றிய திட்டங்களை விளக்கினார். தொண்ணூராயிரம் பேர் கொண்ட படையொன்று, பிரஷ்யவை பயமுறுத்தி நடுநிலைமையை அது கை விட்டு யுத்தத்தில் சேர்ந்துகொள்ளும்படி அதைச் செய்யப்போவதைப் பற்றியும், அந்தப் படையில் ஒரு பகுதி ஸ்வீடிஷ் படையோடு ஸ்ட்ரால்சண்ட் என்ற இடத்தில் கலந்துகொள்ளுவதைப் பற்றியும், இருநூற்றிருபது ஆயிரம் ஆஸ்திரியர்கள், நூறாயிரம் ருஷ்யர்களோடு இத்தாலியிலும் ரைன் பிரதேசத்திலும் போரிடுவது பற்றியும், ஐம்பதினாயிரம் ருஷ்யர்களும் சாத்தயமானவரை இங்கிலீஷ் காரர்களும்,நேப்பிள்ஸ் என்ற ஊரில் போய் இறங்குவது பற்றியும், மொத்தம் ஐந்நூறாயிரம் வீரர்கள் நாலாபக்கங்களில் இருந்தும்

பிரான்சை தாக்குவது பற்றியும் அவர் விளக்கிக் கூறினார். வயோதிக இளவரசர் இந்த வியாக்யானத்தில் கொஞ்சம்கூட சிரத்தை கொண்டதாகக் காட்டிக்கொள்ளவில்லை. அதை கவனிக்காததைப் போல உலாவிக்கொண்டே தமது உடைகளை அணிந்து கொண்டிருந்தார். மூன்று தடவை எதிர்பாராதவிதமாக அவர் இடைமறித்தார். ஒரு தடவை அவர் பேச்சை நிறுத்தி, 'அந்த வெள்ளையை எடு. அந்த வெள்ளையை எடு என்று கத்தினார். அதவாது தமக்கு வேண்டிய வெள்ளை உள்ளங்கியை டைக்கன் எடுத்துக் கொடுக்காததற்காக அவர் கத்தினார். மற்றொரு தடவை அவர் இடைமறித்து, 'அவளுக்கு சீக்கிரம் பிரசவம் ஆகிவிடுமா?' என்று தலையை ஆட்டிக்கொண்டு கண்டிப்பதுபோல் பேசினார். 'அது நல்லதல்ல. சரி, பேசு.' மூன்றாவது தடவை அவர் இடைமறித்தது, இளவரசர் ஆண்ட்ரூ தமது விளக்கத்தை முடிக்கிற சமயத்திலாகும். கிழத்தனத்தால் கலகலத்துப்போன தமது குரலில் கிழவர் பாட ஆரம்பித்தார். அதாவ து, பிரான்ஸில் பிரபலமாய் விளங்கும் ஒரு பாட்டு. 'மார்ல்பரோ யுத்தத்திற்குப் போகிறார், அவர் எப்பொழுது திரும்புவார் என்பது கடவுளுக்குத்தான் தெரியும்' என்பதுதான் அந்தப் பாட்டு. அவர் குமாரர் முறுவலித்தார்.

'அந்த திட்டத்தை நான் ஒப்புக்கொள்ளுவதாக நான் சொல்லவில்லை. அந்த திட்டம் என்னது என்பதையே உங்களுக்குச் சொல்கிறேன். நெப்போலியனும் இதற்குள்ளாக தனது திட்டத்தை வகுத்துவிட்டான். நமது திட்டத்தை விட அது மோசமானது அல்ல.'

'நல்லது, புதிதாக நீ எதுவும் எனக்குச் சொல்லிவிடவில்லை' என்று கிழவர் கூறிவிட்டு, மீண்டும் சிந்தனையுடனும் வேகமாகவும், 'அவர் எப்பொழுது திரும்பி வருவார் என்பது கடவுளுக்கே தெரியும். நீ சாப்பாட்டு அறைக்குப் போ' என்று சொன்னார்.

## 1 27

குறிப்பிட்ட நேரத்தில் இளரவரசர் க்ஷவரம் செய்து பௌடர் போட்டு, சாப்பாட்டு அறைக்குள் வந்தார். அங்கே அவருடைய மருமகளும் இளவரசி மேரியும், குமாரி பௌரியனும் முன்னாலேயே காத்திருந்தார்கள். கட்டிட சிற்பியும் அங்கே இருந்தார். இந்த முக்கியமில்லாத பேர்வழிக்கு அவர்களுடன் மேஜையில் உட்கார்ந்து சாப்பிட அந்தஸ்து கிடையாது. என்றாலும் எஜமானரின் விசித்திரமான

புத்திப் போக்கின் காரணமாக அவரை அனுமதித்திருந்தார். இளவரசர் சமூக அந்தஸ்து வித்தியாசங்களை ரொம்ப கண்டிப்பாக அனுசரிப்பவர். முக்கியமான சர்க்கார் அதிகாரிகளாய் இருந்தாலும் கூட, அவர்களைத் தம்முடன் சாப்பாட்டுக்கு அழைப்பது ரொம்ப அபூர்வம். அப்படி இருந்தும், எதிபாராத விதமாக மைக்கேல் ஐவானாவிச்சை அழைத்திருந்தார். (அந்த ஐவானாவிச் அடிக்கடி ஒரு மூலைக்குப் போய், தம்முடைய கட்டம் போட்ட கைக்குட்டையைக் கொண்டு மூக்கைச் சிந்துவது வழக்கம்) எல்லாரும் சமம் என்ற கொள்கையைக் காட்டுவதற்காகவே, அவர் இம்மாதிரி செய்தார். அவர் தமது மகளிடம், மைக்கேல் ஐவானாவிச்சைப் பற்றி பல தடவைகளில், 'உனக்கும் எனக்கும் இம்மி அளவுகூட அவன் குறைந்தவன் அல்ல' என்று சொல்லியிருக்கிறார். சாப்பாட்டின்போது, அந்த மௌனமான மைக்கேல் ஐவானாவிச்சிடம், மற்ற யாரிடமும் பேசுவதைவிட அதிகமாக வழக்கமாய் பேசுவதுண்டு.

சாப்பாட்டு அறை அந்த வீட்டில் உள்ள மற்ற எல்லா அறைகளையும்விட மிக்க உயர்ந்ததாய் இருந்தது. அங்கே வீட்டில் உள்ளவர்களும், சாப்பாட்டு மேஜைக்கு முன்னால் போடப் பட்டிருந்த ஒவ்வொரு நாற்காலிக்கும் பின்னால் ஒவ்வொரு சேவகனும் நின்று, இளவரசர் வருகைக்காக காத்துக்கொண்டிருந் தார்கள். தலைமை பட்லர் கையில் சவுக்கத்தைத் தொங்கவிட்டு, மேஜைமீது உள்ளவைகளை கவனத்தோடு பார்த்தான். சேவகர்களுக்கு சைகையினால் உத்தரவிட்டுக்கொண்டு, இளவரசர் பிரவேசிக்கும் வாசலையும் கடிகாரத்தையும் மாறி மாறி பார்த்துக் கெண்டிருந்தான். இளவரசர் ஆண்ட்ரூ ஒரு பெரிய கில்ட் சட்டமிடப்பட்ட வம்சாவளி சரித்திரப் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். அது அவருக்குப் புதிது. பால்கோன்ஸ்கி இளவரசர்களின், ஆதியிலிருந்து இதுவரையுள்ள வம்சாவளிச் சித்திரம் அதில் போடப்பட்டிருந்தது. அதற்கு எதிராக, அதே மாதிரி சட்டத்தில் போடப்பட்டிருந்த ஒரு படம் தொங்கியது. பால் கோன்ஸ்கிகளின் மூதாதையானவரும் ரூரிக் என்பவரின் சந்ததி என்று சொல்லப்பட்டவருமான, தலையில் கிரீடம் தரித்த, ஒரு மன்னரின் உருவச் சித்திரம் அதில் காணப்பட்டது. அந்தப் படம் மோசமாக எழுதப்பட்டிருந்தது. ஒருவேளை எஸ்டேட்டிலுள்ள (பெரிய எஸ்டேட்டுகளில் தங்கள் அடிமைகளிலிருந்து ஓவியக்காரர் களையும் சங்கீத வித்வான்களையும் ஏற்படுத்துவது வழக்கமாய் இருந்தது.) சித்திரக்காரர் ஒருவர் அதை எழுதியிருக்கலாம். இளவரசர் ஆண்ட்ரூ மீண்டும் வம்சாவளிச் சித்திரத்தைப் பார்த்து,

தலையை ஆட்டிச் சிரித்தார். அசல் மாதிரியே நகலும் ஒரு உருவச் சித்திரத்தில் அமையுமானால், அதைப் பார்க்கும்போது எவ்வளவு சந்தோஷமாய் இருக்குமோ, அதே சந்தோஷம் அவருடைய சிரிப்பில் தெரிந்தது.

'அவர் குணம் மாதிரியே அதுவும் அவ்வளவு பூரணமாய் இருக்கிறதே!' என்று தம்மிடம் வந்த இளவரசி மேரியிடம் அவர் சொன்னார்.

இளவரசி மேரி ஆச்சரியம் அடைந்து, தனது, சகோதரரைப் பார்த்தாள். எதற்காக அவர் சிரிக்கிறார் என்பதை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவள் தகப்பனார் செய்யும் ஒவ்வொன்றும் அவளுக்கு பயபக்தியையே கொடுக்கும் குணதோஷம் கூறுவது என்ற பேச்சுக்கே அங்கு இடமில்லை.

'ஒவ்வொருவருக்கும் ஒரு பலவீனமான இடமுண்டு; வேடிக்கை இவ்வளவு சக்திவாய்ந்த மனமுள்ளவர் இம்மாதிரி அசட்டுத் தனத்தில் திளைக்கிறார்.'

தனது சகோதரரின் தைரியமான குணதோஷ பேச்சை மேரியால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவள் பதில் சொல்ல ஆரம்பித்த அதே சமயத்தில், எதிர்பார்த்த காலடி ஓசைகள் படிப்பு அறையிலிருந்து வந்து கொண்டிருந்தன. இளவரசர் தமாஷாகவும் வேகமாகவும் உள்ளே வந்தார். அவருடைய சுறுசுறுப்பான நடவடிக்கைகளுக்கும், அவர் வீட்டில் காணப்பட்ட கண்டிப்பான ஒழுங்கிற்கும் நேர்மாறாக, வேண்டுமென்றே செய்வதுபோல் இருந்தது அவருடைய தமாஷான தோற்றம். அச்சமயத்தில் அங்கிருந்த பெரிய கடிகாரம் இரண்டு மணி அடித்தது. வரவேற்பு அறையிலிருந்த கடிகாரமும் அதே சமயத்தில் மணியடித்து அந்த சப்தத்தோடு கலந்துகொண்டது. வயோதிக இளவரசர் அசையாமல் நின்றார். அவரது துடிதுடிப்பான மினுமினுக்கும் கண்கள், புஷ்டியான கண் புருவ ரோமங்களுக்கு அடியிலிருந்து அங்கு வந்திருந்தவர்களை கூர்மையோடு பார்த்து, குஞ்சு இளவரசியிடம் வந்து நின்றன. ஜார் சக்கரவர்த்தி உள்ளே நுழையும்போது, தர்பாரில் உள்ளவர்கள் எப்படி பயமும் மரியாதையும் கொண்ட உணர்சியைப் பெறுவார்களோ அதே மாதிரி, அதே உணர்ச்சியை அங்குள்ள வர்களிடம் அந்தக் கிழவர் ஏற்படுத்துவதுபோல் அவள் உணர்ந்தாள். அவர் அவளுடைய தலையை முதலில் தடவிக்கொடுத்து, பின்னால் அவளுடைய கழுத்தின் பின் பக்கத்தை நாசுக்கில்லாமல் தட்டிக்கொடுத்தார்.

'உன்னைப் பார்ப்பதில் எனக்கு சந்தோஷம், சந்தோஷம்' என்று சொல்லி கவனத்தோடு அவள் கண்களைப் பார்த்துவிட்டு,

விரைவாக தமது இடத்திற்குச் சென்று அமர்ந்தார். 'உட்காருங்கள், உட்காருங்கள். மைக்கேல் ஐவானாவிச், உட்காருவாயாக.'

தமது மருமகளுக்கு தமது பக்கத்திலுள்ள ஒரு நாற்காலியைக் காட்டினார். சேவகன் அவளுக்கு அந்த நாற்காலியை இழுத்துப் போட்டான். அவளுடைய உருண்ட உடம்பைப் பார்த்ததும், 'ஓஹோ' என்றார், கிழவர். 'நீ ரொம்ப அவசரப்பட்டுவிட்டாய். அது ரொம்பக் கெடுதல்' என்று சொல்லிவிட்டு தமது வழக்கமான உணர்ச்சியற்ற கண்டிப்பான இனிமையற்ற வழியில் தமது உதடுகளால் மட்டும் சிரித்தார். அவர் கண்கள் அந்த உணர்ச்சியைக் காட்டவில்லை.

'நீ உலாவவேண்டும். எவ்வளவு முடியுமோ, அவ்வளவு தூரம், உலாவ வேண்டும்' என்றார்.

குஞ்சு இளவரசி அவர் சொல்லியதை கவனிக்கவில்லை: கவனிக்க விரும்பவுமில்லை. அவள் மௌனமாய் இருந்தாள். மனம் குழம்பியதுபோல் காணப்பட்டாள். அவளுடைய தந்தையைப் பற்றி இளவரசர் விசாரித்தார். உடனே அவள் புன்சிரிப்பு கொள்ளவும் பேசவும் ஆரம்பித்துவிட்டாள். தங்கள் இருவருக்கும் பழக்கமானவர்களைப் பற்றி அவர் விசாரித்தார். அவள் இன்னும் அதிக உற்சாகம் கொண்டு பேச ஆரம்பித்தாள். அவருக்கு அவள் மூலம் யார் யார் வாழ்த்துக்கள் அனுப்பினார்கள் என்பதைப் பற்றி சொல்லி, பட்டணத்து அரட்டைகளைப் பற்றி வம்பளக்க ஆரம்பித்தாள்.

'பாவம், கோமகன் அப்ராக்ஸினா தன் கணவரை இழந்து விட்டாள். அழுது அழுது அவள் கண்களே போய்விட்டன' என்று சொல்லி இன்னும் அதிக உற்சாகத்தோடு பேசலானாள்.

அவளுடைய பரபரப்பு அதிகமாக ஆக இளவரசர் அவளை மேலும் மேலும் உன்னிப்பாகப் பார்த்துக்கொண்டிருந்தார். அவளைப் பற்றி போதுமானபடி அறிந்துகொண்டது போலவும் அவளைப் பற்றி ஒரு முடிவான அபிப்பிராயத்திற்கு வந்துவிட்டது போலவும் அவர் திடீரென்று அவளிடமிருந்து திரும்பியது காட்டியது. அவர் திரும்பி மைக்கேல் ஐவானாவிச்சிடம் பேசினார்.

'நல்லது, மைக்கேல் ஐவானாவிச், நமது போனபார்ட்டுக்கு கெட்டகாலம் வரப்போகிறது. இளவரசர் ஆண்ட்ரூ (எப்பொழுதும் தமது மகனைஅவர் அப்படித்தான் அழைப்பது வழக்கம்) அவனுக்கு விரோதமாக எந்தப் படைகள் சேகரிக்கப்படுகின்றன என்பதைப் பற்றி என்னிடம் சொல்லிக்கொண்டிருந்தார். ஆனால் நீயும் நானும் போனபார்ட்டைப் பற்றி பிரமாதமாய் நினைத்ததேயில்லை.'

'நீயும் நானும்' போனபார்ட்டைப் பற்றி பேசியதாக சொல்லப் பட்ட விஷயங்கள் எப்பொழுது நடந்தன என்பது மைக்கேல் ஐவானாவிச்சுக்குத் தெரியவே தெரியாது. ஆனால் இளவரசருக்கு விருப்பமான விஷயங்களை,யார் தலைமீதாவது போட்டுப் பேசவேண்டுமே, அதற்காகத் தம்மை உபயோகிப்பதாக அவர் தெரிந்துகொண்டார். மேலும் என்ன சொல்லப் போகிறார் என்று ஆச்சரியத்தோடு வாலிப இளவரசரைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

'தந்திரங்களில் அவர் பெரியவர்' என்று அந்த சிற்பியை தமது குமாரருக்குச் சுட்டிக்காட்டி இளவரசர் சொன்னார்.

உரையாடல்கள் மீண்டும் யுத்தத்தைப் பற்றியும் போன பார்ட்டைப் பற்றியும் அக்காலத்திய தளபதிகளைப் பற்றியும் ராஜதந்திரிகளைப் பற்றியும் திரும்பியது. இப்பொழுது உள்ளவர்கள் எல்லாம், அரசியல் விஷயங்களிலோ அல்லது, யுத்த விஷயங்களிலோ 'அ, ஆ' கூடத் தெரியாத வெறும் குழந்தைகள் என்பது அந்த வயதான இளவரசரின் நம்பிக்கை. அதோடு போனபார்ட் என்பவன் ஒரு முக்கியத்துவம் இல்லாத அற்ப பிரஞ்சுக்காரன் என்றும், பாட்டம்கின்ஸ் அல்லது சுவோராவ் போன்ற வீரர்கள்அவனை எதிர்ப்பதற்கு இல்லாத படியால்தான், அவனால் வெற்றி பெற முடிகிறதென்றும் அவர் நம்பினார். அதோடு ஐரோப்பாவில் அரசியல் சிக்கல்கள் எதுவும் இல்லை என்பதும் அவர் முடிவு. உண்மையான யுத்தம் எதுவும் கிடையாது என்றும், உண்மையாக எதையோ செய்வதைப்போல நடித்து, தற்கால மனிதர்கள் ஒரு தினுசான பொம்மையாட்டமே காட்டி வருகிறார்கள் என்றும் அவர் நினைத்தார். புது மனிதர்களைப் பற்றி தமது தந்தை கேலி செய்வதை இளவரசர் ஆண்ட்ரூ மகிழ்ச்சியோடு பொறுத்துக்கொண்டிருந்தார். அவரை மேலும் மேலும் பேச்சில் இழுத்து, வெளிப்படையான சந்தோஷத்தோடு கவனித்துக் கொண்டிருந்தார்.

'கடந்த காலம் எப்பொழுதுமே நன்றாய்த்தான் தோன்றும். ஆனால் மாரியாவ் போட்ட கண்ணியில் சுவோராவ் தாமே அகப்பட்டுக்கொள்ளவில்லையா? அதிலிருந்து தப்பிக்க வழி தெரியாமல் இருக்கவில்லையா?' என்று அவர் கேட்டார்.

'உனக்கு யார் சொன்னது?' என்று வயோதிக இளவரசர் கூவினார். 'சுவோராவ்' என்று கூறி தமது சாப்பாட்டுத் தட்டைத் தள்ளினார். டைக்கன் அதை வேகமாய் பிடித்துக்கொண்டான். 'சுவோராவ்... இளவரவசர் ஆண்ட்ரூவே, யோசித்துப் பாரும். இருவர்... பிலெட்ரிக்கும் சுவோராவும்... மாரியாவ்... சுவோராவ் தம்

இஷ்டப்படி செய்யுமாறு விடப்பட்டிருந்தால் மரியாவ் கைதியாயிருப்பான். ஆனால் அவர் தலையில் ஆஸ்திரியாவின் யுத்தக் கவுன்சிலை சுமத்தினார்கள். அந்த நிலைமையில் சாத்தான்கூட ஒன்றும் தோன்றாமல் குழம்பிப் போயிருக்கும். நீ அங்கே போன பின்பு அந்த ஆஸ்திரியாவின் யுத்தக் கவுன்சில் எத்தகையது என்பதை அறிந்து கொள்ளுவாய். சுவோராவல் அவர்களைச் சமாளிப்பதற்கு என்ன சந்தர்ப்பம் இருக்கிறது இல்லை, எனது அன்பான பையனே, நீயும் உனது தளபதிகளும் போனபார்ட்டுக்கு எதிராக ஒன்றும் செய்துவிட முடியாது. நீங்கள் பிரஞ்சுக்காரர்களைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். அப்படியானால் தான் ஒரே கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் நல்ல சண்டை போட முடியும். பிரஞ்சுக்காரரான மரியாவைக் கொண்டு வருவதற்காக பாலென் என்ற கஜெர்மன் அமெரிக்காவில் உள்ள நியூயார்க்குக்கு அனுப்பப்பட்டு இருக்கிறான்' என்று அவர் சொல்லி ருஷ்யப் படையில் சேர்ந்து கொள்ளும்படி அந்த வருஷம் மாரியாவுக்கு அழைப்பு அனுப்பியதை ஜாடையாகச் சுட்டிக்காட்டினார்.

'ஆச்சரியம்... பாட்டம்கின்ஸ், சுவோராவ், ஆர்லோவ் இளவர்கள் எல்லாம் ஜெர்மனியர்களா? இல்லை, வாலிபனே. ஒன்று உங்கள் அறிவை நீங்கள் இழந்திருக்க வேண்டும், அல்லது நான் இழந்திருக்க வேண்டும். உங்களுக்குக் கடவுள் உதவி செய்வாராக. ஆனால் என்ன நடக்கப்போகிறது என்பதை நாம் பார்ப்போம். அவர்களிடையே போனபார்ட் பெரிய தளகர்த்தனாய் வந்துவிட்டான்! ஹிம்...'

'எல்லாத் திட்டங்களும் நல்லவை என்று நான் சொல்லியதே இல்லை' எனறார்இளவரசர் ஆண்ட்ரூ. 'போனபார்ட்டைப் பற்றிஉங்கள் அபிப்பிராயத்தைக் கேட்டு நான் ஆச்சரியப்படுகிறேன். நீங்கள் எவ்வளவு வேண்டுமானாலும் சிரிக்கலாம். ஆனால் எப்படி இருந்தாலும் போனபார்ட் ஒருபெரிய தளகர்த்தரே.'

'மைக்கேல் ஐவானாவிச்' என்று வயோதிக இளவரசர் சிற்பியைப் பார்த்துக் கத்தினார். அந்த சிற்பி அச்சமயம் தம்மை எல்லாரும் மறந்துவிட்டதாக நினைத்து, ஒரு வாட்டிய மாமிசத்தில் சுறுசுறுப்பாய் இருந்தார். 'போனபார்ட் ஒரு பெரிய ராணுவ தந்திரி என்று நான் உனக்குச் சொல்லவில்லையா? இங்கே பார். அவர் அதையேதான் சொல்லுகிறார்.

'நிச்சயமாக சொன்னீர்கள், மேன்மை தங்கியவரே' என்றார் சிற்பி.

இளவரசர் தமது உணர்ச்சியற்ற சிரிப்பைச் சிரித்தார்.

'போனபார்ட் செல்வமாய் பிறந்தான். சிலாக்கியமான போர்வீரர்களைப் பெற்றான். ஜெர்மனிர்களைத் தாக்க முதலில் ஆரம்பித்தான். சோம்பேறிகளால்தான் ஜெர்மனியர்களைத் தோற்கடிக்காமல் இருக்கமுடியும். உலகம் தோன்றிய காலத்திலிருந்து ஒவ்வொருவரும் ஜெர்மனியர்களைத் தோற்கடித்திருக்கிறார்கள். ஆனால் ஜெர்மனியர்கள் ஒருவரையும் தோற்கடிக்கவில்லை. தங்களுக்குள்ளேதான் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டார்கள். அவர்களைத் தாக்கி போனபார்ட் பிரசித்தி அடைந்தான்.'

போனபார்ட் தனது யுத்தங்களிலும் அரசியல்களிலும் செய்துள்ள பிரமாதமான தவறுகளை, தமக்குத் தோன்றியபடி வயோதிக இளவரசர் விவரிக்க ஆரம்பித்தார். அவருடைய குமாரர் ஒன்றையும் மறுக்கவில்லை. ஆனால் என்னதான் வாதம் செய்தாலும் தந்தையைப் போலவே அவருடைய அபிப்பிராயங்களை மாற்றிக் கொள்ளமாட்டார் என்பது தெளிவாய்த்தெரிந்தது. பதில் சொல்லாமல் அவர் கவனித்து வந்தார். இந்தக் கிழவருக்கு,பல வருஷங்களாக தனிமையில் கிராமத்தில் வாழும் இவருக்கு, இவ்வளவு நுட்பமாகவும், சமீபத்தில் நடந்த சகலவிதமான ஐரோப்பய ராணுவ, அரசியல் விஷயங்களையும் எப்படி விவாதிக்க முடிகிறது. என்று அவருக்கு அடங்காத ஆச்சரியம் ஏற்பட்டது.

'நான் வயதானவன் என்றும், தற்கால விஷயங்களை அறிய முடியாது என்றும் நீ நினைக்கிறாயா?' என்று தந்தை கேட்டார். 'ஆனால், அது எனக்கு வருத்தத்தைக் கொடுக்கிறது. இரவில் நான் தூங்குவதில்லை. இப்பொழுது வா, உன்னுடைய இந்த பெரிய தளகர்த்தர், எங்கே தமது புத்திகூர்மையைக் காட்டியிருக்கிறார்?' என்று கேட்டார்.

'அதைச் சொல்லுவதற்கு ரொம்ப நேரம் ஆகும்' என்றார் குமாரர்.

'நல்லது, அப்படியானால் உன்னுடைய போனபார்ட்டிடம் போ. குமாரி பௌரியனே, உனது பவுடர் குரங்கு சக்கரவர்த்தியைப் போற்றுகிற ஒருவர் இதோ இருக்கிறார்' என்று உயர்ந்த பிரஞ்சு மொழியில் பேசினார்.

'இளவரசே, நான் போனபார்ட் கட்சியைச் சேர்ந்தவன் அல்ல என்பது உங்களுக்குத் தெரியுமே.'

'அவன் எப்பொழுது திரும்புவான் என்பது கடவுளுக்கே தெரியும்' என்ற பாட்டை சுருதி இல்லாமல் பாடிக்கொண்டு, அதே மாதிரி சுருதியில்லாமல் ஒரு சிரிப்பையும் சிரித்துக்கொண்டு மேஜையைவிட்டு இளவரசர் போனார்.

இந்த விவாதம் முழுவதிலும் அதற்குப் பின்னால் சாப்பாடு முடியும் வரையிலும் குஞ்சு இளவரசி மௌனமாய் அமர்ந் திருந்தாள். இடையிடையே தனது மாமனாரையும் இளவரசி மேரியையும் பயந்த நோக்கோடு, மாறிமாறி பார்த்துக் கொண்டிருந் தாள். மேஜையைவிட்டு எழுந்ததும் தனது மைத்துனியின் கையைப் பற்றி அவளை இன்னொரு அறைக்கு அழைத்துச் சென்றாள்.

'உனது தந்தை எவ்வளவு கெட்டிக்காரராய் இருக்கிறார். அதனால்தான் எனக்கு அவர்மீது பயம் இருக்கிறது போலும்.'

'ஓ, அவர் மிகுந்த அன்பானவர்' என்றாள் இளவரசி மேரி.



மறுநாள் மாலை இளவரசர் ஆண்ட்ரூ புறப்படுவதாய் இருந்தது. வயோதிக இளவரசர் தமது நித்திய வேலைமுறையை மாற்றவில்லை. டின்னருக்குப் பின்னால் வழக்கம்போல தமது அறைக்குத் திரும்பிப் போனார். குஞ்சு இளவரசி அவளுடைய மைத்துனியின் அறையில் இருந்தாள். ராணுவ தோள்பட்டை அணியாத பிரயாணக்கோட்டை இளவரசர் ஆண்ட்ரூ அணிந்து கொண்டு, தமது அறையில் தமது பொருள்களை தமது வேலைக்காரன் மூலம் கட்டிக்கொண்டிருந்தார். தாம் புறப்படும் வண்டியைத் தாமேசோதனை செய்த பின்பு டிரங்குகளை அதில் ஏற்றச் செய்தார். குதிரைகளை வண்டியில் பூட்டும்படி உத்தரவிட்டார். தம்முடன் எப்பொழுதும் இருக்க வேண்டிய சாமான்கள் மட்டும் அறையில் இருந்தன. அவை ஒரு சிறிய பெட்டி, வெள்ளித் தட்டுகள்கொண்ட சமையல் பாத்திரங்கள் அடங்கிய பெட்டி, இரண்டு துருக்கிய கைத் துப்பாக்கிகள், ஆச்சாகாவ் முற்றுகையிலிருந்து தமது தந்தை கொண்டுவந்து தமக்குப் பரிசளித்த ஒரு பட்டாக் கத்தி ஆகியவையாகும். இளவரசர் ஆண்ட்ரூவின் பிரயாண சாமான்களெல்லாம் புதிய சுத்தமான துணிகளால் மூடப்பட்டு,நாடாக்களால் கட்டப்பட்டு ஒழுங்காய் வைக்கப்பட்டு இருந்தன.

ஒரு பிரயாணத்திற்கு தயராகும்போதோ, அல்லது வாழ்க்கை முறையை மாற்றியமைக்கும்போதே சிந்தனா சக்தி உள்ளவர்க ளெல்லாம் பொதுவாக ஆழ்ந்தயோசனை கொண்ட மனப்பான்மை உள்ளவர்களாய் இருப்பார்கள். அம்மாதிரி சமயங்களில் கடந்த கால நிகழ்ச்சிகளை சிந்தித்துப் பார்த்து, எதிர்காலத்திற்கு வேண்டிய திட்டங்களை அமைப்பார்கள். இளவரசர் ஆண்ட்ரூவின் முகம்

ஆழ்ந்த யோசனையோடும் கனிவோடும் தோன்றியது. தமது கைகளைப் பின்னால் கட்டிக்கொண்டு, அந்த அறையிலுள்ள ஒருமூலையிலிருந்து இன்னொரு மூலைக்கு சிந்தனையோடு தலையை ஆட்டிக் கொண்டு, நேர் எதிரான பார்வையோடு வேகமாக உலாவிக் கொண்டிருந்தார். யுத்தத்திற்குப் போவதற்கு அவர் பயப்படுகிறாரா, அல்லது தமது மனைவியை விட்டுப் போவதற்கு அவர் வருந்துகிறாரா? ஒரு வேளை இரண்டும் இருக்கலாம். ஆனால் வெளியே காலடி ஓசை வருவதைக் கேட்டதும் அந்த தோற்றத்தோடு அவரை யாரும் பார்க்க அவர் விரும்பவில்லை என்று தோன்றியது. அதனால் அவசரமாக பின்னால் கட்டிய கைகளை அவிழ்த்து விட்டுக்கொண்டு மேஜை அருகில் நின்று, ஏதோ ஒரு சிறிய பெட்டியை மூட முயற்சிப்பதுபோல செய்துகொண்டு, தமக்கு வழக்கமான அமைதியான, ஊடுருவ இயலாத தோற்றத் தோடு விளங்கினார். அவர் கேட்ட பலமான காலடி சப்தம் இளவரசி மேரியினுடையது.

'குதிரைகளைப் பூட்டும்படி நீர் உத்தரவிட்டு விட்டதாய் கேள்விப்பட்டேன்' என்று அவள் ஓடிவந்ததால் ஏற்பட்ட பெருமூச்சோடு கதறினாள். 'உம்முடன் தனியாகப் பேசவேண்டு மென்று நான் ஆசைகொண்டிருந்தேன். நாம் எவ்வளவு காலம் இன்னும் பிரிந்திருக்க வேண்டும் என்பதை கடவுளே அறிவார். நான் வந்ததற்காக நீர் என் மீது கோபம் கொள்ளவில்லையே? ஆண்ட்ரூஷா நீர் ரொம்ப மாறிவிட்டீர்.'

அவருடைய செல்லப் பெயரான 'ஆண்ட்ரூஷா' என்ற பெயரை உச்சரித்தபோது, அவள் மந்தகாசம் கொண்டாள். சிறு வயதில் அவளுடன் விளையாட்டுத் தோழனாய் இருந்த, மெல்லிய விஷமக்காரப் பையனாய் இருந்த ஆண்டரூஷாவா இம்மாதிரி கண்டிப்பான அழகான மனிதராய் விட்டார் என்பதை அவள் நினைத்தபோது, அவளுக்கு ஆச்சரியமாய் இருந்தது.

'லிசா எங்கே?' என்று கேட்டு அவளுக்குப் பதில் சொல்லும் பாவனையாக ஒருபுன்னகை கொண்டார்.

'அவள் ரொம்ப களைத்துப் போனாள். அதனால் என்னுடைய அறையிலுள்ள சோபாவில் படுத்துத் தூங்கிவிட்டாள். ஓ, ஆண்ட்ரூ! எம்மாதிரியான பொக்கிஷம் உமக்கு மனைவியாய் வாய்த்திருக்கிறாள்?' என்று சொல்லிக்கொண்டு சகோதரருக்கு எதிராக சோபாவில் அமர்ந்தாள். அவள் வெறும் குழந்தை என்ன அருமையா்ன மகிழ்ச்சியான குழந்தை 'அவள் மீது எனக்கு ரொம்ப பிரியம் ஏற்பட்டு விட்டது.'

இளவரசர் ஆண்ட்ரூ மௌனமாய் இருந்தார். ஆனால், அவருடைய முகத்தில் தோன்றிய கேலியான, துச்சமான தோற்றத்தை அவள் கவனித்தாள்.

‘சிறிய குறைகளை ஒருவர் சகித்துக்கொள்ள வேண்டியதுதான். யார்தான் அவை இல்லாதவராய் இருக்கிறார்கள் ஆண்ட்ரூ? அவள் உயர் வட்டாரங்களில் கல்வி பெற்று வளர்ந்து வந்தவள் என்பதை நீர் மறக்க வேண்டாம். அவளுடைய நிலைமை இப்பொழுது சந்தோஷமானதல்ல. ஒவ்வொருவருடைய நிலைமையிலும் நாம் இருந்து பார்க்க வேண்டும். எல்லாரையும் மன்னிப்பது என்பதொன்றுதான், எல்லாரையும் அறிந்துகொள்ளும் வழியாகும். பாவம், அவள் எம்மாதிரி பழக்கப்பட்டு வந்திருக்கிறாள் என்பதை கவனித்து, இப்பொழுதுள்ள நிலைமை அவளுக்கு எப்படி இருக்கும் என்பதை யோசித்துப் பாரும். அவள் இப்பொழுதுள்ள நிலைமையில் தனது கணவரை விட்டுப் பிரிந்திருக்கவும், தனியாக இந்தக் கிராமத்தில் தங்கவும், எப்படி இருக்கும்! ரொம்ப கஷ்டமானது.’

தமது சகோதரியைப் பார்த்தபோது இளவரசர் ஆண்ட்ரூ இளநகை கொண்டார். ஒருவரைப் பூராவாக அறிந்துகொண்டோம் என்று நினைக்கிறவர்கள் எம்மாதிரி புன்னகை கொள்வார்களோ, அம்மாதிரி அது இருந்தது.

‘நீயும் கிராமத்தில்தான் வாழ்கிறாய். இங்கே வாழ்க்கை பயங்கரமாய் இருப்பதாக உனக்குத் தோன்றவில்லையே’ என்று கேட்டார்.

‘நான்... அது வேறு விஷயம். என்னைப் பற்றி ஏன் பேசுகிறீர்? எனக்கு வேறு எந்த வாழ்க்கையும்வேண்டியதில்லை. வாழவும் முடியாது. ஏனெனில் எனக்கு வேறு எதுவும் தெரியாது. ஆனால், ஒரு வாலிப தசையிலுள்ள, உயர் வட்டாரத்தில் பழகிய ஒரு பெண், தனது வாழ்க்கையிலேயே அனுபவிக்க வேண்டிய வயதில், ஒரு கிராமத்தில் தனியாக அடைத்துக் கிடப்பதென்றால், எப்படி இருக்கும் என்பதை யோசித்துப் பாரும். ஏனெனில், அப்பா எப்பொழுதுமே சுறுசுறுப்பாய் இருப்பார். எனக்கோ, உமக்கோ தெரியும், உயர்ந்த வட்டாரங்களில் பழகிய ஒரு பெண்ணுக்குக் களிப்பையூட்ட என்னிடம் என்ன திறமைகள் இருக்கின்றன? குமாரி பௌரியன் ஒருத்திதான் இருக்கிறாள்...’

‘உனது குமாரி பௌரியனை எனக்குப் பிடிக்கவேயில்லை’ என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

'இல்லையா? அவள் ரொம்ப இனிமையானவள், அன்பானவள். எல்லவாற்றிற்கும் மேலாக மிகவும் இரக்கம் காட்டப்பட வேண்டியவள். அவளுக்கு ஒருவரும் இல்லை, உண்மையைச் சொல்லப்போனால் எனக்கு அவள் அவசியமே இல்லை. எனக்கு இடையூறாகவே இருகிறாள். நான் எப்பொழுதுமே ஒரு காட்டுவாசி என்பது உமக்குத் தெரியும். இப்பொழுது இன்னும்அதிகமாய் இருக்கிறேன். ஏனெனில், நான் தனிமையில் இருக்கவே விரும்புகிறேன். அப்பாவுக்கு அவளை மிகவும் பிடித்திருக்கிறது. அவள், மைக்கேல் ஐவானாவிச் ஆகிய இவரிடம்தான் அவர் எப்பொழுதுமே அன்பாகவும் பிரியமாகவும் இருக்கிறார். ஸ்டெர்ன் என்பவர் சொல்லியதைப் போல, 'நமக்கு நன்மை செய்தார்கள் என்பதற்காக நாம் அவர்களை அதிகமாய் நேசிப்பதில்லை. ஆனால் நாம் யாருக்கு நன்மை செய்தோமோ அவர்ளையே அதிகமாய் நேசிக்கிறோம்.' தந்தையை இழந்து வீடற்றவளாய் இருந்தபோது, அப்பா தமது பராமரிப்பில் அவளை எடுத்துக்கொண்டார். அவள் மிகுந்த நல்ல சுபவம் உள்ளவள். அவள் படித்துக் காட்டும் முறையை அப்பா விரும்புகிறார். மாலைவேளைகளில் அப்பாவுக்கு அவள் படிப்பாள். ரொம்ப சிலாக்கியமாய் படிப்பாள்.'

'ஒளிவு மறைவு இல்லாமல் பேசுகிறேன், மேரி. அப்பாவின் சுபாவம் சில சமயங்களில் உனக்கு கஷ்டமாய் இருக்கும் என்று நினைக்கிறேன். இல்லையா?' என்று திடீரென்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

இளவரசி மேரி முதலில் இந்தக் கேள்வியைக் கேட்டுஆச்சரியம் அடைந்தாள். பின்னால் பீதி அடைந்தாள்.

'எனக்கா? எனக்கா?... எனக்கா கஷ்டமாய் இருக்கும்?...' என்றாள் அவள்.

'அவர் எப்பொழுதுமே கடுகடுப்பாய் இருப்பார். இப்பொழுது இன்னும் அதிக கஷ்டமாய் இருப்பார் என்று நான் நினைக்கிறேன்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. அவர்களின் தந்தையைப் பற்றி அவள் மனதைக் குழப்பவோ, அல்லது சோதிக்கவோ எண்ணி அவர் அம்மாதிரி அலட்சியமாகப் பேசியதாகத் தோன்றியது.

'நீர் ஒவ்வொரு விதத்திலும் நல்லவர், ஆண்ட்ரூ. ஆனால், உமக்கு ஒருவிதமான, படித்தவர் என்ற கர்வம் இருக்கிறது' என்றாள் இளவரசி. நடந்துவந்த உரையாடலை கவனிக்காமல் தனது சிந்தனையில் ஓடிய கருத்தையே நினைத்து அவள் பேசினாள். 'அது ஒருபெரியபாவம். எப்படி தனது தந்தையைப்பற்றி ஒருவர் தீர்ப்பு கூற முடியும்? அப்படியே முடியும் என்றே வைத்துக்கொள்ளலாம்.

ஆனால் என் தந்தையைப் போன்ற ஒருவர், அவரிடம் மரியாதை காட்டுகிற உணர்ச்சியைத் தவிர வேறு எதை என்னிடம் ஏற்படுத்த முடியும். தவிர, நான் மிகுந்த திருப்தியாகவும் மகிழ்ச்சியாகவும் அவருடன் இருக்கிறேன். என்னைப்போல நீங்கள் எல்லாரும் அதே மாதிரி சந்தோஷமாய் இருக்க வேண்டும் என்பதே என்னுடைய விருப்பம்.'

அவள் சகோதரர் நம்பிக்கை இல்லாமல் தலையை ஆட்டினார்.

'எனக்கு கஷ்டமாய் இருப்பது ஒரே ஒரு விஷயம்தான்... உண்மையை உமக்குச் சொல்லுகிறேன், ஆண்ட்ரூ. அதாவது, மத சம்பந்தமான விஷயங்களைப் பற்றி அவர் நடந்துகொள்ளும் விதம். அவ்வளவு அசாத்தியமான புத்தி கூர்மையுள்ள அவர், பட்டப்பகல் போன்று தெளிவாய் இருக்கிற விஷயத்தை, எப்படி அறிந்துகொள்ளாமல் விலகிப் போகிறார் என்பதைத்தான் என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. அந்த ஒரே விஷயம்தான் எனக்குக் கஷ்டத்தைக் கொடுக்கிறது. இதில்கூட, சமீப காலத்தில் ஒரு அபிவிருத்தி ஏற்பட்டு வருவது எனக்குத் தோன்றுகிறது. சமீபகாலமாக அவருடைய கிண்டல்கள் விஷம் குறைந்ததாய் இருக்கிறது. ஒரு சந்நியாசியைக்கூட அவர் வரவேற்று வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்.'

'ஆ, என் கண்ணே, நீயும் உனது சந்நியாசியும், வீணாக மூச்சை தொலைக்கிறீர்கள் என்றே தோன்றுகிறது' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேலியாகவும் ஆனால் கனிவோடும் பேசினார்.

'ஆ, எனது நண்பரே, நான் பிரார்த்திக்கிறேன். என் பிரார்த்தனையைக் கடவுள் கேட்பார் என்று நம்புகிறேன், ஆண்ட்ரூ...' என்று பயத்தோடு அவள் சொன்னாள். ஒரு வினாடி மௌனத்திற்குப் பின்னால், 'நீர் எனக்கு ஒரு பெரிய தயவு செய்ய வேண்டும்.'

'அது என்ன, கண்ணே?'

'இல்லை-நீர் மறுக்க மாட்டேன் என்று வாக்குறுதி கொடும். அது உமக்கொன்றும் கஷ்டத்தைக் கொடுக்காது. உமது தகுதிக்கு பொருத்தமில்லாமலும் இருக்காது. ஆனால் எனக்கு ஒரு ஆறுதல் அளிக்கும். வாக்குக் கொடும், ஆண்ட்ரூஷா...' என்று சொல்லி தனது அழகு பைக்குள் கையை விட்டாள். ஆனால், வெளியே கையை எடுக்கவில்லை. வாக்குறுதி கொடுக்கப்படுவதற்கு முன்பாக, அதை வெளியே காட்டக்கூடாது என்பதுபோல, அந்த வாக்குறுதி வஸ்துவை கையில் பற்றிக் கொண்டிருந்தாள்.

பயத்தோடு தன் அண்ணனைப் பார்த்தாள்.

'அது மிகுந்த கஷ்டம் கொடுக்கக்கூடிய விஷயமாய் இருந்தாலும் சரி...' என்று இளவரசர் ஆண்ட்ரூ பதில் கூறி அது என்ன விஷயமாய் இருக்கும் என்று யோசனை செய்தார்.

'நீர் என்ன நினைத்தாலும் சரி. நீர் அப்பாவைப் போலவே இருக்கிறீர். நீர் என்ன வேண்டுமானாலும் நினைத்துக்கொள்ளும். ஆனால் எனக்காக இதைச் செய்யும். தயவு செய்யும். அப்பாவுடைய அப்பா, நமது தாத்தா, அவர் சென்ற எல்லா யுத்தங்களிலும் இதை அணிந்திருந்தார். (அவள் இன்னமும் தனது அழகுப் பையினுள் கைக்குள் வைத்திருந்த வஸ்துவை வெளியே எடுக்கவில்லை.) வாக்கு கொடுப்பீரா?'

'கட்டாயமாக. அது என்ன'

'ஆண்ட்ரூ, இந்த மூர்த்திப் பதக்கத்தைக் கொண்டு உம்மை ஆசீர்வதிக்கிறேன். இதை எப்பொழுதும் கழற்றுவது இல்லை என்று நீர் வாக்கு கொடுக்க வேண்டும். வாக்கு கொடுப்பீரா?'

'ஒரு அந்தர் கனம் அது இல்லாவிட்டால், எனது கழுத்தைஅது முறிக்காவிட்டால்... உன்னை திருப்தி செய்வதற்காக...' என்றார், இளவரசர் ஆண்ட்ரூ. ஆனால், தனது வேடிக்கையினால் சகோதரி யின் முகத்தில் ஏற்பட்ட வருத்தமான தோற்றத்தைக் கண்டு அவர் உடனே வருந்தினார். அவர் சொன்னார்:- 'எனக்கு சந்தோஷம்; உண்மையாகவே, கண்ணே. நான் மிகுந்த சந்தோஷம் அடைகிறேன்.'

'உமக்குப் பிரியமில்லாவிட்டால் கூட அவர் (கடவுள்) உம்மைக் காப்பாற்றுவார். உம்மீது கருணை காட்டுவார். தம்மிடம் சேர்த்துக் கொள்ளுவார். ஏனெனில், அவர் ஒருவரிடம்தான் உண்மையும் சாந்தமும் இருக்கின்றன' என்றுஅவள் உணர்ச்சியால் ஏற்பட்ட குரல் நடுக்கத்தோடு பவித்திரமாய் இரண்டு கைகளை தனது அண்ணாவின் முன்பு உயர்த்தினாள். அந்தக் கைகளில் ஒரு சிறிய, நீளவாட்டத்தில் அமைந்த, புராதன, கருப்பு முகம் கொண்ட, ரட்சகரின் பதக்கம், தங்கத்தால் செய்யப்பட்டு வேலைப்பாடுள்ள வெள்ளிச் சங்கிலியில் இணைக்கப்பட்டிருந்தது.

தனக்கு சிலுவைக் குறி காட்டி பதக்கத்தை முத்தமிட்டு அதை ஆண்ட்ரூவிடம் கொடுத்தாள். 'தயவு செய்யும் ஆண்ட்ரூ, எனக்காக...'

அவளுடைய பெரிய பயந்த கண்களில் இருந்து அமைதியான ஒளி பிரகாசித்தது. அந்த கண்கள் அவளுடைய மெல்லிய சீக்கான முகத்தை முழுவதும் பிரகாசிக்கச் செய்து, அதை அழகுள்ளதாகச் செய்தன. அவளுடைய அண்ணா பதக்கத்தை எடுக்கப்

போகும்போது அவள் தடுத்தாள். ஆண்ட்ரூ விஷயத்தைப் புரிந்து கொண்டார். தமக்கு சிலுவைக் குறி காட்டி பின்னால் பதக்கத்தை எடுத்து முத்தமிட்டார். அவர் உள்ளம் இளகியபடியால், அவர் பார்வையில் கனிவு தோன்றியது. ஆனால் அவருடைய முகத்தில் கேலியான ஒரு ஒளியும் தோன்றியது.

'வந்தனங்கள், என் கண்ணே.' அண்ணாவின் நெற்றியில் அவள் முத்தமிட்டு மீண்டும் சோபாவில் அமர்ந்தாள். சிறிது நேரம் அவர்கள் மௌனமாய் இருந்தார்கள்.

'உம்மிடம் நான் சொல்லிக்கொண்டிருந்தபடி, முன்னால் நீர் இருந்ததுபோல, அன்பாகவும் தாராளமாகவும் இருப்பீராக. லிசாவைப் பற்றி கடுமையாக நீர் நினைக்க வேண்டாம். அவள் மிகவும் இனிமையானவள். நல்ல குணம் படைத்தவள். அவளது தற்கால நிலைமை ரொம்பவும் கஷ்டமானது.'

'என்னுடைய மனைவியைப் பற்றி உன்னிடம் குற்றஞ் சாட்டியதாகவோ, குறைசொல்லியதாகவோ எனக்கு நினைப் பில்லையே, (மேரி என்ற பெயரை மாஷா என்றும் அழைப்ப துண்டு.) மாஷா. இதையெல்லாம் நீ ஏன் எனக்குச் சொல்லுகிறாய்?'

இளவரசி மேரியின் முகம் சிவந்தது. தான் தவறு செய்துவிட்டதாக நினைப்பதைப்போல் மௌனமாய் இருந்தாள்.

'நான் உன்னிடம் ஒன்றும் சொல்லியதில்லை. ஆனால் உன்னிடம் பேசி இருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. அதைக் கண்டு நான்வருந்துகிறேன்' என்று அவர் சொன்னார். இளவரசி மேரியின் முகத்தில் தோன்றிய சிகப்பு இன்னும் அதிகமாக நெற்றியிலும் கழுத்திலும் கன்னங்களிலும் பரவியது. ஏதோ சொல்ல அவள் முயன்றாள். ஆனால் முடியவில்லை. அவளுடைய அண்ணா யூகித்தது சரிதான். ஏனெனில் சாப்பாட்டிற்குப் பின்னால் அந்தக் குஞ்சு இளவரசி அவளிடம் கதறினாள். தனக்கு ஏற்பட்டு வரும்கெட்ட சகுனங்களைப் பற்றியும், தன்னுடைய பிரசவத்தைப் பற்றியும், அதைக்கண்டு அவள் எப்படி பீதியுற்றிருக்கிறாள் என்பதைப் பற்றியும் அவள் பேசினாள். தன்னுடைய விதியைப் பற்றியும், மாமனார், கணவர் ஆகியவர்களைப் பற்றியும் குறைப்பட்டுக்கொண்டாள். கதறி அழுத பின்பு அவள் தூங்கிவிட்டாள். இளவரசர் ஆண்ட்ரூ தம் தங்கைக்காக வருந்தினார்.

'இதைத் தெரிந்துகொள்ள, மாஷா. என் மனைவியைப் பற்றி நான் குறைப்பட முடியாது. குறைப்பட்டதும் இல்லை. எப்பொழுதும் ஏதற்காகவும் நான் குறைப்படப் போவதுமில்லை. அவள் சம்பந்தமாக எதைப் பற்றியும் என்னையும் நான் குறைப்பட

முடியாது. நான் எந்தவிதமான சந்தர்ப்பத்தில் இருந்தாலும், எப்பொழுதும் விஷயம் இப்படியே இருக்கும். ஆனால், நீ உண்மையைஅறிய விரும்பினால்... நான் சந்தோஷமாய் இருக்கிறேனா என்பதை அறிய விரும்பினால்? இல்லை! அவள் சந்தோஷமாய் இருக்கிறாளா? இல்லை! ஆனால் ஏன் இப்படி இருக்கிறாள் என்றால், அது எனக்குத் தெரியவில்லை...'

இதைச் சொல்லிக்கொண்டே அவர் எழுந்து தங்கையிடம் சென்று, குனிந்து அவள் நெற்றியில் முத்தமிட்டார். அவருடைய அழகான கண்கள் சிந்தனை தோய்ந்து, அன்போடு, வழக்கமில்லாத பிரகாசத்தோடு ஒளிர்ந்தன. ஆனால், அவர் அவருடைய சகோதரியைப் பார்க்காமல், அவளுடைய தலைக்கு மேலாக, வாசல் வழியாக வெளியே தெரிந்த இருட்டை நோக்கிக்கொண்டிருந்தார்.

'நாம் அவளிடம் போவோம். வழியனுப்பிக்கொள்ள வேண்டும், அல்லது-நீ போய் அவளை எழுப்பு. ஒரு விநாடியில் நான் வருகிறேன்' என்று சொல்லிவிட்டு 'பெட்ரூஷ்கா' என்று தமது வேலைக்காரனை அழைத்தார். 'இங்கே வா. இவற்றை எடுத்துக்கொண்டு போ. இதை ஆசனத்தின் மேல் வை. இதை வலது பக்கம் வை.'

இளவரசி மேரி எழுந்து வாசலுக்குத் திரும்பினாள். பின்னால் அவள் நின்று சொன்னாள்: 'ஆண்ட்ரூ, உமக்கு நம்பிக்கை இருக்குமானால், நீர் உணர முடியாத அந்த அன்பை உமக்குக் கொடுக்கும் படி கடவுளை பிரார்த்தனை செய்திருப்பீர். உமது பிரார்த்தனைக்கு கடவுள் இரங்கியிருப்பார்.'

'நல்லது, இருக்கலாம். நீ போ, மாஷா; நான் உடனே வருகிறேன்.'

தம்முடைய சகோதரியின் அறைக்குப் போகிற வழியில், வீட்டின் ஒரு பகுதியை இன்னொரு பகுதியோடு இணைக்கும் ஆளோடியில், இனிமையான மந்தகாசத்தோடு கூடிய குமாரி பௌரியனை இளவரசர் ஆண்ட்ரூ சந்தித்தார். தனித்த ஆளோடிகளில், இன்ப வெள்ளம் பொங்கும் இயற்கையான மந்தகாசத்தோடு கூடிய அவளை, அன்று அவர் அப்பொழுது சந்தித்தது மூன்றாவது தடவையாகும்.

'ஓ, நீர் உமது அறையில் இருக்கிறீர் என்றல்லவா நினைத்தேன்' என்று அவள் சொல்லி எதற்காகவோ நாணத்தால் முகம் சிவந்து பார்வையைக் கீழ் நோக்கினாள்.

இளவரசர் ஆண்ட்ரூ அவளைக் கடுமையோடு பார்த்தார். திடீரென்று அவர் முகத்தில் கோபத் தோற்றம் விளங்கியது. அவர் அவளிடம் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் அவள் கண்களைப்

பார்க்காமல், அவளுடைய நெற்றியையும், தலை முடியையும் துச்சமாய் பார்த்தார். அதனால், அந்த பிரஞ்சுப் பெண் ஒரு வார்த்தையும் சொல்லாமல், நாணத்தால் முகம் சிவந்து அங்கிருந்து அப்பால் போனாள். அவர் தமது சகோதரி அறைக்குப் போனபோது, அவருடைய மனைவி ஏற்கனவே விழித்துவிட்டாள். அவளுடைய களிப்பு நிறைந்த குரல்,ஒன்றுக்குப் பின் ஒன்றாக வார்த்தைகளை வேகமாய் பேசிக்கொண்டு, திறந்த வாசல் வழியாக வெளியே வந்துகொண்டிருந்தது. வழக்கம்போல் அவள் பிரஞ்சு மொழியில் பேசிக்கொண்டிருந்தாள். வெகுகாலம் பேசாமல் அடக்கி வைத்திருந்தவள், அந்த நஷ்டத்தை ஈடு செய்வதைப்போல் வேகமய் பேசிக்கொண்டிருந்தாள்.

'இல்லை. அந்த கிழட்டு கோமகள் ஜுபாவை நினைத்துப் பாருங்கள். அவளுடைய பொய்யான சுருளைத் தலைமுடியும், வாய் நிறைய பொய்ப் பற்களும், கிழப்பருவத்தை அவள் ஏமாற்ற முயற்சிப்பது போல்லவா இருக்கிறது...ஹ, ஹ, ஹ...மேரி!'

கோமகள் ஜுபாவைப் பற்றிய அதே வாக்கியத்தையும் அதே சிரிப்பையும்,இளவரசர் ஆண்ட்ரூ ஏற்கனவே பலர் முன்னிலையில், தமது மனைவியிடமிருந்து ஐந்து தடவைகள் கேட்டிருக்கிறார். அவர் மெதுவாக அறைக்குள் நுழைந்தார். குஞ்சு இளவரசி பருமனாகவும் சிவப்பாகவும் சாய்வு நாற்காலியில் அமர்ந்து, பின்னல் வேலையைக் கையில் கொண்டு, விடாமல் பேசிக் கொண்டிருந் தாள். பீட்டர்ஸ்பர்க் நினைவுகளையும், அங்கு உபயோகிக்கப்பட்ட வாக்கியங்களையும் சொல்லிக்கொண்டிருந் தாள். இளவரசர் ஆண்ட்ரூ பக்கத்தில் வந்து, அவள் தலை முடியைத் தட்டிக் கொடுத்து, 'பிரயாணத்தின் களைப்பு தீர்ந்துவிட்டதா?' என்று கேட்டார். அவள் பதில் சொல்லிவிட்டு மீண்டும் தனது வம்பளப்பதைத் தொடர்ந்து செய்தாள்.

முற்ற மண்டபத்தில் ஆறு குதிரைகள் பூட்டிய வண்டி காத்துக்கொண்டிருந்தது. அப்பொழுது இலையுதிர் காலத்து இரவு. வண்டியின் நுகக்காலைக் கூட சாரதி பார்க்க முடியாதபடி அவ்வளவு இருட்டாய் இருந்தது. கையில் விளக்குகளோடு வேலைக்காரர்கள் பரபரப்போடு முற்ற மண்டபத்தில் அங்கும் மிங்கும் போய்க் கொண்டிருந்தார்கள். உயர்ந்த ஜன்னல் வழியாக வெளிச்சம் வீசிக்கொண்டு, அந்த பிரம்மாண்டமான வீடுபிரகாசமாய் விளங்கியது. வீட்டு வேலை அடிமைகள் இளவரசரை வழியனுப்பு வதற்காக ஹாலில் நிறைந்து காத்துக்கொண்டிருந்தார்கள். வீட்டுக்காரர்கள் எல்லாரும் வரவேற்பு அறையில் கூடியிருந்தார்கள். மைக்கேல் ஐவானாவிச், குமாரி பௌரியன், இளவரசி மேரி, குஞ்சு

இளவரசி ஆகியோர் இருந்தனர். தமது குமாரருக்கு தனிமையில் வழியனுப்பச்சொல்ல வேண்டுமென்று இளவரசர் ஆண்ட்ரூவை தமது படிப்பறைக்கு தந்தை வரவழைத்தார். அவர்கள் இருவரும் வெளியே வருவதற்காக மற்ற எல்லோரும் காத்திருந்தார்கள்.

இளவரசர் ஆண்ட்ரூ படிப்பறையில் நுழைந்தார். அந்த வயோதிகர் வெள்ளெழுத்துக் கண்ணாடிகளை அணிந்து கொண்டு, வெள்ளை உடுப்புகளையும் போட்டுக் கொண்டிருந்தார். அந்த உடையில் தமது குமாரரைத் தவிர,வேறு யாரையும் அவர் சந்திப்பதில்லை. மேஜை முன்னால் அமர்ந்து எழுதிக் கொண்டிருந்தவர்,குமாரர் உள்ளே வந்ததும் திரும்பிப் பார்த்தார்.

'போகிறாயா?' என்று கேட்டு எழுதிக்கொண்டே இருந்தார்..

'வழியனுப்பிக்கொள்ளுவதற்காக நான் வந்தேன்.'

'இங்கே முத்தமிடு ' என்று சொல்லி தமது கன்னத்தை தொட்டுக் காட்டினார்.

'நன்றி, நன்றி'.

'எதற்காக எனக்கு நன்றி கூறுகிறீர்கள்?'

'சஞ்சலமில்லாமல் இருப்பதற்காக. ஒரு பெண்ணின் மேலாடை நாடாவைப் பற்றி அவள் பின்னாலே சுற்றாமல் இருப்பதற்காக. எல்லாவற்றிற்கும் மேலாக முதன்மையாக நிற்க வேண்டியது சேவையாகும். நன்றி, நன்றி' என்று கூறிவிட்டு அவர் எழுதிக்கொண்டே இருந்தார். அவருடைய பேனா எழுதுகிற வேகத்தில் மை தெறித்தது, க்ரீச்சிட்டது. 'உனக்கு ஏதாவது சொல்ல வேண்டுமானால், சொல்லு. இந்த இரண்டு வேலைகளையும் ஏககாலத்தில் என்னால் செய்ய முடியும்' என்றார்.

எனது மனைவியைப் பற்றி...இந்த நிலைமையில் உங்களுக்கு பாரமாய் அவளை விட்டுப் போவதற்காக நான் வெட்கம் அடைகிறேன்...'

'ஏன், அசட்டுத்தனமாய் பேசுகிறாய்? உனக்கு என்ன வேண்டுமோ, அதைச் சொல்லு'.

'அவளுக்குப் பிரசவம் நெருங்கும்போது, அவளுக்குப் பிரசவம் பார்ப்பதற்காக மாஸ்கோவில் இருந்து, ஒரு வைத்தியரை வரவழைக்க வேண்டும்... அவர் இங்கேயே தங்கட்டும்...'

வயோதிக இளவரசர் எழுதுவதை நிறுத்தினார். என்னது என்று அறிய முடியாதவர்போல, கடுமையான பார்வையோடு குமாரரை விரைத்துப் பார்த்தார்.

'இயற்கை தனது வேலையைச் செய்யாவிட்டால், யாரும் உதவி செய்ய முடியாது என்பது எனக்குத் தெரியும்' என்று குழப்பத்தோடு இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். 'பத்து லட்சம் கேஸ்களில் ஒன்றுதான் தவறாய்ப் போவதுண்டு. ஆனால், அவளுக்கென்னவோ டாக்டரை வரவழைக்க வேண்டும் என்று ஒரு ஆசை இருக்கிறது. எனக்கும் அப்படியே. அவளுக்கு என்னவெல்லாமோ யாரோ சொல்லி வைத்திருக்கிறார்கள். அவளும் ஒரு கனவு கண்டு பீதி அடைந்திருக்கிறாள்.'

'ஹிம்...ஹிம்...' என்று வயோதிக இளவரசர் தமக்குள் முனங்கிக் கொண்டு, தாம் எழுதுவதை முடித்தார். 'அப்படியே நான் செய்கிறேன்.'

தாம் எழுதியதில் அலங்காரமாய் கையெழுத்து இட்டுவிட்டு... திடீரென்று தமது குமாரரைப் பார்த்து சிரிக்க ஆரம்பித்தார்.

'அது ஒரு கஷ்டமான விஷயம்தான், என்ன?'

'எது கஷ்டமானது, அப்பா?'

'அதுதான், மனைவி' என்று வயோதிக இளவரசர் சுருக்கமாகவும் குறிப்பாகவும் சொன்னார்.

'எனக்குப் புரியவில்லை' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

'ஆம், அது தவிர்க்கமுடியாதது, வாலிபனே' என்றார். 'அவர்களெல்லாரும் ஒரே மாதிரியாகவே இருக்கிறார்கள். திருமணம் செய்த பின்பு, செய்த திருமணத்தை இல்லாமல் செய்துவிட முடியாது. பயப்படாதே, நான் ஒருவரிடமும் சொல்ல மாட்டேன். ஆனால், அது உனக்கே தெரியும்.'

தமது குமாரரின் கையை தமது சிறிய எலும்பு விரல்களால் பற்றி, அதைக் குலுக்கி, தமது கூர்மையான கண்களால் குமாரரின் முகத்தை நேராகப் பார்த்தார். அப்படிச் செய்யும்போது, ஊடுருவிஅவர் பார்ப்பதுபோல் தோன்றியது. மீண்டும் தமது இனிமையில்லாத சிரிப்பைச் சிரித்தார்.

குமாரர் பெருமூச்செறிந்தார். தமது தந்தை தம்மை அறிந்து கொண்டதை ஒப்புக்கொள்ளுவது போல அது இருந்தது. வயோதிகர் தமது கடிதத்தை மடக்கி முத்திரையிடுவதற்காக அரக்கையும் முத்திரையையும் தமது வழக்கமான துரிதத்தில் கையில் எடுத்தார். மீண்டும் அவற்றைக் கீழே வீசினார்.

'என்ன செய்ய முடியும்? அவள் அழகானவள். எல்லா வற்றையும் நான் கவனித்துக்கொள்ளுகிறேன். நீ மனதை நிம்மதியாய் வைத்துக்கொள்' என்று தனித்தனி வாக்கியங்களாகப் பேசி கடிதத்தை முத்திரையிட்டார்.

ஆண்ட்ரூ ஒன்றும் பேசவில்லை. தம்மை தமது தகப்பனார் தன்னை நன்றாய் அறிந்துகொண்டதற்காக, ஒரு பக்கத்தில் சந்தோசமும் மற்றொரு பக்கத்தில் அதிருப்தியும் அடைந்தார். அந்த வயோதிகர் எழுந்து தமது குமாரரிடம் கடிதத்தைக் கொடுத்தார்.

‘கவனி’ என்றார் தந்தை. ‘உனது மனைவியைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். எவையெல்லாம் சாத்தியமோ, அவற்றையெல்லாம் நான் செய்வேன். இப்பொழுது கவனி, இந்தக் கடிதத்தை மைக்கேல் இலாரியோனாவிச்சிடம் (குட்டு ஜோவ்) கொடு. உன்னை சரியான பதவிகளில் வைத்து உபயோகித்துக் கொள்ளும்படி அவருக்கு நான் எழுதியிருக்கிறேன். தமது பக்கத்தில் தமது உதவியாளராக உன்னை நீண்ட காலம் வைத்திருக்க வேண்டாம் என்றும் நான் எழுதியிருக்கிறேன். உதவியாளர் பதவி பிரயோஜன் இல்லாதது. அவரை நான் கேட்டதாகவும் அவர் மீது எனக்கு ரொம்ப பிரியம் உண்டு என்றும் அவரிடம் சொல்லு. உன்னை எப்படி வரவேற்றார் என்பதை எனக்கு எழுது. அவர் சரியாய் இருந்தால்--அவரிடம் சேவை செய். பிடித்தமில்லாதவர் களிடம் நிக்கலஸ் பால்கோன்ஸ்கியின் குமாரர் சேவை செய்ய வேண்டிய அவசியமில்லை. இப்பொழுது இங்கே வா.’

வார்த்தைகளில் பாதியைக்கூட சொல்லாமல் அவ்வளவு வேகமாய் அவர் பேசினார். ஆனால் மகனுக்கு அது பழக்க மாகையால், அவரைப் புரிந்துகொண்டார். குமாரரை தமது மேஜைக்கு அழைத்துச் சென்று, மேஜை மூடியைத் திறந்து, ஒரு டிராயரை இழுத்து ஒரு குறிப்புப் புத்தகத்தை வெளியே எடுத்தார். அந்தப் புத்தகம் முழுவதிலும் அவருடைய உயரமான கனமான நெருக்கமான எழுத்துக்கள் நிறைந்திருந்தன.

‘ஒருவேளை உனக்கு முன்னால் நான் இறந்து போகலாம். ஆகையால் ஞாபகத்தில் வைத்துக்கொள். இவையெல்லாம் எனது வாழ்க்கைக் குறிப்புகள். நான் இறந்த பின்பு இவற்றை சக்கரவர்த்தி யிடம் கொடுத்துவிடு. இதோ, ஒரு லம்பார் கடன்பத்திரம், இதோ ஒரு கடிதம். சுவோராவின் யுத்தங்களைப் பற்றிய சரித்திரத்தை யார் எழுதுகிறாரோ, அவருக்கு இந்தக் கடன் பத்திரம் சன்மானம். இதை இலக்கிய சங்கத்திற்கு அனுப்பி விடு. இதோ, உனக்குச் சில குறிப்புகள். நான் இறந்த பின்பு, அவற்றை வாசித்துப் பார். அவை உனக்கு பிரயோஜனமாய் இருக்கும்.’

சந்தேகமில்லாமல் தாம் நீண்ட காலம் இன்னும் வாழ முடியும் என்பதை ஆண்ட்ரூ தமது தந்தையிடம் சொல்லவில்லை. அதைச் சொல்லக்கூடாது என்று அவர் நினைத்தார்.

'அப்படியே எல்லாவற்றையும் செய்துவிடுகிறேன், அப்பா' என்றார்.

'நல்லது இப்பொழுது போய் வா'. தமது மகனுக்கு தம் கையை முத்தமிடக் கொடுத்தார். பின்னால் மகனைத் தழுவிக்கொண்டார். 'இதை ஞாபகத்தில் வைத்துக்கொள், இளவரசர் ஆண்ட்ரூ; அவர்கள் உன்னைக் கொன்றுவிட்டால், அது என்னை--உனது வயோதிகத் தந்தையை புண்படுத்திவிடும்...' எதிர்பாராத விதமாய் அவர் தயங்கினார். பின்னால் எரிச்சலான குரலில், திடீரென்று க்ரீச் சப்தத்தோடு, 'ஆனால், நீ நிக்கலஸ் பால்கோன்ஸ்கியின் மகன் மாதிரி நடக்கவில்லை என்று நான் கேள்விப்பட்டால், நான் வெட்கம் அடைவேன்' என்றார்.

'அதை எனக்கு சொல்லியிருக்க வேண்டிய அவசியமில்லை, அப்பா' என்றார் மகன், புன்முறுவலோடு.

வயோதிகர் மௌனமாய் இருந்தார். 'எனக்குக்கூட உங்களிடம் ஒன்று கேட்க வேண்டும்' என்று தொடர்ந்தார், இளவரசர் ஆண்ட்ரூ.

'நான் கொல்லப்பட்டால், எனக்கு ஒரு புத்திரன் பிறந்தால் அதை உங்களை விட்டு எடுத்துப் போகாதபடி பார்த்துக்கொள்ளுங்கள். நேற்று நான் இதைச் சொன்னேன். அந்தக் குழந்தை உங்களிடமே வளரட்டும்.. தயவு செய்யுங்கள்.'

'உனது மனைவி புத்திரனை எடுத்துக்கொண்டு போகும்படி விடக்கூடாது?' என்று வயோதிகர் சொல்லிச் சிரித்தார்.

இருவரும் மௌனமாக ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு நின்றார்கள். கிழவரின் கூர்மையான கண்கள் குமாரரின் கண்களின் மீது பதிந்திருந்தன. வயோதிக இளவரசரின் முகத்தின் கீழ் பாகத்தில் ஏதோ ஒன்று சுழித்தது.

'நாம் விடைபெற்றுக்கொண்டோம், போ' என்று திடீரென்று உரத்த கோபமான குரலில் கூவிக்கதவைத் திறந்தார்.

'என்னது? என்னது?' என்று இரண்டு இளவரசிகளும் கேட்டார்கள். அவர்கள் ஒரு வினாடி அறை வாசலில் இளவரசர் ஆண்ட்ரூவையும், வயோதிகரையும் பார்த்தார்கள். அந்த வயோதிகர் வெள்ளை உடை கவுனையும் கண்ணாடியையும் தரித்து, படோபம் இல்லாமல் கோபமான குரலில் கூவிக்கொண்டிருந்தார்.

இளவரசர் ஆண்ட்ரூ பெருமூச்சு விட்டார். பதில் ஒன்றும் சொல்லவில்லை.

தமது மனைவியிடம் திரும்பி, 'நல்லது' என்றார்.

அவர் சொல்லிய 'நல்லது' என்ற வார்த்தை உணர்ச்சியற்ற பரிகாசமாய்த் தோன்றியது. 'இப்பொழுது உன்னுடைய நடவடிக் கைகளை ஆரம்பிக்கலாமே' என்று சொல்லுவது போல் இருந்தது.

'ஆண்ட்ரூ, அதற்குள்ளாகவா?' என்று குஞ்சு இளவரசி கேட்டாள். அவள் முகம் வெளிறிப்போய் இருந்தது. பீதியோடு தனது கணவரைப் பார்த்தாள்.

அவர் அவளைத் தழுவிக்கொண்டார். அவள் க்ரீச்சிட்டு, அவர் தோளில் சாய்ந்து மூர்ச்சையானாள். அவளை மெதுவாகத் தமதுதோளிலிருந்து எடுத்து, முகத்தைப் பார்த்தார். பின்பு அவளை ஜாக்கிரதையாக சாய்வு நாற்காலியில் கிடத்தினார்.

'போய் வருகிறேன், மேரி' என்று அமைதியான குரலில் தங்கையிடம் சொன்னார். அவள் கையைப் பற்றி, அவளை முத்தமிட்டு, பின்னால் அந்த அறையை விட்டு வேகமாய் நடந்து போனார்.

குஞ்சு இளவரசி சாய்வு நாற்காலியில் படுத்திருந்தாள். குமாரி பௌரியன் அவளுடைய நெற்றிப் பொட்டுகளை தேய்த்துக் கொண்டிருந்தாள். இளவரசி மேரி மைத்துனியைத் தாங்கிக் கொண்டிருந்தாள். நீர் நிறைந்த அவளுடைய அழகிய கண்களால் இளவரசர் வெளியே போன வாசல் வழியாக, அவர் போன திசையை நோக்கிக் சிலுவைக் குறி செய்தாள். படிக்கும் அறையிலிருந்து, துப்பாக்கிச் சப்தம்போல,கோபத்தோடு கிழவர் மூக்கைச் சிந்தும் சப்தங்கள் கேட்டுக்கொண்டிருந்தன. இளவரசர் ஆண்ட்ரூ புறப் பட்டுப்போன உடனேயே படிப்பு அறைக்கதவு வேகமாய்த் திறந்தது. வெள்ளை உடைகவுனில் தோன்றிய அந்த வயோதிகரின் கடுமையான பார்வை வெளியே நோக்கியது.

'போய்விட்டானா? அது ரொம்ப சரி என்றார். அங்கே மூர்ச்சையாய் கிடந்த இளவரசியை கோபத்தோடு பார்த்து, கண்டிப்பது போல தலையை ஆட்டி கதவைப் படாரென்று சாத்தினார்.



# விளக்க உரைகள்

1799-ஆம் வருஷம் நவம்பர் மாதம் 9-ந் தேதியன்று பிரான்ஸில் (ப்ரூமோர் 18-ந் தேதி) புரட்சி செய்த பின்பு, புரட்சி சபையின் சேவகத்தில் இராணுவத்தின் ஜெனரலாய் இருந்து பிரான்ஸின் பிரதான ஆள்பவராக நெப்போலியன் வந்தார். அச்சமயம் அவருக்கு முதலாவது கான்ஸல் என்ற பதவிப் பெயர் இருந்தது. மூன்று வருஷங்களுக்குப் பின்னால், அவர் ஆயுள் பூராவாக பிரதான ஆள்பவராக வந்தார். அதிலிருந்து இரண்டு வருஷங்களுக்குப் பிறகு (1804-ஆம் வருஷம் டிசம்பர் மாதத்தில்) அவர் பிரான்ஸின் சக்கரவர்த்தியாகப் பிரகடனம் செய்யப்பட்டார். 1796-97 வருஷங்களில் இத்தாலியில் அவர் நடத்திய போரினால் ஏற்பட்ட காம்போ பார்பியோ என்ற ஒப்பந்தப்படி, ரைன் நதியின் இடது கரைக்கும் வடக்கு இத்தாலி முழுவதற்கும் அவர் எஜமானர் ஆனார். அந்தப் பதவியை 1800-ஆம் வருஷத்தில் நடத்திய இரண்டாவது இத்தாலிய யுத்தத்தின் மூலம் பலப்படுத்தி அதிகரித்தார். முதலில் வேகமான எதிர்ப்பு வெகு சிறிதே இருந்தது. அவருடைய இந்த அபகரிப்பில் பிரஷ்யாவும், ஆஸ்திரியாவுமான பக்கத்து நாடுகள் கவலை கொண்டிருந்தன. அவைகள் ஏற்கெனவே தோற்று விட்டபடியால், அவர் மீது பீதி கொண்டிருந்தன. ஆனால், போலந்தை பங்கு போட்டதன் மூலம் தாங்கள் இழந்த பகுதிகளுக்கு நஷ்ட ஈடு கிடைத்ததாக நினைத்துக் கொண்டன.

நெப்போலியனுக்கு இப்போது இங்கிலாந்தும், ருஷ்யாவும் ஆகிய இரண்டு முக்கியமான எதிரிகளே இருந்தார்கள். முதலாவது அலெக்ஜாண்டர் என்ற வாலிபர் ஜார் சக்கரவர்த்தி, நெப்போலிய னுடைய ஆசைகளினால் ஐரோப்பாவுக்கு எற்படக்கூடிய ஆபத்தை உணர்ந்தார். பிரஷ்யாவும் தயங்கிக் கொண்டிருந்தபடியால், அவரால் எதுவும் செய்ய முடியவில்லை. முதலாவதாக ஜாக்கிரதையோடு அவர் நடவடிக்கை எடுத்தார். அதனால் இங்கிலாந்தை முதலில் தாக்குவதற்கு நெப்போலியன் தயார் செய்தார். நெப்போலியன் பிரிட்டிஷ் ராஜாங்கத்தைச் சேர்ந்த ஹானோவர் என்ற இடத்தை முதலில் கைப்பற்றினார். 1803-ஆம் வருஷத்தில் பௌலோன் என்ற இடத்தில் பாதுகாப்பு அரண்களை ஏற்படுத்தினார். அங்கே அவர் ஒரு ராணுவத்தை வைக்கும்படியாக அந்த ஏற்பாடுகள் இருந்தன. ஸ்பெயினோடு கூட்டுறவு சேர்ந்து ஒரு பெரிய கடற்படையைத் தயார்செய்து பௌலோனில் இருந்து இங்கிலாந்து மீது படை

எடுப்பது சாத்தியமாகும்படி செய்தார். கடற்படை தளபதி விலனேவ் என்பவர், இங்கிலாந்து சானலுக்கு ஒரு கடற்படையைக் கொண்டுவர வேண்டுமென்று ஏற்பாடாகி இருந்தது. ஆனால், அவருடைய கடற்படையை டிராபல்கர் என்ற இடத்தில், 1805-ஆம் வருஷத்தில் நெல்சன் நாசமாக்கினார். 1804-ஆம் வருஷத்தில் ஒரு சம்பவம் நேரிட்டது. அந்த சம்பவம், ஐரோப்பிய ராஜ சபைகளில் ஒரு பெரிய உணர்ச்சியை ஏற்படுத்தி, அவர்கள் எல்லாரையும் நெப்போலியனுக்கு விரோதமாகத் திரும்பும்படி செய்தது. காடௌடால்-பிச்சேக்ரூ என்ற, நெப்போலியனுக்கு விரோதமான சதி ஆலோசனை விசாரணையில், பிரான்ஸில் உள்ள பூர்பான களோடும் (ராஜ குடும்பத்தார்) அவர்களுடைய வாரிசான எல்.ஏ.எம்.டி. பூர்பான் கான்டே, எனின் கோமகன் என்பவருக்கும் சம்பந்தம் இருந்ததாக வெளியாயிற்று. அது தவறான யூகம். நெப்போலியன் அந்தக் கோமகனை பாடன் பிரதேசத்தில் பிரஞ்சு குதிரை வீரர்களைக் கொண்டு, ரைன் நதியை ரகசியமாகத் தாண்டி, பிடித்து வரும்படி செய்து வின்சென்னஸ் என்ற பாரிஸுக்குப் பக்கத்திலுள்ள மாளிகையில் வைத்தார். பின்னால், பிரஞ்சுக் கர்னல்களைக் கொண்டு ஒரு விசாரணைச் சபையை அமைத்து, அவர்களைக் கொண்டு முறையற்ற விசாரணையை நடத்தி, அவரைச் சுட்டு விடும்படியாகச் செய்தார்.

ஐரோப்பாவிலுள்ள ராஜ சபைகளில் எல்லாம், இந்த 'நியாயமானவரின் தியாக'த்தை பற்றியே பெரிய பிரஸ்தாபமாக இருந்தது. ஆனால், முதலாவது அலெக்ஜாண்டர் ஒருவர்தான், அதற்காக நடவடிக்கை எடுத்துக் கொண்டார். ருஷ்ய ஸ்தானாதிபதி பாரிஸை விட்டுப் புறப்பட்டார். பீட்டர்ஸ்பர்க்கிலுள்ள பிரஞ்சு ஸ்தானாரிபதி அந்த ஊரைவிட்டுத் திரும்பினார். 1805-ஆம் வருஷம் ஜூன் மாதத்தில் அன்னா ஷெரெருடைய வரவேற்பு மண்டபத்தில் நடந்த உரையாடல்களைக் கொண்டுதான், 'போரும் அமைதியும்' என்ற புத்தகம் ஆரம்பமாகிறது. அந்த உரையாடலில் நெப்போலியனுக்கு விரோதமாக கோபமாய் பேசப்பட்டவைகளுக்கு எல்லாம், இந்தப் படுகொலைதான் காரணம். நெப்போலியனை ஒரு கொலைக்காரன் என்றும், கிறிஸ்துவ விரோதியென்றும், சிம்மாசனத்தைக் கைப்பற்றியவர் என்றும் பேசப்படுகிறது. ஒருவராவது அவரைச் சக்கரவர்த்தி என்று பேசவில்லை. இவ்வளவிற்கும் அவர் ஆறு மாதங்களுக்கு முன்பே சக்கரவர்த்தியின் சிம்மாசனத்தில் அமர்ந்து விட்டார். அவர்கள் அவரைப் பற்றிப் பேசியபோது, நெப்போலியன் என்றுகூடச்

சொல்வதில்லை. போனபார்ட் என்றோ, பியோனோபார்ட் என்றோ கேலியாகத்தான் பேசினார்கள். ஏனெனில், பிறப்பில் நெப்போலியன் கார்சிக்கன் நாட்டைச் சேர்ந்தவர் அவர் ஒரு பிரஞ்சுகாரர் அல்ல.

1805-ஆம் வருஷம் ஜூன் மாதத்தில் இந்தக் 'கொடியவன்' செய்த மற்ற கொடிய காரியங்களும் கூடச் சேர்ந்து கொண்டதால் ஐரோப்பாவுக்கு மிகவும் எரிச்சலாய் இருந்தது. முதலில் மார்ச் மாதத்தில் இத்தாலியில் ஒரு ராஜ பீடத்தை ஏற்படுத்தினார். மிலன் நகரத்தில் தாமே இத்தாலியின் 'மன்னர்' என்று முடி சூட்டிக் கொண்டார். சிறிது காலம் கழித்து, ஜினோவா குடியரசையும், பிரான்ஸுடன் சேர்த்துக் கொண்டார். பின்னால் லூகா என்ற பிரதேசத்தை ஏற்படுத்தி, அதை அவருடைய சகோதரி எலிஸாவுக்கும், அவருடைய கணவருக்கும் கொடுத்தார். இதைத்தான் புதிய செய்தி என்று இந்தப் புத்தகத்தின் முதல் வாக்கியத்தில் குறிப்பிடப்படுகிறது.

பிரான்ஸுடன் யுத்தம் ஏற்படும் என்று இளவரசர் வாசைலி கூறும்படி அன்னாஷெரர் விரும்பினாள். அவள் எதிர்பார்த்தது ரொம்பவும் சரி. முதலாவது அலெக்ஜாண்டர் மற்ற ஐரோப்பிய வல்லரசுகளோடு நடத்திவந்த பேச்சு வார்த்தைகள் ஒரு முடிகிற கட்டத்திற்கு நெருங்கிக் கொண்டிருந்தன. மார்ச் மாதத்தில் நாவாசைல்ட்ஸேவ் என்பவர் ஏற்பாடு செய்த ஒரு ஒப்பந்தம் இங்கிலாந்துடன் முடிவாயிற்று. அந்த ஒப்பந்தம், ஹானோவெர் என்ற இடத்திலிருந்தும்; இத்தாலியிலிருந்தும் நெப்போலியனைத் தம்முடைய ராணுவங்களை வாபஸ் பெறும்படிக் கட்டாயப் படுத்தும் நோக்கத்தோடு ஏற்பட்டது. ஹாலந்தினுடையவும் ஸ்விட்ஜர்லாந்தினுடையவும் சுயேச்சையை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று அந்த ஒப்பந்தம் கூறியது. ஜெனரல் வின்ட்ஜின்கெரோட் என்பவரை மே மாதத்தில் ஆஸ்திரியாவுக்கு அனுப்பினார்கள். இங்கிலாந்து, ருஷ்யா, ஸ்வீடன், ஆஸ்திரியா, நேபிள்ஸ் ஆகிய நாடுகள் எல்லாம் ஒன்று சேர்ந்து, ஒரு நடவடிக்கை எடுக்கும் திட்டத்தோடு அவரை அனுப்பினார்கள். பிரஷ்யா தயங்கியது. ஆனால், கட்டாயமாக அதைச் சேர்த்துக் கொள்ளும்படித் திட்டமிட்டார்கள். இந்தத் திட்டத்தின் விவரங்கள் இதில் உள்ளன. இதைப்பற்றி வயோதிக பால் கோன்ஸ்கியும் இளவரசர் ஆண்ட்ரூவும் விவாதிக்கிறார்கள்.

தமக்கு விரோதமாகச் செய்யப்படும் ஏற்பாடுகளை நெப்போலியன் அறிந்த பின்பு, அந்தக் கூட்டுறவை முறியடிக்க விரும்பினார். ஆகவே, எதிர்பாராத விதமாக இங்கிலாந்துடன் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள அவர் பிரேரித்தார். இங்கிலாந்தானது இந்த விஷயத்தில் தூதராக இருக்கும்படி அலெக்ஜாண்டரைக் கேட்டுக் கொண்டது. அலெக்ஜாண்டர் அந்த வேலையைச் செய்யும்படி நாவாசைல்ட்ஸேவ் என்பவரைத் தமது பிரதிநிதியாக பாரிஸுக்கு அனுப்பினார். ஆனால் ஜூன் மாதத்தில் நாவாசைல்ட்ஸேவ் பெர்லினை அடைந்ததும், ஜினோவாவை நெப்போலியன் பிடித்துக் கொண்ட செய்தியைக் கேள்விப்பட்டார். ஆகவே, அவர் பாரிஸுக்குப் போகவில்லை. இப்போது போர் என்பது தடுக்க முடியாததாய்விட்டது. அது சீக்கிரமாக ஆரம்பமும் ஆயிற்று. பிரஷ்யா இன்னமும் அதைத் தவிர்த்து வந்தது.

பியாட்டாலி என்பவர் ஒரு சமயம் ஆடம் ஜார்டாரிஸ்கி என்பவருக்கு வாத்தியாராக இருந்தார். அவர் முதலாவது அலெக்ஜாண்டருக்கு ஒரு நண்பவராகவும் ஆலோசகராகவும் இருந்தார். அச்சமயத்தில் அவருடன் நெருங்கிப் பழகிக் கொண்டிருந்தார். பியாட்டாலியின் நிரந்தர சமாதானத்திற்கான திட்டத்தில் சிறிது காலம் பீட்டர்ஸ்பர்க் சிரத்தை கொண்டு இருந்தது. அந்தத் திட்டத்தில் ருஷ்யாவுக்கு ஒரு பிரதானமான ஸ்தானத்தை அவர் கொடுத்திருந்தார். அலெக்ஜாண்டரின் பிற்காலத்திய பரிசுத்த கூட்டுறவு என்ற திட்டத்திற்கும் அந்தத் திட்டத்தின் செல்வாக்கு காரணமாய் இருந்தது. பின்னால் சர்வதேச சங்கம் உருவாகும்படி செய்த, பல திட்டங்களோடு அதையும் ஒன்றாகச் சொல்லலாம்.

பின்னால் உள்ள ஒரு அதிகாரத்தில் விவரிக்கப்பட்டிருக்கிற அந்த வயோதிக பால்கோன்ஸ்கி என்ற பாத்திரத்தை, டால்ஸ்டாய் தமது தாத்தாவான இளவரசர் என்.எஸ். வால்கோன்ஸ்கி என்பவரிடம் இருந்து சிருஷ்டித்தார். மகா பெரிய காத்தரைன் காலத்தில் அவர் ஒரு ஜெனரலாக இருந்தார். அவருடைய ஒரே குமாரியைத்தான் டால்ஸ்டாயின் தந்தை மணம் செய்துகொண்டார். வால்கோன்ஸ்கிக்கு புத்திரர் யாரும் இல்லை. இந்த நாவலில் வருகிற இளவரசர் ஆண்ட்ரூ என்ற பாத்திரம் டால்ஸ்டாயால் சிருஷ்டிக்கப்பட்டது. அந்தப் பாத்திரத்தில் தம்மிடமுள்ள சில குணங்களைச் சேர்திருக்கிறார். அதோடு தம்முடைய மூத்த சகோதரரான செர்கியஸ் டால்ஸ்டாயின் குண விசேஷங்களில் சிலவற்றையும் சேர்த்திருக்கிறார். டால்ஸ்டாயின் மற்ற குண விசேஷங்களை இந்த நாவலில் வரும் பீயர் என்ற பாத்திரத்தில் அமைத்திருக்கிறார்.

**13** இந்த நாவலில் பின்னால் ஒரு இடத்தில் குமாரி ஜார்ஜ் வருகிறாள். அவள் சில வருஷங்கள் நெப்போலியனின் காதலியாக இருந்தவள். அவள் ஒரு பெரிய துன்ப இயல் நடிகையாக விளங்கினாள். *1808*-ஆம் வருஷத்தில் பீட்டர்ஸ்பர்க்கிற்கு அவள் போனாள். அங்கே பிரமாதமான வெற்றி அவளுக்குக் கிடைத்தது. அப்போதுதான் நட்டாஷா அவளை ஹெலனுடைய வரவேற்பு அறையில் சந்தித்தாள்.

**14** 1805-ஆம் வருஷத்தில் எம்.ஐ. குட்டுஜோவ் *(1745-1813)* ஏற்கெனவே ஒரு பெரிய இராணுவ நிபுணர் என்ற பெயர் பெற்றிருந்தார். காத்தரைன் ஆட்சியில் துருக்கி யுத்தங்களில் அவர் கலந்து கொண்டிருந்தார். சுவோராவ் என்பவருடன் சேர்ந்து ஆச்சாக்காவ் என்ற இடத்திலும், இஸ்மெயில் என்ற இடத்திலும் உள்ள கோட்டைகளைக் கைப்பற்றினார். அதில் படுகாயம் அடைந்து, ஒரு கண்ணை இழந்தார். பீட்டர்ஸ்பர்க்கில் கவர்னர் ஜெனரலாய் இருந்தபோது, அலெக்ஜாண்டருக்கு மனதிற்குப் பிடித்தமில்லாமல் நடந்து கொண்டபடியால், அவர் ராஜ சபையின் அருளைப் பெறாமல், கிராமந்தரத்தில் மூன்று வருஷ காலம் வசித்து வந்தார். இப்போது 50,000 வீரர்கள் அடங்கிய ஒரு ராணுவத்தை ஆஸ்திரியாவுக்கு உதவியாக நடத்திச் செல்லும்படி அழைக்கப்பட்டார்.

**15** கோமகன் டி மார்ட்டிமார்ட் என்பவர் சொல்லிய தாவது:-

'அவர்கள் 17-வது லூயிக்கோ, ராணிக்கோ, அல்லது திருமதி எலிஸபெத்துக்கோ என்ன செய்து விட்டார்கள்?' அதாவது, ஐரோப்பிய மன்னர்கள் 16-வது லூயினுடைய குமாரரையோ, மனைவியையோ, அல்லது சகோதரியையோ மரண தண்டனை யிலிருந்தோ, ஜெயிலில் சாகும்படி விடுவதிலிருந்தோ தடுப்பதற்கு எதுவும் செய்யவில்லை யென்பதைக் கூறுகிறது.

'ஆப்பிரிக்காவில் அவர் கைதிகளைக் கொன்றார்' என்று கூறுகிற விஷயமாவது:-

எகிப்து தேசத்தில் தமக்கு விரோதமாகக் கிளம்பிய புரட்சியை நசுக்குவதற்கு நெப்போலியன் கையாண்ட கொடுமைகளைக் குறிப்பிடுகிறது.

1 10

கோ மகன் இலியா ராஸ்டோவ் என்பவர் டால்ஸ்டாயின் தாத்தாவான இலியா ஆண்ட்ரீவிச் டால்ஸ்டாய் என்பவரிடமிருந்து சிருஷ்டிக்கப்பட்ட ஒரு பாத்திரம். அவருடைய மனைவியான கோமகள் ராஸ்டோவ் இந்த ஆசிரியரின் பாட்டியான கோமகள் பி.என். டால்ஸ்டாய் என்பவரிடமிருந்து சிருஷ்டிக்கப்பட்ட ஒரு பாத்திரம்.

1 11

வா வாலிப ராஸ்டோவ்களை டால்ஸ்டாய் வருணிக்கும்போது, தம்முடைய குடும்பத்தின் பரம்பரைகளையும், தமது மனைவியின் குடும்பத்தின் பரம்பரைகளையும் நினைவில் வைத்துக்கொண்டு எழுதுகிறார். நிக்கலஸ் ராஸ்டோவ் என்ற பாத்திரத்திற்கு, டால்ஸ்டாய் தமது தந்தையின் குண விசேஷங்கள் பலவற்றைக் கொடுத்திருக்கிறார். பெயரைக்கூட அப்படியே கொடுத்திருக்கிறார். டால்ஸ்டாயின் மிகுந்த பிரியமான அத்தையின் பெயர் டாட்டியானா அலெக்ஸாண்டிராவ்னா எர்காலஸ்கி என்பதாகும். அவளுடைய வாலிபத்தில் அவள் எப்படி இருந்தாளோ, அந்த குண விசேஷங்களை, சோனியா என்ற பாத்திரத்திற்கு அவர் கொடுத்திருக்கிறார். டாட்டியானாவுக்கும், டால்ஸ்டாயினுடைய தந்தைக்கும் வாழ்க்கையில் எந்தவிதமான உறவுகள் இருந்தனவோ, அந்த உறவுகளையே சோனியாவுக்கும் நிக்கலஸுக்கும் இந்த நாவலில் கொடுத்திருக்கிறார். தம்முடைய மூத்த மைத்துனியின் பெயர் லிசாபெர்ஸ் என்பதாகும். அவளுடைய குண விசேஷங்களை வெரா என்ற பாத்திரத்திற்குக் கொடுத்திருக்கிறார். தம்முடைய சிறிய மைத்துனியான டாட்டியானா பெர்ஸ் என்பவளுடைய குண விசேஷங்களில் சிலவற்றையும், தமது மனைவியின் குண விசேஷங்களையும் கலந்து, நட்டாஷா என்ற பாத்திரத்திற்கு அவர் கொடுத்திருக்கிறார். ராஸ்டோவ்கள் குடும்பத்தின் சூழ்நிலைகளை பெர்ஸ் குடும்பத்தின் சூழ்நிலைகளில் காணப்பட்டவைகளிலிருந்து எடுத்துக் கொடுத்திருக்கிறார்.

**1**
**12**

‘அவள் ஒரு இரண்டாவது சாலமனியாக விளங்குவாள்’ என்று நட்டாஷாவின் தந்தை நட்டாஷாவைப்பற்றி சொல்லுகிறார். 1805-ஆம் வருஷத்தில் மாஸ்கோவில் தங்கியிருந்த ஜெர்மன் நாடகக் கோஷ்டியில் சாலமனி என்பவள்தான் பிரதான பாட்டுக் காரியாகவும், நடிகையாகவும் விளங்கினாள். அவள் ருஷ்யாவில் பிறந்தாள். ஆனால், அவளுடைய குரல் இத்தாலியக் குரலாய் இருந்தது. அவள் ருஷ்யவாசியைப்போல ருஷ்ய மொழியை நன்றாகப் பேசினாள். நன்றாகப் படிக்கவைக்கப்பட்டவள். வயலின், பியானோ ஆகியவைகளை நன்றாய் வாசிப்பாள். பரவசமாகும் விதத்தில் நடனம் ஆடுவாள்.

**1**
**14**

திருமதி ஜென்லிஸ் என்பவள் அந்தக் காலத்தில் ஒரு பிரஞ்சு எழுத்தாளர். கல்வி சம்பந்தமான பல புத்தகங்களையும் அவள் எழுதியிருக்கிறாள். இந்தப் புத்தகத்தில் பின்னால் அவளுடைய நாவல் ஒன்றை பாராடினோ போருக்கு முன் தினத்தில் குட்டுஜோவ் வாசித்துக் கொண்டிருந்ததாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவளுடைய கதைகள் எல்லாம் நல்ல சமூக வட்டாரங்களைப் பற்றியும், பண்பு உள்ளவைகளாகவும் தவறு இல்லாதவையாகவும் இருக்கும். ஆனால், வாலிப ராஸ்டோவ்களுக்கு அந்தக் கதைகள் சுவாரஸ்யமாய் இல்லாமல் மந்தமாகக் காணப்பட்டிருக்கலாம். அதனால் வெராவை திருமதி டி ஜென்லிஸ் என்று பெயரிட்டு அழைத்து, அவள் எப்போதாவது தங்களுக்கு இடையூறு செய்தால் கேலி செய்து வந்தார்கள்.

கோமகன் ஆர்லோவ் என்பவர் அம்மாதிரி டின்னரை எப்போதும் கொடுத்தது இல்லையென்று ஒரு வாக்கியம் வருகிறது. இவருடைய முழுப் பெயர் கோமகன் அலெக்ஸி சூர்லோவ். அவரும் அவருடைய சகோதரர் கிரிகரியும் 1762-ஆம் வருஷத்தில் நடந்த அரண்மனைப் புரட்சியில் முக்கியப் பங்கு எடுத்துக் கொண்டார்கள். அந்தப் புரட்சியினால் 3-வது பீட்டர் கொலை செய்யப்பட்டு அவருடைய மனைவியான காத்தரைன் சிம்மாசனம் ஏறினாள். 1774-ஆம் வருஷத்தில் நடந்த துருக்கிய யுத்தத்தில் அவர் புகழ் பெற்ற பின்பு ஓய்வு பெற்றுக் கொண்டார். நெஸ்குச்னி என்ற மாஸ்கோவுக்குப் பக்கத்திலுள்ள தமது அரண்மனையில் வசித்து வந்தார். அவர் மிகச் சிறந்த நடனக் கச்சேரிகளை ஏற்பாடு செய்து,

அவருடைய உபசரணையினால் ஒவ்வொருவரையும் மலைக்கும் படி செய்து வந்தார். 19-வது நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில், மாஸ்கோவில் மிகுந்த பிரபலமானவராக அவர் விளங்கினார்.

**1** 17

டாராஸுக்காக நான் ஆயிரம் ரூபிள்கள் கொடுத்தேன் என்று ஒரு வாக்கியம் வருகிறது. ஆகவே, டாராஸ் என்பவன் ஒரு அடிமை என்று தெரிகிறது. பொதுவாக எஸ்டேட்டுகளோடுதான் அடிமைகளையும் விலைக்கு விற்பது வழக்கம். வீட்டு வேலைகளில் தேர்ந்த அடிமைகளைத் தனியாக விற்பதும் உண்டு. டாராஸ் என்பவன் இங்கிலீஷ் கிளப்பில் ஒரு அயல் நாட்டு சமையல்காரனிடம் சமையல் செய்வதற்கு ஒருவேலை கற்றுக்கொண்டிருக்கலாம். அந்தக் காலத்தில் ஆயிரம் ரூபிள்கள் கொடுத்தால், சாதாரணமாக எட்டு அல்லது பத்து சாதாரண அடிமைகளை விலைக்கு வாங்க முடியும்.

**1** 18

மரியா டிமிட்ரிவ்னா அக்ராசிமாவா என்பவள் அந்தக் காலத்தில் மாஸ்கோவில் பிரபலமாய் இருந்த ஒரு உண்மையான பாத்திரம். அவருடைய மற்ற பெயர்களை டால்ஸ்டாய் வைத்துக் கொண்டு அவளுடைய கிறிஸ்துவப் பெயரை மட்டும் நட்டாலியா என்பதிலிருந்து மரியா என்று மாற்றியிருக்கிறார். அவளை, நாவல்களில் டால்ஸ்டாயைத் தவிர வேறு பல ருஷ்ய எழுத்தாளர்களும் உபயோகித்திருக்கிறார்கள்.

**1** 19

சுவோராவை அவர்கள் தோற்கடித்தார்கள் என்று ஒரு வாக்கியம் வருகிறது. இங்கே ஷின்ஷைன் என்பவர் அதை மிகைப்படுத்திக் கூறுகிறார். சுவோராவ் *(1729-1800)* என்பவர் காஸானா, டிரேபியா, நாவி என்ற இடங்களில் வெற்றி பெற்ற பின்பு, இத்தாலியிலிருந்து அநேகமாக பிரஞ்சுக்காரர்களை வெளியேற்றிய பின்பு, அவரோடு ஆஸ்திரியர்கள் ஒத்துழைக்கத் தவறியதால், அவர் மிகுந்த கஷ்டங்களுக்குள்ளானார் என்பது உண்மை. அந்தக் கஷ்டங்கள் அவர் ஸ்விட்ஜர்லாந்து வழியாகப் போக முயற்சித்தபோது ஏற்பட்டன. ஆனால், அவர் படுதோல்வி அடைந்தார் என்று சொல்வதற்கு சரித்திரத்தில் எந்த ஆதாரமும் கிடைக்கவில்லை.

**125**

'பிரதான ஜெனரல்' என்ற பட்டம் முன்பெல்லாம் பீல்ட் மார்ஷெல்களுக்கு மட்டும் கொடுக்கப்பட்டு வந்தன. ஆனால் காத்தரைன் காலத்தில் அந்தப் பட்டத்தை 3-வது படிக்கு உயர்ந்த எல்லா ஜெனரல்களுக்கும் கொடுப்பது வழக்கமாயிற்று.

ஹெலாய்ஸ் என்று இளவரசர் சொல்லியபோது இகழ்ச்சியைக் காட்டுகிறார். ஜூலியிடமிருந்து அந்தக் கடிதம் வந்தது என்பதை அவர் அறிவார். ரூஸோ என்பவர் எழுதிய ஜூலி ஹெலாய்ஸ் என்ற பெயரை அவர் குறிப்பிடுகிறார். இளவரசர் வால்ட்டேரை புகழ்கிறவர்; ஆகவே, ரூஸோவின் நாவலை வெறுக்கிறவர்.

'இயற்கையின் அதிசயங்களுக்கு ஒரு சாவி' என்ற வேதாந்த நூல் எக்கார்ட் ஷாஸென் என்பவரால் (1752-1803) எழுதப்பட்டது. 1805-ஆம் வருஷத்தில், அது ருஷ்ய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டது. அதுமிகுந்த ஆவலோடு, முக்கியமாக பிரீமேஸன்களால், படிக்கப்பட்டு வந்தது.

**126**

வயோதிக பால்கோன்ஸ்கி, வீயன்னாவுக்கு வின்ட்ஜின்கெரோட் எடுத்துக்கொண்டுபோன போர்த் திட்டத்தைப்பற்றி விசாரித்தார். கடைசியாக ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளுவதற்காக, அது வீயன்னாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டது. மூன்று பக்கங்களிலிருந்து பிரஞ்சுக்காரர்களைத் தாக்க வேண்டுமென்று அந்தத் திட்டம் கூறியது. ஸ்வீடிஷ்காரர்களும், பிரிட்டிஷ் காரர்களும், ருஷ்யர்களும் வடக்கேயிருந்து பாமரேனியா, ஹானோவர் வழியாகத் தாக்க வேண்டும். ஆஸ்திரியர்களும் ருஷ்யர்களும் மத்திய ஐரோப்பாவில் தாக்க வேண்டும். இதற்காக ருஷ்யா இரண்டு ராணுவங்களைக் கொடுக்க வேண்டும். ஒன்று, மிக்கல்ஸன், பெனிக்ஸன் தலைமையில் போலந்தில் தங்கி பிரஷ்யாவை யுத்தத்திற்கு இழுக்க வேண்டும். இன்னொன்று, குட்டுஜோவ், பக்ஸ்ஹெளடன் தலைமையில் கலீஷியாவில் டான்யூப் நதி வழியாக முன்னேற வேண்டும். ஆஸ்திரியர்கள் இரண்டு இராணுவங்களைக் கொடுக்க வேண்டும். ஒன்று, பவேரியாவில் ருஷ்யரோடு ஒத்துழைக்கும். மற்றொன்று, இத்தாலியில் லம்பார்டி பிரதேசத்தில் வேலை செய்யும். 3-வது தாக்குதலை மத்திய இத்தாலி மூலமாக கார்ப்பூவிலிருந்து ருஷ்யர்களும்; மால்டாவிலிருந்தும், நேபிள்ஸிலிருந்தும் பிரிட்டிஷ்காரர்களும் தாக்க வேண்டும்.

★

# 2

## 1

1805-ஆம் வருஷம் அக்டோபர் மாதத்தில் ஆஸ்திரியாவில் உள்ள ஆர்க் டியூக்கின் நகரங்களிலும் கிராமங்களிலும் ஒரு ருஷ்ய ராணுவம் தங்கியிருந்தது. ருஷ்யாவிலிருந்து மேலும் புதிதாய் வந்து கொண்டிருந்த படைகள், பிராவ்னாவ் கோட்டைக்கு அருகில் தங்கி அங்குள்ள மக்களுக்கு பாரமாய் அமைந்தன. சேனாதிபதி குட்டுஜோவுக்கு பிராவ்னாவ் தலைமைமுகாமாய் இருந்தது.

*1805*-ஆம் வருஷம் அக்டோபர் *11*-ந்தேதியன்று பிராவ்னாவுக்கு வந்து சேர்ந்த காலாட் படைகளில் ஒன்றை, சேனாதிபதி பார்வை யிடுவதற்காக நகரத்திற்கு அரைமைலுக்கு வெளியே நிறுத்தி வைக்கப்பட்டது. பழத்தோட்டங்கள், கல்வேலிகள், ஓட்டுக் கூரைகள், தூரத்தில் தெரிந்த குன்றுகள் இவ்வளவும் அந்த இடத்தில் காணப்பட்டன. இந்த சூழ்நிலைகள் ருஷ்யாவின் தோற்றத்திற்கு நேர் விரோதமானவை. அங்கு வசித்தவர்கள் ஆச்சரியத்தோடு ராணுவ வீரர்களைப் பார்த்து வந்தார்கள். அந்தப் பிரதேச வாசிகள் ருஷ்யர்கள் அல்ல. இருந்தாலும், ருஷ்ய நாட்டில் ஒரு அணிவகுப்புக் காட்சிக்காக எப்படி தயார் செய்வார்களோ, அதே மாதிரி அந்த ருஷ்யப் பட்டாளம் தயார் செய்து கொண்டிருந்தது.

கடைசி தினத்தன்று மாலையில் வந்துகொண்டிருக்கும் பட்டாளத்தை சேனாதிபதி பார்வையிடுவார் என்ற உத்தரவு வந்தது. அந்த உத்தரவில் கண்ட வார்த்தைகள் பட்டாளத்தின் கமாண்டருக்குத் தெளிவாய் புரியவில்லை. அதாவது துருப்புகள் பவனி செல்லும் உடையில் இருப்பதா, அல்லது பிரயாண உடையில் இருப்பதா என்ற சந்தேகம் தோன்றியது. இதைப் பற்றி பட்டாளங்களின் கமாண்டர்கள் கூடிக் கலந்து ஆலோசித்த பின்பு, பட்டாளத்து வீரர்கள் பவனி உடையில் இருப்பது என்று தீர்மானமாயிற்று. தலைகுனிந்து பணிவதில் போதுமானவரையில் குனியவில்லை என்ற புகாருக்கு இடம் கொடுக்காமல், மிகவும் அதிகமாகவே குனிந்துவிடுவது சிலாக்கியமல்லவா? இந்த விதியைப் பின்பற்றியே மேலே சொன்னவாறு தீர்மானிக்கப் பட்டது. ஆகவே சிப்பாய்கள், இருபது மைல் நடைக்குப் பின்னால், இரவு முழுவதும் தூக்கமில்லாமல், தங்கள் உடைகளை சீர்செய்வதிலும் சுத்தம் செய்வதிலும் ஈடுபட்டிருந்தார்கள். கடைசி பிரயாண தினத்தன்று பிரயாணம் முடிந்து பின்பு அவர்கள் ஒழுங்கற்ற கூட்டமாய் சிதறிக்கிடந்தார்கள். அந்த நிலைமையில்

அவர்களை சேனாதிபதி பார்வையிடுவதைவிட, பொத்தான் களையும் பட்டைகளையும் விளக்கிப் பிரகாசமாய் சிப்பாய்கள் அணிந்த பின்பு, மறுநாள் காலையில் பார்வையிடுவதே நல்லது என்று கம்பெனி கமாண்டர்களும் அவர்களுடைய உதவியாளர் களும் தீர்மானித்தார்கள். அப்படிச் செய்தால், வெளிப் பார்வையில் மட்டும் சிப்பாய்கள் ஒழுங்காய் இருக்கிறார்கள் என்பது மட்டுமல்ல; சிப்பாய்களின் சீருடைக்குள்ளே சுத்தமாய் இருக்கிறார்களா என்று சேனாதிபதி பார்க்க விரும்பினால், அப்பொழுது அவர் ஒவ்வொரு சிப்பாயும் ஒரு சுத்தமான ஷர்ட் அணிந்து, தன்னுடைய பையில் சிப்பாய் வைத்திருக்க வேண்டிய சகல சாமான்களையும் வைத்திருப்பதையும் அவர் காண முடியும். ஒரே ஒரு விஷயத்தில் மட்டும்தான் எல்லாருக்கும் கவலை ஏற்பட்டிருந்தது அதுதான் சிப்பாய்களின் ஜோடுகள். பாதிக்கு மேற்பட்டவர்களின் ஜோடுகள் ஓட்டைகளோடு இருந்தன. இதற்குக் காரணம் பட்டாளக் கமாண்டரின் குற்றமல்ல; ஜோடுகள் வேண்டுமென்று எத்தனையோ தடவைகள் திருப்பித் திருப்பிக் கேட்டும், ஆஸ்திரியாவிலுள்ள சப்ளை இலாக இன்னும் ஜோடுகள் கொடுக்கவில்லை. பட்டாளமும் எழுநூறு மைல்கள் நடந்து வந்துவிட்டது.

அந்தப் பட்டாளத்தின் கமாண்டர் ஒரு வயதானவர்; கோபமான சுபாவமுள்ளவர். தடித்துப் பருத்திருந்தார். சாம்பல் வர்ணமான புருவங்களும் கன்ன மீசைகளும் கொண்டவர். அவருடைய தோள்களின் நீள அளவைவிட,அவருடைய மார்பிற்கும் முதுகிற்கும் உள்ள குறுக்களவு அதிகமாய்இருந்து. அப்பொழுது தான் மடிப்பை உலைத்த ஒரு புது சீருடையை அணிந்திருந்தார். அதில் மடிப்புகள் நன்றாய் தெரிந்தன. தோள் பட்டையில் தங்கத்தாலான வாகு வலையங்கள் அணிந்திருந்தார். அவருடைய தோள்கள் மிக பருமனாய் இருந்தபடியால் அவை பணிந்து நிற்காமல் மேல்தூக்கி நின்றன. தமது வாழ்க்கையில் உள்ள மிகுந்த பவித்திரமான கடமைகளில் ஒன்றை சந்தோஷத்தோடு செய்து கொண்டிருப்பதாய் நினைக்கும் ஒருவரைப் போல் அவர் தோன்றினார். அவர் தமது பட்டாளத்திற்கு முன்னால் உலவிக் கொண்டிருந்தார். ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்போதும் நின்று முதுகைச் சிறிது வளைத்துக்கொள்வார். தமது பட்டாளத்தின் மீது அவருக்கு மிகுந்த திருப்தி என்பது தெளிவாய்த் தெரிந்தது. அந்த திருப்தியில் அவர் திளைத்தார். அவர் முழு மனமும் அதில் ஈடுபட்டிருந்தது. என்றாலும் உயர்வட்டார நடவடிக்கைகளும், பெண்களும், அவர் உள்ளத்தில் ராணுவ விஷயங்களைவிட

குறைவில்லாத அளவில் இடம்பெற்று இருக்கிறார்கள் என்பதை அவருடைய ஒய்யார நடை காட்டியது.

'நல்லது, மைக்கேல் மைட்ரிச், ஐயா?' என்று அவர் ஒரு சிறு படையின் கமாண்டரை பார்த்துச்சொன்னார். அவரும் புன்னகை யோடு இவரை நோக்கி வந்து கொண்டிருந்தார். இருவரும் சந்தோஷமாய் இருந்தார்கள் என்பது தெளிவாய்த் தெரிந்தது. 'ராத்திரி பூராவாக வேலை என்றாலும் பட்டளாம் மோசமானதாய் இல்லை என்று நினைக்கிறேன்.'

அந்த சந்தோஷம் மிக்க பரிகாசத்தை சிறு படைக் கமாண்டர் புரிந்துகொண்டு சிரித்தார்.

(ஜாரிட்சின் மைதானம் என்பது பீட்டர்ஸ்பர்க்கில் இருந்தது. அது பின்னால் யுத்த களம் என்றுகூட அழைக்கப்பட்டது. அந்த மைதானத்தில் ராணுவ அணிவகுப்புகளும் ராணுவ மரியாதைகளும் நடப்பது வழக்கம்.) 'ஜாரிட்சின் மைதானத்திற்குக்கூட இந்தப் படை போனாலும் இதைத் தள்ளிவிட மாட்டார்கள்.'

'என்ன?' என்று கமாண்டர் கேட்டார்.

அச்சமயத்தில் நகரத்திலிருந்துவரும் ரஸ்தாவில் குதிரை மீது இருவர் வரக்கண்டார்கள். அவர்களில் ஒருவர் மெய்க்காப்பாளர். அவரோடு ஒரு கோசாக்கும் வந்தான்.

முதல் நாள்அனுப்பிய உத்தரவு தெளிவாய் இல்லாமல் இருந்ததால், அதைத் தெளிவுபடுத்தி உறுதி செய்யும் உத்தரவை அந்த மெய்க்காப்பாளர் கொண்டு வந்தார். அதாவது, அந்தப் பட்டாளம் பிரயாணத்தின்போது எம்மாதிரி இருந்ததோ, அதே நிலையில் அதை பார்வையிடுவதற்கு சேனாதிபதி விரும்புகிறார் என்பதேயாகும். அவர்கள் அணிந்திருந்த பெரிய கோட்டுகள், பைகள் எல்லாம் அப்படியப்படியே காணப்படவேண்டும்.

வியன்னாவிலுள்ள யுத்த சபையின் அங்கத்தினர் ஒருவர் முதல் நாளன்று குட்டுஜோவைப் பார்ப்பதற்கு வந்திருந்தார். ஆர்க் டியூக் பெர்டினான்ட், மாக் ஆகியவர்களின் தலைமையிலுள்ள ராணுவத்தோடு, குட்டுஜோவின் ராணுவமும் சேர்ந்து கொள்ள வேண்டும் என்பது அவர் யோசனை. இந்த சேர்க்கை, புத்திசாலித்தனமானது அல்ல என்று குட்டு ஜோவ் நினைத்தார். இதற்கு ஆதாரமாக அந்த ஆஸ்திரியன் ஜெனரலுக்கு அவர் காட்ட விரும்பியவைகளில், எவ்வளவு பரிதாபகரமான நிலைமையில் ருஷ்யத் துருப்புகள் நடந்து வந்து சேர்ந்திருக்கின்றன என்பதும் ஒன்றாகும். இந்த நோக்கத்தோடு அவர் பட்டாளத்தை சந்திக்க

நினைத்தனர். எவ்வளவுக்கு எவ்வளவு அது கேவலமான நிலைமையில் இருக்கிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு சேனாதிபதி அதிகமாய் சந்தோஷம் அடைவார். இந்த சந்தர்ப்பங்களைப் பற்றி மெய்க்காப்பாளனுக்கு ஒன்றும் தெரியாது. என்றாலும் சிப்பாய்கள் தங்களுடைய பெரிய கோட்டுகளிலும் பிரயாண முறையிலும் காணப்படவேண்டும் என்றும், இல்லாவிடில் சேனாதிபதி மிகவும்அதிருப்தி அடைவார் என்றும் சொல்லப்பட உத்தரவைஅவர் சேர்ப்பித்தார். இதைக் கேட்டதும் பட்டாளத்தின் தலைவர் தலையைத் தொங்கவிட்டு, மௌனமாய் தோள்களைக் குலுக்கி, கோபமான அசைப்போடு கைகளைப் பரப்பினார்.

‘ஒரு சரியான குளறுபடியை நாம் செய்துவிட்டோம்’ என்றார் அவர்.

‘அதுதான் வழி, மைக்கேல் மைட்ரிச், நான் சொல்லவில்லையா? பிராயண கோலத்தில் பட்டாளத்தைப் பார்க்கவேண்டும் என்று சொன்னால், பெரிய கோட்டுகளில் அவர்கள் காணப்படவேண்டும் என்றுதானே அர்த்தம்?’ என்று சிறு படைக் கமாண்டரைக் கண்டித்துப் பேசினார். ‘அட கடவுளே ’ என்று சொல்லி, ஒரு அடி முன்னால் எடுத்து வைத்து ‘கம்பெனி கமாண்டர்கள், சார்ஜண்ட் மேஜர்கள்’ என்று தமது வழக்கமான உத்தரவிடும் குரலில் கூவினார். மெய்க்காப்பாளரைப் பார்த்து, ‘சேனாதிபதிக்குக் காட்டும் மரியாதையோடும் பவ்யத்தோடும் எவ்வளவு சீக்கிரம் அவர் இங்கே வருவார்?’ என்று கேட்டார்.

‘இன்னும் ஒரு மணி நேரத்தில் என்று நினைக்கிறேன்.’

‘அதற்குள் உடைகளை மாற்றிக்கொள்ள அவகாசம் இருக்குமா?’

‘எனக்குத் தெரியாது, ஜெனரல்...’

பட்டாளக் கமாண்டர் துருப்புகளின் முகாமிற்குத் தாமே சென்று பெரிய கோட்டுகளை அணிந்து கொள்ளுமாறு உத்தரவிட்டார். கம்பெனி கமாண்டர்கள் தங்கள் வீரர்களிடம் ஓடினார்கள். சார்ஜண்ட் மேஜர்கள் பரபரப்பு அடைந்ததார்கள். அந்தப் பெரிய கோட்டுகள் நல்ல நிலைமையில் இல்லை. ஒழுங்காகவும் அமைதியாகவும் கூடியிருந்த பட்டாளம் திடீரென்று கலைந்து நாலா பக்கமும் சிதறியது. சிப்பாய்கள் முன்னும் பின்னும் ஓடினார்கள். சட்டையைக் கழற்றி எறிந்தார்கள். பட்டைகளை அவிழ்த்தெறிந்து ஓவர் கோட்டுகளைக் கழற்றி, கைகளை மேலே தூக்கி கைச்சட்டையை உள்ளே இழுத்தார்கள்.

அரை மணி நேரத்தில் மறுபடியும் எல்லாம் ஒழுங்காயிற்று. சிப்பாய்கள் அமைந்து நிற்கும் சதுரங்கள், கருப்பிற்குப் பதிலாக சாம்பல் வர்ணத்தில் தோன்றின. பட்டாளக் கமாண்டர் காலை இழுத்துப் போட்டு நடந்து, பட்டாளத்திற்கு முன்னால் தூரத்தில் நின்று பார்வையிட்டார்.

'என்னதான் இது? இது!' என்று கூவி அசையாமல் நின்றார். 'மூன்றாவது கம்பெனி கமாண்டரே'.

'மூன்றாவது கம்பெனி கமாண்டரை ஜெனரல் அழைக்கிறார்... ஜெனரலிடம் கமாண்டர் போகவேண்டும்...கமாண்டரிடமும் மூன்றாவது கம்பெனி'. இம்மாதிரி வார்த்தைகள் சிப்பாய்களின் வரிசையில் போய்க்கொண்டிருந்தன. காணாமல் போன அதிகாரியைத் தேடிக்கொண்டு ஒரு உதவியாளர் ஓடினார். ஆவலோடு, ஆனால் தவறாய் சொல்லப்பட்ட வார்த்தைகள் கடைசி இடத்தில் போய் முடிந்தன. முடியும்போது அவை 'மூன்றாவது பட்டாளத்தின் ஜெனரல்' என்று உருவமெடுத்தது. தேடப்பட்ட அதிகாரி தமது கம்பெனியின் பின்னாலிருந்து முன்னால் வந்தார். அவர் மத்திய வயதுடையவர். ஓடிப் பழக்கமில்லாதவர். என்றாலும் விகாரமாய் தடுக்கித் தடுக்கி தமது முன்பாதங்களால் ஜெனரலைப் பார்த்து ஓடினார். பாடம் படிக்காத மாணவனை 'அந்த பாடத்தை ஒப்புவி' என்று கேட்கும்போது அவன் முகம் எப்படி இருக்குமோ, அதே மாதிரி கேப்டன் முகத்தில் கலக்கம் காணப்பட்டது. அவருடைய மூக்கில் புள்ளிகள் தோன்றின. அதில் காணப்பட்ட சிவந்த நிறத்திற்கு அவருடைய அமிதக் குடியே காரணம் என்பது தெளிவாய்த் தெரிந்தது. அவருடைய வாய் சுளித்தது. கேப்டன் மூச்சு வாங்கிக்கொண்டு ஓடிவந்து அருகில் நெருங்கியதும் நடையைத் தளர்த்தினார். அவரை ஜெனரல் மேலும் கீழும் பார்த்தார். 'வெகு சீக்கிரமாக உமது சிப்பாய்களுக்கு ரவிக்கைகளைப் போட்டுவிடுவீர் என்று தோன்றுகிறது. என்ன இது?' என்று பட்டாளத்தின் கமாண்டர் தமது மோவாயை முன்னால் நீட்டி, ஒரு சிப்பாயைக் காட்டிக் கூவினார். மூன்றாவது கம்பெனியைச் சேர்ந்த அந்த சிப்பாய் நீல நிறத்தில் ஒரு பெரிய கோட் அணிந்திருந்தான். மற்றவர்கள் அணிந்திருந்த வர்ணத்திற்கு இது விரோதமாய் இருந்தது. 'நீர் எதைப் பார்த்துக் கொண்டிருந்தீர்? சேனாதிபதி வரப்போகிறார்; இச்சமயம் நீர் உமது இடத்தைவிட்டுப் போவதாவது? ஹே? அணிவகுப்பில் பல்நிறக் கோட்டுகளில் உமது சிப்பாய்களை வைத்திருப்பதற்கு நான் உமக்கு சரியான பாடம் கற்றுக்கொடுக்கிறேன்...ஹே?'

கம்பெனி கமாண்டர் தமது மேல் அதிகாரி மீது பார்வையைப் பதித்து சலாம் அடிப்பதற்காகத் தமது தொப்பியில் வைத்த இரண்டு

விரல்களை மேன்மேலும் கனமாய் அழுத்தினார். அந்த அழுத்தலில் தான் அவருடைய விமோசனத்திற்கு நம்பிக்கை இருந்ததுபோல் தோன்றியது.

'நல்லது. என்ன பேசாமல் இருக்கிறீர்? ஹங்கேரியனைப் போல உடை தரித்து யாரை அங்கே நிறுத்தி வைத்திருக்கிறீர்?' என்று கண்டிப்பும் பரிகாசமுமாய் கேட்டார்.

'மேன்மை தங்கியவரே...'

'என்ன? மேன்மை தங்கியவரே என்ன? மேன்மை தங்கியவர்! ஆனால் மேன்மை தங்கிய உம்மைப் பற்றி என்ன...ஒருவருக்கும் தெரியாது.'

'மேன்மை தங்கியவரே, அவர்தான் அதிகாரி டோலாகாவ். அவர் பதவியிலிருந்து இறக்கப்பட்டிருக்கிறார்' என்றார், மெதுவாக, கேப்டன்.

'நல்லது. அவர் பதவியிலிருந்து யுத்தகளத் தலைவராக இறக்கப் பட்டிருக்கிறாரா? அல்லது சிப்பாயாக இறக்கப் பட்டிருக் கிறாரா? சிப்பாய் என்றால், மற்றவர்களைப் போல ராணுவ விதிப்படி உள்ள சீருடையை அல்லவா அணிந்திருக்கவேண்டும்?'

'மேன்மை தங்கியவரே, பிரயாணத்தின்போது நீங்கள்தான் அவருக்கு அனுமதி அளித்தீர்கள்.'

'அவருக்கு அனுமதியா? அனுமதி? உம்மைப் போலத்தான் அதுவும் இருக்கிறது' என்று பட்டாளத்தின் கமாண்டர் கொஞ்சம் கோபம் குறைந்து பேசினார். 'அனுமதியாம்...ஒருவர் உம்மிடம் ஒன்று சொன்னால், நீர்... என்ன?' மீண்டும் கோபம் அடைந்தவராய் அவர் பேசி, 'உமது சிப்பாய்களை கௌரவமான முறையில் உடை அணிந்து கொள்ளச் செய்யும்படி உம்மை நான் கேட்டுக் கொள்ளுகிறேன்' என்றார்.

கமாண்டர் உதவியாளரைத் திரும்பிப் பார்த்தார். பின்னால், தமது காலை இழுத்துப் போட்டுக்கொண்டு, சிப்பாய்களின் வரிசையில் நடந்து சென்றார். தமது கோபத்தை வெளியே காட்டுவதற்கு ஏதாவது குற்றம் அகப்படுமா என்று பார்த்தார். ஒரு அதிகாரி ஒரு இடத்தில் கோபித்தார். மற்றொரு இடத்தில் சிப்பாய்களின் வரிசை நேராக இல்லை என்றுக் குறை கூறினார். இப்படியாக மூன்றாவது கம்பெனிக்கு அவர் வந்து சேர்ந்தார்.

'நீர் ஏன் இப்படி நிற்கிறீர்? உமது கால் எங்கே? உமது கால்?' என்று கமாண்டர் கூவினார். அவர் நின்ற இடத்திலிருந்து ஐந்து

பேர்கள் தள்ளி டோலாகாவ் தமது நீல நிற சீருடையில் நின்று கொண்டிருந்தார்.

டோலாகாவ் தமது வளைந்த முட்டை நிமிர்த்திக்கொண்டு, நேராக கமாண்டரின் கண்களைப் பார்த்தார். அவருடைய கண்கள் தெளிவாய் கர்வம் கொண்டவைகளாய் இருந்தன.

'ஏன் இந்த நீலக்கோட்டு? உடனே மாற்றிவிடும்... சார்ஜண்ட் மேஜர், இவர் கோட்டை மாற்று...' அவர் இன்னும் பேசி முடிக்கவில்லை.

'ஜெனரல், நான் உத்தரவுக்குத்தான் கீழ்ப்படியவேண்டும். ஆனால் நான்...' என்று டோலாகாவ் உரத்த குரலில் கணீரென்று பேசினார்.

ஜெனரலின் கண்களும் சிப்பாயின் கண்களும் சந்தித்தன. ஜெனரல் மௌனமானார். கோபமாகத் தமது கழுத்துப்பட்டியை இழுத்து விட்டுக்கொண்டார்.

அங்கிருந்து திரும்பும்போது, 'தயவு செய்து உமது கோட்டை மாற்றிக்கொள்ளும், ஐயா!' என்றார்.



'அவர் வருகிறார்' என்று சைகைக் காரன் கத்தினான்.

பட்டாளத்தின் கமாண்டர் முகம் சிவக்க குதிரையிடம் ஓடி, நடுங்கிய கைகளோடு அங்கபடியைப் பற்றி சேணத்தில் அமர்ந்து தம்மைச் சரிசெய்து கொண்டார். தமது பட்டாக் கத்தியை வெளியே உருவி, சந்தோஷமும் உறுதியும் கொண்ட பார்வையோடு, தமது வாயைக் கோணலாக வைத்துக்கொண்டு, உத்தரவு கொடுக்கத் தயாரானார். ஒரு பறவை தன்னுடைய இறகுகளை சுத்தம் செய்வதற்கோ, அல்லது ஒழுங்காய் வைப்பதற்கோ எப்படி படபடவென்று அடித்துக் கொள்ளுமோ, அதே மாதிரி அந்தப் பட்டாளம் படபடத்து, பின்னால் அசையாமல் நின்றது.

'அட்டன்ஷன்' என்று பட்டாளக் கமாண்டர் உள்ளத்தை அதிர வைக்கும் குரலில் கூவினார். அவருடைய குரல் தம்மைப் பொறுத்த வரையில் மகிழ்ச்சியையும், பட்டாளத்தைப் பொறுத்த வரையில் கடுமையையும், நெருங்கி வந்துகொண்டிருக்கும் தலைவரைப் பொறுத்தவரையில் வரவேற்பையும் காட்டியது.

அகலமான கிராமாந்திர ரஸ்தாவில் இரு பக்கங்களிலும் மரங்கள் அடர்ந்து நிற்க, மத்தியில் உயரமான இளநீலவர்ண வியன்னா சாரட்டை, வண்டியின் வில் சப்தம் க்ரீச்சிட, ஆறு குதிரைகள் கம்பீரமான பெரு நடையில் இழுத்து வந்துகொண்டிருந்தன. சாராட்டின் பின்னால் பரிவாரங்களும், க்ரோட்டியர்கள் கொண்ட காவல் படையும் வந்து கொண்டிருந்தன. குட்டுஜோவுக்குப் பக்கத்தில் ஒரு ஆஸ்திரியன் ஜெனரல் அமர்ந்திருந்தார். ருஷ்யர்கள் கறுப்பான சீருடை அணிவது வழக்கமாகையால், அந்த ஜெனரல் வெள்ளை சீருடையில் இருந்தது விநோதமாய் தோன்றியது. திரியன் ஜெனரலும் மெதுவான தொனியில் பேசிக்கொண்டிருந்தார்கள். குட்டுஜோவ் மெல்லிய புன்னகையோடு வண்டியில் இருந்து இறங்கினார். அவர் இறங்கிய தோரணை, அந்த இரண்டாயிரம் பேர்களும் மூச்சு விடாமல் இவரையே பார்த்துக்கொண்டிருப்பது போலவும், அந்த பட்டாளத்தில் கமாண்டர் ஒருவர் உண்டு என்பதை நினைக்காதது போலவும் காணப்பட்டது.

உத்தரவு தொனி பறந்தது. மீண்டும் அந்த பட்டாளம் படபடப்போடு துப்பாக்கிகளை மாற்றும் சப்தங்களோடு, கைகளில் துப்பாக்கிகளைத் தூக்கி நிறுத்தி மரியாதை காட்டினார்கள். அந்த நிசப்தமான வேளையில் சேனாதிபதியின் மெல்லிய குரல் கேட்டது. அந்தப் பட்டாளம் கர்ஜித்தது. 'மேன்மை தங்கியவர் நலமாய் இருப்பாராக' என்று பட்டாளம் கர்ஜித்துவிட்டு, மீண்டும் அமைதியாயிற்று. பட்டாளம் மரியாதை செய்தபோது முதலில் குட்டுஜோவ் அசையாமல் நின்றார். பின்னால் அவரும் வெள்ளை சீருடையில் இருந்த அந்த ஜெனரலும் பரிவாரங்கள் பின்தொடர, அந்த சிப்பாய்களின் வரிசைகளில் நடக்கலானார்கள்.

பட்டாளத்தின் கமாண்டர் சேனாதிபதிக்கு சலாம் அடித்து, அவரை தம் கண்களால் விழுங்கி விடுவதைப்போல ஆசையோடு பார்த்து நிமிர்ந்து நின்று மரியாதை செய்தார். ஜெனரல்களுக்குப் பின்னால் அவர் நடந்து சென்றபோது, முன்னோக்கி வளைந்து காலை இழுத்துப்போட்டு நடப்பதை அவரால் தடுக்க முடிய வில்லை. சேனாதிபதியின் ஒவ்வொரு வார்த்தையையும் ஒவ்வொரு அசைப்பையும் அறிந்துகொள்ளுவதற்காக கழுத்தை நீட்டி அவர் பின் சென்றார். இவற்றை யெல்லாம் பார்த்தால், ஒரு கமாண்டர் என்ற முறையில் தமது கடமையைச் செய்வதைவிட, ஒரு சிப்பந்தி என்ற முறையில் தமது கடமையைச் செய்வதற்கு அவருக்கு அதிகமான ஆவல் இருந்ததாகத் தோன்றியது. அவருடைய பட்டாளம், அவருடைய கண்டிப்பினாலும் கூர்மையான கவனத்தினாலும், பிராவ்னா என்ற இடத்திற்கு அச்சமயம் வந்திருந்த

பட்டாளங்களை விட, மிகச் சிறப்பான நிலைமையில் இருந்தது. அவருடைய பட்டாளத்தில் மொத்தம் காணாமல் போனவர்களோ, நோயாளிகளோ எல்லாம்சேர்த்து இருநூற்று பதினேழு பேர்தான். ஜோடுகளைத் தவிர, மற்ற எல்லாம் நல்ல நிலைமையிலேயே இருந்தன.

சிப்பாய்களின் வரிசைகள் வழியாக குட்டுஜோவ் நடந்து சென்றார். வழியில் துருக்கி யுத்தத்தில் தமக்குப் பழக்கமான அதிகாரிகளைப் பார்த்தால்,அங்கே நின்று சில இனியவார்த்தைகள் கூறுவார். அதே மாதிரி சிப்பாய்களில் பழக்கமானவர்கள் இருந்தாலும் பேசுவதுண்டு. அவர்களின் ஜோடுகளைப் பார்த்து பல தடவைகள் வருத்தத்தோடு தமது தலையை ஆட்டினார். அவைகளை ஆஸ்திரியன் ஜெனரலுக்கு சுட்டிக் காட்டினார். அவர் பேசியது யாரையும் தாம் குற்றஞ்சொல்ல விரும்பவில்லை என்பது போலவும், இருக்கிற நிலைமை எவ்வளவு மோசமாய் இருக்கிறது என்பதை கவனிக்காமல் இருப்பதற்கில்லை என்பது போலவும் இருந்தது. அம்மாதிரி சந்தர்ப்பங்களில் பட்டாளத்தைப் பற்றி சேனாதிபதி கூறுகிற வார்த்தைகளில் ஒன்றைக்கூட, கவனிக்காமல் விட்டுவிடக்கூடாதே என்ற எண்ணத்தோடு, பட்டாளத்தின் கமாண்டர் முன்னால் ஓடி ஓடிக் கேட்டுக்கொண்டிருந்தார். அவர் மெதுவாய் பேசுகிற ஒவ்வொரு வார்த்தையும் கேட்கக்கூடிய தூரத்தில் அவருடைய பரிவாரங்களில் சுமார் இருபது பேர் குட்டுஜோவுக்குப் பின்னால் வந்துகொண்டிருந்தார்கள். இந்த பரிவார கனவான்கள் தங்களுக்குள்ளேயே பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் வந்தார்கள். எல்லாரையும்விட சேனாதிபதிக்கு சமீபத்தில் நடந்து வந்தவர் ஒரு அழகான உதவியாளராகும். இவர்தான் இளவரசர் பால்கோன்ஸ்கி. அவருக்குப் பக்கத்தில் சேனாதிபதியின் பரிவார அதிகாரியான அவருடைய தோழர் நெஸ்வைட்ஸ்கி வந்தார். அவர் மிகவும் பருமனாய் இருந்தார். இரக்கமுள்ள கண்களும் அன்பான புன்முறுவலும் கொண்ட அழகிய முகமுடையராய் இருந்தார். தமக்குப் பக்கத்தில் நடந்து வந்த அழுத்தமான வர்ணமுள்ள ஒரு குதிரைப் படை அதிகாரி ஏற்படுத்தி வந்த சிரிப்புகளை நெஸ்வைட்ஸ்கியால் அடக்க முடியவில்லை. இந்தக் குதிரைப்படைஅதிகாரி ஆழ்ந்த முகபாவத்தோடு புன்னகை எதுவும் இல்லாமல், அவருடைய நிலையான கண்களின் தோற்றத்தில் மாறுதல் எதுவுமின்றி, பட்டாளக் கமாண்டரின் பின்பக்கத்தைக் கவனித்து, அவர் செய்வது போலவே கேலியாக நடித்து வந்தார். அந்தக் கமாண்டர், உடல் பதறி முன்னால் குனியும் ஒவ்வொரு தடவையும் இந்தக் குதிரைப் படை

அதிகாரியும் அதே மாதிரி உடல் பதமாக முன்னால் குனிவார். நெஸ்வைட்ஸ்கி தாம் சிரித்ததுமல்லாமல், அந்தக் கோமாளியைக் கவனிக்கும்படி மற்றவர்களை முழங்கையால் இடித்துத் தூண்டியும் வந்தார்.

குட்டுஜோன் மெதுவாகவும் அமைதியாகவும் நடந்து, தங்கள் தலைவரை விழி பிதுங்கும்படி பார்த்துக்கொண்டிருந்த ஆயிரக் கணக்கான கண்களைக் கடந்து சென்றார். மூன்றாவது கம்பெனியிடம் அவர் நெருங்கியதும் திடீரென்று நின்றார். அவருடைய பரிவாரங்கள் இதை எதிர்பார்த்தபடியால்,அவர்கள் நடந்து வந்த வேகம் சேனாதிபதிக்கு சமீபத்தில் கொண்டு வந்துவிட்டது.

'ஆ, டிமோகின்' என்று பெரிய நீலக்கோட்டிற்காக கண்டனம் செய்யப்பட்ட சிவந்த மூக்குடைய கேப்டனைப் பார்த்ததும், அடையாளம் தெரிந்துகொண்டு பேசினார்.

பட்டாளத்தின்ன கமாண்டர் கண்டித்தபோது டிமோகின் தம்மை எவ்வளவு விறைப்பாகச் செய்ய முடியுமோ அவ்வளவும் செய்தார். அதற்கு மேலாக அவர் செய்ய முடியுமென்று ஒருவரும் நினைத்திருக்க முடியாது. இப்பொழுது சேனாதிபதி அவரிடம் பேசியதும் அவர் இன்னமும் அவரைப் பார்த்துக்கொண்டிருப் பாரானால், அந்த அதிகாரி தம்முடைய விறைப்பை நீடித்துச் செய்ய முடியாது என்பதை குட்டுஜோவ் உணர்ந்தார். அவருக்கு நன்மையைத் தவிர வேறு எதையும் குட்டுஜோவ் செய்ய நினனத்தவரல்ல. ஆகவே வேகமாய் அவர் பார்வையிலிருந்து திரும்பினார். அச்சமயம் குட்டுஜோவின் தழும்புள்ள கொழுத்த முகத்தில் ஒரு மெல்லிய புன்னகை படர்ந்தது.

'இஸ்மெயில் என்ற யுத்த களத்தில் ஒன்றாய் இருந்த தோழர்களில் ஒருவர், ஒரு தீரமான அதிகாரி. அவரைப் பற்றி உமக்குத் திருப்திதானா?' என்று பட்டாளத் தளபதியிடம் சேனாதிபதி கேட்டார்.

தம்மை குதிரைப் படை அதிகாரி பின்னால் கேலி செய்து கொண்டு வருவதை அறியாத கமாண்டர் பதறி, முன்னால் குனிந்து பதில் அளித்தார்:-- 'மிகுந்த திருப்திதான், மேன்மை தங்கியவரே.'

'நம் எல்லாருக்கும் - ஒவ்வொருவருக்கும் ஒரு குறை இருக்கத்தான் செய்யும்' என்று குட்டுஜோவ் புன்னகையோடு சொல்லி அவரிடமிருந்து மேலே நடந்தார். 'அவர் மது தேவதையிடம் தனி அபிமானம் கொண்டிருந்தார்.'

இதற்காக தம்மை எங்கு கோபித்துக்கொள்ளப் போகிறாரோ என்று பயந்த கமாண்டர் பதில் பேசவில்லை. அந்த வினாடியில் குதிரைப் படை அதிகாரி அந்த சிவந்த மூக்குள்ள கேப்டனின் முகத்தையும் அவருடைய ஒட்டிய வயிற்றையும் பார்த்து, அதேமாதிரி தோற்றத்தையும் உருவ நிலையையும் கேலியாகக் காட்டி நடித்தார். நெஸ்வைட்ஸ்கியால் சிரிப்பை அடக்க முடியவில்லை. குட்டுஜோவ் திரும்பிப் பார்த்தார். அந்த அதிகாரிக்கு தமது முகபாவங்களை அடக்கி ஆளுவதில் பூரண ஆதிக்கம் இருந்ததாய் தோன்றியது. ஏனெனில், குட்டுஜோம் திரும்பியவுடன் அவருடைய முகச்சுழிப்புகள் திடீரென்று மறைந்து,அவருடைய முகத்தில் ஆழ்ந்த, மரியாதையான, களங்கமில்லாத தோற்றம் விளங்கியது.

மூன்றாவது கம்பெனிதான் கடைசியாகப் பார்வையிடப்பட வேண்டியது. எதையோ ஞாபகப்படுத்திக்கொள்ள விரும்பியவர் போல குட்டுஜோவ் சிந்தனை செய்தார். உடனே பரிவாரத்தில் இருந்த இளவரசர் ஆண்ட்ரூ முன்னால் அடியெடுத்து வைத்து மெதுவாக பிரஞ்சு மொழியில் பேசினார். ‘டோலாகாவ் என்ற அதிகாரியை இந்தப் பட்டாளத்தில் சாதாரண சிப்பாயாக மாறும்படி தண்டனை கொடுத்ததைப் பற்றி உங்களுக்கு ஞாபகமூட்டும்படி என்னிடம் சொன்னீர்கள்.’

‘டோலாகாவ் எங்கே? என்றார் குட்டுஜோவ்.

சிப்பாய்களின் சாம்பல் வர்ண பெரிய கோட்டை அணிந்து கொண்டிருந்த டோலாகாவ் தம்மை அழைக்கிற வரையில் காத்து நிற்கவில்லை. அழகான தலை மயிரும் தெளிவான நீலக் கண்களும் கொண்ட அந்த அழகிய சிப்பாய் படை வரிசையிலிருந்து முன்னால் அடியெடுத்து வைத்து, சேனாதிபதியிடம் சென்று சலாம் அடித்தார்.

‘உமக்கு ஏதாவது புகார் இருக்கிறதா’ என்று குட்டுஜோவ் இலேசான முகச்சுளிப்போடு கேட்டார்.

‘ஆ!’ என்றார் குட்டுஜோவ். ‘இது உமக்கு ஒரு பாடமாய் இருக்குமென்று நம்புகிறேன். உமது கடமையைச் செய்யும். சக்கரவர்த்தி தயாளமுள்ளவர். நீர் தகுதியுள்ளவராக நடந்து கொண்டால் நான் உன்னை மறக்கமாட்டேன்.’

அந்த நீலக் கண்கள் பட்டாளக் கமாண்டரைப் பார்த்தது போலவே, தைரியமாக சேனாதிபதியையும் பார்த்தன. ஒரு சிப்பாயையும் சேனாதிபதியையும் பிரித்து வைக்கும் சம்பிரதாயம் என்ற அந்தப் படுதாவை கிழித்துத் திறக்க விரும்புவதைப்போல, அந்தத் தோற்றம் காணப்பட்டது.

'மேன்மை தங்கியவரே, ஒரு விஷயத்தை உங்களிடம் கேட்கிறேன்' என்று டோலாகாவ் தமது உறுதியான,துணிவான, கணீரென்ற தொனியில் பேசினார். 'எனது குற்றத்திற்குப் பரிகாரம் தேடுவதற்கும், மாட்சிமை தங்கிய சக்கரவர்த்திக்கும் ருஷ்யாவுக்கு எனக்குள்ள பக்தியைக் காட்டுவதற்கும் ஒரு சந்தர்ப்பம் கொடுக்கும்படி கேட்கிறேன்.'

குட்டுஜோவ் திரும்பிக்கொண்டார். காப்டன் டிமோகினிடமிருந்து அவர் பிரிந்தபோது அவருடைய கண்களில் தோன்றிய அதே புன்முறுவல், இப்பொழுதும் அவர் முகத்தில் படர்ந்தது. டோலாகாவ் ஒவ்வொன்றையும் தம்மிடம் சொல்லிவிட்டது போலவும், அவர் சொல்ல விரும்பும் ஒவ்வொன்றையும் தாம் முன்பே அறிந்திருப்பது போலவும்,அதனால் அலுத்துப் போய் விட்டது போலவும் தமக்கு வேண்டியது அது அல்லவே அல்லவென்றும் அவர் கூறுவது பேல,முகச்சுளிப்போடு திரும்பிய அவரது முகம் காட்டியது. அவர் திரும்பி தமது வண்டிக்குப் போனார்.

பட்டாளம் கலைந்து கம்பெனிகளாக மாறி பிராவ்னாவுக்குப் பக்கத்தில் அமைக்கப்படடிருந்த முகாமிற்கு அந்த கம்பெனிகள் போயின. தங்கள் கடினமான பிரயாணத்திற்குப் பின்னால், அங்கே ஜோடுகளும் உடைகளும்பெற்று ஓய்வு கொள்ளலாம் என்று சிப்பாய்கள் நம்பினார்கள்.

'என் மீது உமக்குக் கோபம் இல்லையே, பிராக்கோர் இக்னாடிச்?' என்றார் பட்டாளத்தின் கமாண்டர். மூன்றாவது கம்பெனிக்கு தலைமை வகித்து, கேப்டன் டிமோகின் அதை முகாமிற்கு அழைத்துச் சென்றுகொண்டிருந்தார். குதிரை மீது ஏறிப்போன பட்டாளத்தின் கமாண்டர் அவரைச் சந்தித்து, மேலே சொன்னபடி கேட்டார். அணிவகுப்புப் பார்வையிடல் சந்தோஷத்துடன் முடிந்துவிட்டபடியால், பட்டாளக் கமாண்டரின் முகம் அடக்க முடியாத களிப்போடு பிரகாசித்தது. 'இது சக்கரவர்த்தியின் சேவையில்... அதைத் தவிர்க்க முடியாது... அணிவகுப்பில் சில சமயம் ஒவ்வொருவர் அவசரப்பட்டு நடப்பதுண்டு... உம்மிடம் மன்னிப்பு கேட்பதற்கு நான் முதலாவதாக வருகிறேன். என்னை உமக்குத் தெரியும்... அவர் மிகவும் திருப்தி அடைந்தார்'. பின்னால் தமது கையை கேப்டனிடம் நீட்டினார்.

'அதைக் குறிப்பிட வேண்டாம், ஜெனரல். அப்படியெல்லாம் நான் ஒன்றும் தைரியமானவன் அல்ல' என்றார் கேப்டன். அவர் புன்னகை செய்தபோது அவருடைய மூக்கு சிவந்தது. இஸ்மெயில்

யுத்த களத்தில் துப்பாக்கிக் கட்டையால் அவர் அடிபட்டபோது, இரண்டு பற்கள் காணாமல் போனதை அவருடைய புன்சிரிப்பு வெளிப்படுத்தியது.

'நான் அவரை மறக்க மாட்டேன் என்றும் அவர் மனக்கவலை இல்லாமல் இருக்கலாம் என்றும் திருவாளர் டோலாகாவிடம் கூறும். நான் ஒன்று கேட்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அவர் எப்படி நடந்துகொள்ளுகிறார் என்பதை தயவு செய்து சொல்லும். பொதுவாக...'

'ராணுவ சேவையைப் பொறுத்தவரையில் அவர் ரொம்பவும் ஒழுங்காய் நடந்துகொள்ளுகிறார், மேன்மை தங்கியவரே. அவருடைய ஒழுக்கம்...' என்றார் டிமோகின்.

'அவருடைய ஒழுக்கத்தைப் பற்றி என்ன?' என்று கேட்டார், பட்டாளக் கமாண்டர்.

'வெவ்வேறு நாட்களில் வெவ்வேறு விதமாய் இருக்கும்' என்று பதில் அளித்தார், கேப்டன். 'ஒரு நாள் புத்திசாலித்தனமாக, நல்லபடித்தவராக, நல்ல போக்குள்ளவராக இருக்கிறார். அடுத்த நாள் காட்டு மிருகமாகத் தோன்றுகிறார்... போலத்தில் ஒரு யூதரை உயிர் போகிற மாதிரி அடித்து விட்டார்.'

'சரி, சரி' என்றார் பட்டாளக் கமாண்டர். 'இருந்தாலும் கஷ்டத்திலிருக்கும் ஒரு வாலிபனிடம் ஒருவர் இரக்கமே காட்டவேண்டும். அவருக்கு முக்கியமான தொடர்புகள் இருக்கிறது என்பத உமக்குத் தெரியும்... அப்படியிருக்கும்போது, நீர்...'

'நான் அப்படியே செய்கிறேன்,மேன்மை தங்கியவரே' என்று கமாண்டரின் கருத்தை அறிந்துகொண்டவர்போல புன்முறுவல் காட்டி டிமோகின் சொன்னார்.

'நல்லது,அப்படியே, அப்படியே.'

பட்டாளத்துக் கமாண்டர் சிப்பாய்களின் வரிசையில் டோலாகாவைக் கண்டுபிடித்து, குதிரையை நிறுத்தி அவரிடம் பேசினார். 'அடுத்த சம்பவத்திற்குப் பின்னால்... வாகுவலையம்.'

டோலாகாவ் சுற்றிலும் பார்த்தார். ஆனால் ஒன்றும் சொல்ல வில்லை. அவருடைய உதடுகளில் தொங்கிய இகழ்ச்சியான புன் சிரிப்பும் மாறவில்லை.

'நல்லது, எல்லாம் சரியாய் இருக்கிறது' என்று தொடர்ந்தார், பட்டாளக் கமாண்டர். 'ஒவ்வொரு சிப்பாய்க்கும் ஒரு கோப்பை வாட்கா (மது) கிடைக்கும்' என்று அவர் சிப்பாய்களுக்குக் கேட்குமாறு சொன்னார். 'உங்கள் எல்லாருக்கும் வந்தனம்.

கடவுளுக்கு நன்றி' என்று சொல்லி அந்தக் கம்பெனியைக் கடந்து,அடுத்தக் கம்பெனிக்கு குதிரை மீது போனார்.

'நல்லது, அவர் உண்மையிலேயே ஒரு நல்ல பேர்வழி. அவரிடம் ஒருவர் பணியாற்ற முடியும்' என்று டிமோகின் தமது பக்கத்தில் இருந்த கீழ் அதிகாரியிடம் கூறினார். (அந்தப் பட்டாளக் கமாண்டருக்கு ஆடுதன் ராஜா என்று கேலிப் பெயர் உண்டு.)

பார்வையிடலுக்குப் பின்னால் அதிகாரிகளிடம் காணப்பட்ட உற்சாகமான சுபாவம் சிப்பாய்களுக்கும் பரவியது. சந்தோஷத்தோடு கம்பெனி நடந்து சென்றது. எல்லா திசைகளிலும் சிப்பாய்களின் குரல்கள் கேட்டுக்கொண்டிருந்தன.

'குட்டுஜோவுக்கு ஒரு கண் குருடு என்று சொல்லுகிறார்களே.'

'அப்படியேதான். முழுக் குருடு.'

'இல்லை, நண்பரே, உமது பார்வையை விட தீட்சண்யமான பார்வை அவருக்குண்டு. ஜோடுகளும் (கால் உறைகளுக்குப் பதிலாக ருஷ்ய சிப்பாய்கள் கால்களில் நீண்ட துணிகளைச் சுற்றிக்கொள்ளுவார்கள்.) கால் பட்டிகளும்...எல்லாவற்றையும் அவர் கவனித்தார்...'

'அவருடன் இருந்தாரே இன்னொருவர், அந்த ஆஸ்திரியன் அவர் தம் உடம்பெல்லாம் வெண் பொடியை பூசிக்கொண்டிருந்ததைப் போலக் காணப்பட்டார். மாவைப் போன்ற வெள்ளை. துப்பாக்கிகளை பாலிஷ் செய்வதைப்போல அவரையும் அவர்கள் பாலிஷ் செய்வார்கள் என்று நினைக்கிறேன்.

'நான் கேட்கிறேன், பெடிஷான்... யுத்தங்கள் எப்பொழுது ஆரம்பமாகப் போகின்றன என்பதை அவர் சொன்னாரா? நீ அவருக்குப் பக்கத்தில் இருந்தாயே. போனபார்ட் பிராவ்னாவில் இருப்பதாக ஒவ்வொருவரும் சொல்லுகிறார்களே.'

'போனபார்ட்டா?... இந்த முட்டாள் சொல்வதைக் கேளுங்கள்... அவனுக்குத் தெரியாதவிஷயம். பிரஷ்யர்கள் இப்பொழுது போர்க்கோலம் புண்டுவிட்டார்கள். திரியர்கள் அவர்களை அடக்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை அடக்கி முடிந்ததும் போனபார்ட்டோடு யுத்தம் ஆரம்பமாகும். இவன் பிராவ்னாவில் போனபார்ட் இருப்பதாகச் சொல்லுகிறான். நீ ஒரு முட்டாள் என்பதை அது காட்டுகிறது. மிகுந்த ஜாக்கிரதையோடு நீ கவனிப்பது நல்லது.'

'இந்தப் படை வீட்டு அதிகாரிகள் எம்மாதிரியான பிசாசுகள் ¬ன்பதைப் பாருங்கள். ஐந்தாவது பட்டாளம் அதற்குள்ளாக

கிராமத்திற்குள் நுழைந்து விட்டது. நம்முடைய முகாமிற்கு தயாராகிவிடும்?'

'எனக்கு ஒரு பிஸ்கட் கொடு, ஏ, பிசாசே'.

'எனக்கு நேற்று நீ புகையிலை கொடுத்தாயா? அதுதான் நண்பனே. சரி, பாதகமில்லை. இதோ இந்தா...'

'இங்கே நம்மை நிற்கச் சொன்னாலும் சொல்லுவார்கள். அல்லது சாப்பிடுவற்கு முன்னால், இன்னும் நான்கு மைல் நடக்க வேண்டியிருக்கலாம்.'

'அந்த ஜெர்மனியர்கள் நமக்கு வாகனங்கள் கொடுத்தால், அது எவ்வளவு நன்றாய் இருக்கும்! நீ பேசாமல் அதில் இருக்க வேண்டியதுதான். அது தானாகவே இழுத்துக்கொண்டு போகும்.'

'இங்கே மக்களெல்லாம் பிச்சைக்காரத்தனமாய் இருக்கிறார்கள், நண்பனே. அங்கே எல்லாரும் ருஷ்யாவின் ஆட்சிக்குட்பட்ட போலந்துக்காரர்களாய்த் தோன்றினார்கள். ஆனால் இங்கே எல்லாரும்ஜெர்மனியர்கள்.'

'பாடகர்கள் எல்லாம் முன்னால் போங்கள்' என்று கேப்டன் உத்தரவிட்டார்.

வெவ்வேறு வரிசைகளிலிருந்து இருபது பேர்கள் முன்னால் ஓடினார்கள். ஒரு பாண்டுக்காரனும் அவர்களின் தலைவரும் பின்னால் திரும்பி பாடகர்களைப் பார்த்து, கையை வீசி ஒரு நிளமான சிப்பாய்களின் பாட்டை ஆரம்பித்தார்கள். 'பொழுது விடிந்தது; சூரியன் மேலே வந்துகொண்டிருக்கிறான்' என்று பாட்டு ஆரம்பமாகி, 'மேலே செல்லுங்கள், சகோதர்களே; புகழை நோக்கிச் செல்லுங்கள். நமது தந்தை காமென்ஸ்கி தலைமையில் செல்லுங்கள்' என்று பாட்டு முடிந்தது. துருக்கியில் நடந்த யுத்த சமயத்தில் இந்தப் பாட்டு கட்டப்பட்டது. இப்பொழுதும் ஆஸ்திரியாவில் இது பாடப்பட்டு வருகிறது. அதில் ஒரே ஒரு மாறுதலைச் செய்திருந்தார்கள். அதாவது, 'தந்தை காமென்ஸ்கி' என்பதற்குப் பதிலாக, 'தந்தை குட்டுஜோவ்' என்று மாற்றி யிருந்தார்கள்.

பாட்டின் கடைசி வார்த்தைகளை சிப்பாய்கள் சொல்லுவது போல சொல்லிவிட்டு, அந்த பாண்டுக்காரன் தரையில் எதையோ வீசுவதுபோல, தன் கையைப் பலமாய் வீசினான். அழகாய் இருந்த அவனுக்கு நாற்பது வயதிருக்கும். கடுமையோடு பாடகர்களைப் பார்த்து கண்களைஇடுக்கினான். எல்லாருடைய கண்களும் தன் மீது பதிந்திருக்கின்றன என்பதை கவனமாய் தெரிந்துகொண்ட பின்பு ஏதோ கண்ணுக்குத் தெரியாத அருமையான ஒன்றை, தலைக்கு

மேலாக தூக்குவதைப் போல இரண்டு கைகளையும் மேலே உயர்த்தி,சில வினாடிகள் அப்படியே வைத்திருந்து, திடீரென்று கைகளைக் கீழே வீசி ஆரம்பித்தான். 'ஓ, எனது வீடு, ஓ, எனது வீடு...' என்று பாடினான்.

'ஓ, எனது வீடு...' என்

இருபது குரல்கள் அந்தப் பாட்டைப் பாடின. காஸ்டானெட் என்ற இரட்டைக் குரல் வாத்தியம் வாசிப்பவன் வரிசையை விட்டு முன்னால் ஓடிவந்தான். தனது சாமான்களின் சுமையையும் கவனிக்காமல், கம்பெனியின் முன்பாக அவன் பின்னோக்கி நடந்து தோள்களை குலுக்கிக்கொண்டு யாரையோ பயமுறுத்துவதுபோல, தன்னுடைய காஸ்டானெட் வாத்தியத்தை வீசி ஆட்டிக்கொண்டு இருந்தான். சிப்பாய்கள் கைளை ஆட்டி, தவறாமல் தாளம் போட்டு, நீண்ட நடைபோட்டு நடந்துகொண்டிருந்தார்கள். கம்பெனிக்குப் பின்னால் வண்டிச் சக்கரங்களின் சப்தமும் வில்களின் க்ரீச் சப்தமும் குதிரைகளின் குளம்பு ஓசையும் கேட்டன. அவருடைய பரிவாரமும் நகரத்திற்குத் திரும்பிக்கொண்டிருந்தார்கள். சேனாதிபதியும் அவருடைய பரிவாரமும், சிப்பாய்களின் பாட்டையும், ஒருவன் ஆடிக்கொண்டிருந்த ஆட்டத்தையும், சந்தோஷமாக அவர்கள் நடந்துபோவதையும் கண்டு தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். கூச்சமில்லாமல் அவர்கள் அம்மாதிரியே செய்துகொண்டு போகட்டுமென்று சேனாதிபதி சைகை காட்டினார். வலப் பக்கமுள்ள இரண்டாவது வரிசையில் இருந்த ஒரு நீலக் கண் கொண்ட சிப்பாயை, சேனாதிபதியின் வண்டி அப்பக்கமாகப் போகும்போது, கவனிக்க நேரிட்டது. அவர்தான் டோலாகாவ். விசேஷமான ஒயிலுடனும் தைரியத்துடனும் பாட்டுக்குத் தக்க தாளம்போட்டு அந்த வண்டியில் போகிறவர்களைப் பார்த்தார். அவர் பார்த்த பார்வையானது, அந்தக் கம்பெனியோடு அச்சமயம் அவர்களும் நடந்து வர கொடுத்து வைக்கவில்லையே என்று பரிதாபப்படுவது போல் இருந்தது. முன்னால் பட்டாளக் கமாண்டரைக் கேலி செய்து நடித்துக் காட்டிய, குட்டுஜோவ் பரிவாரத்தைச் சேர்ந்த அந்தக் குதிரைப் படை அதிகாரி, வண்டிக்குப் பின்னால் சவாரி செய்வதிலிருந்து கொஞ்சம் பின்தங்கி டோலாகாவிடம் நெருங்கினார்.

குதிரைப் படை அதிகாரி ஜெர்கோவ், ஒரு சமயம் பீட்டர்ஸ் பர்க்கில் இருந்தபோது, டோலாகாவின் தறிதலைக் கூட்டத்தில் சேர்ந்திருந்தார். டோலாகாவை வெளிநாட்டில் அவர் முன்னால் பார்த்தபோது,அவரைத் தெரிந்துகொண்டதாகக் காட்டிக்கொள்ளப் பிரியப்படவில்லை. இப்பொழுது குட்டுஜோவ் அந்த

கனவான்-சிப்பாயிடம் பேசியதால், இவரும் பழைய நண்பர் என்ற நட்போடு பேச ஆரம்பித்தார்.

'எனது அன்பான பேர்வழியே. நீர் எப்படி இருக்கிறீர்?' என்று பாட்டு சப்தத்திற்கிடையே, தமது குதிரையை கம்பெனி நடக்கும் வேகத்தில் நடத்திக்கொண்டு கேட்டார்.

'நான் எப்படி இருக்கிறேனா?' என்று இனிமையற்ற குரலில் டோலாகாவ் பதிலளித்தார். 'நீர் பார்க்கிறபடிதான் நான் இருக்கிறேன்!'

அந்த இனிமையான கீதம் ஜெர்கோவின் சரளமான, கனிப்பான பேச்சுக்கும், வேண்டுமென்று கனிவற்ற தன்மையில் டோலாகாவ் கொடுத்த பதிலுக்கும் தாளம் போடுவதுபோல் இருந்தது.

'அதிகாரிகளுடன் நீர் எப்படி நடந்துகொள்ளுகிறீர்?' என்று கேட்டார் ஜெர்கோவ்.

'ரொம்ப சரியாய். அவர்கள் நல்ல ஆசாமிகள். நீர் எப்படி சேனாதிபதியின் பரிவாளத்தில் நெளிந்து நுழைந்து விட்டீர்?'

'என்னை அந்தப் பிரிவில் சேர்த்திருக்கிறார்கள். நான் இப்பொழுது உத்தியோக முறையில் இருக்கிறேன்.'

இருவரும் மௌனமானார்கள்.

'தனது அகலமான சட்டைக் கையிலிருந்து ராஜாளியை அவள் மேலே பறக்கவிட்டாள்' என்று அந்தப் பாட்டில் ஒருஅடி வந்தது. அந்தப் பாட்டு தைரிய உற்சாக உணர்ச்சிகளைத் தாமாகத் தோன்றும்படி செய்தன. அச்சமயத்தில் அந்த அடி பாடப்படாமல் இருந்திருந்தால், இவர்களுடைய உரையாடல் ஒரு வேளை வேறு விதமாய் இருந்திருக்கும்.

'ஆஸ்திரியர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள் என்பது உண்மை தானா?' என்று டோலாகாவ் கேட்டார்.

'பிசாசுக்குத்தான் அது தெரியும். அவர்கள் அம்மாதிரி பேசிக் கொள்ளுகிறார்கள்.'

'எனக்கு சந்தோஷம்' என்று அந்தப் பாட்டுக்குத் தகுந்தபடி சுருக்கமாகவும் தெளிவாகவும் டோலாகாவ் பதிலளித்தார்.

'எப்பொழுதாவது மாலை வேளையில் வாரும். சீட்டாட்டம் போடலாம்' என்றார் ஜெர்கோவ்.

'ஏன், உம்மிடம் பணம் அதிகமாய் இருக்கிறதா?'

'வா என்றால் வா.'

'என்னால் முடியாது. அப்படிச் செய்வதில்லை என்று நான் சத்தியம் செய்திருக்கிறேன். தாழ்த்தப்பட்ட என்னுடைய

பதவியிலிருந்து, மறுபடியும் என்னுடைய பழைய பதவியில் அமர்த்தப்படும் வரையில், நான் விளையாடவோ குடிக்கவோ மாட்டேன்.'

'நல்லது, அதெல்லாம் முதல் சண்டையில் கலந்துகொள்ளுகிற வரையில்தானே?'

'நாம் பார்க்கலாம்.'

அவர்கள் மீண்டும் மௌனமானார்கள்.

'உமக்கு ஏதாவது தேவையிருந்தால் என்னிடம் வாரும். சேனாதிபதியின் பரிவாரத்தில் இருக்கிறவர்கள், குறைந்தபட்சம் ஏதாவது உதவியாய் இருப்பார்கள்.'

டோலாகாவ் முறுவலித்தார். 'உமக்கு சிரமம் வேண்டாம். எனக்கு ஏதாவது தேவையிருந்தால் நான் கெஞ்சமாட்டேன் - நான் எடுத்துக் கொள்ளுவேன்.'

'நல்லது, அதைப் பற்றி ஒன்றும் நினைக்க வேண்டாம். நான் சும்மா...'

'நானும் சும்மா...'

'போய் வருகிறேன்.'

'நலமாய் இருங்கள்'

'என்னுடைய சொந்த நாட்டிற்கு அந்த வழி நீளமானது; வெகு நீளமானது' என்ற பாட்டு முழங்கியது.

ஜெர்கோவ் தமது பூட்ஸில் உள்ள தார் சக்கரத்தால் குதிரையைக் குத்தினார். எந்தக் காலை முதலில் எடுத்து வைப்பது என்று தெரியாமல், குதிரை முதலில் துள்ளி, பின்னால் அமைதி அடைந்து சங்கீத்தின் தாளத்திற்குத் தக்கபடி தாளத்தை விடாமல் நாற்கால் பாய்ச்சலில் ஓடி கம்பெனியைத் தாண்டி வண்டியை அடைந்தது.



துருப்புகளை பார்வையிட்டு விட்டுத் திரும்பிய பின்பு குட்டுஜோவ், ஆஸ்திரியன் ஜெனரலை தமது தனி அறைக்கு அழைத்துக் கொண்டு போனார். தமது உதவியாளரை அழைத்து, அப்பொழுதுதான் வந்து சேர்ந்த துருப்புகளின் நிலைமையக் கூறும் தஸ்தாவேஜுகளையும், முன்னால் சென்றிருந்த ராணுவத்தின் தளபதியான ஆர்க் டியூக் பெர்டினாண்ட்டிடமிருந்து வந்த கடிதங்களையும் கொண்டு வரும்படி கூறினார். இளவரசர் ஆண்ட்ரூ பால்கோன்ஸ்கி,

சேனாதிபதி கேட்ட தஸ்தாவேஜுகளோடு அறைக்குள் நுழைந்தார். ஆஸ்திரிய யுத்த சபையின் அங்கத்தினரும் சேனாதிபதியும் ஒரு மேஜை முன்பு அமர்ந்து இருந்தார்கள். அந்த மேஜை மீது ஒரு படம் விரிக்கப்பட்டிருந்தது.

'ஆ' என்று குட்டுஜோவ் பால்கோன்ஸ்கியைப் பார்த்ததும் சொன்னார். அவர் அப்படிச் சொல்லியது, பால்கோன்ஸ்கியை அங்கேயே காத்திருக்கும்படி சொல்லுவதுபோல் இருந்தது. பின்னால் ஜெனரலோடு பிரஞ்சு மொழியில் தொடர்ந்து பேசினார்.

இனிமையான எடுப்பான வார்த்தைகளில், ஒவ்வொரு வார்த்தையையும் கவனித்துக் கேட்கும்படியான உச்சரிப்போடும் குட்டுஜோவ் பேசினார். தம்முடைய குரலையே தாம் மகிழ்ச்சி யோடு கேட்பதுபோலத் தோன்றியது. அவர் சொன்னார்:-'நான் சொல்வதெல்லாம் இதுதான், ஜெனரல். என்னுடைய பிரியப்படி செய்யக் கூடிய விஷயமாக இது இருக்குமானால், சக்கரவர்த்தி பிரான்சிஸின் ஆசை வெகு காலத்திற்கு முன்பே பூர்த்தி அடைந்திருக்கும். ஆர்க்டியூக்கின் சேவையில் நான் முன்பே சேர்ந்திருப்பேன். என்னுடைய நாணயத்தின் பேரால்,நான் சொல்லுவதை நம்புங்கள். ராணுவத்தின் அதி உயர்ந்த தலைமைப் பதவியையும், இந்த மகா பெரிய பொறுப்புகளையும் அவரிடம் அளிப்பதில் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியாய் இருக்கும். அவரைவிட அதிகமாய் விஷயம் அறிந்த சாமர்த்தியமானவேறு ஜெனரலைக் காண முடியாது. (ஆனால் ஆஸ்திரியாவில் அவர் மாதிரி பலர் இருக்கிறார்கள்.) ஆனால், ஜெனரல், சில சமயங்களில் சந்தர்ப்பங்கள் நம்மால் சமாளிக்க முடியாமல் கடுமை யானவையாய் இருக்கின்றன.'

குட்டுஜோவ் புன்னகை செய்தார். அவருடைய சிரிப்பு 'நான் சொல்லுவதை நம்பாமல் இருக்க உனக்கு பூரண உரிமை உண்டு. நீர் நம்புகிறீரா, நம்பவில்லையா என்பதைப் பற்றியும் எனக்குக் கவலையில்லை. ஆனால் நீர் நம்பவில்லை என்று சொல்லுவதற்கு உமக்கு ஆதாரமும் கிடையாது. அதுதான் முக்கியமான விஷயம்' என்று சொல்லுவதைப் போல் இருந்தது.

ஆஸ்திரியன் ஜெனரல் அதிருப்தி அடைந்தவராய்த் தோன்றினார். ஆனால், அதே தொனியில் பதில் சொல்லுவதைத் தவிர, அவருக்கு வேறு வழியில்லை.

அவர் எரிச்சலோடும் கோபத்தோடும் பேசினார். ஆனால் அவருடைய புகழ்ச்சியான வார்த்தைகளுக்கு அவை பொருத்த மில்லாதவையாய் தோன்றின. 'உங்களைப் பற்றி நீங்கள்

சொல்லுவது போல் அல்ல. மேன்மைதங்கிய நீங்கள், இந்தக் கூட்டு நடவடிக்கையில் கலந்து கொள்ளுவதை சக்கரவர்த்தி மிகவும் உயர்வாய் நினைக்கிறார். சிலாக்கியமான ருஷ்யத் துருப்பு களினுடையவும் அவர்களின் தளபதியினுடையவும் வெற்றி மாலைகளை - அவர்கள் யுத்தங்களில் வழக்கமாய் பெற்றுவரும் இந்த வெற்றி மாலைகளை, தற்சமயம் அவர்கள் பெறமுடியாதபடி இந்தத் தாமதம் தடுக்கிறது என்று நாங்கள் நினைக்கிறோம்' என்று முன்னால் தயாராக்கி வைத்திருந்த வாக்கியத்தை சொல்லுவதை போல அவர் பேசி முடித்தார்.

அதே புன்னகையோடு குட்டுஜோவ் குனிந்து வணங்கினார்.

'ஆனால், என்னுடைய நம்பிக்கை அதுதான். ஆர்க் டியூக் பெர்டினாண்ட் எனக்கு எழுதி மரியாதை காட்டிய அவருடைய கடைசிக் கடிதத்தைக் கொண்டு பார்ப்போமானால், மிகுந்த ஜெனரல் மாக்கின் தலைமையில் உள்ள அந்த ஆஸ்திரிய துருப்புகள், இதற்குள்ளாக ஒரு நிச்சயமான வெற்றியை பெற்றிருப்பார்கள் என்றும், எங்களுடைய உதவி அவர்களுக்கு அவசியமில்லை என்றும் நான் நினைக்கிறேன்' என்றார் குட்டுஜோவ்.

அந்த ஆஸ்திரிய ஜெனரல் முகத்தைச் சுளித்தார். ஆஸ்திரியர்கள் தோற்றுப்போனார்கள் என்ற நிச்சயமான செய்தி எதுவும் வரவில்லை. ஆனால், அம்மாதிரியான வதந்திகளை உறுதிப் படுத்துவதற்குப் போதுமான சூழ்நிலைகள் பல இருந்தன. ஆகவே, ஆஸ்திரிய துருப்புகள் வெற்றி அடைந்தது போல குட்டுஜோவ் பேசியது, பரிகாசம் செய்வதைப் போலவே இருந்தது. ஆனால் குட்டுஜோவ் மரியாதையாக புன்னகை செய்து, அதே தோற்றத்தில் பேசிக்கொண்டிருந்தபடியால், ஆஸ்திரிய துருப்புகள் வெற்றி யடைந்ததாக நாம் நினைப்பதற்குக் காரணம் இருப்பதுபோலத் தோன்றியது. மாக்கின் சேனையிலிருந்து அவருக்குக் கடைசியாகக் கிடைத்த கடிதத்தில், அந்த ராணுவம் மிகுந்த சாதகமான முக்கிய ஸ்தானத்தில் இருப்பது போலவும், அதனால் வெற்றி என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது.

'அந்தக் கடிதத்தை இங்கே கொடும்' என்று இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்து, குட்டுஜோவ் கேட்டார். 'இதைப் படித்துப் பாருங்கள்' என்று தம்முடைய கடைவாயில் கேலிப்புன்னகை மிளிர ஆர்க்டியூக் பெர்டினாண்டின் கடிதத்திலுள்ள பின்கண்ட பகுதியை ஜெர்மன் மொழியில் ஆஸ்திரிய ஜெனரலுக்குப் படித்துக் காட்டினார்:

'எதிரி லெச் நதியை கடப்பானானால்,அவனைத் தாக்கி முறியடிப்பதற்கு அநேகமாய் எழுபதாயிரம் வீரர்களை நாங்கள் குவித்து வைத்திருக்கிறோம். உல்ம் எங்களிடம்தான் இருக்கிறது. ஆகையினால் டான்யூப் நதியின் இரு கரைகளையும் உபயோகிக்கும் வசதி நம்மிடமே இருக்கிறது. எதிரி லெச்சைக் கடக்காவிட்டால், நாம் டான்யூப்பைக் கடந்து, அவனுடைய சப்ளை வசதிகளைத் துண்டுபடுத்தி, மீண்டும் நதியின் கீழ்ப்பாகத்தில் அதை நாம் கடந்து வந்துவிடலாம். அதன் மூலம் நமது நம்பிக்கையான நேச நாட்டின் மீது அவன் தாக்குதல் நடத்த முடியாதபடி தடுத்துவிடலாம். ஆகவே, பூரணமாய் தளவாடங்கள் கொண்ட இம்பீரியல் ருஷ்ய சேனையை நாங்கள் நம்பிக்கையோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறோம். அப்புறம் அவர்களின் உதவியோடு கூடி, எதிரி என்ன கதியை அடையவேண்டுமோ, அதை அவன் அடைய சுலபமாக வழியைத் தயார் செய்து விடுவோம்.'

இந்தக் கடைசி பாராவை வாசித்ததும் யுத்த சபை அங்கத்தினரை சாந்தமாகக் கூர்ந்து கவனித்து குட்டுஜோவ் ஆழ்ந்த பெரு மூச்சுவிட்டார்.

'மேன்மை தங்கியவரே, அந்த அறிவு மிகுந்த பழமொழி உங்ளுக்குத் தெரியுமே, அதுதான்: ''மகாப் பெரிய கெடுதியும் ஏற்படக்கூடும் என்று நாம் எதிர்பார்த்து இருக்கவேண்டும்'' என்பதாகும்' என்று ஆஸ்திரியன் ஜெனரல் கூறினார். 'கேலி பேச்சை விட்டு காரியத்திற்கு வருவோம்' என்று அவர் விரும்பியதுபோல் தோன்றியது. தம்மை அறியாமலே அங்கிருந்த மெய்க்காப்பாளரை திரும்பிப் பார்த்தார்.

அதே சமயத்தில் 'ஒரு வினாடி, ஜெனரல்' என்று குட்டுஜோவ் சொல்லி, அவரும் இளவரசர் ஆண்ட்ரூவை திரும்பிப் பார்த்தார். இங்கே பாரும், எனது அருமை இளைஞரே. காஸ்லோவ்ஸ்கியிட மிருறது நமது வேவுகாரர்கள் கொண்டு வந்த அறிக்கைகளை வாங்கிக்கொள்ளும். கோமகன் நாஸ்டிட்ஸ் இடமிருந்து இதோ இரண்டு கடிதங்கள். மேன்மை தங்கிய ஆர்க் டியூக் பெர்டினாண்ட்டிடமிருந்து வந்த கடிதம், இதோ. இதோ, வேறு சில கடிதங்கள்' என்று சொல்லி அவரிடம் பல கடிதங்களைக் கொடுத்தார். 'இவற்றையெல்லாம் படித்து, ஆஸ்திரிய துருப்புகளின் நடமாட்டங்களைப் பற்றி நமக்குக் கிடைத்துள்ள எல்லாச் செய்திகளையும் காட்டி தெளிவாக பிரஞ்சு மொழியில் ஒரு அறிக்கையை தயார் செய்து, அதை இந்த மேன்மை தங்கியவரிடம் கொடுத்துவிடும்.'

முதலிலிருந்து சொல்லி வந்தவைகளை எல்லாம் தாம் அறிந்து கொண்டது போலவும், குட்டுஜோவ் எம்மாதிரி விஷயங்களைக் கோர்வை செய்து அந்த ஜெனரலிடம் சொல்ல விரும்புகிறார் என்பதைப் புரிந்து கொண்டது போலவும், இளரவசர் ஆண்ட்ரூ தலை வணங்கினார். அவர் கடிதங்களையெல்லாம் எடுத்துக் கொண்டு இருவருக்கும் தலைவணங்கி, அந்த மிருதுவான கம்பளத்தின் மேல் நடந்து, வெளியிலிருந்த அறைக்குப் போனார்.

இளவரசர் ஆண்ட்ரூ ருஷ்யாவை விட்டு வெளியே வந்து அதிக காலமாகவில்லை. என்றாலும் அவர் வெகுவாக மாறிவிட்டார். அவருடைய முகத்தோற்றத்திலும் சரி, அவருடைய நட வடிக்கைகளிலும் சரி, அவருடைய நடையிலும் சரி,அவர் முன்னால் காட்டிக்கொண்டிருந்த சோம்பேறித்தனத்தையோ, மந்தமானப் போக்கையோ காண முடியவில்லை. தம்மைப் பற்றி பிறர் என்ன நினைக்கிறார்கள் என்பதை சிந்திக்கக்கூட அவருக்கு நேரமில்லாதது போலவும், பிரியமான விருப்பமுள்ள வேலையில் அவர் ஈடுபட்டிருப்பது போலவும் காணப்பட்டார். தம்மைப் பற்றியும் தம்மைச் சுற்றி உள்ளவர்களைப் பற்றியும் அவர் மிகுந்த திருப்தி அடைந்திருப்பது போல அவர் முகம் காட்டியது. அவருடைய புன்னனகையும் பார்வையும் மிகுந்த பிரகாசமாகவும் கவர்ச்சிகரமாகவும் தோன்றின.

குட்டுஜோவை போலந்தில் வந்து அவர் சந்தித்தார். அவரை மிகுந்த அன்போடு வரவேற்று அவரை தாம் மறந்துவிடமாட்டார் என்று சொல்லி,மற்ற உதவியாளர்களுக்கு எல்லாம் மேலாக அவரை நியமித்து, தம்முடன் வியன்னாவுக்கு அழைத்துச்சென்று, மிகமிக முக்கியமான காரியங்களை அவரிடம் ஒப்படைத்தார். வியன்னாவிலிருந்து குட்டுஜோவ் தமது பழைய தோழரான இளவரசர் ஆண்ட்ரூவின் தகப்பனாருக்கு பின்வருமாறு எழுதினார்:--

'உங்கள் குமாரர் சீக்கிரம் ஒரு அதிகாரியாய் வந்து, தமது உழைப்பாலும் உறுதியாலும் சுறுசுறுப்பாலும் முதன்மையாய் விளங்குவார் என்பது நிச்சயம். இம்மாதிரி ஒருவரை எனக்குக் கீழ் அதிகாரியாக நான் பெற்றது எனது அதிருஷ்டம் என்றே நினைக்கிறேன்.'

குட்டுஜோவின் பரிவாரத்தில் தமது சக பணியாளர்களிடத்திலும் சரி, பொதுவாக ராணுவத்திலும் சரி, இளவரசர் ஆண்ட்ரூ பீட்டர்ஸ்பர்க் உயர் வட்டாரங்களில் பெற்றிருந்த பெயரைப் போலவே, தம்மைப் பற்றி இரண்டு வகையான அபிப்

பிராயங்களைப் பெற்றிருந்தார். சிறுபான்மையோரான சிலர் தங்களைவிடவும், மற்றும் அங்குள்ள ஒவ்வொருவரையும் விடவும், அவர் முற்றிலும் மாறுபட்டவர் என்றும்,அவர் பெரிய காரியங்களைச் செய்யப்போகிறவர் என்றும் ஒப்புக்கொண்டார்கள். அவர் சொல்லுவதை கவனமாய்க் கேட்டு அவரைப் பாராட்டி அவர் போலவே தாங்களும் நடந்து வந்தார்கள். அம்மாமதிரி நபர்களோடு இளவரசர் ஆண்ட்ரூ சகஜமாகவும் பிரியமாகவும் இருந்தார். மற்றவர்களான பெரும்பான்மையோருக்கு அவரைப் பிடிக்கவில்லை. அவர் ராங்கியும் அலட்சியமும் விரும்பத்தகாத போக்கும் கொண்டவர் என்று கருதினார்கள். ஆனால், இம்மாதிரி நினைப்பவர்களிடம் தாம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பது அவருக்குத் தெரியும். அதனால் அவர்கள் மரியாதை காட்டியதுமல்லாமல் அவரைக் கண்டு பயப்படவும் செய்தார்கள்.

கையில் கடிதங்களுடன் குட்டுஜோவ் அறையிலிருந்து வெளி அறைக்கு வந்த இளவரசர் ஆண்ட்ரூ ஜன்னலில் புத்தகமும் கையுமாய் இருந்த அவருடைய தோழரும் மெய்க் காப்பாளருமான காஸ்லோவ்ஸ்கியிடம் போனார்.

‘சொல்லுங்கள், இளவரசே?’ என்று கேட்டார் காஸ்லோவ்ஸ்கி.

‘நமது படை ஏன் முன்னேறவில்லை என்பதை விளக்கி, ஒரு அறிக்கை தயாரிக்கும்படி நான் உத்தரவிடப்பட்டிருக்கிறேன்.’

‘ஏன் அப்படி?’

இளவரசர் தமது தோள்களைக் குலுக்கினார்.

‘மாக் இடமிருந்து ஏதாவது செய்தி உண்டா?’

‘இல்லை.’

‘அவர் தோற்கடிக்கப்பட்டார் என்பது உண்மையானால் இதற்குள்ளாக செய்தி வந்திருக்குமே’

‘இருக்கலாம்’ என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லி, வெளி வாசலைப் பார்த்துத் திரும்பினார்.

அதே வினாடியில் ஒரு உயரமான ஆஸ்திரிய ஜெனரல் ஒரு பெரிய கோட் அணிந்து கொண்டு ‘மரியா திரஸா’ பதக்கத்தைத் தமது கழுத்துப் பட்டையில் அணிந்து கொண்டு, தலையைச் சுற்றி கறுப்பு துணியால் ஒரு கட்டு கட்டிக் கொண்டு, அப்பொழுதுதான் வந்தவர்போல வேகமாக உள்ளே நுழைந்து, கதவைப் படார் என்று சாத்தினார். அதைப் பார்த்து இளவரசர் ஆண்ட்ரூ திடீரென்று நின்றார்.

‘சேனாதிபதி குட்டுஜோவ்?’ என்று புதிதாய் வந்த ஜெனரல் கரகரப்பான ஜெர்மன் உச்சரிப்பில் வேகமாய் பேசிக்கொண்டு, இரு

புறங்களிலும் பார்த்துவிட்டு, உள் அறைக் கதவை நோக்கி நேராகப் போனார்.

'சேனாதிபதி வேலையாய் இருக்கிறார்' என்று காஸ்லோவ்ஸ்கி சொல்லி அந்த இனம் தெரியாத ஜெனரலிடம் வேகமாய்ச் சென்று அவர் உள்ளே போகாதபடி வழியை அடைத்து நின்றார். தாங்கள் யார் என்று நான் சொல்ல வேண்டும்.'

அந்த இனம் தெரியாத ஜெனரல் தம்மைத் தெரியாதவர் ஒருவர் இருக்கிறாரா என்று வெறுப்போடு, குள்ளமான காஸ்லோவ்ஸ்கியை நோக்கினார்.

'சேனாதிபதி வேலையாய் இருக்கிறார்' என்று காஸ்லோவ்ஸ்கி மீண்டும் அமைதியாய் சொன்னார்.

ஜெனரலின் முகம் கறுத்தது. அவருடைய உதடுகள் ஆடித் துடித்தன. அவர் ஒரு நோட்டுப் புத்தகத்தை எடுத்து பென்சிலால் எதையோ வேகமயாய் எழுதி, அந்தக் காகிதத்தைக் கிழித்து காஸ்லோவ்ஸ்கியிடம் கொடுத்தார். அங்கிருந்து வேகமாய் ஜன்னலைப் பார்க்க நடந்து, அங்குக் கிடந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார். 'என்னை அவர்கள் ஏன் பார்க்கிறார்கள்?' என்று அவர் கேட்பது போல அங்கிருந்தவர்களை நோக்கினார். பின்னால் தம்து தலையை உயர்த்தி,கழுத்தை நிமிர்த்தி, எதோ பேசப் போவதைப் போல காணப்பட்டார். ஆனால்,உடனே அலட்சிய பாவம் காட்டி தமக்குள் ஏதோ ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டிருந்தார். அது ஒரு விநோதமான சப்தமாய் இருந்தது. அந்த சப்தம் திடீரென்று நின்றது. குட்டுஜோவ் தமது அறையின் கதவைத் திறந்து வாசலில் தோன்றினார். அந்தஜெனரல் தமது தலைக்கட்டோடு முன்னால் குனிந்து, ஏதோ ஆபத்திலிருந்து தப்பி ஓடுகிறவர் போல, தமதுமெலிந்த கால்களால் நீள அடி எடுத்து வைத்து குட்டுஜோவிடம் போனார்.

'இந்த துர் அதிருஷ்டம் பிடித்த மாக்கைப் பாருங்கள்' என்று கரகரத்த குரலில் அவர் சொன்னார்.

திறந்த வாசலில் நின்ற குட்டுஜோவின் முகம் சில வினாடிகள் ஆடி அசையாமல் இருந்தது. பின்னால் அவருடைய முகத்தில் அலையைப் போலசுழிப்புகள் பரவின. மீண்டும் அவருடைய நெற்றி அமைதி அடைந்தது. அவர் தலைகுனிந்து மரியாதையோடு வணங்கி கண்களை மூடி தமக்கு முன்னால் தமது அறைக்கு மாக் போகும்படி வழிவிட்டு, பின்னால் அவர் சென்று கதவைச் சாத்திக்கொண்டார்.

ஆஸ்திரியர்கள் தோல்வி அடைந்ததார்கள் என்றும்,உல்ம் என்ற இடத்தில் ராணுவம் முழுவதுமே சரணடைந்து விட்டது என்றும்

பரவிய வதந்தி உண்மையாயிற்று. அரை மணிநேரத்திற்குள்ளாக சேனாதிபதியின் பரிவாரத்தைச் சேர்ந்த உதவியாளர்கள் நாலா திசைகளுக்கும் சென்றார்கள். இதுவரை வேலை எதுவுமில்லாமல் இருந்த ருஷ்யத் துருப்புகள் சீக்கிரமாக எதிரியைச் சந்திக்க வேண்டியிருக்கும் என்ற உத்தரவைஅவர்கள் கொண்டு வந்து கொடுத்தார்கள்.

சேனாதிபதியின் பரிவாரங்களில் உள்ள அபூர்வமானவர்களில் ஒருவர் இளவரசர் ஆண்ட்ரூ. பொதுவான யுத்தப் போக்கு ஒன்றிலேயே அவருடைய முழு அக்கரை இருந்தது. அவர் மாக்கைப் பார்த்து, அவருடைய தோல்வி பயங்கரத்தைப் பற்றிய விவரங்களைக் கேட்ட பின்னால், யுத்தத் திட்டத்தில் பாதி அளவு தோற்றுப் போய்விட்டது என்பதைப் புரிந்துகொண்டார். ருஷ்ய ராணுவத்தின் நிலைமையில் உள்ள சகல கஷ்டங்களும், அந்த ராணுவத்திற்கு ஏற்பட்டுள்ள பொறுப்பும், தாம் அதில் எடுத்துக்கொள்ளப் போகும் பங்கும் அவர் மனக்கண்முன் தெளிவாய்த் தெரிந்தன. அகம்பாவம் பிடித்த ஆஸ்திரியாவிற்கு ஏற்பட்டுள்ள அவமானத்தை அவர் நினைத்தபோது, தம்மை அறியாமலே சந்தோஷம் கொண்டார். சுவோராவ் முன்னால் பிரஞ்சுக்காரருடன் யுத்தம் செய்த பின்பு, இப்பொழுது தான் முதன் முதலாக ருஷ்யர்கள் அவர்களை எதிர்க்கப்போகிறார்கள். அதுவும் ஒரு வாரத்திற்குள் நடக்கலாமென்றும் அதில் நாம் பங்கு கொள்ளலாம் என்றும் அவர் நினைத்தார். இதை நினனைத்த போதும் அவருக்கு மகிழ்ச்சி பொங்கியது. ஆனால், போன பார்ட்டின் ராணுவ மேதை ருஷ்யத் துருப்புகளின் சகல வீரத்தையும் மிஞ்சிவிடுமோ என்று பயந்தார். அதே சமயத்தில் தமது லட்சிய வீரர் அவமதிப்பு அடைவதையும் அவரால் நினைக்க முடியவில்லை.

இம்மாதிரி எண்ணங்களால் பரபரப்பும் எரிச்சலும் அடைந்த இளவரசர் ஆண்ட்ரூ தமது தந்தைக்கு கடிதம் எழுதுவதற்காக தம் அறைக்குப் போனார். தினம் அவருக்குக் கடிதம் எழுதுவதுண்டு. தம்முடன் ஒரே அறையில் வசிக்கும் நெஸ்வைட்ஸ்கியையும், அந்தக் கோமாளி ஜெர்கோவையும் தாழ்வாரத்தில் சந்தித்தார். வழக்கம்போல அவர்கள் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

இளவரசர் ஆண்ட்ரூவின் வெளிறிய முகத்தையும் ஜொலிக்கும் கண்களையும் பார்த்த நெஸ்வைட்ஸ்கி, 'ஏன் இப்படி முகத்தைத் தூக்கிக்கொண்டிருக்கிறீர்?' என்று கேட்டார்.

'சந்தோஷமாய் இருப்பதற்கு ஒன்றுமே இல்லை' என்று பதிலளித்தார், பால்கோன்ஸ்கி.

இளவரசர் ஆண்ட்ரூ நெஸ்வைட்ஸ்கியையும் ஜெர்கோவையும் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தபோது, தாழ்வாரத்தின் மற்றொரு முனையிலிருந்து ஸ்டிராச் இவர்களைப் பார்த்து வந்து கொண்டிருந்தார். அவர் ஒரு ஆஸ்திரியன் ஜெனரல். ருஷ்யப் படைக்குத் தேவையான பொருள்களை சப்ளை செய்யும் அதிகாரியாக குட்டுஜோவின் பரிவாரத்தில் இருந்தார். அவரோடு, முதல் நாள் மாலை வந்து சேர்ந்த ஆஸ்திரிய யுத்த சபை அங்கத்தினரும் வந்து கொண்டிருந்தார். இந்த மூன்று அதிகாரிகளையும் கடந்து போவதற்கு வேண்டிய இடம் அகன்ற தாழ்வாரத்தில் இருந்தது. என்றாலும் நெஸ்வைட்ஸ்கியை தமது கையால் ஜெர்கோவ் தள்ளிக்கொண்டு, மூச்சு விடாமல், ‘அவர்கள் வருகிறார்கள்... அவர்கள் வருகிறார்கள்... விலகி நில்லுங்கள், வழி விடுங்கள்; தயவு செய்து வழிவிடுங்கள்’ என்றார்.

அவர் தலையைத் தாழ்த்தி, நடனம் ஆடக் கற்றுக்கொள்ளும் குழந்தையைப்போல, விகாரமாக முதலில் ஒரு காலால் தரையைத் தேய்த்து, பின்னால் மற்றொரு காலால் தேய்த்தார்.

ஆஸ்திரிய யுத்தக் கவுன்சில் அங்கத்தினர் அவரைக் கடுமையாகப் பார்த்தார். ஆனால், அவரின் அசட்டுத்தனமான புன்முறுவலைப் பார்த்ததும், அவர் சிரத்தை கொண்டே அம்மாதிரி சொல்லுகிறார் என்றுஅவருக்குத் தோன்றியது. அதனால் அவரால் கவனிக்காமல் இருக்க முடியவில்லை. தாம் கவனித்துக் கேட்பதைக் காட்டுவதற்காக கண்களை இடுக்கினார்.

‘நான் உம்மைப் பாராட்டுவதற்கப் பெருமை அடைகிறேன். ஜெனரல் மாக் இப்பொழுதுதான் வந்தார். நன்றாய் இருக்கிறார். இந்த இடத்தில் வெகு சிறிதான காயம்’ என்று ஜெர்கோவ் சொல்லி, மகிழ்ச்சிப் புன்னகையோடு தமது தலையைக் காட்டினார்.

அந்த ஜெனரல் முகம் சுளித்து, திரும்பி மேலே நடந்தார்.

‘அட கடவுளே, என்ன அறியாமை’ என்று சில அடிகள் எடுத்துவைத்துப் போனதும், கோபமாய் சொன்னார்.

நெஸ்வைட்ஸ்கி சிரிப்போடு தமது கைகளை இளவரசர் ஆண்ட்ரூ மீது போட்டார். ஆனால் பால்கோன்ஸ்கி இன்னும் அதிகமாக வெளிறி, கோபப் பார்வையோடு அவரை தூரத் தள்ளி, ஜெர்கோவைப் பார்த்துத் திரும்பினார். மாக்கின் வருமை, அவருடைய தோல்வி, ருஷ்யத் துருப்புகளுக்கு நேர்ந்துள்ள பொறுப்பு, இவற்றைச் சிந்தித்ததால் ஏற்பட்டுள்ள எரிச்சல், ஜெர்கோவின் பொருத்தமில்லாத கோமாளித்தனத்தின் மீது கோபமாய் மாறியது.

'ஐயா, உம்மை ஒரு கோமாளியாக்கிக்கொள்ள நீர் விரும்புவீரானால் அதை நான் தடுக்கமுடியாது' என்று கீழ் நாடி சிறிது நடுங்க கோபமாய் சொன்னார். 'ஆனால், என்னுடைய எதிரில் இம்மாதிரி கோமாளித்தனமாய் நடிக்கத் துணிந்தால் நீர் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதை உமக்கு பாடம் சொல்லிக் கொடுப்பேன்.'

நெஸ்வைட்ஸ்கியும் ஜெர்கோவும் இந்தக்கோப வார்த்தைகளைக் கேட்டு மிகுந்த ஆச்சரியம் அடைந்தார்கள். மௌனமாக விரிந்த கண்களோடு பால்கோன்ஸ்கியை நோக்கினார்கள்.

'என்ன விஷயம்? நான் அவர்களை வாழ்த்தத்தானே செய்தேன்?' என்றார் ஜெர்கோவ்.

'நான் உம்மிடம் விளையாடவில்லை. தயவுசெய்து மௌனமாய் இரும்' என்று பால்கோன்ஸ்கி கூவி விட்டு நெஸ்வைட்கியின் கையைப்பற்றி ஜெர்கோவை அங்கே விட்டுவிட்டுப் போனார். ஜெர்கோவிற்கு என்ன பேசுவதென்று தெரியவில்லை.

'வாரும், விஷயம் என்ன, பழைய நண்பரே?' என்று, இளவரசரை சாந்தப்படுத்தும் முறையில், நெஸ்வைட்ஸ்கி பேசினார்.

'என்ன விஷயமா?' என்று தமது பரபரப்பினால் விறைப்பாய் நின்று கொண்டு, இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார். 'உமக்கு விளங்கவில்லையா? ஒன்று நமது ஜார் சக்கரவர்த்திக்கும் நமது நாட்டிற்கும் சேவை செய்யும் அதிகாரிகளாய் நாம் இருக்க வேண்டும். அப்படியானால், நமது பொதுவான லட்சியத்திற்கு வெற்றி ஏற்படும்போது சந்தோஷமும், தோல்வி ஏற்படும்போது துக்கமும் கொள்ள வேண்டும். அல்லது எஜமானின் காரியங்கள் என்ன கதியானாலும் சரி, நமக்குக் கவலையில்லை என்று நினைக்கும் அடிமைகளாய் இருக்கவேண்டும். நாற்பதாயிரம் வீரர்கள் படுகொலை செய்யப்பட்டிருக்கிறார்கள். நமது நேசநாடுகளின் ராணுவம் அடிக்கப்பட்டிருக்கிறது. இவற்றைப் பார்த்தா கேலி செய்வது? ஒன்றுக்கும் உபயோகம் இல்லாத உமது நண்பர் இருக்கிறாரே, அவருக்கு இதெல்லாம் சரி. ஆனால், உமக்குச் சரியல்ல; உமக்குச் சரியல்ல. அறியாச் சிறுவர்கள் தான் இம்மாதிரி வழியில் கும்மாளம் போடுவார்கள்.'

இந்த குதிரைப் படை அதிகாரி பதில் சொல்வாரா என்பதைப் பார்ப்பதற்காக ஒரு வினாடி காத்திருந்தார். ஆனால், அவர் திரும்பி தாழ்வாரத்தை விட்டு வெளியே போய்விட்டார்.

# 2

## 4

பிராவ்னாவில் இருந்து இரண்டு மைல் தூரத்தில் பாவ்லாவ் கிராட் குதிரைப் படை முகாம் போட்டிருந்தது. நிக்கலஸ் ராஸ்டோவ் தொண்டராய் சேர்ந்திருந்த அப்படையின் பிரிவு சால்ஜெனெக் என்ற ஜெர்மன் கிராமத்தில் முகாம் போட்டிருந்தது. அந்தப் பிரிவின் கமாண்டரின் பெயர் கேப்டன் டெனைசாவ். குதிரைப் படை முழுவதிலும் அவரை வாஸ்கா டெனைசாவ் என்றே அழைப்பார்கள். அந்தக் கிராமத்தில் உள்ள உயர்ந்த குடியிருப்பு வசதிகளை இந்த காப்டனுக்குக் கொடுத்திருந்தார்கள். தொண்டர் ராஸ்டோவ் அந்தப் படையில் போலந்தில் வந்து கலந்து கொண்டதில் இருந்து, டெனைசாவோடுதான் தங்கிவந்தார்.

அக்டோபர் 11-ந்தேதியன்று, மாக்கின் தோல்விச் செய்தியை அறிந்து தலைமைக் காரியாலயம் அமளிக்குமளிப் பட்டுக் கொண்டிருந்தபோது, இந்தப் படைப் பிரிவு அதிகாரிகளின் முகாம் வாழ்க்கை வழக்கம் போல நடந்துகொண்டிருந்தது. இரவு பூராவாக சீட்டாட்டத்தில் தோற்றுக்கொண்டிருந்த டெனைசாவ் இன்னும் வீடு திரும்பவில்லை. குதிரைத் தீனி சப்ளைக்காக வெளியே போயிருந்த ராஸ்டோவ் அதிகாலையில் குதிரை மீது வீடு திரும்பினார். தொண்டர் சீருடையில் சவாரி செய்துவந்த ராஸ்டோவ், மண்டப முற்றத்திற்கு குதிரையில் சென்று நிறுத்தி, ஒரு காலை சேணத்திலிருந்து வீசி எடுத்து, ஒரு வினாடி அங்கபடியில் அப்படியே நின்றார். அப்படி நின்றது குதிரையிலிருந்து பிரிவதற்கு அவருக்குப் பிரியமில்லாதது போல் தோன்றியது. கடைசியாக கீழே குதித்து தமது சேவகனை அழைத்தார்.

'ஆ, பாண்டாரென்கா, எனது நண்பனே' என்று அவர் அழைத்த போது, அவன் தலைதெறிக்க குதிரையை நோக்கி ஓடிவந்தான். 'குதிரையை மேலும் கீழும் உலாத்தி வா, எனது அன்புள்ள ஆசாமியே' என்று குஷியாக சகோதரத்வ பிரியத்தோடு பேசினார். நல்ல மனமுள்ள வாலிபர்கள் தாங்கள் சந்தோஷமாய் இருக்கும் போது எல்லாரிடமும் மகிழ்ச்சியைக் காட்டும் வழக்கம் போல அவர் பேசியது இருந்தது.

'நல்லது, மேன்மை தங்கியவரே' என்று தலையை ஆட்டிக் கொண்டு உற்சாகத்தோடு அந்த உக்ரேனியன் பதிலளித்தான்.

'கவனி, மேலும் கீழும் நன்றாக குதிரையை உலாவ வை.'

மற்றொரு குதிரைக்காரன்கூட குதிரையை நோக்கி ஓடி வந்தான். ஆனால், பாண்டாரென்கா ஏற்கனவே குதிரையின் லகான் வார்களை அதன் தலைமீது போட்டுவிட்டான். அந்தத் தொண்டர் தாராளமாய் சன்மானம் கொடுப்பவர் என்பது தெளிவாய்த் தெரிந்தது. அதனால் வேலைக்காரர்களும் சேவை செய்ய ஓடி வருவார்கள். குதிரையின் கழுத்தையும் அதன் உடம்பையும் ராஸ்டோவ் தட்டிக் கொடுத்துவிட்டு அங்கு ஒரு வினாடி நின்றார்.

'ரொம்ப சிலாக்கியம். எப்பேர்ப்பட்ட குதிரையாக அது வளர்ந்துவிடும்!' என்று புன்சிரிப்போடு அவர் நினைத்தார். தமது பட்டாக்கத்தியைப் பிடித்துக்கொண்டு, தமது ஜோடுகளில் உள்ள தார்ச் சக்கரங்கள் கலகலக்க, முற்றத்தின் படிகளின் மேல் ஏறி ஓடினார். அந்த வீட்டுக்காரன் ஒரு உள்சட்டையும் கூரிய குல்லாயும் அணிந்து, கையில் கவர்க்கொம்பு தாங்கி, பசுத்தொழுவில் உள்ள சாணங்களை அப்புறப்படுத்தி சுத்தம் செய்து கொண்டிருந்தான். அவன் தலையை வெளியே நீட்டி ராஸ்டோவைப் பார்த்ததும், அவனது முகம் உடனே பிரகாசம் அடைந்தது. 'காலை வந்தனம்' என்று, அந்த வாலிபரை வரவேற்பதில் சந்தோஷம் அடைந்தவன் போல கண் சிமிட்டி, களிப்புப் புன்னகை கொண்டு கூறினான்.

அதே சகோதரத்வ களிப்புப் புன்கையோடு, 'அதற்குள் வேலையை ஆரம்பித்துவிட்டாயா?' என்று ராஸ்டோவ் கேட்டார். 'ஆஸ்திரியர்களுக்கு ஜே! ருஷ்யர்களுக்கு ஜே! அலெக்ஸாண்டர் சக்கரவர்த்திக்கு ஜே! என்று அந்த ஜெர்மன் வீட்டுக்காரன் அடிக்கடி சொல்லுவதைப் போல் கூவினான்.

அந்த ஜெர்மன் சிரித்தான். பசுத்தொழுவத்திலிருந்து வெளியே வந்து தன் தொப்பியைக் கையில்எடுத்து, அதை தலைக்கு மேலாகச் சுழற்றிக்கொண்டு, 'உலகம் முழுவதற்கும் ஜே!' என்று கோஷித்தான்.

'ஜெர்மனியனைப் போலவே தாமும் தமது தொப்பியை தலைக்கு மேலாக சுழற்றி, சிரித்துக்கொண்டே, 'உலகம் முழுவதற்கும் ஜே!' என்று ராஸ்டோவும் கோஷித்தார். பசுத்தொழுவத்தை சுத்தம் செய்துகொண்டிருந்த ஜெர்மனியனுக்கோ, அல்லது தமது படைப் பிரிவுடன் குதிரைக்குத் தீனி சேகரிப்பதற்காக சென்று திரும்பி வந்த ராஸ்டோவுக்கோ சந்தோஷத்தைக் கொண்டாடுவதற்கு அப்பொழுது காரணம் எதுவுமில்லை. அவர்கள் இருவரும் சந்தோஷ மகிழ்ச்சியோடும், சகோதரத்வ அன்போடும் ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். தங்கள் பரஸ்பர அன்பைக் காட்டும் அறிகுறியாக தலைகளை ஆட்டிக்கொண்டு புன்முறுவலோடு இருவரும் பிரிந்தார்கள். அந்த ஜெர்மன் தமது பசுத்தொழுவத்திற்கும்,

ராஸ்டோவ் தாம் டெனைசாவுடன் தங்கியிருக்கும் சிறு வீட்டிற்கும் சென்றார்கள்.

'உனது எஜமானைப் பற்றி என்ன?' என்று டெனைசாவின் சேவகனான லாவ்ருஷ்காவைப் பார்த்துக் கேட்டார். அவன் ஒரு போக்கிரி என்பது பட்டாளம் பூராவாகத் தெரியும்.

'நேற்று மாலையிலிருந்து அவர் வரவேயில்லை; தோற்றுக் கொண்டிருக்கவேண்டும். அவர் ஜெயித்தால் வீட்டிற்கு சீக்கிரமாகத் திரும்பி வந்து அதைப் பற்றி பெருமை அடித்துக் கெண்டிருப்பார். காலை வரையில் அவர் வராமல் இருந்தால், அவர் தோற்றார் என்பது தான் அதற்கு அர்த்தம். தோற்றுத் திரும்பி வரும்போது மிகுந்த கோபத்தோடு வருவார். இது எனக்குத் தெரியும்' என்றான் லாவ்ருஷ்கா. 'உங்களுக்கு காபி வேண்டுமா?'

'ஆம், கொஞ்சம் கொண்டு வா'

பத்து நிமிஷம் கழிந்த பின்பு லாவ்ருஷ்கா காபி கொண்டு வந்தான். 'இதோ வருகிறார்! இப்பொழுது தொல்லைதான்' என்றான் அவன். ராஸ்டோவ் ஜன்னல் வழியாக வெளியே பார்த்தபோது, டெனைசாவ் வீடு திரும்பி வருவதைக் கண்டார். டெனைசாவ் ஒரு சிறிய மனிதர். சிவந்த முகம்; பிரகாசமான கறுப்புக் கண்கள்; வாரி விடப்படாத மீசையும் தலை ரோமமும் கொண்டவர். பொத்தான் போடாத ஒரு வெளிச் சட்டையை அணிந்திருந்தார். அகலமான கால்சட்டை சுருக்கங்களோடு தொங்கிக் கொண்டிருந்தன. ஒரு கசங்கிய குல்லாவைப் பின்தலையில் அணிந்துகொண்டிருந்தார்.

தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு சோர்வான முகத்தோடு முற்றத்திற்கு வந்தார்.

'லாவுஸ்கா' என்று கோபத்தோடு பலமாய் கத்தினார். 'எடுத்துக் கொண்டு போ, மடையா'

'நல்லது, நான் எடுத்துப் போகிறேன்' என்றான் லாவ்ருஷ்கா.

'ஆ, அதற்குள் எழுந்திருந்து விட்டீரா!' என்று டெனைசாவ் அறைக்குள் நுழையும்போது கேட்டார்.

'வெகு நேரமாச்சு' என்றார் ராஸ்டோவ். 'நான் வைக்கோல் சேகரிக்கப் போயிருந்தேன். குமாரி மாட்ரில்டேயைப் பார்த்தேன்.'

'உண்மையாகவா? நான் தோற்றுவிட்டேன், சகோதரரே. நேற்று ஒரு வடிகட்டிய முட்டாளைப் போல தோற்றேன்' என்ற டெனைசாவ் இரைந்தார். 'என்ன துர் அதிருஷ்டம், என்ன துர் அதிருஷ்டம். நீர் போன பின்பு, அது ஆரம்பித்தது. நடந்துகொண்டே இருந்தது. யார் அங்கே? தேநீர்'. சிரித்துக்கொண்டிருந்தாலும்

முகத்தையும் சுளித்துக்கொண்டு, தமது சிறிய பலமான பற்களை வெளியே காட்டி, தமது தடித்த விரல்களால், சிக்கலான தமது கறுப்புத் தலைமுடியை கலைத்து விட்டுக்கொண்டிருந்தார்.

'எந்த பிசாசு அந்த எலியிடம் போகும்படி என்னைச் செய்தது?' (ஒரு அதிகாரிக்கு 'எலி' என்று கேலிப் பெயர் கொடுத்திருந்தார்கள்) என்று சொல்லிவிட்டு, தமது நெற்றியையும் முகத்தையும் இரண்டு கைகளாலும் தோய்த்துக் கொண்டிருந்தார். 'என்ன வேடிக்கை! ஒரு சீட்டில்கூட நான் ஜெயிக்கும்படி அவன் விடவில்லை. ஒரு சீட்டுகூட இல்லை.'

தமக்குக் கொடுத்த பொருத்திய சுங்கானை கையில் வாங்கி முஷ்டியால் பலமாய் பற்றி தரையில் அதைத் தட்டினார். தீப்பொறி பறந்தது. அவர் கூச்சலிட்டுக்கொண்டே இருந்தார்.

'ஒற்றை ஆட்டத்தில் ஜெயிக்க அவன் விடுகிறான். அதை இரட்டையாக்கினதும் அவன் வசூல் செய்து கொள்ளுகிறான். ஒற்றையை விட்டுவிட்டு, இரட்டைகளாகப் பிடித்துக் கொள்ளு கிறான்.'

கனிந்துகொண்டிருந்த புகையிலையை விசிறி சுங்கானை அடித்து, அதை தூர எறிந்தார். சிறிது நேரம் மௌனமாய் இருந்தார். உடனே திடீரென்று மகிழ்ச்சி பொங்கத் தோன்றி, தமது பிரகாசமான கறும் கண்களால் ராஸ்டோவைப் பார்த்தார்.

'குறைந்த பட்சம் இங்கே நமக்கு சில பெண்களாவது இருந்தால்... ஆனால் இங்கே குடிப்பதைத் தவிர வேறு ஒன்றும் செய்வதற்கில்லை. யுத்த களத்திற்கு நாம் சீக்கிரம் போக முடியுமானால்... ஏய் யார் அங்கே?' என்று கேட்டார். வெளியே பூட்ஸ் சப்தமும், தார் சக்கரங்களின் ஒலியும், அவற்றோடு ஒரு மாதிரியான இருமலும் கேட்கவே வாசல் பக்கம் திரும்பினார்.

'படைப் பிரிவின் குடியிருப்பு அதிகாரி' என்றான் லாவ்ருஷ்கா. டெனைசாவின் முகம் இன்னும் அதிகமாய் சுளித்தது.

'கெட்டது கேடு' என்று முனங்கிக்கொண்டு தங்க நாணயங்கள் இருந்த தமது பணப்பையை வீசினார். 'ராஸ்டோவ், அருமைத் தோழரே, அதற்குள் எவ்வளவு இருக்கிறது என்று எண்ணிப் பார்த்துவிட்டு, தலையணைக்குக் கீழே அந்தப் பணப்பையை வையும்' என்று சொல்லிவிட்டு, குடியிருப்பு அதிகாரியை சந்திப்பதற்காக வெளியே போனார்.

ராஸ்டோவ் பணத்தை எடுத்து புதிய நாணயங்களையும் பழைய நாணயங்களையும் பிரித்து எண்ண ஆரம்பித்தார்.

'ஆ, டெலியானின், சௌக்கியமா? நேற்று இரவு என்னைப் பிடுங்கி விட்டார்கள்' என்று அடுத்த அறையில் டெனைசாவ் பேசியது கேட்டது.

'எங்கே? பைகாவ் வீட்டிலா? அந்த எலி வீட்டிலா?... எனக்கு அது தெரியும்' என்று பதில் கேட்டது. ஒரு சிறிய அதிகாரியான டெலியானின் அறைக்குள் நுழைந்தார்.

பணப்பையை ராஸ்டோவ் தலையணைக்கு அடியில் வைத்தார். அச்சமயம் தம்மிடம் நீட்டப்பட்ட சில்லிட்ட கையைக் குலுக்கினார். இந்த படையெடுப்புக்கு முன்பாக என்ன காரணத்திற்காகவோ காப்பாளர் படையிலிருந்து டெலியானின் இங்கு மாற்றப்பட்டார். அவர் நடத்தை மிகவும் நன்றாய்த்தான் இருந்தது. ஆனால் அவரை ஒருவரும் விரும்பவில்லை. முக்கியமாக ராஸ்டோவ் அவரை வெறுத்தார். அந்தவெறுப்பை அவரால் தவிர்க்க முடியவில்லை. அவர் மீது ஏற்பட்ட காரணமில்லாத துவேஷத்தையும் அவரால் மறைத்து வைக்கவும் முடியவில்லை.

'நல்லது, குதிரைப் படை இளைஞரே, என்னுடைய ரூக் எப்படி நடந்துகொள்ளுகிறது?' என்று கேட்டார். (ரூக் என்பது ராஸ்டோவிற்கு டெலியானின் விலைக்கு விற்ற ஒரு சிறிய குதிரை.)

அந்த அதிகாரி யாரிடம் பேசுகிறாரோ, அவருடைய முகத்தை நேராக பார்ப்பதேயில்லை. அவருடைய கண்கள், ஒன்றிலிருந்து மற்றொன்றிற்குத் தாவிக்கொண்டே இருக்கும்.

'நீர் இன்று காலை சவாரி செய்துகொண்டு வந்ததைப் பார்த்தேன்' என்று அவர் சொன்னார்.

'ஓ, அது சரியாய்தான் இருக்கிறது. நல்ல குதிரை' என்று பதிலளித்தார் ராஸ்டோவ். என்றாலும் ராஸ்டோவ் அந்த குதிரைக்காக அளித்த இருநூறு ரூபிள்களில் அது பாதி விலைதான் பெறும். 'அதன் இடது முன்னங்கால் சிறிது நொண்ட ஆரம்பித்திருக்கிறது.'

'குளம்பு கீரியிருக்கிறது. அது ஒன்றும் பிரமாதமில்லை. அதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதை நான் சொல்லித் தருகிறேன். எம்மாதிரியான ஆணி அடிக்கவேண்டும் என்பதையும் நான் காட்டுகிறேன்.'

'ஆம், தயவு செய்து காட்டும்' என்றார் ராஸ்டோவ்.

'நான் காட்டுகிறேன், நான் காட்டுகிறேன். அது ஒன்றும் ரகசியமல்ல. அது எப்பேர்ப்பட்ட குதிரை! அதற்காக நீர் எனக்கு வந்தனம் அளிப்பீர்.'

'அப்படியானால், அதை நான் இங்கு கொண்டு வருகிறேன்' என்று டெலியானினைத் தவிர்ப்பதற்காக குதிரையைக் கொண்டுவரும்படி உத்தரவிட வெளியே சென்றார். ஆளோடியில் வாசற்படி அருகில் டெனைசாவும் கையில் சுங்கானோடு கீழே உட்கார்ந்திருந்தார். அந்த அதிகாரி தமது வேலைகளைப் பற்றி அவரிடம் சொல்லிக் கொண்டிருந்தார். ராஸ்டோவைப் பார்த்ததும் முகத்தை இடுக்கிக் கொண்டு தமது பெருவிரலால் தோளுக்குப் பின்னால் டெலியானின் உட்கார்ந்திருந்த அறையை டெனைசாவ் சுட்டிக்காட்டி முகத்தைச் சுளித்து அருவருப்பால் உடல் பதறினார்.

'ஐயோ, அந்தப் பயலை எனக்குப் பிடிக்கவில்லை' என்று குடியிருப்பு அதிகாரி இருப்பதையும் லட்சியம் செய்யாமல் பேசினார்.

ராஸ்டோவ் தமது தோள்களை குலுக்கினார். 'எனக்கும் அப்படித்தான். இருந்தாலும் ஒருவர் என்ன செய்ய முடியும்' என்று சொல்லுவதைப்போல் இருந்தது, அவருடைய குலுக்கல். குதிரையைக் கொண்டு வரும்படி உத்தரவிட்டு அவர் டெலியானிடம் திரும்பினார்.

ராஸ்டோவ் போகும்போது எப்படி இருந்தாரோ அதே சோம்பேறித்தனமான முறையில் டெலியானின் உட்கார்ந்து, தமது சிறிய வெள்ளைக் கைகளை தேய்த்துக்கொண்டிருந்தார்.

'நல்லது, அருவருப்பான ஜனங்கள் இருக்கத்தான் செய்கிறார்கள்' என்று ராஸ்டோவ் உள்ளே நுழையும்போது நினைத்தார்.

'குதிரையைக் கொண்டு வரும்படி சொல்லிவிட்டீரா?' என்று கேட்டுக்கொண்டு டெலியானின் எழுந்து, தம்மைச் சுற்றி அலட்சியமாய் பார்த்துக்கொண்டார்.

'நான் சொல்லிவிட்டேன்.'

'நாமே போவோம். நேற்றைய உத்தரவைப் பற்றி டெனைசாவிடம் கேட்பதற்காகவே நான் இங்கே வந்தேன். டெனைசாவ், அது உமக்குக் கிடைத்துவிட்டதா?'

'இன்னும் இல்லை. நீங்கள் எங்கே போகிறீர்கள்'

'இந்த இளைஞருக்கு குதிரைக்கு லாடம் அடிப்பது எப்படி என்று சொல்லிக் கொடுக்க விரும்புகிறேன்' என்றார் டெலியானின்.

முற்றம் வழியாக அவர்கள் குதிரை லாயத்திற்குப் போனார்கள். குதிரைக் குளம்பில் எப்படி ஆணி அடிக்கவேண்டும் என்பதை விளக்கிவிட்டு தமது இருப்பிடத்திற்கு அவர் போனார்.

ராஸ்டோவ் திரும்பியபோது, மேஜை மீது ஒரு புட்டி வாட்காவும், கறி பதார்த்தமும் இருந்தன. ஒரு காகிதத்தில் தமது

பேனாவால் கிறிக்கிக்கொண்டு டெனைசாவ் உட்கார்ந்திருந்தார். கவலை தோய்ந்த முகத்தோடு ராஸ்டோவைப் பார்த்து, ' நான் அவளுக்கு எழுதுகிறேன்' என்றார்.

முழங்கைகளை மேஜை மீது வைத்துக்கொண்டு, கையில் பேனாவைப் பற்றி, தாம் எழுத விரும்பியதை சீக்கிரமாக வாயினால் சொல்லக்கூடிய சந்தர்ப்பம் கிடைத்ததற்கு மகிழ்ச்சி அடைந்தவராய், கடிதத்தில் கண்ட விஷயங்களை ராஸ்டோவிடம் சொன்னார்.

'இங்கே பாரும், எனது நண்பரே. நாம் காதல் புரியாதபோது தூங்குகிறோம். நாம் மண்ணில் இருந்து வந்த குழந்தைகள். ஆனால் காதல் கொண்டுவிட்டால் ஒருவன் தெய்வமாகிறான். உலகப் படைப்பின் முதல் நாளன்று எவ்வளவு பரிசுத்தமாய் இருந்தானோ, அவ்வளவு பரிசுத்தமாகிறான்... அங்கே யார்? அவனை பிசாசிடம் போகச் செல்லு. நான் வேலையாய் இருக்கிறேன்' என்று கொஞ்சம்கூட வெட்கம் இல்லாமல், அங்கே வந்த லாவ்ருஷ்கா விடம் கத்தினார்.

'யாராய் இருப்பார்? நீர்தானே அவரை வரச் சொன்னீர்? அவர்தான் குடியிருப்பு அதிகாரி. பணத்திற்காக வந்திருக்கிறார்.'

டெனைசாவ் முகத்தைச் சுளித்து ஏதோ கத்த விரும்பினார். ஆனால் நிறுத்திக்கொர்ண்டார்.

'கேடுகெட்ட வேலை' என்று தமக்குத்தாமே முனங்கிக் கொண்டார்.

'அந்தப் பணப்பையில் எவ்வளவு பணம் இருக்கிறது?' என்று ராஸ்டோவைப் பார்த்துக் கேட்டார்.

'ஏழு புதிய இம்பீரியல்கள், மூன்று பழைய இம்பீரியல்கள் இருக்கின்றன.'

'ஓ, அது மோசமானது. சரி, நீ அங்கே ஏன் நின்று கொண்டிருக் கிறாய், ஏ, வயல்காட்டு பொம்மையே? அந்த குடியிருப்பு அதிகாரியை வரச் செல்லு?' என்று கலாவ்ருஷ்காவைப் பார்த்துக் கத்தினார்.

'டெனைசாவ், நான் கொஞ்சம் பணம் கடனாகத் தருகிறேன். தயவு செய்து பெற்றுக்கொள்ளும். என்னிடம் கொஞ்சம் பணம் இருப்பது உமக்குத் தெரியும்' என்று ராஸ்டோவ் நாடி முகம் சிவந்து சொன்னார்.

'நமது ஆசாமிகளிடமிருந்தே கடன் வாங்குவது எனக்குப் பிடிக்காது. எனக்கு வேண்டாம்' என்று டெனைசாவ் உறுமினார்.

‘ஒரு தோழரைப் போல என்னிடமிருந்து பணம் வாங்க நீர் மறுப்பீரானால், எனக்கு வருத்தமாய் இருக்கும். உண்மையிலேயே என்னிடம் பணம் இருக்கிறது’ என்று ராஸ்டோவ் மீண்டும் சொன்னார்.

‘இல்லை, வேண்டாம்.’

தலையணைக்குக் கிழிருந்த பணப்பையை எடுப்பதற்கு டெனைசாவ் படுக்கைக்குப் போனார்.

‘ராஸ்டோவ், பணப்பையை எங்கே வைத்தீர்?’

‘தலையணைக்கு அடியில்’.

‘இங்கே இல்லையே?’

இரண்டு தலையணைகளை டெனைசாவ் தரையில் தூக்கி வீசினார். அப்பொழுதும் பணப்பையைக் காணவில்லை.

‘இது ஒரு அதிசயமாய் இருக்கிறது!’

‘பொறும். நீர் கீழே போடவில்லையா?’ என்று ராஸ்டோவ் ஒவ்வொரு தலையணையாக எடுத்துக் குலுக்கினார். பணப் பையைக் காணவில்லை.

‘அட பாவமே, நான் மறந்துவிட்டேனா? இல்லை. தலை யணைக்குக் கீழாக ஒரு பொக்கிஷம்போல் நீர் பாதுகாத்து வருவீர் என்று அச்சமயம் நான் நினைத்தது எனக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. நான் அங்கேதான் வைத்தேன். அது எங்கே?’ என்று லாவ்ருஷ்காவைப் பார்த்து ராஸ்டோவ் கேட்டார்.’

‘நான் அறைக்குள்ளேயே வரவில்லையே. நீர் வைத்த இடத்தில் தான் அது இருக்கவேண்டும்.’

‘ஆனால், அது இல்லையே?...’

‘நீர் எப்பொழுதும் இப்படித்தான். எங்கேயாவது வீசி எறிவீர். அப்புறம் மறந்துவிடுவீர். உமது ஜேபிகளைப் பாரும்’

‘இல்லை, அதைப் பற்றி எனக்கு நன்றாக பொக்கிஷம் என்று நினைத்தது என் நினைவில் இருக்கிறது. நான் அங்கேதான் வைத்தேன்.’

லாவ்ருஷ்கா படுக்கைகளைத் திருப்பிப் போட்டான். படுக்கை களுக்குக் கீழேயும், மேஜையின் கீழேயும், மற்ற இடங்களிலும் தேடி விட்டு அறையின் மத்தியில் அசையாமல் நின்றான். லாவ்ருஷ்கா செய்பவைகளையெல்லாம் டெனைசாவ் மௌனமாகக் கவனித்து வந்தார். அவன்ஆச்சரியத்தோடு, பணப்பையை ஒரு இடத்திலும் காணவில்லையே என்று

சொல்லுவதைப் போலதனது கைகளை விரித்தான். அச்சமயம் டெனைசாவ், ராஸ்டோவைப் பார்த்தார்.

‘ராஸ்டோவ், நீர் என்னிடம் விளையாடவில்லையே?’

டெனைசாவ் தம்மை உற்றுப்பார்ப்பதை ராஸ்டோவ் உணர்ந்தார். தமது பார்வையையும் உயர்த்திப் பார்த்து, உடனே தாழ்த்திக் கொண்டார். கழுத்திற்குக் கீழாக ரத்தம்போகாமல் தடைபட்டு நின்றதுபோல, அவரது முகமும் கண்களும் சிவந்தன. அவரால் மூச்சுவிட முடியவில்லை.

‘நீங்கள் இருவரையும் அந்த சிறிய அதிகாரியையும் தவிர இந்த அறைக்குள் வேறு யாருமே வரவில்லை. இங்கேதான் எங்காவது அது இருக்க வேண்டும்’ என்றான் லாவ்ருஷ்கா.

‘அப்படியானார், ஏ, பிசாசின் மகனே, உயிரற்றவன்போல் நிற்காமல் அது எங்கிருக்கிறது என்று தேடிப்பார்’ என்று திடீரென்று டெனைசாவ் கத்தி, முகம் சிவந்து பயமுறுத்தும் பாவனையோடு அவனிடம் ஓடினார். ‘பணப்பையைக் கண்டுபிடிக்காவிட்டால் நான் உன்னை சவுக்கால் அடிப்பேன். உங்கள் எல்லாரையும் சவுக்கால் அடிப்பேன்.’

டெனைசாவ் பார்க்காமல் ராஸ்டோவ் தமது கோட்டுப் பொத்தான்களை மாட்டிக்கொண்டு உடைவாளையும் அணிந்து கொண்டு, தலையில் தொப்பியைப் போட்டார்.

டெனைசாவ் தமது சேவகனின் தோளைப்பற்றி, பலமாக உலுப்பிக்கொண்டு அவனைச் சுவரோடு மோதி,பணப்பையை எனக்குக் கொடுக்க வேண்டும், நான் சொல்லுகிறேன்’ என்று கத்தினார்.

டெனைசாவ், அவனை விட்டு விடும். அதை யார் எடுத்தார் என்பது எனக்குத் தெரியும்’ என்று கண் பா ர்வையைத் தாழ்த்தி, வாசலுக்குப் போய்க்கொண்டே ராஸ்டோவ் கூறினார்.

டெனைசாவ் ஒரு வினாடி தயங்கி யோசித்தார். ராஸ்டோவ் என்ன சொல்லுகிறார் என்பதை அறிந்துகொண்டு அவர் கையைப் பற்றினார்.

‘அசட்டுத்தனம்’ என்று அவர் கூறியபோது, அவருடைய நெற்றியிலும் கழுத்திலும் இருந்த நரம்புகள் கயிறுகள் போல புடைத்து நின்றன. ‘உமக்குப் பைத்தியமா? அதற்கு நான் சம்மதிக்க முடியாது. பணப்பை இங்கே தான் இருக்கிறது. இந்த அயோக்கியனின் தோலை உயிரோடு உரித்துவிட்டால், பணப்பை அகப்பட்டு விடும்.’

'அதை யார் எடுத்தார் என்பது எனக்குத் தெரியும்' என்று கலகலத்தக் குரலில் சொல்லிக்கொண்டு வாசலுக்குப் போனார், ராஸ்டோவ்.

'நான் சொல்லுகிறேன், அப்படி ஒருக்காலும் நீர் செய்யக் கூடாது' என்று டெனைசாவ் கூவி அவரைப் போகாமல் நிறுத்துவதற்காக அவரிடம் ஓடினார்.

ஆனால், கோபத்தோடு ராஸ்டோவ் தமது கையை இழுத்துக் கொண்டார். அவர் டெனைசாவை நேராக முகத்தில் பார்த்த பார்வை, ஒரு பரம எதிரியைப் பார்ப்பதுபோல் இருந்தது.

'நீர் என்ன சொல்லுகிறீர் என்பது உமக்குப் புரிகிறதா?' என்று நடுங்கிய குரலில் அவர் கேட்டார். என்னைத் த விர இந்த அறையில் வேறு யாரும் இல்லை. ஆகவே நான் சொல்லுகிறபடி இல்லை யென்றால், அப்புறம்...'

அவரால் வாக்கியத்தை முடிக்க முடியவில்லை. அறையை விட்டு வெளியே ஓடினார்.

'ஆ, உம்மையும் மற்ற எல்லாரையும் பிசாசு பிடிப்பதாக' என்ற வார்த்தைகள் கடைசியாக ராஸ்டோவின் காதுகளில் விழுந்தன.

டெலியானினுடைய இருப்பிடத்திற்கு ராஸ்டோவ் சென்றார்.

'எஜமானர் உள்ளே இல்லை. அவர் தலைமைக் காரியாலயத்திற்குப் போயிருக்கிறார்' என்றான் டெலியானி னுடைய சேவகன். 'ஏதாவது நடந்துவிட்டதா?' என்று ராஸ்டோவின் கவலை தோய்ந்த முகத்தைப் பார்த்து ஆச்சரியப் பட்டுக் கேட்டான்.

'இல்லை, ஒன்றுமில்லை.'

'இப்பொழுதுதான் அவர் போனார்.'

சால்ஜெனெக் என்ற கிராமத்திலிருந்து இரண்டு மைல் தூரத்தில் தலைமை முகாம் இருந்தது. ராஸ்டோவ் வீடு திரும்பாமல், ஒரு குதிரையை வாங்கி அதில் ஏறிப்போனார். அந்த கிராமத்தில் ஒரு ஹோட்டல் உண்டு. அதிகாரிகள் அங்கே போய் சாப்பிடுவது வழக்கம். ராஸ்டோவ் நேராக அந்த ஹோட்டலுக்குப் போனார். வெளியே முற்றத்தில் டெலியானினுடைய குதிரை கட்டப் பட்டருப்பதைப் பார்த்தார்.

இரண்டாவது அறையில் அந்த சிறிய அதிகாரி. மேஜை மீது ஒரு புட்டி ஒயினை வைத்துக்கொண்டு கறி பதார்த்தம் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

'ஆ, இங்கே கூட நீர் வந்துவிட்டீரா, வாலிபரே?' என்று புருவங்களை உயர்த்தி, புன்னகையுடன் அவர் சொன்னார்.

'ஆம்' என்றார் ராஸ்டோவ். அந்த வார்த்தையை அவர் சொல்லுவதற்குக்கூட மிகுந்த சிரமப்பட்டார் என்று தோன்றியது. தமக்குப் பக்கத்தில் இருந்த ஒரு மேஜை முன்பு அவர் அமர்ந்தார்.

இருவரும் மௌனமாய் இருந்தார்கள். அந்த அறையில் இரண்டு ஜெர்மனியர்களும், ஒரு ருஷ்ய அதிகாரியும் இருந்தார்கள். ஒருவரும் பேசவில்லை. சாப்பாட்டிற்கு உபயோகப்படும் கத்திகளின் கரண்டிகளின் சப்தத்தையும், தவிர வேறு எந்த சப்தமும் அங்கு கேட்கவில்லை.

டெலியானின் தமது சாப்பாட்டை முடித்த பின்பு, ஜேபியில் இருந்த பணப்பையை எடுத்தார். பையிலுள்ள வளையங்களைத் தமது சிறிய வெள்ளையான விரல்களால் இழுத்துத் திறந்து, அதற்குள்ளிருந்து ஒரு தங்க (ஒரு இம்பீரியல் என்பது பத்து ரூபிள்கள் கொண்டது.) இம்பீரியலை எடுத்து, புருவங்களை உயர்த்திக் கொண்டு அங்கிருந்த பரிச்சாரகரிடம் கொடுத்தார்.

'சில்லரையைச் சீக்கிரம் கொண்டு வா' என்றார் அவர்.

அந்த நாணயம் புதியதாய் இருந்தது. ராஸ்டோவ் எழுந்து டெலியானின் பக்கம் போனார்.

'உமது பணப்பையைக் கொடும்; நான் பார்க்க வேண்டும்' என்று மெதுவான, அநேகமாய் வெளியில் கேட்காத குரலில் சொன்னார்.

கண்களைச் சுழற்றிக்கொண்டு, ஆனால் புருவங்களை இன்னமும் உயர்த்திக்கொண்டு டெலியானின் அந்தப் பணப் பையைக் கொடுத்தார்.

'ஆம், அது ரொம்ப அழகான பை. ஆமாம்' என்று சொல்லிய அவர், திடீரென்று முகம் வெளிறி, 'இதோ பாரும், வாலிபரே' என்றார்.

ராஸ்டோவ் பணப்பையைக் கையில் வாங்கி, அதையும் அதற்குள்ளிருந்த பணத்தையும் சோதித்துப் பார்த்து, டெலியானினை நோக்கினார். அந்த சிறிய அதிகாரி தமது வழக்கப்படிசுற்றிலும் தமது பார்வையை செலுத்தி வந்தார். திடீரென்று அவருக்கு சந்தோஷம் அதிகரிப்பதுபோலத் தோன்றியது.

'நான் வியன்னாவுக்குப் போனால், இதை அங்கே தொலைத்து விடப்போகிறேன். பாழாய் போகிற இந்த சிறிய நகரங்களில் பணத்தைச்செலவிடுவதற்கு இடமே கிடையாது. நல்லது, அதை என்னிடம் கொடும், வாலிபரே. நான் போகிறேன்' என்றார்.

ராஸ்டோவ் பேசவில்லை.

'நீர்? நீரும் இங்கே சாப்பிடப் போகிறீரா? இங்கே சாப்பாடு மிக நன்றாய் இருக்கிறது. சரி என்னிடம் அதைக் கொடும்' என்று மேலும் பேசினார், டெலியானின்.

பணப்பையை பெற்றுக்கொள்ளுவதற்காக அவர் தம் கையை நீட்டினார். ராஸ்டோவ் கொடுத்துவிட்டார். டெலியானின் பணப்பையை வாங்கி அலட்சியமாக தமது கால் சட்டையில் உள்ள ஜோபியில் சொருகினார். அவர் புருவங்களை உயர்த்திக்கொண்டு, வாயைச் சிறிது திறந்து கொண்டு அம்மாதிரி செய்தது, 'ஆமாம், என்னுடைய பையை என்னுடைய ஜேபியில் நான் போடுகிறேன். அது ரொம்ப சுலபம். அதைப் பற்றி மற்றவர்களுக்கு என்ன கவலை?' என்று சொல்லுவதுபோல் இருந்தது.

'நல்லது, வாலிபரே?' என்று அவர்பெருமூச்சோடு சொல்லி, தமது உயர்த்திய புருவங்களின் கீழே உள்ள கண்களால் ராஸ்டோவின் கண்களைப் பார்த்தார்.

மின்சாரப் பொறியைப் போன்ற ஒரு ஒளி டெலியானின் கண்களிலிருந்து ராஸ்டோவின் கண்களுக்குப் பாய்ந்து திரும்பியது. அதே மாதிரி மீண்டும் மீண்டும் அது பாய்ந்து திரும்பிக் கொண்டிருந்தது.

'இங்கே வாரும்' என்று ராஸ்டோவ் சொல்லி டெலியானினுடைய கையைப் பற்றி ஜன்னலுக்கு இழுத்துக் கொண்டு போனார். 'அந்தப் பணம் டெனைசாவினுடையது. நீர் அதை எடுத்துக் கொண்டீர்...' என்று அவர் டெலியானினுடைய காதிற்கு மேலாக முணுமுணுத்தார்.

'என்ன? என்ன? எவ்வளவு துணிச்சல் உமக்கு? என்ன?' என்றார் டெலியானின்.

ஆனால், இந்த வார்த்தைகள் பரிதாபத்தோடு கூடிய அதைரிய மான கதறலாகவும் மன்னிக்கும்படி கெஞ்சும் குரலாகவும் வெளிப்பட்டன. இவைகளை ராஸ்டோவ் கேட்டவுடன் சந்தேகம் என்ற ஒரு பெரும் பாரம் அவரை விட்டு நீங்கியது. அவர் சந்தோஷம் அடைந்தார். ஆனால், தமக்கு எதிராக நிற்கும் அந்த பரிதாபகரமான மனிதரைப் பார்த்து அவருக்கு இரக்கம் தோன்றியது. என்றாலும் அவர் ஆரம்பித்த காரியத்தை முடித்தாக வேண்டும்...'

'எனக்குத் தெரியும். அதை நான் நிரூபிக்க முடியும்' என்றார் ராஸ்டோவ்.

டெலியானினுடைய வெளிறிய பீதியடைந்த முகத்திலுள்ள ஒவ்வொரு நரம்பும் துடிக்க ஆரம்பித்தது. அவருடைய கண்கள் இங்கும் அங்கும் பரக்க பரக்க விழித்தன. அவருடைய பார்வை

ராஸ்டோவின் முகத்தைப் பார்க்காமல், கீழ் நோக்கியே சுற்றிக் கொண்டிருந்தது. அவர் தேம்பி அழுதது நன்றாய் கேட்டது.

'கோமகனே... ஒரு வாலிபனைக் கெடுக்க வேண்டாம்... அந்தப் பாழாய் போகிற பணம் இதோ இருக்கிறது, எடுத்துக்கொள்ளும்.' பணப்பையை அவர் மேஜை மீது வீசினார். 'எனக்கு ஒரு வயோதிக தந்தையும் தாயாரும் இருக்கிறார்கள்...'

ராஸ்டோவ் பணத்தை எடுத்தார். டெலியானினுடைய கண்களைப் பார்க்காமல், ஒரு வார்த்தையும் பேசாமல் அறையை விட்டு வெளியேபோனார். ஆனால், வாசலில் அவர் நின்று மீண்டும் திரும்பி வந்தார். கண்ணீர் நிறைந்த கண்களோடு, 'அட கடவுளே, இதை எப்படி நீர் செய்யலாம்?' என்று கேட்டார்.

'கோமகனே...' என்ற டெலியானின் கூறி அவர் பக்கம் நெருங்கினார்.

'என்னைத் தொட வேண்டாம்' என்று ராஸ்டோவ் கூறி பின் வாங்கினார். உமக்குத் தேவையிருந்தால் பணத்தை எடுத்துக் கொள்ளும்' என்று கூறி பணப்பையை வீசிவிட்டு, ஹோட்டலை விட்டு வெளியே ஓடினார்.



டெனைசாவின் இருப்பிடத்தில் அன்று மாலை குதிரைப் படை அதிகாரிகள் கூடியிருந்தார்கள். ஒரு பரபரப்பான விவாதம் நடந்துகொண்டிருந்தது. உயர மான வரும், சாம்பல் நிற தலைமுடியும் பெரிய மீசைகளும் கொண்டவரும், அவருடைய பரந்த முகத்தில் பல சுருக்கங் களை உடையவருமான ஒரு கேப்டன் ராஸ்டோவைப் பார்த்து, 'நான் சொல்லுகிறேன், ராஸ்டோவ், நீர் கர்னலிடம் மன்னிப்பு கேட்டுத்தான் ஆகவேண்டும்' என்றார். ராஸ்டோவின் முகம் ஆத்திரத்தால் சிவந்திருந்தது.

அந்த கேப்டன், கிர்ஸ்டென், இரண்டு தடவைகள் மான மரியாதைக் காரியங்களை முன்னிட்டு உத்தியோகஸ்தர் பதவியிலிருந்து சாதாரண சிப்பாயாக இறக்கப்பட்டார். மீண்டும் தமது முயற்சியால் பழைய பதவியை அடைந்து கொண்டார்.

'என்னைப் பொய்யர் என்று அழைக்க நான் ஒருவரையும் விட முடியாது' என்று கூவினார், ராஸ்டோவ். நான் பொய் சொன்னதாக அவர் என்னிடம் கூறினார். அவர் பொய் சொன்னதாக நான் பதிலுக்குக் கூறினேன். அதோடு விஷயம் நிற்கிறது. எனக்கு ஒய்வு

கொடுக்காமல், தினம் அவர் என்னை வேலை வாங்கிக் கொண்டிருக்கலாம். அல்லது என்னைக் கைது செய்யலாம். ஆனால், நான் மன்னிப்பு கேட்க்கும்படி ஒருவரும் என்னைச் செய்ய முடியாது. ஏனெனில், இந்தப் படையின் கமாண்டர் என்ற முறையில்,எனக்கு திருப்தி அளிப்பது அவருடைய மரியாதைக்கு குறைச்சல் என்று அவர் நினைப்பாரானால்...'

'ஒரு வினாடி பொறும்,எனது அன்பான பேர்வழியே, இதைக் கவனியும்' என்று அந்தக் கேப்டன் தனது ஆழ்ந்த குரலில் இடைமறித்து, அமைதியோடு தமது நீண்ட மீசையைத் தடவிக் கொண்டிருந்தார். 'மற்ற அதிகாரிகள் முன்னிலையில் நீர் கர்னலிடம் ஒரு அதிகாரி திருடியதாகச் சொன்னீர்...'

'அந்த உரையாடல்,மற்ற அதிகாரிகளின் முன்பு ஆரம்பமாயிற்று என்றால், அதற்கு நான் பொறுப்பல்ல. அவர்கள் முன்பாக நான் பேசியிருக்கக்கூடாது என்று சொல்லலாம். ஆனால், நான் ஒரு ராஜதந்திரி அல்ல. அதனால்தான் நான் குதிரைப் படையில் சேர்ந்தேன். இங்கே அந்த நாசூக்குகளெல்லாம் ஒருவருக்கு அவசியம் இருக்காது என்று நினைத்தேன். நான் பொய் சொல்லுகிறேன் என்று அவர் சொல்லுகிறார். ஆகவே, அவர் எனக்கு பரிகாரம் கொடுக்கட்டும்...'

'அதெல்லாம் ரொம்ப சரி, நீர் ஒரு கோழை என்று ஒருவரும் நினைக்கவில்லை. இப்பொழுது உள்ள விஷயம் அதுவல்ல. டெனைசாவைக் கேளும். ஒரு பட்டாளக் கமாண்டரிடமிருந்து ஒருதொண்டர் பரிகாரம் பெறுவது என்பது பொருத்தமதான காரியமா என்பதை அவரிடமே கேளும்.'

மீசையைக் கடித்துக்கொண்டு, உரையாடலைக் கேட்டுக் கொண்டு, அதில் கலந்துகொள்ள விருப்பமில்லாதவர்போல, இருண்ட முகத்தோடு டெனைசாவ் உட்கார்ந்திருந்தார். கேப்டன் கேட்ட கேள்விக்கு, இல்லை என்று சொல்லுவதைப்போல தலையை ஆட்டினார்.

'மற்ற அதிகாரிகள் முன்பாக இந்த ஆபாசமனா விஷயத்தைப் பற்றி நீர் கர்லிடம் பேசினீர். அந்த பாக்டானிச் (கர்னலின் பெயர்) உமது வாயை மூடினார்.'

'அவர் என் வாயை மூடவில்லை. நான் உண்மையற்றதைப் பேசுகிறேன் என்று சொன்னார்.'

'நல்லது, அப்படியே வைத்துக்கொள்ளும். நீர்அவரிடம் ஏராளமாக அசட்டுத்தனம் பேசினீர். அதற்காக மன்னிப்பு கோரவேண்டும்.'

'எவ்விதத்திலும் முடியாது' என்றார், ராஸ்டோவ்.

'உம்மிடமிருந்து இதை நான் எதிர்பார்க்கவில்லை' என்று கேப்டன் கடுமையோடும் கவலையோடும் பேசினார். 'நீர் மன்னிப்பு கேட்க விரும்பவில்லை. ஆனால், அது அவருக்கு மட்டுமல்ல, பட்டாளம் முழுவதற்குமாகும். எங்கள் எல்லாருக்கு மாகும். உம்மையே எல்லாவற்றிற்கும் குறை சொல்லவேண்டும். விஷயம் இதுதான். நீர் இந்த விஷயத்தைப் பற்றி நன்றாய் யோசித்து, பின்னால் ஆலோசனை கேட்டிருக்க வேண்டும். ஆனால், அப்படி நடக்கவில்லை. நீர் போய் அதிகாரிகள் முன்பாக நேரடியாக உளறிக் கெட்டி விட்டீர். இப்பொழுது கர்னல் என்ன செய்ய வேண்டும்? அந்த சிறிய அதிகாரியை விசாரித்து,பட்டாளம் முழுவதையுமே அவமானத்திற்குள்ளாக்க வேண்டுமா? ஒரு அயோக்கியனுக்காக பட்டாளம் முழுவதையுமே அவமானப்படுத்த வேண்டுமா? இந்த விஷயத்தைப் பற்றி நீர் இப்படித்தான் நோக்குகிறீரா? நாங்கள் அப்படி நோக்கவில்லை. பாக்டானிச் ஒரு அசையாத கல்லைப் போன்றவர். உண்மையில்லாத நீர் பேசுவதாக அவர் சொன்னார். அது இனிமை இல்லாமல் இருக்கலாம். ஆனால் இழுத்து வைத்துக்கொண்டீர். இப்பொழுது அதை சரிசெய்து விடலாம் என்று பார்த்தால், நீர் மன்னிப்பு கேட்பதை உமது அகங்காரம் தடுக்கிறது. எல்லா விஷயத்தையும் ஊர் அறியச் செய்ய வேண்டும் என்று நீர் விரும்புகிறீர். உமக்கு ஏதோ கொஞ்சம் அதிகமாய் வேலை கொடுத்ததற்காக நீர் கோபம் அடைகிறீர். ஆனால்,ஒரு வயதான கண்ணியமான அதிகாரியிடம் ஏன் மன்னிப்பு கேட்கக்கூடாது? பாக்டானிச் எப்படி இருந்தாலும் சரி, அவர் என்னவோ ஒரு கண்ணியமான், தைரியமான,வயதான கர்னல். உமக்கு அவமானம் வந்துவிட்டது என்று வெகு சீக்கிரம் நினைக்கிறீர். ஆனால்,முழு பட்டாளத்தையும் அவமானப்படுத்த நீர் தயங்கவில்லை.' கேப்டனின் குரல் நடுங்கியது. 'நீர் பட்டாளத்தில் வந்து சேர்ந்து வெகுகாலம் ஆகவில்லை, எனது வாலிபரே. இன்று நீர் இங்கு இருக்கிறீர். நாளை, நீர் பெரிய அதிகாரிகளின் உதவியாளராக எங்கேயாவது நியமிக்கப்படலாம். அச்சமயம் யாராவது 'பாவ்லாகிராட் அதிகாரிகளில் திருடர்களும் இருக்கிறார்கள்' என்று சொன்னால், நீர் தமாஷாக விரல்களை சுடக்குப் போட்டுக் கொண்டிருக்கலாம். ஆனால், எங்களுக்கு அப்படி அல்ல. நான் சொல்லுவது சரிதானே, டெனைசாவ்? எங்களுக்கு அப்படியல்ல.'

டெனைசாவ் மௌனமாய் இருந்தார். அசையவில்லை. ஆனால் அடிக்கடி ஒளிர்விடும் தமது கறும் கண்களால் ராஸ்டோவைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

'உமது மதிப்பைத்தான் நீர் பெரிதாய் நினைக்கிறீர். மன்னிப்பு கொடுக்க விரும்பவில்லை. ஆனால், நாங்கள் வயதானவர்கள். இந்தப் பட்டாளத்தில் இருந்தே வளர்ந்தவர்கள். கடவுளின் புண்ணியத்தினால் இந்தப் பட்டளாத்திலேயே மடியப் போகிறவர்கள். ஆகவே இந்தப் பட்டாளத்தின் பெருமையை நாங்கள் உயர்வாய்கருதுகிறோம். பாக்டானிச்சிற்கு அது தெரயும். ஓ, நாங்கள் பெருமையாய் கருதுகிறோம், நண்பரே. இதெல்லாம் சரியல்ல; சரியல்ல. நீர் கோபப்பட்டாலும் சரி, படாவிட்டாலும் சரி, நான் எப்பொழுதும் உண்மையையே சொல்வேன். அது சரியல்ல.'

கேப்டன் எழுந்து ராஸ்டோவிடமிருந்து திரும்பினார்.

'அது உண்மைதான், நாசமாய் போக' என்று துள்ளிக் குதித்து டெனைசாவ் கத்தினார். 'இப்பொழுது என்ன, ராஸ்டோவ், இப்பொழுதுதென்னன?'

ராஸ்டோவ் சிவப்பாகவும் வெள்ளையாகவும் மாறி மாறித் தோன்றினார். முதலில் ஒரு அதிகாரியை பார்ப்பார். அப்புறம் இன்னனொருவரை பார்ப்பார்.

'இல்லை, கனவான்களே, இல்லை....நீங்கள் நிக்கக் கூடாது... எனக்கு நன்றாய் புரிகிறது. நீங்கள் என்னைப் பற்றி அப்படி நினைப்பது தவறு... நான்... எனக்காக... பட்டாளத்தின் கௌரவத்திற்காக... ஆ, நல்லது... அதை நான் காரியத்தில் காட்டுகிறேன். எனக்கு இந்தக் கொடியின் கௌரவமே... நல்லது, பரவாயில்லை. என் மீதுதான் குற்றம் என்பது உண்மை. என்னையே முழுவதும் குற்றம் சொல்லவேண்டும். நல்லது, உங்களுக்கு வேறு என்ன வேண்டும்?...'

'அப்படி வாரும். அதுதான் சரி, கோமகனே' என்று கேப்டன் கூவி, திரும்பி ராஸ்டோவின் தோளில் தமது பெரிய கையால் தட்டிக் கொடுத்தார்.

'நான் சொல்லுகிறேன், அவர் ஒரு அருமையான பேர்வழி' என்று கத்தினார் டெனைசாவ்.

'அது ரொம்ப நல்லது, கோமகனே' என்றுஅவர் சம்மதித்ததற்காக அவரைப் பாராட்டுவதுபோல 'கோமகன்' என்ற பட்டப் பெயரால், கேப்டன் பேச ஆரம்பித்தார். 'போய் மன்னிப்பு கேளும், மேன்மை தங்கியவரே. ஆம், நீர் போம்.'

'கனவான்களே, நான் எது வேண்டுமானாலும் செய்கிறேன். அதைப் பற்றி ஒரு வார்த்தைகூட அப்புறம் நான் பேசமாட்டேன். ஆனால், மன்னிப்பு கேட்பது மட்டும் என்னால் முடியாது.

கடவுளே, என்னால்முடியாது. உங்களுக்கு என்ன வேண்டுமோ, செய்துகொள்ளுங்கள். சிறு பையன் மாதிரி, எப்படி நான் போய் மன்னிப்பு கேட்க முடியும்?' என்று ராஸ்டோவ் கெஞ்சும் குரலில் பேசினார்.

டெனைசாவ் சிரிக்க ஆரம்பித்தார்.

'அது உமக்குத்தான் கெடுதல். பாக்டானிச் ஒரு பழிவாங்கும் ஆசாமி. உமது பிடிவாதத்திற்கான பலனை நீர் அடைவீர்' என்றார், கிர்ஸ்டென்.

'இல்லை, நான் உண்மையாகச் சொல்லுகிறேன். 'அது பிடிவாதமல்ல. இந்த உணர்ச்சியை என்னால் விளக்க முடிய வில்லை. என்னால் முடியவில்லை...'

'நல்லது, அது உம்மைப் போலவே இருக்கிறது' என்றார், கேப்டன்.

'அந்த அயோக்கியன் எங்கே போனான்?' என்று டெனைசா விடம் கேட்டார்.

'அவன் உடம்புக்கு சரியில்லை என்று எழுதியிருக்கிறான். பணியிலிருந்து இருந்து அவன் பெயரை நாளை நீக்கிவிட வேண்டியது' என்றார், டெனைசாவ்.

'அது வியாதிதான். அதை வேறு விதமாகக் கூற முடியாது' என்றார் கேப்டன்.

'வியாதியோ இல்லையோ, என் வழிக்கு அவன் வராமல் இருந்தால் நல்லது. அவனை கொன்று போடுவேன்' என்று ரத்தவெறித்தொனியில் கத்தினார், டெனைசாவ்.

அப்பொழுது ஜெர்கோவ் அறைக்குள் நுழைந்தார்.

'நீர் இங்கு எங்கே வந்தீர்?' என்று புதிதாய் வந்தவரைப் பார்த்து, அங்கிருந்த அதிகாரிகள் கேட்டார்கள்.

'நாம் உடனே யுத்த முனைக்குப் போகவேண்டும், கனவான்களே. தமது முழுச்சேனையோடு மாக் சரணடைந்து விட்டார்.'

'அது உண்மையல்ல.'

'நானே அவனைப் பார்த்தேன்.'

'என்ன? உண்மையாகவா மாக்யைப் பார்த்தீரா? கால்களோடும் கைகளோடும் பார்த்தீரா?'

'உடனே யுத்தம், ஊடனே யுத்தம் இந்தச் செய்தியைக் கொண்டு வந்தவருக்கு ஒரு புட்டி கொண்டு வாருங்கள். ஆனால், நீர் எப்படி இங்கு வந்தீர்?'

'அந்த பிசாசு, மாக்கின் நிமித்தமாக என்னை பட்டாளத்திற்குத் திரும்ப அனுப்பி விட்டார்கள். என்னைப் பற்றி, ஒரு ஆஸ்திரிய ஜெனரல் புகார் செய்தார். மாக்கின் விஜயத்திற்காக நான் அவரைப் பாராட்டினேன்...என்ன சமாச்சாரம், ராஸ்டோவ்? வெந்நீரில் குளித்துவிட்டு வெளியே வந்தவர் மாதிரி உம்மைப் பார்த்தால் தோன்றுகிறதோ?'

'ஓ, என் அருமைப் பேர்வழியே. இரண்டு நாட்களாக இங்கே தவித்துக்கொண்டிருக்கிறோம்.'

பட்டாளத்தின் உதவியாளர் உள்ளே வந்து ஜெர்கோவ் சொல்லியதை உறுதி செய்தார். மறு நாள் காலையில் அந்த இடத்தை விட்டு முன்னேறிச் செல்ல வேண்டும் என்று உத்தரவாய் இருப்பதாக அவர் கூறினார்.

'நாம் யுத்தத்திற்குப் போகிறோம், கனவான்களே.'

'நல்லது, கடவுளுக்கு நன்றி. வெகுகாலமாகவே நாம்இங்கே உட்கார்ந்துகொண்டு இருக்கிறோம்.'



குட்டுஜோவ் வியன்னாவை நோக்கிப் பின் வாங்கினார். போகும்போது பிராவ்னாவில் உள்ள இன் என்ற நதியின் பாலங்களையும், லின்ஸுக்குப் பக்கத்திலுள்ள டிரான் என்ற நதியின் பாலங்களையும் உடைத்துவிட்டுப் போனார். அக்டோபர் 23-ந்தேதியன்று என்ஸ் என்ற நதியை ருஷ்யத் துருப்புகள் கடந்து கொண்டிருந்தன. நடுப்பகலில் ருஷ்யத் துருப்புகளின் பொருள்கள் வண்டிகளும் பீரங்கிகளும் துருப்புகளும் என்ஸ் நகரத்தின் வழியாகப் போய்க் கொண்டிருந்தார்கள். அங்கிருந்த என்ஸ் நதிப் பாலத்தின் இரு ஓரங்களிலும், இரு வரிசைகளாக துருப்புகள் கடந்து கொண்டிருந்தன.

அப்பொழுது இலையுதிர் காலம். அன்று மழை பெய்து கொண்டிருந்தது. பாலத்தைக் காப்பதற்காக உயரமான இடத்தில் ருஷ்ய பீரங்கிகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தனன. எதிரே பிரம்மாண்டமான பரந்த வெளி தோன்றியது. சில சமயங்களில் சாய்வாகப் பெய்யும் மழை, அந்தப் பரந்த வெளியை மூடி நிற்கும். திடீரென்று சூரிய வெளிச்சத்தில் அது மீண்டும் தோன்றும். தூரத்தில் காண்பவைகள் மின்னிக்கொண்டு, அப்பொழுதுதான் வார்ணீஷ் அடித்ததுபோல் தோன்றின. கீழே ஒரு சிறிய நகரம் தெரிந்தது.

அதிலே வெள்ளை, சிவப்புக் கூரை போட்ட வீடுகளும் மாதா கோயிலும் ஒரு பாலமும் தோன்றின. அந்தப் பாலத்தின் இரு வரிசைகளிலும் ருஷ்யத் துருப்புகளின் கூட்டம் தள்ளிக்கொண்டு போய்க்கொண்டிருந்தன. டான்யூப் நதியின் வளைவில், படகுகளும் ஒரு தீவும், அதிலே ஒரு மாளிகையும் நந்தவனமும், அவற்றைச் சுற்றிலும் என்ஸ் நதியும் டான்யூப் நதியும், அங்கே கலந்து பாயும் தண்ணீரும் தெளிவாய்த் தெரிந்தன. டான்யூப் நதியின் இடது கரை பாறைகளாய் இருந்தன. அப்பக்கத்தில் பைன்மரக் காடுகளும், அவற்றிற்குப் பின்னால் நீல நிற மலை அருவிகளும், பச்சை நிற மரங்களின் நுனிகளும் காணப்பட்டன. ஒரு பைன் காட்டிற்குப் பின்னால் ஒரு கன்னிகை மாடத்தின் ஸ்தூபிகள், எல்லாவற்றிற்கும் மேலாகத் தெரிந்து கொண்டிருந்தன. வெகு தூரத்தில் என்ஸ் நதியின் மற்றொரு பகுதியில், எதிரியின் குதிரைப் படை காவல் வீரர்கள் தெளிவாய்த் தெரிந்தார்கள்.

பீரங்கிகளுக்கு மத்தியில் குன்றின் முகபாகத்தில் படையின் பின் பகுதி ஜெனரல் ஒரு அதிகாரியோடு நின்று கொண்டிருந்தார். அவர் தமது கையிலுள்ள தொலைநோக்கிக் கண்ணாடியால் எதிரில் உள்ள பரந்த வெளியைச் சுற்றிலும் கூர்மையாகக் கவனித்துக் கொண்டிருந்தார். அவர்களுக்குப் பின்னால் சிறிது தூரத்தில் நெஸ்வைட்ஸ்கி ஒரு பீரங்கி வண்டியின் நுகக்காலில் அமர்ந்திருந்தார். அவரை பின் படைக்கு சேனாதிபதி அனுப்பி யிருந்தார். அவருடன் வந்த ஒரு கோசாக் ஒரு பெரிய பையையும் ஒரு புட்டியையும் எடுத்து, கும்மல் என்ற மதுவோடு சில அதிகாரிகளுக்கு நெஸ்வைட்ஸ்கி கொடுத்துக்கொண்டிருந்தார். அதிகாரிகள் சந்தோஷத்தோடு அவரை சூழ்ந்திருந்தார்கள். சிலர் முட்டுகளில் உட்கார்திருந்தார்கள். சிலர் துருக்கியர் மாதிரி ஈரமான புல் தரையில் சம்மணம் போட்டு உட்கார்ந்திருந்தார்கள்.

'சரி, அந்த மாளிகையைக் கட்டினாரே, ஆஸ்திரியன் இளவரசர், அவர் முட்டாளல்ல. அது ஒரு அழகான இடம். நீங்கள் ஏன் ஒன்றும் சாப்பிடாமல் இருக்கிறீர்கள், கனவான்களே?' என்று நெஸ்வைட்ஸ்கி சொல்லிக்கொண்டிருந்தார்.

'உங்களுக்கு மிக்க நன்றி, இளவரசே' என்று அந்த அதிகாரிகளில் ஒருவர் சொன்னார். சேனாதிபதியின் பரிவாரத்தைச் சேர்ந்த அவ்வளவு பெரிய முக்கியத்துவம் வாய்ந்த ஒருவரோடு பேசுவதில் அவர் மகிழ்ச்சி அடைவதுபோல் தோன்றினார். 'இது ஒரு மனோகரமான இடம். நந்தவனத்தையொட்டி நாங்கள் வந்தபோது இரண்டு மான்களைக் கண்டோம். என்ன சிலாக்கிமான வீடு!'

'இங்கே பாரும், இளவரசே' என்றார் மற்றொருவர். அவருக்கு இன்னொரு பை பணியாரத்தைச் சாப்பிடுவதில் மிகுந்த பிரியமுண்டு. ஆனால், நாணம் கொண்டார். ஆகவே அந்த கிராமாந்திர காட்சிகளைப் பார்ப்பவர்போல நடித்தார். 'பாருங்கள், நமது காலாட்படை அதற்குள்ளாக அங்கே போய்விட்டது. அந்த கிராமத்திற்கு அப்புறம் உள்ள புல் வெளியைப் பாருங்கள். மூன்று பேர் எதையோ இழுத்துக்கொண்டு வருகிறார்கள். அவர்கள் அந்த மாளிகையை கொள்ளையடித்து விடுவார்கள்' என்று திருப்தி அடைந்தவர் போல கூறினார்.

'கண்டிப்பாய் செய்வார்கள்' என்றார் நெஸ்வைட்ஸ்கி.

'இல்லை, அந்த இடத்திற்குப் போய் சேர வேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம்' என்று சொல்லி, அவருடைய அழகிய வாயில் ஒரு பை பணியாரத்தைப் போட்டு சுவைத்துக் கொண்டிருந்தார்.

ஸ்தூபிகளோடு தோன்றிய அந்த கன்னிமாடத்தை ஒரு புன்னகையோடு சுட்டிக்காட்டினார். அவருடைய கண்கள் இடுங்கி மின்னின.

'அதுதான் பலே பேஷாயிருக்கும், கனவான்களே.'

அதிகாரிகள் சிரித்தார்கள்.

'அந்தக் கன்னிகைகளை கொஞ்சம் காபுரா செய்யலாம். அங்கே இத்தாலிய குமாரிகள்கூட இருப்பதாகச் சொல்லுகிறார்கள். அதற்காக என்னுடைய ஆயுளில் ஐந்து வருஷங்களைக்கூட கொடுக்க நான் தயார்.'

'உற்சாகமில்லாத வாழ்க்கை வாழ்வதாகக்கூட அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கக்கூடும்' என்று ஒரு தைரியமான அதிகாரி சிரித்ததுக்கொண்டு சொன்னார்.

இதற்கு மத்தியில் பரிவார அதிகாரி அங்கிருந்த ஜெனரலுக்கு எதையோ சுட்டிக்காட்டிக்கொண்டிருந்தார். அவர் தமது தொலைக் நோக்கிக் கண்ணாடியால் பார்த்தார்.

'ஆம். அப்படித்தான். அப்படித்தான்' என்று ஜெனரல் கோபத்தோடு கூறினார். தமது தொலைக்நோக்கிக் கண்ணாடியைக் கீழே இறக்கிவிட்டுத் தோள்களைக் குலுக்கினார். 'அப்படித்தான். பாலத்தைக் கடக்கும்போது அவர்கள் பீரங்கியால் சுடுவார்கள். ஆனால் நமது துருப்புகள் ஏன் வீணாகக் காலங்கடத்திக் கொண்டிருக்கிறார்கள்?'

எதிர்க்கரையில் தொலைக்நோக்கிக் கண்ணாடி இல்லாமலே எதிரிகளை இப்பொழுது பார்க்க முடிந்தது. அவர்களுடைய

பீரங்கிகளில் இருந்து பால் நிறமான வெள்ளைப் புகை கிளம்பிக்கொண்டிருந்தது. தூரத்தில் ஒரு குண்டு சப்தம் கேட்டது. ருஷ்யத் துருப்புகள் பாலத்தைக் கடப்பதற்கு அவரசரப்படுவது நன்றாய் தெரிந்தது.

வாயில் போட்டதை மென்றுகொண்டே நெஸ்வைட்ஸ்கி எழுந்து, புன்சிப்போடு ஜெனரலிடம் போனார்.

'மேன்மை தங்கியவரே, நீங்கள் ஏதாவது சிறிது சாப்பிட்டால் என்ன? என்றார்.

'அது ரொம்பக் கெடுதலானது. நமது ஆள்கள் நேரத்தை வீணாக்கிறார்கள்' என்று ஜெனரல் இவருக்கு பதில் அளிக்காமல் பேசிக்கொண்டிருந்தார்.

' நான் அங்கே போவது நல்லதல்லவா, மேன்மை தங்கியவரே?' என்று கேட்டார் நெஸ்வைட்ஸ்கி.

'ஆம், தயவுசெய்து போம்' என்று ஜெனரல் சொல்லி முன்னாலேயே கொடுக்கப்பட்ட உத்தரவை மீண்டும் தெளிவாய் விளக்கினார். குதிரைப் படை வீரர்கள் கடைசியாகத்தான் பாலத்தைக் கடக்க வேண்டும். கடந்த பின்பு நான் உத்தரவிட்டபடி பாலத்தை எரத்துவிட வேண்டும். பாலத்தில் வைக்கப்பட்டிருக்கும் தீப்பற்றும் சாமான்களை சரியாய் இருக்கின்றனவா என்று மறுபடியும் சோதிக்க வேண்டும்.'

'அப்படியே' என்றார் நெஸ்வைட்ஸ்கி.

அவர் கோசாக்கை தம்மோடு குதிரையில் வரும்படி அழைத்தார். அந்தப் பெரிய பையையும் புட்டியையும் அங்கேயே வைத்துவிடச் சொல்லிவிட்டு,தமதுபருமனான சரீரத்தோடு சுலபமாகத் தாவி சேணத்தில் அமர்ந்தார்.

'உண்மையாகவே நான் அந்தக் கன்னிமாடப் பெண்களைப் போய் பார்ப்பேன்' என்று தம்மை கவனித்துக்கொண்டிருந்த அதிகாரிகளிடம் புன்முறுவலுடன் சொல்லிவிட்டு, குன்றிலிருந்து கீழ் நோக்கிச் செல்லும் பாதையில் குதிரையை விட்டார்.

'நமது குண்டு எவ்வளவு தூரம் போகிறது என்று பார்க்கலாம் கேப்டன்? செய்து பார்க்கலாமே? நேரம்போவதற்கு ஒரு சின்ன தமாஷ் நடக்கட்டும்' என்று பீரங்கிப் படை அதிகாரியைப் பார்த்து ஜெனரல் கூறினார்.

'வீரர்களே, பீரங்கிகளுக்குப் போங்கள்' என்று உத்தரவிட்டார் அதிகாரி.

நெருப்பு மூட்டத்தில் குளிர் காய்ந்துகொண்டிருந்த வீரர்கள், சந்தோஷத்தோடு பீரங்கிகளிடம் சென்று, குண்டுகளைப் பீரங்கி களில் கெட்டித்தார்கள்.

'ஒரு தடவை' என்று உத்தரவு வந்தது.

முதலாவது குண்டு வேகமாய் வெளிக் கிளம்பியது. செவிடும்படி பீரங்கி முழங்கியது. 'உஸ்' என்ற சப்தத்தோடு கீழே போய்க் கொண்டிருந்த துருப்புகளின் தலைகளுக்கு மேலாக குண்டு பறந்து சென்று எதிரிகளின் முன்பாக சிறிது தூரத்தில் விழுந்து வெடித்தது. அது வெடித்த இடத்தில் கொஞ்சம் புகை கிளம்பியது.

சப்தத்தைக் கேட்டு அதிகாரிகளின் முகங்களும் வீரர்களின் முகங்களும் மலர்ந்தன. ஒவ்வொருவரும் எழுந்து நின்று குன்றுக்குக் கீழே போய்க்கொண்டிருந்த துருப்புகளையும் வெகு தூரத்தில் வந்துகொண்டிருந்த எதிரிகளின் துருப்புகளையும் கவனித்துக் கொண்டிருந்தார்கள். அதே சமயத்தில் மேகங்களுக்குப் பின்னால் இருந்து சூரியன் முழுவதுமாக வெளிப்பட்டான். முதல் குண்டின் தெளிவான சப்தமும் பிரகாசமான சூரியனின் ஜொலிஜொலிப்பும் கலந்து மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் கொடுத்தன.

## 2

## 7

எதிரியின் இரண்டு பீரங்கிக் குண்டுகள் பாலத்திற்கு மேலாகப் பறந்து போயின. பாலத்தில் நெருக்கடியாய் இருந்தது. பாலத்தில் பாதித்தூரத்திற்கு அப்புறம் இளவரசர் நெஸ்வைட்ஸ்கி தமது குதிரை யிலிருந்து இறங்கி நின்று கொண்டிருந்தார். அவருடைய பெரிய உடம்பு பாலத்தின் கைப்பிடிக் கம்பிகளில் அழுந்திக் கொண்டிருந்தது. தமக்குப் பின்னால் சில அடிகளுக்கு அப்புறம், இரண்டு குதிரைகளின் கடிவாளங்களைக் கையில் பிடித்துக் கொண்டு அந்த கோசாக் நின்றுகொண்டிருந்தான். அவனைப் பார்த்து சிரித்தார். முன்னேறுவதற்காக இளவரசர் நெஸ்வைட்ஸ்கி ஒவ்வொரு தடவையும் முயற்சித்தபோதெல்லாம் சிப்பாய்களும் வண்டிகளும் அவரைப் பின்தள்ளி கைப்பிடிக் கம்பிகள் மீது அழுத்திவைத்தன. அச்சமயம் அவர் செய்யக்கூடியதெல்லாம் புன்சிரிப்பு ஒன்றுதான்.

ஒரு சாமான் வண்டியை ஓட்டிக்கொண்டு வந்த சிப்பாய் தனது வண்டியை மேலும் மேலும் காலாட்படையின் மீது நெருக்கினான். அவனுடைய வண்டிச் சக்கரங்களையும் குதிரைகளையும்

நெருக்கிக்கொண்டு சிப்பாய்கள் போய்க்கொண்டிருந்தார்கள். அவனைப் பார்த்து கோசாக், 'நீ என்ன ஆசாமியப்பா! ஒரு வினாடி உன்னால் பொறுத்திருக்க முடியவில்லையா? மேலே போக வேண்டும் என்று ஜெனரல் விரும்புவது உனக்குத் தெரிய வில்லையா?' என்று கேட்டான்.

ஆனால் அந்த வண்டிக்காரன் 'ஜெனரல்' என்ற வார்த்தையை கவனிக்கவே இல்லை. தனது பாதையை மறித்துக்கொண்டிருக்கும் சிப்பாய்களைப் பார்த்து, 'இதோ, வாலிபர்களே, இடது பக்கமாகப் போங்கள். ஒரு வினாடி பொறுங்கள்' என்று கத்தினான். ஆனால், அந்த சிப்பாய்கள் தோளோடு தோள்பொருந்தி, தங்கள் துப்பாக்கி சனியன்கள் ஒன்றோடு ஒன்று உரசிக்கொண்டிருக்க, நெருக்கமாக ஒரு அடர்ந்த கூட்டம் போல, பாலத்தின் மீது போய்க் கொண்டிருந்தார்கள். கைப்பிடிக் கம்பிகளுக்கு மேலாக இளவரசர் நெஸ்ட்ஸ்கி கீழே பார்த்தார். என்ஸ் நதியின் வேகமான இரைச்சலோடு கூடிய சிறிய அலைகள், பாலத்தின் தூண்களைச் சுற்றி எழுது சுழன்று, ஒன்றை ஒன்று துரத்திக்கொண்டு சென்றன. பாலத்தின் மேலே பார்த்தபோது, சீருடையும் கழுத்துப் பட்டையும் தலைத் தொப்பியும் பொருள்களையும் துப்பாக்கிச் சனியனும் நீண்ட துப்பாக்கியும் அணிந்துகொண்டிருந்த சிப்பாய்கள், உயிருள்ள அலைகள் போலக் காணப்பட்டார்கள். அவர்களுடைய அகன்ற கன்ன எலும்புகளும் அழுந்திய கன்னங்களும் சிரத்தையற்ற களைப்புள்ள தோற்றங்களும் நன்றாய் தெரிந்தன. பாலத்தின் மேலுள்ள பலகைகளை மூடியிருந்த சகதியில் அவர்கள் நடந்து போய்க்கொண்டிருந்தார்கள். ஒரே மாதிரியான இந்த மனித அலைகளில், சில சமயம் என்ஸ் நதி அலைகளில் தோன்றும் வெள்ளை நுரையைப்போல, ஒரு அதிகாரி நீண்ட கோட்டு அணிந்து, இந்த சிப்பாய்களின் தோற்றத்திற்கு நேர்மாறான முகத் தோற்றத்தோடு முண்டியடித்துப் போய்க்கொண்டிருப்பார். நதியில் ஒரு கட்டை அகப்பட்டு சுழல்வதைப்போல, சில சமயம் ஒரு குதிரைப்படை வீரர் கால்நடையிலும் ஒரு சேவகனோ அல்லது ஒரு நகரத்தானோ அந்த காலாட்படையின் அலைகளுக்கு ஊடாகப் போய்க்கொண்டிருப்பார்கள். ஒரு உத்திரம் நதியில்மிதந்து வருவதைப்போல, சில சமயம் ஒரு அதிகாரியின் அல்லது ஒரு கம்பெனியின் சாமான் வண்டி, உயரமாக அடுக்கிவைக்கப்பட்ட சாமான்களோடும் அவற்றைத் தோலால் மூடப்பட்டும் நாலா பக்கமும் சிப்பாய்களால் நெருக்கப்பட்டும் பாலத்தின் மீது போய்க்கொண்டிருக்கும்.

'அணை உடைந்தது போலல்லவா இருக்கிறது. இன்னும் வர வேண்டியவர்கள் பலர் இருக்கிறார்களே?' என்று அதைரியத்தோடு கோசாக் கேட்டான்.

'பத்து லட்சத்திற்கு ஒருவர் குறைய இன்னும் வரவேண்டியது இருக்கிறது' என்று கிழிந்த கோட்டு அணிந்துகொண்டிருந்த ஒரு கோமாளி சிப்பாய் கண்ணைச் சிமிட்டிக்கொண்டே பதிலளித்தான். அவன் கடந்துபோய் அவனுக்குப் பின்னால் ஒரு கிழவன் வந்தான்.

'இப்பொழுது அவன் (அவன் என்று சொல்லுவது எதிரியை) பாலத்தின் மீது சுடுவானானால் உன்னால் சொரிந்து கொள்ளக்கூட முடியாது' என்று அந்த கிழட்டு சிப்பாய் துக்கத்தோடு ஒரு தோழனிடம் கூறினான்.

அந்த சிப்பாயும் கடந்தான். அவனுக்குப் பின்னால் வண்டியில் அமர்ந்து ஒருவன் வந்தான்.

'என்னுடைய கால் பட்டிகளை எந்தப்பிசாசு எடுத்துக்கொண்டு போயிற்று?' என்று சொல்லி ஒரு சிப்பாய் வண்டிக்குப் பின்னால் ஓடி, வண்டிக்குள் துளாவிக்கொண்டிருந்தான்.

அவனும் வண்டியோடு கடந்தான். அப்புறம் சில களிப்பு நிறைந்த சிப்பாய்கள் வந்தார்கள். அவர்கள் குடித்தவர்கள் என்று தோன்றியது.

'அப்புறம், பழைய பேர்வழியே, அவன் தனது துப்பாக்கிக் கட்டையால் பற்களில் அவனுக்கு ஒன்று கொடுத்தான்...' என்று ஒரு சிப்பாய் தனது கோட்டை மேல் இழுத்துக் கட்டிக்கொண்டு, கையை வேகமாய் வீசிக்கொண்டு எக்காளத்தோடு சொன்னான்.

'அந்தத் தொடைக்கறி மிக ருசியாய் இருந்தது...' என்று உரக்கச் சிரித்துக்கொண்டு ஒருவன் பதிலளித்தான். அவர்களும் கடந்தார்கள். ஆகவே பல் மீது யார் இடித்தார்கள்? அல்லது தொடைக்கறிக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? என்பதை இளவரசர் நெஸ்வைட்ஸ்கி தெரிந்துகொள்ள முடியவில்லை.

'பூ! ஏன் இவ்வளவு அவசரப்படுகிறார்கள்? அவன் (எதிரி) ஒரு குண்டை வீசுகிறான். உடனே எல்லாரும் கொல்லப்பட்டு விடுவார்கள் என்று அவர்கள் நினைக்கிறார்கள்' என்று ஒரு சார்ஜண்ட் கோபத்தோடு கண்டிக்கும் முறையில் சொல்லிக் கொண்டிருந்தான்.

'எனக்கு மேலாக அந்த குண்டு பறந்து போனபோது, அப்பனே, அந்தக் குண்டைத்தான் சொல்லுகிறேன்' என்று சிரிப்பை அடக்கமுடியாமல், அகன்ற வாயுள்ள ஒரு வாலிப சிப்பாய்

சொல்லி, 'நான் பயத்தினால் சாவதைப்போல உணர்ந்தேன். நான் பயந்தேன்' என்று பயத்தினால் பெருமைகொள்ளுவதைப்போல சொன்னான்.

அவனும் கடந்து போனான். அதற்குப் பின்னால் இதற்கு முன்போனவைகளைப்போல அல்லாமல், வேறுவிதமான ஒரு வண்டியை ஒரு ஜெர்மன் ஓட்டிவந்தான். அந்த வண்டிநிறைய வீட்டு சாமான்கள் இருந்தன. அந்த வண்டியின் பின்னால், ஒரு அழகான பெரிய மடுவோடு கூடிய பழுப்பு நிறமான பசு கட்டப்பட்டு இருந்தது. தாய்ப்பால் குடிப்பதை மறக்காத ஒரு குழந்தையோடு ஒரு ஸ்திரீயும் ஒரு வயோதிக ஸ்திரீயும் ஆரோக்கியமானவளும் சிவந்த கன்னங்களை உடையவளுமான ஒரு ஜெர்மன் பெண்ணும் சில இறகு மெத்தைகள் மீது உட்கார்ந்து இருந்தார்கள். நாட்டை விட்டு வெளியேற விரும்பிய இவர்களுக்கு தனியாக அனுமதி கொடுக்கப்பட்டிருக்கும் என்று தோன்றியது. சிப்பாய்களின் கண்களெல்லாம் அந்தப் பெண்களின் மீது திரும்பின. வண்டி மெதுவாக நகர்ந்து சென்றபோது, எல்லா சிப்பாய்களும் அந்த இரண்டு பெண்களைப் பற்றியே அபிப்பிராயம் கூறிக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு முகமும் அந்த பெண்களைப்பற்றி அவர்கள் நினைக்கும் வெளியில் சொல்லக்கூடாத நினைப்புகளைக் காட்டுவதுபோல ஒரே மாதிரியான புன்சிரிப்பு கொண்டிருந்தது.

'இதோ பார். இந்த ஜெர்மன் கோளா கூட வண்டி ஏறிப் புறப்படுகிறது.'

'அந்த மனைவியை எனக்கு விற்றுவிடு' என்று ஒரு சிப்பாய் அந்த ஜெர்மனைப் பார்த்துச் சொன்னான். அந்த ஜெர்மன் கோபமும் பயமும் கொண்டு தலையைக் கீழே தொங்கவிட்டு வண்டியை துரிதப்படுத்தினான்.

'இதோ பார்; அவள் தன்னை எவ்வளவு அழகாய் செய்துகொண்டிருக்கிறாள் பார். அட பிசாசுகளே.'

'அங்கே பார், பெடோடாவ், உன்னை அவர்களோடு குடியிருக்கச் செய்யவேண்டும்!'

'இதற்கு முதுன்பே நான் எவ்வளவோ பார்த்திருக்கிறேன், தோழனே.'

ஒரு ஆப்பிளைத் தின்றுகொண்டிருந்த ஒரு காலாட்படை அதிகாரி பாதி சிரிப்போடு அந்த அழகிய பெண்ணைப் பார்த்து, 'நீ எங்கே போகிறாய்?' என்று கேட்டார்.

'பேசுவது தனக்கு ஒன்றும் புரியவில்லை' என்று காட்டுவது போல அந்த ஜெர்மன் பெண் கண்களை மூடிக்கொண்டாள்.

'உமக்கு வேண்டுமானால் இதை எடுத்துக்கொள்' என்று அந்தப் பெண்ணிடம் ஆப்பிளை நீட்டி அதிகாரி சொன்னார்.

அந்தப் பெண் சிரிப்பு காட்டி அதை வாங்கிக்கொண்டாள். மற்றவர்களைப் போலவே பாலத்தில் நின்றுகொண்டிருந்த நெஸ்வைட்கியும் அந்தப் பெண்கள் கடந்து போகிற வரையில் அவர்கள் மீது தாம் வைத்த விழிகளை வாங்காமலே பார்த்துக்கொண்டிருந்தார். அவர்கள் போன பின்பு மறுபடியும் ஒரே மாதிரியான சிப்பாய்க்கூட்டம் ஒரே மாதிரியான பேச்சுகளோடு போய்க் கொண்டிருந்தது. திடீரென்று வண்டியில் கட்டப் பட்டிருந்த ஒரு குதிரை இடக்கு செய்ததால், போகிற கூட்டம் நிற்கவேண்டியதாயிற்று. துருப்புகளின் பிரயாணத்தில் இம்மாதிரி சம்பவம் சகஜமானது.

'ஏன் எல்லாரும் நிற்கிறார்கள்? ஒழுங்கு எதுவும் இல்லைபோல் இருக்கிறது' என்று சிப்பாய்கள் கூறினார்கள். 'ஏன் தள்ளுகிறீர்கள், உங்களைப் பிசாசு பிடிக்க? கொஞ்சம் பொறுத்தால் என்ன? அவன் பாலத்தில் குண்டு போட்டால் இன்னும் மோசமாய் இருக்கும். இங்கே பாருங்கள், ஒரு அதிகாரியைப் போட்டு அழுத்துகிறார்கள்' என்று அந்தக் கூட்டத்தில் வெவ்வேறு குரல்களில் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு கூறினார்கள். எல்லாருமே அந்தப் பாலத்தின் வாயிலை நோக்கி நெருங்கினார்கள்.

பாலத்திலிருந்து கீழே என்ஸ் நிதியில் ஓடும் தண்ணீரை நெஸ்வைட்ஸ்கி பார்த்துக்கொண்டிருந்தபோது, திடீரென்று ஒரு சப்தம் அவருக்குக் கேட்டது. சப்தம் அவருக்குப் புதிதாய் இருந்தது. ஏதோபெரியது ஒன்று வேகமாய் நெருங்கி வருவதைபோலக் கேட்டது. கடைசியில் அது தண்ணீரில் போய் விழுந்தது.

'எங்கே வருகிறதென்று பார்' என்று பக்கத்தில் நின்ற ஒரு சிப்பாய் கடுமையாகச் சொல்லி சப்தம் வந்த திசையைப் பார்த்தான்.

'சீக்கிரம் போகும்படி நம்மை அது தூண்டுகிறது' என்று மற்றொருவன் குழப்பத்தோடு சொன்னான்.

கூட்டம் மேலும் நகர்ந்தது. விழுந்தது பீரங்கிக் குண்டுதான் என்பதை நெஸ்வைட்ஸ்கி அறிந்துகொண்டார்.

'ஏ, கோசாக், என் குதிரையைக்கொண்டுவா' என்று சொல்லி விட்டு, 'இங்கே பார், அங்கே நிற்பவனே, வழியை விட்டு விலகு. வழிவிடு' என்று கூறினார்.

மிகுந்த சிரமத்தோடு அவர் தமது குதிரையிடம் போய்ச் சேர்ந்தார். தொடர்ந்து கத்திக்கொண்டே அவர்மேலும் நகர்ந்து போனார். தங்களை நெருக்கிக்கொண்டு அவருக்கு போகவிட்டார்கள்.

ஆனால், மீண்டும் அவரை நெருக்க ஆரம்பித்து அவர் காலை அழுத்தினார்கள். பக்கத்தில் இருந்தவர்களை அதற்காகக் குற்றம் சொல்லமுயாது. ஏனெனில், அதற்குப் பின்னால் இருந்தவர்கள் அவர்களை இன்னும் பலமாக அழுத்தினார்கள்.

'நெஸ்வைட்ஸ்கி, நெஸ்வைட்ஸ்கி, ஏ முட்டாள்' என்று ஒரு கரகரப்பான குரல் பின்னால் கேட்டது.

நெஸ்வைட்ஸ்கி திரும்பிப்பார்த்தார். பதினைந்து அடிகளுக்குப் பின்னால் வாஸ்கா டெனைசாவ் நின்றுகொண்டிருந்தார். த மது தலைத் தொப்பியை தலையின் பின்னால் சரித்து வைத்துக்கொண்டு, மேல் சட்டையைத் தோள்மீது போட்டுக்கொண்டு அவர் நின்றிருந்தார். ஆனால் மத்தியில் நெருக்கமான காலாட்படை போய்க்கொண்டிருந்தது.

'இந்த பிசாசுகளிடம், இந்த பூதங்களிடம், எனக்கு வழிவிடச் சொல்லும்' என்று கோபத்தோடு கத்தினார். அவருடைய கறுப்புக் கண்கள் மின்னின. கையில் பிடித்திருந்த உறைவாளை வீசிக் கொண்டு பேசினார். அவருடைய முகத்தைப் போலவே கையும் சிவந்திருந்தது.

'ஆ, வாஸ்கா!' என்று மகிழ்ச்சியோடு நெஸ்வைட்ஸ்கி பதிலளித்தார். 'அங்கே என்ன செய்துகொண்டிருக்கிறீர்?'

'எனது குதிரைப்படை போக முடியவில்லை' என்று கோபத்தோடு பற்களைக்காட்டி வாஸ்கா டெனைசாவ் கத்தினார். அவருடைய அழகிய கறுப்பு அரபு குதிரையைத் தார்ச் சக்கரத்தால் குத்தினார். துப்பாக்கிச் சனியன் குதிரையின் காதுகளில் உரசிய போது, அந்தக் குதிரை காதுகளைச் சுளித்துக்கொண்டு, கனைத்துக் கொண்டு, வாய் வழியாக வெள்ளை நுரையை கக்கிக்கொண்டு பாலத்தின் பலகைகளில் தடதடவென்று குதித்தது. எஜமான் உத்தரவிட்டால் கைப்பிடிக் கம்பிகளைத் தாண்டிக் குதிப்பதற்குத் தயாராய் இருந்ததுபோல் தோன்றியது. 'என்ன இது, அவர்கள் ஆடுகளைப் போலவே இருக்கிறார்கள்! ஆடுகளேதான். வழியை விடுங்கள்... நாங்கள் போகட்டும்... வண்டியில் வரும் பிசாசே, அங்கே நில். என் கத்தியால் உன்னை வெட்டிப் போடுவேன்' என்று கத்தி உறையில் இருந்து வாளை உருவி, வெளியே வீசிக் காட்டினார்.

சிப்பாய்கள் பயங்கொண்டு ஒருவரை ஒருவர் நெருக்கித்தள்ளி வழிவிடவே, டெனைசாவ் நெஸ்வைட்ஸ்கியோடு வந்து சேர்ந்தார்.

'என்ன இது, இன்று நீர் குடிக்கவில்லை?' என்று தமது பக்கத்தில் வந்து சேர்ந்தவரைப் பார்த்து நெஸ்வைட்ஸ்கி சொன்னார்.

‘குடிப்பதற்குக்கூட அவர்கள் அவகாசம்கொடுப்பதில்லை’ என்று வாஸ்கா டெனைசாவ் பதில் அளித்தார். ‘அவர்கள் பட்டாளத்ததை நான் முழுவதும் இங்கும் அங்கும் இழுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் யுத்தம் செய்யவேண்டும் என்று நினைப்பார்களானால் சரி, யுத்தம் செய்வோம். ஆனால் இது என்ன என்பது பிசாசுக்குத்தான் தெரியும்.’

‘இன்று என்ன அழகாய் நீர் இருக்கிறீர்!’ என்று டெனைசாவின் புதிய மேல் சட்டையையும் சேணத்துணியையும் பார்த்து நெஸ்வைட்ஸ்கி சொன்னார்.

டெனைவாச் முறுவலித்தார். தமது பெல்டிலிருந்து ஒரு கைக்குட்டையை வெளியே எடுத்தார். அதில் வாசனை கமழ்ந்தது. அதை நெஸ்வடைட்ஸ்கியின் மூக்கில் பிடித்தார்.

‘ஆமாம், நான் யுத்தம் செய்யப்போகிறேன். நான் க்ஷவரம் செய்துவிட்டேன். பல்லை விளக்கிவிட்டேன். மேலே வாசனை போட்டுக்கொண்டிருக்கிறேன்.’ன

நெஸ்வைட்ஸ்கியின் எடுப்பான உருவமும், அவரைப் பின் தொடர்ந்த கோசாக்கும், டெனைசாவின் உறுதியும், மூர்த்தண்ணிய மாக வாளை வீசிக்கொண்டு அவர் கத்தியதும், சேர்ந்து அவர்கள் பாலத்தின் அக்கரையில் போய் சேருவதற்கு வழி செய்துவிட்டன. பாலத்தின் அக்கரையில் காலாட்படையை நிறுத்தினார்கள். நெஸ்வைட்ஸ்கி தம்மிடம் உள்ள உத்தரவை சேர்க்கவேண்டிய கர்னலைக் கண்டுபிடித்தார். அவரிடம் உத்தரவைச் சேர்த்துவிட்டு, மீண்டும் குதிரையில் திரும்பினார்.

பாதையை சரி செய்த பின்பு, பாலத்தின் கடைசயில் டெனைசாவ் நின்றார். அலட்சியமாகத் தமது குதிரையைப் பிடித்துக்கொண்டு, தமது குதிரைப்படை நெருங்குவதை பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய குதிரை, தன் இனத்தோடு சேர்ந்துவிடுவதற்காக, கனைத்துக்கொண்டு தரையில் குதித்துக்கொண்டு நின்றது. பல குதிரைகள் ஓடிவரும் குளம்பு சப்தம் பாலத்தின் பலகைகளில் கேட்டது. அதிகாரிகள் முதலிலும், பின்னால் ஒரு வரிசைக்கு நால்வர் வீதமும் பாலத்தில்போக ஆரம்பித்தார்கள்.

நிறுத்தப்பட்ட காலாட்படை கூட்டமாகப் பாலத்திற்குப் பக்கத்தில், சகதியை மிதித்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தது. சுத்தமான குதிரைப்படை வீரர்கள் ஒழுங்காக தங்களைக் கடந்துபோதைப் பார்த்து கோபம் கொண்டு கேலி செய்தார்கள். ராணுவத்தில் ஒரு பிரிவிற்கும் இன்னொரு பிரிவிற்கும் இடையில் இம்மாதிரி கேலியும் துவேஷமும் விரோதமும் இருப்பது சகஜம்.

'அழகான வாலிபர்கள்! கண்காட்சிக்கே பொருத்தமானவர்கள்!' என்று ஒருவன் சொன்னான்.

'அவர்களால் என்ன பிரயோஜனம்? காட்சிக்காவே அவர்களை இங்கும் அங்கும் அழைத்துச் செல்லுகிறார்கள்' என்று இன்னொருவன் சொன்னான்.

'தூசியைக் கிளப்பாதே, ஏ, காலாட்படை' என்று ஒரு குதிரைப்படை வீரன் கேலியாகச் சொன்னான். அச்சமயம் அவன் குதிரை தன் கால்களால் சகதியை மிதித்தபோது, சில காலாட்படை வீரர்கள் மீது அந்த சகதி தெளித்தது.

'ஒரு பையைத் தூக்கிக்கொண்டு இரண்டு நாட்கள் நடந்து போகும்படி உனக்குத் தண்டனை கொடுக்க நான் விரும்புகிறேன். அப்படிச் செய்தால் உனது ஆடை அலங்காரங்கள் எப்படி இருக்கின்றன என்பது தெரிந்து போகும்' என்று தன் முகத்தில் விழுந்த சகதியை தன் கைச்சட்டையால் துடைத்துக்கொண்டு ஒரு காலாட்படை வீரன் கூறினான். 'அங்கே உயரத்தில் நீ தொத்திக்கொண்டிருப்பதைப் பார்த்தால், நீ மனிதன் மாதிரி தோன்றவில்லை. ஒரு பக்ஷி மாதிரியே தோன்றுகிறாய்.'

'இங்கேப் பார், ஜைகின், உன்னை ஒரு குதிரை மீது அவர்கள் ஏற்றிவிடவேண்டும். நீ ரொம்ப அழகாய் தோன்றுவாய்!' என்று, ஒரு மெலிந்த வீரன் தனது தோள் மீதுள்ள சுமையைத் தாங்க முடியாமல் குனிந்திருப்பதைப் பார்த்து கேலி செய்து, ஒரு சிறிய அதிகாரி கூறினார்.

'உன் கால்களுக்கு இடையில் ஒரு கம்பை வைத்துக்கொள். அது உனக்கு ஒரு குதிரை மாதிரி பொருத்தமாய இருக்கும்' என்று ஒரு குதிரைப்படை வீரன் பதில் அளித்தான்.

## 2 8

காலாட்படையின் கடைசி பகுதியினர் அவசரமாக பாலத்தைக் கடந்து கொண்டிருந்தார்கள். பாலத்தை அவர்கள் நெருங்கிய போது, ஒரு குழாய் வழியாகப் போவது போல, ஒருவரை ஒருவர் நெருங்கிக் கொண்டு அவர்கள் பாலத்தின் மீது போனார்கள். சாமான் வண்டிகள் எல்லாம் கடந்து பின்பு நெருக்கடி குறைந்தது. கடைசிப் பகுதி பாலத்திற்கு வந்த பின்பு, டெனைசாவின் குதிரைப் படை பாலத்தின் கடைசியில் எதிரியை எதிர்பார்த்து நின்றது. எதிர் கரையிலுள்ள குன்றின் மேல்நின்று பார்த்தால் எதிரிகள் நன்றாய்

தெரிந்தார்கள். ஆனால், பாலத்திலிருந்து பார்க்கும்போது தெரியவல்லை. நதி வந்துகொண்டிருந்த பள்ளத்தாக்கில் இருந்து அடிவானத்தைப் பார்க்க முடியாமல் அரை மைலுக்கு அப்புறம் தரை உயர்ந்திருந்தது. அந்த உயரமான குன்றின் கீழே கோசாக் காவலாளிகள் இங்கும் அங்கும் போய்க்கொண்டிருந்தார்கள். திடீரென்று அந்த உயரமான தரைக்கு மேலாக உள்ள ரஸ்தாவில் நீல நிற சீருடை அணிந்த துருப்புகளும் பீரங்கிப் படையும் தோன்றின. அவர்கள்தான் பிரஞ்சுக்காரர்கள். அவர்களைப் பார்த்ததும் கோசாக் காவலாளிகள் வேகமாக சமதளத்திற்கு ஓடிவந்தார்கள். டெனைசாவின் குதிரைப் படையைச் சேர்ந்த அதிகாரிகளும் வீரர்களும் வெவ்வேறு திசைகளைப் பார்ப்பதற்கும், மற்ற விஷயங்களைப் பற்றி பேசுவதற்கும் முயற்சி செய்தாலும் அவர்களுடைய எண்ணம் என்னவோ, அந்த குன்றின் உச்சியில் காணப்பட்டவர்களைப் பற்றியதாகவே இருந்தது. உயரமான பூமியில் வானவெளித் தோற்றத்தில் காணப்பட்ட காட்சியையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சிதான் எதிரியின் துருப்புகள் என்பது அவர்களுக்குத் தெரியும். காலநிலை நடுப்பகலுக்குப் பின்பு மீண்டும் தெளிவடைந்தது. டான்யூப் நதி மீதும் அதைச் சுற்றியுள்ள இருண்ட குன்றுகளின் மீதும் மிகுந்த ஒளிவீசி சூரியன் இறங்கிக்கொண்டிருந்த குன்றிலிருந்து வந்து கொண்டிருந்த எக்காளக் குரல்களையும் எதிரிகளின் கூச்சல்களையும் கேட்க முடிந்தது. எதிரிகளுக்கும் குதிரைப் படைக்கும் இடையில் சில காவலாளிகளைத் தவிர வேறு எதுவுமேயில்லை. சுமார் எழுநூறு கெஜ நீளமுள்ள நிலம்தான் அவர்களைப் பிரித்துதிருந்தவை. எதிரி சுடுவதை நிறுத்திவிட்டான். இரண்டு விரோதித் துருப்புகளையும் பிரித்து வைத்திருந்து அந்த மத்திய நிலம், பார்ப்பதற்கு கடுமையாகவும் பயமுறுத்துவது போலவும், கடக்க முடியாதது போலவும் புரிந்துகொள்ள முடியாதது போலவும் காணப்பட்டது.

பிரித்து வைத்திருந்த அந்த எல்லை, இறந்தவர்களுக்கும் உயிருள்ளவர்களுக்கும் மத்தியிலுள்ள எல்லையைப்போல தோன்றியது. அந்த எல்லைக்குப் பின்னால், நிச்சயமற்ற தன்மையும் துன்பங்களும் மரணமும் காத்திருந்தன. அங்கே என்ன இருக்கிறது? யார் இருக்கிறார்கள்?-அந்த நிலத்திற்கு அப்பால், அந்த மரத்திற்கு அப்பால், சூரிய ஒளி வீசிக்கொண்டிருந்த அந்த உயரமான மேட்டின் உச்சிக்கு அப்பால்? யாருக்கும் தெரியாது. ஆனால், ஒவ்வொரு வருக்கும் தெரிந்து கொள்ள விருப்பம். பயம் இருக்கிறது; என்றாலும் அந்த எல்லையைக் கடக்க வேண்டும் என்ற ஆசையும்

இருக்கிறது. சீக்கிரமாகவோ, பின்னாலோ, அதைக் கடந்துதான் ஆகவேண்டும் என்பதும், அங்கே என்ன இருக்கிறது என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதும் எல்லாருக்கும் ஆசை. மரணத்திற்குப் பின்னால் என்ன நடக்கும் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புவதைப் போல, இதையும் தெரிந்துகொள்ள வேண்டும் என்பது ஆசை. பலம் இருக்கிறது, ஆரோக்கியம் இருக்கிறது, களிப்பும் உற்சாகமும் இருக்கின்றன. இதே குணங்கள் அங்கு கூடியிருந்த ஒவ்வொருவரிடமும் இருக்கின்றன. ‘இம்மாதிரியாக எதிரிகளைப் பார்த்த ஒவ்வொருவரும் நினைத்தார்கள். அல்லது உள்ளத்தில் உணரவாவது செய்தார்கள். அந்த உணர்ச்சி ஒரு குறிப்பிட்ட மயக்கத்தைக் கொடுத்தது. அம்மாதிரியான சந்தர்ப்பங்களில் நேரக்கூடிய ஒவ்வொன்றும், மனதில் பதியும்படி செய்யக்கூடிய ஒரு சந்தோஷமுள்ள கூர்மையுணர்ச்சியையும் கொடுத்தது.

எதிரி நின்றுகொண்டிருந்த அந்த உயரமான இடத்தில் ஒரு பீரங்கியிலிருந்து புகை கிளம்பியது. உடனே ஒரு பீரங்கிக்குண்டு குதிரைப் படையின் தலைகளுக்கு மேலாகப் பறந்து சென்றது. சேர்ந்து நின்ற அதிகாரிகள் தங்கள் இடங்களுக்கு சவாரி போனார்கள். தங்கள் குதிரைகளை வீரர்கள் ஒழுங்காய் நிறுத்தினார்கள். அந்த முழு குதிரைப் படையும் மௌனமாய் இருந்தது. எல்லாரும் முன்னாலுள்ள எதிரியையும் குதிரைப் படை கமாண்டரையும் பார்த்துக்கொண்டு இருந்தார்கள். கமாண்டரின் உத்தரவை எதிர்நோக்கினார்கள். இரண்டாவது மூன்றாவது குண்டுகளும் பறந்தன. குதிரைப் படை மீது அவர்கள் சுடுகிறார்கள் என்பது தெளிவாய்த் தெரிந்தது. ஆனால் குண்டுகள் ஒரே சப்தத்தோடு தலைகளுக்கு மேலாகப் பறந்து, பின்னால் எங்கேயோ போய் விழுந்தன. வீரர்கள் பின்னால் திரும்பிப்பார்க்கவில்லை. ஒவ்வொரு குண்டு சப்தத்தின் போதும் கமாண்டரின் உத்தரவைக் கேட்கும் போது எப்படி இருப்பார்களோ, அதே மாதிரி மூச்சை அடக்கிக்கொண்டு காத்திருந்தார்கள். முழு குதிரைப் படையும் வரிசை வரிசையாக முகங்கள் வெவ்வேறாய் இருந்த போதிலும் ஒரே முகமாய் காணப்பட்டார்கள். தலைக்கு மேலாக குண்டு போகும்போது, அங்கபடியை மிதித்து எழுந்து மீண்டும் ஆசனத்தில் அமர்ந்தார்கள். தலைகளைத் திருப்பாமலே, மற்ற விரர்களின் முகக்குறியை அறிவதற்காக வீரர்கள் ஒருவரை ஒருவர் கடைக்கண்ணால் பார்த்து வந்தார்கள். டெனைசாவ் முதல் எக்காளம் ஊதுகின்றவன் வரையில் எல்லாருடைய முகத்திலும் ஒரே மாதியான உணர்ச்சி இருந்தது. அதாவது எரிச்சல், பரபரப்பு மனப்

போராட்டம் ஆகிய தோற்றங்கள் வாயையும் நாடியையும் சுற்றி காணப்பட்டன. குடியிருப்பு அதிகாரி வீரர்களைப் பார்த்து, அவர்களைத் தண்டிக்கப்போவதுபோல முகம் சுளித்தார். தொண்டர் மிரோனாவ் ஒவ்வொரு தடவையும் குண்டு மேலே பறந்த போது கீழே குனிந்தார். இடது பக்கவாட்டில்,தமது ரூக் என்ற குதிரை மீது, ராஸ்டோவ் அமர்ந்திருந்தார். கால் கொஞ்சம் நொண்டிக்கொண்டிருந்தாலும் அந்தக் குதிரை ஒரு அழகான குதிரை. ஒரு பள்ளி மாணவன், தான் நிச்சயம் தேறிவிடுவான் என்ற உறுதியோடு பரீட்சைக்காக கூடியுள்ள ஒரு சபை முன்பு எப்படி சந்தோஷத்தோடு பிரசன்னமாவானோ, அதே தோற்றத்தில் ராஸ்டோவ் காணப்பட்டார். தெளிவான பிரகாசமான தோற்றத் தோடு அவர் ஒவ்வொருவரையும் பார்த்து, குண்டுகளுக்கிடையில் தாம் எவ்வளவு அமைதியாக இருப்பதை கவனிக்கும்படி சொல்லுவதைப்போல தோன்றினார். அவர் அப்படி இருந்தும் அவருடைய முகத்திலும்கூட அதேமாதிரியான, வாயைச் சுற்றித் தோன்றிய புதிய கடுமைத் தோற்றம் காணப்பட்டது.

'யார் அங்கே குனிந்து வணங்குவது? தொண்டர் மிரோனாவா? அது சரியல்ல. என்னைப் பார்' என்றார் டெனைசாவ். அவர் ஒரே இடத்தில் அசையாமல் நிற்கமுடியாமல் படை வரிசையின் முன்பாக இங்கும் அங்கும் சவாரி செய்து கொண்டிருந்தார்.

கறுநிறம் கொண்ட தலைமுடியும், சப்பை மூக்கோடும் கூடிய வாஸ்கா டெனைசாவின் முகமும், அவருடைய குறுகிய பருத்த உடம்பும், மயிர் அடர்ந்த பலமான கையின் குட்டை விரல்களில் தமது உடைவாளைப் பற்றியிருந்த காட்சியும், வழக்கமாக மாலை வேளைகளில் இரண்டாவது புட்டியை அவர் காலி செய்த பின்பு தோன்றும் காட்சியைப் போலவே இருந்தன. ஆனால் அப்பொழுதைவிட இப்பொழுது அதிகமாக சிவந்திருந்தார். பறவைகள் தண்ணீர் குடிக்கும்போது, தலையை நிமிர்த்தி எப்படி தலையைப் பின்னால் சாய்த்துக்கொள்ளுமோ, அதேமாதிரி தமது மயிர் அடர்ந்த தலையை பின்னால் சாய்த்து,தமது பூட்ஸ்களிலுள்ள கூர்ச் சக்கரங்களால் கருணையின்றி, தமது அழகிய குதிரை 'பெடுயின்' உடைய விலாப் பக்கத்தில் குத்தி, பின் பக்கம் சாய்ந்து விழுவதுபோல சேணத்தில் அமர்ந்திருந்தார். குதிரைப படையின் மற்றொரு பக்கவாட்டிற்கு குதிரையை பாய்ச்சலில் விட்டார். அங்கே கரகரப்பான தொனியில் வீரர்களைப் பார்த்து கைத்துப்பாக்கிகளைத் தயார் செய்யும்படி உத்தரவிட்டார். பின்னால் கிர்ஸ்டனிடம் போனார். தமது குதிரையின் அகலமான முதுகில் அமர்ந்திருந்த கேப்டன், இவரைப் பார்த்து மெதுவாக வந்தார். நீண்ட

மீசைகளோடு கூடிய அவருடைய முகம் எப்பொழுதும் போலவே கவலையோடு இருந்தது. அவருடைய கண்கள் வழக்கத்திற்கு அதிகமான பிரகாசத்தோடு தோன்றின.

'என்ன ? எதற்காக?' என்று அவர் டெனைசாவைப் பார்த்துக் கேட்டார். 'யுத்தத்திற்கு அவசியம் இருக்காது. நீர் பார்க்கப் போகிறீர். நாம் பின்வாங்கப் போகிறோம்.'

'அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்பது பிசாசுக்குத்தான் தெரியும்!' என்று டெனைசாவ் முணுமுணுத்தார். 'ஆ, ராஸ்டோவ்' என்று தொண்டரின் மலர்ந்த முகத்தைப் பார்த்துக் கூவி, 'கடைசியாக உமக்குக் கிடைத்துவிட்டது' என்று சொன்னார்.

திருப்தியோடு அவர் முறுவலித்தார். தொண்டரைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்ததுபோல் தோன்றியது. ராஸ்டோவ் பூரண மகிழ்ச்சியோடு விளங்கினார். அச்சமயம் பாலத்திற்கு கமாண்டர் வந்தார். பாய்ச்சலில் தமது குதிரையைத் தட்டி விட்டு, டெனைசாவ் அவரிடம் போனார்.

'மேன்மை தங்கியவரே, நாம் அவர்களைத் தாக்குவோம். அவர்களை நான் விரட்டிவிடமுடியும்.

'தாக்குவதாம்! தாக்குவது!' என்று அந்தக் கர்னல்களைப் படைந்த தொனியில் சொல்லி, தமது முகத்தில் ஏதோ ஒரு ஈ உட்கார்ந்திருப்பது போலவும், அதை விரட்டுவது போலவும் முகத்தைச் சுளித்தார். 'ஆமாம், நீங்கள் எல்லாம் ஏன் இங்கே நின்று கொண்டிருக்கிறீர்கள்? இந்தக் காவலாளிகள் பின் வாங்கி வருவது உங்களுக்குத் தெரியவில்லையா? படையைப் பின்வாங்குங்கள்.'

குதிரைப் படை ஒருவர்கூட சேதமில்லாத பாலத்தைக் கடந்தது. எதிரியின் பீரங்கி சுடும் தூரத்திற்கு அப்பாலேயே வந்து விட்டார்கள். முன்னணியில் நின்ற இரண்டாவது படையும் பாலத்தைக் கடந்துவிட்டது. தூரத்தில் நின்ற கோசாக் காவலாளிகளும் அதை விட்டுப் பின்வாங்கி பாலத்தைக் கடந்தார்கள்.

இரண்டு பாவ்லாகிராட் படைகளும் பாலத்தை கடந்த பின்பு' ஒன்றன்பின் ஒன்றாகக் குன்றின் மீது ஏறின. அவர்களின் கர்னல், கார்ல் பாக்டானிச் ஷூபர்ட், டெனைசாவின் படைக்கு அருகே வந்தார். ராஸ்டோவ் நின்ற இடத்திற்கு சமீபமாகவே அவர் குதிரை மீது வந்தார். என்றாலும் அவர் ராஸ்டோவை கொஞ்சமும் கவனிக்கவில்லை. டெலியானின் சம்பந்தமாக அவர்களுக்குள் ஏற்பட்ட சச்சரவுக்குப் பின்னால், இப்பொழுதுதான் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்க்கிறார்கள். அந்த மனிதரின் முன்பாகவும் அவருடைய அதிகாரத்திலும் தாம் இப்பொழுது இருப்பதாக

ராஸ்டோவ் உணர்ந்தார். டெலியானின் தகராறு விஷயத்தில் தம்மீதே குற்றம் இருப்பதாக ராஸ்டோவ் இப்பொழுது ஒப்புக்கொண்டார். கர்னலின் வலிமை வாய்ந்த முதுகையும், மெல்லிய மயிர்களோடு தோன்றிய அவருடைய பின் தலையையும் அவருடைய சிவந்த கழுத்தையும், ராஸ்டோவ் பார்த்துக்கொண்டே இருந்தார். பாக்டானிச் தம்மைப் பார்க்காததுபோலப் பாசாங்கு செய்வதாக ராஸ்டோவுக்குத் தோன்றியது. தம்முடைய தைரியத்தை சோதித்து விடுவது ஒன்றே கர்னலின் முழு நோக்கம் என்று அவர் நினைத்தார். ஆகவே, நிமிர்ந்து தம்மைச் சுற்றிலும் களிப்போடு பார்த்துக் கொண்டார். தம்முடைய தைரியத்தை காட்டிக்கொள்ளுவதற் காகவே தமக்கு வெகு சமீபமாக கர்னல் சவாரி போனார் என்று அவருக்குத் தோன்றியது. தம்மை தண்டிப்பதற்காக, தமது விரோதி தாம் சேர்ந்துள்ள படையை எதிரியைத் தாக்கும்படி உத்தரவிடுவார் என்று அப்புறம் நினைத்தார். அந்த தாக்குதலுக்குப் பின்னால், தாம் காயம் அடைந்து கீழே கிடக்கும்போது, எப்படி அவர் வந்து சமாதானத்திற்காக கம்பீரமாகத் தமது கையை நீட்டுவார் என்பதையும், பின்னால் அவர் மனோராஜ்யம் செய்தார்.

உயரமான தோள்களைக் கொண்ட ஜெர்கோவ் பாவ்லாவ்கிராடு களுக்கு நன்கு தெரிந்தவர். ஏனெனில், சமீபத்தில்தான் அவர் அந்தப் படையை விட்டு மாற்றலானார். அவர் கர்னலிடம் தமது குதிரையில் வந்தார். தலைமை காரியாலயத்திலிருந்து அவரைத் தள்ளிவிட்ட பின்பு, அவர் அந்தப் பட்டாளத்தில் தங்கியிருக்கவில்லை. போர் முன்னணியில் நின்று அடிமையைப் போல் வேலை செய்வதற்கு தாம் ஒரு முட்டாள் அல்ல என்றும், ஒரு வேலையும் செய்யாமல் உயர் அதிகாரிகளின் பரிவாரங்களில் கலந்து உட்கார்ந்து கொண்டிருந்தாலே அதிகமான வெகுமதிகளை தாம் பெற முடியும் என்றும் அவர் சொல்லி வந்தார். பின்னால் அவர் முயற்சி செய்து, இளவரசர் பாக்ரேஷனுடைய தூதராக தமக்கு நியமனம் பெற்றுக் கொண்டார். இப்பொழுது அவர் பின்படையின் கமாண்டரிடம் இருந்து தமது முன்னாள் எஜமானருக்கு ஒரு உத்தரவு கொண்டு வந்திருந்தார்.

'கர்னல்' என்று அவர் சோர்வும் பாரமும் கொண்ட தோற்றத்தோடு, தம்தோழர்களைக் கண்களால் சுற்றிப் பார்த்துக் கொண்டு, ராஸ்டோவின் விரோதியைப் பார்த்து அழைத்தார். 'இங்கே நின்று பாலத்தைக் கொளுத்தும்படி இதோ ஒரு உத்தரவு.'

'உத்தரவா? யாருக்கு?' என்று கர்னல் முகம் தூக்கிக்கொண்டு கேட்டார்.

'யாருக்கு என்பது எனக்கே தெரியாது' என்று அந்த வீரர் ஆழ்ந்த குரலில் பதில் அளித்தார். 'ஆனால், நீ போய் கர்னலிடம் சொல்லி, குதிரைப் படைகளை சீக்கிரமாகத் திரும்பும்படி செய்து, பாலத்திற்கு நெருப்பு வைக்கும்படி சொல்லு' என்று இளவரசர் என்னிடம் சொன்னார்.

ஜெர்கோவிற்குப் பின்னால் 'சேனாதிபதியின் பரிவாரத்தைச் சேர்ந்த ஒரு அதிகாரி வந்து சேர்ந்தார். குதிரைப் படையின் கர்னலிடம் சென்று, அதேமாதிரி உத்தரவு ஒன்றைக் கொடுத்தார். அவருக்குப் பின்னால் பருமனான நெஸ்வைட்ஸ்கி ஒரு கோசாக் குதிரை மீது பாய்ச்சலில் வந்தார். அவருடைய கனத்தை அந்தக் குதிரை தூக்க முடியாமல் சுமந்து வந்தது.

'இது என்ன, கர்னல்?' என்று அவர் அருகில் வந்ததும் கூச்சலிட்டார். 'பாலத்தை எரிக்கும்படி நான் உமக்குச் சொன்னேன். இப்பொழுது யாரோ தவறு செய்து விட்டார்கள். அங்கே உள்ளவர்கள் மகா குழப்பம் அடைந்து இருக்கிறார்கள். என்ன செய்வது என்று ஒருவருக்கும் தெரியவில்லை.

கர்னல் பட்டாளத்தை நிறுத்திவிட்டு, நெஸ்வைட்ஸ்கியைத் திரும்பிப் பார்த்தார். 'நெருப்புப் பிடிக்கிற சரக்குகளைப் பற்றித் தான் நீர் என்னிடம் பேசினீர். அதில் நெருப்பை வைக்க வேண்டும் என்று நீர் எதுவும்சொல்லவில்லை' என்றார் அவர்.

நெஸ்வைட்ஸ்கி கிட்டே நெருங்கியபோது, தமது தொப்பியைக் கழற்றி வியர்வையினால் நனைந்து போயிருந்த தமது தலைமுடியை தமது பருத்த கைகளால் தடவி விட்டுக்கொண்டு, 'ஆனால், எனது அன்புள்ள ஐயா, நெருப்பு பிடிக்கிற சரக்குகளை தகுந்த இடங்களில் வைத்துவிட்டு,பாலத்திற்கு நெருப்பு வைக்கவேண்டும் என்று நான் உம்மிடம் சொல்லவில்லையா?' என்று கேட்டார்.

'நான் உம்முடைய 'அன்புள்ள ஐயா'வும் அல்ல, திருவாளர் பரிவார அதிகாரியே, பாலத்தைக் கொளுத்தும்படி நீர் என்னிடம் சொன்னதும் இல்லை. ராணுவ சேவையைப்பற்றி எனக்குத் தெரியும். உத்தரவுகளுக்கு அப்படியே பணிந்து நடப்பதுதான் என்னுடைய சுபாவம். பாலத்தைக் கொளுத்த வேண்டும் என்று நீர் சொன்னீர். ஆனால் யார் கொளுத்த வேண்டும் என்று எனக்கு எப்படித் தெரியமுடியும்? அட கடவுளே!'

'ஆ, எப்பொழுதுமே இப்படித்தான்' என்ற கையை ஆட்டிக் கொண்டு நெஸ்வைட்ஸ்கி சொன்னார். 'நீர் எப்படி இங்கே வந்தீர்?' என்று ஜெர்கோவைப் பார்த்துக் கேட்டார்.

‘அதே காரியத்திற்காகத்தான் வந்தேன். நீர் நனைந்து போயிருக்கிறீர்: உம்மைப் பிழிந்து விடட்டுமா?’

‘நீர் சொன்னீர், திருவாளர் பரிவார அதிகாரியே...’ என்று எரிச்சலான தொனியில் கர்னல் தொடர்ந்து பேசினார்.

‘கர்னல்’ என்று சேனாதிபதியிடமிருந்து வந்த அதிகாரி இடைமறித்து, ‘நீர் சீக்கிரமாகச் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் ரவை குண்டுகளை உபயோகிப்பதற்காக எதிரி பீரங்கிகளைக் கொண்டு வந்து விடுவான்.

கர்னல் மௌனமாக அந்த அதிகாரியையும் நெஸ்வைட்ஸ்கியையும் ஜெர்கோவையும் பார்த்து முகத்தைச் சுளித்தார்.

‘நான் பாலத்தைக் கொளுத்துவேன்’ என்று ஆழ்ந்த குரலில் சொன்னார். அவர் சொல்லியது, மனதிற்குப் பிடித்தமற்ற பல விஷயங்களை தாம் தாங்கிக்கொள்ள நேரிட்டபோதிலும், இன்னமும் சரியான காரியத்தையே தாம் செய்யப் போவதாக அவர் அறிவிப்பதுபோல் இருந்தது.

அந்தக் குதிரைதான் எல்லாவற்றிற்கும் காரணம் என்பது போல அதன் வயிற்றில் தம் காலால் உதைத்தார். கர்னலோடு குதிரை முன்னால் கிளம்பியது. டெனைசாவின் தலைமையில் ராஸ்டோவ் வேலை பார்த்துவந்த அந்த இரண்டாவது பட்டாளத்தை பாலத்திற்குத் திரும்பும்படி உத்தரவிட்டார்.

‘சரி, நான் நினைத்தது போலவே நடக்கிறது’ என்று ராஸ்டோவ் தமக்குத் தாமே கூறிக்கொண்டார். ‘அவர் என்னைச் சோதிக்க விரும்புகிறார்.’ அவருடைய இருதயம் சுருங்கியது. ரத்தம் முகத்திற்குப் பாய்ந்தது. ‘நான் கோழையா என்பதை அவரே பார்த்துக்கொள்ளட்டும்’ என்று அவர நினைத்தார்.

குண்டுகள் பாய்ந்தபோது அவர்கள் முகம் எப்படிக் கடினமாய் காணப்பட்டதோ, அதே பார்வை அந்த பிரகாசமான முகங்களில் தோன்றியது. தமது எதிரியான கர்னலை நெருக்கமாக ராஸ்டோவ் கவனித்தார். தாம் நினைத்தது சரியா என்பதைத் தெரிந்து கொள்வதற்கு, அவர் அம்மாதிரி பார்த்தார். ஆனால் கர்னல் ஒரு தடவை கூட ராஸ்டோவைப் பார்க்கவில்லை. போர் முனையில் அவர் எப்பொழுதும் காணப்படுவதுபோல, பவித்திரமாகவும் கடுமையாகவும் காணப்பட்டார். அதன் பின்னால் உத்தரவு கிளம்பியது.

‘கவனமாய் பாருங்கள், கவனமாய் பாருங்கள்’ என்று அவரைச் சுற்றி இருந்தவர்கள் மீண்டும் மீண்டும் சொன்னார்கள்.

அவர்களுடைய உடைவாள்கள் சேணங்களில் தட்டித்தடுக்கவும், அவர்களுடைய தார்ச் சக்கரங்கள் ஒலிக்கவும், குதிரை வீரர்கள் அவசரமாக குதிரைகளிலிருந்து கீழே இறங்கினார்கள். அடுத்தாற் போல் என்ன செய்யவேண்டும் என்பது அவர்களுக்குத் தெரியாது. வீரர்கள் தங்களுக்குத் தாங்களே சிலுவைக் குறி காட்டிக் கொண்டார்கள். கர்னலை ராஸ்டோவ் இப்பொழுது பார்க்க வில்லை. அதற்கு அவருக்கு நேரமில்லை. வீரர்களுக்குப் பின்னாலேயே, எங்கே தங்கிவிட நேரிட்டுவிடுமோ என்று அவர் பயந்தார். அவர் அவ்வளவு அதிகமாக பயந்தபடியால் அவருடைய இருதயம் நின்றுவிடும் போல் இருந்தது. தமது குதிரையை ஒரு வேலைக்காரனிடம் ஒப்புவித்தபோது அவருடைய கை பதறியது. இருதயத்தை நோக்கி இரத்தம் பாய்வதைப்போல அவர் உணர்ந்தார். குதிரைமீது பின்னால் சாய்ந்துகொண்டு, எதையோ கத்திக்கொண்டு, அவரைக் கடந்து டெனைசாவ் சென்றார். தம்மைச் சுற்றி குதிரை வீரர்கள் தார்ச்சக்கரங்கள் தடுக்க, உடைவாள்கள் கலகலக்க ஓடிக்கொண்டிருப்பதை அவர் பார்த்தார்.

'டோலி கொண்டு வாருங்கள்' என்று யாரோ ஒருவர் பின்னால் கூச்சல் போட்டார்.

டோலியைக் கூப்பிடுவதற்கு என்ன அர்த்தம் என்பதை ராஸ்டோவ் யோசிக்கவில்லை. மற்றவர்களுக்கு முன்பாகப் போய் சேருவதற்காக அவர் ஓடினார். ஆனால், கீழே பார்க்காமல் ஓடியதால் பாலத்தில் இருந்த சேற்றில் அவர் கால் அகப்பட்டு தடுக்கி விழுந்தார். விழும்போது கைகளை ஊன்றினார். மற்றவர்கள் அவருக்கு முன்பாகப் போய்விட்டார்கள்.

'இரண்டு பக்கங்களிலும், கேப்டன்' என்று எல்லாருக்கும் முன்பாக சென்று, பாலத்தின் அருகே குதிரையில் அமர்ந்து, வெற்றியும் களிப்பும் கொண்ட முகத்தோடு தோன்றிய கர்னல் சொல்லக் கேட்டார்.

தமது சகதிக் கைகளைக் கால் சட்டைகளில் துடைத்துக் கொண்டு, தமது விரோதியைப் பார்த்தார். எவ்வளவுக்கு எவ்வளவு முன்னால் போகிறாரோ, அவ்வளவுக்கு அவ்வளவு நல்லது என்று நினைத்து, மீண்டும் ஓட ஆரம்பித்தார். ஆனால், அவரைப் பாராமலே, அவரை அறிந்துகொண்டதாகக் காட்டிக்கொள்ளாமலே, பாக்டானிச் அவரைப் பார்த்துக் கத்தினார்.

'பாலத்தின் மத்தியில் ஓடுவது யார்? வலது பக்கம்! திரும்பி வாரும், தொண்டரே' என்று கோபமாய் கூவி, டெனைசாவை திரும்பிப் பார்த்தார். டெனைசாவ் பாலத்தின் மேலுள்ள

பலகைகளின் மிது சவாரி செய்து தமது தீரத்தைக் காட்டிக் கொண்டிருந்தார்.

'ஏன் ஆபத்தில் அகப்பட்டுக் கொள்ளுகிறீர், கேப்டன். நீர் குதிரையை விட்டு கீழே இறங்கும்' என்று டெனைசாவைப் பார்த்து கர்னல் சொன்னார்.

'ஓ, ஒவ்வொரு குண்டுக்கும் தங்குமிடம் உண்டு' என்று டெனைசாவ் சொல்லிவிட்டு, தமது சேணத்திலேயே திரும்பினார்.

குண்டு சுடும் தூரத்திற்கு அப்பால் நெஸ்வைட்ஸ்கியும் ஜெர்கோவும் சேர்ந்து நின்று கவனித்துக்கொண்டிருந்தார்கள். மஞ்சள் குல்லாய்களும் ஆழ்ந்த பச்சை ஜாக்கட்டுகளும் நீலக்கால் சட்டைகளும் அணிந்த ஒரு சிறு கூட்டம் பாலத்திற்குப் பக்கத்தில் மொய்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்தார்கள். எதிர் கரையில் தூரத்தில் வந்துகொண்டிருந்த நீல நிற சீருடைகளையும், பீரங்கிகளை இழுத்து வந்துகொண்டிருந்த குதிரைகளைச் சுற்றியுள்ள சிறு கூட்டங்களையும் கவனித்தார்கள்.

'அவர்கள் பாலத்தை எரிக்கப்போகிறார்களா, இல்லையா? அங்கே முதலில் யார் போய்ச் சேருவார்கள்? இவர்கள் அங்கே போய்ச் சேர்ந்து பாலத்தை நெருப்பினால் தகர்ப்பார்களா? அல்லது அந்த பிரஞ்சுக்காரர்கள் ரவை குண்டு சுடும் தூரத்திற்குள் வந்து இவர்களை துவம்சம் செய்துவிடப் போகிறார்களா?' பாலத்திற்கு மேலாக உள்ள உயரமான பூமியில் நின்று கொண்டிருந்த பட்டாளத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் இந்த கேள்விகளையே, தங்களை அறியாமலே, சோர்ந்த உள்ளத்தோடு தங்களைத் தாங்களே கேட்டுக் கொண்டிருந்தார்கள். பிரகாசமான மாலை ஒளியில் ஒரு பக்கம் பாலத்தையும், அதன் மேலிருந்த குதிரைப் படை வீர்களையும், எதிர் பக்கத்தல் நீல உடை அணிந்து தங்கள் துப்பாக்கிச் சனியன்களோடும் பீரங்கிகளோடும் முன்னேறிவரும் பிரஞ்சு துருப்புகளையும் கவனித்து வந்தார்கள்.

'ஐயோ, இந்த குதிரை வீரர்களுக்கு சுடச்சுட கிடைக்கப் போகிறது. அவர்கள் இப்பொழுது துப்பாக்கி சுடும் தூரத்திற்குள் வந்துவிடடார்கள்' என்றார் நெஸ்வைட்ஸ்கி.

'அத்தனை போர்களை அவர் அதற்கு ஏவி விட்டிருக்கக் கூடாது' என்றார் அந்த அதிகாரி.

'உண்மைதான். இரண்டு புத்திசாலியான பேர்வழிகள் அந்த வேலையை நன்றாய் சாய்திருக்க முடியும்' என்று பதிலளித்தார், நெஸ்வைட்ஸ்கி.

'ஆ, மேன்மை தங்கியவரே' என்று தமது கண்களை குதிரை வீரர்கள் மீது பதித்து, அப்பாவித்தனமான பாவத்தோடு ஜெர்வோவ் பேசினார். அவர் உண்மையாகப் பேசுகிறாரா, அல்லது கேலியாகப் பேசுகிறாரா என்பதைத் தெரிந்துகொள்ளுவது கஷ்டமாய் இருந்தது.

'ஆ, மேன்மை தங்கியவரே, நீர் விஷயங்களை எப்படித்தான் கவனிக்கிறீர்? இரண்டு பேரை அனுப்புவதா? அப்படியானால் நமக்கு 'விளாடிமிர்' பதக்கத்தை யார் கொடுப்பார்கள்? இப்பொழுது பாலத்தின் மீது நிற்பவர்கள் துவம்சம் ஆனால்கூட, அந்தப் படைப் பிரிவுக்கு மரியாதை காட்டும்படி சிபார்சு செய்யப்படும். உடனே அவருக்கும் பதக்கம் கிடைக்கும். எப்படி விஷயங்களைச் செய்வது என்பதை நமது பாக்டானிச் அறிவார்.'

'அங்கே பாருங்கள், அதோ ரவை குண்டு வெடிக்கிறது' என்றார், அந்த அதிகாரி.

அவர் பிரஞ்சு பீரங்கிகளை சுட்டிக்காட்டினார். பீரங்கிகளின் முன்பாகத்தை பின்பாக வண்டியிலிருந்து அவசரமாய் கழற்றிக் கொண்டிருந்தார்கள்.

பிரஞ்சுக்காரர்களின் வரிசையில் பீரங்கிகளுக்கு மத்தியிலிருந்து புகை கிளம்பியது. பின்னால் இரண்டாவதும் மூன்றாவதும் ஏககாலத்தில் தோன்றின. முதல் குண்டின் சப்தம் இங்கே வந்து சேரும்போது, நாலாவதன் புகை அங்கே தெரிந்தது. பின்னால் ஒன்றன்பின் ஒன்றாக இரண்டு சப்தங்களும், அப்புறம் மூன்றாவது சப்தமும் கேட்டன.

ஏதோ தாங்கமுடியாத வலியால் அவஸ்தைப் படுபவரைப்போல, பக்கத்தில் நின்ற அதிகாரியின் கையைப்பற்றி 'ஓ, ஓ' என்று நெஸ்வைட்ஸ்கி முனங்கினார். 'பாருங்கள், ஒருவன் கீழே விழுந்து விட்டான், விழுந்துவிட்டான், விழுந்துவிட்டான்.'

'இருவர் என்று நினைக்கிறேன்.'

'நான் ஜார் சக்தவர்த்தியாய் இருந்தால் எப்பொழுதும் யுத்தத்திற்குப் போகவேமாட்டேன்' என்று நெஸ்வைட்ஸ்கி சொல்லி திரும்பிக்ொண்டார்.

பிரஞ்சு பீரங்கிகள் அவசரமாக கெட்டிக்கப்பட்டன. நீல நிற சீருடை அணிந்த காலாட்படை வீரர்கள் பாலத்தை நோக்கி முன்னேறி ஓடினார்கள். மீண்டும் இடையிடையே புகை கிளம்பி, ரவை வெடிகள் வெடித்து, பாலத்தின் மீது விழுந்தன. ஆனால் நெஸ்வைட்ஸ்கி இந்தத் தடவை அங்கே என்ன நடக்கிறது என்பதை பார்க்க முடியவில்லை. ஏனெனில் பாலத்திலிருந்து ஒரு அடர்ந்த

புகை மண்டலம் கிளம்பிக்கொண்டிருந்தது. பாலத்திற்கு நெருப்பு வைப்பதில் குதிரை வீரர்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள். என்றாலும் பிரஞ்சு பீரங்கிகள் அவர்கள்மீது இன்னமும் சுட்டுக்கொண்டு இருந்தன. பாலத்திற்கு நெருப்பு வைக்கும் வேலையை அந்த பீரங்கிகளால் இனி தடுக்க முடியாது. என்றாலும் பீரங்கிகள் அங்கே இருந்தபடியால் யாரையாவது சுடவேண்டுமே என்பதற்காக, அவர்கள் சுட்டுக்கொண்டிருந்தார்கள். குதிரைப் படை வீரர்கள் தங்கள் குதிரைகளில் மீண்டும் ஏறிக்கொள்ளுவதற்கு முன்பாக மூன்று முறைகள் ரவை குண்டுகளைப் பிரஞ்சுக்காரர்கள் சுட்டார்கள். இரண்டு குண்டுகள் மிக உயரமாய் வேறு திசையில் போய்விட்டன. ஆனால் கடைசி குண்டு வீரர்கள் மத்தியில் விழுந்து மூன்று பேர்களைத் தாக்கியது.

பாக்டானிச்சுக்கும் தமக்கும் உள்ள உறவுகளைப் பற்றி நினைத்துக்கொண்டிருந்த ராஸ்டோவ், பாலத்தில் நின்று என்ன செய்வது என்று தெரியாமல் தயங்கினார். ‘வெட்டித்தள்ளுவதற்கு அங்கே ஒருவரும் இல்லை. யுத்தம் என்றால் அதுதான்’ என்று அவர் எப்பொழுதும் தமக்குள்ளேயே கற்பனை செய்து வந்திருந்தார். அல்லது பாலத்திற்கு நெருப்பு வைப்பதற்கு உதவி செய்யலாம் என்றாலோ, மற்ற சிப்பாய்களைப்போல கொளுத்துவதற்கு வைக்கோலைக் கொண்டு வரவில்லை. அவர் அங்கே நின்று தம்மைச் சுற்றிலும் பார்த்தார். திடீரென்று ஆணிளை கொட்டுவது போன்ற சப்தம் பாலத்தில் கேட்டது. அவருக்கு சமீபத்தில் நின்ற ஒரு வீரர் முனங்கலோடு, கைப்பிடி கம்பிகளில் சாய்ந்தார். ராஸ்டோவும் மற்றவர்களும் அவரிடம் ஓடினார்கள். மீண்டும் யாரோ ஒருவர் ‘டோலிகள்’ என்று கத்தினார். நாலு பேர்கள் கீழே விழுந்த வீரரைத் தூக்க ஆரம்பித்தார்கள்.

‘ஓ, கிறிஸ்துவின் பெயரால் என்னைத் தனியே விட்டுவிடுங்கள்’ என்று காயம்பட்டவர் கதறினார். என்றாலும் அவரைத் தூக்கி டோலியில் கடத்தினார்கள்.

நிக்கலஸ் ராஸ்டோவ் மறுபக்கமாகத் திரும்பிக்கொண்டார். எதையோ தேடுவதுபோல வெட்ட வெளியையும் டான்யூப் நதியின் தண்ணிரையும் ஆகாயத்தையும் சூரியனையும் பார்க்கலானார். இந்த ஆகாயம் எவ்வளவு அழகாய் இருக்கிறது! எவ்வளவு நீலமாய், எவ்வளவு அமைதியாய், எவ்வளவு ஆழமாய் இருக்கிறது! இந்த அஸ்தமன சூரியன் எவ்வளவு ஒளியுள்ளதாய், பிரகாசமயா இருக்கிறது! தூரத்தில் உள்ள அந்த டான்யூப்பின் தண்ணீர் எவ்வளவு மெல்லிய மினுமினுப்போடு பிரகாசிக்கிறது! எல்லாவற்றிலும் அழகாக அந்த நதிக்கும் கன்னிமாடத்திற்கும் அதிசயமான

அருவிகளுக்கும் மேலேபனியால் மூடப்பட்டிருக்கும் அந்த பைன்காடுகளுக்கும் அப்பால் தோன்றும் அந்த நீலமலைகள்தான் எவ்வளவு அழகாய் இருக்கின்றன...! அங்கேதான் அமைதியும் சந்தோஷமும் இருக்கின்றன...! 'நான் மட்டும் அங்கே இருக்க முடியுமானால் எனக்கு வேறொன்றும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்' என்ற நினைத்தார் ராஸ்டோவ். 'என்னிடத்திலேயும் அந்த சூரிய ஒளியிலும் எவ்வளவோ மகிழ்ச்சி இருக்கிறது. ஆனால், இங்கே... முனங்கல், துன்பம், பயம், நிலையற்ற தன்மை, அவசரம்... அங்கே அவர்கள் மீண்டும் கத்துகிறார்கள். மீண்டும் அவர்கள் எல்லாரும் எங்கேயோ பின்னால் ஓடுகிறார்கள். நானும் அவர்களோடு ஓடவேண்டும். அது அந்த சாவு, இங்கே இருக்கிறது. எனக்கு மேலே இருக்கிறது. என்னைச் சுற்றிலும் இருக்கிறது... அடுத்த வினாடியில் நான் இனிஒரு பொழுதும் இந்த சூரியனையோ, அந்த தண்ணீரையோ, அந்த அருவியையோ பார்க்கப் போவதில்லை.'

அதே வினாடியில் மேகங்களுக்குப் பின்னால் சூரியன் மறைந்தான். வேறு பல டோலி தூக்கிகள் ராஸ்டோவின் பார்வையில் தென்பட்டார்கள். மரணத்தைப் பற்றிய பயம், டோலிகளைப் பற்றிய பயம், சூரியன் மீதும் வாழ்க்கையின் மீதும் உள்ள பிரியம், இவையெல்லாம் ஒன்று சேர்ந்து மனக்கசப்பு கொள்ளும்படியான பரபரப்பை உண்டு பண்ணியது.

'ஓ, கடவுளே, பரமண்டலத்தில் இருக்கும் நீர் என்னைக் காப்பாற்றி மன்னித்து ரட்சிப்பீராக' என்று ராஸ்டோவ் வாய்க்குள் முணுமுணுத்தார்.

குதிரைகளைப் பிடித்துக்கொண்டு இருப்பவர்களிடம் குதிரை வீரர்கள் ஓடினார்கள். அவர்களுடைய குரல் பலமாகவும் அமைதியாகவும் இருந்தன. டோலி தூக்கிகள் பார்வையில் இருந்து மறைந்தார்கள்.

'நல்லது, நண்பரே, நீரும் வெடி மருந்துப் புகையை வாசனை பார்த்துவிட்டீரா?' என்று காதுக்கு மேலாக வாஸ்கா டெனைசாவ் கூவினார்.

'எல்லாம் முடிந்துவிட்டது. ஆனால், நான் ஒரு கோழை. ஆம், நான் ஒரு கோழை' என்று ராஸ்டோவ் நினைத்தார். ஆழ்ந்த பெருமூச்சு விட்டுக்கொண்டு, அவர் சேவகனிடம் இருந்து தமது 'ரூக்' குதிரையைக் கைப்பற்றி ஏற ஆரம்பித்தார்.

'அது என்ன, ரவை குண்டா?'

'ஆம், அதைப்பற்றி சந்தேகம் இல்லை' என்று கூவினார் டெனைசாவ்.

'கல் மாதிரி நின்று நீர் வேலை செய்தீர். அது ஒரு மோசமான வேலை. எதிரியைத் தாக்குவது என்பது இனிமையான வேலை. நாய்களை வெட்டித்தள்ள வேண்டியது தான். ஆனால், இம்மாதிரி வேலை இருக்கிறதே, எதிரிகள் உங்களைப் பார்த்து சுடுவதற்கு இலக்காக நின்றுகொண்டு செய்யும் வேலை இருக்கிறதே, இது அசல் பிசாசு வேலை.'

ராஸ்டோவின் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த கர்னல், நெஸ்வைட்ஸ்கி, ஜெர்கோவ், அந்த அதிகாரி இவர்களிடத்தில் டெனைசாவ் குதிரை மீது போனார்.

'அப்படியானால் ஒருவரும் கவனிக்கவில்லை என்று தெரிகிறது' என நினைத்தார் ராஸ்டோவ். இது உண்மைதான். ஒருவரும் அதை கவனிக்கவில்லை. ஏனெனில், முதலில் பீரங்கி குண்டுகளுக் கிடையில் அகப்படும் அந்தத் தொண்டர் எம்மாதிரி உணர்ச்சியில் இருப்பார் என்பதை எல்லாரும் அறிவார்கள்.

'இதோ, நீர் அறிக்கையை அனுப்புவதற்கு நல்ல விஷயங்கள் அகப்பட்டன. எனக்கு பதவி உயர்வு கிடைப்பதற்கு வழி இருக்கிறதா என்று பாரும்.'

'நான் பாலத்தைக் கொளுத்தினேன் என்று இளவரசரிடம் தெரிவிப்பீராக' என்று வெற்றியோடும் மகிழ்ச்சியோடும் கர்னல் சொன்னார்.

'என்ன நஷ்டம் ஏற்பட்டது என்று அவர் கேட்டால்?'

'ரொம்ப சொற்பம்' என்று கர்னல் தமது ஆழ்ந்த தொனியில் சொன்னார்.

'இரண்டு குதிரை வீரர்கள் காயம் அடைந்தார்கள். ஒருவர் வீழ்த்தப்பட்டதார்' என்று தமது சந்தோஷப் புன்னகையை அடக்க முடியாமல் பேசினார். 'வீழ்த்தப்பட்டார்' என்று அவர் சொல்லிய போது அந்த வார்த்தையை தெளிவாய் கேட்கும்படி கணீரென்னறு சொன்னார்.



போனபார்ட்டின் தலைமையில் லட்சம் பிரஞ்சு துருப்புகள் முன்னேறிக் கொண்டுவர, முப்பத்தி ஐயாயிரம் ருஷ்யத் துருப்புகள் குட்டுஜோவ் தலைமையில் டான்யூப் நதிக்ரை வழியாக பின்வாங்கிக் கொண்டிருந்தன. பின்வாங்கும் இடங்களில் உள்ள ஜனங்களோ, சிநேகபாவமாய் இல்லை. நேச நாடுகளின் மீதுள்ள

நம்பிக்கையோ போய்விட்டது. துருப்புகளுக்கு வேண்டியுள்ள சாமான்களோ, போதுமான அளவு கிடைக்கவில்லை. இதற்கு முன்னால் எதிர்பார்க்க முடியாத அளவில் யுத்தகால நெருக்கடிகளை அனுபவிக்க வேண்டியதாய் இருந்தது. துருப்புகள் வேகமாய் பின்வாங்கின. எதிரிகள் எங்கெங்கே நெருக்கினார்களோ, அங்கே மட்டும் பின் துருப்புகள் அவசியமான அளவிற்கு எதிரியிடம் சண்டை போட்டு யுத்த தளவாடங்களைக் காப்பாற்றிக்கொண்டு வந்தார்கள். லாம்பாக், ஆம்ஸ்டெட்டன், மெல்க் ஆகிய இடங்களில் அம்மாதிரி போராட்டங்கள் நடந்தன. துருப்புகளின் தைரியத்தையும், கஷ்டங்களைத் தாங்கும் சக்தியையும் எதிரிகள் கூட பாராட்டினார்கள். என்றாலும், இம்மாதிரி போராடியும்கூட பின் வாங்குவது மட்டும் இன்னும் வேகமாகவே செய்யப்பட வேண்டியதாய் இருந்தது. உல்ம் என்ற இடத்தில் பிரஞ்சு துருப்புகளிடம் அகப்படாமல் தப்பி மிஞ்சிய ஆஸ்திரிய துருப்புகள் பிராவ்னாவில் குட்டுஜோவுடன் கலந்து கொண்டன. ஆனால், இப்பொழுது அவை பிரிந்து விட்டன. ஆகவே, குட்டுஜோவிடம் தமது சொந்தமான பலவீனமும் களைப்பும் கொண்ட துருப்புகளே இருந்தன. வியன்னாவை பாதுகாப்பது என்ற பேச்சுக்கே இப்பொழுது இடமில்லை. வியன்னாவில் எதிர் தாக்குதல் நடத்துவதற்கு, நவீன யுத்த தந்திரங்களை அனுசரித்து ஜாக்கிரதையோடு தயாரிக்கப்பட்ட திட்டத்தை, ஆஸ்திரிய யுத்த சபை வியன்னால் குட்டுஜோவிடம் கொடுத்தார்கள். என்றாலும் குட்டுஜோவின் ஒரே லட்சியம், அநேகமாய் அது நடக்க முடியாதது என்றே சொல்லக்கூடிய,ருஷ்யாவில் இருந்து வந்துகொண்டிருந்த துருப்புகளோடு, தமது துருப்புகளும் கலந்து கொள்ளும்படி செய்வதேயாகும். அப்படி செய்தால்தான் உல்ம் என்ற இடத்தில் மாக் என்பவர் தமது துருப்புகளை எப்படி இழந்தாரோ, அம்மாதிரி இழக்காமல் காப்பாற்ற முடியும்.

அக்டோபர் 28-ந் தேதி நதியை தமது துருப்புகளோடு குட்டுஜோவ் கடந்து டான்யூப்பின் இடது கரைக்குப் போனார். அங்கே தான் முதல் தடவையா தமது துருப்புகளை அணிவகுத்து நிறுத்தினார். பிரதான பிரஞ்சு துருப்புகளுக்கும் இவருடைய துருப்புகளுக்கும் மத்தியில் டான்யூப் நதி இருந்தது. 30-ந் தேதியன்று நதியின் இடது கரைக்கு வந்து சேர்ந்திருந்த மார்ட்டியர் என்பவரின் தலைமையில் இருந்த பிரஞ்சு துருப்புகளின் பிரிவை குட்டுஜோவ் தாக்கி முறியடித்தார். முதல் தடவையாக இந்த போராட்டத்தில் தான் குட்டுஜோவிற்கு வெற்றிச் சின்னங்கள் கிடைத்தன. அதாவது, கொடிகள், பீரங்கிகள், எதிரி துருப்புகளைச் சேர்ந்த இரண்டு

ஜெனரல்கள் ஆகியவைகளைக் கைப்பற்றினார். இரண்டு வாரங்களாகப் பின்வாங்கி வந்த பின்பு முதல் தடவையாக அங்கேதான் ருஷ்யத் துருப்புகள் நின்று தங்கின. அந்த இடத்தில் அந்தப் போராட்டத்திற்குப் பின்னால் தாங்கள் தங்கியது மட்டுமல்லாமல் எதிரிகளையும் பின்வாங்கி ஓடும்படி செய்தார்கள். ருஷ்யத் துருப்புகள் நல்ல உடைகள் இல்லாமல் களைத்துப் போயிருந்தார்கள். அவர்களின் தொகையில் மூன்றில் ஒரு பங்குபேர் கொல்லப்பட்டோ, காயம்பட்டோ, அசௌக்கியமடைந்தோ, சிதறியோ போனார்கள். காயம்பட்டோ, அசௌக்கியமடைந்தோ போனவர்களில் பலரை ஆற்றின் அக்கரையிலேயே கைவிட்டு வந்தார்கள். அவர்களிடம் எதிரிகளுக்கு கொடுக்கும்படி குட்டுஜோவ் ஒரு கடிதத்தையும் விட்டு வந்தார். அந்த கடிதத்தில் காயம்பட்டவர்களையும் அசௌக்கியம் அடைந்தவர்களையும் எதிரிகளின் ஜீவகாருண்யத் தன்மையை நம்பி விட்டு வந்திருப்பதாக அவர் எழுதியிருந்தார். கிரெம்ஸ் என்ற இடத்திலுள்ள பல வீடுகள் ராணுவ ஆஸ்பத்திரிகளாக மாற்றப்பட்டிருந்தன. அப்படியிருந்தும் அவைகளும் பெரிய ஆஸ்பத்திரிகளும் நிரம்பியிருந்தன. அவற்றில் காயம் அடைந்தோ, அசௌக்கியம் அடைந்துபோன எல்லாரையும் சேர்த்துக் கொள்ளுவதற்கு இடமில்லை. என்றாலும் கிரெம்ஸ் என்ற இடத்தில் ருஷ்யத் துருப்புகள் நிலைத்து நின்று மார்ட்டியரை தோற்கடித்து வெற்றிகண்ட காரியம் துருப்புகளின் உற்சாகத்தை வெகுவாய் அதிகரித்தது. ராணுவம் முழுவதிலும் சேனாதிபதி தலைமை பீடத்திலும் மகிழ்ச்சி பொங்கியது. அதோடு தவறான வதந்திகளும் பரவி வந்தன. அதாவது,ருஷ்யாவில் இருந்து வந்துகொண்டிருந்த துருப்புகள் நெருங்கிவிட்டதாகவும், ஆஸ்திரியர்கள் ஏதோ வெற்றிகள் பெற்றதாகவும், போனபார்ட் பயந்து நடுங்கி பின்வாங்கிப் போவதாகவும் வதந்திகள் பரவின.

ஆஸ்திரியன் ஜெனரல் ஷிமிட் என்பவருக்கு உதவியாக இளவரசர் ஆண்ட்ரூ போராட்ட சமயத்தில் வேலை பார்த்து வந்தார். அந்தப் போராட்டத்தில் அந்த ஜெனரல் கொல்லப்பட்டார். ஆண்ட்ரூவின் குதிரை அவரை சுமந்து நிற்கும்போது காயமடைந்தது. அவருக்கும் கையில் ஒரு குண்டு லேசாக உரசியது. அவரிடம் சேனாதிபதி விசேஷப் பரிவு காட்டி, வெற்றிச் செய்தியை ஆஸ்திரிய சக்கரவர்த்திக்கு தெரிவிக்கும் தூதர் வேலையை கொடுத்தார். ஆஸ்திரிய சக்கரவர்த்தி தற்சமயம் வியன்னாவில் இல்லை. பிரஞ்சுக்காரர்கள் நெருங்கிவிட்டபடியால் பிரென் என்ற இடத்திற்கு ராஜாங்கம் மாற்றப்பட்டது. இளவரசர் ஆண்ட்ரூ

மெலிந்த சரீரியாய் தோன்றிய போதிலும், புஷ்டியாய் உள்ள பலரைவிட அதிகமான உடல் வலிமை பெற்றவராய் இருந்தார். போராட்டத்தன்று இரவு கிரெம்ஸ் என்ற இடத்திற்கு அவர் வந்து சேர்ந்தபோது, பரபரப்போடு அவர் காணப்பட்டாரே ஒழிய, அலுப்படைந்தவராய் காணப்படவில்லை. டாக்டுராவ் என்ற ஜெனரலிடமிருந்து குட்டுஜோவுக்கு சில அறிக்கைகளை கிரெம்ஸுக்கு கொண்டுவந்திருந்தார். உடனேயே விசேஷ அறிக்கை ஒன்றை அவரிடம் கொடுத்து பிரென் என்ற இடத்திற்கு அனுப்பினார். அம்மாதிரி அனுப்புவது ஒரு கௌரவரம் என்பது மட்டுமல்ல, பதவி உயர்வுக்கு ஒரு முக்கியமான படியுமாகும்.

இரவு இருட்டாய் இருந்தது. வானத்தில் நட்சத்திரங்கள் தெரிந்தன. போராட்டம் நடந்த தினமாகிய முதல் நாளன்று விழுந்த பனியினால் ரஸ்தா கருப்பாகத் தோன்றியது. அந்தப் போராட்டத்தைப் பற்றி தமது மனதில் பதிந்திருந்தவைகளை நினைத்துக்கொண்டோ, தாம் கொண்டுபோகும் வெற்றிச் செய்தி ஏற்படுத்தக்கூடிய உணர்ச்சிகளைப்பற்றி தமது உள்ளத்தில் மகிழ்ச்சியோடு மனோராஜ்யம் செய்துகொண்டோ, தமது சேனாதிபதியும் தமது நண்பர்களும் தாம் புறப்படும்போது தமக்குக் கூறிய வழியனுப்பு வார்த்தைகளைப்பற்றி நினைத்துக்கொண்டோ இளவரசர் ஆண்ட்ரூ பிரயாண வண்டியில் அமர்ந்து போய்க்கொண்டிருந்தார். வெகுகாலமாய் விரும்பிய சந்தோஷத்தை கடைசியாக அடைய ஆரம்பிப்பது போன்ற உணர்ச்சியை அவர் அனுபவித்தார். கண்களை அவர் மூடியதும் சக்கரங்களின் சலசலப்பு சப்தங்களும் வெற்றி மகிழ்ச்சியும் தமது காதுகளை நிரப்புவதுபோல அவருக்குத் தோன்றியது. பின்னால் அவர், ருஷ்யர்கள் ஓடுவது போலவும் தாம் கொல்லப்படுவது போலவும் கனவு கண்டார். உடனே 'விஷயம் அப்படியல்ல, பிரஞ்சுக்காரர்கள் அல்லவா ஓடினார்கள்!' என்று அப்பொழுதுதான் தெரிந்துகொண்டவரைப் போல தம்மை உலுப்பிக்கொண்டு சந்தோஷமடைந்தார். வெற்றியைப் பற்றிய விவரங்களையும் சண்டையின்போது தாம் காட்டிய அமைதியான தைரியத்தைப் பற்றியும் அவர் தம் மனக்கண் முன்பாகக் கொண்டுவந்து தம்மைத் திருப்தி செய்துகொண்டு மீண்டும் தூங்கிவிட்டார். நட்சத்திரங்கள் மின்னிக்கொண்டிருந்த அந்த இருண்ட இரவுக்குப் பின்னால், பிரகாசமான மகிழ்ச்சியைத் தரும் காலை நேரம் வந்தது. சூரிய ஒளியில் பனி உருகிக்கொண்டிருந்தது. குதிரைகள் பாய்ச்சலில் ஓடிக் கொண்டிருந்தன. ரஸ்தாவின் இருபுறங்களிலும் விதவிதமான காடுகளும் வயல்களும் கிராமங்களும் தோன்றின.

குதிரையை மாற்றும் தபால் வண்டி இடம் ஒன்றில், காயம் அடைந்த ருஷ்யத் துருப்புகளை ஏற்றிச்சென்ற வண்டிக் கூட்டங்களைச் சந்தித்தார். முதல்வண்டியில் அந்த காயம் அடைந்த துருப்புகளுக்கு பொறுப்பாய் இருந்த ஒரு ருஷ்ய அதிகாரி, பின்னால் சாய்ந்துகொண்டு, சப்தம் போட்டு ஒரு சிப்பாயை ஆபாசமாய் திட்டிக்கொண்டிருந்தார். அந்த நீளமான ஜெர்மன் வண்டிகள் ஒவ்வொன்றிலும் ஆறு அல்லது அதற்கு அதிகமான காயம்பட்டவர்கள் கட்டுகள் போட்டுக்கொண்டும், அசுத்தமாகவும் வெளிறிப்போயும் காணப்பட்டார்கள். கல் ரஸ்தாவில் வண்டிகள் போகும்போது, அவர்கள் குலுக்கிக் குலுக்கிப் போடப்பட்டார்கள். சிலர்பேசிக் கொண்டிருந்தார்கள். ருஷ்ய வார்த்தைகள் அவருக்குக் கேட்டன. சிலர் ரொட்டியைத் தின்றுகொண்டிருந்தார்கள். பலமாகக் காயம் அடைந்தவர்கள் மௌனமாய் இருந்தார்கள். அசௌக்கியம் அடைந்த குழந்தைகள் எப்படி மந்தமாகப் பார்த்துக்கொண்டிருக்குமோ, அதே மாதிரி அவர்கள் தங்களைக் கடந்து அவசரமாய் போய்க்கொண்டிருந்த சேனாதிபதியின் தூதரைப் பார்த்தார்கள்.

இளவரசர் ஆண்ட்ரூ தமது சாரதியிடம்சொல்லி வண்டியை நிறுத்தச் சொன்னார். ஒரு சிப்பாயைப் பார்த்து, ‘எந்த போராட்டத்தில்அவர்கள் காயமடைந்தார்கள்?’ என்று கேட்டார். அந்த சிப்பாய், ‘நேற்று முன்தினம் டான்யூப் நதிக்கரையில் நடந்த போராட்டத்தில் காயமடைந்தோம்’ என்று பதிலளித்தான். இளவரசர் ஆண்ட்ரூ தமது பணப் பையை வெளியே எடுத்து, மூன்று தங்க நாணயங்களை சிப்பாயிடம் கொடுத்தார். இதற்குள் தம்மை நோக்கி வந்த அந்த அதிகாரியிடம், ‘இதை எல்லாருக்கும் கொடுத்து விடுங்கள்’ என்று சொன்னார்.

சிப்பாய்களைப் பார்த்து அவர், ‘சீக்கிரம் குணமடையுங்கள், வாலிபர்களே. இன்னும் செய்யவேண்டிய வேலை ஏராளமாய் இருக்கிறது’ என்றார்.

‘செய்தி ஏதாவது உண்டா, ஐயா?’ என்று உரையாடலை ஆரம்பிக்க ஆவலோடு விரும்பி அந்த அதிகாரி கேட்டார்.

‘நல்ல செய்திதான்’ என்று இளவரசர் பதிலளித்து விட்டு, சாரதியைப் பார்த்து,போகலாம்’ என்றார். குதிரைகள் பாய்ச்சலில் கிளம்பின.

கல் தளங்கள் போடப்பட்ட பிரென் நகர தெருக்களில், இளவரசர் ஆண்ட்ரூவின் வண்டி கலகல சப்தத்தோடு போய்க் கொண்டிருந்த போது, நன்றாக இருட்டிவிட்டது. தம்மைச் சுற்றி உயர்ந்த கட்டிடங்களும், கடைகளின் விளக்குகளும், வீடுகளும் தெரு

விளக்குகளும் உயர்ந்த வண்டிகளும் இருப்பதைக் கண்டார். ஒரு பெரிய சுறுசுறுப்பான பட்டணத்துக்கு வேண்டிய சுற்றுணர்ச்சி அங்கே காணப்பட்டது. முகாம் வாழ்க்கையில் இருந்த சிப்பாய்களுக்கு இம்மாதிரி பட்டணங்கள் எப்பொழுதுமே கவர்ச்சியாய் இருக்கும். துரிதமாய் அவர் பிரயாணம் செய்த போதிலும், இரவில் தூங்காமல் இருந்தபோதிலும், அரண் மனையை அவர் அடைந்தபோது முதல் நாளைவிட அதிகமான உற்சாகத்தோடும் கவனத்தோடும் இருப்பதாக உணர்ந்தார். அவருடைய கண்கள் மித மிஞ்சிய ஜொலிப்போடு பிரகாசித்தன. அவருடைய நினைப்புகள் ஒன்றன் பின் ஒன்றாக மிகுந்த தெளிவாகவும், வேகமாகவும் வந்து கொண்டிருந்தன. போராட்டத்தைப் பற்றிய விவரங்கள் மந்தமாய் இல்லாமல் தெளிவாகத் தோன்றின. சக்கரவர்த்தி பிரான்ஸிஸ் இடம்என்ன மாதிரி சொல்லவேண்டும் என்று இவர் மனோராஜ்யம் செய்தாரோ, அதே மாதிரி சுருக்கமாகவும் நிச்சயமாகவும் தோன்றின. தம்மிடம் எம்மாதிரி கேள்விகள் கேட்கப்படும் என்பதையும், அதற்குத் தாம் எம்மாதிரி பதில்கள் கொடுக்கவேண்டும் என்பதையும் அவர் மனோராஜ்யம் செய்துகொண்டார். தாம் போய்ச் சேர்ந்ததும், உடனே தம்மை சக்கரவர்த்தியிடம் ஆஜர் செய்வார்கள் என்று அவர் எதிர்பார்த்தார். அரண்மனையின் பிரதான வாசலில் அவர் நுழைந்ததும், ஒரு அதிகாரி ஓடிவந்து இவரை சந்தித்தார். அவர் ஒரு விசேஷ தூதர் என்பதை அறிந்ததும், அவரை மற்றொரு வாசலுக்கு அந்த அதிகாரி அழைத்துச் சென்றார்.

'தாழ்வாரத்திலிருந்து வலது பக்கமாய் போங்கள், மேன்மை யானவரே. அங்கே ஒரு உதவியாளர் அலுவலில் இருப்பார். அவர் உங்களை யுத்த மந்திரியிடம் அழைத்துச் செல்வார்' என்றார் அந்த அதிகாரி.

அங்கிருந்த உதிவியாளர் இளவரசர் ஆண்ட்ரூவை சந்தித்து, அவரை அமரும்படி சொல்லிவிட்டு, யுத்த மந்திரியிடம் உள்ளே போனார். ஐந்து நிமிஷம் கழித்து அவர் திரும்பி வந்து, குனிந்து விசேஷ மரியாதை செய்து, இளவரசர் ஆண்ட்ரூவை முன்னால் போகச்சொல்லி தாம் பின் தொடர்ந்தார். தாழ்வாரம் வழியாக யுத்த மந்திரியின் அறைக்கு அவர்கள் போனார்கள். அந்த உதவியாளர் செய்த பிரமாதமான மரியாதைகளைப் பார்த்தால், இந்த ருஷ்யத் தூதரிடம் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ள விருபாதவர் போலக் காணப்பட்டது.

மந்திரி அறையின் வாசலுக்குப் போவதற்குள்ளாக இளவரசர் ஆண்ட்ரூவின் மகிழ்ச்சியுணர்ச்சி வெகுதூரம் குறைந்து விட்டது.

தாம் அவமரியாதை செய்யப்பட்டதாக உணர்ந்தார். அந்த அவமரியாதை உணர்ச்சி தாம் அறியாமலேயே வெறுப்பாக மாறியது. இப்படி நினைப்பதற்கு அங்கே காரணமே கிடையாது. இந்த உதவியாளரையும் மந்திரியையும் வெறுப்பதற்கு ஒரு சரியான காரணத்தை அவருடைய சுறுசுறுப்பான மூளை அவருக்கு சொல்லியது. 'வெடி மருந்து புகைக்கு வெகு தூரத்திற்கப்பால் இருந்து கொண்டு, வெற்றிகளை அடைவது என்பது வெகு சுலபமான விஷயம் என்று அவர்கள் நினைக்கலாம்' என்று ஆண்ட்ரூ நினைத்தார். வெறுப்போடு அவருடைய கண்கள் இடுங்கின. யுத்த மந்திரியின் அறைக்குள் உறுதியான நடையோடு நுழைந்தார். அங்கே ஒரு பெரிய மேஜையின் முன்பு மந்திரி அமர்ந்து, சில ஆவணங்களை வாசித்து அவற்றிலேயே பென்சிலால் குறிப்புகள் எழுதிக்கொண்டிருந்தார். முதல் இரண்டு மூன்று நிமிஷங்களுக்கு ஆண்ட்ரூவின் வருகையை அவர் கவனிக்கவே இல்லை. இதைப் பார்த்ததும் ஆண்ட்ரூவின் வெறுப்பு இன்னும் அதிகமாயிற்று. மந்திரியின் கன்னப் பொட்டுகளில் நரைத்த ரோமங்கள் காணப்பட்டன. மற்றபடி வழுக்கையாய் இருந்த அவருடைய தலையை மேஜைமீது குனிந்துப் பார்த்துக் கொண்டிருந்தார். தலைக்கு இரு பக்கங்களிலும் மேஜை மீது மெழுகு வத்திகள் எரிந்துகொண்டிருந்தன. கதவு திறந்த பின்போ, காலடி சப்தம் கேட்ட பின்போ, அவர் கண்களை உயர்த்திப் பார்க்கவில்லை. தொடர்ந்து படித்துக்கொண்டே இருந்தார்.

'இதை எடுத்துக் கொண்டுபோய் கொடுத்து விடும்' எனறு அவர் தமது உதவியாளரைப் பார்த்துச் சொல்லி, அவரிடம் சில தஸ்தாவேஜுகளைக் கொடுத்தார். இப்பொழுதும் அவர் அந்த விசேஷத் தூதரை ஏறிட்டுப் பார்க்கவில்லை.

'அந்த யுத்த மந்திரி சிரத்தை கொண்டுள்ள விஷயங்களில் எதையும்விட, குட்டுஜோவின் ராணுவ நடவடிக்கைகள் மிகுந்த குறைவான கவனத்தையே கொண்டிருக்கின்றன' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். அல்லது, 'இந்த விசேஷத் தூதருக்கு அம்மாதிரி அபிப்பிராயத்தை உண்டுபண்ணவேண்டும் என்ற கருத்தோடு அவர் இம்மாதிரி நடந்தும் இருக்கலாம்' என்றும் அவர் நினைத்தார். 'ஆனால், எனக்கு அதைப்பற்றி சிறிதும் லட்சியம் இல்லை' என்று தமக்குள் கூறிக்கொண்டார். மீதம் இருந்த தஸ்தாவேஜுகளை மந்திரி ஒன்று சேர்த்து ஒழுங்காய் அடுக்கிவைத்த பின்பு தமது தலையை உயர்த்தினார். அவருடைய தலை புத்திசாலித்தனம் உள்ளதாயும் தனிப்பட்ட சிறப்புள்ளதாயும் காணப்பட்டது. ஆனால், இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்க்க அவர்

திரும்பியதும்,அவர் முகத்தில் காணப்பட்ட அந்த உறுதியும் புத்திசாலித்தனமுமான தோற்றங்கள் மாறின. அம்மாற்றம் அவர் துணிந்து வழக்கமாக செய்வதுபோல இருந்தது. அசட்டுத்தனமான ஒரு செயற்கையான புன்சிரிப்பு அவர் முகத்தில் காணப்பட்டது. (அந்த செயற்கையை மறைக்க அவர் முயற்சிகூட செய்யவில்லை). தொடர்ச்சியாக பல மனுதாரர்களை ஒருவருக்குப்பின் ஒருவராகப் பார்த்துப் பழகியவரின் முகத்தில் காணப்படும் புன்சிரிப்பு எப்படி இருக்குமோ, அதேமாதிரி அந்த புன்சிரிப்பு இருந்தது.

'ஜெனரல் பீல்ட் மார்ஷல் குட்டுஜோவிடமிருந்து வந்திருக்கிறீரா?' என்ற அவர் கேட்டார். 'நல்ல செய்தி என்று நான் நம்புகிறேன். மார்ட்டியரோடு ஒரு சண்டை நடந்ததல்லவா? வெற்றிதானே? ஆமாம், வெற்றிபெற வேண்டிய சமயந்தான்!'

தமக்கு விலாசமிடப்பட்டிருந்த அறிக்கையை எடுத்து ஒரு சோகமான தோற்றத்தோடு வாசிக்க ஆரம்பித்தார்.

'ஓ, அட கடவுளே! அட கடவுளே! ஷிமிட்!' என்று அவர் ஜெர்மன் மொழியில் உரக்கக் கத்தினார். 'எப்பேர்ப்பட்ட பேரிடி, எப்பேர்ப்பட்ட பேரிடி!'

அறிக்கையைப் படித்துவிட்டு, அதை மேஜைமீது வைத்து இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்தார். எதையோ யோசித்துக் கொண்டிருந்தார் எனத் தெரிந்தது.

'ஆ, எப்பேர்ப்பட்ட பேரிடி! அந்த சண்டையில் நமக்கு நிச்சயான வெற்றி என்று கூறுகிறீர். ஆனால்,ம்ார்ட்டியரை கைது செய்யவில்லை.' மீண்டும் அவர் யோசனையில் ஆழ்ந்தார். 'நீர் நல்ல செய்தி கொண்டு வந்ததற்காக நான் சந்தோஷம் அடைகிறேன். ஆனால், இந்த வெற்றிக்காக ஷிமிட்டை நாம் இழக்க நேரிட்டது தாங்க முடியாத நஷ்டம். மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தி உம்மைப் பார்க்க விரும்புவார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், இன்று முடியாது. உமக்கு எனது வந்தனம். நீர் சிரம பரிகாரம் செய்து கொள்ளவேண்டும். நாளை அணிவகுப்புப் பார்வையிடலுக்குப் பின்னால், ஆஸ்தான மண்டபத்திற்கு வாரும். எதற்கும் நான் சொல்லி அனுப்புகிறேன்.

அவர் பேசிக்கொண்டிருந்தபோது அவர் முகத்திலிருந்து மறைந்திருந்த அந்த அசட்டுப் புன்னகை மீண்டும் தோன்றியது.

'போய் வாரும். அநேக வந்தனங்கள். மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தி உம்மைப் பார்க்க விரும்பலாம்' என்று அவர் சொல்லி தலையைத் தாழ்தினார்.

இளவரசர் ஆண்ட்ரூ அரண்மனையில் இருந்து வெளியேறினார். வெற்றியால் தமக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியும் சிரத்தையும்,

இப்பொழுது இந்த அலட்சிய பாவமுள்ள யுத்த மந்திரி, அந்த அடக்கமுள்ள உதவியாளர் ஆகியவர்களின் கைக்குள் போய் அகப்பட்டுவிட்டன என்று நினைத்தார். அவருடைய நினைப்பு களில் முழுப் போக்கும் உடனே மாறிவிட்டது. அந்த யுத்த வெற்றியைப் பற்றிய நினைப்பு, எப்பவோ வெகு காலத்திற்கு முன்பாக நடந்தது போலத் தோன்றியது.

## 2

## 10

பிரென் நகரத்தில் ராஜதந்திர சேவையில் உள்ளவரும் தமக்கு அறிமுக மானவருமான பிலைபின் என்ற ருஷ்ய ரோடு இளவரசர் ஆண்ட்ரூ தங்கினார்.

'ஆ, எனது அன்புள்ள இளவரசே, உம்மைவிட அதிகமான சந்தோஷம் கொடுக்கக்கூடிய விருந்தாளி எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்?' என்று இளவரசர் ஆண்ட்ரூவை சந்திப்பதற்காக வெளியே வந்த பிலைபின் கூறினார். 'பிரான்ஸ், இளவரசரின் சாமான்களை என்னுடைய படுக்கை அறையில் கொண்டு வை' என்று பால்கோன்ஸ்கியின் வரவைப்பற்றிக் கூறிய தமது வேலைக்காரனைப் பார்த்துச் சொன்னார். 'ஓஹோ, நீர்தான் வெற்றிச் செய்தியைக் கொண்டுவந்த தூதரோ? மிக்க மகிழ்ச்சி! நான் இங்கே உடம்பு அசௌக்கியமாய் இருக்கிறேன். நீரே பாரும்.'

குளித்து உடுப்பு மாற்றிய பின்பு, ராஜதந்திரியின் மிகுந்த சொகுசான படிப்பு அறைக்கு இளவரசர் ஆண்ட்ரூ வந்தார். தமக்காக தயாரிக்கப்பட்டிருந்த டின்னரை சாப்பிடுவதற்கு அமர்ந்தார். கணப்பு மூட்டத்திற்குப் பக்கத்தில் சௌக்கியமாக பிலைபின் அமர்ந்துகொண்டார்.

யுத்த முனைக்கு வந்த பின்பு சுத்தத்தின் சௌக்கியங்களும் வாழ்க்கையின் மேன்மைகளும்அவருக்குக் கிடைக்க முடியாமல் போயின. ஆகவே பிரயாணத்திற்குப் பின்பு, தமது குழந்தைப் பருவத்திலிருந்து பழக்கப்பட்டுபோன சொகுசான சௌகரியங் களோடு, மீண்டும் அமர்ந்திருக்க நேர்ந்தது அவருக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. தவிரவும், ஆஸ்திரியர்கள் அவருக்குக் கொடுத்த வரவேற்புக்குப் பின்னால், ஒரு ருஷ்யரோடு ருஷ்ய மொழியில் பேசாவிட்டாலும் (அவர்கள் பிரஞ்சு மொழியில்தான் பேசினார்கள்) பேசுவதற்கு வாய்ப்பு கிடைத்தது அவருக்கு மகிழ்ச்சியாய் இருந்தது. ஆஸ்திரியர்களுக்கு விரோதமான ருஷ்ய உணர்ச்சி அச்சமயம்

அதிகமாய் இருந்தது. அந்த உணர்ச்சியை இந்த ருஷ்யரும் கொண்டிருப்பார் என்று அவர் யூகித்தார்.

பிலைபினுக்கு முப்பந்தைந்து வயது இருக்கும்; ஒரு பிரம்மச்சாரி. இளவரசர் ஆண்ட்ரூவின் வட்டாரத்தைச் சேர்ந்தவர். முன்னபே பீட்டர்ஸ்பர்க்கில் அவர்களுக்குள் பழக்கமுண்டு. குட்டுஜோவோடு வியன்னாவில் இளரவசர் ஆண்ட்ரூ இருந்தபோது, அந்தப் பழக்கம் அதிகமான நட்பாய் வளர்ந்தது. இளரவசர் ஆண்ட்ரூ வாலிபராய் இருந்து, ராணுவ சேவையில் எப்படி உயர் பதவிக்குப் போய்ச் சேருவதற்கு தகுதியுடையவராய் இருக்கிறாரோ, அதே மாதிரி பிலைபினுக்கும் ராஜதந்திர சேவையின் மேல் படிக்குப் போவதற்குத் தகுதியிருந்தது. அவர் இன்னும் வாலிபர்தான். ஆனால், ராஜதந்திரத்தில் அவர் இளைஞரல்ல. பதினாறு வயதிலேயே அவர் இந்த சேவையில் சேர்ந்தார். பாரிசிலும் கோபன்ஹேகனிலும் அவர் இருந்திருக்கிறார். இப்பொழுது அவர் ஒரு முக்கியமான பதவியினால் வியன்னாவில் இருக்கிறார். அந்நிய நாட்டு மந்திரிக்கும் வியன்னாவில் உள்ள ருஷ்ய ஸ்தனாதிபதிக்கும் அவரைத் தெரியும். அவரிடம் அவர்களுக்கு நல்ல மதிப்புண்டு. மற்ற பல ராஜதந்திரிகளைப் போன்றவரல்ல அவர். அதாவது, வேண்டாம் என்ற எதிர்மறை குணங்கள் இருப்பதற்காகவும், சில காரியங்களைச் செய்யாமல் இருப்பதாகவும் பிரஞ்சு மொழி பேசுவதற்காகவும் சிலர் மதிக்கப்படுகறார்கள். அம்மாதிரியானவர் களில் ஒருவரல்ல பிலைபின். வேலையில் பிரியம் கொண்டு அதை எப்படி செய்யவேண்டும் என்பதை அறிந்து, அவசியமானபோது தமது சோம்பேறித்தனத்தையும் உதறித்தள்ளி, இரவு முழுவதிலும் மேஜை முன்னாலிருந்து வேலை செய்யக்கூடியவர்களில் இவர் ஒருவர். தமது வேலை எத்தகையதாய் இருந்தாலும் சரி,அதை நன்றாகவே செய்து முடிப்பார். 'எதற்காக செய்ய வேண்டும்?' என்ற கேள்வியில் அவருக்குப் விருப்பம் கிடையாது. 'எப்படி செய்யவேண்டும்?' என்ற கேள்வியிலேயே அவருக்குப் விருப்ப முண்டு. ராஜதந்திர வேலை எம்மாதிரியானதாய் இருந்தாலும், அதைப்பற்றி அவர் கவலைப்படுவதில்லை. சுற்றறிக்கைகள், ஆவணங்கள், அறிக்கைகள், இவைகளை சாமர்த்தியத்தோடு கருத்தைச் சுட்டிக்காட்டி அழகாய்த் தயாரிப்பதில் அவருக்கு மிக்க மகிழ்ச்சியுண்டு. பிலைபினின் சேவைகளின் பெருமை, அவரின் எழுத்தோடு மட்டும் நின்றுவிடவில்லை; உயர் வட்டாரங்களில் உள்ளவர்களோடு சாமர்த்தியமாகக் காரியங்களைச் செய்து முடிப்பதிலும், பேச்சு வார்த்தைகள் நடத்துவதிலும், அவருடைய பெருமை அதே மாதிரி பிரகாசித்தது.

வேலை செய்வதில் அவருக்கு எவ்வளவு விருப்பம் உண்டோ, அவ்வளவு விருப்பம் உரையாடலிலும் உண்டு. ஆனால், அழகாய் அற்புதமாய் பேசக்கூடிய சந்தர்ப்பம் கிடைக்கும்போது மட்டும்தான், அவருக்கு அந்த ஆசை ஏற்படும். உயர் வட்டாரக் கூட்டங்களில் எடுப்பாக எதையாவது சொல்லக்கூடிய வாய்ப்பு கிடைக்கிற வரையில், அவர் காத்திருப்பார். அது சாத்தியமான போதுதான் உரையாடலில் அவர் கலந்துகொள்ளுவார். அவர் உரையாடல்கள் எப்பொழுதும் சுயமான அறிவுக் களஞ்சியங்கள் கலந்ததாய் இருக்கும். பொதுவான விஷயங்களைப் பற்றி நன்கு அமைத்த வாக்கியங்களாய் இருக்கும். இவையெல்லாம் அவருடை மனதிற்குள் உள்ள ஆராய்ச்சி சாலையில் தயாரிக்கப்படுகின்றன. விருப்பம் உள்வர்கள் அவைகளை எடுத்துச் செல்லக்கூடிய ரூபத்தில் தயாராயின. ஆகவே, உயர் வட்டாரத்தை சேர்ந்த சாதாரண பேர்வழிகள், வரவேற்பு அறைகள் தோறும் இவற்றைச் சுமந்து சென்று விநியோகிப்பார்கள். வியன்னாவின் வரவேற்பு அறைகளில் எல்லாம் அவரின் அறிவுக்களஞ்சியங்கள் பிரபலமாய் விளங்கும். பல முக்கியமான பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதற்கு அவருடைய அறிவுக் களஞ்சியங்கள் உபயோகப்பட்டதுமுண்டு.

அவருடைய ஒல்லியான களைத்துப்போன மஞ்சள் நிறமான முகம், ஆழ்ந்த மடிப்புகள் நிறைந்தது. ஒரு ருஷ்ய குளியலுக்குப் பின்னால் ஒருவரின் விரல் நுனிகள் எவ்வளவு சுத்தமாய் இருக்குமோ அவ்வளவு சுத்தமாக அந்த மடிப்புகளும் இருக்கும். இந்த மடிப்புகளின் அசைவுகள் அவருடைய கருத்துகளை முகத்தில் காட்டும் சாதனங்களாய் அமைந்திருந்தன. அவருடைய புருவங்கள் உயர்த்தப்படும்போது, அவருடைய நெற்றியில் ஆழ்ந்த மடிப்புகள் தோன்றும். அவருடைய புருவங்களைக் கீழே தாழ்த்தும்போது அவருடைய கன்னங்களில் ஆழ்ந்த மடிப்புகள் தோன்றும். ஆழ்ந்து அமைந்த சிறிய அவருடைய கண்கள் எப்பொழுதும் மினுமினு வென்று ஒளி வீசி நேர் பார்வையைச் செலுத்தும்.

‘நல்லது, இப்பொழுது உமது காரியங்களைப் பற்றி சொல்லும்’ என்றார் அவர்.

மிகுந்த நாணங்கொண்டு தம்முடைய பெயரை ஒரு தடவை கூடச் சொல்லாமல், பால்கோன்ஸ்கி அந்த சண்டையைப் பற்றியும், யுத்த மந்திரி தமக்களித்த வரவேற்பைப் பற்றியும் விவரமாகச் சொன்னார்.

‘பந்தடிக்கிற இடத்தில் நாயை எப்படி வரவேற்பார்களோ, அதே மாதிரி என்னையும் எனது சேதியையும் வரவேற்றார்கள்’ என்று அவர் சொல்லிமுடித்தார்.

பிலைபின் புன்முறுவல் கொண்டார். அவருடைய முகத்தி லிருந்த சுருக்கங்கள் மறைந்தன.

தமது நகங்களைப் பார்த்துக்கொண்டும், இடது கண்ணிற்கு மேலுள்ள தோலைச் சுளித்துக்கொண்டும் அவர் பேசினார்:- 'ஆனால் எனது அன்புள்ள நண்பரே, பழமையான ருஷ்ய ராணுவத்திடம் எனக்கு மரியாதையுண்டு. என்றாலும் உமது வெற்றி வெற்றிகரமான தல்ல.'

இதே மாதிரி பிரஞ்சு மொழியில் அவர் பேசிக்கொண்டு போனார். எந்த இடத்தில் இகழ்ச்சியாக வற்புறுத்த வேண்டுமோ, அங்கு மட்டும் அவர் ருஷ்ய மொழிகளை உபயோகித்தார்.

'இங்கே பாரும். அந்த துர்ப்பாக்கியமான மார்ட்டியர் மீதும், அவருடைய ஒரே படைப்பிரிவு (டிவிஷன்) மீதும், நீரும் உமது எல்லா துருப்புகளும் விழுந்து தாக்கினீர்கள். என்றாலும் அந்த மார்ட்டியர் தப்பிவிட்டான். இதில் வெற்றி எங்கே இருக்கிறது?'

'ஆனால், உண்மையாகச் சொல்லப்போனால் உல்மில் நடந்ததைவிட இது சிலாக்கியமானது என்பதை எவ்வித தற்பெருமையும் இன்றி கூறலாம் அல்லவா?...'

'ஒரு தளபதியை, ஒரே ஒரு தளபதியைக்கூட ஏன் நீங்கள் பிடிக்கவில்லை.'

'ஏன் பிடிக்கவில்லையென்றால், ஒருவர் நினைப்பதைப்போல எல்லாம் நடப்பதில்லை. பார்வையிடலுக்காக மைதானங்களில் நடைபெறும் அணிவகுப்புகளைப்போல சுலமாக நடப்பதும் இல்லை. நான் உமக்குச் சொல்லிய்தைப்போல, காலை ஏழு மணிக்கு எதிரி பட்டாளத்தின் பின்பக்கம் போய் சேர்ந்துவிடலாம் என்று நாங்கள் எதிர்பார்த்தோம். ஆனால் மாலை ஐந்து மணிவரை அங்கே பேய்ச் சேரமுடியவில்லை.

'அப்படியானால், காலை ஏழு மணிக்கு அதை ஏன் செய்யவில்லை? காலை ஏழு மணிக்கே நீங்கள் அங்கே போய் சேர்ந்திருக்கவேண்டும்' என்ற பிலைபின் இளநகையோடு கூறினார். 'நீங்கள் காலை ஏழு மணிக்கே அங்கேபோய் சேர்ந்திருக்க வேண்டும்.'

'ராஜதந்திர முறைகள் மூலமாக, ஜினோவாவை விட்டுவிடுவது நல்லது என்று போனபார்ட்டுக்கு உங்களால் ஏன் அறிவுறுத்த முடியவில்லை?' என்று இளவரசர் ஆண்ட்ரூ அதே தொனியில் திருப்பிக்கேட்டார்.

'எனக்குத் தெரியும்' என்று பிலைபின் இடைமறித்தார். 'கணப்பு மூட்டத்தின் பக்கத்தில் சோபாவில் உட்கார்ந்துகொண்டு தளபதிகளைப் பிடிப்பது ரொம்ப சுலபமென்று நீர் நினைத்துக்

கொண்டிருப்பது எனக்குத் தெரியும். அது உண்மைதான். என்றாலும், நீர் ஏன் அந்த தளபதியைப் பிடிக்கவில்லை? ஆகவே, யுத்த மந்திரி மட்டுல்ல, மகாபெரிய மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியும் மன்னருமான பிரான்ஸிஸ் கூட உமது வெற்றியைப் பார்த்து மிகுந்த மகிழ்ச்சிகொள்ளாமல் போனால், அதைக்கண்டு நீர் ஆச்சரியப்படவேண்டாம். எனக்குக்கூட, ருஷ்ய நிலையதிகால செயலகத்தில் ஒரு ஏழை செயலாளாராய் உள்ள எனக்குக்கூட, உமது வெற்றியைக்கேட்டு மகிழ்ச்சி பெருக்கமடையவில்லை. எனது வேலைக்காரன் பிரான்ஸுக்கு ஒரு நாணயத்தைப் பரிசாக அந்த வெற்றிக்காக் கொடுத்து, 'உன் காதலியை அழைத்துக்கொண்டு எங்காவது போய் வா, அப்பா' என்று சொல்லக்கூடத் தோன்றவில்லை.'

இளவரசர் ஆண்ட்ரூவை அவர் நேராகப் பார்த்தார். அவருடைய நெற்றிச் சுருக்கங்கள் மறைந்தன.

'ஏன் என்று இப்பொழுது உம்மை நான் கேட்கிறேன், எனது அன்பானவரே?' என்று பால்கோன்ஸ்கி சொன்னார். 'எனக்குப் புரியவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். எனது எளிய அறிவுக்கு மீறியதான ராஜதந்திர நுணுக்கங்கள் ஒரு வேளை இதில் இருக்கலாம். என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஜெனரல் மாக் ஒரு முழு ராணுவத்தையே இழந்தார். ஆர்க் டியுக் பெர்டினாண்டும், ஆர்க் டியுக் கார்லோவும் உயிரோடு இருப்பதாகவே தெரியவில்லை. தவறுகளுக்கு மேலாகத் தவறுகளை அவர்கள் செய்துகொண்டே வந்தார்கள். குட்டுஜோவ் ஒருவர்தான் கடைசியாக உண்மையான வெற்றியைப் பெற்றார். பிரஞ்சுக்காரர்களை வெல்ல முடியாது என்று தோன்றியிருந்த எண்ணத்தைத் தவிடு பொடியாக்கினார். அப்படியிருந்தும் அதைப்பற்றிய விவரங்களைக் கேட்டு அறிந்துகொள்ள யுத்த மந்திரி கவலைப்படவில்லை.

'அதுதானப்பா விஷயம், எனது அன்பான தோழரே. நீர்சொல்லும் வெற்றி, ஜார் சக்கரவர்த்திக்கும் ருஷ்யாவுக்கும் ருஷ்யர்களின் பூர்வீக கிரேக்க மதக்கொள்கைக்கும் பெரிய வெற்றியாய் இருக்கலாம். அவையெல்லாம் அழகாய்த்தான் இருக்கின்றன. ஆனால், எங்களுக்கு, அதாவது ஆஸ்திரிய ராஜாங்கத்திற்கு இந்த வெற்றிகளைப்பற்றி என்ன சிரத்தை? ஆர்க் டியூக் கார்லோ, அல்லது பெர்டினாண்ட் (ஒரு ஆர்க் டியூக்கைப் போலவேதான் மற்றவரும் இருக்கிறார் என்பது உமக்குத் தெரியும்) இவர்களில் யாராவது அடைந்த ஒரு வெற்றிச் செய்தியை நீர்கொண்டுவாரும்; அந்தச் செய்தி போனபார்ட்டின்

தீயணைக்கும் படையை வென்றதாய் இருந்தாலும் சரி, பாதகமில்லை. அப்பொழுது நிலைமை வேறுவிதமாய் இருக்கும். அப்பொழுது பீரங்கிகளில் இருந்து வெற்றி குண்டுகள் கூட வெடித்துக்கொண்டிருக்கும். ஆனால், நீர் சொல்லுகிற மாதிரி வெற்றி இருக்கிறதே, அது எங்கள் (ஆஸ்திரியர்கள்) மனதை எரிச்சல் அடையும்படி செய்வதற்காகவே நீங்கள் செய்வதாய் இருக்கிறது. ஆர்க் டியூக் கார்லோ ஒன்றும் செய்ய வில்லை. ஆர்க் டியூக் பெர்டினாண்ட்டோ தம்மையே கேவலப்படுத்திக் கொண்டிருக் கிறார். நீங்களோ வியன்னாவைக் கைவிட்டு விட்டீர்கள். அதைப்பாதுகாக்கும் வேலையையும் கைவிட்டீர்கள். அதாவது, 'கடவுள்' எங்களுடன் இருக்கிறார். ஆனால், உங்களையும் உங்கள் தலைநகரத்தையும் கடவுள் காப்பாராக' என்று சொல்லுவதைப் போல் இருக்கிறது. நாங்கள் எல்லோரும் மிகுந்த அன்பு கொண்டிருந்த ஷிமிட் மீது குண்டு பாயும்படி விட்டுவிட்டீர்கள். அப்படிச் செய்துவிட்டு, வெற்றிக்காக எங்களைப் பாராட்டு கிறீர்கள். இதைவிட எங்களுக்கு அதிகமாய் எரிச்சல் கொடுக்கக் கூடிய வேறு விஷயத்தை நீங்கள் யூகிக்கக் கூட முடியாது. வேண்டு மென்று, வேண்டுமென்றே இக்காரியம் செய்யப்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. நீங்கள் ஒரு பிரமாதமான வெற்றியைப் பெற்று விட்டீர்கள் என்றே வைத்துக்கொள்வோம்; ஆர்க் டியூக் கார்லோ கூட ஒரு வெற்றியைப் பெற்றார் என்று வைத்துக் கொள்வோம்; இப்பொழுதுள்ள பொதுவான காலப்போக்கில், என்ன மாறுதலை இவை செய்துவிடமுடியும்? வியன்னா நகரத்தைப் பிரஞ்சுத் துருப்புகள் கைப்பற்றிய பின்பு, இப்பொழுது என்னதான் செய்யமுடியும்'

'என்ன? கைப்பற்றிக்கொண்டார்களா? வியன்னாவைக் கைப் பற்றிக் கொண்டார்களா'

'கைப்பற்றியது மட்டுமல்ல. ஷார்ன் பிரெனில்* (*ஷார்ன் பிரென் என்பது வியன்னாவில் உள்ள சக்கரவர்த்தியின் கோடை கால அரண்மனை) போனபார்ட் தங்கியிருக்கிறார். நமது அருமைக் கோமகன் ஊர்ப்னா இருக்கிறாரே, அந்தக் கோமகன் அவனிடம் சென்று உத்தரவுகள் பெற்றுவருகிறார்.

பிரயாணத்தில் ஏற்பட்ட களைப்பிற்கும் அனுபங்களுக்கும் பின்னால், தமக்கு அளிக்கப்பட்ட வரவேற்புக்கும் முக்கியமாக டின்னர் சாப்பிட்டதற்கும் பின்னால், பால்கோன்ஸ்கிக்கு ஒருவித உணர்ச்சி ஏற்பட்டது. அதாவது, தாம் கேட்கும் வார்த்தைகளின் பூரண முக்கியத்தவத்தைத் தம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை என்று அவர் உணர்ந்தார்.

'கோமகன் லிச்டென் பெல்ஸ் இன்று காலை இங்கு வந்திருந்தார்' என்றார் பிலைபின். 'அவர் என்னிடம் ஒரு கடிதத்தைக் காண்பித்தார். 'அவர் என்னிடம் ஒரு கடிதத்தைக் காண்பித்தார். பிரஞ்சுக்காரர்கள் வியன்னாவில் நடத்திய படை அணிவகுப்புக் காட்சியைப் பூரணமாக அதில் விவரித்திருந்தார்கள். இளவரசர் முராட் சந்தோஷத்தினால் பரபரப்பாய் இருந்தாராம்... நீர் சொல்லும் வெற்றி, பிரமாதமாய் சந்தோஷப்படக்கூடிய விஷயமல்ல என்பதும், அதனால் உம்மை ஒரு பெரிய ரட்சகரைப் போல் வரவேற்கமாட்டார்கள் என்பதும், இப்பொழுது உமக்குத் தெரிந்திருக்கலாம்.'

'உண்மையில் அதைப்பற்றிநான் கவலைப்படவில்லை; நான் கவலைப்படவேயில்லை' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. ஆஸ்திரியாவின் தலைநகரான வியன்னா வீழ்ச்சியடைந்ததைப் போன்ற செய்திகளுக்கு முன்னால், கிரெம்ஸ் என்ற இடத்தில் நடந்த சண்டையைப்பற்றி தாம் கொண்டுவந்துள்ள செய்தி உண்மையில் மிகவும் சிறிய முக்கியத்துவம் வாய்ந்தது என்ற விஷயத்தை அவர் உணர ஆரம்பித்தார். 'வியன்னாவை எப்படி கைப்பற்றினார்கள்? அந்தப் பாலம் என்னவாயிற்று? அந்தப் பாலத்தின் முகப்பும் இளவரசர் ஆருஸ்பெர்க்கும் என்னவானார்கள்? இளவரசர் ஆர்ஸ்பெர்க்தான் வியன்னாவைக் காத்துவருகிறார் என்று நாம் கேள்விப்பட்டோமே?'

'இளவரசர் ஆர்ஸ்பெர்க பாலத்தின் இப்பகத்திலிருந்து நம்மைப் பாதுகாத்துவருகிறார். அவர் வேலை மோசமாய்த்தான் இருக்கிறது. என்றாலும் நம்மை அவர் பாதுகாக்கிறார். ஆனால், வியன்னா நகரம் என்பது ஆற்றின் அக்கரையில் இருக்கிறது. இல்லை,பாலத்தை இன்னும் அவர்கள் பிடிக்கவில்லை. அதைப் பிடிக்கமுடியாது என்று நான் நம்புகிறேன். அந்தப் பாலத்தில் சுரங்க வெடிகள் வைத்திருந்தார்கள். அந்தப் பாலத்தைக் கொளுத்திவிடும்படி உத்தரவும் கொடுத்திருக்கிறார்கள். இல்லாவிடில், வெகு காலத்திற்கு முன்பே, பொஹிமியா மலைகளுக்கு அல்லவா நாங்கள் போயிருக்கவேண்டும்? நீரும் உமது படையும் இரண்டு நெருப்புகளுக்கு மத்தியில் கால் மணி நேரமாவது அகப்பட்டுக் கொண்டிருக்க வேண்டுமே?'

'என்றாலும், இதனால் யுத்தமெல்லாம் முடிந்துவிட்டது என்று சொல்லமுடியாது' என்றால் இளவரசர் ஆண்ட்ரூ.

'நல்லது, முடிந்துவிட்டது என்றே நான் நம்புகிறேன். இங்குள்ள பெரிய தலைகளும் அப்படியே நினைக்கிறார்கள். ஆனால், அவர்கள் வெளியே செல்லத் துணிய மாட்டார்கள். டுரென்ஸ்

டைனில் செய்த கைகலப்புச் சண்டைகளினால் இந்தப் பிரச்சினையை முடிவு செய்யமுடியாது. ‘வெடி மருந்தினால் முடிவு செய்யமுடியாது. அந்த வெடி மருந்தை யார் கண்டு பிடித்தார்களோ, அவர்கள்தான் முடிவு செய்யமுடியும்’ இதை நான் இந்த யுத்தத்தின் ஆரம்பித்திலேயே சொல்லியிருக்கிறேன்’ என்றார் பிலைபின். இந்த மொழிக்கோவை இவரால் கட்டப்பட்டது. நெற்றியில் தோன்றிய சுருக்கங்களை விடுவித்துவிட்டு சிறிது நேரம் சும்மாயிருந்தார். ‘அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியும் பிரஷ்ய மன்னரும் பெர்லினில் கூடிப் பேசுகிறார்களே, அது என்னவாகும் என்பதுதான் இப்போதுள்ள ஒரே கேள்வி. பிரஷ்யா நேச நாடுகளோடு சேர்ந்தால் ஆஸ்திரியா கட்டுப்பட்டுத்தான் ஆக வேண்டும். அப்பொழுது யுத்தம் ஏற்பட்டேயாகும். அப்படி இல்லையென்றால், அடிமையாவதற்கு வேண்டிய விதிகளை எங்கே கூடி முடிவு செய்வது என்ற ஒரே கேள்ளவிதான் ஏற்படும்.’

‘என்ன அபூர்வமான மேதை!’ என்று இளவரசர் ஆண்ட்ரூ திடீரென்று கூச்சலிட்டுத் தமது சிறிய கையை முஷ்டியாக்கி மேஜை மீது குத்தினார். ‘அந்த மனிதருக்கு எப்பேர்ப்பட்ட அதிருஷ்டம்!’

‘பியோனபார்ட்டா?’ என்று பிலைபின் கேட்டுத் தமது நெற்றியைச் சுருக்கினார். சாமர்த்தியமாக எதையோ ஒன்றை சொல்லப் போகிறார் என்பதை அந்தத் தோற்றம் காட்டியது. பியோன பார்ட்டா?’ என்று மறுபடியும் அவர் கேடடார்.

‘ஷார்ன்பிரென் மாளிகையில் தற்சமயம் அவர் அமர்ந்து உத்தரவுகள் பிறப்பிக்கிறபடியால் அவர் பெயரில் உள்ள எழுத்துக்களில் ‘யு’ என்ற எழுத்தை இப்பொழுது விட்டுவிடலாம் என்று நான் நினைக்கிறேன். நான் என்னவோ அப்படித்தான் செய்யப் போகிறேன். நான் அவரை போனபார்ட் என்றே அழைப்பேன்.’

‘தமாஷ் இருக்கட்டும். யுத்தம் முடிந்துவிட்டது என்று நீர் உண்மையிலேயே நினைக்கிறீரா?’

‘நான் நினைப்பது இதுதான்: ஆஸ்திரியா முட்டாளாக்கப் பட்டுவிட்டது. அம்மாதிரி நிலைமை ஏற்பட்டு அதற்குப் பழக்கமில்லை. ஆகவே அது பழிவாங்கும். அதனுடைய கிராமங்களையெல்லாம் கொள்ளையடித்து முதலில் அதையும் முட்டாளாக்கினார்கள். பரிசுத்தமான ருஷ்யத் துருப்புகளே பயங்கரமாய்க் கொள்ளையடிப்பதாக அவர்கள் சொல்லுகிறார்கள். இரண்டாவதாக, அதன் ராணுவத்தைத் தொலைத்துவிட்டார்கள். அதன் தலைநகரை எடுத்துக்கொண்டார்கள். இவையெல்லாம்

எதற்காக? சார்டினிய மன்னரின் அழகிய கண்களுக்காகத்தான். ஆகவே இதை நமக்குள்ளாக வைத்துக்கொள்ளுவோம் நாம் ஏமாற்றப்படுகிறோம் என்று எனக்குள் ஒரு உணர்ச்சி தோன்றுகிறது. சமாதானத்திற்காக அதாவது தனியாக சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளுவதற்காக, பிரான்ஸோடு ஆஸ்திரியா பேச்சு வார்த்தைகள் நடத்துகிற மாதிரி எனக்குள் ஏதோ ஒரு உணர்ச்சி சொல்லுகிறது.

'நடக்கவே முடியாது. அது மகா இழிவான செய்கையாய் இருக்கும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ கூச்சலிட்டார்.

'நாம் உயிரோடு இருப்போமானால் அதைப்பார்க்கப் போகிறோம்' என்றார் பிலைபின். அவருடைய முகம் மீண்டும் அமைதியாயிற்று. உரையாடல் முடிந்தது என்பதை அது காட்டியது.

தமக்காகத் தயாரிக்கப்பட்டிருந்த அறைக்கு இளவரசர் ஆண்ட்ரூ சென்றார். சுத்தமான ஷர்ட் அணிந்து, இறகு மெத்தை மீதும் பரிமளம் கமழ்ந்த வெதுவெதுப்பான தலையணைகள் மீதும் அவர் சாய்ந்து படுத்தார். எந்த சண்டையைப் பற்றிய செய்தியை அவர் கொண்டுவந்தாரோ, அது அவரைவிட்டு வெகுதூரம் போய் விட்டதாக உணர்ந்தார். பிரஷ்யாவின் கூட்டுறவு, ஆஸ்திரியாவின் நம்பிக்கைத் துரோகம், போனபார்ட்டின் புதிய வெற்றி, நாளை காலையில் நடக்கப்போகும் ஆஸ்தான மண்டபக் கூட்டம், ராணுவ அணிவகுப்புக் காட்சி, சக்கரவர்த்தியுடன் பேட்டி, இவை யெல்லாம் அவருடைய நினைப்புகளில் தோன்றின.

அவர் தமது கண்களை மூடினார். உடனே பீரங்கி சப்தம், துப்பாக்கி சப்தம், வண்டிச் சக்கரங்களின் கலகலப்பு சப்தம், ஆகியவைகள் அவர் காதுகளை நிரப்புவதுபோல் தோன்றின. மறுபடியும், துப்பாக்கி தாங்கியவர்கள் குன்றிலிருந்து இறங்குவது போலவும், பிரஞ்சுக்காரர்கள் சுடுவது போலவும்,அவர் மனக்கண்முன் தோன்றின. அச்சமயம் ஷிமிட் பக்கத்தில் தாம் சவாரி வந்த போது அவருக்கு ஏற்பட்ட மனத்துடிப்பையும், தங்களைச் சுற்றி தோட்டாக்கள் பறந்து சென்றதையும் அவர் நினைவு கூர்ந்தார். அந்த நினைவுகள் குழந்தைப் பருவத்திற்குப் பின்னால் அவருக்கு ஏற்பட்டிராத வாழ்க்கையின் இன்பத்தை பன்மடங்காகப் பெருக்கிக் காட்டின.

அவர் விழித்தார்... 'ஆம், அவையெல்லாம் நடந்தன' என்று அவர் ஒரு குழந்தையைப்போல, மகிழ்ச்சியோடு புன்சிரிப்பு கொண்டு தமக்குள்ளே சொல்லிக்கொண்டார். பின்னால் வாலிப தூக்கத்தைப்போல ஆழ்ந்த தூக்கம் கொண்டார்.

# 2

## 11

மறுநாள் நேரங்கழித்து அவர் விழித்தார். சமீப நிகழ்ச்சிகளைப் பற்றி அவர் நினைத்துப் பார்த்தார். அன்று காலையில் சக்கரவர்த்தி பிரான்சிஸிடம் அவர் அறிமுகப் படுத்தப்பட வேண்டிய விஷயம் முதலாவ தாக அவருடைய நினைப்பிற்கு வந்தது. யுத்த மந்திரி, பணிவான அந்த உதவியாளர் பிலைபின், முதல் நாள் இரவு நடந்த உரையாடல் ஆகியவைகளும் அவர் நினைவுக்கு வந்தன. ராஜ சமூகத்தில் பிரசன்னமாவதற்காக முழு அணிவகுப்பு சீருடையை அணிந்துகொண்டார். வெகு காலமாக அவர் அதை அணிந்த தில்லை. புத்துணர்ச்சியோடும் உற்சாகத்தோடும் அழகாகவும், தமது கையில் ஏற்பட்ட காயத்திற்குக் கட்டு கட்டிக்கொண்டும் பிலைபினின் படிப்பு அறைக்குச் சென்றார். அந்த அறையில் ராஜதந்திர சேவையைச் சேர்ந்த நால்வர் உட்கார்ந்திருந்தார்கள். ருஷ்ய நிலையதிகாரி செயலகத்தில் ஒரு செயலாளராக ஏற்கனவே அறிவார். மற்றவர்களிடம் அவரை பிலைபின் அறிமுகப்படுத்தி வைத்தார்.

பிலைபின் அறையில் அன்று கூடியிருந்த கனவான்கள், இளைஞர்கள்; பணக்காரர்கள்; குஷியானவர்கள்; உயர் வட்டாரத்தைச் சேர்ந்தவர்கள். வியன்னாவில் இருந்தது போலவே, இங்கேயும் அவர்கள் ஒரு தனி கோஷ்டியாய் இருந்தார்கள். அந்தக் குழுவிற்கு பிலைபின் தான் தலைவர். அந்தக் கோஷ்டியை 'நமது கோஷ்டி' என்று பிலைபின் அழைத்து வந்தார். இந்தக் கோஷ்டியில் அநேகமாய ராஜதந்திர சேவையில் உள்ளவர்களோ இருந்தார்கள். ஆகவே, யுத்தத்தைப் பற்றியோ, அரசியல் விஷயங்களைப் பற்றியோ அவர்களுக்கு சிரத்தை எதுவும் கிடையாது. ஆனால்,உயர் வட்டாரம், சில பெண்கள், தங்கள் இலாகாவைப் பற்றிய உத்தியோக விஷயங்கள் ஆகியவைகளிலேயே அவர்களுக்கு சிரத்தை இருந்தது. இந்த கனவான்கள் இளவரசர் ஆண்ட்ரூவை தங்களைச் சேர்ந்த ஒருவராகக் கருதி வரவேற்றார்கள். அம்மாதிரி அவர்கள் கருதுவது அபூர்வம். மரியாதைக்காகவும் உரையாடலை ஆரம்பிப்பதற் காகவும், இராணுவத்தைப் பற்றியும் யுத்தத்தைப் பற்றியும் சில கேள்விகளை முதலில் அவர்கள் கேட்டார்கள். பின்னால் களிப்பான கேலிகளிலும் அரட்டைகளிலும் பேச்சு திரும்பியது.

ராஜதந்திர சேவையைச் சேர்ந்த ஒருவருக்கு நேரிட்ட துர திருஷ்டத்தைப் பற்றி, அங்கிருந்தவர்களில் ஒருவர் சொல்ல ஆரம்பித்தார். 'இதில் உள்ள முக்கியமான விஷயம் என்ன

வென்றால், லண்டனுக்கு அந்த ஆசாமியை மாற்றியது, பதவி உயர்வு என்றும், முகத்திற்கு நேராக முதல் மந்திரி வெட்ட வெளிச்சமாய் சொன்னார். அச்சமயம் அந்த ஆசாமியின் முகம் போன போக்கை உங்களால் யூகிக்க முடியுமா?...'

'அதிலுள்ள மோசமான விஷயம் என்னவென்றால், கனவான்களே - தான் இப்பொழுது குராகினுடைய குட்டை வெளிப்படுத்தும்போது இந்த டான் ஜுவான்,இந்த கெட்ட பேர்வழி, அதைத் தனக்கு அனுகூலமாய் உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்.' (டான் ஜுவான் என்றால் பெண்பித்தன் என்று பொருள்.)

இளைவரசர் ஹிப்பாலைட் ஒரு நாற்காலியில் சாய்ந்து அதன் கைப்பிடிகளில் தம் கால்களைப் போட்டுக்கொண்டிருந்தார். இதைக் கேட்டதும் அவர் சிரிக்க ஆரம்பித்தார். 'அதைப்பற்றி எனக்குச் சொல்லுங்கள்' என்றார் அவர்.

'ஓ, டான் ஜுவானே' ஏ,பாம்பே!' என்று பல குரல்கள் சப்தமிட்டன.

'பால்கோன்ஸ்கி,உமக்குத் தெரியாது' என்று இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்து பிலைபின் பேச ஆர்பித்தார். 'அந்த பிரஞ்சு துருப்புகள் (ருஷ்யத் துருப்புகளும் அப்படித்தான்) செய்த அட்டூழியங்கள் இருக்கிறன்றனவே, அவையெல்லாம் இந்த மனிதர் பெண்களிடம் செய்கிற அட்டூழியங்களுக்கு முன்னால் நிற்கவே முடியாது.'

'ஆணுக்குத் துணையானவள் பெண்' என்ற பிரஞ்சுப் பழமொழியை இளவரசர் ஹிப்பாலைட் எடுத்துரைத்தார். தமது கைக்கண்ணாடி மூலமாக தாம் உயரத் தூக்கி வைத்திருக்கும் தமது கால்களைப் பார்த்தார்.

பிலைபினும் 'நமது கோஷ்டி'யைச் சேர்ந்த மற்றவர்களும் ஹிப்பாலைட்டின் முகத்தைப் பார்த்துச் சிரித்தார்கள். இந்தக் கோஷ்டியில் ஹிப்பாலைட்டைக் கோமாளியாக நடத்துகிறார்கள் என்பதை அவர் கண்டார். தமது மனைவி சம்பந்தப்பட்டவரையில் ஹிப்பாலைட் மீது அவருக்குக் கொஞ்சம் பொறாமை கூட உண்டு என்பதை அவர் மனம் ஒப்புக்கொண்டது.

'ஓ, உமக்கு ஒரு விருந்தளிக்கப் போகிறேன்' என்று பிலைபின் பால்கோன்ஸ்கியின் காதுகளில் முணுமுணுத்தார். 'குராகின் அரசியலைப் பற்றி விவாதிக்க ஆரம்பித்தால், ரொம்ப அபூர்வமாய் இருக்கும். அச்சமயம் அவர் முகத்தில் தோன்றும் முக்கியத்துவத்தை நீர் பார்க்கவேண்டும்.

அவர் ஹிப்பாலைட்டுக்குப் பக்கத்தில் வந்து அமர்ந்து, நெற்றியை நெரித்து அரசியலைப் பற்றி அவரிடம் பேச ஆரம்பித்தார். இளவரசர் ஆண்ட்ரூவும் மற்றவர்களும் அந்த இருவரையும் சுற்றிக் கூடினார்கள்.

'நேச நாட்டு உடன்படிக்கைக்கு சாதகமாக பெர்லின் மந்திரி சபை தமது கருத்தை வெளியிட முடியாது' என்று ஹிப்பாலைட் ஆரம்பித்து, பிரமாதமான முகியத்துவத்தோடு அங்கிருந்தவர்களைச் சுற்றிப் பார்த்தார். 'அந்த மந்திரி சபையினுடைய கடைசி குறிப்பில் காணப்பட்டபடி... அந்த விஷயத்தை வற்புறுத்தாமல்... உங்களுக்குத் தெரியுமே...தவிர மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தி நேச நாட்டுக் கூட்டுறவின் கொள்கையிலிருந்து விலகினாலொழிய...'

'பொறுங்கள், நான் இன்னும் முடிக்கவில்லை...' என்று அவர் இளவரசர் ஆண்ட்ரூவிடம் செல்லி, அவர் கையைப் பற்றிக் கொண்டு, 'அம்மாதிரி தலையிடுவது நடுநிலைமைக் கொள்கையை விட பலமானதாய் இருக்குமென்று நான் நம்புகிறேன். மேலும்...' அவர் சிறிது தயங்கினார். 'முடிவாக நவம்பர் 18-ந் தேதி நாம் அனுப்பிய அறிக்கை அவர்களுக்கு கிடைக்கவேயில்லை என்று சொல்லுவதை நாம் குற்றங் கூறமுடியாது. அது முடியப் போகிற விதம் அப்படித்தான்.' தாம் பேசியது முடிந்துவிட்டது என்பதைக் காட்டுவதன் அடையாளமாக அவர் பால்கோன்ஸ்கியின் கையைத் தமது பிடிப்பிலிருந்து விடுவித்தார்.

'ஓ, டெமாஸ்தீனஸ், உமது தங்க வாயில் நீர் ஒளித்து வைத்திருக்கும் கூழாங்கல்லில் இருந்தே உம்மை நான்கண்டு கொண்டேன்' என்று பிலைபின் சொல்லித் திருப்தியடைந்து, தமது தலையிலுள்ள கத்தையான தலைமுடியைத் தடவிக்கொண்டார். (டெமாஸ்தீனஸ் என்பவர் கிரேக்க நாட்டில் இருந்த ஒரு பிரபலமான பேச்சாளர். அவர்ஒரு திக்குவாயர். என்றாலும் வாயில் கூழாங்கல்லைப் போட்டு பேசிப்பழகி அந்த திக்குவாயைப் போக்கடித்து பெரிய பேச்சாளரானார் என்று சொல்வதுண்டு.)

ஒவ்வொருவரும் சிரித்தார்கள். எல்லாரையும்விட அதிகமாக ஹிப்பாலைட் சிரித்தார். அவர் சிரிக்க முடியாமல் கஷ்டப்பட்டார். மூச்சு விடுவதிலும் கஷ்டப்பட்டார். என்றாலும் அந்தக் காட்டுச் சிரிப்பை அவரால் அடக்க முடியவில்லை. அந்த சிரிப்பு அவருடைய அப்பாவித் தோற்றங்களை சுழித்துக்காட்டின.

'இப்பொழுது கவனியுங்கள், கனவான்களே' என்றார் பிலைபின். 'இந்த வீட்டிலும், இந்த பிரென் நகரத்திலும் பால்கோன்ஸ்கி எனது விருந்தாளி. என்னால் சாத்தியமான வரையில் இங்கே வாழ்க்கையில்

கிடைக்கக்கூடிய சகலவிதமான இன்பங்களையும் அவருக்கு அளித்து, அவரை உபசரிக்க விரும்புகிறேன். நாம் வியன்னாவில் இருப்போமானால் அது ரொம்ப சுலபம். ஆனால் இங்கே, இந்த மொரேவிய நாட்டுப் பொந்தில் அது ரொம்ப கஷ்டமானது. ஆகவே நீங்கள் எல்லாரும் எனக்கு உதவி செய்யுமாறு உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். பிரென் நகரத்தின் வனப்புகளை அவருக்குக் காட்டவேண்டும். நாடகங்களுக்கு அழைத்துப்போகும் வேலையை நீங்கள் பார்த்துக்கொள்ளுங்கள். உயர் வட்டாரத்துக்கு அழைத்துப் போகும் வேலை என்னைச் சேர்ந்தது. ஆனால் நீர் இருக்கிறீரே, ஹிப்பாலைட், பெண்களைப் பற்றிய காரியங்களெல்லாம் உம்மைச் சேர்ந்தது.'

'அமலியை அவர் பார்க்கும்படி செய்யவேண்டும். மிகப் பிரமாதமான அழகி' என்று 'நம்மைச் சேர்ந்த'வர்களில் ஒருவர் சொல்லி தமது விரல் நுனிகளை முத்திக்கொண்டார்.

'பொதுவாக இந்த ரத்தவெறி கொண்ட சிப்பாயை அதிகமான ஜீவகாருண்ய குணங்கள் கொள்ளும்படி நாம் செய்ய வேண்டும்' என்றார் பிலைபின்.

'கனவான்களே, உங்களுடைய உபசரிப்புகளை நான் ஏற்றுக் கொள்ள முடியாமல் இருக்கிறேன். ஏனெனில் நான் சீக்கிரமாய் புறப்பட்டுப் போக வேண்டும்' என்று சொல்லி தமது கடிகாரத்தைப் பார்த்தார்.

'எங்கே?'

'சக்கரவர்த்தியிடம்'

'ஓஹோ'

'நல்லது. போய் வாருங்கள், பால்கோன்ஸ்கி! போய் வாருங்கள், இளவரசரே. டின்னருக்கு சீக்கிரமாகத் திரும்பி விடுங்கள். அதன் பின்னால் உம்மை நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம்' என்று பல குரல்கள் ஒலித்தன.

'சக்கரவர்த்தியிடம் பேசும்போது, நமது துருப்புகளுக்குக் கொடுக்கப்படும் உணவுப் பொருள்களைப் பற்றியும், தங்கும் இடங்களைப் பற்றியும், உம்மால் எவ்வளவு புகழமுடியுமோ, அவ்வளவு தூரம் புகழ்ந்து பேசும்' என்று அவரை வெளி மண்டபத்திற்கு அழைத்து வந்த பிலைபின் கூறினார்.

'அவைகளைப் பற்றி உயர்வாகவே நான் பேச விரும்புவேன். என்றாலும் எனக்குத் தெரிந்த உண்மைகளைளப் பார்த்தால்,

என்னால் அப்படிப் பேச முடியாது' என்று சிரித்துக்கொண்டு பால்கோன்ஸ்கி ப்திலளித்தார்.

'நல்லது, எப்படியோ உம்மால் எவ்வளவு தூரம் பேசமுடியுமோ, அவ்வளவு தூரம் பேசும். பேட்டிகள் கொடுப்பத்தில் சக்கரவர்த்திக்கு மிகுந்த ஆசையுண்டு. ஆனால் அவர் தாம் பேசுவதை விரும்பமாட்டார். அவரால் பேசவும் முடியாது. அதை நீரே பார்க்கப் போகிறீர்?

## 2

## 12

ஆஸ்தமான மண்டபத்தில் மற்ற ஆஸ்திரிய அதிகாரிகளோடு இளவரசர் ஆண்ட்ரூவும் நின்று கொண்டிருந்தார். அம்மாதிரி அங்கே நிற்கும்படி அவருக்குச் சொன்னார்கள். சக்கரவர்த்தி பிரான்சிஸ் அவரைக் கூர்ந்து பார்த்து, தமது நீண்ட தலையை அசைத்தார். இது முடிந்த பின்பு, முதல் நாளன்று அவர் பார்த்த அந்த உதவியாளர் அவரிடம் வந்து, மரியாதையாக, சக்கரவர்த்தி அவருக்கு பேட்டி அளிக்க விரும்புவதாகத் தெரிவித்தார். தமது அறையின் மத்தியில் நின்றுகொண்டு சக்கரவர்த்தி பிரான்சிஸ் அவருக்குப் பேட்டி அளித்தார். உரையாடல் ஆரம்பமாகும் முன்பு, என்ன பேசுவது என்று தெரியாமல் குழப்பத்தோடும் நாணத் தோடும் சக்கரவர்த்தி இருப்பது இளவரசர் ஆண்ட்ரூவுக்குப் புலனாயிற்று.

'அந்த சண்டை எப்பொழுது ஆரம்பமாயிற்று என்பதை எனக்குச் சொல்லும்' என்று அவசரமாய் சக்கரவர்த்தி கேட்டார்.

இளரவரசர் ஆண்ட்ரூ பதில் அளித்தார். அதற்குப் பின்னால் சாதாரண கேள்விகள், அதாவது 'குட்டுஜோவ் சௌக்கியமாய் இருக்கிறாரா? அவர் கிரெம்ஸை விட்டு எப்பொழுது புறப் பட்டார்?' என்பன போன்ற கேள்விகளைக் கேட்டார். ஏதோ ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையில் கேள்விகள் கேட்கவேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு சக்கரவர்த்தி பேசுவதாய் தெரிந்தது. பதில்களைப் பற்றி அவருக்கு சிரத்தையில்லை. ஏனெனில், அவையெல்லாம் வெளிப்படையாய் தெரிந்தவைதான்.

'சண்டை எத்தனை மணிக்கு ஆரம்பமாயிற்று?' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

'போர் முனையில் எத்தனை மணிக்கு சண்டை ஆரம்பமாயிற்று என்பதை மாட்சிமை தங்கிய உங்களுக்கு என்னால் சொல்ல

முடியாது. ஆனால் நான் இருந்த டுரென்ஸ்டைன் என்ற இடத்தில் எங்கள் சண்டையை மாலை ஐந்து மணிக்கு ஆரம்பித்தோம்' என்றுபால்கோன்ஸ்கி பதிலளித்தார். தாம் பார்த்தவைகளைப் பற்றியும், தெரிந்தவைகளைப் பற்றியும் நம்பகமான விவரங்களை மனதில் அவர் தயாராய் வைத்திருந்தார். அவற்றைச் சொல்லுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைக்கும் என்று எதிர்பார்த்து அவர் உற்சாகம் வளர ஆரம்பித்தது. ஆனால், சக்கரவர்த்தி சிரித்துக்கொண்டு இடை மறித்தார்.

'எத்தனை மைல்கள்?'

'எங்கிருந்து எங்கே, மாட்சிமை தங்கியவரே?'

'டுரென்ஸ்டைனுக்கும் கிரெம்ஸுக்கும்?'

'மூன்றரை மைல்கள், மாட்சிமை தங்கியவரே'

'பிரெஞ்சுக்காரர்கள் இடது கரையைவிட்டுப் போய் விட்டார்களா?'

'நமது தூதர்கள் சொல்லுவதைக்கொண்டு பார்த்தால், அன்றிரவே மீதம் இருந்தவர்களும் தெப்பங்களில் ஏறி நதியைக் கடந்து விட்டார்கள் என்று தோன்றுகிறது'.

'குதிரைகளுக்கு வேண்டிய தீனிகள் கிரெம்ஸில் போதுமானவை இருக்கின்றனவா?'

'வேண்டிய அளவிற்கு போதுமான தீனிகள் கொடுக்கப் படவில்லை...'

சக்கரவர்த்தி இடைமறித்தார்.

'எத்தனை மணிக்கு ஜெனரல் ஷிமிட் கொல்லப்பட்டார்?'

'ஏழு மணிக்கு என்று நான் நினைக்கிறேன்.'

'ஏழு மணிக்கா?' ரொம்ப துக்ககரமானது, ரொம்ப துக்ககர மானது.'

இளவரசர் ஆண்ட்ரூவுக்கு சக்கரவர்த்தி நன்றி தெரிவித்து தலைகுனிந்து வணக்கம் சொன்னார். இளவரசர் ஆண்ட்ரூ வெளியே வந்தார். உடனே ராஜசபையைச் சேர்ந்தவர்கள் அவரைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டார்கள். ஒவ்வொரு திசையிலும் நட்பான பார்வைகளையே கண்டார். நட்பான வார்த்தைகளையே கேட்டார். நேற்று சந்தித்த உதவியாளர், அவர் ஏன் அரண்மனையில் தங்கவில்லை என்று கடிந்து கொண்டார். தமது வீட்டிற்கு வரும்படி அழைத்தார். 'மரியா தெரொசா' என்ற கௌரவப் பட்டத்தில் மூன்றாம் வரிசைப் பதக்கத்தை சக்கரவர்த்தி அவருக்கு அளித்திருப்பதாகவும், அதற்காக அவரைப் பாராட்டுவதாகவும் யுத்த

மந்திரி வந்து தெரிவித்துக்கொண்டார். சக்கரவர்த்தினியின் அரண்மனை அதிகாரி வந்து சக்கரவர்த்தியைப் பார்க்க விரும்பினாள். யாருக்குப் பதில் சொல்லுவது என்று தெரியாமல் சில வினாடிகள் குழம்பிக்கொண்டிருந்தார். அச்சமயம் ருஷ்ய நிலையதிகாரி அங்கே வந்து, அவருடைய தோள்களைப் பற்றி, அவரை ஜன்னல் அருகே அழைத்துச்சென்று அவருடன் பேச ஆரம்பித்தார்.

இளவரசர் ஆண்ட்ரூ கொண்டுவந்த செய்தியை, பிலைபின் சொல்லிய ஜோசியத்திற்கு நேர் விரோதமாக, மகிழ்ச்சியோடு வரவேற்றார்கள். நன்றி தெரிவிக்கும் பிரார்த்தனைக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யும்படி உத்தரவாயிற்று. 'மரியா தெரெசா' பட்டத்தின் மிகப் பெரிய பதக்கத்தை குட்டுஜோவுக்குக் கொடுக்கும்படியும், முழு ராணுவத்திற்கும் பரிசுகள் கொடுக்கும்படியும் உத்தரவாயிற்று. ஒவ்வொரு இடத்திலிருந்தும் பால்கோன்ஸ்கிக்கு அழைப்புகள் வந்தன. ஆகவே அன்று காலை பூராவும் ஆஸ்திரிய பிரமுகர்களைச் சந்திப்பதிலேயே போயிற்று. எல்லாரையும் பார்த்த பின்பு,மாலை நாலு அல்லது ஐந்து மணி சுமாருக்கு பிலைபின் வீட்டிற்கு திரும்பிக் கொண்டிருந்தார். சண்டையைப் பற்றியும், பிரென் நகருக்குத்தாம் செய்த விஜயத்தைப் பற்றியும், தமது தகப்பனாருக்குக் கடிதம் எழுதுவது பற்றியும் யோசனை செய்துகொண்டே வந்தார். வீட்டு வாசலுக்கு வந்ததும், ஒரு வண்டியில் பாதி நிறையும்படி பொருட்கள் ஏற்றப்பட்டு இருப்பதைக் கண்டார். பிலைபினின் சேவகனான பிரான்ஸ், மிகுந்த கஷ்டத்தோடு ஒருபெட்டியை முன் வாசலுக்கு இழுத்து வந்து கெண்டிருந்தான்.

பிலைபினின் வீட்டிற்கு வருவதற்கு முன்பாக இளவரசர் ஆண்ட்ரூ ஒரு புத்தகக் கடைக்குப் போயிருந்தார். யுத்த களத்தில் படிக்கக்கூடிய மாதிரி தமக்கு வேண்டிய புத்தகங்களை அங்கே அவர் பார்த்து வாங்குவதில் கொஞ்சம் நேரமாயிற்று.

'என்ன இது?' என்று அவர் கேட்டார்.

'ஓ, மேன்மை தங்கியவரே' என்று பிரான்ஸ் பதில் சொல்லி, கஷ்டத்தோடு அந்தப் பெட்டியை வண்டியில் தள்ளினான். 'நாம் இதைவிட்டு இன்னும் தூரமாகப் போகவேண்டும். அந்த அயோக்கியன் நமது பக்கத்திற்கு வந்துவிட்டான்.'

'ஏ, என்ன?' என்றுகேட்டார், இளவரசர் ஆண்ட்ரூ.

அவரை சந்திப்பதற்காக பிலைபின் வெளியே வந்தார். வழக்கமாய் அமைதியோடு விளங்கும் அவருடைய முகம் அப்பொழுது பரபரப்பைக் காட்டியது.

'இங்கே வாரும். இது ரொம்ப மனோகரமானது என்பதை ஒப்புக் கொள்ளும்' என்றார் அவர். 'வியன்னாவில் உள்ள இந்த தாபர் பாலம் விஷயம் இருக்கிறதே... ஒரு குண்டு கூட போடாமல் அவர்கள் அதைக் கடந்துவிட்டார்கள்.'

இளவரசர் ஆண்ட்ரூவுக்குப் புரிந்துகொள்ள முடியவில்லை.

'இந்த நகரத்திலுள்ள ஒவ்வொரு வண்டிக்காரனுக்கும் தெரிந்துள்ள விஷயம் உமக்கு எப்படி தெரியாமல் போயிற்று? நீர் எங்கிருந்து வருகிறீர்?'

'நான் பட்டத்து இளவரசி அரண்மனையில் இருந்து வருகிறேன். அங்கு நான் எதையும் கேள்விப்படவில்லை.'

'ஒவ்வொருவரும் சாமான்களைக் கட்டிக்கொண்டிருப்பதை நீர் பார்க்கவில்லையா?'

'நான் பார்க்கவில்லை...இதெல்லாம் என்ன விஷயம்?' என்று இளவரசர் ஆண்ட்ரூ பொறுமையின்றி கேட்டார்.

'இதெல்லாம் எதற்காக என்று கேட்கிறீர்? ஏனென்றால், ஆர்ஸ்பெர்க் பாதுகாத்து வந்த பாலத்தை பிரஞ்சுக்காரர்கள் கடந்து விட்டார்கள். அந்த பாலம் தகர்க்கப்படவில்லை. ஆகவே முராட், பிரென்னுக்கு வருகிற ரஸ்தாவில் வேகமாய் வந்து கொண்டு இருக்கிறார். ஒன்றிரண்டு நாட்களில், இங்கே வந்து விடுவார்.'

'என்ன? இங்கேயா? பாலத்தை அவர்கள் ஏன்கொளுத்த வில்லை? அதில் சுரங்கம் வைத்திருந்தார்களே?'

'அதைத்தான் நானும் உம்மிடம் கேட்கிறேன். யாருக்கும், போன பார்ட்டுக்கும் கூட, அது ஏன் என்பது தெரியாது.'

பால்கோன்ஸ்கி தமது தோள்களைக் குலுக்கினார்.

'பாலத்தை அவர்கள் கடந்துவிட்டார்கள் என்றால், நமது ராணுவம் கூட தொலைந்தது என்று தான் அர்த்தம். அதைத் துண்டித்து விடுவார்கள்' என்றார் அவர்.

'அதேதான் விஷயம்' என்று பிலைபின் பதிலளித்தார். 'கொஞ்சம் கேளும். நான் உமக்குச் சொல்லியபடி, பிரஞ்சுக்காரர்கள் வியன்னாவில் நுழைந்தார்கள். ரொம்ப சரி. அடுத்த நாள், அதாவது நேற்று, அந்த கனவான்கள், மார்ஷல்கள் முராட், லேன்ஸ், பெல்லியார்ட் ஆகியோர் பாலத்திற்கு சவாரி வந்தார்கள். இவர்கள் மூவரும் காஸ்கன்ஸ்* என்பது ஞாபகம் இருக்கட்டும். அவர்களில் ஒருவர் சொன்னார்: 'கனவான்களே, தாபர் பாலத்தில் வெடி மருந்து சுரங்கங்கள் பலமாக வைக்கப்பட்டிருக்கின்றன. அபாயகரமான பாதுகாப்புகள் பாலத்தின் வாசலில் செய்யப்பட்டிருக்கின்றன.

அந்த வாசலில் பதினையாயிரம் வீரர்கள் காவல் புரிகிறார்கள். சமிக்ஞை கொடுத்தவுடன் பாலத்தைக் கொளுத்திவிட வேண்டும் என்பது அவர்களுக்கு உத்தரவு. நமது துருப்புகளை பாலத்தின் மீது போக விடமாட்டார்கள். ஆனால் நாம் அந்தப் பாலத்தைக் கைப்பற்றினால், நமது நெப்போலியன் சக்கரவர்த்திக்கு மகிழ்ச்சியாய் இருக்கும். ஆகவே, நாம் மூவரும் போய் அந்த பாலத்தைக் கைப்பற்றுவோம்.' 'சரி, நாம் போவோம்' என்றார்கள் மற்றவர்கள். அப்புறம் அவர்கள் போய் பாலத்தைக் கைப் பற்றினார்கள். அதன் வழியாக துருப்புகள் கடந்தன. இப்பொழுது அந்த முழு ராணுவமும் டான்யூப் நதியின் இக்கரையில் இருக்கிறது. நம்மை நோக்கியும், உம்மை நோக்கியும், உமது முக்கியமான போக்குவரத்து ரஸ்தாவை நோக்கியும் அது வந்து கொண்டிருக்கிறது. (*காஸ்கன் என்பது பிரான்சில் ஒரு மாகாணம். அந்த மாகாணவாசிகள் மகா நாணயமானவர்கள் என்பது அக்காலத்தில் நம்பிக்கை.)

'தமாஷ் செய்வதை நிறுத்தும்!' என்று இளரசர் ஆண்ட்ரூ துக்கமாகவும் கவலையாகவும் சொன்னார். இந்தச் செய்தி அவருக்கு வருத்தத்தைக் கொடுத்தது. என்றாலும் அவர் சந்தோஷம் அடைந்தார்.

ருஷ்ய ராணுவம் இவ்வளவு ஆபத்தான நிலையில் அகப்பட்டுக் கொண்டிருப்பதை அவர் அறிந்ததும், அவருக்கு ஒரு நினைப்பு வந்தது. அதாவது இந்த ஆபத்தான நிலையில் இருந்து அதைத் தப்புவிப்பதற்குத் தம் தலையில்தான் எழுதியிருப்பதைப்போல அவருக்குத் தோன்றியது. இங்கே ஒரு டூலன்* தோன்றி யிருப்பதாகவும் இந்த சந்தர்ப்பம் பெயரோ புகழோ இல்லாத சாதாரண அதிகாரிகளின் பதவியிலிருந்து தம்மை உயர்த்தி, புகழேணியின் முதல் படியை அடையும்படி செய்யும் என்றும் அவர் நினைத்தார். பிலைபின் பேசியதைக் கேட்டுக்கொண்டிருந்த போதே அவர் மனதில் மனோராஜ்யம் வளர்ந்தது. தாம் திருப்பி ராணுவத்திடம் போய்ச் சேர்ந்ததும், யுத்த சபைக்குத் தமது ஆலோசனையை தெரிவிப்பார் என்றும், ராணுவத்தைக் காப்பாற்றுவதற்குத் தமது ஆலோசனையின்படி நடப்பது ஒன்றுதான் வழி என்றும், அந்த ஆலோசனையின்படி காரியங்களை நிறைவேற்றி வைப்பதற்குத் தம்மிடமே அந்த பொறுப்பை ஒப்புவிப்பார்கள் என்றும் அவர் மனோராஜ்யம் செய்தார். (*டூலேன் என்பது பிரான்ஸ் தேசத்தில் உள்ள ஒரு துறைமுகம். இங்கிருந்த இங்கிலீஷ்காரர்களையும், ஸ்பானிஷ்காரர்களையும் 1793-ம் வருஷத்தில் குடியரசுப் படைகளுக்குத் தலைமை வகித்து

நெப்போலியன் தாக்கினார். அதில்தான் அவருக்கு முதலாவதாக பெரிய புகழ் ஏற்பட்டது.)

'இந்த கேலி பேச்சை நிறுத்தும்' என்று அவர் சொன்னார்.

'நான் கேலி செய்யவில்லை' என்றார் பிலைபின். 'இதைவிட உண்மையானதோ துக்கமானதோ வேறு கிடையாது. இந்த மூன்று கனவான்களும் வெள்ளைக் கைக்குட்டைகளை வீசிக்கொண்டு தனிமையாகப் பாலத்திற்குப் போனார்கள். நாங்கள் இளவரசர் ஆர்ஸ் பெர்க்கிடம் பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்காகவே போகிறோம் என்று அங்கிருந்த அதிகாரியிடம் உறுதி கூறினார்கள். அந்த அதிகாரி அவர்களைப் போகவிட்டார். யுத்தம் முடிந்துவிட்டது என்றும், போனபார்ட்டைச் சந்திப்பதற்காக சக்கரவர்த்தி பிரான்சிஸ் ஏற்பாடு செய்து கொண்டிருப்பதாகவும், தாங்கள் இளவரசர் ஆர்ஸ்பெர்க்கை சந்திக்க விரும்புவதாகவும், இம்மாதிரியாக ஒரு ஆயிரம் காஸ்கன் சரடுகளை அவிழ்த்துவிட்டார்கள். அந்த அதிகாரி ஆர்ஸ்பெர்குக்குத் தகவல் அனுப்பினார். இந்த கனவான்கன் அங்கிருந்த அதிகாரிகளை ஆலிங்கனம் செய்து கேலி பேசிக்கொண்டு பீரங்கிகள் மீது உட்கார்ந்தார்கள். இதற்கு மத்தியில் ஒருவருக்கும் தெரியாமல் ஒரு பிரஞ்சுப் படை பாலத்திற்குள் நுழைந்து, அங்கிருந்த தீப்பிடிக்கும் சரக்குகளைத் தண்ணீரில் எறிந்து பாலத்தின் முகப்பை நெருங்கியது. கடைசியாக லெப்டினன்ட் ஜெனரலான நமது அன்பான இளவரசர் ஆர்ஸ்பெர்க் வான் மாட்டெர்ன் அங்கே விஜயம் செய்தார். 'அன்பான எதிரியே! ஆஸ்திரிய ராணுவத்தின் புஷ்பமே! துருக்கி யுத்தங்களின் வீராதி வீரரே! சண்டைகள் முடிந்துவிட்டன. நாம் ஒருவருக்கொருவர் கை குலுக்கிக்கொள்ளலாம்...நெப்போலியன் சக்கரவர்த்தி இளரவசர் ஆர்ஸ்பெர்க்கின் அறிமுகத்தைப் பெறுவதற்காக அடக்க முடியாமல் துடித்துக்கொண்டிருக்கிறார்'... இம்மாதிரியாக இந்த கனவான்கள், இந்த காஸ்கன்கள், அழகான வார்த்தைகள் வார்த்தைகள் பேசி அவரைத் திகைக்க வைத்தார்கள். பிரஞ்சு தளபதிகளுடன் இவ்வளவு துரிதமாக தமக்கு ஏற்பட்ட அந்நியோன்யத்தைக் கண்டு அவர் தற்பெருமை அடைந்தார். முராட் அணிந்திருந்த தொப்பியையும் அதிலிருந்த நெருப்புக் கோழி தோகையையும் பார்த்து மயங்கினார். அவர்களின் கண்களில் கண்ட ஒளி அவருடைய கண்களுக்குள் பாய்ந்து மயக்கியபடியால் அவர்களைச் சுடவேண்டுமே என்பதை அந்த பயத்தில் மறந்தே போனார். மிகுந்த பரபரப்போடு பிலைபின் பேசி வந்த போதிலும் தாம் சொல்லிய இந்த கேலிப் பேச்சை உள்ளாங்கி ரசிப்பதற்கு அவகாசம் கொடுக்க வேண்டும் என்பதை அவர் மறக்கவில்லை. அதனால் சிறிது நிறுத்திவிட்டு, மேலும் ஆரம்பித்தார். 'பிரஞ்சுப்

படை பாலத்தின் முகப்பிற்கு விரைந்தது. அங்கிருந்த பீரங்கிகளின் வாய்களை முதலில் அடைத்தது. பாலம் கைப்பற்றப்பட்டது. இதில் உள்ள சுவையான செய்தி என்னவென்றால்...' என்று அவர் மேலும் சொன்னார். அவர் சொல்லும் கதையில் அருமையான விருவிருப்பு அவருக்கு ஏற்பட்டபடியால் அவருடைய பரபரப்பு குறைந்தது. 'பாலத்தைக் கொளுத்துவதற்கு தீ வைக்க வேண்டுமானால் குண்டு போட்டு சமிக்ஞை காட்டவேண்டும். அந்த குண்டு போடும்பீரங்கிக்கு அதிகாரியாய் இருந்த சார்ஜண்ட், பிரஞ்சுத் துருப்புகள் பாலத்தின் வழியாக ஓடி வருவதைப் பார்த்தார். உடனே அவர் பீரங்கியில் இருந்து குண்டு போடப்போனார். ஆனால் லேன்ஸ் அவரை நிறுத்தினார். தமது தளபதியைவிட புத்திசாலியாய்த் தோன்றிய அவர், ஆர்ஸ்பெர்க்கிடம் சென்று, 'இளவரசே, உங்களை ஏமாற்றுகிறார்கள். இதோ பிரஞ்சு துருப்புகள் வந்து கொண்டிருக்கிறார்கள்' என்றார். இந்த சார்ஜண்டை மேலும் பேசவிட்டால் எல்லாம் கெட்டுப்போகும் என்பதை அறிந்த முராட் ஆச்சரியம் அடைந்தது போலப் பாசாங்கு செய்து, (அவர் ஒரு உண்மையான காஸ்கன்!) இளவரசரைப் பார்த்து, 'இம்மாதிரி ஒரு கீழ்த்தர சிப்பந்தி உம்மிடம் வந்து பேசுவது என்றால் கட்டு திட்டங்களுக்கு உலகப் புகழ்பெற்ற அந்த ஆஸ்திரியன் குணம் எங்கே இருக்கிறது என்று புரியவில்லையே' என்றார். அதுதான் ஒரு பெரிய புத்திசாலித்தனம். இளவரசர் ஆர்ஸ்பெர்க தம்முடைய கௌரவத்திற்கு ஆபத்து வந்ததாக நினைத்து அந்த சார்ஜண்டைக் கைது செய்யும்படி உத்தரவிட்டார். பாருமையா, இளவரசர் ஆண்ட்ரூவே, இந்த தாபர் பால விஷயம், எவ்வளவு அபூர்வமாய் இருக்கிறது என்பதை நீர் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். அது முட்டாள்தனமும் அல்ல, அயோக்கியத்தனமும் அல்ல...'

'அது துரோகமாய் இருக்கலாம்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. அச்சமயம் அவர் மனமதில் சாம்பல் வர்ண வெளிச் சட்டைகளும், காயங்களும்,வெடி மருந்துப் புகையும், துப்பாக்கி சுடும் சப்தங்களும், தமக்குக் கிடைக்கப்போகும் பெருமையும் தோன்றின.

'அதுவுமல்ல. அப்படிச் சொல்வது ராஜசபையைச் சேர்ந்தவர்கள் மீது பெரிய பழியைச் சுமத்துவதாய் இருக்கும்' என்றார் பிலைபின். 'அது துரோகமுமல்ல, அயோக்கியத்தனமுமல்ல, முட்டாள் தனமுமல்ல. அது என்னவென்றால், உம்மில் என்ன நடந்ததோ, அதுவேதான்...அதுவேதான்...' அதைக் காட்டக்கூடிய ஒரு சரியான சொல் தொடரை அமைக்க அவர் முயற்சித்தார். 'அதுவேதான்... அதுவேதான். அது மாக்கின் அம்சம். அதாவது, நாம் மாக் செய்யப்பட்டோம்' என்றார். ஒரு நல்ல புதிய பதத்தை அமைத்து

விட்டதாக அவர் நினைத்தார். இந்தப் பதம் இனி பலரால் உபயோகிக்கப்படும் என்றும் அவர் எண்ணினார். இதுவரை சுருங்கியிருந்த அவருடைய நெற்றி சுருக்கம் விட்டது. அவருடைய சந்தோஷத்திற்கு இது ஒரு அடையாளம். லேசான புன்னகையோடு தமது நகங்களைப் பார்க்கலானார்.

இளவரசர் ஆண்ட்ரூ எழுந்து தமது அறையை நோக்கிப் போவதைப் பார்த்து, திடீரென்று, 'நீர் எங்கே போகிறீர்' என்று கேட்டார்.

'நான் புறப்பட்டுப் போகிறேன்'.

'எந்த இடத்திற்கு.'

'ராணுவத்திற்கு.'

'ஆனால், இன்னும் இரண்டு நாட்கள் நீர் தங்குவதாய் இருந்ததல்லவா?'

'ஆனால், இப்பொழுது உடனேயே நான் போகிறேன்?'

தாம் புறப்படுவதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்வதற்கு உத்தரவிட்டுவிட்டு, இளவரசர் ஆண்ட்ரூ தமது அறையை நோக்கிப் போனார்.

'உமக்குத்தெரியுமா, என் அன்பரே?' என்று அவரைப் பின்தொடர்ந்த பிலைபின் கேட்டார். 'நான் உம்மைப்பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். நீர் எதற்காகப் போகிறீர்?'

அவர் முடிவான அபிப்பிராயத்திற்கு வந்துவிட்டதைக் காட்டும் அறிகுறியாக அவருடைய முகத்தில் இருந்த சுருக்கங்கள் மறைந்தன.

இளவரசர் ஆண்ட்ரூ கேள்விக்குறியோடு அவரைப் பார்த்தார். ஆனால், பதில் ஒன்றும் சொல்லவில்லை.

'நீர் எதற்காகப் போகிறீர்? அபாயத்திலிருக்கும் ராணுவத்திடம் போய்ச் சேரவேண்டியதுதான் உமது கடமையென்று நீர் நினைப்பது எனக்குத் தெரியும். எனக்கு அது புரிகிறது. என் அன்பரே, அதுதான் வீரத்தனம்.'

'அதெல்லாம் ஒன்றுமில்லை' என்றார் இளரவசர் ஆண்ட்ரூ.

'நீர் ஒரு தத்துவ சாஸ்திரியாக இருப்பதால் முன்னுக்குப் பின் முரணில்லாமல் நீர் நடந்துகொள்ள வேண்டும். பிரச்சனையின் மற்றொரு பக்கத்தை நீர் பார்ப்பீரானால், உம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டியதுதான் உமது முதல் கடமை என்பதைக் காணலாம். இனி வேறு எதற்கும் பிரயோஜனமில்லை என்று இருப்பவர்களிடம் மற்ற விஷயங்களை விட்டுவிடும்...

ராணுவத்திற்குத் திரும்பி வரும்படி உத்தரவு வரவில்லை. இங்கிருந்து திரும்பி போகும்படி உமக்கு இன்னும் அனுமதி கொடுக்கவில்லை. ஆகவே நீர் எங்களுடன் தங்கி, எங்கள் துரதிருஷ்டம் எங்களை எங்கெங்கே கொண்டு போகிறதோ, அங்கெல்லாம் நீரும் வரலாம். இங்கிருந்து அடுத்த நகரமான ஆல்முட்ஸுக்கு தலைநகரம் போவதாகச் சொல்லுகிறார்கள். ஆல்முட்ஸ் ஒரு நல்ல நகரம். என்னுடைய பிரயாண வண்டியில் நீரும் நானும் சௌக்கியமாய் போகலாம்.'

'தமாஷ் செய்வதை விட்டுவிடும், பிலைபின்' என்று பால்கோன்ஸ்கி கூச்சலிட்டார்.

'ஒரு நண்பன் என்ற முறையில் சிரத்தையோடு நான் சொல்லுகிறேன் யோசித்துப் பாரும். நீர் இங்கே தங்கலாம் என்று இருக்கும் போது, எங்கே, எதற்காக நீர் போகிறீர்? இரண்டு விஷயங்களில் ஒன்று நடந்தே தீரும்.' அவருடைய இடது கன்னத்தின் பொட்டில் உள்ள தோல் சுருங்கியது. ஒன்று சமாதான உடன்படிக்கை ஏற்படுவதற்குள்ளாக நீர் போய் உமது படையை அடைய முடியாது. அல்லது குட்டுஜோவின் முழு ராணுவத்திற்கும் ஏற்படப் போகிற தோல்வியையும் அவமானத்தையும் நீரும் பங்கு போட்டுக் கொள்ளுவீர்.'

பிலைபின் கன்னப்பொட்டில் காணப்பட்ட சுருக்கம் மறைந்தது. இந்தப் புதிர் தீர்க்க முடியாதது என்ற அவர் உணர்ந்தார்.

'இதைப்பற்றி என்னால் விவாதிக்க முடியாது' என்று இளவரசர் ஆண்ட்ரூ கடுமையாய் சொன்னார். ஆனால், அவர் மனதில் 'நான் ராணுவத்தைக் காப்பாற்றப்போகிறேன்' என்று நினைத்தார்.

'எனது அன்பான பேர்வழியே, நீர் ஒரு வீரர்' என்றார் பிலைபின்.

## 2 13

அதே இரவு யுத்த மந்திரியிடம் விடை பெற்றுக்கொண்டு பால் கோன்ஸ்கி தமது படையுடன் சேருவதற்காகத் திரும்பினார். கிரெம்ஸுக்கு வருகிற வழியில் அந்தப் படையை பிரஞ்சுத் துருப்புகள் பிடித்திருக்கலாம் என்று அவர் பயந்தபடியால் அதை எங்கே கண்டுபிடிப்பது என்பது அவருக்குத் தெரியவில்லை.

பிரென் நகரத்தில் மன்னர் சபையைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் பிரயாண மூட்டை கட்டிக்கொண்டிருந்தார்கள். பளுவான பொருள்களை எல்லாம் முன்னதாகவே ஆல்முட்ஸுக்கு

அனுப்பிவிட்டார்கள். ஹெட்ஜெல்ஸ்டார்ப் என்ற இடத்திலிருந்து பிரதான ரஸ்தா வழியாக இளவரசர் ஆண்ட்ரூ புறப்பட்டார். அதே ரஸ்தாவில்தான் மிகுந்த அவசரமாகவும் மிகுந்த அலங்கோலத்தோடும் ருஷ்ய ராணுவம் வந்து கொண்டிருந்தது. ரஸ்தா முழுவதும் வண்டிகள் நிறைந்திருந்தபடியால் அந்த ரஸ்தா வழியாக ஒரு வண்டி எதிராகப்போவது சாத்தியமில்லாமல் இருந்தது. ஆகவே, ஒரு கோசாக் தளபதியிடமிருந்து ஒரு குதிரையையும், துணைக்கு ஒரு கோசாக்கையும் பெற்றுக்கொண்டு பசியோடும் களைப்போடும் போய்க்கொண்டிருந்தார். சேனாதி பதியையும், தமது மூட்டை முடிச்சுகளையும் கண்டு பிடிப்பதற்காக எதிரே வந்த துருப்பு வண்டிகளைக் கடந்து சென்று கொண்டிருந்தார். ராணுவத்தைப்பற்றி பல கெட்ட செய்திகள், போகிற வழியில் அவர் காதுகளில் விழுந்தன. அலங்கோலமாகத் துருப்புகள் போய்க் கொண்டிருந்த காட்சி, இந்தச் செய்திகளை உறுதிப்படுத்துவதாய் இருந்தது. இந்தப் படையெடுப்பின் ஆரம்பத்தில் போனபார்ட் தாம் செய்த பிரசங்கத்தில் ஒன்று சொன்னார். அதாவது 'இங்கிலீஷ்காரர்களின் பணத்தினால் எங்கோ ஒரு கோடியிலிருந்து ருஷ்ய ராணுவம்கொண்டு வரப்படுகிறது. உல்மில் ஏற்பட்ட கதியே அதற்கும் ஏற்படும்படி செய்வோம்' என்றார். இந்த வாக்கியம் அவர் மனதில் தோன்றி அவருடைய லட்சிய வீரரின் மேதையைக்கண்டு ஆச்சரியப்படும்படி செய்தது. ஒரு பக்கம் பங்கமடைந்த பெருமையும், மற்றொரு பக்கம் பெரும் புகழ் ஏற்படப்போம் நம்பிக்கையும் அவருக்குத்தோன்றின. 'சாவதைத் தவிர வேறொன்றும் இல்லை என்று ஏற்பட்டுவிட்டால்? நல்லது. அப்படி அவசியம் நேரிட்டால் மற்றவர்களைவிட நான் மோசமாய் இருக்க மாட்டேன்' என்று நினைத்தார்.

குழப்பம் அடைந்த துருப்புக் கூட்டங்களும் வண்டிகளும் துப்பாக்கிகளும் பீரங்கிகளும் துருப்புகளுக்கான சாமான் வண்டிகளும் பலவகையான வாகனங்களும் ஒன்றையொன்று முந்திக்கொண்டு, மூன்று அல்லது நான்கு வண்டிகள் வீதம் ஒரே அணியில், அந்த சகதி ரஸ்தாவை அடைத்துக்கொண்டு முடிவற்ற கூட்டமாய் வந்து கொண்டிருப்பதைப் பார்த்த இளரவரசர் ஆண்ட்ரூ வெறுப்படைந்தார். எல்லா பக்கங்களிலும், பின்னாலேயும் முன்னாலேயும் காதுகள் கேட்கிற அளவு தூரத்திலிருந்து, வண்டிச் சக்கரங்களின் கலகலப்பு சப்தமும், வண்டிகளின் க்ரீச் சப்தமுமி, பீரங்கி வண்டிகளின் சப்தமும், குதிரைகளின் குளம்போசையும், சிப்பாய்களின் அதட்டல் சப்தங்களும், குதிரைகளை விரட்டும் சப்தமும், வேலைக்காரர்களும் அதிகாரிகளும் கூச்சல் போடும்

சப்தமும் வந்து கொண்டிருந்தன. ரஸ்தாவின் இருந்த பக்கங்களிலும் வழி நெடுக விழுந்து கிடந்த குதிரைகளும், உடைந்து கிடந்த வண்டிகளும் காட்சியளித்தன. விழுந்து கிடந்த குதிரைகளில் சில தோள் உரிக்கப்பட்டிருந்தன. சில அப்படியே கிடந்தன. உடைந்த வண்டிகளுக்குப் பக்கத்தில் சில சிப்பாய்கள் தனியாக அமர்ந்து, எதையோ எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். சில சிப்பாய்கள் கூட்டத்திலிருந்து பிரிந்து கிராமங்களுக்குள் நுழைந்தார்கள். அங்கிருந்து ஆடுகள், கோழிகள், வைக்கோல், பை நிறைய சாமான்கள் ஆகியவைகளைக் கொண்டுவந்தார்கள். ஏற்றத்தில் ஏறும்போதோ, அல்லது இறக்கத்தில் இறங்கும் போதோ ரஸ்தாவில் நெருக்கடி அதிகமாகி கூச்சல்களும் பலமாய் இருந்தன. முழமுங்கால் அளவு சகதியில் உழன்று பீரங்கிகளையும் சாமான் வண்டிகளையும் தள்ளினார்கள். சவுக்குகள் நொடிபட்டன. குளம்புகள் வழுக்கின. குதிரை வார்கள் தெறித்தன. கூச்சலிட்டுக் கூச்சலிட்டு குரல்களும் கம்மின. மேல் பார்வையிட்ட அதிகாரிகள் முன்னும் பின்னும் வண்டிகளின் இடையேயும் குதிரைகள் மீது சென்று கவனித்து வந்தார்கள். அங்கிருந்த பிரம்மாண்டமான கூச்சல்களில் அவர்களுடைய குரல்கள் மிக சொற்பமாய்த்தான் காதில் விழுந்தன. அந்த அலங்கோலத்தை அடக்க முடியாது என்ற அதைரியம் அவர்கள் முகத்தில் காணப்பட்டது.

'இதுதான் நமது அருமையான புராதன ருஷ்ய ராணுவம்' என்று பிலைபின் சொல்லிய வார்த்தைகள் பால்கோன்ஸ்கிக்கு ஞாபகத்திற்கு வந்தன.

சேனாதிபதி எங்கே இருக்கிறார் என்பதைக் கண்டுபிடிப்பதற்காக ஒரு வண்டிக் கூட்டத்தை நோக்கிப் போனார். அவருக்கு நேர் எதிராக ஒரு அதிசயமான ஒற்றைக் குதிரைவண்டி வந்துகொண்டிருந்தது. கையில் அகப்பட்ட சாமான்களைக்கொண்டு அந்த வண்டிக்கார சிப்பாய்கள் தயாரித்ததாய் தோன்றியது. சாதாரண வண்டி, பிரயாண வண்டி, சாரட்டு இவைகளில் அந்த வண்டி எதைச் சேர்ந்தது என்பதைச் சொல்லமுடியாமல், எல்லாவற்றையும் சேர்ந்ததான ஒரு கதம்பமாய் இருந்தது. ஒரு சிப்பாய் அதை ஓட்டி வந்து கொண்டிருந்தான். அதன் உள்ளே ஒரு படுதாவிற்குப் பின்னால் சால்வைகளைப் போர்த்திக்கொண்டு ஒரு பெண் அமர்ந்திருந்தாள். வண்டிக்கு மேலே தோலினால் செய்யப்பட்ட மேல் மூடி போட்டிருந்தது. இளவரசர் ஆண்ட்ரூ ஒரு சிப்பாயிடம் கேள்வி கேட்க ஆரம்பித்தபோது, அந்த வண்டியில் இருந்த பெண்ணின் பரிதாபகரமான குரல்கள் அவர் கவனத்தை இழுத்தன. அந்த பெண்ணின் வண்டியை ஓட்டிவந்த சிப்பாய் மற்ற வண்டிகளுக்கு

முன்னால் அந்த வண்டியை ஓட்டிப்போக முயற்சித்ததற்காக, அவனை ஒரு போக்குவரத்து அதிகாரி அடித்துக் கொண்டிருந்தார். அவருடைய சவுக்கடிகள் மூட்டை முடிச்சுகள் மீதும் பட்டுக்கொண்டிருந்தன. அந்த பெண் பரிதாபகரமாய்க் கத்தினாள். இளவரசர் ஆண்ட்ரூவை அவள் பார்த்ததும், படுதாவிலிருந்து தலையை வெளியே நீட்டி கம்பளிச் சால்வையால் மூடப்பட்டிருந்த தனது மெல்லிய கரத்தால்அவரைப்பார்த்து அசைத்து, 'திருவாளர் மெய்க்காப்பளரே, திருவாளர் மெய்க்காப்பளரே... கடவுளுக்காக... என்னைக் காப்பாற்றும். எங்கள் கதி என்ன ஆவது? நான் ஏழாவது சாஸியர் படையின் டாக்டருடைய மனைவி... எங்களைப் போகவிடவில்லை. நாங்கள் பின்தங்கிவிட்டோம். எங்களைச் சேர்ந்தவர்கள் எங்கிருக்கின்றார்களோ தெரியவில்லை...' என்றாள்.

'உன்னை தோசை மாதிரி சப்பையாக்கிவிடுவேன்' என்று அந்த அதிகாரி சிப்பாயைப் பார்த்துக் கத்தினார். அந்த கேடு கெட்ட பெண்ணோடு திரும்பப்போய்விடு.'

'திருவாளர் மெய்க்காப்பாளரே, என்னைக் காப்பாற்றும்... இதற்கெல்லாம் என்ன அர்த்தம்?' என்று டாக்டரஷின் மனைவி கதறிக் கூச்சலிட்டாள்.

'தயவு செய்து இந்த வண்டியைப் போகவிடும். அது ஒரு பெண் என்பது உமக்குத் தெரியவில்லையா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ அந்த அதிகாரியிடம் சென்ற சொன்னார்.

அந்த அதிகாரி அவரை உற்றுப்பார்த்தார். பதில் சொல்லாமல் மீண்டும் சிப்பாயை நோக்கி, 'நீ முன்னால் போவாயானால்... ஜாக்கிரதை... பின்னால் போ' என்று சொன்னார்.

'அவர்க்ளைப் போகவிடும், இதோ நான் சொல்லுகிறேனே' என்ற உதடுகளை நெருக்கிக்கொண்டு இளவரசர் ஆண்ட்ரூ மீண்டும் சொன்னார்.

'ஆமாம், நீர் யார்?' என்று அந்த அதிகாரி அவரைத் திரும்பிப்பார்த்து, பொங்கிவரும் கோபத்தோடு கத்தினார். 'நீர் யார்? இங்கே நீரா படை அதிகாரி? ஹே... நான்தான் இங்கே படை அதிகாரி, நீர் அல்ல' என்று சொல்லிவிட்டு, அந்த சிப்பாயைப் பார்த்து, 'திரும்பிப்போ. இல்லையானால் தோசை மாதிரி சப்பையாக்கிவிடுவேன்' என்று மீண்டும் கூறினார்.

'அந்தச் சிறிய மெய்க்காப்பாளருக்கு அது ஒரு நல்ல சூடு!' என்று பின்னால் இருந்து ஒரு ஒலி கேட்டது.

தாம் என்ன சொல்லுகிறோம் என்பதை அறிய முடியாதபடி அவ்வளவு தூரம் அர்த்தமற்ற கோபத்தில் அந்த அதிகாரி பொங்கிக்கொண்டிருப்பதை இளவரசர் ஆண்ட்ரூ பார்த்தார். அந்த அதிசயமான வண்டியிலிருந்த டாக்டரின் மனைவிக்காக தாம் சிபாரிசு செய்யப்போனது தம்மைப் பரிகாசத்திற்கு இடமாக்கி விடும் என்பதை அறிந்தார். அம்மாதிரியான நிலைமை ஏற்படுவதை விட வெறுப்பான வேறு காரியம் அவருக்கு இந்த உலகத்திலேயே கிடையாது. அவருடைய உள் உணர்ச்சி அவரை உந்தித் தள்ளியது. அந்த அதிகாரி தமது வாக்கியத்தை முடிக்கும் முன்பாக, இளவரசர் ஆண்ட்ரூ கோபத்தினால் முகம் சுழித்துத் தம் கையிலிருந்த சவுக்கை உயர்த்திக்கொண்டு அவரிடம் நெருங்கினார்.

'தயவு... செய்து... போக... விடும்...'

அந்த அதிகாரி தமது கையை ஆட்டிக்கொண்டு வேகமாய் அந்த இடத்தை விட்டு தமது குதிரையைத் தட்டி விட்டார்.

'சேனாதிபதியின் பரிவாரங்களிலுள்ள இம்மாதிரி பேர்வழிகள் தான் இந்த அலங்கோலங்களுக்குக் காரணம். உமது இஷ்டப்படியே செய்யும்' என்று அவர் போகும்போது முனங்கினார்.

தமது கண்களை உயர்த்தாமலே டாக்டரின் மனைவி இருந்த இடத்தை விட்டு வேகமாகத் தமது குதிரையைத் தட்டிவிட்டார், இளவரசர் ஆண்ட்ரூ. டாக்டரின் மனைவி அவரைத் தன்னுடைய ரட்சகர் என்று போற்றினாள். இந்த அவமானமான காட்சியின் ஒவ்வொரு சிறிய விவரத்தையும் மன வெறுப்போடு நினைத்துக் கொண்டே இளவரசர் ஆண்ட்ரூ குதிரை மீது ஒரு கிராமத்திற்குப் போனார். அங்கேதான் சேனாதிபதி இருப்பதாகச் சொல்லப்பட்டது.

கிராமத்திற்குச் சென்றதும் குதிரையிலிருந்து கீழிறங்கி பக்கத்திலிருந்த வீட்டிற்குச் சென்றார். ஏதாவது சிறிது உண்டு, ஒரு வினாடியாவது ஓய்வு எடுத்து, தம் மனதைக் குழப்பிக்கொண்டிருந்த துன்பமான கஷ்டமான நினைப்புகளை ஒரு விதமாக அலசிப் பார்க்க விருப்பங்கொண்டார். 'இது ரு ஒரு அயோக்கியர்களின் கூட்டம், ராணுவமல்ல' என்று அவர் நினைத்துக்கொண்டே, அங்கிருந்த முதல் வீட்டின் ஜன்னலண்டை போனார். அச்சமயம் அவருக்குப் பழக்கமான ஒரு குரல், அவரைப் பேர்சொல்லி அழைத்தது.

அவர் திரும்பிப் பார்த்தார். நெஸ்வைட்ஸ்கியின் அழகான முகம் ஒரு சிறிய ஜன்னலுக்கு வெளியே தெரிந்தது. வாயில் எதையோ சுவைத்துக்கொண்டு, உதடுகளை நக்கிக்கொண்டு, தமது கையை ஆட்டி, உள்ளே வரும்படி நெஸ்வைட்ஸ்கி அழைத்தார்.

'பால்கோன்ஸ்கி, பால்கோன்ஸ்கி... உமக்கு காது கேட்கவில்லையா? ஹே, சீக்கிரம் வாரும்...' என்று அவர் கூச்சலிட்டார்.

வீட்டிற்குள் நுழைந்ததும் நெஸ்வைட்ஸ்கியும் மற்றொரு உதவியாளரும் எதையோ உண்டுகொண்டிருப்பதை இளவரசர் ஆண்ட்ரூ பார்த்தார். அவர்கள் அவசரமாய் இவர் பக்கம் திரும்பி, 'ஏதாவது செய்திகள் உண்டா?' என்று கேட்டார்கள். அந்த பழகிய முகங்களில் பரபரப்பையும் பீதியையும் அவர் கண்டார். வழக்கமாய் சிரித்துக்கொண்டிருக்கக்கூடிய நெஸ்வைட்ஸ்கியின் முகத்தில் இவை முக்கியமாய் காணப்பட்டன.

'சேனாதிபதி எங்கே இருக்கிறார்?' என்று கேட்டார், பால்கோன்ஸ்கி.

'இங்கேதான். அதோ அந்த வீட்டில்' என்றார் அந்த உதவியாளர்.

'நல்லது. சரணடைந்து சமாதானம் செய்துகொள்ளுவோம் என்று சொல்லுகிறார்களே, அது உண்மையா?' என்று கேட்டார் நெஸ்வைட்ஸ்கி.

'அதைத்தான் நானும் உம்மை கேட்க இருந்தேன். எனக்கு ஒன்றுமே தெரியாது. எப்படியோ இங்கு வந்து சேர்ந்தேன்.'

'எனது அன்புள்ள சிறுவரே,நிலைமை ரொம்ப பயங்கரமானது. மாக் தோல்வியைக்கண்டு நான் சிரித்தது தவறு. அதைவிட மோசமாக நமக்குக் கிடைக்கப்போகிறது. சரி, உட்காரும். ஏதாவது கொஞ்சம் சாப்பிடும்' என்றார் நெஸ்வைட்ஸ்கி.

'உமது மூட்டை முடிச்சுகளையோ, அல்லது வேறு எதையுமோ உம்மால் இப்பொழுது கண்டுபிடிக்கமுடியாது, இளவரசே. உமது சேவகன், பீட்டர், எங்கே இருக்கிறான் என்பது அந்தக் கடவுள் ஒருவருக்குத்தான் தெரியும்' என்றார்அந்த உதவியாளர்.

'தலைமைக் காரியாலயம் எங்கே இருக்கிறது?'

'ஜெனெய்ம் என்ற இடத்தில் இன்றிரவை நாம் கழிக்க வேண்டும்.'

'சரி, எனக்கு வேண்டிய சாமான்களை எல்லாம் இரண்டு குதிரைகளின் பாரங்களாக நான் கட்டிவைத்துவிட்டேன்' என்றார் நெஸ்வைட்ஸ்கி. ரொம்ப நன்றாக எனக்காக அவர்கள் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். பொஹிமியன் மலைகளைத் தாண்ட வேண்டும் என்றால் கூட அவை பலமாய் இருக்கும். பழைய நண்பரே, நிலைமை மோசமாய் இருக்கிறது. உம்மைப்பற்றி

என்ன? உமக்கு என்ன உடம்புக்கு சரியில்லையா? ஏன் இப்படி நடுங்குகிறீர்?' என்று மின்சார அதிர்ச்சியால் தாக்குண்டவர் போலிருந்த இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்துக்கேட்டார்.

'அது ஒன்றுமில்லை' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

அப்பொழுதுதான் அவருக்கு, டாக்டர் மனைவியையும் அந்த வண்டிக் கூட்டங்களின் அதிகாரியையும் சந்தித்ததைப் பற்றிய நினைப்பு தோன்றியது.

'இங்கே சேனாதிபதி என்ன செய்துகொண்டிருக்கிறார்?' என்று அவர் கேட்டார்.

'என்னால் ஒன்றும் அறிந்துகொள்ள முடியவில்லை' என்றார் நெஸ்வைட்ஸ்கி.

'நல்லது, எனக்குத் தெரிந்தது என்னவென்றால், எல்லாம் வெறுக்கத்தக்கதாய் இருக்கிறது. வெறுக்கத்தக்கது, மிகவும் வெறுக்கத்தக்கது' என்று இளவரசர் ஆண்ட்ரூ கூறிவிட்டு, சேனாதிபதி இருந்த வீட்டை நோக்கிப் போனார்.

குட்டுஜோவின் வண்டியையும் அவருடைய பரிவாரங்களின் களைத்துப்போன குதிரைகளையும் போகிற வழியில் இளவரசர் ஆண்ட்ரூ பார்த்தார். காவல்காரர்களான கோசாக்குகள் கூட்ட மாகக்கூடி நின்று உரக்கப்பேசிக் கொண்டிருந்தார்கள். அவர் ஆளோடியில் நுழைந்தார். இளவரசர் பாக்ரேஷனும் வேராதரும் குட்டுஜோவோடு அந்த வீட்டில் இருந்ததாக அவர் அறிந்தார். ஷிமிட்டுக்குப் பின்னால் அவருடைய ஸ்தானத்திற்கு வந்தவர்கள் ஆஸ்திரிய ஜெனரல் வேராதர். ஆளோடியில் அந்தச் சிறிய காஸ்லோவ்ஸ்கி, ஒரு குமாஸ்தா முன்னால் குந்திக்கொண்டிருந்தார். தம்முடைய சட்டைக்கையை மேலே மடக்கிவிட்டுக்கொண்டு, ஒரு தொட்டியைக் குப்புறக் கவிழ்த்து மேஜையாக்கிக்கொண்டு, அந்த குமாஸ்தா வேகமமாக எழுதிக் கொண்டிருந்ததார். காஸ்லோவ்ஸ்கியின் முகம் களைத்துப் போய் இருந்தது. அவரும் இரவு பூராவும் தூங்கவில்லை. அவர் இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்தார். ஆனால் மரியாதைக்காக தலையைக்கூட அசைக்கவில்லை.

'இரண்டாவது வரி...நீர் எழுதிவிட்டீரா?' என்று குமாஸ்தாவைப் பார்த்துக்கேட்டார். 'கீப்கிரேனாடியர்கள், பாடாலியன்...'

‘அவ்வளவு வேகமாக ஒருவர் எழுதமுடியாது, மேன்மை தங்கியவரே’ என்று குமாஸ்தா சொல்லி கோபமாகவும் மரியாதைக் குறைவாகவும் காஸ்லோவ்ஸ்கியை ஏறிட்டுப்பார்த்தார்.

கதவின் வழியாகப் பரபரப்பும் அதிருப்தியும் அடைந்த குட்டுஜோவின் குரலும்,பழக்கமில்லாத மற்றொருவரின் குரலும் வந்து கொண்டிருந்தன. இந்தக் குரல்களிலிருந்தும், காஸ்லோவ்ஸ்கி தம்மை அலட்சியமாய் பார்த்ததிலிருந்தும், அந்த களைப்படைந்த குமாஸ்தாவின் மரியாதைக் குறைவான நடத்தையிலிருந்தும், சேனாதிபதிக்கு வெகு சமீபமாகவே அந்த குமாஸ்தாவும் காஸ்லோவ்ஸ்கியும் தரையில் தொட்டிக்கு சமீபமாக அமர்ந்திருப் பதிலிருந்தும்,ஜன்னலுக்குப் பக்கத்தில் குதிரைகளைப் பிடித்துக் கொண்டு நின்ற கோசாக்குகள் பலமாய் சிரித்துக்கொண்டு இருப்பதிலிருந்தும், ஏதோ ஒரு முக்கியமான பயங்கரமான விஷயம் நடக்கப்போகிறதென்று இளவரசர் ஆண்ட்ரூ உணர்ந்தார்.

அவர் காஸ்லோவ்ஸ்கியைப் பார்த்து அவசரமான விஷயங் களைப் பற்றி கேட்டார்.

‘உடனே, இளவரசே...’ என்றார் காஸ்லோவ்ஸ்கி. ‘பாக்ரேஷன் என்ன செய்யவேண்டும் என்ற சேனாதிபதியின் உத்தரவை எழுதிக் கொண்டிருக்கிறோம்.’

‘சரணாகதியா?’

‘அம்மாதிரி எதுவும் கிடையாது. ஒரு சண்டையை நடத்து வதற்காக உத்தரவுகள் எழுதப்படுகின்றன.’

பேச்சுக்குரல்கள் வந்த வாசலை நோக்கி இளவரசர் ஆண்ட்ரூ போனார். அவர் கதவைத் திறக்கப்போன சமயத்தில் பேச்சுகள் நின்றன. கதவு திறந்தது. கழுகு மூக்கும் உருண்ட முகமும் கொண்ட குட்டுஜோவ் வாசலில் தோன்றினார். குட்டுஜோவுக்கு எதிராகவே இளரவரசர் ஆண்ட்ரூ நின்றார். ஆனால், அவருடைய கவலை களும், அவருடைய நினைப்புகளும் வேறு எங்கோ சுற்றிக் கொண்டிருப்பதும், அவருக்குள்ள ஒரே கண்ணில் தோன்றிய குறிகள் தெரிவித்தன. ஆகவே இவர், அவர் முன்னால் நின்றதுகூட அவருக்குத் தெரியவில்லை. நேராக இந்த உதவியாளர் முகத்தில் அவருடைய பார்வை வீசியது; என்றாலும் இவரை அடையாளம் கண்டு கொண்டதாக அவர் காட்டவில்லை.

‘சரி, நீர் முடித்துவிட்டீரா?’ என்று காஸ்லோவ்ஸ்கியை கேட்டார்.

‘ஒரே வினாடி, மேன்மை தங்கியவரே.’

சேனாதிபதிக்குப் பின்னால் பாக்ரேஷன் வெளியேவந்தார். நடுத்தர வயதும்,நடுத்தர உயரமும் மெலிந்த சரீரமும்,உறுதியும் நிதானமும் கொண்ட கீழ்நாட்டு முகத்தோற்றமும் உடையவராய் இருந்தார்.

‘நான் திரும்ப வந்துவிட்டேன்’ என்று கொஞ்சம் பலமாகவே இளரவசர் ஆண்ட்ரூ சொல்லி, குட்டுஜோவிடம் ஒரு கடித்தைக் கொடுத்தார்.

‘ஆ, வியன்னாவில் இருந்தா? ரொம்ப சந்தோசம். பின்னால் பார்க்கலாம். குட்டுஜோவ் பாக்ரேஷனோடு வெளியே முற்ற மண்டபத்திற்குச் சென்றார்.

‘நல்லது. போய்வாரும், இளவரசே. எனது ஆசீர்வாதங்கள். உம்முடனும் உமது பெரிய முயற்சியிலுப் கிறிஸ்து உம்முடன் இருப்பாராக’ என்று பாக்ரேஷனைப் பார்த்துச் சொன்னார்.

திடீரென்று அவர் முகம் இரக்கம் கொண்டது. அவர் கண்ணில் நீர் நிறைந்து நின்றது. இடது கையால் பாக்ரேஷனைத் தமது பக்கம் இழுத்தார். மோதிரம் அணிந்திருந்த வலது கையால் அவர் மீது சிலுவைக்குறி காட்டினார். அவருடைய வழக்கப்படி அவருடைய பருத்த கன்னத்தை நீட்டினார். ஆனால் பாக்ரேஷன் அவர் கழுத்தில் முத்தமிட்டார்.

‘கிறிஸ்து உம்முடன் இருப்பாராக’ என்று குட்டுஜோவ் மீண்டும் சொல்லிவிட்டுத் தமது வண்டியை நோக்கி நடந்தார். ‘என்னுடன் ஏறிக்கொள்ளும்’ என்று பால்கோன்ஸ்கியைப் பார்த்துக் கூறினார்.

‘மேன்மை தங்கியவரே, இங்கே இருப்பவர்களுக்கு உதவியாய் இருக்க நான் விரும்புகிறேன். இளவரசர் பாக்ரேஷனின் படையோடு சேவை செய்வதற்கு எனக்கு அனுமதி கொடுங்கள்.’

‘வண்டியில் ஏறும்’ என்றார் குட்டுஜோவ். பால்கோன்ஸ்கி இன்னும் தாமதிப்பதைப் பார்த்த அவர் ‘நல்ல அதிகாரிகள் எனக்கே வேண்டும்’ என்றார்.

அவர்கள் இருவரும் வண்டியில் ஏறிப்போனார்கள். சில நிமிஷங்கள் மௌனமாய் இருந்தார்கள்.

‘இன்னும் எவ்வளவோ நாம் செய்யவேண்டியது இருக்கிறது. எவ்வளவோ செய்யவேண்டும்’ என்று அவர்சொன்னார். அவர் ஒரு வயோதிகரின் ஊடுருவிப் பார்க்கும் தன்மையோடு பால் கோன்ஸ்கியின் மனதில் ஓடிக்கொண்டிருந்த எண்ணங்கனை அறிந்துகொண்டவரைப்போல் தோன்றியது. ‘அவருடைய

படையில் பத்தில் ஒரு பங்குப் பேராவது திரும்பிவந்தால்கூட, நான் கடவுளுக்கு நன்றி செலுத்துவேன்' என்று தமக்குள்ளேயே பேசுவதுபோல சொல்லிக்கொண்டார்.

இளவரசர் ஆண்ட்ரூ ஒரு அடிக்கு அப்பால் இருந்த குட்டுஜோவின் முகத்தை நோக்கினார். கன்னப்பொட்டில் இஸ்மெயில் யுத்தத்தில் பாய்ந்த குண்டுக் காயம் சுத்தமாய் இருப்பதும் கண்ணில்லாத ஒரு கண் குழியும் அவருக்கு தம்மை அறியாமலேயே தெளிவாய்த் தெரிந்தன. அவகைளைப் பார்த்ததும், 'ஆம், அந்த மனிதர்களின் மரணத்தைப்பற்றி அவ்வளவு அமைதியாகப் பேசுவதற்கு அவருக்கு உரிமையுண்டு' என்று பால்கோன்ஸ்கி நினைத்தார்.

'அதற்காகத்தான் அந்தப் படையோடு என்னை அனுப்புங்கள் என்று நான் கெஞ்சுகிறேன்.'

குட்டுஜோவ் பதில் சொல்லவில்லை. அவர் என்ன சொல்லிக்கொண்டிருந்தார் என்பதை மறந்தவர் போலக் காணப்பட்டார். யோசனையில் ஆழந்து அமர்ந்திருந்தார். ஐந்து நிமிஷங்கள் கழித்து மெதுவாக இளவளரசர் ஆண்ட்ரூ பக்கம் திரும்பினார். அவருடைய முகத்தில் பரபரப்பு எதுவும் இல்லை. நாசூக்கான கிண்டலோடு சக்கரவர்த்தியோடு இளவரசர் ஆண்ட்ரூ கண்ட பேட்டியைப் பற்றியும், கிரெம்ஸ் விஷயத்தைப்பற்றி ராஜசபையில் சொல்லிய அபிப்பிராயங்களைப் பற்றியும், இருவருக்கும் தெரிந்த சில சீமாட்டிக்ளைப் பற்றியும் விவரங்களை விசாரித்தார்.

## 2
### 14

தம்முடைய தலைமையில் உள்ள ராணுவம் மிகுந்த இக்கட்டான நிலைமையில் இருப்பதாக நவம்பர் 1-ந்தேதியன்று ஒரு ஒற்றன் மூலமாக குட்டுஜோவ் அறிந்தார். வியன்னாவில் பாலத்தைக் கடந்த பின்பு பிரஞ்சுக்காரர்கள் ஏராளமாக முன்னோக்கி வந்து கொண்டிருப்பதாக அந்த ஒற்றன் செய்தி கொண்டுவந்தான். ருஷ்யாவிலிருந்து எந்த ரஸ்தா வழியாக உதவித் துருப்புகள் வந்து கொண்டிருந்தனவோ, அதே ரஸ்தாவில்தான் பிரஞ்சுக்காரர்கள் முன்னேறி வந்தார்கள். கிரெம்ஸ் நகரத்திலேயே தங்கிவிடுவது என்று குட்டுஜோவ் தீர்மானித்தால் ருஷ்யாவிலிருந்து வந்து கொண்டிருந்த உதவிப் படைகள், தம்மை வந்து சேர முடியாதபடி

நெப்போலியனின் ஒன்றரை லட்சம் வீரர்கள் தடுத்துவிடுவார்கள். அதோடு அவரிடமுள்ள நாற்பதாயிரம் களைத்துப்போன வீரர் களையும் வளைத்துக்கொள்வார்கள். அப்பொழுது அவருடைய நிலைமை உல்ம் என்ற இடத்தில் மாக் என்பருக்கு நேரிட்டதைப் போலவே நேர்ந்துவிடும். ருஷ்யாவிலிருந்து துருப்புகள் வந்து கொண்டிருந்த ரஸ்தாவை இவர் கைவிடுவாரானால், இவருக்கு வேறு நல்ல ரஸ்தா கிடையாது. பொஹிமியின் மலைகளுக்கே இவர் போகநேரிடும். அப்படிப்போனால் எதிரிகளின் ஏராளமான துருப்புகளின் தாக்குதல்களில் இருந்து தம்மைக் காத்துக் கொள்ளவேண்டியது ஒரு பக்கம் இருக்க, ருஷ்யாவிலிருந்து வரும் பக்ஸ்ஹெளடனுடன் சந்திக்க முடியாமலே போய்விடும். கிரெம்ஸிலிருந்து ஆல்முட்ஸுக்குப் போகிற ரஸ்தாவில் குட்டுஜோவ் சென்று ருஷ்யாவிலிருந்துவரும் துருப்புகளோடு சேர்ந்துகொள்ளுவது என்று தீர்மானித்தால் அங்கே மற்றொரு அபாயம் இருக்கிறது. வியன்னா பாலத்தைக் கடந்து முன்னேறிக் கொண்டிருந்த பிரஞ்சு துருப்புகளோடு சந்திக்கவேண்டியதிருக்கும். குட்டுஜோவின் படைகள் தங்களுடைய மூட்டை முடிச்சுகளோடும் போக்குவரத்து சாதனங்களோடும் கஷ்டப்பட்டு ரஸ்தாவில் போய்க் கொண்டிருக்கும்போதே, மூன்று மடங்கு அதிக பலமுள்ள எதிரியோடு சண்டைபோட நேரிடும். அந்த எதிரிகள் இருபுறமாக இவர்களைத் தாக்கி நெருக்குவார்கள்.

ஆனால், இந்த வழியை குட்டுஜோவ் பின்பற்றினார்.

வியன்னாவின் பாலத்தைக் கடந்த பிரஞ்சுக்காரர்கள் ஜெனெய்மை நோக்கி வேகமாக முன்னேறி வருவதாக அந்த ஒற்றன் அறிவித்தான். குட்டுஜோவ் இருந்த இடத்திற்கும் அந்த ஜெனெய்முக்கும் நூறு வெர்ஸ்ட்டுகள் (ஒரு வெர்ஸ்ட் என்பது 2/3 மைல்தூரம்) தூரம் இருக்கும். பிரஞ்சுக்காரர்களுக்கு முன்பாக ஜெனெய்ம் போய் அவர் சேர்ந்தால் ராணுவதைக் காப்பாற்றலாம் என்ற பெரிய நம்பிக்கையுண்டு. தமக்கு முன்பாக ஜெனெய்முக்கு பிரஞ்சுக்காரர்களைப் போகும்படி விட்டு விட்டால், உல்மில் ஏற்பட்ட அதே அவமானமே, பூரா ராணுவத்திற்கும் ஏற்படும். அல்லது பூராவாக நாசமாகிவிடும். ஆகவே பிரஞ்சுக்காரர்களுக்கு முன்னதாக தமது முழு ராணுவத்தையும் கொண்டுபோவது அசாத்தியமாய் இருந்தது. வியன்னாவில் இருந்து ஜெனெய்முக்குப் போகிற ரஸ்தா, கிரெம்ஸிலிருந்து ஜெனெய்முக்கு ருஷ்யர்கள் போகும் ரஸ்தாவைவிட உயர்ந்ததும் சுருக்கமானதுமாகும்.

செய்தி கிடைத்த தினத்தன்று இரவு பாக்ரேஷனின் முன்னணியைச் சேர்ந்த நாலாயிரம் வீரர்களை, வலது பக்கமாகக் குன்றுகளைக்

கடந்து, கிரெம்ஸ் ஜெனெய்ம் ரஸ்தாவிலிருந்து வியன்னா ஜெனெய்ம் ரஸ்தாவிற்கு குட்டுஜோவ் அனுப்பினார். ஓய்வின்றி ஒரே நடையாக வியன்னா திசையை நோக்கி இந்த படையெடுப்பை பாக்ரேஷன் நடத்தவேண்டும். பிரஞ்சுக்காரர் களுக்கு முன்னதாக அவர்போய் ரஸ்தாவில் சேர்ந்துவிட்டால், தமது துருப்புகளைக் கொண்டு எவ்வளவுதூரம் தாமதப்படுத்த முடியுமோ, அவ்வளவு தூரம் தாமதப்படுத்த வேண்டும். இச்சமயத்தில் தமது துருப்பு களோடு குட்டுஜோவ் ஜெனெய்மை நோக்கிப் புறப்படவேண்டும்.

புயல் காற்று அடித்துவந்த அந்த இரவில் ஒழுங்கான, பாதைகள் இல்லாத மலைகளைக் கடந்து, நல்ல சாப்பாடும் நல்ல உடையும் இல்லாத துருப்புகளை அழைத்துக்கொண்டு,முப்பது மைல் தூரம் பாக்ரேஷன் கடந்து வந்தார். வியன்னா--ஜெனெய்ம் ரஸ்தாவிலுள்ள ஹாலாபிரன் என்ற இடத்திற்கு, பிரஞ்சுக்காரர்கள் வந்தடைவதற்குச் சில மனி நேரங்களுக்கு முன்னால் அவர் வந்து சேர்ந்தார். வருகிற வழியில் தமது படையைச் சேர்ந்தவர்களில் மூன்றில் ஒரு பங்கு பேர் சிதறிப்போனார்கள். குட்டுஜோவ் ஜெனெய்ம் போய் சேருவதற்கு இன்னும் சில தினங்கள் பிடிக்கும். ஆகவே, பசியும் களைப்பும் கொண்டிருந்த அந்த நாலாயிரம் வீரர்களைக்கொண்டு, பல நாட்களுக்கு பிரஞ்சுத் துருப்புகளைத் தடுத்து நிறுத்தவேண்டியது பாக்ரேஷனின் வேலை. பிரஞ்சுக்காரர்களின் முழு ராணுவத்தையும் இந்த நாலாயிரம் பேர்களைக்கொண்டு நிறுத்திவைப்பது முடியாத காரியம். ஆனால், விதியின் ஒரு விசித்திரத்தினால், அந்த முடியாத காரியமும் முடியும்படியாக நேர்ந்தது. சண்டை எதுவும் இல்லாமல் ஒரு தந்திரத்தினால் வியன்னா பாலத்தை முராட் கைப்பற்றியதால், அதேமாதிரி குட்டுஜோவையும் ஏமாற்றுவதற்கு அவர் முயற்சித்தார். ஜெனெய்ம் ரஸ்தாவில் சந்தித்த பாக்ரேஷனின் பலவீனமான படைப் பிரிவைப்பற்றிய உண்மையை முராட் அறியவில்லை. குட்டுஜோவின் பூரா ராணுவமுமே அங்கிருப்பதாக நினைத்தார். ஆகவே, அந்த பூரா ராணுவத்தையும் அடியோடு நசுக்குவதற்காக வியன்னாவிலிருந்து வந்து கொண்டிருந்த முழு ராணுவமும் அங்கே வந்து சேரட்டும் என்று நினைத்தார். இந்த நோக்கத்தோடு ஒரு யோசனை கூறினார். இரண்டு படைகளும் தங்கள் இடத்தைவிட்டு அசையாமல் இருப்பதாய் இருந்தால், மூன்று நாட்களுக்கு யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்துகொள்ளலாம் என்று அறிவித்தார். சமாதானத்திற்கான பேச்சுவார்த்தைகள் ஏற்கனவே ஆரம்பமாய்விட்ட தென்றும், ஆகவே அனாவசியமாக ரத்தம் சிந்துவதைத் தடுப்பதற்காகவே இந்த மூன்று நாள் போர் நிறுத்த யோசனையைத் தாம் கூறுவதாகவும் முராட் தெரிவித்தார்.

முன்னால் உள்ள அரண்களில் அமர்ந்திருந்த துருப்புகளின் தலைவரான ஆஸ்திரியன் ஜெனரல் கோமகன் நாஸ்டிட்ஸ், முராட்டின் தூதர் சொல்லியதை நம்பினார். ஆகவே, தமது துருப்புகளை முன்னணிப் பாதுகாப்பு அரண்களிலிருந்து வாபஸ் வாங்கிக்கொண்டார். இதனால் பாக்ரேஷனின் படைப் பிரிவுக்கு முன்பாதுகாப்பில்லாமல் போய்விட்டது. மற்றொரு தூதர் ருஷ்ய அணிக்குச் சென்று சமாதானப் பேச்சுகள் நடப்பதையும், மூன்று நாள் யுத்த நிறுத்தத்தையும் பற்றி தெரிவித்தார். யுத்த நிறுத்தத்தை ஒப்புக்கொள்ளவோ அல்லது மறுக்கவோ தமக்கு அதிகாரம் இல்லையென்று பாக்ரேஷன் பதிலளித்தார். இந்த விஷயங்களைப் பற்றி குட்டுஜோவிற்குத் தெரிவிப்பதற்காக தமது உதவியாளரை பாக்ரேஷன் அனுப்பிவைத்தார்.

பாக்ரேஷனின் களைப்படைந்த துருப்புகளுக்கு ஓய்வு கொடுக்கவும், பிரஞ்சுக்காரர்களுக்குத் தெரியாமல் தாம் அனுப்பிவரும் யுத்த தளவாட சாமான்கள் ஜெனெய்முக்கு சமீபத்தில் போய்ச்சேருவதற்கும் குட்டுஜோவுக்கு அவகாசம் வேண்டியிருந்தது. இந்த யுத்த நிறுத்தம் ஒன்றுதான் அந்த அவகாசத்தைக் கொடுக்கமுடியும். எதிர்பாராமல் வந்த இந்த யுத்த நிறுத்த யோசனையைக்கொண்டு ராணுவத்தையும் காப்பாற்றி விடலாம். ஆகவே இந்தச் செய்தி கிடைத்தவுடன் தமது பரிவாரத்திலிருந்த உதவியாளர் ஜெனரலான வின்ட்ஜின்கெரோடை எதிரி முகாமிற்கு அனுப்பினார். யுத்த நிறுத்தத்தை ஒப்புக் கொள்ளுவது மட்டுமல்ல, அதோடு சரணாகதிக்கான நிபந்தனை களைக் கூறும்படியும் வின்ட்ஜின் கெரோடிடம் குட்டுஜோவ் சொல்லியனுப்பினார். இதற்கிடையில் தமது உதவியாளர்களை அனுப்பி, யுத்த தளவாடங்களை எவ்வளவு வேகமாகக் கிரெம் - ஜெனெய்ம் ரஸ்தாவில் அனுப்ப முடியுமோ, அவ்வளவு வேகமாக அனுப்புவதற்கு ஏற்பாடுகள் செய்யும்படியும் சொன்னார். பூரா ராணுவமும் யுத்த தளவாடங்களும் பின்னால் போய்க் கொண்டிருந்ததைக் காப்பாற்றி, முன்னால் நிலையாக நிற்க வேண்டிய பொறுப்பு, பசியாலும் களைப்பாலும் வாடிய பாக்ரேஷனின் படைப்பிரிவிற்கு ஏற்பட்டது. அதற்கு எதிராக நின்ற எதிரியின் படைப் பிரிவோ, எட்டு மடங்கு பலமானதாய் இருந்தது.

குட்டுஜோவின் சரணாகதிப் பேச்சுகள் யாரையும் எவ்விதத்திலும் கட்டுப்படுத்துபவை அல்ல என்றாலும், இந்தப் பேச்சுக்களினால் கிடைக்கும் அவகாசம், தமது யுத்த தளவாடங்களை அப்புறப்படுத்த உதவியாய் இருக்கும் என்று நம்பினார். முராட்டின் தவறு வெகு சீக்கிரமாகக் கண்டுபிடிக்கப்படும் என்று அவர் எதிர்ப்பார்த்தது

உண்மையாயிற்று. ஹாலாபிரென்னிலிருந்து ஷார்ன்பிரென் பதினாறு மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கேதான் அச்சமயம் நெப்போலியன் தங்கியிருந்தார். யுத்த நிறுத்தத்தைப் பற்றியும் சரணாகதியைப் பற்றியும் முராட் அனுப்பிய அறிக்கையைப் பார்த்ததும், இதில் ஏதோ சூதுஇருக்கிறது என்று அவருக்குத் தோன்றியது. அவர் உடனே பின்கண்ட கடிதத்தை முராட்டுக்கு அனுப்பினார்:-

ஷார்ன்பிரென்,
25உ ப்ரூமேர், 1805,
காலை 8 மணி.

இளவரசர் முராட்டுக்கு,

எனது அதிருப்தியை உமக்குத் தெரிவிப்பதற்கு என்னால் சரியான வார்த்தைகளைக் கண்டுபிடிக்க முடியவில்லை. எனது முன்னணி பிரிவிற்கு மட்டும்தான் நீர் தளபதியாய் இருக்கிறீர். ஆகவே என்னுடைய உத்தரவு இல்லாமல் யுத்த நிறுத்தத்திற்கு ஏற்பாடு செய்ய உமக்கு அதிகாரம் இல்லை. ஒரு படையெடுப்பினால் கிடைக்கக்கூடிய பலன்களை இழக்கக்கூடிய விதத்தில் நீர் எனக்குச் செய்கிறீர். யுத்த நிறுத்தத்தை உடனே முறித்து எதிரி மீது படையெடுப்பீராக. சரணாகதி திட்டத்தில் கையெழுத்திட்ட அந்த ஜெனரலுக்கு அப்படிச் செய்ய அதிகாரம் இல்லையென்று அவரிடம் கூறும். ருஷ்யாவின் சக்கரவர்த்தியைத் தவிர, வேறு யாருக்கும் அந்த அதிகாரம் கிடையாது.

என்றாலும், ருஷ்ய சக்கரவர்த்தி அந்த திட்டத்தை ஒப்புக் கொள்ளுவாரானால் நானும் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், இது ஒரு வெறும் தந்திரம். மேலே படையெடுத்து ருஷ்ய ராஸ்வத்தை அழிப்பீராக... அந்த ராணுவத்தின் பீரங்கிகளையும் மற்ற தளவாடங்களையும் கைப்பற்றக்கூடிய ஒரு நிலைமையில் நீர் இருக்கிறீர்.

ருஷ்ய சக்கரவர்த்தியின் மெய்க்காப்பாளர் ஒரு போலியானவர். அதிகாரம் இல்லாவிட்டால் அதிகாரிகள் என்பவர்கள் வெறும் பூஜ்யம். இந்த ஆசாமிக்கு ஒருஅதிகாரமும் கிடையாது. வியன்னா பாலத்தைக் கடக்கும்போது ஆஸ்திரியர்கள் ஏமாற்றப்பட்டார்கள். இப்பொழுது சக்கரவர்த்தியின் ஒரு மெய்க்காப்பாளனால் நீர் ஏமாற்றப்படுகிறீர்.

நெப்போலியன்.

போனபார்ட்டின் உதவியாளர் முழு பாய்ச்சலில் சவாரி செய்து, இந்த பயமுறுத்தல் கடிதத்தோடு முராட்டிடம் போனார். தமது ஜெனரல்களிடம் போனபார்ட் விட்டுவிட்டு சும்மா இருக்க

வில்லை. தாமே காவல் படைகளோடு யுத்த களத்திற்குப்போனார். அகப்படத் தயாராய் இருக்கும் எதிரியை நழுவ விட்டுவிடக் கூடாதே என்பதுதான் அவருடைய பயம். பாக்ரேஷனின் நாலாயிரம் வீரர்கள் முகாம்களில் சந்தோஷமாக கணப்பு மூட்டி குளிர் காய்ந்துகொண்டு, சென்ற மூன்று நாட்களில் முதல் தடவையாக தங்கள் கஞ்சியையும் காய்ச்சிக் கொண்டிருந்தார்கள். என்ன நடக்கப் போகிறது என்பதை அவர்களில் ஒருவர்கூட அறியவோ யூகிக்கவோ இல்லை.



இடைவிடாமல் இளவரசர் ஆண்ட்ரூ குட்டுஜோவைக் கேட்டு வந்தபடியால் கடைசியில் அவர் சம்மதம் தெரிவித்தார். அதனால் மாலை சுமார் மூன்று மணிக்கும் நான்கு மணிக்கும் இடையில், கிரந்த் என்ற இடத்திற்கு வந்து சேர்ந்து, பாக்ரேஷன் முன்பு ஆஜரானார். போனபார்ட்டின் உதவியாளன் இன்னும் முராட்படைப் பிரிவிற்கு வந்து சேரவில்லை. அதனால் சண்டை இன்னும் ஆரம்பமகாவில்லை. பாக்ரேஷனின் படைப்பிரிவில் உள்ள எவருக்கும் பொதுவான நிலைமையைப் பற்றிய விவரம் எதுவும் தெரியாது. சமாதானத்தைப் பற்றி அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டிருந்தார்கள். என்றாலும் அது சாத்தியம் என்பதை அவர்கள் நம்பவில்லை. சிலர் வரப்போகும் சண்டையைப் பற்றி பேசிக்கொண்டிருந்தார்கள். ஆனால், அந்த சண்டை சீக்கிரமாக வந்துவிடும் என்பதை அவர்கள் நம்பவில்லை. சேனாதிபதிக்கு மிகுந்த பிரியமானவரும் நம்பிக்கையான உதவியாளருமாக பால்கோன்ஸ்கி இருந்து வருவதை பாக்ரேஷன் அறிவார். அதனால் தனிப்பட்ட ஆதரவோடும் அன்போடும்அவரை வரவேற்றார். அன்றோ மறுநாளோ ஒரு சமயம் சண்டை ஆரம்பமாகலாம் என்பதை அவர் விளக்கிக் கூறினார். அவர் தம்முடன் இருப்பதோ அல்லது பின்னணிப் படையில் சேர்ந்து கொள்ளுவதோ, அவர் இஷ்டப்படி செய்யலாம் என்று அவருக்கு முழு உரிமை கொடுத்தார்..பின்னணியில் இருப்பதும் ஒரு முக்கியமான வேலை என்றும், துருப்புகள் ஒழுங்காய் பின் வாங்குவதை கவனிக்க வேண்டியது அவசியம் என்றும் அவர் சொன்னார்.

'என்றாலும் இன்று சண்டை நடப்பது அநேகமாய் சாத்தியமில்லை' என்ற இளவரசர் ஆண்ட்ரூவுக்கு மனச்சாந்தி அளிக்க விரும்புவது போல பாக்ரேஷன் பேசினார்.

'ஏதோ ஒரு மெடலைப் பெறுவதற்காக இங்கும் அங்கும் போய்க் கொண்டிருக்கிற ஒரு சாதாரண டாம்பீக உதவியாளராக அவர் இருப்பாரானால், பின்னணியில் இருந்தால்கூட அந்தப் பரிசு அவருக்குக் கிடைக்கும். ஆனால் அவர் என்னுடன் தங்க விரும்புவாரானால் தங்கட்டும்... அவர் ஒரு வீரமுள்ள அதிகாரியாய் இருந்ததால் இங்கே அவர் உபயோகமாய் இருப்பார்' என்று பாக்ரேஷன் நினைத்தார். இளவரசர் ஆண்ட்ரூ பதில் எதுவும் சொல்லாமல், ராணுவ வியூகம் எப்படி இருக்கிறது என்பதை அறிந்து வர தமக்கு அனுமதி கொடுக்கும்படி கேட்டார். தமக்கு ஏதாவது உத்தரவு கொடுக்கப்படுமானால் அதை நிறைவேற்றி வைப்பதற்கு அதைத் தெரிந்துகொள்ளுவது நல்லதென்று நினைத்தார். அப்பொழுது அங்கு அலுவலில் இருந்த அழகான அதிகாரி, நன்றாய் உடையணிந்து தமது முதல் விரலில் வைர மோதிரம் போட்டிருந்தார். அவருக்குப் பிரஞ்சு மொழியை மோசமாய்த்தான் பேசத் தெரியும். என்றாலும் பிரஞ்சு மொழியைப் பேசுவதில் அவருக்கு மிகுந்த ஆர்வமுண்டு. இளவரசர் ஆண்ட்ரூவைத் தாம் அழைத்துச் சென்று காட்டுவதாக அவர் கூறினார்.

எல்லா இடங்களிலும் மழையில் நனைந்த அதிகாரிகள் மனச் சோர்வான முகங்களோடு, எதையோ தேடிக்கொண்டிருப்பதைப் போலக் காணப்பட்டார்கள். சிப்பாய்கள், பெஞ்சுகள், கதவுகள், வேலிகள் ஆகியவற்றைப் பக்கத்து கிராமங்களிலிருந்து இழுத்து வந்து கொண்டிருந்தார்கள்.

'இங்கே பாரும், இளவரசே. இந்தப் பேர்வழிகளை நாம் நிறுத்தவே முடியாதுபோல் இருக்கிறதே' என்று சொல்லி அந்த உதவியாளர் அங்கிருந்த சிப்பாய்களைச் சுட்டிக்காட்டினார். 'இந்த அதிகாரிகள் அவர்களை அடக்கி வைத்திருப்பதில்லை. அங்கே பாரும்' என்று சொல்லி அங்கிருந்த ஒரு கடைக்காரனின் கூடாரத்தைக் காட்டினார். 'அந்தக் கூடாரத்தில் எல்லாரும் கூடி உட்கார்ந்துகொண்டிருப்பார்கள். இன்று காலையில்தான் அவர்களையெல்லாம் வெளியேற்றினேன். இப்பொழுது பாரும். மறுபடியும் கூடாரம் நிறைந்திருக்கிறது. இளவரசே, நான் அங்கே போய் அவர்களைச் சிறிது மிரட்டவேண்டும். ஒரு வினாடிகூடப் பிடிக்காது.

'ஆம், நாம் அங்கே போவோம். எனக்கும் கொஞ்சம் ரொட்டியும் பால் ஆடைக் கட்டியும் வேண்டும்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. அவருக்குச் சாப்பிடுவதற்கு அவகாசம் கிடைக்கவே இல்லை.

'இதை ஏன் முன்னமே சொல்லவில்லை, இளவரசே? நான் ஏதாவது கொடுத்திருப்பேனே.'

அவர்கள் குதிரையை விட்டு இறங்கிக் கூடாரத்திற்குள் போனார்கள். களைப்படைந்தும் சிவந்தும் போயிருந்த பல அதிகாரிகள் மேசைகளின் முன்பு அமர்ந்து சாப்பிட்டுக்கொண்டும் குடித்துக்கொண்டும் இருந்தார்கள்.

'கனவான்களே, இதற்கென்ன அர்த்தம்?' என்றார் உதவியாளர். அவருடைய குரலில் கண்டிப்புக் காணப்பட்டது. இம்மாதிரிப் பல தடவைகளில் பேசியது போலவும் அவர் குரல் இருந்தது. 'உங்கள் இடத்தை விட்டு நீங்கள் இம்மாதிரி வரக்கூடாது என்பது உங்களுக்குத் தெரியும். ஒருவரும் தங்கள் ஸ்தானங்களை விட்டுப் போகக் கூடாதென்று இளவரசர் உத்தரவிட்டிருக்கிறார்.' ஒரு மெலிந்த அழுக்கடைந்த பீரங்கி அதிகாரி ஜோடுகள் இல்லாமல் கால் உறைகள் மட்டும் அணிந்துகொண்டிருந்தாதர். தமது ஜோடுகளை உலர வைக்கும்படி அந்தக் கடைக்காரனிடம் கொடுத்திருந்தார். இவர்கள் கூடாரத்தினுள் நுழைந்ததும் அவர் எழுந்து புன்முறுவல் காட்டினார். அவருடைய புன்முறுவல் அவருடைய சங்கடத்தைக் காட்டியது.

அவரைப் பார்த்து உதவியாளர் பேசினார்: 'என்ன கேப்டன் டூஷின், இம்மாதிரிச் செய்வது உமக்கு வெட்கமாய் இல்லையா? பீரங்கி அதிகாரிதான் மற்றவர்களுக்கு வழிகாட்டியாய் இருக்கவேண்டுமென்று ஒவ்வொருவரும் நினைப்பார்கள். ஆனால் இங்கேயோ, நீர் ஜோடுகள் இல்லாமல் இருக்கிறீர். அபாய மணி அடிக்குமானால், ஜோடுகள் இல்லாமல் இருக்கும் உம்முடைய நிலைமை அழகாய்த் தான் இருக்கும். (அந்த உதவியாளர் குறுநகை காட்டினார்.) தயவு செய்து, கனவான்களே, நீங்கள் எல்லாரும் உங்கள் இடங்களுக்கு போங்கள். எல்லாரும், எல்லாரும் போங்கள்.' அவருடைய பேச்சு உத்தரவிடுவதைப்போல் இருந்தது.

பீரங்கி அதிகாரி டூஷினைப் பார்த்ததும் இளவரசர் ஆண்ட்ரூ தம்மை அறியாமலே இளநகை கொண்டார். அந்த டூஷின் என்பவர் மௌனமாக, ஆனால் சிரித்துக்கொண்டு கால் உறை போட்ட தமது கால்களை மாறி மாறி வைத்து, தமது பெரிய புத்திக் கூர்மையுள்ள கண்களால் கேள்விக்குறியோடு இளவரசர் ஆண்ட்ரூவையும் உதவியாளரையும் மாறி மாறிப் பார்த்தார்.

'ஜோடுகள் இல்லாமல் இருப்பது சௌக்கியமாய் இருக்கிறதென்று சிப்பாய்கள் சொல்லுகிறார்கள்' என்று தமது தர்மசங்கடமான நிலைமையில் நாணத்தோடு புன்சிரிப்புக் காட்டினார் கேப்டன் டூஷின். அதை ஒரு தமாஷ் பேச்சாகச் சொல்ல விரும்பியவர் போலக் காணப்பட்டார். ஆனால், அவர் பேசி

முடிக்கும் முன்பாக அவருடைய தமாஷை யாரும் விரும்பவில்லை என்பதை உணர்ந்தார். ஆகவே அவர் மனக்குழப்பம் அடைந்தார்.

'தயவுசெய்து உங்களுடைய இடங்களுக்குப் போங்கள்' என்று தம்முடைய கண்டிப்பைக் காப்பாற்றும் வகையில் உதவியாளர் சொன்னார்.

இளவரசர் ஆண்ட்ரூ மீண்டும் அந்தப் பீரங்கி அதிகாரியின் சிறு உருவத்தை நோக்கினார். அவரிடம் ஏதோ ஒரு தனித்த விசேஷம் இருந்தது. அவர் சிப்பாயாகத் தோன்றவில்லை. ஒரு விளையாட்டுப் புருஷராகத் தோன்றினார். அதோடு மிகுந்த கவர்ச்சிகரமாகவும் இருந்தார்.

உதவியாளரும் இளவரசர் ஆண்ட்ரூவும் தங்கள் குதிரைகளில் ஏறித் தட்டிவிட்டார்கள்.

கிராமத்தைக் கடந்து அவர்கள் போனார்கள். போகிற வருகிற வெவ்வேறு பட்டாளங்களைச் சேர்ந்த சிப்பாய்களையும் அதிகாரிகளையும் கடந்து அவர்கள் சென்றார்கள். கடைசியாக இடது பக்கத்தில் சில அரண்கள் வெட்டப்பட்டுக், குழிகளில் இருந்து எடுக்கப்பட்ட களிமண்ணை மேலே கொட்டியிருந்தார்கள். குளிர்காற்றைப் பொருட்படுத்தாமல், சட்டைகளை மட்டும் அணிந்துகொண்டு, பல சிப்பாய்ப் பட்டாளங்கள் இந்த அரண் வெட்டும் வேலையை எறும்புகளைப் போலக் கூடிக்குவிந்து நின்று செய்துவந்தார்கள். ஆட்களின் உருவங்கள் தெரியவில்லை. ஆனால் மண்வெட்டிகளிலிருந்து வீசப்படும் சிவப்புக் களிமண் விடாமல் தொடர்ச்சியாக மேலேவந்து விழுந்துகொண்டிருந்தது. இதற்குப் பின்னால் சில டஜன் கணக்கான சிப்பாய்கள் வந்துகொண்டும் ஓடிக்கொண்டும் இருந்தார்கள். இந்த இடத்தில் கக்கூஸ்களினால் ஏற்பட்ட துர்நாற்றத்திலிருந்து தப்பித்துக்கொள்ள அவர்கள் மூக்குகளைப் பிடித்துக்கொண்டு குதிரைகளைத் தட்டிவிட்டார்கள்.

'முகாம் வாழ்க்கையில் ஏற்படும் பலன்களில் இது ஒன்று, இளவரசே!' என்றார் உதவியாளர்.

எதிரே இருந்த குன்றின் மீது அவர்கள் சவாரி செய்தார்கள். அங்கிருந்து பிரஞ்சுக்காரர்களைப் பார்க்கலாம். இளவரசர் ஆண்ட்ரூ அங்கே நின்று ராணுவ வியூக நிலைமையைக் கூர்ந்து கவனித்தார்.

அந்தக் குன்றின் உச்சியிலிருந்த ஒரு இடத்தை உதவியாளர் சுட்டிகாட்டி, 'அதுதான் நமது பீரங்கிப் படை. ஜோடுகள் இல்லாமல் நாம் பார்த்தோமே ஒரு அதிசயமான பேர்வழி, அவர்தான் அதற்கு அதிகாரி. அங்கிருந்து நாம் ஒவ்வொன்றையும் பார்க்கலாம். நாம் அங்கே போவோம், இளவரசே' என்றார்.

'உமக்கு மிகுந்த வந்தனங்கள். நானே தனியாய்ப் போவேன். தயவுசெய்து நீர் கஷ்டப்படவேண்டாம்' என்று அந்த உதவியாளரை விலக்கி விடுவதற்காக இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

அந்த உதவியாளர் பின்னால் தங்கி நிற்க, இளவரசர் ஆண்ட்ரூ தனியாய்ச் சவாரி செய்தார்.

எவ்வளவுக்கு எவ்வளவு முன்னணிக்கும் எதிரிக்கு சமீபமாகவும் அவர் சென்றாரோ, அவ்வளவுக்கு அவ்வளவு துருப்புகள் அதிகமான ஒழுங்குமுறையுடனும் மிக்க மகிழ்ச்சியுடனும் காணப்பட்டார்கள். அன்று காலையில் பிரஞ்சுக்காரர்களிடம் இருந்து ஏழுமைல் தூரத்தில், அந்த ஜெனெய்ம் ரஸ்தாவில், அவர் வந்தபோது அவர்கண்ட தளவாட வண்டிகளின் வரிசைகளில்தான் மிக அதிகமான அலங்கோலத்தையும் மனச்சோர்வையும் அவர் கண்டார். கிரந்த் என்ற இடத்தில் கூடக் கொஞ்சம் கவலையும் பீதியும் காணப்பட்டன. ஆனால், பிரஞ்சு அணி வரிசைக்கு இளவரசர் ஆண்ட்ரூ நெருங்க நெருங்கத் தமது துருப்புகளின் தைரியமும் நம்பிக்கையும் அதிகமாய்க் காணப்பட்டன. சிப்பாய்கள் தங்களுடைய நீண்ட வெளிச்சட்டைகளோடு வரிசை வரிசையாய் நின்றார்கள். சார்ஜண்ட் மேஜர்களும் கம்பெனி அதிகாரிகளும் அவர்களை எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு வரிசையிலும் நின்ற கடைசி சிப்பாயை விலாவில் விரலினால் குத்திக் கையை உயர்த்தும்படி சொன்னார்கள். அந்த இடத்தில் பரவி முகாம் போட்டிருந்த சிப்பாய்கள் கட்டைகளை இழுக்கவும் சிறிய விடுதிகளைக் கட்டுவதுமாய் இருந்தார்கள். எல்லாரும் சிரித்துக் கொண்டும், களிப்போடு பேசிக்கொண்டும், கனல் மூட்டத்தைச் சுற்றி உடை அணிந்தோ அணியாமலோ குளிர் காய்ந்துகொண்டும், சட்டைகளையும் கால் பட்டிகளையும் உலர்த்திக்கொண்டும், ஜோடுகளையோ வெளிச்சட்டைகளையோ தைத்துக்கொண்டும், தேநீர் போடும் பாத்திரங்களையோ கஞ்சி போடும் பாத்திரங்களையோ சுற்றி நின்றுகொண்டும் இருந்தார்கள். ஒரு கம்பெனியில் டின்னர் தயாராய் இருந்தது. பாய்லரில் இருந்து வரும் நீராவியை ஆவலோடு சிப்பாய்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சமைத்த பதார்த்தத்தை ஒரு மரத்தட்டில் வைத்துக் குடியிருப்பு சார்ஜண்ட ஒரு அதிகாரியிடம் கொண்டு போனார். அந்த அதிகாரி தமது விடுதியின் முன்பு ஒரு மரக்கட்டையில் அமர்ந்திருந்தார். அவர் ருசி பார்த்து அங்கீகரித்த பின்புதான் உணவைச் சிப்பாய்களுக்குக் கொடுக்கலாம். அந்த அங்கீகரிப்பை எதிர்நோக்கிச் சிப்பாய்கள் நின்றுகொண்டிருந் தார்கள்.

மற்றொரு கம்பெனி அதிருஷ்டம் வாய்ந்தது. ஏனெனில், எல்லாக் கம்பெனிகளுக்கும் வாட்கா மது கிடைப்பதில்லை. விரிந்த தோள்களும் முகத்தில் அம்மைத் தழும்புகளும் கொண்ட ஒரு சார்ஜண்ட் மேஜர், கையில் ஒரு கூஜா நிறைய வாட்கா வைத்துக்கொண்டு, தன்னிடம் நீட்டப்படுகிற டப்பி மூடிகளில் நிரப்பிக்கொண்டிருந்தார். அவரைச் சுற்றிச் சிப்பாய்கள் கூடி நின்றார்கள். வாட்கா பெற்ற சிப்பாய்கள் அந்த மூடிகளைப் பய பக்தியோடு தங்கள் உதடுகளில் வைத்து உறிஞ்சினார்கள். உறிஞ்சிய பின்பு வாட்காவைத் தங்கள் வாய்களில் வைத்து உரசிக்கொண்டு, பின்னால் குடித்து குளிர்விட்டத் தோற்றங்களோடு உதடுகளை நக்கிக்கொண்டு, தங்களுடைய கோட்டுகளின் கைச்சட்டைகளால் உதடுகளைத் துடைத்துக்கொண்டு அங்கிருந்து போனார்கள். தங்கள் சொந்த இடங்களில், சமாதானக் காலத்தில் ராணுவ முகாம்களில் இருப்பதைப்போல, அவர்கள் முகங்களில் அமைதி காணப்பட்டது. எதிரிக்கு முன்பாகத் தாங்கள் இருப்பதாகவோ, ஆரம்பமாகப் போகும் யுத்தத்தில் குறைந்தது தங்களில் பாதிப்பேர் மாண்டுபோவார்கள் என்பதை அறிந்ததாகவோ அவர்கள் காணப்படவில்லை. ஒரு சாஸியர் பட்டாளத்தைக் கடந்த பின்பு கைக்குண்டு சிப்பாய்களின் வரிசைகளுக்கு இளவரசர் ஆண்ட்ரூ வந்தார். அங்குள்ள அருமையான வாலிபர்களும், இதேமாதிரி சமாதான காலத்துச் செய்கைகளிலேயே ஈடுபட்டிருந்தார்கள். பட்டாளத்தின் கமாண்டருடைய விடுதி அருகில் இருந்தது. மற்றவைகளை விட உயரமானதாகவும் வித்தியாசமானதாகவும அது காணப்பட்டது. அதன் பக்கத்தில் இளவரசர் ஆண்ட்ரூ வந்தபோது, கைக்குண்டு வீரர்களின் ஒரு அணியையும், அவர்களுக்கு முன்னால் ஒரு நிர்வாண மனிதன் கிடப்பதையும் கண்டார். இரண்டு சிப்பாய்கள் அவனைப் பிடித்துக் கொண்டார்கள். வேறு இரண்டு சிப்பாய்கள் மாறி மாறி அவன் முதுகில் சவுக்கால் அடித்துக்கொண்டிருந்தார்கள். அந்த மனிதன் பரிதாபமாய்க் கூச்சலிட்டான். ஒரு தடித்த மேஜர் மேலும் கீழும் உலாவிக் கொண்டு அந்தக் கூச்சல்களைக் கொஞ்சமும் கவனிக்காமல் தாம் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார். ‘திருடுவது ஒரு சிப்பாய்க்கு வெட்கக் கேடு. நாணயமாகவும் கண்ணியமாகவும் தைரியமாகவும் ஒரு சிப்பாய் இருக்கவேண்டும். ஆனால், அவன் தன் தோழர்களிடமே திருடுவதென்றால் அவனிடம் கண்ணியம் என்பது கிடையாது. அவன் ஒரு அயோக்கியன். அடியுங்கள், அடியுங்கள்.’

ஆகவே சவுக்கடி சத்தங்களும் பரிதாபமான கூக்குரல்களும் தொடர்ந்து கேட்டுக்கொண்டே இருந்தன.

'அடியுங்கள், அடியுங்கள்' என்றார் மேஜர்.

ஆச்சரியமும் வருத்தமும் முகத்தில் தோன்ற ஒரு வாலிப அதிகாரி அந்த அடிபடுபவனைப் பார்த்து, அங்கிருந்து வேறு பக்கமாகத் திரும்பிக், குதிரை மீது போய்க்கொண்டிருந்த இளவரசர் ஆண்ட்ரூவைக் கேள்விக் குறியோடு நோக்கினார்.

முன்னணிக்கு வந்ததும் இளவரசர் ஆண்ட்ரூ அதன் வழியாக நீளமாகச் சவாரி செய்தார். முன்னணியில் இடது பக்கவாட்டிலும் வலது பக்கவாட்டிலும், எதிரி துருப்பு வரிசைக்கும் நமது துருப்பு வரிசைக்கும் இடையில் தூரம் அதிகமாய் இருந்தது. ஆனால், மத்தியில் சமாதான வெள்ளைக்கொடி பிடித்த தூதர்கள் அன்று காலையில் கடந்துவந்த இடத்தில் இடைவெளி ரொம்பக் குறைவாய் இருந்தது. இரு வரிசைகளிலும் உள்ளவர்களின் முகங்களை, ஒருவருக்கொருவர் நன்றாய்ப் பார்க்கவும் பேசவும் கூட சாத்தியம் ஆகிறபடி அவ்வளவு நெருக்கமாய் இருந்தது. முன்னணியில் இரண்டு வரிசைகளிலும் இருந்த மறியல் சிப்பாய்களோடு, ஊர்க்காரர்களும் கலந்து நின்று சிரித்துக் கொண்டும் பேசிக்கொண்டும், விசித்திரமான அந்நிய விரோதிகளை விறைத்துப் பார்த்துக் கொண்டும் நின்றார்கள்.

மறியல் வரிசைக்கு வேடிக்கை பார்ப்பவர்கள் வரக்கூடாது என்று தடுத்திருந்தும், அன்று காலை முதல் வேடிக்கை பார்க்க வருகிறவர்களை அதிகாரிகளால் துரத்தமுடியவில்லை. ஒரு ஆச்சரிமான வஸ்துவைக் காட்டும் வேடிக்கைக்காரர்களைப் போல, மறியல் வரிசையில் நின்ற சிப்பாய்கள் பிரஞ்சுக்காரர்களைப் பார்க்கும் ஆசையை இழந்துவிட்டார்கள். அதற்குப் பதிலாக வேடிக்கை பார்ப்பவர்களிடம் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அலுப்புத் தட்டிவிட்டது. அதிலிருந்து விடுபடுவதற்குக் காத்துக் கொண்டிருந்தார்கள். அங்கு வந்து சேர்ந்த இளவரசர் ஆண்ட்ரூ பிரஞ்சுக்காரர்களைப் பார்ப்பதற்காகச் சவாரியை நிறுத்தினார்.

'பார், அங்கே பார்' என்று ஒரு சிப்பாய் மற்றொருவருக்குச் சொன்னார். ஒரு ருஷ்ய சிப்பாய் ஒரு அதிகாரியோடு மறியல் வரிசைக்குப் போய், ஒரு பிரஞ்சு கைக்குண்டு வீரரிடம் வேகமாகவும் பரபரப்பாகவும் பேசிக்கொண்டிருந்தார். இதைத்தான் அந்தச் சிப்பாய் காட்டினார். 'அவன் உளறுவதைக் கேள். அழகாய் இருக்கிறது அல்லவா? பிரஞ்சுக்காரர்கள் அவனுடன் செய்யக்கூடியதெல்லாம் அது ஒன்றுதான். இப்பொழுது பார், சிடாராவ்.'

'ஒரு வினாடி பொறு. இப்பொழுது கவனி, அது என்ன அழகாய் இருக்கிறது!' என்றான் சிடாராவ். பிரஞ்சு மொழி பேசுவதில் அவன் கெட்டிக்காரன் என்று பெயர் எடுத்திருந்தான்.

இம்மாதிரி சிரித்துக்கொண்டு அவர்கள் காட்டிய பேர்வழி டோலாகாவ் என்பவராகும். இளவரசர் ஆண்ட்ரூ அவரை அடையாளம் புரிந்துகொண்டு, அவர் என்ன சொல்லுகிறார் என்பதைக் கேட்பதற்காக அங்கே நின்றார். இடது பக்கவாட்டில் டோலாகாவின் பட்டாளமும் அதன் கேப்டனும் இருந்தார்கள். அங்கிருந்துதான் டோலாகாவ் இந்த இடத்திற்கு வந்தார்.

'சரி, மேலே பேசு, மேலே பேசு' என்று அந்த அதிகாரி தூண்டிவிட்டுக்கொண்டு, முன்னால் குனிந்து ஒரு வார்த்தையையும் விட்டுவிடாமல் கேட்பதற்கு முயற்சித்தார். ஆனால் அவருக்கு ஒன்றும் புரியவில்லை. 'இன்னும் கொஞ்சம், தயவுசெய்து இன்னும் கொஞ்சம். அவன் என்ன சொல்லுகிறான்?'

கேப்டனின் கேள்விக்கு டோலாகாவ் பதில் சொல்லவில்லை. பிரஞ்சு கைக்குண்டு வீரனுடன் ஒரு காட்டமான விவாதத்தில் அவர் இறங்கினார். படையெடுப்பைப் பற்றியே அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆஸ்திரியர்களையும் ருஷ்யர்களையும் வித்தியாசம் தெரியாமல் குழப்பிக்கொண்டு உல்ம் என்ற இடத்தில் ருஷ்யர்கள் சரணாகதி அடைந்து ஓடிவிட்டார்கள் என்று இந்த பிரஞ்சுக்காரன் சொல்லிக்கொண்டிருந்தான். அதை எதிர்த்து, ருஷ்யர்கள் சரணடையவில்லை என்றும் பிரஞ்சுக்காரர்களை முறியடித்துத் தோற்கடித்தார்கள் என்றும் டோலாகாவ் விளக்கிக்கொண்டிருந்தார்.

'உங்களை இங்கிருந்து விரட்டும்படி எங்களுக்கு உத்தரவாயிருக்கிறது. உங்களை இங்கிருந்து விரட்டியே தீருவோம்' என்று டோலாகாவ் சொன்னார்.

'நீயும் உன்னுடைய கோசாக்குகளும் யுத்தக் கைதிகளாக எல்லாருமே அகப்பட்டுக் கொள்ளாமல் ஜாக்கிரதையாய் இருந்துகொள்ளுங்கள்' என்றான் அந்தப் பிரஞ்சு கைக்குண்டு வீரன்.

கேட்டுக்கொண்டிருந்த பிரஞ்சுக்காரர்களும் அங்கு நின்றுகொண்டிருந்த வேடிக்கை பார்ப்பவர்களும் சிரித்தார்கள்.

'சுவோராவ், உங்களை நாட்டியம் ஆடும்படி வைத்ததைப்போல நாங்களும் செய்வோம்' என்றார் டோலாகாவ்.

'அவன் என்ன கதை பண்ணிக்கொண்டிருக்கிறான்?' என்று ஒரு பிரஞ்சுக்காரன் கேட்டான்.

பழைய யுத்தம் ஒன்றை அவர் குறிப்பிடுவதாக யூகித்து, 'அது புராதன சரித்திரம். மற்றவர்களுக்குப் பாடம் கற்பித்த மாதிரி உங்கள் சுவோராவுக்கும் எங்கள் சக்கரவர்த்தி பாடம் கற்பிப்பார்' என்றான்.

'போனபார்ட்...' என்று டோலாகாவ் ஆரம்பித்தார். ஆனால் அந்தப் பிரஞ்சுக்காரன் இடைமறித்தான்.

'போனபார்ட் அல்ல. அவர்தான் சக்கரவர்த்தி' என்று கோபமாக அவன் கத்தினான்.

'உங்கள் சக்கரவர்த்தியின் தோலை அந்தப் பிசாசு உறிக்குமாக.'

டோலாகாவ் சிப்பாய்களின் ருஷ்ய மொழியில் ஆபாசமாக அவனைப் பார்த்துத் திட்டிவிட்டுத் துப்பாக்கியைத் தோளில் மாட்டிக் கொண்டு அங்கிருந்து அகன்றார்.

'நாம் போகலாம், ஐவான் லுக்கிச்' என்று கேப்டனைப் பார்த்துச் சொன்னார்.

'ஆ, பிரஞ்சு மொழி பேசுவது அப்படித்தான்' என்று மறியல் சிப்பாய்கள் சொன்னார்கள். 'இப்பொழுது நீ முயற்சி செய்து பார், சிடாராவ்'.

பிரஞ்சு சிப்பாய்களைச் சிடாராவ் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு, 'காரி, மாலா, டாபா, சாபி, மட்டர், காஸ்கா' என்று அர்த்தமற்ற சத்தங்களை உளற ஆரம்பித்தான். தன்னுடைய குரலில் ஒரு கடினமான உச்சரிப்பை அவன் உபயோகித்தான்.

'ஹோ, ஹோ, ஹோ... ஹா, ஹா, ஹா, ஹா... ஹு, ஹு' என்று சிப்பாய்களிடமிருந்து தமாஷ் சிரிப்புகள் கிளம்பின. தங்களை அறியாமலேயே பிரஞ்சுக்காரர்களும் அம்மாதிரி சிரித்தார்கள். அதைப் பார்த்தால், துப்பாக்கிகளைத் தூர எறிந்துவிட்டு வெடி மருந்துகளைக் கொளுத்திவிட்டு, எல்லாரும் சீக்கிரமாக வீடு திரும்புவது ஒன்றுதான் பாக்கி என்பதுபோல் இருந்தது.

ஆனால், துப்பாக்கிகள் கெட்டிக்கப்பட்டே இருந்தன. வீடுகளில் செய்யப்பட்ட துவாரங்களும் அரண்களும் முன்போலவே பயமுறுத்தலோடு விளங்கின. இரு கட்சிகளின் பீரங்கிகளும் முன்போலவே ஒன்றையொன்று எதிர் நோக்கிக் கொண்டிருந்தன.

# 2

## 16

வலது பக்கவாட்டிலிருந்து இடது பக்கவாட்டுவரை அணிவகுப்பு அனைத்தையும் சுற்றிப் பார்த்துவிட்டு, பீரங்கிகள் வைக்கப்பட்டிருந்த குன்றின் உச்சிக்கு

இளவரசர் ஆண்ட்ரூ சவாரி செய்தார். யுத்த அரங்கம் முழுவதையும் அங்கிருந்து பார்க்கலாம் என்று உதவியாளர் இளவரசர் ஆண்ட்ரூவுக்குச் சொல்லி யிருந்தார். உச்சிக்குப் போனதும் அங்கு தயாராய் வைக்கப்பட்டிருந்த நான்கு பீரங்கிகளுக்குப் பின்பாக அவர் குதிரையை விட்டு இறங்கினார். பீரங்கிகளுக்கு முன்பாக ஒரு சிப்பாய் பாரா கொடுத்துக் கொண்டிருந்தான். இவர் அங்குபோனதும் அந்தப் பாராக்காரன் நின்று சல்யூட் அடித்தான். இவர் கையைக் காட்டிய பின்பு மீண்டும் அவன் நிதானமான, ஒரே மாதிரியான பாரா நடையை ஆரம்பித்தான். பீரங்கிகளுக்குப் பின்னால் அவைகளின் வண்டிகள் நின்றுகொண்டிருந்தன. அவற்றிற்குப் பின்னால் தடுப்பு வேலிகள் கயிறுகளினால் கட்டப்பட்டிருந்தன. அங்கே பீரங்கிப் படையைச் சேர்ந்தவர்கள் குளிர் காயும் நெருப்பு மூட்டங்கள் எரிந்து கொண்டிருந்தன. இடது பக்கம் முன்னணியில் நிறுத்தி வைக்கப் பட்டிருந்த ஒரு பீரங்கிக்குப் பக்கத்தில் புதிதாய்க் கட்டப்பட்ட ஒரு சிறிய விடுதி இருந்தது. அந்த விடுதியிலிருந்து அதிகாரிகள் ஆவலோடு பேசிக்கொண்டிருந்த சத்தங்கள் கேட்டுக் கொண்டிருந்தன.

அந்த இடத்திலிருந்து ருஷ்ய அணிவகுப்பு முழுவதையும் எதிரியின் அணிவகுப்பில் பெரும்பகுதியையும் பார்க்கலாம் என்பது உண்மையே. அதற்கு எதிராக இருந்த குன்றின் உச்சியில் ஷார்ன்கிராபெர்ன் என்ற கிராமம் தோன்றியது. அதற்கு இடது பக்கத்திலும் வலது பக்கத்திலுமாக மூன்று இடங்களில் பிரஞ்சுத் துருப்புகள் நெருப்பு மூட்டிக் குளிர்காய்ந்து கொண்டிருந்தார்கள். பிரஞ்சுப் படையின் பெரும்பகுதி அந்தக் குன்றிற்குப் பின்னால் இருப்பதாகத் தோன்றியது. அந்தக் கிராமத்தின் இடது பக்கத்தில் புகைமண்டலத்திற்கிடையே பீரங்கிப் படைமாதிரி ஒன்று தோன்றியது. வெறும் கண்களால் தெளிவாக அதைப் பார்ப்பதற்கு முடியாமல் இருந்தது. தமது வலது பக்கவாட்டுத் துருப்புகள் குன்றின் சரிவில் பிரஞ்சு வியூகத்தை அமுக்கக் கூடிய விதத்தில் நிறுத்தப்பட்டிருந்தார்கள். காலாட்படை வீரர்கள் அங்கிருந்தார்கள். இன்னும் கொஞ்சம் தூரத்தில் குதிரை வீரர்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தார்கள். மத்தியில் கேப்டன் டூஷினுடைய பீரங்கிப் படை நின்றது. அங்கிருந்துதான் இளவரசர் ஆண்ட்ரூ படை அமைப்பைப் பார்த்துக்கொண்டிருந்தார். அங்கிருந்துதான் கீழே உள்ள ஓடைக்குப் போகவும் வரவும் சுலபமான வழி ஏற்பட்டிருந்தது. அந்த ஓடை தான் எதிரில் இருந்த ஷார்ன் கிராபெர்ன் என்ற கிராமத்திற்கும் நமக்கும் மத்தியில் ஓடிக்கொண்டிருந்தது. இடது பக்கம் இருந்த நமது துருப்புகள் ஒரு

சிறிய காட்டிற்குச் சமீபத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. அங்கே அவர்கள் மரங்களை வெட்டிக்கொண்டும், குளிர்காய நெருப்புகளை மூட்டிக்கொண்டும் இருந்தார்கள். பிரஞ்சு வியூகம் நம்மைவிடப் பரந்ததாய் இருந்தது. சுலபமாக நமது இரண்டு பக்கவாட்டுகளையும் அவர்கள் வளைந்துகொள்ள முடியும் என்பது தெளிவாய்த் தெரிந்தது. நம்முடைய வியூகத்திற்குப் பின்னால் ஒரு செங்குத்தான, ஆழமான பள்ளத்தாக்கு இருந்தது. ஆகவே நமது குதிரைப் படையோ பீரங்கிப் படையோ பின் பக்கமாகப் பின்வாங்குவது என்பது கஷ்டமான காரியம். இளவரசர் ஆண்ட்ரூ தமது குறிப்புப் புத்தகத்தை எடுத்து, ஒரு பீரங்கி மீது சாய்ந்துகொண்டு, படை வியூகங்களைப் பற்றிப் படம் ஒன்று வரைந்தார். இரண்டு விஷயங்களைப் பற்றிச் சில குறிப்புகள் எழுதிக்கொண்டார். அவற்றைப் பாக்ரேஷனிடம் தெரிவிக்க வேண்டும் என்பது அவருடைய கருத்து. முதலில் எல்லாப் பீரங்கிப் படைகளையும் நடு மத்தியில் கொண்டுவரவேண்டும்; குதிரைப்படையைப் பள்ளத்தாக்கின் மற்றொரு பக்கத்திற்குக் கொண்டு போகவேண்டும் என்பதே அவரின் கருத்துகள். எப்பொழுதும் அவர் சேனாதிபதியின் பக்கத்திலேயே இருந்துவந்து, துருப்புகளின் நடமாட்டங்களைப் பற்றியும் உத்தரவுகளைப் பற்றியும் அறிந்துவந்தார். பழைய யுத்தங்களின் சரித்திரப் பூர்வமான விவரங்களை இடைவிடாமல் கற்றுவந்தார். எனவே, வரப்போகும் போராட்டத்தில் எம்மாதிரி யுத்தம் நடக்கும் என்பதைத் தம்மை அறியாமல் தாமே மனதிற்குள் யூகம் செய்யலானார். முக்கியமாக எம்மாதிரி நடக்கக்கூடும் என்பவை அவர் மனக்கண் முன்னால் தோன்றின: 'எதிரி வலது பக்கவாட்டைத் தாக்கினால், கீப் கைக்குண்டு வீரர்களும் பாடோல்ஸ்க் சாஸியர்களும் இடத்தை விடாமல் காத்துநின்று, மத்தியிலிருந்து உதவி வருகிற வரையில் போராடவேண்டும். அம்மாதிரி விஷயத்தில் குதிரைவீரர்கள் ஒரு பக்கவாட்டு எதிர்த் தாக்குதலை வெற்றிகரமாகச் செய்யமுடியும். எதிரிகள் நமது மத்திய பாகத்தைத் தாக்குவார்களானால், இந்த மத்திய பாகத்திலேயே உயரமான இடத்தில் பீரங்கிப் படை அமைந்திருப்பதால், இடது பக்கவாட்டுத் துருப்புகளை அதன் பாதுகாப்பைக் கொண்டு பள்ளத்தாக்கிற்குப் பின்வாங்கும்படி செய்துவிடலாம்' இம்மாதிரியாக அவர் நினைத்துக் கொண்டிருந்தார். பீரங்கிக்குப் பின்னால் அவர் நின்றுகொண்டிருந்த நேரம் முழுக்க, அந்த விடுதியிலிருந்து வந்த அதிகாரிகளின் குரல்கள் கேட்டுக்கொண்டே இருந்தன. ஆனால், அவர்கள் பேசுவதில் ஒரு வார்த்தை கூடச் சரியாகப் புரியவில்லை. திடீரென்று அந்த

விடுதியிலிருந்து ஒரு குரல் பலமாகவும் சிரத்தையோடும் பேசுவதாகத் தோன்றியபடியால் அதைக் கவனித்துக் கேட்டார்.

'இல்லை, நண்பரே' என்று ஒரு இனிமையான, இளவரசர் ஆண்ட்ரூவுக்குப் பழக்கமான குரல் சொல்லியது. 'நான் என்ன சொல்லுகிறேன் என்றால், மரணத்திற்குப் பின்னால் என்ன நடக்கும் என்பதை நாம் தெளிவாக அறிந்துகொள்ளக் கூடுமானால், நம்மில் யாவரும் அதைப்பற்றிப் பயப்படவே மாட்டார்கள். அதுதான் விஷயம், நண்பரே.'

மற்றொரு வாலிபமான குரல் குறுக்கிட்டது. 'பயமோ இல்லையோ, எப்படியும் மரணத்திலிருந்து தப்பமுடியாது.'

'அது எப்படியானாலும் மரணத்தைக் கண்டு ஒவ்வொருவரும் பயப்படவே செய்கிறார்கள். புத்திசாலி மக்களே' என்று மூன்றாவது குரல் அவர்கள் இருவரையும் இடைமறித்துப் பேசியது. 'ஆமாம், நீங்கள் பீரங்கிப் படை வீரர்கள், மிகுந்த புத்திசாலிகள் ஏனென்றால் வாட்கா, தின்பண்டங்கள் ஆகிய எல்லாவற்றையும் உங்களுடன் எடுத்துச் செல்லலாம்.'

காலாட்படை அதிகாரியின் குரல் போலத் தோன்றிய அவர் சிரித்தார்.

'ஆம், ஒவ்வொருவருக்கும் பயம்தான்' என்று முதலில் பேசியவர், அந்தப் பழக்கமான குரல் உடையவர், தொடர்ந்து பேசினார். 'தெரியாததைப் பற்றி ஒவ்வொருவருக்கும் பயம்தான். அதுதான் அதிலுள்ள விஷயம். ஆத்மா வானத்திற்குப் போகிறதென்று என்ன வேண்டுமானாலும் நாம் சொல்லிக்கொள்ளலாம்... ஆனால் வானம் என்பது ஒன்றும் கிடையாது என்பதும் எல்லாம் வெட்டவெளிதான் என்பதும் நமக்குத் தெரியும்.'

மூன்றாவது பேசிய குரல் மீண்டும் பீரங்கிப்படை அதிகாரியை இடைமறித்து, 'நல்லது, உம்முடைய மூலிகை - வாட்காவை எங்களுக்குக் கொஞ்சம் கொடுக்கக் கூடாதா, டூஷின்?' என்று கேட்டது.

'ஏன், அதுதானே, ஜோடுகள் இல்லாமல் கடைக்காரன் கூடாரத்தில் நின்றுகொண்டிருந்த கேப்டனின் குரல்?' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். அந்தத் தத்துவார்த்தம் பேசிய இனிமையான குரலை மகிழ்ச்சியோடு அவர் புரிந்துகொண்டார்.

'கொஞ்சம் மூலிகை - வாட்காவா வேண்டும்? கட்டாயம் தருகிறேன்' என்றார் டூஷின். 'என்றாலும் எதிர்காலத்தைப் பற்றி நாம் அறியவேண்டுமானால்...'

அவர் பேச்சை முடிக்கவில்லை. அச்சமயம் ஆகாயத்தில் ஒரு சீறும் சத்தம் கேட்டது. அந்த சத்தம் வரவர நெருங்கிக் கொண்டும் வேகமாகவும் உரக்கச் சீறிக்கொண்டும் வந்தது. ஒரு பீரங்கிக் குண்டு திடீரென்று விடுதியின் பக்கத்தில் அசுர வேகத்தோடு தரையில் வந்து விழுந்தது. அது விழுந்த வேகத்தில் அங்கிருந்த மண்ணெல்லாம் பறந்தன. அந்த வேகத்தைத் தாங்கமுடியாததுபோல பூமி அதிர்ந்தது.

ஒரு சிறிய சுங்கானை வாயின் ஓரத்தில் வைத்துக்கொண்டு, அவருடைய அன்பான புத்திக்கூர்மையான முகம் வெளிறிப் போயிருக்க, கேப்டன் டூஷின் உடனே அந்த விடுதியை விட்டு வெளியே ஓடிவந்தார். மூன்றாவது பேசிய துணிகரமான தரைப்படை அதிகாரியும் அவருக்குப் பின்னால் வெளிவந்து, தமது கோட்டுப் பொத்தான்களை மாட்டிக்கொண்டு தமது படை இருந்த இடத்திற்கு ஓடினார்.

## 2

### 17

தமது குதிரை மீது மீண்டும் ஏறிய இளவரசர் ஆண்ட்ரூ, பீரங்கிப் படையின் பக்கமாக சிறிதுநேரம் நின்று குண்டு போட்ட பீரங்கியில் இருந்து கிளம்பிய புகையைப் பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய கண்கள் அகன்ற வெளியை வேகமாய்ச் சுற்றிப் பார்த்தன. இதுவரை அசைவற்று நின்ற பிரஞ்சுத் துருப்புகள் இப்போது அசைவதாகத் தோன்றின. அவர்களுக்கு இடது பக்கம் ஒரு பீரங்கிப்படை இருந்தது. அதற்கு மேல் காணப்பட்ட புகை இன்னும் கலையவில்லை. இரண்டு பிரஞ்சு உதவியாளர் குதிரைமீது அமர்ந்து குன்றின் மேலே வேகமாய்ப் போய்க்கொண்டிருந்தார்கள். ஒரு சிறிய ஆனால் தெளிவாய்த் தெரிந்த எதிரி அணி வரிசை குன்றிலிருந்து இறங்கி வந்துகொண்டிருந்தது. முன்னணியைப் பலப்படுத்துவதற்காக அது வந்துகொண்டிருக்கலாம். முதல் குண்டின் புகை இன்னும் கலையவில்லை. அதற்குள்ளாக மற்றொரு புகை தோன்றியது. பின்னால் குண்டின் சத்தமும் கேட்டது. ஆகவே, யுத்தம் ஆரம்பமாகிவிட்டது. இளவரசர் ஆண்ட்ரூ தமது குதிரையைத் திருப்பினார். இளவரசர் பாக்ரேஷனைக் கிரந்தில் கண்டுபிடிப்பதற்காக வேகமாய்ச் சவாரி விட்டார். தமக்குப் பின்னால் பீரங்கிப் படையின் முழக்கம் வரவரப் பலமாகவும் அடிக்கடியும் கேட்டது. ஆகவே, நமது பீரங்கிகளும் திரும்பச் சுட ஆரம்பித்துவிட்டன என்று தெரிந்தது.

அடியிலிருந்து துப்பாக்கிக் குண்டுகளின் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அங்கேதான் முன்பு சமாதானப் பேச்சுகள் நடந்துகொண்டிருந்தன.

போனபார்ட்டின் கடுமையான கடிதத்தை எடுத்துக்கொண்டு லேமாராய்ஸ் என்பவர் குதிரை மீது வேகமாய்ச் சவாரி செய்து முராட்டிடம் கொண்டுவந்து கொடுத்தார். கடிதத்தைப் பார்த்ததும் முராட்டுக்கு அவமானமாய் இருந்தது. தமது குற்றத்துக்குப் பரிகாரம் தேடுவதற்காக உடனேயே தமது துருப்புகளை ஏவி ருஷ்ய அணி வரிசையின் மத்திய பாகத்தைத் தாக்கும்படியும் இரண்டு பக்கவாட்டுகளையும் வளைந்துகொள்ளும்படியும் உத்தரவிட்டார். மாலைக்குள்ளாக, சக்கரவர்த்தியின் வருகைக்கு முன்பாகவே தமக்கு முன்னால் நின்ற அந்தத் துச்சமான எதிரிப் படையை நசுக்கிவிடலாம் என்று அவர் நம்பினார்.

'யுத்தம் ஆரம்பமாய்விட்டது. இதோ யுத்தம் வந்துவிட்டது' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். அவருடைய ரத்தம், அவருடைய இருதயத்திற்கு வேகமாய்ப் பாய்வதை உணர்ந்தார். 'எனது டூலன் சம்பவம் எங்கே, எப்போது நடக்கப்போகிறது?'

ஒரு மணி நேரத்திற்கு முன்பாகக் கஞ்சி குடித்துக்கொண்டும் வாட்காவை அருந்திக்கொண்டும் இருந்த கம்பெனிகளின் இடையே அவர் போனார். ஒவ்வொரு இடத்திலும் சிப்பாய்கள் அதே மாதிரி வேகமாக வேலைகள் செய்தார்கள். அணிகள் வகுப்பதும், தங்கள் துப்பாக்கிகளைச் சரிசெய்வதுமாய் இருந்தார்கள். அவர்களுடைய முகங்களில் தமது உள்ளத்தை நிரப்பிய அதே ஆவல் இருக்கக் கண்டார். 'அது ஆரம்பமாய்விட்டது. இதோ வந்துவிட்டது. பயங்கரமானது. ஆனால், அனுபவிக்கக் கூடியது' என்று சொல்வதுபோல் ஒவ்வொரு சிப்பாயின் முகத்திலும் ஒவ்வொரு அதிகாரியின் முகத்திலும் தோற்றங்கள் காணப்பட்டன.

அரண்க்ளை அவர் அடைவதற்கு முன்பாக மங்கலான இலையுதிர் காலத்து மாலை வேளையில் குதிரையேறிய வீரர்கள் இவரை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். முன்னால் வந்து கொண்டிருந்தவர் ஒரு கோசாக் அணியும் வெளிச் சட்டையையும், ஆட்டுக்குட்டித் தோலினாலாகிய தொப்பியையும் அணிந்து ஒரு வெள்ளைக்குதிரை மீது சவாரி வந்தார். அவர்தான் இளவரசர் பாக்ரேஷன். இளவரசர் ஆண்ட்ரூ அங்கே நின்று அவர் வருகைக்காகக் காத்திருந்தார். இளவரசர் பாக்ரேஷன் தமது குதிரையின் கடிவாளத்தை இழுத்து நிறுத்தி இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்துத் தலையை அசைத்தார். என்றாலும் அவர்

இன்னமும் தூரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். அச்சமயம் இளவரசர் ஆண்ட்ரூ தாம் பார்த்ததையெல்லாம் அவருக்குச் சொன்னார்.

'யுத்தம் ஆரம்பமாய்விட்டது. இதோ யுத்தம் வந்துவிட்டது' என்ற உணர்ச்சி இளவரசர் பாக்ரேஷனின் கடினமான பழுப்பான முகத்தில் கூடக் காணப்பட்டது. அவருடைய மந்தமான தூக்கம் கொண்ட கண்கள் பாதி மூடியிருந்தன. நிதானமான அந்த முகத்தை இளவரசர் ஆண்ட்ரூ கவலையோடு கூடிய ஆச்சரியத்துடன் உற்று நோக்கினார். இளவரசர் பாக்ரேஷன் என்ன நினைத்துக் கொண்டு இருப்பார், என்ன யோசித்துக்கொண்டு இருப்பார் என்பதை அறிய இளவரசர் விரும்பினார். 'அந்த நிர்விகாரமான முகத்திற்குப் பின்னால் ஏதாவது இருக்கத்தான் செய்கிறதா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ அவரைப் பார்த்தபோது தம்மையே கேட்டுக்கொண்டார். இளவரசர் ஆண்ட்ரூ என்ன சொன்னாரோ அதையே அங்கீகரித்ததைப் போல இளவரசர் பாக்ரேஷன் தமது தலையைத் தாழ்த்தினார். 'ரொம்பவும் நல்லது' என்று அவர் பதில் சொன்னார். அந்தத் தொனியானது அங்கு நடந்த விஷயம் எல்லாம் அவருக்குத் தெரியும் என்றும், எதிர்பார்த்ததுபோலவே நடக்கிறது என்றும் அவர் நினைத்ததுபோல இருந்தது. இளவரசர் ஆண்ட்ரூ வேகமாய்க் குதிரையில் சவாரி செய்து வந்தபடியால் மூச்சு வாங்கிக்கொண்டு அவசரமாய்ப் பேசினார். கீழ்நாட்டு உச்சரிப்போடு மிகவும் மெதுவாகத் தமது வார்த்தைகளை இளவரசர் பாக்ரேஷன் சொல்லிக்கொண்டிருந்தார். அவசரப்படுவதற்கு ஒரு அவசியமும் இல்லையென்று வற்புறுத்துவதுபோல் அவர் பேசியது இருந்தது. என்றாலும் டூஷினுடைய பீரங்கிப் படையை நோக்கித் தமது குதிரையை வேகமாய்விட்டார். இளவரசர் ஆண்ட்ரூவும் அவரது பரிவாரங்களும் பின் தொடர்ந்தன. இளவரசர் பாக்ரேஷனுக்குப் பின்னால் அவருடைய பரிவாரத்தைச் சேர்ந்த ஓர் அதிகாரியும், அவருடைய சொந்த உதவியாளரான ஜெர்கோவும், ஒரு தூது அதிகாரியும், அலுவலில் இருந்த ஒரு துணையாளரும், ஒரு சிவிலியனும் போனார்கள். அந்த சிவிலியன் அந்தப் பட்டாளத்தைச் சேர்ந்த கணக்கன். யுத்தத்தைப் பார்க்கவேண்டும் என்ற ஆவலினால் அவர் அனுமதி பெற்று அங்கே வந்தான். அந்தக் கணக்கன் பருமனான ஒரு அப்பாவி மனிதன். தம்மைச் சுற்றியிருந்தவர்களைச் சந்தோசச் சிரிப்போடு நோக்கினான். குதிரைப் படைகள், கோசாக்குகள், உதவியாளர்கள் இவர்களிடையே அவன் குதிரைச் சவாரியில் குதித்துக் குதித்துப் போனது விசித்திரமாய் இருந்தது. அவன் ஒட்டக ரோமக் கோட்டு அணிந்திருந்தான்.

'அவர் யுத்தம் நடப்பதைப் பார்க்க விரும்பினார்' என்று ஜெர்கோவ் அந்தக் கணக்கரைக் காட்டிப் பால்கோன்ஸ்கியிடம் சொன்னார். 'ஆனால், ஏற்கனவே அவருக்கு அடிவயிற்றில் வலி ஆரம்பமாய் விட்டது.'

'ஓ, அந்தப் பேச்சை விட்டுவிடுங்கள்' என்று அந்தக் கணக்கன் தந்திரமான புன்சிரிப்புக் காட்டி முகம் மலர்ந்தான். ஜெர்கோவ் தன்னைப் பற்றிக் கேலியாகப் பேசியது தன்னைப் பாராட்டுவதாக அவன் நினைத்ததுபோல் இருந்தது. ஆகவே, அவன் எவ்வளவு முட்டாளாய் இருந்தானோ அதைவிட அதிகமாய் முட்டாளாய்க் காணும்படி வேண்டுமென்றே முயற்சிப்பதாய்த் தோன்றியது.

'அது ரொம்ப ஆச்சரியமாய் இருக்கிறது, எனது திருவாளர் இளவரசரே' என்று அந்தப் பரிவார அதிகாரி சொன்னார்.

இச்சமயத்தில் அவர்கள் மீண்டும் டூஷினுடைய பீரங்கிப் படைகளை நெருங்கினர். அவர்களுக்கு முன்பாக ஒரு பீரங்கிக் குண்டு தரையில் வந்து வீழ்ந்தது.

'இப்போது வீழ்ந்தது என்னது?' என்று ஒரு அப்பாவிப் புன்னகையோடு அந்தக் கணக்கன் கேட்டான்.

'அதுதான் பிரெஞ்சுத் தோசை' (பான் கேக் என்று குறிப்பிட்டு இருப்பதைத் தோசை என்று இங்கே அழைக்கிறோம்.) என்றார் ஜெர்கோவ்.

'அப்படியா! தோசைகளைக் கொண்டுதான் தாக்குகிறார்களா!' என்று கணக்கன் கேட்டான். 'என்ன மோசமான வேலை!' அவர் திருப்தியினால் பூரிப்பவர்போல் காணப்பட்டார். அவர் பேசி முடிப்பதற்கு முன்பாக, மீண்டும் ஒரு கடுமையான சீறும் சத்தம் எதிர்பாராதவிதமாய்க் கேட்டது. அதுவும், அதாவது அந்தச் சத்தமும் ஒரு மெதுவான பொருளைத் தாக்கியது போன்ற ஓசையோடு முடிந்தது... 'ப்ளாப்'

சிறிது தூரத்தில் வலது பக்கத்திலும் கணக்கனுக்குப் பின்பாகவும் சவாரி செய்துவந்த கோசாக் தமது குதிரையோடு கீழே வீழ்த்தப் பட்டார். ஜெர்கோவும் அந்தப் பரிவார அதிகாரியும் அந்தக் குதிரை மீதிருந்தபடியே குனிந்து தங்கள் குதிரைகளை வேறுபக்கமாகத் திருப்பினார்கள். அந்தக் கணக்கன் குண்டுவீழ்ந்த கோசாக்கைப் பார்த்து ஆச்சரியத்தோடு கவனித்துக் கொண்டு இருந்தான். அந்த கோசாக் இறந்துபோனார். ஆனால், அந்தக் குதிரை இன்னமும் உதறிக்கொண்டு கிடந்தது.

இளவரசர் பாக்ரேஷன் தமது கண்களை இடுக்கிக் கொண்டு சுற்றிப் பார்த்தார். அந்தக் குழப்பத்துக்குக் காரணம் என்ன என்பதை

அறிந்து, அலட்சியமாய் அவர் திரும்பினார். அவர் திரும்பியது, 'இந்தச் சில்லறை விஷயங்கள் எல்லாம் கவனிக்கத் தகுதி வாய்ந்தவையா?' என்று சொல்வது போல இருந்தது. ஒரு திறமையான சவாரிக்காரரைப் போல இலாவகமாய்த் தமது குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து இழுத்து நிறுத்திச் சற்றே குனிந்து, தமது வெளிச் சட்டையில் மாட்டிக் கொண்டிருந்த உடைவாளை எடுத்துவிட்டார். அந்த உடைவாள் ஒரு பழைய கால மோஸ்தரானது. அச்சமயம் அம்மாதிரி எதுவும் உபயோகத்தில் இல்லை. சுவோராவ் என்பவர் பாக்ரேஷனுக்கு இத்தாலியில் தமது உடைவாளைப் பரிசளித்தது இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அச்சமயம் ஞாபகத்துக்கு வந்தது. அச்சமயத்தில் அம்மாதிரி ஞாபகத்திற்கு வந்தது மிகவும் இனிமையாய் இருந்தது. இளவரசர் ஆண்ட்ரூ ஏற்கனவே வந்து பார்த்துக்கொண்டிருந்த அந்தப் பீரங்கிப் படைக்கு அவர்கள் வந்துசேர்ந்தார்கள்.

'இது யாருடைய கம்பெனி?' என்று இளவரசர் பாக்ரேஷன் அங்கு குண்டுகளின் வண்டிப் பக்கத்தில் நின்ற பீரங்கிப் படைக்காரனைக் கேட்டார்.

அவர், இது யார் கம்பெனி என்று கேட்டார். ஆனால், உண்மையில் அவர் கேட்கவிரும்பியது 'இங்கே நீங்கள் எல்லாரும் பீதியடைந்து போயிருக்கிறீர்களா?' என்பதேயாகும். இதை அந்தப் பீரங்கிப் படைக்காரன் புரிந்துகொண்டான்.

'இதுதான் கேப்டன் டூஷினின் பீரங்கிப்படை, மேன்மை தங்கியவரே' என்று சிகப்புத் தலை முடியும், அம்மைத் தழும்பு முகத்தையும் உடைய பீரங்கிக்காரன், சந்தோசம் பொங்கச் சொல்லிச் சேனாதிபதிக்கு சல்யூட் அடித்தான்.

'ஆமாம், ஆமாம்' என்று பாக்ரேஷன் முனங்கினார். ஆனால், அவர் வேறு எதையோ நினைத்துக்கொண்டு பீரங்கி வண்டிகளைக் கடந்து கடைசியிலுள்ள பீரங்கியின் பக்கம் சென்றார்.

அப்படி அவர் நெருங்கியபோது, அந்தப் பீரங்கியிலிருந்து ஒரு பீரங்கிக் குண்டு அவரையும் அவர் பரிவாரத்தையும் செவிடர் களாக்கும் படியான சத்தத்தோடு கிளம்பியது. திடீரென்று அதிலிருந்து தோன்றிய புகைவழியாக அங்கு நின்ற பீரங்கிக்காரர்கள் பீரங்கியை மீண்டும் பழைய இடத்தில் கொண்டுவந்து சேர்க்க முயற்சி செய்துகொண்டிருப்பதைப் பார்த்தனர். ஒரு பிரம்மாண்ட மான அகன்ற தோள்களுடைய பீரங்கிக்காரர், அவர்தான் 'நெம்பர் ஒன்று', கையில் கந்தலை வைத்துக்கொண்டு, கால்களை விரித்து நின்றுகொண்டு, சக்கரத்தைப் பாய்ந்து பிடித்தார். நெம்பர்

இரண்டாவது பேர்வழி நடுங்கிய கையோடு பீரங்கியின் வாயில் ஒரு குண்டை நுழைத்தார். குட்டை வடிவமும் வட்டமான தோள்களும் உடைய கேப்டன் டூஷின் பீரங்கி வண்டியின் நுகக் காலில் இடறித் தடுமாறி முன்னால் போனார். அங்கு நின்ற ஜெனரலை அவர் கவனிக்கவில்லை. தமது சிறிய கையைக் கண்களுக்கு மேலாக வைத்துக் கொண்டு எதிர்ப்பக்கமாகச் சுற்றிப் பார்த்தார்.

'இரண்டு வரிகளுக்கு மேலாகத் தூக்கு. அப்பொழுது அது ரொம்பச் சரியாய் இருக்கும்' என்று தமது தொய்ந்த குரலில் கூவினார். அந்தக் குரலுக்கு ஒரு வேகம் ஊட்ட அவர் முயன்றார். ஆனால், அது அவருடைய மெலிந்த உருவத்திற்குப் பொருத்த மானதாய் இல்லை. 'ஏ, நெம்பர் இரண்டு, அந்த மெட்விடேவ் பீரங்கியைச் சுடு.'

பாக்ரேஷன் அவரை அழைத்தார். தமது தொப்பியில் மூன்று விரல்களை வைத்து டூஷின் சல்யூட் செய்தார். அவருடைய கூச்சமான சளபுளாத் தோற்றங்கள் அதை ஒரு ராணுவ சல்யூட்டாகக் காட்டவில்லை. ஒரு பாதிரியின் ஆசீர்வாதங்களைப் போலவே காட்டின. அவர் ஜெனரலிடம் நெருங்கிச் சென்றார். பள்ளத் தாக்கைப் பாதுகாக்க வேண்டியதுதான் டூஷினுடைய பீரங்களின் வேலை. என்றாலும் அவர் எதிரே தெரிந்த ஷார்ன் கிராபெர்ன் என்ற கிராமத்தின் மீது நெருப்புப் பிடிக்கும் குண்டுகளைச் சுட்டுக் கொண்டிருந்தார். அந்தக் கிராமத்தின் முன்னால் இருந்துதான் கூட்டம் கூட்டமாகப் பிரஞ்சுக்காரர்கள் முன்னோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

எங்கே சுடவேண்டும், எதைச் சுடவேண்டும் என்பதைப் பற்றி டூஷினுக்கு யாரும் உத்தரவு கொடுக்கவில்லை. ஆனால், அவர் மிகுந்த மதிப்பு வைத்திருந்த சார்ஜண்ட் மேஜர் ஜக்கார் செங்கோவைக் கலந்துயோசித்தபின்பு அந்தக் கிராமத்திற்கு நெருப்பு வைப்பது நல்ல வேலையாய் இருக்கும் என்று தீர்மானித்தார். அவர் சொல்லிய விவரங்களையெல்லாம் கேட்ட பாக்ரேஷன், 'ரொம்ப சரி' என்று பதிலளித்துவிட்டுத் தமக்கு எதிரே தோன்றிய போர்க்களத்தை ஆழ்ந்து கவனிக்கலானார். நமது வலப்புறத்தை நெருங்கிப் பிரஞ்சுக்காரர்கள் முன்னேறிவிட்டார்கள். அந்த உயரமான இடத்திற்குக் கீழாக கீவ் கைக்குண்டுக்காரர் பட்டாளம் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அவர்கள் இருந்த அந்த ஓடை ஓடிக்கொண்டிருந்த பள்ளத்தாக்கில், நெஞ்சு பதறும்படியான குண்டுகள் சுடும் சத்தங்கள் கேட்டுக்கொண்டிருந்தன. வலது பக்கத்தில் இன்னும் கொஞ்சம் தூரத்தில் குதிரை வீரர்களுக்கு அப்பால் ஒரு பிரஞ்சு அணிவகுப்பு நம்மை வளைந்துகொள்ள

வந்துகொண்டிருப்பதை, அந்தப் பரிவார அதிகாரி பாக்ரேஷனுக்குச் சுட்டிக் காட்டினார். இடது பக்கத்தில், சமீபத்திலிருந்த சிறிய காடுகள் அடிவாரத்தை மறைத்துக் கொண்டிருந்தன. மத்தியக் களத்தில் இருந்த இரண்டு பட்டாளங்களை வலது பக்கவாட்டைப் பலப்படுத்துவதற்காகப் போகும்படி இளவரசர் பாக்ரேஷன் உத்தரவிட்டார். இந்தப் பட்டாளங்களை அங்கே அனுப்பி விட்டால், இந்தப் பீரங்கிப் படைக்குப் பாதுகாப்பாகப் பட்டாளம் இல்லாமல் போய்விடுமே என்று அந்தப் பரிவார அதிகாரி இளவரசருக்குச் சுட்டிக் காட்டத் துணிந்தார். இளவரசர் பாக்ரேஷன் அந்த அதிகாரி பக்கம் திரும்பி, வாயினால் ஒன்றும் பேசாமல், தமது மந்தமான கண்களால் அவரைப் பார்த்தார். அந்த அதிகாரி சொல்லியது சரியானது என்றும் அதற்கு உண்மையாகவே எவ்விதபதிலும் கூறமுடியாதென்றும் இளவரசர் ஆண்ட்ரூவுக்குத் தோன்றியது. அந்த வினாடியில், கீழே இருந்த பட்டாளத்தின் கமாண்டரிடமிருந்து ஒரு செய்தியை எடுத்துக்கொண்டு வேகமாக ஒரு உதவியாளர் குதிரைமீது மேலே வந்துகொண்டிருந்தார். ஏராளமான பிரஞ்சுத் துருப்புகள் தங்கள் மீது வந்து தாக்குவதாகவும், தம்முடைய பட்டாளம் நிலைகுலைந்து கீவ் பட்டாளம் இருக்குமிடத்துக்குப் பின் வாங்குவதாகவும், அந்தச் செய்தியில் குறிப்பிட்டிருந்தார். அதற்குச் சம்மதிப்பதாகவும் ஒப்புக் கொள்ளுவதாகவும் ஆன அறிகுறியைக் காட்டுவதற்கு, இளவரசர் பாக்ரேஷன் தமது தலையைச் சிறிது தாழ்த்தினார். வலதுபக்கமாக மெதுவாக அவர் தமது குதிரையை விட்டார். பிரஞ்சுக்காரர்களைத் தாக்கும்படி குதிரை வீரர்களுக்கு ஒரு உதவியாளரிடம் சொல்லியனுப்பினார். ஆனால் இந்த உதவியாளர் அரைமணி நேரத்தில் திரும்பிவந்தார். குதிரை வீரர்கள் பள்ளத்தாக்கிற்கு அப்பால், முன்பே பின்வாங்கிவிட்டதாக அவர் வந்து தெரிவித்தார். அந்தக் குதிரை வீரர்கள் மீது கடுமையாகக் குண்டுகள் பொழியப் பட்டதால் அனாவசியமாக வீரர்கள் மாண்டு வந்ததாகவும், ஆகவே அந்தச் சிறிய காடுகளில் சில தேர்ந்த வீரர்களை நிறுத்திவிட்டுத் தமது படையைப் பின்வாங்கி விட்டதாகவும் குதிரை வீரர்களின் கமாண்டர் சொல்லியனுப்பி யிருந்தார்.

'ரொம்ப சரி' என்றார் பாக்ரேஷன்.

அவர் பீரங்கிப் படையை விட்டுப் புறப்பட்டபோது இடது பக்கமும் சுடுகிற சத்தங்கள் கேட்டன. அங்கிருந்து இடது பக்கவாட்டுத் தூரமாய் இருந்தபடியால் அங்கே போய்ச் சேருவதற்கு அவருக்கு நேரமில்லை. ஆகவே, இளவரசர் பாக்ரேஷன் அந்தக் கமாண்டரிடம் ஜெர்கோவை அனுப்பினார். (பிராவ்னாவில்

குட்டுஜோவ் முன்பாகத் தமது பட்டாளத்தை அணிவகுத்துக் காட்டிய கமாண்டர்தான் அந்தக் கமாண்டர்.) கூடுமானவரையில வேகமாகப் பின்னால் உள்ள பள்ளத்தாக்கிற்குப் பின்பாக அவர் வாபசாக வேண்டும் என்று சொல்லியனுப்பினார். ஏனெனில், வலது பக்கவாட்டில் உள்ள நமது துருப்புகள் வெகுநேரம் வரையில் எதிரிகளின் தாக்குதலைத் தாங்கி நிற்க முடியாது என்று அவர் நினைத்தார். ஆனால், டூஷினின் பீரங்கிப் படையையோ, அந்தப் படைக்கு ஆதரவாக நின்ற பட்டாளத்தையோ பற்றி எல்லாரும் மறந்துவிட்டார்கள். கமாண்டர்களுடன் பாக்ரேஷன் பேசியவற்றையும் அவர்களுக்குக் கொடுத்த உத்தரவுகளையும் இளவரசர் ஆண்ட்ரூ கவனமாய்க் கேட்டுவந்தார். ஆனால், உண்மையில் உத்தரவுகள் எதையும் அவராகக் கொடுக்காமல் இருந்ததைக் கண்டு, அவர் ஆச்சரியப்பட்டார். அவசியத்தினாலோ, சந்தர்ப்பங்களினாலோ, கீழ் அதிகாரிகளின் விருப்பத்தினாலோ நடந்த ஒவ்வொரு காரியமும் அவர் உத்தரவிடாவிட்டாலும், அவருடைய நோக்கப்படியே நடந்து வருவதாக அவர் காட்ட முயற்சித்ததாகத் தோன்றியது. என்னென்ன நடந்ததோ அவையெல்லாம் நேரிடுவதற்குச் சந்தர்ப்பங்களே காரணமாய் இருந்தாலும், கமாண்டருடைய விருப்பங்களுக்கும் அந்தக் காரியங்கள் நடப்பதற்கும் சம்பந்தம் இல்லை என்றாலும், பாக்ரேஷன் காட்டி வந்த அந்தச் சாதுர்யங்களுக்காக அவருடைய பிரசன்னம் மிகுந்த மதிப்பு உயர்ந்தவையாய் இருந்தது. குழம்பிய தோற்றங்களோடு அவரிடம் வருகிற அதிகாரிகள் வந்தபின்பு சாந்தி அடைகிறார்கள். சிப்பாய்களும் அதிகாரிகளும் சந்தோசமாக அவரை வரவேற்கிறார்கள். அவருடைய பிரசன்னததில் அவர்களுடைய மலர்ச்சி அதிகமாய் விளங்குகிறது. அவர் முன்பாகத் தங்களுடைய தீரத்தைக் காட்டுவதற்கு அவர்கள் மிகுந்த ஆவலோடு இருக்கிறார்கள்.

## 2
### 18

நமது இடது பக்கவாட்டில் உள்ள உயரமான இடத்திற்கு இளவரசர் பாக்ரேஷன் வந்து சேர்ந்ததும், கீழே துப்பாக்கிச் சத்தம் கேட்டுவந்த இடத்தை நோக்கிக் குன்றிலிருந்து இறங்க ஆரம்பித்தார். கீழே சத்தம் கேட்டதேயொழிய அங்கிருந்த புகையினால் ஒன்றையும் பார்க்கமுடியவில்லை. கிட்டே நெருங்க நெருங்க அவர்கள் குறைவாகவே

பார்க்க முடிந்தது. ஆனால் யுத்தமுனைக்கு மேலும் மேலும் நெருங்கி வந்து கொண்டிருப்பதாக அவர்கள் உணர்ந்தார்கள். காயம்பட்டவர்களை அவர்கள் சந்திக்க ஆரம்பித்தார்கள். தலையில் தொப்பி இல்லாமல் மண்டையிலிருந்து இரத்தம் வடிந்து கொண்டிருந்த ஒரு சிப்பாயை இரண்டு சிப்பாய்கள் ஆதரவு கொடுத்து இழுத்துவந்து கொண்டிருந்தார்கள். அவனுடைய தொண்டையிலிருந்து கரகரப்பு சத்தம் வெளிவந்தது. அவன் இரத்தத்தை உமிழ்ந்துகொண்டிருந்தான். அவனுடைய தொண்டையிலோ வாயிலோ ஒரு குண்டு தாக்கியது என்று தெரிந்தது. மற்றொருவன் தைரியமாகத் தானாகவே நடந்து வந்துகொண்டிருந்தான். ஆனால் அவனுடைய துப்பாக்கியைக் காணவில்லை. பலமாக முனங்கிக் கொண்டு தனது காயம்பட்ட கையை ஆட்டிக்கொண்டு அவன் நடந்துவந்தான். அந்தக் கையிலிருந்து அவனுடைய வெளிச்சட்டையை நனைத்துக் கொண்டிருந்த இரத்தம் புட்டியிலிருந்து கொட்டுவதைப் போல் இருந்தது. அப்பொழுதுதான் அவன் காயம் அடைந்தான். அவனுடைய முகத்தில் துன்பத்தைவிட பயமே அதிகமாய்த் தோன்றியது. ஒரு ரஸ்தாவைக் கடந்ததும் ஒரு செங்குத்தான இடத்திற்கு அவர்கள் இறங்கினார்கள். அங்கே பல வீரர்கள் தரையில் சாய்ந்துகிடக்கக் கண்டார்கள். காயம்படாத ஒரு சிப்பாய்க் கூட்டத்தை அவர்கள் சந்தித்தார்கள். தளபதி நிற்பதையும் கவனிக்காமல் கைகளை ஆட்டிக்கொண்டும், பலமான சத்தத்தில் பேசிக்கொண்டும், மேல்மூச்சு வாங்குபடியாகக் குன்றின் மீது சிப்பாய்கள் ஏறிக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு முன்பாகப் புகைவழியாகச் சாம்பல் நிற வெளிச்சட்டைகளை அணிந்தவர்களின் வரிசைகள் தெரிந்தன. பாக்ரேஷனைக் கண்டு கொண்ட ஒரு அதிகாரி பின்வாங்கிப் போகும் சிப்பாய்க் கூட்டத்தைத் திரும்பிவரும்படி சத்தமிட்டுக்கொண்டிருந்தார். அணி வரிசைகளைப் பார்த்துப் பாக்ரேஷன் போய்க்கொண்டிருந்தார். துப்பாக்கிக் குண்டுச் சத்தங்கள் இங்கொன்றும் அங்கொன்றுமாக ஒலித்து, பேச்சுக் குரல்களையும் அதிகாரிகளின் உத்தரவுகளையும் காதில் கேட்க முடியாதபடி செய்துகொண்டிருந்தன. அந்த இடமெல்லாம் புகை மண்டியிருந்தது. பரபரப்படைந்த சிப்பாய்களின் முகங்களை அந்தப் புகை கறுப்பாக்கியது. சிலர் துப்பாக்கிகளில் மருந்து கெட்டிப்பதற்காகக் கம்பிகளைப் பயன்படுத்திக் கொண்டிருந்தார்கள். சிலர் வெடிமருந்தை துப்பாக்கிகளில் போட்டுக் கொண்டிருந்தார்கள் சிலர் தங்களுடைய பைகளில் இருந்து துப்பாக்கிக் குண்டுகளை எடுத்துக்

கொண்டிருந்தார்கள். வேறு சிலர் துப்பாக்கி சுட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால், அவர்கள் யாரைப் பார்த்துச் சுடுகிறார்கள் என்பதைப் பார்க்க முடியவில்லை. ஏனெனில், அங்கிருந்த புகையை அடித்துக்கொண்டு போவதற்குக் காற்று எதுவும் வரவில்லை. தோட்டாக்களின் குமுறிய சத்தங்களும் சீறிய சத்தங்களும் கேட்டுக்கொண்டிருந்தன. அந்தச் சிப்பாய்க் கூட்டத்தை நெருங்கிய இளவரசர் ஆண்ட்ரூ, 'இது என்ன? இது ஒரு தாக்குதலாய் இருக்கமுடியாது. ஏனெனில் அவர்கள் அசையவில்லை. இது ஒரு சதுர வியூகமாய் இருக்க முடியாது. ஏனெனில் அம்மாதிரி நிலைமையில் அவர்களை வைக்கவில்லை' என்று நினைத்தார்.

அந்தப் பட்டாளத்தின் தளபதி ஒரு ஒல்லிய, பலம் குன்றிய தோற்றத்தோடு காணப்பட்ட ஒரு வயதானவராய் இருந்தார். அவர் முகத்தில் இனிய புன்சிரிப்புக் காணப்பட்டது. அவருடைய கண் இமைகள் பாதிக் கண்களை மூடுகிற மாதிரி தொங்கிக் கொண்டிருந்தபடியால் ஒரு அமைதியான முகத் தோற்றத்தைக் காட்டியது. ஒரு கௌரவமான விருந்தாளியை வரவேற்பதைப் போல அவர் பாக்ரேஷனிடம் சென்று வரவேற்றார். தமது பட்டாளத்தைப் பிரஞ்சுக் குதிரைப் படை தாக்கியதாகவும் அந்தத் தாக்குதலை எதிர்த்தடித்து விட்டதாகவும், என்றாலும் தமது படையில் பாதிப்பேர்களை இழந்துவிட்டதாகவும் தளபதியிடம் தெரிவித்துக் கொண்டார். தாக்குதலை எதிர்த்தடித்துவிட்டதாக ராணுவப் பதத்தைப் பயன்படுத்தித் தமது பட்டாளத்திற்கு என்ன நடந்தது என்பதை அவர் வர்ணித்தாலும், சென்ற அரை மணி நேரத்தில் தமது துருப்புகளுக்கு என்ன நேரிட்டது என்பதை அவர் உண்மையில் அறியாதவராய் இருந்தார். எதிரிகளின் தாக்குதலை எதிர்த்தடித்தார்களா அல்லது தமது படை சின்னாபின்னமாக்கப்பட்டதா என்பதில் எதையும் அவர் நிச்சயமாய்க் கூற முடியாதவராய் இருந்தார். யுத்தம் ஆரம்பமானவுடன் துப்பாக்கிக் குண்டுகளும் பீரங்கிக் குண்டுகளும் அவருடைய படை மீது வர்ஷிக்க ஆரம்பித்து, வீரர்களைத் தாக்கத் தொடங்கின. அப்புறம் யாரோ ஒருவர், 'குதிரைப் படை' என்று கத்தினார். நமது படை உடனே சுட ஆரம்பித்தது. இவ்வளவுதான் அவருக்குத் தெரியும். அவருடைய படை இன்னமும் சுட்டுக்கொண்டே இருந்தது. எதிரிகளின் குதிரைப்படை மீது அல்ல. ஏனெனில் அது மறைந்துவிடடது. ஆனால், பிரஞ்சுக் காலாட்படைகள் பள்ளத்தாக்கிற்கு வந்து நமது சிப்பாய்கள் மீது சுட ஆரம்பித்தார்கள். அவர்கள் மீதே இவர்கள் சுட்டுக் கொண்டிருந்தார்கள். இதைத்தான்

தாம் விரும்பியதுபோலவும் எதிர்பார்த்தது போலவும் இளவரசர் பாக்ரேஷன் தமது தலையைத் தாழ்த்தினார். அவருடைய உதவியாளர் பக்கம் திரும்பித் தாங்கள் அப்பொழுதுதான் கடந்துவந்த ஆறாவது சாஸியர்களின் இரண்டு பட்டாளங்களையும் அங்கே கொண்டு வரும்படி உத்தரவிட்டார். இச் சமயத்தில் இளவரசர் பாக்ரேஷனின் முகத்தில் தோன்றிய மாறுதலைக் கண்டு இரளவரசர் ஆண்ட்ரூ வியப்படைந்தார். ஒரு உஷ்ணமான நாளில் குளிர்ந்த தண்ணீருக்குள் குதிப்பதற்காக ஓடும் ஒருவனுடைய முகத்தில் காணப்படும் நிச்சயமான, சந்தோசமான தோற்றத்தைப் போல அவருடைய முகத்திலும் தோன்றியது. மந்தமான தூங்குமூஞ்சித் தோற்றத்தை அவருடைய முகத்தில் காண முடியவில்லை. ஆழ்ந்து சிந்தனை செய்வது போன்ற தோற்றத்தையும் அவர் முகத்தில் காணவில்லை. அவருடைய வட்டமான உறுதியான பருந்துப்பார்வை கொண்ட கண்கள், அவருக்கு எதிராக உள்ளவற்றை ஆவலோடும், ஆனால் வெறுப்போடும் பார்த்துக் கொண்டிருந்தன. அவை எதையும் குறிப்பிட்டுப் பார்க்கவில்லை. என்றாலும் அவருடைய செய்கைகள் இன்னமும் மெதுவாகவும் நிதானமாகவும் இருந்தன.

அந்தப் பட்டாளத்தின் கமாண்டர் இளவரசர் பாக்ரேஷனைப் பார்த்து, அவர் அங்கு நிற்பது ஆபத்தானது என்றும், திரும்பிப் போகும்படியும் கெஞ்சினார். ‘தயவு செய்யுங்கள், மேன்மை தங்கியவரே, கடவுளுக்காகத் திரும்பிப் போங்கள்’ என்று அவர் சொல்லிக் கொண்டே இருந்தார். பக்கத்தில் நின்ற உதவியாளர் தாம் சொல்வதை ஆதரிப்பார் என்று நம்பி, அவரைத் திரும்பிப் பார்த்தார். ஆனால் அவர் வேறுபக்கம் திரும்பிக் கொண்டார். குண்டுகள் சத்தமிட்டுக்கொண்டும் சீறிக்கொண்டும் பாடிக்கொண்டும் அவர்களைச் சுற்றிலும் பறந்துகொண்டிருந்தன. அவற்றை அவர் சுட்டிக்காட்டி, ‘இதோ பாருங்கள்’ என்று சொன்னார். தச்சு வேலையில் பழக்கமில்லாத ஒரு கனவான், உளியை எடுத்து வேலைசெய்ய ஆரம்பித்தால் அவரைப் பார்த்துத் தச்சன், ‘எங்களுக்கு அதைக் கொண்டு வேலைசெய்வதில் பழக்கமுண்டு. ஆனால் நீங்களோ உங்கள் கையை வெட்டிக் கொள்ளுவீர்கள்’ என்று கெஞ்சலாகவும் கண்டிப்பாகவும் கூறுவதைப்போல, அந்தக் கமாண்டர் பேசியதும் இருந்தது. அந்தக் குண்டுகள் தம்மைக் கொல்ல முடியாது என்பது போல அவர் பேசியது இருந்தது. அவருடைய பாதி மூடிய கண்கள் அவர் சொல்லும் வார்த்தைகளுக்கு இன்னும் அதிக ஆதரவு கொடுப்பதாய்த் தோன்றின. கமாண்டரின் வேண்டுகோளை உதவியாளரும் ஆதரித்தார். ஆனால் பாக்ரேஷன்

பதில் சொல்லவில்லை. வரப்போகிற இரண்டுபட்டாளங்களுக்கு இடம் அளிப்பதற்காகச் சுடுவதை நிறுத்தும்படியும், அணி வகுப்பைத் திருத்தி அமைக்கும்படியும் அவர் உத்தரவிட்டார். அவர் பேசிக்கொண்டிருந்தபோது, அச்சமயம் அடித்த காற்றினால், பள்ளத்தாக்கை மூடியிருந்த புகை மண்டலத் திரையைக் கண்காணாத ஒரு கை இழுப்பது போல வலது பக்கமிருந்து இடது பக்கம் புகை மண்டலம் விலகியது. எதிரில் இருந்த குன்றில் பிரஞ்சுக்காரர்களின் நடமாட்டம் அவர்களுக்கு முன்பாக நன்றாய்த் தெரிந்தது. அங்கிருந்த பிரஞ்சுப்பட்டாளம் கீழே இறங்கித் தங்களை நோக்கி வந்துகொண்டிருப்பதை, எல்லாருடைய கண்களும் தங்களை அறியாமலேயே பார்த்துக்கொண்டிருந்தன. அதிகாரி களுக்கும் சிப்பாய்களுக்கும் வித்தியாசம் தெரியக்கூடிய மாதிரியில் சிப்பாய்கள் அணிந்திருந்த தொப்பிகளையும், அவர்களுடைய கொடி ஒரு கம்பத்தில் பறந்துகொண்டிருப் பதையும் அவர்களால் நன்றாகப் பார்க்க முடிந்தது.

'எவ்வளவு சிலாக்கியமாக அவர்கள் அணிவகுத்து வருகிறார்கள்!' என்று பாக்ரேஷனின் பரிவாரத்தைச் சேர்ந்த ஒருவர் எடுத்துக்கூறினார்.

அந்த அணிவகுப்பின் தலைப்புப் பகுதி ஏற்கனவே பள்ளத்தாக்கில் இறங்கிவிட்டது. அந்தப் பக்கத்தில் உடனே கைகலப்பு ஆரம்பமாகலாம். நமது பட்டாளத்தில் மிஞ்சியவர்கள் துரிதமாகத் திருத்தி அமைக்கப்பட்டு வலது பக்கம் போனார்கள். அவர்களுக்குப் பின்னால் நின்ற தகுதியற்றவர்களை விலக்கிவிட்டு, ஆறாவது சாஸியர்களைச் சேர்ந்த இரண்டு பட்டாளங்கள் அபூர்வமான நிலைமையில் வந்துசேர்ந்தன. அவர்கள் பாக்ரேஷனை நெருங்குவதற்கு முன்பாகவே, அணிவகுத்து வந்துகொண்டிருந்த அந்தப் பட்டாளங்களின் காலடி ஓசைகள் பலமாய்க் கேட்டுவந்தன. அவர்களின் இடது பக்கவாட்டில் பாக்ரேஷனுக்குப் பக்கத்தில் ஒரு கம்பெனி கமாண்டர் வந்துகொண்டிருந்தார். அவருடைய முகம் வட்டமாய் இருந்தது. அவருடைய முகத்தில் அசட்டுத்தனமும் சந்தோசமும் கலந்துகாணப்பட்டன. அவர்தான் முன்னால் டூஷினுடைய விடுதியிலிருந்து வெளியே வந்தவர். கமாண்டரைக் கடந்துபோகும்போது தாம் எவ்வளவு துணிகரமானவர் என்பதைக் காட்டுவது ஒன்றைப் பற்றியே அச்சமயம் அவர் தெளிவாய் யோசித்து வந்தார்.

ராணுவ அணிவகுப்பில் நிற்பவனைப் போன்ற சுய திருப்தியோடு, தமது புஷ்டியான கால்களை நீந்திப் போவதைப் போல மெதுவாக எடுத்துவைத்து, ஒரு சிரமமும் இல்லாமல்

தம்முடைய முழு உயரத்திற்கு நிமிர்ந்துகொண்டு நடந்துவந்தார். துருப்புகள் பலமாகத் தரையை மிதித்து இவருடைய காலடித் தாழத்துக்கு ஒத்ததாக நடந்துவந்தன. அதற்கு நேர் விரோதமாக இவருடைய மெதுவான நடை இருந்தது. அவருடைய காலை ஒட்டி ஒரு ஒடுங்கிய உறையிடப்படாத பட்டாக் கத்தியை வைத்துக் கொண்டிருந்தார். அது அசல் பட்டாக்கத்தியைப் போல் இல்லாமல் சிறிதாகவும் வளைந்தும் இருந்தது. அவர் நடந்து போகும்போது தமது கால் தாளத்தை விடாமல் தமது மேல் அதிகாரிகளைப் பார்ப்பதும், தமது பலமான உடம்பை சரளமாகத் திருப்பிப் பின்னால் வந்துகொண்டிருந்த தமது வீரர்களைப் பார்ப்பதுமாய் இருந்தார். கமாண்டரைக் கடந்துசெல்லும்போது நல்ல முறையில் தாம் காணப்பட வேண்டும் என்ற ஒரே இலட்சியத்திற்காகத் தமது முழு சக்தியையும் ஒன்று கூட்டி உபயோகித்ததுபோலத் தோன்றியது. தாம் அந்த வேலையைச் சரியாகச் செய்துவருவதாக அவருக்கு உணர்ச்சி ஏற்பட்டு அதனால் சந்தோசம் கொண்டார். 'லெப்ட்... லெப்ட்... லெப்ட்...' என்று ஒரு கால் விட்டு மற்றொரு கால் வைக்கும்போது தமக்குள்ளாகவே அவர் சொல்லிக்கொண்டது போலத் தோன்றியது. இந்தத் தாளத்திற்குத் தக்கபடி அந்தச் சிப்பாய்க் கூட்டங்கள் தங்கள் பைகளையும் துப்பாக்கிகளையும் தாங்கிக் கொண்டு உறுதி நிறைந்த முகங்களோடு 'மார்ச்' செய்து கொண்டிருந்தார்கள். அந்த நூற்றுக்கணக்கான சிப்பாய்களில் ஒவ்வொருவரும், தங்கள் கால்களை ஒன்றுவிட்டு ஒன்று வைக்கும்போது, அதே மாதிரி 'லெப்ட்... லெப்ட்... லெப்ட்...' என்று தங்களுக்குள் சொல்லுவதுபோல் தோன்றியது. ஒரு பருத்த மேஜர் ஒரு புதரைச் சுற்றிப் போனதால் அணியில் இருந்து சிறிது விலகநேர்ந்தது. ஒரு சிப்பாய் சிறிது பின்தங்கிவிட்டதால், தன்னுடைய தவறுக்காகப் பீதியடைந்த முகத்தோடு, மீண்டும் அணியில் சேர்ந்து கொள்ளுவதற்காக ஓடிவந்தான். ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு வந்த ஒரு பீரங்கிக் குண்டு பாக்ரேஷனையும் அவருடைய சிப்பந்திகளையும் தாண்டி அந்த அணியின் மத்தியில் 'லெப்ட்... லெப்ட்...' என்ற தாளத்திற்குப் பொருத்தமாக விழுந்தது. உடனே, 'நெருங்கிப் போங்கள்' என்ற கமாண்டரின் உத்தரவு திருப்தியான தொனியில் கேட்டது. குண்டு விழுந்த இடத்தைச்சுற்றி அந்த அணி போய்க்கொண்டிருந்தது. பக்கவாட்டிலுள்ள ஒரு அதிகாரி, இறந்துபோனவர்களைக் கவனிக்கும் வேலையினால் கொஞ்சம் தாமதமாய் விட்டபடியால், வேகமாக ஓடிவந்து ஒரு குதி குதித்து அணியில் கலந்துகொண்டு, கோபத்தோடு பின்னால் திரும்பிப் பார்த்தார். மீண்டும் அந்தப் பயங்கரமான அமைதியில்,

'லெப்ட்... லெப்ட்... லெப்ட்...' என்ற உச்சரிப்புக்கு இணங்கிய தாகக் கால்கள் ஒருமைப்பாடோடு பூமியில் பதிந்து போவதாகத் தோன்றியது.

'சபாஷ், நன்றாய் நடந்துகொண்டீர்கள், வாலிபர்களே' என்றார் இளவரசர் பாக்ரேஷன்.

'எங்களால் சாத்தியமானதைச் செய்வதற்குச் சந்தோசம் அடைகிறோம், மேன்மை தங்கியவரே' என்று ஒரு குழம்பிய குரல் படை வரிசைகளில் இருந்து கேட்டது. பாக்ரேஷனைப் பார்த்துக் கொண்டு இடதுபக்கமாக நடந்துபோன ஒரு முகம் தூக்கிய சிப்பாய் அம்மாதிரி கத்தியபோது, 'அது எங்களுக்கே தெரியும்' என்று சொல்லுவதைப்போல் இருந்தது. மற்றொருவன் தன் பார்வையைத் திருப்பாமலே தனது விறைப்புத் தன்மையைத் தளர்த்துவதற்குப் பயந்தவன்போல வாயை அகலத் திறந்து கத்திக்கொண்டு போனான்.

தோள்களில் உள்ள பைகளை இறக்கிக் கீழே வைக்கும்படியும், படை வரிசைகள் நிற்கும்படியும் உத்தரவு பிறந்தது. தம்மைக் கடந்துசென்ற படை வரிசைகளைச் சுற்றி பாக்ரேஷன் சவாரி வந்து குதிரையிலிருந்து இறங்கினார். கடிவாளங்களை ஒரு கோசாக்கிடம் கொடுத்துவிட்டு, தமது தோல் கோட்டையும் கழற்றிக் கொடுத்து விட்டுக் கால்களை நிமிர்த்தி நின்று தமது குல்லாயைச் சரியாய் வைத்தார். குன்றின் அடியிலிருந்து வந்த பிரஞ்சுப் படையின் முன்பகுதியும், அதை நடத்திவந்த அதிகாரிகளும் இப்பொழுது கண்ணெதிரே தோன்றினார்கள்.

'கடவுள் உங்கள் பக்கம் இருப்பாராக. முன்னேறித் தாக்குங்கள்' என்று உறுதியான கணீர் என்று ஒலிக்கும்படியான குரலில் பாக்ரேஷன் உத்தரவிட்டார். முன்னணியை ஒரு விநாடி திரும்பிப் பார்த்துவிட்டுக், கைகளை லேசாக ஆட்டிக்கொண்டு அந்தக் கரடுமுரடான பாதையில் குதிரை வீரன் தரையில் நடப்பதைப் போன்ற நடையில் முன்னோக்கி நடந்தார். தம்மை ஏதோ ஒரு கண்காணாத சக்தி முன்னால் இழுத்துச் செல்வதுபோல இளவரசர் ஆண்ட்ரூ உணர்ந்து மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்.

பிரஞ்சுக்காரர்கள் கிட்டே நெருங்கிவிட்டார்கள். அவர்களுடைய பெல்ட்டுகளையும் சிகப்பு வாகு வலையங்களையும், அவர்களுடைய முகங்களையும் கூடத், தெளிவாக இளவரசர் பாக்ரேஷனுடன் நடந்துசென்ற இளவரசர் ஆண்ட்ரூவால் பார்க்க முடிந்தது. ஒரு கிழட்டுப் பிரஞ்சு அதிகாரி பட்டி கட்டிய கால்களோடு முன் பாதங்களை வெளியே நீட்டிக் கஷ்டத்தோடு குன்றில் ஏறி வருவதை அவர் தெளிவாகப் பார்த்தார். இளவரசர்

பாக்ரேஷன் மேற்கொண்டு உத்தரவு எதுவும் கொடுக்கவில்லை. மௌனமாக அணிவரிசைகளின் முன்பாக நடந்துகொண்டிருந்தார். திடீரென்று ஒன்றுக்குப் பின் ஒன்றாகப் பிரஞ்சுக்காரர்களிடமிருந்து குண்டுகள் கிளம்பின. அணி வரிசைகள் முழுவதிலும் புகை காணப்பட்டது. துப்பாக்கித் தோட்டாக்கள் வெடித்தன. நமது வீரர்களில் பலர் கீழே விழுந்தார்கள். மகிழ்ச்சியோடும் திருப்தியாகவும் 'மார்ச்' செய்த உருண்டை முக அதிகாரியும் விழுந்தவர்களில் ஒருவர். முதல் குண்டு வெடிச் சத்தம் கேட்டதும் பாக்ரேஷன் திரும்பிப் பார்த்து, 'ஜே... ஜே...' என்று கத்தினார். 'ஜே... ஜே... ஜே...' என்ற கோஷங்கள் வெகு நீளமாக நமது படை வரிசைகளிலிருந்து கிளம்பின. பாக்ரேஷனைத் தாண்டிக்கொண்டு, ஒருவரையொருவர் போட்டி போட்டு முந்திக்கொண்டு, தாறுமாறாகவும் ஆனால் சந்தோசமும் ஆவலும் கொண்டு தங்களுடைய நிலைகுலைந்த எதிரிகளைத் தாக்குவதற்காகக் குன்றின் கீழாக வேகமாய் ஓடினார்கள். (இந்தத் தாக்குதலைப் பற்றித் தீயர்ஸ் என்பவர் சொல்லுவதாவது: 'ருஷ்யர்கள் வீரத்தனமாக நடந்துகொண்டார்கள். இரண்டு படைகளும் உறுதியோடு ஒன்றையொன்று எதிர்ப்பதற்காக எதிரும் புதிருமாக மார்ச் செய்தார்கள். ஒருவரும் பின்வாங்கவில்லை. நேராக இரு படைகளும் ஒன்றையொன்று மோதித் தாக்கின. இம்மாதிரிச் சம்பவங்கள் நடப்பது யுத்தங்களில் மிக அபூர்வம்.'

செயிண்ட் ஹெலினாவில் நெப்போலியன் சொன்னதாவது: 'சில ருஷ்யப் பட்டாளங்கள் பயம் என்பதையே முற்றிலும் அறியாதவர்கள் போல நடந்துகொண்டன.')

## 2

### 19

ஆறாவது சாசியர் படை எதிர்த்துத் தாக்கியதால் நமது வலது பக்கவாட்டில் துருப்புகளைப் பின்வாங்குவது சாத்தியமாய் இருந்தது. எல்லாரும் மறந்துவிட்ட டூஷினுடைய பீரங்கிப் படை யுத்தக் களத்தின் மத்தியில் இருந்தது. அதுதான் ஷார்ன் கிராபெர்ன் கிராமத்திற்கு நெருப்பு வைத்தது. அதுதான் பிரஞ்சுக்காரர்களின் முன்னேற்றத்தையும் தாமதப்படுத்தியது. காற்று வேகமாய் அடித்தபடியால் நெருப்புப் பரவியது. அதை அணைப்பதற்குப் பிரஞ்சுக்காரர்கள் வேலைசெய்து வந்தபடியால் நமது துருப்புகள் பின் வாங்குவதற்கு அவகாசம் கிடைத்தது. பள்ளத்தாக்கின்

மற்றொரு பக்கமான பின் பகுதிக்கு நமது மத்திய பாக துருப்புகள் வேகமாகவும் இரைச்சலோடும் பின்வாங்கின. ஆனால் வெவ்வேறு கம்பெனிகள் குழம்பிக் கூடிவிடவில்லை. நமது இடது பக்கத்துத் துருப்புகளான அஜோவ், பாடோல்ஸ்க் தரைப் படைகளும் பாவ்லாகிராட் குதிரைப்படை களும், லேன்ஸ் தலைமையில் உள்ள ஏராளமான பிரஞ்சுப் படைகளால் வளைந்துகொள்ளப்பட்டன. அங்கே ஒரே குழப்பமாய் இருந்தது. இடது பக்கவாட்டுத் துருப்புகள் உடனே பின்வாங்க வேண்டுமென்று அந்த கமாண்டருக்கு ஜெர்கோவ் மூலமாகப் பாக்ரேஷன் சொல்லியனுப்பினார்.

தொப்பியிலிருந்து தமது கையை எடுக்காமலே தமது குதிரையை ஜெர்கோவ் திருப்பிப் பாய்ச்சலில் தட்டிவிட்டார். ஆனால் பாக்ரேஷனை விட்டு அவர் திரும்பியதுமே அவருடைய தைரியம் குறைய ஆரம்பித்தது. அவர் பீதியால் பீடிக்கப்பட்டார். அதனால் அபாயகரமான இடத்திற்கு அவரால் போக முடியவில்லை.

இடது பக்கவாட்டை அவர் போய் அடைந்தார். ஆனால் போர்முனைக்கு அவர் போகாமல் கமாண்டரையும் அவருடைய அதிகாரிகளையும் எங்கே அவர்கள் இருக்கமாட்டார்களோ அங்கெல்லாம் தேடிப் பார்க்க ஆரம்பித்தார். அதனால் பாக்ரேஷனின் உத்தரவை அவர் சேர்ப்பிக்கவில்லை.

பிராவ்னாவ் என்ற இடத்தில் குட்டுஜோப் பார்வையிட்ட ஒரு பட்டாளத்தில் டோலாகாவ் சிப்பாயாக வேலைபார்த்துவந்தார். அந்தப் பட்டாளத்தின் கமாண்டர்தான் இடது பக்கவாட்டுப் பட்டாளங்களின் கமாண்டர்களில் மூத்தவராக இருந்தபடியால், இடது பக்கவாட்டுத் தளபதி பொறுப்பு அவரையே சேர்ந்தது. இடது பக்கவாட்டின் கடைசி முனையிலுள்ள பட்டாளத்திற்குக் கமாண்டராகப் பாவ்லாகிராட் பட்டாளத்தின் கமாண்டரை நியமித்திருந்தார்கள். அதில்தான் ராஸ்டோவ் வேலை பார்த்து வந்தார். இப்பொழுது அங்கே ஒரு தகராறு கிளம்பியது. அந்த இரண்டு கமாண்டர்களுக்கும் ஒருவர் மீது ஒருவருக்கு மிகுந்த எரிச்சல் ஏற்பட்டது. வலதுபக்கவாட்டில் சண்டை ஆரம்பமாகி வெகுநேரத்திற்குப் பின்னால், பிரஞ்சுக்காரர்கள் முன்னேறி வர ஆரம்பித்ததற்குப் பின்னால், இந்த இரண்டு கமாண்டர்களும் ஒருவரை ஒருவர் பழிக்கும் நோக்கத்தோடு வாக்குவாதம் ஆரம்பித்தார்கள். ஆனால் குதிரைப்படையோ காலாட்படையோ உடனே ஆரம்பமாகவேண்டிய சண்டைக்குத் தயாராகவே இலலை. சிப்பாய்களிலிருந்து ஜெனரல்கள் வரையில் அவர்கள் யுத்தத்தை எதிர்பார்க்கவேயில்லை. ஆகவே, சமாதான கால வேலைகளாகிய

குதிரைகளுக்குத் தீனி போடுவது, விறகு வெட்டுவது போன்றவை களில் ஈடுபட்டிருந்தார்கள்.

'பதவியில் அவர் என்னை விட உயர்ந்தவர்' என்று ஒரு ஜெர்மன் குதிரைப்படை கர்னல் முகம் சிவந்து, தம் பக்கத்தில் நெருங்கி வந்த உதவியாளரிடம் சொன்னார். 'அவர் இஷ்டப்படி செய்யட்டும். என்னால் என் குதிரைப்படை வீரர்களைத் தியாகம் செய்ய முடியாது... எக்காளக்காரனே, வாபஸ் வாங்கும்படி எக்காளம் ஊது.'

ஆனால், அவசரமாய்ச் செய்யவேண்டியது அவசியமாய் விட்டது. பீரங்கிக் குண்டுகளும் துப்பாக்கிக் குண்டுகளும் கலந்து வலது பக்கத்திலும் மத்திய பாகத்திலும் இடிபோல் முழங்கிக் கொண்டிருந்தன. லேன்ஸ் என்பவருடைய குறிபார்த்துச் சுடும் வீரர்களின் தொப்பிகள் மில் அணையைக் கடப்பது ஏற்கனவே தெரிய ஆரம்பித்தன. துப்பாக்கி சுடும் தூரத்திற்கு இரண்டு மடங்கிற்கு அப்புறமாக அவர்கள் தங்கள் துருப்புகளை அணிவகுத்துக் கொண்டிருந்தார்கள். காலாட்படையின் தளபதி தமது குதிரையை நோக்கி கேந்திக் கேந்திச் சென்று தமது குதிரையில் ஏறினார். ஏறிய பின்பு நிமிர்ந்து உட்கார்ந்து பாவ்லாகிராட் கமாண்டரிடம் சவாரி விட்டார். கமாண்டர்கள் இருவரும் மரியாதையான தலைவணக்கங்களோடு சந்தித்தார்கள். ஆனால் அவர்கள் உள்ளங்களில் இரகசியமாய் துவேசம் இருந்து கொண்டிருந்தது.

'மறுபடியும் ஒரு தடவை சொல்லுகிறேன், கர்னல்' என்றார் ஜெனரல். 'எனது வீரர்களில் பாதிப்பேரை நாம் காடுகளில் விட்டுவிட முடியாது. நான் உம்மைக் கொஞ்சுகிறேன். நான் உம்மைக் கெஞ்சுகிறேன். உமது படையை அணிவகுத்து நிறுத்தித் தாக்குதலுக்குத் தயார் செய்யும்.'

'நான் உம்மைக் கெஞ்சுகிறேன். உமக்கு சம்பந்தப்படாத வேலையில் நீர் கலக்கவேண்டாம்' என்று கர்னல் கோபத்தோடு திடீரென்று பதிலளித்தார். 'நீர் மட்டும் குதிரைப்படையில் இருந்திருந்தால்...'

'நான் குதிரைப்படையில் இல்லை, கர்னல். ஆனால், நான் ஒரு ருஷ்யன் ஜெனரல். உமக்கு அந்த விஷயம் தெரியாமல் இருந்தால்...'

'நன்றாய்த் தெரியும், மேன்மை தங்கியவரே' என்று திடீரென்று கர்னல் கத்தினார். அவர் முகம் சிவந்தது. தமது குதிரையைத் தார்ச்சக்கரத்தால் குத்தினார். 'நீர் தயவுசெய்து முன்னணிக்கு வந்து

அங்குள்ள நிலைமை மோசமாய் இருப்பதைப் பார்க்க விரும்புகிறீரா? உமது திருப்திக்காக என்னுடைய வீரர்களை நான் நாசம் செய்யமுடியாது.'

'உம்மையே நீர் மறந்துவிடுகிறீர், கர்னல். என்னுடைய திருப்தியைப் பற்றி நான் யோசித்துக்கொள்ளவில்லை. அம்மாதிரிப் பேசுவதை நான் அனுமதிக்கவும் முடியாது.'

கர்னலின் கோபக் கூச்சல்களைத் தமது வீரத்தனத்திற்கு விடும் சவால் என்று ஜெனரல் கருதினார். தமது மார்பை விரித்துக் கொண்டு கர்னலோடு முன்னணிக்குச் சவாரி செய்தார். அவர்களுடைய அபிப்பிராய பேதங்களைத் தோட்டாக்களுக்கு மத்தியில் தீர்த்துக் கொள்ளலாம் என்று நினைப்பதுபோலப் போனார். அவர்கள் யுத்த முனையைப் போய்ச் சேர்ந்தார்கள். பல தோட்டாக்கள் அவர்களைத் தாண்டிப் பறந்தன. அவர்களோ அங்கே மௌனமாய் நின்று கொண்டிருந்தார்கள். புதிதாக அந்த முனையிலிருந்து பார்ப்பதற்கு எதுவும் இல்லை. முன்னால் அவர்கள் எங்கு நின்றிருந்தார்களோ, அங்கேயே ஒரு விஷயம் தெளிவாய்த் தெரிந்தது. அதாவது பிரஞ்சுக்காரர்கள் நமது இடது பக்கவாட்டை வளைந்து கொண்டிருந்தார்கள்; மத்தியிலுள்ள கரடுமுரடான புதர்கள் நிரம்பிய பூமியில் குதிரைப் படையைக் கொண்டு எதுவும் செய்யமுடியாது. ஜெனரலும் கர்னலும் கடுமையாகவும் குறிப்பாகவும், சண்டைக்குத் தயாராய் நிற்கும் இரண்டு போர்ச் சேவல்களைப் போல, ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். ஒருவர் மற்றவரிடம் கோழைத்தனத்தைக் கண்டுபிடிக்க வீணாக முயற்சி செய்தார்கள். ஆனால் இருவரும் பரீட்சையில் தேர்ந்துவிட்டார்கள். அங்கு பேசுவதற்கு எதுவுமே இல்லை. ஆனால் அந்தக் குண்டு விழும் வட்டாரத்திலிருந்து முதலில் போனவர் இவர்தான் என்று யாரும் தம்மை சொல்லக் கூடாது என்ற நினைப்பில், ஒருவருடைய வீரத்தை இன்னொருவர் சோதிப்பதற்காக வெகுநேரம் அவர்கள் நின்றுகொண்டிருந்திருப் பார்கள். ஆனால், திடீரென்று தங்களுக்குப் பின்னால் உள்ள காடுகளில் துப்பாக்கிச் சத்தங்களும் கூச்சல்களும் கேட்டன. அந்தச் சிறிய காட்டில் விறகுகள் பொறுக்கிக்கொண்டிருந்த வீரர்களை பிரஞ்சுக்காரர்கள் தாக்கினார்கள். காலாட்படையோடு சேர்ந்து குதிரை வீரர்களும் பின்வாங்குவது என்பது இனிச் சாத்தியமில்லை. இடது பக்கத்தில் பின்வாங்கும் வழியைப் பிரஞ்சுக்காரர்கள் துண்டித்துவிட்டார்கள். நிலைமை எவ்வளவு எக்கச்சக்கமாக இருந்தாலும், ஒழுங்கான முறையில் ஒரு தாக்குதலை நடத்தித், தங்களுக்கு ஒரு பாதையை ஏற்படுத்திக் கொள்ளவேண்டியது அவசியமாகிவிட்டது.

ராஸ்டோவ் சேவை செய்துவந்த குதிரைப்படையில், வீரர்கள் மீண்டும் தங்கள் குதிரைகள் மீது ஏறிமுடிக்கும் முன்பாகவே, எதிரிகள் அங்குவந்துவிட்டார்கள். என்ஸ் நதியின் பாலத்தில் முன்னால் நடந்தது போலவே, இந்தக் குதிரைப் படைக்கும் எதிரிகளுக்கும் மத்தியில் எதுவுமே இல்லை. மீண்டும் அதே நிச்சயமில்லாத பயம் கலந்த எல்லைக்கோடு அவர்கள் முன்பு காணப்பட்டது. உயிர் உள்ளவர்களுக்கும் மாண்டுபோனவர் களுக்கும் மத்தியிலுள்ள எல்லைக்கோடுபோல அது தோன்றியது. இந்தக் கண்காணாத எல்லைக் கோட்டைப் பற்றி எல்லாருக்கும் புரிந்தது. ஆனால், அதைக் கடப்பதா, வேண்டாமா, கடப்ப தென்றால் எப்படிக் கடப்பது என்ற விஷயமே எல்லாரையும் ஆட்டிவந்தது.

கர்னல் முன்னணிக்குப் போனார். தம்மிடம் அதிகாரிகள் கேட்ட கேள்விகளுக்குக் கோபமாகப் பதிலளித்தார். தமது வழிப்படியே நடப்பதற்குத் துணிந்து வற்புறுத்துபவரைப் போல ஒரு உத்தரவு பிறப்பித்தார். ஒருவரும் நிச்சயமாக எதையும் சொல்லவில்லை. ஆனால், தாக்குதல் நடக்கப் போகிறது என்ற வதந்தி குதிரைப் படையில் பரவியது. அணிவகுத்து நிற்கும்படி உத்தரவு முழங் கியது. உடனே உறைகளிலிருந்து பட்டாக் கத்திகளை உருவும் சத்தங்கள் ஒலித்தன. ஆனால் இன்னமும் ஒருவரும் அசைய வில்லை. இடது பக்கவாட்டிலுள்ள காலாட் படையும் குதிரைப் படையும் என்ன செய்வதென்று தங்கள் கமாண்டருக்குத் தெரியவில்லை என்று நினைத்தார்கள். இந்தத் தீர்மானமற்ற தன்மை தானே துருப்புகளிடம் பரவியது.

'அவர்கள் மட்டும் சீக்கிரமாய்ச் செய்வதாய் இருந்தால்' என்று ராஸ்டோவ் நினைத்தார். தம்முடைய குதிரைப் படைத் தோழர்களிடமிருந்து அடிக்கடி கேட்டு வந்திருக்கிற அந்தப் போராட்டம், கடைசியாக வந்துவிட்டது என்றும் அதன் இன்பத்தைத் தாம் அனுபவிக்கப் போவதாகவும் அவர் நினைத்தார்.

'கடவுள் உங்களுடன் இருப்பாராக, வாலிபர்களே, தாக்குங்கள்; வேகமாய்த் தாக்குங்கள்' என்று டெனைசாவின் குரல் முழங்கியது.

குதிரைகளின் பின்னங் கால்கள் அசைய ஆரம்பித்தன. ராஸ்டோவின் குதிரை, கடிவாளத்தை இழுத்துக்கொண்டு தானாகவே கிளம்பியது.

தமது இடது பக்கத்தில் தமது குதிரை வீரர்களின் முன்னணிகளை ராஸ்டோவ் பார்த்தார். அதற்கு முன்னால் கறுப்பு வரிசை தெரிந்தது. அது என்னது என்பதைத் தெளிவாய் அவரால் பார்க்க

முடியவில்லை. ஆனால், அது எதிரியாய்த்தான் இருக்கும் என்று நினைத்தார். குண்டுச் சத்தங்கள் கேட்டன. ஆனால் தூரமாய்க் கேட்டன.

'வேகமாய்ப் போங்கள்' என்ற உத்தரவு ஒலித்தது. பாய்ச்சலில் போகும்போது ராஸ்டோவின் குதிரை பக்கவாட்டுகளில் தொய்வு ஏற்பட்டதுபோல் தோன்றியது.

தமது குதிரையின் அசைவுகளைப் பற்றி ராஸ்டோவ் எதிர் பார்த்திருந்தபடியால் வரவர அவருக்குக் குதூகலம் அதிகமாயிற்று. தமக்கு முன்னால் ஒரே ஒரு மரம் நிற்பதை அவர் கண்டார். முன்னால் இந்த மரம் எல்லைக் கோடுகளுக்கு மத்தியில் காணப்பட்டபோது மிகவும் பயங்கரமாய் இருந்தது. இப்பொழுது அவர் அந்த எல்லையைக் கடந்துவிட்டார். பயங்கரமானது எதுவும் அங்கே இல்லை. அதுமட்டுமல்ல, ஒவ்வொன்றும் சந்தோசத்திற்கு மேல் சந்தோசமாகவும் உற்சாகமாகவும் இருந்தன. 'ஓ, அவனை நான் வெட்டி வீழ்த்துவேன்' என்று ராஸ்டோவ் நினைத்துத் தமது பட்டாக் கத்தியின் கைப்பிடியை இறுக்கிப் பிடித்தார்.

'ஜே... ஜே...' என்ற கோஷங்கள் பலமாய்க் கிளம்பின. 'யாராவது எனக்கு எதிராக இப்பொழுது வந்து பார்க்கட்டும்,' என்று ராஸ்டோவ் நினைத்துக்கொண்டு, தமது தார்ச் சக்கரத்தினால் தமது ரூக் என்ற குதிரையை அழுத்தினார். அது முழுப் பாய்ச்சலில் கிளம்பி ஓடியது. அதனால் மற்றவர்களையெல்லாம் தாண்டிப் போய்க் கொண்டிருந்தார். எதிராக எதிரிகள் தெரிய ஆரம்பித்தார்கள். திடீரென்று விளார்க்கட்டை போன்ற ஒன்று, குதிரைப் படையின் மேலாகப் பாய்ந்து செல்வதுபோல் தோன்றியது. அதை வெட்டுவதற்காக ராஸ்டோவ் தமது பட்டாக் கத்தியை மேலே உயர்த்தினார். அதே வினாடியில், மிக்கைடென்கோ என்ற வீரர் இவருக்கு முன்னால் போய்க்கொண்டிருந்தபோது, திடீரென்று இவரைவிட்டு விலகி வெகுதூரம் போய்விட்டார். அசாதாரணமான வேகத்தில் தாம் முன்னால் போவது போலவும், ஆனால் அதே சமயத்தில் தாம் இருந்த இடத்திலேயே இருப்பது போலவும் சொப்பனத்தில் காணுவதுபோல ராஸ்டோவ் உணர்ந்தார். அவருக்குப் பின்னால் அவருக்குப் பழக்கமான ஒரு குதிரை வீரர், பண்டார்சுக் என்பவர் அவர் மீது தடுக்கிக் கோபத்தோடு அவரைப் பார்த்தார். பண்டார்சுக்கின் குதிரை சற்று விலகி அந்த இடத்தை விட்டுப் பாய்ச்சலில் ஓடியது.

'இது என்ன, நான் மட்டும் அசையாமல் இருக்கிறேன்? நான் விழுந்துவிட்டேன். நான் கொல்லப்பட்டேன்' என்று ராஸ்டோவ்

தாமே கேள்வி கேட்டுத், தாமே பதில் சொல்லிக்கொண்டிருந்தார். அந்த வயலின் மத்தியில் அவர் மட்டும் தனியாக இருந்தார். ஓடுகிற குதிரைகளையோ, குதிரை வீரர்களின் முதுகுகளையோ, பார்ப்பதற்குப் பதிலாக அசையாத பூமியையும் தம்மைச் சுற்றிலும் வயலில் இருந்த அரிதாள்களையுமே அவர் கண்டார். அவருடைய கைக்குக் கீழாக வெதுவெதுப்பான இரத்தம் வந்துகொண்டிருந்தது. 'இல்லை, நான் காயம் அடைந்திருக்கிறேன். என்னுடைய குதிரை கொல்லப்பட்டுவிட்டது' என்றார். 'ரூக் முன்னங் கால்களில் எழுந்திருக்க முயன்றது. மீண்டும் கீழே விழுந்துவிட்டது. அதில் சவாரி செய்த ராஸ்டோவின் கால் அதன் கீழ் அகப்பட்டுக் கொண்டது. அதனுடைய தலையிலிருந்து இரத்தம் ஒழுகியது. அது போராடிப் பார்த்தது. ஆனால் எழுந்திருக்க முடியவில்லை. ராஸ்டோவ் எழுந்திருக்க முயன்றார். ஆனால் பின்னால் விழுந்தார். அவருடைய பட்டாக்கத்தியின் கூடு சேணத்தில் மாட்டிக் கொண்டது. நமது மனிதர்கள் எங்கே இருக்கிறார்கள்; பிரஞ்சுக் காரர்கள் எங்கே இருக்கிறார்கள் என்பது அவருக்குத் தெரிய வில்லை. பக்கத்தில் ஒருவருமே இல்லை.

தமது காலை விடுவித்துக்கொண்டு எழுந்தார். 'இருதரப்புப் படைகளையும் பிரித்து நின்ற அந்த எல்லைக்கோடு எங்கே, எந்தப் பக்கத்தில் இருக்கிறது?' என்று அவர் தாமே கேட்டுக் கொண்டார். பதில் அவருக்குத் தெரியாது. 'எனக்கு மோசமாக ஏதாவது ஏற்பட்டிருக்குமா?' என்று ஆச்சரியப்பட்டுக்கொண்டே அவர் எழுந்தார். மரத்துப்போன தமது இடது கையிலிருந்து அவசியமில்லாதது ஒன்று தொங்கிக்கொண்டிருப்பதைரப்போல அதே வினாடியில் அவர் உணர்ந்தார் தமது மணிக்கட்டு தம்மைச் சேர்ந்ததல்ல என்பதுபோல் இருந்தது. தமது கையைக் கவனமாய்ச் சோதித்துப் பார்த்தார். அதில் எங்கே ரத்தம் இருக்கிறது என்பதைக் கண்டுபிடிக்க முயற்சி செய்தார்; பயனில்லை. 'ஆ, இங்கே மக்கள் வருகிறார்கள்' என்று தம்மை நோக்கி ஓடி வருகிற சிலரைப் பார்த்து மகிழ்ச்சியோடு நினைத்தார். 'அவர்கள் எனக்கு உதவி செய்வார்கள்.' அவர்களுக்கு முன்னால் ஒரு அதிசயமான குல்லாவையும் நீலநிற வெளிச் சட்டையையும் அணிந்த கருட மூக்கோடு கூடிய ஒருவன் வந்துகொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் இருவரும் அவர்களுக்குப் பின்னால் இன்னும் பலரும் ஓடிவந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் விசித்திரமாக எதையோ சொன்னான். ஆனால் ருஷ்ய மொழியில் பேசவில்லை. இவர்களுக்குப் பின்னால் ஒரு ருஷ்யக் குதிரை வீரன் காணப்பட்டான். அவனுடைய கைகளைப் பற்றியிருந்தார்கள். அவனுடைய குதிரையை அவனுக்குப் பின்னால் நடத்திவந்தார்கள்.

'அவன் நம்மவர்களில் ஒருவனாய் இருக்கவேண்டும். இப்பொழுது ஒரு கைதி. ஆம், என்னையும் கூட அவர்கள் பற்றிக் கொண்டுபோவார்களோ? இந்த மனிதர்கள் யார்? இம்மாதிரியாகத் தமது கண்களையே நம்பாமல் ராஸ்டோவ் மனதில் எண்ணினார். 'அவர்கள் பிரஞ்சுக்காரர்களாய் இருப்பார்களோ?' நெருங்கி வந்து கொண்டிருந்த பிரஞ்சுக்காரர்களை அவர் பார்த்தார். ஒரு வினாடிக்கு முன்பாகத் தான் அவர்களைப் பிடித்து, அவர்களைத் துண்டு துண்டாக வெட்டிவிட வேண்டுமென்று குதிரை மீது பாய்ந்து போனார். ஆனால் அவர்கள் இப்பொழுது தம்மை நெருங்கும்போது அவருக்குப் பயங்கரமாய் இருந்தது. தமது கண்களையே நம்ப முடியவில்லை. 'அவர்கள் யார்? அவர்கள் ஏன் ஓடுகிறார்கள்? என்னிடம் ஓடிவருவதாக இருக்குமா? அப்படியானால் ஏன்? என்னைக் கொல்லவா? என்னை, ஒவ்வொருவருக்கும் பிரியமாய் உள்ள என்னையா? அச்சமயம் தம்மீது தமது தாய்க்குள்ள அன்பையும், தமது குடும்பத்தினுடையவும் நண்பர்களுடையவும் அன்பையும் அவர் நினைவுகூர்ந்தார். ஆகவே, தம்மைக் கொல்ல எதிரி நினைப்பது அசாத்தியமான காரியம் என்று அவருக்குத் தோன்றியது. 'ஆனால், ஒருவேளை அவர்கள் செய்தாலும் செய்யலாம்.' பத்து வினாடிகளுக்கு மேலாக அப்பொழுதுள்ள நிலைமையை அறியவோ, அல்லது அந்த இடத்தைவிட்டு நகரவோ இல்லாமல், அங்கேயே நின்றுகொண்டிருந்தார். கருட மூக்குக்கொண்ட, முன்னால் வந்த பிரஞ்சுக்காரன் அதற்குள்ளாக மிகவும் நெருங்கிவிட்டான். அவனுடைய முகத்தில் தோன்றிய தோற்றங்களைக் கூட நன்றாய்ப் பார்க்க முடிந்தது. அந்தப் பரபரப்படைந்த அந்நிய முகத்தோற்றமுள்ள அந்த மனிதன் தனது துப்பாக்கிச் சனியனைக் கீழே தொங்கவிட்டு, மூச்சைப் பிடித்துக் கொண்டு எளிதாய் ஓடிவந்தது ராஸ்டோவைப் பயமுறுத்திவிட்டது. தமது கைத்துப்பாக்கியைக் கையில் பற்றி, வந்தவனைப் பார்த்துச் சுடாமல் அவன் மீது வீசி எறிந்து, தமது பலம்கொண்ட மட்டும் புதர்களைப் பார்த்து ஓடினார். அவர் இப்பொழுது ஓடியபோது என்ஸ் பாலத்தில் அவர் இருந்த காலத்தில் அவருக்கு ஏற்பட்ட சந்தேகத்தோடோ, மனக் குழப்பத்தோடோ ஓடவில்ல. வேட்டை நாய்களிடமிருந்து தப்புவதற்கு ஒரு முயல் எப்படி ஓடுமோ, அந்த உணர்ச்சியே அவருக்கு இப்பொழுது இருந்தது. தமது இளமையான, சந்தோசமான, வாழ்க்கைக்கு ஏற்பட்ட பீதி ஒன்றுதான், அந்த ஒரே உள்ளுணர்ச்சிதான் அவரை முழுவதும் பற்றி இருநத்து. வயலுக்குக் குறுக்காக மேடுபள்ளங்களைத் தாவி வேகமாய் ஓடினார். பிடியாட்டங்களில் அவர் காட்டி வந்த ஓடும்

திறமையைப் போலவே இங்கேயும் காட்டினார். இடையிடையே அவருடைய நல்ல குணம் கொண்ட வெளிறிய இளமையான முகம் திரும்பித் திரும்பிப் பார்த்தது. அவர் உடல் பீதியால் நடுக்கங் கொண்டது. 'இல்லை, திரும்பிப் பார்க்காமல் இருப்பது நல்லது' என்று அவர் நினைத்தார். ஆனால், புதர்களைப் போய் அடைந்ததும் மற்றும் ஒரு முறை திரும்பிப் பார்த்தார். பிரஞ்சுக்காரர்கள் பின் தங்கிவிட்டார்கள். அவர் திரும்பிப் பார்த்தபோது முதலில் ஓடிவந்த மனிதன் தனது ஓட்டத்தை விட்டுச் சாதாரண நடையில் நடந்தான். அவன் திரும்பி தூரத்திலுள்ள தனது தோழனுக்கு எதையோ உரக்கக் கூவிக்கொண்டிருந்தான். ராஸ்டோவ் தயங்கினார். 'இல்லை, ஏதோ ஒரு தவறு நேர்ந்திருக் கிறது. என்னைக் கொல்லுவதற்கு அவர்கள் விரும்பியிருக்க மாட்டார்கள்' என்று நினைத்தார். அதே சமயம் அவருடைய இடது கை ஐந்து ஸ்டோன் பாரத்தைக் கட்டித் தொங்கவிட்ட்துபோலக் கனத்தது. அவரால் இனி ஓட முடியாது. பிரஞ்சுக்காரனும் நின்று குறிபார்த்தான். ராஸ்டோவ் கண்களை மூடிக்கொண்டு கீழே குனிந்தார். முதலில் ஒரு தோட்டாவும் பின்னால் ஒரு தோட்டாவுமாக அவரைக் கடந்து சென்றன. அவருடைய பலம் முழுவதையும் ஒன்று திரட்டி, இடது கையை வலது கையால் பிடித்துக்கொண்டு புதர்களிடம் போய்ச் சேர்ந்தார். அந்தப் புதர்களுக்குப் பின்னால் குறிதவறாமல் சுடக் கூடிய ருஷ்யச் சிப்பாய்கள் பதுங்கி இருந்தார்கள்.

## 2

## 20

காடுகளின் ஓரத்தில் திடீரென்று அகப்பட்டுக்கொண்ட காலாட்படைகள் அவற்றைவிட்டு வெளியே ஓடி, வெவ் வேறு கம்பெனிகள் ஒன்றோடு ஒன்று குழம்பி, அலங்கோலமான கூட்டம் போலப் பின்வாங்கினார்கள். தனக்கு ஏற்பட்ட பயத்தினால் ஒரு சிப்பாய் புத்தி யில்லாமல், நாம் துண்டிக்கப்பட்டோம்' என்று கூச்சலிட்டான். ஒரு யுத்தத்தில் இம்மாதிரிச் சொல்வது மிகவும் பயங்கரமானது. அந்த வார்த்தைகள் முழுக்கூட்டத்திலும் பரவி, பீதியை உண்டு பண்ணியது.

'சூழப்பட்டோம்; நாம் துண்டிக்கப்பட்டோம்; நாம் தொலைந்தோம்' என்று ஓடியவர்கள் கத்தினார்கள்.

குண்டுச் சத்தத்தையும் பின்னாலிருந்து வந்த கூச்சலையும் கேட்ட விநாடியிலேயே, தமது பட்டாளத்திற்குப் பயங்கரமாதக ஏதோ

நடந்துவிட்டது என்று ஜெனரல் உணர்ந்துகொண்டார். பல வருடங்கள் சேவை செய்த உயர்வான அதிகாரியான தாம் இதுவரை எவ்வித குற்றத்திற்கும் உட்பட்டதில்லை. அப்பேர்ப்பட்டவர் இப்பொழுது திறமையின்மைக்கும் கடமையைச் செய்யத் தவறியதற்கும் தலைமைக் காரியாலயத்தாரால் குற்றஞ் சாட்டப்படலாம் என்ற நினைப்பு அவருக்குத் தோன்றியபோது அவர் நிலைகுலைந்தார். தமக்குக் கீழ்ப்படியாத குதிரைப் படைக் கர்னலையும் மறந்தார். ஜெனரல் என்ற தமது கௌரவத்தையும் மறந்தார். எல்லாவற்றிற்கும் மேலாகத், தமக்கு ஏற்பட்ட ஆபத்தையும் மறந்து, தம்மைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்கான நடவடிக்கைகளையும் மறந்தார். உடனே தமது சேணத்தை இறுகப் பிடித்துக் கொண்டு, தமது தார்ச் சக்கரத்தால் குதிரையைக் குத்தி, சுற்றிலும் வர்ஷித்துக் கொண்டிருந்த தோட்டாக்கள் மழையினூடே தமது பட்டாளத்திற்குப் பாய்ச்சலில் கிளம்பினார். நல்ல வேளையாக அவர் காயம்படவில்லை. என்ன நடந்துகொண்டிருக் கிறது என்பதை அறிந்துகொள்ள வேண்டும் என்பதும், தாம் ஏதாவது தவறு செய்திருந்தால் அதை எப்படியாவது திருத்தவோ பரிகாரம் செய்யவோ வேண்டுமென்பதே அவருடைய ஒரே ஆசை. ஏனெனில், இருபத்திரண்டு வருடச் சேவையில் ஒரு கண்டனமும் பெறாத உயர்வான அதிகாரியாய் இருந்துவரும் தம்மை எந்தக் குற்றத்திற்கும் பொறுப்பாளியாகும்படி விட்டுவிடக் கூடாது என்று எண்ணினார்.

பிரஞ்சுக்காரர்களுக்கு இடையே பாய்ச்சலில் போன அவர், காட்டிற்குப் பின்னால் உள்ள ஒரு வயலைப் பத்திரமாய் அடைந்தார். அந்த வயல் வழியாகத்தான் ஒழுங்கு என்பதைக் கைவிட்டு நமது சிப்பாய்கள் ஓடிப் பள்ளத்தாக்கில் இறங்கிக் கொண்டிருந்தார்கள். யுத்தங்களின் விதிகளைத் தீர்மானிக்க வல்லதான தார்மீகத் தயக்கத்தைக் காட்டிக்கூடிய அந்த வினாடி வந்து சேர்ந்தது. சிப்பாய்களின் இந்த நிலைகுலைந்த கூட்டம் தங்கள் கமாண்டரின் வார்த்தையைக் கேட்பார்களா? அல்லது அவரை நிராகரித்துத் தாங்கள் தொடர்ந்து ஓடிக்கொண்டே இருப்பார்களா? அவர் குரலைக் கேட்டால் அவர்கள் நடுங்குவார்கள். அதே குரலில் அவர் இப்பொழுது என்னதான் கத்தினாலும் அவருடைய முகம் அடையாளம் தெரியாத விதத்தில், அவருடைய கோலத்தால் சிவந்து சுளித்த போதிலும், அவருடைய பட்டாக் கத்தியை ஆட்டி வீசியபோதிலும், சிப்பாய்கள் என்னவோ தொடர்ந்து பேசிக்கொண்டும், உத்தரவுகளை மீறிக்கொண்டும், ஆகாயத்தைப் பார்த்துச் சுட்டுக்கொண்டும் ஓடிக்கொண்டே இருந்தார்கள்.

யுத்தங்களின் விதியை முடிவு செய்யும் அந்தத் தார்மீகத் தயக்கம் ஒரு பீதியில் வந்து முடிந்திருக்கிறது.

வெடிமருந்துப் புகையினாலும் சத்தமிட்டுக் கூவியதாலும் ஜெனரலுக்கு மடமடவென்று இருமல் வந்தது. அதைரியமடைந்து அங்கே நின்றார். எல்லாம் தொலைந்துபோனதாகவே தோன்றிற்று. அச்சமயத்தில் தாக்குதல் செய்துகொண்டிருந்த பிரஞ்சுக்காரர்கள் காரணம் எதுவுமின்றித் திடீரென்று பின்னால் ஓடிக் காடுகளின் ஓரத்திலிருந்து மறைந்தார்கள். காட்டிற்குள்ளாக நன்றாய்ச் சுடுபவர்களான ருஷ்யர்கள் இப்பொழுது தோன்றினார்கள். அவர்கள் டிமோகின் கம்பெனியைச் சேர்ந்தவர்கள். அந்தக் கம்பெனி ஒன்றுதான் ஒழுங்கான நிலைமையில் இருந்தது. அரணிற்குப் பின்னால் அவர்கள் தாக்குவதற்காகப் பதுங்கிப் படுத்திருந்தபடியால், இப்பொழுது திடீரென்று பிரெஞ்சுக்காரர் களைத் தாக்கினார்கள். கையில் பட்டாக் கத்தியை மட்டும் வைத்துக் கொண்டு எதிரிமீது டிமோகின் பாய்ந்தார். அவருடைய துணிச்சலான குரலையும் வெறிஏறிய உறுதியையும் திடீரென்று கேட்ட பிரஞ்சுக்காரர்கள் ஆச்சரியமடைந்து தங்கள் துப்பாக்கி களைப் போட்டுவிட்டு ஓடினார்கள். டிமோகினுக்குப் பின்னால் ஓடிவந்த டோலாகாவ் ஒரு பிரஞ்சுக்காரனை நெருங்கி அவனைக் கொன்றார். அடுத்தபடியாகச் சரணடைந்த ஒரு பிரஞ்சு அதிகாரியின் கழுத்துப் பட்டியைப் பற்றிக்கொண்டார்.. நமது ஓடிய வீரர்கள் திரும்பினார்கள். பட்டாளங்கள் மீண்டும் அணிவகுக்கப்பட்டன. நமது இடது பக்கவாட்டை அநேகமாகப் பாதியாகப் பிளந்த பிரஞ்சுக்காரர்கள் அந்த நேரத்தில் பின்னால் விரட்டப்பட்டார்கள். நமது உதவிப் பட்டாளங்கள் வந்துசேர்ந்துகொண்டன. யுத்தமும் முடிவடைந்தது. பட்டாளத்தின் கமாண்டரும் மேஜர் எக்கானோமாவும் பாலத்தின் பக்கத்தில் நின்றுகொண்டு, துருப்புகள் தங்கள் முன்பு போவதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒரு சிப்பாய் கமாண்டரிடம் வந்து அவருடைய தார்ச் சக்கரத்தைக் கையில் பற்றிக் கொண்டு அவர் பக்கம் சாய்ந்து நின்றான். அவன் ஒரு நீல நிறக் கோட்டு அணிந்திருந்தான். சாமான் பையோ தொப்பியோ இல்லை. அவன் தலையில் கட்டுப் போடப்பட்டிருந்தது. அவன் தோளில் ஒரு பிரஞ்சுத் தோட்டாப் பை தொங்கிக்கொண்டிருந்தது. அவன் கையில் ஒரு அதிகாரியினுடைய பட்டாக்கத்தி இருந்தது. அவனுடைய முகம் வெளிறிப் போயிருந்தது. அவனுடைய நீலக் கண்கள் கமாண்டரின் முகத்தைத் துடுக்காய்ப் பார்த்தன. அவனுடைய உதடுகள் புன்சிரிப்புக் கொண்டிருந்தன. மேஜர் எக்கானோமாவிற்கு உத்தரவுகள்

கொடுப்பதில் கமாண்டர் முனைந்திருந்தாலும், அந்தச் சிப்பாயைக் கவனிக்காமல் இருக்க முடியவில்ல.

'மேன்மை தங்கியவரே, இதோ இரண்டு வெற்றிச் சின்னங்கள்' என்று டோலாகாவ் கூறி, ஒரு பிரஞ்சுப் பட்டாக்கத்தியையும் ஒரு தோட்டாப் பையையும் காட்டினார். 'ஒரு அதிகாரியை நான் கைதியாகப் பிடித்தேன். அநதக் கம்பெனியை நான் நிறுத்தினேன்.' டோலாகாவ் களைப்பினால் வேகமாய் மூச்சுவிட்டார். நிறுத்தி நிறுத்திப பேசினார். 'இந்தக் கம்பெனி முழுவதும் நான் சொல்லுவதற்கு சாட்சி. இதை ஞாபகத்தல் வைத்திருக்கும்படி நான் கெஞ்சுகிறேன், மேன்மை தங்கியவரே.'

'ரொம்ப சரி, ரொம்ப சரி' என்று கமாண்டர் சொல்லிவிட்டு மேஜர் எக்கானோமாவிடம் திரும்பினார்.

ஆனால், டோலாகாவ் அதைவிட்டுப் போகவில்லை. தமது தலையைச் சுற்றிக் கட்டியிருந்த கைக்குட்டையின் முடிச்சை அவழ்த்து அதை இழுத்துத், தமது தலைமுடியில் உறைந்து போயிருந்த இரத்தத்தைக் காட்டினார்.

'ஒரு துப்பாக்கிச் சனியனால் ஏற்பட்ட காயம். நான் முன்னணியிலேயே இருந்தேன். ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். மேன்மை தங்கியவரே.

  

டூஷினுடைய பீரங்கிப் படையை மறந்தேவிட்டார்கள். போராட்டத்தின் கடைசி சமயத்தில்தான் மத்திய அணியிலிருந்து பீரங்கிச் சத்தம் இன்னும் கேட்டுக்கொண்டிருப்பதை இளவரசர் பாக்ரேஷன் கவனித்தார். உடனே தமது பரிவாரத்தைச் சேர்ந்த தூது அதிகாரியையும், பின்னால் இளவரசர் ஆண்ட்ரூவையும் அனுப்பி, அந்தப் பீரங்கிப் படையைச் சாத்தியமான அளவு வேகமாயப் பின்வாங்கும்படி செய்யச் சொன்னார். டூஷினுடைய பீரங்கிப் படைக்கு ஆதரவாய் இருந்த படைகள் போராட்டத்தின் மத்தியில் யாரோ ஒருவருடைய உத்தரவினால் அங்கிருந்து அகற்றப்பட்டன. ஆனால், பீரங்கிகள் தொடர்ந்து சுட்டுக்கொண்டே இருந்தன. அந்தப் படை பிரஞ்சுக்காரர்களால் பிடிக்கப்படவில்லை. ஏனெனில், ஆதரவுப் படை இல்லாமல் நான்கு பீரங்கிகளைச் சுட்டுக் கொண்டிருக்கக்கூடிய அகம்பாவம், யாருக்கும் இருக்குமென்று எதிரி யூகிக்கவில்லை. பீரங்கிப் படை உற்சாகமாக வேலைசெய்து வருவதைப் பார்த்த பிரஞ்சுக்காரர்கள், ருஷ்யப் படைகளின் முக்கியமான பாகம் அங்கே மத்திய பாகத்தில்தான் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன என்று நம்பும்படி செய்தது. இரண்டு

தடவைகள் இந்த முனையைத் தாக்க அவர்கள் முயற்சித்தார்கள். ஆனால், குன்றின் உச்சியிலுள்ள தனித்து நின்ற இந்த நான்கு பீரங்கிகளிலிருந்து கிளம்பிய ரவை குண்டுகள் அவர்களைத் திரும்பி ஓடும்படி விரட்டின.

தம்மைவிட்டு இளவரசர் பாக்ரேஷன் போன பின்பு, ஷார்ன் கிராபெர்ன் கிராமத்திற்கு நெருப்பு வைக்கும் வேலையில் டூஷின் வெற்றிபெற்றார்.

'அவர்கள் ஓடுவதைப் பாருங்கள். அது எரிந்துகொண்டிருக்கிறது! அந்தப் புகையைப் பாருங்கள். பலே பேஷ்! அபாரம்! இந்தப் புகையைப் பாருங்கள்; அந்தப் புகையை!' என்று பீரங்கிப் படைக்காரர்கள் முகத்தில் ஒளிவீசக் கூச்சல் போட்டார்கள்.

உத்தரவுகளை எதிர்பார்க்காமலே நெருப்பின் திசையை நோக்கிப் பீரங்கிகள் சுட்டுக்கொண்டிருந்தன. சிப்பாய்களை ஒருவருக் கொருவர் தூண்டிவிடுவதைப் போல ஒவ்வொரு குண்டும் வெளிப்பட்டபோது, 'பலேபேஷ்! அதுதான் சரி! அதைப் பாருங்கள்... அபாரம்!' என்று கத்திக்கொண்டிருந்தார்கள். காற்றடித்து நெருப்பைத் தூண்டிவிடவே நெருப்பு வேகமாய்ப் பரவிக்கொண்டிருந்தது. கிராமத்திற்கு அப்பால் போய்க் கொண்டிருந்த பிரஞ்சுத் துருப்புகள் திரும்பிவந்து, தங்களுடைய தோல்விக்குப் பழிதீர்ப்பதுபோல கிராமத்திற்கு வலது பக்கத்தில் பத்து பீரங்கிகளைக்கொண்டுவந்து நிறுத்தி, டூஷினின் பீரங்கிப் படையைப் பார்த்துச் சுட ஆரம்பித்தார்கள்.

நெருப்புப் பிடித்து எரிவதைப் பார்த்தும், பிரஞ்சுக்காரர்களை வெற்றிகரமாய் பீரங்கியால் தாக்க முடிந்த தங்கள் அதிருஷ்டத்தை எண்ணியும் குழந்தைகளைப் போல சந்தோசம் கொண்டு மகிழ்ந்திருந்தபடியால் எதிரிகளின் பீரங்கிஅமைப்பைக் கவனிக்கவில்லை. நமது பீரங்கிக் கூட்டத்தில் முதலில் இரண்டு குண்டுகளும், பின்னால் நான்கு குண்டுகளும் விழுந்து, இரண்டு குதிரைகளைக்கொன்று, குண்டு - வண்டியை ஓட்டுகிறவனின் ஒரு காலைப்பிய்த்தெறிந்த பின்புமே இதைக் கவனித்தார்கள். உச்ச ஸ்தானத்தில் நின்ற அவர்களுடைய உற்சாகம் என்னவோ குறையவில்லை. ஆனால் அதன் குணத்தில் மட்டும் மாறுதல் ஏற்பட்டது. இறந்துபோன குதிரைகளுக்குப் பதிலாக ரிசர்வ் பீரங்கி வண்டியின் குதிரைகளைக் கொண்டுவந்து மாட்டினார்கள். காயம்பட்டவர்களை அப்புறப்படுத்தினார்கள். எதிரிகளின் பத்து பீரங்கிப் படைக்கு நேராக நமது நான்கு பீரங்கிகளையும் திருப்பினார்கள். போராட்டத்தின் ஆரம்பத்திலேயே டூஷினுடைய

உதவி அதிகாரி கொல்லப்பட்டார். ஒருமணி நேரத்திற்குள்ளாக நாற்பது பேர்களைக் கொண்ட அந்தப் பீரங்கிக்காரர்களில் பதினேழுபேர் இலாயக்கில்லாமல் போய்விட்டார்கள். என்றாலும், பீரங்கிக்காரர்கள் இன்னமும் அதே மாதிரி மகிழ்ச்சியோடும் உற்சாகத்தோடும் இருந்துவந்தார்கள். இரண்டு தடவைகள் தங்களுக்குக் கீழே பிரஞ்சுக்காரர்கள் தோன்றுவதைப் பார்த்தார்கள். இரண்டு தடவைகளிலும் அவர்கள் மீது ரவைக் குண்டுகளைச் சுட்டார்கள்.

அந்தச் சிறிய டூஷின் பலவீனமாகவும் விகாரமாகவும் இங்கும் அங்கும் நடந்துகொண்டு, -'இதற்காக என் சுங்கானை நிரப்பிக் கொடு' என்று தமது சேவகனிடம் அடிக்கடி சொல்வதுண்டு. அப்புறம் சுங்கானைக் கைப்பற்றி, அதிலிருந்து தீப்பொறிகள் பறக்க முன்னால் ஓடி, தமது சிறிய கையைக் கண்ணுக்கு மேலாக வைத்து, பிரஞ்சுக்காரர்களைக் குறிபார்ப்பார்.

'அவர்களை உதையுங்கள், வாலிபர்களே' என்று அவர் அடிக்கடி சொல்லிப் பீரங்கியின் சக்கரத்தைக் கைப்பற்றி தாமே குறிபார்த்துவைப்பார். புகைகளுக்கு இடையிலும், காதுகளைச் செவிடாக்கும்படியான குண்டுகளின் சத்தங்களுக்கு இடையிலும் டூஷின் தமது சுங்கானை வாயை விட்டு எடுக்காமல், ஒரு பீரங்கியிலிருந்து இன்னொருபீரங்கிக்கு ஓடுவார். ஒரு தடவை, சுடுவதற்குக் குறி பார்த்துச் சொல்லுவார். மற்றொரு தடவை குண்டுகளின் எண்ணிக்கையைக் கூட்டிக்கொண்டிருப்பார். இன்னொரு தடவை மாண்டுபோன மனிதர்களையும் காயமடைந்த குதிரைகளையும் அப்புறப்படுத்தி, அவர்கள் ஸ்தானத்தில் புதிதாய்க் கொண்டுவந்து வைக்க ஏற்பாடு செய்வார். எப்பொழுதும் தமது பலவீனமான குரலில் முழுத் தொண்டையிலும் உறுதியோடும் கத்திக்கொண்டிருப்பார். அவருடைய முகம் மேலும் மேலும் பரபரப்படைந்தது. ஒரு வீரர் காயமடைந்தோ, கொல்லப்பட்டோ போன சமயங்களில்தான் அவர் முகத்தைச் சுளித்துத் தமது பார்வையைத் திருப்பிக் கொள்ளுவார். காயம்பட்டவர்களையும் மாண்டுபோனவர்களையும் அப்புறப்படுத்துவதில் எப்பொழுதுமே வீரர்கள் வழக்கம்போல் தயங்குவார்கள். அந்தச் சமயங்களில் அவர்களைப் பார்த்துக் கோபமாகக் கூச்சலிடுவார். சிப்பாய்கள் அநேகமாய் அழகானவர்களாய் இருப்பார்கள். அதே மாதிரி பீரங்கிப் படையைச் சேர்ந்தவர்கள் தலையும் புஜங்களும் தங்கள் அதிகாரியைவிட உயரமாகவும் இரண்டு மடங்கு அகலமாகவும் இருப்பார்கள். ஒரு எக்கச் சக்கமான நிலைமையில் குழந்தைகள் பார்ப்பதைப்போல அவர்கள் தங்கள் கமாண்டரைப் பார்ப்பார்கள்.

அவருடைய முகத்தில் என்ன தோற்றம் ஏற்படுகிறதோ, அது அநேகமாய் அவர்கள் முகத்திலும் பிரதிபலிக்கும்.

பயங்கரமான கூச்சல்களினாலும், மனதை ஒருமைப்படுத்தி வேலைசெய்யவேண்டிய அவசியத்தினாலும் டூஷினுக்குத் துளியளவு கூட பயம் என்பதே தோன்றவில்லை. தாம் கொல்லப் படக்கூடும், அல்லது ,மோசமாய்க் காயமடையக்கூடும் என்ற எண்ணங்கள் அவருக்கு ஏற்படவே இல்லை. அதற்கு விரோதமாக வரவர அவருக்குக் குதூகலம் அதிகரித்து வந்தது. தாம் நின்றுகொண்டிருக்கும் இடம் அவருக்கு நன்றாய்த் தெரிந்தது போலவும் ரொம்பப் பழக்கமானது போலவும் தோன்றியது. எதிரியை முதலில் அவர் பார்த்து முதல் குண்டு போட்டு வெகுநேரம் ஆகிவிட்டது போலவும், அநேகமாய் ஒருநாள் கடந்துவிட்டது போலவும் அவருக்குத் தோன்றியது. அதிகாரிகளில் மிகச் சிறந்தவர்கள் அவருடைய நிலைமையில் இருந்தால் என்ன செய்வார்களோ அதையெல்லாம் அவர் செய்தார். ஒவ்வொன்றைப் பற்றியும் அவர் நினைத்தார்; ஒவ்வொன்றைப் பற்றியும் அவர் சிந்தனை செய்தார். என்றாலும் அவருடைய நிலைமை சுரத்தினால் ஜன்னி கண்டது போலவோ, அல்லது அமிதமாய்க் குடித்தது போலவே இருந்தது.

தமது பீரங்கிகளினால் தம்மைச் சுற்றி ஏற்பட்ட செவிடுபடும் சத்தங்களினாலும், எதிரி குண்டுகளின் சீற்றங்களினாலும், அவை கீழே விழும் ஓசைகளினாலும், பீரங்கிகளைச் சுற்றிப் பரபரப்போடு வேலைசெய்துகொண்டிருந்த பீரங்கிக்காரர்களின் சிவந்த வியர்வை நிரம்பிய முகங்களைக் கண்டும், மனிதர்களுடையவும் குதிரை களுடையவும் இரத்தத்தைக் கண்டும், எதிரி பக்கத்தில் தோன்றிய சிறு சிறு புகைக் கூட்டங்களினாலும், அந்தப் புகை தோன்றியபோது ஒரு குண்டு பறந்துவந்து பூமியையோ ஒரு மனிதனையோ ஒரு பீரங்கியையோ ஒரு குதிரையையோ தாக்குவதைக் கண்டும், இந்தக் காட்சிகளெல்லாம் சேர்ந்து அவருக்கு, அவருக்கே சொந்தமான ஒரு அதிசயமான உலகத்தை சிருஷ்டி செய்து அவருடைய மூளையைப் பற்றிக்கொண்டன. அந்த வினாடியில் அது அவருக்கு இன்பத்தைக் கொடுத்தது. எதிரிகளின் பீரங்கிகள் அவருடைய கற்பனை உலகத்தில் அவருக்குப் பீரங்கிகளாய்த் தோன்றவில்லை; சுங்கான்களைப் போல் தோன்றின. கண்ணுக்குத் தெரியாத ஒரு புகைக் குடியர் அவற்றை இழுத்து இடையிடையே புகை விடுவதாக அவருக்குத் தோன்றியது.

'அதோ... அவன் மீண்டும் புகை விடுகிறான்' என்று குன்றிலிருந்து தோன்றிய சிறிய புகை மேகம் மேலே கிளம்பிக்

காற்றினால் இடது பக்கம் அடித்துக்கொண்டுபோவதைப் பார்த்ததும், டூஷின் தமக்குள்ளாகவே முணுமுணுத்துக் கொண்டார். 'இப்பொழுது வரப்போகிற பந்தை கவனித்துப் பார்... அதை நாம் திருப்பி வீசுவோம்.'

'உமக்கு என்ன வேண்டும், கௌரவமானவரே?' என்று அவர் பக்கத்தில் நின்ற ஒரு பீரங்கிக்காரன் அவர் முணுமுணுப்பதை அறிந்து அவரைக் கேட்டான்.

'ஒன்றுமில்லை... ஒரு பீரங்கிக் குண்டுதான் வேண்டும்...' என்று அவர் பதிலளித்தார்.

'நமது 'மட்வேவ்னா'வே, இங்கே வா' என்று அவர் தமக்குள்ளாகவே சொல்லிக்கொண்டார். மாத்யூவின் குமாரியான மட்வேவ்னா என்ற பெயரைப் பீரங்கிப் படையில் கடைசியாய் இருந்த ஒரு பீரங்கிக்கு அவருடைய கற்பனை விசித்திரம் பெயரிட்டிருந்தது. அது பெரிய பீரங்கி. பழைய காலத்து மோஸ்தர். பிரஞ்சுக்காரர்கள் அவர்களுடைய பீரங்கிகளைச் சுற்றி நிற்பது அவருக்கு எறும்புகளைப் போலத் தோன்றினார்கள். இரண்டாவது பீரங்கியின் சிப்பந்திகளில் 'நெம்பர் ஒன்று' ஆசாமி ஒரு அழகான குடிகாரன். அவனுக்கு மாமன் என்று பெயர். வேறு யாரையும் பார்ப்பதைவிட அவனை டூஷின் அதிகமாய்ப் பார்ப்பார். அவனுடைய ஒவ்வொரு அசைப்பிலும் ஆனந்தம் கொள்வார். குன்றின் அடியில் துப்பாக்கி வேட்டுகளின் சத்தம் ஒருவர் சுவாசம் வாங்குவதைப் போல, ஒரு சமயம் கூடுவதும் மற்றொரு சமயம் குறைவதுமாய் இருந்தது. இந்தச் சத்தங்களின் உயர்வுதாழ்வுகளை அவர் கவனமாய்க் கேட்டு வந்தார்.

'ஆ, மறுபடியும் மூச்சு விடுகிறான், மூச்சு விடுகிறான்' என்று அவர் தமக்குள்ளாக முனங்கிக் கொண்டார்.

தாம் ஒரு பிரம்மாண்டமான உயரமும் பலமும் பொருந்தியவர் போலவும், தமது கைகளாலேயே பீரங்கிக் குண்டுகளை எடுத்து பிரஞ்சுக்காரர்கள் மீது வீசுவது போலவும் அவர் மனோராஜ்யம் செய்துவந்தார்.

'சரி இப்பொழுது, மட்வேவ்னா, எனது பழைய சீமோட்டியே, என்னைக் கைவிட்டு விடாதே' என்று அந்தப் பீரங்கியை விட்டு நகர்ந்தபோது அவர் சொல்லிக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் திடீரென்று ஒரு பழக்கமில்லாத அந்நியக் குரல் தமது தலைக்கு மேலாக, 'கேப்டன் டூஷின், கேப்டன்' என்று அழைப்பது கேட்டது.

டூஷின் அச்சத்தோடு திரும்பினார். கிரந்த் என்ற இடத்தில் கடைக்காரன் கூடாரத்திலிருந்து அவரை வெளியேற்றிய அதே

உதவியாளர்தான் அழைத்தார். மூச்சுத் தடுமாறும் குரலில் அவர் கூச்சலிட்டார்.

'உமக்கென்ன பைத்தியமா? பின்வாங்கும்படி இரண்டுதடவை உமக்கு உத்தரவிட்டோம். ஆனால் நீர்...'

'என் மீது அவர்கள் ஏன் பாய்கிறார்கள் ?' என்று டூஷின் நினைத்துக் கலவரத்தோடு தமது மேல் அதிகாரியைப் பார்த்தார்.

'நான்... இல்லை...' என்று அவர் முனகி இரண்டு விரல்களைத் தமது தொப்பியில் வைத்து சல்யூட் அடித்தார். 'நான்...'

அந்தப் பரிவார அதிகாரி தாம் என்ன சொல்ல நினைத்தாரோ அதைச் சொல்லி முடிக்கவில்லை. அவருக்குச் சமீபமாக ஒரு பீரங்கிக் குண்டு பறந்தபடியால் அவர் குதிரை மீது வளைந்து குனிந்தார். அவர் சிறிது நிறுத்தி மீண்டும் எதையோ சொல்லத் தொடங்கும்போது, மற்றொரு குண்டு அவர் பேசுவதை நிறுத்தியது. அவர் தமது குதிரையைத் திருப்பிப் பாய்ச்சலில் தட்டிவிட்டார்.

'பின் வாங்குங்கள், எல்லாரும் பின் வாங்குங்கள்' என்று தூரத்திலிருந்து அவர் கத்தினார்.

'சிப்பாய்கள் சிரித்தார்கள். ஒரு விநாடி கழிந்ததும் அதே மாதிரி உத்தரவை ஒரு உதவியாளர் கொண்டுவந்தார்.

அப்படிக் கொண்டுவந்தவர் இளவரசர் ஆண்ட்ரூ. டூஷினுடைய பீரங்கிகள் இருந்த இடத்திற்கு அவர் சவாரி செய்து மேலே வந்தபோது கடிவாளமிடப்பட்ட குதிரைகளுக்குப் பக்கத்தில் ஒரு கடிவாளம் இல்லாத குதிரை கால் முறிந்து பரிதாபகரமாய்க் கூச்சலிட்டுக்கொண்டு கிடந்ததைப் பார்த்தார். ஒரு ஊற்றிலிருந்து தண்ணீர் கிளம்புவதைப் போல அதன் காலிலிருந்து இரத்தம் பீறிக்கொண்டிருந்தது. கழற்றிவிடப்பட்ட பீரங்கி வண்டிகளுக் கிடையே பல வீரர்கள் மாண்டுகிடந்தார்கள். அவர் கிட்டே நெருங்கும்போது ஒன்றுக்குமேல் ஒன்றாகப் பீரங்கிக் குண்டுகள் அவரைக் கடந்துசென்றன. அவர் முதுகெலும்பில் ஒரு பய நடுக்கம் பாய்ந்து இறங்கியதை அவர் உணர்ந்தார். ஆனால், தாம் பயப்படுவதாக நினைத்த மாத்திரத்தில் அவருக்கு மீண்டும் தைரியம் பொங்கியது. 'நான் பயப்படக்கூடாது' என்று அவர் நினைத்து பீரங்கிகளுக்கு மத்தியில் தமது குதிரையிலிருந்து மெதுவாக இறங்கினார். தாம் கொண்டு வந்த உத்தரவை அவர் சொன்னார். ஆனால், பீரங்கிப் படையைவிட்டு அவர் போகவில்லை. பீரங்கிகளை அகற்றித் தமது முன்னிலையிலேயே அப்புறப் படுத்துவதென்று அவர் தீர்மானித்தார். டூஷினுடன் தாமும் சேர்ந்து இறந்தவர்களைக் கடந்து சென்று பயங்கரமான பிரஞ்சு

குண்டுகளுக்கிடையில் பீரங்கிகளை அப்புறப்படுத்தும் வேலையில் இறங்கினார்.

'ஒரு நிமிடத்திற்கு முன்னால் ஒரு பரிவார அதிகாரி இங்கே வந்தார். ஆனால், ஓடிவிட்டார். உம்மைப் போலல்ல அவர், கௌரவமானவரே' என்று ஒரு பீரங்கிப் படைக்காரன் இளவரசர் ஆண்ட்ரூவிடம் கூறினான்.

டூஷினிடம் இளவரசர் ஆண்ட்ரூ ஒன்றும் சொல்லவில்லை. அவர்கள் இருவரும் மிகுந்த சுறுசுறுப்பாய் இருந்தபடியால், ஒருவரை ஒருவர் கவனித்துக் கொள்ளவில்லை என்பதுபோல் தோன்றியது. நான்கு பீரங்கிகளில் இரண்டு பழுதடையாமல் இருந்தன. அந்த இரண்டையும் குன்றின் கீழே இறக்கிக் கொண்டு போக ஆரம்பித்தார்கள். மற்ற இரண்டு பீரங்கிகளையும் அங்கேயே விட்டுவிட்டார்கள். இளவரசர் ஆண்ட்ரூ டூஷினிடம் சென்று, 'நல்லது, நாம் மீண்டும் சந்திக்கின்றவரையில்...' என்று சொல்லித் தமது கையை டூஷினிடம் நீட்டினார்.

'வணக்கம், எனது அன்பான பேர்வழியே' என்றார் டூஷின். 'அன்பான உயிரே, வணக்கம். எனது அன்பான பேர்வழியே' என்று அவர் சொல்லியபோது எதற்காகவோ அவருடைய கண்களில் திடீரென்று நீர் நிறைந்துவிட்டது.

## 2
## 21

காற்று நின்றுவிட்டது. வெடி மருந்துப் புகையோடு கறுப்பு மேகங்களும் கலந்து யுத்தக் களத்தில் அடிவானத்தில் தாழ்வாய்த் தொங்கிக்கொண்டிருந்தன. இருட்ட ஆரம்பித்து விட்டது. அதனால் அந்த இரண்டு நெருப்புகளின் பிரகாசம் விசேசமாய்த் தெரிந்தது. பின்பக்கமும் இடது பக்கமும் துப்பாக்கிச் சத்தங்கள் அடிக்கடியும், சமீபமாயும் கேட்டுக் கொண்டிருந்தன. பீரங்கிச் சத்தங்கள் மறைந்துகொண்டு வந்தன. டூஷின் தமது பீரங்கிகளோடு தொடர்ந்து சுற்றிப் போய்க்கொண்டிருந்தார். போகிற வழியில் பல காயம் பட்டவர்களைப் பார்த்தார். துப்பாக்கி சுடும் எல்லைக்கு அப்புறமாக அவர்போனபின்பு பள்ளத்தாக்கில் இறங்கினார். அங்கே பரிவாரத்தைச் சேர்ந்த சிலர் அவரைச் சந்தித்தார்கள். அவர்களில் பரிவார அதிகாரியும் ஜெர்கோவும் இருந்தார்கள். அந்த ஜெர்கோவை இரண்டு தடவைகள் டூஷினின் பீரங்கிப் படைக்கு அனுப்பினார்கள். ஆனால் அவர் அங்கே வந்து சேரவே இல்லை. ஒருவரையொருவர்

முந்திக்கொண்டு அவர் எப்படிப் போக வேண்டுமென்று எல்லாரும் அவருக்கு உத்தரவுகளைக் கொடுத்து, திட்டிக்கொண்டும் கண்டித்துக் கொண்டும் இருந்தார்கள். டூஷின் எந்த உத்தரவையும் கொடுக்கவில்லை. மௌனமாகத் தமது பீரங்கிப் படையின் குதிரை மீது பின்னால் போய்க்கொண்டிருந்தார். அவர் பேசுவதற்குப் பயந்தார். ஏனெனில் அவர் பேச ஆரம்பித்தால் என்ன காரணத்திற்காகவோ அவருக்கு அழுகை வரும் என்று தோன்றியது. காயம் அடைந்தவர்களை விட்டுப் போய்விடவேண்டும் என்பதே உத்தரவு. என்றாலும் துருப்புகளுக்குப் பின்னால் பல காயம் அடைந்தவர்கள் தாங்களே இழுத்திழுத்து நடந்துகொண்டு, பீரங்கி வண்டிகளில் தங்களுக்கு இடம் கொடுக்குமாறு கெஞ்சினார்கள். போராட்டத்திற்கு முன்பாக, டூஷினின் விடுதியிலிருந்து வேகமாய் வெளியே ஓடிய அந்தச் சந்தோசமான கால்படை அதிகாரி, வயிற்றில் ஒரு குண்டுக் காயத்தோடு மட்வேவ்னா என்ற பீரங்கி வண்டியில் கிடத்தப்பட்டிருந்தார். குன்றின் அடிவாரத்தில் ஒரு வெளிறிய குதிரைப் படைத் தொண்டர் தமது ஒரு கையை மற்றொரு கையால் பிடித்துக்கொண்டு டூஷினிடம் வந்து தமக்கு வண்டியில் இடம் கொடுக்கும்படி கேட்டார்.

'கேப்டன், கடவுளுக்காக!' எனது கை அடிபட்டு விட்டது. கடவுளுக்காக... என்னால் நடக்க முடியாது. கடவுளுக்காக' என்று தயக்கத்தோடு பேசினார்.

இதற்கு முன்னால் பல தடவைகள் வண்டியில் அவர் இடம் கேட்டார் என்பதும் அவருக்குக் கிடைக்கவில்லை என்பதும் தெளிவாய்த் தெரிந்தது. அவர் தயக்கத்தோடு பரிதாபமான குரலில் கேட்டார்.

'கடவுளுக்காக, எனக்கு இடம்கொடுக்கும்படி அவர்களுக்குச் சொல்லும்.'

'அவருக்கு இடம்கொடு' என்று டூஷின் சொன்னார். 'அவர் உட்காருவதற்கு ஒரு வெளிச்சட்டையைக் கீழே விரி, வாலிபனே' என்று தமது அபிமான சிப்பாயிடம் சொன்னார். 'அந்தக் காயம்பட்ட அதிகாரி எங்கே?'

'அவரைக் கீழே இறக்கிவிட்டோம். அவர் இறந்துவிட்டார்' என்று ஒருவர் பதில் அளித்தார்.

'அவருக்கு உதவி செய்யுங்கள். உட்காரும், எனது அன்பானவரே, கீழே உட்காரும் அந்த வெளிச்சட்டையைப் பரப்பிக்கொடு அண்டோனாவ்.'

அந்தத் தொண்டர்தான் ராஸ்டோவ். தமது ஒரு கையால் மற்றொரு கையை ஆதரித்துக் கொண்டிருந்தார். அவர் முகம் வெளிறிப் போயிருந்தது. ஜுரத்தால் ஏற்பட்ட நடுக்கம் போல அவருடைய நாடி நடுங்கிக் கொண்டிருந்தது. அவர் மட்வேவ்னா பீரங்கி வண்டியில் வைக்கப்பட்டார். அதிலிருந்துதான் இறந்த அதிகாரியை அவர்கள் அப்புறப்படுத்தினார்கள். அவருக்காக விரித்த அந்த வெள்ளைச்சட்டை ரத்தத்தால் நனைந்திருந்தது. அதனால் ராஸ்டோவின் கால் சட்டைகளும், கையும் ரத்தமாய் இருந்தன.

'என்ன நீர் காயம் அடைந்துவிட்டீர், எனது வாலிபரே?' என்று டூஷின் கேட்டு, ராஸ்டோவ் உட்கார்ந்திருந்த பீரங்கி வண்டியின் பக்கத்திற்கு வந்தார்.

'இல்லை, அது ஒரு சுளுக்குத்தான்.'

'அப்படியானால் இந்தப் பீரங்கி வண்டியில் ரத்தம் ஏது?' என்று டூஷின் கேட்டார்.

'அந்த அதிகாரியின் இரத்தம்தான் கரைபடிந்துவிட்டது. கௌரவமானவரே' என்று பீரங்கிக்காரன் பதில் அளித்து, அந்த இரத்தத்தைத் தனது கோட்டின் கைச் சட்டையில் துடைத்து, பீரங்கி வண்டியை அம்மாதிரி அசுத்தத்தோடு வைத்திருப்பதற்கு மன்னிப்புக் கேட்பது போலச் செய்தான்.

தரைப்படையின் உதவியினால் அந்த பீரங்கிகளை மேலே கொண்டுவருவது ஒன்றைத்தான் அவர்களால் செய்யமுடிந்தது. கிரண்டிர் ஸ்டார்ப் என்ற கிராமத்திற்கு அவர்கள் வந்து சேர்ந்ததும் அங்கே தங்கினார்கள். அப்பொழுது மிகவும் இருட்டிவிட்ட படியால் பத்து அடிக்கு அப்புறம் இருந்த சீருடைகளைக் கூடப் பார்க்கமுடியாமல் இருந்தது. துப்பாக்கி சுடுதல் குறைய ஆரம்பித்தது. திடீரென்று வலது பக்கமாகக் கூச்சலும் சுடுகிற சத்தமும் மீண்டும் கேட்டன. தோட்டாக்களின் வெளிச்சம் இருட்டில் மின்னியது. இதுதான் பிரஞ்சுக்காரர்களின் கடைசித் தாக்குதல். கிராமத்தில் வீடுகளில் தங்கியிருந்த சிப்பாய்கள் இதை எதிர்த்துப் பதில் கொடுத்தார்கள். எல்லோரும் கிராமத்தை விட்டு வெளியே ஓடிவந்தார்கள்.

ஆனால் டூஷினுடைய பீரங்கிகளை அசைக்கமுடியவில்லை. பீரங்கிப் படைக்காரர்களும், டூஷினும், அந்தத் தொண்டரும் ஒருவரையொருவர் மௌனமாகப் பார்த்துவிட்டுத் தங்களுடைய விதிக்காகக் காத்திருந்தார்கள். சுடும் சத்தம் குறைந்தது. சிப்பாய்கள் பக்கத்துத் தெருவிலிருந்து ஆவலோடு பேசிக்கொண்டு வெளியே வந்தார்கள்.

'காயம் படவில்லையே, பெட்ராவ்?' என்று ஒருவர் கேட்டார்.'

'அவர்களுக்குச் சூடாகக் கொடுத்துவிட்டோம் தோழனே. இன்னொரு தடவை மறுபடியும் அவர்கள் இப்பொழுது தாக்கமாட்டார்கள்' என்றான் மற்றொருவன்.

'உன்னால் எதுவும் பார்க்க முடியாது. அவர்கள் எப்படித் தங்கள் ஆட்களையே சுட்டுக்கொண்டார்கள் பார்த்தீர்களா? எதையும் பார்க்க முடியவில்லையே. மை இருட்டாய் இருக்கிறது, சகோதரனே. இங்கே குடிப்பதற்கு எதுவும் கிடையாதா?'

கடைசியாக பிரஞ்சுக்காரர்கள் திருப்பி அடிக்கப்பட்டார்கள். அந்தப் பூரணமான இருட்டில் டூஷினின் படை பீரங்கிகள் மீண்டும் மீண்டும் மேலே போய்க்கொண்டிருந்தன. அதைச் சுற்றி காலாட் படை பாராவும் போய்க் கொண்டிருந்தது.

ஒரு இருளடைந்த கண்ணுக்குத் தெரியாத நதி ஒன்று, ஒரே திசையில் ஓடிக்கொண்டிருப்பதைப் போல, அந்தச் சிப்பாய்கள் போவது அந்த இருட்டில் தோன்றியது. மெதுவாய் அவர்கள் பேசிக் கொண்டு போன சத்தமும் குதிரைகளின் குளம்படிகள் சத்தமும், வண்டிகளின் சக்கர ஓசைகளும் கேட்டுக்கொண்டிருந்தன. பொதுவான இரைச்சலுக்கு மேலாகக் காயம் அடைந்தவர்களின் முனங்குதல்களும் கூச்சலும் வேறு எந்த சத்தத்தையும் விட வெகு தெளிவாக அந்த இருட்டில் கேட்டன. பட்டாணத்தை மூடியிருந்த சோகம் அவர்களுடைய முனங்குதல்களால் நிரம்பியிருந்தது. அவையெல்லாம் அந்த இரவின் இருட்டோடு கலந்து ஒன்றாய் நின்றாற்போலத் தோன்றியது. சிறிது நேரத்திற்குப் பின்னால், நடந்துபோய்க் கொண்டிருந்த அந்தச் சிப்பாய்கள் திடீரென்று பரபரப்படைந்தார்கள். ஒரு வெள்ளைக் குதிரை மீது தமது பரிவாரங்களோடு ஒருவர் அவர்களைக் கடந்து போய்க் கொண்டிருந்தார். அவர் போகும்போது, 'அவர் என்னசொன்னார்? இப்போது எங்கே போகிறோம்? இங்கே தங்கப் போகிறோமா? நம்மைப் பாராட்டினாரா?' என்ற ஆவலான கேள்விகள் எல்லாப் பக்கங்களிலிருந்தும் ஒலித்தன. அந்தத் துருப்புக் கூடங்கள் நெருங்கி நிற்க ஆரம்பித்தன. நிற்கும்படி உத்தரவிட்டதாக ஒரு வதந்தி பரவியது. முன்னால் போனவர்கள் ஒருவேளை நின்றிருக்கலாம். அந்தச் சகதியான ரஸ்தாவின் மத்தியில் எல்லோரும் எங்கே நின்றார்களோ, அங்கேயே நின்றுகொண்டிருந்தார்கள்.

கணப்பு மூட்டங்கள் பொருத்தப்பட்டன. பேச்சுகள் தெளிவாய்க் கேட்க ஆரம்பித்தன. கேப்டன் டூஷின் தமது கம்பெனிக்கு வேண்டிய உத்தரவுகளைக் கொடுத்த பின்பு, அந்தத் தொண்டருக்கு வைத்தியம்

செய்வதற்காக, ஒரு வைத்திய வண்டியையோ அல்லது ஒரு டாக்டரையோ கண்டுபிடித்து வருமாறு ஒரு சிப்பாயை அனுப்பினார். அனுப்பிவிட்டு, ரஸ்தாவில் சிப்பாய்களால் மூட்டப்பட்டிருந்த கணப்பு மூட்டத்தின் பக்கத்தில் உட்கார்ந்து குளிர் காய்ந்துகொண்டிருந்தார். ராஸ்டோவ் கூடக் கஷ்டப்பட்டு அந்த நெருப்பு மூட்டத்திற்குப் பக்கத்தில் வந்தார். வலியினாலும், குளிரினாலும் ஈரத்தினாலும் ஒரு ஜுர நடுக்கம் அவருடைய முழு உடம்பையுமே ஆட்டிக் கொண்டிருந்தது. தூக்கச் சடைவு தடுக்க முடியாதபடி அவரைப் பிடித்து ஆட்டியது. ஆனால் அவர் கை அவருக்குக் கொடுத்துவந்த சகிக்க முடியாத வலியினால் அவர் விழித்துக் கொண்டிருந்தார். தமது கையை திருப்திகரமான ஒரு நிலைமையில் வைத்துக்கொள்ள அவரால் முடியவில்லை. அவர் தமது கண்களை மூடிக்கொண்டு சிறிது நேரம் கழித்து நெருப்பைப் பார்த்து விழித்துக் கொண்டு (அந்த நெருப்பு, அப்பொழுது அவருக்குக் கண்ணைப் பறிக்கும் சிவந்த நிறமாய் இருந்தது.) மெலிந்த உருண்டைத் தோள்களையுடைய டூஷினைப் பார்த்துக் கொண்டிருந்தார். டூஷின் ஒரு துருக்கியரைப் போலச் சம்மணம் போட்டு அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். டூஷினின் பெரிய, அன்பான புத்திசாலித்தனமான கண்கள் அனுதாபத்தோடு ராஸ்டோவைப் பார்த்தன. தமது முழு மனதோடு அவர் ராஸ்டோவுக்கு உதவி செய்ய விரும்பியதையும், ஆனால் அவரால் ஒன்றும் செய்ய முடியாதிருப்பதையும் அவை காட்டின.

நாலா பக்கங்களும் காலாட்படையின் காலடி ஓசையும், பேசும் சத்தமும் கேட்க ஆரம்பித்தன. அவர்கள் நடந்துகொண்டும், சவாரி செய்துகொண்டும் வந்து, அங்கங்கே சுற்றிலும் அமர்ந்தார்கள். பேச்சு சத்தமும், மனிதர்களின் காலடி ஓசையும் சகதியில் போய்க் கொண்டிருந்த குளம்படிகளின் சத்தமும், பக்கத்திலும் தூரத்திலுமிருந்து நெருப்பு மூட்டங்களின் சத்தங்களும், எல்லாம் ஒன்றாகக் கலந்து ஒரே நடுக்கமான கூச்சலாய் இருந்தது.

ஒரு இருண்ட கண்காணாத நதி சோகத்தினூடே ஓடிக் கொண்டிருந்ததைப் போன்ற காட்சியை இப்பொழுது காணமுடிய வில்லை. ஆனால் ஒரு இருண்ட சமுத்திரம் புயலுக்குப் பின்னால் பொங்கியமர்ந்து வருவதைப் போல இப்பொழுது காணப்பட்டது. தமக்கு முன்னாலும், தம்மைச் சுற்றியும் நடந்து வந்த காரியங்களை ராஸ்டோவ் சிரத்தையில்லாமல் பார்த்தும், கேட்டும் வந்தார். ஒரு காலாட்படை வீரர் அந்தக் கணப்பு மூட்டத்திற்கு வந்து குதிகால்களில் குந்திக்கொண்டு நெருப்புக்கு மேலாகத் தமது கைகளைக் காட்டினார். அவர் டூஷின் பக்கம் திரும்பி 'நான் இப்படிச்

செய்வதில் உமக்கு ஆட்சேபணையில்லையே, கௌரவமானவரே? எனது கம்பெனியை விட்டு நான் தவறிவிட்டேன், கௌரவமான வரே எங்கே என்பது தெரியவில்லை... அவ்வளவு துரதிருஷ்டம்' என்று பேசினார்.

அந்தச் சிப்பாய் கன்னத்தில் கட்டுப் போட்டுக் கொண்டிருந்தார். ஒரு காலாட்படை அதிகாரியும் அந்தக் கணப்பு மூட்டத்திற்கு வந்தார். அவர் டூஷினைப் பார்த்து அந்தப் பீரங்கி வண்டிகளைக் கொஞ்சம் நகர்த்தி, சாமான் வண்டி போவதற்கு வழி விடுமாறு கேட்டார். அவர் போனபின்பு, இரண்டு சிப்பாய்கள் அந்தக் கணப்பு மூட்டத்திற்கு வந்தார்கள். அவர்கள் இருவரும் துணிகரமாய் வாய்ச்சண்டையும், கைச்சண்டையும் போட்டு, ஒரு ஜோட்டைப் பிடுங்கிக் கொள்ள முயற்சித்தார்கள். அதை அவர்கள் இருவரும் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

'நீ தான் பொறுக்கினாயா, நீ ரொம்பக் கெட்டிக்காரன்தான்' என்று ஒருவன் கரகரத்த தொண்டையில் கத்தினான்.

ஒரு மெலிந்த, முகம் வெளிறிய சிப்பாய் தனது கழுத்தில் இரத்தம் தோய்ந்த கால்பட்டியால் ஒரு கட்டு கட்டிக்கொண்டு, அங்கே வந்து கோபமாகப் பீரங்கிப் படைக்காரர்களைப் பார்த்து, தண்ணீர் கொடுக்குமாறு கேட்டான். 'நாய் மாதிரி ஒருவன் சாக வேண்டுமா?' என்று அவன் கேட்டான்.

டூஷின் தமது ஆட்களிடம் சொல்லி, அவனுக்குத் தண்ணீர் கொடுக்கச் சொன்னார். பின்னால், ஒரு குதூகலமான சிப்பாய் அங்கே ஓடிவந்து, காலாட்படைக்குச் சிறிது நெருப்பு கொடுக்கு மாறு கெஞ்சினான்.

'ஒரு நல்ல தீவட்டியாகக் காலாட்படைக்குக் கொடுங்கள். உங்களுக்கெல்லாம் அதிர்ஷ்டம் வருமாக எனது தேசத்தவர்களே. நெருப்பிற்காக வந்தனங்கள். வட்டியோடு நாங்கள் திருப்பிக் கொடுப்போம்' என்று அவன் சொல்லிக்கொண்டே ஒரு நெருப்புக் கட்டையை எடுத்துக் கொண்டு போனான்.

அடுத்தாற்போல் நான்கு சிப்பாய்கள் ஒரு மேல்சட்டையில் ஏதோ கனமாகத் தூக்கிக்கொண்டு அந்தக் கணப்பு மூட்டத்தின் பக்கமாய்ப் போனார்கள். அவர்களில் ஒருவன் இடறினான். 'போகிற வழியில் எந்தப் பிசாசு கட்டைகளைப் போட்டு வைத்திருக்கிறது' என்று அவன் கத்தினான்.

'அவன் செத்துப் போனான். எதற்காக அவனைச் சுமக்க வேண்டும்?' என்று இன்னொருவன் கேட்டான்.

‘வாயை மூடு’.

அவர்கள் தங்கள் சுமையோடு இருட்டுக்குள் சென்று மறைந்தார்கள்.

‘இன்னமும் வலிக்கிறதா?’ என்று டூஷின் மெதுவான குரலில் ராஸ்டோவைக் கேட்டார்.

‘ஆமாம்.’

‘கௌரவமானவரே, உம்மை ஜெனரல் அழைக்கிறார். அவர் அந்தக் குடிசையில் இருக்கிறார்’ என்று ஒரு பீரங்கிப் படைக்காரன் டூஷினிடம் வந்துசொன்னான்.

‘இதோ வருகிறேன், நண்பரே’. டூஷின் எழுந்து தமது பெரிய கோட்டின் பொத்தான்களை மாட்டிக்கொண்டு, அதை நேராக இழுத்துவிட்டு, அந்தக் கணப்பு மூட்டத்தைவிட்டு நடந்துபோனார்.

பீரங்கிப் படையினுடைய இந்தக் கணப்பு மூட்டத்திற்குச் சமீபமாக அவருக்காகத் தயார் செய்யப்பட்டிருந்த ஒரு குடிசையில் இளவரசர் பாக்ரேஷன் டின்னர் அருந்திக்கொண்டிருந்தார். அதில் அவர் சாப்பிட்டுக்கொண்டே தம்முடன் சாப்பிட்டுக்கொண்டிருந்த படை அதிகாரிகளுடன் பேசிக் கொண்டிருந்தார். பாதிக் கண் மூடிய அந்தச் சிறிய வயோதிக ஆசாமி ஒரு எலும்பை ஆவலோடு கடித்துக்கொண்டிருந்தார். குற்றம் குறை இல்லாமல் 22 வருடங்கள் சேவை செய்த அந்த ஜெனரலுக்கு அந்த டின்னரினாலும், வாட்கா மதுவினாலும் முகம் சிவந்து போயிருந்தது. கையில் மோதிரம் அணிந்திருந்த அந்தப் பரிவார அதிகாரியும் ஜெர்கோவும் குழம்பிய மனத்தோடு அவர்கள் எல்லோரையும் கடைக்கண்களால் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இளவரசர் ஆண்ட்ரூ முகம் வெளிறியிருந்தது. உதடுகளை அழுத்தி மூடியிருந்தார். கண்கள் ஜுரத்தால் மின்னுபவைபோல் காணப்பட்டன.

பிரஞ்சுக்காரரிடமிருந்து பிடித்து வந்த ஒரு பிரஞ்சுக் கொடியை அந்தக் குடிசையில் ஒரு மூலையில் சாத்தி வைத்திருந்தார்கள். அப்பாவி முகத்தோற்றம் கொண்ட அந்தக் கணக்கன், அந்தக் கொடியின் துணி எவ்வளவு மிருதுவாய் இருக்கிறது என்பதைக் கையினால் தொட்டுப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் ஒன்றும் புரியாமல் தலையை ஆட்டினான். அந்தக் கொடியின் மீது அவனுக்கு சுவாரஸ்யம் ஏற்பட்டதா? அல்லது அவன் பசியோடு இருந்தபோதிலும் அங்கு டின்னரில் அவனுக்கு உட்கார இடம் கிடைக்காதபடியால் அதைப்பார்த்துக்கொண்டு சும்மா இருப்பது கஷ்டமாய் இருந்ததா? இந்த இரண்டில் எதற்காக அவன் தலையை ஆட்டினான் என்பது தெரியவில்லை. அடுத்த குடிசையில் நமது

குதிரை வீரர்களால் கைது செய்யப்பட்ட ஒரு பிரஞ்சு கர்னலை வைத்திருந்தார்கள். நமது அதிகாரிகள் அவரைப் பார்ப்பதற்கு அங்கே கும்பலாய்க் கூடி இருந்தார்கள். கமாண்டர்கள் ஒவ்வொருவரையும் இளவரசர் பாக்ரேஷன் பாராட்டினார். போராட்டத்தைப் பற்றியும் நமக்கு ஏற்பட்ட நட்டங்களைப் பற்றியும் அவர் விவரங்களை விசாரித்தார். பிராவ்னாவில் பார்வை யிடப்பட்ட பட்டாளத்தின் ஜெனரல், இளவரசரைப் பார்த்துப் போராட்டம் ஆரம்பமானதும் காட்டில் இருந்து வெளிவந்ததாகவும் விறகு வெட்டிக்கொண்டிருந்த தமது துருப்புகளைத் திரட்டியதாகவும் பிரஞ்சுக்காரர்கள் தம்மைக் கடந்து போகும்படி முதலில் விட்டுவிட்டுப் பின்னால் அவர்கள் மீது இரண்டு பட்டாளங்களைத் துப்பாக்கிச் சனியன்களைக் கொண்டு பாய்ந்து தாக்கும்படி உத்தரவிட்டதாகவும் அப்படிச் செய்ததன் மூலம் அந்தப் பிரஞ்சுத் துருப்புகளை முறியடித்ததாகவும் சொன்னார்.

'மேன்மை தங்கியவரே, நான் பார்த்தபோது அவர்களுடைய முதல் பட்டாளம் நிலைகுலைந்து இருந்தது. ரஸ்தாவில் நான் நின்று யோசித்தேன். 'அவர்களை வரும்படி நான் முதலில் விட்டுவிட்டுப் பின்னால் முழுப் பட்டாளத்தின் நெருப்பையும் அவர்கள் மீது கக்கும்படி செய்வேன் என்று யோசித்தேன். அதைத்தான் நான் செய்துமுடித்தேன்.'

அந்த ஜெனரல் இந்த மாதிரி செய்யவேண்டுமென்றே மிகவும் விரும்பினார். அம்மாதிரி செய்ய முடியாததற்கு மிகவும் வருந்தினார். ஆனால் அதையே அவர் நினைத்துக் கொண்டிருந்த படியால் அம்மாதிரி நடந்துவிட்டதாகவே அவருக்குத் தோன்றியது. ஒருவேளை உண்மையாகவே அம்மாதிரி நடந்தாலும் நடந்திருக்கலாம். அவ்வளவு குழப்பங்களுக்கிடையில் என்ன நடந்தது, என்ன நடக்கவில்லை என்பதை ஒருவரால் கண்டுபிடிக்கத்தான் முடியுமா?

'இன்னொரு விஷயம், மேன்மை தங்கியவரே, உங்களிடம் ஒன்றைத் தெரிவிக்க வேண்டும்' என்று அவர் தொடர்ந்தார். (டோலாகாவ் குட்டுஜோவுடன் நடந்த உரையாடலையும் கடைசியில் தாம் பேசியதையும் அவர் நினைவு கூர்ந்து அவர் மீண்டும் பேசினார்.) 'அந்த சிப்பாய் டோலாகாவ் அதிகாரப் பதவியிலிருந்து சிப்பாயாகத் தாழ்த்தப்பட்டவர். ஒரு பிரெஞ்சு அதிகாரியை என் எதிரிலேயே கைது செய்து தமக்குப் பெருமையளிக்கும் விதத்தில் நடந்து கொண்டார்.'

'பாவ்லாகிரட் குதிரை வீரர்களே அங்கே தாக்கியதை நான் பார்த்தேன், மேன்மை தங்கியவரே' என்று ஜெர்கோவ்

இடைமறித்துக் கூறினார். கூறிவிட்டு மனக் குழப்பத்தோடு சுற்றிலும் பார்த்தார். அன்று முழுவதும் குதிரை வீரர்களை அவர் பார்க்கவேயில்லை. ஆனால் அவர்களின் செய்கைகளைப் பற்றி ஒரு காலாட்படை அதிகாரியிடமிருந்து அவர் அறிந்துகொண்டார்.

'இரண்டு சதுர அணிவகுப்புகளை அவர்கள் தாக்கி உடைத்தார்கள், மேன்மை தங்கியவரே.'

அவர் வழக்கமாகச் சொல்லும் தமாஷ்களில் இது ஒன்று என்று நினைத்து ஜெர்கோவின் வார்த்தைகளைக் கேட்டவுடன் அங்கிருந்த பலர் புன்சிரிப்பு கொண்டார்கள். ஆனால் அவர் பேசியது நம்முடைய துருப்புகளின் பெருமையையும் அன்றைய வேலையின் பெருமையையும் அறிமுகப்படுத்துவதாய் இருந்தது என்பதைக் கண்டவுடன் அவர்கள் முகத்தில் சிரத்தை தோன்ற ஆரம்பித்தது. ஜெர்கோவ் சொல்வது பொய் என்பதும் அதற்கு அடிப்படை எதுவும் கிடையாதென்பதும் அங்கிருந்த பலருக்குத் தெரியும். இளவரசர் பாக்ரேஷன் அந்த வயோதிக கர்னலைத் திரும்பிப் பார்த்தார்.

'கனவான்களே, உங்கள் எல்லோருக்கும் நன்றி, காலாட்படை, குதிரைப்படை, பீரங்கிப்படை ஆகிய நமது படைகளின் எல்லாப் பிரிவினருக்கும் வீரத்தனமாய் நடந்துகொண்டார்கள். மத்திய போர்முனையில் இரண்டு பீரங்கிகளை எப்படி விட்டுவந்தார்கள்?' என்று அவர் கேட்டுவிட்டு யாரையோ தேடுவதுபோலச் சுற்றிப் பார்த்தார். (இடது பக்கவாட்டில் கைவிட்டு வந்த பீரங்கிகளைப் பற்றிஅவர் கேட்கவில்லை. போராட்ட ஆரம்பத்திலேயே அந்த பீரங்கிகளை அவர்கள் கைவிட்டுவிட்டார்கள் என்பது அவருக்குத் தெரியும். )

''நான் உம்மை அனுப்பினேன் என்று நினைக்கிறேன்' என்று பாராவில் இருந்த பரிவாரம் அதிகாரியைப் பார்த்துக்கேட்டார்.

'ஒரு பீரங்கி சேதம் அடைந்தது. இன்னொன்றைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. போராட்டத்துக்காக நான் அங்கேயே தங்கி உத்தரவுகள் கொடுத்துக் கொண்டிருந்தேன். பின் அதைவிட்டுப் புறப்பட்டேன்... நமது நிலைமை அங்கே ரொம்ப மோசமாய் இருந்தது என்பது உண்மை' என்று பரிவார அதிகாரி நாணத்தோடு பேசினார்.

காப்டன் டூஷின் அந்த கிராமத்திற்கு அந்தப் பக்கத்தில் முகாம் போட்டிருக்கிறார் என்றும், அவரை அழைத்துவர ஆளை அனுப்பி இருக்கிறது என்றும் ஒருவர் குறிப்பிட்டார்.

'ஓ! நீரும்அங்கே இருந்தீரா?' என்று இளவரசர் பாக்ரேஷன் இளவரசர் ஆண்ட்ரூவைக் கேட்டார்.

'ஆம், நாம் ஒருவரையொருவர் சந்திக்காமல் கொஞ்சம் பிந்தி விட்டோம்' என்று பரிவார அதிகாரி சொல்லிப் பால்கோன்ஸ்கி யைப் பார்த்து புன்னகை கொண்டார்.

'அங்கே உம்மைப் பார்க்கும்படியான பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லையே' என்று சடாரென்று கடுமையாகச் சொன்னார்.

எல்லோரும் மௌனமாக இருந்தார்கள். வெளியே டூஷின் வந்து சேர்ந்தார். தயக்கத்தோடு ஜெனரல்களைக் கடந்து உள்ளே வந்தார். ஜெனரல்களைஅந்தக் குடிசையில் கடந்த பின்பு அவருக்குத் தயக்கம் ஏற்பட்டது. தமக்கு மேலுள்ள பெரிய அதிகாரிகளை சந்திக்கும் போதெல்லாம் அவருக்கு ஒரு மாதிரியான தர்மசங்கடமான தயக்கம் ஏற்படுவதுண்டு. அங்கிருந்த பிரஞ்சுக் கொடியை அவர் பார்க்காததினால் அதன்மீது இடறினார். அங்கிருந்தவர்களில் பலர் சிரித்தார்கள்.

'ஒரு பீரங்கியை எதற்காக விட்டுவிட்டு வந்தீர்கள்?' என்று முகத்தை சுளித்துக்கொண்டு பாக்ரேஷன் கேட்டார். அவருடைய முகச்சுளிப்பு கேப்டனைவிட அங்கு சிரித்தவர்களுக்கே அதிகமாய் பொருந்துவதாய் இருந்தது. ஜெர்கோவ் அங்கு சிரித்தவர்கள் எல்லோரையும்விட பலமாய்ச் சிரித்தார். கடுமையான அதிகாரிகள் முன்னால் வந்தபோது டூஷினுக்கு தமது தவறு புலப்பட்டது. இரண்டு பீரங்கிகளை இழந்தால் ஏற்பட்ட அவமானத்தையும் பெற்றுக்கொண்டு, இன்னும் உயிரோடு மேலதிகாரிகள் முன்பாக நின்றுகொண்டிருப்பது அவருக்கு மிகுந்த பயங்கரமாய்த் தோன்றியது. அன்றைய தினத்தில் அவர் மிகுந்த பரபரப்படைந் திருந்தபடியால், அந்த பீரங்கிகளைவிட்டு வந்ததைப்பற்றி அந்த வினாடி வரையில் அவர் யோசித்தது இல்லை. அதிகாரிகளின் சிரிப்பு அவரை இன்னும் அதிகமாய்க் குழம்பும்படி செய்துவிட்டது. கீழ் நாடி நடுங்க, பேசுவதற்கு முடியாமல் பாக்ரேஷன் முன்பாக அவர் நின்றுகொண்டிருந்தார். கடைசியில் அவர் வார்த்தைகளை முனங்க ஆரம்பித்தார். 'எனக்குத் தெரியாது... மேன்மை தங்கியவரே... என்னிடம் வீரர்கள் இல்லை... மேன்மை தங்கியவரே.'

'உமக்கு பாதுகாப்பு அளித்து வந்த துருப்புகளிலிருந்து சில வீரர்களை நீர் அழைத்துக்கொண்டு இருக்கலாமே?'

தம்மைப் பாதுகாப்பதற்கு அங்கு துருப்புகள் இல்லை என்பது உண்மை. ஆனால் அதை டூஷின் சொல்லவில்லை. அம்மாதிரி சொன்னால் எந்த அதிகாரியாவது சங்கடத்திற்குள் மாட்டிக்

கொள்ளுவாரே என்று அவர் பயந்தபடியால் மௌனமாய் இருந்தார். பரீட்சையில் தவறு செய்துவிட்ட மாணவன் உபாத்தியாயரைப் பார்த்து எப்படி விழிப்பானோ, அதே மாதிரி பாக்ரேஷனைப் பார்த்து விழித்த கண்களோடு நின்றார்.

மௌனம் இன்னும் சிறிது நீடித்தது. இளவரசர் பாக்ரேஷன் கடுமையாக இருக்க விரும்பவில்லை. பேசுவதற்கும் எதுவும் கிடைக்கவில்லை. மற்றவர்கள் அதில் தலையிடத் துணியவில்லை. இளவரசர் ஆண்ட்ரூ, டூஷினை தமது கீழ்க் கண்களால் நோக்கி பரபரப்பினால் விரல்களை முறுக்கிக் கொண்டிருந்தார்.

'மேன்மை தங்கியவரே'என்று இளவரசர் ஆண்ட்ரூ அந்த மௌனத்தைத் திடீரென்று கலைத்தார். 'கேப்டன் டூஷினின் பீரங்கிப் படைக்கு என்னை நீங்கள் தயவு கூர்ந்து அனுப்பினீர்கள். அதனால் நான் போனேன். அந்த படையின் ஆட்களிலும் குதிரைகளிலும் மூன்றில் இரண்டு பங்கு பேர் சேதமடைந்து விட்டதைப் பார்த்தேன். இரண்டு பீரங்கிகளை உடைந்து போய்விட்டன. அவருக்கு ஆதரவாக துருப்புகள் எதுவுமே இல்லை.'

இளவரசர் பாக்ரேஷனும், டூஷினும் ஒரே மாதிரி கவனத்தோடு பால்கோன்ஸ்கி பேசும்போது அவரைப் பார்த்தனர். பால்கோன்ஸ்கி தமது பரபரப்பை அடக்கிக்கொண்டு பேசினார்.

'மேன்மை தங்கியவரே, எனக்கு அனுமதி கொடுத்தால் என்னுடைய அபிப்பிராயத்தை நான் சொல்லுகிறேன்' என்று அவர் தொடர்ந்தார். 'இன்றைய வெற்றிக்கு முக்கியமான காரணம் கேப்டன் டூஷினுடைய வீரத்தனமான நடத்தையும் அவருடைய பீரங்கிப் படையின் போராட்டமுமே ஆகும்.' இதைச் சொல்லி விட்டு இளவரசர் ஆண்ட்ரூ பதிலை எதிர்பார்க்காமல் எழுந்து மேஜையை விட்டு நீங்கினார்.

இளவரசர் பாக்ரேஷன் டூஷினைப் பார்த்தார். பால்கோன்ஸ்கி யின் உறுதியான அபிப்பிராயத்தில் அவர் அவநம்பிக்கை கொண்டதாக அவர் காட்ட விரும்பவில்லை. இருந்தாலும் முழு கௌரவத்தையும் டூஷினுக்குக் கொடுக்க அவரால் முடியவில்லை. ஆகவே தமது தலையைக் குனிந்துகொண்டு டூஷினைப் போகும்படிசொன்னார். டூஷினோடு இளவரசர் ஆண்ட்ரூவும் வெளியே போனார்.

'உமக்கு வந்தனம், நீர் என்னைக் காப்பாற்றினீர், எனது அருமையான பேர்வழியே' என்றார் டூஷின். இளவரசர் ஆண்ட்ரூ அவரைப் பார்த்தார். ஆனால் ஒன்றும் சொல்லவில்லை. அங்கிருந்து

அகன்று போனார். அவர் வருத்தமும் சோர்வும் கொண்டார். அவர் என்ன நினைத்திருந்தாரோ அதற்கு நேர் விரோதமாக எல்லாம் விசித்திரங்களாய் அவருக்குத் தோன்றின.

'அவர்கள் யார்? அவர்கள் ஏன் இங்கே இருக்கிறார்கள்? அவர்களுக்கு என்ன வேண்டும்? இதெல்லாம் எப்பொழுது முடியப் போகிறது?' என்று தனக்கு முன்னால் மாறி மாறி தோன்றிய நிழல்களைப் பார்த்து ராஸ்டோவ் நினைத்தார். அவருடைய கையிலிருந்த வலி வரவரக் கடுமையாயிற்று. தடுக்க முயடிாத தூக்க மயக்கம் அவரை ஆட்கொண்டது. அவர் கண்களுக்கு முன்னால் சிகப்பு வட்டங்கள் நாட்டியமாடின. அந்த குரல்களினாலும் முகங்களினாலும் அவருக்கு ஏற்பட்ட அனுபவமும் தனித்து இருப்பதைப்போல் தோன்றிய உணர்ச்சியும் அவருடைய வலியோடு கலந்து கொண்டன. அவர்கள்தான், அந்த சிப்பாய்கள் தான் - காயம் பட்டவர்களும் காயம் படாதவர்களும் - அவர்கள்தான் தம்முடைய கையை அமுக்கி கீழே தள்ளி தமது காயமடைந்த கையினுடையவும் தோளினுடையவும் தசைகளை முறுக்கி சதையை எரிப்பதாக அவருக்குத் தோன்றியது. இந்த உணர்ச்சி யிலிருந்து விடுபடுவதற்காக அவர் தம்முடைய கண்களை மூடிக்கொண்டார்.

ஒரு வினாடி அவர் தூங்கியிருப்பார். அந்த ஒரு வினாடி நேரத்தில் அவருக்கு கனவில் எத்தனையோ விஷயங்கள் தோன்றின. அவருடைய தாயாரும், அவளுடைய பெரிய வெள்ளைக் கையும், சோனியாவின் மெலிந்த சிறிய தோள்களும், நட்டாஷாவின் கண்களும் சிரிப்பும், டெனைசாவின் குரலும் மீசையும், டெலியானினும், அந்த டெலியானின் - பாக்டானிச்சம்பவங்களும் அவருடைய கனவில் வந்தன. இந்த கடினமான குரலைக்கொண்ட சிப்பாயைப் போலத்தான் அந்த விவகாரமும் இருந்தது. அந்த விவகாரமும் இந்த சிப்பாயும் அவருடைய கையை இடைவிடாமல் வலிக்கும்படி இழுத்துஅழுத்திக் கொண்டிருப்பதாகவும் ஒரே திசையில் எப்பொழுதும் இழுத்துக் கொண்டிருப்பதாகவும் அவருக்குத் தோன்றியது. அவற்றிலிருந்து அவர் விடுபட முயற்சி செய்தார். ஆனால் ஒரு வினாடி கூட அவருடைய கையை ஒரு மயிரிழைகூட அசைக்க அவர்கள் விடவில்லை. அது வலிக்காது. அது சரியாய்ப் போய்விடும். அவர்கள் இழுக்காமல் இருந்தால் அது சரியாய்ப் போய்விடும். ஆனால் அவர்களிடமிருந்து விடுபடுவது முடியாத காரியமாய் இருக்கிறதென்று நினைத்தார்.

அவர் கண்களைத் திறந்தார். மேலேபார்த்தார். அந்தக் கணப்பு மூட்டத்திற்கு ஒரு கெஜ தூரத்திற்கு மேலாக அந்த இரவில்

இருட்டுத்திரை தொங்கிக் கொண்டிருந்தது. அப்பொழுது பெய்து கொண்டிருந்த பனியின் சிதள்கள் அந்த வெளிச்சத்தில் பரந்து விழுந்து கொண்டிருந்தன. டூஷின் இன்னும் திரும்பவில்லை. டாக்டரும் வரவில்லை. நெருப்புக்கு அப்புறமாக தனது மஞ்சள் உடம்பிற்கு சூடு காட்டிக் கொண்டிருக்கும் ஒரு நிர்வாண சிப்பாயைத் தவிர அவருடன் வேறு யாரும் இல்லை.

'என்னை ஒருவரும் விரும்பவில்லை' என்று ராஸ்டோவ் நினைத்தார். 'எனக்கு உதவி செய்யவோ அனுதாபம் காட்டவோ ஒருவருமில்லை. ஆனால் ஒரு காலத்தில் என் வீட்டில் நான் பலமாகவும், சந்தோஷமாகவும், எல்லோரும் என்மீது பிரியப்படும் படியாகவும் நான் இருந்தேன்.' அவர் பெருமூச்சு விட்டார். பெருமூச்சு விடும்போது தம்மை அறியாமலேயே முனங்கினார்.

'ஏ, உனக்கு வலிக்கிறதா?' என்று அங்கிருந்த சிப்பாய் நெருப்புக்கு மேலாக தனது சட்டைக்கு சூடு காட்டிக்கொண்டு கேட்டான். பதிலை அவன் எதிர்பார்க்காமலேயே அவன் மேலும் சொன்னான். 'எவ்வளவு பேர்கள் இன்று காயமடைந்து போனார்கள், ரொம்ப பயங்கரமான விஷயம்.'

சிப்பாய் பேசியதை ராஸ்டோவ் கேட்கவில்லை. பனிச்சிதள்கள் நெருப்பு மூட்டத்திற்கு மேலாகப் பரந்து வருவதை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். அச்சமயம் ஒரு குளிர்காலத்தில் தம்முடைய வெதுவெதுப்பான வீட்டில் அழகான ரோமகோட் அணிந்திருந்த ஞாபகமும், வேகமாய்ப் போகும் அவருடைய பனி வண்டியும், ஆரோக்கியமான உடம்பும், அவருடைய வீட்டார்கள் அவர் மேல் காட்டிய அன்பும் ஆதரிப்பும் அவருக்கு ஞாபகத்துக்கு வந்தன. 'நான் ஏன் இங்கே வந்தேன்?' என்று அவர் ஆச்சரியப்பட்டார்.

அடுத்த நாள் பிரஞ்சுக்காரர்கள் தங்கள் தாக்குதல்களை ஆரம்பிக்கவில்லை. ஆகவே பாக்ரேஷனின் மிஞ்சிய துருப்புகள் மீண்டும் குட்டுஜோவின் ராணுவத்தில் போய்ச்சேர்ந்து கொண்டன.



# விளக்கக் குறிப்புகள்

**2 1**

பீட்டர்ஸ்பர்க்கில் இருந்த 'ஜாரிட்சின் புல்வெளி' என்பது நெவா நதியின் கரையில் இருந்தது. பின்னால் அதை 'செல்வாயின்களம்' என்று அழைத்தார்கள். ராணுவ கவாத்துகளுக்கும், அணிவகுப்புகளுக்கும் இந்த இடம் உபயோகிக்கப்பட்டு வந்தது.

'அந்த ஜெர்மானியர்கள் நமக்கு பிரயாண வசதி செய்து கொடுத்து சிலாக்கியமாய் இல்லை?' என்று ஒரு இடத்தில் வருகிறது. ஆகஸ்டு 13-ந் தேதியன்று ருஷ்ய ராணுவம் ராட்ஜிவைலாவ் என்ற இடத்திலிருந்து புறப்பட்டது. போர் நடக்கும் இடத்திற்குப் பக்கத்தில் வருவதற்கு, அதற்கு இரண்டு மாதங்கள் பிடித்தன. ஆஸ்திரியர்களும் மிகுந்த மெதுவாகத்தான் வந்துகொண்டிருந்தார்கள். இங்கிலாந்து மீது படையெடுப்பதற்காக நெப்போலியனும் அவருடைய ராணுவமும் பௌலோன் என்ற இடத்தில் தயார் செய்து கொண்டு இருப்பதாக ஆஸ்திரியர்கள் நினைத்தார்கள். ஆனால், செப்டம்பர் மாதத்தில் நெப்போலியன் ரைனை அடைந்து விட்டதாகக் கேள்விப்பட்டதும் ஆச்சரியப்பட்டார்கள். குட்டுஜோவ் அச்சமயத்தில் வெகு தூரத்தில் இருந்தார். அவருடைய படைப் பிரிவுகளுக்கு வண்டிகளை உடனே கொடுத்தார்கள். அதனால் அந்தப் படைப் பிரிவுகள் ஒரு நாளைக்கு 30 மைல் தூரம் பிரயாணம் செய்ய முடிந்தது. கால் நடையாகப் போயிருந்தால், ஒரு நாளைக்கு 14-லிருந்து 20 மைல் வரையில் தான் சிப்பாய்கள் போக முடியும்.

**2 3**

'மேன்மை தங்கிய ஆர்ச்டியூக் பெர்டினான்ட் கடைசியாகக் கடிதம் எழுதி என்னைப் பெருமைப் படுத்தினார்' என்று ஒரு இடத்தில் சொல்லப் படுகிறது. ஒரு உண்மையான கடிதத்தில் உள்ள மத்திய பாகத்தை டால்ஸ்டாய் இதில் உபயோகித்திருக்கிறார். அந்தக் கடிதம் ருஷ்ய ராணுவ சரித்திரக்காரரான மிக்காய்லாவ்ஸ்கி டானைலெவ்ஸ்கி என்பரால் எழுதப்பட்ட புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது. இந்த நாவல் முழுவதிலும் சரித்திர சம்பந்தமான உண்மைகளை அனுசரித்து ரொம்ப கவனத்தோடு டால்ஸ்டாய் எழுதியிருக்கிறார். டானைலெவ்ஸ்கியின் புத்தகத்திலிருந்து

ருஷ்யாவின் கட்சியையும், தீயர்ஸின் புத்தகத்திலிருந்து பிரான்ஸின் கட்சியையும் அவர் எடுத்து தாராளமாக உபயோகித்திருக்கிறார். இதைத் தவிர, அவர் வேறு ஆதாரங்களையும், கடிதங்கயையும், யுத்தத்தில் கலந்துகொண்ட தம்முடைய குடும்பதைச் சேர்ந்தவர்கள் எழுதிய ஞாபகக் குறிப்புகளையும், மற்றவர்கள் எழுதிய ஞாபகக் குறிப்புகளையும் வாசித்து இவற்றில் உபயோகித்திருக்கிறார். இந்தத் தனிப்பட்டவர்களின் தகவர்களின், சில சமயங்களில் சரித்திரக்காரர்கள் கூறும் தவறைத் தவிர்ப்பதற்கு உதவியாய் இருந்தன.



6-வது அத்தியாயத்திலிருந்து 9-வது அத்தியாயம் வரையில் இந்தப் புத்தகத்தில் ராணுவ நிலைமைகளைப் பற்றி விவாதிக்கப்பட்டிருக்கிறது. மாக்கினுடைய சரணாகதிக்குப் பின்னால், குட்டுஜோவ் வீயன்னாவை நோக்கிப் பின்வாங்க ஆரம்பித்தார். பின்வாங்கிக் கொண்டு இருக்கும்போது, முராட் என்பவரின் முன்னணி, பிரஞ்சுப் படைகள் அவரைத் தாக்குவதை எதிர்த்தடித்துக் கொண்டுபோயின. அக்டோபர் 23-ந் தேதியின்று வேகமான ஓட்டமுடைய என்ஸ் நதியை அவர் கடந்தார். பாக்ரேஷன் தலைமையில் உள்ள துருப்புகளை அந்த நாள் பூராவாக முராட் தாக்கிக் கொண்டிருந்தார். பாக்ரேஷனை இடைமறித்து நிதியைக் கடக்க விடாமல் அவர் முயற்சித்தார். இதைச் செய்தவற்கு அவர் தவறிவிட்டபடியால், பாக்ரேஷனோடு ஏக காலத்தில் அந்த நதியை வந்தடைந்து, அந்தப் பாலத்தைக் கைப்பற்ற முயன்றார். இந்த நாவலில் வருணிக்கப்பட்டிருக்கிறபடி, பாவ்லாவ்கிராட் குதிரை வீரர்கள், ருஷ்ய துருப்புகள் அந்தப் பாலத்தைக் கடந்த பின்பு, அந்தப் பாலத்திற்கு நெருப்பு வைத்துக் கொளுத்தி விட்டார்கள்.

முராட்டைப் பற்றி இந்த நாவலில் அடிக்கடி குறிப்பிடப் படுகிறது. அவர் ஒரு ஹோட்டல்காரரின் குமாரர்; சாதாரண சிப்பாயிலிருந்து மேல் பதவிக்கு வந்தார். 1795-ஆம் வருஷத்தில் நடந்த ஒரு ராஜ விசுவாசப் புரட்சியை அடக்குவதற்காக, நெப்போலியனுக்கு உதவியாய் இருந்தார். பின்னால் அவர் மூலம் வேகமாகப் பதவியில் உயர்ந்து கொண்டே போனார். இத்தாலிய படையெடுப்பில் மிகுந்த புகழ் பெற்றார். அதன் பின்னால் எகிப்துக்கு நெப்போலியனுடன் திரும்பி வந்த பின்பு 60 கை குண்டு வீரர்களை அவர் அழைத்துச் சென்று, 1799-ஆம் வருஷத்தில் 500

மெம்பர்கள் அடங்கிய கவுன்சில் என்ற சட்டசபைக் கூட்டத்தைக் கலைத்து விரட்டினார். அந்தச் செய்கையினால் தான் கான்ஸலாக நெப்போலியன் பதவியில் உயர்ந்தார். 1800-ஆம் வருஷத்தில் நெப்போலியனின் சகோதரியான காராலைன் என்பவளை முராட் திருமணம் செய்து கொண்டார். 1804-ஆம் வருஷத்தில் பாரிஸின் கவர்னர் என்ற முறையில் எனீன் கோமகனை விசாரித்து சுடுவதற்குக் கமிஷனை நியமித்தார். மீண்டும் 1805-ஆம் வருஷத்தில் ஜெர்மன் படையெடுப்பில் அவர் புகழ் பெற்றார். 1808-ஆம் வருஷத்தில் அவரை நேபிள்ஸ் மன்னராக நெப்போலியன் செய்து வைத்தார். அங்கே ஒரு பிரம்மாண்டமான ராஜ சபையை அவர் அமைத்தார். அவருடைய 'குரங்குத்தனமான தந்திரங்களுக்கே சக்கரவர்த்தி அவரைப் பாராட்டினார். 1812-ஆம் வருஷத்தில் நடந்த ருஷ்யப் படையெடுப்பின்போது, நெப்போலியனுடைய குதிரைப் படைகளுக்கு அவர்தான் கமாண்டராக இருந்தார். ஆனால், டிசம்பர் மாதத்தில் அந்தப் பதவியைத் துறுந்து விடடு, நேபிள்ஸுக்குத் திரும்பினார். 1813-ம் வருஷத்தில் நெப்போலியையனை ஆதரிப்பதிலிருந்து அவர் விலகிக் கொண்டார். தாம் தொடர்ந்து நேபிள்ஸ் ராஜாவாக இருப்பதற்காக, ஆஸ்திரியாவின் உதவியை அவர் நாடினார். 1814-ஆம் வருஷத்தில் அவர் பட்டத்திலிருந்து தள்ளப்பட்டார். டூலானுக்குப் பக்கத்தில் அவர் தப்பி ஒளிந்து கொண்டிருந்தார். அவருடைய தலையைக் கொண்டு வருபவர்களுக்குப் பரிசு கொடுக்கப்படுமென்று அறிவிக்கப் பட்டது? பின்னால் வாட்டர்லூ யுத்ததிற்கு அப்புறம் தம்முறை ராஜ்யத்தைக் கைப்பற்ற அவர் முயன்றார். அச்சமயம் அவர் பிடிக்கப்பட்டு, ராணுவ விசாரணை செய்யப்பட்டு சுட்டுக் கொல்லப்பட்டார். உற்சாகமும் துணிந்த தைரியமும் இருந்த போதிலும், அவருக்கு மட்டான அறிவுதான் உண்டு. வெற்றியினால் அவர் தலை திரும்பியது. அவருடைய மட்டான அறிவையும், படாடோபத்தில் உள்ள பிரியத்தையும், டாம்பீமான உடைகளில் உள்ள ஆசையையும், கோமாளித்தனமாக டம்பப் பேச்சுகளையும், பல தடவைகளில் டால்ஸ்டாய் சுட்டிக் காட்டுகிறார்.

**2**
**10**

பிலைபின், 1856-ம் வருஷத்திலிருந்து ருஷ்யாவின் வெளிநாட்டுக் கொள்கையை பல வருஷங்கள் நடத்தி வந்த இளவரசர் ஏ.எம். கார்சாக்கோவ் என்பவரிட மிருந்து பிலைபின் பாத்திரத்தை உற்பத்தி செய்தார்

என்று நினைப்பதற்கு காரணம் இருக்கிறது. தமது மைக்கூட்டின் மீது காதல் கொண்டவர் என்று அவர் சொல்லப்பட்டார். ஆகவே ராஜாங்க நடவடிக்கைகளை விட ஆசுகவிகள் அமைப்பதில் அவர் அதிகமான சமார்த்தியத்தைக் காட்டினார் என்று சொல்லப்படுகிறது.

ஷார்ன் பிரென் என்பது, ஆஸ்திரிய சக்கரவர்த்தியின் வீயன்னா வில் உள்ள வசந்த கால அரண்மனை.

அலெக்ஜாண்டரும், பிரஷ்ய மன்னரும் கூடிப் பேசிய பெர்லின் மகாநாடானது, டாட்ஸ்டாம் என்ற இடத்தில் நடைபெற்றது. இளவரசர் ஆண்ட்ரூவோடு பிலைபின் சம்பாஷிப்பதற்கு சில தினங்களுக்கு முன்னால் நடந்தது. மகா பெரிய பிரடெரிக்கின் சமாதி முன்பு அந்த மன்னர்கள் முழங்கால் படியிட்டு, ஒருவரோடு ஒருவர் நட்பாய் இருப்பதாகப் பிரமாணம் செய்தார்கள். ஆனால், யுத்தத் தில் கலந்து கொள்வதற்க பிரஷ்யா இன்னமும் தவிர்த்து வந்தது.

'மேன்மை தங்கிய சார்டீனியன் சக்கரவர்த்தி பாட்ஸ்டாம் மகாநாட்டில் நெப்போலியனுக்கு இறுதிக் கடிதம் அனுப்பவேண்டு மென்று பிரஷ்யா வற்புறுத்திய. மற்ற கோரிக்கைகளோடு சார்டீனியா மன்னருக்கு அவர் நஷ்டஈடு கொடுக்க வேண்டு மென்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. அந்தக் கோரிக்கை களை யெல்லாம் நெப்போலியன் நிராகாரித்தார். ஆஸ்திரியாவை அவர் தோற்கடித்ததைக் கண்டு, பிரஷ்யா பீதி கொண்டு விலகியிருந்தது.

'பிரான்ஸோடு சமாதானப் பேச்சுவார்த்தைகள் நடப்பதாக எனது உள்ளுணர்வு சொல்லுகிறது' என்று ஒரு வாக்கியம் வருகிறது. சக்கரவர்த்தி பிரான்ஸிஸ் அச்சமயத்தில் உண்மையாகவே ஒரு யுத்த நிறுத்த ஒப்பநதம் செய்து கொள்ள வேண்டி நெப்போலியனைக் கேட்டுக் கொண்டிருந்தார். ஆனால், அதற்குப் பதிலாக நெப்போலியன் அவரை அவமதிக்கும் விதத்தில் நிபந்தனைகளைப் போட்டார். அதவாது, ருஷ்ய ராணுவத்தை வாபஸ் பெற வேண்டும்; வெனிஸையும் டிராலையும் உடனே கொடுத்து விட வேண்டும்; ஜாமனுக்காக ஏற்பாடு செய்ய வேண்டும்; அதற்குப் பின்னால், சமாதானத்தைப்பற்றி பேசலாம். என்று சொன்னார். பிரான்ஸிஸ் கூட இந்த நிபந்தனைகளை ஒப்புக்கொள்ளவில்லை.

**2**
**14**

'வீயன்னாவிலிருந்து ஜெனுயம் வரையில் உள்ள ரஸ்தா'. இந்த ரஸ்தா வழியாகத்தான் முராட் கிழக்கு நோக்கி கிரெம்ஸிலிருந்து முன்னேறி வந்தார். அந்த ரஸ்தா வழியாகத்தான் குட்டுஜோவ் பின்வாங்கி வந்தார். இந்த ரஸ்தாக்கள் ஒரு செங்கோணத்தில் ஒன்றையொன்று நெருங்கி வந்தது. கிரெம்ஸ் ரஸ்தாவிலிருந்து வீயன்னாஸ்தாவுக்கு இரண்டு இடங்களில் குறுக்காகப் போய்ச்சேர முடியும். ஒன்று ஹாலாபிரென் (அந்த இடத்திற்குத்தான் பாக்ரேஷன் அனுப்பப்பட்டார்) என்ற இடத்திலிருந்தது. மற்றொன்று சௌகரியமான ரஸ்தா; அது கிரந்த, ஷார்ன் கிராபெர்ன் ஆகிய கிராமங்களிலிருந்து வரும் ரஸ்தாவாகும் ஹாலாபிரென் என்ற இடத்தை, முராட்டுக்கு முன்பாக, பாக்ரேஷன் வந்தடைந்தார். கிரந்துக்கும் ஷார்ன் கிராபெர்னுக்கும் குட்டுஜோவ் அவரோடு சேர்ந்து கொள்வதற்காக வந்தார். சப்ளை வண்டிகளை ஜெனெய்முக்கு நேராக அனுப்பி விட்டார். ஷார்ன் கிராபெர்ன் என்ற இடத்தில் நடந்த போரைப் பற்றித்தான், பின்வரும் அத்தியாயங்களில் விளக்கப்பட்டிருக்கின்றது.

முராட்டுக்கு நெப்போலியன் எழுதிய கடிதம் தீயர்ஸ் எழுதிய சரித்திலிருந்து எடுக்கப்பட்டது.

**2**
**18**

'காற்று பூராவாகப் புகையால் நிறைந்திருந்தது; அந்தக் காலத்தில் துப்பாக்கி சுடுதலைப் பற்றிய ஒரு சித்திரத்தை இது காட்டுகிறது. துப்பாக்கியின் வாய் வழியாக வெடி மருந்தையும், குண்டையும் போட்டு கெட்டிப்பார்கள். பின்னால், குதிரை பிடித்திழுத்தவுடன் அந்தக் குதிரைக் கம்பி மற்றொரு இரும்போடு உராயும் போது, தீப்பொறி பறந்து அந்த வெடி மருந்தைப் பற்ற வைக்கிறது.

★

# 3

## 1

இளவரசர் வாசைலி துணிந்து திட்டம் போட்டுக் கொண்டு தமது வேலைகளைச் செய்யக்கூடிய மனிதர் அல்ல. தவிர தமது சொந்த நன்மைக்காக வேறு யாருக்கும் கெடுதி செய்ய நினைப்பவரும் அல்ல. அவர் உலக அனுபவம் நிறைந்தவர். வாழ்க்கையில் நல்ல சம்பத்துக்களைக் கண்டவர். சம்பத்துக்களைப் பெறுவதே அவருக்கு வழக்கமாகப் போய்விட்டது. அவருடைய வாழ்க்கையின் முக்கியமான விஷயங்களாக சூழ்ச்சிகளும் குயுக்திகளும் அமைந்தன. அவை தாமாகவே அவருடைய மனதில் உருவெடுக்கும். அவர் சந்திக்கிற மனிதர்களையும், சந்தர்ப்பங்களையும் அனுசரித்து அவை உருவாகும். ஆனால் அவற்றை அவர் ஒருபொழுதும் அலசிப்பார்த்தது கிடையாது. இம்மாதிரி சூழ்ச்சிகள் ஒன்று, இரண்டல்ல; டஜன் கணக்காக அவருடைய மண்டையில் நிறைந்திருக்கும். சில அப்பொழுதுதான் உருவாக ஆரம்பமாகி யிருக்கும். சில கைகூடி வருகிற விதத்தில் இருக்கும். வேறு சில தீய்ந்து மாய்ந்து போகக்கூடிய விதத்தில் இருக்கும். உதாரணமாக, ஒருவரைப் பார்த்தபோது, 'இந்த மனிதருக்கு செல்வாக்கு இருக்கிறது. ஆகவே நான் அவருடைய நம்பிக்கையையும் நட்பையும் பெற வேண்டும். அதன் மூலமாக நான் விசேஷ பலன் அடையலாம்' என்று அவர் தமக்குள் ஒரு பொழுதும் சொல்லிக் கொள்வதில்லை; அல்லது அவர், 'பீயர் ஒரு பெரிய பணக்காரர். என்னுடைய மகளைக் கல்யாணம் செய்து கொள்ளுமாறு செய்ய நான் அவரை ஆசைகாட்ட வேண்டும். அதன் மூலம் எனக்கு வேண்டிய 40, 000 ரூபிள்களை நான் கடன் வாங்கிக் கொள்ளலாம்' என்றும் அவர் நினைப்பது இல்லை. ஆனால் அந்தஸ்த்தில் இருக்கிற ஒரு மனிதரை அவர் சந்தித்தால் இந்த மனிதர் உபயோகமாய் இருப்பார் என்று அவருடைய உள்ளுணர்ச்சி உடனே அவருக்கு சொல்லும். கொஞ்சம்கூட முன் நினைப்பு எதுவுமின்றி, இளவரசர் வாசைலி உடனே அந்த முதல் சந்தர்ப்பத்தை உபயோகித்து அவருடைய நம்பிக்கையைப் பெறுவார். பின்னால் முகஸ்துதி பாடி அவருடன் அன்னியோன்னியமாகக் கலந்து விடுவார். கடைசியில் தமக்கு வேண்டியதை அவரிடம் கேட்பார்.

மாஸ்கோவில் பீயருடன் அவர் இருந்து வந்தார். ஸ்டேட்கவுன்ஸிலர் என்ற பதவியை அவருக்கு வாங்கிக் கொடுத்தார். பீட்டர்ஸ்பர்க்கிற்கு அவருடன் வந்து அவருடைய வீட்டில் தங்க வேண்டுமென்று அவர் வற்புறுத்தினார்.

பராக்குத்தனமாகப் பேசுவது போலவும், ஆனால் தாம் சரியான காரியத்தையே செய்வது போன்ற தயக்கம் இல்லாத உறுதியோடும், தமது குமாரியை பீயர் மணந்து கொள்வதற்காக இளவரசர் வாசைலி ஒவ்வொரு காரியத்தையும் செய்து வந்தார். அவர் தமது திட்டங்களை முன்பே யோசித்துச் செய்திருந்தால், அவ்வளவு இயற்கையாக அவரால் இருந்திருக்க முடியாது. அவர் பழகுகிற ஒவ்வொருவரிடமும் - அவருடைய அந்தஸ்துக்கு மேற்பட்டவர் களானாலும், கீழ்ப்பட்டவர்களானாலும் இயற்கையான அன்னி யோன்னியத்தை அவர் காட்டியிருக்க முடியாது. ஏதோ ஒன்று அவரை எப்பொழுதும், தம்மைவிட பணத்தாலோ, செல்வாக்காலோ உயர்ந்தவர்களிடம் இழுத்து வந்தது. சரியான சந்தர்ப்பங்களை கைக்கொண்டு ஆட்களை உபயோகிப்பதில் அவருக்கு ஒரு அபூர்வமான திறமை இருந்தது.

எதிர்பாராத விதமாக, கோமகன் பெஜுகாவாகவும் பெரிய பணக்காரராகவும் பீயர் மாறிய பின்பு, தமது தனித்திருந்த வாழ்க்கையிலிருந்தும், கவலைகளிலிருந்தும் விடுபட்டதாக அவர் உணர்ந்தார். பல வேலைகள் அவரைச் சூழ்ந்து நின்றபடியால், இரவு படுக்கப்போன பின்புதான் அவர் எதையாவது சிந்திக்க முடியும். தஸ்தாவேஜுகளில் அவர் கையெழுத்துப்போட வேண்டியிருந்தது. சர்கார் செயல்களுக்கு அவர் போக வேண்டியிருந்தது. இவற்றின் காரணங்கள் அவருக்குத் தெளிவாய்த் தெரியவில்லை. அவருடைய மானேஜரிடம் கலந்து ஆலோசிப்பது, மாஸ்கோவுக்குப் பக்கத்தில் உள்ள அவருடைய எஸ்டேட்டுக்கு விஜயம் செய்வது, அநேகம் பேர்களை வரவேற்பது ஆகிய வேலைகளும் சேர்ந்து கொண்டன. முன்பெல்லாம் இவர் உயிரோடு இருக்கிறாரா என்பதைக் கூட அறிந்துகொள்ள விருப்பம் இல்லாதவர்கள், இப்பொழுது பீயரின் பேட்டி கிடைக்காவிட்டால், அதனால் அவமானம் ஏற்பட்டு விடுவதைப் போலவும் வருந்துவது போலவும் காணப்பட்டார்கள். வியாபாரிகள், பந்துக்கள், நண்பர்கள் ஆகிய வெவ்வேறு பிரிவினர்களும், இந்த வாலிப வாரிசுதாரரை மிகுந்த நட்போடும் முகஸ்துதி பேசியும் நடத்த விரும்பினார்கள். அவர்கள் எல்லோருக்கும் பீயரின் உதாரமான குணங்களில் அசைக்க முடியாத நம்பிக்கை ஏற்பட்டு விட்டதைப்போல் காணப்பட்டார்கள். 'உங்களுடைய அபூர்வமான அன்பு', 'உங்களுடைய உயர்ந்த இருதயம்', 'நீங்கள் மிகுந்த கண்ணியமானவர்கள்', 'உங்கள் மாதிரி அவர் அவ்வளவு புத்திசாலியாய் இருந்ததால்', இம்மாதிரியான வார்த்தைகளை அவர் எப்பொழுதும் கேட்டு வந்தார். இதைக்கேட்க கேட்க உண்மையாகவே தமக்கு அதிகமான அன்பும் மிகச் சிறப்பான

புத்திசாலித்தனமும் இருப்பதாக உண்மையிலேயே நம்ப ஆரம்பித்தார். அவர் நினைப்பு இருதயத்தில் ஆழமாகப் போகப்போக அவர் மிகுந்த அன்பாகவும் புத்திசாலித்தனமாகவும் இருக்கிறார் என்ற நினைப்பும் ஆழமாகப் பதிந்தது. முன்பெல்லாம் அவருடன் துவேஷத்தோடும் விரோதத்தோடும் நடந்து கொண்டவர்கள் இப்பொழுது மிகவும் பிரியமாகவும் அன்போடும் நடந்துவந்தார்கள். கோபமான அந்த மூத்த இளவரசி நீண்ட வெளிச்சட்டை யணிந்து பொம்மையின் தலைமுடியைப் போன்று தனது தலைமுடியை சாட்டை மாதிரி தொங்கவிட்டுக் கொண்டு பிரேத ஊர்வலம் முடிந்த பின்பு பீயாரின் அறைக்குள் வந்தார். பாதி மூடிய கண்களுடனும் அடிக்கடி தோன்றும் நாணத்துடனும் தங்களுடைய பழைய மனஸ்தாபங்களுக்காகத் தான் மிகவும் வருத்தப்படுவதாக அவள் தெரிவித்தாள். சொத்தில் பாகம் கேட்பதற்கு தனக்கு எவ்வித உரிமையும் கிடையாது என்றும், அந்தப் பெரிய மனச்சஞ்சலத்திற்குப் பின்னால் இன்னும் சில வாரங்கள் அந்த வீட்டில் தங்குவதற்கு அனுமதி வேண்டுமென்றும் அந்த வீட்டை அவ்வளவு அதிகமாக அவள் நேசித்ததாகவும் அதற்காக எவ்வளவோ தியாகம் செய்திருப்பதாகவும் அவள் சொன்னாள். அவள் பேசும்பொழுது அவளால் அழாமல் இருக்க முடியவில்லை. சிலையைப்போல் இருந்த இந்த இளவரசி கூட இப்படி மாறமுடியும் என்பதைப் பார்த்து பீயருக்கு உள்ளம் உருகி அவள் கையை எடுத்துமன்னிக்கும்படி அவர் கெஞ்சினார். ஆனால், எதற்காக மன்னிப்பு கேட்கிறோம் என்பது அவருக்குத் தெரியாது. அந்த நாள் முதல் இந்த மூத்த இளவரசி பீயரிடம் மிகவும் மாறுதலோடு நடந்துகொண்டாள். அவருக்காக கழுத்துப் பட்டியைக்கூட அவள் பின்ன ஆரம்பித்தாள்.

'எனக்காக இதை நீர் செய்ய வேண்டும், எனது அன்பரே. இறந்து போனவருக்காக அவள் மிகுந்த கஷ்டம் அடைந்திருக்கிறாள்' என்று இளவரசர் வாசைலி அவரிடம் சொல்லி இளவரசியின் நன்மைக்காக ஒரு பத்திரத்தில் கையெழுத்திடுமாறு கேட்டார்.

அந்தப் பத்திரம் 30, 000 ரூபிள்களை இளவரசிக்குக் கொடுப்பதாகச் சொல்லியது. இந்த எலும்பை, இந்த 30, 000 ரூபிள்களை அந்த ஏழை இளவரசிக்குக் கொடுத்தால்தான் தோல்பை சம்பந்தமாக நடந்த சண்டையைப் பற்றி அவள் வெளியே பேசாமல் இருப்பாள் என்று இளவரசர் வாசைலி ஒரு முடிவுக்கு வந்தார். பத்திரத்தில் பீயர் கையெழுத்திட்டார். அதற்குப் பின்னால் இளவரசி இன்னும் அதிகமாகப் பிரியத்தைக் காட்டினாள். இளைய சகோதரிகள் கூட அவரிடம் மிகுந்த அன்பைக் காட்டினார்கள். குறிப்பாக

கடைக்குட்டி சகோதரி, முகத்தில் மச்சம் கொண்ட அந்த அழகான சகோதரி, தனது புன்சிரிப்பினால் அவரை அடிக்கடி குழப்பம் அடையச் செய்துவந்தாள். அவரைச் சந்திக்கும்போதெல்லாம் அவளும் குழப்பம் அடைந்ததாகவே தோன்றியது.

ஒவ்வொருவரும் தம்மை விரும்புவதை இயற்கையான விஷயம் என்று பீயர் எடுத்துக்கொண்டார். தம்மை யாராவது விரும்ப வில்லை என்றால் அது இயற்கைக்கு விரோதமானது என்று அவருக்குத் தோன்றக்கூடும். தம்மைச் சுற்றி இருந்தவர்கள் உண்மையான சிரத்தை கொண்டவர்கள் என்று அவர் நம்பினார். தவிரவும் இந்த ஜனங்கள் உண்மையாய் இருக்கிறார்களா, இல்லையா என்று விசாரிக்கவும் அவருக்கு நேரம் இல்லை. அவர் எப்பொழுதும் சுறுசுறுப்பாய் இருந்தார். எப்பொழுதும் அமைதியான, மகிழ்ச்சியான போதையில் இருப்பதைப் போலவே உணர்ந்தார். முக்கியமான பொதுவான காரியங்களுக்கு தாம் கேந்திரமாய் இருப்பதைப்போல அவர் உணர்ந்தார். அவரிடமிருந்து இடைவிடாமல் எதையாவது எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போலவும், அவர் அதைச் செய்யாவிட்டால் அநேகம் பேரை துன்பமும், ஏமாற்றமும் அடையும்படி செய்துவிடும் என்றும், இதையோ, அதையோ அவர் செய்தால் எல்லாம் சரியாய்விடும் என்றும் அவர் உணர்ந்தார். ஆகவே என்ன செய்ய வேண்டுமென்று அவரைக் கேட்கிறார்களோ, அதை அவர் செய்து வந்தார். ஆனால் அவற்றால் ஏற்படக்கூடிய அந்த சந்தோஷமான பலன் எப்பொழுதும் எதிர்காலத்திலேயே இருந்தது.

பீயரின் காரியங்களையும் பீயரை நடத்தும் வேலையையும் இளவரசர் வாசைலி மேற்கொண்டார். கோமகன் பெஜுகாவ் இறந்ததிலிருந்து இந்த வாலிபரை தம் கையிலிருந்து நழுவ விடவில்லை. அவர் எப்பொழுதும் வேலையினால் அழுத்தப்பட்டு கஷ்டப்படுவது போலவும், களைப்படைந்திருப்பது போலவுமான தோற்றத்தைக் காட்டி வந்தார். என்றாலும் ஏதோ தயவுக்காக உதவியற்ற இந்த வாலிபரை விட்டுவிட மாட்டாராம். ஏனெனில் பீயர் அவருடைய பழைய கோமகன் நண்பரின் குமாரராம். அவ்வளவு ஏராளமான சொத்துக்களை உடைய அவரை விதியின் விசித்திரத்திற்கோ அல்லது அயோக்கியர்களின் சூழ்ச்சிகளுக்கோ அகப்படும்படி அவர் விடமாட்டாராம். பெஜுகாவின் மரணத்திற்குப் பின்னால் மாஸ்கோவில் அவர் தங்கி சில நாட்களில் பீயரைத் தம்மிடம் வரவழைப்பதும், அல்லது அவருடன் தாம்போவதும், அவருக்குப் புத்தி சொல்வதுமாய் இருந்தார். அப்படி சொல்லும்போதெல்லாம் களைப்படைந்த தொனியில்

பேசுவார். ஒவ்வொரு தடவையிலும், 'எனது வேலைகளே எனக்குத் தலைக்குமேல் இருக்கிறது என்பதை நீர் அறிவீர். உண்மையில் உம்மீது தயவுகொண்டே உமக்காக நான் அவஸ்தைப்படுகிறேன். நான் சொல்லுவது ஒன்றுதான் சாத்தியமான வழி என்பதை நீரும் பூரணமாய் அறிவீர்' என்றுஅவர் சொல்லுகிற மாதிரி அவருடைய முகத்தோற்றம் காட்டும்.

'நல்லது, எனது அன்புள்ள நண்பரே. கடைசியில் நாம் நாளை புறப்படுகிறோம்' என்று இளவரசர் வாசைலி தமது கண்களை மூடிக்கொண்டு பீயரின் முழங்கையைத் தடவிக்கொண்டு ஒருநாள் சொன்னார். முன்பே ஒப்புக்கொண்ட விஷயம் போலவும் இப்பொழுது மாற்ற முடியாதது போலவும் அவர் சொல்வது தோன்றியது. 'நாளை நாம் புறப்படுவோம். எனது வண்டியிலேயே நீரும் வரலாம். நான் மிகுந்த சந்தோஷம் அடைகிறேன். இங்கே உள்ள நமது முக்கியமான வேலைகள் எல்லாம் இப்பொழுது முடிந்துவிட்டன. வெகுகாலத்திற்கு முன்பே நாம்போயிருக்க வேண்டும். முதல் மந்திரியிடம் இருந்து இன்று எனக்கு வந்ததை இதோ பாரும். நான் அவரைக் கேட்டுக்கொண்டபடி, அவர் உம்மை ராஜதந்திர சேவையில் சேர்த்துக்கொண்டு ஸ்டேட் கவுன்ஸிலராக ஆக்கியிருக்கிறார். ராஜதந்திர சேவை என்பது இப்பொழுது உமக்கு முன்னால் காத்துக் கொண்டிருக்கிறது.

களைப்பான குரலில் உறுதியோடு இந்த வார்த்தைகளைச் சொன்ன போதிலும் பீயர் தமது அபிப்பிராயத்தை வெளியிட விரும்பினார். ஏனெனில் தமது பிரவர்த்தி என்ன என்பதை அவர் வெகுகாலமாக சிந்தித்து வந்திருக்கிறார். ஆனால் தமது பேச்சை இடைமறிக்க முடியாதபடி இளவரசர் வாசைலி அவரை இடைமறித்து ஒரு விசேஷமான கெஞ்சும் குரலில் பேச ஆரம்பித்தார். முக்கியமான காரியங்களில் விசேஷமான தூண்டுதல்கள் வேண்டிய இடங்களில் இம்மாதிரி தந்திரத்தை அவர் உபயோகித்ததுண்டு.

'ஆனால் எனது அன்பரே, என்னுடைய மனசாட்சியைத் திருப்தி செய்வதற்காகவும், என் பொருட்டுமே, இதை நான் செய்கிறேன். ஆகவே, எனக்கு வந்தனம் கூறவேண்டிய அவசியம் எதுவும் இல்லை. தம்மீது எல்லோரும் அதிகமாக பிரியம் கொண்டிருக் கிறார்கள் என்று இதுவரை யாரும் புகார் செய்தது கிடையாது. தவிர நீர் சுதந்திரமானவர். உமக்குப் பிரியமில்லையென்றால், நாளையே அதை வீசி எறியலாம். ஆனால் நீர் பீட்டர்ஸ்பர்க்கிற்கு வந்தபின்பு, எல்லாவற்றையும் நேரிலேயே காணலாம். இந்த துக்ககரமான நினைப்புகளிலிருந்து வெளியேற வேண்டியது, ரொம்ப அவசியம்'

என்று இளவரசர் வாசைலி சொல்லிப் பெருமூச்சுவிட்டார், 'ஆமாம், எனது சிறுவரே. உம்முடைய வண்டியில், எனது வேலைக்காரன் வரலாம். ஆ! நான் ஒன்றைச் சொல்வதற்கும் மறந்துபோய்விட்டேன், எனது அன்பரே. உமது தகப்பனாருக்கும் எனக்கும் இடையில் சில கணக்குகள் தீர்க்கப்பட வேண்டியதுள்ளது என்பது உமக்குத் தெரியும். ஆகவே, ரயாஜான் எஸ்டேட்டிலிருந்து வரவேண்டிய பணத்தை நான் வாங்கி வைத்திருக்கிறேன். உமக்கு இப்போது அது அவசியமில்லை. அந்தக் கணக்குகளைப்பற்றிப் பின்னால் நாம் பேசித் தீர்த்துக் கொள்ளலாம்.'

ரயாஜான் எஸ்டேட்டிலிருந்து வரவேண்டிய பணம் என்று இளவரசர் வாசைலி குறிப்பிட்டது, பல ஆயிரக்கணக்கான ரூபிள்களாகும். இதுஎஸ்டேட்டின் விவசாயிகள் கொடுத்த நில வரிப்பணம். அதைத்தான் இளவரசர் தம்மிடம் வைத்துக் கொண்டார்.

மாஸ்கோவிலிருந்தபடியே பீட்டர்ஸர்பர்க்கிலும் அன்பான, பிரியமான அதே சூழ்நிலையை பீயர் கண்டார். இளவரசர் வாசைலி அவருக்கு வாங்கிக்கொடுத்த பதவியையோ, அல்லது அந்தஸ்தையோ விட்டுவிட முடியவில்லை. அவருக்குக் கிடைத்த அறிமுகங்கள், அழைப்புகள், உயர்வட்டார வரவேற்புகள் ஆகியவைகள் மாஸ்கோவைவிட இன்னும் அதிகமாயிருந்த படியால், அவருக்கு மனக்குழப்பமும், பரபரப்பும் ஏற்பட்டன. அவை அவருக்கு ஏதோ நன்மை வரப்போகிறதென்ற தொடர்ச்சி யான, விடாத ஆசையைக் கொடுத்தன. அந்த நினைப்பு முன்பாக எப்பொழுதும் இருந்த போதிலும் அவர் அதை அடைந்ததே இல்லை.

அவருடைய முந்திய பிரம்மச்சாரி வாழ்க்கையில் ஏற்பட்ட நண்பர்களில் பலர் பீட்டர்ஸ்பர்க்கில் தற்சமயம் இல்லை. காப்பாளர் படை, யுத்த முனைக்குப் போய்விட்டது. டோலாகாவ் பதவியிலிருந்து தாழ்த்தப்பட்டார். எங்கோ ஒரு மாகாணத்தில் பட்டாளத்தில் அனடோல் இருந்துவந்தார். இளவரசர் ஆண்ட்ரூ வெளிநாட்டிலிருந்தார். ஆகவே அவர் தமது வழக்கப்படி இரவுகளில் நடந்துகொள்ள விரும்பியவைகளுக்கு சந்தர்ப்பங்கள் கிடைக்கவில்லை. அல்லது அன்னியோன்னியமாக பேசுவதற்கு அவரைவிட வயதில் அதிகமாயும் அவர் கௌரவிக்கக் கூடியதாயு முள்ள நண்பர் எவரும் அவருக்குக் கிடைக்கவில்லை. அவருடைய முழு நேரமும் டின்னர்களிலும் நடனங்களிலும் கழிந்தது. அநேகமாய் இளவரசர் வாசைலியின் வீட்டில், அவருடைய பருத்த

மனைவியான இளவரசியோடும், அவருடைய அழகிய குமாரியான ஹெலனோடும் பீயர் முக்கியமாகக் காலம் கழித்து வந்தார்.

பீயரிடம் உயர்வட்டாரங்களில் ஏற்பட்டிருந்த மனமாறுதலை மற்றவர்களைப் போலவே அன்னா பாவ்லாவ்னா ஷெரெரும் காட்டினாள்.

தாம் பேசுவது இடத்திற்குப் பொருத்தமற்றதென்றும், சமயோசிதம் இல்லாததென்றும், தமது பேச்சுகள் மனதில் உருவாகும்போது மிகுந்த புத்திசாலித்தனமாகத் தோன்றிய போதிலும் இவற்றை அவர் பேசியவுடன் அவை அறிவீனமானவை களாக மாறிவிடுவதாகவும், அன்னா பாவ்லாவ்னா முன்னிலையில் முன்பெல்லாம் அவர் எப்போதும் உணர்ந்து வந்தார். அதோடு, ஹிப்பாலைட்டின் அசட்டுத்தனமான பேச்சுகள் பொருத்தமாகவும், புத்திசாலித்தனமாகவும் இருப்பதாகவும் அவர் நினைத்ததுண்டு. இப்போதோ, பீயர் சொல்லும் ஒவ்வொரு விஷயமும், எல்லாருக்கும் மனோகரமாய் இருந்தது. அதை அன்னா பாவ்லாவ்னா தெரிவிக்காவிட்டாலும், தெரிவிப்பதற்கு அவள் விரும்புவதாகவும் ஆனால் தம்முடைய கூச்சத்திற்கு மரியாதை செய்து அவள் அம்மாதிரி தெரிவிக்கவில்லையென்றும் அவர் உணர்ந்தார்.

1805-6 வருஷ குளிர்கால ஆரம்பத்தில் அன்னா பாவ்லாவ்னா வழக்கமாக அனுப்பக்கூடிய சிகப்பு வர்ண அழைப்பு ஒன்று பீயருக்குக் கிடைத்தது. அந்த அழைப்பின் கீழ் 'அந்த அழகிய ஹெலனை நீர் இங்கே பார்க்கலாம். அவளை எப்போதும் பார்ப்பதற்கு மகிழ்ச்சியாய் இருக்கும்' என்று எழுதப்பட்டிருந்தது.

அந்தவாக்கியத்தை பீயர் படித்ததும் தங்களுக்குள் தொடர்பு இருப்பதாக மக்கள் நினைத்து வந்தது இப்போது அதிகமாய் வளர்ந்துவிட்டதாய் நினைத்தார். அந்த நினைப்பு ஏற்பட்டபோது, ஏதோ ஒரு காரியத்தைச் செய்யும்படி அவர் தலையில் சுமத்துவது போன்றும் அதைத் தம்மால் நிறைவேற்ற முடியாதென்றும் அவர் பீதியடைந்தார். ஆனால் அது சந்தோஷமான மனோராஜ்யமாய் இருக்குமென்பதை நினைத்து, மற்றொரு பக்கம் மகிழ்ச்சி அடைந்தார்.

'அன்னா பாவிலாவ்னாவின் வரவேற்பு வைபவம் முன்பு நடந்த ஒன்றைப் போலவே இருந்தது. ஆனால், இச்சமயம் தனது விருந்தாளிகளுக்கு அவள் அளித்த விசித்திரம் மார்ட்டிமார்ட் அல்ல. அவருக்குப் பதிலாக, பெர்லினிலிருந்து அப்போதுதான் வந்திருந்த

ராஜதந்திர சேவையிலுள்ள ஒருவரை விருந்தாளிகளுக்கு அளித்தாள். பாட்ஸ்டாமிற்கு சக்கரவர்த்தி அலெக்ஸாண்டர் செய்த விஜயத்தைப் பற்றியும், இரண்டு சக்கரவர்த்தி நண்பர்களும் தங்களுக்குள் இணைபிரியாத ஒப்பந்தத்தை ஏற்படுத்திக் கொண்டு மனித சமூகத்திற்கு எதிரியாய் இருப்பவனுக்கு விரோதமாக நியாயத்தை நிலைநிறுத்த பிரதிக்ஞை எடுத்துக் கொண்டதைப் பற்றியும் உள்ள விவரங்களை அவர் கொண்டு வந்திருந்தார். அன்னா பாவ்லாவ்னா, பீயரின் தந்தையான கோமகன் பெஜுகாவ் சமீபத்தில் இறந்து போனதால் அந்த வாலிபருக்கு ஏற்பட்ட நஷ்டத்திற்காக துக்கம் தெரிவிப்பவளைப்போல, சோக முகத்தோடு பீயரை வரவேற்றாள். பீயருக்கு அதிக பழக்கமில்லாத, பீயரின் தகப்பனார் இறந்து போனதினால் பீயருக்குப் பெரிய துயரம் ஏற்பட்டு விட்ட தென்பதைத் தாங்கள் இடைவிடாமல் தெரிவிக்க வேண்டியது தங்கள் கடமை என்று ஒவ்வொருவரும் நினைத்தார்கள். மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தினி மரியா பெடாராவ்னாவைப் பற்றி அவள் பேசியபோதெலலாம், எப்படி அவள் முகத்தில் ஒரு சோகக்குறி தோன்றுமோ, அதேமாதிரி சோகக்குறி இப்போது தோன்றியது. இதைக்கண்ட பீயர் பெருமை கொண்டார். அவளது வரவேற்பறையில் அவளுக்கு வழக்கமான சாமர்த்தியதைக் காட்டி அங்கு வந்திருந்த விருந்தாளிகளைப் பல பிரிவுகளாக அன்னா பாவ்லாவ்னா பிரித்துவைத்தாள். அங்கிருந்த பெரிதான பிரிவில் இளவரசர் வாசைலியும், ஜெனரல்களும் அந்த ராஜதந்திரி சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். மற்றொருபிரிவு தேநீர் மேஜையைச் சுற்றி அமர்ந்திருந்தது. முதலில் சொன்ன பிரிவில் சேருவதற்கு பீயர் விரும்பினார். ஆனால், யுத்தக்களத்தில் ஒரு கமாண்டருக்கு எப்படி ஆயிரக்கணக்கான பிரகாசமான யுக்திகள் தோன்றி அவற்றை காரியத்தில் காட்டுவதற்கு அவகாசம் இல்லாதபோது எப்படி பரபரப்பான நிலைமையில் அவர் இருப்பாரோ அதே மாதிரி அன்னா பாவ்லாவ்னாவும் இருந்தாள். அவள் பீயரின் கைச் சட்டையைத் தனது விரல்களால் தொட்டுச் சொன்னாள். 'ஒரு வினாடிபொறும். இன்று மாலையில் உமக்காக நான் ஒன்றை ஏற்பாடு செய்திருக்கிறேன்.' (அவள் ஹெலனை நோட்டமிட்டு அவளிடம் புன்சிரிப்பு கொண்டாள்.) 'எனது அன்புள்ள ஹெலன், எனது சித்தியிடம் கொஞ்சம் தயவு காட்டு. அவளுக்கு உன்மீது மிகுந்த பிரியமுண்டு. அவளிடம் பத்து நிமிஷங்கள் பேசிக் கொண்டிரு. அது உனக்கு ஒன்றும் மந்தமாய் இருக்காது. இதோ, அருமையான கோமகன் இருக்கிறார்; உன்னுடன் வருவதற்கு அவர் மறுக்க மாட்டார்.

அந்த அழகு சுந்தரி சித்தியிடம் போனாள். ஆனால் அன்னா பாவ்லாவ்னா பீயரை நிறுத்தி வைத்தாள். கடைசியாகச் சில வார்த்தைகளை சொல்ல வேண்டி இருப்பவளைப்போலக் காணப்பட்டாள்.

'அவள் மிக நேர்த்தியாய் இல்லையா?' என்று அந்த கம்பீரமான அழகி நகர்ந்து செல்வதைச் சுட்டிக்காட்டி அவள் பீயரிடம் கேட்டாள். 'அவள் அம்மாதிரி நடைபோடுகிறாள் என்பதைப் பாரும். அவ்வளவு சிறிய பெண்ணாய் இருந்தும், என்ன சாமர்த்தியம், என்ன பிரமாதமான நடையுடை பாவனைகள், எல்லாம் அவளுடைய இருதயத்திலிருந்து வருகின்றன. அவள் யாருக்குக் கிடைக்கிறாளோ, அந்த மனிதன் சந்தோஷமாய் இருப்பான். சொத்துகள் இல்லாத ஒரு ஏழையாய் இருந்தாலும், அவளை மனைவியாய்ப் பெற்றவன் உயர் வட்டாரத்தில் மிகுந்த பிரகாசமான பதவியை அடைவான். நீர் அப்படி நினைக்க வில்லையா? உமது அபிப்பிராயத்தை தெரிய வேண்டுமென்பது தான் என்னுடைய விருப்பம்' என்று அன்னா பாவ்லானா கூறிவிட்டு, பீயரை போகும்படி விட்டுவிட்டாள்.

ஹெலனுடைய நடையுடை பாவனைகள் பூரணத்துவம் கொண்டவைகளாய் இருக்கின்றன என்பதை பீயர் உண்மையோடு ஒப்புக் கொண்டார். ஹெலனை எப்போதாவது பீயர் நினைப்பதாய் இருந்தால் அது அவளுடைய அழகுக்காகவும் உயர் வட்டாரத்தில் மௌனமாகவும் கண்ணியமாகவும் தோன்றுவதற்கு அவளுக்குள்ள அபாரமான சாமர்த்தியத்துக்காகவுமேயாகும்.

அந்த வயதான சித்தி அந்த இரண்டு இளைஞர்களையும் தான்இருந்த மூலையில் வரவேற்றாள். ஹெலன்மீது அவளுக்கிருந்த மதிப்பை அவள் மறைக்க ஆவலாயிருந்தாள். அன்னாபாவ்லாவ்னா விடம் தனக்குள்ள பயத்தைக் காட்ட விரும்புபவள்போலத் தோன்றினாள். இந்த இளைஞர்களிடம் என்ன பேச வேண்டு மென்று கேட்பதைப் போல அந்த சித்தி அன்னாவைப் பார்த்தாள். அங்கிருந்து அன்னா புறப்படும்போது மீண்டும் பீயரின் கைச் சட்டையைத் தொட்டு, 'என்னுடைய வீட்டில் உற்சாகமில்லாமல் மந்தமாயிருக்கிறது என்று நீர் சொல்லமாட்டீர் என நான் நம்புகிறேன்' என்று கூறிவிட்டு ஹெலனைக் கடைக்கண்ணால் பார்த்தாள். ஹெலன் குறுநகை கொண்டு நோக்கினாள். அந்த நோக்கில் தன்னைப் பார்ப்பவர்கள் யாரும், வசீகரிக்கப்படாமல் இருக்கமாட்டார்கள் என்று அவள் சொல்வதைப்போல் இருந்தது. அந்த சித்தி இருமினாள். விழுங்கினாள். பிரஞ்சு மொழியில் பேசி,

ஹெலனைப் பார்ப்பதற்காக மிகுந்தமகிழ்ச்சி அடைவதாகக் கூறினாள்.

பின்னால் பீயரிடம் திரும்பி, அதேபார்வையோடு, அதே வார்த்தைகளோடு வரவேற்றாள். மந்தமாக தயங்கித்தயங்கி நடந்து கொண்டிருந்த அந்த உரையாடலின் இடையில் தான் ஒவ்வொருவருக்கும் காட்டிவருகிற, அழகிய பிரகாசமான புன்முறுவலோடு பீயரிடம் ஹெலன் திரும்பினாள். அந்தப் புன்முறுவல் பீயருக்குப் பழக்கமானதாய் இருந்தபடியால், அவரைப் பொறுத்தவரையில் அவருக்கு அர்த்தம் எதுவும் இல்லை. ஆகவே, அதைப் பற்றி அவர் கவனிக்கவில்லை. பீயரின் தந்தை கோமகன் பெஜுகாவ் சேகரித்து வைத்திருந்த பொடி டப்பிகளைப் பற்றி அந்த சித்தி பேச ஆரம்பித்து, தன்னுடைய பொடி டப்பியை அவர்களுக்குக் காட்டினாள். அந்த சித்தியின் கணவர் படம் அந்த பொடி டப்பி மூடிமேல் போடப்பட்டிருந்தது. அதைப் பார்க்க வேண்டுமென்று இளவரசி ஹெலன் கேட்டாள்.

'அந்தப் படம் ஒருவேளை வின்னெசியின் வேலையாய் இருக்கலாம்' என்று பீயர் கூறினார். அந்தக் காலத்தில் அம்மாதிரி படம் எழுதுவதில் அவர் பேர் பெற்றிருந்தார். அந்த பொடி டப்பியை வாங்கிப் பார்ப்பதற்கு பீயர் குனிந்தார். அதே சமயத்தில் அடுத்த மேஜையில் இருப்பவர்கள் என்ன பேசிக்கொண்டிருந் தார்கள் என்று கவனிக்க முயற்சி செய்தார்.

சுற்றிப் போக அவர் பாதி எழுந்தார். அதற்குள்ளாக, அந்த சித்தி அந்த பொடி டப்பியை ஹெலனின் முதுகுக்கு மேலாக நீட்டினாள். அதற்கு இடம் கொடுப்பதற்கு ஹெலன் முன்னால் குனிந்து திரும்பி ஒரு புன்முறுவல் காட்டினாள். மாலை வரவேற்புகளில் அவள் எப்போதும் அணிவதைப்போல, ஒரு ஆடையை அணிந்திருந்தாள். அக்காலத்து மோஸ்தர்படி அந்த ஆடை முன்பக்கமும், பின்பக்கமும் பெரும் பகுதி தெரியும்படியாய் இருந்தது. பீயருக்கு எப்போதும் சலவைக் கல்லைப்போலத் தோன்றிவந்த அவளுடைய மார்பு, அவள் பொடி டப்பியை வாங்குவதற்குக் குனிந்தபோது, மிகவும் சமீபத்திலிருந்தது. அவருடைய குறுகிய திருஷ்டி கொண்ட கண்கள்கூட, அவளுடைய கழுத்தினுடையவும், தோள் களினுடையவும் உயிர்த்துடிப்பான மனோகரத்தை கவனிக்காமல் இருக்க முடியவில்லை. அவை எல்லாம் அவருடைய இதழ்களுக்கு வெகு சமீபத்தில் இருந்தன. அவைகளை முத்தமிடுவதற்கு அவர் தமது தலையை சிறிது தாழ்த்தினால் போதும். அவளுடைய உடம்பின் வெதுவெதுப்பு, அவள் பூசியிருந்த வாசனைத் திரவியத்தின் நறுமணம், அவள் அசைந்தபோது ஏற்பட்ட உள்

ஆடைகளின் சலசலப்பு, இவற்றையெல்லாம் அவர் உணர்ந்தார். அவளுடைய சலவைக்கல் அழகு ஒன்றுதிரண்டு, ஆடைகளோடு இருப்பதாக அவருக்குத் தோன்றவில்லை. ஆனால், அவளுடைய உடம்பின் கவர்ச்சிகள் எல்லாம், அவளுடைய ஆடைகளால் மறைக்கப்பட்டிருக்கின்றன என்றே அவருக்குத் தோன்றியது. ஒரு தடவை இவற்றைப் பார்த்தபின்பு, அவற்றை மறப்பதற்கு அவரால் முடியவில்லை. ஒரு பொய்த்தோற்றத்தின் உண்மையை நாம் அறிந்த பின்பு, எப்படி அதே பொய்த்தோற்றத்தை நாம் நம்ப முடியாதோ அதே மாதிரியிருந்தது.

'நான் எவ்வளவு அழகாய் இருக்கிறேன் என்று நீர் இதற்கு முன்பு அறிந்துகொள்ளவில்லையல்லவா? நான் ஒரு பெண் என்பதையும் நீர் கவனிக்கவில்லையல்லவா? ஆமாம், நான் ஒரு பெண். யாராவது ஒருவருக்கு - உமக்கானாலும்சரி - உடைமையாக வேண்டியவள் என்று அவள் கூறுவதைப் போன்று அவளுடைய கடைக்கண் பார்வை தோன்றியது. அதே வினாடியில் ஹெலன் தமது மனைவியாகலாம் என்பது மட்டுமல்ல, மனைவியாக ஆகவே வேண்டும், வேறு எப்படியும் இருக்க முடியாது என்று பீயர் உணர்ந்தார்.

திருமண மேடையில் இருவரும் ஒன்றாய் நிற்பது எவ்வளவு உறுதியோ, அதே உறுதியோடு அவர் அச்சமயம் நினைத்தார். இது எப்படி எப்போது நடக்கும் என்பது அவருக்குத் தெரியாது. அப்போது நடப்பது ஒரு நல்ல காரியமா என்பதும் அவருக்குத் தெரியாது. (ஆனால் இது ஒரு கெட்ட காரியமாய் இருக்குமென்று அவர் உணர்ந்தார். ஆனால் அதன் காரணம் என்னவென்று அவருக்குத் தெரியவில்லை.) ஆனால் அது நடக்கலாம் என்பதை அவர் அறிவார்.

பீயர் தமது பார்வையைக் கீழே நோக்கினார். மீண்டும் மேலே உயர்த்தினார். இதற்கு முன்னால் அவளைப் பார்த்ததுபோல, தம்மிடமிருந்து விலகியிருக்கும் அவளுடைய தூரத்து அழகை, அதுவரை தாம் தினசரி பார்த்து வந்ததைப்போல பார்க்க ஒருமுறை விரும்பினார். ஆனால் அவரால் இப்பொழுது செய்ய முடிய வில்லை. பனியால் மூடிய புல் நுனிகளை மரங்களின் உச்சிகள் என்று ஒருவன் முதலில் நினைத்து பின்னால் மரங்களின் உச்சிகள் அல்ல, புல்லின் நுனிகள்தான் என்று கண்டுபிடித்த பின்பு அவை மரங்கள்தான் என்று எப்படி ஒருவன் நினைக்க முடியாதோ அதேமாதிரி அவரால் அம்மாதிரி பார்க்க முடியவில்லை. அவர் படபடக்கத்தக்க விதத்தில் அவள் மிகச்சமீபமாய் இருந்தாள். அவர் மீது அவளுடைய ஆதிக்கம் ஏற்கனவே ஏற்பட்டுவிட்டது.

அவர்களுக்கிடையில் எந்தவிதமான தடையும் கிடையாது. அவருடைய 'உறுதி' என்ற தடை ஒன்றுதான் அங்கிருந்தது.

'நல்லது, உங்களுடைய இடத்தில் நீங்கள் இருக்கும்படி விட்டுவிடுகிறேன். அங்கே நீங்கள் எல்லாரும் சரியாய்த்தான் இருக்கிறீர்களென்று எனக்குத் தெரிகிறது' என்று அன்னா பாவ்லாவ்னாவின் குரலோசை கேட்டது.

தாம் ஏதோ தகாத காரியத்தைச் செய்துவிட்டோமோ என்று அறிவதற்கு ஆவலோடு முயற்சி செய்வதைப்போல, பீயர் தம்மைச் சுற்றி நாணத்தால் சிவந்த முகத்தோடு பார்த்தார். தமக்கு என்ன நேர்ந்திருக்கிறதென்பதை, தாம் அறிந்திருப்பதைப்போலவே ஒவ்வொருவரும் அறிந்திருப்பதாக அவருக்குத்தோன்றியது.

சிறிதுநேரம் கழித்து, அந்தப்பெரிய பிரிவுக்கு அவர்போனபோது, அன்னா பாவ்லாவ்னா அவரைப்பார்த்து, 'நீர் உமது பீட்டர்ஸ்பர்க் மாளிகையை அலங்காரம் செய்வதாகக் கேள்விப்படுகிறேன், அது உண்மையா?' என்று கேட்டாள்.

அதுஉண்மைதான். கட்டிடச் சிற்பி அந்த கட்டிடத்திற்கு வேண்டிய காரியங்களைப் பழுது பார்த்துச் செய்ய வேண்டுமென்று சொல்லி இருந்தான். எதற்காகச் செய்ய வேண்டுமென்பதை பீயர் அறியாமலேயே தம்முடைய பிரம்மாண்டமான பீட்டர்ஸ்பர்க் வீட்டிற்கு வேண்டிய காரியங்களை செய்யும்படி சொன்னார்.

'அது ஒரு நல்ல காரியம்தான். ஆனால் இளவரசர் வாசைலியின் வீட்டிலிருந்து நீர் போக வேண்டாம். இளவரசரைப்போல ஒரு நண்பர் உமக்கு இருப்பது நல்லது' என்று அவள் இளவரசர் வாசைலிக்கு இளநகை காட்டிச் சொன்னாள். 'அதைப்பற்றி எனக்குக் கொஞ்சம் தெரியும். அல்லவா? நீர் இன்னமும் வயதில் சிறியவராய் இருக்கிறீர். உமக்கு ஆலோசனைகள் அவசியம். ஒரு வயதான ஸ்திரீக்குரிய உரிமையோடு நான் சொல்வதைக் கண்டு என்மீது கோபம்கொள்ள வேண்டாம்.'

தன்னுடைய வயது எவ்வளவு என்று சொல்லியபின்பு எதையோ பதிலை எதிர்பார்ப்பதைப்போல பெண்கள் பேச்சை சிறிது நேரம் நிறுத்துவது வழக்கம். அதேமாதிரி அவளும் சிறிது நிறுத்தினாள். 'ஆனால் கல்யணாம் செய்துகொண்டால் அது வேறு விஷயம்' என்று சொல்லி இருவரையும் ஒரே நோக்கால் பார்த்தாள். பீயர் ஹெலனைப் பார்க்கவில்லை. அவளும் அவரைப் பார்க்கவில்லை. ஆனால் மனம் படபடக்கத்தக்க விதத்தில் அவள் அவ்வளவு சமீபத்தில் இருந்தாள். அவர் எதையோ முனங்கினார். அவருடைய நிறமும் மாறியது.

வீடு திரும்பிய பின்பு வெகுநேரம்வரையில் அவரால் தூங்க முடியவில்லை. என்ன நடந்தது என்பதைப்பற்றி அவர் சிந்தித்துக் கொண்டிருந்தார். என்ன நடந்துவிட்டது? ஒன்றும் இல்லை. அவர் அறிந்துகொண்டது இவைதான்:- அந்தப் பெண்ணை குழந்தையிலிருந்து அவர் அறிவார். அவளுடைய அழகைப்பற்றி கேட்டபோது அவர் ஏதோபராக்கு புத்தியில், ‘ஆம், அவள் பார்ப்பதற்கு நன்றாய் இருக்கிறாள்’ என்று சொன்னார். அந்தப் பெண் அவளுக்கு சொந்தமாகலாம்.

‘ஆனால் அவள் ஒரு முட்டாள். அவளை முட்டாள் என்று நானே சொல்லியிருக்கிறேன். தவிர என்னிடம் அவள் தோற்றுவிக்கும் அந்த மயக்கத்தில் ஏதோ ஆபாசமும் ஏதோ தவறும் இருப்பதாகத் தோன்றுகிறது. அவளுடைய சகோதரன் அனடோல் அவளிடம் காதல் கொண்டிருப்பதாகவும் அவளும் அவள் மீது காதல் கொண்டிருப்பதாகவும் நான் கேள்விப்பட்டேன். அதைப்பற்றிய ஒரு பெரிய புரளிகூட ஏற்பட்டிருந்தது. அதனால்தான் அவனை வெளியே அனுப்பிவிட்டார்கள். தவிர ஹிப்பாலைட் அவளுடைய சகோதரன்... இளவரசர் வாசைலி அவளுடைய தந்தை... அது ரொம்ப கெட்ட விஷயம்...’ என்று அவர் மனதில் சிந்தனை ஓடியது. இந்த சிந்தனை இப்படி ஓடிக்கொண்டிருக்கும்போது, இது இன்னும் முடிவு அடையாமல் இருக்கும்போது மற்றொரு வழியில் வேறொரு சிந்தனை உருவாகி வளர்ந்து கொண்டிருப்பதை புன்சிரிப்போடு உணர்ந்தார். அவளுடைய உதவாக்கரைத்தனத்தை அவர் நினைத்துக் கொண்டிருக்கும்போதே, அவள் தமக்கு எப்படி மனைவியாவாள், எம்மாதிரி அவள் தம்மைக் காதலித்து முற்றிலும் மாறாக விளங்குவாள், அம்மாதிரி அவளைப் பற்றித் தாம் கேட்டவைகளும் நினைத்தவைகளும் பொய்யாகப் போய்விடக் கூடும் என்று மனோராஜ்யம் ஓடிக்கொண்டிருந்தது. மீண்டும் அவளை இளவரசர் வாசைலியின் குமாரியாகப் பார்க்கவில்லை. அவளுடைய முழு உடம்பும் அதன்மேல் மூடப்பட்டிருக்கும் சாம்பல் வர்ண உடைகளும் அவருடைய மனக்கண் முன்னால் தோன்றின. ‘ஆனால் இல்லை. இந்த நினைப்பு ஏன் எனக்கு முன்னால் தோன்றாமல் போயிற்று’ என்று எண்ணினார். மீண்டும் தமக்குள்ளாகவே, அது நடக்காத காரியம், இயற்கைக்கு விரோதமான காரியமாய் அது இருக்கும்’ என்று அவர் தமக்குள் சொல்லிக்கொண்டார். ஏனெனில் இந்த திருமணத்தில் மானக்கேடு இருப்பதாக அவருக்குத் தோன்றியது. அவள் முன்னால் பேசிய வார்த்தைகளும் பார்வைகளும் அவர் இருவரையும் பார்ப்பவர்கள் பேசிய வார்த்தைகளும் பார்வைகளும் அவர் நினைவுக்கு வந்தது.

தமது வீட்டைப்பற்றி அன்னா பாவ்லாவ்னா பேசியபோது, அவள் சொல்லிய வார்த்தைகளும், காட்டிய பார்வைகளும் அவர் நினைவு கூர்ந்தார். அதோடு, இளவரசர் வாசைலியும் வேறு பலரும் சொல்லிய ஆயிரக்கணக்கான அத்தகைய குறிப்புப் பேச்சுக்களையும் அவர் நினைவுகூர்ந்தார். இவற்றையெல்லாம் நினைத்தபோது திடீரென்று அவரைப் பீதிபற்றிக்கெண்டது. ஏனெனில் அவர் செய்யக் கூடாத ஒரு தவறான காரியத்தை அவர் செய்யும்படி அவரைக் கட்டாயப்படுத்துவது போலவும், அந்த வழியில் அவர் போய்க் கொண்டிருப்பது போலவும் அவர் உணர்ந்தார். தமது இந்த உறுதியை அவர் காட்டிக் கொண்டிருந்த அதே நேரத்தில் அவருடைய மனதில் மற்றொரு பக்கத்தில் அவளுடைய உருவம் பூரணமான பெண் அழகோடு வளர்ந்து கொண்டு வந்தது.




1825-ம் வருஷம் நவம்பர் மாதத்தில் பரிசோதனை வேலைக்காக நான்கு மாகாணங்களைச் சுற்றிப்பார்க்க இளவரசர் வாசைலி போக வேண்டியதாயிருந்தது. இதை அவர் தமக்காக ஏற்பாடு செய்து கொண்டார். வெகுகாலமாகப் பார்க்காத தமது எஸ்டேட்டுகளை அதன்மூலம் பார்த்துக்கொள்ளவும், தமது குமாரர் அனடோலை அவருடைய பட்டாளம் முகாம் தங்கியிருந்த இடத்திலிருந்து அழைத்துக் கொண்டு இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கியிடம் கொண்டுபோகவும் அந்தப் பணக்கார வயோதிகரின் குமாரத்தியை அவருக்குக் கல்யாணம் செய்து வைக்கவும், அவர் இந்தச் சுற்றுப்பிரயாணத்தை ஏற்பாடு செய்தார். இந்தப் புதுக்காரியங்களில் தலையிடுவதற்காக வீட்டைவிட்டுப் புறப்படுவதற்கு முன்பு, பீயருடன் இளவரசர் வாசைலி காரியங்களை முடித்துக்கொள்ள வேண்டியிருந்தது. பீயர் சமீப காலமாக நாள் முழுவதும் வீட்டிலேயே இருந்தார். அதாவது இளவரசர் வாசைலியின் வீட்டிலேயே இருந்தார். ஹெலன் முன்பு அவர், ஒரு காதலர் எப்படி இருப்பாரோ அதே மாதிரி அசட்டுத்தனமாகவும், பரபரப்படைந்தும், முட்டாள்தனமாகவும் நடந்துகொண்டார். ஆனால் இன்னும் தம்மைக் கல்யாணம் செய்துகொள்ளும்படி அவளை அவர் கேட்கவில்லை.

'இதெல்லாம் ரொம்ப சரி. ஆனால் விஷயங்களை சீக்கிரமாக முடித்தாக வேண்டும்' என்று ஒருநாள் காலையில் சோகமான பெருமூச்சோடு இளவரசர் வாசைலி தமக்குத்தாமே கூறிக்

கொண்டார். பீயர் தமக்குக் கடமைப்பட்டிருந்தபோதிலும் இந்த விஷயத்தில் இன்னும் சரியாக நடந்து கொள்ளவில்லை என்பது அவரது அபிப்பிராயம். 'இளமையும் விளையாட்டுப் புத்தியும் அவரிடம் இருக்கிறது... நல்லது, கடவுள் அவரோடு இருப்பாராக' என்று அவர் நினைத்து, தம்முடைய நல்ல சுபாவத்தை எண்ணி மகிழ்ச்சியடைந்தார்: 'ஆனால், இந்த விஷயத்தில் ஒரு முடிவு ஏற்பட்டாக வேண்டும். நாளை மறுதினம் லெலியாவின் (ஹெலனுடைய செல்லப்பெயர்) பெயர்தினம். இரண்டு, மூன்று பேர்களை நான் அழைக்கப் போகிறேன். தாம் என்ன செய்ய வேண்டுமென்பதை பீயர் அறிந்து கொள்ளாவிட்டால், அப்புறம் அது என்னுடைய விஷயமாகிவிடும். ஆமாம், என்னுடைய விஷயம். நான் அவளுடைய தந்தை.'

அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பு நிகழ்ச்சி நடந்து ஆறு வாரங்களாயின. அன்றிரவுதான் அவர் தூக்கமில்லாமல் இருந்தார். அன்றிலிருந்து, ஹெலனை திருமணம் செய்வது ஒரு பெரிய பேராபத்தாயிருக்குமென்று முடிவு செய்து, அதற்காக அவளைத் தவிர்த்துவிட்டுப்போய்விட வேண்டுமென்று விரும்பினார். பீயர் அம்மாதிரி முடிவு செய்தபோதிலும் இளவரசர் வாசைலியின் வீட்டைவிட்டு அவர் போகவில்லை. ஒவ்வொரு நாளும் தம்மையும் ஹெலனையும் அதிகமாய் சம்பந்தப்படுத்திப் பேசுவதைப் பார்த்து அவர் பயங்கரமடைந்தார். அவளைப் பற்றிய பழைய நினைப்புகளுக்குத் தம்மால் திரும்புவது சாத்யம் இல்லை என்று அவர் உணர்ந்தார். ஆகவே அவரிடமிருந்து பிரிந்துபோக முடியாது என்றும் அது ஒரு பயங்கரமான காரியமாயிருந்தாலும், தம்முடைய விதியை அவளுடைய விதியோடு சேர்த்தாக வேண்டுமென்றும், அவர் நினைத்தார். ஒருவேளை அதிலிருந்து விடுதலை பெற்றிருக்கலாம். ஆனால், வரவேற்பு கொடுப்பது என்பதையே முன்பு அறியாத இளவரசர் வாசைலி, இப்போது தினம் மாலையில் ஒரு வரவேற்புக் கச்சேரியை ஏற்பாடு செய்துவந்தார். ஆகவே, மற்றவர்களுக்கு ஏமாற்றம் கொடுக்காமல் இருப்பதற்கும் பொதுவான மகிழ்ச்சியைக் கெடுக்காமல் அவர் அந்த வரவேற்பு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு இருக்க வேண்டியது அவசியமாயிருந்தது. இளவரசர் வாசைலி தாம் வீட்டிலிருந்த சொற்பமான நேரங்களில் பீயரைக் கடந்து போகும்போது அவர் கையைப்பற்றி கீழாக இழுத்தோ அல்லது பராக்கு முகமாக தமது சுருக்கம் விழுந்த, நன்றாய் க்ஷவரம் செய்யப்பட்ட கன்னத்தை முத்தம் இடுவதற்காகப் பீயருக்குக் காட்டியோ சொல்வார்: 'நாளை வரையில்' அல்லது 'டின்னருக்கு வந்து விடும். இல்லையென்றால், நான் உம்மைப்

பார்க்க முடியாது.' அல்லது 'உமக்காகத்தான் நான் தங்கியிருக் கிறேன்.' இம்மாதிரியாக சொல்வது வழக்கம். இளவரசர் வாசைலி பீயருக்காக அவர் சொல்லியபடி வீட்டிலேயே தங்கியிருந்த போதிலும் அவருடன் சேர்ந்தாற்போல் இரண்டு வார்த்தைகளைப் பேசுவது அபூர்வம். என்றாலும் அவருக்கு ஏமாற்றத்தைக் கொடுக்க பீயருக்கு முடியவில்லை. ஒவ்வொருநாளும் அந்த ஒரே விஷயத்தையே தமக்குள் சொல்லிக் கொண்டார். அவள் எப்படிப்பட்டவள் என்பதை நான் அறிந்து அவள் உண்மையில் எப்படி இருக்கிறாள் என்பதைப் பற்றி என் மனதில் முடிவு செய்வதற்கு காலம் வந்துவிட்டது. நான் முன்பு தவறாக இருந்தேனா அல்லது இப்போது தவறாக இருக்கிறேனா? இல்லை. அவள் ஒரு முட்டாள் அல்ல. அவள் ஒரு சிலாக்கியமான பெண் என்று தமக்குள்ளாகவே சொல்லிக் கொள்வார். 'அவள் ஒருபொழுதும் தவறு செய்யமாட்டாள். அறிவீனமாக எதையும் எப்போதும் பேசமாட்டாள். அவள் பேசுவதே மிகச் சொற்பம். ஆனால் அவள் என்ன பேசினாலும் அது தெளிவாகவும் புரியும்படியாகவும் இருக்கிறது. ஆகவே அவள் முட்டாள் அல்ல. அவள் எப்பொழுதும் மானங்கெட்டவளாய் இருந்ததில்லை இப்பொழுதும் அவள் மானங்கெட்டவளாய் இருக்கவில்லை. ஆகவே அவள் கெட்ட பெண்ணாய் இருக்க முடியாது.' அவளுடன் அவர் இருக்கும்போதே தனது மனதிலுள்ள எண்ண ஓட்டங்களை வெளிப்படையாகச் சில சமயங்களில் பேச ஆரம்பித்து விடுவ்துண்டு. ஆனால் அவள் எப்போதுமே சரியாகவும் பொருத்தமாகவும் பதில் சொல்லுவாள். அதைப்பற்றி தனக்கு சிரத்தை இல்லாததைப்போலப் பேசுவாள்; அல்லது ஒரு மௌனமான பார்வையும் இளநகையும் பீயருக்குக் காட்டுவாள். அவரைவிட தான் உயர்ந்தவள் என்பதை வேறு எதையும்விட அதிகமாய் உணரச் செய்யும்படி அவை இருக்கும். அந்தப் புன்னகைக்கு எதிராக எல்லாவிதமான வாதங்களும் அசட்டுத்தனமானவை என்று அவன் நினைத்தது மிகவும் சரி.

அவள் எப்போதும் அவருக்கு மட்டும் தனியாக ஒளி கொண்ட நம்பிக்கையான புன்முறுவலை அவரிடம் காட்டியே பேசுவாள். அவளுடைய முகத்தை வழக்கமாக ஒளிரச் செய்துவந்த அவளுடைய பொதுவான புன்னகையைவிட இந்தப் புன்னகையில் ஏதோ ஒரு தனி முக்கியத்துவம் இருந்தது. தாம் ஒரு வார்த்தை சொல்லவோ அல்லது அந்த எல்லையைத்தாண்டவோ எல்லோரும் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை பீயர் அறிவார். இப்போதோ அல்லது பின்போ அந்த எல்லையை அவரும் கடக்கப் போகிறார் என்பதை அவர் அறிவார். ஆனால் அந்த பயங்கரமான

விஷயத்தை நினைத்தபோதே ஒரு சொல்ல முடியாத பயம், அவரைப் பற்றிக்கொண்டு வந்தது. கடந்த ஒன்றரை மாத காலத்தில் ஒரு ஆயிரம் தடவைகளாவது அந்தப் பயங்கரமான சுகபோகத்திற்கு தாம்மேலும் மேலும் நெருங்குவதாக அவர் நினைத்ததுண்டு. அவர் தமக்குள் சொல்லுவார். 'நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன். எனக்கு உறுதி வேண்டும். எனக்கு உறுதி எதுவுமே கிடையாதா?'

ஒரு முடிவுக்கு வர அவர் விரும்பினார். ஆனால் இந்த விஷயத்தில் தமக்கு மன உறுதியில்லை என்பதை அவர் அச்சத்தோடு உணர்ந்தார். அவருக்கு முன்னால் இந்த மன உறுதி உண்மையிலேயே இருந்தது என்பதை அவர்அறிவார். தாங்கள் குற்றமற்றவர்கள் என்று நினைக்கிற காலத்தில் மட்டும், தைரியத்தோடு இருப்பவர்கள் சிலர் உண்டு. பீயர் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர். அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பில் அந்தப் பொடி டப்பியை வாங்குவதற்காக அவர் குனிந்தபோது, அவரை ஆட்கொண்ட அந்த ஆசை ஏற்பட்ட தினத்திலிருந்து, அவர் ஏதோ தவறு செய்துவிட்டதுபோல உணர்ந்தார். அவருடைய உறுதியை அந்தத் தவறு ஸ்தம்பிக்கச் செய்துவிட்டது.

ஹெலனுடைய பெயர்தினத்தில், நெருங்கிய சொந்தங்கள் மட்டும் கொண்ட ஒரு சிறிய இரவுச்சாப்பாட்டுக்கூட்டம், இளவரசர் வாசைலியின் வீட்டில் கூடியது. அன்று இரவிலேயே இந்த இளமங்கையின் விதி நிர்ணயிக்கப்பட்டுவிடுமென்று, அங்கு வந்த நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் சொல்லப்பட்டது. விருந்தாளிகள் இரவுச் சாப்பாடு சாப்பிட அமர்ந்தார்கள். ஒரு காலத்தில் அழகாயிருந்த, ஒரு பிரம்மாண்டமாகவும் எடுப்பாகவும் இருந்த பெண்ணாகிய இளவரசி குராகினா மேஜையின் தலைப்பில் அமர்ந்திருந்தாள். அவளுக்கு இரு பக்கங்களில், விருந்தாளிகளில் முக்கியமானவர்களான ஒரு வயோதிக ஜெனரலும் அவருடைய மனைவியும், அன்னா பாவ்லாவ்னாவும் அமர்ந்திருந்தார்கள். மற்றொரு கோடியில், இளைஞர்களும் அவ்வளவு முக்கியமில்லாத விருந்தாளிகளும் அமர்ந்திருந்தார்கள். அங்கும் கூட குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் இருந்தார்கள். பீயரும் ஹெலனும் ஒருவர் பக்கத்தில் ஒருவர் அமர்ந்திருந்தார்கள். இளவரசர் வாசைலி இரவுச்சாப்பாடு எதுவும் சாப்பிடவில்லை. ஒரு மகிழ்ச்சியான தோற்றத்தோடு மேஜையைச் சுற்றி வந்து இச்சமயம் ஒருவர் பக்கத்தில் இருப்பதும், அடுத்தசமயம் மற்றொருவர் பக்கத்தில் இருப்பதுமாகச் இருந்து வந்தார். பீயர், ஹெலன் இவர்களைத் தவிர, மற்றவர்களிடம் எல்லாம் ஏதோ அர்த்தமற்ற, ஆனால் மனதிற்குப் பிடித்தமான பேச்சுகளைப் பேசி வந்தார். பீயரையும் ஹெலனையும் அவர்

கவனித்துக் கொண்டதாகக் காட்டிக் கொள்ளவில்லை. இளவரசர் வாசைலி அந்தக் கூட்டத்திற்கு உற்சாகமூட்டி வந்தார். மெழுகு வத்திகள் பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்தன. வெள்ளிப் பாத்திரங்களும், பளிங்குக் கிண்ணங்களும் அந்த வெளிச்சத்தில் பிரகாசம் அடைந்தன. சீமாட்டிகளின் ஆடைகளும், ஆபரணங் களும் கனவான்களின் தங்கம், வெள்ளியால் ஆகிய வாகு வலையங்களும், அந்த வெளிச்ச்தில் மின்னின. சிகப்பு டவாலிகள் அணிந்த சேவர்கள் மேஜையைச்சுற்றி நடமாடி பறிமாறிக் கொண்டிருந்தார்கள். தட்டுகள், கத்திகள், கோப்பைகள், அங்கிருந்தவர்களின் பேச்சுகள் ஆகியவை ஒன்றோடொன்று கலந்துகேட்டுவந்தன. மேஜையின் ஒரு கோடியில், மன்னர் வீட்டு மேற்பார்வையாளரான ஒரு வயோதிகர், ஒரு வயோதிகக் கோமகளைப் பார்த்து, அவளைத் தாம் ஆர்வத்தோடு காதல் கொள்வதாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அதைக்கேட்டு அவள் சிரித்தாள். மற்றொரு கோடியில் யாரோ, மேரி விக்டாராவ்னாவின் கஷ்டங்களைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்த கதை காதுகளில் கேட்டது. மேஜையின் மத்தியில் அமர்ந்திருந்த இளவரசர் வாசைலி, ஒவ்வொருவருடைய கவனத்தையும் பெற்றார். சீமாட்டிகளிடம் அவர் கோமாளித்தனமான புன்னகையோடு, கடந்த வியாழக் கிழமை நடந்த இம்பீரியல் கௌன்ஸிலின் கூட்டத்தைப் பற்றியும், பீட்டர்ஸ்பர்க்கின் புதிய மிலிட்டெரி கவர்னர் ஜெனரலான செர்ஜி குஜ்மிச் வியாஜ்மெட்டினாவ் அதில் நடந்துகொண்டதைப் பற்றியும் அவர்சொல்ல ஆரம்பித்தார். ராணுவத்தின் தலைமைக் காரியாலயத்திலிருந்து சக்கரவர்த்தி அலெக்ஸாண்டர் அவருக்கு ஒரு பிரகடனம் அனுப்பியிருந்தார். அந்தப் பிரகடனத்தில் எல்லாத் திசைகளிலிருந்தும் மக்கள் தங்கள் ராஜபக்தியை தெரிவித்து வருவதாகவும், முக்கியமாக பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து மக்கள் அனுப்பிய ராஜபக்தி யாதாஸ்து தமக்கு விசேஷமான மகிழ்ச்சியைக் கொடுப்பதாகவும் அத்தகைய ஒரு சமுதாயத்தின் தலைவராய் இருப்பதற்கு தாம் பெருமை அடைவதாகவும், அந்த நம்பிக்கைக்குப் பாத்திரமாக நடந்து கொள்ள தாம் முயற்சிப்பார் என்றும், அதில் சொல்லப்பட்டிருந்தது. இந்தப் பிரகடனத்தின் ஆரம்பத்தில், 'செர்ஜி குஜ்மிச், எல்லாத் திசைகளிலிருந்தும் மக்கள்' என்று வார்த்தைகள் இருந்தன.

'நல்லது அப்படியானால் செர்ஜி குஜ்மிச் என்று சொல்வதற்கு மேலாக அவர் எதையுமே சொல்லவில்லையா? என்று ஒரு சீமாட்டி கேட்டாள்.

'அதுவேதான். அதற்கப்புறம், ஒரு மயிரிழைகூட அதிகமாக அவர் போகவில்லை' என்று இளவரசர் வாசைலி சிரித்துக்கொண்டே பதில் அளித்தார். 'செர்ஜி குஜ்மிச்... எல்லா பக்கங்களிலிருந்தும்... எல்லா பக்கங்களிலிருந்தும்... செர்ஜி குஜ்மிச்...' பாவம் வியாஜ் மெட்டினாவ் அதற்கு மேலாக போக முடியவில்லை. மறுபடியும் மறுபடியும் அவர் வாசிக்க ஆரம்பித்தார். ஆனால், 'செர்ஜி' என்று சொன்னவுடன் அவர் தேம்பினார். 'குஜ்மிச்' என்றவுடன் கண்ணீர் வந்தது. 'எல்லாப் பக்கங்களிலிருந்தும்' என்ற வார்த்தைகள் அவருடைய தேம்பலில் அமுங்கிப்போயின. அதற்கு மேல்அவரால் முடியவில்லை. மறுபடியும் கைக்குட்டையை எடுத்துக்கொண்டு மறுடிபயும் 'செர்ஜி குஜ்மிச்' எல்லா பக்கங்களிலிருந்தும்' என்றதும் மீண்டும் கண்ணீர். கடைசியாக, வேறு ஒருவரைக்கொண்டு அதை வாசிக்கச் சொன்னார்கள். 'குஜ்மிச்... எல்லா பக்கங்களிலிருந்தும்... அப்புறம் கண்ணீர்' என்று யாரோ ஒருவர் சொல்லிச் சிரித்தார்.

அவ்வளவு தூரம் கடினமாய் இருக்க வேண்டாமென்று மேஜையின் மற்றொரு பக்கத்திலிருந்த அன்னா பாவ்லாவ்னா கூச்சலிட்டு, தமது விரலை பயமுறுத்துவதுபோல ஆட்டினாள். நமது அருமை வியாஜ்மெட்டினாவ் எவ்வளவு மரியாதைக்குரியதான, சிலாக்கியமான மனிதர்.'

வெகுநேரம் எல்லோரும் சிரித்தார்கள். மேஜையின் தலைப்பில் அமர்ந்திருந்த பிரதான விருந்தாளிகள் ஒவ்வொருவரும் பற்பல விதமான பரபரப்புகளால் மிகுந்த குஷியாய் இருந்தார்கள். மேஜையின் கோடியிலிருந்த பீயரும் ஹெலனும் மட்டும் ஒருவர் பக்கத்தில் ஒருவர் மௌனமாய் அமர்ந்திருந்தார்கள். வெளியே தோன்றாத ஒரு புன்சிரிப்பு அவர்களின் இருவர் முகங்களையும் பிரகாசம் அடையச் செய்தது. செர்ஜி குஜ்மிச்சுக்கும் அந்தப் புன்சிரிப்புக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. அச்சமயம் தங்களுக்கு ஏற்பட்டிருந்த உணர்ச்சிகளைக் கண்டு நாணங்கொள்வதான புன்சிரிப்பாய் இருந்தது. ஆனால் மற்றவர்கள், ஒயினையும் கேக்குகளையும் சாப்பிடுவதில் எவ்வளவு ஆனந்தம் கொண்டிருந்தார்களோ, அதே மாதிரி, சிரிப்பதிலும் பேசுவதிலும் தமாஷ் செய்வதிலும் ஆனந்தம் கொண்டிருந்தார்கள் என்றாலும் அந்த இளம் ஜோடியை அவர்கள் கூடியவரை பார்க்காமல் இருந்தார்கள்.

அந்த ஜோடியைப் பற்றிக் கவலையில்லாதவர்கள் போலவும், அவர்களைக் கவனிக்காதவர்கள் போலவும் அவர்கள் காட்டிக் கொண்டாலும், இடையிடையே அந்த ஜோடியைப் பார்த்து அவர்கள் நோட்டத்திலிருந்து ஒரு விஷயம் நிச்சயமாய்த் தெரிந்தது.

அதாவது: செர்ஜி குஜ்மிச்சின் கதை, அந்தச்சிரிப்பு, அந்தச் சாப்பாடு ஆகியவைகளைப்பற்றி அவர்கள் கவனமாய் இருந்ததாகச் சொல்ல முடியாது. அதெல்லாம் பாசாங்கு. ஏனெனில் அங்கிருந்தவர்களின் முழு கவனமும் பீயர் மீதும் ஹெலன் மீதுமே இருந்தன. செர்ஜி குஜ்மிச் தேம்பி அழுவதைப்போல, இளவரசர் வாசைலி நடித்துக் காட்டிய பொதெல்லாம் அவருடைய கண்கள் அவருடைய குமாரியை நோட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவர் சிரித்தபோது அவருடைய முகத்தோற்றம், 'ஆம்... அது நன்றாய் நடந்துவருகிறது. அது இன்றே முடிவாய்விடும்' என்று தெளிவாய் சொல்லுவதைப் போல் இருந்தது. 'நமது அருமையான வியாஜ் மெட்டினாவ்'க்காக அன்னா பவ்லான்வா பயமுறுத்தியபோது ஒரு வினாடி அவளுடைய கண்கள் பீயரை நோட்டமிட்டன. தமது வரப்போகும் மருமகனுடையவும் மகளுடையவும் சந்தோஷத்தைப் பாராட்டுவதான தோற்றத்தை இளவரசர் வாசைலி அந்த அன்னா பாவ்லாவ்னாவின் கண்களில் கண்டார். வயோதிக இளவரசி தனது பக்கத்திலுள்ள வயோதிக சீமாட்டிக்கு ஒயின் விட்டுக் கொடுத்த போது, சோகத்தோடு பெருமூச்சுவிட்டு, கோபத்தோடு தனது குமாரியை நோட்டமிட்டார். அச்சமயம் அவள் விட்ட பெருமூச்சு, அந்த வயோதிகச் சீமாட்டியிடம், 'ஆம், இந்த இனிப்பான ஒயினை உறிஞ்சுவதைவிட, உனக்கும் எனக்கும் வாழக்கையில் வேறு என்ன இருக்கிறது? இந்த சிறுசுகள் இம்மாதிரி தைரியமான, கவர்ச்சிகரமான சந்தோஷத்தை அனுபவிப்பதற்குத்தான் இது காலம்' என்று சொல்லுவதுபோல் இருந்தது. 'என்ன அசட்டுத்தனமான விஷயங்களையெல்லாம் நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன்' என்று அந்தக் காதலர்களின் மகிழ்ச்சி முகங்களை நோட்டமிட்ட ராஜதந்திரி நினைத்து, 'அதுவல்லவா சந்தோஷம்' என்றார்.

அந்த முக்கியத்துவமில்லாத அற்பமான செயற்கைத் தோற்றங் களால் சேர்த்திருந்த அந்தக் கூட்டத்தில் ஒரு உணர்ச்சி ஊடுருவி நுழைந்தது. அதுதான் ஆரோக்கியமும் அழகுள்ள ஒரு வாலிபனும் ஒரு பெண்ணும் ஒருவருக்கொருவர் கொண்டிருந்த கவர்ச்சிகரம். இந்த உணர்ச்சி அங்கிருந்தவைகள் எல்லாவற்றையும் அடக்கி ஆண்டு, அந்த செயற்கையான பேச்சு குரல்களுக்கு மேலாக உயர்ந்து நின்று, தமாஷ்கள் ரசிப்பை இழந்தன. செய்திகளுக்கோ கவர்ச்சியில்லை. அங்கு காணப்பட்ட பரபரப்போ செயற்கையான தாய் தோன்றியது. விருந்தாளிகள் மட்டுமல்ல, மேஜைகளில் பரிமாறிக் கொண்டிருந்த சேவகர்களும் இதை உணர்ந்தார்கள். அந்த சந்தோஷம் ததும்பிய முகத்தையுடைய அழகிய ஹெலனையும், சிவந்து அகலமான சந்தோஷமான, ஆனால் குழப்பமான

முகத்தையுடைய பீயரையும் பார்த்தபோது, வேலைக்காரர்களும் தங்கள் கடமைகளை மறந்தார்கள். அங்கிருந்த மெழுகுவத்திகளின் வெளிச்சமெல்லாம், இந்த இரண்டு மகிழ்ச்சியான முகங்கள்மீது மட்டுமே ஒரு முகமாய் திருப்பிவிடப்பட்டதுபோல காணப் பட்டது.

அந்தக் கூட்டத்தில் தாம் மையமாக இருப்பதாக பீயர் உணர்ந்தார். இது அவருக்கு சந்தோஷத்தை அளித்ததோடு, தர்மசங்கடமான நிலைமையையும் அளித்தது. ஏதோ ஒரு பிரவர்த்தியில் பூரணமாக அவர் ஈடுபட்டது போல் அவர் காணப்பட்டார். எதையும் தெளிவாகப் பார்க்கவோ, கேட்கவோ அல்லது புரிந்து கொள்ளவோ அவரால் முடியவில்லை. ஏதோ இடையிடையே, எதிர்பாராத விதமாக ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத விஷயங்கள் அவர் மனதில் தோன்றின.

'அப்படியானால் எல்லாம் முடிந்துவிட்டது' என்று அவர் நினைத்தார். 'எப்படி இதெல்லாம் நடந்தது? இவ்வளவு சீக்கிரமாக அவளுக்காக மட்டுமல்ல; மற்ற ஒவ்வொருவருக்காகவும் இந்தக் காரியம் நடந்தே தீர வேண்டும். அவர்கள் அதை எதிர் பார்த்திருக்கிறார்கள். இது கண்டிப்பாக நடக்குமென்று அவர்கள் நிச்சயமாய் இருந்தார்கள். நான் அவர்களை ஏமாற்றம் அடையும்படி செய்ய முடியாது. ஆனால் அது எப்படி இருக்கும்? எனக்குத் தெரியாது. ஆனால் அது நிச்சயமாய் நடக்கப் போகிறது என்று பீயர் நினைத்து, தம்மை நெருங்கி நின்ற பளபளப்பான தோள்களைக் கடைக் கண்களால் பார்த்தார்.

திடீரென்று எதற்காகவோ வெட்கம் அடைவதுபோலக் காணப்படுவார். ஒவ்வொருவருடைய கவனத்தையும் பெற்று, அதிருஷ்டசாலியென்று ஒவ்வொருவராலும் நினைக்கப்பட்டும், சாதாரணமுகத்தோடுகூடிய தம்மை ஏதோ ஒரு வகையான (ட்ரோஜன் யுத்தம் என்ற கிரேக்க நாட்டு இலக்கியத்தில், பாரீஸ் என்பவர் ஹெலன் என்பவளைத் தூக்கிக் கொண்டு போவதாகவும், அதனால் அந்த யுத்தம் ஏற்படுவதாகவும் கதை அமைந்திருக்கிறது.) பாரீஸ் ஒரு ஹெலனைக் கைப்பற்றியிருக்கிற மாதிரி நோக்கப் பட்டும் வருவது ஒரு தர்மசங்கடமான நிலைமை என்று அவர் உணர்ந்தார். ஆனால் அது எப்பொழுதுமே அப்படித்தான் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. அது அப்படித்தான் இருந்தாக வேண்டும் என்று தம்மை சமாதானம் செய்துகொண்டார். 'தவிரவும் அம்மாதிரி ஏற்படுவதறக்கு நான் என்ன செய்து விட்டேன்? அது எப்படி ஆரம்பமாயிற்று? இளவரசர் வாசைலியோடு மாஸ்கோவிலிருந்து நான் பிரயாணம் ஆகிவந்தேன்.

அப்போது அங்கே எதுவும் இல்லை. நான் ஏன் அவர் வீட்டில் தங்கக் கூடாது? அவளோடு நான் சீட்டு விளையாடினேன். அவளுடைய அழகு பையை நான் எடுத்துக்கொண்டு அவளோடு உலாவப்போய் வந்தேன். எப்பொழுது அது ஆரம்பாயிற்று? இதெல்லாம் எப்பொழுது வந்து சேர்ந்தது? இப்பொழுது நான் அவள் பக்கத்தில் நிச்சயதார்த்தம் ஆனதுபோல் உட்கார்ந்து, அவளுடைய நெருக்கத்தை, அவள் சுவாசமிடுவதை, அவள் அசைவுகளை, அவள் அழகைக் கண்டு, கேட்டு, உணர்ந்து வருகிறேன்.' அழகாய் இருப்பது அவள் அல்லவென்றும், தானே பிரமாதமான அழகாய் இருப்பதாகவும் அதனாலேயே எல்லோரும் அவரைப் பார்ப்பதாகவும் திடீரென்று அவருக்குத் தோன்றும். உடனே அவர் தமது மார்பை விரித்து, தலையை உயர்த்தி, தமது நல்ல அதிருஷ்டத்தைக் கண்டுமகிழ்ச்சி கொள்ளுவார். இச்சமயம் எதையோ ஒன்றை இரண்டாவது தடவையாக, ஒரு பழக்கமான குரல் மீண்டும் கேட்பதை அவர் அறிந்தார். ஆனால் பீயர் மெய் மறந்திருந்தபடியால் என்ன சொல்லப்பட்டது என்பதை அவரால் அறிய முடியவில்லை.

'பால்கோன்ஸ்கியிடமிருந்து கடைசியாக எப்போது உமக்குத் தகவல் வந்தது?' என்று இளவரசரர் வாசைலி மூன்றாவது தடவையாகக் கேட்டார். 'எனது அன்பானவரே, எவ்வளவு பராக்குப் புத்தியோடு நீர் இருக்கிறீர்.'

இளவரசர் வாசைலி புன்னகை செய்துகொண்டார். தம்மீதும், ஹெலன்மீதும் எல்லோரும் இளநகை கொள்வதைப் பீயர் கவனித்தார். 'உங்களுக்கெல்லாம் தெரிந்திருந்தால் அதனாலென்ன' என்று பீயர் நினைத்தார். 'அதனால் என்ன, அதுதான் உண்மை' என்று குழந்தை மாதிரி புன்னகை கொண்டு சொல்லிக்கொண்டார். ஹெலனும் அதே மாதிரி புன்னகை கொண்டாள்.

'உமக்கு எப்போது கடிதம் வந்தது? அந்தக் கடிதம் ஆல்முட்ஜில் இருந்து வந்ததா?' என்று இளவரசர் வாசைலி மீண்டும் கேட்டார். ஏதோ ஒரு விவகாரத்தைத் தீர்ப்பதற்கு இந்த விவரத்தை அறிய வேண்டுவதுபோல அவர்நடித்தார்.

இந்த மாதிரி சில்லரை விஷயங்களைப் பற்றி எப்படி ஒருவர் பேசவோ, நினைக்கவோ முடியுமென்று நினைத்தார். 'ஆமாம் ஆல்முட்ஜில் இருந்துதான் வந்தது' என்று ஒரு பெருமூச்சோடு அவர் பதில் அளித்தார். இராச் சாப்பாட்டுக்குப் பின்னால், பீயரும் அவருடைய தோழியும் மற்றவர்களோடு வரவேற்பறைக்கு போனார்கள். விருந்தாளிகளை கலைந்து போக ஆரம்பித்தார்கள்.

சிலர் ஹெலனிடம் விடைபெற்றுக் கொள்ளாமலேயே போனார்கள். சிலர் அவள் தற்சமயம் ஈடுபட்டிருந்த முக்கியமான கவனத்திலிருந்து கலைப்பதற்கு இஷ்டம் இல்லாமல், அவளிடம் ஒரு வினாடி நின்றுவிட்டு, அதைவிட்டு அவசரமாகப் போனார்கள். அவர்களை அவள் வழிஅனுப்புவதற்கு அவர்கள் விரும்பவில்லை. ராஜதந்திர சேவையைச் சேர்ந்தவர் சோகமான மௌனத்தோடு அந்த வரவேற்பறையைவிட்டு வெளியே போனார். தம்முடைய ராஜதந்திர பிரவர்த்தியில் உள்ள டம்பத்தையும், பீயருக்கு ஏற்பட்டுள்ள சந்தோஷத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தார். அந்த வயோதிக ஜெனரல் தமது மனைவியிடம் தம்முடைய கால் எப்படி இருக்கிறது என்று அவள் கேட்டபோது உறுமினார். 'ஓ, அந்தப் பழைய முட்டாள்' என்று அவர் நினைத்தார். ஆனால், அந்த இளவரசி ஹெலன் ஐம்பது வயதானாலும் அழகுடனேயே இருப்பாள்.'

'உம்மை இப்போது பாராட்டலாமென்று நான் நினைக்கிறேன்' என்று வயோதிக இளவரசியிடம் அன்னா பாவ்லாவ்னா மெதுவாகக் கூறி, பலத்த சத்தத்தோடு முத்தமிட்டாள். 'எனக்கு மட்டும் இந்த தலைவலி இல்லாமலிருந்தால், நான் இன்னும் அதிக நேரம் தங்கியிருப்பேன்.' வயோதிக இளவரசி பதில் அளிக்கவில்லை. தனது குமாரிக்குக் கிடைத்துள்ள சந்தோஷத்தைப் பார்த்துப் பொறாமையால் வருந்திக் கொண்டிருந்தாள்.

விருந்தாளிகள் விடைபெற்றுப்போனபோது பீயரும் ஹெலனோடு, தனிமையாக அந்தச்சிறிய வரவேற்பறையில், தங்கியிருந்தார். ஆறு வாரங்களாகப் பல தடவைகளில் அவளோடு அவர் தனித்து இருந்ததுண்டு. ஆனால் காதலைப் பற்றி அவளிடம் அவர் எப்போதும் பேசியதில்லை. இப்போது, அது தவிர்க்க முடியாததென்று அவர் உணர்ந்தார். ஆனால் அந்த கடைசிப் படியைக் கடப்பதற்கு அவரால் தம்முடைய மனதை சரி செய்துகொள்ள முடியவில்லை. அவர் வெட்கம் அடைந்தார். ஹெலனுக்குப் பக்கத்தில் வேறு யாரோ இருக்க வேண்டிய இடத்தில் தாம் உட்கார்ந்திருப்பதாக அவர் உணர்ந்தார். இந்த மகிழ்ச்சி உனக்கு அல்ல' என்று ஏதோ ஒரு உள்ளொலி அவரிடம் குசுகுசுவெனக் கூறியது. 'உம்மிடம்என்ன இருக்கிறதோ அது இல்லாதவர்களுக்கு இந்த மகிழ்ச்சி சேர்ந்ததாகும்.'

எதையாவது பேசவேண்டுமே என்பதற்காக அவர் அவளைப் பார்த்து இந்த வரவேற்பு நிழகச்சி அவளுக்குத் திருப்தியாய் இருந்ததா என்று கேட்டார். அவள் தனது வழக்கமான எளிய முறையில் பதில் சொன்னாள். அவளுடைய பெயர் தினங்களில்

இந்த தினத்தைப் போன்ற மகிழ்ச்சியான தினம் எப்போதுமே ஏற்படவில்லை என்று கூறினாள். நெருங்கிய சொந்தங்களில் சிலர் இன்னமும் அதைவிட்டுப் போகவில்லை. அவர்கள் பெரிய வரவேற்பு அறையில் உட்கார்ந்திருந்தார்கள். இளவரசர் வாசைலி பீயரிடம் .மெதுவாக நடந்து வந்தார். பீயர் எழுந்து 'நேரமாய்விட்டது' என்று சொன்னார். இளவரசர் வாசைலி அவர் முகத்தைக் கடுமையாகப் பார்த்தார். அம்மாதிரி பீயர் அச்சமயம் சொல்லியது, ரொம்ப விசித்திரமானது என்றும், அம்மாதிரி சொல்லியிருக்கக் கூடாது என்றும் அவர் நினைப்பதுபோல இருந்தது. ஆனால் உடனே அந்தக் கடுமையான தோற்றம் மாறி, அவர் பீயரின் கையை கீழே இழுத்து உட்காரும்படி செய்து கனிவோடு புன்னகை கொண்டார்.

'நல்லது லெலியோ' என்று அவர் தமது குமாரியை உடனே திரும்பிப் பார்த்து, அவருக்கு வழக்கமான கவலையில்லாத குரலில், வழக்கமான கனிவோடு பேசினார். குழந்தையிலிருந்து செல்லமாக வளர்த்து வந்த பெற்றோர்கள் எப்படிப் பேசுவார்களோ அதே மாதிரியிருந்தது. ஆனால் இம்மாதிரி பேச்சை இளவரசர் வாசைலி மற்ற பெற்றோர்களைப் பார்த்து காப்பியடித்து தெரிந்துகொண்டார்.

மீண்டும் அவர் பீயரிடம் திரும்பினார்.

'செர்ஜி குஜ்மிச் - எல்லா பாகங்களிலிருந்தும்' - என்று அவர் சொல்லிக்கொண்டே தமது உள்சட்டையின்மேல் பொத்தானைக் கழற்றினார்.

பீயர் இளநகை கொண்டார். ஆனால் குஜ்மிச்சின் கதையில் இளவரசர் வாசைலிக்கு அப்போது சிரத்தை இல்லை என்பதை அவர் அறிந்திருந்ததாக அவருடைய புன்னகை காட்டியது. பீயருக்கு இது தெரியுமென்பதை இளவரச்சர் வாசைலி கண்டுகொண்டார். திடீரென்று அவர் எதையோ முனங்கிவிட்டு அந்த இடத்தைவிட்டு அகன்று போனார். அந்த இளவரசருக்குக்கூட மன அமைதி கலைந்து போய்விட்டது என்று பீயருக்குத் தோன்றியது. உலக அனுபவம் உள்ள அந்த வயோதிகரின் அமைதி குலைந்த நிலைமை பீயரின் உள்ளத்தைத் தொட்டது. அவர் ஹெலனைப் பார்த்தார். அவளுக்கும் மன அமைதி குலைந்திருப்பதாய் தோன்றியது. ஆனால் அவளுடைய பார்வை, 'நல்லது, எல்லாம் உம்முடைய குற்றம்தான்' என்று சொல்லுவதுபோல் தோன்றியது.

'தீர்மானம் செய்தாக வேண்டும். ஆனால் என்னால் முடியாது. என்னால் முடியாது' என்று பீயர் நினைத்தார். மீண்டும் அவர் அவசியமில்லாத விஷயங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். செர்ஜி

குஜ்மிச்சைப் பற்றிதாம் சரியாகக் கேட்கவில்லை என்றும், அந்தக் கதையில் உள்ள முக்கியமான விஷயம் என்னவென்றும் விசாரித்தார். புன்முறுவலோடு ஹெலன் பதில் அளித்தாள். ஏனெனில், அவளும் அதை சரியாய் கேட்கவில்லை.

இளவரசர் வாசைலி வரவேற்பறைக்குத் திரும்பியபோது, அவருடைய மனைவியான இளவரசி ஒரு வயோதிக சீமாட்டியிடம் பீயரைப்பற்றி மெதுவான குரலில் பேசிக்கொண்டிருந்தாள்.

'ஆமாம் அது ரொம்ப சிலாக்கியமான ஜோடிதான். ஆனால் சந்தோஷம், என் அன்பே...'

'கல்யாணங்கள் எல்லாம் தேவலோகத்தில் செய்யப்படுகின்றன' என்று வயோதிக சீமாட்டி பதில் அளித்தாள்.

இளவரசர் வாசைலி அந்த சீமாட்டிகள் பேசியதைக் கேட்காததுபோல், அப்பக்கமாகக் கடந்து சென்று, ஒரு மூலையிலிருந்த சோபாவில் அமர்ந்தார். அவர் தமது கண்களை மூடிக்கொண்டார். தூங்குவது போலக்காணப்பட்டார். அவருடைய தலை, முன்னால் தொங்கியது உடனே உதறி விழித்துக்கொண்டார்.

'அலைன், நீ போய் அவர்கள் என்ன செய்தார்கள் என்பதைப் பார்த்து வா' என்று தன் மனைவியிடம் கூறினார்.

இளவரசி எழுந்து வாசலுக்குப்போய் அதன் வழியாகி ஒரு கௌரவமான, அலட்சியமான தோற்றத்தோடு, பக்கத்திலிருந்து சிறிய வரவேற்பு அறைக்குச் சென்று அங்கே நோட்டமிட்டாள். பீயரும் ஹெலனும் முன்போலவே இன்னமும் அமர்ந்திருந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

'இன்னமும் அதேமாதிரிதான்' என்று அவள் தனது கணவரிடம் சொன்னாள்.

இளவரசர் வாசைலி முகம் சுழித்தார். வாய் கோணி, அவருடைய கன்னங்கள் துடித்தன. அவருடைய முகம், அவருக்கு அது சிறப்பான ஒரு முரட்டுத்தனமான மகிழ்ச்சியற்ற தோற்றத்தோடு தோன்றியது. தம்மை உலுக்கிக் கொண்டு எழுந்து, தலையைப் பின்னால் சாய்த்து, உறுதியான நடையோடு சீமாட்டிகளைக் கடந்து அந்தச் சிறிய வரவேற்பு அறைக்குப் போனார். அங்கே வேகமான நடைகளில் மகிழ்ச்சியோடு பீயரை நெருங்கினார். அவர் முகம் வழக்கத்திற்கு விரோதமாக வெற்றிகரமாக காணப்பட்டபடியால், அதைப் பார்த்ததும் பீயர் பீதியோடு எழுந்தார்.

'கடவுளுக்கு நன்றி. எனது மனைவி எல்லாவற்றையும் சொன்னாள்' என்று இளவரசர் வாசைலி கூறினார். ஒரு கையால்

பீயரைச் சுற்றி வளைத்துக் கொண்டு, மற்றொரு கையால் தமது குமாரியை வளைத்துக் கொண்டு, 'என் அன்பான சிறுவரே... லெலியா... நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்' அவர் குரல் நடுங்கியது. 'உமது தந்தையை நான் மிகவும் நேசித்தேன்... அவள் உமக்கு ஒருசிறந்த மனைவியாய் இருப்பாள்... கடவுள் உம்மை ஆசீர்வதிப்பாராக...' அவர் தமது குமாரியைத் தழுவினார். பின்னால் பீயரைத் தழுவி, அவருடைய நாற்றமுள்ள வாயால் முத்தமிட்டார். அவருடைய கன்னங்களைக் கண்ணீர் நனைத்தது.

'இளவரசியே, இங்கே வா' என்று அவர் கூவினார்.

வயோதிக இளவரசர் உள்ளே வந்தாள். அவளும் அழுதாள். அந்த வயோதிக சீமாட்டி தனது கை குட்டையையும் உபயோகப் படுத்தினாள். பீயர் முத்தமிடப்பட்டார். அவர்அழகிய ஹெலனின் கையை பலதடவைகளில் முத்தமிட்டார். சிறிதுநேரம் கழித்து அவர்கள் தனியாய் விடப்பட்டார்கள்.

'இவையெல்லாம் இப்படித்தான் நடக்க வேண்டும். வேறுவிதமாய் இருக்க முடியாது. ஆகவே இது நல்லதா அல்லது கெடுதலா என்று கேட்பது உபயோகமற்றது. ஒருவிதத்தில் அது முடிவாகவும் துன்புறுத்தி வந்த பழைய சந்தேகத்தை நீக்கியதாகவும் இருப்பதால் அது நல்லதுதான்' என்று பீயர் நினைத்தார். தமக்கு நிச்சயமானவளின் கையை மௌனமாகப் பீயர் பற்றிக்கொண்டு, அவளுடைய அழகிய மார்பு, மேல் எழுந்து கீழ் அமுங்குவதைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

'ஹெலன்' என்று அவர் உரக்கக்கூவி சிறிது நேரம் சும்மாயிருந்தார்.

'இம்மாதிரி சந்தர்ப்பங்களில் விசேஷமாக ஏதவாது சொல்ல வேண்டும்' என்று அவர் நினைத்தார். ஆனால் ஜனங்கள் என்ன சொல்வார்கள் என்பதை அவரால் ஞாபகப்படுத்த முடியவில்லை. அவளுடைய முகத்தை அவர் பார்த்தார். அவருக்கு சமீபமாக அவள் நெருங்கினாள். அவள் முகம் சிவந்தது.

'ஓ, அவற்றை எடுத்துவிடுங்கள்... அவற்றை' என்று அவருடைய மூக்குக் கண்ணாடிகளைக் காட்டிச் சொன்னாள்.

பீயர் அவைகளை எடுத்துவிட்டார். கண்ணாடிகளை எடுத்த பின்பு, எம்மாதிரி கண்கள் விசித்திரமாகத் தோன்றுமோ, அதே மாதிரி அவர் கண்கள் தோன்றின. அதோடு கொஞ்சம் பீதி அடைந்தும், கேள்விக்குறிகொண்டும் காணப்பட்டன. கீழே குனிந்து, அவளுடைய கையை முத்தமிடப் போனார். ஆனால் துரிதமாக அநேகமாக முரட்டுத்தனமாக தனது தலையை அசைத்து

அவருடைய இதழ்களில், தன் இதழ்களைப் போர்த்தினாள். அவளுடைய மாறிய, விரும்பத்தகாத, பரபரப்பான தோற்றத்தைக் கண்டு பீயர் அதிசயமடைந்தார்.

‘இப்போது காலம் கடந்துவிட்டது. அதைச் செய்தாய் விட்டது. அதோடு நான் அவளைக் காதலிக்கிறேன்’ என்று பீயர் நினைத்தார்.

‘நான் உன்னைக் காதலிக்கிறேன்’ என்று சொன்னார். அச்சமயங்களில் என்னபேச வேண்டுமென்பது, அவருக்கு அப்பொழுதுதான் ஞாபகத்திற்கு வந்தது. அவருடைய வார்த்தைகள் ரொம்ப பலவீனமாய் ஒலித்தன. அதனால் அவர் தம்மைப்பற்றி வெட்கம் அடைந்தார்.

ஆறு வாரங்களுக்குப் பின்னால், அவருக்கு திருமணமாயிற்று. மிகப்பிரபலமான அழகியைப் பெற்ற அதிருஷ்டசாலி என்று மக்களால் சொல்லப்பட்டவரும், கோடிக்கணக்கான பணத்தை உடையவருமான அவர் பீட்டர்ஸ்பர்க்கில் உள்ள தமது பெரிய, புதிதாய் அலங்கரிக்கப்பட்ட மாளிகையில் வாழ்க்கையை ஆரம்பித்தார்.

# 3

## 3

1805-ம் வருஷத்தில் நவம்பர் மாதத்தில் வயோதிக இளவரசர் நிக்கலஸ் பால்கோன்ஸ்கிக்கு தமது குமாரரோடு இளவரசர் வாசைலி அவரைக்காண வருவதாக ஒரு கடிதம் வந்தது. ‘பரிசோதனை வேலைக்காக நான் ஒரு சுற்றுப் பிரயாணத்தில் புறப்படுகிறேன். அச்சமயத்தில் எனது கௌரவமான தாதாவைப் பார்ப்பதற்கு 70 மைல் தூரம் வந்து குறுக்காக நிற்கப் போவதில்லை. எனது குமாரன் அனடோல் ராணுவத்தில் சேரப்போகிறான். அவனும் என்னுடன் வருவான். அவன் தன்னுடைய ஆழ்ந்த மரியாதையை தனது தகப்பனாரைப் போல, தங்களுக்கு நேரில் தெரிவிப்பதற்காக தாங்கள் அனுமதிப்பீர்கள் என்று நம்புகிறேன்’ என்று எழுதியிருந்தார்.

‘மேரி’க்காக நாம் வெளியே போகவேண்டிய அவசியம் இல்லையென்று தோன்றுகிறது. அவளை திருமணம் செய்வதற்கு ஆட்கள் தாங்களாகவே வந்துகொண்டிருக்கிறார்கள்’ என்று சிறிது கவனக்குறைவாக குஞ்சு இளவரசி இந்தச் செய்தியைக் கேட்டதும் சொன்னாள்.

இளவரசர் நிக்கலஸ் முகம் சுளித்தார். ஆனால் ஒன்றும் சொல்வதில்லை.

கடிதம் வந்து இரண்டு வாரங்களுக்குப் பின்னால் ஒருநாள் மாலையில் இளவரசர் வாசைலியின் வேலைக்காரர்கள் வந்து சேர்ந்தார்கள். அவரும் அவரது குமாரரும் மறுநாள் வந்தார்கள்.

இளவரசர் வாசைலியின் யோக்யதைபற்றி வயோதிக பால்கோன்ஸ்கிக்கு எப்பொழுதுமே நல்ல அபிப்பிராயம் கிடையாது. அதுவும் சமீப காலத்தில் பாலும், அலெக்ஜாண்டரும் ஆட்சி செய்துவரும் இந்தப் புது ஆட்சியில் இளவரசர் வாசைலி பட்டங்களிலும், பதவிகளிலும் அதிகமாய் உயர்த்தப்பட்டார். அந்தக் கடிதத்தில் கண்டிருந்த விஷயங்களிலிருந்தும் குஞ்சு இளவரசி பேசியதிலிருந்தும் காற்று எப்பக்கம் அடிக்கிறது என்பதை அவர் அறிந்து கொண்டார். ஆகவே வாசைலியைப் பற்றிய அவருடைய தாழ்ந்த அபிப்பிராயம் இப்போது ஒரு துச்சமான வெறுப்பாக மாறியது. அவரைப்பற்றி பால்கோன்ஸ்கி பேசிய போதெல்லாம் ஒரு உறுமலுடனே பேசிவந்தார். இளவரசர் வாசைலி வந்த தினத்தன்று இளவரசர் பால்கோன்ஸ்கி முக்கியமாக ரொம்ப அதிருப்தியோடும், கோபமாகவும் இருந்தார். இளவரசர் வருவதற்காக அவர் கோமாய் வந்தார். அல்லது ஏற்கனவே கோபமாய் இருந்து இளவரசர் வாசைலி விஜயம் அந்தக் கோபத்தை அதிகரித்ததா என்பது எப்படியிருந்தாலும், அன்று அவர் மிகுந்த கோபாமாய் இருந்தார். ஆகவே அன்று காலையில் அவருடைய வேலைக்காரனான டிக்கன், இளவரசரிடம் அன்று போக வேண்டாமென்று கட்டிட சிற்பியை எச்சரித்தான்.

'அவர் எம்மாதிரியாக நடக்கிறார் என்பதை உம்மால் கேட்க முடிகிறதா?' என்று இளவரசரின் காலடி ஓசையை கட்டிட சிற்பிக்கு டிக்கன் சுட்டிக் காட்டினான். 'குதிகாலை முதலில் வைத்துச் சடார் சடாரென்று நடக்கிறார். அதற்கு என்ன அர்த்தம் என்பது நமக்குத் தெரியும்...'

எப்படியிருந்தாலும், சரியாக ஒன்பது மணிக்கு இளவரசர் தமது வெல்வெட்டு கோட்டோடும் உல்லன் கழுத்துப்பட்டியோடும் தொப்பியோடும், தமது வழக்கமான உலாவுதலுக்கு வெளியே சென்றார். முதல் நாளன்று பனி பெய்திருந்தது. செடிக்கூடத்திற்கு வழக்கமாக அவர் போகும்பாதையில் இருந்து எடுத்த உறை பனியை பாதைக்கு இரண்டு பக்கங்களிலும் குவித்திருந்தார்கள். விளக்கு மாற்றின் அடையாளம் இன்னும் உறைபனியில் தெரிந்து கொண்டிருந்தது. மண்வெட்டியை, பக்கத்திலுள்ள அந்த மெதுவான உறைபனிக் குவியலில் போட்டு வைத்திருந்தார்கள். செடிக்கூடங்கள், அடிமைகளின் விடுதிகள், விருந்தாளிகளின் விடுதிகள் ஆகியவைகளைப் பார்த்துக்கொண்டே, இளவரசர்

நடந்துபோனார். அவர் மௌனமாக இருந்தார். முகம் சுளித்திருந்தது.

எஜமானைப் போலவே பார்வையிலும் நடவடிக்கைகளிலும் ஒரேமாதிரித் தோன்றிய ஒரு கௌரவமான மனிதர் அவருக்கு ஓவர்ஸியராக இருந்தார். எஜமான் திரும்பும்போது அவருடன் ஓவர்ஸியரும் வந்துகொண்டிருந்தார். அவரைப் பார்த்து 'ஒரு பனி வண்டி போவதற்கு இந்த இடம் போதுமா?' என்று கேட்டார்.

'உறைபனி ஆழமாய் இருக்கிறது. பாதையை நன்றாய்ச் சுத்தம் செய்யும்படி நான் ஏற்பாடு செய்தேன், மேன்மை தங்கியவரே' இளவரசர் தமது தலையைத் தாழ்த்திவிட்டு முற்றத்திற்குப் போனார். 'கடவுளுக்கு நன்றி' என்று ஓவர்ஸியர் நினைத்தார். 'நல்ல வேளையாக புயல் கடந்து போய்விட்டது.'

'பாதையில் வருவதற்கு மிகவும் கஷ்டமாய் இருந்திருக்கும், மேன்மை தங்கியவரே' என்று ஓவர்சியர் மேலும் சொன்னார்: 'ஒரு மந்திரி, மேன்மை தங்கிய உங்களைப் பார்க்க வருவதாக நான் கேள்விப்பட்டேனே, மேன்மை தங்கியவரே?'

இளவரசர் முகத்தைத் திருப்பி, ஓவர்ஸியரை விழித்த கண்களால் பார்த்துமுகம் சுளித்தார். 'என்ன? ஒரு மந்திரியா? யார் உத்தரவு கொடுத்தார்கள்?' என்று ஒரு கரகரப்பான கிரீச்சுக் குரலில் பேசினார். 'இந்தப் பாதையை எனது குமாரியான இளவரசிக்காக நீர் சுத்தம் செய்யவில்லையா, மந்திரிக்காகவா செய்திருக்கிறீர்? எனக்கு மந்திரிகள் யாருமே கிடையாது.''

'மேன்மை தங்கியவரே, நான் நினைத்தேன்...'

'நீர் நினைத்தீரா' என்று இளவரசர் கரைச்சலிட்டார். அவருடைய வார்த்தைகள் வரவர வேகமாகவும் தெளிவற்றதாகவும் இருந்தது. நீர் நினைப்பீர்.. அயோக்கியர்கள், வீரர்கள்... நீர் நினைப்பதற்காக, உமக்குப் பாடம் கற்பிக்கிறேன்' என்று சொல்லிக்கொண்டு, தமது கையிலிருந்த கம்பை ஓங்கி வீசினார். அந்த ஓவர்ஸியரான அல்பாட்டிச் என்பவர் இதை அறிந்து விலகியிருக்காவிட்டால், அவருக்கு அடி கிடைத்திருக்கும்.

'நினைத்தாராம்... அயோக்கியர்கள்' என்று வேகமாய் இளவரசர் கத்தினார்.

அல்பாட்டிச் அவருடைய கைக்கம்பின் அடியிலிருந்து தப்பிய தமது துணிச்சலுக்காக பயந்தபோதிலும், அவர் இளவரசரிடம் நெருங்கி, வந்தது வரட்டுமென்று தமது வழுக்கைத் தலையைக் குனிந்து காட்டினார். ஒருவேளை அந்தக் காரணத்தினால் இளவரசர், 'அயோக்கியர்கள்... அந்த பனியை மீண்டும் எடுத்து வீதியில்

போடுங்கள் என்று தொடர்ந்து கூச்சலிட்ட போதிலும், மறுபடியும் தமது கைத்தடியை அவர் உயர்த்தவில்லை. வேகமாக வீட்டிற்குள் போனார்.

டின்னருக்கு முன்னால் இளவரசி மேரியும், குமாரி பெளரியனும் சாப்பாட்டு அறையில் காத்துக்கொண்டு நின்றார்கள். அன்று இளவரசர் மிகுந்த கோபமாய் இருக்கிறார் என்பது அவர்களுக்குத் தெரியும். குமாரி பௌரியனின் முகம் ஒளிவீசி, 'எனக்கு ஒன்றும் தெரியாது. நான் எப்பொழுதும்போலவே இருக்கிறேன்' என்று சொல்வதுபோல இருந்தது. இளவரசி மேரி, முகம்வெளிறி, பயமடைந்து வருந்திய கண்களோடு காணப்பட்டாள். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் குமாரி பௌரியனைப் போலத் தானும் நடந்துகொள்ள வேண்டுமென்று அவள் நினைத்துக்கொண்டாள். அவளால் முடியவில்லை. அவள் நினைத்தாள்: 'ஒன்றும் தெரியாததுபோல நானி இருந்தால், அவரிடம் அனுதாபம் கொள்ளவில்லை என்று நினைப்பார். நான் சோகமாகவும், கோபமாகவும் இருந்தால், நான் கீழே விழுந்து கிடப்பதாக அவர் சொல்வார்.'

தமது குமாரியின் பீதியுற்ற முகத்தை இளவரசர் பார்த்துப் பொறுமினார்.

'முட்டாளா, அல்லது பொம்மையா?' என்று அவர் முனங்கினார்.

'மற்றொருவரை இங்கே காணவில்லை. அவர்கள் கதை சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்' என்று அவர் நினைத்தார். குஞ்சு இளவரசி அந்த சாப்பாட்டு அறையில் இல்லாததையே அவர் அம்மாதிரி நினைத்தார்.

'இளவரசி எங்கே? இங்கே ஒளிந்து கொண்டிருக்கிறாளா?'

'அவளுக்கு உடம்பிற்கு சரியில்லை' என்று மகிழ்ச்சிப் புன்னகையோடு குமாரி பௌரியன் பதில் அளித்தாள். 'அவளால் கீழே வரமுடியவில்லை. அவளுடைய நிலைமையில் அது மிகவும் இயற்கையானது.'

'ஹிம்... ஹிம்...' என்று இளவரசர் முனங்கிக்கொண்டு நாற்காலியில் அமர்ந்தார்.

அவருடைய தட்டு நன்றாய் சுத்தமாய் இல்லாததுபோல் அவருக்குத் தோன்றியது. தட்டிலிருந்த ஒரு பொட்டைக்காட்டி தட்டைச் சுழற்றி வீசினார். அந்தத் தட்டை டிக்கன் உடனே பிடித்து சேவகனிடம் கொடுத்தான். குஞ்சு இளவரசிக்கு உடம்பு சரியில்லை என்பது அல்ல; இளவரசர்மீது அவ்வளவு அதிகமான பயங்கொண்டவளானபடியால் இளவரசர் மிகுந்த கோபமாய்

இருக்கிறார் என்பதை அவள் கேள்விப்பட்டதால் அவர் முன்னால் வரவேண்டாம் என்று தீர்மானித்தாள்.

'குழந்தைக்காகவே நான் பயப்படுகிறேன்' என்று அவள், குமாரி பெளரியனிடம் சொன்னாள். 'ஒரு பீதியேற்பட்டால் குழந்தைக்கு எம்மாதிரி கெடுதல் ஏற்படும் என்பதைக் கடவுளே அறிவார்.'

பொதுவாக பால்ட் ஹில்ஸ் மாளிகையில் குஞ்சு இளவரசி எப்பொழுதும் பயத்துடனேயே வாழ்ந்து வந்தாள். வயோதிக இளவரசரிடம் அவளுக்கு வெறுப்பு இருந்தாலும் அவர் மீதுள்ள பயமே மிக அதிகமாய் இருந்தபடியால், அந்த வெறுப்பை அவள் அறிந்து கொள்ளவில்லை. இளவரசருக்கும் அவளிடம் வெறுப்பு உண்டு. ஆனால் அவள் மீது அவருக்கிருந்த துச்சமான மனோபாவம் அதை மறைத்துவிட்டது. பால்ட் ஹில்ஸ் மாளிகையின் வழக்கங்களை குஞ்சு இளவரசி படிப்படியாக அறிந்து பழகிக் கொண்டாள். குமாரி பெளரியனிடம் அவளுக்கு விசேஷ பிரியம் ஏற்பட்டது. நாட்கள் பூராவாக அவளுடன்பேசிக் கொண்டே இருப்பாள். தனது அறையிலேயே அவளைப் படுத்துக் கொள்ளும்படிச் சில சமயம் சொல்லுவாள். அடிக்கடி வயோதிக இளவரசரைப் பற்றி அவளுடன் பேசி அவர்மீது குற்றம் குறை சொல்வாள்.

'ஆகவே நமக்கு விருந்தாளிகள் வருகிறார்கள் போல இருக்கிறதே, எனது இளவரசே?' என்று குமாரி பெளரியன் தனது சிவந்த விரல்களால் டின்னர் சவுக்கத்தை விரித்துக்கொண்டே பேசினாள். மேன்மை தங்கிய இளவரசர் வாசைலி குராகினும் அவருடைய குமாரரும் வருகிறார்கள் என்று நான் கேள்விப் பட்டேன்?' என்ற கேள்விக்குறியோடு அவள் பேசினாள்.

'ஹிம்... அந்த மேன்மை தங்கியவர் ஒரு நாய்க்குட்டி... அந்த உத்தியோகத்தை நான்தான் அவருக்கு வாங்கிக் கொடுத்தேன்' என்று வெறுப்போடு இளவரசர் பதில் சொன்னார். அவருடைய குமாரன் எதற்காக வருகிறான் என்பது எனக்குப் புரியவில்லை. ஒருவேளை இளவரசி எலிஸபெத்தும், இளவரசி மேரியும் அறிந்திருக்கலாம். அவர் தமது குமாரனை இங்கே எதற்காக அவர் அழைத்து வருகிறார் என்பது எனக்குத் தெரியவில்லை. எனக்கு அவன் வேண்டாம்' (நாணத்தால் முகம் சிவந்த தமது குமாரியைப் பார்த்தார். ) 'உனக்கு இன்று உடம்பிற்கு சரியாயில்லையா? ஹே! அல்லது அந்த முட்டாள் அல்பாட்டிச் சொன்னானே, இன்று காலையில், அதே மாதிரி அந்த 'மந்திரி'யைப் பார்க்க உனக்குப் பயமா?'

'இல்லை, அப்பா.'

பேசுவதற்கு நல்ல விஷயத்தைக் கண்டுபிடிக்க குமாரி பௌரியனால் முடியாவிட்டாலும், அவள் பேசுவதை மட்டும் நிறுத்தவில்லையே. செடிக்கூடங்கள் பற்றியும், அன்று தான் மலர்ந்த புஷ்பங்களின் அழகைப் பற்றியும் தொடர்ந்து பேசிக் கொண்டேயிருந்தாள். சூப் சாப்பிட்டபின்பு இளவரசர் மிகுந்த சுமுகமாய்த் தோன்றினார்.

டின்னருக்குப் பின்னால் தமது மருமகளைப் பார்க்க அவர் போனார். அந்த குஞ்சு இளவரசி ஒரு சிறிய மேஜை முன்பு அமர்ந்து கொண்டு, தனது வேலைக்காரியான மாஷாவிடம் வம்பளந்து கொண்டிருந்தாள். தனது மாமனாரைப் பார்த்ததும் அவள் முகம் வெளிறியது.

அவள் ரொம்பவும் மாறிப்போயிருந்தாள். இப்பொழுது அவள் அழகாய் இருந்தாள் என்று சொல்வதைவிட சாதாரணமாய் இருந்தாள் என்று சொல்வது பொருத்தமாயிருக்கும். அவளுடைய கன்னங்கள் குழி விழுந்திருந்தன. உதடுகள் விரிந்திருந்தன. இமைகள் கீழே தொங்கின.

'ஆம், ஒரு மாதிரியான கஷ்டமாய் இருக்கிறது' என்று தனது சௌகரியத்தைப் பற்றி இளவரசர் கேட்டதற்கு பதில் அளித்தாள்.

'உனக்கு, ஏதாவது வேண்டுமா?'

'ஒன்றுமில்லை, அப்பா.'

'நல்லது.'

அவர் அந்த அறையை விட்டுப் புறப்பட்டு, வெளி அறைக்குப் போனார். அங்கே அல்பாட்டிச் குனிந்த தலையோடு நின்று கொண்டிருந்தார்.

'பனித் தூவல்களையெல்லாம் ரஸ்தாவில் மீண்டும் இழுத்துப் போட்டுவிட்டீர்களா?'

'ஆம், மேன்மை தங்கியவரே, கடவுளுக்காக என்னை மன்னிக்க வேண்டும்... அது என்னுடைய முட்டாள்தனம்தான்.'

'ரொம்ப சரி, ரொம்ப சரி' என்று இளவரசர் இடைமறித்து, தமது இயற்கைக்கு விரோதமான முறையில் சிரித்தார். தமது கையை முத்தமிடும்படி அல்பாட்டிச்சிடம் நீட்டிவிட்டுப் பின்னால் தமது படிப்பு அறைக்குப் போனார்.

அன்று மாலை இளவரசர் வாசைலி வந்து சேர்ந்தார். ரஸ்தாவில் அவரைச்சாரதிகளும் சேவகர்களும் சந்தித்தார்கள். அவருடைய பனி வண்டிகளை, பாதைமீது வேண்டுமென்று குவிக்கப்பட்டிருந்த உறைபனி மீது இழுத்துச் சென்று அவருடைய விடுதியை

அடைந்தார்கள். இளவரசர் வாசைலிக்கும் அனடோலுக்கும் தனித்தனியாக அறைகள் கொடுக்கப்பட்டிருந்தன.

தமது வெளிச் சட்டையைக் கழற்றிவிட்டு, அங்கிருந்த ஒரு சிறிய மேஜைமீது கைகளை வைத்துக்கொண்டு, புன்முறுவலோடு பராக்குத்தனமாய் தமது பெரிய அழகிய கண்களால் எதையோ பார்த்துக் கொண்டிருந்தார். தமது முழு வாழ்க்கையுமே வேடிக்கைகள் நிறைந்தது என்றும், யாரோ எதற்காகவோ அவைகளைக் கொடுத்து வந்ததாகவும் அவர் கருதினார். அதே நினைப்பில்தான், அங்கு அவர் பார்க்க வேண்டியதான கஞ்சத்தனமான வயோதிகரையும் அவருடைய அழகற்ற வாரீஸ்தாரியையும் அவர் கருதினார். இவையெல்லாம் கடைசியில் நன்றாகவும், வேடிக்கையாகவும் முடியும், என்று அவர் நினைத்தார். அவளுக்கு அவ்வளவு பணம் இருக்குமானால் அவளைக் கல்யாணம் செய்துக் கொள்ளக்கூடாது? அப்படிச் செய்வதால் எப்பொழுதும் கெடுதியில்லை' என்று அனடோல் நினைத்தார்.

தமக்கு வழக்கமான சுபாவப்படி, சிரத்தையோடும் அழகாகவும் க்ஷவரம் செய்து தமது உடம்பில் வாசனை பூசிக்கொண்டு, அழகான தமது தலையைமேலே நிமிர்த்திதமது தகப்பனார் அறையில் நுழைந்தார். அவருக்கு இயற்கையான நல்ல குணத்தோடும், வெற்றித் தோற்றத்தோடும் அவர் காணப்பட்டார். இளவரசர் வாசைலியின் இரண்டு சேவகர்களும், அவருக்கு உடை அணிவிப்பதில் மும்முரமாய் இருந்தார்கள். தம்மைச் சுற்றிலும் மிகுந்த பரபரப்போடும் அவர் பார்த்துக் கொண்டிருந்தார். உள்ளே வந்த தமது குமாரரை மகிழ்ச்சியோடு தலையாட்டி வரவேற்று, 'ஆம், நீ அப்படித்தான் அலங்காரம் செய்துகொள்ள வேண்டுமென்று நான் விரும்பினேன்' என்று கூறுவதைப்போல அவர் பார்த்தார்.

'தமாஷ் இருக்கட்டும், அப்பா. அவள் ரொம்ப கோரமாய் இருப்பாளா?' என்று அனடோல் கேட்டார். தங்கள் பிரயாணத்தில் பல தடவைகளில் பேசி வந்த விஷயத்திற்கு மீண்டும் திரும்புவதுபோல அவர் பேச்சு இருந்தது.

'போதும்! என்ன அசட்டுத்தனம்! எல்லாவற்றிற்கும் மேலாக, வயோதிக இளவரசரிடம் எச்சரிக்கையாய், மரியாதையாய் இருக்க வேண்டும்.'

'அவர் ஏதாவது சண்டைக்கு இழுத்தால், நான் போய்விடுவேன். இம்மாதிரி கிழங்களையெல்லாம் என்னால் சகிக்க முடியாது. என்ன?' என்று இளவரசர் அனடோல் பதில் சொன்னார்.

உனக்கு எல்லா விஷயங்களும் இதைப் பொறுத்துத்தான் இருக்கிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்.'

இதற்கு இடையில் மந்திரியும் அவரது குமாரரும் வந்து விட்டார்கள் என்ற செய்தி வேலைக்காரர்களின் விடுதிகளுக்குப் போய்ச் சேர்ந்தது. அது மட்டுமல்ல. அவர்கள் இருவருடைய தோற்றங்களைப் பற்றியும் மிகுந்த நுட்பமாக வர்ணிக்க ஆரம்பித்தார்கள். இளவரசி மேரி, தனது அறையில் தனியாக உட்கார்ந்து, தனக்கு ஏற்பட்ட பரபரப்பை அடக்குவதற்கு வீணாக முயற்சித்துக் கொண்டிருந்தாள்.

'அவர்கள் ஏன் எழுத வேண்டும், லிசா? எதற்காக என்னிடம் இதைப்பற்றி சொல்ல வேண்டும்? ஒருக்காலும் நடக்காது' என்று அவள் சொல்லி, தன்னை நிலைக்கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். 'நான் எப்படி வரவேற்பறையில் நுழைவேன்? அவரை எனக்குப் பிடித்திருந்தாலும், அவருடன் இருக்கக்கூடிய நிலைமையில் நான் இப்பொழுது இல்லை.' அவருடைய தந்தையின் தோற்றத்தை அவள் நினைத்த மாத்திரத்திலேயே, பயங்கரம் அவளைப் பிடித்துக்கொண்டது. குஞ்சு இளவரசியும் குமாரி பௌரியனும், ஏற்கெனவே வேலைக்காரி மாஷாவிட மிருந்து, அந்த மந்திரியின் குமாரர் எவ்வளவு அழகாய் இருக்கிறார். என்பதையும், அவளுடைய சிவந்த கன்னங்களும் கருத்த புருவங்களும் எப்படியிருக்கின்றன என்பதையும், அவருடைய தந்தை எம்மாதிரி கால்களை இழுத்துக்கொண்டு மெத்தைப் படிகளில் ஏறினார் என்பதையும், அவருடைய குமாரர் எம்மாதிரி கழுகுபோல் அவருக்குப் பின்னால் ஒரு அடிக்கு மூன்று படிகைள் வீதம் தாண்டிச் சென்றார் என்பதையும் கேள்விப்பட்டிருந்தார்கள். இந்தச் செய்தியைக் கேட்ட பின்பு, குஞ்சு இளவரசியும், குமாரி பௌரியனும், இளவரசி மேரியின் அறைக்குப் போனார்கள். அவர்கள் அறைக்குள் நுழைவதற்கு முன்பாகவே அவர்களுடைய வம்பளப்பு சப்தம் தாழ்வாரத்திலிருந்து அவளுக்குக் கேட்டது.

'அவர்கள் வந்துவிட்டார்களே, தெரியுமா?மேரி? என்று சொல்லிக்கொண்டே ஆடியசைந்து உள்ளே நுழைந்த குஞ்சு இளவரசி அங்கிருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்தாள்.

வழக்கமாக காலை வேளைகளில் அவள் அணிந்துகொள்ளும் அந்த தொய்வான கவுனை அவள் போட்டுக் கொண்டிருக்க வில்லை. அவளிடமிருந்த சிறந்த உடைகளில் ஒன்றை அவள் அணிந்திருந்தாள். அவளுடைய தலை அலங்காரம் கவனத்தோடு செய்யப்பட்டிருந்தது. அவளுடைய முகம் துடிதுடிப்பாய் இருந்தது. என்றாலும் அவளுடைய ஆழ்ந்த மறைந்த முகச்

சாயல்களை அவளால் மறைக்க முடியவில்லை. பீட்டர்ஸ்பர்க் உயர்வட்டாரத்தில் வழக்கமாக அணிந்து கொள்ளும் விதத்தில் அவள் உடை அணிந்திருந்தாலும், எவ்வளவுதூரம் அவள் அழகில் குறைந்துவிட்டாள் என்பதை அது இன்னும் நன்றாய் எடுத்துக் காட்டியது. குமாரி பௌரியனின் அலங்காரம் வெளிக்குத் தெரியாத நாசூக்குத் தன்மையோடு செய்யப்பட்டிருந்தது. அதனால் அவளுடைய அழகிய உற்சாகமுள்ள முகம் அதிக கவர்ச்சிகரமாய் இருந்தது.

'என்ன இது, எனது அன்பான இளவரசியே? நீ இப்போதுஎப்படி இருக்கிறாயோ அதே மாதிரிதான் இருக்கப் போகிறாயா?'' என்று அவள் ஆரம்பித்தாள். 'அந்த கனவான்கள் வரவேற்பறைக்கு வந்துவிட்டார்கள் என்று அவர்கள் நம்மிடம் தெரிவிப்பார்கள். அப்போது நாம் கீழே போக வேண்டியிருக்கும். ஆனால், நீ இன்னும் அலங்காரம் செய்யாமல் இருக்கிறாயே.'

குஞ்சு இளவரசி எழுந்து, தனது வேலைக்காரிக்காக மணி அடித்தாள். துரிதமாகவும் மகிழ்ச்சியோடும் இளவரசி மேரிக்கு எம்மாதிரி அலங்காரம் செய்வது என்பதை மனதிற்குள் யோசித்துக் கொண்டிருந்தாள். இளவரசி மேரிக்கு திருமணம் செய்ய ஒருவர் வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டதால் ஏற்பட்ட பரபரப்பு, அவளுடைய சுயமதிப்பை புண்படுத்தியதாகத் தோன்றியது. அது மட்டுமல்ல, தன்னுடைய இந்த உணர்ச்சியை, தன்னுடைய தோழிகளான அந்த இருவரும் கொஞ்சம்கூட அறியவில்லையே என்பதும் அவளை இன்னும் அதிகமாய் புண்படுத்தியது. தன்னைப் பற்றியும் அவர்களைப் பற்றியும் தான் வெட்கப்படுவதாக அவர்களிடம் சொல்வது தனது பரபரப்பை வெளியே காட்டுவதாய் இருக்கும். தவிர தன்னை அலங்காரப்படுத்துவதற்கு, அவர்கள் செய்வதாகச் சொல்லும் உதவியை மறுப்பது, அவர்களுடைய கேலிப் பேச்சுக்களையும் வற்புறுத்தல்களையும் அதிகரிப்பதாய் இருக்கும். அவள் முகம் சிவந்தாள். அவளுடைய அழகிய கண்கள் மங்கலாயின. அவளுடைய முகத்தில் சிவப்புப் புள்ளிகள் தோன்றின. அவளுடைய அழகற்ற முகத்தில் அடிக்கடி தோன்றும் பலியாகும் உணர்ச்சி அப்போதும் காணப்பட்டது. தன்னை அலங்காரம் செய்வதற்கு குமாரி பௌரியனிடமும், லிசாவிடமும் ஒப்புக்கொண்டாள். இந்த இரு பெண்கள் முழு சிரத்தையோடு அவளை அழகு செய்வதற்கு முயற்சித்தார்கள். அவள் மிகுந்த அழகீனமாய் இருந்தபடியால் அந்த இருவரில் எவரும் அவளை தங்களுக்குப் போட்டியாகக் கருதவில்லை. ஆகவே முழு சிரத்தையோடு அவளுக்கு அலங்காரம் செய்ய அவர்கள்

ஆரம்பித்தார்கள். ஆனால் ஆடைகளைக்கொண்டு முகத்தை அழகாக்கி விடலாம் என்று பொதுவாகப் பெண்கள்நினைக்கும் குழந்தைத் தனமான உறுதியான நம்பிக்கையோடு தங்கள் வேலையில் அவர்கள் இறங்கினார்கள்.

'உண்மையாக இல்லை, என் அன்பே, இந்த உடை அழகாய் இல்லை' என்று லிசா சொல்லி கடைக்கண்களால் சிறிது தூரத்திலுள்ள இளவரசி மேரியைப் பார்த்தாள். 'உன்னிடம் ஒரு பழுப்பான சிவப்பு ஆடை இருந்ததே, அதைக் கொண்டுவரச் சொல்லு, உண்மையாகவே, உன்னுடைய முழு வாழ்க்கையின் தலைவிதியும் இப்போது தீர்மானிக்கப்பட வேண்டியிருக்கிறது என்பது உனக்குத் தெரியும். இந்த உடை ரொம்பவும் மெல்லியதாய் இருக்கிறது. இது பொருத்தமானதாய் இல்லை.'

உடைகள் மட்டுமல்ல, முகமும், இளவரசி மேரியின் முழு உருவமுமே அழகற்றதாக இருந்தன. ஆனால் குமாரி பௌரியனோ அல்லது குஞ்சு இளவரசியோ இதை உணரவில்லை. ஒரு நீல நிற ரிப்பனை அவளுடைய தலைமுடியில் கட்டினால், அவளுடைய தலைமுடியை உச்சியில் வாரிக்கொண்டை போட்டால், ஒரு நீலநிறப் பட்டியை அவளுடைய சிறந்த சிகப்பு உடையின்மீது இடுப்பில் கட்டிவிட்டால், எல்லாம் நன்றாய் இருக்கும் என்று நினைத்தார்கள். பீதியுற்ற முகத்தையோ அல்லது அந்த உருவத்தையோ அவர்கள் மாற்ற முடியாது என்பதை மறந்துவிட்டார்கள். எவ்வளவுதான் அவர்கள் உடைகளை மாற்றினாலும், எவ்வளவுதான் அவள் முகத்துக்கு அலங்காரம் செய்தாலும், இன்னமும் அது என்னவோ பரிதாபமாகவும் அழகற்றதாகவும் இருக்கும். இரண்டு மூன்று தடவைகள் மாற்றிப் பார்த்தார்கள். அவர்கள் செய்வதற்கு எல்லாம் இளவரசி மேரி வாய் பேசாமல் சம்மதித்து இருந்தாள். அவளுடைய தலைமுடியை உச்சியில் கொண்டை போட்டுக் கட்டினார்கள். அந்த மோஸ்தர் அவளுடைய பார்வையை மாற்றிக்கெடுத்துவிட்டது. பழுப்பு சிகப்பு உடை அணிந்து, வெளிறிய நீலநிற பட்டியையும் அணிந்தபின்பு, குஞ்சு இளவரசி அவளைச் சுற்றி இரண்டு தடவைகள் நடந்து அழகைப் பார்த்தாள். உடையிலுள்ள ஒரு மடிப்பை தனது சிறிய கையால் சரி செய்வதும், பட்டியை ஒழுங்காய் திருத்தி அமைப்பதுமாகச் செய்தபின்பு, தன் தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துக்கொண்டு பார்ப்பதும், பின்னால் மற்ற பக்கமாய் சாய்த்துக் கொண்டு பார்ப்பதுமாக அவளுடைய அலங்காரத்தைக் கவனித்தாள்.

'இல்லை, இது சரியாய் இல்லை' என்று அவள் தீர்மானமாய் சொல்லி அவளுடைய கைகளைப் பற்றினாள். 'இல்லை, மேரி. இந்த உடை உனக்குப் பொருத்தமானதாய் இல்லை. தினப்படி நீ அணியும் சாம்பல் வர்ண உடையே, உனக்குத் தகுந்தது என்று நினைக்கிறேன். இப்போது தயவு செய்து எனக்காக நீ செய்வாயாக. கேட்டி, (வேலைக்காரியைப் பார்த்துச் சொன்னாள்) இளவரசியின் சாம்பல் வர்ண ஆடையைக்கொண்டு வா. குமாரி பௌரியனே, நான் எம்மாதிரி செய்யப்போகிறேன் என்பதை நீ பார்ப்பாய்' என்று தனது கலை மகிழ்ச்சியை அனுபவிப்பதைப் போன்று புன்முறுவல் காட்டினாள். வேண்டிய ஆடைகளை கேட்டி கொண்டுவந்தபோது, இளவரசி மேரி கண்ணாடி முன்பு அசையாமல் உட்கார்ந்து கொண்டிருந்தாள். தனது முகத்தைப் பார்த்தாள். தன் கண்களில் நீர் நிறைந்து நிற்பதையும் அவளுடைய வாய் உதறல் கொண்டிருப்பதையும் கண்டாள். தேம்பித் தேம்பி அழுவதற்குத் தயாராய் இருப்பவள் போலக் காணப்பட்டாள்.

'இங்கே வா, அருமை இளவரசியே, இன்னும் ஒரே ஒரு சிறிய முயற்சி?' என்று குமாரி பௌரியன் சொன்னாள்.

வேலைக்காரியிடமிருந்து உடையை எடுத்துக்கொண்டு, இளவரசி மேரியிடம் குஞ்சு இளவரசி வந்தாள்.

'பொருத்தமாகவும் மிகுந்த சாதாரணமாகவும் உள்ள அலங்காரத்தை இப்போது ஏற்பாடு செய்யப் போகிறோம்' என்றாள் அவள். குமாரி பௌரியன், குஞ்சு இளவரசி, கேட்டி ஆகிய மூவரும், எதற்காகவோ சிரிக்கிற சப்தங்கள் ஒன்று சேர்ந்து, மனோகரமாய் பறவைகள் ஓசையிடுவதைப் போன்ற குரலை உண்டு பண்ணின.

'இல்லை, என்னைத் தனியாய் விடுங்கள்' என்றாள் இளவரசி மேரி.

அவளுடைய குரல், அவ்வளவு கடுமையாகவும் அவ்வளவு சோகமாகவும் இருந்தபடியால், அந்தப் பறவைகளின் சிரிப்பு உடனே அடங்கியது. அவர்கள், அந்த அழகிய, பெரிய, சிந்தனை நிரம்பிய கண்களில் கண்ணீரும் கருத்துகளும் நிறைந்து இருப்பதையும், தங்களைப் பரிதாபமாய் பார்ப்பதையும் கண்டார்கள். அவளை இன்னும் வற்புறுத்துவது பிரயோசனம் அற்றது என்பதெல்லாம் அவளுக்கு இம்சையாகவும் இருக்குமென்பதை உணர்ந்தார்கள்.

'குறைந்தது உன் தலைஅலங்காரத்தையாவது சரியாகவாவது மாற்றிக் கொள்ள வேண்டும்' என்று குஞ்சு இளவரசி சொன்னாள்.

'நான் உனக்குச் சொல்லவில்லையா?' என்று குமாரி பௌரியனைப் பார்த்து கண்டிப்பாகச் சொல்லி, மேலும் பேசினாள். 'மேரி'யின் முகத்திற்கு அம்மாதிரி தலை அலங்காரம் கொஞ்சமும் பொருத்த மற்றது. துளிக்கூடப் பொருத்தமில்லை. தயவு செய்து, அதை மாற்றிவிடு.

'என்னைத் தனியாக விட்டுவிடுங்கள், இவையெல்லாம் எனக்கு ஒன்றுதான்' என்று கண்ணீரோடு போராடிக் கொண்டிருந்த ஒரு குரல் பதிலளித்தது.

அந்த அலங்காரத்தில், இளவரசி மேரி வழக்கத்திற்கும் அதிகமான அழகற்றவளாய் தோன்றியதற்கான பொறுப்பு குமாரி பௌரியன் மீதும் குஞ்சு இளவரசியின்மீதும் வந்து சேர்ந்தது. என்றாலும் அப்பொழுது நேரமாய்விட்டது. அவர்கள் இருவரையும் ஒரு தோற்றத்தோடு அவள் பார்த்தாள். அதன் அர்த்தத்தை அவர்கள் இருவரும் அறிவார்கள். அந்தத் தோற்றத்தில் சிந்தனையும் சோகமும் கலந்திருந்தது. இளவரசி மேரியின் இந்தத் தோற்றத்தைக் கண்டு அவர்கள் பயப்படவில்லை. ஏனெனில், யாரையும் அவள் பயமடையும்படி செய்ய முடியாது. ஆனால் அந்தத் தோற்றம் அவள் முகத்தில் ஏற்பட்டுவிட்டால், அவள் மௌனமாய் விடுவாள் என்பதையும் அவளுடைய உறுதியை யாராலும் அசைக்க முடியாது என்பதையும், அவர்கள் அறிவார்கள்.

'அதை மாற்றிவிடுவாய் அல்லவா? மாட்டாயா?' என்று லிசா கேட்டாள்.

இளவரசி மேரி பதில் எதுவும் சொல்லாததால் அறையைவிட்டு அவள் வெளியே போனாள்.

இளவரசி மேரி தனியாய் விடப்பட்டாள். லிசாவின் கோரிக்கைபடி அவள் செய்யவில்லை. தன் தலை அலங்காரத்தை அப்படியே விட்டுவிட்டாள். அது மட்டுமல்ல, தன்னை நிலைக்கண்ணாடியில் அவள் பார்த்துக் கொள்ளவுமில்லை. தனது கைகளை தொங்க விட்டுக்கொண்டு, கண்களை கீழே நோக்கி யோசித்துக் கொண்டிருந்தாள். ஒரு கணவன், ஒரு மனிதன், அடக்கி ஆளக்கூடிய ஒரு பலமான பேர் வழி, அதிசயமான அழகோடு கூடியவர், அவளுடைய மனோராஜ்யத்தில் தோன்றினார். அவர் தமக்குச் சொந்தமான, வேறுவிதமான மகிழ்ச்சி கொடுக்கும் உலகத்திற்கு, அவளைக் கொண்டு போவதாகவும், கனவு கண்டாள். தன்னுடைய சொந்தமான ஒரு குழந்தை, எப்படியிருக்கும் என்று கனவு கண்டாள். தாதியின் மகள் தன்னுடைய குழந்தையை தன் கைகளில் வைத்துக் கொண்டிருப்பதை முதல்நாள் தான் பார்த்தாள்.

தன்னுடைய சொந்தக் குழந்தை, தன்னிடம் பால் குடித்துக் கொண்டிருக்க, தன் புருஷனும் பக்கத்தில் நின்று தன்னையும், அந்தக் குழந்தையையும் கனிவோடு நோக்கிக் கொண்டிருக்க, அவள் மனோராஜ்யம் கண்டாள். 'இல்லை, அது நடக்காத காரியம். நான் ரொம்ப அழகற்றவளாய் இருக்கிறேன்' என்று அவள் நினைத்தாள்.

'தயது செய்து தேநீர் சாப்பிட வாருங்கள்... இன்னும் ஒரு வினாடியில் இளவரசரர் வந்துவிடுவார்' என்று அறை வாசலில் வேலைக்காரியின் குரல் கேட்டது.

அவள் தன்னை உதறி விழித்துக்கொண்டாள். அவள் கண்டுக் கொண்டிருந்த கனவு, இப்போது நினைத்து பீதி கொண்டாள். கீழே போவதற்கு முன்பாக தெய்வ உருச்சிலைகள் பதிப்பிக்கப் பட்டிருந்த அறைக்குச் சென்றாள். அங்கு விளக்கு வெளிச்சத்தில் ஒளிர்ந்துகொண்டிருந்த ரட்சகரின் ஒரு பெரிய உருவச் சிலையில் அவருடைய கருப்பு முகத்தை நோக்கி வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். கைகூப்பி அதன் முன்பு சில வினாடிகள் நின்றாள். அவளுடைய இருதயத்தை ஒரு துக்கமான சந்தேகம் நிரப்பியது. 'காதலின் இன்பத்தை, ஒரு மனிதனுக்காக காதல் கொள்ளும் பூலோக இன்பத்தை, அவள் அனுபவிக்க முடியுமா?' தன்னுடைய திருமண நினைப்புகளில் இளவரசி மேரி மகிழ்ச்சி யையும் குழந்தைகளையுமே கனவு கண்டாள். ஆனால் அவளுடைய ஆழமான உள்ளத்தில் காதல் உணர்ச்சியே பலமாய் மறைந்திருந்தது. எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக, அதைப் பிறரிடமிருந்தும், தன்னிடமிருந்தும் மறைக்க அவள் முயற்சித் தாளோ, அவ்வளவுக்கவ்வள்வு அதிகமாக அது வளர்ந்துவந்தது.

'கடவுளே, இந்த பிசாசின் சோதனைகளை என்னுடைய இருதயத்திலிருந்து நான் எப்படி நீக்குவேன்? உம்முடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக, இந்தக் கெட்ட சிந்தனைகளை அடியோடு நான் எப்படி ஒழிக்கப் போகிறேன்?' இந்தக் கேள்வியை அவள் கேட்டு முடிவதற்குள்ளாக, அவளுடைய இருதயத்தில் கடவுளே பதில் கொடுத்துவிட்டார்.

'உனக்காக எதையும் விரும்பாதே, எதையும் கேட்காதே, ஆவலாய் இருக்காதே, பொறாமை கொள்ளாதே, மனிதனின் எதிர்காலமும் உன்னுடைய விதியும் உன்னிடமிருந்து மறைக்கப் பட்டே இருக்க வேண்டும். எதற்கும் தயாராக உன் வாழ்க்கையை நடத்து. திருமணக் கடமைகளை நீ செய்ய வேண்டுமென்றும் கடவுள் விரும்பினால் அவருடைய விருப்பத்தை நிறைவேற்று வதற்கு தயாராய் இரு.' இந்த மனச்சாந்தியான நினைப்பு அவளுக்குத் தோன்றியது. என்றாலும், அவளுடைய தடுக்கப்பட்ட காதல்

இன்பத்தையும் நிறைவேற்றிக் கொள்ள வேண்டுமென்ற விருப்பமும் கூடவே தோன்றியது. இளவரசி மேரி பெருமூச்சு விட்டாள். தனக்கு சிலுவைக்குறி காட்டிக்கொண்டு கீழே இறங்கினாள். தன்னுடைய கவுனைப் பற்றியோ, தன்னுடைய தலை அலங்காரத்தைப் பற்றியோ, தான் எம்மாதிரி? அறைக்குள் போகவேண்டும், அல்லது என்னென்ன பேசவேண்டும் என்பதைப் பற்றியோ, எவ்வித நினைப்பும் இல்லாமல், அவள் போய்க் கொண்டிருந்தாள். கடவுள் விருப்பத்திற்கு முன்பாக இந்த விஷயமெல்லாம் எம்மாத்திரம்? அவருடைய திருவுள்ளம் இல்லாவிட்டால் மனிதனின் ஒரு ரோமம்கூட கீழே விழாது?

3

4

இளவரசி மேரி கீழே இறங்கிவந்த போது இளவரசர் வாசைலியும் அவருடைய குமாரனும் முன்பே வரவேற்பு அறையில் உட்கார்ந்து குஞ்சு இளவரசியோடும் குமாரி பௌரியனோடும் பேசிக் கொண்டிருந் தார்கள். அவள் குதிக்காலை ஊணி பலமாய் தனது கால்களை வைத்து நடந்து அறைக்குள் வந்தாள். அந்த கனவான்களும் குமாரி பௌரியனும் எழுந்தார்கள். குஞ்சு இளவரசி அந்தக் கனவான்களுக்குச் சுட்டிக்காட்டி 'இதோ மேரி' என்று சொன்னாள். இளவரசி மேரி அவர்கள் எல்லாரையும் பார்த்தாள். கூர்ந்து கவனித்தாள். இளவரசர் வாசைலியின் முகம் அவளைப் பார்த்ததும் ஒரு வினாடி கொஞ்சம் கடுமையாய் மாறி உடனே மீண்டும் புன்முறுவல் கொண்டதை அவள் கவனித்தாள். விருந்தாளிகள் மேரியைப் பற்றி எம்மாதிரி முகத்தோற்றங்கள் காண்பிக்கிறார்கள் என்பதை ஆவலோடு குஞ்சு இளவரசி கவனித்துக் கொண்டிருந்தாள். குமாரி பௌரியன் ரிப்பனைக் கட்டிக்கொண்டு தன்னுடைய, அழகிய முகத்தால் வழக்கத்திற்கு அதிகமான உற்சாகங்கொண்டு, அவரையே பார்த்துக்கொண்டிருப்பதை மேரி கவனித்தாள். ஆனால் , அவரை இவளால் பார்க்க முடியவில்லை. ஏதோ ஒன்ற பெரிதாக, பிரகாசமாக, அழகாக தன்னை நோக்கி வருவதை அவள் அந்த அறையில் நுழையும்போது கவனித்தாள். முதலில் இளவரசர் வாசைலி அவளிடம் நெருங்கினார். அவர் குனிந்து மரியாதை செய்தபோது, அவருடைய வழுக்கையான முன்னந்தலையில் அவள் முத்தமிட்டாள். அவர் அவளுடைய கையில் குனிந்து முத்தமிட்டார். அவள் கேட்ட கேள்விக்கு பதிலாக, அவரை தனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறதென்று அவள் பதில் சொன்னாள். பின்னால் அனடோல் அவளிடம் வந்தார்.

இப்பொழுதும் அவளால் அவரை நேருக்கு நேர் பார்க்க முடியவில்லை. ஒரு மெதுவான கை தன்னுடைய கையை அழுத்தமாய் பற்றியது போலவும், ஒரு வெள்ளை நெற்றியை தன்னுடைய உதடுகள் தொட்டு முத்தமிட்டது போலவும் அவள் உணர்ந்தாள் அவருடைய நெற்றி அழகாவும், அதற்கு மேலாக உள்ள தலைமுடி மெல்லிய பழுப்பு நிறம் கொண்டதாகவும், அதில் புமைட் வாசனை பூசப்பட்டிருப்பதாகவும் அவளுக்குத் தோன்றின. அவரை நிமிர்ந்து அவள் பார்த்தபோது, அவருடைய அழகினால் அவள் கவரப்பட்டாள். தம்முடைய வலது பெருவிரலை, தமது சீருடையிலுள்ள ஒரு பொத்தானுக்கு அடியில் வைத்துக்கொண்டு, மார்பை விரித்து நிமிர்ந்து நின்று, லேசாக ஒரு காலில் நின்று ஊசலாடி தலையைக் கொஞ்சம் தொங்கவிட்டு, ஒளிவிடும் முகத்தோடு இளவரசியை அனடோல் பார்த்துக்கொண்டு நின்றாள். அவர் ஒன்றும் பேசவில்லை. அவளைப்பற்றி அவள் நினைக்கவுமில்லை என்று தோன்றிற்று. திடீரென்று பேசக்கூடிய புத்திசாலித்தனம் அனடோலிடம் கிடையாது. அல்லது நாவன்மையோடு பேசக்கூடிய சாமார்த்தியமும் இல்லை. உயர் வட்டாரக் கூட்டங்களுக்கு மிகவும் அவசியமான தன்னடக்கமும், நிலை கலங்காத உறுதியும் அவரிடம் உண்டு. சுய நம்பிக்கை இல்லாத ஒருவன் வாய் பேசவும் தெரியாமல் இருந்தால், முதல் சந்திப்பில் அம்மாதிரி பேசாமல் இருப்பது மரியாதைக் குறைவு என்பதையும் அவன் அறிந்திருப்பதாகக் காட்டுவானானால், அதனால் ஏற்படக்கூடிய பலன்கள் மோசமாய் இருக்கும். ஆனால், அனடோல் மௌனமாய் இருந்து தனது காலை ஆட்டிக்கொண்டு புன்சிரிப்போடு இளவரசியின் தலைமுடியை கவனித்துக் கொண்டிருந்தார். இதேமாதிரி மௌனமாக ரொம்ப நேரம் அவரால் இருக்க முடியும் என்பது அப்பொழுது தெரிந்தது. 'இம்மாதிரி மௌனமாய் இருப்பது அசௌகரியமாய் இருக்கிறதென்று யாருக்காவது தோன்றினால் அவர் பேசட்டும். நான் பேச விரும்பவில்லை' என்று அவள் சொல்லுவதுபோல இருந்தது. இதைத் தவிர, பெண்களிடம் அவர் நடந்துகொள்ளும் விதம். ஒரு ஆவலையும் ஆச்சரியத்தையும் காதலையும் தோற்றுவிக்கக் கூடிய விதத்தில் இருக்கும். அதாவது, அங்கிருப்பவர்களையெல்லாம்விட தாம் உயர்ந்தவர் என்ற அகம்பாவமான உள்ளத்தோடு அவர் நடந்துகொள்ளுவார். 'உன்னை எனக்குத் தெரியும். உன்னை எனக்குத் தெரியும். உனக்காக நான் ஏன் கவலைப் படவேண்டும்? உனக்கு மிகுந்த சந்தோஷம் என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும் என்று அவர் அவர்களைப் பார்த்து சொல்வதைப் போல் இருந்தது.

ஒருவேளை அவர் பெண்களைச் சந்திக்கிறபொழுது உண்மை யாகவே இம்மாதிரி நினைக்காமலிருக்கலாம். ஏனென்றால், அவர் நினைப்பது என்பது வெகு சொற்பம். ஆனால் அவருடைய பார்வைகளும் நடத்தைகளும். அவர் அம்மாதிரி நினைப்பதைப் போன்ற தோற்றத்தைக் கொடுத்தன. இளவரசி இதேமாதிரி நினைத்தாள். அவருக்கு தன்மீது கவனம் ஏற்படும்படி செய்வதற்கு, தனக்கு இஷ்டமில்லை என்பதை அவள் காட்ட விரும்புவதைப் போல, அவரிடமிருந்து தனது பார்வையைத் தந்தையிடம் திருப்பினாள். உரையாடல்கள் மெதுவாகவும், உற்சாகமாகவும் இருந்தன. இதற்குக் காரணம் இளவரசி லிசாவின் குரலும், அவளுடைய வெள்ளைப் பற்கள் தெரியும்படியான குட்டையான மேல் உதடுமேயாகும். உற்சாகமாகப் பேசக்கூடியவர்கள் எப்படி விளையாட்டுத்தனமாக நடந்து கொள்ளுவார்களோ, அதே முறையில் இளவரச வாசைலியை அவள் நடத்தினாள். அம்மாதிரி பேசுகிறவர்கள் தங்களுக்கும், தாங்கள் யாரிடம் பேசுகிறார்களோ அவர்களுக்கும் இடையில், வெகு காலமாக ஏற்பட்டு இருந்த சில ரகசிய தமாஷாக்களும் வேடிக்கையான சம்பவங்களும் இருப்பதைப் பேசுவதுபோல காட்டிக்கொள்குவது உண்டு. ஆனால் உண்மையில் எதுவும் இருக்காது. அதே மாதிரிதான் இந்தக் காரியமுமாகும்.

இளவரசர் வாசைலியும் அதேமாதிரி தோரணையை மேற் கொண்டார். குஞ்சு இளவரசி அனடோலுடன் உரையாடலில் இறங்கினாள். அவளுக்கு அவரைப்பற்றி முன்பு தெரியாது. எப்பொழுதுமே நடந்திராத சில வேடிக்கையான பழைய விஷயங்களைப்பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். குமாரி பௌரியனும் இதில் கலந்துகொண்டாள். இளவரசி மேரியும்கூட, இந்தப் பழங்கால சந்தோஷ ஞாபகங்களில் கலந்துகொள்வதற்கு மகிழ்ச்சியாய் இருந்தாள்.

‘உம்மிடம் பேசுவதனால் ஏற்படும் நன்மையை நாங்கள் மட்டுமே அடைந்து கொள்ளப்போகிறோம், எனது அன்புள்ள இளவரசே’ என்று குஞ்சு இளவரசி பிரஞ்சுப் மொழியில் இளவரசர் வாசைலியிடம் சொன்னாள். ‘அன்னெட்டியின் வரவேற்புகளில் இடையிலேயே எழுந்து, நீர் ஓடும் வழக்கம் உண்டே, அந்தமாதிரி அல்ல இப்பொழுது. அந்த அன்புள்ள அன்னெட்டியை, உமக்கு ஞாபகம் இருக்கிறதா?’

‘ஹா, ஆனால் அன்னெட்டி மாதிரி உன்னால் என்னிடம் அரசியல் விஷயங்களைப் பேச முடியாதே.’

‘ஆனால் நமது சிறிய தேநீர் மேஜை?’

'ஓ, அதைச் செய்யலாம்.'

'அன்னெட்டியின் வரவேற்பில் நீர் ஏன் எப்பொழுதுமே வந்ததில்லை' என்று குஞ்சு இளவரசி அனடோலைக் கேட்டாள். 'ஹா, எனக்குத் தெரியும், எனக்குத் தெரியும்' என்று அவள் தந்திரமான பார்வையோடு பார்த்துச் சொன்னாள். 'உம்முடைய காரியங்களையெல்லாம் உமது சகோதரர் ஹிப்பாலைட் என்னிடம் சொல்லியிருக்கிறார், ஓ' என்று அவள் தனது விரலை அவரைப் பார்த்து அசைத்துக் காட்டினாள். 'பாரிஸில் நீர் செய்த காரியங்களைக் கூட நான் கேள்விப்பட்டிருக்கிறேன்'

'ஹிப்பாலைட் உனக்குச் சொல்லவில்லையா?' என்று இளவரசர் வாசைலி தமது குமாரரைப் பார்த்துக் கேட்டார். குஞ்சு இளவரசி அங்கிருந்து ஓடிப்போகாமல் தடுத்து தாம் நிறுத்துவதைப்போல அவளுடைய கையையும் பற்றிக்கொண்டார். 'இந்த அருமையான இளவரசிக்காக அவன் எவ்வளவு தூரம் தவித்துக் கொண்டிருக்கிறான் என்பதை உன்னிடம் சொல்லவில்லையா? இவள் அவனுக்கு வாசலைக்காட்டி வெளியே போகும்படி சொன்னதையும் உன்னிடம் கூறவில்லையா? ஓ, பெண்களில் இவள் ஒரு முத்து. இளவரசியே என்று அவள் இளவரசி மேரியைப் பார்த்துக் கூறினார்.

பாரிஸின் பேர் பிரஸ்தாபிக்கப்பட்டபோது, தானும் அந்த பழங்கால நினைப்புகளைப்பற்றிய பொதுவான உரையாடலில் கலந்து கொள்ளக்கூடிய சந்தர்ப்பத்தைக் கைப்பற்றி குமாரி பௌரியன் பேச ஆரம்பித்தாள்.

'அனடோல் பாரிஸிலிருந்து வந்து வெகுகாலமாகிவிட்டதா? அந்தப் பட்டணம் அவருக்கு எப்படி இருந்தது?' என்று அவள் கேட்டாள். உடனே அனடோல் அந்த பிரஞ்சுப் பெண்ணுக்குப் பதில் அளித்தார். அவளைப் புன்னகையோடு நோக்கிக்கொண்டு அவளுடைய தாய் நாட்டைப் பற்றி அவள் பேசலானார். அந்த அழகிய சிறிய பௌரியனை அவர் பார்த்தபோதே, அந்த பால்ட் ஹில்ஸ் மாளிகையின் வாழ்க்கை தமக்கு மந்தமாய் இருக்காது என்று அனடோல் முடிவுக்கு வந்தார். 'கொஞ்சங்கூட மோசம் அல்ல, கொஞ்சம் கூட மோசம் அல்ல, அந்தச் சிறிய தோழி. அவள் என்னை கல்யாணம் செய்த பின்பு அந்தச் சிறிய இனிமையானவளையும் அழைத்து வருவாள் என்றே நான் நம்புகிறேன்' என்று அவர் நினைத்தார்.

வயோதிக இளவரசர் சாவகாசமாக தமது படிப்பு அறையில் ஆடை அணிந்துகொண்டிருந்தார். என்ன செய்யவேண்டு

மென்பதைப்பற்றி முகத்தை சுழித்துக்கொண்டும் யோசித்துக் கொண்டும் இருந்தார். இந்த விருந்தாளிகளின் வருகை அவருக்கு எரிச்சலைக் கொடுத்தது. 'அந்த இளவரசர் வாசைலிக்கும் அவர் மகனுக்கும் எனக்கும் என்ன இருக்கிறது? இளவரசர் வாசைலி ஆழ்ந்த அறிவில்லாத ஒரு வாயாடி. அவருடைய மகனோ அப்படியே அச்சில் வார்த்ததைப் போன்ற ஒரு சரியான பிரகிருதி என்று அவர் தமக்குத் தாமே முனங்கிக் கொண்டிருந்தார். இந்த விருந்தாளிகள் வருகையால் வெகுநாளாக முடிவு செய்யப்படாமல் இருந்த ஒரு பிரச்னை - அதை நசுக்கிவிட எப்பொழுதுமே அவர் முயற்சித்துக்கொண்டிருந்த பிரச்னை - மீண்டும் அவர் மனதில் உதயமானதால் அவர் கோபம் அடைந்தார். அந்தப் பிரச்னைபற்றி அவர் எப்பொழுதும் தம்மையே ஏமாற்றிக் கொண்டிருந்தார். அந்தப் பிரச்னை என்னவென்றால் எப்பொழுதாவது தம்மால் தமது குமாரியை தம்மை விட்டுப் பிரித்து அவளை ஒரு கணவனுக்குக் கொடுப்பது என்பது சாத்தியமா என்பதேயாகும். இந்தக் கேள்வியை இளவரசர் எப்பொழுதும் தம்மை நேராகக் கேட்டுக் கொள்ளவில்லை. ஏனென்றால், நேர்மையாக அவர் பதில் சொல்ல வேண்டியிருக்குமாகையால் அவர் அப்படிச் செய்யவில்லை. இந்த விஷயத்தில் நியாயமென்பது அவருடைய உணர்ச்சிகளோடு மோதுகிறது மட்டும் அல்ல; அவருடைய வாழ்க்கை மீதே மோதுவதாய் இருந்தது. அவர் இளவரசிமேரியை அதிகமாக மதிப்பிடவில்லை என்றாலும், அவள் இல்லாமல் வாழ்க்கையை நடத்துவதென்பது அவருக்கு மனசினால்கூட யோசிக்க முடியாமல் இருந்தது. 'அவள் ஏன் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும்? என்று அவர் நினைத்தார். 'நிச்சயமாக அவள் சந்தோஷமாய் இருக்கப் போவதில்லை. ஆண்ட்ரூவுக்கு திருமணமான லிசா இதோ இருக்கிறாள். இந்தக் காலத்தில் ஆண்ட்ரூவை விட நல்ல புருஷனை கண்டுபிடிக்க முடியுமென்று ஒருவரும் நினைக்கமாட்டார்கள். ஆனால், அவள் தனது வாழ்க்கையில் திருப்திகொண்டிருக்கிறாளா? காதலுக்காக மேரியை யார் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறார்கள்? அழகில்லாத விகாரமாய் இருக்கிறாள். சொத்திற்காகவும், செல்வாக்கிற்காகவுமே அவளை கல்யாணம் செய்ய விரும்புவார்கள். கல்யாணம் செய்யாமலேயே வாழ்க்கை நடத்துகிற பெண்கள் இல்லையா? அவர்கள் சந்தோஷமாயும் இருக்கவில்லையா?' இம்மாதிரியாக இளவரசர் பால்கோன்ஸ்கி தமது ஆடைகளை அணிந்துகொண்டே சிந்தித்துக்கொண்டிருந்தார். இதுவரை அவர் தள்ளிப்போட்டு வந்த பிரச்னைக்கு, இப்பொழுது உடனே பதில் சொல்லவேண்டிய அவசியம் நேரிட்டுவிட்டது.

தமது குமாரரை இளவரசர் வாசைலி கல்யாண நோக்கத்தோடுதான் அழைத்து வந்திருக்கிறார். இன்றோ நாளையோ அதற்குப் பதில் சொல்லும்படி அவர் கேட்கலாம். அவருடைய பிறப்போ அந்தஸ்தோ மோசமாய் இல்லை. 'நல்லது, அதற்கு விரோதமாக எனக்கு ஒன்றுமில்லை. ஆனால், அவளுக்குத் தகுதியானவனாக அவன் இருக்கவேண்டும். அதைத் தான் நாம் பார்க்கவேண்டும்' என்று இளவரசர் தமக்குள்ளாகவே சொல்லிக்கொண்டார்.

'அதைத்தான் நாம் பார்க்கவேண்டும். அதைத்தான் நாம் பார்க்க வேண்டும்' என்று வாய்விட்டு உறக்கப் பேசினார்.

கவனமாக அடியெடுத்து வைத்து வரவேற்பு அறைக்குள் அவர் வந்து சுற்றிலும் உள்ளவர்களை வேகமாய் நோட்டமிட்டார். குஞ்சு இளவரசியின் உடையில் ஏற்பட்டுள்ள மாறுதலை அவர் கவனித்தார். குமாரி பௌரியனின் ரிப்பனையும், இளவரசி மேரியின் பொருத்தமற்ற தலைமுடி அலங்காரத்தையும், குமாரி பௌரியனும் அனடோலும் காட்டி வந்த புன்சிரிப்புகளையும், அந்தப் பொதுவான உரையாடல்களில் தமது குமாரிமட்டும் தனித்து இருப்பதையும் அவர் கவனித்தார். 'ஒரு முட்டாள்மாதிரி அலங்காரம் செய்து கொண்டிருக்கிறாள்' என்று அவர் நினைத்து, கோபத்தோடு அவளைப் பார்த்தார். 'அவளுக்கு வெட்கமில்லை. அவன் அவளை நிராகரிக்கிறான்.'

அவர் நேராக இளவரசர் வாசைலியிடம் போனார்.

'நல்லது, சௌக்கியமாய் இருக்கிறீரா? சௌக்கியமாய் இருக்கிறீரா? உம்மைப் பார்ப்பதற்கு மகிழ்ச்சி அடைகிறேன்.'

'தூரம் என்ன செய்துவிடமுடியும். தூரத்தைக் கண்டு நட்புசிரிக்கிறது' என்று இளவரசர் வாசைலி தமக்கு வழக்கமான சுய நம்பிக்கையோடும், வேகமாகவும், அன்னியயோன்னியமான குரலிலும் ஆரம்பித்தார். 'இவன்தான் எனது இரண்டாவது மகன். தயவு செய்து அவனிடம் அன்பு கொண்டு நட்பாய் இருப்பீராக.'

அனடோலை இளவரசர் பால்கோன்ஸ்கி உற்றுப் பார்த்தார்.

'சரியான வாலிபப் பேர்வழி, சரியான வாலிபப் பேர்வழி. நல்லது, என்னை வந்து முத்தமிடு' என்று அவர் சொல்லி தமது கன்னத்தைக் காட்டினார்.

அந்த வயோதிகரை அனடோல் முத்தமிட்டார். மிகுந்த அடக்கத்தோடும் ஆவலோடும், தமது தந்தை அவருடைய கிறுக்குத் தனங்களைப்பற்றி சொல்லியவைகள் எல்லாம் நடக்கப்போதைப் பார்ப்பதற்காக காத்துக்கொண்டு இருப்பதைப் போல அவரைப் பார்த்தார்.

இளவரசர் பால்கோன்ஸ்கி சோபாவின் மூலையில் தமது வழக்கமான இடத்தில் அமர்ந்தார். ஒரு சாய்வு நாற்காலியை இழுத்துப் போட்டு அதில் அமரும்படி இளவரசர் வாசைலிக்குச் சொல்லிவிட்டு அரசியல் விஷயங்களைப் பற்றியும், மற்ற செய்திகளைப் பற்றியும் அவரிடம் கேள்வி கேட்க ஆரம்பித்தார். இளவரசர் வாசைலி சொல்வதை மிகுந்த கவனத்தோடு கேட்பதாக அவர் தோன்றினார். ஆனால் அடிக்கடி இளவரசி மேரியை நோக்கினார்.

'அப்படியானால் அவர்கள் பாட்ஸ்டாமிலிருந்து அதற்குள்ளாகவே எழுத ஆரம்பித்துவிட்டார்களா? என்று இளவரசர் வாசைலி உச்சரித்த கடைசி வார்த்தைகளையே கேள்வியாக அவர் கேட்டார். பின்னால் திடீரென்று எழுந்து தமது குமாரியிடம் போனார்.

'என்ன' விருந்தாளிகளுக்காகவா இம்மாதிரி உன்னை அலங்காரம் செய்துகொண்டிருக்கிறாய்? அழகு, ரொம்ப அழகு. விருந்தாளிகளுக்காக இந்த மாதிரி புது வழியில் உனது தலை முடியை அழகு செய்துகொண்டிருக்கிறாய். அதே விருந்தாளிகளின் முன்னால் உனக்கு நான் சொல்வதைக் கேள்? எதிர்காலத்தில் என்னுடைய சம்மதம் இல்லாமல் வழக்கமாக நீ செய்துகொள்ளும் ஆடை அலங்காரங்களை மாற்றக்கூடாது.

'அது என்னுடைய தவறு என் பிதாவே' என்று நாணத்தோடு முகம் சிவந்து குஞ்சு இளவரசி இடைமறித்துச் சொன்னாள்.

'உனக்கு எது இஷ்டமோ அதை நீ செய்துகொள்ளவேண்டும்' என்று இளவரசர் பால்கோன்ஸ்கி தலை வணங்கி, தமது மருமகளைப் பார்த்து சொன்னார். 'ஆனால் அவள் தன்னை ஒரு வேடிக்கைப் பொருளாக ஆக்கிக் கொள்ளக்கூடாது. ஏற்கனவே அவள் அழகில்லாமல் இருக்கிறாள்.'

அவர் மீண்டும் உட்கார்ந்தார். தமது மகளை அப்புறம் அவர் பார்க்கவில்லை. அவள் கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தாள்.

'அந்தத் தலையழகு இளவரசிக்கு ரொம்பப் பொருத்தமாய் இருக்கிறதே' என்றார் இளவரசர் வாசைலி.

'இப்பொழுது நீர், சிறிய இளவரசே, உமது பெயர் என்ன?' என்று இளவரசர் பால்கோன்ஸ்கி, அனடோலைப் பார்த்துத் திரும்பிக் கேட்டார். 'இங்கே வாரும். நாம் பேசி ஒருவருக்கொருவர் பழக்கமாகிக் கொள்வோம்.'

'வேடிக்கை இப்பொழுதுதான் ஆரம்பமாகிறது' என்று அனடோல் நினைத்து வயோதிக இளவரசர் பக்கத்தில் ஒரு புன்னகையோடு வந்து அமர்ந்தார்.

'நல்லது, எனது அருமையான பையனே, வெளிநாடுகளில் நீர் கல்வி கற்றதாக நான் கேள்விப்படுகிறேன், உம்து தந்தையையும் என்னையும் போல எழுதவோ படிக்கவோ, இங்குள்ள பாதிரிகளால் உமக்குச் சொல்லிக்கொடுக்கப்படவில்லை. இப்பொழுது நீர் சொல்லும், காப்பாளர் குதிரைப் பட்டாளத்தில் நீர் சேவை செய்கிறீரா?' என்று இளவரசர் பால்கோன்ஸ்கி கேட்டு, அனடோலை கவனமாகவும் நுணுக்கமாகவும் ஆராய்ந்து பார்த்தார்.

'இல்லை, நான் போர்முனைக்கு மாற்றப்பட்டிருக்கிறேன்' என்று சிரிப்பதை அடக்குவதற்குச் சிரமப்பட்டு அனடோல் சொன்னார்.

'ஹா, அது நல்ல காரியம். ஆகவே, எனது அருமைச் சிறுவரே, ஜார் சக்கரவர்திக்கும் நாட்டிற்கும் சேவை செய்ய நீர் விரும்புகிறீர் அல்லவா? இது யுத்தகாலம். உம்மாதிரி நல்ல பேர்வழிகள் எல்லாரும் சேவை செய்யவேண்டும். நல்லது, நீர் போர் முனைக்குப் போகிறீரா?'

'இல்லை இளவரசே, எங்கள் பட்டாளம் போர் முனைக்குப் போய்விட்டது. ஆனால் நான்... எதில் சேர்க்கப்பட்டிருக்கிறேன்... பப்பா' என்று அனடோல் தமது தகப்பனாரை திரும்பிப் பார்த்து சிரிப்புடன் கேட்டார்.

'அருமையான சிப்பாய்... அருமை. எதில் சேர்க்கப்படிருக் கிறேன்' ஆஹா, ஆஹா, ஆஹா' என்று இளவரசர் பால்கோன்ஸ்கி சிரித்தார்.

அனடோல் முன்னைவிட உரக்கச் சிரித்தார். திடீரென்று அளவரசர் பால்கோன்ஸ்கி முகம் சுளித்தார்.

'நீர் போகலாம்' என்று அவர் அனடோலிடம் சொன்னார்.

புன்சிரிப்பபோடு அனடோல் சீமாட்டியிடம் திரும்பினார்.

'அவருக்கு வெளிநாட்டில் நீர் கல்வி கற்பித்துக் கொடுத்திருக் கிறீர் அல்லவா, இளவரசர் வாசைலி?, என்று வயோதிக இளவரசர் வாசைலியைக் கேட்டார்.

'என்னால் எவ்வளவு நன்றாக செய்ய முடியுமோ, அவ்வளவையும் செய்திருக்கிறேன். இங்கு உள்ள படிப்பைவிட அந்தப் படிப்பு எவ்வளவோ சிறந்தது என்பதை உமக்கு நான் நிச்சயமாகச் சொல்கிறேன்.'

'ஆம், இந்தக் காலத்தில் ஒவ்வொன்றும் மாறியிருக்கிறது. ஒவ்வொன்றும் வித்தியாசப்பட்டுப் போயிருக்கிறது. அந்த வாலிபர் ஒரு நல்ல பேர்வழி. நல்ல பேர்வழி. சரி, என்னுடன் இப்பொழுது

வாரும்' என்று சொல்லிவிட்டு இளவரசர் வாசைலியின் கையைப் பற்றிக்கொண்டு அவரை தமது படிப்பு அறைக்கு அழைத்துச் சென்றார். அவர்கள் தனியாக அங்கு வந்து சேர்ந்தவுடன் தமது விருப்பங்களையும் நம்பிக்கைகளையும் வயோதிக இளவரசருக்கு இளவரசர் வாசைலி கூறினார்.

'நல்லது, அவளை விட்டு என்னால் இருக்க முடியாது என்பதற்காக அவள்ளை நான் தடுப்பேன் என்றா நீர் நினைக்கிறீர்? என்று வயோதிக இளவரசர் கோபமாய்க் கேட்டார். 'எப்பேர்ப்பட்ட எண்ணம். நாளைக்கே செய்வதற்கு நான் தயார். ஆனால் ஒன்றுமட்டும் சொல்லுகிறேன். என்னுடைய மருமகனை இன்னும் நன்றாக நான் தெரிந்துகொள்ளவேண்டும். என்னுடைய கொள்கை களைப்பற்றி நீர் அறிவீர். ஒவ்வொன்றும் வெளிப்படையாய் இருக்கவேண்டும். உமது முன்னிலையிலேயே நாளை நான் அவளைக் கேட்கிறேன். அவள் சம்மதித்தால் அவர் இங்கே தங்கியிருக்கலாம். நான் பார்க்கிறேன், என்று வயோதிக இளவரசர் உறுமினார். 'அவள் திருமணம் செய்துகொள்ளட்டும் எனக்கு எல்லாம் ஒன்றுதான்' என்று தமது குமாரர் விடைபெற்றுக் கொண்டுபோது எம்மாதிரி கீச்சுக் குரலில் அவர் கதறினாரோ அதே குரலில் இப்பொழுதும் கூச்சலிட்டார்.

'நான் உமக்கு வெளிப்படையாய் சொல்லுகிறேன்' என்று இளவரசர் வாசைலி இந்த கூர்மையான புத்தியுள்ள தோழரிடம் நடப்பதால் பிரயோசனமில்லை என்பதை அறிந்துகொண்டவர் போலப்பேசினார். 'ஆட்களைப் பார்த்தவுடன் நீர் அவர்களை ஊடுருவிப் பார்க்கிறீர் என்பது உமக்குத் தெரியும்.'

'அனடோல் ஒரு மேதாவி அல்ல. ஆனால் அவன் ஒரு நாணயமான நல்ல மனதுள்ள வாலிபன். ஒரு உயர்ந்த மகன்.'

'எல்லாம் சரி, எல்லாம் சரி, நாம் பார்க்கலாம்.'

ஆண்களுடைய சகவாசம் இல்லாமல் வெகு காலம் பெண்கள் தனித்து வாழ நேர்ந்தால் என்ன நேருமோ, அதேமாதிரி அனடோலைப் பார்த்ததும் இளவரசர் பால்கோன்ஸ்கியின் வீட்டைச் சேர்ந்த அந்த 3 பெண்களும், தங்களுடைய வாழ்க்கை அதுவரை உண்மையானதாக இல்லை என்று உணர்ந்தார்கள். அவர்களுடைய புத்தியோ உணர்ச்சியோ பார்வையோ திடீரென்று பத்து மடங்கு பெருகி இது வரை அவர்களுடைய வாழ்க்கை இருளில் கழிந்தது போலவும் இப்பொழுது திடீரென்று ஒளி பெற்று முக்கியத்துவம் கொண்ட ஒரு பிரகாசம் வீசுவது போலவும் கண்டார்கள்.

இளவரசி மேரி தன்னுடைய முகத்தைப் பற்றியோ, தன் தலைமுடி அலங்காரத்தைப் பற்றியோ முற்றிலும் மறந்தாள். அவளுக்கு ஒருவேளை கணவனாய் வரக்கூடிய அந்த அழகான முகத்தை அவள் பார்த்ததும், அவளுடைய கவனமெல்லாம் அதிலேயே லயித்துவிட்டது. அவளுக்கு அவர் அன்பாகவும், தைரியமாகவும், உறுதியோடும், ஆண்மை சுபாவம் கொண்டவராகவும், பரந்த மனப்பான்மை உள்ளவராகவும் தோன்றினார். அதைப்பற்றி அவளுக்கு உறுதியான நிச்சயம் ஏற்பட்டது. எதிர்கால குடும்ப வாழ்க்கையை பற்றி ஆயிரக்கணக்கான கனவுகள் தொடர்ச்சியாக அவளுடைய மனோராஜ்யத்தில் தோன்றிக்கொண்டிருந்தன. அவைகளை அவள் விரட்டிக்கொண்டும் மறைக்க முயற்சித்துக்கொண்டும் இருந்தாள்.

'நான் அவரிடம் உற்சாகமில்லமல் இருக்கவில்லையா?' என்று இளவரசி நினைத்தாள். 'ஆனால் என்னுடைய உள்ளத்தின் ஆழத்தில் எனக்கு வெகு சமீபமாக அவர் ஏற்கனவே இருப்பதாக நான் உணர்வதால் அவரிடம் அடக்கமாக இருக்க முயற்சிக்கிறேன். ஆனால் அவரைப்பற்றி நான் என்ன நினைப்பேன் என்பதை அவர் அறிய முடியாது. ஒருவேளை அவரை நான் விரும்பவில்லை யென்று அவர் மனோராஜ்யம் செய்யலாம்.'

அவளுடைய புதிய விருந்தாளியிடம் அவள் மிகுந்த நட்பு காட்ட விரும்பினாள். ஆனால் அவளால் முடியவில்லை. 'பாவம், அந்தப் பெண், பிசாசு மாதிரி அரூபமாயிருக்கிறாள், என்று அனடோல் நினைத்தாள்.

அனடோலின் வருகையால் குமாரி பௌரியனுக்கும் மிகுந்த பரபரப்பும் உற்சாகமும் ஏற்பட்டது. அவள் வேறு விதமாக நினைத்தாள். அவள் ஒரு அழகான பெண்ணாய் இருந்தாலும் அவளுக்கு ஒரு அந்தஸ்தோ பந்துக்களோ அல்லது ஒரு சொந்த தேசமோ கிடையாது. இளவரசர் பால்கோன்ஸ்கிக்கு தன் ஆயுள் முழுவதும் வேலை செய்ய அவள் விரும்பியதுமில்லை. இளவரசர் பால்கோன்ஸ்கிக்கு சேவை செய்வதிலோ, உரக்க வாசிப்பதிலோ, இளவரசி மேரிக்கு தோழியாய் இருப்பதிலோ, தனது ஆயுள் முழுவதையும் செலவிட அவள் எண்ணியதில்லை. ஒரு ருஷ்ய இளவரசர், ஒரே நோக்கிலேயே தன்னுடைய உயர்வைத் தெரிந்து தன்மீது காதல் கொள்வார் என்றும் அழகில்லாத, நல் உடையணியாத, பொருத்தமில்லாத ருஷ்ய இளவரசிகளை அவர் கவனிக்கமாட்டார் என்றும், தம்மை அழைத்துப்போவார் என்றும், அவள் வெகுகாலமாக எதிர்பார்த்திருந்தாள். கடையாக இதோ ஒரு ருஷ்ய இளவரசர் வந்திருக்கிறார். அவளுடைய அத்தையிடமிருந்து

குமாரி பௌரியன் ஒரு கதை கேட்டிருக்கிறாள். அந்தக் கதையின் முடிவை தானே அமைத்துக்கொண்டாள். அதை அடிக்கடி திருப்பிச் சொல்லுவதில் அவள் பிரியம் கொண்டாள். அந்தக் கதையாவது ஒரு பெண்ணை ஒருவர் கடத்திச் சென்றார். அந்தப் பெண்ணிடம் அவளுடைய தாயார் வந்து, திருமணமாகாமல் ஒரு ஆண்மகனுக்கு இணங்கியதற்காகக் கண்டித்தாள். இதுதான் கதை. இந்தக் கதையை குமாரி பௌரியன் தன்னுடைய மனோராஜ்யத்தில் இவளுடைய கள்ளக் காதலரான அவருக்கு, அவள் சொல்லியபோதெல்லாம் அவளுக்குக் கண்ணீர் வந்துவிடும். இப்பொழுது அவர் ஒரு உண்மையான ருஷ்ய இளவரசராய் தோன்றியிருகிறார். அவளை அவர் தூக்கிக்கொண்டு போய்விடுவாரென்றும் அதன் பின்னால் அவளுடைய தாயார் வந்து தோன்றுவாள் என்றும், அதற்கப்புறம் அவர் அவளை திருமணம் செய்துகொள்ளுவார் என்றும் நினைத்தாள். ஆகவே போரிஸைப்பற்றி அனடோலிடம் அவள் பேசிக்கொண்டிருந்தபோது அவளுடைய எதிர்காலம் அவளுடைய மனதில் இந்தவிதமாக உருவாகிக்கொண்டிருந்தது. இன்ன மாதிரி செய்யவேண்டும் என்ற சிந்தனை கொண்டு அவள் நடக்கவில்லை.

ஏனெனில், அவள் என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றி அவள் ஒரு வினாடிகூட சிந்தித்ததில்லை. இந்தக் கற்பனைகளெல்லாம் அவளுக்கு வெகுகாலமாகப் பழக்கமானவை. இப்பொழுது அனடோல் அங்கு தோன்றியதுடன் அந்தக் கற்பனைகள் அவரைச் சூழ்ந்து நின்றன. ஆகவே, எவ்வளவு அதிகமாக அவரை மகிழ்விக்கச் செய்ய முடியுமோ, அவ்வளவையும் முயற்சி செய்யவேண்டும் என்று அவள் விரும்பினாள்.

யுத்தத்தில் பழகிய ஒரு குதிரை எக்காளத்தைக் கேட்டவுடன் எப்படிக் குதிக்குமோ, அதேமாதிரி குஞ்சு இளவரசி நடந்து கொண்டாள். அவளுடைய தற்கால நிலைமையை அவள் முற்றிலும் மறந்தாள். அவளுக்குப் பழக்கமான பிலுக்குப் பேச்சுகளில் நீச்சல் அடிக்க அவள் தயாரானாள். இதற்கு எந்தவிதமான கெட்ட நோக்கமோ அல்லது மனப் போராட்டமோ அவளுக்கு கிடையாது. ஆனால் குழந்தைத் தனமும் வெகுளித் தனமுமான சந்தோஷமே காரணம்.

பெண்களின் கூட்டத்தில் எப்பொழுதுமே தம்மை பெண்கள் தொந்தரவு செய்வதாகக் காட்டி, அதனால் களைத்துப் போனவர் போன்ற ஒரு தோற்றத்தில் அனடோல் காணப்படுவார். இப்பொழுது இந்த மூன்று பெண்களின் மீதும் தமக்குப் பிடிப்பு ஏற்பட்டிருப் பதைக் கண்டு அவருடைய தற்பெருமை அதிகமாயிற்று. அழகும்

கவர்ச்சியும் கொண்ட குமாரி பௌரியனைப் பார்த்து அவருடைய மோக இச்சை ஏற்கனவே வளர ஆரம்பித்தது. அந்த இச்சை வெகு துரிதமாக அவரைப் பரவசமாக்கி கீழ்த்தரமான பொறுப்பற்ற காரியங்களை அவர் செய்யும்படி அவரைத் தூண்டுவது வழக்கம்.

தேநீர் அருந்திய பின்பு அந்தக் கோஷ்டி, உட்காரும் அறைக்குச் சென்றது. கிளாவிகார்ட் என்ற வாத்தியத்தை வாசிக்கும்படி இளவரசி மேரி கேட்டுக்கொள்ளப்பட்டாள். அனடோல் மிகுந்த உற்சாகத்தோடு சிரித்துக்கொண்டு அவளுக்கெதிராக வந்து முழங்கையில் சாய்ந்துகொண்டு குமாரி பௌரியனின் பக்கத்தில் உட்கார்ந்தார். அவருடைய பார்வை ஒரு வருத்தமும் மகிழ்ச்சியும் கொண்ட உணர்ச்சியோடு இளவரசி மேரி உணர்ந்தாள். அவளுடைய வழக்கமான கீதம் அவளுக்கு மிகுந்த பழக்கமான கவியுலகத்திற்கு அவளை அழைத்துச் சென்றது. அவள்மீது விழுந்த அவருடைய பார்வை அந்த உலகத்தை இன்னும் அதிகமான கவியுலகமாகச் செய்தது. ஆனால் அனடோலின் கண்கள் அவள்மீது பதிந்திருந்தபோதிலும் அவருடைய முகபாவம் அவளுக்காகக் காட்டப்பட்டதல்ல. குமாரி பௌரியனின் அசைப்புகளுக்கும் அவளுடைய சிறிய பாதத்திற்கும் 'கிளாவிகார்ட்' வாத்தியத்திற்குக் கீழே தமது பாதத்தால் அவளுடைய பாதத்தை தொட்டுக்கொண்டிருப்பதற்குமே அந்த முகபாவம் காட்டப் பட்டது. குமாரி பௌரியன்கூட இளவரசி மேரியை பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய அழகிய கண்களில் ஒரு குழப்பமான மகிழ்ச்சியும் நம்பிக்கையும் தோன்றின. இளவரசிக்கு அவை புதிதாகக் காணப்பட்டன.

'என்மீது எவ்வளவு தூரம் அவள் அன்புகொண்டிருக்கிறாள்' என்று நினைத்தாள் இளவரசி மேரி. 'இப்பொழுது நான் எவ்வளவு மகிழ்ச்சியோடு இருக்கிறேன். அப்பேர்ப்பட்ட ஒரு நண்பரோடு ஒரு கணவரோடு நான் எவ்வளவு மகிழ்ச்சியாய் இருக்கமாட்டேன்? கணவர்? அது சாத்யமா?' என்று அவள் நினைத்தாள். அவர் முகத்தைப் பார்க்க அவள் துணியவில்லை. ஆனால் தன்மீது அவருடைய பார்வை விழுந்துகொண்டிருப்பதை அவள் உணர்ந்தாள்.

இரவுச்சாப்பாட்டுக்குப் பின்னால், எல்லாரும் படுத்துக்கொள்ள புறப்பட்டார்கள். இளவரசி மேரியின் கையை அனடோல் முத்தமிட்டார். அவள், அவருடைய அழகிய முகம் அவளுடைய குறுகிய பார்வை கொண்ட கண்களுக்குப் பக்கத்தில் வந்தபோது அவரை நேராக உற்றுப்பாத்தாள். அதற்குத் தைரியம் அவளுக்கு எப்படி வந்ததென்று அவளுக்கே தெரியாது. இளவரசியிடமிருந்து

திரும்பி குமாரி பௌரியனின் கையை அவர் முத்தமிட்டார். (இப்படிச் செய்வது சமூக அந்தஸ்து விதிகளுக்கு ஒத்ததல்ல என்றாலும் ஒவ்வொரு காரியத்தையும் ரொம்ப சுலபமாவும் உறுதியுடனும் அவர் செய்து வந்தார்.) குமாரி பௌரியன் முகம் சிவந்தாள். ஒரு பீதியுற்ற பார்வையோடு இளவரசியை நோக்கினாள்.

'என்ன அடக்கமான பார்வை' என்று இளவரசி நினைத்தாள். 'என்மீது அவளுக்கு உள்ள அவளுடைய உண்மையான அன்பையும் பக்தியையும் நான் மதிக்காமல் அவள் மீது பொறாமை கொள்ளுவது சாத்தியமான காரியமென்று அமலி (குமாரி பௌரியன்) நினைக்கிறாளா?' என்று இளவரசி நினைத்தாள். அவளிடம் நெருங்கிச் சென்று ஆர்வத்தோடு அவளை முத்தமிட்டாள். குஞ்சு இளவரசியின் கையை முத்திமிட அனடோல் சென்றார்.

'இல்லை, இல்லை, இல்லை. நீர் ஒழுங்காய் நடக்கிறீர், உம்முடைய தகப்பனார், எப்பொழுது எனக்கு எழுதித் தெரிவிக்கிறாரோ அப்பொழுதுதான் என்னுடைய கையை முத்தமிடுவதற்கு நான் கொடுப்பேன். அதுவரை கிடையாது' என்று அவள் சொன்னாள். பின்னால் இளநகை கொண்டு அவரைப் பார்த்து ஒரு விரலை உயர்த்திக் காட்டிவிட்டு அவள் அறையை விட்டுப் போனாள்.

# 3

## 5

எல்லாரும் பிரிந்து போனார்கள். அனடோல் தவிர மீதமுள்ளவர்கள் வெகு நேரம் வரையில் அந்த இரவில் தூங்காமல் இருந்தார்கள். அனடோல் மட்டும் படுக்கையில் படுத்தவுடன் தூங்கிவிட்டார்.

'உண்மையாகவே அவர் எனக்கு கணவராய் வருவாரா? இந்த அந்நியர் மிகவும் பிரியமானவர் - ஆம், பிரியமானவர். அதுதான் முக்கியமான விஷயம்' என்று இளவரசி மேரி நினைத்தாள். ஆனால் அவள் அதிகமாய் அறிந்திராத பயம் ஒன்று அவளைப் பிடித்தது. திரும்பிப் பார்ப்பதற்கு அவள் பயந்தாள். திரைக்குப் பின்னால் அந்த இருட்டு மூலையில் யாரோ ஒருவர் நின்று கொண்டிருப்பது போல அவளுக்குத் தோன்றியது. இந்த யாரோ ஒருவர், அவரேதான் - அந்தப் பிசாசு - அவர்கூட இந்த மனிதர் மாதிரி வெள்ளை நெற்றியும் கருப்பு புருவங்களும், சிவந்த உதடுகளும் கொண்டிருந்தார்.

தனது வேலைக்காரியைக் கூப்பிடுவதற்காக மணி அடித்தாள். வேலைக்காரி வந்ததும் அவளை தன் அறையிலேயே தூங்குமாறு சொன்னாள்.

குமாரி பௌரியன் செடித்தோட்டத்தில் அன்று மாலை வெகு நேரம் வரையில் பெருமையோடு மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தாள். எதையோ பார்த்து புன்னகை புரிவதும், பின்னால் அவளுடைய தாயார் அவளைக் குற்றஞ்சொல்லுவது போல கற்பனை செய்துகொண்டு, அதற்காகக் கண்ணீர் விடுவதுமாய் இருந்தாள்.

குஞ்சு இளவரசி தனது படுக்கை சரியாகப் போடப்படவில்லையென்று தனது வேலைக்காரியிடம் குறை கூறினாள். அவளால் குப்புறப்படுப்பதற்கோ அல்லது பக்கவாட்டில் படுப்பதற்கோ முடியவில்லை. எந்த நிலைமையும் அவளுக்கு அசௌக்கியமாகவும் பொருத்தமில்லாமலும் இருந்தது. இந்த நிலைமை அவளை இப்பொழுது அதிகமாய் வருத்தியது. ஏனென்றால், அனடோலின் பிரசன்னத்தால் அவளுடைய பழைய நிலைமை மிகத் தெளிவாக ஞாபகத்திற்கு வந்தது. அந்தப் பழைய நிலைமை என்னவென்றால் அவள் கர்ப்பவதி ஆவதற்கு முன்பாக ஒவ்வொன்றும் அவளுக்கு சிரிப்பாகவும் கேலியாகவுமே இருந்தது என்பதேயாகும். ஒரு ஜாக்கட்டையும் இரவுத் தொப்பியையும் அணிந்துகொண்டு ஒரு சாய்வு நாற்காலியில் அவள் உட்கார்ந்திருந்தாள். அவளுடைய வேலைக்காரியான கேட்டி தூங்கும் கண்களோடும் தலைவிரி கோலமாகவும் அவளுடைய கனமான இறகு படுக்கையைத் தட்டி மூன்றாவது தடவையாக திருப்பிப் போட்டு தனக்குள் முனங்கிக்கொண்டிருந்தாள்.

‘இதெல்லாம் ஒட்டைகளாவும் முடிச்சுகளாகவும் இருக்கின்றன’ என்று குஞ்சு இளவரசி மீண்டும் சொன்னாள். ‘தூங்கிப் போவதற்கு நான் மிகுந்த சந்தோஷமடைவேன். அது என்னுடைய தப்பல்ல’ ஒரு குழந்தை அழுவதற்கு ஆரம்பிக்கும்போது எப்படியிருக்குமோ, அதேமாதிரி அவளுடைய குரல் நடுங்கியது.

வயோதிக இளவரசரும் இன்னும் தூங்கவில்லை. பாதி தூங்கிக் கொண்டிருந்த டிக்கன் அந்த இளவரசர் கோபமாக நடந்து கொண்டும், பலமாய் மூக்கை சிந்திக்கொண்டும் இருந்ததைக் கேட்டான். தமது குமாரி மூலமாக தாம் அவமானப் படுத்தப் பட்டதாக அந்த வயோதிக இளவரசர் நினைத்தார். அந்த அவமானம் தமக்கல்ல, தம்முடைய குமாரிக்கு ஏற்பட்டது. அந்தக் குமாரியை தம்மைவிட அதிகமாக அவர் நேசித்தார். ஆகவே அந்த அவமானம்

அவரை அதிகமாய் உருக்கியது. எல்லாவற்றையும் யோசித்து, எது சரி என்பதைத் தீர்மானித்து, எப்படி நடக்கவேண்டும் என்பதை முடிவு செய்துகொள்ள வேண்டும் என்று அவர் தமக்குள் சொல்லிக்கொண்டேயிருந்தார். ஆனால், அப்படிச் செய்வதற்குப் பதிலாக தாமே மேலும் மேலும் படபடப்பு அடைந்து வந்தார்.

'முதலாவது ஒருவர் வந்தார்-அவள் தமது தந்தையையும் வேறு எல்லாவற்றையும் மறந்தாள். மெத்தைக்கு ஓடினாள். தனது தலையை வாரிக் கட்டினாள். வாலை ஆட்டினாள். அவள் முற்றிலும் மாறுபட்டவளாய் இருந்தாள். தனது தந்தையை சந்தோஷத்தோடு உதறித் தள்ளிவிட்டாள். நான் அதை கவனிப்பேன் என்பதை அவள் அறிவாள். பர் பர்... பர்... பௌரியன் மீதுதான் அந்த முட்டாள் கண் வைத்திருக்கிறான் என்பதை நான் அறியாமலா இருக்கிறேன்? அவளை நம்மிடமிருந்து தள்ளியாகவேண்டும். இதை அறிந்துகொள்வதற்கு அவளுக்கு ஏன் சுயகௌரவமில்லாமல் போய்விட்டது? அவளுக்குச் சுயகௌரவம் இல்லாவிட்டாலும், குறைந்தது எனக்காகவாவது கொஞ்சம் சுயகௌரவத்தைக் காட்டியிருக்கவேண்டும். அந்த மடையன் அவளைப்பற்றி ஒன்றுமே நினைக்கவில்லை என்பதையும் பௌரியனைத்தான் அவன் எண்ணிக்கொண்டிருக்கிறான் என்பதையும் அவளுக்கு எடுத்துச் சொல்லவேண்டும். இல்லை - அவளுக்கு சுயகௌரவமே இல்லை... ஆனால், இந்தச் சுயகௌரவத்தை அவள் பார்க்கும்படி நான் செய்வேன்....'

வயோதிக இளவரசர் தமது குமாரியிடம் அவள் தவறு செய்கிறாள் என்று சொன்னால், அந்த அனடோல் குமாரி பௌரியனிடம் தான் சல்லாபம் செய்ய விரும்புகிறான் என்பதைச் சொன்னால், இளவரசி மேரியின் சுயகௌரவம் பங்கமடையும் என்பதும், (அவனை விட்டு தாம் பிரியாமல் இருக்கவேண்டும் என்ற) தமது நோக்கம் அதன்மூலம் கிட்டிவிடும் என்பதும் அவருக்குத் தெரியும். இம்மாதிரி நினைத்து சமாதானம் செய்து கொண்டு டிக்கனை அழைத்து தமது உடுப்புகளைக் களைய ஆரம்பித்தார்.

'எந்தப் பிசாசு அவர்களை இங்கே கொண்டுவந்தது' என்று அவர் நினைத்தார். அச்சமயம் அவருடைய உலர்ந்துபோன உடம்பிலும், சாம்பல் நிற முடியுள்ள மார்பிலும், ஒரு இரவுச் சட்டையை டிக்கன் போட்டுக்கொண்டிருந்தான்.' நான் அவர்களை அழைக்க வில்லை. என்னுடைய வாழ்வின் அமைதியைக் குலைப்பதற்காக வந்திருக்கிறார்கள். அந்த அமைதியும் என்னிடம் ஏற்கனவே அதிகமாகவும் இல்லை. அவர்களைப் பிசாசு பிடிப்பதாக' என்று

அவர் முனங்கிக் கொண்டிருந்தார். அச்சமயம் அவருடைய தலையை வேலைக்காரன் போட்டுக்கொண்டிருந்த சட்டை மூடிக் கொண்டிருந்தது.

சில சமயங்களில் தாம் நினைப்பதை வெளியே பேசுவது, தனது எஜமானரின் வழக்கம் என்பதை டிக்கன் அறிவான். ஆகவே, சட்டைக்கு வெளியாக தெரிந்த கோபமான ஆவலான முகத்தைப் பார்த்து, அவனுடைய தோற்றங்கள் மாறுதல் அடையவில்லை.

'படுக்கைக்குப் போய் ஆய்விட்டதா?' என்று இளவரசர் கேட்டார்.

எல்லா கெட்டிக்கார வேலைக்காரர்களைப் போலவே தனது எஜமானனின் நினைப்பு எவ்வழியில் போய்க்கொண்டிருக்கிறது என்பதை தானாகவே டிக்கன் அறிந்துகொண்டான். அந்தக் கேள்வி இளவரசர் வாசைலியையும், அவர் குமாரரையும் பற்றியது என்பதை அவன் யூகித்தான்.

'அவர்கள் படுத்துக்கொண்டார்கள். விளக்குகளையும் அணைத்து விட்டார்கள். மேன்மை தங்கியவரே.'

'பிரயோசனமில்லை... பிரயோசனமில்லை...' என்று வேகமாக இளவரசர் சொல்லி தமது கால்களை செருப்புகளில் மாட்டினார். அவருடைய கைகள் படுக்கை உடுப்பின் சட்டைக் கைகளில் நுழைந்தன. தாம் படுத்துத் தூங்கும் படுக்கைக்கு அவர் போனார்.

அன்டோலுக்கும், குமாரி பௌரியனுக்கும் இடையில் பேச்சு வார்த்தைகள் எதுவும் இல்லாமல் இருந்தாலும் அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் நன்றாய் அறிந்து, அவளுடைய கனவில் அவளுடைய பிரியமுள்ளதாய் தோன்றி அவளைக் கண்டிக்கக் கூடிய கட்டம் வருகிற வரையிலுள்ள தங்களுடைய சல்லாபத்தின் முதல் பாகத்தைப் புரிந்துகொண்டார்கள். தனிமையாக ஒருவருக் கொருவர் பேசவேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன என்பதையும் அவர்கள் உணர்ந்து கொண்டார்கள். ஆகவே, அதற்காக ஒரு சந்தர்ப்பத்தை, ஒருவரையொருவர் தனியாக சந்திக்கும் சந்தர்ப்பத்தை அன்று காலையிலிருந்து அவர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள். குறிப்பிட்ட நேரத்தில், இளவரசி மேரி தனது தகப்பனார் அறைக்குப் போய் இருந்த சமயத்தில், குமாரி பௌரியனும் அனடோலும் செடித் தோட்டத்தில் சந்தித்தார்கள்.

தந்தையின் படிக்கும் அறைக்கு இளவரசி மேரி விசேஷமான நடுக்கத்தோடு போனாள். அவளுடைய விதி அன்று முடிவாய்விடும் என்பதை எல்லாரும் அறிந்திருந்தது மட்டுமல்ல, அதைப் பற்றி அவள் என்ன நினைக்கிறாள் என்பதையும் அறிந்திருந்ததாக

அவளுக்கு தோன்றியது. டிக்கனின் முகத்தில் இதை அவள் கண்டாள்... இளவரசர் வாசைலியின் வேலைக்காரன் முகத்திலும் இதை அவள் கண்டாள். தாழ்வாரத்தின் வழியாக அவன் வெந்நீர் கொண்டு போய்க்கொண்டிருந்தபோது அவளை சந்தித்தான். சந்தித்ததும் அதிகமாய் தலை குனிந்து மரியாதை செய்தான்.

அன்று காலையில் அவருடைய குமாரியிடம் மிகுந்த கவனத்தோடும், பிரியத்தோடும் வயோதிக இளவரசர் நடந்து கொண்டார். மிகுந்த கஷ்டத்தோடு தமது தந்தை அம்மாதிரியான அன்புத் தோற்றத்தை முகத்தில் காட்ட முயற்சி செய்து கொண்டிருக்கிறார் என்பதை இளவரசி மேரி அறிவாள். அவருடைய முகம் அம்மாதிரி தோற்றத்தைக் காட்டிக்கொண்டிருந்தபோது, அவருடைய கணக்குப் பாடத்தில் அவள் புரிந்துகொள்ள முடியாத சமயத்தில் மிகுந்த எரிச்சலோடு தமது உயர்ந்த கைகளை மூடிக்கொண்டு, நாற்காலியை விட்டு எழுந்து, அவளை விட்டு விலகிப் போய் தணிந்த குரலில் தாம் சொன்ன வார்த்தைகளையே பல தடைவைகள் சொல்லிக் கொண்டிருப்பார். அச்சமயத்தில் அவர் முகத்தில் என்ன தோற்றம் காணப்படுமோ, அதுவே இப்பொழுதும் காணப்பட்டது.

அன்போடு அவர் அவளிடம் நடந்து தாம் பேசவேண்டிய விஷயத்தை ஆரம்பித்தார்.

‘உன்னைப்பற்றி எனக்கு ஒரு பேச்சு வந்திருக்கிறது’ என்று இயற்கைக்கு விரோதமான புன்சிரிப்போடு அவர் சொன்னார். ‘இளவரசர் வாசைலி தமது சீடனை (என்ன காரணத்திற்காகவோ அனடோலை சீடன் என்றே இளவரசர் பால்கோன்ஸ்கி குறிப்பிட்டு வந்தார்) இங்கே அழைத்துக்கொண்டு வந்ததற்கான காரணத்தை, நீ யூகித்திருப்பாய் என்று எதிர்பார்க்கிறேன். அவர் அழைத்துக் கொண்டு வந்தது, என்னுடைய அழகான கண்கள் பார்ப்பதற்காக அல்ல. உன்னைப்பற்றி நேற்றிரவு அவர்கள் என்னிடம் திருமணப் பேச்சு பேசினார்கள். என்னுடைய கொள்கைகள் உனக்குத் தெரியும். ஆகவே உன்னுடைய அபிப்பிராயத்தைக் கூறும்படி நான் உனக்கு விட்டுவிடுகிறேன்.’

‘உங்களை எப்படி நான் புரிந்துகொள்வது, எனது தந்தையே’ என்று இளவரசி முகம் வெளிறி, பின்னால் முகம் நாணிச்சிவந்து சொன்னாள்.

‘எப்படி என்னைப் புரிந்துகொள்வதா?’ என்று அவளுடைய தந்தை கோபமாய் கூச்சலிட்டார்.. ‘இளவரசர் வாசைலி உன்னை தம்முடைய விருப்பத்திற்குப் பொருத்தமான மருமகள் என்று

நினைக்கிறார். ஆகவே, அவருடைய சீடருக்கு திருமணம் செய்விக்கும்படி கேட்கிறார். புரிந்துகொள்ளுவது என்பது அதுதான். 'எப்படிப் புரிந்து கொள்வதாவது?...' இப்பொழுது நான் உன்னைக் கேட்கிறேன்.

'நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியாது, அப்பா' என்று இளவரசி முணுமுணுத்தாள்.

'நான்? நான்? என்னைப் பற்றி? இந்த விஷயத்திலிருந்து என்னை விட்டுவிடு. நான் இப்பொழுது கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை. உன்னைப்பற்றி என்ன? அதைப்பற்றித்தான் நான் இப்பொழுது அறிய விரும்புகிறேன்.'

இந்த விஷயத்தைப்பற்றி தனது தந்தைக்குப் பிடித்தமில்லை என்பதை இளவரசி அறிந்தாள். ஆனால் அதே வினாடியில் தனது விதியை நிர்ணயிப்பது அப்பொழுது நடந்தால்தான் நடந்தது. இல்லையானால் ஒருக்காலும் நடக்கப்போவதில்லை என்று நினைத்தாள். நேரடியாக தந்தையைப் பார்த்தால் வழக்கம்போல அவர் சொல்வதை ஒப்புக்கொள்ள வேண்டியிருக்குமேயொழிய, சிந்திக்க முடியாது' என்று நினைத்த அவள் தனது பார்வையைக் கீழே நோக்கினாள். அவள் சொன்னாள்;-

உங்களுக்கு எது விருப்பமோ, அதைச் செய்யவே நான் விரும்புகிறேன். ஆனால், என்னுடைய விருப்பத்தை நீங்கள் அறிய விரும்பினால்...' அதை முடிப்பதற்கு அவளுக்கு நேரமில்லை. அதற்குள்ளாக வயோதிக இளவரசர் இடைமறித்துப் பேசினார்.

'அது ரொம்ப சிலாக்கியமானது' என்று அவர் கத்தினார். 'அவர் திருமணப் பரிசோடு உன்னை அழைத்துக்கொண்டு போவார். குமாரி பௌரியனையும் சேர்த்தே கொண்டு போவார். அவள்தான் மனைவியாய் இருப்பாள். ஆனால் நீ...'

இளவரசர் பேசுவதை நிறுத்தினார். இந்த வார்த்தைகள் தமது குமாரியிடம் ஏற்படுத்திய உணர்ச்சியைக் கவனித்தார். அவள் தனது தலையைக் கீழே தொங்கவிட்டு கண்ணீர் வடிக்கத் தயாரானாள்.

'இப்பொழுது சொல்லு... இப்பொழுது சொல்லு. நான் சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன்' என்று அவர் சொன்னார்.' ஆனால் இளவரசியே, ஞாபகத்தில் வைத்துக்கொள். ஒரு கன்னிக்கு தனது கணவனைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள பூரண உரிமை உண்டு என்ற கொள்கையை நான் கடைப்பிடிப்பவன். உனக்குச் சுதந்திரம் கொடுக்கிறேன். நீ செய்கிற தீர்மானத்தைப் பொறுத்துதான் உன் வாழ்க்கையில் சந்தோஷம் இருக்கிறதென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள். என்னைப் பற்றி கவலைப்படாதே.'

'ஆனால் எனக்குத் தெரியாது, அப்பா.'

பேசுவதற்கு அவசியமேயில்லை. கல்யாணம் செய்வதற்கு அவருக்கு அவருடைய அப்பா உத்திரவிட்டிருக்கிறார். ஆகவே அவர் உன்னையோ, அல்லது வேறு யாரையோ திருமணம் செய்துகொள்ளுவார். ஆனால் உனக்கு வேண்டியவரைத் தெரிந்தெடுத்துக் கொள்ளுவதற்கு உனக்குப் பூரண உரிமை உண்டு... உன்னுடைய அறைக்குப்போ. இதைப்பற்றி நன்றாக யோசி. இன்னும் ஒரு மணி நேரத்தில் திரும்பி என்னிடம் வந்து அவருடைய முன்னிலையில் ஆமாம் அல்லது இல்லை என்பதைச் சொல்லு. இதற்காக நீ பிரார்த்தனை செய்வாய் என்று எனக்குத் தெரியும். நல்லது, உனக்குப் பிரியமானால் பிரார்த்தனை செய்துகொள். ஆனால் இதைப்பற்றி நீ நன்றாய் சிந்திப்பது மிகவும் சிலாக்கியம். போ. ஆமாம், இல்லை, ஆமாம், இல்லை, ஆமாம், இல்லை.' இளவரசி மூடுபனிக்குள் அகப்பட்டுக் கொண்டிருந்தமாதிரி தடுமாறி அவருடைய படிப்பு அறையைவிட்டு வெளியே வந்தாள். இன்னமும் அவர் சுத்திக்கொண்டேயிருந்தார்.

அவளுடைய விதி தீர்மானிக்கப்பட்டு விட்டது. சந்தோஷமாக தீர்மானிக்கப்பட்டுவிட்டது. ஆனால் அவளுடைய தகப்பனார் குமாரி பௌரியனைப்பற்றி சொல்லியது பயங்கரமானது. அது உண்மையல்ல என்பது நிச்சயம். என்றாலும் அது பயங்கரமானது. அதைப்பற்றி அவளால் நினைக்காமல் இருக்க முடியவில்லை. அவள் நேராக செடிக்கூடத்தில் நுழைநந்து எதையும் பார்க்காமலும், கேட்காமலும் போய்க்கொண்டிருந்தபோது, தனக்குப் பழக்கமான குமாரி பௌரியனின் முணுமுணுப்பைக் கேட்டு அவள் தன் உணர்வு கொண்டாள். தனது கண்களை அவள் உயர்த்தினாள். இரண்டு அடிகளுக்கு அப்பால், அனடோல் அந்த பிரஞ்சுப் பெண்ணை ஆலிங்கனம் செய்து, அவளிடம் எதையோ முணுமுணுத்துக் கொண்டிருந்ததைக் கண்டாள். தமது அழகான முகத்தில் ஒரு பீதி அடைந்த தோற்றத்தோடு அனடோல் இளவரசி மேரியைப் பார்த்தார். ஆனால் உடனே குமாரி பௌரியனின் இடுப்பில் உள்ள தமது கையை அவர் எடுக்கவில்லை. குமாரி பௌரியன் இன்னும் அவளைப் பார்க்கவில்லை.

'யார் அங்கே? ஏன்? ஒரு வினாடி பொறுங்கள்' என்று அனடோலின் முகம் சொல்வது போலத் தோன்றியது. இளவரசி மேரி, மௌனமாக அவர்களை நோக்கினாள். அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை. கடைசியாக குமாரி பௌரியன் கூச்சலிட்டு அங்கிருந்து ஓடினாள். இளவரசி மேரிக்கு ஒரு சந்தோஷப் புன்னகையோடு அனடோல் தலை தாழ்த்தி மரியாதை

செய்தார். இந்த வேடிக்கையான காட்சியைக் கண்டதற்காக, தம்முடன் சேர்ந்து சிரிப்பதற்கு அவளை அழைப்பதுபோல் இருந்தது. பின்னால் தமது தோள்களைக் குலுக்கிக்கொண்டு, தமது அறைகளுக்குப் போகிற வாசலைப் பார்த்து நடந்தார்.

ஒரு மணி நேரம் கழிந்தது. வயோதிக இளவரசரிடம் அழைத்துப் போக இளவரசி மேரியின் அறைக்கு டிக்கன் வந்தான். இளவரசர் வாசைலியும் அங்கேயிருப்பதாக அவன் சொன்னான். டிக்கன் அவளிடம் வந்தபோது, தனது அறையில் சோபாவில் இளவரசி மேரி அமர்ந்து, அழுதுகொண்டிருந்த குமாரி பௌரியனைக் கட்டித் தழுவி, அவளுடைய தலைமுடியை மெதுவாய்த் தட்டிக் கொண்டிருந்தாள். தங்களுடைய வழக்கமான அமைதியான ஒளியை வீசிக்கொண்டிருந்த இளவரசியின் அழகிய கண்கள், கனிந்த அன்போடும் அனுதாபத்தோடும் குமாரி பௌரியனின் அழகிய முகத்தை நோக்கிக் கொண்டிருந்தன.

'இல்லை, இளவரசி, உன்னுடைய அன்பை நான் எக்காலமும் இழந்துவிட்டேன்' என்றாள் குமாரி பௌரியன்.

'ஏன்? எப்பொழுதையும்விட உன்னை அதிகமாக நான் நேசிக்கிறேன்' என்றாள் இளவரசி மேரி. 'உன்னுடைய சந்தோஷத்திற்காக என்னால் முடிந்ததை எல்லாம் செய்வதற்கு நான் முயற்சிப்பேன்.

'ஆனால் நீர் என்னை வெறுக்கிறீர். நீர் ரொம்பவும் பரிசுத்த மானவராதலால், உணர்ச்சிகளால் மக்கள் எவ்வளவுதூரம் அடித்துக் கொண்டு போகப்படுகிறார்கள் என்பதை உம்மால் ஒருபோதும் அறிந்துகொள்ள முடியாது. என்னுடைய தாயார் மட்டும்...'

'எனக்கு நன்றாய்ப் புரிகிறது' என்று இளவரசி மேரி ஒரு சோகமான புன்னகையோடு பதிலளித்தாள். 'அமைதியாய் இரு. என் அன்பே. நான் என்னுடைய தந்தையிடம் போகவேண்டும்' என்று அவள் சொல்லிவிட்டு அங்கிருந்து போனாள்.

இளவரசர் வாசைலி கால் மேல் கால் போட்டுக்கொண்டும் கையில் ஒரு பொடி டப்பியை வைத்துக்கொண்டும் தமது உள்ளத்தையே கலக்கிவிட்டது போன்ற ஒரு ஆழ்ந்த பரபரப்பை முகத்தில் காட்டிக்கொண்டும் உட்கார்ந்திருந்தார். தம்முடைய புத்திசாலித்தனத்தை நினைத்து வருந்திக்கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்தார். அச்சமயம் இளவரசி மேரி உள்ளே வந்தாள். வேகமாக அவர் ஒரு சிமட்டா பொடியைக் கையில் எடுத்தார்.

'ஹா என் அன்பே, என் அன்பே', என்று அவர் ஆரம்பித்து, எழுந்து நின்று அவளுடைய இரண்டு கைகளையும் பற்றினார். அப்புறம் பெருமூச்சு விட்டுக்கொண்டு மேலும் கூறியதாவது;

'என்னுடைய மகனின் விதி உன் கைகளில் இருக்கிறது. என்னுடைய அன்பான நல்ல குணமுள்ள அமைதியான மேரி, உன்னை நான் எப்பொழுதுமே எனது மகளைப்போல நேசித்து வந்திருக்கிறேன். இப்பொழுது உனது தீர்மானத்தைத் தெரிவிப்பாயாக' அவர் நிமிர்ந்து பின்னால் சாய்ந்தார். ஒரு உண்மையான கண்ணீர்த்துளி அவருடைய கண்ணில் தோன்றியது.

'பர்...பர்...' என்று மூக்கினால் சத்தமிட்டார்.

'தமது சீடனுக்காக-குமாரனுக்காக- உன்னிடம் இளவரசர் கேட்கிறார். இளவரசர் அனடோல் குராகினின் மனைவியாக வர உனக்கு விருப்பமா இல்லையா? ஆம் அல்லது இல்லை என்று பதில் சொல்லு' எனக் கூவினார். 'நீ சொன்னதற்குப் பின்னால் என்னுடைய கருத்தையும் நான் சொல்லுவேன். ஆம், என்னுடைய கருத்து, அது என்னுடைய கருத்தேதான்' என்று இளவரசர் பால்கோன்ஸ்கி, இளவரசர் வாசைலியயைப் பார்த்து அவருடைய பரிதாபகரமான தோற்றத்திற்குப் பதில் கூறுவதுபோலப் பேசினார். 'ஆம் அல்லது இல்லை.'

'உம்மைவிட்டு எப்பொழுமே பிரியக்கூடாது என்பதுதான் என்னுடைய விருப்பம், அப்பா. உங்களுடைய வாழ்க்கை யிலிருந்து என்னுடைய வாழ்க்கையை எப்பொழுதுமே நான் பிரிக்கப் போவதில்லை. நான் கல்யாணம் செய்துகொள்ள விரும்ப வில்லை' என்று அவள் உறுதியாக கூறி இளவரசர் வாசைலியையும் அவருடைய தந்தையையும் தமது அழகிய கண்களால் நோக்கினாள்.

'வெறும் புரட்டு, அசட்டுத்தனம், புரட்டு, புரட்டு, புரட்டு' என்று இளவரசர் பால்கோன்ஸ்கி கத்தினார். தமது முகத்தைச் சுளித்துக்கொண்டு தமது குமாரியின் கையைப்பற்றி, அவளை முத்தமிடாமல் தமது நெற்றியை அவளுடைய நெற்றியோடு சேர்த்து அவளுடைய கையை பலமாய் அழுத்தினார். அவள் வலிபொறுக்க முடியாமல் கூச்சலிட்டு அழுதாள்.

இளவரசர் வாசைலி எழுந்தார்.

'என் அன்பே, இந்த வினாடியை நான் எக்காலமும், எக்காலமும் மறக்கமாட்டேன். ஆனால், எனது அன்பே, சிறிதாவது, இந்த இருதயத்திற்கு கொஞ்சம் நம்பிக்கையைக் கொடுக்கிறமாதிரி, அன்பாகவும் தாராளமாகவும் இருக்கக்கூடாதா? ''ஒருவேளை'' என்றாவது நீ சொல்வாயாக எதிர்காலம் ரொம்பவும் நீளமானது. ஆகவே ''ஒருவேளை '' என்று சொல்லு.'

'இளவரசே, நான் சொல்லியதெல்லாம் என்னுடைய உள்ளத்தில் இங்கே இருக்கிறது. இந்த மரியாதைக்காக நான் நன்றி

தெரிவிக்கிறேன். ஆனால் உம்முடைய மகனின் மனைவியாக நான் எக்காலமும் வரமாட்டேன்.'

'நல்லது, அப்படியானால், அது முடிந்துவிட்டது. எனது அன்பான நண்பரே, உம்மைப் பார்த்ததற்காக நாம் மிகவும் சந்தோஷமடைகிறேன். மிகுந்த சந்தோஷம். உனது அறைகளுக்குப் போவாயாக இளவரசியே... போ' என்றார் வயோதிக இளவரசர். இளவரசர் வாஸைலியை அவர் ஆலிங்கனம் செய்துகொண்டு, 'உம்மைப் பார்த்ததற்காக மிகமிக மகிழ்ச்சியடைகிறேன்' என்று மீண்டும் சொன்னார்.

'என்னுடைய பிரவர்த்தி வேறுவிதமானது' என்று நினைத்தாள் இளவரசி மேரி. 'அன்பினாலும் தியாகத்தினாலும் ஏற்படக்கூடிய மகிழ்ச்சியான, மற்றொருவித மகிழ்ச்சியே என்னுடைய பிரவர்த்தியாக இருக்கவேண்டுமென்று நான் நினைக்கிறேன். என்ன வந்தாலும் சரி, பாவம் அமலியின் சந்தோஷத்திற்காக நான் ஏற்பாடு செய்வேன். அவள் அவரை ரொம்ப ஆர்வத்தோடு நேசிக்கிறாள். உணரச்சியோடு வருந்துகிறாள். அவர்களுக்குள் திருமணம் ஆகும்படி என்னால் முடிந்ததையெல்லாம் செய்வேன். அவருக்கு சொத்துக்கள் இல்லையென்றால் அவளுக்கு வேண்டிய பணத்தை நான் கொடுப்பேன். எனது தந்தையையும் ஆண்ட்ரூவையும் அப்படிச் செய்யும்படி நான் கேட்பேன். அவள் அவருடைய மனைவியாக ஆகும்போது நான் மிகுந்த மகிழ்ச்சி கொள்வேன். ஒரு அந்நிய நாட்டுப் பெண் தன்னந் தனியாய் இருக்கிறாள். உதவிக்கு யாரும் கிடையாது. அவ்வளவு துரதிருஷ்டமானவள். அவள் எவ்வளவு தூரம் தன்னை மறந்து இருப்பாளானால், ஓ கடவுளே, அவள் எவ்வளவு ஆர்வத்தோடு அவரை நேசிப்பதாய் இருக்கவேண்டும். ஒருவேளை நானும் அம்மாதிரியே செய்வதாய் இருக்கலாம்...' என்று இளவரசி மேரி நினைத்தாள்.

## 3

### 6

நிக்கலஸிடமிருந்து ராஸ்டோவ்களின் வீட்டிற்கு கடிதம் வந்து வெகுகாலம் ஆகிவிட்டது. கடைசியாக குளிர்கால மத்தியில் தமது குமாரரின் கையெழுத்தால் விலாசமிடப்பட்ட கடிதம் ஒன்றை கோமகன் வரப்பெற்றார். அது கிடைத்ததும், முன் பாதங்களில் வேகமாக தமது வரவேற்பு அறைக்கு பயத்தோடும், அவசரத்தோடும் ஓடினார். வேறு எவரும் கவனிக்கக்கூடாது என்று முயற்சித்து, கதவை சாத்திக்கொண்டு கடிதத்தை வாசிக்க ஆரம்பித்தார்.

அந்த வீட்டில் நடக்கிற ஒவ்வொரு காரியத்தையும், எப்பொழுதுமே அறிந்து வந்த அன்னா மிக்காய்லாவ்னா, கடிதம் வந்திருப்பதை அறிந்ததும் அவருடைய அறைக்கு மெதுவாகப் போனாள். அங்கே விம்மலும் சிரிப்பும் ஒருங்கே கலந்து நின்ற தோற்றத்தோடு தமது கையில் கடிதத்தை வைத்துக்கொண்டு கோமகன் இருக்கக்கண்டாள்.

தனது வாழக்கை நிலைமைகள் அபிவிருத்தி அடைந்திருந்த போதிலும், இன்னமும் ராஸ்டோவின் குடும்பத்தாருடனேயே அன்னா மிக்காய்லாவ்னா வசித்து வந்தாள்.

'என் அன்புள்ள நண்பரே' என்று பரிதாபமான கேள்வியில் அவள் பேசி, எந்த வழியிலும் அனுதாபம் காட்டுவதற்கு தயாராய் இருந்தாள்.

கோமகன் இன்னும் அதிகமாக தேம்பி அழ ஆரம்பித்தார்.

'நிக்கோலென்கா (நிக்கலஸுக்கு சுருக்கப் பெயர்)... ஒரு கடிதம்... காயம் அடைந்தான்...என்னுடைய அருமையான குமாரன்... கோமகன்... அதிகாரப் பதவிக்கு உயர்த்தப்பட்டான். கடவுளை வாழ்த்துகிறேன்.. என்னுடைய சிறிய கோமகளுக்கு எப்படி சொல்லப் போகிறேன்.'

அவருக்குப் பக்கத்தில் அன்னா மிக்காய்லரவ்னா அமர்ந்தாள். தன்னுடைய கைக்குட்டையால் அவருடைய கண்களிலிருந்தும் கடிதத்திலிருந்தும் கண்ணீரைத் துடைத்தாள். பின்னால், தன்னுடைய கண்களையும் துடைத்துக்கொண்டு, கோமகனுக்கு தேறுதல் சொல்லலுற்றாள். டின்னர் சாப்பிட்ட பின்பு, தேநீர் சாப்பிடுவதற்கு முன்பாக, அந்தச் செய்திக்கு கோமகளைத் தயார் செய்து வைத்து, தேநீருக்குப் பின்னால் கடவுளின் உதவியோடு அவளிடம் இதைச் சொல்லுவதற்கு அவள் தீர்மானித்தாள்.

டின்னர் சாப்பிடும்போது, அந்த நேரம் முழுவதும் யுத்தச் செய்திகளைப் பற்றியும், நிக்கோலென்காவைப் பற்றியும், அன்னா மிக்காய்லாவ்னா பேசிவந்தாள். அவரிடமிருந்து கடைசியாக எப்பொழுது கடிதம் வந்ததென்று இரண்டு தடவைகள் அவள் கேட்டாள். கடைசி கடிதம் எப்பொழுது வந்ததென்று அவளுக்கு ஏற்கனவே தெரியும். இருந்தாலும் அநேகமாக அன்றைய தினம் அவரிடமிருந்து கடிதம் வரலாம் என்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

ஒவ்வொரு தடவையும் அவள் இம்மாதிரி பேசியபோதெல்லாம் கோமகளுக்கு ஆவல் ஏற்பட்டு, குழப்பத்தோடு கோமகனையும் அன்னா மிக்காய்லாவ்னாவையும் பார்ப்பாள். ஆனால், அவள் மிகுந்த ஜாக்கிரதையோடு உரையாடலை உபயோகமில்லாத

விஷயங்களுக்கு திருப்பிவிடுவாள். அந்தக் குடும்பத்திலேயே நட்டாஷா ஒருத்திதான் வார்த்தைகளின் உச்சரிப்பிலோ, பார்வையிலோ, தோற்றத்திலோ ஏற்படுகிற மாறுதல்களை உணரக்கூடியவள். டின்னர் ஆரம்பத்திலிருந்து அவள் தனது காதுகளைத் தீட்டி, கூர்மையாகக் கவனித்துக்கொண்டிருந்தாள். தனது தந்தைக்கும், அன்னா மிக்காய்லாவ்னாவுக்குமிடையே ஏதோ ஒரு ரகசியம் இருக்கிறது என்பது அவளுக்கு நிச்சயமாய் தெரிந்தது. அது தனது சகோதரரைப் பற்றியது என்பதையும் அதற்காகத்தான் அன்னா மிக்காய்லாவ்னா எல்லாரையும் தயார் செய்துகொண்டு வருகிறாள் என்பதையும் அவள் ஊகித்துக்கொண்டாள். நட்டாஷா மிகவும் தைரியமானவளாயிருந்தாலும், நிக்கொலென்காவைப் பற்றிய எந்த விஷயத்திலும், தன்னுடைய தாயார் எவ்வளவு அக்கறையோடு இருப்பாள் என்பதை அறிவாள். அதனால் டின்னர் சமயத்தில் அவள் கேள்வி எதுவும் கேட்கத் துணியவில்லை. ஆனால் அவள் மிகுந்த உள்ளக் கிளர்ச்சி அடைந்திருந்தபடியால் அவளால் எதுவும் சாப்பிட முடியவில்லை. அவளுடைய வாத்திச்சி சொல்லியும் கூட, அவள் தனது நாற்காலியிலிருந்தபடியே நெளிந்து வளைந்துகொண்டிருந்ததை விடவில்லை. டின்னர் முடிந்ததும் அன்னா மிக்காய்லாவ்னாவின் பின்னால் தலைதெறிக் ஓடினாள். ஓடி, அவள்மீது மோதி, உட்காரும் அறையில் அவள் கழுத்தைக் கட்டிக்கொண்டாள்.

'எனது அன்பான சித்தியே, விஷயம் என்னவென்று எனக்குச் சொல்லு.'

'ஒன்றுமில்லை, எனது அன்பே.'

'இல்லை, அன்பானவளே, இனிப்பானவளே, தேனே, நான் விடமாட்டேன். உனக்குக் கொஞ்சம் தெரியும் என்பதை நான் அறிவேன்.'

அன்னா மிக்காய்லாவ்னா தனது தலையை ஆட்டினாள்.

'நீ ஒரு சிறிய தந்திரமான குட்டி' என்றாள் அவள்.

'நிக்கோலென்காவிடமிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது. எனக்கு அது நிச்சயமாய்த் தெரியும்' என்று நட்டாஷா கூச்சலிட்டு, அதை உறுதிப்படுத்தும் விஷயத்தை அன்னா மிக்காய்லாவ்னாவின் முகத்தில் கண்டாள்.

'ஆனால், கடவுளுக்காக ஜாக்கிரதையாய் இரு. உனது அம்மாவுக்கு அது எவ்வளவு வருத்தத்தைக் கொடுக்கும் என்பது உனக்குத் தெரியும்.'

'நான் ஜாக்கிரதையாய் இருப்பேன், நான் ஜாக்கிரதையாய் இருப்பேன். எனக்கு மட்டும் சொல்லிவிடு. நீ சொல்லமாட்டாயா? அப்படியானால் நான் போய் உடனே சொல்லிவிடுவேன்.'

கடிதத்தில் கண்ட விஷயங்களைச் சில வார்த்தைகளில் அன்னாமிக்காய்லாவ்னா சொன்னாள். ஒருவரிடமும் அவள் சொல்லக்கூடாது என்ற நிபந்தனையின் பேரிலேயே கூறினாள்.

'இல்லை, என்பேரில் சத்தியமாக' என்று நட்டாஷா சொல்லி, தனக்கு சிலுவைக்குறி காட்டினாள். 'நான் ஒருவரிடமும் சொல்ல மாட்டேன்' என்று சொல்லிவிட்டு சோனியாவிடம் உடனே ஓடினாள்.

'நிக்கோலென்கா... காயமடைந்தார்... ஒரு கடிதம் 'என்று மகிழ்ச்சியான வெற்றியோடு அவள் தெரிவித்தாள்.

'நிக்கலஸ்.' என்று ஒரு வார்த்தையைத்தான் சோனியா சொன்னாள் உடனே அவள் முகம் வெளுப்புற்றது.

தனது சகோதரர் காயமடைந்ததைப்பற்றிய செய்தி, சோனியாவிடம் எம்மாதிரி பலனைத் தோற்றுவித்தது என்பதைக் கண்ட நட்டாஷா அப்பொழுதுதான் முதல் தடவையாக அந்தச் செய்தியின் துக்ககரமான தன்மையை உணர ஆரம்பித்தாள்.

சோனியாவிடம் அவள் ஓடினாள். அவளை இறுகத் தழுவி அழ ஆரம்பித்தாள்.

'ஒரு சிறிய காயம்தான். ஆனால் அவர் ஒரு அதிகாரியாக உயர்த்தப்பட்டார். இப்பொழுது அவர் சௌக்கியமாய் இருக்கிறார். அவரே கடிதம் எழுதியிருக்கிறார்' என்று அவள் தன் கண்ணீர்களுக்கிடையில் கூறினாள்.

'இங்கே பார். நீங்கள், பெண்கள் எல்லாரும் அழுகிற குழந்தைகள் என்பது உண்மை' என்று பெட்டியா கூறிவிட்டு அந்த அறையிலேயே உறுதியான நடைகளோடு உலாவிக் கொண்டிருந்தான். 'என்னுடைய சகோதரர் பெருமை அடையும்படி நடந்து கொண்டதற்காக நான் நிரம்ப மகிழ்ச்சி அடைகிறேன். நிரம்ப மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் எல்லாரும் வெறும் உளர்வாய்கள். உங்களுக்கு ஒன்றுமே புரியாது.'

நட்டாஷா கண்ணீர்களுக்கிடையே இளநகை கொண்டாள்.

'நீ அந்தக் கடிதத்தைப் படிக்கவில்லையா?' என்று சோனியா கேட்டாள்.

'இல்லை, அதெல்லாம் முடிந்துவிட்டதென்றும், இப்பொழுது அவர் ஒரு அதிகாரியாய் விட்டாரென்றும் அவள் சொன்னாளே.'

'கடவுளுக்கு நன்றி' என்று சோனியா கூறி, தனக்கு சிலுவைக்குறி காட்டினாள். ஒருவேளை அவள் உன்னை ஏமாற்றியிருக்கலாம் நாம் அம்மாவிடம் போவோம்.

பெட்டியா மௌனமாக அறையில் சிறிது நேரம் உலாவிக் கொண்டிருந்தான்.

'நிக்கோலென்காவின் ஸ்தானத்தில் நான் இருந்திருந்தால், இன்னும் அதிகமான பிரஞ்சுக்காரர்களைக் கொன்றிருப்பேன். அவர்கள் என்ன ஆபாசமான மிருகங்கள். மலைபோல குவியும்படி அவ்வளவு அதிகமாக நான் கொன்றிருப்பேன்.''

'உன் நாக்கை அடக்கு, பெட்டியா. எப்பேர்ப்பட்ட மடையனாக நீ இருக்கிறாய்!'

'நான் மடையன் அல்ல. அற்ப விஷயங்களுக்கு யார் அழுகிறார்களோ, அவர்கள்தான் மடையர்கள் என்றான் பெட்டியா.

'உனக்கு அவரை ஞாபகம் இருக்கிறதா?' என்று ஒரு வினாடி மௌனத்திற்குப் பின்னால் திடீரென்று நட்டாஷா கேட்டாள்.

சோனியா குறுநகை கொண்டாள்.

'நிக்கலஸை எனக்கு ஞாபகம் இருக்கிறதா, என்றா கேட்கிறாய்?'

'இல்லை, சோனியா. உனக்கு அவரை நன்றாக, ஒவ்வொரு விஷயத்தையும் நினைவுகூறும்படி அவ்வளவு நன்றாக ஞாபகம் இருக்கிறதா? என்று தனது வார்த்தைகளுக்கு நிச்சயமான ஒரு அர்த்தம் கொடுக்கிற மாதிரி, ஒரு விசேஷமான கை ஜாடை காட்டி நட்டாஷா கேட்டாள்.' எனக்கு நிக்கோலென்காவை ஞாபகம் இருக்கிறது. நன்றாக ஞாபகம் இருக்கிறது. ஆனால், போரிஸை எனக்கு ஞாபகம் இல்லை. அவரைப் பற்றி கொஞ்சம்கூட ஞாபகம் இல்லை.'

'என்ன! போரிஸை உனக்கு ஞாபகம் இல்லையா? என்று ஆச்சரியத்தோடு சோனியா கேட்டாள்.

'எனக்கு ஞாபகம் இல்லை என்பதல்ல. அவர் தோற்றம் எப்படிப்பட்டது என்பது எனக்குத் தெரியும் ஆனால் நிக்கோலென்காவை நான் நினைவு கூர்வதுபோல அவரைப்பற்றி நினைவு கூற முடியவில்லை அவரைப்பற்றி- நான் கண்களை மூடிக்கொண்டால்கூட நினைவுக்கு வருகிறது. ஆனால் போரிஸ் - இல்லை. (அவள் கண்களை மூடுகிறாள்) இல்லை, அங்கே ஒன்றுமே தெரியவில்லை.'

'ஓ, நட்டாஷா என்று இன்பவெள்ளத்தில் மூழ்கியவளைப்போல ஆர்வத்தோடு அவளுடைய தோழியை சோனியா பார்த்துச்

சொன்னாள். தான் சொல்லப்போகும் விஷயங்களைக் கேட்பதற்கு அவள் தகுதியில்லாதவள் என்று நினைப்பதைப்போல அவளுடைய பார்வை இருந்தது. தான் வேறு யாரோ ஒருவரிடம் சொல்லுவதைப் போலவும் கேலிப் பேச்சு என்பதற்கு அங்கு இடம் இல்லாதது போலவும், அவளுடைய பார்வை சொல்லியது. அவள் கூறினாள்: 'உன்னுடைய சகோதரருடன் நான் எப்பொழுதுமே காதல் கொண்டிருக்கிறேன். அவருக்கு என்ன நேர்ந்தாலும் சரி, அல்லது எனக்கு என்ன நேர்ந்தாலும் சரி, நான் உயிருள்ள வரையில் அவரைக் காதலிப்பதை விடமாட்டேன்.'

நட்டாஷா சோனியாவை ஆச்சரியத்தோடும் ஆவலோடும் பார்த்தாள். ஆனால் ஒன்றும் சொல்லவில்லை. சோனியா உண்மையைத்தான் பேசுகிறாள் என்பதையும், சோனியா சொல்லுகிற மாதிரி ஒரு காதல் இருக்கிறது என்பதையும் அவள் உணர்ந்தாள். ஆனால் அம்மாதிரியான காதல் உணர்ச்சியை இதுவரை நட்டாஷா அனுபவிக்கவில்லை. அம்மாதிரி இருக்கக்கூடும் என்று அவள் நம்பினாள். ஆனால் அவளால் உணர முடியவில்லை.

'நீ அவருக்கு எழுதுவாயா?' என்று கேட்டாள்.

சோனியா சிந்தனையில் இறங்கினாள். நிக்கலஸுக்கு எப்படி எழுதுவது தான் எழுத வேண்டுமா? என்ற கேள்விகள் அவளை வாட்டின. இப்பொழுது அவர் ஒரு அதிகாரியாவும், ஒரு காயமடைந்த வீரராகவும் ஆய்விட்டார். இச்சமயத்தில் தன்னைப்பற்றி அவருக்கு நினைவூட்டுவது தன்னிடம் அவர் கொடுத்த வாக்குறுதி அவருக்கு நினைவூட்டுவதுபோலத் தோன்றுமல்லவா என்று நினைத்தாள்.

'எனக்குத் தெரியாது. அவர் எழுதினால் நானும் எழுதுவேன்' என்று நாணி முகம் சிவந்து கூறினாள்.

'அவருக்கு எழுதுவதற்கு நீ வெட்கப்படவில்லையா?'

சோனியா புன்முறுவல் கொண்டாள்.

'இல்லை'

'போரிஸுக்கு எழுதுவதற்கு நான் வெட்கப்படுவேன். நான் எழுதப்போவதில்லை.'

'நீ எதற்காக வெட்கப்படவேண்டும்?'

'நல்லது, எனக்குத் தெரியாது. அது தர்மசங்கடமாய் இருக்கிற படியால், நான் வெட்கம் அடையும்படி செய்துவிடும்.'

'அவள் எதற்காக வெட்கமடைகிறாள் என்பது எனக்குத் தெரியும்' என்று பெட்டியா கூறினான். முன்னால் நட்டாஷா

சொல்லிய வார்த்தைகள் அவனுக்கு வருத்தமாய் இருந்தன. 'ஏனென்றால், கண்ணாடி போட்டுக்கொண்டிருந்த அந்த பருமனாய் இருந்தவரிடம்தான் அவள் காதல் கொண்டிருந்தாள். (தன்னுடைய பெயர் உடையவரான புதிய கோமகன் பெஜுூகாவை அம்மாதிரிதான் பெட்டியா வர்ணிப்பது வழக்கம்) இப்பொழுது அவள் அந்த பாட்டுக்காரன் மீது காதல் கொண்டுவிட்டாள்: (நட்டாஷாவுக்கு பாட்டு சொல்லிக் கொடுக்கும் இத்தாலிய சங்கீத வாத்தியாரை குறிப்பிடுகிறான்) அதனால்தான் அவள் கடிதம் எழுத வெட்கமடைகிறாள்'.

'பெட்டியா, நீ ஒரு முட்டாள்' என்றாள் நட்டாஷா.

'உன்னைவிட அதிகமான முட்டாள் இல்லை. மங்கையே' என்று ஒன்பது வயதான அந்தப் பெட்டியா ஒரு பெரிய தளபதியைப் போன்ற பாவனையோடு சொன்னான்.

டின்னர் சாப்பிடும்போது அன்னா மிக்காய்லாவ்னா அங்கங்கே ஜாடையாக சொல்லிய பேச்சுகளினால் கோமகளைத் தயார் செய்து விட்டாள். அவள் தன்னுடைய அறைக்குப்போய் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து தனது பொடி டப்பி மூடியில் இருந்த குமாரனின் படத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய கண்களில் நீர் நிறைந்திருந்தது. கடிதத்தை எடுத்துக்கொண்டு அன்னா மிக்காய்லாவ்னா மெதுவாக கோமகள் இருந்த அறையின் கதவிற்குப் பக்கத்தில் வந்து சிறிது நின்றாள்.

'நீர் உள்ளே வரவேண்டாம்' என்று அவள் தன்னைப் பின்பற்றி வந்த வயோதிக கோமகனிடம் சொன்னாள். நீர் பின்னால் வரலாம் என்று அவள் சொல்லிவிட்டு உள்ளே போய் கதவைச் சாத்திக் கொண்டாள்.

கதவிலிருந்த திறவுகோலின் துவாரத்தில் காதை வைத்து கோமகன் கேட்டுக்கொண்டிருந்தார்.

முதலில் அவருக்கு ஏதேதோ விஷயங்களைப் பற்றி பேசிய குரல்கள் கேட்டன. பின்னால் அன்னா மிக்காய்லாவ்னா ஒரு நீளமான பேச்சு பேசுவது கேட்டது. பின்னால் ஒரு அழுகைக் குரல் கேட்டது. அப்புறம் அமைதி. அதன் பின்பு இருவரும் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். பின்னால், காலடி ஓசைகள் கேட்டன. அன்னா மிக்காய்லாவ்னா கதவைத் திறந்தாள். ஒரு கஷ்டமான சத்திர சிகிச்சை செய்து முடித்து அதை மற்றவர்கள் சிலாக்கிக்கும்படி எதிர்பார்க்கும் ஒரு சர்ஜனைப்போல அவளுடைய முகம் பெருமைத் தோற்றம் கொண்டிருந்தது.

'அது முடிந்துவிட்டது' என்று அவள் வெற்றி மகிழ்ச்சியோடு கோமகளைச் சுற்றிக்காட்டி கோமகனிடம் கூறினாள். அவள் ஒரு

கையில் மகனின் படத்தைக்கொண்ட பொடி டப்பியையும், மற்றொரு கையில் கடிதத்தையும் வைத்துக்கொண்டு, அவற்றை மாறி மாறி முத்தமிட்டுக்கொண்டிருந்தாள்.

அவள் கோமகனைப் பார்த்ததும் தனது கைகளை நீட்டி, அவருடைய வழுக்கைத் தலையை வளைத்து அதற்கு மேலாக, மீண்டும் அந்தக் கடிதத்தையும் படத்தையும் பார்த்து அவற்றை மறுபடியும் முத்தமிடுவதற்கதாக அந்த வழுக்கைத் தலையை லேசாக பின்னால் தள்ளினாள். வெரா, நட்டஷா, சோனியா, பெட்டியா ஆகியவர்கள் அறைக்குள் நுழைந்து, கடிதத்தை வாசிக்க ஆரம்பித்தார்கள் அந்தக்கடிதத்தில் அவர் கலந்துகொண்ட போராட்டத்தைப்பற்றியும் இரண்டு சண்டைகளைப்பற்றியும் சுருக்கமாகக் குறிக்கப்பட்டிருந்தது. அவருடைய பதவி உயர்வைக் குறிப்பிட்டு நிக்கலஸ் தனது தந்தையுடையவும் தாய் உடையவும் கைகளை முத்தமிடுவதாகவும் அவர்கள் தமக்கு ஆசீர்வாதம் அளிக்கவேண்டுமென்றும் வெரா நட்டாஷா, பெட்டியா ஆகியவர்களுக்கும் முத்தம் கொடுப்பதாகவும் எழுதியிருந்தார். அதைத் தவிர திருவாளர் ஷெல்லிங்கிற்கும் தமது வயோதிக தாதியான திருமதி ஷாஸ்ஸூக்கும் தமது வந்தனங்களை அனுப்புவதாகவும் தமக்காக 'அருமை சோனியாவை, தாம் காதலிக்கும் சோனியாவை, எப்பொழுதும் போலவே அவள் நினைப்பாகவே இருந்துவரும் அந்த சோனியா எப்பொழுதும் போலவே அவள் நினைப்பாகவே இருந்துவரும் அந்த சோனியாவை முத்தமிடுமாறு' கேட்டுக்கொண்டிருந்தார். இதைக் கேட்டதும், சோனியாவின் முகம் நாணிச் சிவந்தது. கண்களில் நீர் நிறைந்து நின்றது. தன் மீது மற்றவர்கள் செலுத்தும் பார்வையை அவளால் தாங்க முடியவில்லை. நடன அறைக்கு வேகமாய் ஓடி அதை முழு வெகு வேகத்துடன் சுற்றி வந்தாள். அவள் ஓடிய வேகத்தில் அவளுடைய உடை பலூன் மாதிரி துருத்தி நிற்க திடீரென்று தரையில் உட்கார்ந்தாள். அவளுண்டைய முகம் சிவந்திருந்தது. புன்முறுவல் படர்ந்திருந்தது. கோமகள் அழுதுகொண்டிருந்தாள்.

'ஏன் நீ அழுகிறாய் அம்மா?' என்று வெரா கேட்டாள். 'அவர் எழுதியிருப்பதையெல்லாம் படித்தால், சந்தோஷப்பட வேண்டுமேயொழிய, அழுவதற்கு இடமில்லையே.'

அது முற்றிலும் உண்மை. ஆனால் கோமகனும், கோமகளும், நட்டாஷாவும் அவளைக் கண்டிப்பதுபோல் பார்த்தார்கள். 'அவள் யார் மாதிரி இருக்கிறாள்?, என்று கோமகள் சிந்தித்தாள்.

நிக்கலஸின் கடிதத்தை 100 தடவைகள் படித்துப் பார்த்து, அந்தக் கடிதத்தை படிக்கக் கேட்பதற்கு ஆசை கொண்ட மற்றவர்கள் கோமகளிடம் வந்தார்கள். ஏனெனில், அந்தக் கடிதத்தை தன் கையிலிருந்து வேறு யாரிடமும் அவள் விடவில்லை. வாத்தியார்கள் வந்தார்கள். தாதிகள் வந்தார்கள். டிமிட்ரியும் மற்றும் பழக்கமானவர்களும் வந்தார்கள். ஒவ்வொரு தடவையிலும் அந்தக் கடிதத்தை புதிய மகிழ்ச்சிகொண்டு கோமகள் வாசித்துக் காட்டினாள். ஒவ்வொரு தடவையிலும் அவள் வாசிக்கும்போது, நிக்கோலென்காவின் நற்குணங்களுக்கு புதிய ஆதரவு கிடைத்தது போல அவளுக்குத் தோன்றியது. எவ்வளவு ஆச்சர்யமானது. எவ்வளவு அசாதாரணமானது. எவ்வளவு மகிழ்ச்சியானது. 20 வருடங்களுக்கு முன்னால், அவளுடைய வயிற்றுக்குள் தனது சிறிய கால்களையும் கைகளையும் அசைப்பது கூட நன்றாகத் தெரியாமல் கிடந்த அந்த மகன் கோமகன் அதிகமாய் செல்லங்கொடுத்து வந்ததற்காக அவள் கண்டித்து வந்த அந்த மகன், கோமகனோடு பல தடவைகளில் அவள் சண்டை போடக் காரணமாயிருந்த அந்த மகன், முதலில் பீயர் என்று சொல்வதற்கும் பின்னால் கிரானி என்று சொல்லுவதற்கும் பேசப் பழகிய அந்த மகன், அப்பேர்ப்பட்ட 'அவன் இன்று ஒரு வெளிநாட்டில் தனக்கு அறிமுகம் இல்லாத சூழ்நிலைகளில் ஆண் தன்மை கொண்ட ஒரு சிப்பாயாக, எவருடைய புத்திமதியோ உதவியோ இல்லாமல் ஆண் மகன் செய்ய வேண்டிய வேலையைச் செய்து வருவது' அவளுக்கு பெரிய ஆச்சரியமாய் இருந்தது. குழந்தைகள் தொட்டிலிலிருந்து தான் வளர்வது தெரியாமல் மனிதர்களாய் வளருகிறார்கள் என்ற சர்வலோக உண்மை அந்தக் கோமகளுக்கு அச்சமயம் தெரிந்ததாய் தோன்றவில்லை. அவளுடைய குமாரனின் இன்றைய வளர்ச்சிக்கான ஒவ்வொரு படியிலும் அசாதாரணமாக வளர்ந்து வந்ததாக அவளுக்குத் தோன்றியது. அதேமாதிரி கோடிக்கணக்கான பேர்கள் வளர்ந்துதான் வருகிறார்கள் என்பதை அவள் அறிய முடியவில்லை. இருபது வருடங்களுக்கு முன்னால், அவளுடைய இருதயத்திற்கு அடியில் எங்கோ கிடந்த அந்த சிறிய குஞ்சு எப்பொழுதாவது அழும் என்றோ , அவளுடைய மார்பில் பால் குடிக்கும் என்றோ அல்லது பேச ஆரம்பிக்கும் என்றோ நினைப்பது அசாத்தியமாய் இருந்தது. அதே மாதரி அந்தச் சிறிய குஞ்சு, இன்று இவ்வளவு பலமான, இவ்வளவு தைரியமான ஒரு எடுத்துக்காட்டு மகனாகவும் அதிகாரியாகவும் விளங்குகிறது என்பதை அவளால் நம்பமுடியவில்லை.

'எப்பேர்ப்பட்ட மோஸ்தர், எவ்வளவு மனோகரமாய் அவன் வர்ணிக்கிறான்' என்று அவள் அந்தக் கடிதத்தின் வர்ணனை பாகத்தைப் படித்துக்கொண்டு சொன்னாள். 'எப்பேர்ப்பட்ட குணம், அவனைப்பற்றி ஒரு வார்த்தைகூட சொல்லவில்லை!... யாரோ டெனை சாவைப்பற்றியும் வேறு ஆட்களைப்பற்றியும் அவன் எழுதினாலும் அவர்கள் எல்லாரையும்விட அவன்தான் வீரமானவன் என்பதை நான் நிச்சயமாய் சொல்வேன். தன்னுடைய கஷ்டங்களைப்பற்றி அவன் எதுவும் சொல்லவில்லை. எப்பேர்ப்பட்ட இருதயம்! அவனைப் போல் தான் அதுவும் இருக்கிறது. ஒவ்வொருவரையும் அவன் என்னமாதிரி ஞாபகத்தில் வைத்திருக்கிறான். ஒருவரைக்கூட மறக்கவில்லை. அவன் இவ்வளவு உயரமாய் இருக்கும்போதே நான் எப்பொழுதும் சொல்லி வந்ததுண்டு. நான் எப்பொழுதும் சொல்லிவந்ததுண்டு...'

வீட்டில் உள்ளவர்கள் எல்லாரும் ஒரு வார காலமாக நிக்கலஸுக்கு கடிதங்கள் தயாரிக்க ஆரம்பித்தார்கள். முதலில் நகல்கள் தயாரித்தார்கள். பின்னால், அசல் கடிதங்களைத் தயாரித்து முடித்தார்கள். கோமகளின் மேற் பார்வையிலும், கோமகனின் உதவியினாலும் புதிய பதவிக்கு வேண்டிய சீருடைகளையும் மற்ற உபகரணங்களையும் பணத்தையும் தயாரித்து முடித்தாள். காரியக்காரியான அன்னா மிக்காய்லாவ்னா சில ராணுவ அதிகாரிகளின் தயவைக் கொண்டு தனது குமாரனுடன் கடிதப்போக்குவரத்து வைத்துக் கொள்ளுவதற்கு அனுகூலமான வழிகளை அமைத்திருந்தாள். அவளுடைய கடிதங்களைக் காப்பாளர் படையின் தளபதியான கிராண்ட் ட்யூக் கான்ஸ்டன்டைன் பாவ்லாவிச்சுக்கு அனுப்புவதற்கு சந்தர்ப்பங்கள் கிடைத்தன. 'வெளிநாட்டிலுள்ள ருஷ்ய காப்பாளர் படை என்ற விலாசம் போதுமானது என்று ராஸ்டோவ்கள் நினைத்தார்கள். அந்த காப்பாளர் படையின் தளபதியான கிராண்ட்ட்யூக்கிற்கு ஒரு கடிதம் போய்ச் சேரமுடியுமானால், பாவ்லாகிராட் பட்டளத்திற்கு ஏன் ஒரு கடிதம் போய்ச் சேர முடியாது என்றும், அந்தப் படை முந்தியதின் பக்கத்தில்தான் எங்காவது இருக்குமென்றும் நினைத்தார்கள். ஆகவே கடிதங்களையும் பணத்தையும் கிராண்ட் ட்யூக்கின் தூதர் மூலமாக போரிஸுக்கு அனுப்புவதென்றும் அவற்றை போரிஸ் அங்கிருந்து நிக்கலஸுக்கு அனுப்புவதென்றும் தீர்மானம் செய்தார்கள். வயோதிகக் கோமகன், கோமகள், பெட்டியா, வெரா, நட்டாஷா, சோனியா ஆகியவர்கள் எழுதிய கடிதங்களையும், அவருடைய உபகரணங்களுக்காக ஆறாயிரம் ரூபிள்களையும் வேறு பலவிதமான சாமான்களையும் கோமகன் தமது குமாரனுக்கு அனுப்பிவைத்தார்.

# 3

## 7

நவம்பர் 12-ம்தேதி குட்டுஜோவின் யுத்தகள ராணுவம் ஆல்முட்ஜ் என்ற இடத்திற்கு முன்பாக முகாம் போட்டிருந்தது. அடுத்த நாள் ருஷ்ய சக்கரவர்த்தியும், ஆஸ்திரிய சக்கரவர்த்தியும் பார்வையிடுவதற்காக அந்த ராணுவம் தயார் செய்து கொண்டிருந்தது. ருஷ்யாவிலிருந்து அப்போதுதான் வந்த காப்பாளர் படையினர் ஆல்முட்ஜ் என்ற இடத்திலிருந்து பத்து மைல் தூரத்தில் இரவில் தங்கினார்கள். மறுநாள் காலையில் நேராக அணிவகுப்புப் பார்வையிடலில் கலந்துகொள்வதற்கு ஆல்முட்ஜுக்கு காலை 10 மணிக்கு வந்து சேர வேண்டுமென்பது ஏற்பாடு.

அதே தினத்தில் போரிஸிடமிருந்து நிக்கலஸ் ராஸ்டோவுக்கு ஒரு கடிதம் வந்தது. ஆல்முட்ஜ் என்ற இடத்திலிருந்து 10 டைல் தூரத்தில் இஸ்மாய்லாவ் பட்டாளம் இரவில் தங்கி முகாம் போட்டிருப்பதாக அந்தக் கடித்தில் காணப்பட்டது. அவரைத் தாம் பார்க்க வேண்டுமென்றும் அவருக்காக ஒரு கடிதமும் கொஞ்சம் பணமும் தமக்கு வந்தது என்றும் அதில் எழுதியிருந்தார். ராஸ்டோவுக்கு பணம் அவசியமாய் தேவையாயிருந்தது. போராட்டத்திலிருந்து திரும்பி ஆல்முட்ஜுக்கு பக்கத்தில் ராணுவம் போட்டிருக்கிற முகாமில் இப்போது ஏராளமான கடைகள் விதவிதமான சாமான்களோடு காணப்பட்டன. ஆஸ்திரிய யூதர்கள் பலவிதமான மனம் கவரும் சரக்குகளை விற்று வந்தார்கள். போராட்டத்திற்குப் பின்னால் அவர்களுக்குக் கிடைத்த வெகுமதிகளைக்கொண்டு விருந்திற்குமேல் விருந்தாக பாவ்லாகிராட் துருப்புகள் நடத்தி வந்தார்கள். ஆல்முட்ஜில் ஹங்கேரியின் வாசியான காரோலைன் என்பவள் சமீபத்தில் ஒரு சிற்றுண்டிச்சாலையை ஆரம்பித்திருந்தாள். அங்கே பரிமாறுகிறவர்கள் எல்லோருமே இளம் பெண்கள். அந்த சிற்றுண்டிச் சாலைக்கு துருப்புகளில் பலர் அடிக்கடி படையெடுத்துக் கொண்டிருந்தார்கள். அப்போதுதான் மேல் பதிவிக்கு உயர்தப்பட்ட ராஸ்டோவ் அந்தப் பதவி உயர்வுக்காகக் கொண்டாட்டங்களை நடத்திக் கொண்டிருந்தார். டெனைசாவின் குதிரையான ‘பெடூயினை’ அவர் விலைக்கு வாங்கினார். தவிர தம்மைச் சுற்றிலும் தமது தோழர்களிடத்திலும் கடைக்காரர்களிடத்திலும் அவர் கடன் பட்டிருந்தார். போரிஸின் கடிதம் கிடைத்ததும் ஒரு சக அதிகாரியோடு ஆல்முட்ஜுக்கு அவர் சவாரி போனார். அங்கே டின்னர் அருந்தி ஒரு புட்டி ஒயினையும் அருந்தி அதன் பின்னால் தனிமையாகத் தமது பழைய நண்பரைத் தேடிப்

பிடிப்பதற்காக காப்பாளர்களின் முகாமிற்குப் போனார். ராஸ்டோவுக்கு இன்னும் அவருடைய சீருடையை வாங்குவதற்கு அவகாசம் இல்லை. ஒரு தொண்டரின் கேவலமான கோட்டை அணிந்துகொண்டிருந்தார். அதில் ஒரு சிப்பாயின் சிலுவைப் பதக்கம் காணப்பட்டது. அதே மாதிரி ஒரு தொண்டரின் கிழிந்த சவாரிக் கால் சட்டையையும் அணிந்துகொண்டிருந்தார். அதிலிருந்த தோலெல்லாம் கிழிந்து போயிருந்தது. ஒரு அதிகாரிக்குள்ள பட்டாக்கத்தியை அணிந்துகொண்டிருந்தார். அவர் அச்சமயம் சவாரி செய்துவந்த குதிரையை போராட்டக் காலத்தில் ஒரு கோசாக்கிடமிருந்து விலைக்கு வாங்கினார். ஒரு குதிரை வீரரின் கசங்கிப் போன தொப்பியை திருப்தியோடு தலையில் ஒரு பக்கம் சாய்த்து வைத்துக்கொண்டிருந்தார். அந்த முகாமிற்கு அவர் சவாரி போகும்போது தம்முடைய காட்சியைப் பற்றிப் போரிஸும் அவருடைய காப்பாளர் படையைச் சேர்ந்த நண்பர்களும் என்ன நினைப்பார்கள் என்று சிந்தித்துக்கொண்டு போனார். ஏதாவது போர் முனையில் குண்டு மழைக்குக் கீழாக யுத்தம் செய்து கொண்டிருக்கும் ஒரு குதிரை வீரன் மாதிரி இருக்கிறதே என்று நினைப்பார்கள்.

காப்பாளர் படையினர் அவர்களுடைய முழு பிரயாணத்தையும் உல்லாச யாத்திரை மாதிரியே கழித்து தங்களுடைய சுத்தமான உடைகளையும் கட்டுப்பாட்டையும் காட்டி வந்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் பிரயாணத்தைச் செய்து முடித்தார்கள். அவர்களுடைய மூட்டைகளை வண்டிகளில் அனுப்பினார்கள். ஒவ்வொரு தங்குமிடத்திலும் அந்தப் படையைச் சேர்ந்த அதிகாரிகளுக்கு ஆஸ்திரிய அதிகாரிகள் மிக உயர்ந்த டின்னர்களுக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்தப் பட்டாளங்கள் ஒவ்வொரு ஊருக்குள்ளும் நுழையும்போதும் அதை விட்டு வெளியே போகும் போதும் பாண்டு வாத்யம் முழங்கினார்கள். அவர்களுக்கு என்று தனியான ஒரு நடையைப் பழக்கி வைத்திருந்தார்கள். அந்த நடையில் அந்தக் காப்பாளர்களுக்கு மிகுந்த பெருமையுண்டு. கிராண்ட் டியூக்கின் உத்தரவுப்படி அதே நடையில் அவர்களுடைய முழு பிரயாணத்திலும் நடந்து வந்தார்கள். அதிகாரிகளும் தங்கள் தங்கள் ஸ்தானங்களில் நடந்தே வந்தார்கள். பெர்க் என்பவர் ஒரு கம்பெனியின் காமண்டர். அவருடைய முகாமில் போரிஸ் தங்கி வந்தார். கடந்த போராட்டத்தில்தான் பெர்க்கிற்கு கேப்டன் பதிவி கிடைத்தது. துரிதமாகவும் குறிப்பாவும் அவர் நடந்துகொண்டபடியாலும் அவருடைய பண விவகாரங்களில் மிகுந்த திருப்திகரமாய்

இருந்தபடியாலும் மேலதிகாரிகளுக்கு அவர் மீது நம்பிக்கை ஏற்பட்டது. கடந்த போராட்டத்தில் போரிஸ் பல பேர்களோடு பழக்கம் கொண்டார். அவர்கள் பின்னால் அவருக்கு உபயோகமாய் இருக்கலாம். பீயரிடமிருந்து அவர் கொண்டுவந்த ஒரு சிபாரிசு கடிதத்தினால் இளவரசர் ஆண்ட்ரூ பால்கோன்ஸ்கியிடம் அவருக்குப் பழக்கம் ஏற்பட்டது. அவர் உதவியைக் கொண்டு சேனாதிபதியின் பரிவாரத்தில் தமக்கு ஒரு ஸ்தானம் கிடைக்கு மென்று அவர் நம்பினார். பெர்க்கும் போரிஸூம் நேற்றைப் பிரயாணத்திற்குப்பின்னால் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார்கள். சுத்தமாகவும் அழகாகவும் உடையணிந்து சுத்தமான விடுதியில் ஒரு வட்ட மேஜையை சுற்றி உட்கார்ந்து கொண்டு சதுரங்கம் ஆடிக் கொண்டிருந்தார்கள். தமது முழங்காலுக்கிடையில் பெர்க் ஒரு சுங்கானை வைத்துக் கொண்டிருந்தார். போரிஸ் தமது சுபாவப்படி ஜாக்கிரதையாக சதுரங்கக் காய்களைக் கொண்டு தமது மெல்லிய வெள்ளை விரல்களால் ஒரு சிறிய கோபுரம் வைத்துக் கொண்டிருந் தார். காய்களைப் பெர்க் நகர்த்துவதற்காகக் காத்துக்கொண்டு அவருடைய தோழரின் முகத்தைக் கவனித்து வந்தார். ஒரு வேளை அந்த விளையாட்டைப் பற்றி அவர் யோசித்துக் கொண்டிருக் கலாம். ஏனெனில் எந்த வேலையில் அவர் ஈடுபடுகிறாரோ அது ஒன்றைப் பற்றியே அவர் சிந்திப்பது எப்போதும் வழக்கம்.

'நல்லது அதிலிருந்து நீர் எப்படி வெளியே வரப் போகிறீர்?' என்று அவர் கேட்டார்.

'நாம் முயற்சி செய்து பார்ப்போம் ' என்று பெர்க் பதில் கூறி ஒரு காயைத் தொட்டார். பின்னால் அதிலிருந்து தம் கையை எடுத்துக்கொண்டார். அச் சமயம் கதவு திறந்தது. 'கடைசியாக இங்கே இருக்கிறார்' என்று ராஸ்டோவ் கூச்சலிட்டார். 'பெர்க்கும் கூட இருக்கிறார்'. ''ஓ குழந்தைகளே நீங்கள் படுக்கைக்குப் போய் தூங்கவில்லையோ'' என்ற ருஷ்ய தாதியின் பழமொழியைக் கூறினார். இதைக் கேட்டு அவரும் போரிஸூம் முன்பெல்லாம் சிரிப்பது வழக்கம்.

'அடா..டா...டா... நீர் எவ்வளவு மாறிவிட்டீர்'.

ராஸ்டோவைச் சந்திப்பதற்காக போரிஸ் எழுந்தார். அப்படி எழுந்திருக்கும்போது அந்த கீழே விழுந்த காய்களைச் சரியாக வைத்துவிட்டே எழுந்தார். தமது நண்பரை ஆலிங்கனம் செய்யப் போகும்போது நிக்கலஸ் அவரிடமிருந்து விலகினார்.

இளமைக்கு ஒரு தனிப்பட்ட உணர்ச்சியுண்டு .எல்லோரும் செய்துகொண்டிருக்கிற வழிகளைப் பார்த்து அதற்குக் கொஞ்சம்

கூட பிடிக்காது. வயதானவர்கள் செய்யும் (அநேகமாய் அவை சிரத்தயற்றவையாகவே இருக்கும்) நடவடிக்கைகளை விட்டு வேறுமாதிரியான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டு மென்றே தோன்றும். தமது நண்பரை சந்தித்தவுடன் ஏதோ விசேஷமான ஒன்றைச் செய்ய வேண்டுமென்று நிக்கலஸ் விரும்பினார்.

அவரைக் கிள்ள வேண்டுமென்றும் தள்ள வேண்டுமென்றும் நினைத்தாரேயொழிய எல்லோரும் செய்வதைப் போல முத்தமிடுவதை அவர் விரும்பவில்லை. என்றாலும் ஒரு அமைதியான நட்பான முறையில் போரிஸ் அவரை ஆலிங்கனம் செய்து மூன்று தடவைகள் முத்தமிட்டார்.

அநேகமாய் அரை வருஷ காலமாக அவர்கள் சந்திக்கவில்லை. இருவருக்கும் ஒரே வயது. வாழ்க்கையில் முதல் படியை வாலிபர்கள் கடக்கும்போது மற்றவர்களிடம் ஒரு பெரிய மாறுதல்கள் ஏற்பட்டிருப்பது போலக் காணப்பட்டார்கள். இருவரும் வெகு தூரம் மாறியிருந்தார்கள். அவர்கள் கடைசியாகச் சந்தித்ததற்குப் பின்னால் இதுவரை அவர்களிடம் ஏற்பட்டுள்ள மாறுதல்களைப் பற்றி சொல்வதற்கு இருவரும் துடி துடித்துக்கொண்டிருந்தார்கள்.

‘ஓ நாசமாய் போகிற அலங்காரப் பிரியர்களே எங்கேயோ வரவேற்பு வைபவத்திற்குப் போய் வந்து விட்டமாதிரி இவ்வளவு சுத்தமாகவும், இவ்வளவு உற்சாகமாகவும் இருக்கிறீர்களே. போர் முனையில் கிடக்கும் பாவிகளாகிய எங்களைப் போலல்ல’ என்று ராஸ்டோவ் கத்தினார். போரிஸுக்குப் புதிதாய் காணப்பட்ட ராணுவ சௌடாபோடும் சீச்சுக் குரலோடும் ராஸ்டோவ் கூச்சலிட்டு சகதிகள் நிறைந்த தமது கால் சட்டைகளைக் காட்டினார். ராஸ்டோவின் பலமான குரலைக் கேட்டு வீட்டுக்காரியான ஒரு அழகிய ஜெர்மன் பெண் வாசல் வழியாகத் தலையை நீட்டினாள்.

‘ஏ, அவள் அழகாய் இருக்கிறாள் அல்லவா?’ என்று கண் சிமிட்டலோடு கேட்டார்.

‘நீர் ஏன் இப்படிக் கத்துகிறீர்? அவர்கள் பயந்து போவார்கள்’ என்று போரிஸ் கூறினார். ‘இன்று நான் உம்மை எதிர்பார்க்க வில்லை. குட்டுஜோவின் உதவியாளர்களில் ஒருவரான பால்கோன்ஸ்கி மூலமாக அந்தக் குறிப்பை உமக்கு நேற்று அனுப்பினேன். அவர் என்னுடைய நண்பர். இவ்வளவு சீக்கிரமாக உமக்கு அந்தக் குறிப்பைச் சேர்த்து விடுவாரென்று நான் நினைக்கவில்லை... நல்லது. நீர் எப்படியிருக்கிறீர்? யுத்தகளத்திற்கு அதற்குள்ளாகப் போனீரா?, என்று போரிஸ் கேட்டார்.

தமது சட்டையில் தொங்கிக்கொண்டிருந்த ஸெயிண்ட் ஜார்ஜ் சிலுவைப் பதக்கத்தை ராஸ்டோவ் குறித்துக் காட்டினார்: பதில் சொல்லவில்லை. கட்டுப் போட்டிருந்த தமது கையையும் சுட்டிக்காட்டினார். பின்னால் புன்னகையோடு பெர்க்கை நோக்கினார்.

'நீர் பார்க்கிறபடிதான்' என்றார் அவர்.

'நிச்சயமாகவா? ஆமாம்' என்றார் போரிஸ் புன்னகையோ. 'எங்களுடைய பிரயாணம் மிகுந்த சிலாக்கியமாய் இருந்தது. எங்களுடைய பட்டாளத்தோடு மேன்மை தங்கிய இளவரசரும் வந்துகொண்டிருந்தார் என்பது உமக்குத் தெரியும். ஆகவே, எங்களுக்கு சகலவிதமான செளகரியங்களும் கிடைத்தன. போலந்தில் எப்பேர்ப்பட்ட வரவேற்புகள் தெரியுமா? எப்பேர்ப் பட்ட டின்னர். எப்பேர்ப்பட்ட நடனங்கள். இவற்றையெல்லாம் என்னால் சொல்லக்கூடமுடியவில்லை. அந்த ஜாரேவிச் (பட்டத்து இளவரசர்) எங்கள் எல்லா அதிகாரிகளிடமும் மிகுந்த கருணை காட்டினார்.

அந்த இரண்டு நண்பர்களும் தாங்கள் செய்த காரியங்களைப் பற்றி ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டிருந்தார்கள். குதிரைப் படையிலிருந்த ஒருவர் போர் முனையில் தாம் அனுபவித்ததைப் பற்றி கூறிக் கொண்டிருந்தார். மற்றொருவர் ராஜ குடும்பத்தாரிடம் சேவை செய்வதில் உண்டான அனுகூலங்களையும் இன்பங்களைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தார்.

'ஏ, காப்பாளர்களே. கொஞ்சம் ஒயின் கொண்டு வரச் சொல்லுங்கள்' என்றார் ராஸ்டோவ்.

போரிஸ் முகம் சுளித்தார்.

'உமக்கு உண்மையாக வேண்டியது இருந்தால்' என்று அவர் சொல்லி, தமது படுக்கைக்குச் சென்று, சுத்தமான அந்த தலையணையின் கீழிருந்த பணப்பையை எடுத்து, ஒயின் வாங்கி வர ஏற்பாடு செய்தார். ஆம். என்னிடம் 'உமக்கு கொடுக்கும்படி ஒரு கடிதமும் பணமும் இருக்கின்றன' என்றார் அவர்.

ராஸ்டோவ் கடிதத்தை வாங்கினார். பணத்தை வாங்கி சோபாவில் எறிந்துவிட்டு இரண்டு கைகளையும் மேஜைமீது வைத்துக்கொண்டு கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தார். சில வரிகள் படித்ததும் கோபமாய் பெர்க்கைப் பார்த்தார். பின்னால் அவரது கண்களைத் தமது கண்களால் நோக்கிவிட்டுக் கடிதத்தைக் கொண்டு தமது முகத்தை மறைத்துக்கொண்டார்.

‘நல்லது, உமக்கு அவர்கள் ஏராளமாகப் பணம் அனுப்பியிருக்கிறார்கள் போலிருக்கிறது’ என்று சோபாவில் அமுங்கிக் கிடந்த கனமான பணப்பையைப் பார்த்து பெர்க் கூறினார். ‘கோமகனே, எங்களைப் பொறுத்தவரையில் எங்களுடைய சம்பளத்தைக் கொண்டே நாங்கள் காலம் கழிக்கிறோம். என்னைப் பொருத்த வரையில் நான் ஒன்று சொல்ல முடியும்...’

‘எனது பேர்வழியே, உமக்கு ஒன்று சொல்கிறேன். பெர்க், நீர் உமது வீட்டிலிருந்து ஒரு கடிதம் வரப் பேற்றீரானால் உமது பந்துக்களில் ஒருவரை நீர் சந்தித்து எல்லா விஷயங்களைப்பற்றியும் அவரிடம்பேச விரும்புவீரானால் அச்சமயங்களில் நான் அங்கு இருக்க நேர்ந்தால் உடனே நான் உம்முடைய வழியில் குறுக்கே, நிற்காமல் போய்விடுவேன். உடனே போம் எங்காவது போம். பிசாசிடம் வேண்டுமானாலும் போம்’ என்று அவர் கூச்சலிட்டு, உடனே அவரை அவருடைய தோள்களைப் பற்றிச் சுமுகமான பார்வையோடு அவர் முகத்தைப் பார்த்து, தமது கடுமையான வார்த்தைகளை மிருதுவானவையாக ஆக்க விரும்புகிறவரைப் போல, ‘என் அன்புள்ள நண்பரே உம்மை நான் வருத்தியதாக நினைக்க வேண்டாம். எனது பழைய நண்பர் ஒருவரிடம் என் உள்ளத்திலிருந்து பேசுகிறேன் என்பதை நீர் அறிவீர்’ என்றார்.

‘ஓ, அதைப்பற்றி ஒன்றும் சொல்ல வேண்டாம், கோமகனே. எனக்குப் புரிகிறது’ என்று பெர்க் அடித் தொண்டையிலிருந்து அமுங்கிய குரலில் பேசிவிட்டு எழுந்து போனார்.

நமக்கு விருந்தளிப்பவர்களிடம் நீர் போம். உம்மை அவர்கள் அழைத்திருக்கிறார்கள்’ என்று போரிஸ் கூறினார்.

சுத்தமான கோட் ஒன்றை பெர்க் அணிந்து கொண்டிருந்தார். ஒரு பொட்டு அழுக்குகூட அதில் இல்லை. நிலைக் கண்ணாடி முன்பு நின்றுகொண்டு, தமது தலை முடியை பிரஷ்ஷினால் வாரிவிட்டு கன்னப் பொட்டின் பக்கத்திலுள்ள ரோமங்களை மேல் நோக்கி வாரிவிட்டு அதாவது சக்கரவர்த்தி அலெக்ஜாண்டர் செய்கிற மோஸ்தரில் வாரிவிட்டு தமது கோட்டை ராஸ்டோவ் பார்த்த விதத்திலிருந்து அது அவரைக் கவர்ந்திருக்கிறது என்பதை அறிந்து ஒரு மகிழ்ச்சிப் புன்னகையோடு அறையிலிருந்து வெளியேறினார்.

‘அட கடவுளே எவ்வளவு மிருகத்தனமாக நான் நடந்து கொண்டேன்’ என்று கடிதத்தைப் படிக்கும் போது ராஸ்டோவ் முணுமுணுத்தார்.

‘ஏன்?’

‘ஓ, நான் பன்றி மாதிரி இருக்கிறேன். அவர்களுக்குக் கடிதம் எழுதி அவ்வளவு பயத்தை உண்டு பண்ணியிருக்கக் கூடாது. பன்றி

மாதிரி நான் நடந்து கொண்டேன்' என்று அவர் மீண்டும் கூறி முகம் சிவந்தார்.' நல்லது, ஒயின் வாங்கி வர காப்ரியேலை அனுப்பினீரோ ரொம்ப சரி. எனக்குக் கொஞ்சம் கொடும்.

தம்முடைய பெற்றோரிடமிருந்து வந்த கடிதத்தில் பாக்ரேஹிக்கு சிபாரிசுக் கடிதம் ஒன்று இருந்தது. அன்னா மிக்காய்லாவ்னா யோசனைப்படி அந்த வயோதிகக் கோமகன் தமக்குப் பழக்கமான ஒருவரிடமிருந்து அந்த சிபாரிசுக் கடிதத்தை வாங்கி அவளுடைய மகனுக்கு அனுப்பியிருந்தார். அக்கடிதத்தை உரியவருக்கு அனுப்பி உபயோகப்படுத்திக் கொள்ளுமாறு சொல்லியிருந்தார்.

'என்ன அசட்டுத்தனம். இது எனக்குத் தேவையா?' என்று ராஸ்டோவ் சொல்லி கடிதத்தை மேஜையின் கீழ் எறிந்தார்.

'ஏன் நீர் அம்மாதிரி வீசி விட்டீர்?' என்று போரிஸ் கேட்டார்.

'அது ஏதோ ஒரு சிபாரிசுக் கடிதம்.... எந்தப் பிசாசுக்காக அந்தக் கடிதம் எனக்கு வேண்டும்'.

'ஏன் பிசாசுக்கு என்று கேட்கிறீர்' என்று போரிஸ் சொல்லி அந்தக் கடிதத்தை எடுத்து விலாசத்தை வாசித்தார். 'இக்கடிதம் உமக்கு மிகுந்த உபயோகமாய் இருக்கும்'.

'எனக்கு எதுவும் தேவையில்லை. யாருடைய உதவியாளராகவும் நான் இருக்கப் போவதில்லை.'

'ஏன் இருக்க மாட்டீர்?' என்று கேட்டார் போரிஸ்.

'அது ஒரு அடிமையின் வேலை.'

'இன்னும் நீர் முன்போலவே கனவு காண்பவராகவே இருக்கிறீர்' என்று போரிஸ் கூறி தமது தலையை ஆட்டினார்.

'நீர் இன்னமும் பழைய ராஜதந்திரியாகவே இருக்கிறீர்.' ஆனால் விஷயம் அதுவல்ல. சரி நீர் எப்படி இருக்கிறீர் என்று கேட்டார் ராஸ்டோவ்.

'நீர்தான் பார்க்கிறீரே எல்லாம் சரியாகத்தானே நடக்கிறது. நான் ஒரு உதவியாளனாக இருக்க விரும்புவேனேயொழிய போர் முனையில் தங்க விரும்பவில்லை.'

'ஏன்?'

'ஏனெனில் ஒருவன் ராணுவ சேவையில் இறங்கிய பின்பு அதில் எவ்வளவு தூரம் செய்ய முடியுமோ அவ்வளவு தூரம் அதை ஒரு வெற்றிகரமானப் பிரவர்த்தியாகச் செய்ய முயற்சிக்க வேண்டும்.

'ஓ அதுவா விஷயமென்று ராஸ்டோவ் கூறினார். ஆனால் வேறு எதையோ நினைத்துக்கொண்டு பேசுவது போலத் தோன்றியது.

அவர் குறிப்பாகவும் கேள்விக் குறியோடும் தமது நண்பரின் கண்களில் ஏதோ ஒரு கேள்விக்கு பதிலை அறிய முயற்சிப்பவரைப் போலவும் பார்த்தார். வயோதிக காப்ரியேல் ஒயினைக் கொண்டு வந்தார்.

'பெர்க்கை அழைத்து வரச் சொல்வோமே, உம்முடன் அவரும் குடிப்பார். நான் குடிப்பதில்லை' என்று சொன்னார் போரிஸ்.

'நல்லது. அழைத்து வரச் சொல்லும்... அந்த ஜெர்மனியரோடு நீர் எப்படி காலம் தள்ளுகிறீர்?' என்று ஒரு துச்சமான இளநகையோடு ராஸ்டோவ் சொன்னார்.

'அவர் ரொம்ப ரொம்ப அருமையானவர், யோக்கியமான ஒரு இனிமையான நண்பர்' என்று போரிஸ் பதிலளித்தார்.

மீண்டும் போரிஸ் கண்களில் ராஸ்டோவ் கவனத்தோடு உற்றுப் பார்த்து பெருமூச்சு விட்டார். பெர்க் திரும்பி வந்தார். அந்த மூன்று அதிகாரிகளும் ஒயின் பாட்டிலை தங்கள் முன்னால் வைத்துக்கொண்டு பரபரப்போடு பேச ஆரம்பித்தார்கள். ருஷ்யாவிலும் போலந்திலும் வெளிநாட்டிலும் அவர்களுடைய பிரயாணத்தில் அவர்களுக்கு நடந்த உபசாரங்களைப் பற்றிக் கூறினார்கள். அவர்களுடைய கமாண்டரான கிராண்ட் டியூக்கின் பேச்சுகளையும் செய்கைகளையும் பற்றிப் பேசினார்கள். அவருடைய அன்பையும் கோபத்தையும் காட்டும் கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். தம்மைப் பற்றிய பேச்சு இல்லாத வரையில் பெர்க் மௌனமாய் இருந்தார். ஆனால் கிராண்ட் டியூக்கின் முன்கோபத்தைப் பற்றிய கதைகள் சொல்லப்பட்டபோது கலீஷியாவில் அந்த கிராண்ட் டியூக்குடன் பேசிய உரையாடலைமிகுந்த உற்சாகத்தோடு எடுத்துக் கூறினார். அந்த கிராண்ட் டியூக் பட்டாளங்களைப் பார்வையிட்டபோது ஒரு பட்டாளம் ஒழுங்கு இல்லாமல் தாறுமாறாக நடந்து போவதைக் கண்டு கோபமடைந்தார். அச்சமயம் அவரிடம் கிராண்ட் டியூக் வந்து கோபமான குரலில் 'ஆர்னாட்ஸ்' என்று (ஆர்னாட்ஸ் என்பது அல்பேனியர்களுக்கு துருக்கியர் கொடுத்த பெயர். துருக்கிய பட்டாளத்திற்கு குதிரைப் படை வீரர்களை அல்பேனியர்கள் சப்ளை செய்து வந்தார்கள். அதைக் கேலியாக இங்கே குறிப்பிடுகிறார்.) கத்தினார். கிராண்ட் டியூக் கோபமாய் இருக்கிற சமயத்தில் அந்த வார்த்தையைத்தான் உபயோகிப்பது வழக்கம். ஆர்னைாட்ஸ் என்று கத்திவிட்டு அந்தப் பட்டாளத்தின் கமாண்டர் யார் என்று கேட்டார். இந்தச் சம்பவத்தை மிகுந்த மகிழ்ச்சியோடு பெர்க் சொல்லலுற்றார்.

நான் இதைக்கண்டு கொஞ்சம் கூட கலவரம் அடையவில்லை. உமக்குத் தெரியுமா, கோமகனே? ஏனென்றால் நான் செய்வது சரி என்பது எனக்குத் தெரியும் ராணுவ உத்தரவுகளெல்லாம் எனக்குத் தளவாடம். பிரார்த்தனை வரிகளை எப்படிப் பார்க்காமல் ஒப்புவிக்க முடியுமோ அதே மாதிரி ராணுவ விதிகளையும் நான் ஒப்புவிக்க முடியும். எவ்விதத் தற்பெருமையுமின்றி இதை நான் சொல்லக்கூடும். ஆகவே கோமகனே என்னுடைய கம்பெனியை பொறுத்த வரையில் எவ்வித அசிரத்தையும் இல்லை. ஆகவே என்னுடைய மனசாட்சி சந்தோஷமாயிருந்தது. நான் முன்னால் வந்தேன்...'(பெர்க் எழுந்து நின்று தமது தொப்பியில் கையை வைத்து எம்மாதிரி கிராண்ட் டியூக்கிடம் தம்மை ஆஜர் செய்தார் என்பதைக் காட்டினார். அச்சமயம் அவருடைய முகத்தில் காணப்பட்ட மரியாதையையும் திருப்தியையும் விட அதிகமாக வேறு யார் முகத்திலும் காணமுடியாது)'நல்லது, அவர் என்மீது எரிந்துவிழுந்தார். பழமொழியில் சொல்வதைப்போல அவர் எரிந்து எரிந்து எரிந்து விழுந்தார். அச்சமயம் நடந்த காரியம் வாழ்வதைப் பற்றியதல்ல. சாவதைப் பற்றியதேயாகும். ''அல்பேனியர்களே'', ''பிசாசுகளே'', ''சைபீரியாவுக்கு'' என்ற குரல்கள் என் காதுகளில் கேட்டன. நான் செய்வது சரி என்பது எனக்குத் தெரியுமாகையால் நான் மௌனமாய் இருந்தேன். அப்படிச் செய்வதுதானே நல்லது கோமகனே...?' என்று ஒரு புத்திசாலித்தனமான புன்னகை காட்டிப் பேசினார். ''ஏ, நீர் என்ன ஊமையா?' என்று அவர் கத்தினார். அப்பொழுதும் நான் மௌனமாய் நின்றேன். நீர் என்ன நினைக்கிறீர், கோமகனே? அடுத்த நாளில் வெளிவந்த ''நித்திய ராணுவ உத்தர''வில் அவற்றைப்பற்றி எதுவுமே குறிப்பிடவில்லை. மண்டையை நிதானமாய் வைத்திருக்கவேண்டும் என்பதன் அர்த்தம் அதுதான். அதுதான் சரியான வழி கோமகனே' என்று பெர்க் கூறிவிட்டு, தமது சுங்கானைப் பற்றவைத்து புகையை வெளியே விட்டார்.

'ஆமாம், அதுதான் சிலாக்கியம்' என்றார் குறுநகை கொண்ட ராஸ்டோவ்.

ஆனால் பெர்க்கை கேலி செய்வதற்கு அவர் தயாராகிக் கொண்டிருக்கிறார் என்பதை போரிஸ் கவனித்தார். ஆகவே, சாமர்த்தியமாக தங்கள் பேச்சுகளை வேறு வழியில் திருப்பினார். அவர் எங்கே எப்படிக் காயமடைந்தார் என்பதைச் சொல்லும்படி கேட்டார். ராஸ்டோவுக்கு இது மகிழ்ச்சியைக் கொடுத்தது. அதைப் பற்றிப் பேசத் தொடங்கினார். அவர் பேசப் பேச மேலும் மேலும் பரபரப்படைந்தார்.

ஷார்ன் கிராபெர்ன் கிராமத்தில் தாமும் மற்றவர்களும் அங்கு நடந்த சண்டையில் பங்கு எடுத்துக் கொண்டதைப் பற்றியும் அதாவது எப்படி அந்த சண்டை நடக்க வேண்டுமென்று விரும்பினார்களோ அம்மாதிரியும் அவர்கள் மற்றவர்களிடமிருந்து கேட்டபடியும் எவ்வளவு சிலாக்கியமாக சொல்ல முடியுமோ அந்த விதமாகவும் ஆனால் உண்மையில் நடந்தபடி இல்லாமலும் அவர் வர்ணிக்க ஆரம்பித்தார்.

ராஸ்டோவ் ஒரு உண்மையான வாலிபர். எந்த விதத்திலும் துணிந்து ஒரு பொய் சொல்லமாட்டார். என்ன நடந்ததோ அவற்றைச் சொல்ல வேண்டுமென்றே அவர் தமது கதையை ஆரம்பித்தார். ஆனால் தமக்குத் தெரியாமலே தெளிவில்லாமலே தடுக்க முடியாதவிதத்தில் பொய் சொல்லுவதில் அவர் இறங்கிவிட்டார். தம்மிடம் கேட்பவர்களுக்கு அவர் உண்மையை சொல்லியிருந்தால் (அவர்களும் அவரைப் போலவே ராணுவத் தாக்குதல்களைப் பற்றி பல தடவைகளில் கதைகளைக் கேட்டிருக்கிறார்கள். ஆகவே, ஒரு தாக்குதல் என்றால் என்ன என்பது பற்றி அவர்களுக்கு நிச்சயமான அபிப்பிராயம் ஏற்பட்டிருந்தது. அதே மாதிரி கதையைத்தான் இப்பொழுதும் கேட்கப் போகிறோம் என்று எதிர்பார்த்திருப்பார்கள்) அவர்கள் அவர் சொல்லுவதை நம்பியிருக்க மாட்டார்கள். அல்லது அதைவிட மோசமானது என்னவென்றால் ராஸ்டோவைத்தான் குறைகூற வேண்டும் என்று நினைத்திருப்பார்கள். ஏனெனில் குதிரைப் படை தாக்குதல்களைப் பற்றி கதை சொல்லுகிறவர்களுக்குப் பொதுவாக என்ன ஏற்படுமோ அது ராஸ்டோவுக்கு ஏற்படவில்லை. அவர்கள் ஒவ்வொருவரும் குதிரைமீது ஏறி ஓடினார்கள் என்றோ தாம் ஒரு குதிரையிலிருந்து விழுந்து கையை முறித்துக்கொண்டார் என்றோ ஒரு பிரஞ்சுக்காரனிடமிருந்து தப்பி காட்டுக்குள் வேகமாக ஓடினார் என்றோ சொல்ல முடியாது. தவிர ஒவ்வொன்றையும் நடந்தது நடந்தபடி சொல்ல வேண்டுமென்றால் அம்மாதிரி சொல்வதற்கு மிகுந்த மனோபலம் வேண்டும். உண்மையைச் சொல்வது ரொம்ப கஷ்டமானது. வாலிபர்களால் அம்மாதிரி செய்ய முடிவது அபூர்வம். அவரிடம் கதை கேட்டு வந்தவர்கள், அவர் உற்சாகம் பொங்கிபுயல் மாதிரி உடைவாளால் வெட்டி மாமிசத்தின் ருசியை உடைவாள் அறியும்படி செய்து அதன் பின்னால் அவர் சோர்ந்து கீழே விழுந்துவிட்டார் என்பன போன்றவைகளைக் கேட்பதற்கு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆகவே அம்மாதிரி எல்லாம் அவர் சொன்னார்.

தமது கதையின் மத்தியில் அவர் சொல்லியதாவது:- 'கை கலந்து போர் நடக்கும்போது, நீங்கள் யூகம் செய்து அறிந்து கொள்ள

முடியாது' இச்சமயம் இளவரசர் ஆண்ட்ரூ அறையில் நுழைந்தார். வாலிபர்களுக்கு உதவி செய்வதற்கு எப்போதும் விரும்புகிற இளவரசர் ஆண்ட்ரூ, அவருடைய உதவியைக் கோரியதைக் கண்டு மிகுந்த பெருமை அடைந்தார். போரிஸிடம் அவருக்கு நல்ல அபிப்பிராயமுண்டு. முதல் நாளன்று இளவரசர் ஆண்ட்ரூவிடம் திருப்திகரமாக அவர் நடந்துகொண்டார். ஆகவே அவ்வாலிபர் கேட்பதைச் செய்வதற்கு அவர் விரும்பினார். குட்டுஜோவிட மிருந்து தஸ்தாவேஜுகளை ஜாரேவிச்சுக்கு கொண்டுபோகிற வழியில் போரிஸைத் தனியாக கண்டு பேசலாம் என்ற நினைப்பில் அங்கே வந்தார். அவர் உள்ளே நுழைந்ததும் ஒரு குதிரை வீரர் யுத்தகளத்தில் நடந்த காரியங்களைப் பற்றி சொல்லிக் கொண்டிருப்பதைக் கேட்ட (அம்மாதிரி பேசுகிறவரை இளவரசர் ஆண்ட்ரூவுக்குப் பிடிக்காது) அவர் போரிஸைப் பார்த்து இனிய புன்னகை கொண்டார். முகம் சுளித்து பாதிக் கண்களை மூடிக்கொண்டு ராஸ்டோவை நோக்கினார். களைப்போடு சிறிது தலை குனிந்து பின்னால் சோபாவில் மெதுவாக அமர்ந்தார். ஒரு தகாத கூட்டத்தில் தாம் நுழைந்துவிட்டது போல அவர் வருந்தினார். இதை அறிந்த ராஸ்டோவின் முகம் சிவந்தது. இதைப்பற்றி அவர் கவலை கொள்ளவில்லை. ஏனெனில் அவர் தமக்கு அதிகம் அறிமுகம் இல்லாத ஒரு அந்நியராய் இருந்தார். போரிஸை நோக்கினார். அவரும் அந்த குதிரை வீரரைப் பற்றி வெட்கம் அடைந்திருப்பதாக அவருக்குத் தோன்றியது.

இளவரசர் ஆண்ட்ரூவின் குரல் கேலியாகவும் மனதிற்குப் பிடித்தமில்லாமலுமிருந்த போதிலும் சேனாதிபதியின் பரிவாரத்தைச் சேர்ந்த அந்த சிறிய உதவியாளர்களைப் பற்றி போர் முனையில் உள்ளவர்கள் எவ்வளவு துச்சமாக நினைக்கிறார்கள் என்பதை ராஸ்டோவ் அறிந்திருந்த போதிலும் ராஸ்டோவ் என்னவோ நாணி முகம் சிவந்து மௌனமாய் மனம் குழம்பினார். பரிவாரத்தில் ஏதாவது செய்தி உண்டா என்றும் நமது போர் திட்டங்களைப் பற்றி வெளியில் சொல்லக்கூடிய விஷயங்கள் ஏதாவது உண்டா என்றும் போரிஸ் விசாரித்தார்.

'அநேகமாக நாம் முன்னேற வேண்டியதிருக்கலாம்' என்று பால்கோன்ஸ்கி பதிலளித்தார். அந்த அந்நியர் முன்பு எதுவும் அதற்கு மேல் சொல்வதற்கு அவர் தயங்கியதாகத் தோன்றியது.

மிகுந்த மரியாதையோடு இந்த சந்தர்ப்பத்தை உபயோகப் படுத்தி பெர்க் ஒரு கேள்வி கேட்டார். குதிரைக்கான தீனிப் பணத்தை கம்பெனிகளின் கேப்டன்களுக்கு இரட்டிப்பாக்கப்படப்போகிறது என்ற வதந்தி இருக்கிறதே அது உண்மையா என்று கேட்டார்.

அம்மாதிரி முக்கியமான சர்க்காரின் உத்தரவைப்பற்றி தான் எவ்வித அபிப்பிராயமும் கூற முடியாது என்று இளவரசர் ஆண்ட்ரூ புன்னகையோடு பதிலளித்தார். இதைக்கேட்டு பெர்க் மகிழ்ச்சி யோடும் சிரித்தார்.

போரிஸைப் பார்த்து 'உமது காரியத்தைப் பற்றி நாம் பின்னால் பேசுவோம் (இச்சமயம் ராஸ்டோவைச் சுற்றிப் பார்த்தார்.) படை அணிவகுப்புப் பார்வை முடிந்த பின்பு என்னிடம் வாரும். எது சாத்தியமோ அதைச் செய்வோம்' என்று இளவரசர் ஆண்ட்ரூ தொடர்ந்து கூறினார்.

இளவரசர் ஆண்ட்ரூ அறையைச் சுற்றி நோட்டமிட்டபோது ராஸ்டோவைப் பார்த்தார். அவர் குழந்தைத் தனமான அடக்க முடியாத குழப்பமடைந்திருப்பதைக் கண்டார். அந்தக் குழப்பம் கோபமாய் மாறியபடியால் இளவரசர் ஆண்ட்ரூவை கவனிப்பதாகக் காட்டிக்கொள்ளவில்லை. இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்:

'ஷார்ன்கிராபெர்ன் விவகாரத்தைப்பற்றி நீர் பேசிக் கொண்டிருந்தீர். நீர் அங்கே இருந்தீரா?'

'நான் அங்கே இருந்தேன்' என்று அந்த மெய்க்காப்பாளரை அவமரியாதை செய்ய நினைத்து, ராஸ்டோவ் கோபமாகப் பேசினார்.

அந்தக் குதிரை வீரரரின் மன நிலையை பால்கோன்ஸ்கி கவனித்தார். அவருக்கு அது வேடிக்கையாய் இருந்தது. ஒரு கேலிப் புன்னகையோடு அவர் சொன்னார்.

'ஆமாம், அந்த விவகாரத்தைப் பற்றி பல கதைகள் இப்பொழுது சொல்லப்படுகின்றன.'

'ஆமாம், கதைகளா?' ராஸ்டோவ் பலத்த குரலில் கேட்டு முதலில் ஆண்ட்ரூவையும் பின்னால் போரிஸையும் மாறி மாறிக் கோபம் நிறைந்த கண்களோடு நோக்கினார். 'ஆமாம், பல கதைகள். எங்கள் கதைகள் எல்லாம் போர் முனையில் எதிரியின் குண்டு மழைக்கு கீழே இருந்த மனிதர்களின் கதைகளாகும். ஆகவே எங்கள் கதைகளுக்கு கொஞ்சம் மதிப்பு உண்டு. போர் முனைக்குப் போகாமலேயே சேனாதிபதியின் பரிவாரங்களிலிருந்துகொண்டு ஒன்றும் செய்யாமல் பரிசுகள் பெற்று வருகிற அந்த பரிவாரக் காரர்களின் கதைகளைப் போன்றவை அல்ல.'

'அம்மாதிரி ஆசாமிகளில் என்னையும் ஒருவர் என்று யூகம் செய்கிறீர் அல்லவா?' என்று அமைதியான குறிப்பாக சுமுகமான புன்னகையோடு இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

ஒரு எரிச்சலான உணர்ச்சியும் அந்த அந்நியரின் தன்னடக்கத்தைப் பார்த்து மரியாதையும் ராஸ்டோவின் உள்ளத்தில் அச்சமயத்தில் கலந்து நின்றன.

'நான் உம்மைப் பற்றி பேசவில்லை . உம்மை எனக்குத் தெரியாது. உம்மைத் தெரிந்துகொள்ள எனக்கு விருப்பமும் இல்லை. நான் பொதுவாக பரிவாரத்தைப் பற்றி பேசுகிறேன்.

'நான் உமக்கு இதைச் சொல்கிறேன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ அமைதியான அதிகாரத் தொனியோடு இடைமறித்தார். 'என்னை அவமரியாதை செய்ய வேண்டுமென்று நீர் விரும்புகிறீர். போதுமான சுயமரியாதை இல்லாதவர்கள் அம்மாதிரிச் செய்வது ரொம்ப சுலபம் என்பதை நான் உம்போடு ஒப்புக்கொள்கிறேன்.

அதற்கான காலமும் இடமும் இதுவல்ல. இன்னும் ஒன்றிரண்டு நாட்களில் நாம் எல்லோருமே ஒரு பெரியதான, மிகுந்த மோசமான டூயல் போராட்டத்தில் கலந்து கொள்ளுவதாய் இருக்கிறோம். தவிர உமது பழைய நண்பரான ட்ரூபெட்ஸ்கோயை எனது முகம் உமக்குப் பிடிக்கவில்லை என்பதற்காக குற்றம் சொல்ல முடியாது. மேலும் எனது பெயர் உமக்குத் தெரியும். எங்கே என்னை பார்க்கலாம் என்பதும் உமக்குத் தெரியும். ஆனால் ஒரு விஷயத்தை மறந்துவிட வேண்டாம். இந்தக் காரியத்தைப்பற்றி எனக்கோ அல்லது உமக்கோ அவமரியாதை ஏற்பட்டுவிட்டதாக நான் கருதவில்லை. நான் உம்மை விட வயதில் அதிகமானவன். உமக்கு என்னுடைய புத்திமதி என்னவென்றால் இதை இப்படியே விட்டுவிடும். நல்லது. அப்படியானால் வெள்ளிக்கிழமையன்று படை அணிவகுப்புக்குப் பின்னால் உம்மை நான் எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன் ட்ரூபெட்ஸ்கோய். போய் வருகிறேன் என்று இளவரசர் ஆண்ட்ரூகூறிவிட்டு அங்கிருந்து இருவருக்கும் தலைவணங்கிய பிறகு வெளியே போனார்.

இளவரசர் ஆண்ட்ரூ வெளியே போனபின்பு தாம் என்ன சொல்லியிருக்க வேண்டுமென்று ராஸ்டோவ் நினைத்தார். அம்மாதிரி சொல்லவேண்டிய விஷயத்தைச் சொல்லாமல் விட்டு விட்டதற்காக அவர் இன்னும் அதிகமாய் கோபம் அடைந்தார். தமது குதிரையை உடனே கொண்டு வரச் சொன்னார்.

போரிஸிடமிருந்து உற்சாகமில்லாமல் விடை பெற்றுக்கொண்டு சவாரி போனார். அவர் மறுநாள் தலைமைக் காரியாலயத்துக்குப் போய் அந்த உதவியாளரை போருக்கு அழைப்பதா அல்லது உண்மையிலேயே அந்த விஷயத்தை விட்டுவிடுவதா என்ற பிரச்னை அவரை வழி முழுவதும் வாட்டி வந்தது. அந்தச் சிறிய மெல்லிய பெருமை கொண்ட மனிதர், தமது துப்பாக்கியால்

குறிபார்க்கப்படும்போது எப்படி நடுங்குவார் என்பதை இன்பத்தோடு கோபமாக அவர் நினைத்தார். ஆனால் அதே சமயத்தில் அவருக்குத் தெரிந்த எல்லா சிநேகிதர்களையும் விட அவர் வெறுத்த அதே உதவியாளரின் சிநேகத்தை அவர் அதிகமாக விரும்புவதாக அவர் உணர்ந்தபோது அவருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது.



போரிஸைப் பார்ப்பதற்காக ராஸ்டோவ் சென்ற தினத்திற்கு மறுநாள் ஆஸ்திரிய ருஷ்ய துருப்புகளின் அணி வகுப்புப் பார்வை ஒன்று நடந்தது. அந்த ரஷ்ய துருப்புகள் புதிதாக ருஷ்யாவிலிருந்து வந்தவர்களையும் குட்டுஜோவின் தலைமையில் சமீபத்தில் போராடித் திரும்பியவர்களையும் கொண்டதாய் இருந்தது. ருஷ்ய சக்கரவரத்தியும் அவருடைய பட்டத்து இளவரசர் ஜாரேவிச்சும் ஆஸ்திரிய சக்கரவர்த்தியும் அவருடைய பட்டத்து இளவரசர் ஆர்க் டியூக்கும் 80,000 வீரர்கள் கொண்ட அந்த நேச தேச ராணுவத்தைப் பார்வையிட்டார்கள்.

காலையிலிருந்தே சுத்தமான கவர்ச்சியான உடையணிந்து துருப்புகள் நகர்ந்து போக ஆரம்பித்தனர். கோட்டைக்கு எதிராக உள்ள மைதானத்தில் அவர்கள் வந்து கூடினார்கள். ஆயிரக் கணக்கான பாதங்களும் துப்பாக்கி ஈட்டிகளோடு அசைந்தாடிப் போய்க்கொண்டிருந்தன. அதிகாரிகளின் உத்தரவைக் கேட்டு ஒரு பட்டாளம் அப்படியே நிற்கும். பின்னால் தங்கள் கொடிகளோடு அணிவகுத்து நிற்கும். அதன் பின்பு அது திரும்பிப்போய் நிற்க வெவ்வேறு சீருடைகளை யணிந்து படைகள் புதிதாகவரும். குதிரைகளின் குளம்படி ஓசை தாளத்திற்கு ஏற்ப நடந்து வருவது கேட்டது. பார்ப்பதற்கு அழகான நீலம் சிகப்பு, பச்சை முதலிய வர்ணங்களில் செய்யப்பட்ட சீருடைகளை அணிந்து அந்த டம்பமான குதிரைப் படை வீரர்கள் வருகிறபோது சிலுசிலுப்பு ஆசைகள் கேட்கும். அவர்களுக்கு முன்னால் அழகாய் உடையணிந்து வாத்யக்காரர்கள், கறுப்பும் சிகப்பும் கலந்த சாம்பல் வர்ண குதிரைகளில் ஏறிவந்தார்கள். அதற்குப் பின்னால் பீரங்கி வண்டிகளில் பளபளப்பாகப் பாலிஷ் செய்யப்பட்ட பீரங்கிகள் அதிர்ந்துகொண்டு போய்க்கொண்டிருந்தன. அவற்றின் கூடவே எரிந்த நெருப்புக் குச்சிகளின் வாசனையும் போய்க்கொண்டிருந்தது. அந்தப் பீரங்கிப் படை, தரைப் படைகளுக்கும் குதிரைப்

படைகளுக்கும் மத்தியில் போய் தனக்காகக் குறிப்பிடப்பட்ட இடத்தில் தங்கியது. ஜெனரல்கள் அணிவகுப்பு யூனிபாரத்தை அணிந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய கழுத்தில் முறைப்பான காலர்களும் கழுத்துப் பட்டைகளும் பதக்கங்களும் அணிந்திருந்தார்கள். ஒல்லியாகவோ தடியாகவோ உள்ள தங்கள் இடுப்பை வரிந்து கட்டியிருந்தார்கள். அவர்களுடைய சிகப்பான கழுத்துகள் முறைப்பான காலர்களில் அழுந்திக்கொண்டிருந்தன. அதிகாரிகள் மட்டுமல்ல சிப்பாய்களும்கூட நன்றாய் சுத்த மடைந்து, சவரம் செய்து த்ங்களுடைய ஆயுதங்களை சுத்தமாகவும், கூடியவரை பாலிஷ் செய்தும் வைத்திருந்தார்கள். ஒவ்வொரு குதிரையும் நன்றாக பாலிஷ் செய்யப்பட்டு இருந்தது. அதைப் பார்த்தபோது வெல்வெட் மாதிரி தோன்றியது. அந்தக் குதிரைகள் கூட நடப்பது சிறிய விஷயமல்ல; ஆனால் முக்கியமான மதிப்புடைய விஷயமாகும் என்று நினைத்தன. ஒவ்வொரு ஜெனரலும் ஒவ்வொரு சிப்பாயும் அவ்வளவு பெரிய அந்த துருப்புக் கூட்டத்தில் தாங்கள் ஏதோ சமுத்திர ஜலத்திலுள்ள ஒரு சொட்டு மாதிரி என்று நினைத்தாலும் அதே சமயத்தில் அவ்வளவு பெரிய பட்டாளத்தில் தாம் ஒரு உருப்பாய் இருந்து அதன் பலத்திற்குக் காரணமாய் இருப்பதை நினைத்து மகிழ்ந்தார்கள்.

காலையிலிருந்தே நடவடிக்கைகள் வேகமாக ஆரம்பித்தன. பத்து மணிக்குள் எல்லாம் ஒழுங்காய் செய்து முடிக்கப்பட்டன. அந்தப் பெரிய மைதானத்தில் அணி வகுப்புகள் நிறுத்தி வைக்கப்பட்டன. அந்த முழு ராணுவமும் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. முதலில் குதிரைப்படை, அதற்கு அடுத்தது பீரங்கிப்படை, அதன் பின்னால் காலாட்படை.

இரண்டு வரிசையினருக்குப் பின்னால் ஒரு வீதி மாதிரி இடம் விடப்பட்டிருந்தது. மூறு விதமான அந்த ராணுவம் தனித்தனி யாய் தெரியக்கூடியவிதத்தில் இருந்தன. யுத்த களத்தில் போர் செய்துகொண்டிருந்த குட்டுஜோவின் ராணுவம் (போர் முனையில் வலது பக்கவாட்டில் நின்ற பாவ்லாகிராட் குதிரைப்படை உள்பட) அடுத்த படியாக சமீபத்தில் ருஷ்யாவிலிருந்து வந்த பட்டாளங்களும் காப்பாளர் படையும்; அடுத்தபடியாக ஆஸ்திரியத் துருப்புகள். அவர்கள் எல்லாரும் ஒரே வரிசைகளில் ஒரே தளபதியின் கீழ் ஒரே மாதிரியாக நின்றுகொண்டிருந்தார்கள். இலைகள் மீது காற்று அடித்துப் போகும்போது எப்படியிருக்குமோ அதேமாதிரி ஒரு பரபரப்பான குசுகுசுப் பேச்சு பரவ ஆரம்பித்தது. ‘அவர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள்’.

பீதியடைந்த குரல்கள் கேட்டன. கடைசியாக செய்யவேண்டிய வேலைகளை துருப்புகள் செய்து முடித்தார்கள்.

ஆல்முட்ஜ் என்ற இடத்திலிருந்து ஒரு கூட்டம் வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அன்றைய தினம் காற்று ஒன்றும் இல்லாமல் இருந்த போதிலும் அச்சமயம் லேசான காற்று வீசவே ஈட்டிகளின் மேலாகப் பறந்த கொடிகள் அந்தக் காற்றில் சலசலத்தன. பறக்காமல் தொங்கிக்கொண்டிருந்த கொடிகள், கொடி மரங்களில் மோதி படபடத்தன. அந்த ராணுவம் முழுவதுமே சக்கரவர்த்திகளின் வருகையைக் கண்டு தங்கள் சந்தோஷத்தைத் தெரிவிப்பதுபோல அந்த லேசான அசைவுகள் காட்டின. 'நேராகப் பாருங்கள்' என்று ஒரு உத்தரவு கேட்டது. அதன் பின்னால் சூரிய உதயத்தில் சேவல்கள் எப்படிக் கூவுமோ அதே மாதிரி அந்த உத்தரவைப் பல திசைகளிலும் மற்றவர்கள் கத்திக்கொண்டிருந்தனர். அதன் பின்னால் எல்லாம் அமைதியாயின.

அந்த மரணத்தைப் போன்ற மௌனமான வேளையில் கதிரைகளின் குளம்படி ஓசைகள் மட்டும் கேட்டு வந்தன. இவை சக்கரவர்த்திகளின் பரிவாரங்கள். சக்கரவர்த்திகள் பக்கவாட்டிற்கு சவாரி செய்து வந்ததும் முதல் குதிரைப் படையின் எக்காளங்கள் ராணுவ அணிவகுப்பு சங்கீதத்தை வாசித்தன. அந்த சங்கீதம் அந்த எக்காளக்காரர்களால் வாசிக்கப்பட்டதாய்த் தோன்றவில்லை; ஆனால் சக்கரவர்த்திகளின் வருகையைக் கண்டு, அந்த முழு ராணுவமே மகிழ்ச்சி கொண்டு சங்கீதத்தில் இறங்கியதாகத் தோன்றியது இந்த சப்தங்களுக்கிடையில் சக்கரவர்த்தி அலெக்ஜாண்டரின் இனிய இளமையான குரல்மட்டுமே தெளிவாகக் கேட்டது. எல்லோருக்கும் அவர் முகமன் கூறினார். உடனே முதல் பட்டாளம் 'ஜே' என்ற முழக்கத்தை காது செவிடாகும்படியாக தொடர்ச்சியாக மகிழ்ச்சியோடு ஒலிக்க ஆரம்பித்தது. அவ்வளவு பலமாகத் தம்மால் முழங்க முடியும் என்று அறிந்த ராணுவமே ஆச்சரியப்பட்டது.

குட்டுஜோவின் ராணுவத்தின் முதல் வரிசைகளில் ராஸ்டோவ் நின்று கொண்டிருந்தார். அந்த வரிசையைத்தான் ஜார் சக்கரவர்த்தி முதலில் அணுகினார். அவர் அணுகியபோது அந்த ராணுவத்தி லிருந்த ஒவ்வொருவரும் எம்மாதிரி உணர்ச்சி கொள்ளுவார்களோ அதே உணர்ச்சியை ராஸ்டோவும் கொண்டார். அந்த பலத்தின் வேகத்தை உணர்ந்தார். அவர் தம்மை மறந்தார். அந்த ராணுவத்தின் பலத்தைப் பெருமையோடு உணர்ந்தார். அந்த வெற்றிக்குக் காரணமான சக்கரவர்த்தியிடம் தமக்கு ஒரு ஆர்வமான கவர்ச்சியிருப்பதை உணர்ந்தார்.

அந்த மனிதரிடமிருந்த ஒருவார்த்தை வந்தால் போதும் சமுத்திரம் போன்ற இந்தப் பெரிய கூட்டம் (இதில் தாம் ஒரு முக்கியமில்லாத அணு) நெருப்பையோ, தண்ணீரையோ கவனிக்காமல், சாவையும் கவனிக்காமல் வீராதி வீரத்தனங்களையெல்லாம் செய்வதற்குத் தயாராய் இருக்கிறார்கள். ஆகவே அந்த வார்த்தை வரப்போகிற தென்று நினைத்து அவரால் நடுங்காமலோ அவருடைய இருதயம் அசைவற்று நிற்காமலோ இருக்க முடியவில்லை. 'ஜே, ஜே' என்ற சப்தங்கள் எல்லாத் திசைகளிலிருந்தும் இடிபோல் முழங்கின. ஒவ்வொரு பட்டாளமாக ஜார் சக்கரவர்த்திக்குத் தங்கள் வாழ்த்துகளை வாத்தியங்களின் மூலமாகக் காட்டின. மீண்டும் 'ஜே, ஜே'என்ற முழக்கங்கள். கடைசியாக 'ஜே, ஜே' என்ற சப்தமே பலமாகவும் முழுமையாகவும் வளர்ந்து காது செவிபடும்படியான ஓசையில் ஒன்று கூடின.

ஜார் சக்கரவர்த்தி தம்மிடம் நெருங்குகிற வரையில் ஒவ்வொரு பட்டாளமும் அமைதியாகவும் அசையாமலும் உயிரற்றது போலவுமே நின்று கொண்டிருக்கும். ஆனால் அவர் சமீபத்தில் நெருங்கியதும் உடனே உயிர் பெற்றது மாதிரி இடிமுழக்கம்போல அந்தப் பட்டாளம் முழுவதும்'ஜெ' முழக்கமிடும். இந்த காது செவிடாகும்படியான பயங்கரமான சப்தங்களுக்கிடையில் கல் மாதிரி அசையாமல் நின்றுகொண்டிருந்த துருப்புகளுக்கிடையே நூற்றுக்கணக்கான குதிரைகளில் ஏறிய சேனாதிபதியின் பரிவாரத்தார்கள் சுதந்திரமாகவும் ஒழுங்காகவும் கவலை யில்லாமலும் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு முன்னால் அந்த இரண்டு சக்கரவர்த்திகளும் சவாரி போனார்கள். அவ ர்கள் மீதுதான் அந்த ராணுவம் முழுவதும் உணர்ச்சி பொங்கும் கவனத்தோடு பார்த்துக்கொண்டிருந்தன.

அந்த வாலிப, அழகிய சக்கரவர்த்தி அலெக்ஜாண்டர் காப்பாளர் படையின் யூனிபாரத்தை அணிந்து கொண்டிருந்தார். அவர் தலையில் அணிந்திருந்த தொப்பி முன்னும் பின்னும் உயரமாகவும் மத்தியில் பள்ளமாகவும் இருந்தது. அவருடைய இனிமையான முகமும் கணீர் என்ற ஆனால் அதிக சப்தம் இல்லாத அவரது தொனியும் ஒவ்வொருவர் கவனத்தையும் இழுத்தன.

எக்காளக்காரர்களுக்குச் சமீபமாகவே ராஸ்டோவ் நின்று கொண்டிருந்தார். ஆகையால் ஜார் சக்கரவர்த்தியை அவருடைய கூர்மையான பார்வை அடையாளம் கண்டு அவருடைய வருகையை கவனித்துக்கொண்டிருந்தது. இருபது அடிக்குள்ளாக அவர் வந்தபோது அந்த அழகிய சந்தோஷமுள்ள இளமையான முகத்திலுள்ள ஒவ்வொன்றையும் அவர் நன்றாய் கவனிக்க

முடிந்தது. இதற்கு முன்னால் தோன்றியிராத கனிவு எக்களிப்பும் அவருக்கு ஏற்பட்டதுபோல நினைத்தார். சக்கரவர்த்தியின் ஒவ்வொரு அசைவும் ஒவ்வொருசாயலும் அவருக்குக் கவர்ச்சிகர மாய் இருந்தன.

பாவ்லாகிராட் குதிரைப் படையின் முன்பாக ஜார் நின்று ஆஸ்திரிய சக்கரவர்த்தியிடம் எதையோ பிரஞ்சு மொழியில் பேசி புன்முறுவல் கொண்டார்.

அந்தப் புன்முறுவலைப் பார்த்த ராஸ்டோவ் தம்மையறியாம லேயே தாமும் புன்னகை கொண்டார். அப்போது சக்கரவர்த்தியின் மீது அவருக்குள்ள அன்பு இன்னும் அதிகமாய்ப் பெருகியது. இந்த அன்பை எப்படியாவது காட்ட வேண்டுமென்று அவர் தவித்தார். ஆனால் அது சாத்யமல்ல என்பதை அறிந்ததும் அழுவதற்குக் கூட அவர் தயாராய் இருந்தார். அந்தப் பட்டாளத்தின் கர்னலை ஜார் அழைத்து ஏதோ சில வார்த்தைகள் அவரிடம் சொன்னார். 'அட கடவுளே சக்கரவர்த்தி என்னிடம் பேசினாரானால் எனக்கு எப்படியிருக்கும்? அந்த சந்தோஷத்தில் நான் இறந்துகூடப் போவேன்' என்று ராஸ்டோவ் நினைத்தார்.

அங்கிருந்த மற்ற அதிகாரிகளிடமும் ஜார் பேசினார். 'உங்கள் எல்லோருக்கும் நன்றி, கனவான்களே. மனப்பூர்வமாக உங்களுக்கு நன்றி தெரிவிக்கிறேன்' என்று சொன்னார். அவர் சொல்லிய ஒவ்வொரு வார்த்தையும் தேவலோகத்திலிருந்து வரும் குரலைப் போல ராஸ்டோவுக்குத் தொனித்தது. இந்த ஜாருக்காக அதே வினாடியில் தம் உயரையே கொடுப்பதற்கு எவ்வளவு சந்தோஷமாக இருப்பார் என்று நினைத்தார்.

'செயிண்ட் ஜார்ஜ் கொடி உங்களுக்குக் கிடைத்திருக்கிறது அதற்கு நீங்கள் மிகவும் தகுதியானவர்களாய் இருப்பீர்கள்' என்று சக்கரவர்த்தி கூறினார்.

'ஓ அவருக்காக உயிரையே விடலாம்' என்று ராஸ்டோவ் நினைத்தார். ஜார் சக்கரவர்த்தி இன்னும் எதையோ சொன்னார். அதை ராஸ்டோவ் சரியாகக் கேட்க முடியவில்லை. வீரர்கள் முழுக்குரலோடு வெற்றி முழக்கமிட்டார்கள்.

ராஸ்டோவ் கூட தமது சேணத்தில் குனிந்தவாறு தமது முழு பலம் கொண்டு 'ஜே' சப்தம் போட்டார். அம்மாதிரி சப்தம் போடுவதால் ஒருவேளை தமக்கு ஏதாவது நேரலாம் என்றும் நினைத்தார். என்றாலும் அவருடைய மகிழ்ச்சியைப் பூரணமாகக் காட்டுவதற் காக அவர் அம்மாதிரி செய்தார்.

ஜார் குதிரைப் படைகளின் முன்பாக சில நிமிஷங்கள் எதையோ யோசித்து தயங்கிக்கொண்டிருந்தார்.

'எப்படி ஒரு சக்கரவர்த்தி இம்மாதிரி தயங்கிக்கொண்டிருக்க முடியும்' என்று ராஸ்டோவ் நினைத்தார். அப்படியிருந்தும் ஜார் செய்கிற மற்றவைகள் மாதிரியே அந்தத் தயக்கம் கூட ராஸ்டோவுக்கு கம்பீரமாகவும் கவர்ச்சியாகவும் தோன்றியது? ஆனால் அந்தத் தயக்கம் ஒரு வினாடிதான் இருந்தது. அச்சமயம் மோஸ்தராய் இருந்த முனை நீண்ட ஜோடுகளை ஜார் தரித்திருந்தார். அந்தக் காலால் தாம் சவாரி வந்த வால் வெட்டிவிடப்பட்ட குதிரையின் விலாவில் லேசாகக் குத்தினார். வெள்ளை கையுறை அணிந்த அவருடைய கை லகானைப் பிடித்தது. உடனே அங்கிருந்து பரிவாரங்கள் பின் தொடர அவர் சவாரி போனார். ஒவ்வொரு பட்டாளத்திற்கு முன்னாலும் சிறிது நேரம் நின்றுவிட்டு மேலும் மேலும் சவாரி போய்க்கொண்டேயிருந்தார். கடைசியாக பரிவாரங்களால் சூழப்பட்ட அவரைக் காணமுடியவில்லை. அவருடைய தொப்பியிலுள்ள வெள்ளைத் தூவல்கள் மட்டுமே ராஸ்டோவின் கண்களுக்குத் தோன்றின.

அந்தப் பரிவாரத்தில் இருந்த கனவான்களில் பால்கோன்ஸ்கியை ராஸ்டோவ் கவனித்தார். அவர் தமது குதிரையில் அலட்சியமாக மந்தமாக உட்கார்ந்து கொண்டிருந்தார். நேற்று அவருடன் செய்த வாய்ச்சண்டை அவருக்கு ஞாபகத்திற்கு வந்தபோது பால் கோன்ஸ்கியை சண்டைக்கு அழைப்பதா வேண்டாமா என்ற கேள்வி அவருடைய மனதில் தோன்றியது.

'இல்லை; செய்யக்கூடாது' என்று அவர் இப்போது நினைத்தார். 'இந்தச் சமயத்தில் அதைப்பற்றி நினைப்பதற்கோ அல்லது பேசுவதற்கோ அது அருகதையானதா? இம்மாதிரி ஒரு அன்பான நேரத்தில், ஒரு ஆர்வமான நேரத்தில் தன்னலத்தியாகம் செய்ய வேண்டிய நேரத்தில் தங்களுக்குள் உள்ள சுய சண்டைகள் எம்மாத்திரம். நான் எல்லோரையும் நேசிக்கிறேன்; எல்லோரையும் மன்னிக்கிறேன்'.

சக்கரவர்த்தி அனேகமாக எல்லா பட்டாளங்களையும் கடந்து விட்டார். அப்புறம், அவருக்கு முன்பாக பட்டாளங்கள் அணிவகுத்து கடந்து சென்றன. ராஸ்டோவ் தமது பெடூயின் குதிரை மீது சமீபத்தில் டெனைசாவிடமிருந்து விலைக்கு வாங்கிய குதிரை மீது தமது படையின் கடைசியில் பவனி போனார். அதாவது அவர் தனியாக சக்கரவர்த்தியின் முழு கவனம் விழும் விதத்தில் போனார்.

அவர் சக்கரவர்த்தியை அடையும் முன்பாக அவர் ஒரு சிறந்த சவாரிக்காரர் ஆகையால் தனது பெடூயினை, தார்ச் சக்கரத்தால் இரண்டு தடவைகள் குத்தி அழகான பாய்ச்சலில் போகும்படி

செய்தார். அந்தக் குதிரை பரபரப்பு அடையும்பொழுது அழகான பாய்ச்சலில் ஓடும். தன் முகத்தை நெஞ்சில் தொங்கவிட்டுக் கொண்டு வாலை நீட்டிக்கொண்டு சக்கரவர்த்தி கண்கள் தம்மீது இருப்பதை அறிந்ததுபோல, மிகச் சிலாக்கியமாகப் பாதங்களைத் தூக்கி வைத்துக் கொண்டு அழகான நடையில் தரையைத் தொடாமலேயே ஆகாயத்தில் பறப்பதுபோலப் பறந்து சென்றது.

ராஸ்டோவும் தமது கால்களைப் பின் பக்கமாக நீட்டித் தமது வயிற்றை முன்னால் சாய்த்து குதிரையோடு ஒன்றிப்போய் இருப்பது போலச் சேர்ந்து சக்கரவர்த்தி முன்பு மிகுந்த உற்சாகமான முகத்தோடு பவனி சென்றார். அவர் அச்சமயம் சென்றதைப்பற்றி டெனைசாவ் குறிப்பிட்டபோது 'ஒரு பிசாசு போவதைப் போல இருந்தது' என்று சொன்னார்.

'இந்த பாவ்லாகிராட் வீரர்கள் மிகச் சிறந்த பேர்வழிகள்' என்று சக்கரவர்த்தி குறிப்பிட்டார்.

'அட கடவுளே, அவர் இந்த வினாடியில் என்னை நெருப்பில் குதி என்று உத்தரவு இட்டிருந்தால் நான் எவ்வளவு சந்தோஷமாய் இருப்பேன்' என்று ராஸ்டோவ் நினைத்தார். அணிவகுப்பு முடிந்ததும் புதிதாய் வந்திருந்த அதிகாரிகளும் குட்டுஜோ அதிகாரிகளும் கூட்டம் கூட்டமாகப் பிரிந்து பரிசுகளைப்பற்றியும், ஆஸ்திரியர்களைப் பற்றியும் அவர்களுடைய சீருடைகளைப் பற்றியும் தங்களுடைய தளவரிசை பற்றியும், போனபார்ட்டைப் பற்றியும் அந்த போனபார்ட் இப்போது எவ்வளவு பெரிய தோல்வியை அடையப் போகிறார் என்பதைப் பற்றியும், முக்கியமாக பிரஷியாவிலிருந்து எஸ்ஸென் துருப்புகள் அங்கே வந்து அவர்களுடன் சேர்ந்த பிற்பாடு அந்த போனபார்ட்டுக்கு ஏற்படப்போகும் கதியைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஒவ்வொரு கோஷ்டியிலும் முக்கியமாக சக்கரவர்த்தி அலெக்ஜாண்டரைப்பற்றிய பேச்சு அதிகமாய் இருந்தது. அவருடைய ஒவ்வொரு வார்த்தையையும் ஒவ்வொரு அசைவையும் எக்களிப்போடு வர்ணித்துக்கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கெல்லாம் ஒரே ஒரு ஆசைதான். அதாவது சீக்கிரமாக சக்கரவர்த்தியின் தலைமையில் எதிரிகள் மீது பாயவேண்டும். சக்கரவர்த்தியே தலைமைவகித்து நடத்தினால் எதிரி யாராயிருந் தாலும் அவர்களால் ஜெயிக்க முடியாதவரே கிடையாது என்பது அவர்கள் நினைப்பு. அதேமாதிரிதான் ராஸ்டோவும் அங்கிருந்த அதிகாரிகளில் பலரும் அந்த அணிவகுப்புப் பார்வையிடலுக்குப் பின்னால் நினைத்தார்கள்.

இரண்டு சண்டைகளில் ஜெயித்தவர்களுக்கு எவ்வளவு நம்பிக்கை இருக்குமோ அதைவிட அதிகமான நம்பிக்கை அவர்கள் எல்லாருக்கும் வெற்றியில் இருந்தது.

## 3 9

படை அணிவகுப்புப் பார்வைகள் நடந்த மறுதினத்தில் தமது சிறந்த சீருடையை அணிந்துகொண்டு, வெற்றிக் காகத் தமது தோழரான பெர்க்கின் நல்லெண்ணங்களையும் பெற்றுக்கொண்டு பால்கோன்ஸ்கியைப் பார்ப்பதற்காக ஆல்முட்ஜுக்கு போரிஸ் சவாரி போனார். பால்கோன்ஸ்கியிடமிருந்த தமது நட்பை உபயோகப்படுத்தி ஒரு சிறந்த பதவியைப் பெறுவதற்காக அவர் போனார். ராணுவத்தில் மிகுந்த கவர்ச்சிகரமாய் இருந்த உதவியாளர் என்ற பதவியைப் பெறவேண்டும் என்பதுதான் அவருடைய நோக்கம். ‘ராஸ்டோவுக்கு ஒரே சமயத்தில் 10,000 ரூபிள்களை அவருடைய தந்தை அனுப்புகிறார். அந்த நிலைமையில் உள்ள ராஸ்டோவுக்கு யாரையும் கெஞ்ச வேண்டியதில்லை என்றும் சேவகன் வேலை வேண்டியதில்லையென்றும் தோன்றலாம். ஆகவே எனக்கு ஒரு வேலையை தேடிக்கொள்வதற்கு என் மூளையைத் தவிர வேறு எதுவும் கிடையாது. அதற்காக சந்தர்ப்பங்களை நான் விட்டுவிடக் கூடாது. சந்தர்ப்பங்களை நான் உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டும்’ என்று அவர் சிந்தனை செய்தார்.

அன்றைய தினம், ஆல்முட்ஜில் இளவரசர் ஆண்ட்ரூவை அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. அந்த இடத்தில்தான் ராணுவத்தலைமைக் செயலக்மும் ராஜதந்திர சேவையைச் சேர்ந்தவர்களும் முகாம் போட்டிருந்தார்கள். இரண்டு சக்கரவர்த்திகளும் தங்களுடைய பரிவாரங்கள் வீட்டுக்காரர்கள் ராஜசபையைச் சேர்ந்தவர்கள் ஆகியவர்களோடு அங்கேதான் முகாம் போட்டிருந்தார்கள். அந்த நகரத்தின் தோற்றத்தைப் பார்த்ததும் அந்த உயர்ந்த உலகத்திற்கு தாம் போய்ச் சேரவேண்டுமென்ற அவருடைய ஆசை இன்னும் பலமாயிருந்தது.

அவருக்கு அங்கே யாரையும் தெரியாது. தெருக்களில் பெரிய அந்தஸ்திலுள்ளவர்கள் தூவல் சொருகப்பட்ட தொப்பிகள் அணிந்து பதக்கங்களும் ரிப்பன்களும் அணிந்து ராஜசபையைச் சேர்ந்தவர்களும் ராணுவக்காரர்களும் அழகிய வண்டிகளில் போய்க்கொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லாரும் தமக்கு மேலாக அளவிட முடியாதபடி உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் என்று

அவருக்குத் தோன்றியது. அவருடைய காப்பாளர் சீருடை மிகுந்த எடுப்பாய் இருந்தபோதிலும் அவர் ஒரு அற்பமான அதிகாரியாகவே காணப்பட்டார். பார்த்தவர்கள் அவரை அறிந்துகொள்ள விரும்ப வில்லை. அவர் இருப்பதை அவர்களால் அறிந்து கொள்ளவும் முடியாது. சேனாதிபதி குட்டுஜோவின் செயலகத்தில் பால்கோன்ஸ் கியைப் பற்றி விசாரித்தார். அங்கிருந்த உதவியாளர்களும் டவாலி சேவகர்களும் கூட இவர் மாதிரி எவ்வளவோ அதிகாரிகள் அங்கே அடிக்கடி வந்து கொண்டிருப்பதைப் போலவும் இவர்களைப் பார்த்து வெறுத்து விட்டதைப் போலவும் இவரை நோக்கினார்கள். இப்படியெல்லாமிருந்தும் கூட ஒருவேளை இதே காரணத்தினால் இருந்தாலும் இருக்கலாம். அடுத்த நாளன்று நவம்பர் 15ம் தேதியன்று டின்னருக்குப் பின்னால் அவர் மறுபடியும் ஆல்முட்ஜுக்கு போனார். அங்கே குட்டுஜோவின் தங்குமிடத் திற்குப் போய் பால்கோன்ஸ்கியைப் பற்றி விசாரித்தார். இளவரசர் ஆண்ட்ரூ அங்கேதான் இருந்தார். ஆகவே முன்னால் நடனத்திற்கு உபயோகிக்கப்பட்டு வந்த ஒரு பெரிய கூடத்திற்கு அவரை போகும்படிச் சொன்னார்கள். அந்த இடத்தில் ஐந்து படுக்கைகள் கிடந்தன. பற்பல தட்டுமுட்டு சாமான்களும் ஒரு மேஜையும் நாற்காலிகளும் ஒரு கிளாவி கார்ட் என்ற வாத்யமும் அங்கிருந்தன. கதவுக்கு பக்கத்திலிருந்த ஒரு உதவியாளர் ஒரு பாரசீக கவுன் அணிந்துகொண்டு மேஜையின் முன்பு அமர்ந்து எழுதிக் கொண்டிருந்தார். சிவப்பாய் தடியாயிருந்த நெஸ்வைட்ஸ்கி ஒரு படுக்கையில் படுத்து தமது கைகளைத் தலைக்கு அடியில் வைத்துக் கொண்டு தமது பக்கத்திலிருந்த ஒரு அதிகாரியுடன் சிரித்துப் பேசிக்கெண்டிருந்தார். மூன்றாமவர் அந்த கிளாவி கார்ட் வாத்தியத்தில் ஒரு வியன்னா நடன கீதத்தை வாசித்துக் கொண்டிருந்தார். நான்காமவர் அந்த கிளாவிகார்ட் பெட்டியின் மீது படுத்துக்கொண்டு பாட்டு பாடிக்கொண்டிருந்தார். பால்கோன்ஸ்கி அங்கே இல்லை. போரிஸைப் பார்த்த பின்பும் அந்தக் கனவான்கள், தாங்கள் இருந்த இருப்புகளை மாற்றிக்கொள்ளவில்லை. எழுதிக் கொண்டிருந்த அந்த உதவியாளரைப் பார்த்து போரிஸ் கேட்டார். அவர் உடனே கோபமாய் திரும்பி பால்கோன்ஸ்கி அலுவலில் இருப்பதாவும் இடது பக்கத்திலுள்ள வாசல் வழியாக வரவேற்பு அறைக்குப் போனால் அவரைப் பார்க்கலாம் என்றும் சொன்னார். அவருக்கு போரிஸ் வந்தனம் தெரிவித்து விட்டு வரவேற்பு அறைக்குப் போனார். அங்கே பத்து அதிகாரிகளும் ஜெனரல்களும் இருந்தார்கள்.

அவர் அங்கே நுழைந்ததும் இளவரசர் ஆண்ட்ரூ கண்களைக் கீழ் நோக்கிக்கொண்டு (இது எனது அலுவலாய் மட்டும் இல்லாமல் இருந்தால் ஒரு வினாடிகூட உம்மிடம் பேசியிருக்கமாட்டேன் என்று கூறுவதைப் போன்று அவருடைய பணிவான களைப் படைந்த முகம் தெளிவாய் சொல்லுவதுபோல் இருந்தது) ரொம்ப துச்சமாக பதக்கங்கள் அணிந்துகொண்டிருந்த ஒரு வயோதிய ருஷ்ய ஜெனரல் தம்மிடம் பேசுவதை கவனித்துக்கொண்டிருந்தார். அந்த ஜெனரல் நிமிர்ந்து நின்று கொண்டிருந்தார். பாதங்களின் நுனியில் நிற்பது போல இருந்தது. அவருடைய சிவந்த முகத்தில் சிப்பாய்க் குரிய ஒழுங்கு காணப்பட்டது. அவர் எதையோ இளவரசர் ஆண்ட்ரூவிடம் அறிக்கையிட்டுக் கொண்டிருந்தார்.

'ரொம்ப சரி, அப்படியானால் தயவுசெய்து கொஞ்சம் காத்திருங்கள் என்று இளவரசர் ஆண்ட்ரூ, அந்த ஜெனரலிடம் ரஷ்ய பாஷையில் பேசினார். அவருக்கு ஏதாவது துச்சமாய் சொல்ல வேண்டும் என்று தோன்றும்போது பிரஞ்சு உச்சரிப்போடு ருஷ்ய மொழியில் பேசுவது அவர் வழக்கம். அப்படிப் பேசிக் கொண்டிருந்தபோது அவர் போரிஸை கவனித்து விட்டார். உடனே அந்த ஜெனரல் கூறுவதை லட்சியம் செய்யாமல் போரிஸுக்குத் தலையையாட்டி மகிழ்ச்சியான புன்னகையோடு அவரிடம் திரும்பினார். அவர் போகத் திரும்பியபோது அந்த ஜெனரல் அவர் பின்னாலேயே ஓடி தாம் கூறுவதை இன்னும் கொஞ்சம் கேட்கும் படி கெஞ்சினார்.

அதே வினாடியில் அங்குள்ள நிலைமையை தெளிவாக போரிஸ் அறிந்துகொண்டார். ராணுவத்தில் கீழ்ப்படிதல் கட்டுப்படுதல் முதலிய விதிகள் ராணுவச் சட்டத்தில் சொல்லப்பட்டிருப்பதை பட்டாளத்திலுள்ள அவரும் மற்றவர்களும் அறிவார்கள். ஆனால் அதைவிட முக்கியமான கீழ்ப்படிதல் என்பது ஒன்று இருப்பதாக அவர் யூகித்தது சரியாய்விட்டது. அந்த கீழ்ப்படிதல் என்ற வழக்கம்தான் இந்த முறுக்கான உடையணிந்த சிவந்த முகமுள்ள ஜெனரலை மரியாதையோடு காப்டன் இளவரசர் ஆண்ட்ரூவிடம் காத்திருக்கும்படி செய்தது. ஆனால் ஆண்ட்ரூவோ அவரை விட்டு விட்டு தமது மகிழ்ச்சிக்காக அந்த சிறிய அதிகாரியான ட்ரூபெட்ஸ்கோயிடம் பேசுவதற்கு தீர்மானித்தார். இனி எதிர்காலத்தில் இந்த எழுதப்படாத சட்டமுள்ள இடத்தில் தான் சேவை செய்ய வேண்டுமென்று போரிஸ் முன்னைவிட அதிகமாக உறுதிகொண்டார். அங்கிருந்த ஜெனரல் யுத்த முனையில் தம்மை வேண்டுமானால் நசுக்கிவிட முடியும். இளவரசர் ஆண்ட்ரூவுக்கு ஒரு சிபாரிசுக் கடிதம் தமக்குக் கிடைத்த மாத்திரத்திலேயே தாம்

பூமியிலிருந்து அந்த ஜெனரலுக்கு மேலாக உயர்ந்திருப்பதாக அவர் இப்பொழுது உணர்ந்தார். இளவரசர் ஆண்ட்ரூ அவரிடம் வந்து அவர் கையைப் பற்றினார்.

'நேற்றைய தினம் என்னை உம்மால் கண்டுபிடிக்க முடியாததைப் பற்றி நான் மிகுந்த வருத்தம் அடைகிறேன். நேற்று முழுவதுமாக அந்த ஜெர்மனியர்களோடு இங்குமங்கும் ஓடிக்கொண்டிருந்தேன். படையின் வியூகங்களைப்பற்றி ஆராய்வதற்காக வேராதருடன் நான் போயிருந்தேன். துல்லியமாக காரியங்கள் இருக்க வேண்டுமென்று ஜெர்மானியர்கள் ஆரம்பித்துவிட்டால் அதற்கு முடிவே கிடையாது.'

இளவரசர் ஆண்ட்ரூ சொல்வது எல்லாருக்கும் தெரிந்த விஷயம் என்பதைப்போல அவரை உணர்ந்து கொண்டதாக இளநகை காட்டினார். ஆனால் வேராதர் என்ற பெயரைே ா அல்லது ராணுவ வியூகம் என்ற பெயரையோ அவர் கேட்ப து இதுதான் முதல் தடவை.

'நல்லது, எனது அருமையான நண்பரே, நீர் இன்னமும் உதவியாளராக இருக்க வேண்டுமென்றே விரும்புகிறீரா? உம்மைப்பற்றி நான் நினைத்துக் கொண்டேயிருந்தேன்.'

'ஆமாம், நானும் நினைத்துக்கொண்டிருந்தேன்(போரிஸின் முகம் ஏதோ காரணத்தினால் நாணிச் சிவந்தது. அதை அவரால் தடுக்க முடியவில்லை) சேனாதிபதியைக் கேட்க வேண்டுமென்று நான் நினைத்துக்கொண்டிருந்தேன். இளவரசர் குராகினிடமிருந்து என்னைப்பற்றி அவருக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. நான் காப்பாளர் படையில் இருப்பதால் போர் முனைக்குப் போவதற்கு சந்தர்ப்பமே நேரிடாது. ஆகவே போர்முனைக்குப் போவதற்கு கேட்க விரும்பினேன்' என்று ஏதோ மன்னிப்பு கேட்கிறவரைப் போலப் பேசினார்.

'ரொம்ப சரி, ரொம்ப சரி அதைப்பற்றி நாம் பேசி முடிப்போம். இந்த கனவானின் அறிக்கையைப்பற்றி நான் போய் சொல்லிவிட்டு வருகிறேன். அதற்குப் பின்னால் நான் உம்முடனேயே இருப்பேன்' என்று இளவரசர் பதிலளித்தார்.

அந்த சிவந்த முகம் கொண்ட ஜெனரல் அந்த கனவான் (எழுதப் படாத சட்டத்தில் கண்டுள்ள கீழ்ப்படிதல் என்ற போரிஸின் சித்தாந்தத்தை அவர் ஒப்புக்கொண்டதாய் தெரியவில்லை.) இந்தத் தறுதலையான சிறிய அதிகாரியை தமது உரையாடலை உதவியாளரோடு முடிக்க விடாமல் தடுக்க வந்த இந்த சிறிய அதிகாரியை வெறித்த பார்வையோடு உற்று நோக்கினார். அச்சமயம்

அந்த ஜெனரலின் அறிக்கையைப் பற்றி சொல்வதற்காக இளவரர் ஆண்ட்ரூ உள்ளே போயிருந்தார். அந்த ஜெனரலின் வெறித்த பார்வையைக் கண்டு போரிஸுக்கு எக்கச்சக்கமான உணர்ச்சி ஏற்பட்டது. ஆகவே சேனாதிபதியின் அறையிலிருந்து இளவரசர் ஆண்ட்ருவின் வருகையை அமைதியின்றி எதிர்பார்த்து மறுபக்கம் திரும்பிக்கொண்டார்.

‘எனது அன்பானவரே நான் உம்மைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்தேன்’ என்று இளவரசர் சொல்லி, அவரை அந்த கிளாவிகார்ட் வாத்யம் இருந்த பெரிய அறைக்கு அழைத்துக் கொண்டு போனார்.

‘ஆனால் சேனாதிபதியிடம் போவதால் ஒரு பிரயோஜனமும் இல்லை. அவர் உம்மிடம் இனிமையான விஷயங்களை ஏராளமாகப் பேசுவார். உம்மை டின்னர் சாப்பிடக்கூட அழைப்பார். (அந்த எழுதப்படாத சட்டத்தில் அம்மாதிரி செய்வது நல்லது தானே என்று போரிஸ் நினைத்தார்)ஆனால் அதற்கு மேலாக எதுவும் நடக்காது. எங்களைச் சேர்ந்த மெய்க்காப்பாளர்களையும் உதவியாளர்களையும் கொண்ட ஒரு பட்டாளம் சீக்கிரமாக அமைக்கப்படப் போகிறது. இப்போது நாம் செய்யப்போவது இதுதான்; ஒரு உதவியாளர் ஜெனரலான ஒரு சிலாக்கியமான நபர் எனக்கு ஒரு நல்ல நண்பர் அவர் பெயர் இளவரசர் டால்காருகாவ். இப்போதுள்ள உண்மை என்னவென்றால் குட்டுஜோவும், அவருடைய பரிவாரங்களும் நாங்கள் எல்லோரும் செய்யக்கூடியது எதுவும் இல்லை. உமக்கு இது ஒருவேளை தெரியாமலிருக்கலாம். இப்போது எல்லாக் காரியங்களும் சக்கரவர்த்தியைச் சுற்றியே நிற்கின்றன. ஆகவே இந்த டால்காருகாவிடம் நாம் பேசுவோம். நான் எப்படியும் அங்கே போக வேண்டிய இருக்கிறது. உம்மைப்பற்றி நான் ஏற்கனவே அவரிடம் சொல்லியிருக்கிறேன். அவர் உம்மை தம்முடைய பரிவாரத்தில் எடுத்துக்கொள்ள முடியுமா என்பதைப் பார்ப்போம். இல்லையென்றால் வேறு அங்குள்ள ஒருவரிடம் வேலை பார்த்துக் கொடுக்கும்படி முயற்சி செய்வோம்.

ஒரு வாலிபருக்கு புத்திமதி சொல்வதிலோ அவருடைய வாழ்க்கையின் வெற்றிக்கு உதவி புரிவதிலோ இளவரசர் ஆண்ட்ருவுக்கு எப்போதுமே தனி கவனமுண்டு. தமக்கு என்று எந்த விதமான உதவியையும் பெறுவதற்கு அவருடைய பெருமை இடம் கொடுக்காது. மற்றவர்களுக்கு உதவி செய்வதற்காகப் போகிற காரணத்தினால் மற்றொரு வட்டாரத்துடன் அவர் தொடர்பு கொண்டிருந்தார். அந்த வட்டாரம்தான் வெற்றியைக் கொடுக்கக்

கூடியது. ஆகவே அது அவரைக் கவர்ந்திருந்தது. ஆகவே போரிஸின் கேளிக்கைக்கு அவர் உடனே சம்மதித்து அவரோடு டால்காருகாவை பார்ப்பதற்காகப் போனார்.

ஆல்முட்ஜில் சக்கரவர்த்திகளும் அவருடைய பரிவாரங்களும் தங்கியிருந்த அரண்மனைக்குள் அவர்கள் போகும்போது மாலையில் அதிக நேரமாகிவிட்டது.

அன்று யுத்தக் கவுன்ஸிலில் கூட்டம் நடைபெற்றது. இரண்டு சக்கரவர்த்திகளும் யுத்தக் கவுன்ஸிலின் அங்கத்தினர்களும் அதில் கலந்து கொண்டார்கள். குட்டுஜோவ் இளவரசர் இஷ்வார்ட் ஜென்பர்க் போன்ற வயோதிக ஜெனரல்களின் கருத்துகளுக்கு விரோதமாகவும் உடனே படைகள் முன்னேறி போனபார்ட்டோடு சண்டை தொடர்வது என்றும் அந்தக் கவுன்ஸிலில் முடிவாயிற்று. அந்தக் கூட்டம் அப்போதுதான் முடிவாயிருந்தது. அச்சமயத்தில் தான் போரிஸோடு இளவரசர் ஆண்ட்ரூ அரண்மனையில் டால்காருகாவைப் பார்ப்பதற்காக வந்து சேர்ந்தார். அன்றைய கூட்டத்தின் பரபரப்பு துலங்க ஒவ்வொருவரும் தலைமைச் செயலகத்தில் காணப்பட்டார்கள். வாலிபர்களின் குரல் அந்தக் கூட்டத்தில் வெற்றி பெற்றது. தாமதிக்க வேண்டுமென்றும் முன்னேறுவதற்கு முன்பாக ஏதோ ஒன்றிற்காகக் காத்திருக்க வேண்டுமென்றும் யோசனை கூறியவர்களின் குரல்கள் பூரணமாக் அமுக்கப்பட்டுவிட்டன. அவர்கள் சொன்ன வாதங்கள் எல்லாம், உடனே படையெடுப்பதால் நேரிடக்கூடிய அனுகூலங் களைக் காட்டி அடக்கப்பட்டுவிட்டன. வரப்போகிற சண்டையைப் பற்றியும் அதில் நிச்சயமாக கிடைக்கப் போகிற வெற்றியைப் பற்றியுமே அந்தக் கவுன்ஸிலில் வாதித்தார்கள். எல்லா அனுகூலங் களும் நமக்கு சாதகமாய் இருக்கின்றன. ஏராளமான படை பலம் நமக்கு இருக்கிறது. நெப்போலியனுக்கு இருப்பதை விட சந்தேகமில்லாமல் இவை உயர்ந்தவை. இவ்வளவு பலத்தையும் ஒரே இடத்தில் கூட்டி வைத்து இருக்கிறோம். சக்கரவர்த்தியின் பிரசன்னத்தால் துருப்புகள் உற்சாகமடைந்து போருக்குத் துடித்துக்கொண்டிருக்கிறார்கள். யுத்தம் எந்தக் முக்கியமான இடத்தில் நடக்கும் என்பதைப்பற்றி சகல விவரங்களையும் ஆஸ்திரிய ஜெனரல் வேராதர் அறிவார். அதே இடத்தில்தான் சென்ற வருஷம் ஆஸ்திரிய ராணுவம் ஒத்திகை நடத்தி அனுபவம் அடைந்தது ஒரு அதிருஷ்டமான விஷயம். அதே இடத்தில் இப்போது பிரஞ்சுக்காரரோடு போராட்டம் ஆரம்பமாகப் போகிறது. சுற்றுப்புறங்களிலுள்ள விவரங்களை எல்லாம் யுத்த படத்தில் காட்டப்பட்டிருந்தன. போனபார்ட் பலவீனம் அடைந்ததாகவும்

அதனால் ஒன்றும் செய்யாமல் சும்மா இருப்பதாவும் நினைத்தார்கள்.

டால்காருகாவ் என்பவர் உடனே போராட்டம் ஆரம்பிக்க வேண்டுமென்று வேகத்தோடு பேசுகிற கோஷ்டியில் ஒருவர். அப்போதுதான் யுத்தக் கவுன்ஸில் கூட்டத்திலிருந்து களைப்போடும் சோர்வோடும் திரும்பினார். ஆனால் அந்தக் கவுன்ஸிலில் தாம் பெற்ற வெற்றியைக் கண்டு ஆர்வமும் பெருமையும் கொண்டிருந் தார். தாம் கொண்டு வந்திருந்த சிபாரிசுக்காரரை இளவரசர் ஆண்ட்ரூ அவருக்கு அறிமுகப்படுத்தினார். இளவரசர் டால்காருகாவ் மரியாதையாகவும் அழுத்தமாகவும் அவர் கையைப் பற்றினார். ஆனால் போரிஸிடம் எதையும் சொல்லவில்லை. அச்சமயத்தில் கவுன்ஸிலில் நடந்த விஷயங்கள் அவர் மனதில் நிரம்பியிருந்த படியால் அதை அடக்க முடியாமல் இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்து பிரஞ்சுப் மொழியில் பேசினார்: 'ஆ எனது அன்பானவரே, இன்றைய போராட்டம் எப்பேர்ப்பட்ட போராட்டம் தெரியுமா அதில் நாங்கள் வெற்றிபெற்று விட்டோம். இதன் பலாக ஏற்படப் போகிற யுத்தத்தில் இதே மாதிரி வெற்றியைக் கடவுள் அளிப்பாராக. எப்படியிருந்தாலும், அந்த ஆஸ்திரியர்களிடமும் முக்கியமாக வேராதரிடமும் நாம் நியாயமாய் நடந்து கொள்ளவில்லை என்பதை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும். எவ்வளவு சிரத்தையோடு எவ்வளவு நுணுக்கத்தோடு சுற்றுப்புறங்களைப்பற்றி எவ்வளவு ஆழ்ந்த அறிவோடு, என்ன நடக்கக் கூடும் என்பதைப் பற்றி எவ்வளவு முன் யோசனையோடு மற்றும் எல்லா விவரங்களைப் பற்றியும் ஒரு சிறிய விஷயத்தைக் கூட விடாமல் கவனித்து வைத்திருக்கிறார்கள். தெரியுமா? இல்லை எனது அன்பானவரே இந்த சந்தர்ப்பத்தைப் போல வேறு சந்தர்ப்பங்கள் நமக்கு கிடைக்கப் போவது இல்லை. ருஷ்யர்களின் தீரமும் ஆஸ்திரியர்களின் நுணுக்கமான அறிவும் சேர்ந்து கலந்து நிற்கின்றன. இதைவிட ஒருவர் விரும்பக் கூடியது வேறு என்ன இருக்கிறது?'

'அப்படியானால் தாக்குவது என்பது முடிவாகத் தீர்மானமாய் விட்டதா' என்று பால்கோன்ஸ்கி கேட்டார்.

'எனது அன்பரே, போனபார்ட் நிச்சயமாகத் தமது பலத்தை இழந்துவிட்டார் என்பது உமக்குத் தெரியுமா?' என்று அவரிடமிருந்து சக்கரவர்த்திக்கு ஒரு கடிதம் வந்தது. இதைச் சொல்லிவிட்டு டால்காருகாவ் விசேஷ அர்த்தத்தோடு புன்னகை கொண்டார்.

‘அப்படியா! நெப்போலியன் என்ன சொல்கிறார்’ என்று பால்கோன்ஸ்கி கேட்டார்.

‘அவர் என்ன சொல்லமுடியும் டா. டா. டா. டா. டா. அம்மாதிரி தான். அவருக்கு எப்படியாது அவகாசம் வேண்டும். இப்பொழுது அவர் நமது கையில் இருக்கிறார். அது நிச்சயம். எல்லாவற்றையும் விட வேடிக்கையான விஷயம் என்னவென்றால் (திடீரென்று ஒரு சிரிப்போடு அவர் தொடர்ந்தார்)எம்மாதிரி அவரை நாம் அழைப்பது என்பது நமக்குத் தெரியவில்லை. பிரதிநிதி என்று அவரைக் கடிதத்தில் அழைக்க முடியாது. சக்கரவர்த்தி என்றோ கண்டிப்பாக அழைக்க முடியாது. ஆகவே ஜெனரல் போனபார்ட் என்றே அவர் விலாசமிடப்பட வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது’.

‘ஆனால், சக்கரவர்த்தி என்று அவரை ஒப்புக்கொள்ளாததற்கும் அவரை ஜெனரல் போனபார்ட் என்று அழைப்பதற்கும் இடையில் ஒரு வித்தியாசம் இருக்கிறது’ என்று பால்கோன்ஸ்கி குறிப்பிட்டார்.

‘அதே தான் விஷயம்’ என்று டால்காருகாவ் உடனே சிரித்துக் கொண்டு இடை மறித்தார். ‘பிலைபினை உமக்குத் தெரியும். ரொம்ப புத்திசாலித் தனமான ஆசாமி. அவர் ஒன்று சொன்னார். ஆக்ரமிப்புக்காரரே மனித சமூகத்தின் எதிரியே என்று நெப்போலியனை அழைக்கலாமென்று அவர் யோசனை கூறினார்’.

டால்காருகாவ் மகிழ்ச்சியோடு சிரித்தார்.

‘அவ்வளவுதானா’ என்றார் பால்கோஸ்கி.

‘எப்படியிருந்தாலும் அந்த பிலைபின்தான் ஒரு பொருத்தமான பெயரைக் கண்டு பிடித்துக் கொடுத்தார். ரொம்ப புத்திசாலி ரொம்ப கெட்டிக்காரர்.’

‘அது என்னது?’

‘அதாவது ‘‘பிரஞ்சு சர்க்காரின் தலைவர்’’ என்பதாகும்’ என்று ஒரு பரம திருப்தியோடு டால்காருகாவ் சொன்னார். ‘நன்றாய் இருக்கிறது அல்லவா?’

‘ஆமாம். ஆனால் நெப்போலியன் அதை மிகவும் வெறுப்பார்’ என்று பால்கோன்ஸ்கி கூறினார்.

‘ஆமாம், ரொம்ப வெறுப்பார். எனது சகோதரருக்கு அவரைத் தெரியும். அவருடன் இவர் டின்னர்கூட பல தடவைகளில் பாரிஸில் சாப்பிட்டிருக்கிறார். நெப்போலியனைவிட அதிகமான தந்திரமுள்ள அல்லது புத்திகூர்மையுள்ள ராஜதந்திரியை அவர் பார்த்தது இல்லை என்று அவர் சொல்லுகிறார். அதாவது பிரஞ்சுக்காரர்களின் சமார்த்தியமும் இத்தாலியக் காரர்களின்

நடிப்பும் கலந்த ஒரு ஆசாமி கோமகன் மார்க்கோவைப் பற்றியும் நெப்போலியனைப் பற்றியுமுள்ள ஒரு கதை உமக்குத் தெரியுமா? அந்த நெப்போலியனை எப்படிக் கையாளவேண்டுமென்பதை அறிந்தவர் கோமகன் மார்க்கோ ஒருவர்தான். அந்த கைக் குட்டையைப் பற்றிய கதை உமக்குத் தெரியுமா? ரொம்ப மகிழ்ச்சியான கதை!

பேச்சுக்காரரான அந்த டால்காருகாவ் ஒரு சமயம் போரிஸையும் ஒரு சமயம் இளவரசர் ஆண்ட்ரூவையும் பார்த்து நமது ஸ்தானாதிபதி மார்க்கோவைச் சோதிப்பதற்காக அவருக்கு முன்னால் வேண்டுமென்றே தமது கைக் குட்டையை போனபார்ட் கீழே போட்டுவிட்டு மார்க்கோவைப் பார்த்துக்கொண்டே நின்றார். அதாவது அந்த கைக்குட்டையை மார்க்கோ தமக்கு எடுத்துக் கொடுக்கட்டும் என்று நினைத்திருக்கலாம். ஆனால் மார்க்கோ என்ன செய்தார் தெரியுமா? தம்முடைய கைக்குட்டையை மாத்திரம் எடுத்துக் கொண்டார் போனபார்ட்டின் கைக்குட்டையைத் தொடவே இல்லை.

'பலே பேஷான விஷயம்' என்றார் பால்கோன்ஸ்கி. 'இளவரசே, இப்பொழுது இந்த வாலிபருக்காக உம்மிடம் சிபாரிசு செய்வதற்காக நான் வந்திருக்கிறேன் . நீர் பாரும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ பேசி முடிப்பதற்கு முன்பு ஒரு மெய்க் காப்பாளர் அங்கே வந்து டால்காருகாவை சக்கரவர்த்தி அழைப்பதாக சொன்னார்.

'ஓ, என்ன தொந்தரவு' என்று கூறிக்கொண்டே, வேகமாக எழுந்து இளவரசர் ஆண்ட்ரூவினுடையவும் போரிஸினுடயவும் கைகளை அழுத்திக்கொண்டு பேசினார். 'என்னால் என்ன செய்ய முடியுமோ அதை உமக்கோ அல்லது இந்த அருமையான வாலிபருக்கோ செய்ய மிகுந்த மகிழ்ச்சி அடைவேன் என்பது உமக்குத் தெரியுமே மீண்டும் போரிஸினுடைய கையை சிரத்தையான நல்ல நோக்கமுள்ள பரபரப்பான விளையாட்டோடு அழுத்திக் கொண்டு, 'இன்னொரு தடவை பார்க்கலாம்' என்றார்.

உயர் பதவிகளிலுள்ள வட்டாரங்களிடம் அவ்வளவு நெருங்கி இருக்கிறோம் என்பதை நினைத்துப் பார்த்தபோது போரிஸுக்கு மிகுந்த பரபரப்பு ஏற்பட்டது. பிரம்மாண்டமான அந்த ராணுவத்தில் அவர் ஒரு சிறிய உறுப்பு; கவனிக்கப்பட முடியாத ஒரு சிறிய அணு. அப்பேர்ப்பட்ட பிரம்மாண்டமான அந்தப் பட்டாளத்தை ஆட்டி வைக்கக்கூடிய வில் விசைகள் இங்கே இருக்கின்றன. இளவரசர் டால்காருகாவிற்குப் பின்னால் அவர்கள் தாழ்வாரத்திற்குப் போனார்கள். சக்கரவர்த்தியின் அறைகள் டால்காருகாவ் போன வாசல் வழியாக சிவிலியன் ஆடையில் ஒரு குள்ள மனிதர் வெளியே

வந்தார். அவருடைய முகம் புத்திசாலித்தனமாய் காணப்பட்டது. அவருடைய முன் நீண்ட நாடி, அவருடைய முகத்தின் அழகைக் கெடுக்காமல் ஒரு தனிப்பட்ட சுறுசுறுப்பான அடிக்கடி மாற்றக்கூடிய தோற்றத்தைக் கொடுத்தது. இந்தக் குள்ள மனிதர், ஒரு அன்னியோன்னிய நண்பரைப் போல டால்காருகாவைப் பார்த்து தலையை ஆட்டினார். இளவரசர் ஆண்ட்ரூவை நட்பில்லாத வெறித்த பார்வையோடு நோக்கி நேராக அவரிடம் நடந்து போனார். அப்படி செய்வதால் அவர் தமக்கு தலைவணங்குவார் என்றோ, அல்லது வழியை விட்டு விலகி நிற்பார் என்றோ அவர் நினைத்ததாகத் தோன்றியது. ஆனால் இளவரசர் ஆண்ட்ரூ எதையும் செய்யவில்லை. ஒரு வெறுப்புக் குறி அவர் முகத்தில் தோன்றியது. உடனே அந்த ஆசாமி மறுபுறமாகத் திரும்பி தாழ்வாரத்தின் வழியாக நடந்து சென்றார்.

‘அவர் யார்?’ என்று போரிஸ் கேட்டார்.

‘மிகுந்த முக்கியமானவர்களில் அவர் ஒருவர். ஆனால், என்னைப் பொருத்தவரையில், எனக்கு மிகவும் பிடிக்காதவர்களில் ஒருவர். அவர்தான் வெளிநாட்டு மந்திரி இளவரசர் ஆடம் ஜார்டோரிஸ்கி... இம்மாதிரி மனிதர்கள்தான் சமுதாயங்களின் விதிகளை நிர்ணயிக்கிறார்கள்’ என்று தம்மால் அடக்க முடியாத பெருமூச்சோடு பால்கோன்ஸ்கி சொன்னார். அவர்கள் அரண்மனையை விட்டு வெளியே வந்தார்கள்.

ராணுவம் தனது படையெடுப்பை மறுநாள் ஆரம்பித்தது. ஆஸ்டர்லிட்ஜ் யுத்த முனையில் இளவரசர் ஆண்ட்ரூவையோ டால்காருகாவையோ போரிஸ் மீண்டும் பார்க்கவில்லை. இஸ்மாயிலாவ் பட்டாளத்திலேயே அவர் கொஞ்சகாலம் தங்கியிருந்தார்.

## 3 10

இளவரசர் பாக்ரேஷனின் தலைமையிலிருந்த ராணுவத்தில்தான் டெனைசாவின் குதிரைப் பட்டாளமும் இருந்தது. அதிலே தான் நிக்கலஸ் ராஸ்டோவ் சேவை செய்து வந்தார். அந்த குதிரைப் பட்டாளம் முதல் நாள் இரவு தங்கிய இடத்திலிருந்து நவம்பர் 16-ந் தேதி காலையில் முன்னால் செய்த ஏற்பாட்டின்படி போர்முனைக்குப் புறப்பட்டது. சுமார் ஒரு வெர்ஸ்ட் (2/3 மைல்) தூரம் மற்ற இராணுவங்களின் பின்னால் போன பின்பு ரஸ்தாவில் நிறுத்தப்பட்டது. முதலில் ராஸ்டோவ்

கோசாக்குகளையும் முதலாவது இரண்டாவது குதிரைப் படைகளையும் அதற்குப் பின்னால் கால்நடைப் பட்டாளங் களையும் அதற்கும் பின்னால் பீரங்கிப் படைகளையும் தம்மைக் கடந்து போவதைப் பார்த்துக்கொண்டிருந்தார். ஜெனரல்களான பாக்ரேஷனும் டால்காருகாவும் அவர்களுடைய பரிவாரங்களோடு சவாரி போனார்கள். போராட்ட முனைக்குப் போவதற்கு முன்பாக அவர் முன்னால் அனுபவித்த அதே பீதி ஏற்பட்டது. அந்த பீதியைவெற்றிகொள்ள அதே மனப்போராட்டங்களும் தமக்கு அதன் மூலம் ஒரு உண்மையான குதிரை வீரர் என்ற சிறப்பான கௌரவம் கிடைக்கும் என்ற கனவுகளும் அவருக்குத் தோன்றின. ஆனால் இவ்வளவும் வீணாகிவிட்டன. ஏனெனில் அவர்களுடைய குதிரைப் படையை யுத்த முனைக்கு அனுப்பாமல் ரிசர்வில் வைத்து விட்டார்கள். ஆகவே நிக்கலஸ் ராஸ்டோவ் நாள் முழுவதிலும் மந்தமாகவும் எரிச்சலாகவும் தம் காலத்தைக் கழித்தார். காலை 9 மனிக்கு போர் முனையில் சுடுகிற சப்தங்களும் ஜெய கோஷங்களும் கேட்க ஆரம்பித்தன. காயம்பட்டவர்களை பின்னணிக்கு கொண்டு வந்து கொண்டிருந்தார்கள். ஆனால் அதிகமாய் இல்லை. கடைசியாக ஒரு பிரஞ்சு குதிரைப் படையைக் கொண்டுவந்தார்கள். அதைச் சுற்றிக் கோசாக்குகள் காவல் புரிந்து வந்தார்கள். ஆகவே போராட்டம் முடிந்துவிட்டது என்றும் அந்தப் போராட்டம் பெரியதாய் இல்லாவிட்டாலும் ஒரு வெற்றிகரமான போராட்டம் என்றும் தெளிவாய்த் தெரிந்தது. யுத்த முனையிலிருந்து திரும்பிய வீரர்களும் அதிகாரியும் அந்த பிரமாதமான வெற்றியைக் குறித்தும் விஷாவ் என்ற நகரைப் பிடித்ததைப் பற்றியும் பிரஞ்சு குதிரைப் படையைக் கைப்பற்றியதைப் பற்றியும் பேசிக்கொண்டிருந் தார்கள். முதல் நாள் இரவு உறைபனி பெய்து கொண்டிருந்தாலும் மறுநாள் பகலில் பிரகாசமாவும் சூரிய வெளிச்சமும் காணப்பட்டன. அந்த இலையுதிர் காலத்தின் மகிழ்ச்சியான பகல் நேரம் அன்றுகிடைத்த வெற்றிச் செய்திக்கு பொருத்தமானதாய் இருந்தது. அந்த வெற்றியைப் பற்றிய கதைகள் அந்தப் போராட்டத்தில் கலந்து கொண்டவர்கள் வந்து சொன்னது மட்டுமல்ல; ராஸ்டோவைக் கடந்து வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருந்த சிப்பாய்கள் அதிகாரிகள் ஜெனரல்கள் அவர்களுடைய பரிவாரங்கள் ஆகியவர்களின் முகத்தில் காணப்பட்ட மகிழ்ச்சியான தோற்றங் களும் அந்த வெற்றிச் செய்தியை கூறின.

யுத்தத்திற்கு முன்னால் ஏற்பட்ட பீதிகளையெல்லாம் நிக்கலஸ் வீணாக முதலில் அனுபவித்த போதிலும் இந்த சந்தோஷமான தினத்தில் அவருக்கு செய்யக்கூடிய வேலை எதுவும் இல்லாத படியால் அதிகமான சோர்வோடு காணப்பட்டார்.

இங்கே வாரும் ராஸ்டோவ். நமது கவலையை குடித்து மூழ்கடிப்போம் என்று டெனைசாவ் கத்தினார். ரஸ்தா ஓரமாக அவர் உணவுகளையும் ஒரு ஜாடியையும் வைத்துக்கொண்டு அமர்ந்திருந்தார்.

டெனைசாவின் அந்த பதார்தங்களைச் சுற்றி அதிகாரிகள் கூடியிருந்துகொண்டு உண்டும் பேசியும் வந்தார்கள்.

அதோ பாருங்கள். இன்னொன்றைக் கொண்டு வருகிறார்கள் என்று ஒரு அதிகாரி அங்கு வந்து கொண்டிருந்த பிரஞ்சுக் குதிரை வீரனைச் சுட்டிக்காட்டி சொன்னான். அந்த வீரனை இரண்டு' கோசாக்குகள் கால்நடையாக அழைத்துக்கொண்டு வந்தார்கள்.

ஒருவன் அந்த அழகிய பெரிய பிரஞ்சு குதிரையின் கடிவாளத்தைப் பற்றிக்கொண்டு வந்தான். அதை அந்தக் கைதியிடமிருந்து அவர்கள் கைப்பற்றிக்கொண்டார்கள்.

'அந்தக் குதிரையை எங்களுக்கு விற்று விடுங்களேன்?' என்று டெனைசாவ் கோசாக்குகளைப் பார்த்துக் கூறினார்.

'உங்களுக்கு விருப்பமிருந்தால் அப்படியே செய்கிறோம் மேன்மை தங்கியவரே. அதிகாரிகள் எழுந்து அந்தக் கோசாக்கு களையும் குதிரைகளையும் சுற்றி நின்றார்கள். அந்தப் பிரஞ்சுக் குதிரை வீரன் ஒரு அல்ஸேஷிய மாகாணத்தைச் சேர்ந்த வாலிபன். அவன் பேசிய பிரஞ்சு மொழி ஜெர்மன் உச்சரிப்போடு இருந்தது. பரபரப்பினால் தனக்கு மூச்சுவிட முடியவில்லை. அவன் முகம் சிவப்பாய் இருந்தது. அங்கே கொஞ்சம் பிரஞ்சு மொழி பேசுவதைக் கேட்டு தானும் அதிகாரிகளைப் பார்த்து முதலில் ஒருவரையும் பின்னால் மற்றொருவரையும் பார்த்துப் பேச ஆரம்பித்தான். தான் கைதியாக அகப்பட்டிருக்கமாட்டேனென்றும் அப்படி அகப்பட்டதற்கு தன்மீது குற்றமில்லை என்றும் தன் மேலதிகாரிகளின் தவறுதான் என்றும் அவன் சொன்னான். அங்கே ருஷ்யர்கள் இருக்கிறார்கள் என்று நான் சொல்லியும்கூட அதைக் கவனிக்காமல் சில குதிரைத் துணிகளைப் பறித்துக்கொண்டு வரும்படி அந்த மேலதிகாரி உத்தரவிட்டார் என்பதாகவும், அதனால் தான் அகப்பட்டுக் கொண்டதாவும் கூறினான். அவனுடைய பேச்சில் இடையிடையே எனது சிறிய குதிரையை தொந்தரவு செய்யாதீர்கள் என்று சொல்லிக்கொண்டு அந்த குதிரையை தடவிவிட்டுக் கொண்டிருந்தான். அவன் தான் எங்கே இருக்கிறான் என்பதை இன்னும் அறிந்து கொள்ளவில்லை போலத் தோன்றியது. இப்போது தான் கைதியாக பிடிபட்டதற்கு காரணங்களைச் சொல்லிய பின்பு தன்னுடைய அதிகாரிகளின் முன்பாக தான்

நிற்பதாக மனோராஜ்யம் செய்துகொண்டு தன்னுடைய ராணுவ ஒழுங்கையும் சேவையில் உள்ள தனக்குள்ள ஆர்வத்தையும் காட்டிக்கொண்டிருந்தான். பிரஞ்சு ராணுவத்தைப் பற்றி ரஷ்யர்களுக்கு ஒன்றும் தெரியாமல் இருந்தபடியால் அவனுடைய வருகை இந்தப் பின்னணி இடத்திற்கு ஒரு புதிய பிரஞ்சு ராணுவத்தின் சுற்றுணர்ச்சியைக் கொண்டு வந்ததுபோல் இருந்தது.

அந்தக் குதிரையை இரண்டு தங்க நாணயங்களுக்கு (ஒவ்வொரு தங்க நாணயமும் மூன்று தங்க ரூபிள்கள் பெறுமானவை) அந்த கோசாக்குகள் விற்றுவிட்டார்கள். ராஸ்டோவுக்கு சமீபத்தில்தான் பணம் வந்தது. ஆகவே அங்கிருந்த அதிகாரிகளில் அவர்தான் பணக்காரராயிருந்தார். அதனால் அவர் அந்தக் குதிரையை விலைக்கு வாங்கினார். 'ஆனால் என்னுடைய சிறிய குதிரையை தொந்தரவு செய்யாதீர்கள் என்று அந்த அல்ஸேஷியன் சுமுகமான பாவத்தோடு ராஸ்டோவிடம் குதிரையைக் கொடுக்கும்போது சொன்னான்.

அந்தக் குதிரை வீரனுக்கு தாம் அப்படியே செய்வதாக ராஸ்டோவ் இளநகையோடு பதில் சொலலிவிட்டுப் பணத்தைக் கொடுத்தார்.

'போகலாம், போகலாம்' என்று அந்தக் கோசாக்குகள் அந்தக் கைதியின் கையைத் தொட்டு போகும்படி செய்தார்கள்.

'சக்கரவர்த்தி, சக்கரவர்த்தி? என்ற குரல் திடீரென்று குதிரை வீரர்கள் மத்தியில் கேட்டது.

எல்லோரும் அங்கும் இங்குமாக பரபரப்போடு ஓடினார்கள். தமக்குப் பின்னால் பலர் வெள்ளை தோகை அணிந்த தொப்பியோடு குதிரைகளில் வருவதை ராஸ்டோவ் கண்டார். ஒரு வினாடியில் எல்லாரும் அவரவர்கள் ஸ்தானத்தில் அமர்ந்து காத்துக் கொண்டிருந் தார்கள்.

தாம் எம்மாதிரி தமது இடத்துக்கு ஓடி, குதிரையில் ஏறிக் கொண்டார் என்பதை ராஸ்டோவுக்குத் தெரியவோ ஞாபகப் படுத்திக்கொள்ளவோ முடியவில்லை. போர் முனைக்குப் போகவில்லையே என்ற அவருடைய வருத்தமும் அவருடைய சோர்வான உள்ளமும் அங்கிருந்தவர்களுடன் கலந்து இருப்பதற்கு அவருக்கு ஏற்பட்ட எரிச்சலும் உடனே போய்விட்டன. அதே வினாடியில் தம்மைப் பற்றிய சகல நினைப்புகளும் மறைந்தன. சக்கரவர்த்திக்கு சமீபத்தில் தாம் இருக்கிற சந்தோஷத்தில் அவர் மூழ்கியிருந்தார். அன்றைய தினத்தில் அவர் இழந்தவைகளுக் கெல்லாம் இதனால் ஈடு செய்து கொண்டதாக உணர்ந்தார். வெகு காலமாக எதிர்பார்த்துக்கொண்டிருந்த சந்தோஷ வினாடி

வரும்போது ஒரு காதலன் எப்படி சந்தோஷமாய் இருப்பானோ அதேமாதிரி அவர் சந்தோஷமாயிருந்தார். திரும்பிப் பார்ப்பதற்கு அவர்துணியவில்லை. திரும்பிப் பார்க்காமலேயே சக்கரவர்த்தியின் வருகையை உள்ளக் களிப்போடு அவர் உணர்ந்து வந்தார். அந்த சக்கரவர்த்தி வந்து கொண்டிருந்த கூட்டத்தின் குதிரைகளின் குளம்படி ஓசைகள் நெருங்கி வருவதிலிருந்து மட்டும் அவர்கள் நெருங்குகிறார்கள் என்பதை அவர் உணர்ந்ததாய் இல்லை. சக்கரவர்த்தி நெருங்க நெருங்க எல்லாம் பிரகாசம் அடைவது போலவும் அதிக மகிழ்ச்சி அடைவது போலவும் அதிக முக்கியத்துவம் அடைவது போலவும் அதிக கொண்டாட்டமாய் இருப்பது போலவும் அவருக்குத் தோன்றியபடியால் அவற்றி லிருந்தும் சக்கரவர்த்தி நெருங்கி வருவதை அவர் உணர்ந்து கொண்டார். ராஸ்டோவை நெருங்க நெருங்க அந்த சூரியன் அமைதியான கிரணங்களையும் கம்பீரமான ஒளியையும் சுற்றிலும் வீசுவதாகவும் அவற்றில் தாம் மூழ்கிவிட்டது போலவும் அவர் உணர்ந்தார். அச்சமயத்தில் சக்கரவர்த்தியின் குரலை அந்த இனிமையான அமைதியான கம்பீரமான குரலை ஆனால் படாடோபமில்லாத குரலை அவர் கேட்டார். ராஸ்டோவின் உணர்ச்சிகளுக்குப் பொருத்தமாக அமைந்தாற்போல அந்த இடத்தில் ஒரு பரிபூரண அமைதி நிலவியிருந்தது அச்சமயத்தில் சக்கரவர்த்தியின் குரல் கேட்டது.

‘இவர்கள் எல்லாரும் பவ்லாகாராட் குதிரை வீரர்களா? என்று அவர் கேட்டார். ‘இவர்கள் ரிசர்வ் படையைச் சேர்ந்தவர்கள். மாட்சிமை தங்கியவரே’ என்று ஒரு குரல்பதில் சொல்லியது. ஆனால் பாவ்லாகிராட் குதிரை வீரர்களா என்று கேட்ட குரலைக் கேட்டு விட்டு பின்னால்சொன்ன குரலைக் கேட்கும்போது அது வெறும் மனிதக் குரலாகவே தோன்றியது.

ராஸ்டோவுக்கு எதிராக சக்கரவர்த்தி கடிவாளத்தை இழுத்து தம் குதிரையை நிறுத்தினார். இப்போது சக்கரவர்த்தி அலெக்ஜாண்டரின் முகம் மூன்று நாட்கள்முன்பாக அணிவகுப்பில் பார்த்ததைவிட இன்னும் அழகாக இருந்தது. உள்ளக் களிப்பும் இளமையும் கள்ளங்கபடமில்லாத வாலிபமும் அந்த முகத்தில் தோன்றி 14 வயது வாலிபருக்குள்ள உயிர்த் துடிப்பை அவை காட்டின. என்றாலும் அந்த கம்பீரமான முகம்தான் சக்கரவர்த்தியின் முகமாகும். அந்தக் குதிரைப் படையை சக்கரவர்த்தி கண்கள் நோட்டம் இட்டபோது சுமார் இரண்டு வினாடிகள் ராஸ்டோவின் கண்களை சந்தித்தன. ராஸ்டோவின் உள்ளத்தில் என்ன ஓடிக் கொண்டிருக்கிறது என்று சக்கரவர்த்தி அறிந்தாரோ அறிய

வில்லையோ தெரியாது. (ஆனால் அவர் எல்லாவற்றையும் அறிந்து கொண்டார் என்று ராஸ்டோவுக்குத் தோன்றியது.) எபபடியிருந் தாலும் சுமார் இரண்டு வினாடிகள் ராஸ்டோவின் முகத்தை சக்கரவர்த்தியின் நீலக்கண்கள் நோக்கின. ஒரு மிருதுவான சாந்தமான ஒளி அந்தக் கண்களிலிருந்து வீசின. உடனே திடீரென்று அவர் தம்முடைய புருவங்களை மேலே உயர்த்திக்கொண்டு தமது குதிரையை திடீரென்று இடது காலால் தட்டி சவாரி போனார்.

போர் முனையில் பிரசன்னமாய் இருக்கவேண்டுமென்ற தமது ஆவலை அந்த வாலிப சக்கரவர்த்தியால் தடுக்க முடியவில்லை. ராஜசபையின் அங்கத்தினர்கள் தடுத்தும்கூட 12 மணிக்கு அவர் தங்கியிருந்த 3வது பட்டாளத்தின் முகாமிலிருந்து முன்னணி இடத்திற்கு சவாரி கிளம்பினார். அவர் குதிரைப் படைக்குச் சமீபமாக வருவதற்கு முன்பாக பல உதவியாளர்கள் அவரைச் சந்தித்துப் போராட்டத்தில் ஏற்பட்ட வெற்றியைத் தெரிவித்தார்கள்.

ஒரு முழு குதிரைப் படையையும் கைப்பற்றுவதில் முடிந்த இந்தப் போராட்டத்தை பிரஞ்சுக்காரர்களிடம் தாம் பெற்ற பெருமிதமான வெற்றி என்று சொல்லப்பட்டது.

ஆகவே சக்கரவர்த்தியும் ராணுவம் முழுவதுமே யுத்த களத்தில் வெடி மருந்து புகைகள் இன்னும் சூழ்ந்து கொண்டிருக்கும்போதே பிரஞ்சுக்காரர்கள் தோற்றுவிட்டார்கள் என்றும் அவர்கள் தங்கள் விருப்பத்திற்கு விரோத மாக பின் வாங்கி ஓடுகிறார்கள் என்றும் நினைத்தார்கள் சக்கரவர்த்தி கடந்துபோன சில நிமிஷங்களுக்குப் பின்னால், பாவ்லாகிராட் படையை முன்னேறும்படி உத்தர விட்டார்கள். ஒரு சிறிய ஜெர்மன் நகரமான விஷாவில் சக்கரவர்த்தியை மீண்டும் ராஸ்டோவ் பார்த்தார். சந்தை கூடுமிடத்தில் சக்கரவர்த்தி வருமுன்பாக பலமான போர் நடந்தது. அங்கே பலர் கொல்லப்பட்டும் காயமடைந்தும் கிடந்தார்கள். அவர்களை அப்புறப்படுத்துவதற்கு அவகாசம் கிடைக்கவில்லை தமது பரிவாரங்களை புடைசூழ தமது வாரி வெட்டிவிடப்பட்ட செம்பழுப்பு பெண் குதிரையின் மீது சக்கரவர்த்தி சவாரி செய்து வந்தார். ராணுவ அணிவகுப்புப் பார்வையின்போது அவர் சவாரி செய்து வந்தது வேறு குதிரை சக்கரவர்த்தி ஒரு பக்கமாக சாய்ந்து தமது தங்கக் கைக் கண்ணாடியை அளவோடு கையில் பற்றி கண்களில் வைத்து கீழே குப்புறக்கிடந்த ஒரு சிப்பாயைப் பார்த்தார். அவன் தலையில் தொப்பியில்லாமல் உடம்பெல்லாம் ரத்தமாய் இருந்தது. அந்த காயமடைந்த சிப்பாய் ரொம்ப ஆபாசமாகவும் பார்வைக்கு அருவெறுப்பான நிலைமையிலும் இருந்தான். அப்பேர்ப்பட்ட ஒருவன் சக்கரவர்த்தி அருகாமையில இருப்பது பொருத்தமாகுமா

என்று ராஸ்டோவ் நினைத்துப் பதறினார். சக்கரவர்த்தியின் உருண்டைத் தோள்கள் அந்தச் சிப்பாயைப் பார்த்ததும் ஒரு குளிர் நடுக்கம் பற்றியதைப்போல் நடுங்கின. இதை ராஸ்டோவ் கவனித்தார். தமது கால்களும் நடுங்க சக்கரவர்த்தி தமது தார்ச் சக்கரத்தால் குதிரையைத் தட்டினார் தன்னைச் சுற்றி இருந்தவை களைப்பற்றி கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் அந்தக் குதிரை நடந்து கொண்டதால் அது எவ்வளவு பழக்கப்பட்டதாய் இருக்க வேண்டும் என்று ராஸ்டோவ் நினைத்தார். ஒரு உதவியாளர் உடனே குதிரையிலிருந்து இறங்கி அங்கிருந்த ஒரு கட்டிலில் சிப்பாயைத் தூக்கிப்போடுவதற்கு உதிவிசெய்தார். அந்த சிப்பாய் முனங்கினார்.

'மெதுவாக, மெதுவாக; இன்று இதைவிட இன்னும் மெதுவாக உங்களால் செய்யமுடியாதா?' என்று சக்கரவர்த்தி அந்தக் காயம் அடைந்த சிப்பாயைவிட அதிகமாகக் கஷ்டப்படுகிறவர் போல சக்கரவர்த்தி சொல்லிவிட்டு அந்த இடத்தை விட்டுப் போனார்.

சக்கரவர்த்தியின் கண்களில் கண்ணீர் நிறைவதை ராஸ்டோவ் பார்த்தார். அங்கிருந்து அவர் புறப்பட்டு போகும்போது ஜார் டோரிஸ்கியைப் பார்த்து, 'யுத்தம் என்பது எவ்வளவு பயங்கரமானது, எவ்வளவு பயங்கரமானது' என்று சொல்லிக் கொண்டே போனார்.

முன்னணித் துருப்புகள் விஷாவ் என்ற ஊரின் முன்பாக எதிரிகளின் அணிகள் கண்ணுக்குத் தெரிகிற இடத்தில் நிறுத்தி வைக்கப்பட்டன. அந்த எதிர் அணிகள் அன்று முழுவதும் துப்பாக்கி குண்டுகளைப் பிரயோகித்த உடனேயே பின்வாங்க ஆரம்பித்தன. அந்த முன்னணித் துருப்புகளின் சேவைக்காக சக்கரவர்த்தி தெரிவித்த நன்றியையும் சக்கரவர்த்தி அளித்த பரிசுகளையும் பற்றி பிரதானப் படுத்தப்பட்டன. அந்த வீரர்களுக்கெல்லாம் அவர்களுடைய வாட்கா மதுவின் பங்கை இரட்டிப்பாக்கினார்கள். முதல் நாள் இரவைவிட அன்று இரவு கணப்பு மூட்டங்களின் நெருப்புகளும் சிப்பாய்களின் சந்தோஷப் பாடல்களும் அதிக உற்சாகத்தோடு ஒலித்துக்கொண்டிருந்தன. டெனைசாவ் மேஜர் என்ற பதவிக்கு தாம் உயர்த்தப்பட்டதற்காக ஒரு பாராட்டு விருந்து நடத்தினார். அதில் ராஸ்டோவ் ஏராளமாக குடித்திருந்தார். கடைசியில் சக்கரவர்த்தியின் ஆரோக்கியத்திற்காக வாழ்த்து கூறப்படும் வேலையை ராஸ்டோவ் மேற்கொண்டார். 'நம்மை ஆள்பவர் சக்கரவர்த்தி, என்று அவர்கள் எல்லோரும் உத்தியோக விருந்துகளில் சொல்லுவது வழக்கம். ஆனால் ராஸ்டோவ் அம்மாதிரி சொல்லவில்லை. 'நம்மை ஆளுகிறவர்' அந்த நல்ல கவர்ச்சிகரமான பெரிய மனிதரின் ஆரோக்கியத்திற்காக!, என்று சொன்னார். 'அவருடைய ஆரோக்கி

யத்துக்காகவும் அந்த பிரஞ்சுக்காரர்களின் நிச்சயமான தோல்விக் காகவும் நாம் குடிப்போமாக' என்றார்.

'முன்னால் ஷார்ன் கிராபெர்ன் கிராமத்தில் பிரஞ்சுக்காரர்களை முன்னேறவிடாமல் நாம் சண்டை செய்து தடுத்தது சாத்தியமானதாய் இருந்தால் இப்போது அந்த சக்கரவர்த்தியே போர் முனையில் நிற்கும்போது நாம் என்னதான் செய்ய முடியும். அவருக்காக நாம் எல்லோரும் சந்தோஷமாக மடிவோம். அப்படி அல்லவா, கனவான்களே? ஒரு வேளை நான் நன்றாக சொல்ல முடியாம லிருக்கலாம். ஏனெனில் நான் ஏராளமாய்க் குடித்துவிட்டேன். ஆனால் நான் அம்மாதிரியே உணர்கிறேன். நீங்களும் அதே மாதிரி உணர்கிறீர்கள் என்று நினைக்கிறேன். ஆகவே முதலாவது அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் ஆரோக்கியத்திற்காகக் குடியுங்கள் ஜே, ஜே.'

'ஜே, ஜே' என்ற கோஷத்தை உற்சாகத்தோடு அங்கிருந்த அதிகாரிகள் செய்தார்கள்.

குதிரைப் படையின் காப்டனான வயதான கிரிஸ்டன் என்பவர் 20 வயதான ராஸ்டோவைவிட உற்சாகத்திலோ உண்மை சிரத்தையிலோ எவ்விதத்திலும் குறையாமல் கோஷம் போட்டார்.

அதிகாரிகள் தங்கள் கோப்பைகளை காலிசெய்து கீழே வீசி உடைத்தார்கள். மற்ற கோப்பைகளில் கிரிஸ்டன் மீண்டும் நிரப்பி வந்தார். கால்சட்டையும் ஷர்ட்டும் அணிந்துகொண்டு அவர் சிப்பாய்களின் கணப்பு மூட்டங்களுக்குப் போனார். அவருடைய மீசை பெரிதாகவும், சாம்பல் வர்ணம் கொண்டதாகவும் இருந்தது. அவருடைய ஷர்ட்டின் முன்புறம் திறந்திருந்தபடியால் அவரின் வெள்ளை மார்பு நன்றாய்த் தெரிந்தது. அந்த கணப்பு மூட்டத்தின் நெருப்பு பிரகாசத்திற்கு முன்பு அவர் கம்பீரமாக நின்று தமது கையை மேலே ஆட்டினார்.

'வாலிபர்களே இதோ நம்மை ஆள்பவர் நமது சக்கரவர்த்திக்காக எதிரிகளின் மீது நமது வெற்றிக்காக ஜே' என்று தமது துணிவான வயதான குதிரை வீரரின் தொனியில் கோஷித்தார்.

குதிரை வீரர்கள் அவரைச் சூழ்ந்து கூடிக்கொண்டு பலத்த கோஷங்கள் செய்து மனப்பூர்வமாகக் கலந்து கொண்டார்கள்.

அன்று இரவு வெகு நேரத்திற்குப் பின்னால் எல்லோரும் பிரிந்து போன பின்பு டெனைசாவ், தம்முடைய செல்லப் பேர்வழியான ராஸ்டோவை தமது குள்ளக் கையால் தட்டிக்கொண்டிருந்தார்.

'யுத்தகளத்தில் காதல் கொள்வதற்கு ஒருவரும் இல்லாதபடியால் ஜார் சக்கரவர்த்தி மீது இவர் காதல் கொண்டுவிட்டார்' எனறு அவர் கூறினார்.

'அம்மாதிரியெல்லாம் கேலி செய்யவேண்டாம் டெனைசாவ், அது ஒரு உயர்தரமான ஒரு அழகான உணர்ச்சி...' என்று ராஸ்டோவ் இரைந்தார்.

'நான், நீர் சொல்வதை நம்புகிறேன். நம்புகிறேன், நண்பரே. நீர் சொல்வதை ஆதரிக்கிறேன்.'

'இல்லை. உம்மால் அறியமுடியவில்லை.'

ராஸ்டோவ் எழுந்தார். அங்கிருந்த கணப்பு மூட்டங்களுக் கிடையே உலாவினார். சக்கரவர்த்திக்காகத் தமது உயிரையே விடுவதில் ஏற்படக்கூடிய சந்தோஷத்தைப்பற்றி மனோராஜ்யம் செய்தார். சக்கரவர்த்தியின் உயிரைக் காப்பாற்றுவதற்காக என்று அவர் மனோராஜ்யம் செய்யத் துணிவு கொள்ளவில்லை. ஆனால் சக்கரவர்த்தியின் கண்முன்பாக தமது உயிரையே கொடுக்க வேண்டு மென்றே விரும்பினார். அவர் உண்மையில் ஜார் சக்கரவர்த்தி யிடமும் ருஷ்ய ராணுவத்தின் பெருமையிலும் எதிர்காலத்தில் வரப்போகிற வெற்றியிடமும் அவர் காதல் கொண்டிருந்தார். அம்மாதிரி உணர்ச்சியை அவர் ஒருவர்மட்டும்தான் கொண்டிருந்தார் என்று சொல்லமுடியாது. ஆஸ்தர்லிட்ஜ் போருக்கு முன்பாக இருந்த அந்தப் பெருமிதமான நாட்களில் ருஷ்ய இராணுவத் திலுள்ள பத்தில் ஒன்பது பேர்கள் ருஷ்ய ராணுவத்தின் பெருமை யிலும் ஜார் சக்கரவர்த்தியிடமும் காதல் கொண்டிருந்தார்கள்.

## 3

### 11

விஷாவ் என்ற இடத்தில் சக்கரவர்த்தி அடுத்த நாள் தங்கினார். அவருடைய வைத்தியரான வில்லியர் என்பவரைப் பல தடவைகளில் அவரைப் பார்ப்பதற்காக அழைத்தார்கள். சக்கரவர்த்திக்கு உடம்பு அசௌக்கியமாயிருக்கிற செய்தி தலைமைக் காரியாலயத்திலும் பக்கங்களிலு முள்ள துருப்புகளிடையேயும் பரவியது. அவர் எதுவும் சாப்பிட வில்லையென்றும் இரவு நன்றாகத் தூங்கவில்லையென்றும் சொன்னார்கள். காயம் பட்டவர்களையும் கொல்லப்பட்டவர் களையும் அவர் பார்த்ததால் அவருடைய மென்மையான உள்ளத்தில் பதிந்த தோற்றங்களே இந்த உடம்பு அசௌக்யத்திற்குக் காரணம் என்று சொல்லப்பட்டது.

அடுத்த நாள் அதிகாலையில் 17-ந் தேதியன்று ருஷ்ய சக்கரவர்த்தியைப் பார்க்க வேண்டுமென்ற கோரிக்கையோடு ஒரு சமாதானக் கொடியைப் பிடித்துக்கொண்டு ஒரு பிரஞ்சு அதிகாரி

போர் முனையின் முன்னணிக்கு வந்தார். அவரை விஷாவுக்கு அழைத்து வந்தார்கள். இந்த அதிகாரியின் பெயர் சாவாரி. சக்கரவர்த்தி அப்போதுதான் தூங்க ஆரம்பித்தபடியால் சாவாரி காத்திருக்க நேரிட்டது. நடுப்பகலில் சக்கரவர்த்தியிடம் அழைத்துச் சென்றார்கள். ஒரு மணி நேரம் கழித்து அந்த தூதரும் இளவரசர் டால்காருகாவும் பிரஞ்சு அணிவகுப்பின் முன்னணிக்குப் போனார்கள்.

நெப்போலியனோடு சக்கரவர்த்தி சந்திக்குமாறு ஒரு பேட்டியை ஏற்படுத்துவதற்காக அந்த சாவாரியை அனுப்பியதாக வதந்தி பரவியது. ஆனால் சக்கரவர்த்தி பேட்டி கொடுக்க மறுத்துவிட்டார். அதைக் கேட்ட ருஷ்ய ராணுவம் முழுவதுமே சந்தோஷமும் பெருமையும் கொண்டது. சக்கரவர்த்திக்குப் பதிலாக இளவரசர் டால்காருகாவை விஷாவ் போராட்டத்தில் வெற்றிபெற்ற வீரரை சாவாரியுடன் நெப்போலியனிடம் பேச்சு வார்த்தை நடத்துவதற்காக அனுப்பினார்கள். அப்பொழுதிருந்த நிலைமையில் யாரும் நம்ப முடியாவிட்டாலும் சமாதானத்திற்காக உண்மையான ஆசை கொண்டு நெப்போலியன் பேச்சு வார்த்தைகளை ஆரம்பித்திருப்பானானால் அதைப்பற்றி மேல் பேச்சு நடத்துவதற்காகவே டால்காருகாவ் அனுப்பப்பட்டார்.

அன்று மாலையில் டால்காருகாவ் திரும்பி வந்து நேராக ஜாரிடம் போனார். வெகு நேரம் அவரோடு தனிமையில் பேசிக் கொண்டிருந்தார்.

நவம்பர் 18-ம் தேதியன்றும் 19-ந் தேதியன்றும் இரண்டு நாட்கள் துருப்புகள் முன்னேறிப்போயின. சில துப்பாக்கிக் குண்டுகளுக்குப் பின்னால் எதிரியின் காவல் படையினர் பின் வாங்கினார்கள். 19-ந் தேதி நடுப்பகலிலிருந்து 20-ந் தேதி காலைவரையில் அந்த முக்கியத்துவம் வாய்ந்த ஆஸ்டர் லிட்ஜ் யுத்தம் ஆரம்பமாகிற வரையில் ராணுவத்தாரின் உயர் வட்டாரத்தில் பெரிய பரபரப்பான நடவடிக்கைகள் நடந்துகொண்டிருந்தன.

19-ந் தேதி நடுப்பகல் வரையில் நடவடிக்கைகளோ ஆவலோடு நடந்த பேச்சுகளோ முன்னும் பின்னும் போய் வருவதோ உதவியாளர்களை அனுப்புவதோ சக்கரவர்த்தியின் தலைமைச் செயலகத்திற்குள் மட்டும் அடங்கியிருந்தன. ஆனால் இந்த நடவடிக்கைகள் அன்று பிற்பகலில் குட்டுஜோவின் தலைமைச் செயலகத்திற்கும் கமாண்டர்களின் உதவியாளர்களுக்கும் வந்து சேர்ந்தன. மாலைக்குள்ளாக இந்த விஷயத்தை ராணுவத்திலுள்ள ஒவ்வொரு பக்கத்திற்கும் உதவியாளர்கள் பரப்பினார்கள். 19-ந் தேதி இரவிலிருந்து 20-ந் தேதி காலை வரையில் 80000 வீரர்கள் கொண்ட

அந்த நேசதேச துருப்புகள் கூடாரமில்லாத முகாமிலிருந்து கிளம்பி 6 மைல் நீளமுள்ள ஒரே பெருங்கூட்டமாகப் புறப்பட ஆரம்பித்தது.

அன்று காலையில் சக்கரவர்த்தியின் தலைமைச் செயலகத்தில் ஆரம்பமான அந்த ஒரு முகமான நடவடிக்கை பின்னால் தோன்றிய பெரும் நடவடிக்கைகளை ஆரம்பித்து வைத்தது. ஒரு பெரிய கோபுரக்கடிகாரத்தில் உள்ள பிரதான சக்கரம் முதலில் சுற்றுவதைப் போல அது இருந்தது. ஒரு சக்கரம் மெதுவாக முதலில் சுழல ஆரம்பிக்கிறது. அது இன்னொரு சக்கரத்தையும் பின் மற்றொரு சக்கரத்தையுமாக எல்லா சக்கரங்களும் சுழல ஆரம்பித்து வரவர வேகமாக சுழலத் தொடங்கிவிடுகின்றன. அந்த சக்கரங்கள் அம்மாதிரி சுற்றுவதால் கடிகாரத்திலுள்ள மணி அடிப்பதோ அல்லது மணியைக் காட்டும் எண்ணிச்கைகள் வெளியே தோன்றுவதோ அல்லது கடிகாரத்தின் கை‹›ள் ஒழுங்காக சுற்றி வருவதோ இவையெல்லாம் ஏற்படுகின்றன.

கடிகாரத்திலுள்ள இயந்திரம் எப்படி அமைக்கப்பட்டிருக்கிறதோ அதேமாதிரிதான் ராணுவ இயந்திரமும் அமைக்கபட்டிருக்கிறது. ஒரு தடவை ஒரு உத்வேகம் அல்லது ஒரு உந்தும் சக்தியை ஆரம்பித்து விட்டுவிட்டால் அது கடைசி முடிவுவரை ஓடிக்கொண்டிருக்கும். தன்னிடம் உந்தும் சக்தி வருகிறவரை எப்படி ஒரு சக்கரம் அசையாமல் இருக்குமோ அதே மாதிரி ராணுவத்திலும் உத்தரவு வந்து சேருகிறவரையில் உத்தரவைப் பெறாதவர்கள் சும்மாதான் இருப்பார்கள். சக்கரத்தின் பற்கள் ஒன்றை ஒன்று பற்றி அழுத்தும்போது சக்கரங்கள் ஓட ஆரம்பிக்கின்றன. ஆனால் ஒரு பக்கத்துச் சக்கரம் அசைவு எதுவும் இல்லாமல் நூறு வருஷங்களுக்கு அம்மாதிரியே இருக்கப் போவதுபோல காணப்படும். ஆனால் அந்தச் சக்கரத்தின் பற்களை விசை வந்து அமுக்கும்போது அந்த சக்கரமும் மற்ற சக்கரங்களைப் போல சுழல ஆரம்பிக்கிறது. ஆனால் எதற்காக அது சுழல்கிறது அதன் பலன் என்ன என்பது அதற்குத் தெரியாது.

நூற்றுக்கணக்கான சக்கரங்கள் ஒரு கடிகாரத்தில் சுற்றுவதனால் தான் அதன் கைகள் மெதுவாகவும் ஒழுங்காகவும் நகர்ந்து மணிகாட்ட முடிகிறது. அதுமாதிரி ஒரு லட்சத்து அறுபதாயிரம் ருஷ்யர்களும் பிரஞ்சுக்காரர்களும் சேர்ந்து செய்த மனிதப் பிரயத்தனங்களினால் -அவர்களுடைய உணர்ச்சிகள், ஆசைகள், துக்கங்கள், இழிவுகள், கஷ்டங்கள், பெருமையடித்தல்கள், பீதிகள் இவையெல்லாம்- மூன்று சக்கரவர்த்திகள் நடத்திய அந்த ஆஸ்டர்லிட்ஜ் சண்டையில் காணப்பட்டன. அவற்றின் பலனாகவே

மனித சமூக சரித்திரம் என்ற கடிகார முகப்பில் உள்ள மணிகாட்டும் கைகள் மெதுவாக நகர்ந்தன.

இளவரசர் ஆண்ட்ரூ அன்று சேனாதிபதியிடம் தொடர்ச்சியாக அலுவலில் இருந்தார்.

மாலை 6 மணிக்கு சக்கரவர்த்தியின் தலைமைச் செயலகத்திற்கு குட்டுஜோவ் சென்றார். சிறிது நேரம் ஜாருடன் தங்கிவிட்டு பின்னால் மன்னர் மாளிகையின் தலைமை அதிகாரியான கோமகன் டால்ஸ்டாயைப் பார்க்கச் சென்றார்.

டால்காருகாவிடமிருந்து வரப்போகிற போராட்டத்தைப் பற்றிய விவரங்களை அறிந்து கொள்வதற்கு பால்கோன்ஸ்கி விரும்பினார். குட்டுஜோவ் எதற்காகவோ அதிருப்தி அடைந்திருக்கிறார் என்றும் மன அமைதி குலைந்திருக்கிறார் என்றும் அவர் உணர்ந்தார். தலைமைச் செயலகத்தில் குட்டுஜோவிடம் எல்லோருக்கும் அதிருப்தி ஏற்பட்டிருந்தது என்றும் அவர் உணர்ந்தார். சக்கரவர்த்தி தலைமைச் செயலகத்திலும் ஒவ்வொருவரும் தங்களுக்குத் தெரிந்த விஷயங்கள் மற்றவர்களுக்குத் தெரியாது என்ற மனோபாவத்தில் அவரிடம் நடக்க ஆரம்பித்தார்கள். ஆகவே அவர் டால்காருகாவுடன் பேச வரும்பினார்.

'நல்லது. எனது அன்பரே சௌக்கியமாய் இருக்கிறீரா?' என்று பிலைபினுடன் தேநீர் அருந்திக் கொண்டிருந்த டால்காருகாவ் கேட்டார். 'நாளைதான் திருவிழா. உமது அந்த வயோதிக நண்பர் எப்படியிருக்கிறார்? அவருடைய மனம் சரியாய் இல்லையா?'

'அவருக்கு மனம் சரியாயில்லையென்று நான் சொல்ல முடியாது. ஆனால், அவர் அபிப்ராயத்தை மற்றவர்கள் கேட்க வேண்டுமென்று விரும்புகிறார் எனத் தோன்றுகிறது.'

'யுத்தக் கவுன்ஸிலில் அவருடைய அபிப்ராயத்தைக் கேட்டார்கள். இன்னமும் அவர் புத்திசாலித்தனமாய் பேசுவதாய் இருந்தால் அவர்கள் கேட்கத்தான் செய்வார்கள். ஆனால், மிதமாய்ப் போகவேண்டுமென்று சொல்லிக்கொண்டு ஏதோ ஒன்றிற்காக எதிர்பார்த்துக்கொண்டிருந்தால் அது சாத்யமில்லை. ஏனெனில் பெரிய யுத்தத்தைக் கண்டு போனபார்ட் பயப்படுவதைப் போல வேறு எதற்கும் அவர் பயப்படவில்லை.'

'ஆமாம், நீர் அவரைப் பார்த்தீர் அல்லவா? நல்லது. போனபார்ட் எப்படியிருக்கிறார்? அவரைப்பற்றி உமது அபிப்ராயம் என்ன?'

'ஆமாம், நான் அவரைப் பார்த்தேன். ஒரு பெரிய யுத்தத்துக்கு அவர் பயப்படுகிற மாதிரி வேறு எதைக் கண்டும் பயப்படுவ தில்லை' என்று டால்காருகாவ் மீண்டும் சொன்னார்.

நெப்போலியனுடன் பேசிவிட்டு அவர் வந்த பின்பு இந்த அபிப்ராயத்தை சொல்வதில் மிகுந்த பெருமை கொண்டவராகக் காணப்பட்டார். 'யுத்தத்தைக் கண்டு அவர் பயப்படாவிட்டால் பேட்டி வேண்டுமென்று எதற்காகக் கேட்கிறார்? எதற்காக பேச்சுவார்த்தை நடத்துகிறார்? எல்லாவற்றிற்கும் மேலாக அவருடைய துருப்புகள் எதற்காக அப்புறம் பின்வாங்கிக்கொண்டு இருக்கின்றன? அவர் இம்மாதிரி பின் வாங்குவது அவரது யுத்த முறைக்கே நேர் விரோதமாயிற்றே நான் சொல்வதைக் கேளும் அவர் ஒரு பொதுவான யுத்தத்தைக் கண்டு பயப்படுகிறார். அவருக்கு முடிவு காலம் வந்துவிட்டது. நான் சொல்வதை ஞபகத்தில் வைத்துக் கொள்ளும்.

'ஆனால் அவர் எப்படியிருக்கிறார் என்பதை எனக்குச் சொல்லும்' என்று மீண்டும் இளவரசர் ஆண்ட்ரு கேட்டார்.

'ஒரு பெரிய சாம்பல்வர்ண வெளிச் சட்டை அணிந்துகொண்டு அவர் இருந்தார். நான் அவரை மாட்சிமை தங்கியவரே என்று கூப்பிடவேண்டுமென மிகுந்த ஆவலாய் இருந்தார். ஆனால் நான் அப்படி ஒன்றும் செய்யாததால் அவர் ஏமாற்றம் அடைந்தார். அம்மாதிரி மதனிதர்தான் அவர். அதற்குமேல் எதுவும் இல்லை' என்று டால்காருகாவ் பதிலளித்துப் புன்னகையோடு பிலைபினை திரும்பிப் பார்த்தார்.

'அவர் இப்பொழுது நிச்சயமாக நமது கைகளில் அகப்பட்டிருக் கிறார். இந்த சமயத்தில் நாம் சும்மா காத்திருந்து அவர் தப்பிப் போவதற்கு அல்லது அவர் நம்மை ஏமாற்றுவதற்கு நாம் சந்தர்ப்பம் கொடுப்போமானால், அந்த வயோதிக குட்டுஜோவிடம் எனக்கு எவ்வளவு மரியாதை இருந்தாலும் நாம் எப்பேர்ப்பட்ட அசடுகள் என்று சொல்லவும் வேண்டுமா? சுவோராவையும் அவருடைய படிப்பினையையும் நாம் மறந்துவிடக்கூடாது. அதாவது எதிரி உன்னைத் தாக்கும்படியான நிலைமையில் இருக்கக்கூடாது. நீ அவனைத் தாக்க வேண்டும். எல்லா அனுபவங்களையும் கொண்ட வயதான தாமதக்காரர்களைவிட வாலிபர்களின் வன்மையும் ஊக்கமுமே யுத்தங்களில் நல்ல பலனைக் கொடுக்க முடியும் என்று நான் சொல்லுவேன்.

'அப்படியானால் எந்த மாதிரி நாம் அவரைத் தாக்கப் போகிறோம்? இன்று முன்னணிக்குப் போய் இருந்தேன். எதிரிகளின் மூலபலம் எங்கே இருக்கிறது என்று சொல்வது முடியாத காரியமாய் இருக்கிறது' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

எதிரியைத் தாக்குவதற்கு தாம் தயாரித்துள்ள ஒரு திட்டத்தை டால்காருகாவுக்கு விளக்கிச் சொல்ல அவர் விரும்பினார்.

‘ஓ அவையெல்லாம் ஒன்றுதான் என்று டால்காருகாவ் வேகமாய் சொல்லி, அங்கிருந்து எழுந்து மேஜைமீது ஒரு பெரிய யுத்தப் படத்தை விரித்தார். எல்லாவிதமான சம்பவங்களையும் எதிர்பார்த்தே திட்டம் போட்டிருக்கிறோம். பிரன் என்ற இடத்தில் எதிரி நிற்பானானால்...’

வேகமாகவும் தெளிவில்லாமலும் வேராதர் தயாரித்துள்ள பக்கவாட்டுத் தாக்குதலைப் பற்றிய திட்டத்தை இளவரசர் டால்காருகாவ் விளக்க ஆரம்பித்தார்.

இளவரசர் ஆண்ட்ரூ அதற்குப் பதில் சொல்லவும் தமது சொந்த திட்டத்தைப்பற்றிக் கூறுவதற்கும் ஆரம்பித்தார். அவருடைய திட்டம் வேராதர் திட்டத்தைப் போலவே நல்லதாய் இருக்கலாம். என்றாலும் வேராதர் திட்டம் முன்பே ஒப்புக் கொள்ளப்பட்டு விட்டபடியால் இவர் திட்டத்திற்கு அவசியமில்லை. வேராதர் திட்டங்களிலுள்ள குறைகளைப் பற்றியும் தமது திட்டங்களிலுள்ள உயர்வுகளைப் பற்றியும் இளவரசர் ஆண்ட்ரூ விளக்கிப் பேச ஆரம்பித்தார். அச்சமயம் இளவரசர் டால்காருகாவ் அவர் பேசுவதைக் கவனிக்காமல் நிறுத்தி, ஏதோ பாராக்குத்தனமாக இளவரசர் ஆண்ட்ரூவின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தார். யுத்தப் படத்தைப் பார்க்கவில்லை.

‘இன்றிரவு குட்டுஜோவின் செயலகத்தில் யுத்தக் கவுன்ஸில் கூட்டம் நடைபெறுகிறது. அங்கே வந்து நீர் இதையெல்லாம் சொல்லலாம்’ என்றார் டால்காருகாவ்.

‘நான் அப்படியே செய்கிறேன்’ என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லிவிட்டு, யுத்தப்படம் வைக்கப்புட்டிருந்த இடத்திலிருந்து அப்புறமாகப் போனார்.

‘கனவான்களே, நீங்கள் எதற்காக சிரமப்பட்டுக் கொண்டிருக் கிறீர்கள்?’ என்று பிலைபின் கேட்டார். அதுவரையில் இவர் களுடைய உரையாடல்களை அவர் ஒரு வேடிக்கையான புன்முறுவலுடன் கேட்டுக்கொண்டிருந்தார். இப்பொழுது ஒரு தமாஷ் செய்வதற்கு அவர் தயாராய் இருக்கிறார் என்பது தெரிந்தது.

‘நாளைய தினம் நமக்கு வெற்றி கிடைத்தாலும் சரி, தோல்வி கிடைத்தாலும் சரி, நமது ருஷ்ய துருப்புகளின் பெருமை இருக்கிறதே அதுமட்டும் பாதுகாப்பாக இருக்கிறது. உங்களுடைய குட்டுஜோவைத் தவிர, இந்த ராணுவத்தில் ஒரு பட்டாளத்திற்கு தலைவராகக் கூட வேறு ஒரு ருஷ்யர் கிடையாது. தளபதிகள் எல்லாம் ஹெர் ஜெனரல் விம்பென், லெ காம்டே டி லங்கரன், லே பிரின்ஸ் டிவிச்டென்ஸ்டின், லே பிரின்ஸ் ஹோஹன்லோஹே

கடைசியாக பிரஷ்பிரிஷ், இம்மாதிரியாக எல்லாம் போரிஷ் நாட்டுப் பெயர்களே.

'குண்டாமண்டிக்காரரே, கொஞ்சம் அமைதியாயிரும். நீர் சொல்வது உண்மையல்ல. இப்போது மிலாராடானிச் என்பவரும் டாக்குராவ என்பவருமான இரண்டு ருஷ்யர்கள் ராணுவத்தில் இருக்கிறார்கள். கோமகன் ஆராக்சீவ் என்பவருக்கு உடல் நலம் சௌக்யமாய் இருந்தால் அவர் 3-வது ஜெனரலாக வருவார்' என்று டால்காருகாவ் சொன்னார்.

'ரொம்ப சரி, ஜெனரல் குட்டுஜோவ் வெளியே வந்து விட்டார் என்று நினைக்கிறேன். உங்களுக்கு அதிருஷ்டமும் வெற்றியும் ஏற்படுவதாக, கனவான்களே' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொல்லிவிட்டு, டால்காருகாவ், பிலைபின் ஆகியோருடன் கை குலுக்கிய பின்பு வெளியே வந்தார்.

குட்டுஜோவுடன் அவர் ஜாகைக்கு திரும்பியபோது மௌனமாய் இருந்த குட்டுஜோவிடம் மறுநாளைய யுத்தத்தைப்பற்றி என்ன நினைக்கிறீர் என்று கேட்காமல் இளவரசர் ஆண்ட்ரூவால் இருக்க முடியவில்லை.

ஒரு கடுமையான நோக்கோடு குட்டுஜோவ் தமது உதவி யாளரைப் பார்த்தார். சிறிது தயங்கிவிட்டு சொன்னார்:-நாளைய யுத்தத்தில் நாம் தோற்றுவிடுவோம் எனறு நினைக்கிறேன். கோமகன் டால்ஸ்டாயிடம் இதை நான் சொல்லி சக்கரவர்த்தியடம் கூறும்படி கேட்டுக்கொண்டேன். ''அவர் என்ன பதில் சொன்னார் என்று நீர் நினைக்கிறீர் எனது அன்புள்ள ஜெனரலே? நான் சாதத்தையும் கறிகளையும் சாப்பிடுவதில் ஈடுபட்டிருக்கிறேன். ராணுவ விஷயங்களைப் பற்றி நீரே கவனித்துக் கொள்ளும்'' என்று அவர் சொன்னார். 'ஆமாம்... அதுதான் எனக்குக் கிடைத்த பதில்'

**3**

**12**

அன்று இரவு 9 மணிக்குப் பின்னால், தமது திட்டங்களோடு குட்டுஜோவின் காரியாலயத்திற்கு வேராதர் சென்றார். அங்கேதான் யுத்தக் கவுன்ஸில் கூடுவதாய் இருந்தது. சேனாதிபதியின் ஜாகைக்கு வருமாறு எல்லா கமாண்டர்களும் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தார்கள். இளவரசர் பாக்ரேஷன் அங்கு வர மறுத்துவிட்டார். அவர் தவிர மற்றவர்கள் எல்லாரும் குறிப்பிட்ட நேரத்தில் வந்த சேர்ந்தார்கள்.

அந்த சண்டையை நடத்துவதற்க வேராதர்தான் முக்கிய பொறுப்பு ஏற்றுக் கொண்டிருந்தார். குட்டுஜோவின் தயக்கமான தூக்கம்கொண்ட தோற்றத்திற்கு வேராதரின் ஆவலும்சுறுசுறுப்பும் நிறைந்த செய்கைகள் நேர்விரோதமாய் இருந்தன. குட்டுஜோவ்தான் யுத்த கவுன்ஸில் தலைவர். அன்றைய கூட்டத்திற்கும் அவர்தான் தலைமை வகித்தார். வரப்போகும் போராட்டத்திற்கு அதற் குள்ளாதகக் கட்டுக்கடங்கமல் போய்க்கொண்டிருக்கும் அந்த போராட்டத்திற்கு, தாமே தலைவராய் இருப்பதாக வேராதர் உணர்ந்தார். குன்றிலிருந்து கீழே ஓடும் ஒரு பாரமான வண்டிக்கு முன்னால் பூட்டப்பட்ட குரையைப் போல அவர் இருந்தார். அவர் வண்டியை இழுத்தாரா அல்லது அவரை வண்டி தள்ளியதா என்பது அவருக்குத் தெரியாது. ஆனால் இம்மாதிரி ஓடுவதால் என்ன முடிவுக்கு வந்து சேரும் என்பதை நினைப்பதற்குக்கூட நேரமில்லாமல் தலைகால் தெரியாமல் ஓடிக்கொண்டிருந்தார். அன்று மாலை எதிரிகளின் காவல் அணிக்கு இருதடவைகள் அவர்நேராகச் சென்று கவனித்து வந்தார். இரண்டு தடவைகளில் ருஷ்ய சக்கரவர்த்தியிடமும் ஆஸ்திரிய சக்கரவர்த்தியிடமும் அவர் சென்று விஷயத்தைச் சொல்லி விளக்கி வந்தார். தமது தலைமைக் செயலகத்திற்குப் போய் துருப்புகளின் வியூகத்தைப் பற்றிய விவரங்களைத் தயாரித்து விட்டு மிகுந்த களைப்போடு குட்டுஜோவின் காரியாலயத்திற்கு வந்து சேர்ந்தார்.

அவர் மிகுந்த சுறுசுறுப்பாயிருந்தபடியால், சேனாதிபதியிடம் மரியாதை காட்டவேண்டும் என்பதைக்கூட மறந்து போனார். சேனாதிபதியை இடைமறித்து அவரை நோக்காமலேயே, வேகமாகவும் தெளிவில்லாமலும் தம்மிடம் கேட்ட கேள்வி களுக்குப் பதில் சொல்லாமல் பேசிக் கொண்டேயிருந்தார். அவருடைய உடைகளிலெல்லாம் சகதி படிந்திருந்தது. சோர்வோடும் பரிதாபமாகவும் பராக்கு புத்தியோடும் காணப் பட்டார். ஆனால் அதே சமயத்தில் அகம்பாவத்தோடும் சுய நம்பிக்கையோடும் தோன்றினார்.

ஓஸ்ட்ராலிட்ஜ் என்ற இடத்திற்குப் பக்கத்தில் ஒரு கனவானின் மாளிகையில் குட்டுஜோவ் தங்கியிருந்தார். அங்கிருந்த பெரிய வரவேற்பு அறைதான் இப்பொழுது சேனாதிபதியின் செயலக அறையாக உபயோகிக்கப்பட்டு வந்தது. அந்த கூடத்தில் வேராதரும் யுத்தக் கவுன்ஸில் அங்கத்தினர்களும் குட்டுஜோவும் கூடினார்கள். அவர்கள் தேநீர் அருந்திக்கொண்டு இளவரசர் பாக்ரேஷனின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். கடைசியாக பாக்ரேஷனின் சேவகன் வந்தான். அவர் அந்தக் கூட்டத்திற்கு

வரவில்லையென்று சொல்லியனுப்பியதை அவன் கூறினான். இதை சேனாதிபதியிடம் சொல்வதற்காக இளவரசர் ஆண்ட்ரூ கூடத்திற்குள் வந்தார் அந்தக் கவுன்ஸில் கூட்டத்தில் ஆஜராய் இருக்கலாமென்று, அவருக்கு குட்டுஜோவ் முன்பாகவே அனுமதி கொடுத்திருந்ததால் அவர் அந்த கூடத்திலேயே தங்கினார்.

இளவரசர் பாக்ரேஷன் வரப்போவதில்லையாகையால் நாம் ஆரம்பிக்கலாம் என்று வேராதர் சொல்லிவிட்டு துரிதமாக தமது இருப்பிடத்தைவிட்டு எழுந்து ஒரு மிகப் பெரிதான படம் விரிக்கபட்டிருந்த மேஜையின் அருகே சென்றார். பிரன் என்ற இடத்தையும் அதன் சுற்றுப்புறங்களையும் அந்தப் படத்தில் காட்டப்பட்டிருந்தன.

தமது பருத்த கழுத்து காலருக்கு மேலே தப்பி ஓடுவதைப் போல துருத்திக்கொண்டிருந்தபடியால் தம்முடைய சீருடையின் பொத்தானைக் கழட்டிவிட்டுக்கொண்டு ஒரு தணிந்த நாற்காலியில் தமது தடித்த வயோதிக கைகளை ஒரே ஒழுங்கில் வைத்துக்கொண்டு குட்டுஜோவ் தூங்குகிற மாதிரி அமர்ந்திருந்தார். வேராதரின் குரலைக் கேட்டதும் மிகுந்த சிரமத்தோடு தமது ஒற்றைக் கண்ணை திறந்தார்.

'ஆமாம், உங்களுக்கு இஷ்டமிருந்தால் இப்பொழுதே ஆரம்பிக்கலாம். இப்போதே நேரமாகிவிட்டது' என்று அவர் கூறி தலையை ஆட்டிவிட்டு பின்னால் அதைத் தொங்கவிட்டு கண்ணை மூடினார்.

திட்டங்களை வாசித்துக் கொண்டிருந்தபோது அவர் தூங்குவதாக பாசாங்கு செய்கிறார் என்று யாராவது நினைத்திருந்தால் அவர் செய்த சப்தங்களிலிருந்து அதை அவை பொய்ப்பித்துவிட்டன. புதிய திட்டங்களைப்பற்றி தமக்குள்ள வெறுப்புகளையோ மற்றவைகளையோ கூட்டுவதைவிட அவர் இன்னும் அதிகமான முக்கியமான விஷயத்தில் ஈடுபட்டிருந்தார். அதாவது மனிதருக்கு மிகுந்த அவசியமான தடுக்க முடியாத உதவியான அந்த தூக்கத்தில் அவர் இறங்கிவிட்டார். அவர் உண்மையிலேயே தூங்கிக் கொண்டிருந்தார். ஒரு வினாடியைக்கூட இழக்க முடியாதவரைப் போல சுறுசுறுப்பாய் காணப்பட்ட வேராதர் குட்டுஜோவை நோக்கினார். அவர் தூங்குகிறாரா என்பதை அறிந்துகொண்டார். உடனே ஒரு யாதாஸ்தை எடுத்து உற்சாகமற்ற உரத்த தொனியில் வரப்போகும் போராட்டத்தில் படை வியூகங்கள் எப்படியிருக்கு மென்பதைப் பற்றி அடியில் கண்டுள்ள தலைப்போடு கூடிய விஷயத்தை வாசிக்க ஆரம்பித்தார்:-

'கோபெல்னிட்ச், சாக்கால்னிட்ஜ் ஆகிய இடங்களுக்குப் பின்னால் எதிரியின் துருப்புகளைத் தாக்குவதற்கு 1805-ம் வருஷம் நவம்பர் 30-ம் தேதியன்று நமது படை வியூகங்கள் புறபபடும் விவரங்கள் ஆவன'.

அந்த வியூக அமைப்புகள் மிக்க சிக்கல்கள் ஆனதாகவும் கஷ்டமானதாகவும் இருந்தன அவை பின்வருமாறு:-

'எதிரியின் இடது பக்கவாட்டு, மரங்கள் அடர்ந்த குன்றுகளில் இருக்கும் வலது பக்கவாட்டு கோபெல்னிட்ஜ் சாக்கால்னிட்ஜ் வரை நீண்டிருக்கும். அங்கிருந்த குளங்களுக்குப் பின்னால் அவை இருக்கும். நம்முடைய இடது பக்கவாட்டு, எதிரியின் வலது பக்கவாட்டிற்கு அதிகமாக நீண்டிருப்பதால் எதிரியின் வலது பக்கவாட்டைத் தாக்குவது நமக்கு அனுகூலமாய் இருக்கும். முக்கியமாக சாக்கால்னிட்ஜ் கோபெல்னிட்ஜ் ஆகிய கிராமங்களை நாம் கைப்பற்றிக் கொண்டால் அவனுடைய பக்கவாட்டை நாம் தாக்கி அவனை ஷ்லாபானிட்ஜ் என்ற இடத்திற்கும் தெராஸா காட்டிற்கும் மத்தியிலுள்ள இடத்தில் அவனை விரட்டித் துரத்த முடியும். அப்படித் துரத்துவதால் ஷ்லாபானிட்ஜ் பிலாவிட்ஜ் ஆகிய இடங்களில் நமது துருப்புகளை அணி கலையாமல் கொண்டுபோக முடியும் ஏனெனில் அந்த இடங்கள்தான் எதிரிக்கு முன்பாக பாதுகாப்பாய் இருக்கின்றன. இந்தக் காரியத்தைச் செய்வதற்காக இதை... செய்யவேண்டியது அவசியமாய் இருக்கிறது. முதல் பட்டாளம்... இரண்டாவது பட்டாளம்... மூன்றாவது பட்டாளம்...' இம்மாதிரியாக வேராதர் வாசித்தார்.

அந்தப் படை வியுகங்களைப் பற்றிய கடினமான விஷயங்களை வேண்டா வெறுப்போடு ஜெனரல்கள் கேட்டுக்கொண்டிருந் தார்கள். ஒரு உயரமான அழகிய தலை முடியுள்ள ஜெனரல் பக்ஸ் ஹெளடன் சுவரில் சாய்ந்து நின்றுகொண்டு, ஒரு எரியும் மெழுகுவர்த்தியை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் நடந்தவைகளை கவனிப்பதாகத் தெரியவில்லை. தாம் கவனிப் பதாகத் காட்டிக்கொள்ள வேண்டுமென்று நினைத்ததாகவும் தெரியவில்லை. வேராதருக்கு நேர் எதிராக, பளபளப்பான தமது விரிந்த கண்களை வேராதர்மீது நோக்கிக் கொண்டு தமது மீசையை மேலே முறுக்கிவிட்டுக்கொண்டு கட்டுமஸ்தான மிலாராடாவிச் என்பவர் ராணுவ மோஸ்தயில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவருடைய முழுங்கைகளை வெளியே நீட்டி முழுங் கால்களில் கைகளை வைத்துக்கொண்டு தோள்களை நிமிர்ந்து அமர்ந்திருந்தார். அவரும் பிடிவாதமான மௌனமாக அமர்ந்து வேராதரின் முகத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தார். அந்த ஆஸ்திரிய தளபதி

பேசி முடித்த பின்பே தமது பார்வையைத் திருப்பினார். பின்னால் ஒரு முக்கியத்துவப் பார்வையோடு மிலாராடாவிச் மற்ற ஜெனரல்களை நோக்கினார். ஆனால், அவருடைய முக்கியத்துவப் பார்வையிலிருந்து இதுவரை சொல்லியவைகளை அவர் ஒப்புக் கொள்கிறாரா, ஒப்புக் கொள்ளவில்லையா, அல்லது அந்த ஏற்பாடுகளைப்பற்றி திருப்தி அடைகிறாரா திருப்தி அடைய வில்லையா என்பதை ஒருவராலும் சொல்ல முடியாது. வேராதருக்கு அடுத்தபடியாக கோமகன் லாங்கரன் ஒரு சாதுர்யமான புன்னகையோடு அமர்ந்திருந்தார். அந்த சாதுர்யமான புன்னகை தென் பிரான்ஸுக்கு தனிப்பட்ட பெருமை உள்ள அவருடைய முகத்தைவிட்டு நீங்கவேயில்லை. அறிக்கை வாசிக்கப்பட்ட அந்த நேரம் முழுவதிலும் தமது மெல்லிய விரல்களால் தாம் கழற்றி விட்டுக் கொண்டிருந்த ஒரு தங்கப் பொடி டப்பாவையே பார்த்துக் கொண்டிருந்தார் அந்த பொடி டப்பிமீது ஒரு படம் காணப்பட்டது. ஒரு நீளமான வாக்கியத்தை வாசித்தபோது மத்தியில் தமது பொடி டப்பியை கழற்றுவதை நிறுத்தி தமது தலையை நிமிர்த்தினார். அவருடை மெல்லிய உதடுகளின் ஓரத்தில் வெறுப்பான ஒரு மரியாதை காணப்பட்டது. ஏதோ சொல்லப்போவது போல வேராதரை அவர் இடை மறித்தார். ஆனால் அந்த ஆஸ்திரிய ஜெனரல் கோபமாக முகம் சுழித்து தமது முழங்கைகளை முன்னால் நீட்டி உம்முடைய அபிப்பராயத்தை சொல்ல வேண்டுமானால் பின்னால் சொல்லலாம். அந்தப் படத்தைப் பார்த்து நான் சொல்வதைக் கேளும் என்று கூறுவது போல தாம் வாசித்து வந்ததை விடாமல் தொடர்ந்து வாசித்தார். குழப்பமான தோற்றத்தோடு லாங்கரன் தமது கண்களை மேலே உயர்த்தினார். மிலாராடாவிச் என்பவரைத் திரும்பிபார்த்து ஏதோ விளக்கம் கேட்பவரைப் போல விழித்தார். ஆனால் அவருடைய அர்த்தமற்ற அசையாத பார்வையைக் கண்டதும் தமது பார்வையை சோகத்தோடு கீழே நோக்கி மீண்டும் தமது பொடி டப்பியைச் கழற்ற ஆரம்பித்தார்.

ஒரு பூகோள பாடம்போல் இருக்கிறது என்று தமக்குள்ளாக பிறருக்குக் கேட்காத தொனியில் முணுமுணுத்துக்கொண்டார்.

ப்ரிஜ்பிஜேவ்ஸ்கி என்பவர் மரியாதையுடனும் கௌரவமான அடக்கத்துடனும் வேரராதர் பேசுவதை ஆவலோடு கேட்பவரைப் போல தமது காதில் கை வைத்து அப்பக்கமாகத் திரும்பியிருந்தார்.

குள்ளமான டாக்குராவ் வேராதருக்கு எதிரில் அமாந்திருந்தார். கூர்ந்த கவனமும் அடக்கமும்கொண்ட தோற்றத்தோடு அங்கு விரிக்கப்பட்டிருந்த படத்தைக் குனிந்து பார்த்து படை வியூகங்களின் அமைப்புகளையும் தமக்குப் பழக்கமில்லாத அந்த

சுற்றுப் புறங்களையும் உண்மை சிரத்தையோடு ஆராய்ந்து பார்த்தார். தமக்குத் தெளிவாய் கேட்காத வார்த்தைகளையும் அந்த கிராமங்களின் மனதிற்குப் புரியதாத பெயர்களையும் திரும்பச் சொல்லும்படி அவர் வேராதரைக் கேட்டார் வேராதர் அதேமாதிரி திரும்பச் சொல்லிய பின்பு டாக்குராவ் அவைகளைக் குறித்துக் கொண்டார்.

வேராதரின் வாசிப்பு ஒரு மணி நேரத்திற்கு மேல் ஆயிற்று அது முடிந்ததும் தாம் பொடி டப்பியைச் சுழற்றுவதை லாங்கரன் நிறுத்திக்கொண்டார். வேராதரையோ அல்லது வேறு எவரையுமோ பார்க்காமல் அவர் பேச ஆரம்பித்தார் அதாவது எதிரி நகர்ந்து கொண்டே இருப்பதால் அவன் எங்கிருக்கிறான் என்பதை அறியவே முடியாது. இந்த நிலைமையில் அவன் ஒரு இடத்தில் இருப்பதாக நினைத்துக்கொண்டு இந்தத் திட்டத்தை நிறைவேற்றி வைப்பது எவ்வளவு கஷ்டமாதனமாய் இருக்கும் என்று அவர் கூறினார். லாங்கரன் சொன்ன ஆட்சேபணைகள் எல்லாம் ரொம்ப சரியானவைகளே. ஆனால் அவர் பேசியவைகளின் நோக்கம் ஜெனரல் வேராதருக்கு புத்தி புகட்டுவதைப்போல் இருந்தது. பள்ளிக்கூடத்துச் சிறுவர்களுக்குச் சொல்லுவதைப்போல தமது வியூகங்களைப் பற்றி அவ்வளவு சுயநம்பிக்கையோடு ஜெனரல் வேராதர் வாசித்தார். ஆனால் அங்கிருப்பவர்கள் முட்டாள்கள் அல்ல என்றும் ராணுவ விவகாரங்களில் அவருக்குப் புத்தி சொல்லக்கூடியவர்கள் அங்கிருக்கிறார்கள் என்றும் அவர் ஜெனரல் வேராதருக்கு சொல்ல விரும்பியதைப் போலத் தோன்றியது.

வேராதரின் ஒரே மாதிரியான வாசிப்பு சப்தம் நின்றதும் குட்டுஜோவ் தமது கண்ணைத் திறந்தார். தூக்கத்தைக் கெடுக்கக் கூடிய ரீங்கார சப்தத்தோடு ஓடிக்கொண்டிருக்கும் ஒரு மில் சக்கரம் திடீரென்று நின்றுவிட்டால் அந்த மில்காரன் எப்படி விழிப்பானோ அதே மாதிரி குட்டுஜோவ் விழித்தார். லாங்கரன் சொல்லியதைக் கேட்ட அவர் 'இன்னும் அந்த முட்டாள்தனமான வேலையில்தான் இருக்கிறீர்களா?' என்று சொல்லுவரைப் போல குட்டுஜோவ் மீண்டும் தமது கண்ணை அவசரமாய் மூடிக்கொண்டு தமது தலையை பின்னும் அதிகமாகத் தொங்கவிட்டார்.

அந்த ராணுவ திட்டத்தின் கர்த்தாவான வேராதரின் அசட்டுப் பெருமையை எவ்வளவு கடுமையாய் கண்டிக்க முடியுமோ எவ்வளவு தூரம் லாங்கரன் கண்டித்தார். போனபார்ட்டை நாம் தாக்குவதற்கு முன்பாக அவர் நம்மை சுலபமாகத் தாக்கிவிடலா மென்றும் அப்படிச் செய்து இந்தத் திட்டம் முழுவதையும் உபயோகமில்லாமல் செய்துவிட முடியுமென்றும் அவர்

சொன்னார். வேராதர் உறுதியான துச்சமான புன்சிரிப்போடு எல்லா ஆக்ஷேபணைகளுக்கும் பதில் சொன்னார் என்ன ஆட்சேபணைகள் வந்த போதிலும் அவற்றிற்கெல்லாம் பதில் கூறத் தயாராய் இருந்தவரைப் போலத் தோன்றியது.

'அவர் நம்மைத் தாக்க கூடுமானால் இன்று அவர் செய்திருக் கலாம்' என்றார் அவர்.

'ஆகவே அவர் பலம் இல்லாதவராக இருக்கிறார் என்று நீர் நினைக்கிறீரா? என்றார் லாங்கரன்.

'கூடியமட்டும் அவருக்கு 40, 000 வீரர்கள் இருப்பார்கள்'என்று வேராதர் புன்னகையோடு பதிலளித்தார். ஒரு வீட்டுக் கிழவி ஒரு வியாதியை குணப்படுத்தும் விதத்தைப் பற்றி ஒரு டாக்டரிடமே சொல்ல விரும்புவாளானால் அவர் எப்படி புன்னகை காட்டி கேட்டுக் கொண்டிருப்பாரோ அம்மாதிரி இருந்தது வேராதரின் புன்னகை.

'அப்படியானால் நம்முடைய தாக்குதலை அவர் எதிர் பார்த்துக்கொண்டிருந்தால் அவர் தமக்கு அழிவையே தேடிக் கொள்கிறார்' என்றுலாங்கரன் நுட்பமாக கேலிப் புன்சிரிப்போடு பேசி, மிலாராடாவிச் என்ற தமது பக்கத்திலிருந்தவரின் ஆதரவை எதிர்பார்த்து சுற்றித் திரும்பி நோக்கினார்.

ஆனால், அங்கிருந்த ஜெனரல்கள் எதைப் பற்றிப் விவாதித்துக் கொண்டிருந்தார்களோ அதைவிட்டு வேறு எதையோ மிலாராடாவிச் அச்சமயம் யோசித்துக்கொண்டிருந்தார்.

'அடக் கடவுளே, நாளை அவைகளையெல்லாம் நாம் யுத்த களத்தில் பார்த்து விடுவோம்' என்றார் அவர்.

தம்முடைய திட்டத்தைப் பற்றி தாம் மட்டுமல்ல சக்கரவத்திகளும் அவை சரியானவையென்று ஒப்புக்கொண்டு விட்டார்கள் அதன் பின்பு இம்மாதிரி ருஷ்ய ஜெனரல்களிட மிருந்தே எதிர்புகள் வருவது என்பது விசித்திரமாகவும், கேலிக்கூத்தாகவும் இருக்கிறதென்று சொல்வதைப் போல வேராதர் மீண்டும் தமது புன்னகையைக் காட்டினார்.

'எதிரி, தான் சுடுவதை நிறுத்திவிட்டான். ஆனால் அவனுடைய முகாமில் இன்னும் ஆரவாரங்கள் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருக் கின்றன. அதற்கு என்ன அர்த்தம்? அவன் ஒன்று பின்வாங்க வேண்டும். அது ஒன்றிற்குத்தான் நாம் பயப்பட வேண்டும்: அல்லது அவன் தன் வியூகத்தை மாற்றியமைப்பதாய் இருக்க வேண்டும் (கேலியாக அவர் புன்சிரிப்பு காட்டினார்) எதிரி தெராஸாவில் தனது அணியை அமைத்துக்கொண்டிருந்தால்

நமக்குள்ள பெரும்பாலான சிரமம் குறையும் ஆனால் நமது ஏற்பாடுகள் எல்லாமே அப்படியே இருக்கலாம்'

'அது எப்படி?... என்று இளவரசர் ஆண்ட்ரூ ஆரம்பித்தார். தமது சந்தேகங்களைத் தெரிவிப்பதற்கு வெகு நேரமாக ஒரு சந்தர்பத்தை எதிர் பார்த்துக்கொண்டிருந்தார்.

இச்சமயத்தில் குட்டுஜோவ் விழித்துக்கொண்டார். பலமாக இறுமினார். அங்கிருந்த ஜெனரல்களைச் சுற்றிப் பார்த்தார்.

'கனவான்களே நாளை ஏற்படப் போகும் நமது வியூகங்களை அல்லது இன்று என்றுகூடச் சொல்லலாம். ஏனெனில் நள்ளிரவு கடந்து விட்டது. இனிமேல் மாற்றமுடியாது. நீங்கள் எல்லாவற்றையும் கேட்டீர்கள். நாம் எல்லோரும் நமது கடமையைச் செய்வோமாக. ஆனால் ஒரு நல்ல தூக்கம் தூங்குவதைவிட ஒரு யுத்தத்திற்கு முன்னால் செய்யக்கூடிய வேறு முக்கியமானது எதுவுமில்லை'

எழுந்திருப்பதற்காக அவர் அசைந்தார். எல்லா ஜெனரல்களும் தலைவணங்கிவட்டு அங்கிருந்து போனார்கள். நடு இரவு கழிந்து விட்டது. இளவரசர் ஆண்ட்ரூவும் வெளியே போனார்.

யுத்தக் கவுன்ஸிலில் தமது வெளியிடலாமென்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். அவரால் வெளியிட முடியவில்லை. அந்த கவுன்ஸிலில் நடந்த விஷயங்கள் அவருக்கு ஒரு சந்தேகத்தையும் அமைதியின்மையையும் தோற்றுவித்தன. டால்காருகாவும் வேராதரும்சொல்லுவது சரியா அல்லது குட்டுஜோவும் லாங்கரனும் மற்றவர்களும் எதிரியைத் தாக்கவேண்டும் என்ற திட்டத்தை ஆதரிக்காமல் இருப்பது சரியா என்பது இளவரசர் ஆண்ட்ரூவுக்குத் தெரியவில்லை. 'ஆனால் குட்டுஜோவ் தமது அபிப்ராயத்தைத் தெளிவாக சக்கரவர்த்திக்கு சொல்லுவது உண்மையிலேயே சாத்தியமில்லாமலா இருக்கிறது? சொந்த காரணங்களையோ அல்லது மன்னர் சபை காரணங்களையோ முன்னிட்டு பதினாயிரக்கணக்கான உயிர்களை என் உயிரை - என்னுடைய உயிரை - உப்படி ஆபத்தில் மாட்டி விடுவது சாத்தியமாகவா இருக்கிறது? என்று அவர் நினைத்தார்.

'ஆமாம், அநேகமாய் நான் நாளை கொல்லப்படுவதா யிருக்கலாம்' என்று அவர் நினைத்தார். இந்த நினைப்பு அவருக்குத் தோன்றியதும் வெகுகாலத்திற்கு முன்பு மிகுந்த அந்தரங்கமாக நடந்தவைகளுமான பல எண்ணங்கள் அவருடைய நினைவிற்கு திடீரென்று தோன்றின. தமது தந்தையிடமிருந்தும். மனைவியிட மிருந்தும் அவர் விடைபெற்ற காட்சி நினைவிற்கு வந்தது. அவர்

முதலில் தமது மனைவியகைக் காதலித்த நாட்களைப் பற்றிய நினைவுகள் வந்தன. அவள் கர்ப்பமானதைப் பற்றியும் அவருக்கு நினைவு வந்தது. தமக்காகவும் அவளுக்காகவும் அவர் மிகவும் வருந்தினார் உடனே ஒரு உள்ளக் கிளர்ச்சியும் கோபத் தணிவும் கொண்ட சுபாவத்தோடு நெஸ்வைட்ஸ்கியுடன் தங்கியருந்த அந்த குடிசையை விட்டு வெளியே வந்து குடிசையின் முன்பாகவே மேலும் கீழும் நடக்க ஆரமபித்தார். அன்று இரவு மூடுபனி நிறைந்திருந்தது. அந்த மூடுபனியைத் துளைத்துக்கொண்டு சந்திரனின் ஒளி ஆச்சரியமாய் பிரகாசித்தது. 'ஆமாம்' நாளை, நாளை, என்னைப் பொறுத்த வரையில் நாளை எல்லம் முடிந்துவிடும். இந்த நினைப்புகள் எல்லாம் இனிமேல் இருக்க முடியாது. அவற்றில் எதற்கும் என்னைப் பொறுத்தவரையில் எந்த பொருளும் கிடையாது. நாளை ஒரு வேளை அநேகமாய் நிச்சயமாக என்னால் என்ன செய்ய முடியுமோ அவ்வளவையும் செய்துவிட வேண்டுமென்று ஏதோ உள்ளுணர்ச்சி ஒன்று எனக்குத் தோன்றுகிறது அவருடைய மனோ ராஜ்யத்தில் யுத்தம் அதனால் ஏற்படுகிற நஷ்டங்கள் எங்காவது ஒரு இடத்தில் போர் மும்மரமாய் நடந்துகொண்டிருப்பது எல்லா கமாண்டர்களும் தயங்கிக் கொண்டிருப்பது இவையெல்லாம் தோன்றின. அப்புறம் அந்த சந்தோஷமான வேளை அவர் வெகு காலமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்த டூலன் அவருக்கு கடைசியாகத் தோன்றியது. அவர் உறுதியாகவும் தெளிவாகவும் தமது கருத்தை குட்டுஜோவிடமும், வேராதரிடமும், சக்கரவர்த்திகளிடமும் தெரிவிக்கிறார். அவருடைய கருத்துக்களின் சிலாக்கியத்தைக் கண்டு எல்லாருமே பரவசமடைகிறார்கள். ஆனால் ஒருவர்கூட அதைச் செய்து முடிப்பதற்கு பொறுப்பு ஏற்றுக் கொள்ள முன்வரவில்லை, ஆகவே தமது ஏற்பாடுகளில் ஒருவரும் தலையிடக் கூடாது என்று வாக்குறுதி பெற்று ஒரு பட்டாளத்தையோ ஒரு ராணுவப் பிரிவையோ அவர் பெற்று அந்த முக்கியமான போர் முனைக்கு அந்த ராணுவத்தை அவர் நடத்திச் சென்று தாம் தனிமையில் வெற்றி பெறுகிறார். ('ஆனால் சாவுகளைப் பற்றியும் துன்பங்களைப் பற்றியும் என்ன சொல்லுகிறாய்?' என்று அவர் உள்ளத்தில் மற்றொரு குரல் கேட்டது.) இந்தக் குரலுக்கு இளவரசர் ஆண்ட்ரூ பதில் அளிக்காமல் தமது வெற்றிகளைப் பற்றியே மேகலும் கனவு கண்டு கொண்டிருந்தார். அடுத்த யுத்தத்திற்கான வியூகங்களைப் பற்றி தாம் மட்டுமே திட்டங்களைப் போட்டார். குட்டுஜோவின் பரிவாரத்தில் சாதாரணமாக அவர் ஒரு உதவியாளரே என்றாலும் எல்லா வேலைகளையும் அவரே செய்கிறார். அடுத்த யுத்தம் அவர்

ஒருவராலேயே ஜெயிக்கப்படுகிறது. குட்டு ஜோவ் வேலையிலிருந்து நீக்கப்பட்டு அந்த இடத்தில் அவர் நியமிக்கப்படுகிறார். ரொம்ப சரி அதற்கப்புறம் என்ன? என்று உள்ளத்திலே இன்னொரு குரல் கேட்டது. 'அம்மாதிரி நேரிடுவதற்கு முன்னால் நீர் 10 தடவைகள் காயம்பட்டோ, காட்டிக்கொடுக்கப்பட்டோ, அல்லது கொல்லப்பட்டோ ஆகவேண்டும். நல்லது அதற்கு அப்புறம் என்ன?..' 'சரி, அப்புறம் என்ன?' என்று இளவரசர் ஆண்ட்ரூ தமக்குத் தாமே பதில் சொல்லிக்கொண்டார்: 'என்ன நேரும் என்பது எனக்குத் தெரியாது. அதைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் விருப்பமில்லை தெரியவும் முடியாது. ஆனால் எனக்கு வேண்டியது இதுதான் எனக்கு வேண்டியது புகழ். எல்லோரிடமும் நான் பிரபலமாய் இருக்கவேண்டும். எல்லோரும் என்மீது பிரியம்கொள்ள வேண்டும். இம்மாதிரி நான் வேண்டுமென்று விரும்புவது என் குற்றமல்ல. ஏனெனில் அதற்காகவே நான் உயிர் வாழ்கிறேன். அதைத் தவிர எனக்கு வேறு எதுவும் தேவையில்லை. ஆமாம். அதற்காகவே நான் உயிர் வாழ்கிறேன். மக்களின் அன்பையும் எனது புகழையும் தவிர வேறு எதிலும் எனக்குப் பிரியமில்லாமல் இருக்குமானால் அதற்கு நான் என்ன செய்ய முடியும் கடவுளே? ஆனால், இதை நான் யாரிடமும் எப்பொழுதும் சொல்லமாட்டேன். மரணமோ, காயங்களோ, குடும்ப நஷ்டமோ-எதைப் பற்றியும் எனக்கு பயமில்லை. எனக்கு பொக்கிஷமாகவும் அன்பாகவும் தோன்றக்கூடிய பலர் இருக்கிறார்கள. எனது தந்தை, சகோதரி, மனைவி எனக்கு அன்பிலும் அன்பானவர்கள். என்றாலும் நான் சொல்லுவது பயங்கரமாகவும் இயற்கைக்கு விரோதமாகவும் தோன்றினாலும் அவர்கள் எல்லாரையுமே உடனே நான் ஒரு வினாடி புகழுக்காக இழந்துவிடத் தயார். மக்கள் மீதுள்ள வெற்றியைப் பற்றியோ மக்களிடமிருந்து அன்பைப் பெறுவது பற்றியோ எனக்கு எதுவும் தெரியாது. எப்பொழுதும் தெரியப் போவதுமில்லை. ஏனென்றால் இங்கிருப்பவர்களின் அன்பைப்பற்றி.'

அவர் இம்மாதிரி நினைத்துக் கொண்டிருக்கும்போதே குட்டுஜோவின் ஜாகையின் முற்றத்தில் கேட்ட பேச்சுக் குரல்களைக் கவனித்தார். குட்டுஜோவின் சேவகர்கள் சாமான்களைக் கட்டிக் கொண்டே பேசிக் கொண்டிருந்தார்கள். அவருடைய வண்டிக்காரன் அவருடைய வயதான சமையற்காரனை கேலி செய்து கொண்டிருந்தான். அந்த சமையற்காரனை இளவரசர் ஆண்ட்ரூ அறிவார். அவன் பெயர் டிட். 'டிட் ஏ டிட்' என்று அவன் கேலி செய்தான்.

'அதற்கு என்னப்பா?' என்று அந்த வயோதிகன் பதில் அளித்தான்.

'போய் வா, டிட்; கொஞ்சம் புடைத்துக் கொடு, டிட்' என்று அந்த வண்டிக்காரன் மீண்டும் சொன்னான்.

'ஓ, நீ பிசாசிடம் போ' என்ற குரல் கேட்டது. இதைக் கேட்டு அங்கிருந்த டவாலிக்காரர்களும் சேவகர்களும் சிரித்தார்கள்.

எல்லாம் ஒன்றுதான். எல்லாவற்றிற்கும் மேலாக வெற்றி ஒன்றையே நான் விரும்புகிறேன். அதையே நான் மதிக்கிறேன். இங்கே இந்த மூடுபனியில் எனக்கு மேலாக மிதந்துகொண்டிருக்கும் இந்த அதிசயமான சக்தியை புகழை நான் மதிக்கிறேன்.

## 3

## 13

அதே இரவில் ஒரு சிறிய குதிரைப் படைப் பிரிவினரை அழைத்துக் கொண்டு காவல் வேலைக்காகப் போர் முனைக்கு ராஸ்டோவ் போனார். பாக்ரேஷனின் படைக்கு முன்பாக அந்த வேலை நடைபெற்றது. நீள வரிசையில் ஜோடி ஜோடியாக குதிரைப் படை வீரர்கள் நிறுத்தப்பட்டார்கள். அந்த வரிசைக்கு முன்பாக மேலும் கீழும் தமது குதிரையில் சவாரி செய்து கொண்டிருந்தார். அவருடைய கண்களைப் பற்றிக்கொண்டிருந்த தூக்கத்தைக் கலைத்து விழிப்போடு இருப்பதற்காக அவர் அம்மாதிரி சவாரி செய்தார். நமது படை முகாம் போட்டிருந்த அந்த பிரம்மாண்டமான இடத்தில் கணப்பு மூட்டங்கள் அங்கங்கே மூடுபனியின் மூலம் மங்கலாக ராஸ்டோவுக்குப் பின்னால் தெரிந்து கொண்டிருந்தன. ராஸ்டோவுக்கு முன்பாக மூடுபனி இருட்டாய் இருந்தது. அவரால் எதையும் பார்க்க முடியவில்லை. அந்த மூடுபனிமூலம் அவர் பார்க்க முயன்றபோது ஒரு சமயம் ஏதோ சாம்பல் வர்ணத்தில் தோன்றுவதுபோல இருக்கும் இன்னொரு சமயம் கறுப்பாய் தோன்றுவதுபோல இருக்கும். மற்றொரு சமயம் எதிரிகள் இருக்கவேண்டிய இடத்தில் ஏதோ வெளிச்சங்கள் பிரகாசிப்பது போல இருக்கும். இவை எல்லாமே தம்முடைய கண்களுக்குத் தோன்றுகிற தோற்றங்களே தவிர வேறு எதுவும் இல்லையென்று அவர் நினைத்தார். தமது கண்களை மூடிக்கொண்டு அவர் மனோராஜ்யத்தில் இறங்கினார். சக்கரவர்த்தியும் டெனைசாவும் மாஸ்கோவின் ஞாபகங்களும் மனோராஜ்யத்தில் வந்து குதித்தன. உடனே வேகமாய் கண்களைத் திறந்தபோது தமக்கு முன்னால்

காணப்பட்ட தாம் சவாரி செய்துவந்த அந்தக் குதிரையின் தலையையும் காதுக்களையும் பார்த்தார். அவர் சவாரி போய்க் கொண்டிருக்கும்போது திடீரென்று ஆறடி தூரத்திற்குள் தமது குதிரைப்படை வீரர்களின் கருப்பு உருவங்களைக் காணும்படி நேரும். ஆனால் தூரத்தில் இன்னும் அதே மூடுபனி இருட்டாய்த் தான் இருந்தது. 'ஏன் நடக்காது. சுலபாமாக நடக்கலாம். சக்கரவர்த்தி என்னை சந்தித்து சாதாரணமாக அவர் ஒரு அதிகாரியிடம் சொல்வதைப்போல என்னிடம் ஒரு உத்தரவைக் கொடுக்கலாம். அங்கே என்ன நடக்கிறது. பார்த்து வா என்று சொல்லலாம் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் ஒரு அதிகாரியை சோதிப்பதற்கு அவர் அம்மாதிரி செய்வதுண்டு என்று பல கதைகள் சொல்லப் படுகின்றன. அம்மாதிரி சோதித்த பின்பு அவர் அந்த அதிகாரியை தமது பரிவாரத்தில் சேர்த்துக்கொள்வாராம் அவர் பக்கத்தில் எனக்கு மட்டும் ஒரு பதிவு கொடுப்பாரானால் எப்படி இருக்கும். ஓ, நான் என்ன மாதிரி அவரைப் பாதுகாப்பேன். அவரைச்சுற்றி நின்று ஏமாற்றி வருகிறவர்களை எம்மாதிரியாக அம்பலப்படுத்தி அவருக்கு உண்மையைச் சொல்வேன் தெரியுமா?' இம்மாதிரியாக அவர் தமக்குள் நினைத்தார்.சக்கரவர்த்தியிடம் தமக்குள்ள அன்பையும் பக்தியையும் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்காக யாரோ ஒரு எதிரி அல்லது ஒரு ஏமாற்றுக்காரனான ஜெர்மனியனை மனதில் உருவாக்கினார். அவனை சந்தோஷத்தோடு கொல்லுவது மட்டுமல்ல அவனை சக்கரவர்த்திக்கு முன்பாக முகத்தில் அடிக்கவும் தயார் என்று மனோராஜ்யம் செய்தார். தூரத்தில் கேட்ட சப்தம் அவரை உடனே விழிப்படையும்படி செய்தது. அவர் உடல் சிலிர்த்தது. கண்களைத் திறந்தார்.

'நான் எங்கே இருக்கிறேன்? ஓ, ஆமாம், காவல் முனையில் நிற்கிறேன். என்னுடைய இன்றைய ராணுவ சதங்கேத வார்த்தை 'அம்பு, ஆல்முட்ஜ்'. நாளைக்கு நமது படைப் பிரிவை ரிசர்வில் வைக்கப்படுவது எவ்வளவு வயிற்றெரிச்சலான காரியம். போர் முனைக்குப் போவதற்கு நான் நாளை அனுமதி கேட்கப் போகிறேன். சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்கு இது ஒன்றுதான் சந்தப்பத்தைக் கொடுக்கும் இன்னும் சிறிது நேரத்தில் எனது அலுவல் முடிந்துவிடும். நான் திரும்பிப போனதும். ஜெனரலிடம் போய் அவரைக் கேட்பேன்' என்று அவர் நினைத்தார். அவர் தமது சேணத்தில் அசைந்து உட்கார்ந்து கொண்டு தமது வீரர்களை இன்னொரு முறை சுற்றிப்பாத்த்து வருவதற்காக தமது குதிரையைத் தட்டிவிட்டார் இருட்டு குறைந்து வெளிச்சம் அதிகமாவதாக அவருக்குத் தோன்றியது. அவருக்கு இடது பக்கத்திலிருந்த

பள்ளத்தில் ஒரு வெளிச்சத்தை அவர் கண்டார். அதற்கு எதிராக ஒரு கறுப்பான குன்று இருந்தது. அது பார்ப்பதற்கு ஒரு கவரைப்போல் தோன்றியது. அந்தக் குன்றின் உச்சியில் வெள்ளையாக ஏதோ ஒன்று காணப்பட்டது. அது என்ன என்பதை ராஸ்டோவால் தெரிந்து கொள்ள முடியவில்லை. சந்திர வெளிச்சத்தில் காணப்படுகிற காட்டின் மத்தியில் உள்ள வெட்ட வெளியா? அல்லது உருகிப்போகாத உறைபனியா? அல்லது வெள்ளை வீடுகளா? என்னவென்பது அவருக்குத் தெரியவில்லை. அந்த வெள்ளை இடத்தில் ஏதோ ஒன்று அசைவதாகக் கூட அவருக்கு காணப்பட்டது' அது உறைபனியாய்த்தான் இருக்கவேண்டும் ... அந்த இடம் , அந்த இடம், அந்த இடம் ஒரு வெட்டவெளி அல்ல... நட்டாஷா... தங்கை, கறுப்புக் கண்கள்..ந...ட்டா...ஷ(நான் சக்கரவர்த்தியைப் பார்த்தேன் என்று சொன்னால் அவளுக்கு ஆச்சரியமாயிருக்காதா) நட்டாஷா... என்னுடைய பட்டாக் கத்தியை எடு... அச்சமயம் அங்கிருந்து ஒரு குதிரை வீரன் அவரைப் பார்த்து, 'வலது பக்கமாகப் போங்கள், மேன்மைதங்கியவரே. அங்கே சில புதர்கள் இருக்கின்றன, என்று சொன்னான். ராஸ்டோவ் அனேகமாய் தூங்கிக்கொண்டே குதிரைமீது போய்க் கொண்டிருந்தார் இந்த சப்தத்தை கேட்டதும் குதிரையின் பிடரி வரையில் தொங்கிக்கொண்டிருந்த தமது தலையை நிமிர்த்தினார். தமது குதிரையை அந்த குதிரை வீரன் பக்கத்தில் நிறுத்தினார். அவர் தடுக்கமுடியாத இளமையுள்ள குழந்தைத்தனமான தூக்க கிரகத்தில் அமிழ்ந்து கொண்டிருந்தார். 'நான் எதைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்தேன், நான் மறந்துவிடக்கூடாது. நான் சக்கரவர்த்தி யிடம் எப்படிப் பேசப் போகிறேன். இல்லை, அதுவல்ல. அது நாளை நடக்க வேண்டிய விஷயமல்லவா. ஆமாம், நட்டாஷா.. உடைவாள்.. யாரு குதிரை வீரர்கள்... மீசை வைத்துக்கொண்டிருந்த குதிரை வீரர்கள். அந்த டெவர்ஸ்கயா தெருவில் போய்க் கொண்டிருந்த மீசை வைத்த குதிரை வீரர்கள்... அந்தக் குதிரை வீரனை கரியேவிள் வீட்டுக்கு முன்னால்கூட நான் நினைத்தேன்... அந்தப் பழைய கரியேன்... ஓ, ஆனால், டெனைசாவ் ஒரு இனிமையான நண்பர். ஆனால் அவையெல்லாம் அசட்டுத் தனங்கள். முக்கியமான விஷயம் என்னவென்றால் சக்கரவர்த்தி இங்கே இருக்கிறார். அவர் என்னை எப்படிப் பார்த்தார். ஏதோ என்னிடம் பேச விரும்பினார். ஆனால் துணியவில்லை. இல்லை, நான்தான் துணியவில்லை. இதெல்லாம் அசட்டு எண்ணங்கள். நான் நினைத்துக்கொண்டிருந்த முக்கியமான விஷயத்தை நான் மறந்துவிடக்கூடாது. ஆமாம் நட்டாஷா... உடைவாள்... ஓ, ஆமாம்ட, ஆமாம்... எல்லாம் சரி' இச்சமயத்தில் அவருடைய தலை

மீண்டும் குதிரையின் பிடரிக்குத் தொங்கி கீழே இழுக்க ஆரம்பித்தது. திடீரென்று அவர் மீது யாரோ சுடுவதுபோல அவருக்குத் தோன்றிது. 'என்ன, என்ன... அவர்களை வெட்டித் தள்ளுங்கள். என்ன...' என்று ராஸ்டோவ் கூறி தூக்கத்திலிருந்து விழித்தார். அச்சமயத்தில் அவர் கண்கள் திறந்தன. அவருக்கு முன்பாக எதிரிகள் முகாம் போட்டிருந்த இடத்தில் ஆயிரக் கணக்கான குரல்கள் ஒலித்துக்கொண்டிருந்தன. அவருடைய குதிரையும் அவருக்குப் பக்கத்தில் நின்ற குதிரை வீரனின் குதிரையும் தங்கள் காதுகளை உயர்த்தி அந்த சப்தங்களை உன்னிப்பாய் கேட்டன. அந்த சப்தம் வந்து கொண்டிருந்த இடத்தில் திடீரென்று ஒரு வெளிச்சம் மேலே போய் அணைந்தது. மீண்டும் ஒன்று அதேமாதிரி காணப்பட்டது. அந்த பிரஞ்சு அணியின் முன்பாக அந்தக் குன்றில் கணப்பு மூட்டங்கள் ஏராளமாய்த் தோன்றின. அந்தக் குரல்கள் வரவர பலமாயின. பிரஞ்சு வார்த்தைகளை ராஸ்டோவ் கேட்க முடிந்தது. ஆனால் அவை என்னவென்பதை அறிய முடியவில்லை. அந்தக் குரல்களின் சப்தம் மிகப் பெரியதாய் இருந்தது. அவரால் கேட்க முடிந்த தெல்லாம் 'ஹ...ஹ...ஹா...ர்..ர்..ர்' இவைதான்.

'அது என்ன? அதுஎன்னவென்று நினைக்கிறாய்? அது எதிரியின் முகாம் அல்லவா? என்று தமது பக்கத்திலிருந்தகுதிரை வீரனை ராஸ்டோவ் கேட்டார்.

அந்தக் குதிரை வீரன் பதில் சொல்லவில்லை.

'ஏன், உனக்குக் கேட்கவில்லையா?' என்று அவன்பதிலை எதிர்பார்த்த பின்பு ராஸ்டோவ் மீண்டும் கேட்டார்.

மேன்மை தங்கியவரே, அது யாரால் சொல்ல முடியும்?' என்று தயக்கத்தோடு குதிரை வீரன் பதிலளித்தான்.

'சப்தம் வருகிற திசையைப் பார்த்தால் அது எதிரியாய்த்தான் இருக்கவேண்டும்' என்று ராஸ்டோவ் மீண்டும் கேட்டார்.

'ஒருவேளை எதிரியிடமிருந்தும் இருக்கலாம் அல்லது இல்லாமலும் இருக்கலாம். அங்கே இருட்டாய் இருக்கிறது' என்று குதிரைவீரன் சொல்லிவிட்டு, சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்த தனது குதிரையைப் பார்த்து, நேராக நில் என்று கத்தினான்.

ராஸ்டோவின் குதிரையும் பரபரப்படைந்தது. உறைபனிமூடிய தரையைத் தன் குளம்புகளால் சுரண்டிக்கொண்டு, தன் காதுகளை நீட்டி சப்தங்களைக் கேட்டுக்கொண்டு வெளிச்சங்களைப் பார்த்துக் கொண்டிருந்தன. எதிரி முகாமில் கேட்ட சப்தம் வரவர அதிமாகி, பல ஆயிரக்கணக்கான ராணுவ வீரர்களால் போடப்படும்

கோஷங்களைப் போலத் தோன்றின. வெளிச்சங்கள் வரவர அதிமாக பிரஞ்சு முகாமில் காணப்பபட்டன. இனி தூங்கவேண்டுமென்று ராஸ்டோவ் விரும்பவில்லை. எதிரிகள் வெற்றி முழுக்கத்தோடு செய்து கொண்டிருந்த கோஷம் அவருக்கு ஊக்கத்தைக் கொடுத்தது. 'சக்கரவர்த்தி வாழ்க, சக்கரவர்த்தி வாழ்க' என்ற சப்தங்கள் மிகத் தெளிவாக அவருக்கு இப்போது கேட்டன.

தமது பக்கத்திலிருந்த குதிரை வீரனைப் பார்தது, 'அவர்கள் வெகு தூரத்தில் இருக்க முடியாது. ஒருவேளை அந்த ஓடைக்கு அடுத்தாற் போல் இருக்கலாம்' என்று அவர் சொன்னார்.

அந்தக் குதிரை வீரன் பதில் சொல்லாமல் ஒரு பெருமூச்சு விட்டான். கோபமாக இறுமினான். அந்த முன்னணிக் காவலாளர் வரிசையில் குதிரைகளின் குளம்புகள் நெருங்கி வரும் ஓசை கேட்டது. திடீரென்று அந்த மூடு பனியிலிருந்து ஒரு பெரிய யானை போன்ற உருவமுடைய ஒரு குதிரைப் படை சார்ஜண்ட் தோன்றினார்.

'மேன்மை தங்கியவரே, ஜெனர்ல்கள் வருகிறார்கள்' என்று ராஸ்டோவ் பக்கத்தில் வந்து அந்த சார்ஜண்ட் கூறினார்.

ராஸ்டோவ் அங்கு தெரிந்த கணப்பு மூட்டங்களைப் பார்த்துக் கொண்டு, அங்கு கேட்ட ஓசைகளையும் கவனித்துக்கொண்டு, அந்த சார்ஜ்ஜண்ட்டோடு, எதிரிலே வந்து கொண்டிருந்த கனவான்களைச் சந்திப்பதற்குப் போனார். அவரில் ஒருவர் ஒரு வெள்ளைக் குதிரை மீது சவாரி செய்து வந்தார். இளவரசர் பாக்ரேஷனும், இளவரசர் டால்காவும், தங்கள் பரிவாரங்களோடு அங்கு விசித்திரமாகக் காணப்பட்ட வெளிச்சங்களையும் , கூச்சல்களையும் பார்ப்பதற்காக வந்தார்கள். பாக்ரேஷனிடம் ராஸ்டோவ் போய் தாம் கேட்டவைகளை பார்த்தவைகளைச் சொன்னார். அதன் பின்பு அந்தப் பரிவாரங்களோடு சேர்ந்து நின்று கொண்டு அந்த ஜெனரல்கள் பேசிக்கொள்வதை கவனித்தார்.

'இது ஒரு தந்திரத்தைத் தவிர வேறு எதுவுமில்லை. எதிரி பின்வாங்கிவிட்டான். ஆனால் நம்மை ஏமாற்றுவதற்கு, சப்தம் உண்டுபண்ணுவதற்காக பின்னணி வீரர்களை கணப்பு மூட்டங்களைப் போடும்படி உத்தரவிட்டிருக்கிறான்' என்று இளவரசர் டால்காருகாவ் சொன்னார்.

'என்னால் அதை நம்பமுடியவில்லை. அந்தக் குன்றின் மீது இன்று மாலை அவர்களை நான் பார்த்தேன். அவர்கள் பின்வாங்கி யிருந்தால் அந்தக் குன்றிலிருந்தும் பின் வாங்கியிருக்கவேண்டும்... அதிகாரியே' என்று பாக்ரேஷன் ராஸ்டோவைத் திரும்பிப் பார்த்துச்

சொன்னன். 'எதிரியின் பாராக்காரர்கள் இன்னும் அங்கு இருக்கிறார்களா?'

'இன்று மாலை அவர்கள் அங்கு இருந்தார்கள். இப்போது எங்கு இருக்கிறார்களோ எனக்குத் தெரியாது, மேன்மைதங்கியவரே. என்னுடைய குதிரை வீரர்களை அழைத்துக்கொண்டு போய் பார்த்துவிட்டு வரட்டுமா?' என்று ராஸ்டோவ் கேட்டார்.

ராஸ்டோவுக்கு பதில் கூறுவதற்கு முன்பாக, ராஸ்டோவின் முகத்தை அந்த மூடுபனிக்கிடையே பார்ப்பதற்கு பாக்ரேஷன் குதிரையை நிறுத்தினார்.

'போய் பார்த்து வாரும்' என்று சிறிது தயக்கத்திற்கு பிறகு கூறினார்.

'நல்லது, ஐயா'

சார்ஜண்ட் பெட்செங்கோவையும்இரண்டு குதிரை வீரர்களையும் பார்த்து, தமக்குப் பின்னால் வரும்படி சொல்லிவிட்டு, ராஸ்டோவ் தமது குதிரையை தட்டிவிட்டு அங்கு சப்தங்கள் வந்துகொண்டிருந்த திசையை நோக்கி, குன்றின் கீழாக சவாரி போனார். மூன்று குதிரை வீரர்களோடு மட்டும் அந்த ஆச்சரியமன, ஆபத்தான மூடுபனி திசைக்குப் போவதற்கு அவருக்குப் பயமாகவும் அதே சமயத்தில் சந்தோஷமாகவும் இருந்தது. அந்த இடத்திற்கு அவருக்கு முன்பாக யாரும் போனதில்லை. ராஸ்டோவ் போகிறபோது அவரை பாக்ரேஷன் அழைத்து, அந்த ஓடைக்கு அப்புறம் போக வேண்டாமென்று கூறினார். ஆனால் அவர் சொல்லியது தமக்கு காது கேட்காதது போலப் பாசாங்கு செய்து குதிரையை நிறுத்தாமல் மேலும் மேலும் போய்க்கொண்டிருந்தார். போகிற வழியில் புதர்கள் எல்லாம் மரங்களாகவும், நடைகள் எல்லாம் மனிதர்களாகவும் தோன்றின. அவர் போய்க் கொண்டிருக்கும் போதே, இந்தத் தவறானதோற்றங்களைச் சரியாகக் கண்டு பிடித்துக்கொண்டே போனார். குன்றிலிருந்து கீழே அவர் போன பின்பு, எதிரிகளுடையவோ தம்முடையவோ கணப்பு மூட்டங்களை அவர் காணவில்லை. ஆனால் பிரஞ்சுக்காரர்கள் போடும் கூச்சல் பின்னும் அதிகமாகவும் தெளிவாகவும் அவருக்குக் கேட்டு வந்தது. கீழேயுள்ள பள்ளத்தாக்கில் அவருக்கு முன்பாக நதிமாதிரி ஒன்று தோன்றியது. ஆனால் அது நெருங்கியதும் அது ஒரு ரஸ்தா என்று கண்டு கொண்டார். அந்த ரஸ்தாவுக்கு அவர் வந்ததும் கடிவாளத்தைப் பிடித்திழுத்து தமது குதிரையை நிறுத்தினார். அந்த ரஸ்தா வழியாகப் போவதா, அல்லது அந்த ரஸ்தாவைக் கடப்பதா, கடந்து அந்தக் குன்றிக்குப் பக்கத்தில் உள்ள கறுப்பான வயல் களுக்குப் போவதா என்பதைப் பற்றி சிந்தித்துக்கொண்டிருந்தார்.

அந்த மூடு பனியில் அந்த ரஸ்தா வெள்ளையாகத் தோன்றிய படியால், அதன் வழியாகவே போவது ஆபத்தில்லாமல் இருக்கலாம் அப்படிப் போனால் எதிரில் யாராவது வந்து கொண்டிருந்தால் சுலபமாய் பார்த்துக்கொள்ளலாம். தமக்குப் பின்னாலுள்ள வீரர்களைப் பார்த்து, 'என்பின்னாலேயே வாருங்கள் என்று சொல்லிவிட்டு, அந்த ரஸ்தாவைக் கடந்து அந்தக் குன்றின் மீது பாய்ச்சலில் தமது குதிரையைத் தட்டி விட்டார். அங்கேதான் பிரஞ்சு பாராக்காரர்கள் அன்று மாலை நின்றுகொண்டிருந்தார்கள்.

'மேன்மை தங்கியவரே, அதோ அவன் நிற்கிறான்' என்று அவருக்குப் பின்னாலுள்ள ஒரு குதிரை வீரன் கத்தினான். அங்கே மூடு பனியில் தெரிந்த கறுப்பான ஒன்று என்னது என்பதை அவர் கண்டுபிடிக்கும் முன்பாக, திடீரென்று ஒரு வெளிச்சமும் ஒரு குண்டு சப்தமும் கேட்டது. ஒரு தோட்டா மேலேயுள்ள மூடு பனியை நோக்கிப் பாய்ந்தது மறைந்தது. மற்றொரு தோட்டா வெடிக்கவில்லை. ஆனால் அந்த துப்பாக்கியில் தீயின் வெளிச்சம் மட்டும் தெரிந்தது. குதிரையைத் திருப்பி வேகமாக ராஸ்டோவ் பின்னோக்கி சவாரி விட்டார். அதற்குப் பின்னால் மீண்டும் நான்கு குண்டுகள் சப்தமும் கேட்டன. அந்த தோட்டாக்கள் அந்த மூடு பனியில்எங்கேயோ வெவ்வேறு தொனியில் பாடிக்கொண்டு மறைந்தன. ராஸ்டோவ் கடிவாளத்தைப் பிடித்து தமது குதிரையை நிறுத்தினார். அந்த துப்பாக்கி சப்தத்தைக் கேட்டு எப்படி அவருடைய உற்சாகம் வளர்ந்ததோ, அதேமாதிரி அந்தக் குதிரையின் உற்சாகமும் வளர்ந்தது. பின்னால் மெதுவாக சவாரி போனார். 'இன்னும் கொஞ்சம் போ, இன்னும் கொஞ்சம் போ' எனறு ஒரு இனிமையான குரல் அவரது உள்ளத்தில் சொல்வது போல இருந்தது.— ஆனால் துப்பாக்கி சப்தம் அதற்குப் பின்னால்கேட்கவில்லை.

பாக்ரேஷனை நெருங்கிய பின்புதான் ராஸ்டோவ் மீண்டும் குதிரையைப் பாய்ச்சலில் விட்டார். தமது கையைத் தொப்பியில் வைத்து சலாம் செய்துகொண்டு ஜெனரலிடம் போனார்.

பிரஞ்சுக்காரர்கள் பின் வாங்கிவிட்டார்களென்றும், நம்மை ஏமாற்றிவிடுவதற்காகவே கணப்பு மூட்டங்கள் போடுகிறார் களென்றும், டால்காருகாவ் இன்னும் விடாப்பிடியாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

ராஸ்டோவ் அங்கே வந்து கொண்டிருக்கும்போது, 'அதற்கு என்ன அர்த்தம், பாராக்காரர்களை விட்டுவிட்டு அவர்கள் பின் வாங்கிப் போயிருக்கலாம்' என்று டால்காருகாவ் சொல்லிக் கொண்டிருந்தார்.

'அவர்கள் எல்லாரும் பின்வாங்கவில்லை இப்போது தெளிவாக இருக்கிறது. நாளைக் காலைவரை பொறுப்போம். நாளை எல்லாவற்றையும் நாம் கண்டுபிடித்துவிடலாம்' என்று பாக்லேஷன் கூறினார்.

'மேன்மை தங்கியவரே, இன்று மாலை அந்தப் பாராக்காரர்கள் எங்கேயிருந்தார்களோ, அதே குன்றில்இன்னமும் அவர்கள் இருக்கிறார்கள்' என்று ராஸ்டோவ் கூறி முன்னால் குனிந்து சலாம் செய்தார். தாம் எதிரியிடம் சவாரி போனதனாலும், அங்கு கேட்ட குண்டு சப்பத்தினாலும் ஏற்ப்பட்ட மகிழ்ச்சிப் புன்னகையை அவரால் அடக்க முடியவில்லை.

'ரொம்ப சரி, ரொம்ப சரி. உமக்கு வந்தனம், அதிகாரியே' என்று பாக்ரேஷன் சொன்னார்.

'மேன்மை தங்கியவரே, எனக்கு ஒரு தயவு காட்ட வேண்டும்' என்றார் ராஸ்டோவ்.

'என்னது'?

'நாளை எங்கள் குதிரைப் படைப் பிரிவு ரிசர்வில் இருக்கப் போகிறது. ஆகவே முதல் குதிரைப் படைப் பிரிவோடு என்னையும் சேர்த்துவிட நான் கேட்டுக்கொள்கிறேன்.'.

'உமது பெயர் என்ன?'

'கோமன் ராஸ்டோவ்'

'ஓ, ரொம்ப சரி, நீர் என்னுடைய பரிவாரத்தில் இருக்கலாம்'

'கோமகன் இலியா ராஸ்டோவின் குமாரரா'என்று டால்காருகாவ் கேட்டார்.

ஆனால் ராஸ்டோவ் பதில் சொல்லவில்லை.

'அப்படியானால், மேன்மை தங்கியவரே, நான் அதை நம்பியிருக்கிறேன்'

'நான் உத்தரவு போடுகிறேன்'

'நாளை சக்கரவர்த்தியிடம் ஏதாவது ஒரு செய்தியை நான் கொண்டு போகும்படி நான் அனுப்பப்படலாம். கடவுளுக்கு நன்றி' என்று ராஸ்டோவ் நினைத்தார்?

நெப்போலியனின் பிரகடனத்தை துருப்புகளுக்கு வாசித்துக் கொண்டிருக்கும்போது, சக்கரவர்த்தி துருப்புகளின் முகாம்களுக்கு இடையே சவாரி போய்க்கொண்டிருந்தார். அவரை சிப்பாய்கள் பார்த்ததும் வைக்கோல் கட்டுகளைக் கொளுத்தி 'சக்கரவர்த்தி வாழ்க!' என்று கோஷமிட்டுக்கொண்டு, அவருக்குப் பின்னால் ஓடினார்கள்.

நெப்போலியனின் பிரகடனம் பின் வருமாறு:-

'வீரர்களே, உலகம் என்ற இடத்தில் ஆஸ்திரியப் பட்டாளம் தோல்வியடைந்ததற்காக பழி வாங்கும் பொருட்டு ருஷ்ய துருப்புகள் உங்களுக்கு எதிராக படையெடுத்து வருகின்றன ஆலாபிரன் என்ற இடத்தில் உங்களால் தோற்கடிக்கப்பட்டு, இந்த இடம் வரையில் உங்களால் விரட்டியடிக்கப்பட்டு வந்த அதே துருப்புகள்தான், இப்போது வந்து கொண்டிருக்கின்றன. (ஆலாபிரன் என்பதும் ஷார்ன் கிராபர்ன் என்பதும் அடுத்தடுத்துள்ள இரண்டு இடங்கள்.) நம்முடைய நிலைமை மிகுந்த பலமாய் இருக்கிறது. நம்முடைய வலது பக்கத்தில் என்னைச் சுற்றிக் கொண்டுபோவதற்காக அவர்கள் அணிவகுத்துப் போகிறார்கள். அப்படிப் போகும்போது அவர்களுடைய பக்கவாட்டை நாம் தாக்குவதற்கு வாய்ப்பாக விட்டுவிடுவார்கள். சிப்பாய்களே, உங்களுடைய பட்டாளங்களை நானே முன்னின்று நடத்துவேன். நீங்கள் உங்களுக்கு இயற்கையாயுள்ள வீரத்தைக் காட்டி, குழப்பத்தையும் அமைதியின்மையையும் எதிரிகளின் அணிவரிசைகளில் செய்வீர்களானால், துப்பாக்கிக் குண்டு வருகிற தூரத்திற்கு அப்பாலேயே நான் நின்று கொண்டிருப்பேன், எந்த வினாடியிலாவது வெற்றி கிடைப்பதில் சந்தேகம் ஏற்படுமானால் எதிரிகளின் முதல் அடிகள் உங்களுடைய சக்கரவர்த்தி மீது விழும்படி நான் முன்னால் வந்து நிற்பேன். வெற்றியைப் பற்றி கொஞ்சமும் சந்தேகம் கிடையாது. அதிலும் பிரஞ்சு காலாட் படையின் கௌரவத்திற்கு ஆபத்து ஏற்பட்டிருக்கிற இந்த தினத்தில் சந்தேகமே கிடையாது. அந்த கௌரவம் வெற்றி நமது சமுதாயத்தின் கௌரவத்திற்கு மிகவும் அத்தியாவசியமாகும். காயம்பட்ட வர்களை எடுத்துக்கொண்டு வருவதற்கென்று உங்களுடைய அணி வரிசைகளைக் குழப்பிக்கெள்ளாதீர்கள். நம் மீதுள்ள துவேஷத்தினால் அந்த இங்கிலாந்து அமர்த்தியுள்ள அந்த கூலிக்காரர்களைத் தோற்கடிக்க வேண்டுமென்று உங்கள் ஒவ்வொருவருக்கும் உற்சாகம் வேண்டும். இந்த வெற்றியோடு நமது படையெடுப்பு முடிவடைகிறது. நாம் அதன் பின்னால் நம்முடைய குளிர்கால ஜாகைகளுக்குத் திரும்பலாம். பிரான்ஸில் புதிதாய் தயாரிக்கப்பட்டு வரும் பிரஞ்சு துருப்புகள் அங்கே நம்முடன் கலந்துகொள்வார்கள். நாம் செய்யப் போகும் சமாதான உடன்படிக்கை நம்முடைய மக்களுடையவும் உங்ளுடையவும், என்னுடையவும் கௌரவத்திற்கு முற்றிலும் பொருத்தமானதா யிருக்கும்.

- நெப்போலியன்.

# 3

## 14

காலை ஐந்து மணி. இன்னமும் இருட்டாகத்தான் இருந்தது. மத்திய பக்கத்திலுள்ள துருப்புகளும் ரிசர்விலிருந்த துருப்புகளும் பாக்ரேஷனின் வலது பக்கவாட்டு துருப்புகளும் இன்னும் அசைய வில்லை. ஆனால், இடது பக்கவாட்டில் காலாட்படைகளும், குதிரைப் படைகளும், பீரங்கிப் படைகளும் ஆர்வத்தோடு தயார் செய்து கொண்டிருந்தார்கள். முதன் முதலாக அந்தக் குன்றிலிருந்து கீழே இறங்கி, அந்த பிரஞ்சு அணி வரிசையின் வலது பக்க வாட்டைத் தாக்கி, அந்த பிரஞ்சுக்காரர்களை பொஹிமியன் மலைகளுக்கு அனுப்ப வேண்டுமென்று திட்டமிட்டிருந்தார்கள். கணப்பு மூட்டங்களில் தங்களுக்கு உபயோகமில்லாத சாமான்களை எறிந்துகொண்டிருந்தார்கள. அதனால் ஏற்பட்ட புகை கண்களைக் கலக்கியது. காலையில் இருட்டாகவும், குளிராகவும் இருந்தன. அதிகாரிகள் அவசர அவசரமாகக் காலை உணவை அருந்தி தேநீர் பருகிக் கொண்டிருந்தார்கள். சிப்பாய்கள் பிஸ்கோத்துக்களை சுவைத்துக்கொண்டு, உஷ்ணத்தை உடம்பில் உண்டாக்குவதற்காக, அந்த கணப்பு மூட்டங்களைச் சுற்றி ஆடிக்கொண்டு, அந்த நெருப்பில் தங்களுக்கு உபயோகமில்லாத, தங்களால் கொண்டு செல்ல முடியாத தட்டு முட்டுச் சாமான்கள், நாற்காலிகள், மேஜைகள் தொட்டிகள், சக்கரங்கள் முதலியவைகளை எறிந்துகொண்டிருந்தார்கள. சிப்பாய்களுக்கு வழிகாட்டுவதற்கு ஆஸ்திரிய வழி காட்டிகள் அப்பொழுதான் அங்கே வருவதும் போவதுமாயிருந்தார்கள். கமாண்டருடைய செயலகத்திற்கு ஒரு ஆஸ்திரிய அதிகாரி வந்ததும், அந்தப் பட்டாளம் அசைய ஆரம்பித்தது. கணப்பு மூட்டத்தைச் சுற்றியிருந்த சிப்பாய்கள் அவசரமாக அதை விட்டு ஓடி, தங்களுடைய சுங்கான்களை பூட்ஸ்களில் சொருகிக்கொண்டு, வண்டிகளில் தங்கள் மூட்டைகளைப் போடு, துப்பாக்கிகளை எடுத்துக்கொண்டு, அணி வரிசையை அமைத்தார்கள். அதிகாரிகள் தங்கள் கோட்டு பொத்தான்களை மாட்டி, தங்களுடைய உடைவாள்களையும் தோட்டாப் பைகளையும் அணிந்துகொண்டு, அணிகளுக்குப் பக்கமாக கோஷமிட்டுகொண்டு போனார்கள். வண்டி ஓட்டிகளும், டவாலி சேவகர்களும் வண்டிகளைக் கட்டி ஓட்ட ஆரம்பித்தார்கள். உதவிதயாளர்களும் பட்டாளத்துக் கமாண்டர்களும் குதிரைமீது ஏறி, தங்களுக்கு சிலுவைக் குறி காட்டிக்கொண்டு கடைசியாகச் சொல்லவேண்டிய உத்தரவுகளைச் சொல்லிவிட்டு, தங்களுடைய

சாமான்களை எம்மாதிரி அங்கே கொண்டுவர வேண்டுமென்றும் கூறிவிட்டுப் புறப்படத் தயாரானார்கள். ஒரே மாதிரியான ஆயிரக் கணக்கான காலடிகள் நடந்து போகும் ஓசை கேட்க ஆரம்பித்தது. எங்கே போகிறோம் என்பதையறியாமல் சுற்றி உள்ளவர் களிடமிருந்து அதை அறியவும் முடியாமல் புகையும் அதிகமாகிக் கொண்டிருந்த மூடுபனியும் தாங்கள் புறப்படுகிற இடத்தையோ, போகிற இடத்தையோ பார்க்க முடியாமல் சேர்ந்து நிற்க இராணுவம் முன்னால் நகர ஆரம்பித்தது.

ஒரு கப்பலிலுள்ள மாலுமி எப்படி கப்பலோடு போவானோ, அதே மாதிரி ஒரு அணி வகுப்பிலுள்ள சிப்பாய் நாலா பக்கங்களிலும் சூழப்பட்ட அந்த அணி வகுப்பு எங்கே போகிறதோ அங்கே அவனும் கொண்டு செல்லப்பட்டான். அவன் எவ்வளவு தூரம் நடந்தாலும், எம்மாதிரியான, நூதனமான, முன்பின் அறியாத ஆபத்தான இடத்திற்கு அவன் போய்ச் சேர்ந்தாலும், எப்போதும் அவனைச் சுற்றி அதே தோழர்கள், அதே அணிகள், அதே சார்ஜண்ட் மேஜர்கள், அதே கமாண்டர்கள், அதே பட்டாளத்தின் நாய்கள் ஆகியவைகளையே அவன் காண்பான். ஒரு மாலுமி எப்படி தன்னைச் சுற்றி எப்பொழுதும் ஒரேமாதிரியான தளங்களையும் பாய்மரங்களையும் கயிறுகளையும் காண்பானோ அதே மாதிரி ஒரு சிப்பாய் பார்ப்பதும் இருந்தது. கப்பல் போய்க் கொண்டிருக்கும் போது எந்த அக்ஷரேகையில் போகிறது என்பதைப் பற்றி மாலுமிக்குக் கொஞ்சம்கூடக் கவலை கிடையாது. ஆனால், யுத்தம் நடக்கப் போகிற தினத்தில் எப்படி, எப்பொழுது என்பது கடவுளுக்கே தெரியும்- ஒரு ராணுவத்தின் தார்மீக சுற்றுணர்ச்சியல் ஒரு பவித்திரமான எதிரொலியை எல்லாருடைய உள்ளமும் அறிந்திருக்கும். வரப்போகும் ஒருநிச்சயமான பவித்திரமான விஷயத்தை அது அறிவித்து எல்லாருடைய உள்ளத்திலும் ஒ ரு அசாதாரணமான ஆவலைத் தோற்றுவிக்கும். தங்களுடைய பட்டாளங்களுக்கு அப்புறம் என்ன நடக்கிறது என்பதை அறிந்து கெள்வதற்கு, யுத்த தினமாகிய அன்றைய தினத்தில் பரபரப்போடு முயற்சி செய்துகொண்டிருப்பார்கள். அந்த சிப்பாய்கள் மீண்டும் கவனத்தோடும், ஆர்வத்தோடும் தங்களைச் சுற்றிப் பார்த்துக் கொண்டும் தங்களைச் சுற்றி என்ன நடக்கின்றன என்பதைக் கேட்டுக்கொண்டும் இருப்பார்கள்.

அந்த மூடுபனி மிகவும் அடர்த்தியாய் வளர்ந்தபடியால், வெளிச்சம் அதிகமாகிக்கொண்டு இருந்தும்கூட, பத்து அடிக்கு அப்புற உள்ளதை அவர்களால் பார்க்க முடியவில்லை. புதர்கள் எல்லாம் பெரிய பிரம்மாண்டமான மரங்களாகவும், சமதளமான

பூமி பெரிய குன்றுகள் போலவும் பள்ளத்தாக்குகள் போலவும் காணப்பட்டன. எந்த இடத்திலேயும் எப்பக்கத்திலும் பத்து அடிக்கு அப்புறம் கண்காணாத எதிரியை சந்திக்க நேரிட்டாலும் நேரிடலாம். ஆனால், துருப்புகள் வெகு நேரமாகப் போய்க்கொண்டேயிருந்தன. அதே மூடு பனியில் மேட்டில் ஏறுவதும் பள்ளத்தில் இறங்குவதுமாக தோட்டங்களையும் வேலிகளையும் சுற்றி வளைத்துக் கொண்டு, புதிதாகவும் முன்பு தெரியாததாகவும் உள்ள பூமி மீது வெகுநேரம் போய்க்கொண்டிருந்தார்கள். ஆனால், இன்னமும் எதிரியைச் சந்திக்கவில்லை. தங்களுக்கு முன்பாகவும் பின்பாகவும் தங்களைச் சுற்றிலும் இதே மாதிரி ருஷ்ய துருப்புகள் ஒரே திசையை நோக்கிப் போய்க்கொண்டிருக்கின்றன என்பதை அவர்கள் அறிவார்கள். ஆகவே, தாங்கள் போகிற இடம் எந்த இடமென்பது தெரியாமலிருந்தாலும், அந்த இடத்திற்கு இன்னும் பல பேர் வருகிறார்கள் என்று அறிந்த ஒவ்வொரு சிப்பாயும் சந்தோஷமடைந்தான்.

'குர்ஸ்கிகள் கூட கடந்துபோய்விட்டார்கள்' என்று அந்த அணியில் யாரோ ஒருவர் சொன்னார்.

'நமது துருப்புகள் இவ்வளவு ஏராளமாகச் சேர்ந்திருப்பது என்ன அதிசயமாய் இருக்கிறது! நேற்று இரவு கணப்பு மூட்டங்களை நான் பார்த்தேன். ஆதியும் அந்தமும் இல்லாமல் இருந்தது. மாஸ்கோ மாதிரியே தோன்றியது.'

அணிகளின் கமாண்டர்கள் சிப்பாய்களிடம் நெருங்கி வரவோ பேசவோ யில்லை. யுத்தக் கவுன்ஸிலில் கூடியிருந்த கமாண்டர்கள் எல்லாரும் அதிருப்தியோடு இருந்தார்கள். ஆகவே, அந்த துருப்புகளை உற்சாகப்படுத்துவதற்கு, அவர்கள் முயற்சிகள் எதுவும் எடுத்துக்கொள்ளவில்லை. தங்களுக்கு இடப்பட்டுள்ள உத்தரவுகளை நிறைவேற்றுபவர்களைப்போல வந்துகொண்டிருந் தார்கள். என்றாலும் துருப்புகளோ மார்ச் செய்து போகும்போது, முக்கியமாக எதிரியைத் தாக்கப் போகும்போது, எவ்வளவு மகிழ்ச்சியாய் இருப்பார்களோ, அதே மகிழ்ச்சியோடு போய்க்கொண்டிருந்தார்கள். அந்த அடர்ந்த மூடுபனியில் அரைமணி நேரம் போன பின்பு திடீரென்று துருப்புகள் நின்றன. எங்கோ, ஏதோ ஒரு கோளாறு ஏற்பட்டுவிட்டதாக துருப்பு களிடையே ஒரு வதந்தி பரவியது. அம்மாதிரி விஷயங்கள் எம்மாதிரி துருப்புகளுக்குப் பரவலாக உடனே பரவி விடுகிற தென்பதைச் சொல்வது மிகுந்த கஷ்டம். ஆனால், நியச்சயமாக, வெகு வேகமாகத் தடுக்கமுடியாதபடி தெளிவில்லாமல் எப்படி பள்ளத்தைப் பார்த்துத் தண்ணீர் ஓடுமோ, அதே மாதிரி இந்த வதந்தி

பரவுகிறது. அது எப்படிப் பரவுகிறது என்பதை சொல்லுவது கஷ்டம். நேசத் துருப்புகள் எதனுடனும் சேராமல் ருஷ்ய துருப்புகள் மட்டும் மார்ச் செய்து வந்திருந்தால், இதற்குள் எவ்வளவோ தூரம் போயிருக்கலாமென்று அந்த துருப்புகள் நினைத்தன. ஆகவே இந்த திடீர் நிறுத்தத்திற்கு காரணமான ஏதோ ஊழலுக்கு அந்த முட்டாள்களான ஜெர்மனியர்தான் காரணமென்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். அந்த மாமிசக் கோளாக்களைத் தின்னும் ஜெர்மனியர்களின் ஆபத்தான ஊழலே இதற்கு காரணமென்று அவர்கள் நினைத்தார்கள். (ருஷ்யர் அல்லாத மற்ற எல்லாரையுமே ஜெர்மனியர் என்று அழைப்பதே ருஷ்ய சிப்பாயின் வழக்கம். ருஷ்ய மொழியில் ஜெர்மன் என்றால் ஊமை என்று பொருள். அவர்கள் பேசுகிற மொழி ருஷ்யர்களுக்குப் புரியாததால் அவர்களை ஊமைகள் என்று சொல்லுகிறார்கள்.)

'ஏன் நாம் நிறுத்தப்பட்டு விட்டோம்? முன்னாலே வழி ஏதாவது அடைப்பட்டிருக்கிறதா, அல்லது பிரஞ்சுக்காரர்களிடம் நாம் நெருங்கி வந்துவிட்டோமா?'

'இல்லை, அவர்களின் சப்தம் கேட்கவில்லையே. அவ்வளவு நெருங்கி வந்திருந்தால் நம்மீது அவர்கள் சுட்டுக் கொண்டிருப் பார்கள்.'

'நாம் புறப்படுவதற்கு எவ்வளவு அவசரப்பட்டார்கள். எந்தக் காரியமோ, காரணமோ இல்லாமல் இப்பொழுது நடு வயலில் நம்மை நிறுத்தி வைத்திருக்கிறார்கள். இதற்கெல்லாம் அந்த கேடு கெட்ட ஜெர்மனியரின் ஊழல்களே காரணம். அவர்கள் எப்பேர்ப்பட்ட முட்டாள்தனமான பிசாசுகள்'.

'ஆமாம், நான் அவர்களை முன்னால் அனுப்புவேன். அதைப் பற்றி சந்தேகம் இல்லை. ஆனால், அவர்கள் பின்னால் கூடிக் கொண்டிருக்கிறார்கள். நாமோ பசியால் இங்கே நின்று கொண்டிருக்கிறோம்.'

'சீக்கிரமாக நாம் போய்விட முடியுமா? அதாவது ஒரு குதிரைப் படை வழியை அடைத்துக்கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள்' என்றார் ஒரு அதிகாரி.

'ஆ, அந்தக் கேடு கெட்ட ஜெர்மனியர்கள், அவர்களுக்கு தங்கள் நாட்டைப் பற்றிக்கூடத் தெரியாது' என்றார் இன்னொருவர்.

'நீ எந்த டிவிஷனைச் சேர்ந்தவன்?' என்று அங்கு சவாரி வந்த ஒரு உதவியாளர் கூச்சல் போட்டார்.

'18-வது டிவிஷன்.'

அப்படியானல், நீ ஏன் இங்கே நிற்கிறாய்? நீ வெகு நேரத்திற்கு முன்பாகவே போயிருக்கவேண்டுமே. இப்பொழுது இன்று மாலைவரையில் நீ அங்கே போய்ச் சேர முடியாது.'

'என்ன முட்டாள்தனமான உத்தரவுகள். தாங்கள் என்ன செய்கிறோம் என்பது அவர்களுக்கே தெரியாது' என்று அந்த அதிகாரி சொல்லிவிட்டு அங்கிருந்து சவாரி போனார்.

அதன் பின்னால் எதையோ கோபமாகக் கத்திக்கொண்டு-ருஷ்ய மொழியில் அல்ல - ஒரு ஜெனரல் அவ்வழியே சவாரி போனார்.

'டாபா-லாபா, ஒருவருக்கும் புரியாதபடி அவன் என்ன உளறிக் கொண்டு போகிறான்?' என்று ஒரு சிப்பாய் சொல்லி அந்த சவாரி செய்துபோன ஜெனரலைப் போல நடித்துக் காட்டினான். 'அவர்களை நான் சுட்டுக் கொல்வேன்; அயோக்கியர்கள்'

'நாம் 9 மணிக்கு முன்பாக அந்த இடத்தில் போயிருக்க வேண்டு மென்று நமக்கு உத்தரவு. ஆனால், இன்னும் பாதிதூரம்கூட நாம் வரவில்லை என்ன அழகான உத்தரவுகள்!, என்று வெவ்வேறு திசைகளிலிருந்தும் ஒலித்தன.

துருப்புகள் மார்ச் செய்ய ஆரம்பித்தபோது என்ன உற்சாகத்தோடு இருந்தார்களோ அந்த உற்சாகம் எல்லாம் இப்போது முட்டாள் தனமான ஏற்பாடுகளின் மீதும், ஜெர்மனியர் மீதும் எரிச்சலாகவும், கோபமாகவும் மாற ஆரம்பித்தன.

ஆஸ்திரிய குதிரைப்படை நமது இடது பக்கவாட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்தபோது நமது மத்திய பாகம் பலமில்லாம லிருப்பதாக மேலிடத்தில் கருதப்பட்டதால், அந்தக் குதிரைப் படைகளை வலது பக்கவாட்டிற்குத் திரும்பி வரும்படி உத்தரவிடப் பட்டது. ஆகவே ஆயிரக்கணக்கான குதிரை வீரர்கள் அந்த காலாட்படையின் முன்பாக திருப்பிக் கொண்டிருந்தனர். அதற்காகவே மார்ச் செய்து கொண்டிருந்த காலாட் படை திடீரென்று நிறுத்தும்படி நேரிட்டு இந்தக் குழப்பங்கள் தோன்றின.

முன்னணியில் ஒரு ஆஸ்திரிய வழிகாட்டிக்கும் ஒரு ருஷ்ய ஜெனரலுக்கும் ஒரு வாய்ச் சண்டை ஏற்பட்டது. அந்த திரும்பிப்போகும் குதிரைப் படையை உடனே நிறுத்துப்படி அந்த ஜெனரல் கத்தினார்.

தன்னை இதற்காகக் குறைகூற வேண்டாம் என்றும் இதெல்லாம் மேலிடத்து உத்தரவு என்றும் அந்த ஆஸ்திரிய வழிகாட்டி பதில் சொன்னான். இதற்கு மத்தியில் பரபரப்போடு உற்சாகம் குன்றி துருப்புகள் நின்று கொண்டிருந்தன. ஒரு மணி நேர தாமதத்திற்கு பின்பு கடைசியாக துருப்புகள் குன்றின் கீழே இறங்க ஆரம்பித்தன.

அந்த குன்றில் கலைந்து கொண்டிருந்த மூடுபனி கீழே அடிவாரத்தில் மிகவும் அதிகமாய் மண்டிக் காணப்பட்டது. அங்கேதான் துருப்புகள் இறங்கிக்கொண்டிருந்தார்கள். அந்த மூடுபனியின் எதிராக ஒரு குண்டு சப்தம் கேட்டது. பின்னால் மற்றொன்று கேட்டது. ட்ராடா...டாட்.... டாட்.... என்றபடி இடையிடையே கேட்டு வந்தது. பின்னால் வரவர அதிக ஒழுங்காவும், வேகமாவும் கேட்க ஆரம்பித்தது. கோல்ட்பாக் ஓடையில் போராட்டம் ஆரம்பித்தது.

அந்த ஓடைக்குப் பக்கத்தில் எதிரியை சந்திப்போமென்று நினைக்கவில்லை. அந்த மூடுபனியில் எதிரிகளை சந்தித்தார்கள். தங்களுடைய கமாண்டர்களிடமிருந்து எந்தவிதமான உற்சாகமான வார்த்தைகளும் இல்லை. மிகுந்த தாமதம் ஏற்பட்டுவிட்டதான உணர்ச்சி துருப்புகளிடையே பரவியிருந்தது. அதைத் தவிர கடுமையான அந்த மூடுபனியில் எதிரிலோ, தங்களைச் சுற்றியோ எதையும் பார்க்க முடியவில்லை. ஆகவே சோம்பேறித்தனமாக எதிரி மீது ருஷ்யர்கள் சுட்டுக்கொண்டிருந்தார்கள். கொஞ்சம் முன்னேறி மீண்டும் நின்றார்கள். அந்த மூடுபனியில் தங்களுடைய பட்டாளங்ளைக் கண்டுபிடிக்க முடியாமல் அதிகாரிகளும் உதவியாளர்களும் அந்த அடையாளம் தெரியாத சூழ்நிலைகளில் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அவர்களிடமிருந்து எந்தவிதமான உத்தரவுகளும் பட்டாளத்திற்கு கிடைக்கவில்லை. இந்த விதமாக ஒன்று, இரண்டு, மூன்றாவது அணி வரிசைகளுக்குப் போராட்டம் ஆரம்பமாயிற்று. அவைதான் அந்தப் பள்ளத்தாக்கில் இறங்கியவை. நான்காவது அணிவரிசை குட்டுஜோவுடன் இருந்தது. அவர் அச்சமயம் பிராட்ஜென் என்ற குன்றின்மீது படையோடு நின்று கொண்டிருந்தார்.

யுத்தம் ஆரம்பமாயிருந்த பள்ளத்தாக்கில் இன்னும் கடுமையான மூடுபனியிருந்தது. ஆனால், உயரமான பூமியில் கொஞ்சம் கொஞ்சமாக அது விலகி வந்தது. முன்னால் என்ன நடக்கிற தென்பதை பார்க்க முடியவில்லை. எதிரியின் முழு படை பலமும், ஆறு மைலுக்கு அப்பால் இருக்கிறதாக நாம் நினைத்துக் கொண்டிருந்தோமே, அதேபடிதான் இருக்கிறதா, அல்லது சமீபத்தில் அந்த மூடுபனி சமுத்திரத்தில் இருக்கிறதா என்பதை 8மணி வரையில் ஒருவராலும் அறிய முடியவில்லை.

காலை 9 மணி ஆயிற்று. ஒரு பெரிய சமுத்திரம் மாதிரி கொஞ்சம் கூட கலையாமல் கிழே பள்ளத்தாக்கில் மூடுபனி நின்று கொண்டிருந்தது. ஆனால் எதிரே ஷ்லாபானிட்ஜ் என்ற உயரமான

கிராமத்தில் நெப்போலியனும் அவருடைய மார்ஷல்களும் நின்று கொண்டிருந்தார்கள். அங்கே நல்ல வெளிச்சமிருந்தது அவருக்கு மேலாக வானம் தெளிவாய் நீல நிறமாய் இருந்தது. சூரியனின் பரந்த கோளம் ஒரு பெரிய குழிவான சிவந்த தெப்பம்போல, அந்த பாலைப்போன்ற மூடுபனி சமுத்திரத்தின் மேல் ஆடிக் கொண்டிருந்தது. பிரஞ்சு சேனையின் முழு பலமும், நெப்போலியனும் அவருடைய பரிவாரங்களும், சாக்கால்நிட்ஜ், ஷ்லாபானிட்ஜ் என்ற பள்ளத்தாக்குகளுக்கும் அந்த ஓடைகளுக்கும் அப்பால் வெகுதூரத்தில் நிற்கவில்லை. அங்கே தான் நமது முன்னணியை அமைத்துப் போர் செய்வதாக ஏற்பாடாயிருந்தது. ஆனால், அவர்கள் இப்பக்கமாகவே நம்முடைய படைகளுக்கு வெகு சமீபமாக நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் நிற்பதை தொலைநோக்கிக் கண்ணாடி இல்லாமலேயே குதிரையில் இருப்பவனையும் தரையில் நிற்பவனையும் நெப்போலியன் வித்தியாசம் கண்டுபிடிக்கக்கூடிய விதத்தில் சமீபத்திலேயே நின்றார்கள். இத்தாலியப் படையெடுப்பில் அணிந்திருந்த அதே நீல நிற வெளிச் சட்டையை நெப்போலியன் அணிந்து தமது சிறிய சாம்பல் வர்ண அரபுக் குரை மீது அமர்ந்து, தமது மார்ஷல்களுக்கு சிறிது முன்பாக நின்றுகொண்டிருந்தார். அந்த முடுபனியிலிருந்து விடுபட்டுக்கொண்டிருந்த குன்றுகளை, ருஷ்ய துருப்புகள் தூரத்தில் நடமாடிக் கொண்டிருந்த அந்த குன்றுகளை அவர் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். பள்ளத்தாக்கில் கேட்ட துப்பாக்கிச் சத்தங்களையும் கேட்டுக்கொண்டிருந்தார். அவருடைய முகம் அந்தக் காலத்தில் ஒல்லியாய் இருந்தது. அவருடைய முகத்தில் ஒரு தசைகூட அசையவில்லை. ஒரே இடத்திலேயே தமது பிரகாசமான கண்களால் கூர்மையாய் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய ஜோஸ்யங்கள் மெய்பித்து வர ஆரம்பித்தன. ருஷ்ய துருப்புகளின் ஒரு பகுதி ஏற்கனவே பள்ளத்தாக்கில் இறங்கிவிட்டது. அது இறங்கிய இடத்தில் குளங்களும், குட்டைகளும் இருந்தன. இன்னொரு பகுதி பிராட்ஜென் உச்சியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தது. அதைத்தான் தாம் தாக்க வேண்டுமென்றும் அதுதான் தம்முடைய திட்டத்திற்கு திறவுகோல் என்றும் அவர் நினைத்துக்கொண்டிருந்தார். பிராட்ஜென் கிராமத்திற்குப் பக்கத்திலிருந்த இரண்டு குன்றுகளுக்கு மத்தியிலுள்ள மூடுபனியை அவர் கவனித்துக் கொண்டிருந்தார். ருஷ்ய துருப்புகள் தங்களுடைய துப்பாக்கிகளின் ஈட்டிகள் மினு மினுக்க அந்த பள்ளத்தாக்கை நோக்கி ஒரே திசையில் தொடர்ச்சியாக வந்து அந்த மூடுபனியில் ஒருவர் பின் ஒருவராக மறைந்தார்கள். முதல் நாள் மாலை

அவருக்குக் கிடைத்த தகவல்களிருந்தும் முதல்நாள் இரவு காலடி ஓசைகள், வண்டிச்சக்கர ஓசைகள் ஆகியவை எல்லையில் கேட்டதி லிருந்தும், ருஷ்ய துருப்புகள் தாறுமாறாகச் சுற்றிக்கொண்டிருப் பதைப் பார்த்ததிலிருந்தும், மற்றும் எல்லா அறிகுறிகளிலிருந்தும் தாங்கள் வெகு தூரத்தில் இருப்பதாக எதிரிகள் நினைத்துக் கொண்டிருந்தார்களென்பதையும்அறிந்து கொண்டார். ருஷ்யத் துருப்பின் மத்திய பாகம் பிராட்ஜென் என்ற இடத்தில் நகர்ந்து கொண்டிருந்தது. அந்த பாகம்தான் எதிரிகளின் பலவீனமான பாகமென்றும், அதைத் தாக்கி வெற்றியோடு சமாளிக்கலா மென்றும் அவர் நினைத்தார். இருந்தாலும் இன்னமும் அவர் போராட்டத்தை ஆரம்பிக்கவில்லை.

இன்று அவருக்கு ஒரு மகத்தான தினம். அவர் பட்டாபிஷேகம் செய்த ஆண்டு விழா. விடிவதற்கு முன்பாகச் சில மணி நேரங்கள் அவர் தூங்கிவிட்டு, களைப்பு தெளிந்து நல்ல உற்சாகத்தோடும், ஊக்கத்தோடும் தமது குதிரைமீது ஏறி, யுத்த களத்திற்குப் போனார். அவருக்கு அன்றிருந்த சந்தோஷமான நினைப்பில் ஒவ்வொன்றும் சாத்தியமென்றும ஒவ்வொன்றும் வெற்றியென்றும் தோன்னறியது. குதிரைமீது அசையாமல் அமர்ந்திருந்து எதிரில் மூடுபனிக்கு மேலாகத் தோன்றிய குன்றின் உச்சிகளைக் கவனித்துக் கொண்டிருந்தார். ஒரு வாலிபன் காதல்கொண்டு சந்தோஷமாய் இருக்கும்போது அவன் முகத்தில் காணப்படும் நம்பிக்கையும் சுய திருப்தியான சந்தோஷமும் போன்ற விசேஷத் தோற்றம் அவருடைய கடுமையான முகத்தில் காணப்பட்டது. அவருடைய மார்ஷல்கள் அவருக்குப் பின்னால் அவருடைய கவனத்தை இழுக்கத் துணிவு கொள்ளாமல் பேசாமல் நின்றிருந்தார்கள். இப்போது அந்த மூடுபனியிலிருந்து சூரியன் வெளிப்பட்டு மேலே மிதந்து வந்தபோது அந்த பிராட்ஜென் குன்றுகளை அவர்பார்த்தார்.

மூடுபனியிலிருந்து முழுவதுமாக விடுபட்ட சூரியன், அந்த வயல்களிலும், மூடுபனி மீதும் கண்ணைப் பறிக்கக் கூடிய வெளிச்சத்தை வீசிக்கொண்டிருந்தான். நெப்போலியன் இதைத் தான் தமது போராட்டத்திற்கு ஆரம்பமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. தமது அழகிய வெள்ளைக் கையில் போடப்பட்டிருந்த உறையைக் கழட்டி, அதைத் தம்முடைய மார்ஷல்களுக்கு அசைத்துக்காட்டி, போராட்டத்தை ஆரம்பிக்கலா மென்று உத்தரவிட்டார். உதவியாளர்கள் பின்தொடர, பல திசைகளுக்கும் மார்ஷல்கள் தங்கள்குதிரைகள்மீது ஏறி பாய்ச்சலில் போனார்கள். சில நிமிஷங்களுக்குப் பின்னால் பிரஞ்சுப் படையின் முக்கியமான பகுதிகள் பிராட்ஜென் குன்றுகளை நோக்கி வேகமாக

முன்னேறின. அந்த துருப்புகளை நோக்கி, எதிராகத் தங்களுக்கு இடது பக்கமாக ருஷ்யத் துருப்புகள் இறங்கி வந்து கொண்டிருக்கின்றன.



நாலாவது அணிவரிசையின் தலைமையில் பிராட்ஜெனுக்கு காலை 8 மணிக்கு குட்டுஜோவ் போனார். அந்த அணிவரிசை மிலாராடாவிச் என்பவரைச் சேர்ந்தது. ப்ரிஜ்பிஜெவ்ஸ்கி என்பவருடையவும், லாங்கரன் என்பவருடையவும் அணிவரிசைகள் பள்ளத்தாக்கில் முன்பே இறங்கிவிட்டன. அவைகள் இருக்க வேண்டிய இடத்தில் இந்த நாலாவது அணிவரிசை இருக்கப் போகிறது. குட்டுஜோவ் பட்டாளத்தின் முன்னணி வீரர்களைப் பார்த்து வந்தனம் சொல்லிவிட்டு, மேலே போகலாமென்று உத்தரவிட்டார். அதாவது தாமே அந்தப் பட்டாளத்தை நடத்தப்போவதாகக் காட்டினார். பிராட்ஜென் கிராமத்திற்கு அவர் வந்ததும் அங்கே தங்கினார். அவருடைய பிரம்மாண்டமான பரிவாரங்களும், இளவரசர் ஆண்ட்ரூவும் இருந்தார்கள். அவர் தமது உற்சாகத்தையும் எரிச்சலையும் இடக்கி வைத்துக்கொண்டிருந்ததாக காணப்பட்டது. வெகுகாலமாக எதிர்பார்த்துக்கொண்டிருந்த சந்தர்ப்பம் வந்துவிட்டதை நினைத்து அவர் தம்மையடக்கி அமைதியாயிருந்தார். அவருடைய டூலன் அல்லது ஆர்கோலா பாலம் என்பது அன்று வரப்போகிறது என அவர் நிச்சயமாய் நம்பியிருந்தார். அது எப்படி வரும் என்பது அவருக்கு தெரியாது. ஆனால் அது வரப்போகிறது என்பதை மட்டும் அவர் நிச்சயமாய் உணர்ந்திருந்தார். தமது சேனையில் உள்ள மற்றவர்களுக்குத் தெரிந்திருப்பதைப்போல அவருக்கும் அந்த சுற்றுப்புறங்களும் தமது துருப்புகளின் அமைப்புகளும் தெரிந்திருந்தன. இந்த யுத்தத்திற்காக அவர் தயாரித்திருந்த திட்டத்தை அங்கீகரிப்பது என்ற பேச்சிற்கு இப்பொழுது இடமில்லை. அவருக்கும் அது மறந்து போய்விட்டது. வேராதரின் திட்டப்படி, இப்போது வரப் போகிற அல்லது நேரப்போகிற அவசரங்களுக்குத் தக்கபடி வேண்டிய பாதுகாப்புகளை ஏற்படுத்திக்கொள்வதற்கு இளவரசர் ஆண்ட்ரூ யோசித்துக் கொண்டிருந்தார்.

இடது பக்கத்தில் கீழே பள்ளத்தாக்கில் மூடுபனிக்கு அடியில் கண்களுக்குத் தெரியாத துருப்புகளின் துப்பாக்கி சத்தங்கள் கேட்டன. அந்த இடத்தில்தான் யுத்தம் கடுமையாக நடக்குமென்று

இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். 'அந்த இடத்தில் நாம் பல கஷ்டங்களை எதிர்க்க நேரிடலாம். அந்த இடத்திற்கு ஒரு பட்டாளத்துடனோ அல்லது ஒரு பிரிவுடனோ கையில் ஒரு கொடியுடன் நான் போக நேரிடலாம். நான் நேராக அங்கே போவேன். என் எதிராக எது இருந்தாலும் அதை தகர்ப்பேன்' என்று அவர் நினைத்தார்.

தம்மைக் கடந்துபோகிற பட்டாளங்களின் கைகளிலிருந்த கொடிகளை அவரால் அமைதியாகப் பார்த்துக்கொண்டிருக்க முடியவில்லை. அவற்றைப் பார்த்ததும், ஒருவேளை 'அந்தக் கொடியுடனேயே நான் பட்டாளத்தை நடத்துவதாயிருக்கலாம்' என்று நினைத்துக்கொண்டேயிருந்தார்.

காலையில் குன்றின் உச்சியில் இரவு தோன்றிய பனி கொஞ்சம் கொஞ்சமாகக் குறைய ஆரம்பித்தது. இருந்தாலும் பள்ளத்தாக்கு களில் பால் கடல்போல அவை இன்னும் நின்று கொண்டிருந்தன. இடது பக்கத்தில், நமது துருப்புகள் இறங்கிய பள்ளத்தாக்கில் எதையுமே காணமுடியவில்லை. அங்கிருந்துதான் துப்பாக்கி சத்தங்கள் கேட்டுக்கொண்டிருந்தன. அந்தக் குன்றின் உச்சிக்கு மேலாகத் தெளிவான நீலவர்ண ஆகாயம் காணப்பட்டது. வலது பக்கத்தில் சூரியனின் விசாலமான கோளம் காணப்பட்டது. எதிரே வெகு தூரத்திற்கு அப்பாலுள்ள அந்த மூடுபனிக் கடலில் கரைக்கு அப்பால் மரங்கள் நிறைந்த அந்த குன்றுகள் தெளிவாய் காணப்பட்டன. எதிரி ஒருவேளை அந்த இடத்தில் இருக்கலாம். ஏனெனில் அங்கே ஏதோ தெரிந்துகொண்டிருந்தது. வலது பக்கத்தில் காப்பாளர்கள் மூடுபனிக்குள் போய்க்கொண்டிருந்தார்கள். அங்கிருந்து குதிரைகளின் குளம்படி ஓசைகளும் சக்கரத்தின் ஓசைகளும் துப்பாக்கி ஈட்டிகளின் மினுமினுப்புகளும் தோன்றின. இடது பக்கத்தில் கிராமத்திற்கு அப்புறமாக ஏராளமான குதிரைப் படைகள் வந்துகொண்டும் அந்த மூடுபனி சமுத்திரத்தில் மறைந்துகொண்டும் இருந்தன. முன்னாலும் பின்னாலும் காலாட் படைகள் போய்க்கொண்டிருந்தார்கள். கிராமத்தின் கோடியில் சேனாதிபதி நின்றுகொண்டு, துருப்புகள் போவதைப் பார்த்துக் கொண்டிருந்தார். அன்று காலையில் குட்டுஜோவ் கவலையோடும், எரிச்சலோடும் இருந்ததாகக் காணப்பபட்டார். அவருக்கு முன்னால் போய்க்கொண்டிருந்த காலாட்படைகள் யாருடைய உத்தரவுகளும் இல்லாமல் திடீரென்று நின்றன. ஏதோ முன்னால் போனவர் களுக்குத் தடையேற்பட்டு நின்றதாகத் தோன்றியது.

'அவர்களை அணிவரிசைகளாக அமைத்துக்கொண்டு கிராமத்தைச் சுற்றிப்போகும்படி உத்தரவு போடும்' என்று

கோபமாக, தம்மைப் பார்த்து வந்து கொண்டிருந்த ஒரு ஜெனரலிடம் கூறினார். 'நெருக்கமான தெருக்களில் எதிரிமீது படையெடுத்துப் போகிற துருப்புகள் தனி வரிசையாகப் போகக் கூடாது என்பது உமக்குத் தெரியவில்லையா, மேன்மை தங்கியவரே?'

'அவர்களை கிராமத்திற்கு அப்பால் அணிவகுக்கலாமென்று நான் நினைத்துக்கொண்டிருந்தேன், மேன்மை தங்கியவரே' என்று அந்த ஜெனரல் பதிலளித்தார்.

மிகுந்த மனக்கசப்போடு குட்டுஜோவ் சிரித்தார்.

'நீர் அப்படி செய்தால் ரொம்ப அழகாயிருக்கும். எதிரியின் முன்பாக அணிவகுப்பதும் ரொம்ப அழகு'.

'மேன்மை தங்கியவரே, எதிரி வெகு தூரத்திலிருக்கிறான். அவர்களின் ராணுவ வியூகப்படி...'

'வியூகங்களா? யார் உமக்கு சொன்னார்கள்? உமக்கு என்ன உத்தரவு கொடுக்கிறேனோ, அதன்படி தயவுசெய்து செய்யும்' என்று மனக்கசப்போடு குட்டுஜோவ் கூவினார்.

'நல்லது, ஐயா'

'என் அன்பானவரே, இன்று அந்த வயோதிகர் ஒரு நாயைப் போல அவ்வளவு துடுக்காய் இருக்கிறார்' என்று நெஸ்வைட்ஸ்கி குசுகுசுப்பான குரலில் இளவரசர் ஆண்ட்ரூவிடம் சொன்னார்.

தமது தொப்பியில் பச்சைத் தோகைகள் அணிந்து கொண்டு, வெள்ளை யூனிபாரத்தோடு ஒரு ஆஸ்திரிய அதிகாரி குதிரை மீது வேகமாக குட்ஜோவிடம் வந்தது. நாலாவது அணிவரிசை போராட்டத்தில் இறங்கிவிட்டதா என்று சக்கரவர்த்தி கேட்டுவரச்சொன்னதாக அவர் கூறினார்.

அந்த அதிகாரிக்குப் பதில் அளிக்காமலேயே குட்டுஜோவ் திரும்பினார். அவருக்குப் பின்னால் நின்ற இளவரசர் ஆண்ட்ரூ மீது அவர் பார்வை வீழ்ந்தது. அவரைப் பார்த்ததும் குட்டு ஜோவின் கோபமான எரிச்சலான தோற்றம் கொஞ்சம் சுமுகமடைந்தது. அதாவது என்ன காரியங்கள் நடந்திருக்கின்றனவோ, அதற்குத் தமது உதவியாளர் பொறுப்பு அல்லவென்பதை ஒப்புக்கொள்வது போல அந்தத் தோற்றம் இருந்தது. ஆனால் இன்னமும் அந்த ஆஸ்திரிய உதவியாளருக்கு பதிலளிக்காமல் அவர் பால்கோன்ஸ்கியைப் பார்த்துப் பேசினார்.

'எனது அன்பானவரே, நீர் போய் அந்த மூன்றாவது பிரிவு கிராமத்தைக் கடந்துவிட்டதா என்று பார்த்து வாரும். அதை என்னுடைய உத்தரவு வரும்வரை அங்கேயே நிற்கும்படி சொல்லி விட்டு வாரும்'.

இளவரசர் ஆண்ட்ரூ புறப்பட ஆரம்பித்தார். உடனே அவரை மறுபடியும் நிறுத்தினார்.

'குறி பார்த்து சுடுகிறவர்களைப் பாராவில் நாம் போட்டு விட்டோமா என்பதைக் கேளும். அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? அவர்கள் என்ன செய்து கொண்டிருக் கிறார்கள்' என்று தமக்குள் முணுமுணுத்தார். இன்னமும் அந்த ஆஸ்திரிய அதிகாரிக்கு அவர் பதில் சொல்லவில்லை.

இளவரசர் ஆண்ட்ரூ தமக்கு கிடைத்த உத்தரவை நிறைவேற்று வதற்காக குதிரை மீது பாய்ச்சலில் போனார்.

நகர்ந்து போய்க்கொண்டிருந்த துருப்புகளை வேகமாய் கடந்து மூன்றாவது பிரிவிற்கு போய்ச் சேர்ந்தார். அந்த துருப்புகளுக்கு முன்பாக குறி பார்த்துச் சுடுகிறவர்கள் யாருமே கிடையாது என்பதை அறிந்தார். குறிபார்த்துச் சுடுகிறவர்களை முன்பாக பாராவில் போட வேண்டுமென்ற சேனாதிபதியின் உத்தரவைக் கேட்டு அந்த மூன்றாவது பிரிவின் அதிகாரியான கர்னல் ஆச்சரியம் கொண்டார்.தம்முடைய துருப்புகளுக்கு முன்பாக மற்ற துருப்புகள் இருக்கிறது என்பதை நிச்சயமாக அறிவார். அதோடு ஆறு மைல்களுக்கப்புறமே எதிரி இருப்பதாகவும் அவர் நிச்சயமாக நினைத்தார். தமக்கு எதிராக உபயோகமற்ற ஒரு பள்ளத்தாக்கு அடர்ந்த மூடுபனியால் மூடப்பட்டிருந்ததே தவிர வேறு எதுவுமே காண முடியவில்லை. சேனாதிபதியின் உத்தரவை, அதாவது செய்வதற்கு விட்டு போன அந்தக் காரியத்தைச் செய்யும்படியான உத்தரவைச் சொல்லிவிட்டு இளவரசர் ஆண்ட்ரூ மீண்டும் குதிரை மீது திரும்பினார். குட்டுஜோவ் அதே இடத்தில் நின்று கொண்டிருந்தார். அவருடைய கனமான உடம்பு, அவருடைய வயோதிகமான உடம்பு அந்த சேணத்தின்மீது சிறிது சாய்ந்தவாறு இருந்தது. கண்களை மூடிக்கொண்டு களைப்போடு கொட்டாவி விட்டுக்கொண்டிருந்தார். துருப்புகள் அசையவில்லை. தங்கள் துப்பாக்கிகளின் கட்டைகளை பூமியில் ஊன்றிக்கொண்டு துருப்புகள் நின்று கொண்டிருந்தன.

'எல்லாம் சரி; எல்லாம் சரி' என்று அவர் இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்து சொன்னார். பக்கத்திலிருந்த ஒரு ஜெனரல், தம்முடைய கையிலிருந்த கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டு, இடது பக்கவாட்டு துருப்புகள் எல்லாம் பள்ளத்தாக்கில் இறங்கிவிட்ட படியால், அவர்களுடைய துருப்புகள் அப்போது புறப்படுவதற்கு நேரம் வந்துவிட்டது என்று சொன்னார். அவரை குட்டுஜோவ் பார்த்தார்.

'மேன்மை தங்கியவரே, இன்னும் ஏராளமாக நேரம் இருக்கிறது. இன்னும் ஏராளமாக நேரம் இருக்கிறது' என்று கொட்டாவி விட்டுக்கொண்டே குட்டுஜோவ் பதிலளித்தார்.

தமக்குப் பின்பாக சிறிது தூரத்தில் பட்டாளங்கள் மரியாதை செய்யும் சத்தங்கள் கேட்டன. அந்தப் படை முழுவதுமே பரவின. அதிலிருந்து யாருக்காக அவர்கள் மரியாதை தெரிவிக்கிறார்களோ, அந்த நபர் வேகமாக சவாரியில் வந்து கொண்டிருக்கிறார் என்பது தெரிந்தது. தமக்கு முன்னால் நின்று கொண்டிருந்த துருப்புகளும் அதேமாதிரி கோஷம் போட ஆரம்பித்ததும் ஒரு பக்கமாக அவர் சிறிது சென்று முகத்தைச் சுளித்து தம்மைச் சுற்றிப் பார்த்தார். பிராட்ஜென்னிலிருந்து வருகிற ரஸ்தாவில், பற்பல சீருடைகள் அணிந்து குதிரைப் படை வீரர்கள் வேகமாக வந்து கொண்டிருப்பது தெரிந்தது. முன் வரிசையில் ஒருவர் பக்கத்தில் ஒருவராக இருவர் முழு பாய்ச்சலில் வந்து கொண்டிருந்தார்கள். ஒருவர் தம்முடைய தொப்பியில்வெள்ளைத் தோகைகள் அணிந்து சீருடை அணிந்து, வால் வெட்டிவிடப்பட்ட பழுப்புநிறக் குதிரை மீது வந்து கொண்டிருந்தார். இன்னொருவர் வெள்ளை சீருடை அணிந்து கொண்டு, ஒரு கறுப்புக் குதிரையில் வந்து கொண்டிருந்தார். அவர்கள் தான் இரண்டு சக்கரவர்த்திகள். அவர்களுக்குப் பின்னால் பரிவாரங்கள் வந்துகொண்டிருந்தன. குட்டுஜோவ் போர்முனையில் தமக்கு ஏற்பட்ட பழக்கத்தினால் 'கவனம்' என்று உத்தரவிட்டு விட்டு, சக்கரவர்த்தியிடம் போய் சல்யூட் அடித்தார். அவருடைய முழு தோற்றமும் நடத்தையும் திடீரென்று மாறின. காரணம் கேளாமல் ஒரு சிப்பந்தி எப்படி மேல் உத்தரவைக் கேட்டு நடப்பானோ, அதேமாதிரி தோற்றத்தில் அவர் காணப்பட்டார். ஒரு செயற்கையான மரியாதையோடு அவர் சல்யூட் அடித்ததாகக் காணப்பட்டபடியால் அதைக்கண்டு அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி கொஞ்சம் வருந்தினார்.

இந்த வருத்தம், அந்த சக்கரவர்த்தியின் சந்தோஷமான, வாலிபமான முகத்தில், ஒரு தெளிவான வானத்தில் திடீரென்று தோன்றி மறையும் ஒரு மேகத்தைப் போல, சக்கரவர்த்தி முகத்திலும் தோன்றி மறைந்தது. சமீபத்தில் அவருக்கு ஏற்பட்டிருந்த அசௌக்யத்திற்குப் பின்னால், அன்று அவர் மெலிந்திருப்பதாகத் தோன்றினார். ருஷ்யாவிற்கு வெளியிலுள்ள ஆல்முட்ஜ் என்ற இடத்தில்தான் முதன் முதலாக அவரை பால்கோன்ஸ்கி பார்த்தார். மெலிந்திருந்தாலும், இன்னும் அதே மாதிரியான கம்பீரமும் சாந்தமும் அவருடைய அழகிய சாம்பல் வர்ணக் கண்களில் கவர்ச்சிகரமாய்த் தோன்றின. அவருடைய பலவிதமான

மனத்தோற்றங்களை காட்டக்கூடிய தன்மை, அவருடைய மெல்லிய உதடுகளில் அதே மாதிரி காணப்பட்டது. அவருடைய அறியாத இளமையும் நல்லெண்ணமும் அதேமாதிரி முகத்தில் காணப்பட்டன.

ஆல்முட்ஜ் அணிவகுப்புப் பார்வையில் அவர் இன்னும் அதிக கம்பீரமாய் தோன்றினார். ஆனால் இங்கேயோ, அதைவிட அதிகமான பிரகாசத்தோடும் உற்சாகத்தோடும் காணப்பட்டார். இரண்டு மைல்கள் அவர் சவாரி வந்ததனால், அவர் முகம் சிறிது சிவந்திருந்தது. தமது குதிரையின் கடிவாளத்தை இழுத்துப் பிடித்து நிறுத்தி லேசாகப் பெருமூச்சுவிட்டுத் தம்மைச் சுற்றி நின்ற பரிவாரங்களின் முகத்தைப் பார்த்தார். அவர்களுடைய முகங்களெல்லாம் தம்மைப் போலவே இளமையாகவும் துடிதுடிப்போடும் இருக்கக் கண்டார். ஜார்டோரிஸ்கி, நாவாஸைல்ட்ஸேவ், பிரின்ஸ் வால்கோன்ஸ்கி, ஸ்ட்ரோகானாவ் ஆகியவர்களும் மற்றவர்களும் மிக அழகாக உடையணிந்து, மிகச் சிறந்த, நன்றாய் தேய்த்துவிடப்பட்ட, புத்துணர்ச்சி கொண்ட அன்று சிறிதளவு வேலைதான் செய்த குதிரைகளில் அமர்ந்து, சக்கரவர்த்திக்குப் பின்னால் நிறுத்திக்கொண்டு, புன்சிரிப்போடு தங்களுக்குள் பேசிக்கொண்டு வந்தார்கள். சக்கரவர்த்தி பிரான்ஸிஸ் ஒரு சிவந்த, நீண்ட முகமுள்ள வாலிபர். தமது அழகான கறுப்புக் குதிரைமீது நேராக நிமிர்ந்து உட்கார்ந்திருந்தார். தம்மைச் சுற்றிலும், எதையோ நினைத்துக்கொண்டு சாவகாசமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். தம்முடைய ஒரு வெள்ளை உதவியாளரை அழைத்து அவரிடம் எதையோ கேட்டார்.

'ஒருவேளை எத்தனை மணிக்கு' அவர்கள் புறப்பட்டார்கள் என்று கேட்பதாய் இருக்கலாம்' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். தமக்கு ஏற்கனவே அறிமுகமான அவரை கவனித்துக் கொண்டிருந்தபோது பிரென் என்ற இடத்தில் தமக்கு அவர் கொடுத்த பேட்டி ஞாபகத்திற்கு வந்தது. அதை நினைத்தபோது அவருக்குத் தோன்றிய புன்முறுவலை அவரால் அடக்க முடியவில்லை. சக்கரவர்த்திகளின் பரிவாரங்களில் பொறுக்கியெடுக்கப்பட்ட வாலிப அதிகாரிகள் இருந்தார்கள். ருஷ்ய ஆஸ்திரிய காப்பாளர் படையிலிருந்தும் மற்ற படைகளிலிருந்தும் அவர்கள் எடுக்கப் பட்டவர்கள். அவர்களோடு ஜார் சக்கரவர்த்தியின் குதிரைக்காரர்களும் வேலைப்பாடுடைய துணிகளால்போர்த்தப் பட்ட அழகிய மாற்றுக் குதிரைகளைப் பிடித்துக்கொண்டிருந் தார்கள்.

ஒரு ஜன்னலைத் திறந்தவுடன் மூடியிருந்த புழுக்கம் நிறைந்த ஒரு அறைக்குள் எப்படிப் புதிய காற்று குப்பென்று நுழையுமோ, அதே மாதிரி குட்டுஜோவின் உற்சாகமற்ற அந்தப் பரிவாரத்தில் திடீரெனச் சக்கரவர்த்திகளின் பரிவாரங்களை சேர்ந்தவர்களான இந்த புத்திசாலி வாலிபர்கள் சவாரியில் அங்கே வந்ததன் மூலம் ஒரு இளமையும் ஊக்கத்தையும் வெற்றியின் நிச்சயத்தையும் கொண்டுவந்து சேர்த்தார்கள்.

'மைக்கேல் இலாரியோனாவிச், நீர் ஏன் இன்னும் ஆரம்பிக்க வில்லை?' என்று சக்கரவர்த்தி அவசரமாகக் குட்டுஜோவைக் கேட்டார். அதே சமயத்தில் மரியாதையோடு சக்கரவர்த்தி பிரான்ஸிஸையும் அவர் நோக்கினார்.

'மாட்சிமை தங்கியவரே, நான் காத்துக்கொண்டிருக்கிறேன்' என்று மரியாதையுடன் முன்னால் குனிந்து குட்டுஜோவ் பதிலளித்தார்.

சக்கரவர்த்தி லேசாக முகம் சுளித்து தமக்கு காதில் விழவில்லை என்கிற பாவனையோடு சிறிது காதை முன்னால் சாய்த்தார்.

'மாட்சிமை தங்கியவரே நான் காத்துக்கொண்டிருக்கிறேன்' என்று மீண்டும் குட்டுஜோவ் சொன்னார். ('காத்துக்கொண்டிருக் கிறேன்' என்ற வார்த்தைகளை குட்டுஜோவ் சொல்லியபோது அவருடைய மேல் உதடு இயற்கைக்கு விரோதமாகச் சுளித்ததை இளவரசர் ஆண்ட்ரூ கவனித்தார்.) இன்னும் எல்லா படைகளும் அணிவகுத்து முடியவில்லை, மாட்சிமை தங்கியவரே'.

ஜாருக்கு இவர் சொல்லியது கேட்டது. ஆனால் இந்த பதிலை அவர் விரும்பவில்லை. தமது வட்டமான தோள்களைக் குலுக்கிக் கொண்டு தமது பக்கத்தில் நின்ற நாவாசைல்ட் ஸேவ் என்பவரை குட்டுஜோவைப் பற்றி குறை சொல்வதைப்போல நோக்கினார்.

'மைக்கேல் இலாரியோனாவிச், நாம் எம்ப்ரஸ் சதுக்கத்தில் இருக்கவில்லை என்பதை நீர் அறிவீர். அங்கேதான் எல்லா துருப்புகளும் வந்து சேருகிறவரையில் அணி வகுப்புக் காட்சி ஆரம்பமாவதில்லை' என்று ஜார் சொல்லிவிட்டு, மீண்டும் சக்கரவர்த்தி பிரான்ஸிஸை நோக்கினார். அதாவது அவர் இந்தப் பேச்சில் கலந்துகொள்ளாவிட்டாலும், தாம் சொல்வதையாவது கேட்குமாறு அழைப்பதைப் போல இருந்தது. ஆனால் சக்கரவர்த்தி பிரான்ஸிஸ் தம்மைச் சுற்றித் தொர்ந்து பார்த்துக்கொண்டிருந்தாரே தவிர, இவர் சொல்வதைக் கவனிக்கவில்லை.

'அதற்காகவேதான நான் இன்னும் ஆரம்பிக்கவில்லை, மாட்சிமை தங்கியவரே, என்று குட்டுஜோவ் கணீரென்ற குரலில்

பேசினார். காது கேட்கவில்லை என்ற புகாருக்கு மீண்டும் இடம் இருக்கக் கூடாது என்பது போல அவர் பேசியதாகத் தோன்றியது. அவருடைய முகத்தில் இச்சமயமும் ஏதோ சுளித்தது. ‘அதே காரணத்திற்காகத்தான் நான் இன்னும் ஆரம்பிக்கவில்லை, மாட்சிமை தங்கியவரே. ஏனென்றால் நாம் படை அணிவகுப்புக் காட்சியை நடத்திக்கொண்டிருக்கவில்லை; அல்லது எம்பரஸ் சதுக்கத்தில் நிற்கவும் இல்லை’ என்று தெளிவாகவும் விளக்கமாகவும் அவர் பேசினார்.

சக்கரவர்த்தியின் பரிவாரத்திலுள்ளவர்கள் எல்லாரும் இம்மாதிரி பேசியதைக் கண்டு அதிருப்தி அடைந்தவர்கள் போலவும், அதைக் கண்டிப்பதைப்போலவும் ஒருவரையொருவர் வேகமாகப் பார்த்துக்கொண்டனர். ‘அவர் வயதானவராயிருந்தாலும் கூட அவர் இம்மாதிரி பேசியிருக்கக் கூடாது. கண்டிப்பாய் கூடாது’ என்று சொல்வதைப் போல அவர்களுடைய நோட்டங்கள் இருந்தன.

குட்டுஜோவின் கண்களைக் கவனத்தோடும் உன்னிப்பாகவும் ஜார் நோக்கினார். இன்னும் ஏதாவது அவர் பேசுவாரோ என்று எதிர்பார்ப்பதைப் போல இருந்தது. ஆனால் குட்டுஜோவ் மரியாதையோடு தலை வணங்கி தாமும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதைப் போலவே காணப்பட்டார். அந்த மௌனம் சுமார் ஒரு நிமிஷம் நீடித்தது.

‘என்றாலும், மாட்சிமை தங்கியவரே, தாங்கள் ஆக்ஞை யிட்டால்’ என்று குட்டுஜோவ் சொல்லித் தமது தலையை உயர்த்தினார். மீண்டும் மந்தமாகவும் காரணம் கேட்காமல் கீழப்படியும் ஜெனரலின் குரலாகவும் அவரது குரல் மாறியது.

தம்முடைய குதிரையை அவர் தட்டிவிட்டு மிலாராடாவிச் என்ற அந்த அணிவரிசையின் கமாண்டரை அழைத்து பட்டாளத்தை முன்னேறும்படி உத்தரவிட்டார்.

துருப்புகள் மீண்டும் நகர ஆரம்பித்தன. நோவ்காராட் என்ற பிரிவைச் சேர்ந்த இரண்டு பட்டாளங்களும், ஆப்ஷெரான் பட்டாளம் ஒன்றும், சக்கரவர்த்தி முன்பாக நகர்ந்து போயின.

இந்த ஆப்ஷெரான் பட்டாளம் போகும்போது அதனுடைய கமாண்டரான மிலாராடாவிச் தம்முடைய பெரிய வெளிச் சட்டையில்லாமலிருந்தார். தம்முடைய பதக்கங்களை மார்பில் அணிந்துகொண்டு, பிரம்மாண்டமான தோகைகளை ஒரு பக்கமாய் கொண்ட தமது நிமிர்ந்த தொப்பியின் கோணங்கள் முன்னும் பின்னுமாக இருக்குமாறு தமது தலையில் அந்தத் தொப்பியை வைத்துக்கொண்டு, ஆர்வத்தோடு முன்னால் பாய்ந்து சவாரி செய்து

வேகமாய் சல்யூட் அடித்து சக்கரவர்த்தியின் முன்பாக தமது குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து இழுத்து நிறுத்தினார்.

'கடவுள் உம்மிடம் இருப்பாராக, ஜெனரலே' என்றார் சக்கரவர்த்தி.

'ஆமாம், மாட்சிமை தங்கியவரே, எவையெல்லாம் சாத்யமோ அவற்றையெல்லாம் நாங்கள் செய்வோம்' என்று சந்தோஷத்தோடு பிரஞ்சு மொழியில் பதில் அளித்தார். அவருடைய மோசமான பிரஞ்சு மொழியை பார்த்து ஜாரின் பரிவாரத்தில் இருந்த கனவான்கள் கேலியான புன்னகை கொண்டார்கள்.

மிலாராடாவிச் தமது குதிரையைச் சடாரென்று திருப்பி சக்கரவர்த்திக்கு சிறிது பின்பாக நிறுத்தினார். ஆப்ஜெரான் வீரர்கள் சக்கரவத்தியின் பிரசன்னத்தால் உற்சாகமடைந்தவர்களாய் ரொம்ப கம்பீரமாக சக்கரவர்த்திகளுக்கும் அவர்களுடைய பரிவாரங் களுக்கும் முன்னால் நடந்து போனார்கள்.

'வாலிபர்களே' என்று மிலாராடாவிச் ஒரு சந்தோஷமான தன்னம்பிக்கையுள்ள உரத்த குரலில் கூச்சலிட்டார். துப்பாக்கி சத்தத்தினால் அவர் சந்தோஷமடைந்தது போலவும் வரப்போகும் யுத்தத்தைக் கண்டு மகிழ்ச்சியடைந்தது போலவும் சுவோராவ் காலத்திலுள்ள தமது தோழர்களான அந்த ஆபஷெரான் படையினரைப் பாத்த்து, அதே வீரர்கள் சக்கரவர்த்திகளுக்கு முன்பாக நடந்து போவதைப் பார்த்து உற்சாகம் கொண்ட வராகவும்அவர் கூவினார். அந்த உற்சாகத்தில் அங்கு சக்கரவர்த்திகள பிரசன்னமாய் இருந்ததையும் மறந்து போனார். 'வாலிபர்களே, நீங்கள் கைப்பற்றப்போகிற முதல் கிராமத்தோடு உங்கள் வேலை முடிந்து விடவில்லையென்பது ஞாபகம் இருக்கட்டும்'

'எங்களால் சாத்யமானதை சந்தோஷமாகவே செய்வோம்' என்று வீரர்கள் கோஷமிட்டார்கள. இந்த திடீர் கூச்சலைக் கேட்ட சக்கரவரத்தியின் குதிரை மிரண்டது. இந்தக் குதிரை ருஷ்யாவில் அணிவகுப்புக் கண்காட்சிகளில் சக்கரவர்த்தியை சுமந்துகொண்டு சென்றிருக்கிறது. இங்கே ஆஸ்டர்லிட்ஜ் போர்க் களத்திலும் அது வந்து நிற்கிறது. சக்கரவர்த்தி தமது இடது காலிலுள்ள தார்ச்சக்கரத்தினால் குத்துவதை அது சகித்துக்கொண்டு அந்த எம்ரஸ் சதுக்கத்தில் எப்படி வெடி சப்தங்களை கேட்பதற்கு தனது காதுகளை நேராக வைத்துக்கொள்ளுமோ, அதே மாதிரி வைத்துக் கொண்டிருந்தது. ஆனால், துப்பாக்கி சத்தத்தின் முக்யத்துவத்தை அது உணரவில்லை. அல்லது சக்கரவர்த்தி பிரான்சிஸினுடைய கறுப்பு ஆண் குதிரை தன்பக்கத்தில் நிற்பதையும் அது

உணரவில்லை. அல்லது தம்மீது சவாரி செய்து வருகிறவர் அன்று பேசியதையும் நினைத்ததையும் உணர்ந்ததையும் அது உணரவில்லை.

சக்கரவர்த்தி புன்னகையோடு தம்முடைய பரிவாரங்களிலுள்ள ஒருவரைப் பார்த்து அந்த ஆப்ஷெரன் வீரர்களைபற்றி ஏதோ கூறினார்.



குதிரைப் படைக்குப் பின்பாக மெதுவாகத் தமது பரிவாரங்கள் பின் தொடர குட்டுஜோவ் சவாரி போய்க் கொண்டிருந்தார். அந்தப் படைக்குப் பின்பாக அரை மைல் தூரம் போனதும், ஒரு தனி பாழடைந்த வீட்டிற்குப் பக்கத்தில் நின்றார். ஒரு காலதில் அது ஒரு ஹோட்டலாய் இருந்திருக்குமென்று தெரிந்தது. அங்கிருந்தது இரண்டு பாதைகள் பிரிந்தன. அந்த இரண்டு பாதைகளும் குன்றுக்குக் கீழாகப் போய்க் கொண்டிருந்தன. அவற்றின் வழியாகத் துருப்புகள் மார்ச் செய்துகொண்டிருந்தார்கள்.

சுமார் 1.5 மைல் தூரத்திலுள்ள எதிர் பக்கத்துக் குன்றுகளில், மூடுபனி விலக ஆரம்பித்தது. அங்கே எதிரி துருப்புகள் மங்கலாகத் தெரிந்துகொண்டிருந்தார்கள். கீழே பள்ளத்தாக்கில்இடது பக்கத்தில் துப்பாக்கிச் சத்தம் தெளிவாகக் கேட்டது. குட்டுஜோவ் ஒரு ஆஸ்திரிய ஜெனரலுடன் பேசிக்கொண்டிருந்தார். அவர்களுக்குப் பின்னால் சிறிது தூரத்தில் நின்று அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்த இளவரசர் ஆண்ட்ரூ, திடீரென்று ஒரு உதவியாளர் பக்கம் திரும்பி, ஒரு தொலைநோக்கிக் கண்ணாடி கொடுக்கும்படி கேட்டார்.

'அதோ பாருங்கள்; அதோ பாருங்கள்' என்றார், அந்த உதவியாளர். தூரத்திலிருந்த பிரஞ்சு துருப்புகளை அவர் பார்க்கவில்லை. ஆனால் கீழே பள்ளத்தாக்கிலிருந்த துருப்புகளை அவர் காட்டி, 'அதோ பிரஞ்சு துருப்புகள்' எனறார்.

அந்த இரண்டு ஜெனரல்களும் உதவியாளரும் அந்தப் பூதக்கண்ணாடியை ஒருவரிடமிருந்து ஒருவர் வாங்கிப் பார்த்தார்கள். அவர்களுடைய முகங்கள் திடீரென்று பயங்கரமாய் மாறின. 1.5 மைலுக்கு அப்பால் பிரஞ்சு துருப்புகள் இருக்கிறார்கள் என்று நினைத்துக்கொண்டிருந்தபோது, இப்போது திடீரென்று எதிர்பாராத விதமாகத் தங்கள் எதிரிலேயே வந்துவிட்டதைக் கண்டார்கள்.

‘அதோ எதிரிகள்...இல்லை... ஆமாம், அதோ பாருங்கள்... நிச்சயமாக... ஆனால், எப்படி நடந்தது? என்று பல குரல்கள் கேப்டன்.

கண்ணாடி இல்லாமலேயே இளவரசர் ஆண்ட்ரூ வலது பக்கத்தில், கீழே பள்ளத்தாக்கில் பார்த்தபோது, குட்டுஜோவ் நின்ற இடத்திலிருந்து சுமார் 500 அடிகள் தூரத்தில் ஆப்ஷெரன் வீரர்களை எதிர்ப்பதற்காக அடர்ந்து நெருங்கிய ஒரு பிரஞ்சு பட்டாளம் வந்துகொண்டிருப்பதைப் பார்த்தார்கள்.

‘இதோ வந்துவிட்டார்கள். அந்த முடிவான சந்தர்ப்பம் வந்துவிட்டது. என்னுடைய முறையும் வந்துவிட்டது’ என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்து, தமது குதிரையை குட்டுஜோவிடம் தட்டிவிட்டுப் போனார்.

‘ஆப்ஷெரன்களை மேலே போகவிடாமல் தடுக்க வேண்டும். மேன்மை தங்கியவரே’ என்று கூச்சலிட்டார். ஆனால், அதே வினாடியில் ஒரு புகை மேகம் சுற்றிலும் பரவியது. வெகு சமீபமாக துப்பாக்கிச் சத்தம் கேட்டது. ஒரு வெகுளித்தனமான பயங்கரக் குரல் இளவரசர் ஆண்ட்ரூவுக்கு இரண்டடிகளுக்கு முன்பாக கேட்டது. அந்தக் குரல் ‘சகோதரர்களே, எல்லாம் போய்விட்டது’ என்று கத்தியது. இந்தச் சப்தத்தைக் கேட்டதும், ஏதோ தளபதியின் உத்தரவு மாதிரி ஒவ்வொருவரும் அதைவிட்டு ஓட ஆரம்பித்தார்கள்.

ஐந்து நிமிஷங்களுக்கு முன்னால், சக்கரவர்த்திகளின் முன்பாகத் துருப்புகள் மார்ச் செய்துகொண்டிருந்த அதே இடத்தில் இப்போது துருப்புகள் குழப்பம் அடைந்து, வரவர அதிகமான பேர்கள் பின்னால் ஓட ஆரம்பித்தார்கள. அவர்களுடைய ஓட்டத்தை நிறுத்துவது மிகவும் கஷ்டமான வேலை. அது மட்டுமல்ல அவர்களோடு தாங்களும் தள்ளிக்கொண்டு போகப்படாமல் அங்கே நின்றுகொண்டிருப்பதும் அசாத்யமாய் இருந்தது. அவர்களை ஓடிப் போகாமல் இருப்பதற்கு பாஸ்கோன்ஸ்கி முயற்சித்தார். அவர் கலவரத்தோடு சுற்றித் திரும்பிப் பார்த்தார். தமக்கு முன்னால் என்ன நடந்துகொண்டிருக்கிறதென்பதை அறிய அவரால் முடியவில்லை. நெஸ்வைட்ஸ்கி சிவந்த கோபமான முகத்தோடு குட்டுஜோவைப் பார்த்து, உடனே அயவர் அங்கிருந்து சவாரி போகாவிட்டால், நிதச்சயமாகக் கைதியாக அகப்பட்டுக்கொள்வார் என்று கத்தினார். குட்டுஜோவ் அவருக்குப் பதில் சொல்லாமல் அதே இடத்தில் நின்றுகொண்டு, ஒரு கை குட்டையை எடுத்தார். அவருடைய கன்னத்திலிருந்து ரத்தம் ஒழுகிக்கொண்டிருந்தது. இளவரசர் ஆண்ட்ரூ மற்றவர்களைத் தள்ளிக்கொண்டு அவரிடம் போனார்.

'உமக்கு காயம் ஏற்பட்டுவிட்டதா?' என்று தமது கீழ் நாடி நடுங்கிக்கொண்டிருந்ததை அடக்க முடியாமல் அவர் கேட்டார்.

'காயம் இங்கே இல்லை. அங்கேதான் காயம்' என்று குட்டுஜோவ் தமது கைக் குட்டையால் காயம் அடைந்த கன்னத்தை அமுக்கிக்கொண்டு, ஆடிப் போய்க்கொண்டிருந்த சிப்பாய்களைச் சுட்டிக்காட்டிச் சென்னார். 'அவர்களை நிறுத்துங்கள்' என்று அவர் கூச்சலிட்டார். ஆனால், அதே வினாடியில் அவர்களை நிறுத்துவது சாத்யமில்லை என்பதை உணர்ந்தவர்போல, தமது குதிரையைத் தார்ச்சக்கரத்தால் தட்டிவிட்டு, வலது பக்கமாகப் போனார். புதிது புதிதாக திரும்பி ஓடிவரும் வீரர்கள் அவரையும் சேர்த்துத் தள்ளிக்கொண்டு போனார்கள்.

ஓடுகிற வீரர்கள் அவ்வளவு நெருக்கமாகப் போனபடியால் அவர்களுக்கு மத்தியில் ஒருவர் அகப்பட்டுக்கொண்டால், அதைவிட்டு வெளியே வருவது கஷ்டமாய் இருந்தது. 'மேலே போங்கள். எங்களுக்கு ஏன் இடையூறாய் நிற்கிறீர்கள்?' என்று ஒருவர் கத்தினார். இன்னொருவர் திரும்பிப் பார்த்து, ஆகாயத்தை நோக்கி சுட்டார். மூன்றாமவர், குட்டுஜோவ் ஏறியிருந்த குதிரையை அடித்தார். மிகுந்த சிரமத்தோடு அந்த வட்டத்தைவிட்டு குட்டுஜோவ் இடதுபக்கமாக வந்தார்.அவருடைய பரிவாரங்களில் உள்ள ஆட்கள் பாதிக்கு மேலாகக் குறைந்துவிட்டார்கள். தமது பக்கத்தில் கேட்டுவந்த பீரங்கிப் படையை நோக்கி அவர் சென்றார். ஓடுகிறவர்களிலிருந்து தப்பி வந்த இளவரசர் ஆண்ட்ரூ, குட்டுஜோவுக்குச் சமீபமாக இருக்க முயற்சி செய்தார். அந்தக் குன்றின் சரிவான பாகத்தில், புகைகளுக்கு நடுவே ஒரு ருஷ்ய பீரங்கிப் படை பிரஞ்சுக்காரர்கள் மீது இன்னமும் சுட்டுக் கொண்டிருந்தது. அந்தப் பிரஞ்சுக்காரர்கள் அதை நோக்கி ஓடினார்கள். அவர்களை விட்டு அந்த இடத்திலிருந்து இன்னும் கொஞ்ச உயரமான இடத்தில் சில ருஷ்ய காலட்படை வீரர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் அந்த பீரங்கிப் படையைக் காப்பதற்கு முன்னால் செல்லவும் இல்லை; பின்னால் திரும்பி ஓடவும் இல்லை. அவர்களிலிருந்து பிரிந்து வந்த ஒரு ஜெனரல் குட்டுஜோவை நெருங்கினார். குட்டுஜோவின் பரிவாரங்களில் நாலுபேர்தான் தங்கி நின்றார்கள். அவர்கள் முகம் வெளிறிப்போய், மௌனமாக ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

'அந்த கேடு கெட்டவர்களை உடனே நிறுத்துங்கள்' என்று ஓடிப்போய்க்கொண்டிருந்த சிப்பாய்களைச் சுட்டிக்காட்டி குட்டுஜோவ் அந்தப் பட்டாளக் கமாண்டரிடம் கூச்சலிட்டார். அச்சமயத்தில் இம்மாதிரி பேசியதற்கு அவரைத் தண்டிப்பது

போன்று, துப்பாக்கித் தோட்டாக்கள் அந்தப் பட்டாளத்தின் மீதும், குட்டுஜோவின் பரிவாரத்தின் மீதும், ஒரு சிறிய பறவைக் கூட்டம் போலப் பறந்து வந்தன.

பிரஞ்சுக்காரர்கள் பீரங்கிப் படையைத் தாக்கினார்கள். அவர்கள் குட்டுஜோவைப் பார்த்ததும், அவர்மீது சுட்டுக்கொண்டிருந்தார்கள். இந்தத் துப்பாக்கி மழைக்குப் பின்னால், அந்தப் பட்டாளக் கமாண்டர் காலைப் பிடித்தார். பல சிப்பாய்கள் கிழே விழுந்தார்கள். ஒரு உதவி அதிகாரி, கையில் கொடியைப் பிடித்துக் கொண்டிருந்தவர், கொடியைக் கீழே போட்டார். அந்தக் கொடி ஆடி விழுந்தது. ஆனால் பக்கத்திலிருந்த சிப்பாய்களின் துப்பாக்கிகளில் அந்தக் கொடி மாட்டிக்கொண்டது. அந்த சிப்பாய்கள், உத்தரவில்லாமலேயே சுட ஆரம்பித்தார்கள்.

'ஓ...ஓ...ஓ...' என்று அதைரியத்தோடு சுற்றிலும் பார்த்து, குட்டுஜோவ் முனங்கினார்... 'பால்கோன்ஸ்கி' என்று அவர் தணிந்த குரலில் அழைத்தார். அவருடைய வயோதிகத்தை உணர்ந்தது போன்று அவருடைய குரல் நடுங்கியது. அந்தப் பட்டாளம் நிலை குலைந்து ஓடுவதையும் எதிரியையும் அவர் சுட்டிக்காட்டி, 'பால்கோன்ஸ்கி, அது என்னது?' என்று கேட்டார்.

ஆனால், அவர் பேசிமுடிப்பதற்கு முன்பாக வெட்கத்தினாலும் கோபத்தினாலும் அவருடைய தொண்டை அடைக்க, இளவரசர் ஆண்ட்ரூ குதிரையிலிருந்து கீழே பாய்ந்து, அந்தக் கொடியின் பக்கம் ஓடினார்.

'முன்னேறுங்கள், வாலிபர்களே' என்று ஒரு குழந்தைபோல கீச்சுக் குரலில் அவர் கூச்சலிட்டார்.

'இதோ இருக்கிறது' என்று அந்தக் கொடியின் கம்பைப் பற்றிய ஆண்ட்ரூ நினைத்தார். அங்கு பறந்து வந்த தோட்டாக்கள் எல்லாம் தம்மைநோக்கியே வருகின்றன என்பதில் மகிழ்ச்சி கொண்டார். பல சிப்பாய்கள் கீழே விழுந்தார்கள்.

'ஜேஜே' என்று இளவரசர் ஆண்ட்ரூ கூச்சலிட்டுக்கொண்டு அந்த பலமான கொடியைத் தூக்க முடியாமல் தூக்கிக்கொண்டு அந்தப் பட்டாளம் முழுவதும் தம்மைப் பின்பற்றும் என்ற முழு நம்பிக்கையோடு முன்னால் ஓடினார்.

உண்மையில் தனியாக அவர் சில அடி தூரங்களே ஓடினார். முதலில் ஒரு சிப்பாய், பின்னால் மற்றொருவர், அதன்பின்னால் ஒரு முழு பட்டாளமுமே ஜெய கோஷம் போட்டுக்கொண்டு, முன்னால் ஓடி, அவரோடு சேர்ந்துகொண்டனர். பட்டாளத்தின் சார்ஜண்ட் அவரிடம் ஓடி, கொடியின் கனத்தைத் தாங்க முடியாமல் திணறிக்

கொண்டிருந்த இளவரசர் ஆண்ட்ரூவின் கையிலிருந்து அந்தக் கொடியைக் கைப்பற்றினார். ஆனால், உடனே அவர் கொல்லப் பட்டார். இளவரசர் ஆணட்ரூ மீண்டும் கொடியைக் 'கைப்பற்றி, அதன் கம்பைப் பற்றி இழுத்துக்கொண்டு பட்டாளத்துடன் ஓடினார். தமக்கு முன்னால் பீரங்கிப் படைக்காரர்களைப் பார்த்தார். சிலர் இன்னமும் சண்டை போட்டுக்கொண்டிருந்தார்கள். வேறு சிலர் அந்தப் பீரங்கிகளை விட்டுவிட்டுத் தம்மை நோக்கி ஓடிவந்து கொண்டிருந்தார்கள். பிரஞ்சு காலாட்படை வீரர்கள் அந்த பீரங்கிப்படை குதிரைகளைப் பற்றிக்கொண்டு, அந்தப் பீரங்கிகளைத் திருப்பினார்கள். இளவரசர் ஆண்ட்ரூவும், அவர் பின்னால் போன பட்டாளமும் பீரங்கியிலிருந்து 20 அடி தூரத்திலிருந்தார்கள். தமக்கு மேலாகத் தோட்டாக்கள் தொடர்ந்து பறந்து போவதை அவர் கேட்டார். தமக்கு வலது பக்கமும் இடது பக்கமும் தொடர்ச்சியாக சிப்பாய்கள் முனங்கிக்கொண்டு கீழே விழுந்துகொண்டிருப்பதையும் பார்த்தார். ஆனால், அவர்களை அவர் கவனிக்கவில்லை. தமக்கு எதிராக பீரங்கிப் படை இருக்கிற இடத்தில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பது ஒன்றிலேயே கவனமாய் இருந்தார். ஒரு சிவந்த தலைமுடியுடைய பீரங்கிக் காரன், தன்னுடைய தொப்பியை சாய்வாய் வைத்துக்கொண்டு, ஒரு கந்தல் துணியில் ஒரு முனையை இழுத்துக்கொண்டிருப்பதையும். ஒரு பிரஞ்சு சிப்பாய் மற்றொரு முனையை இழுத்துக்கொண்டிருப் பதையும் பார்த்தார். இந்த இருவர் முகத்திலும் காணப்பட்ட கோபமான தோற்றங்கள்அவருக்குத் தெரிந்தன. ஆனால், அவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

'அவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்?' என்று அவர்களைப் பார்த்த இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார் 'அந்த சிவப்புதலை ரோமத்தை உடைய பீரங்கிக்காரன் தன்னிடம் துப்பாக்கியில்லாமல் இருக்கிறபடியால் ஏன் ஓடவில்லை?அந்த பிரஞ்சுக்காரன் எதற்காக அவனைக் குத்துகிறான்? பிரஞ்சுக்காரன் தன்னுடைய ஈட்டியை எடுத்து அவனைக் குத்து முன்பாக அவனால் ஓடமுடியாது...'

மற்றொரு பிரஞ்சு சிப்பாய், தனது துப்பாக்கியை இழுத்துக்கொண்டு அங்கு போராடிக்கொண்டிருந்தவர்களிடம் ஓடி வந்தான். அந்த சிவப்பு ரோமம் உடை பீரங்கிக்காரனின் விதி அப்போதுதான் தீர்மானிக்கக் கூடியதாயிருந்தது. அவன் அந்த கந்தல் துணியை வெற்றிகரமாய் கைப்பற்றிக் கொண்டான். ஆனால், அவனுக்கு வரப்போவது என்ன என்பதை அவன் உணரவில்லை.

அது எப்படி முடிந்தது என்பதை இளவரசர் ஆண்ட்ரூவால் பார்க்க முடியவில்லை. துப்பாக்கிக் கட்டையால் அவன் தலையில் ஒரு சிப்பாய் முழுவேகத்தோடு அடித்திருக்க வேண்டுமென்று அவருக்குத் தோன்றியது. அந்த நினைப்பு அவருக்கு சிறிது வருத்தத்தைக் கொடுத்தது. ஆனால், அவருக்கு ஏற்பட்ட வலியானது அவருடைய கவனத்ததைத் திருப்பி, அவர் எதைப் பார்த்துக்கொண்டிருந்தாரோ, அதைப் பார்க்கவிடாமல் தடுத்தது.

'இது என்னது? நான் கீழே விழுகிறேனா? என் கால்கள் நிற்கவில்லையே' என்று அவர் நினைத்து மல்லாந்து சாய்ந்தார். அந்த பிரஞ்சுக்காரர்களும் பீரங்கிக்காரர்களும் போட்டுவந்த சண்டை எவ்வாறு முடிந்தது என்பதை அறிந்துகொள்வதற்கும், சிவப்பு தலைமயிருடைய பீரங்கிக்காரன் கொல்லப்பட்டான் இல்லையா என்பதை அறிந்துகொள்வதற்கும் அந்த பீரங்கி பிடிபட்டுவிட்டதா என்பதை அறிந்து கொள்வதற்குகம் அவர் கண்களைத் திறந்தார். ஆனால், அவரால் எதையும் பார்க்க முடியவில்லை. அவருக்கு மேலாக ஆகாயத்தைத் தவிர, அந்த உயரமான சின்னமும் தெளிவடையாத, அளவிடமுடியாத உயரத்திலுள்ள சாம்பல் வர்ண மேகங்கள், அதன் குறுக்காக மெதுவாய் போய்க்கொண்டிருந்த அந்த ஆகாயத்தைத் தவிர வேறு எதையும்ங அவரால் காண முடியவில்லை.

'எவ்வளவு அமைதியாயிருக்கிறது, எவ்வளவு சாந்தமாயிருக்கிறது, எவ்வளவு பவித்ரமாய் இருக்கிறது; நான் ஓடி வந்ததைப் போல் இல்லை' என்று இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். 'நாம் ஓடியதைப்போல, கூச்சலிட்டு சண்டைபோட்டதுபோல இல்லை. பீதியடைந்த கோபமான முகங்களோடு அந்த பீரங்கிகக்காரனும் பிரஞ்சுக்காரனும் அந்த கந்தல் துணிக்காக சண்டை போட்டார்களே, அந்தமாதிரி இல்லை. இந்த மேகங்கள் அவர்களுக்கெல்லாம் நேர் விரோதமாக அந்த அகண்ட, உயரமான ஆகாயத்தில் மிதந்து செல்லுகின்றன. எப்படி இந்த உயரமான ஆகாயத்தை இதற்கு முன்னால் நான் பார்க்காமல் போய்விட்டேன். கடைசியாக அதை நான் கண்டுபிடித்ததற்காக நான் எவ்வளவு சந்தோஷமாய் இருக்கிறேன். ஆமாம், எல்லாம் தற்பெருமை, எல்லாம் பொய். அந்த அகண்ட ஆகாயத்தைத் தவிர, மீதமுள்ளவையெல்லாம் பொய். அது ஒன்றைத் தவிர வேறு எதுவுமே இல்லை. வேறு எதுவுமே இல்லை. அதுவும் கூட உண்மையில் இல்லை. ஏனெனில், சாந்தத்தையும் அமைதியையும் தவிர, வேறு எதுவுமே கிடையாது. கடவுளுக்கு நன்றி...'

3

17

பாக்ரேஷன் தலைமையிலுள்ள நமது வலது பக்கவாட்டில் காலை 9 மணிக்குக்கூட யுத்தம் ஆரம்பமாகவில்லை. டால்காருகாவ் கேட்டபடி யுத்தத்தை ஆரம்பிக்க அவருக்கு இஷ்டம் இல்லை. ஆகவே தமது பொறுப்பைக் கழிப்பதற்காக சேனாதிபதியிடம் உத்தரவு பெற்று வரும்படி டால்காருகாவிடம் பாக்ரேஷன் சொன்னார். இரண்டு பக்கவாட்டுகளுக்கும் இடையில் 6 மைல்கள் தூரம் இருக்கின்றன என்பதையும், அங்கிருந்து அனுப்பப்படுகிற தூதன் வழியில் கொல்லப்படாமல் போய் சேனாதிபதியைப் பார்த்தாலும் (அவரைக் கண்டுபிடிப்பது மிகுந்த கடினம்) அவன் மாலைக்குள்ளாகத் திரும்பிவர முடியாதென்பதையும் பாக்ரேஷன் அறிவார்.

தமது பெரிய, எவ்வித அபிப்பிராயமும் இல்லாத, தூக்கத்தோற்றமுள்ள கண்களால் பாக்ரேஷன் தமது பரிவாரத்தை சுற்றிப்பார்த்தார். அங்கே உற்சாகத்தினாலும் நம்பிக்கையினாலும் மூச்சுகூட விட முடியாமல் திணறிக் கொண்டிருந்த ராஸ்டோவின் வாலிப முகத்தை முதலில் அவர் கண்டார். அவரை அனுப்பினார்.

'மேன்மை தங்கியவரே, ஒரு வேளை சேனாதிபதி நான் பார்ப்பதற்கு முன்பாக, மாட்சிமை தங்கியவரை நான் பார்த்தால், என்ன செய்ய வேண்டும்' என்று தமது கையைத் தொப்பியில் வைத்து சல்யூட் செய்து ராஸ்டோவ் கேட்டார்.

'நீர் அந்தச் செய்தியை மாட்சிமை தங்கியவரிடம் கொடுத்து விடலாம்' என்று பாக்ரேஷனை அவசரமாக இடைமறித்து டால்காருகாவ் சொன்னார்.

பாரா வேலையிலிருந்து விடுபட்ட ராஸ்டோவ் விடிவதற்கு முன்பாகச் சில மணி நேரங்கள் தூங்கினார். மிகுந்த தைரியமும் உறுதியும் மகிழ்ச்சியும் கொண்டு, தமது அதிருஷ்டத்தில் நம்பிக்கையும் கொண்டு அம்மாதிரியான ஒரு மனோபாவத்தில் அவர் இருந்தார். அதனால் ஒவ்வொன்றும் சாத்தியமாகவும் இனிமையாகவும் சுலபமாகவும் செய்யக்கூடியவை என்று அவருக்குத் தோன்றின. அன்று காலையில் அவருடைய எல்லா விருப்பங்களும் நிறைவேறின; ஒரு பொதுவான சண்டை ஆரம்பமாயிற்று. அதில் அவர் கலந்து கொண்டார். அதைவிட முக்கியமான விஷயம் மிகுந்த தைரியமுள்ள ஒரு ஜெனரலிடம் அவர் சேவகத்திற்கு அமர்ந்திருப்பதாகும். அதை விட முக்கியமான விஷயம் குட்டுஜோவுக்கு அவர் செய்தி கொண்டு போவதாகும். ஒரு வேளை அந்த செய்தியை மன்னரிடமே கொடுப்பதாயிருக்கலாம்.

அன்று காலை மிகுந்த பிரகாசமாய் இருந்தது. அவரிடம் நல்ல குதிரை இருந்தது. அவர் மனமோ மகிழ்ச்சியும் சந்தோஷமும் நிரம்பியிருந்தது. இந்த உத்தரவை அவர் பெற்றதும் குதிரை லகானை இழுத்துப் பிடித்து, அந்த அணி வழியாகப் பாய்ச்சலில் சவாரி போனார். முதலில் பாக்ரேஷன் துருப்புகளின் அணி வழியாகப் போனார். அந்த துருப்புகள் இன்னமும் போரில் கலந்து கொள்ள முன்னேறவில்லை. அசையாமல் நின்று கொண்டிருந்தன. அதன் பின்னால் உவராவின் குதிரைப் பட்டாளம் நின்று கொண்டிருந்த இடத்திற்கு வந்தார். யுத்தத்தில் கலந்துகொள்ளவதற்கான அறிகுறிகளும், பரபரப்பும் காணப்பட்டன. உவராவின் குதிரைப் படையை அவர் கடந்ததும் துப்பாக்கிச் சத்தங்களும், பீரங்கிச் சத்தங்களும் அவருக்குத் தெளிவாய்க் கேட்டன. அந்த சப்தங்கள் வரவர பலமாயின.

அன்று காலையில் பீரங்கி, துப்பாக்கி சப்தங்கள் ஒன்றோ, இரண்டோ கேட்டதற்குப் பின்னால், அந்த பிராட்ஜென் குன்றுக்குக் கீழேயுள்ள சாய்வான பக்கத்திலிருந்து தொடர் தொடராகத் துப்பாக்கிச் சப்தங்கள் கேட்டன. சப்தங்கள் ஏராளமாக இருந்தபடியால், அது பீரங்கிச் சப்தம் என்றோ துப்பாக்கிச் சப்தம் என்றோ சொல்ல முடியாமல் ஒரே சப்தமாய் இருந்தது.

துப்பாக்கியிலிருந்து கிளம்பிய புகைக் கூட்டங்கள் அந்தக் குன்றின் கீழ்ப்பக்கமாக ஒன்றையொன்று துரத்திக்கொண்டு செல்வது போலச் சென்றன. அதே மாதிரி பீரங்கியின் புகையும் உருண்டு பறந்து ஒன்றையொன்று கலந்து சென்றது. அந்த புகைக்கிடையே துப்பாக்கி, ஈட்டிகளின் பிரகாசத்தை அவரால் காணமுடிந்தது. அதிலிருந்து காலாட்படைகள் கூட்டம் கூட்டமாக நகர்ந்து கொண்டிருப்பதையும், பீரங்கிப் படைகள் அணி அணியாக நிற்பதையும் அவர் பார்க்க முடிந்தது.

ஒரு குன்றின் மீது ஒரு வினாடி ராஸ்டோவ் தமது குதிரையை நிறுத்தி, அங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறதென்பதைக் கவனித்தார். அவர் எவ்வளவுதான் கவனமாக அதை நோட்ட மிட்டாலும் அங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறதென்பதை அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. அந்த புகைகளுக் கிடையே மனிதர்கள் நடமாடிக் கொண்டிருப்பதுதான் அவருக்குத் தெரிந்தது. முன்னும் பின்னும் வரிசை வரிசையாக துருப்புகள் நடமாடிக் கொண்டிருந்தன. அவர்கள் யார், அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த காட்சிகளோ, அல்லது சப்தங்களோ அவருடைய உற்சாகத்தைக் குறைக்கவோ, அவர் போய்க்

கொண்டிருந்த வேலையைத் தடுக்கவோ இல்லை. அதற்குப் பதிலாக இவையெல்லாம் அவருடைய ஊக்கத்தை அதிகரித்து உறுதியையும் பலமாக்கின.

'மேலே போ, மேலே போ, சரியாக அவருக்குக் கொடு' என்று தமது மனதிற்குள்ளாக இந்த சப்தங்கள் கேட்கும் போதெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார். அதன் பின்னால் அந்த அணி வழியாக மீண்டும் பாய்ச்சலில் போனார். அம்மாதிரி அவர் போய்க் கொண்டிருந்தபோது யுத்தம் நடந்து கொண்டிருந்த இடத்திற்கே வந்து விட்டார்.

'அங்கே எப்படி இருக்கும் என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால் எல்லாம் சரியாய்த்தான் இருக்கும்' என்று ராஸ்டோவ் நினைத்தார்.

சில ஆஸ்திரிய துருப்புகளைக் கடந்த பிறகு அடுத்தபடியாக நின்ற காப்பாளர்கள் யுத்தம் செய்து கொண்டிருப்பதைக் கவனித்தார்.

'ரொம்பவும் நல்லதாய்ப் போயிற்று. மிகச் சமீபத்திலிருந்தே நான் நோக்க முடியும்' என்று நினைத்தார்.

அவர் அநேகமாக முன்னணி வழியாக சவாரி செய்து வந்தார். அச்சமயம் அவரை நோக்கி சிலர் பாய்ச்சலில் வந்தார்கள். அவர்கள் நம்முடைய உலான் படையைச் சேர்ந்த வீரர்கள். பின்னால் திரும்பி ஓடி வருகிறவர்களோடு கலந்து வந்து கொண்டிருந்தார்கள். அவர்களின் வழியிலிருந்து விலகி ராஸ்டோவ் நின்றார். தம்மை அறியாமலேயே அவர் கவனித்தபோது ஒருவர் ரத்தம் சொட்டிக் கொண்டு பாய்ச்சலில் போவதைக் கண்டார்.

'இது என்னுடைய வேலை அல்ல' என்று அவர் நினைத்தார். அவர் சில நூறு கெஜங்கள் போவதற்கு முன்பாகவே, தமது இடது பக்கத்தில் அங்கிருந்த அந்த வயலில் பூராவாக ஒரு பிரம்மாண்டமான குதிரைப்படை கண்ணைப் பறிக்கும் வெள்ளை சீருடைகள் அணிந்து கறுப்புக் குதிரைகள் மீதேறி தம்மை நோக்கி வந்து கொண்டிருப்பதைப் பார்த்தார். அவர்கள் வருகிற வழியிலிருந்து விலகிக்கொள்வதற்காக ராஸ்டோவ் தமது குதிரையை முழுபாய்ச்சலில் விட்டார். ஆனால் அவர்கள் அதே வேகத்தில் வந்திருந்தால் இவர் தப்பிப்போயிருக்க முடியும். அந்தக் குதிரைகளின் குளம்படி ஓசைகளையும் அவர்கள் வைத்துக் கொண்டிருந்த ஆயுதங்களின் கலகலப்பு ஓசைகளையும் அவர் கேட்டார். அந்தக் குதிரைமீது அமர்ந்திருப்பவரையும் வரவரத் தெளிவாகக் காண முடிந்தது. அவர்கள் தான் நமது காப்பாளர்

குதிரைப் படை வீரர்கள். எதிரே வந்துகொண்டிருந்த பிரஞ்சு குதிரைப் படையைத் தாக்குவதற்கு அவர்கள் முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

காப்பாளர் குதிரைப் படை இன்னமும் பாய்ச்சலில் வந்து கொண்டிருந்தது. அவர்களுடைய முகங்களைப் பார்த்த ராஸ்டோவ் 'தாக்குங்கள்' என்ற ஒரு அதிகாரியின் உத்தரவையும் காதால் கேட்டார். அந்தப் படை வருகிற வேகத்தில், பிரஞ்சுக் காரர்களைத் தாக்க வந்து கொண்டிருந்த வேகத்தில், தாம் அகப்பட்டு நசுங்கிவிடக்கூடாது என்று தம்முடைய குதிரையை இன்னம் வேகமாகத் தட்டிவிட்டார். ஆனால் அந்த அபாயத்திலிருந்து அவர் இன்னமும் கடக்கவில்லை.

அந்தக் குதிரை வரிசையில் கடைசியிலிருந்த ஒரு பிரம்மாண்டமான, அம்மைத் தழும்பு முகமுடைய குதிரை வீரன் முன்னால் ராஸ்டோவைக கண்டதும் கோபத்தோடு முகம் சுளித்தான். அவன் ராஸ்டோவ் மீது மோதுவது தவிர்க்க முடியாததாய் இருந்தது. இந்த பிரம்மாணடமான வீரர்களுக்கும் குதிரைகளுக்கும் எதிரில் தாம் அற்பமாகவும் பலவீனமாகவும் இருப்பதாகவும் ராஸ்டோவ் உணர்ந்தார். ராஸ்டோவையும் அவருடைய பெடுயின் குதிரையையும் அவன் வந்த வேகத்தில் தள்ளி அடித்துக்கொண்டு போயிருக்க முடியும். ஆனால் திடீரென்று ராஸ்டோவ் தமது சவுக்கை அவன் வந்த குதிரையின் கண்களின் முன்பாக ஆட்ட வேண்டுமென்று அவருக்குத் தோன்றியது. 16 அடி கைப்பியுள்ள அந்தப் பெரிய கறுப்புக் குதிரை திடீரென்று பயந்து தனது காதுகளைப் பின்பக்கமாகச் சாய்த்தது. ஆனால் அந்த அம்மைத் தழும்பு முகம் கொண்ட குதிரை வீரன் தன்னுடைய பெரிய தார்ச் சக்கர்தைப் பலமாக் அழுத்தினான். அந்தக் குதிரை வாலை ஆட்டிக்கொண்டு கழுத்தை நீட்டிக்கொண்டு இன்னும் வேகாக ஓட ஆரம்பித்தது. இந்த சமயத்தில் ராஸ்டோவ் அதிலிருந்து தப்பி விட்டார். அவர் அந்தப் படையிலிருந்து தப்பியவுடனேயே ஜெய கோஷம் கேட்டது. அவர் திரும்பிப் பார்த்தார். அந்தக் குதிரைப் படையின் முன்னணியில் இருந்தவர்கள் சிவப்பு வாகு வலையம் அணிந்த பிரஞ்சு குதிரைப் படையோடு கலந்துவிட்டதைப் பார்த்தார். அதற்கு மேலாக அவரால் ஒன்றையும் பார்க்க முடியவில்லை ஏனெனில் அந்த நேரத்தில் எங்கேயோ பீரங்கி சுட ஆரம்பித்தபடியால் எல்லாவற்யையும் புகை மூடிக்கொண்டிருந்தது.

அந்தப் புகையில் அந்தக் குதிரைப் படை மறைந்த அதே வினாடியில் அந்தக் குதிரைப் படைக்குப் பின்னால் தாமும்

போவதா, அல்லது தம்மை எந்த வேலைக்கு அனுப்பியிருக் கிறார்களோ அந்த வேலைக்குப் போவதா என்பதை ராஸ்டோவ் சிந்தித்து திகைத்தார். இந்த அபூர்வமான காப்பாளர் குதிரைப் படையின் தாக்குதலைக் கண்டு பிரஞ்சுக்காரர்களே ஆச்சரிய மடைந்தார்கள். ஆனால் இவ்வளவு பெரிய குதிரைப் படை, இவ்வளவு அழகான குதிரை வீரர்களைக் கொண்ட அந்தப்படை, அவர்கள் எல்லாரும் சிறந்த பணக்கார வாலிபர்களும் அதிகாரிகளும் தொண்டர்களும் ஆயிரம் ரூபிள் குதிரைகள் மீது சவாரி செய்து வந்த அந்தப் படையில் கடைசியாக அந்த யுத்தத்திற்கு பின்பு 18 பேர்களே மிஞ்சினார்கள் என்பதை அவர் பின்னால் அறிந்தபோது பயங்கரமடைந்தார்.

'அவர்களைப் பார்த்துநான் ஏன் பொறாமை கொள்ள வேண்டும். என்னுடைய சந்தர்ப்பம் இன்னும் போய்விடவில்லை. ஒருவேளை சக்கரவர்த்தியை நான் சீக்கிரமாகப்பார்க்க நேரிடலாம்' என்று ராஸ்டோவ் தமது குதிரையைத் தட்டிவிட்டால். அவர் காலாட் படையின் அருகே வந்தபோது அந்த படையின் முன்பும் பின்பும் அதன்மீதும் பீரங்கிக் குண்டுகள் பறந்து விழுந்து கொண்டிருப் பதைப் பார்த்தார். சிப்பாய்களின் முகத்தில் குழுப்பத்தையும் அதிகாரிகளின் முகத்தில் செயற்கையான யுத்த சுபாவத்ததையும் அவர் கண்டார்.

காலாட் படையின் ஒரு அணிக்குப் பின்னால் அவர் போய்க் கொண்டிருந்தபோது அவரை யாரோ அழைப்பதைக் கேட்டார்.

'ராஸ்டோவ்'

'என்ன?' வென்று போரிஸை அடையாளம் புரிந்து கொள்ளாமல் பதிலளித்தார்.

'நாம் யுத்த களத்தில் முன்னணியிலிருக்கிறோம். நமது பட்டாளம் தாக்கப்பட்டது' என்று போரிஸ் சந்தோஷமான புன்னகையோடு சொன்னார். முதல் தடவையில் போர்க் களத்தில் குண்டுகளுக்கிடையே நிற்கிற வாலிபர்களுக்கு எம்மாதிரி சந்தோஷம் முகத்தில் காணப்படுமோ அதே சந்தோஷத்தோடு விளங்கினார்.

ராஸ்டோவ் தமது குதிரையை நிறுத்தினார்.

'அப்படியா? நல்லது. எப்படி நடந்து கொண்டிருக்கிறது?'

'நாம் எதிரிகளை விரட்டி விட்டோம்' என்று பரபரப்புடன் போரிஸ் பதிலளித்தார். அவர் மேலும் 'உம்மால் அதை மனோராஜ்யம் கூட செய்யமுடியுமா? என்று அவர் சொல்லிவிட்டு தமது காப்பாளர் படை, எம்மாதிரி அணிவகுத்து நின்றார்கள்

என்பதையும், எதிரிகளை முதலில் ஆஸ்திரியர்கள் என்று நினைத்திருந்தபோது திடீரென்று அவர்களிடமிருந்து வந்த பீரங்கிக் குண்டுகளிலிருந்துதான் அவர்கள் எதிரிகள் என்பதை அறிந்ததாகவும், ஆகவே எதிர்பாராதவிதத்தில் அவர்கள் யுத்தத்தில் இறங்கவேண்டி வந்ததென்றும் சொன்னார். ஆனால் போரிஸ் சொல்வதை முழுவதும் கேட்பதற்கு முன்பாக ராஸ்டோவ் தமது குதிரையைத் தட்டி விட்டார்.

'நீர் எங்கே போகிறீர்?' என்று போரிஸ் கேட்டார்.

'சக்கரவர்த்திக்கு ஒரு செய்தி கொண்டு போகிறேன்'

'அதோ அங்கே இருக்கிறார்' எனறு ராஸ்டோவ் கிராண்ட் டியூக் என்பவரைத்தான் கேட்கிறார் என்று நினைத்துக் கொண்டு ஒரு இடத்தைக் காட்டினார். அங்கே கிராண்ட் டியூக் தமது உயர்ந்த தோள்களுடன் நெறிந்த புருவங்களுடனும் 100 அடிக்கு அப்புறம் நின்று கொண்டிருந்தார். முகம் வெளியே வெள்ளை சீருடை அணிந்த ஒரு ஆஸ்திரிய அதிகாரியிடம் எதையோ உரக்கச் கூறிக் கொண்டிருந்தார்.

'அவர் கிராண்ட டியூக் அல்லவா? எனக்கு சேனாதிபதியையோ அல்லது சக்கரவர்த்தியையோ பார்க்க வேண்டும் என்று ராஸ்டோவ் சொல்லிவிட்டு மறுபடியும் தமது குதிரையைத் தார்ச் சக்கரத்தால் குத்துவதற்குத் தயாரானார்.

'கோமகனே, கோமகனே' என்று கூவிக்கொண்டு இன்னொரு பக்கத்திலிருந்த போரிஸைப் போல ஆவலோடு பெர்க் ஓடி வந்தார்.

' கோமகனே, எனது வலது கையில் காயம் பட்டுவிட்டது. (தமது ரத்தம் சொட்டிக்கொண்டிருந்த வலது கையின் மீது கைக்குட்டை யால் கட்டியிருந்ததைக் காட்டினார்) அப்படியிருந்தும் நான் யுத்த முனையிலேயே இருந்தேன். என்னுடைய உடைவாளை இடது கையில் பிடித்துக் கொண்டிருந்தேன், கோமகனே. எங்கள் குடும்பம் பூராவாக- வான்பெர்க்குகள்- எப்பொழுதுமே வீரர்களாய் இருந்து வந்தார்கள்.

அவர் இன்னும் எதையோ சொன்னார். ஆனால் அதைக் கேட்பதற்காக ராஸ்டோவ் காத்திருக்கவில்லை. அதை விட்டுச் சவாரி போனார்.

அந்த காப்பாளர் படையை விட்டுக் கடந்து ஒரு வெட்ட வெளியையும் கடந்த பின்பு, மீண்டும் யுத்த முனையில் அகப்பட்டுக்கொள்ளாமல் தப்பித்துக் கொள்ள ராஸ்டோவ் முயற்சி செய்ய வேண்டியிருந்தது. அதற்காக அவர் வெகு தூரம் சுற்றி வளைத்துப் போனார். திடீரென்று அவருக்கு முன்பாக வெகு

சமீபமாக துப்பாக்கிச் சத்தம் கேட்டது. அங்கே எதிரி இருப்பான் என்று அவர் எதிர்பாக்கவேயில்லை.

'அது எதிரியாய் இருக்கக்கூடும்? நமது ராணுவத்திற்குப் பின்னால் எப்படி எதிரி வரக் கூடும்? அசாத்தியமான காரியமாயிற்றே! என்று அவர் நினைத்தபோது அவரைத் திடீரென்று ஒரு பீதி பற்றிக்கொண்டது. 'அது எதுவாயிருந்தாலும் சரி, இப்போது மீண்டும் வளைத்துச் சுற்றிக் கொண்டு என்னால் போக முடியாது. சேனாதிபதியை, நான் எங்கே கண்டு பிடிக்கவேண்டும். யுத்தத்தில் நாம் எல்லாவற்றையும் இழப்பதாய் இருந்தால் மற்றவர்களோடு நான் சாகவேண்டியதுதான்.'

திடீரென்று ஏதோ ஒரு கெடுதல் வரப்போவதாக அவருக்குத் தோன்றியது. அவர் மேலும் மேலும் சவாரி செய்து, பிராட்ஜென் கிராமத்திற்குப் பின்னால் போய்ச் சேர்ந்ததும் அவருடைய நினைப்பு இன்னும் உறுதியாயிற்று. அந்தக் கிராமத்தில் பலவிதமான துருப்புகளும் கூடியிருந்தார்கள்.

'இதற்கு அர்த்தம் என்ன? இது என்ன? அவர்கள் யார் மீது சுட்டுக் கொண்டிருக்கிறார்கள்? யார் சுடுகிறார்கள்?' என்றெல்லாம் ராஸ்டோவ் அங்கு பீதியுற்று ஓடிக் கொண்டிருந்த ருஷ்ய, ஆஸ்திரிய சிப்பாய்களைக் கண்டதும் தமக்குள் கேட்டுக்கொண்டிருந்தார்.

'ஜெர்மனியரைக் கொல்லுங்கள்' என்று ஒருவர் கத்தினார். 'அந்தத் துரோகிகளை பிசாசுகள் பிடிப்பதாக'.

'அந்த ருஷ்யர்களைத் தூக்கில் போடுங்கள்' என்று ஒரு ஜெர்மனியன் கத்தினான்.

காயம் அடைந்தவர்கள் பலர் வீதி வழியாகத் திட்டிக்கொண்டும், கத்திக்கொண்டும், முனங்கிக் கொண்டும் ஒரே கூச்சலாக சத்தமிட்டு சென்றுகொண்டிருந்தார்கள். இச்சமயம் சுடுவது நின்றது. ருஷ்யர்களும் ஆஸ்திரியர்களும் தமக்குள்ளேயே ஒருவரையொருவர் சுட்டுக் கொண்டிருந்தார்கள் என்ற விஷயம் பின்னால் ராஸ்டோவுக்குத் தெரிய வந்தது.

'அட கடவுளே, இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? எந்த வினாடியிலும் சக்கரவர்த்தி அவர்களைப் பார்த்தாலும் பார்க்கலாம். ஆனால் வெகு சிலர்தான் அயோக்கியர்களாய் இருக்க முடியும். அதெல்லாம் சீக்கிரம் முடிந்துவிடும். அது அப்படியே இருக்க முடியாது; இருக்கவே முடியாது. இவர்களைக் கடந்து நான் வேகமாகப் போய்விட வேண்டும்' என்று அவர் நினைத்தார்.

தோல்வியோடு தப்பி ஓடுகிற எண்ணம் ராஸ்டோவின் மண்டையில் ஏறவில்லை. பிராட்ஜென் குன்றின் உச்சியில் பிரஞ்சு

பீரங்கிகளையும், பிரஞ்சு துருப்புகளையும் அவர் பார்த்தார். சேனாதிபதியை பார்ப்பதற்காக அவரை அந்த இடத்திற்கு அனுப்பியிருந்தபடியால் அவற்றை அவரால் நம்ப முடியவில்லை. நம்ப விரும்பவில்லை.

3

18

பிராட்ஜென் என்ற கிராமத்திற்குப் பக்கத்தில் குட்டுஜோவையும் சக்கரவர்த்தியையும் பார்க்கும்படி ராஸ்டோவுக்கு உத்தரவு. ஆனால் அவர்களோ அல்லது வேறு எந்தக் கமாண்டரோ அங்கே காணப் படவில்லை. பற்பல விதமான நிலை குலைந்த துருப்புகளே காணப்பட்டன. இந்தக் கூட்டத்தைக் கடந்து போவதற்கு தமது களைப்படைந்த குதிரையை அவர் முடுக்கினார். ஆனால் அவர் மேலும் மேலும் போகப் போக இன்னும் அதிகமான நிலை குலைந்த கூட்டத்தை அவர் கண்டார். அவர் வெளியேறி வந்து சேர்ந்த ரஸ்தாவில் பல விதமான வண்டிகளையும் பல பிரிவுகளையும் சேர்ந்த ருஷ்ய, ஆஸ்திரியத் துருப்புகளையும் (சிலர் காயமடைந்தும் சிலர் காயமடையாமலும்) கண்டார். பிரஞ்சுப் பீரங்கிப் படைகள் பிராட்ஜென் உச்சியிலிருந்து போட்டு வந்த பீரங்கிக் குண்டுகளால் இந்தக் கூட்டம் கலகலத்தக் குழப்பம் அடைந்து போயியருந்தது.

'சக்கரவர்த்தி எங்கே? குட்டுஜோவ் எங்கே?' என்று அங்கே போய்க் கொண்டிருந்தவர்களில் யார் யாரைக் கேட்க முடியுமோ அவர்களையெல்லாம் கேட்டார். ஆனால் ஒருவரிடமிருந்தும் அவருக்குப் பதில் கிடைக்கவில்லை. கடைசியாக ஒரு சிப்பாயின் காலரைப் பிடித்திழுத்து பதில் சொல்லும்படி கட்டாயப் படுத்தினார்.

'ஏ, சகோதரரே, அவர்கள் எல்லாரும் வெகு நேரத்திற்கு முன்பாகவே கம்பி நீட்டிவிட்டார்கள்' என்று அந்த சிப்பாய் சொல்லி, எதற்காகவோ சிரித்துக் கொண்டு தம்முடைய உடம்பைக் குலுக்கி அவரிடமிருந்து விடுபட்டான்.

அந்த சிப்பாய் குடித்திருந்த மாதிரி தோன்றியது. ஆகவே அவனை விட்டுவிட்டார். ஒரு முக்கியமான அதிகாரியின் குதிரைக்காரன் மாதிரி தோன்றிய ஒருவனை ராஸ்டோவ் நிறுத்தி கேள்விகேட்க ஆரம்பித்தார். அதே ரஸ்தாவில் சுமார் ஒரு மணி நேரத்திற்கு முன்பாக ஜார் சக்கரவர்த்தி தமது வண்டியில் முழு வேகத்தோடு போய்க் கொண்டிருந்ததாகவும், அவர் அபாயகரமாகக் காயமடைந்திருந்ததாகவும் அவன் சொன்னான்.

'அம்மாதிரி இருக்க முடியாது. அது வேறு யாராவது ஒருவராயிருக்கலாம்' என்றார் ராஸ்டோவ்.

ஆனால் அந்த மனிதன் ஒரு கேலிப் புன்சிரிப்புகொண்டு தன்னம்பிக்கையோடு சொல்லியதாவது:-'நானே அவரைப் பார்த்தேன். பீட்டர்ஸ்பர்க்கில் நான் அவரைப் பல தடவைகளில் பார்த்திருக்கிறபடியால் அவரைப் பார்த்தவுடன் எனக்கு அடையாளம் தெரியும். நான் உம்மைப் பார்க்கிற மாதிரியே அவரையும் பார்த்தேன்... அவர் முகம் வெளிறிப்போய் வண்டியில் உட்கார்ந்திருந்தார். அந்த வண்டியில் கட்டப்பட்டிருந்த நான்கு கறுப்புக் குதிரைகளையும் அவர்கள் எம்மாதிரி விரட்டினார்கள் தெரியுமா? கடகடவென்று சப்தம் போட்டுக் கொண்டு அந்த வண்டி ஓடியது. அந்த வண்டியை ஓட்டிய இலியா ஐவானிச் என்ற சாரதியையும் சக்கரவர்த்தியின் குதிரைகளும் எனக்கு நன்றாக அடையாளம் தெரியும். சக்கரவர்த்தி குதிரைகளை இலியா ஐவானிச்சை தவிர வேறு ஒருவரும் ஓட்வார் என்று நான் நினைக்கவில்லை'.

அந்த குதிரையை விட்டுவிட்டு ராஸ்டோவ் தமது குதிரையில் ஏறப் போகும் சமயத்தில், ஒரு காயமடைந்த அதிகாரி அவ் வழியாகப் போனார். அவர் ராஸ்டோவைப் பார்த்து, 'உமக்கு யார் வேண்டும்? சேனாதிபதியா? அவர் ஒரு பீரங்கிக் குண்டால் கொல்லப்பட்டார். எங்களுடைய பட்டாளத்தின் முன்பாக அவர் மார்பில் அந்த குண்டு தாக்கியது' என்றார்.

'இல்லை. கொல்லப்படவில்லை. காயமடைந்தார்' என்று மற்றொரு அதிகாரி அவரைத் திருத்தினார்.

'யார்? குட்டுஜோவா? என்று கேட்டார் ராஸ்டோவ்.

'குட்டுஜோவ் இல்லை. வேறு யாரோ ஒருவர்- யாராயிருந்தாலென்ன... உயிரோடு தப்பியவர்கள் சொற்பப்பேர்தான். அந்த வழியே நீர் போம், அந்தக் கிராமத்திற்குப் போனால் அங்கே எல்லாக்கமாண்டர்களும் இருக்கிறார்கள்' என்றார் அந்த அதிகாரி. ஆஸ்ஜராடெக் என்ற அந்த கிராமத்தைச் சுட்டிக் காட்டிவிட்டு அவர் மேலும் நடந்து போனார்.

ஏன்போகிறோம், யாரிடம் போகிறோம் என்பதை அறியாமலேயே ராஸ்டோவ் மெதுவாக சவாரி செய்து கொண்டு போனார். சக்கரவர்த்தி காயமடைந்துவிட்டார். யுத்தமும் தோல்வியில் முடிந்தது. அதைப்பற்றி இப்போது சந்தேகப்படுவது முடியாத காரியம். தமக்குக் காட்டப்பட்ட திசையை நோக்கி ராஸ்டோவ் சவாரி போனார். அந்தத் திசையில் மாதா கோயில்களின்

கோபுரங்கள் தெரிந்தன. எதற்காக அவசரப்பட வேண்டும்? இப்போது ஜாரிடமோ, குட்டுஜோவிடமோ அவர்கள் காயம் படாமலிருந்தாலும், உயிரோடு இருந்தாலும் சொல்லவேண்டியது என்ன இருக்கிறது?

'மேன்மை தங்கியவரே, இந்தப் பாதை வழியாகப் போம் அந்தப் பாதை வழியகப் போனால் நீர் உடனே கொல்லப்படுவீர். உம்மை அவர்கள் கொன்று விடுவார்கள்' என்று ஒரு சிப்பாய் கத்தினான்.

'ஓ, நீ என்ன பேசிக்கொண்டிருக்கிறாய்? அவரை எங்கே போகச் சொல்லுகிறாய்? அந்த வழிதான் சுருக்கமான வழி' என்று மற்றவன் சொன்னான்.

ராஸ்டோவ் யோசித்தார். அவரைக் கொன்றுவிடுவார்கள் என்று சொல்லிய பாதை வழியாகவே அவர் போய்க்கொண்டிருந்தார்.

'இப்போது எல்லாம் ஒன்றுதான். சக்கரவர்த்தி காயமடைந்த பின்பு என்னை நான் காப்பாற்றிக்கொள்ள முயற்சி செய்ய வேண்டுமா?' என்று நினைத்தார். பிராட்ஜென்னிலிருந்து தப்ப ஓடியபோது மிக அதிகமான பேர் கொல்லப்பட்ட அதே இடத்திற்கு சவாரி போனார். இன்னமும் பிரஞ்சுக்காரர்கள் அந்த இடத்தை ஆக்ரமித்துக் கொள்ளவில்லை. காயமடையாதவர்கள், சொற்ப காயமடைந்தவர்களுமான ருஷ்யர்கள் அதை விட்டுப் போய் ரொம்ப நேரமாயிற்று. அந்த வயல் முழுவதிலும் நன்றாய் உழுத நிலத்தில் உரத்தைக் குவித்து வைத்திருப்பதைப் போல ஒரு ஜோடி ஏக்கருக்கு 10, 15 பேர் வீதம் மாண்டவர்கள் இருவராகவோ மூவராகவோ சேர்ந்து ஊர்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய பரிதாபகரமான முனங்கல்களும் கதறல்களும் கேட்டுக்கொண்டிருந்தன. சில சமயம் அவர்கள் பாசாங்கு செய்தார்கள்-அல்லது அம்மாதிரி ராஸ்டோவுக்குத் தோன்றியது. இந்தக் கஷ்டங்களையெல்லாம் பார்க்காமல் தப்புவதற்கு அவர் தமது குதிரையைத் தட்டிவிட்டார். அவர் தமது குதிரையைத் தட்டி விட்டது தம் முடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக அல்ல. இந்த துரதிருஷ்டத்தின் கஷ்டங்களைப் பார்த்து சகித்துக் கொள்வதற்கு வேண்டிய பலம் தம்மிடம் இல்லாததால் குதிரையைத் தட்டிவிட்டார்.

அந்த வயலில் காயம்பட்டவர்களும் இறந்தவர்களும் சிதறிக் கிடந்தார்கள். பிரஞ்சுக்காரர்கள் சுடுவதை நிறத்தியிருந்தார்கள். ஏனெனில் அங்கே சுடப்படுவதற்கு யாருமில்லை. இந்தக் காப்பாளர் குதிரை மீது வருவதைப் பார்த்ததும் அவர்மீது பீரங்கியைத் திருப்பி அவர்கள் பல குண்டுகளைச் சுட்டார்கள். இந்த

குண்டுகளின் பயங்கரமான சப்தங்களும் தம்மைச் சுற்றிக் காணப்படும் பிணக் காட்சியும் ராஸ்டோவின் மனதில் ஒன்று சேர்ந்து ஒரு பயத்தை உண்டு பண்ணியது. அச்சமயம் அவருடைய தாயார் எழுதிய கடைசிக் கடிதம் அவருக்கு ஞாபகத்திற்கு வந்தது. 'இம்மாதிரி குண்டுகள் என்னைப் பார்த்து வந்து கொண்டிருக்கும் போது, இந்த வயலில் நான் நிற்பதை என் தாயர் பார்த்தால், அவள் என்ன மாதிரி பயமடைவாள்!' என்று அவர் நினைத்தார்.

ஆஸ்ஜராடெக் என்ற கிராமத்தில்தான்யுத்த களத்திலிருந்து திரும்பிய ருஷ்யத் துருப்புகள் கூடியிருந்தார்கள். இன்னமும் அவர்கள் கொஞ்சம் குழப்பத்திலிருந்தபோதிலும், அவர்களுடைய நிலை குலைந்த தன்மை குறைந்திருந்தது. பிரஞ்சுக்காரர்களின் பீரங்கியின் குண்டுகள் அந்த இடத்தை வந்தடைய முடியாது. துப்பாக்கி சப்தங்கள் எங்கோ தூரமாகக் கேட்டுக்கொண்டிருந்தன. இங்கே யுத்தம் தோற்றுவிட்டது என்பதை ஒவ்வொருவரும் தெளிவாகப் பார்த்துக்கொண்டும் சொல்லிக்கொண்டுமிருந்தார்கள். சக்கரவர்த்தியோ குட்டுஜோவோ எங்கே இருக்கிறார்கள் என்பதை அங்கிருந்த ஒருவராவது ராஸ்டோவுக்குச் சொல்லமுடியவில்லை. சக்கரவர்த்தி காயமடைந்தார் என்று கேள்விப்பட்ட செய்தி உண்மைதான் என்று சிலர் சொன்னார்கள். அப்படி அல்ல என்று வேறு சிலர் சொன்னார்கள். சுக்ரவரத்தியின் வண்டி அந்த யுத்த களத்திலிருந்து வேகமாக ஒடியதால், அம்மாதிரி வதந்தி ஏற்பட்டிருக்கலாமென்று சிலர் சொன்னார்கள். வெளியே பீதியடைந்த ஆபர் - ஆப்மார்ஷல் கோமகன் டால்ஸ்டாய், சக்கரவர்த்தியின் பரிவாரங்களோடு அந்த சக்கரவர்த்தியின் வண்டியில் ஓடினார். யாரோ தலைமைக் காரியாலயத்திலிருந்து வந்த ஒருவர் அந்தக் கிராமத்தின் இடதுப்கக்கத்தில் இருப்பதாக ஒரு அதிகாரி ராஸ்டோவிடம்சொன்னார். ராஸ்டோவ் அங்கு அம்மாதிரி ஒருவரையும் பார்க்கமுடியாது என்று எண்ணினாலும் தம்முடைய மனதைத் திருப்தி செய்வதற்காக அங்கே சவாரி போனார். இரண்டு மைல்கள் அவர் கடந்தார். ருஷ்யத் துருப்புகள் கடைசியாகக் கூடியிருந்த இடத்தையும் அவர் கடந்தார். அங்கே ஒரு வீட்டின் தோட்டத்திற்கு பக்கத்திலுள்ள ஒரு பள்ளத்தைப் பார்த்து இரண்டு குதிரை வீரர்கள் நின்றுகொண்டிருந்தார்களா. ஒருவருடைய தொப்பியில் ராஸ்டோவுக்குப் பழக்கமான வெள்ளைத் தோகை காணப்பட்டது. இன்னொருவர் ஒரு அழகான பழுப்பு நிற குதிரையிலமர்ந்து கொண்டிருந்தார். அவரையும் எங்கேயோ முன்பு பார்த்ததாக ராஸ்டோவ் நினைத்தார். அவர் அந்தப் பள்ளம் வரையில் குதிரையில் போய், அங்கே தம்முடைய தார்ச் சக்கரத்தால்

குதிரையை அழுத்தவே, அது அந்தப் பள்ளத்தைத் தாண்டியது. அது தாண்டியபோது அந்தப் பள்ளத்தின் ஓரமிருந்த மண் சிறிது சரிந்தது. அவர் தமது குதிரையைத் திருப்பி மீண்டும் அந்தப் பள்ளத்தைத் தாண்டினார். தாண்டிவிட்டு வெள்ளைத் தோகையணிந்திருந்த வரைப் பார்த்து மரியாதையோடு பேசினார். அதாவது அவரும் அதே மாதிரி செய்யலாமென்று யோசனை கூறுவதைப் போல இருந்தது. அந்தக் குதிரை மீது இருந்தவர் பழக்கமானவர்போலத் தெரிந்தபடியால், தம்மையறியாமலேயே அவர் மீ து ராஸ்டோவ் கவனத்தை செலுத்தினார். அந்தத் தோகை வைத்துக் கொண்டிருந்தவர் தம்முடைய தலையினாலும் கையினாலும் தாம் அப்படி செய்யப்போவதில்லையென்று சொல்வதைப் போலக் காட்டினார். அவர்தான் ராஸ்டோவ் போற்றி வந்த பரிதாபமான சக்கரவர்த்தி.

'தனியாக இந்த வெட்ட வெளியான வயலில்அவராய் இருக்க முடியாது' என்று ராஸ்டோவ் நினைத்தார். அச்சமயம் அலெக்ஜாண்டர் தமது தலையைத் திருப்பினார். அவருக்கு மிகவும் பிரியமான அவர் நினைவில் ஆழமாய்ப் பதிந்து போயிருந்த அந்த முகச் சாயல்களை ராஸ்டோவ் பார்த்தார். சக்கரவர்த்தி முகம் வெளிறிப் போயிருந்தார். அவருடைய கன்னங்கள் ஒட்டிப் போய் கண்கள் உள்வாங்கி இருந்தன. ஆனால்அவருடைய கவர்ச்சியும் அவருடைய அசைவுகளின் அமைதியும் இன்றும் அதிகமாய்க் காணப்பட்டன. சக்கரவர்த்தி காயமடைந்தார் என்ற வதந்திகள் பொய்யாய் போனதைக் கண்டு ராஸ்டோவ் சந்தோஷடைந்தார். அவரைப் பார்க்க நேர்ந்ததற்காவும் அவர் சந்தோஷமடைந்தார். டால்காகாவ் அவரிடம் கொடுத்தனுப்பிய செய்தியை நேராகச் சக்கரவர்த்தியிடம் சென்று கொடுக்க வேண்டுமென்பதை அவர் அறிவார்.

ஒரு காதலன் வெகு காலமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்து கடைசியாகத் தன் காதலியுடன் தனியாக சந்திக்கும் சந்தர்ப்பம் வரும்போது, தான் பல இரவுகளாக கனவு கண்டு வந்ததைச் சொல்ல தைரியம் கொள்ளாமல் அதைவிட்டு ஓடுவதற்கு ஏதாவது வழியிருக்கிறதா என்று தைரியம் குறைந்து நடுங்குவது காதலில் துடித்துக்கொண்டிருக்கும் வாலிபர்களின் வழக்கம். அதே மாதிரி ராஸ்டோவின் நிலைமை இருந்தது. உலகத்தில் வேறு எதையும் விட அதிகமாய் அவர் ஏங்கிக்கொண்டிருந்த விஷயம் அவர் கைக்கு எட்டிவிட்டது. என்றாலும் சக்கரவர்த்தியை எப்படி நெருங்குவது என்பது அவருக்குத் தெரியவில்லை. அப்படிச் செய்வது

அசௌகரியமாகவும் அநாகரீகமாவும்அசாத்தியமாகவும் இருப்பதாக அவருக்கு ஆயிரம் காரணங்கள் தோன்றின.

'என்ன இது! அவர் தனிமையாவும் சோர்வாகவும் இருக்கிற ஒரு சந்தர்ப்பத்தை பயன்படுத்திக்கொள்ள நான் சந்தோஷப்படுவது போலல்லவா இருக்கிறது! ஆனால் இந்த துக்கமான நேரத்தில் இந்தக் கஷ்டமான சமயத்தால் ஒரு அன்னியனைப் பார்ப்பதற்கு அவருக்கு மகிழ்ச்சியல்லாமலிருக்கலாம். மேலும் நான் அவரிடம் போய் என்ன சொல்லப் போகிறேன். அவரைப் பார்த்த உடனேயே எனது இருதயம் நின்று விடுகிறதைப் போலவும், என்னுடைய தொண்டை வறண்டு விடுகிறதைப் போலவும் தோன்றுகின்றன' என்று அவர் நினைத்தார். அவருடைய மனோராஜ்யத்தில் சக்கரவர்த்தியிடம் எம்மாதிரி பேச வேண்டுமென்று கற்பனை செய்து வைத்திருந்த எண்ணற்ற பேச்சுக்களில் ஒன்றுகூட அவருக்கு இச் சமயம் ஞாபகத்திற்கு வரவில்லை. வேறு விதமான நிலைமையில் சக்கரவர்தியை சந்தித்தால் பேசுவதற்காகவே அந்தப் பேச்சுகள் கற்பனை செய்யப்பட்டன. அதாவது யுத்தத்தில் வெற்றி மாலை சூடும்போது அல்லது தாம் காயமடைந்து செத்துக் கொண்டிருக்கும்போது சக்கரவர்வத்தி அவரிடம் வந்து, அவருடைய தீவிரமான செய்கைகளுக்காக வந்தனம் தெரிவிக்கும் போது, சொல்ல வேண்டுமென்று மனோராஜ்யம் செய்த பேச்சுகளாகும்.

'மேலும் இப்போது மாலை 4 மணி ஆகப்போகிறது. யுத்தமோ தோற்றுவிட்டது. இச்சமயத்தில் சக்கரவர்த்தியடம் நான் எப்படி போய் வலது பக்கவாட்டை பற்றி உத்தரவு கேட்க முடியும்? இல்லை; நான் கண்டிப்பாக அவரிடம் நெருங்கக்கூடாது. கண்டிப்பாக அவருடைய சிந்தனைகளில் நான் குறுக்கிடக்கூடாது. அவரிடமிருந்து வெறுப்பான பார்வையையோ, அல்லது தம்மைப் பற்றி ஒரு கெட்ட அப்பிராயத்தையோ பெறுவதை விட அதற்காக ஆயிரம் தடவைக்ள சாவது மேல்' என்று ராஸ்டோவ் தீர்மானித்தார். மிகுந்த துக்கத்தோடும், நெஞ்சு நிறைய அதைரியத்தோடும் திரும்பித் திரும்பி அங்கு தயக்கத்தோடு நின்று கொண்டிருந்த ஜார் சக்கரவர்த்தியைப் பார்த்துக்கொண்டும் அவர் சவாரி போனார்.

இம்மாதிரியாக ராஸ்டோவ் தமக்குள்ளாக வாதம் செய்து கொண்டு துக்கத்தோடு அங்கிருந்து சவாரி போய்க்கொண்டிருக்கும் போது, அந்த இடத்திற்கு காப்டன் வான் டோல் வரும்படி நேர்ந்தது. அவர் சக்கரவர்த்தியைப் பார்த்ததும் உடனே அவரிடம் சவாரி போய் அவருக்குச் சேவை செய்வதற்கு தயாராய் நின்றார். முன்னாலிருந்த அந்தப் பள்ளத்தை குதிரையிலிருந்து இறங்கி கால் நடையாகவே

தாண்டுவதற்கு உதவி செய்தார். சக்கரவர்த்தி அசௌக்யமாயிருப்பதாக உணர்ந்ததால் கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொள்வதற்காக அங்கிருந்த ஒரு ஆப்பிள் மரத்தின் அடியில் உட்கார்ந்தார். வான் டோலும் அவருக்குப் பக்கத்தல் அமர்ந்தார். கொஞ்ச தூரத்தில் சென்று கொண்டிருந்த ராஸ்டோவ் சக்கரவர்த்தியுடன் வான்டோல் பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்து வருத்தத்தோடும், பொறாமையோடும் நோக்கினார். எவ்வளவு உள்ளக் கனிவோடு வான் டோல் பேசிக் கொண்டிருந்தாரென்பதையும், சக்கரவர்த்தி தமது கண்களைக் கைகளால் மறைத்துக் கொண்டிருப்பதிலிருந்து அவர் அழுது கொண்டிருக்கிறார் என்பதையும், வான்டோலின் கையை அவர் பிடித்திருப்பதையும் ராஸ்டோவ் பார்த்தார்.

'நான் அவருடைய இடத்தில் இருக்கவேண்டியவன்' என்று ராஸ்டோவ் நினைத்தார். சக்கரவர்த்திக்காகத் தோன்றி அனுதாபத்தினால் அவருக்கு வந்து கொண்டிருந்த கண்ணீரை அவரால் அடக்க முடியவில்லை. மிகுந்த வருத்தத்தோடு அவர் சவாரி போனார். எங்கே போகிறோம், எதற்காகப் போகிறோம் என்பது அவருக்குத் தெரியவில்லை.

தம்முடைய பலக்குறைவுதான் தம்முடைய துக்கத்திற்குக் காரணம் என்பதை அவர் தெரிந்ததும், அவருடைய அதைரியம் இன்னும் அதிகமாயிற்று.

தாம் எப்படியாவது சக்கரவர்த்தியிடம் போயிருந்திருக்க வேண்டுமென்று அவர்நினைத்தார். சக்கரவர்த்தி மீதுள்ள தமது பக்தியைக் காட்டுவதற்கு அது ஒரு அபூர்வமான சந்தர்ப்பமாயிருந்ததென்றும், அதை அவர் உபயோகப்படுத்திக்கொள்ளத் தவறிவிட்டாரென்றும் எண்ணினார். 'நான் என்ன செய்துவிட்டேன்?' என்று அவர் நினைத்தார். அவர் மீண்டும் தமது குதிரையைத் திருப்பி சக்கரவர்த்தி இருந்த இடத்திற்குப் பாய்ச்சலில் வந்தார். அங்கே அந்தப் பள்ளத்திற்கு அப்பால் ஒருவரையும் காணவில்லை. சில வண்டிகள் அவ்வழியாகப் போய்க்கொண்டிருந்தன. குட்டுஜோவின் பரிவாரத்தைச் சேர்ந்தவர்கள், அந்த வண்டிகள் போய்க்கொண்டிருக்கிற கிராமத்தில்தான் இருக்கிறார்கள் என்று வண்டி ஓட்டிகளில் ஒருவன் சொன்னான். ராஸ்டோவ் அவர்களைப் பின்பற்றிப் போனார். அவருக்கு முன்பாக குதிரைகள் மீது துணிகளைப் போட்டு மூடிக்கொண்டு குட்டுஜோவின் குதிரைக்காரன் அவைகளை அழைத்துப் போய்க்கொண்டிருந்தான். அதற்குப் பின்னால் ஒரு வண்டி வந்தது. அந்த வண்டியின் பின்னால் ஒரு வயோதிகமான நொண்டியடிமை ஒருவன் ஒரு உயரமான

தொப்பியணிந்துகொண்டு தோல் கோட்அணிந்து வந்து கொண்டிருந்தான்.

'டிட், ஏ டிட்' என்று குதிரைக்காரன் கூவினான்.

'எனனப்பா' என்று அந்த வயோதிகன் பதில் சொன்னான்.

'ஏ டிட, அதை புடைத்துத் தள்ளு'

'ஓ, நீ ஒரு முட்டாள்என்று அந்த வயோதிகன் சொல்லி கோபமாகக் கீழே துப்பினான். மௌனமாகக் கொஞ்ச நேரம் கழிந்த பின்பு மீண்டும் அதே தமாஷை மறுபடியும் பேசிக்கொண்டிருந் தார்கள்.

மாலை 5 மணிக்குள்ளாக எல்லாப் போர்முனைகளிலும் யுத்தத்தில் தோல்வி ஏற்பட்டது. 100 பீரங்கிகளுக்கு மேலாக பிரஞ்சுக் காரர்களின் கைக்குப் போய்விட்டன.

ப்ரிஜ்பிஜெவ்ஸ்கி என்பவரும், அவருடைய படைகளும் தங்கள் ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டார்கள். மற்ற படைகள் தங்கள் வீரர்களில் பாதிப் பேர்களை இழந்த பின்பு அலங்கோலமான நிலைமையில் குழப்பமான கூட்டங்களாகத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள்.

லாங்கரன், டாக்டுராவ் ஆகியோர்களின் படைகளில் மிஞ்சியிருந்தவர்கள் ஆகெஸ்ட் என்ற கிராமத்திற்குப் பக்கத்திலுள்ள குளங்களின் கரைகளையும், அணைகளையும் சுற்றிக் கூட்டமாய் நின்றுகொண்டிருந்தார்கள்.

ஐந்து மணிக்குப் பிற்பாடு அந்த ஆகெஸ்ட் அணையில் பிரங்கிக் குண்டுகள் வந்து விழுந்துகொண்டிருந்தன. பிராட்ஜென் குன்றுகளின் சாய்வுகளில் அந்த பீரங்கிகள் வைக்கப்பட்டு, அங்கிருந்து பின்னால் போய்க்கொண்டிருந்த துருப்புகள் மீது பிரஞ்சுக்காரர்கள் குண்டுகளைப் பொழிந்துகொண்டிருந்தார்கள்.

பின்னணியில் டால்காருகாவும் மற்றவர்களும் அங்கிருந்த சிலரைத் திரட்டி, தமது துருப்புகளை விரட்டிக்கொண்டு வந்த பிரஞ்சு குதிரைப்படைமீது, குண்டு மழை பொழிந்து கொண்டிருந்தார்கள். மாலை இருட்ட ஆரம்பித்தது. அந்த ஒடுக்கமான ஆதெஸ்ட் அணையில் பல வருஷங்களாக அங்கிருந்த வயோதிக மில்காரன் அமைதியாக உட்கார்ந்துகொண்டு, தமது பேரனைப் பக்கத்தில் அமர்த்தி, கைச்சட்டையை மேலே மடக்கிக்கொண்டு மீன் பிடித்துக்கொண்டிருப்பது வழக்கம்.அந்த கரை வழியாக மொரேவியர்கள் தங்களுடைய சுருக்கமான தொப்பிகளை அணிந்து நீல நிறச் சட்டைகள் அணிந்து, தங்கள்

இரண்டு குதிரை வண்டிகளில் கோதுமையையும், கோதுமை மாவையும் ஏற்றிப் போய் வந்துகொண்டிருப்பது வழக்கம். இப்போது அந்த ஒடுக்கமான அணை மீது சாமான் வண்டிகளுக்கும் பீரங்கிகளுக்கும் மத்தியில் அந்தக் குதிரை குளம்படிகளுக்கும் வண்டிகளின் சக்கரங்களுக்கும் இடையில் அமுங்கிவிடக் கூடாதே என்ற பயத்தோடு ஒரு வரையொருவர் நெருக்கிக்கொண்டு, கீழே கிடந்த காயமடைந்தவர்களையும் செத்துக்கொண்டிருந்தவர் களையும் மிதித்துத் தள்ளிக்கொண்டு போய்க்கொண்டிருந்தார்கள். பத்து வினாடிகளுக்கு ஒரு பீரங்கிக் குண்டு வீதம் அங்கிருந்த காற்றை அழுத்திக்கொண்டு பறக்கவோ அல்லது வெடிக்கவே செய்துகொண்டிருந்தது. அது விழுந்த இடத்தில் கூட்டமாயிருந்த அந்த சிப்பாய்களில் பலர் கொல்லப்பட்டும், ரத்தம் சிந்தியும் காணப்பட்டார்கள்.

டோலாகாவ்இப்பபோது ஒரு அதிகாரியாயிருந்தார். அவர் தமது காயம்பட்ட கையோ அந்தப் பட்டாளத்தின் கமாண்டர் குதிரை மீது ஏறி வர, அவருடனும் அந்தப் பட்டாளத்தைச் சேர்ந்த இன்னும் 10 பேருடனும் நடந்து வந்துகொண்டிருந்தார். அவர்களுடைய பட்டாளத்தில் மிஞ்சியவர்கள் அவர்கள்தான். அந்த அணைக்குப் போகிற வழியின் பக்கத்தில் கூட்டம் நெருங்கியிருந்தபடியால், அவர்கள் அதில் நுழைந்து போக முயற்சி செய்தார்கள். அவர்களுக்கு முன்பாக ஒரு குதிரை, பீங்கி வண்டியின் கீழாக விழுந்துவிட்டபடியால், அதை பாதையை விட்டு இழுத்து விலக்கிக்கொண்டிருந்தார்கள். இச்சமயம் ஒரு பீரங்கக் குண்டு அவர்களுக்குப் பின்னால் வந்து விழுந்து ஒருவரைக் கொன்றது. மீண்டும் முன்னால் ஒரு குண்டு விழுந்து டோலாகாவின் உடம்பெல்லாம் ரத்தம் தெறிக்கும்படி செய்தது. கூட்டம் வேறுவழியன்றி முன்னால் முண்டியடித்துக்கொண்டு, ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டு சில அடிகள் போவதும், மீண்டும் நிற்பதுமாய் இருந்தது. ஒரு 100 கெஜங்கள் நகர்ந்துவிட்டால் போதும். அப்புறம் நமக்கு ஆபத்தில்லை. இங்கேயே இன்னும் இரண்டு நிமிஷங்கள் நின்றுகொண்டிருந்தால் போதும். நிச்சயம் சாவுதான் என்று ஒவ்வொருவரும் நினைத்தார்கள்.

'அந்தக் கூட்டத்தின் மத்தியிலிருந்த டோலாகாவ் அந்த அணையின் ஓரத்திற்கு முண்டியடித்துக்கொண்டு போனார். போகிற வழயில் இரண்டு சிப்பாய்களைத் தள்ளிவிட்டு, அந்த மில் குளத்தின் மேலுள்ள வழுவழுப்பான பனிக்கட்டி மீது ஓடினார்.

'இந்தப் பக்கம் திரும்புங்கள்' என்று அவர் கத்திவிட்டு அங்கிருந்த பனிக்கட்டி மீது குதித்தார். அவர் குதித்த வேகத்தில்

அந்தப் பனிக்கட்டி கொஞ்சம் நொறுங்கியது. 'இந்தப் பக்கம் திரும்புங்கள்' என்று துப்பாக்கிகளோடு இருந்தவர்களிடம் மீண்டும் கத்தினார். 'அது தாங்கிக்கொள்ளும்'

அந்தக் குளத்தை மூடியிருந்த பனிக்கட்டி அவரைத் தாங்கியது. ஆனால், அது ஆடி நொறுங்கியது. அந்த பனிக்கட்டி பீரங்கியையோ அல்லது ஒரு கூட்டத்தையோ தாங்க முடியாது என்பது மட்டுமல்ல. வெகு சீக்கிரத்தில் இவருடைய பளுவை அது தாங்கமுடியாமல் போய்விடலாம். அங்கு நின்றவர்கள் அவரைப் பார்த்து அந்தக் கரையிலேயே ஒருவரையொருவர் நெருக்கினார்களேயொழிய பனிக்கட்டி தளத்தில் இறங்குவதற்குத் துணியவில்லை. குதிரை மீதிருந்த அந்த ஜெனரல் அந்த அணையின் தலைப்பில் நின்றுகொண்டு தமது கையை உயர்த்தி டோலாகாவிடம் ஏதோ சொல்வதற்காக வாயைத் திறந்தார். திடீரென்று ஒரு பீரங்கிக் குண்டு அந்தக் கூட்டத்தின் மேலாக மிகவும் தணிவாகப் பறந்து வந்தபடியால், எல்லோரும் கீழே குனிந்தார்கள். ஆனால், யார் மீதோ பாய்ந்த சப்தம் கேட்டதும் அந்த ஜெனரல் குதிரை மீதிருந்து விழுந்து ரத்த வெள்ளத்தில் மூழக்கினன்ர். அவரை ஒருவரும் திரும்பப் பார்ககவோ அல்லது அவரைத் தாங்கித் தூக்கவோ நினைக்கவில்லை.

'பனிக்கட்டி தளத்தின் மீது இறங்குங்கள், பனிக்கட்டி தளத்தின் மீது வாருங்கள், போய்க்கொண்டிருங்கள், இங்கே திரும்புங்கள், உங்களுக்கு காது கேட்கிறதா, மேலும் போங்கள்' என்று பல விதமான குரல்கள், அந்த ஜெனரலை பீரங்கிக் குண்டு தாக்கிய பின்பு திடீரென்று கூச்சலிட்டன. எதற்காகக் கத்துகிறோம், ஏன் கத்துகிறோம் என்பதைக்கூட அறியாமல், அந்த வீரர்கள் கத்திக் கொண்டிருந்தார்கள்.

அந்த அணை மீது போய்க்கொண்டிருந்த, பின்னாலிருந்த ஒரு பீரங்கி வண்டியை பனிக்கட்டி தளத்தில் திருப்பினார்கள். உடனே சிப்பாய்கள் அணையிலிருந்து திரும்பி பனிக்கட்டி தளத்தில் ஓட ஆரம்பித்தார்கள். முன்னால்ஓடிக்கொண்டிருந்த சிப்பாய்களின் பாரம் தாங்க முடியாமல் பனிக்கட்டி உடைந்துவிட்டது. ஒரு வருடைய கால் தன்ணீருக்குள் நழுவியது. அதை மேலே எடுக்க அவன் முயற்சித்தபோது, அவன் இடுப்பளவு தண்ணீரில் விழுந்துவிட்டான். அவனுக்குப் பக்கத்திலிருந்த சிப்பாய்கள் இதைப் பார்த்ததும் பின்வாங்கினார்கள். அந்த பீரங்கி வண்டிக்காரன் தனது குதிரையை நிறுத்தினான். ஆனால், அவர்களுக்குப் பின்னாலிருந்து, 'பனிக்கட்டி மீது போங்கள், ஏன் நிற்கிறீர்கள், மேலே போங்கள், மேலே போங்கள், என்ற கூச்சல்கள் கேட்டு

வந்தன. பயங்கரத்தைக் காட்டும் கூக்குரல்களும் அநதக் கூட்டத்திலிருந்து வெளிப்பட்டன. அந்த பீரங்கி வண்டிக்குப் பக்கத்திலிருந்த சிப்பாய்கள் தங்கள் கைகளை ஆட்டி, தங்கள் குதிரைகளை அடித்து அவை மேலே போகும்படி விரட்டினார்கள். அந்த அணையிலிருந்து குதிரைகள் கீழே இறங்கின. அந்தப் பாலங்களுக்குக் கீழிருந்த பனிக்கட்டி திடீரென்று பூராவாக நொறுங்கி விழுந்தது. அங்கிருந்த 40 மனித்ர்கள் தண்ணீருக்குள் விழுந்தார்கள். சிலர்முன்பாகவும், சிலர் பின்பாகவும் விழுந்து ஒருவரையொருவர் அமுக்கி அந்த பனிக்கட்டி மீதும் தண்ணீர் மீதும் அங்கிருந்த அணைமீது கூடியிருந்த கூட்டத்தின் மீதும் அந்தக் கரையின் மீதும் விழுந்துகொண்டிருந்தன.



பிராட்ஜென் குன்றின் உச்சியில், கையில் கொடியோடு இளவரசர் ஆண்ட்ரூ பாபல்கோன்ஸ்கி ஏராளமாய் ரத்தம் சொட்ட எங்கே விழுந்தாரோ, அதே இடத்தில் இன்னமும் பிரக்ஞை வராமல் குழந்தைப் போல் பரிதாபகரமாய் முனங்கிக் கொண்டிருந்தார்.

மாலை நெருங்கியதும் அவருடைய முனகல் நின்றது. ஆடாமல், அசையாமல் அப்படியே கிடந்தார். எவ்வளவு நேரம் அவர் பிரக்ஞை தவறியிருந்தாரென்று அவருக்கு தெரியாது. திடீரென்று அவருக்குப் பிரக்ஞை ஏற்பட்டது. தம்முடைய தலையில் ஒரு காயத்தினால் ஏற்பட்ட வலியையும் எரிச்சலையும் அவர் உணர ஆரம்பித்தார்.

'அது எங்கே இருக்கிறது? எனக்கு இதுவரை தெரியாத அந்த உயர்ந்த ஆகாயம் எங்கே இருக்கிறது? இன்றுதான் நான் அதைப் பார்த்தேன்' என்று முதலில் அவருக்கு நினைப்பு தோன்றியது. 'இந்த துன்பமும் எனக்கு இதுவரை தெரியாது. ஆம், எனக்கு எதுவும் தெரியாது. இதுவரை எழுவும் தெரியாது. நான் எங்கே இருக்கிறேன்?'

குதிரைகள் வரும் சப்தங்களையும், பிரெஞ்சு மொழியில் பேசிவரும் சப்தங்களையும் அவர் கவனித்தார். தமது கண்களைத் திறந்தார். மேலே அந்த உயர்ந்த ஆகாயம் மேகங்களுடன் காணப் பட்டன. அந்த மேகங்கள் இன்னும் உயரமாகப் பறந்து கொண்டிருந்தன. அந்த மேகங்களுக்கிடையில் அளவிட முடியாத அந்த நீல நிறம் மின்னிக்கொண்டிருந்தது. அவர் தமது தலையைத் திருப்பவில்லை. குதிரைகளின் குளம்படி களிலிருந்து அங்கே

வந்துகொண்டிருந்தவர்கள் அவருக்குப் பக்கத்தில் வந்து நின்றிருக்கிறார்கள் என்பதை அவர் அறிந்தார்.

தமது இரண்டு மெய்க்காப்பாளர்களுடன் நெப்போலியன் அங்கே யுத்த களத்திற்கு வந்து, அந்த பீரங்கிப் படைகள் ஆகெஸ்ட் அணைமீது நன்றாக சுடும்படி ஏற்பாடு செய்துகொண்டிருந்தார். அந்த யுத்த களத்தில் விடப்பட்டுப்போன மாண்டவர்களையும், காயம் பட்டவர்களையும் அவர்கவனித்தார்.

'மிகச் சிறந்த வீரர்கள்' என்று மாண்டு கிடந்த ருஷ்ய கைக் குண்டு வீரரைப் பார்த்து நெப்போலியன் சொன்னார். அந்த வீரருடைய முகம் பூமியில் புதைந்திருந்தது. அவன் குப்புறப் படுத்திருந்தான். அவன் கைகள் பரந்து கிடந்தன.

'அந்த பீரங்கிகளுக்கு வேண்டிய குண்டுசள் எல்லாம் தீர்ந்து போய்விட்டன , மாட்சிமை தங்கியவரே' என்று ஒரு உதவியாளர் அந்த ஆகெஸ்ட் அணை மீது குண்டு போட்டுக்கொண்டிருந்த பிருங்கிகளைப் பார்த்துவிட்டு வந்து சொன்னார்.

'ரிசர்வில் நாம் வைத்திருப்பவைகளிலிருந்து கொஞ்சம் கொண்டுவர ஏற்பாடு செய்' என்று நெப்போலியன் சொன்னார். அதன்பின்பு அங்கிருந்து மறுபடியும் போய்க்கொண்டிருந்த போது, இளவரசர் ஆண்ட்ரூவின் முன்னால் வந்து நின்றார். இளவரசர் ஆண்ட்ரூ கொடியுடன் மல்லாக்காகப் படுத்திருந்ததை அவர் பார்த்தார். அந்தக் கொடியை ஒரு வெற்றிச் சின்னமாக பிரஞ்சுக்காரர்கள் பறித்துக்கொண்டார்கள்.

'இது ஒரு சிறந்த மரணம்' என்று பால்கோன்ஸ்கியை நோக்கிய நெப்போலியன் கூறினார்.

தம்மைப்பற்றித்தான் இம்மாதிரி பேசுகிறாரென்றும், பேசுகிறவர் நெப்போலியன் என்றும் இளவரசர் ஆண்ட்ரூ தெரிந்துகொண்டார். அங்கே பேசியவர் நெப்போலியனைப் பார்த்து 'மாட்சிமை தங்கியவரே' என்று அழைத்ததை அவர் கேட்டார். ஒரு ஈயின் ரீங்காரம் எப்படி இருக்குமோ, அம்மாதிரி அந்த வார்த்தைகள் அவருக்கு ஒலித்தன. அவர்களைப் பற்றி அச்சமயம் அவருக்கு எந்தவிதமான அக்கரையும் இல்லை. அவர்ளைப்பற்றி அவர் அதற்குப் பின்பு நினைக்கவுமில்லை. அவர் அவர்களை மறந்து விட்டார். அவருடைய தலை எரிச்சல் கொடுத்துக் கொண்டிருந்தது. அவருடைய ரத்தம் வெளியே கொட்டிக்கொண்டிருப்பதாக அவர் உணர்ந்தார். அவருக்கு மேலாக அந்த உயர்ந்த நிரந்தரமான ஆகாயம் தோன்றிக்கொண்டிருந்தது. அங்கு வந்தவர் தமது வீரரான நேப்போலியன்தான் என்பதை அவர் அறிந்தார். ஆனால், அந்த

வினாடியில் அவருக்கு ரொம்ப சிறிய அற்பமான பிராணியாக நெப்போலியன் தோன்றினார். தமக்கும், தாம் கவனித்துக் கொண்டிருக்கும் அந்த எல்லையற்ற உயர்ந்த ஆகாயத்திற்கும் இடையில் நெப்போலியன் அம்மாதிரிஅவருக்குத் தோன்றினார். நெப்போலியன் அவருக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருப்பதைப் பற்றியோ, அவரைப்பற்றிப் பேசியதைப் பற்றியோ அந்த வினாடியில் அவருக்கு ஒரு பொருட்டாய்த் தோன்றவில்லை. ஏதோ மனிதர்கள் தம் பக்கத்தில் நின்று கொண்டிருப்பதற்காக அவர் சந்தோஷமடைந்தார். ஏனெனில் அவர் அவர்கள் உதவி பெற்று மீண்டும் உயிர் பெறுவதற்கு வழி செய்வார்கள் என்று நம்பினார். அந்த நினைப்பு இதுவரை அவர் அறிந்திருக்க முடியாத விதத்தில் மிகவும் அழகியதாக அவருக்குத் தோன்றியது. அவர் தமது பலத்தையெல்லாம் ஒன்று சேர்த்து கொஞ்சம் உடம்பை அசைக்கவோ அல்லது கொஞ்சம் சப்தம் போடவோ முயற்சித்தார். மிகுந்த சிரமத்தோடு தமது காலை லேசாக ஆட்டினார். மிகுந்த பலவீனமான குரலில் எதையோ முனங்கினார்.

‘ஆ, இந்த ஆசாமி உயிரோடு இருக்கிறான், இந்த வாலிபனைத் தூக்கி வைத்திய வண்டிக்கு கொண்டு போங்கள்’ என்று நெப்போலியன் சொன்னார். இதைச் சொல்லிவிட்டு, மார்ஷல் லேன்ஸை சந்திப்பதற்காக நெப்போலியன் சவாரி போனார். மார்ஷல் லேன்ஸ் தமது தொப்பியைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு, அன்று கிடைத்த வெற்றிக்காக சக்கரவர்த்தியைப் பாராட்டுவதற்காகப் புன்முறுவலோடு சவாரி வந்து கொண்டிருந்தார்.

இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அதற்கு மேல் எதுவுமே ஞாபகத்தில் இல்லை. தம்மை டோலியில் தூக்கிப் போட்டதனாலும், அவரைத் தூக்கிக்கொண்டு போகும்போது ஏற்பட்ட ஆட்டங்களினாலும், வைத்திய வண்டியில் அவருடைய காயத்தைப் பரிசோதித்த தனாலும் ஏற்பட்ட தாங்க முடியாத வலியினால் அவர் பிரக்ஞை இழந்தவிட்டார். அன்று மாலை வெகு நேரம் வரையில் அவருக்கு மீண்டும் பிரக்ஞை வரவில்லை. அவரை, மற்றும் கைதியாயிருந்த ருஷ்ய அதிகாரிகளோடு ஆஸ்பத்திரிக்குக கொண்டுபோனார்கள். இந்த சமயத்தில் அவருக்குக் கொஞ்சம் பலம் வந்திருப்பதாகத் தோன்றியது. அவர் தம்மைச் சுற்றிலும் உள்ளவைகளை பார்த்து வந்ததோடு, பேசவும் ஆரம்பித்தார்.

அவருக்கு முதலில் பிரக்ஞை வந்ததும் அவர்கேட்டது, ஒரு பிரஞ்சு அதிகாரியின் குரலாகும். அவர் வேகமாகப்பேசினார்: ‘நாம் இங்கே நிற்க வேண்டும். இப்போது சக்கரவர்த்தி இவ்வழியாக

சீக்கிரமாகப் போவார். இந்த கனவான்களைக் கைதிகளாகப் பார்ப்பதற்கு அவருக்கு சந்தோஷமாக இருக்கும்'.

'இன்று ஏராளமான பேர் கைதியாயிருக்கிறார்கள். அநேகமாக ருஷ்ய ராணுவம் முழுவதுமே கைதியாயிருக்கிறது. ஆகவே, இவர்களையெல்லாம் பார்ப்பதற்கு அவருக்கு எரிச்சலாயிருக்கும்' என்று மற்றொரு அதிகாரி சொன்னார்.

'எல்லாம் ஒன்றுதான். இந்த ஆசாமியை அந்த அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் காப்பாளர் படைக்கு கமாண்டர் என்று சொல்லுகிறார்கள்' என்று முதலில்பேசியவன் கூறி, காப்பாளர் குதிரைப் படையைச் சேர்ந்த, வெள்ளை யூனிபாரம் அணிந்த ஒரு ருஷ்ய அதிகாரியைச் சுட்டிக்காட்டினான்.

இளவரசர் ரெனின் என்பவரை பீட்டர்ஸ்பர்க் உயர் வட்டாரத்தில் பால்கோன்ஸ்கி முன்னால் சந்தித்திருந்தபடியால், அவரைப் பார்த்ததும் அடையாளம் கண்டுகொண்டார். அவருக்குப் பக்கத்தில் காப்பாளர் குதிரைப் படையைச் சேர்ந்த ஒரு காயமடைந்த அதிகாரியான 19 வயது வாலிபன் நின்றுகொண்டிருந்தான்.

பாய்ச்சலில் வந்துகொண்டிருந்த போனபார்ட் அந்த இடத்திற்கு வந்ததும் தமது குதிரையை நிறுத்தினார்.

'இவர்களில் யார் பதவியில் மூத்தவர்கள்?' என்று, கைதிகளைப் பார்த்ததும் அவர் கேட்டார்.

அவர்கள் இளவரசர் ரெப்னினைச் சுட்டிக்காட்டினார்கள்.

'சக்கரவர்த்தி அலெக்ஜாண்டரின் காப்பர்ளர் குதிரைப் பட்டாளத்தின் கமாண்டர் நீர்தானா?' என்று நெப்போலியன் கேட்டார்.

'நான் ஒரு பட்டாளத்திற்குத்தான் கமாண்டர்' என்றார் பரப்னின்.

'உம்முடைய பட்டாளம், அதன் கடமையை மிகுந்த கண்ணியமாக நிறைவேற்றியிருக்கிறது, என்றார் நெப்போலியன்.

ஒரு பெரிய கமாண்டரின் புகழ்ச்சியே ஒரு சிப்பாய்க்கு கிடைக்கும் உயர்வான பரிசாகும்' என்றார் ரெப்னின்.

'நான் மிகுந்த மகிழ்ச்சியோடு அந்தப் பரிசை உமக்குத் தருகிறேன். உமக்குப் பக்கத்தில்இருக்கிற அந்த வாலிபன் யார்?

'அவன் பெயர் லெப்டினன்ட் சுக்டிலென்' என்று இளவரசர் பதிலளித்தார்.

அவனைப் பார்த்து நெப்போலியன் புன்சிரிப்பு காட்டினார்.

'எங்களுடன் போராட வருவதற்கு இவன் சிறுவனாயிற்றே'

'வீரத்தைக் காட்டுவதற்கு வயது எதுவும் இடையூறாய் இருக்காது' என்று சுக்டிலென் தணிந்த குரலில் முனங்கினான்.

'நன்றாய் சொன்னாய், வாலிபனே. நீ இன்னும் மேலாகப் போவாய்' என்று நெப்போலியன் சொன்னார்.

சக்கரவர்த்தியின் முன்பாக இளவரசர் ஆண்ட்ரூ கொண்டு வரப்பட்டார். அவரைக் கவனிப்பதற்குத் தவறவில்லை. யுத்த களத்தில் அவரைப் பார்த்த ஞாபகம் சக்கரவர்த்திக்குத் தோன்றியது. மீண்டும் அவரைப் பார்த்து, 'வாலிபனே' என்று அழைக்க ஆரம்பித்தார். வாலிபன் என்று இளவரசர் ஆண்ட்ரூவை முன்னால் சொன்னது அவருடைய ஞாபகத்திற்கு வந்தது.

'நல்லது, வாலிபரே, இப்போது உமக்கு உடம்பு எப்படி யிருக்கிறது? என்னுடைய வீரரே'.

ஐந்து நிமிஷங்களுக்கு முன்னால் தம்மைத் தூக்கி வந்து கொண்டிருந்த சிப்பாய்களிடம் இளவரசர் ஆண்ட்ரூவால் சில வார்த்தைகள் பேச முடிந்தது. இப்போது அவர் நெப்போலியனை வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தாரே தவிர, அவர் எதுவும் பேசவில்லை.

நெப்போலியனைச் சுற்றியிருந்த எதுவுமே அச்சமயத்தில் அவருக் அற்பமாய்த் தோன்றின. அந்த வெற்றியில் தமது லட்சிய வீரர் நடந்துகொண்டது அற்பமான தற்பெருமை என்று அவருக்குத் தோன்றியது. அந்த உயரமான, இனிமையான ஆகாயத்திற்கு எதிரில் அந்த ஆகாயத்தை நன்றாக அவர் புரிந்துகொண்ட பின்பு, இவரைப் பற்றி அவருக்கு லட்சியமாய்த் தோன்றவில்லை. அவர் பதில் எதுவும் சொல்லவில்லை.

தமது சரத்தத்தை இழந்துவிட்டபடியால் ஏற்பட்ட பலவீனத்தினாலும், தமது கஷ்டங்களினாலும் மரணத்திற்குப் பக்கத்தில் தாம் இப்பதனாலும் அவருக்கு எல்லாமே அற்பமாகவும், உபயோகமற்றதாகவும் தோன்றின. நெப்பபோலியனின் கண்களை அவர் பார்த்தபோது, அவர் நினைத்த அந்தப் பெருமை எவ்வளவு அற்பமானது என்று தோன்றியது. வாழ்க்கை எவ்வளவு முக்கியத்துவம் இல்லாதது. அதை ஒருவரும் அறிய முடிய வில்லையே என்று அவர் நினைத்தார். அதைவிட முக்கியத்துவம் இல்லாதது சாவு என்று எண்ணினார். அதைப்பற்றி உயிரோடு இருப்பவர் ஒருவரும் அறியவோ விளக்கவோ முடியாது என்று அவர் நினைத்தார்.

பதிலுக்கு எதிர்பாராமல், நெப்போலியன் திரும்பி அங்கிருந்த ஒரு அதிகாரியிடம் தாம் போகும்போது சொல்லியதாவது:-

இந்த கனவான்களை நன்றாகக் கவனித்து என்னுடைய முகாமிற்கு கொண்டுபோங்கள். என்னுடைய டாக்டரான லாரி

இவர்களின் காயங்களைப் பரிசோதித்து, வேண்டிய சகிச்சை செய்யட்டும். போய் வருகிறேன், இளவரசர் ரெப்னின்' என்று கூறிவிட்டு தம்முடைய குதிரையை தார்ச் சக்கரத்தால் குத்தி பாய்ச்சலில் போனார்.

மிகுந்த மகிழ்ச்சியோடும், சந்தோஷத்தோடும்நெப்போலியன் முகம் ஜொலித்தது.

இளவரசர் ஆண்ட்ரூவை தூக்கிகப் போன சிப்பாய்கள் அவருடைய கழுத்தில் இளவரசி மேரி சூட்டிய அநதச் சிறிய தங்கத்தினாலான தெய்வப் பதக்கத்தை எடுத்துக்கொண்டார்கள். சக்கரவர்த்தி இந்தக் கைதிகளிடம் காட்டிய பரிவை அவர்கள் பார்த்த பின்பு அந்தப் பதக்கத்தை மீண்டும் கொண்டுவந்து இளவரசர் கழுத்தில் போட்டுவிட்டார்கள்.

யார் அதைத் திரும்பக் கொண்டுவந்து, எப்படிப் போட்டார்கள் என்பதை இளவரசர் ஆண்ட்ரூவால் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆனால், திடீரென்று தமது யூனிபாரத்துக்கு மேலாக ஒரு மெல்லிய தங்கச் சங்கிலியால் கோர்க்கப்பட்ட அந்தப் பதக்கம் அவருடைய மார்பில் காணப்பட்டது.

'அது ரொம்பவும் நல்லது' என்று தமது சகோதரி மிகுந்த உணர்ச்சியுடனும், பயபக்தியோடும் தமது கழுத்தில் சூட்டிய அந்த தெய்வப் பதக்கத்தை நோக்கியதும் இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார்.

'மேரி நினைக்கிறபடியெல்லாமே அவ்வளவு தெளிவாகவும் அவ்வளவு எளிதாகவும் இருக்குமானல், அது நல்லதுதான். இந்த வாழ்க்கையில் உதவியைப் பெறுவதற்கு என்ன செய்ய வேண்டுமென்பது தெரிந்திருந்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும். இறந்து கல்லறைக்குப் போன பின்பு என்ன நடக்கும் என்பதைத் தெரிய முடியுமானால் எவ்வளவு நன்றாயிருக்கும். 'கடவுளே, என்மீது கருணைகாட்டும்' என்று நான் சொல்வதற்கு முடியுமானால் எனக்கு எவ்வளவு சந்தோஷமாகவும், சாந்தமாகவுமிருக்கும். ஆனால், அதை யாரிடம் சொல்வது? அந்த அகண்ட, அறிவுக்கு எட்டாத, சர்வசக்தியிடம் சொல்லவேண்டும்; அதனிடம் நான் சொல்ல முடியாது. அந்த பரிபூரண அல்லது சுத்த சூனியத்தைப் பற்றி என்னால் வார்த்தைகளால்க் கூட தெரிவித்துக்கொள்ள முடியாது. அல்லது மேரி கொடுத்த இந்த ரட்சையைப் பார்த்து சொல்ல வேண்டும். எதுவும் நிச்சயமானதில்லை. நான் அறிந்துள்ளவை எல்லாம் முக்கியத்துவம் இல்லாமல் இருக்கின்றன. நம் அறிவுக்கு எட்டாத அந்த சர்வ சக்தியின் பெருமை ஒன்றுதான் நிச்சயமானதாய் இருக்கிறது'.

டோலிகளைத் தூக்கிக்கொள்டு போய்க்கொண்டிருந்தார்கள் ஒவ்வொரு அசைப்பின்போதும் தாங்க முடியாதது வலி அவருக்கு ஏற்பட்டது. அவருக்கு ஜுரம் மேலும் அதிகமாகி, ஜன்னியால் பிதற்றல்கள் ஏற்பட்டன. அவருடைய தந்தை, மனைவி, சகோதரி, பிறக்கப்போகும் மகன், யுத்த களத்திற்குப் புறப்படுவதற்கு முதல் நாளன்று அவருக்கு இரவில் தோன்றிய கனிவான காரணங்கள், அந்த முக்கியத்துவமில்லாத சிறிய நெப்போலியன் உருவம், எல்லாவற்றிற்கும் மேல் இந்த அபூர்வமான உயர்ந்த ஆகாயம் அவையெல்லாம் அவருடைய கண் முன்பாகக் காட்சிகளாகத் தோன்றி ஜன்னியில் பிதற்றிக்கொண்டிருந்தார்.

'பால்ட் ஹில்ஸ்' மாளிகையிலுள்ள அமைதியான குடும்ப வாழ்க்கையும், சாந்தமான மகிழ்ச்சியும் அவருடைய சிந்தனையில் தோன்றின. அந்த சந்தோஷத்தை அவர் அனுபவித்துக் கொண்டிருந்த போது, திடீரென்று அந்த சிறிய நெப்போலியன் அவருக்குத் தோன்றினார். அங்கு காயமடைந்து கிடந்தவர்களின் பரிதாப நிலைமையைப் பார்த்து நெப்போலியன் கொஞ்சம் கூட இரக்கம் காட்டாமல் மனம் சுளித்ததை இவர் கண்ட பின்பு, அவருக்கு சந்தேகங்களும், மனக் கஷ்டங்களும் தோன்றின. மோட்சலோகம் ஒன்றுதான் சாந்தத்தைக் கொடுக்கவல்லது என்ற நினைப்பற்கு வந்தார். விடிகிற வேளையில்இந்தக் கனவுகளெல்லாம் மறைந்து விட்டன. மீண்டும் அவருக்குப் பிரக்ஞை தவ்றிவிட்டது. நெப்போலியனின் டாக்டரான லாரி என்பவர், இனி இவர் பிழைக்க மாட்டார் என்ற சொல்லிவிட்டார்.

'இவருக்கு நரம்பு பலவீனம் ஏற்பட்டிருக்கிறது. பித்தமும் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இவர் பிழைக்கமாட்டார்' என்றார் லாரி.

இளவரசர் ஆண்ட்ரூவுக்கும், படுகாயமடைந்த மற்றவர் களுக்கும் வேண்டிய சிகிச்சைகளைச் செய்யும்படி அந்த ஊர்வாசிகளிடம் அவர்கள் விட்டுவிட்டுப் போனார்கள்.

★

## விளக்கக் குறிப்பு

3 15

குட்டுஜோவுக்கு அலெக்ஜாண்டருக்கும் நடந்த உரையாடல் மிக்காய்லாவ்ஸ்கி டானைலெவ்ஸ்கி என்பவர் எழுதிய சரித்திரத்திலிருந்து எடுக்கப் பட்டது. அடுத்த அத்தியாத்தில் எழுதப்பட்டிருக்கும் போரின் வருணனை கூட அநேகமாய் அதிலிருந்து எடுக்கப்பட்டது.

# 4

## 1

1806-ம் வருஷத்து ஆரம்பத்தில் நிக்கலஸ் ராஸ்டோவ் விடுமுறையில் வீடு திரும்பினார். டெனைசாவும் விடுமுறையில் தமது ஊராகிய வாரோநெச்சுக்கு போய்க் கொண்டிருந்தார். மாஸ்கோ வரையில் தம்முடன் பிரயாணம் செய்யும்படியும், அங்கே தம்முடன் தங்கும்படியும் அவரை ராஸ்டோவ் அழைத்தார். மாஸ்கோவிற்கு முன்பாகவுள்ள ஒரு குதிரை மற்றும் தபால் ஸ்டேஷனில் ஒரு நண்பனை டெனைசாவ் சந்தித்தார். அங்கே அவர் மூன்று புட்டிகள் ஒயின் சாப்பிட்டார். அந்த உறைபனி நிறைந்த ரஸ்தாவில் எத்தனையோ மேடு பள்ளங்களில் பிரயாணம் செய்துவந்த வண்டி தூக்கித் தூக்கிப் போட்டுக்கொண்டிருந்த போதிலும் மாஸ்கோ விற்குப் போகிற வழியல் ஒரு தடவை கூட அவர் விழித்துப் பார்க்க வில்லை. இந்தப் பனி வண்டியின் உள்ளே கீழே படுத்திருந்தார். ராஸ்டோவ் உட்கார்ந்திருந்தார். மாஸ்கோ நெருங்க நெருங்க ராஸ்டோவிற்கு மேலும் மேலும் பரபரப்பு அதிகரித்தது.

'இன்னும் எவ்வளவு தூரம்? ஓ, இந்தச் சகிக்க முடியாத தெருக்கள், கடைகள், ரொட்டிக்கடைக்காரனின் விளம்பரப் பலகைகள், தெருவிளக்குகள், பனி வண்டிகள்' என்று மாஸ்கோவின் வெளிவாசலைக் கடந்து மாஸ்கோவிற்குள் நுழைந்த போது ராஸ்டோவ் நினைத்து வந்தார்.

'டெனைசாவ், நாம் இங்கே வந்துவிட்டோம். அவர் தூங்கிக் கொண்டிருக்கிறார்' என்று அவர் பேசி, தமது முழு உடம்பையும் முன்னால் நீட்டி குனிந்தார். அப்படிக் குனிவதால் அந்தப் பனி வண்டியின் வேகம் அதிகரிப்பதுபோல அவர் நம்பினார்.

டெனைசாவ் பதில் சொல்லவில்லை.

'அந்த ரஸ்தா சந்திப்பல் உள்ள முக்கு, ஜக்கார் என்ற குதிரை வண்டிக்காரனின் வண்டி நிற்கும் இடம். அதோ ஜக்காரே நிற்கிறான். அதே குதிரைதான் இன்னமும் அவனிடம் இருக்கிறது. நாங்கள் இஞ்சி ரொட்டி வாங்கும் சிறிய கடை இதோ இருக்கிறது. உன்னால் இன்னும் கொஞ்சம் வேகமாய்ப் போக முடியாதா? போ பார்க்கலாம்'.

'வீடு எங்கே இருக்கிறது!' என்று சாரதி கேட்டான்.

'அதோ வலது பக்கத்தில் கடைசியில் ஒரு பெரிய வீடு இருக்கிறதே, அதுதான். உனக்குத் தெரிகிறதா? அதுதான் எங்கள் வீடு. அதுவேதான். டெனைசாவ், டெனைசாவ், இதோ நாம் வந்துவிட்டோம் ' என்று ராஸ்டோவ் கூறினார்.

டெனைசாவ் தமது தலையைத் தூக்கி இருமினார். ஆனால் பதில் எதுவும் சொல்லவில்லை.

முன்னால் பெட்டியின் மீதிருந்த தனது சேவகனைப் பார்த்து 'டிமிட்ரி, அந்த விளக்குகள் நமது வீட்டில்தானே காணப் படுகின்றன. இல்லைய?' என்று கேட்டார்.

'ஆம் ஐயா. அந்த விளக்கு உங்கள் தகப்பனாரின் படிப்பு அறையில் உள்ளது.'

'அப்படியானால் அவர்கள் இன்னும் படுக்கப் போவில்லை யல்லவா? நீ என்ன நினைக்கிறாய்? என்னுடைய புதிய கோட்டை வெளியே எடுக்க மறந்துவிடாதே. ஜாக்கிரதை' என்று ராஸ்டோவ் சொல்லி, தமது புதிய மீசையைத் தடவி விட்டுக்கொண்டிருந்தார். 'சரி, வேகமாய்ப் போ, என்று சாரதியைப் பார்த்து கத்தினார். 'வாஸ்கா, எழுந்திரும்' என்று டெனைசாவைப் பார்த்து சொன்னார். அவருடைய தலை மீண்டும் அசைந்தது. 'சரி வாரும் எழுந்திரும்' வாட்கா மது குடிப்பதற்காக உமக்கு மூன்று ரூபிள்கள் தருவேன், எழுந்திரும்' என்று ராஸ்டோவ் கூச்சலிட்டார். அச்சமயம் அவருடைய வண்டி அவருடைய வீட்டிற்கு மூன்று வீட்டிற்கு அப்புறம் வந்து கொண்டிருந்தது. குதிரைகள் அசையவேயில்லை என்பதுபோல அவருக்குத் தோன்றியது. கடைசியாக அந்த பனிவண்டி வலது பக்கம் திரும்பி வாசலில் நின்றது. தமக்குப் பழக்கமான வாசலையும் முற்றத்தையும் வெளித் தாழ்வாரத்தையும் அவர் கண்டார். உடனே பனி வண்டி நிற்பதற்கு முன்பாகவே துள்ளிக் குதித்து ஹாலுக்கு ஓடினார். அந்த வீடு அமைதியாக யார் வந்தாலும் சரி, என்று அலட்சியத்தோடு நிற்பதாகத் தோன்றியது. ஹாலில் ஒருவரும் இல்லை. 'அட கடவுளே, எல்லாரும் சௌக்கியமாய் இருக்கிறார்கள் அல்லவா?' என்று நினைத்து ஒருவினாடி சோகத்தோடு நின்றார். உடனே அந்த ஹால் வழியாக ஓடி தமக்குப் பழக்கமான மெத்தைப் படிக்கட்டுகளில் ஏறினார். தமக்குப் பழக்கமான கதவின் பழைய கைப்பிடியைப் பார்த்தார். அந்தக் கைப்பிடி சுத்தமாய் இல்லாவிட்டால் கோமகளுக்கு எப்பொழுதுமே கோபம் வரும். அந்தக் கைப்பிடியைத் திருப்பினார். வழக்கம்போல அது சுலபமாய் திரும்பியது. ஒரே ஒரு மெழுகுவத்தி வெளி அறையில் எரிந்துகொண்டிருந்தது.

வயோதிக மைக்கேல் பெட்டியின் மீது படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார். பிராகோபி என்ற சேவகன் மிகுந்த பலமானவன். வண்டியின் பின்னாலிருந்து வண்டியை அப்படியே தூக்கிவிட அவனால் முடியும். அவன் அங்கே உட்கார்ந்திருந்தான். கதவு

திறந்ததைப் பார்த்ததும் அவனுடைய தூக்க முகத் தோற்றம் திடீரென்று மகிழ்ச்சியான ஆச்சரியத்தைக் காட்டியது.

'அருள் புரியம், கடவுளே, இதோ இளைய கோமகன்' என்று தனது இளைய எஜமானனைப் பார்த்து அறிந்து கொண்டதும் கூறினான். 'இது உண்மைதானா? எனது செல்வமே?' என்று பிராகோபி பரபரப்பினால் உடல் நடுங்கி வரவேற்பு அறையை நோக்கி ஓடினான். இளைய கோமகன் வந்ததை அறிவிப்பதற்காக ஒருவேளை அவன் ஓடியிருக்கலாம். ஆனால் அவன் மனதை மாற்றிக்கொண்டு திரும்பி வந்து குனிந்து வாலிபரின் தோளில் முத்தமிட்டான்.

'எல்லாரும் சௌக்கியமா?' என்று ராஸ்டோவ் கேட்டுவிட்டு தமது கையை இழுத்துக்கொண்டார்.

'ஆம் கடவுள் புகழப்படுவாராக. ஆம், அவர்கள் இப்பொழுது தான் ராச்சாப்பாட்டை முடித்தார்கள். நான் உம்மை நன்றாய்ப் பார்க்கட்டும் , மேன்மை தங்கியவரே.'

'எல்லாம் சரியாய் இருக்கிறதல்லவா?'

'ஆம், கடவுள் புகழப்படுவாராக'.

டெனைசாவை ராஸ்டோவ் பூராவாக மறந்துவிட்டார். தமது வரவைப் பற்றி யாரும் அறிவிப்பதற்கு முன்னதாகத் தாமே போய்விட வேண்டுமென்று நினைத்து தம்முடைய ரோமக் கோட்டைக் கழற்றி வீசிவிட்டு முன் பாதங்களில் அந்த இருண்ட நடன மண்டபம் வழியாக ஓடினார். எல்லாம் முன் இருந்த மாதிரியே இருந்தன. சீட்டு விளையாடும்மேஜைகள் அப்படியே இருந்தன. அதே லஸ்த்தர்கள் தொங்கிக்கொண்டிருந்தன. அதன்மீது ஒரு உறை போடப்பட்டிருந்தது. ஆனால் யாரோ இந்தச் சிறிய எஜமானரை முன்பே பார்த்துவிட்டான். ஆகவே, அவர் வரவேற்பு அறையில் போய்ச்சேருமுன்பாக பக்கத்து அறையிலிருந்து ஏதோ ஒன்று புயலைப்போல் வேகமாய் ஓடி வந்து அவர் கழுத்தைப்பற்றித் தொங்கி முத்தமிடுவதைக் கண்டார். பின்னால் அதேமாதிரியான மற்றொரு உருவம் இரண்டாவது அறையிலிருந்தும் மூன்றாவது அறையிலிருந்தும் ஓடிவந்து அதேமாதிரி கழுத்தைக் கட்டி முத்தமிட்டுக்கொண்டிருந்தது. ஆலிங்கனங்களும் முத்தங்களும் அதிகமாயின. சந்தோஷக் கண்ணீர் வடிந்தது. கூச்சல்கள் அதிகமாயின. அப்பா யார், நட்டாஷா யார், பெட்டியா யார் என்று அவரால் வித்தியாசம் கண்டு பிடிக்க முடியவில்லை. ஒவ்வொரு வரும் கூச்சலிட்டார்கள், பேசினார்கள். ஏககாலத்தில் அவரை முத்தமிட்டார்கள். ஆனால் அவருடைய தாயாரை மட்டும் அங்கே காணவில்லை. அதை அவர் கவனித்தார்.

'எனக்குத் தெரியாதே... நிக்லஸ்...எனது செல்வமே...'

'இதோ இங்கே இருக்கிறார்... நமக்குச் சொந்தமான... போலியா, எனது அன்பானவனே... எவ்வளவு மாறிவிட்டான்... மெழுகு வத்திகள் எங்கே?... தேனீர் கொண்டு வாருங்கள்...'

'எனக்கு, என்னை முத்தமிடு...'

'என் அன்பே... எனக்குக் கூட...'

சோனியா, நட்டாஷா, பெட்டியா, அன்னா மிக்காய்லாவ்னா, வெரா, வயோதிகக் கோமகன் எல்லாரும் அவரைப் பற்றி தழுவிக் கொண்டிருந்தார்கள். அடிமைகளும், வேலைக்காரர்களும், வேலைக்காரிகளும் அந்த அறையில் வந்து கூட்டமிட்டு ஆவ்... ஊவ்... என்று கத்திக்கொண்டிருந்தார்கள்.

அவரின் கால்களை பெட்டியா கட்டிக்கொண்டு, 'எனக்கும் கொடு' என்று கத்திக்கொண்டிருந்தான்.

நட்டஷா அவரைத் தன்னிடம் கீழே இழுத்து அவருடைய முகத்தை முத்தங்களால் மறைத்தாள். அவருடைய கோட்டை உறுதியாகப் பிடித்து ஆடு மாதிரி மேலும் கீழும் குதித்து கீச்சுக் குரலில் சத்தமிட்டுக்கொண்டிருந்தாள்.

மகிழ்ச்சிக் கண்ணீர் நிறைந்த மினுமினுத்த கண்கள் எல்லாப் பக்கங்களிலிருந்தும் கனிவோடு அவரைப் பார்த்தன. எல்லாருடைய இதழ்களும் ஒரு முத்தத்தைப் பெறுவதற்காக விரும்பின.

சோனியா சிவந்து தோன்றினாள். அவருடய கையைப்பற்றி ஆனந்தத்தில் முகம் மலர்ந்து ஆவலோடு அவருடைய கண்களை நோக்கி தான் வெகுநாளாக ஏங்கியிருந்த அந்தப் பார்வைக்காக காத்திருந்தாள். சோனியா இப்பொழுது 16 வயதானவள். மிகுந்த அழகாய் இருந்தாள். அதுவும் இந்தப் பரவசமான சமயத்தில் அவளுடைய அழகு இன்னும் அதிகமாகியது. அவரை நோட்ட மிட்டாள். அவளுடைய கண்களை அவரிடமிருந்து எடுக்க வில்லை. மூச்சை அடக்கிக்கொண்டு புன்முறுவல் கொண்டாள். ஒரு நன்றிநிறைந்த பார்வையோடு அவர் அவளை நோக்கினார். ஆனால் இன்னமும் யாரோ ஒருவரை எதிர்பார்த்து அவர் தேடிக் கொண்டிருந்தார். அந்த வயோதிகக் கோமகள் இன்னும் வரவில்லை. ஆனால் வாசல் பக்கத்தில் காலடி ஓசைகள் கேட்டன. அவை வேகமான காலடிகளின் ஓசையாய் இருந்தபடியால் அது அவருடைய தாயாருடையதாய் இருக்க முடியாது.

என்றாலும் அவை அவருடைய தாயாரின் காலடி ஓசைகளேதான். அவர் போனபின்பு அவள் தைத்த ஒரு புதிய கௌனில் அவள்

தோன்றினாள். எல்லாரும் அவரை விட்டுவிட்டார்கள். அவர் அவளிடம் ஓடினார். அவர்கள் சந்தித்தபோது அவருடைய மார்பில் அவள் விழுந்து தேம்பித் தேம்பி அழுதாள். தன்னுடைய முகத்தை உயர்த்த அவளால் முடியவில்லை. ஆனால், அவளுடைய குதிரை வீரரின் கோட்டில் அவள் முகத்தை அழுத்திக் கொண்டிருந்தாள். அந்த அறைக்குள் யாரும் கவனிக்காமல் டெனைசாவ் வந்து சேர்ந்தார். அந்தக் காட்சியைக் கண்டு தமது கண்களைத் துடைத்துக் கொண்டார்.

'வாசைலி டெனைசாவ், உமது குமாரரின் நண்பர்' என்று தம்மைத் தாமே கோமகனுக்கு அறிமுகப்படுத்திக்கொண்டார். அச்சமயம் அவர் யார் என்பதைக் கேட்பதைப்போல கோமகன் அவரை பார்த்துக்கொண்டிருந்தார்.

'உம்மை மிகச் சந்தோஷமாக வரவேற்கிறோம். எனக்குத் தெரியும், எனக்குத் தெரியும்' என்று கோமகன் கூறி டெனைசாவை ஆலிங்கனம் செய்து முத்தமிட்டார்.

'நிக்கலஸ் எழுதியிருந்தார்...நட்டாஷா, வெரா, இங்கே பாருங்கள்... இவர்தான் டெனைசாவ்'

அதே சந்தோஷமும் பரவசமும் கொண்ட முகங்கள், கசங்கிய ஆடைகளோடு தோன்றிய டெனைசாவைப் பார்க்கத் திரும்பின.

'டெனைசாவ் கண்ணே' என்று நட்டாஷா பரவசத்தோடு கூச்சலிட்டு துள்ளிக் குதித்து அவரிடம் போய் அவரை கட்டிக் கொண்டு முத்தமிட்டாள். இந்தத் துணிச்சலான செய்கை ஒவ்வொருவரையும் குழம்பும்படி செய்தது. டெனைசாவும் நாணி முகம் சிவந்தார். ஆனால், புன்சிரிப்போடு நட்டாஷாவின் கையைப் பற்றி முத்தமிட்டார்.

டெனைசாவுக்குத் தயார் செய்து வைக்கப்பட்டிருந்த அறைக்கு அவரை அழைத்துச் சென்றார்கள். உட்காரும் அறையில் நிக்கலஸைச் சுற்றி வாஸ்கோ குடும்பத்தார்கள் கூடியிருந்தார்கள்.

வயோதிக சீமாட்டி அவருடைய கையை விடவில்லை. அவர் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு ஒவ்வொரு வினாடியும் அந்தக் கையை முத்தமிட்டுக்கொண்டிருந்தாள். மற்றவர்கள் அவரைச்சுற்றி கூடி நின்று, அவருடைய ஒவ்வொரு அசைப்பையும் வார்த்தையையும் பார்வையையும் கவனித்தார்கள். அவர் மீது ஆர்வம் கொண்டு பார்த்த கண்களை அவர்கள் எடுக்கவே இல்லை. அவருக்கப் பக்கத்தில் உட்காருவதற்காக அவருடைய தம்பியும் சகோதரியும் போராடி ஒருவருக்கொருவர் சண்டைபோட்டு அவருக்கு தேநீர், கைக்குட்டை, சுங்கான் ஆகியவைகளை யார்

கொண்டு வரவேண்டும் என்பது பற்றித் தகராறு செய்து கொண்டிருந்தார்கள்.

அவர்கள்காட்டிய அன்பைக் கண்டு ராஸ்டோவ் மிகுந்த மகிழ்ச்சி கொண்டார். ஆனால் அவருடைய முதல் சந்திப்பினால் ஏற்பட்ட சந்தோஷம் அதிகமாயிருந்தபடியால், இப்பொழுது அவர் அடையும் மகிழ்ச்சி போதாதுபோலவும், இன்னும் மேலும் மேலும் அதிகமாய் வேண்டுமென்றும் அவர் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

பிரயாணத்திற்குப் பின்னால் ஏற்பட்ட களைப்பினால்மறுநாள் காலை 10 மணி வரையில் பிரயாணிகள் தூங்கிக்கொண்டிருந்தார்கள்.

அவர்களுடைய படுக்கை அறைக்குப் பக்கத்தில் உள்ள அறையில் உடைவாள்களையும் வாள்களின் கூடுகளையும் பெட்டிகளையும் பூட்ஸுகளையும் இங்கும் அங்குமாகத் தள்ளும் சப்தங்கள் கேட்டன. நன்றாகச் சுத்தம் செய்யப்பட்ட இரண்டு ஜோடி பூட்ஸ்கள்(முள் சக்கரங்களோடு கூடியவை) சுவருக்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்தன. வேலைக்காரர்கள் ஜாடிகளையும், கும்பாக்களையும், க்ஷவரம் செய்வதற்கு வெந்நீரையும், நன்றாகச் சுத்தம் செய்யப்பட்ட உடைகளையும் கொண்டு வந்தார்கள். அந்த இடத்தில் ஆண்களின் வாசனையும், புகையிலையின் வாசனையும் கலந்து காணப்பட்டன.

'யார் அங்கே? விஷ்கா, எனது சுங்கானைக் கொண்டுவா. ராஸ்டோவ், எழுந்திரும்' என்று வாசைலி டெனைசாவின் கம்மிய குரல் கேட்டது.

தம்முடைய இமைகள் ஒன்றுடன் ஒன்று பொருந்தியிருந்ததைக் கசக்கிக்கொண்டும் தமது குலைந்த தலைமுடியை தடவிவிட்டுக் கொண்டும் வெது வெதுப்பான தலையணையிலிருந்து தலையை ராஸ்டோவ் உயர்த்தினார்.

'ஏன், நேரமாய்விட்டதா?'

'நேரமாய்விட்டதாவது? இப்பொழுது 10 மணி ஆகப்போகிறது' என்று நட்டாஷாவின் பதில் ஒலி கேட்டது. பக்கத்து அறையிலிருந்து பெண்களின் சிரிப்புக் குரல்கள், குசுகுசுப்புப் பேச்சுகளும், அவர்களின் ஆடைகளில் சலசலப்புச் சத்தங்களும் வந்துகொண்டிருந்தன. கதவு சிறிது திறக்கப்பட்டது. அந்த வழியாக ஏதோ நிலமாகவும், ரிப்பன்களும், கருப்புத் தலைமுடியும் மகிழ்ச்சி கொண்ட முகங்களும் காணப்பட்டன. அறையிலிருந்தவர்கள் எழுந்துவிட்டார்களா என்பதை அறிவதற்காக அங்கே நட்டாஷா, சோனியா, பெட்டியா ஆகியவர்கள் வந்திருந்தார்கள்.

'நிக்கலஸ், எழுந்திரு' என்று நட்டாஷாவின் குரல் மீண்டும் கதவுப் பக்கத்தில் கேட்டது.

'இதோ எழுந்துவிட்டேன்'

இதற்கிடையில் பக்கத்து அறையில் இருந்த உடைவாள்களை பெட்டியா கையில் எடுத்துக்கொண்டான். தனது அண்ணன் ஒரு ராணுவ அதிகாரியாய் இருப்பதைப் பார்ப்பதற்கு சிறுவர்கள் எவ்வளவு சந்தோஷமடைவார்களோ அதே சந்தோஷத்தோடு அவன் காணப்பட்டான். ஆண்கள் உடையணியாமலிருக்கும்போது அவர்களைப் பெண்கள் பார்க்கக்கூடாது என்பதை அவன் மறந்து படுக்கை அறைக் கதவைத் திறந்தான்.

'இது உம்முடைய பட்டாக்கத்தியா?' என்று அவன் கத்தினான்.

பெண்கள் ஒரு பக்கமாகக் குதித்து விலகினார்கள். டெனைசாவ் தமது ரோமம் நிறைந்த கால்களை ஒரு போர்வைக்குள் மறைத்துக்கொண்டார். பீதியுற்ற முகத்தோடு தமக்கு உதவிக்கு வரும்படி தமது தோழரைப் பார்த்தார். பெட்டியா உள்ளே வந்ததும் மீண்டும் கதவு சாத்திக்கொண்டது. ஆனால் சிரிப்புச் சப்தம் அதற்குப் பின்னால் இருந்து கேட்டது.

'நிக்கலஸ், உன்னுடைய கவுனைப் போட்டுக்கொண்டு வெளியே வா' என்று நட்டாஷா சொன்னாள்.

'இது உம்முடைய பட்டாக்கத்தியா? அது உம்முடையதா?' என்று முதலில் ராஸ்டோவையும் பின்னால் கருப்பு மீசை வைத்திருந்த டெனைசாவையும் பார்த்து பெட்டியா கேட்டான்.

அவசரமாகத் தமது கால்களில் செருப்பை மாட்டிக்கொண்டு கவுனை மேலே அணிந்துகொண்டு ராஸ்டோவ் வெளியே வந்தார். நட்டாஷா ஒரு முள்சக்கர ஜோட்டை ஒரு காலில் போட்டுக் கொண்டு மற்றொன்றில் மற்றொரு காலை நுழைத்துக் கொண்டிருந்தாள். அவர் வெளியே வரும்போது திடீரென்று ஒரு சுற்று சுற்றி தனது பாவாடையை பலூன் மாதிரி செய்து, கீழே உட்காருவதற்கு சோனியா முயற்சித்துக் கொண்டிருந்தாள். எல்லாரும் ஒரே மாதிரி வெளிறிய நீல நிறக் கவுன்களைப் போட்டுக்கொண்டிருந்தார்கள். எல்லாரும் ஆரோக்கியமாகவும், சிகப்பாகவும், பிரகாசமாகவும் இருந்தார்கள். சோனியா ஓடிவிட்டாள். நட்டாஷா தனது சகோதரரின் கையைப் பற்றி அவரை உட்காரும் அறைக்கு அழைத்துச் சென்று அங்கே உட்கார்ந்து பேச ஆரம்பித்தார்கள்.

பேசுவதற்கோ, ஆயிரக்கணக்கான சிறு விஷயங்களைப்பற்றி கேள்வி கேட்பதற்கோ, பதில் சொல்லுவதற்கோ ஒருவரை ஒருவர்

விடாமல் பேசிக்கொண்டேயிருந்தார்கள். அந்த விஷயங்களில் அவர்களைத் தவிர வேறு யாருக்கும் சிரத்தை கிடையாது. அவர் சொல்லுகிற ஒவ்வொரு வார்த்தைக்கும், தான் சொல்லுகிற ஒவ்வொரு வார்த்தைக்கும் இடையே நட்டாஷா ஒவ்வொரு சிரிப்பு சிரித்துக்கொண்டிருந்தாள். அவையெல்லாம் வேடிக்கையாய் இருக்கின்றன என்பதற்காக அவள் சிரிக்கவில்லை. ஆனால் அவள் மகிழ்ச்சியோடு இருப்பதாலும், அவளுடைய மகிழ்ச்சியை அடக்க முடியாமல் சிரிப்பினால் அதைக் காட்டியபடியாலும் அவள் சிரித்துக்கொண்டிருந்தாள்.

'ஓ, எவ்வளவு இனிமை, எவ்வளவு சிலாக்கியம்' என்று ஒவ்வொன்றைப் பற்றியும் அவள் சொல்லி வந்தாள்.

அந்த அன்பின் கதகப்பில் அகப்பட்டுக்கொண்டவரைப் போல ராஸ்டோவ் உணர்ந்தார். 18 மாதங்களுக்கு முன்னால் வீட்டை விட்டு அவர் கிளம்பிய பின்பு இதுவரை அவருடைய முகத்தில் காணாமல் இருந்த அந்த குழந்தைத்தனமான புன்சிரிப்பு, இப்பொழுது முதல் தடவையாகத் தோன்றி அவருடைய உள்ளத்தையும், முகத்தையும் பிரகாசமடையச் செய்தது.

'இல்லை, கொஞ்சம் கேள், இப்பொழுது நீ முற்றிலும் ஒரு ஆண்பிள்ளையாய் விட்டாய், இல்லையா? நீ என் சகோதரன் என்பதற்காக சந்தோஷமடைகிறேன்' 'நீங்கள் ஆண்களெல்லாரும் எப்படி இருக்கிறீர்கள் என்று நான் அறிய விரும்புகிறேன். எங்களைப்போலத்தான் நீங்களும் இருக்கிறீர்களா? இல்லையா?'

'சோனியா ஏன் ஓடிவிட்டாள்' என்று ராஸ்டோவ் கேட்டார்.

'ஹா, ஆமாம்... அது ஒரு பெரிய கதை. நீ அவளிடம் எந்த மாதிரி பேசப்போகிறாய்? நீ என்று சொல்லப்போகிறயா? நீங்கள் என்று சொல்லப்போகிறாயா?'

'அச்சமயம் எப்படி நேரிடுகிறதோ அப்படிப் பேசுவேன்' என்று ராஸ்டோவ் கூறினார்.

'இல்லை, தயவு செய்து நீங்கள் என்று பேச வேண்டும். அதையெல்லாம் பற்றி நான் இன்னொரு தடவை சொல்லுகிறேன். இல்லை, இப்பொழுதே சொல்லிவிடுகிறேன். சோனியா, எனது அன்பு நிறைந்த நண்பர் என்பது உனக்குத் தெரியும். அவளுக்காக என்னுடைய கையில் சூடு போட்டுக்கொண்டேன். அத்தகைய சிநேகிதி. இங்கே பார்'

அவள் தன்னுடைய மெல்லிய மிருதுவான கையின்மேல் மூடப் பட்டிருந்த மஸ்லின் கைச்சட்டையை முழுங்கைக்கு மேலாக இழுத்துக் காட்டினாள். அங்கே ஒரு சிகப்பு தழும்பு இருந்தது.

'எனக்கு அவளிடம் உள்ள அன்பைக் காட்டுவதற்காக, நான் இம்மாதிரி சூடு போட்டுக்கொண்டேன். ஒரு கம்பியை நெருப்பில் சுட வைத்து இங்கே இந்தக் கையில் அதை அமுக்கினேன்.'

அந்த அறை முன்னால் அவருடைய படிப்பு அறையாய் இருந்தது. அதில் இப்பொழுது சோபாவின் கைகளுக்கு தலையணையைப் போட்டு உட்கார்ந்து கொண்டு நட்டாஷாவின் கட்டுக்கடங்காத பிரகாசமான கண்களை அவர் பார்த்தார்.

குழந்தைப் பருவத்தை நினைப்பூட்டும் அந்த உலகத்திற்கு அவர் மீண்டும் நகர்ந்தார். மற்றவர்களுக்கு அதில் எதுவும் அர்த்தம் இருப்பதாகத் தெரியாது. ஆனால் அவருக்கு அவருடைய வாழ்க்கையிலேயே மிகுந்த இன்பங்களைக் கொடுத்தது. தம்முடைய அன்பை நிரூபிப்பதற்காக ஒரு கம்பியைக் காயவைத்து கையில் இழுத்துக்கொண்டதை புத்தியில்லாத வேலை என்று அவர் நினைக்கவில்லை. அதை அவர் புரிந்துகொண்டார். அதைக் கண்டு ஆச்சரியப்படவில்லை.

'சரி, எல்லாம் இவ்வளவுதானா?' என்று அவர் கேட்டார்.

'நாங்கள் அப்பேர்ப்பட்ட நண்பர்கள், அப்பேர்ப்பட்ட நண்பர்கள். அந்த சூடு போட்ட வேலை வெறும் அசட்டுத்தனம். என்றாலும் எப்பொழுதுமே நாங்கள் நண்பர்கள். அவள் யார் மீதாவது அன்புகொண்டால் ஆயுள் பூராவாக அதை விடுவதில்லை. எனக்கு அது புரியவில்லை. ஏனெனில் சீக்கிரமாக நான் மறந்து விடுவேன்'.

'சரி, அப்புறம் என்ன?'

'நல்லது. அவள் என்மீதும், உன்மீதும் அன்பு கொண்டிருக்கிறாள்'

நட்டாஷாவின் முகம் திடீரென்று சிவந்தது.

'ஏன், நீ போவதற்கு முன்பு உனக்கு ஞாபகம் இருக்கிறதா?... நல்லது, அவற்றையெல்லாம் நீ மறந்துவிட வேண்டுமென்று அவள் சொல்லுகிறாள்.. அவள் சொல்வதாவது ''நான் அவரை எப்பொழுதும் காதலிப்பேன். ஆனால் அவர் சுதந்திரமாய் இருக்கட்டும்'' அது எவ்வளவு இனிமையாய் இருக்கிறது. எவ்வளவு உதாரகுணமுள்ளதாய் இருக்கிறது. ஆம், சிறந்த உதாரண குணம், இல்லையா?'' என்று மிகுந்த கவலையோடும் பரபரப்போடும் அவள் கேட்டாள். அவள் இப்பொழுது பேசியவைகளைப் பற்றி முன்பே அவளோடு கண்ணீருடன் பேசியிருந்தாள் என்பது தெளிவாய்த் தெரிந்தது.

ராஸ்டோவ் சிந்தனையில் ஆழ்ந்தார்.

'எனது வார்த்தையிலிருந்து நான் புரளமாட்டேன். தவிர சோனியா மிகவும் அழகாய் இருக்கிறாள். அந்த இன்பத்தை ஒரு முட்டாள்தான் வேண்டாமென்று சொல்லுவான்'.

'இல்லை, இல்லை. அவளும் நானும் அதைப் பற்றி முன்பே பேசி விட்டோம். நீ இப்படிச் சொல்லுவாய் என்பது எங்களுக்கு முன்பே தெரியும். ஆனால் அது பிரயோசனமில்லை. ஏனென்றால், நீ அம்மாதிரி சொன்னால், உன்னுடைய வாக்குறுதியினால் நீ கட்டுப்பட்டிருப்பதாக நினைத்தால், அவள் தான் சொல்லுவதை உண்மை சிரத்தையோடு சொல்லவில்லை என்று தோன்றும். அதற்கு அர்த்தமென்னவென்றால் நீ அவரை திருணம் செய்தால் உனது வாக்குறுதிக்காக நீ கட்டாயம் செய்யவேண்டும் என்று செய்வதைப் போலவே இருக்கும். அதனால் பிரயோசனமில்லை.'

எல்லா விஷயங்களையும் அவர்கள் நன்றாக சிந்தனை செய்திருக்கிறார்கள் என்பதை ராஸ்டோவ் கண்டார். முதல் நாளன்று சோனியாவின் அழகைக் கண்டு அவர் பிரமித்தார். இன்று, அவள் உருவத்தை ஒரு சிறிய கடைக்கண் நோக்கினால் கண்டபோது அவள் இன்னமும் அதிக அழகாய் இருக்கிறாள் என்பது தெரிந்தது. அவள் 16 வயதான கவர்ச்சி கொண்டுள்ள ஒரு பெண். தம்மீது ஆர்வத்தோடு காதல் கொண்டிருக்கிறாள் என்பது வெளிப்படை. அதைப் பற்றி அவர் ஒரு வினாடி கூட சந்தேகிக்கவில்லை. அப்படியானால் அவர் ஏன் அவளைக் காதலிக்கக்கூடாது. ஏன் அவளை திருணம் செய்யக்கூடாது என்று ராஸ்டோவ் நினைத்தார். ஆனால் இப்பொழுது இன்னும் வேறு பலவித இன்பங்களும் பலவித காரியங்களும் அவருக்கு முன்பாக இருந்தன.

'ஆம், அவர்கள் புத்திசாலித்தனமாக முடிவு செய்திருக்கிறார்கள். நான் சுதந்திரமாய் இருக்கவேண்டும்' என்று அவர் நினைத்தார்.

'ரொம்பசரி, அது மிகவும் சிலாக்கியமானது. அதைப்பபற்றி நாம் பின்னால் பேசிக்கொள்ளுவோம். உன்னுடன் இருப்பதற்கு நான் எவ்வளவு சந்தோஷப்படுகிறேன் தெரியுமா? நல்லது, நீ இன்னமும் போரிஸிடம் உண்மையாக இருக்கிறாயா?' என்று கேட்டார்.

'ஓ, அது வெறும் அசட்டுத்தனம். அவரைப் பற்றி நான் நினைப்பதில்லை. வேறு யாரைப் பற்றியும் நினைப்பதில்லை. அம்மாதிரியான காரியங்கள் எதுவும் எனக்கு வேண்டியதில்லை' என்று நட்டாஷா சிரித்துக்கொண்டே கூச்சலிட்டாள்.

'அட கடவுளே, அப்படியானால் நீ என்ன செய்வதற்கு நினைத்திருக்கிறாய்?'

'இப்பொழுதா? நீ டுபார்ட்டை பார்த்திருக்கிறாயா?' என்று ஒரு மகிழ்ச்சிப் புன்னகை அவளுடைய முகத்தைப் பிரகாசமடையும் படிச் செய்ய நட்டாஷா பேசினாள்.

'இல்லை'

'டுபார்ட்டைப் பார்த்ததில்லையா? அவர் பிரபலமான நாட்டியக் காரராயிற்றே? அப்படியானால் உன்னால் ஒன்றையும் புரிந்து கொள்ள முடியாது. நான் அதைத்தான் இப்பொழுது செய்யப் போகிறேன்.

நட்டாஷா தன்னுடைய கைகளை வளைத்து நடனமாடுகிற வர்களைப் போல, தன்னுடைய பாவாடையை தூக்கிக்கொண்டு பின்னால் சில அடிகள் ஓடி, திடீரென்று திரும்பி முன்னால் ஒரு துள்ளு துள்ளிக்குதித்து தன்னுடைய சிறிய பாதங்களை ஒன்றாய்க்கூட்டி முன்பாதங்களினால் சில அடிகளை எடுத்து வைத்தாள்.

'இங்கே பார், நான் நிற்கிறேன். என்னைப் பார்' என்று அவள் சொல்லி முன்பாதத்திலேயே நிற்பதற்கு முயற்சித்தாள். ஆனால் அவளால் முடியவில்லை. 'இதை செய்யத்தான் நான் இப்பொழுது தயாராய் இருக்கிறேன். நான் ஒருவரையும் கல்யாணம் செய்து கொள்ளப்போவதில்லை. ஆனால் ஒரு நாட்டியக்காரியாக இருப்பேன். நீ இதை ஒருவரிடமும் சொல்லவேண்டாம்'.

ராஸ்டோவ் பலமாகவும் மகிழ்ச்சியோடும் சிரித்தார். படுக்கை அறையிலிருந்த டெனைசாவுக்கு இந்த மகிழ்ச்சியைக் குறித்து பொறாமை ஏற்பட்டது. நட்டாஷாவும் இந்த சிரிப்பில் கலந்து கொள்ளாமல் இருக்க முடியவில்லை.

'இல்லை, அது இனிமையாய் இருக்கிறதென்று நீர் நினைக்க வில்லையா?' என்று அவள் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

'இனிமைதான். ஆனால் நீ போரிஸை கல்யாணம் செய்து கொள்ளவில்லையா?'

நட்டாஷா கோபம் கொண்டாள். 'நான் யாரையும் திருமணம் செய்ய விரும்பவில்லை' அவரை நான் பார்க்கும்பொழுது அம்மாதிரியே சொல்லிவிடுவேன்'.

'அட கடவுளே' என்றார் ராஸ்டோவ்.

'ஆனால் அதெல்லாம் வெறும் குப்பை' என்று நட்டாஷா பேசிக்கொண்டே இருந்தாள். 'டெனைசாவ் இனிமையானவர் தானா?'

'ஆம், சந்தேகமில்லாமல்'

'ஓ, ரொம்ப சரி. நான் போய் வருகிறேன். நீர் போய் ஆடை அணிந்துகொள்ளும். அந்த டெனைசாவ் ரொம்ப சள்ளையான பேர்வழியா?'

'ஏன் சள்ளையென்று சொல்லுகிறாய்? இல்லை, அந்த வாஸ்கா ரொம்ப சிலாக்கியமான பேர்வழி' என்று நிக்கலஸ் பேசினார்.

'அவரை வாஸ்கா என்று நீ அழைக்கிறாயா? அது ரொம்ப வேடிக்கை. அவர் இனிமையானவர்தானா?'

'நிச்சயமாக'

'நல்லது, அப்படியானால் சீக்கிரமாய்ப் போம். நாம் எல்லாரும் ஒன்றாய் இருந்து சிற்றுண்டி அருந்துவோம்.

நட்டாஷா எழுந்து நடனக்காரியைப்போல முன் பாதத்தால் நடந்து 15 வயதான சந்தோஷமான பெண்கள் காட்டக்கூடிய விதத்தில் புன்முறுவல் கொண்டு அறையை விட்டு வெளியே போனாள். சோனியாவை வரவேற்பு அறையில் ராஸ்டோவ் சந்தித்ததும் அவர் முகம் சிவந்தது. அவளிடம் எப்படி நடந்து கொள்ளுவது என்பது அவருக்குத் தெரியவில்லை. முதல் நாள் மாலை முதலில் சந்தித்த அந்த சந்தோஷமான வினாடியில் இருவரும் ஒருவரை ஒருவர் முந்திக்கொண்டார்கள். ஆனால், இன்று அப்படிச் செய்ய முடியாது என்று அவர்கள் நினைத்தார்கள். அவருடைய தாயாரும், சகோதரியும் அவளிடம் அவர் எப்படி நடந்துகொள்ளுகிறார் என்பதை அறிவதற்காகக் கவனித்துக் கொண்டிருப்பதாக அவர் உணர்ந்தார். ஆகவே அவர் அவளுடைய கையை முத்தமிட்டார். அவளைப் பார்த்து நீ என்று பேசவில்லை. 'நீங்கள் சோனியா' என்றே பேசினார். அவர்களுடைய கண்கள் சந்தித்தன. 'நீ' என்று அவை சொல்லின. உள்ளங்கனிந்த முத்தங்களை அவை பறிமாறிக்கொண்டன. அவளுடைய நோக்குகள் நட்டஷாவை தூது அனுப்பியதற்காக அவளை மன்னிக்கும்படி அவரைக் கோருவதுபோல் இருந்தன. அவருடைய வாக்குறுதியை ஞாபக மூட்டியதற்காக மன்னிக்கும் படியும் அவர் கொண்டுள்ள காதலுக்காக நன்றி தெரிவிப்பது போலவும் என்றாலும் எந்த வழியிலாவது அவளைக் காதலிப்பதை விட்டுவிட முடியாதென்றும், அம்மாதிரி விடுவது சாத்திய மில்லையென்றும் சொல்லுவது போல அவருடைய பார்வையும் இருந்தது.

சந்தர்ப்பம் அறியாமல் எக்கச்சக்கமாகப் பேசி, ஒவ்வொரு வரையும் தர்மசங்கடமான நிலைமையில் வைக்கக்கூடிய

மாதிரியில், எப்பொழுதும் வெரா நடந்துகொள்வாள். எல்லாரும் மௌனமாய் இருந்த வேளையில் அவள் பேசியதாவது: 'இதென்ன விசித்திரமாய் இருக்கிறது! சோனியாவும், நிக்கலஸூம் ஒருவருக்கொருவர் நீங்கள் என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். அன்னியர்களைப் போல் நடந்துகொள்ளுகிறார்கள்.'

வெரா சொல்லியது அவள் எப்பொழுதும் சொல்லுவதைப் போலவே சரியாய் இருந்தது. ஆனால் அந்தப் பேச்சு சோனியாவையும் நிக்கலஸையும் மட்டும் அல்ல, நட்டாஷாவையும், வயோதிகக் கோமகளையும் தர்ம சங்கடமாய் உணரும்படி செய்தது. இந்தக் காதல் விவகாரம் நிக்கலஸின் பிரமாதமான கல்யாணத்திற்கு எங்கே இடையூறாய் இருக்குமோ என்று வயோதிகக் கோமகள் நினைத்தது உண்டு. ஆகவே, அவள் இதைக் கேட்டு ஒரு சிறு பெண்ணைப்போல நாணி முகம் சிவந்தாள்.

ராஸ்டோவ் ஆச்சரியப்படும் விதத்தில் டெனைசாவ் தமது தலைமுடியில் பொமொட்டைத் தடவி மேலே வாசனைப் பூசி, புது சீருடை அணிந்து, போர்க்களத்திற்கு போகும்போது எவ்வளவு முடுக்காய் இருப்பாரோ, அதே முடுக்கோடு வரவேற்பு அறையில்வந்து சேர்ந்தார். ராஸ்டோவ் எதிர்பார்க்காத விதத்தில் அவர் எப்பொழுதுமே கனவான்களிடமும், சீமாட்டிகளிடமும் மிகுந்த சுமுகமாய் பழகிக்கொண்டார்.



நிக்கலஸ் ராஸ்டோவ் ராணுவத்திலிருந்து மாஸ்கோவிற்குத் திரும்பிய பின்பு, அவருடைய வீட்டைச் சேர்ந்தவர்கள் அவரைத் தங்கள் புத்திரர்களில் சிறந்தவர் என்றும், ஒரு வீரரென்றும், தங்கள் கண்ணான நிக்கோலென்கா என்றும் கருதினார்கள். அவருடைய பந்துக்கள் அவரை ஒரு கவர்ச்சிகரமான மனோகரமான மரியாதையுள்ள வாலிபராக நினைத்தார்கள். அவருக்குப் பழக்கமானவர்கள் அவரை ஒரு அழகிய குதிரைப்படை லெப்டினனட் (உதவி கேப்டன்) அதிகாரி என்றும், நன்றாக நடனமாடக் கூடியவரென்றும், கல்யாணத்திற்குத் தகுந்த வாலிபர் என்றும் நினைத்தார்கள்.

மாஸ்கோவில் ஒவ்வொருவரையும் ராஸ்டோவ் குடும்பத்தார் அறிவார்கள். அந்த வருஷம் அவர்களுடைய எஸ்டேட்டுகளின் குத்தகைகளை மாற்றி அமைத்தபடியால் அவர்களுக்கு ஏராளமாய்

பணம் வந்தது. ஆகவே ஒரு அழகான குதிரையை தமக்காக நிக்கலஸ் வாங்கினார். மாஸ்கோவில் இன்னும் காணப்படாத புதிய மோஸ்தரில் ஒரு அழகான குதிரை சவாரிக் கால்சட்டையை தைத்துக் கொண்டார். பாத நுனியில் நீண்ட அமைப்பு கொண்ட புதிய மோஸ்தரான பூட்ஸ்களை அவர் வாங்கியிருந்தார். அவற்றில் வெள்ளியாலான தார்ச்சக்கரங்கள் அமைக்கப்பட்டிருந்தன. தமது பழைய வாழ்க்கைக்கு தம்மை மீண்டும் சரி செய்த பின்பு வீட்டில் இருப்பது அவருக்கு மிகுந்த இன்பமாய் இருந்தது. அவர் தாம் மிகவும் வளர்ந்து விட்டதாவும், பெரியவராய் விட்டதாகவும் நினைத்தார். பைபிள் பரீட்சையில் தோற்றுப் போனபோது முன்னால் அவர் அடைந்திருந்த அதைரியத்தையும் உறைபனி வண்டியின் சாரதிக்கு கொடுக்கவேண்டிய பணத்திற்காக காவ்ரில் என்பவரிடம் அவர் கடன் வாங்க நேரிட்டதையும் திருட்டுத்தனமாக சோனியாவை அவர் முத்தமிட்டதையும், அவர் இப்போது நினைத்தபோது, அவையெல்லாம் எப்பவோ நடந்த சிறுபிள்ளைத் தனமான காரியங்கள் என்று நினைத்தார். இப்பொழுது அவர் குதிரைப்படையின் லெப்டினன்ட் அதிகாரி; வெள்ளியினால் வேலைப்பாடுள்ள கோட்டு அணிந்துகொண்டிருப்பவர்; அதன் மீது வீரத்தனத்துக்காக கொடுக்கப்பட்ட செயின்ட் ஜார்ஜ் என்ற சிலுவைப் பதக்கத்தை அணிந்திருப்பவர். மாஸ்கோவில் பிரபலஸ்தர்களுடனும், வயோதிகர்களுடனும் மதிப்பு பெற்ற குதிரைப் பந்தயக்காரர்களுடனும் அவர் அளவளாவி, தம்முடைய குதிரையைப் பந்தயத்திற்காகத் தயார் செய்துகொண்டிருந்தார். சோலைகள் நிறைந்த ஒரு ரஸ்தாவில் அவருக்கு ஒரு சீமாட்டியைப் பழக்கமுண்டு. மாலை வேளைகளில் அவளைச் சந்தித்து வந்தார். ஆர்க்காராவ் நடனக் கச்சேரிகளில் மாஜுர்க்கா என்ற நடனத்தை செய்து வந்தார். பீலடு மார்ஷல் காமென்ஸ்கியுடன் யுத்தத்தைப் பற்றி பேச்சுவார்த்தைகள் நடத்துவார். இங்கிலீஷ் கிளப்பிற்கு அடிக்கடி போவார். 40 வயதுள்ள ஒரு கர்னலிடம் அவரை டெனைசாவ் அறிமுகப்படுத்தியிருந்தார். அவரொடு அடிக்கடி அன்னியோன்னியமாகப் பேசி வருவார்.

அவருக்கு சக்கரவர்த்தியின் மீதிருந்த ஆர்வம், அவர் மாஸ்கோவிற்கு வந்த பின்பு கொஞ்சம் குறைய ஆரம்பித்தது. அவரை அவர் பார்க்காமலிருந்த பொழுதிலும் பார்ப்பதற்கு சந்தர்ப்பங்கள் இல்லாமல் இருந்தபொழுதிலும் அடிக்கடி, அவரைப்பற்றியும் அவர் மீது தமக்குள்ள அன்பைப் பற்றயும் அவர் பேசி வந்தார். மற்றவர்கள் அறிந்துகொள்ள முடியாத ஒரு பிரியம் தமக்கு சக்கரவர்த்தியிடம் இருப்பதாகவும் சக்கரவர்த்தியைப் பற்றி

தமக்குத் தெரிந்ததைப் பூரா்வாக இன்னமும் சொல்லிவிட வில்லையென்றும் அவர் தெரிவித்து வந்தார். மாஸ்கோவில் அந்த சமயத்தில் தேவதையின் அவதாரமாக சக்கரவர்த்தி கருதப்பட்டு, புகழ்ந்து போற்றப்பட்டார். அதே அபிப்பிராயத்தையும் அதே பக்தியையும் அவர் மனப்பூர்வமாக கொண்டிருந்தார்.

மீண்டும் அவர் ராணுவத்தில் சேருவதற்கு முன்பு மாஸ்கோவில் தங்கியிருந்த சொற்ப காலத்தில் அவர் சோனியாவிடம் அதிகமாய் நெருங்கவில்லை: அவளிடமிருந்து விலகியே இருந்தார். அவள் மிகுந்த அழகாகவும் இனிமையாகவும் அவர் மீது ஆழ்ந்த காதல் கொண்டும் இருந்தபோதிலும், இம்மாதிரி காரியங்கட்கு நேரம் இல்லாதுபோன்ற ஒரு வாலிபப் பருவத்தை அடைந்திருந்த படியால், அவர் தம்மை இவ்விஷயங்களில் கட்டுப்படுத்தி தமது சுதந்திரத்தைப் பணயம் வைக்க விரும்பவில்லை. வேறு எவ்வளவோ காரியங்களைச் செய்யவேண்டுமென்று அவர் நினைத்திருந்தார். மாஸ்கோவில் இருந்த காலத்தில் அவர் சோனியாவைப்பற்றி நினைத்தபோது, 'ஹா, அவள் மாதிரி இன்னும் எத்தனையோ பெண்கள எங்கெல்லாமோ இருப்பார்கள். ஆனால், அவர்களைப்பற்றி இன்னும் எனக்குத் தெரியாது. காதலைப்பற்றி எப்பொழுது வேண்டுமென்று நான் நினைக் கிறேனோ, அப்பொழுது அதைப்பற்றி சிந்திப்பதற்கு அவகாசம் இருக்கும். ஆனால் இப்பொழுது எனக்கு அதற்கு அவகாசமில்லை, என்று அவர் தமக்குள் சொல்லிக்கொண்டார். தவிர தம்முடைய ஆண் தன்மைக்கு பெண்களின் சகவாசம் ரொம்பவும் மதிப்புக் குறைவானது என்று அவருக்குத் தோன்றியது. தம்முடைய விருப்பத்திற்கு மாறாகவே அவர் நடனங்களில் உயர்வட்டார சீமாட்டிகளுடன் கலந்துகொண்டார். குதிரைப் பந்தயங்கள், இங்கிலீஷ் கிளப், டெனைசாவுடன் சேர்ந்து குடிப்பது முதலிய கேளிக்கைகள், ஒரு குறிப்பிட்ட வீட்டிற்குப் போவது, இவைகளில் அவர் ஈடுபட்டிருந்தார். அந்த வீட்டிற்குப் போவதைப்பற்றி அவர் வித்தியாசமாக எதுவும் நினைக்கவில்லை. ஒரு வீரமுள்ள குதிரை வீரனுக்கு அது அவசியமானது என்று நினைத்தார்.

இளவரசர் பாக்ரேஷனுக்காக இங்கிலீஷ் கிளப்பில் ஒரு டின்னர் ஏற்பாடு செய்வதில், வயோதிகக் கோமகன் இலியா ராஸ்டோவ் மார்ச் மாத ஆரம்பத்தில் மிகுந்த சுறுசுறுப்பாய் இருந்தார்.

தம்முடைய உடை கவுனை அணிந்துகொண்டு அந்தக் கோமகன் கூடத்தில் மேலும் கீழும் நடந்துகொண்டிருந்தார். கிளப்பின் மேனேஜரிடமும் கிளப்பின் தலைமை சமையல்காரரான கோக்டிஸ்டுடனும் வெள்ளரிக்காய் ஸ்டராபெரி, ஹாஸ்பராக்ஸ்,

மீன் வகைகள் முதலியவற்றைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அந்தக் கிளப் ஏற்பட்ட காலத்திலிருந்தே அந்தக் கிளப்பிலும் கிளப்பின் கமிட்டியிலும் கோமகன் ஒரு அங்கத்தினர். பாக்ரேஷனை மரியாதை செய்வதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த அந்த விழாவின் வேலைகளை கோமகனிடமே கிளப் ஒப்படைத்திருந்தது. ஏனெனில் சிறந்த முறையில் ஒரு விருந்தை ஏற்பாடு செய்வது என்பது சிலருக்குத்தான் தெரியும். அதிலும் அம்மாதிரி விருந்துகளில் ஏதாவது பணம் பற்றாக்குறையாய் இருந்தால் தம் கையிலிருந்து அந்தப் பற்றாக்குறையை ஈடு செய்பவர்கள் மிகமிகச் சொற்பமாகவே இருப்பார்கள். அம்மாதிரி பேர்வழிகளில் கோமகனும் ஒருவர். கோமகன் சொல்லுவதை சந்தோஷமான முகங்களோடு பிரதம சமையல்காரனும், மேனேஜரும் கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஏனெனில் ஆயிரக் கணக்கான ரூபிள்களைச்செலவிட்டு நடத்தப்போகும் அந்த டின்னரை, கோமகனைத் தவிர வேறு யாராவது நடத்துவதாய் இருந்தால், அவ்வளவு சுலபமாக அவர்களுக்கு லாபம் கிடைக்காது என்பதை அறிவார்கள்.

‘ரொம்ப சரி, ஆனால் ஆமை சூப்பில் சேவல்களின் கொண்டைகளைப் போட மறந்துவிடாதீர்கள்’

‘குளிர்ச்சியான மூன்று பட்சணங்களுக்கு ஏற்பாடு செய்யலாமா?’ என்று சமையற்காரன் கேட்டான்.

இதைப்பற்றி சிறிது நேரம் கோமகன் சிந்தித்தார்.

‘ஆம், மூன்று பதார்த்தங்களுக்கு குறையக்கூடாது... மாயோநைஸ் என்பது ஒன்று’ என்று அவர் ஒரு விரலை மடக்கினார்.

‘அப்படியானால் அந்த பெரிய சுறாமீன்களுக்கு ஏற்பாடு செய்துவிடட்டுமா?’ என்று மேனேஜர் கேட்டார்.

‘ஆம், அவர்கள் விலையைக் குறைக்க முடியாது என்று சொன்னால் நாம் வேறு என்ன செய்ய முடியும்? அட கடவுளே நான் ஒரு விஷயத்தை மறந்துவிட்டேன். மற்றொரு வரவேற்பு வாசல் அமைப்பதற்கு நாம் ஏற்பாடு செய்யவேண்டும்’ என்று கூறி தமது தலையைப் பிடித்துக்கொண்டு, ‘எனக்கு யார் புஷ்பங்களைக் கொண்டு வந்து கொடுக்கப் போகிறார்கள்? டிமிட்ரி, ஏ டிமிட்ரி, நம்முடைய மாஸ்கோ எஸ்டேட்டுக்கு உடனே குதிரையில் ஏறிப் பாய்ந்து ஓடு. அங்கே மாக்ஸிம் என்ற தோட்டக்காரனிடம் சொல்லி உடனே அந்த அடிமைகளைக்கொண்டு, நம்முடைய செடிக் கூடத்திலுள்ள புஷ்பச் செடிகளையெல்லாம் நன்றாகக் கம்பளத் துணிகளில் கட்டி இங்கே கொண்டுவர ஏற்பாடு செய்.

வெள்ளிக்கிழமையன்று 200 செடித் தொட்டிகள் எனக்கு வந்தாக வேண்டும்'

இம்மாதிரி பல உத்தரவுகளை அவர் கொடுத்துவிட்டு தம்முடைய 'சிறிய கோமகளிடம்' சென்று சிறிது இளைப்பாறலா மென்று நினைத்தார். ஆனால் எதையோ முக்கியமான ஒன்றை நினைத்துக்கொண்டு மீண்டும் திரும்பினார். மறுபடியும் அந்தச் சமையல்காரனையும் மேனேஜரையும் வரவழைத்தார். மீண்டும் பல உத்தரவுகளைக் கூறத் தொடங்கினார். ஒரு மெல்லிய காலடி ஓசையும் தார்ச் சக்கரங்களின் சப்தமும் வாசலில்கேட்டது. வாலிப கோமகன் அழகாகவும் சிவந்த மேனியுடனும், சிறிய கருத்த மீசையுடனும், நன்றாக மாஸ்கோ வாழ்க்கையில் மகிழ்ந்து அனுபவித்தவரைப் போன்ற தோற்றத்தோடும் அறைக்குள் நுழைந்தார். படித்தவரைப் போன்ற தோற்றத்தோடும் அறைக்குள் நுழைந்தார்.

'ஹா, எனது பையனே, என்னுடைய தலை சுழல்கிறது' என்று அந்த வயோதிகர் ஒரு புன்முறுவலோடு மனங்குழம்பியவர் போன்ற தோற்றத்தைக் காட்டி சொன்னார்: 'நீ மட்டும் இப்பொழுது எனக்கு உதவி செய்வாயானால்? எனக்கு பாடகர்களும் வேண்டும். எனக்கு தனியாக ஆர்க்கஸ்ட்ராவும் வேண்டும். ஆனால் ஜிப்ஸி பாடகர்கள் வேண்டாமா? அம்மாதிரி பாட்டுகளைத்தானே ராணுவத்தைச் சேர்ந்த நீங்கள் எல்லாரும் விரும்புகிறீர்கள்?'

'ஷார்ன் கிராபெர்ன சண்டைக்கு முன்னால் இளவரசர் பாக்ரேஷன்கூட நீங்கள் இப்பொழுது படுகிற கவலையைப் போல பட்டிருக்கமாட்டார் என்று எனக்குத் தோன்றுகிறது, அப்பா' என அவருடைய குமாரர் புன்முறுவலோடு பேசினார்.

தாம் கோபமாய் இருப்பதைப் போல வயோதிகக் கோமகன் பாசாங்கு செய்தார்.

'ஆமாம், நீ பேசுவாய். நீ செய்து பார் தெரியும்'

ஒரு மரியாதையும் கவனமும் உள்ள தோற்றத்தோடும் கவனத்தோடும் ஆதரவோடும் தந்தையையும், குமாரரையும் பார்த்துக்கொண்டிருந்த அந்தச் சமையல்காரரை வயோதிகக் கோமகன் திரும்பிப் பார்த்தார்.

'இந்த வாலிபர்கள் எல்லாம் இக்காலத்தில் எம்மாதிரி ஆகிவிட்டார்கள் பார்த்தாயா போக்டிஸ்ட்? வயோதிகர்களாகிய நம்மைப் பார்த்து அவர்கள் சிரிக்கிறார்கள்' என்றார் அவர்.

'அப்படித்தான், மேன்மை தங்கியவரே. அவர்கள் செய்வ தெல்லாம் நல்ல டின்னராக சாப்பிட வேண்டியது ஒன்றுதான்.

ஆனால் அதற்கு ஏற்பாடு செய்வதோ அல்லது பறிமாறுவதற்கு வேண்டியகாரியங்கள் செய்வதோ அவர்களுடைய கடமை அல்ல.'

'அதுவேதான், அதுவேதான்' என்று கோமகன் கூச்சலிட்டு சந்தோஷமாக தமது இருகைகளாலும் குமாரனைப் பிடித்துக் கொண்டு, 'இப்பொழுது உன்னை நான் பிடித்துக்கொண்டேன். நீ உடனே உறைபனி வண்டியை எடுத்துக்கொண்டு பெஜுகாவ் வீட்டிற்குப்போய் அவரிடம் கொஞ்சம் ஸ்ட்ராபெரிகளையும் புதிய அன்னாசிப் பழங்களையும் நான் வாங்கி வரச்சொன்னதாகச் சொல்லு. அவைகளை இங்கே வேறெங்கும் பெற முடியாது. அவர் அங்கே இல்லாவிட்டால் நீ உள்ளே போய் இளவரசியைப் பார். அங்கிருந்து ராஸ்கல்யாய் இடம் நீ போ. வண்டிக்காரன் இப்பாட்காவுக்கு அந்த இடம் தெரியும். ஜிப்ஸி இல்லுஷ்காதான் கோமகன் ஆர்லோவ் வீட்டில் நடந்த விருந்தில் நடனமாடியவன். ஒரு வெள்ளை கோஸாக் சட்டையில் அவன் நடனமாடியது உனக்கு ஞாபகமிருக்கலாம். அவனை அழைத்து வா' என்றார்.

'அவனோடு ஜிப்ஸி பெண்களையும் நான் அழைத்து வரவேண்டுமா?' என்று சிரித்துக்கொண்டு நிக்கலஸ் கேட்டு 'ஐயோ, ஐயோ' என்று கூறினார்.

அதே வினாடியில் சப்தமில்லாத அடிகளால்நடந்து அதே மாதிரி காரியக்கார தோரணையில் எதையோ நினைத்துக்கொண்டிருப் பவளைப் போல, ஆனால் எப்பொழுதும் அவள் முகத்தை விட்டு அகலாத ஒரு பணிவான கிறிஸ்தவ தோற்றத்தோடு, அன்னா மிக்காய்லாவ்னா அந்த ஹாலில் நுழைந்தாள். உடை கவுனில் கோமகன் இருக்கும்போதே அவள் தினம் அவரைச் சந்திப்பது வழக்கம். ஆனால் அவளைப் பார்த்ததும் அவர் மனம் குழம்பி அந்த உடையோடு இருப்பதற்காகத் தம்மை மன்னிக்கும்படி அவர் கேட்பது வழக்கம்.

'அதைப் பற்றி ஒன்றும் இல்லை, என் அருமைக் கோமகனே' என்று அவள் சொல்லி பணிவோடு கண்களை மூடினாள். 'ஆனால் பெஜுகாவ் வீட்டிற்கு நானே போவேன். பீயர் வந்துவிட்டார். அவருடைய பூந்தோட்டத்திலுள்ள எதை வேண்டுமானாலும் நாம் வாங்கிக்கொள்ளலாம். எந்த விதத்திலும் நான் அவரைப் பார்த்தாக வேண்டும். போரிஸிடம் இருந்து வந்த கடிதம் ஒன்றை எனக்கு அவர் அனுப்பியிருக்கிறார். ராணுவப் பரிவரங்களில் ஒருவராக போரிஸ் நியமிக்கப்பட்டிருக்கிறார். அதற்காக கடவுளுக்கு நன்றி'.

தமது வேலைகளில் ஒன்றை செய்வதற்கு அன்னா மிக்காய்லாவ்னா பொறுப்பேற்றுக் கொண்டதற்காக கோமகன்

மகிழ்ச்சி கொண்டார். அவள் போவதற்காக சிறிய மூடு வண்டி ஒன்றை ஏற்பாடு செய்தார்.

'விருந்திற்கு வரும்படி பெஜுகாவிடம் சொல்லு. அவர் பெயரை நான் சேர்த்திருக்கிறேன். அவர் மனைவி அவருடன் இருக்கிறாளா?' என்று கேட்டார்.

அன்னா மகிக்காய்லாவ்னா தனது கண்களை மிகுந்த துக்கத்தோடு உயர்த்தினாள்.

'ஹா அருமையான நண்பரே, அவர் மிகுந்த துரதிருஷ்டம் கொண்டவர். நாம் கேள்விப்படுவது உண்மையானால் அது ஒரு பயங்கரமான விஷயம். அவருடைய சந்தோஷத்திற்காக நாம் மகிழ்ச்சியுற்றிருந்த காலத்தில், இம்மாதிரி ஒன்று நடக்கும் என்பதை நாம் கனவுகூடக் காணவில்லை. எவ்வளவு பெருமையான தேவதையைப் போன்ற சுபாவம் உள்ளவர் அந்த வாலிபர், பெஜுகாவ். ஆ என் மனப்பூர்வமாக நான் அவருக்காக அனுதாபம் காட்டுகிறேன். அவர் மனம் தேறுவதற்கு என்னால் என்ன செய்ய முடியுமோ அவ்வளவையும் செய்வேன்' என்று அவள் சொன்னாள்.

'என்ன, என்ன விஷயம்? என்று வாலிப ராஸ்டோவும், வயோதிக ராஸ்டோவும் கேட்டார்கள்.

அன்னா மிக்காய்லாவ்னா ஆழ்ந்த பெருமூச்சு விட்டாள்.

'மேரி ஐவானாவின் குமாரரான டோலாகாவ் அவளோடு உறவு வைத்துக் கொண்டிருப்பதாக சொல்லுகிறார்கள்' என்று ஒரு அதிசயமான குசுகுசுப்புத் தொனியில் சொன்னாள். 'அந்த டோலாகாவை பீயர்அழைத்தது தமது பீட்டர்ஸ்பர்க் வீட்டில் குடியிருக்கும்படி செய்தார். ஆனால் இப்பொழுது... அவள் இங்கே வந்திருக்கிறாள். அந்த எதற்கும் துணிந்த பிசாசும் அவளுக்குப் பின்னால் வந்திருக்கிறான்' என்று பீயருக்குத் தமது அனுதாபத்தைக் காட்ட விரும்பியவள் போல அன்னா மிக்காய்லாவ்னா பேசினாள். ஆனால் தன்னை அறியாமலேயே பேசிய அவளுடைய உச்சரிப்புகளினாலும், அவள் காட்டிய பாதி புன்னகையினாலும், அந்தத் துணிகரமான பிசாசு என்று அவளால் அழைக்கப்பட்ட டோலாகாவிடம் அவளுக்குள்ள அனுதாபத்தையும் காட்டி விட்டாள். 'இந்த துரதிருஷ்டத்தினால் பீயர் மிகவும் மனம் முறிந்து போனதாகச் சொல்லுகிறார்கள்'.

'ஐயோ, ஐயோ, என்றாலும் கிளப்பிற்கு வரும்படி அவரிடம் சொல்லு. இதெல்லாம் சீக்கிரம் தீர்ந்து போகும். நாம் நடத்தப் போகிற விருந்து மிகப் பிரம்மாண்டமானதாய் இருக்கும்'.

மறுநாளாகிய மார்ச் மாதம் 3-ம் தேதியன்று மத்தியானம் ஒருமணிக்குப் பின்னால் இங்கிலீஷ் கிளப்பைச் சேர்ந்த 250 உறுப்பினர்களும், 50 விருந்தாளிகளும் அன்று தாங்கள் கௌரவிக்கப்போகிற விருந்தாளியும், ஆஸ்திரியப் போராட்டத்தின் வீரருமான இளவரசர் பாக்ரேஷன் வருகைக்காகக் காத்திருந்தார்கள்.

ஆஸ்டர்லிட்ஜ் யுத்தத்தைப் பற்றிய செய்தியை முதலில் கேட்டதும் இன்னதென்று புரியாமல் மாஸ்கோ திகைத்தது. அச்சமயத்தில் வெற்றி ஒன்றையே பெறுவது ரஷ்யர்களுக்கு வழக்கமாய் இருந்தது. ஆகவே , அம்மாதிரித் தோல்வியை அவர்கள் கேட்டதும் அவர்களால் நம்ப முடியவில்லை. சிலர் இம்மாதரி அதிசயமாய் நடந்ததற்கு அசாதாரணமான காரணங்களைத் தேடிக் கொண்டிருந்தார்கள். பிரபலமானவர்களும், முக்கியமானவர்களும், விஷயங்களை அறிந்தவர்களும், அந்த கிளப்பில் கூடியுள்ளபோது டிசம்பர் மாதத்தில் அந்தச் செய்தி வந்தது. சதியாலோசனை செய்தது போல எல்லாரும் மவுனமாய் இருந்தார்கள். யுத்தத்தைப் பற்றியோ கடைசியாக நடந்த சண்டையைப் பற்றியோ அவர்கள் எதுவும் சொல்லவில்லை. உரையாடல்களில் கருத்துக்களை உருவாக்கக் கூடியவர்களான கோமகன் ராஸ்டாக்ஸின் இளவரசர் யூரி டால்காருகாவ், வாலாவ், கோமகன் மாக்காவ், இளவரசர் வியாஜெம்ஸ்கி ஆகியவர்கள் கிளப்பில் காணப்படவில்லை. அவர்கள் தனியாக தாங்கள் அன்னியோன்னியமாய் இருப்பவர் களோடு, அவர்களுடைய வீடுகளில் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். பிறரிடமிருந்து கருத்துக்களை அறிந்து தங்கள் கருத்துக்களை கூறிக்கொள்ளும் மாஸ்கோ வாசிகள்(அவர்களில் இலியா ராஸ்டோவும் ஒருவர்) யுத்தத்தைப் பற்றி எந்த விதமான கருத்தும் கொள்ளாமல் இருந்தார்கள். அவர்களுக்குத் தலைவர்களும் இல்லை.

ஏதோ ஒரு தவறு நடந்துவிட்டதாக மாஸ்கோ வாசிகள் உணர்ந்தார்கள். அந்தத் துக்கமான செய்தியைப் பற்றி பேசுவது கஷ்டமாய் இருந்தபடியால், மௌனமாய் இருப்பதே நல்லது என்று நினைத்தார்கள். ஆனால் சிறிது காலம் கழிந்த பின்பு, ஜூரிகள் ஆலோசனைக்குப் பின்னால், தங்களுடைய அறையை விட்டு வெளியே வருவதைப்போல அந்த கிளப்பில் கருத்துக்களை உருவாக்கக் கூடியவர்கள் மீண்டும் கிளப்பிற்குவந்தபடியால், ஒவ்வொருவரும் அந்தச் செய்தியைப் பற்றி தெளிவாகவும் முடிவாகவும் பேச ஆரம்பித்தார்கள். நம்ப முடியாத, இதுவரை கேள்விப்படாத, நடக்க முடியாத விஷயமான அந்த ருஷ்யத் தோல்விக்கான காரணங்களைக் கண்டு பிடித்தார்கள்.

ஒவ்வொன்றும் தெளிவாகிக் கொண்டு வருவதாகத் தோன்றியது. மாஸ்கோவின் மூலைகளிலெல்லாம் இதே பேச்சுகளைப் பேச ஆரம்பித்தார்கள். ஆஸ்திரியர்களின் துரோகம்; ஒருதிறமையற்ற யுத்தக் கவுன்ஸில்; போலந்துக்காரராகிய ப்ரிதஜ்பிஜெவ்ஸ்கி, பிரஞ்சுக்காரராகிய லாங்கரன் ஆகியவர்களுடைய துரோகம்; குட்டுஜோவின் தகுதியின்மை; வாலிப சக்கரவர்த்தியின் அனுபவமின்மை; அதனால் அவர் முக்கியமில்லாத உபயோக மில்லாத நபர்களை நம்பியது; இவையெல்லாம்தான் தோல்விக்குக் காரணங்கள் என்று அவர்கள் கண்டு பிடித்தார்கள். அதனால் இந்த ராணுவம் இருக்கிறதே இந்த ருஷ்ய ராணுவம், இது அசாதாரண மானதென்றும் ஆச்சரியப்படக்கூடிய விதத்தில் தங்கள் வீரத்தைக் காட்டியதாகவும் ஒவ்வொருவரும் சொல்லிவந்தார்கள். சிப்பாய்களும், அதிகாரிகளும், ஜெனரல் களும் வீரர்களாய் விளங்கினார்கள். வீரர்களிலெல்லாம் வீரராய் இளவரசர் பாக்ரேஷன் விளங்கினார். ஷார்ன் கிராபர்ன் சண்டையிலும் தம்முடைய படை சிதறிவிடாதபடி தாம் தனிமையாக ஆஸ்டர்லிட்ஜிலிருந்து படையைப் பின்வாங்கிய காரியத்திலும் இளவரசர் பாக்ரேஷன் தனிச் சிறப்போடு விளங்கினார். அவர் பின் வாங்கியபோது அவருடைய படையின் பலத்தில் இரண்டு மடங்கு அதிகமான பலங்கொண்ட எதிரிகளை விரட்டியடித்துக்கொண்டே வந்தார். மாஸ்கோவில் அவருக்கு எந்தவிதமான தொடர்பும் கிடையாது. அவர் அங்கே அறிமுகம் இல்லாதவர். மாஸ்கோவின் வீரராக அச்சமயம் அவரைத் தேர்ந்தெடுத்ததற்கு அதுவும் ஒரு காரணமாகும். அவருக்குக் காட்டிய மரியாதையில் அவர் ஒரு ருஷ்ய வீரர் என்ற முறையிலும், ராணுவத்தில் சூழ்ச்சிகளில் அவர் சம்பந்தப்பட்டாதவர் என்ற முறையிலும், சுவோராவுடன் இத்தாலியில் நடந்த போராட்டங்களில் அவர் சம்பந்தப்பட்டவர் என்ற முறையிலும் அவருக்கு மரியாதை காட்டப்பட்டது. மேலும், அம்மாதிரி பாக்ரேஷனுக்கு மரியாதை காட்டுவதன் மூலமாகத்தான் தங்களுடைய அதிருப்தியையும் ஆட்சேபணையையும் குட்டு ஜோவிடம் அவர்கள் காட்டமுடியும்.

'பாக்ரேஷன் அங்கு இல்லாமல் இருந்திருந்தால், பாக்ரேஷனை நாம் உற்பத்தி செய்ய வேண்டியதாய் இருக்கும்' என்று வால்டேர் கூறிய ஒரு பழமொழியை தமக்குச் சாதகமாகத் திருப்பி ஷின்ஷைன் என்பவர் வேடிக்கையாகப் பேசினார். குட்டுஜோவைப் பற்றி ஒருவரும் பேசவில்லை. அவரை ஒரு வயோதிகப் பிசாசு என்றும் மன்னர் சபையின் தலையாட்டி என்றும், சிலர் குசுகுசுப்பான குரலில் திட்டிக் கொண்டிருந்தார்கள்.

'இளவரசர் டால்காருகாவ் சொல்லிய வாக்கியத்தை மாஸ்கோ முழுவதும் திரும்பத் திரும்ப களிமண்ணைப் பிசைந்து பிசைந்து உருவத்தை மாற்றி மாற்றி அமைத்துக்கொண்டிருந்தால் நமது உடம்பெல்லாம் களிமண்ணாய்விடும்' என்று நமது தோல்விக்கு பரிகாரம் தேடுவதைப் போல, நமது முந்திய வெற்றிகளை எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ராஸ்டாப்சின் என்பவர் சொல்லிய 'உயர்ந்த பிரம்மாண்டமான வார்த்தைகளை உபயோகித்தால்தான் பிரஞ்சு சிப்பாய்களை சண்டைக்குக் கிளப்ப முடியும்.' பின்னால் போனால் ஆபத்து, முன்னேறுவதைத் தவிர வேறு வழியில்லை என்பதை ஜெர்மானியர்களுக்கு எடுத்துக்காட்டினால்தான் அவர்கள் யுத்தத்திற்குப் போவார்கள். ஆனால் ருஷ்ய சிப்பாய்களுக்கு இவையெல்லாம் அவசியமேயில்லை. அவர்கள் எப்பொழுதும் முன்னால் பாய்ந்துகொண்டிருப்பார்கள். அவர்களுடைய வேகத்தை தடுத்து நிறுத்திவைப்பது ஒன்றே அவசியமாய் இருக்கும், என்பவைகளையும் பேசிக்கொண்டிருந்தார்கள். ஆஸ்டர்லிட்ஜில் நமது வீரர்களும் அதிகாரிகளும் காட்டிய தீரங்களைப் பற்றிய கதைகள் எல்லாப் பக்கங்களிலும் சொல்லப்பட்டுக் கொண்டிருந்தன. ஒருவர் ஒரு கொடியைக் காப்பாற்றியதாகவும், மற்றொருவர் 5 பிரஞ்சுக்காரர்களைக் கொன்றுவிட்டதாகவும், மூன்றாமவர் 5 பீரங்கிகளுக்குத் தன்னந்தனியாக நின்று குண்டுகளைக் கெட்டித்ததாகவும் சொல்லிக் கொண்டார்கள். பெர்க்கைப் பற்றி அறியாதவர்கள் ஒரு கதை சொன்னார்கள். வலது கையில் அவர் காயமடைந்தபோது இடது கையில் வாள் ஏந்தி அவர் முன்னேறினாராம். பால்கோன்ஸ்கியைப் பற்றி ஒன்றும் சொல்லப் படவில்லை. அவரை நன்றாய் அறிந்தவர்கள் மட்டும் வாலிப வயதில், அவர் ஒரு கர்ப்பமான மனைவியை, ஒரு வெறிகொண்ட தகப்பனிடம் விட்டுவிட்டு இறந்து போனதற்காக மனப்பூர்வமாக வருந்தினார்கள்.

# 4
## 3

வஸந்த காலத்தில் ஈக்கள் ரீங்கரம் செய்வதைப்போல மார்ச் மாதம் 3-ம் தேதியன்று இங்கிலீஷ் கிளப்பில் எல்லா அறைகளிலும் உரையாடும் குரல்கள் நிறைந்திருந்தன. அந்தக் கிளப்பின் உறுப்பினர்களும், விருந்தாளிகளும் இங்கு மங்கும் போய்க் கொண்டு, உட்கார்ந்து, எழுந்திருந்து, சிலர் சந்திப்பதும், சிலர் பிரிந்து போவதுமாய் செய்து கொண்டிருந்தார்கள். சிலர் சீருடை அணிந்துகொண்டிருந்தார்கள்.

சிலர் மாலை உடைகள் அணிந்து கொண்டிருந்தார்கள். சிலர் பௌடர்போட்ட டோபாக்களை அணிந்துகொண்டு நீள ருஷ்ய கோட்டுகளையும் அணிந்து கொண்டிருந்தார்கள். பௌடர்போட்ட டவாலிச் சேவகர்கள் கால் உறைகளும், பொத்தான் போட்ட ஜோடுகளும் அணிந்து, ஒவ்வொரு வாசலிலும் நின்று அங்கு வந்தவர்களுக்குச் சேவை செய்வதற்காக, அவர்களுடைய அசைப்புளையே ஆவலாய் நோக்கிக்கொண்டிருந்தார்கள். அங்கு வந்திருந்தவர்களில் அநேகர், வயதான கௌரவம் நிறைந்தவர்களாய் இருந்தார்கள். அவர்களுடைய அகன்ற முகங்கள் சுயநம்பிக்கை யைக் காட்டின. அவர்களுடைய அசைப்புகளும் பேச்சுகளும் உறுதியைக் காட்டுவதாய் இருந்தன. இந்த வகுப்பைச் சேர்ந்த விருந்தாளிகள் தங்களுக்குப் பழக்கமாக குறிப்பிட்ட சிலரையே சந்தித்துப் பேசி வருவார்கள். அங்கிருந்தோர்களில் சிறுபான்மை யோர் ஏதோ சில சமயங்களில் மட்டும் வரக்கூடியவர்களாய் இருந்தார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் வாலிபர்கள். அவர்கள் கூட்டத்தைச் சேர்ந்த டெனைசாவும், ராஸ்டோவும், செமனாவ் பட்டாளத்தில் மீண்டும் அதிகாரியாய் உயர்த்தப்பட்ட டோலாகாவும் அங்கிருந் தார்கள். அங்கிருந்த வாலிபர்கள், முக்கியமாக ராணுவத்தில் சேவை செய்து வருகிறவர்கள், தங்களுடைய வயதில் மூத்த விருந்தாளிகளுக்கு தாங்கள் மரியாதை காட்டத் தயாராய் இருப்பதுபோல் தோன்றினார்கள். அனால், அந்தத் தோற்றத்தில் ‘உங்களுக்கு மரியாதை செய்து கௌரவப்படுத்த நாங்கள் தயாராய் இருக்கிறோம். ஆனால் எதிர்காலம் எங்களைச் சேர்ந்தது என்பதை மட்டும் நீங்கள் மறக்க வேண்டாம்’ என்று சொல்லுவது போல் இருந்தது.

அந்தக் கிளப்பில் பழைய உறுப்பினர் என்ற முறையில் நெஸ்வைட்ஸ்கி அங்கிருந்தார். தமது மனைவியின் விருப்பப்படி தமது தலைமுடியை நீளமாக பீயர் வளரவிட்டுக்கொண்டிருந்தார். அவள் விருப்பப்படி கண்ணாடி அணிவதையும் விட்டுவிட்டார். நாகரீகமாக உடையணிந்து அங்குள்ள அறைகளுக்கெல்லாம் போய் வந்துகொண்டிருந்தார். என்றாலும் அவருடைய பார்வை மந்தமாகவும், சோகமாகவும் இருந்தது. மற்ற இடங்களைப் போலவே இங்கேயும் அவருடைய பணத்திற்கு அடிமையாய் இருக்கும் சூழ்நிலை அவரைச் சுற்றியிருந்தது. அந்த பாவனையில் ஜனங்களிடம் ஆதிக்கம் செலுத்திப் பழக்கப்பட்டுவிட்டபடியால் அவர்களைப் பராக்கு மனத்தோடு துச்சமாய் நடத்தினார்.

வயதைப் பொறுத்தவரையில் வாலிபர் கூட்டத்தையே அவர் சேர்ந்திருக்க வேண்டும். ஆனால், அவருக்கிருந்த சொத்துக்

களினாலும் தொடர்புகளினாலும் அங்கிருந்த வயதான, கௌரவமிக்க விருந்தாளிகளின் கூட்டத்தை அவர் சேர்ந்தவரானார். ஆகவே, அங்கிருந்த கோஷ்டிகளில் ஒன்றன் பின் ஒன்றாக அவர் கலந்து கொண்டார். மிக முக்கியமான, வயதான கனவான்களில் சிலர் கோஷ்டிகளுக்கு நடுநாயகங்களாக விளங்கினார்கள். ஆகவே அறிமுகம் இல்லாதவர்கள் கூட அவர்களின் பேச்சுகளைக் கேட்பதற்கு மரியாதையோடு நெருங்கினார்கள். கோமகன் ராஸ்டாப்சின், வாலாவ், நாரிஷ்கின் ஆகியவர்களைச் சுற்றி கூடியிருந்த கோஷ்டிகள்தான் பெரியவைகளாய் இருந்தன. திரும்பி ஓடிய ஆஸ்திரியர்களால் ருஷ்யர்கள் எவ்வளவு கஷ்டப்படவேண்டி வந்தது என்பதையும், அவர்களை விலக்கித் தள்ளி முன்னேறுவதற்கு தங்களுடைய துப்பாக்கி, ஈட்டிகளையும் உபயோகிக்க வேண்டியிருந்த தென்பதையும் ராஸ்டாப்சின் அங்கே விளக்கிக் கொண்டிருந்தார்.

ஆஸ்டர்லிட்ஜைப் பற்றி மாஸ்கோ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறது என்பதை அறிந்து வருவதற்காக, உவராவ் அனுப்பப்பட்டிருப்பதாக ரொம்ப ரகிசயமாக வாலாவ் சொல்லிக்கொண்டிருந்தார்.

மூன்றாவது கோஷ்டியில் நாரிஷ்கின் என்பவர் பேசிக் கொண்டிருந்தார். ஆஸ்திரிய யுத்தக் கவுன்ஸிலில் ஆஸ்திரிய ஜெனரல்கள் பேசிய அசட்டுத்தனமான பேச்சுகளுக்கு பதில் செல்வதற்காக சுவோராவ் சேவலைப்போல எம்மாதிரி கொக்கரித்தார் என்பதை அவர் விளக்கிக் கொண்டிருந்தார். நெருங்கி நின்று கொண்டிருந்த ஷின்ஷைன் என்பவர் ஒரு தமாஷ் பேச்சு சொல்ல முயற்சித்தார் சுவோராவிடமிருந்து, சேவலைப்போல் எப்படி கொக்கரிப்பது என்ற இந்தச் சிறிய விஷயத்தைக்கூட குட்டுஜோவ் அறிந்துகொள்ளத் தவறிவிட்டார் என்று அவர் கூறினார். அந்த தினத்தில் அம்மாதிரி குட்டுஜோவைப் பற்றி பேசுவது, கொஞ்சங்கூட பொருத்தமல்ல என்பதைக் காட்டுவது போல, அங்கிருந்த வயோதிக விருந்தாளிகள் அந்தத் தமாஷைக் கடுமையுடன் நோக்கினார்கள்.

விருந்து மண்டபத்திற்கும் வரவேற்பு அறைகளுக்குமாக எதையோ யோசித்துக்கொண்டும் வேகமாகவும் கோமகன் இலியாராஸ்டோவ் போய்க்கொண்டிருந்தார். அம்மாதிரி போகிறபோது அங்கே வந்துகொண்டிருந்த முக்கியமானவும், முக்கியமில்லாதவுமான விருந்தாளிகளை அவர்கள் எல்லாரும் ஒரே சம அந்தஸ்துள்ளவர்கள் என்று மதிப்பதைப்போல அவசரமான வாழ்த்துக்கூறி வரவேற்றார். அவருடைய கண்கள் மட்டும்

இடைஇடையே அழகாய்க் காணப்பட்ட தமது இளைய குமாரனை நோக்கி சந்தோஷத்தோடு சிமிட்டிக்கொண்டிருந்தன. டோலாகாவுடன் ஒரு ஜன்னலுக்குப் பக்கத்தில் ராஸ்டோவ் நின்றுகொண்டிருந்தார். சமீப காலத்தில்தான் டோலாகாவுடன் அவருக்கு பழக்கம் ஏற்பட்டது. அந்தப் பழக்கத்தை மிகப் பெருமையாக அவர் கருதி வந்தார். வயோதிக கோமகன் அவர்களிடம் வந்து டோலாகாவின் கையைப்பற்றி அழுதினார்.

'தயவுசெய்து எங்கள் வீட்டிற்கு வரவேண்டும்... எனது தீரமுள்ள குமாரனை உமக்குத் தெரியுமே.. இருவரும் ஒன்றாக போர் முனையில் இருந்தீர்கள்... இருவர்களும் வீரர்களாய் விளங்கினீர்கள்... ஹா, வாசைலி இக்னாடாவிச்... நீர் சௌக்கியமாய் இருக்கிறீரா பழைய நண்பரே?' என்று அவர், அவ்வழியாக, அச்சமயம் போய்க்கொண்டிருந்த ஒருவயோதிகரைப் பார்த்து சொன்னார். ஆனால் அவருடைய வரவேற்பைக் கூறி முடிப்பதற்கு முன்பாக பொதுவாக அங்கு ஒரு பரபரப்பு ஏற்பட்டது. ஒரு சேவகன் பீதிகொண்ட முகத்தோடு உள்ளே ஓடிவந்து, 'அவர் வந்துவிட்டார்' என்று சொன்னார்.

மணிகள் ஒலித்தன. காரியஸ்தர்கள் முன்னால் ஓடி வந்தார்கள். ஒரு முறத்தில் தான்யத்தைக் கோதி எடுக்கும்போது பரந்து நின்ற தான்யங்கள் எப்படி ஒன்றாகக்கூடிக் குவியுமோ அதேமாதிரி வெவ்வேறு அறைகளில் பரந்து உட்கார்ந்திருந்த அந்த விருந்தாளிகள் வெளியே வந்துஅந்தப் பெரிய நடன அறை வழியாக மிகப் பெரிய வரவேற்பு அறைக்குள் வந்து நெருங்கிக் கூடினார்கள்.

வெளி அறையின் வாசலில் பாக்ரேஷன் தோன்றினார். அவரிடம் தொப்பியோ, உடைவாளோ இல்லை. அந்தக் கிளப்பின் சம்பிரதாயப்படி அவைகளை அங்கிருந்த சேவகனிடம் கழற்றிக் கொடுத்துவிட்டார். ஆட்டுக்குட்டி தோலினால் ஆகிய தொப்பியும் அவர் தலையில் இல்லை. ஆஸ்டர்லிட்ஜ் சண்டைக்கு முன்பாக அவருடைய தோளில் ராஸ்டோவ் கண்ட அந்தச் சவுக்கையும் காணவில்லை. உடம்போடு ஒட்டிய ஒரு புதிய சீருடையும் அணிந்து கொண்டிருந்தார். ருஷ்ய கௌரவச் சின்னங்களையும், வெளிநாடுகளின் கௌரவச் சின்னங்களையும், செயின்ட் ஜார்ஜின் நட்சத்திரம் என்ற பதக்கத்தையும் இடதுமார்பில் அணிந்து கொண்டிருந்தார். அன்று டின்னருக்கு வருவதற்கு முன்பாக தலைமுடியையும், கிர்தா மீசையையும் வெட்டிவிட்டுக் கொண்டிருந்தார். அதனால் அவருடைய தோற்றம் இன்னும் மோசமாக மாறியது. குழந்தைத்தனமான ஒரு உற்சாகம் அவர் தோற்றத்தில் காணப்பட்டது. அவருடைய உறுதியான, ஊக்கம்

நிறைந்த சாயல்களோடு இதுவும் சேர்ந்தபடியால் ஒரு கோமாளித் தனமான தோற்றத்தைக் கொடுத்தது. பெக்லெஷெவ், தியோடர் உவராவ் ஆகியவர்களும் அவரோடு வந்தார்கள். ஆகவே கௌரவமான விருந்தாளியான அவர் முதலில் கிளப்புக்குள் நுழையட்டும் என்ற எண்ணத்தோடு வாசலில் அவர்கள் விலகியிருந்தார்கள். அந்த மரியாதையை ஏற்றுக்கொள்ள பாக்ரேஷனுக்கு விருப்பம் இல்லாதபடியால் தர்மசங்கடமாய் இருந்தது. இதனால் உள்ளே நுழைவதில் சிறிது தாமதம் ஏற்பட்டது. கடைசியாக அவரே முதலில் சென்றார். மிகுந்த வெட்கத்துடனும், தர்மசங்டமான தோற்றத்துடனும், அந்த வரவேற்பு அறையில் மரத்தாலாகிய தளவரிசையில் நடந்து வந்தார். தம்முடைய கைகளால்என்ன செய்வது என்பது அவருக்குப் புரியவில்லை. குண்டுகளுக்கு அடியில் உழுத வயல்களில் நடந்துதான் அவருக்கு அதிகமாகப் பழக்கமுண்டு. ஷார்ன் கிராபர்னில்குருஸ்க் பட்டாளத்தின் தலைமையில் அப்படித்தான் நடந்து சென்றார். அம்மாதிரி நடந்து போவது அவருக்கு சுலபமாய் இருந்திருக்கும். முதல் வாசலில் கமிட்டி அங்கத்தினர்கள் அவரை சந்தித்தார்கள். இவ்வளவு உயர்ந்த கௌரவமான விருந்தாளியை பார்ப்பதற்காக தங்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். அவருடைய பதிலை எதிர்பாராமல்அவரை சூழ்ந்து நின்று வரவேற்பு அறைக்கு அழைத்து வந்தார்கள். வரவேற்பு அறைக்குள் நுழைவது முதலில் கஷ்டமானதாய் தோன்றியது. ஏனெனில் அங்கத்தினர்களும் விருந்தாளிகளும் ஒருவரை ஒருவர் நெருங்கிக்கொண்டு, ஒருவர் பின்னாலிருந்து இன்னொருவர் பாக்ரேஷனை நன்றாகப் பார்ப்பதற்கு முயற்சித்துக் கொண்டிருந்தார்கள். ஏதோ ஒரு அபூர்வமான மிருகத்தைப் பார்ப்பதைப்போல அவர்கள் ஆவல் கொண்டார்கள். கோமகன் இலியா ராஸ்டோவ் சிரித்துக்கொண்டே, ‘வழிவிடுங்கள், எனது அன்பானவர்களே, வழிவிடுங்கள்’ என்று சொல்லிக்கொண்டே வேறு யாரையும்விட அதிக உற்சாகத்தோடு, அந்தக் கூட்டத்தைத் தள்ளி வரவேற்பு அறைக்குள் விருந்தாளிகளை அழைத்துச் சென்று, அங்கு மத்தியில் கிடந்த சோபாவில் அமர்த்தினார். பெரிய தலைகளும், மிகுந்த மதிப்புள்ள அங்கத்தினர்களும் புதிதாக வருகிறவர்களுக்கு இடஞ்சலாய் நின்றார்கள். கோமகன் இலியா மீண்டும் அந்தக் கூட்டத்தின் வழியாக நுழைந்து வரவேற்பு அறையைவிட்டு வெளியே சென்று ஒரு நிமிடம் கழித்து மற்றொரு கமிட்டி அங்கத்தினரோடு உள்ளே வந்தார். அவர் வரும்போது ஒரு பெரிய வெள்ளித் தட்டைக் கொண்டு வந்தார். அதை இளவரசர் பாக்ரேஷனுக்கு பரிசாக

அளித்தார். அந்தத் தட்டில் இந்த வீரருக்கு மரியாதை காட்டும் பெருட்டு புதிதாய்க் கட்டப்பட்ட சில கவிகள் அச்சடிக்கப்பட்டு வைக்கப்பட்டிருந்தன. அந்த தட்டை பாக்ரேஷன் பார்த்ததும் தைரியத்தோடு எதையோ உதவிக்கு எதிர்பார்ப்பவரைப்போல சுற்றிலும் நோட்டமிட்டார். ஆனால் அந்தத் தட்டை வாங்கித்தான் ஆகவேண்டும் என்று சொல்லுவது போல எல்லாருடைய கண்களும் தோன்றின. அவர்களுடைய ஆதிக்கத்தில் தாம் இருப்பதைப்போல உணர்ந்து அவர் இரு கைகளாலும் அந்தத் தட்டை வாங்கினார். ஆனால், கடுமையாகவும் கண்டிப்போடும் அந்தத் தட்டைக்கொடுத்த கோமகனை அவர் பார்த்தார். பாக்ரேஷனுக்கு சிரமத்தைக் குறைப்பதற்காக அவர் கையில் வைத்திருந்த தட்டை அவரிடமிருந்து மற்றொருவர் வாங்கிக்கொண்டார். அப்படிச் செய்யவில்லையென்றால் அன்று மாலை வரையில் அந்தத் தட்டை அவரே கையில் வைத்திருந்து டின்னருக்கு போகும்போது கூட அதை கையில் எடுத்துக்கொண்டு போவார் என்று தோன்றியது. அந்தத் தட்டில் காணப்பட்ட கவிகளை அவர் பாக்ரேஷனுக்கு சுட்டிக் காட்டினார். 'நல்லது, அப்படியானால் அவைகளை நானே வாசிக்கிறேன்' என்று பாக்ரேஷன் சொல்லுவதைப் போல தமது களைப்பான கண்களை அந்தக் காகிதத்தின் மீது விரித்து நோக்கினார். ஒரு கடுமையான தோற்றத்தோடு அந்தக் கவிகளை அவர் வாசிக்க ஆரம்பித்தார். ஆனால் அந்தக் கவிகளைக் கட்டியவர், தாமே அவைகளைக் கையில் எடுத்து உரத்த சப்தத்தில் வாசிக்க ஆரம்பித்தார். இதைக் கேட்டு பாக்ரேஷன் தலையைத் தொங்கவிட்டு கவனித்துக்கொண்டிருந்தார்.

'அலெக்ஜாண்டரின் ஆட்சிக்கு புகழைத் தேடுங்கள்; நீர் ஒரு பயங்கரமான எதிரியாக எதிரிகளுக்குத் தோன்றினாலும் மனிதர் என்ற முறையில் அன்பான உள்ளங்கொண்டவர். வீட்டில் மிக இனியவராகவும் யுத்த களத்தில் சிங்கமாகவும் தோன்றுகிறீர். அதிருஷ்டமுள்ள நெப்போலியன்கூட பாக்ரேஷனை இப்பொழுது தமது அனுபவத்தினால் அறிந்து கொண்டார். மகாப் பெரிய வீரர்களான ருஷ்யர்களை தொந்தரவு செய்ய அவர் துணிய மாட்டார்'.

ஆனால் அவர் வாசிப்பு முடிவதற்கு முன்பாக, பிரதானக் காரியஸ்தரான மேஜர் டோமோ அங்கு தோன்றி ஒரு கட்டியக்காரனின் குரலில், 'டின்னர் தயாராயிற்று' என்று அறிவித்தார். கதவைத் திறந்ததும் விருந்து மண்டபத்திலிருந்து பாலோனைஸ் சங்கீதம் வந்து கொண்டிருந்தது. அதாவது:-

'வெற்றியின் மகிழ்ச்சியான பேரிடி விழித்தது.

வெற்றி, வெற்றி, வீர ருஷ்யர்களே, இப்பொழுது வெற்றி.'

கவிகளை வாசித்துக்கொண்டிருந்த கவிராயரை கோபமாக இளவரசர் ராஸ்டோவ் நோக்கிவிட்டு பாக்ரேஷனைப் பார்த்து தலை குனிந்தார். கவிகளைவிட விருந்தே மிகவும் முக்கியமானது என்று ஒவ்வொருவரும் நினைத்ததைப்போல எல்லாரும் எழுந்தார்கள். எல்லாருக்கும் முன்பாக பாக்ரேஷன் போனார். அலெக்ஜாண்டர் பெக்லெஷெவ், அலெக்ஜாண்டர் நாரிஷ்கின் ஆகிய சக்கரவர்த்தி யின் பேர்களைக்கொண்ட அந்த இருவருக்கும் மத்தியில் கௌரவமான ஸ்தானத்தில் பாக்ரேஷன் அமர்ந்தார். ஒவ்வொரு வரும் தங்களுடைய அந்தஸ்துக்கும், முக்கியத்துவத்துக்கும் பொருத்தமான ஸ்தானங்களில் அந்த 300 பேரும் அமர்ந்தார்கள். பூமி தணிவாய் இருக்கிற இடத்தில் எப்படி தண்ணீர் ஆழமாய் இருக்குமோ, அதேமாதிரி மிகுந்த கௌரவமான முக்கியமான விருந்தாளிகள் எல்லாரும் அவருக்குச் சமீபமாக அமர்ந்தார்கள்.

விருந்துக்கு முன்பாக கோமகன் இலியா ராஸ்டோவ் தமது குமாரரை பாக்ரேஷனுக்கு அறிமுகப் படுத்தினார். அவர் உடனே அடையாளம் தெரிந்துகொண்டு அவருடன் சில வார்த்தைகள் பேசினார். ஆனால் அந்த வார்த்தைகள் தொடர்ச்சியற்றவையாகவும் விகாரமாகவும், அன்று அங்கு அவர் பேசிய வார்த்தைகளைப் போலவே சுத்த அர்த்தமற்றவைகளாகவும் காணப்பட்டன. பாக்ரேஷன் தமது குமாரரோடு பேசிக்கொண்டிருந்தபோது, கோமகன் இலியா மிகுந்த மகிழ்ச்சியோடு அங்கிருந்தவர்களைச் சுற்றிப் பார்த்து பெருமை கொண்டார்.

நிக்கலஸ் ராஸ்டோவும், டெனைசாவும், அவர்களுடைய புது நண்பரான டோலாகாவும், அநேகமாக மேசையின் மத்தியில் அமர்ந்தார்கள். அவர்களுக்கு எதிராக பீயரும், அவருக்குப் பக்கத்தில் இளவரசர் நெஸ்வைட்ஸ்கியும் அமர்ந்திருந்தார்கள். கோமகன் இலியா ராஸ்டோவும், கமிட்டியைச் சேர்ந்த மற்ற உறுப்பினர்களும், பாக்ரேஷனுக்கு எதிராக அமர்ந்திருந்தார்கள். மாஸ்கோவின் உபசாரங்களெல்லாம் உருவெடுத்து வந்ததைப்போலத் தோன்றி பாக்ரேஷனுக்கு மரியாதைகள் செய்தார்.

அவருடைய முயற்சிகள் வீண் போகவில்லை. அந்த இரண்டு வகையான டின்னர்களும் மிகப் பிரமாதமாய் இருந்தன. ஈஸ்டர் ஞாயிறுக்கு முன்பாக 40 நாட்கள் விரதம் இருப்பவர்களுக்காக தயாரிக்கப்பட்ட மீன் வகைகள் மட்டும் கலந்த டின்னர் ஒரு வகை. மற்றவர்களுக்கு எல்லாம் கலந்த டின்னர் மற்றொரு வகை. சாப்பாடு

நடந்து முடிகிற வரையில் சாப்பாட்டின் உயர்வு நன்றாயிருக்க வேண்டுமென்பதிலேயே அவர் கவலை கொண்டிருந்தார். பட்லரைப்பார்த்து கண்ணால் பேசுவதும், சேவகர்களிடம் குசுகுசுப்பாக உத்தரவிடுவதுமாய் இருந்தார். ஒவ்வொரு பதார்த்தம் வரும்போதும் அது எப்படியிருக்குமோ என்ற ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பார். ஒவ்வொன்றும் மிகச் சிலாக்கியமாகவேயிருந்தன. இரண்டாவது பதார்த்தம் வரும்போது ஒரு பிரம்மாண்டமான சுறாமீன் கொண்டு வரப்பட்டது. அதைப் பார்த்ததும் மகிழ்ச்சி அடைந்து ராஸ்டோவ் நாணங்கொண்டு முகம் சிவந்தார். ஷாம்பைன் புட்டிகளில் உள்ள கார்க்குகளை வெளியே எடுத்து சேவகர்கள் கோப்பைகளில் ஊற்றினார்கள். அந்த மீன் கறி மிகுந்த பரபரப்பைக் கொடுத்தது. அதனால் கோமகன் மற்ற கமிட்டி உறுப்பினர்களைப் பார்த்து கண்களால் பேசினார்.

'எத்தனையோ வாழ்த்துகள் கூற வேண்டியிருக்கும். ஆகையால் இப்பொழுதே ஆரம்பிப்பது நல்லது' என்று அவர் மெதுவாய்ச் சொல்லிவிட்டு, தமது கோப்பையைக் கையில் எடுத்துக்கொண்டு எழுந்தார். அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதைக் கேட்பதற்காக எல்லாரும் கவனமாய் இருந்தார்கள்.

'நமது மன்னரும், சக்கரவர்த்தியுமானவருடைய ஆரோக்கியத் திற்காக' என்று அவர் கோஷித்தார். அவருடைய கண்களில் மகிழ்ச்சிக் கண்ணீர் நிறைந்தது. உடனே அங்கிருந்த பாண்டு 'வெற்றியின் மகிழ்ச்சியான பேரிடி விழித்தது' என்ற மெட்டை முழங்கியது.

எல்லாரும் எழுந்து நின்று ஜே கோஷம் போட்டார்கள். பாக்ரேஷனும் எழுந்தார். ஷார்ன் கிராபர்ன் போர்க்களத்தில் எம்மாதிரி தொனியில் அவர் ஜே கோபம் போட்டாரோ, அதேமாதிரி இப்பொழுதும் ஜே கோஷம் செய்தார். வாலிப ராஸ்டோவின் மகிழ்ச்சிப் பொங்கிய குரல் இந்த 300 பேர்களின் குரலுக்கு மேலாகக் கேட்டது. அவர் அநேகமாய் அழுதுவிட்டார். 'நம்முடைய மன்னரும் சக்கரவர்த்தியுமானவருடைய ஆரோக்கியத்திற்காக' என்று அவர் கர்ஜித்தார். ஜே கோஷம் கேட்டதும் ஒரே மடக்கில் தமது கோப்பையிலிருந்ததைக் குடித்துவிட்டு கோப்பையைத் தரையில் வீசினார். இதே உதாரணத்தை பலர் பின்பற்றினர். அந்தப் பலமான கூச்சல்கள் வெகுநேரம் வரை கேட்டுக்கொண்டிருந்தன. குரல்கள் குறைந்தபின்பு சேவகர்கள் அங்கே வந்து உடைந்த கண்ணாடித் துண்டுகளை அப்புறப்படுத்தினார்கள். பின்னால் ஒவ்வொருவரும் மறுபடியும் அமர்ந்து தாங்கள் செய்த கோஷத்திற்காக புன்சிரிப்பு கொண்டு ஒருவருக்கொருவர்

பேசிக்கொண்டார்கள். அந்த வயோதிகக் கோமகன் மீண்டும் ஒருமுறை எழுந்து தமது தட்டிற்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த ஒரு குறிப்பை பார்த்துவிட்டு, மற்றொரு வாழ்த்து கூற ஆரம்பித்தார். 'கடந்த படை எடுப்பில் வீரராக விளங்கிய இளவரசர் பீட்டர் ஐவானாவிச் பாக்ரேஷனின் ஆரோக்கியத்திற்காக' என்று கோஷித்தார். மறுபடியும் அவருடைய கண்கள் கண்ணீரால் மங்கின. அந்த 300 குரல்களும் ஜே என்று மறுபடியும் கோஷமிட்டன. ஆனால் பாண்டு வாத்தியத்திற்குப் பதிலாக பால் ஐவானாவிச் குட்டுஜோவ் என்பவரால் கட்டப்பட்ட ஒரு பாட்டை கோஷ்டி கானமாகப் பாட ஆரம்பித்தார்கள். அதாவது:-

'ருஷ்யர்களே, தடைகளையெல்லாம் தாண்டுங்கள்; ஏனென்றால், வீரம் ஒன்றே வெற்றியைக் கொடுக்கும். நமக்கு பாக்ரேஷன் இல்லையா? எதிரிகளை முழங்கால்படியிடும்படி அவர் செய்வார்.'

பாட்டு முடிந்ததும் ஒவ்வாருவரும் ஒவ்வொருவருடைய ஆரோக்கியத்திற்காக வாழ்த்துக் கூற ஆரம்பித்தார்கள். கோமகன் இலியா ராஸ்டோவின் உற்சாகம் வரவர அதிகமாயிற்று. அநேக கண்ணாடிக் கோப்பைகள் உடைக்கப்பட்டன. சப்தங்களும் வரவர அதிகமாயின. பெக்லெஷெவ், நாரிஷ்கின், உவராவ், டால்காருகாவ், அப்ராக்சின், வாலாவ் ஆகியவர்களின் ஆரோக்கியத்திற்காகவும் கமிட்டியினுடையவும், எல்லா கிளப் உறுப்பினர்களுடையவும், கிளப்பின் எல்லா விருந்தாளிகளினுடை யவும் ஆரோக்கியத்திற்காக வாழ்த்துகள் கூறிவிட்டு, கடைசியாகக் கோமகன் இலியா ராஸ்டோவின் ஆரோக்கியத்திற்காகவும், அந்த விருந்தை ஏற்பாடு செய்தவர் என்பதற்காகவும் வாழ்த்து கூறப்பட்டது. அந்த வாழ்த்தின்போது அவர் தமது கைக்குட்டையை எடுத்து முகத்தை மறைத்துக்கொண்டு நிஜமாக அழுதேவிட்டார்.

## 4

### 4

டோலாகாவுக்கும் நிக்கலஸ் ராஸ்டோவுக்கும் எதிராக பீயர் அமர்ந்திருந்தார். வழக்கம்போல ஆவலோடு அதிகமாக உணவு அருந்தி மதுவும் சாப்பிட்டார். ஆனால் அவரை நெருங்கி அறிந்தவர்கள் அவரிடம் ஏதோ ஒரு பெரிய மாறுதல் அன்று ஏற்பட்டிருப்பதாகக் கண்டார்கள். டின்னர் முடியும் வரையில் அவர் பேசாமல் மௌனமாய் இருந்தார். சுற்றிப் பார்ப்பதும், விழிப்பதும்

இருந்தார். அல்லது வெறித்த கண்களோடு, பராக்கு புத்தியில் எதையோ பார்த்துக்கொண்டு மூக்கின் தண்டை தடவிக் கொண்டிருந்தார். அவருடைய முகம் அயர்வும் கவலையும் நிறைந்திருந்தது. தம்மைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதை அவர் பார்ப்பதாகவோ, கேட்பதாகவோ தெரியவில்லை. ஏதோ ஒரு மனதிற்குக் கஷ்டமான, இன்னமும் முடிவு பெறாத ஒரு பிரச்னையில் அவர் கவனம் இழுக்கப்பட்டிப்பதாகத் தோன்றியது.

அவரை வருத்தி வந்த அந்தத் தீர்க்கப்படாத பிரச்னை, அவருக்கு அவருடைய மைத்துனி இளவரசி மாஸ்கோவில் சொல்லிய சில குறிப்புகளிலிருந்து தோன்றியது. தமது மனைவியிடம் டோலாகாவ் அன்னியோன்னியமாக பழகுவதாக அவருக்குச் சொல்லப்பட்டது. அவருக்கு அன்று காலையில் கிடைத்த ஒரு அநாமதேயக் கடிதத்தில் அநாமதேயக் கடிதங்களுக்கே இயல்பான வேடிக்கையான விதத்தில் இந்த விஷயம் சொல்லப்பட்டிருந்தது. அதாவது: அவர் தமது கண்ணாடிகளின் வழியாக சரியாகப் பார்க்க முடியவில்லை யென்றும், டோலாகாவுடன் அவருடைய மனைவி கொண்டுள்ள சம்பந்தம், அவர் ஒருவரைத் தவிர வேறு யாருக்கும் அது ஒரு ரகசியமாய் இல்லையென்றும் அதில் சொல்லப்பட்டிருந்தது... இளவரசியின் குறிப்புகளையோ, அந்தக் கடிதத்தையோ பீயர் முற்றிலும் நம்பவில்லை. ஆனால் தமக்கு எதிராக அப்பொழுது உட்கார்ந்திருந்த டோலாகாவைப் பார்ப்பதற்கு அவர் பயந்தார். ஒவ்வொரு தடவையும் டோலாகாவின் அழகிய அகம்பாவமான கண்களைப் பார்க்க நேர்ந்தபோதெல்லாம், ஏதோ ஒரு பயங்கரமான பூதாகரமான ஒன்று அவருடைய ஆத்மாவில் கிளம்புவதாக அவருக்குத் தோன்றியது. உடனே அவர் வேறு பக்கம் திரும்பிக் கொள்வார். தம்மை அறியாமலேயே தமது மனைவியின் கடந்த காலத்தைப் பற்றியும், டோலாகாவுடன் அவளுடைய தொடர்பைப் பற்றியும் அவர் நினைவுக்கு வந்தபோது, தமது மனைவியைப் பற்றி அந்தக் கடிதம் குறிப்பிடாமல் இருந்திருந்தால் அந்தக் கடித்தில் எழுதப்பட்டிருந்தது உண்மையாய் இருக்குமென்றும் அல்லது உண்மையாகவாவது தோன்றும் என்றும் பீயருக்குத் தெளிவாய்த் தெரிந்தது. கடைசியாக நடந்த அந்த சண்டைக்குப் பின்னால் டோலாகாவ் தமது பழைய பதவிக்கு மீண்டும் அமர்த்தப்பட்ட பின்பு அவர் பீட்டர்ஸ்பர்க் நகரத்திற்கு திரும்பி வந்து தம்மை அணுகிய சம்பவத்தை அறியாமலேயே அவரது நினைவுக்கு வந்தது. பீயர் அவருடைய ஆத்மார்த்த தோழனாய் இருந்தபடியால், அவருடைய வீட்டுக்கே டோலாகாவ் நேராக வந்தார். தமது வீட்டில் அவருக்கு தங்க இடம் கொடுத்து வேண்டிய பணத்தையும் பீயர்

கொடுத்தார். தங்கள் வீட்டில் டோலாகாவ் வசிப்பதை தான் விரும்பவில்லையென்று புன்னகையோடு ஹெலன் தம்மிடம் சொல்லியதும் அச்சமயம் அவருக்கு ஞாபகம் வந்தது. தமது மனைவியின் அழகைப் பற்றி பரிகாசமாக டோலாகாவ் எப்படித் தம்மிடம் புகழ்ந்து பேசினார் என்பதும் அவருக்கு ஞாபகத்திற்கு வந்தது. அன்றிலிருந்து அவர்கள் மாஸ்கோவிற்கு வருகிறவரை டோலாகவ் ஒருநாள் கூட அவர்களை விட்டுப் பிரியவில்லை.

'ஆம்' அவர் மிகவும் அழகாய்த்தான் இருக்கிறார். எனக்கு அவரைத் தெரியும். என்னுடைய பெயரை அவமானப்படுத்தி, என்னை கேலி செய்வது, அவருக்கு விசேஷமாய் பிரியமானதாய் இருக்கலாம். ஏனென்றால் நான் அவருக்காக சிரத்தை எடுத்து அவருடன் சிநேகம் செய்து அவருக்கு உதவி செய்திருக்கிறேன். அது உண்மையாய் இருந்தால், என்னை ஏமாற்றுவதால் அவருக்கு ஏற்படக்கூடிய இன்பத்தை என்னால் அறிய முடியும். ஆம், அது உண்மையாய் இருந்தால், ஆனால் நான் அதை நம்பவில்லை அதை நம்ப எனக்கு உரிமை கிடையாது. நான் நம்பவும் முடியாது, என்று பீயர் நினைத்தார்.

டோலாகாவ் கொடுமைகள் செய்கிற காலத்தில், அவர் முகத்தில் ஏற்படக்கூடிய தோற்றத்தை பீயர் நினைவு கூர்ந்தார். போலீஸ் காரனை கரடியின் முதுகில் கட்டி தண்ணீரில் எறிந்தபோதும், ஒரு காரணமும் இல்லாமல் ஒருவனை டூயல் சண்டைக்கு அழைத்த போதும், ஒரு தபால்காரனின் குதிரையை கைத்துப்பாக்கியால் சுட்டபோதும், அவர் முகத்தில் தோன்றிய தோற்றம் அவருக்கு நினைவுக்கு வந்தது. அதே தோற்றம் இப்பொழுது அவர் தம்மைப் பார்க்கும்போது அவர் முகத்தில் பெரும்பாலும் காணப்படுவதாக நினைத்தார். ' ஆம் அவர் ஒரு பயமுறுத்தக்கூடிய ஆசாமி. ஒருவரை கொல்லுவது என்பது அவருக்கு ஒன்றும் பிரமாதமே இல்லை. எல்லாரும் அவரைக் கண்டு பயப்படுவதாக அவருக்குத் தோன்றலாம். அது அவருக்கு மகிழ்ச்சியாய் இருக்கலாம். நான்கூட அவரைக் கண்டு பயப்படுவதாக அவர் நினைக்கலாம். உண்மையில் நான் அவரைக் கண்டு பயப்படத்தான் செய்கிறேன்' என்று அவர் நினைத்தார். மறுபடியும் அந்தப் பயங்கரமான பூதாகாரமான ஏதோ ஒன்று அவருடைய ஆத்மாவில் கிளம்புவதாக அவர் உணர்ந்தார். டோலாகாவும் டெனைசாவும் ராஸ்டோவும் பீயருக்கு எதிராக உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு காணப்பட்டார்கள்.

ராஸ்டோவ் மிகுந்த மகிழ்ச்சியோடு தமது இரு நண்பர்களிடம் பேசிக்கொண்டிருந்தார். ஒருவர் ஒரு விபசாரன். மற்றொருவர்

துணிகரமான ஒரு குதிரை வீரர். அந்த விபசாரனாய் இருந்தவர் டூயல் சண்டையிலும் ரொம்ப பிரசித்தி பெற்றவர். அவர் அடிக்கடி ஏதோ கவனமாய் இருந்த தடித்த உருவம் கொண்ட பீயரை கேலியோடு நோக்கினார். ராஸ்டோவ் விரோதப் பான்மையோடு பீயரைப் பார்த்தார். ஏனெனில், அந்தப் பீயர் இந்தக் குதிரை வீரரின் கண்களில் ஒரு பணக்கார சிவிலியனாகவும், ஒரு அழகு சுந்தரியின் கணவராகவும் தோன்றியது ஒரு காரணம். அடுத்த படியாக பீயர் எதையோ நினைத்துக்கொண்டு, பராக்கு முகமாய் இருந்தபடியால் ராஸ்டோவ் காட்டிய வணக்கத்திற்கு பதில் அளிக்காமலும், ராஸ்டோவைக் கவனித்ததாகக் காட்டிக்கொள்ளாமலும் இருந்தார். இது இரண்டாவது காரணம். சக்கரவர்த்தியின் ஆரோக்கியத்திற்காக குடிப்பதற்காக எல்லாரும் எழுந்தபோது, பீயர் சிந்தனையில் ஆழ்ந்து இடத்தை விட்டு எழுந்திருக்கவோ, அல்லது தமது கோப்பையை உயர்த்தவோ செய்யவில்லை.

'நீர் என்ன செய்து கொண்டிருக்கிறீர்? மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியின் ஆரோக்கியத்திற்காக இப்பொழுது குடிக்கும்படி அறிவிக்கபட்டதை நீர் கேட்கவில்லையா?' என்று எரிச்சலான வெறியோடு ராஸ்டோவ் பீயரை நோக்கி கத்தினார்.

பீயர் பெருமூச்சு விட்டார்; பணிவோடு எழுந்தார். தமது கோப்பையிலிருந்ததைக் காலி செய்தார். எல்லாரும் அமர்கிற வரையில் அவர் நின்று கொண்டிருந்தார். தமது அன்பான புன்முறுவலை ராஸ்டோவுக்குக் காட்டினார்.

'ஓ, நான் உம்மை அடையாளம் தெரிந்துகொள்ளவில்லை' என்று அவர் ராஸ்டோவைப் பார்த்துச் சொன்னார். ஆனால் ராஸ்டோவின் கவனம் வேறு வழியில் இருந்தது. அவர் ஜே என்று கோஷமிட்டுக் கொண்டிருந்தார்.

'நீர் ஏன் அவருடன் பேசாமல் இருக்கிறீர்?' என்று டோலாகாவ் ராஸ்டோவைக் கேட்டார்.

'அவரை விட்டுத் தள்ளும். அவர் ஒரு முட்டாள்' என்றார் ராஸ்டோவ்.

'அழகிய பெண்களின் கணவர்களாய் இருப்பவர்களிடம் எப்பொழுதும் சமாதானமாகவே நடந்துகொள்ள வேண்டும்' என்று டெனைசாவ் கூறினார்.

அவர்கள் என்ன பேசிக்கொள்ளுகிறார்கள் என்பதை பீயரால் கேட்க முடியவில்லை. ஆனால் அவர்கள் தம்மைப் பற்றித்தான் பேசுகிறார்கள் என்பதை அறிந்தார். உடனே அவர் நிறம் சிகப்பாக மாறி வேறு பக்கம் திரும்பிக் கொண்டார்.

'நல்லது, இப்பொழுது அழகு சுந்தரிகளின் ஆரோக்கியத்திற்காக நாம் அருந்துவோம்' என்று டோலாகாவ் சிரத்தையோடு கூடிய தோற்றத்துடன், ஆனால் அவருடைய வாயின் கோடிகளில் மறைந்திருந்த புன்முறுவலோடு, தமது கோப்பையுடன் பீயர் பக்கம் திரும்பினார்.

'பீட்டர்கின், இதோ அழகு சுந்தரிகளின் ஆரோக்கியத் திற்காகவும், அவர்களின் காதலர்களின் ஆரோக்கியத்திற்காகவும்' என்று மேலும் தொடர்ந்து கூறினார்.

பீயர் பார்வையை கீழே நோக்கினார். டோலாகாவைப் பார்க்கவோ அவருக்கு பதில் சொல்லவோ இல்லை. தமது கோப்பையில் இருந்ததைக் குடித்தார். குட்டுஜோவின் கவிகள் அடங்கிய துண்டுப் பிரசுரங்களை சேவகன் வழங்கிவந்தான். அங்கு வந்திருந்த பிரதான விருந்தாளிகளில் பீயரும் ஒருவர் ஆகையால் அவர் முன்பாக ஒரு பிரசுரத்தை வைத்தான். அவர் அதை எடுக்கப் போகிற சமயத்தில் டோலாகாவ் துணிந்து அவருடைய கையிலிருந்ததைப் பிடுங்கி வாசிக்க ஆரம்பித்தார். டோலாகாவை பீயர் பார்த்தார். அவருடைய கண்கள் கீழே நோக்கின. அவருடைய ஆத்மாவை உறுத்திவந்த இந்தப் பயங்கரமான, பூதாகாரமான விஷயம் அந்த டின்னர் சமயத்தில் பெரிதாக வளர்ந்து அவரை ஆட்கொண்டுவிட்டது. அவர் உடனே தமது பெரிய சரீரத்தை மேஜைக்கு குறுக்காக வளைத்துக் குனிந்தார்.

'அதை எடுப்பதற்கு உனக்கு அவ்வளவு தைரியமா?' என்று அவர் கத்தினார்.

அந்தக் கூச்சலையும், யாரைப் பார்த்து அந்தக் கூச்சல் பிரயோகிக்கப்பட்டது என்பதையும் அறிந்த நெஸ்வைட்ஸ்கியும் அவருடைய வலது பக்கத்தில் இருந்தவரும், திடீரென்று பீதியோடு பெஜுகாவிடம் திரும்பினார்கள்.

'வேண்டாம், வேண்டாம், நீர் என்ன செய்ய நினைக்கிறீர்?' என்று அவர்களுடைய பீதியுற்ற குரல்கள் குசுகுசுவென்று பேசின.

டோலாகாவ் தெளிவான, வேடிக்கையான, குரூரமான தமது கண்களோடு பீயரை நோக்கினார். அந்த புன்சிரிப்பு, 'இதைத்தான் நான் விரும்புகிறேன்' என்று சொல்லுவதுபோல இருந்தது.

'உமக்கு அதைக் கொடுக்க முடியாது' என்று தெளிவாய் அவர் சொன்னார். முகம் வெளிறி நடுங்கிய உதடுகளுடன் காணப்பட்ட பீயர் திடீரென்று அந்தப் பிரதியைப் பிடுங்கினார்.

'நீ... நீ... அயோக்கியன். உன்னை நான் சண்டைக்கு அழைக்கிறேன்' என்று கூச்சலிட்டு தமது நாற்காலியைப் பின்னால் தள்ளி மேஜை முன்னாலிருந்து எழுந்தார்.

இந்த வார்த்தைகளைச் சொல்லிய அதே நேரத்தில் பீயர் ஒன்றை உணர்ந்தார். அதாவது தமது மனைவியின் தவறான நடத்தையைப் பற்றி, அந்த நாள் முழுவதிலும் அவர் வேதனை அடைந்து கொண்டிருந்த அந்தப் பிரச்னை இப்பொழுது முடிவாக சந்தேகமில்லாமல் தீர்ந்துவிட்டது. அவர் அவளை வெறுத்தார். அவளிடமிருந்து எப்பொழுதும் பிரிந்திருக்க விரும்பினார். இந்த டூயல் சண்டை விஷயத்தில் பங்குகொள்ள வேண்டாமென்று டெனைசாவ் கேட்டுக்கொண்டும், டோலோகாவின் பிரதிநிதியாக வேலை செய்வதற்கு ராஸ்டோவ் சம்மதித்தார். பெஜுகாவின் பிரதிநிதியாக நெஸ்வைட்ஸ்கி ஏற்படுத்தப்பட்டார். டின்னருக்கு பின்னால் இந்த டூயல் சண்டையைப் பற்றிய ஏற்பாடுகளை நெஸ்வைட்ஸ்கியும் ராஸ்டோவும் கலந்து முடிவு செய்து கொண்டார்கள். பீயர் வீட்டுக்கு திரும்பினார். ஆனால், ராஸ்டோவும், டோலாகாவும், டெனைசாவும் வெகுநேரம் வரையில் கிளப்பில் தங்கி ஜிப்ஸிகளுடையவும், மற்றவர்களுடையவும் சங்கீதங்களைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

'நல்லது, அப்படியானால் நாளை சாக்கோல்நிக்கியில் சந்திப்போம்' என்று கிளப்பின் முற்றத்தில் ராஸ்டோவிடம் விடை பெற்றுக் கொள்ளும்போது டோலாகவ் கூறினார்.

'நீர் இப்பொழுது அமைதியாய் இருக்கிறீரா?' என்று ராஸ்டோவ் கேட்டார். டோலாகாவ் தயங்கினார்.

'நல்லது, இந்த டூயல் சண்டையின் முழு ரகசியத்தையும் இரண்டு வார்த்தைகளில் சொல்லிவிடுகிறேன். நீர் டூயல் சண்டை போடுவதாயிருந்தால் அதற்கு முன்பாக ஒரு உயில் எழுதி வைத்துவிட்டு, உமது பெற்றோர்களுக்கு அன்பு கனிந்த கடிதங்களை எழுதிவைத்துவிட்டு, நீர் ஒருவேளை இறந்து போகலாமென்று நினைப்பதாய் இருந்தால் நீர் ஒரு முட்டாளாய்த்தான் இருப்பீர்; நிச்சயமாக இந்த சண்டையில் நீர் தோற்றுப் போவீர். ஆனால், உமது எதிராளியை சீக்கிரமாகவும், நிச்சயமாகவும் கொல்லப் போவதாக உறுதியோடு, எண்ணத்தோடு, நீர் போவதாய் இருந்தால், எல்லாம் சரியாகவே நடக்கும். எங்களுடைய கரடி வேட்டைக்காரனான காஸ்டிராமா சொல்லுவான்: 'ஒவ்வொருவரும் கரடியைப் பார்த்து பயப்படுவார்கள். ஆனால் கரடியைப் பார்த்துவிட்டால் உன்னுடைய பயம் எல்லாம் போய்விடுகிறது. அப்புறம் உமக்கு இருக்கிற ஒரே எண்ணம் என்னவென்றால், அது ஓடும்படி விட்டுவிடக் கூடாதே என்பதுதான்.' அதே மாதிரிதான் என்னுடைய நிலைமை. நாளை சந்திப்போம், என் அன்பான நண்பரே.'

மறு நாள் காலை எட்டு மணிக்கு பீயரும், நெஸ்வைட்ஸ்கியும் சாக்கோல்நிக்கி என்ற காட்டிற்குப் போனார்கள். அங்கே, டோலாகாவும், டெனைசாவும், ராஸ்டோவும் ஏற்கெனவே இருந்தார்கள். அப்பொழுது செய்யவேண்டிய காரியத்தைப் பற்றிய சிந்தனை எதுவும் இல்லாமல், வேறு எதையோ யோசித்துக் கொண்டிருப்பதுபோல பீயர் காணப்பட்டார். அவருடைய சடைவான முகம் மஞ்சளாய்த் தோன்றியது. முந்திய இரவில் அவர் தூங்கவில்லை என்பது தெளிவாய்த் தெரிந்தது. பாராமுகமாக சுற்றிலும் பார்த்துக் கொண்டிருந்தார். சூரிய வெளிச்சத்தின் ஒளியைக் கண்டு கண் கூசுவது போல தமது கண்களை இடுக்கிக் கொண்டிருந்தார். இரண்டு பிரச்னைகளில் அவருடைய மனம் ஆழ்ந்திருந்தது. ஒன்று, அவருடைய மனைவியின் தவறான நடத்தை. அதைப்பற்றி அன்று இரவு பூராவாகத் தூக்கமின்றி அவர் யோசித்த பின்பு அவருக்குச் சிறிதுகூட சந்தேகமில்லை. மற்றொன்று, டோலாகாவின் குற்றமான நடத்தை. தமக்கும் அவருக்கும் எதுவும் இல்லையாகையால், தம்முடைய மானத்தைக் காப்பாற்ற அவர் கட்டுப்பட்டிருக்கவில்லை என்றும், அவருடைய ஸ்தானத்தில் தான் இருந்தால் ஒருவேளை அம்மாதிரியே செய்திருப்பேன் என்றும் பீயர் நினைத்தார். 'நிச்சயமாக நானும் அம்மாதிரியே செய்திருப்பேன். அப்படியானால் இந்த டூயல் சண்டை, இந்தக் கொலை எதற்காக? ஒன்று நான் அவரைக் கொல்லுவேன்; அல்லது அவர் என்னை தலையிலோ முழங்கையிலோ முழங்காலிலோ சுடுவார். இந்த இடத்தைவிட்டு நான் போக முடியாதா? ஓடிப்போக முடியாதா? எங்காவது போய் மறைந்துகொள்ள முடியாதா?' என்ற எண்ணங்கள் அவருடைய மனதில் ஓடிக்கொண்டிருந்தன. ஆனால், அம்மாதிரி எண்ணங்கள் அவர் மனதில் ஓடுகிற அதே சமயத்தில் மிகுந்த அமைதியாகவும், பராக்குத் தனமாகவும் 'இன்னும் நேரமாகுமா? எல்லாம் தயாராகிவிட்டனவா?' என்று வேடிக்கை பார்ப்பவர்கள் ஆச்சரியம் கொண்டு மரியாதை செய்யக்கூடிய விதத்தில் அவர் கேள்விகள் கேட்பார்.

எல்லாம் தயாரான பின்பு எல்லையைக் காட்டும் பொருட்டு அந்த உறை பனியில் பட்டாக் கத்திகள் குத்தி வைக்கப்பட்டன. கைத் துப்பாக்கிகள் கெட்டிக்கப்பட்டன. நெஸ்வைட்ஸ்கி தாம் நிற்கும் இடத்திலிருந்து பீயரிடம் போனார். 'கோமகனே, இந்த நெருக்கடியான சமயத்தில் உம்மிடம் நான் உண்மையைச் சொல்லவில்லையென்றால், எனது கடமையை நான் செய்தவனாக மாட்டேன். என் மீதுள்ள உமது நம்பிக்கைக்கும் நான் பாத்திரமாக

மாட்டேன். உமக்கு உதவியாளராக என்னை தேர்ந்தெடுத்து கௌரவித்ததற்கும் நான் பொருத்தமாகமாட்டேன். அதாவது இந்த சண்டைக்கோ அல்லது இதற்காக ரத்தம் சிந்துவதற்கோ போதுமான காரணம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை... நீர்செய்வது சரியல்ல. கொஞ்சங்கூட சரியல்ல. நீர் எதேச்சாதிகாரமாய் நடக்கிறீர்...'

'ஆம், அது பயங்கரமான முட்டாள்தனம்' என்று பீயர் கூறினார்.

'அப்படியானால், உமது வருத்தத்தை நான் போய்த் தெரிவிப்பதற்கு எனக்கு அனுமதி கொடும். உமது எதிராளி அதை ஒப்புக்கொள்ளுவார் என்று நான் நிச்சயமாய் நம்புகிறேன்' என்று நெஸ்வைட்ஸ்கி சொன்னார். இந்த விவகாரத்தில் சம்பந்தப்பட்ட மற்றவர்களும், இதைப்போன்ற விவகாரங்களில் சம்பந்தப்பட்ட ஒவ்()வாருவரும், அம்மாதிரி ஒரு சண்டைக்கு அவசியம் நேர்ந்துவிட்டதாக ஒருக்காலும் நம்பியதில்லை. 'கோமகனே, ஒருவருடைய காரியங்களை இனி சரி செய்ய முடியாது என்ற நிலைமைக்கு வளர விடுவதைவிட, ஒருவருடைய தவறை ஒத்துக்கொள்ளுவது எவ்வளவோ உயர்வான கௌரவமாய் இருக்கும். இரு பக்கங்களிலும் எந்தவிதமான அவமரியாதையும் நேரவில்லை. நான் போய் சொல்லுவதற்கு எனக்கு அனுமதி கொடும்...'

'இல்லை, பேசுவதற்கு அங்கே என்ன இருக்கிறது? எல்லாம் ஒன்றுதான்... எல்லாம் தயாராய் இருக்கின்றனவா? எங்கே போக வேண்டும், எங்கே சுடவேண்டும், என்பதை மட்டும் எனக்குச் சொல்லும்?' என்று இயற்கையற்ற ஒரு புன்னகையோடு பீயர் கூறினார்.

கைத் துப்பாக்கியை அவர் தமது கையில் எடுத்துக்கொண்டு அதனுடைய குதிரையை எப்படி அமுக்குவது என்ற விவரங்களை கேட்டுக்கொண்டிருந்தார். ஏனெனில் அதற்கு முன்பாக கைத் துப்பாக்கியை அவர் தமது கைகளில் எடுத்ததே இல்லை. அந்த உண்மையை அங்கு வெளிப்படுத்த அவர் விரும்பவில்லை.

'ஆமாம், அப்படித்தான், எனக்குத் தெரியும். கொஞ்சம் மறந்துபோய்விட்டது' என்று அவர் சொன்னார்.

'மன்னிப்பெல்லாம் கிடையாது. அதெல்லாம் எதுவும் கிடையாது' என்று டோலாகாவ் டெனைசாவிடம் கூறினார். சமரசம் ஏற்படுவதற்கு அவர் முயற்சித்துக் கொண்டிருந்தார். அவரும் குறிப்பிட்ட இடத்திற்கு போய்ச் சேர்ந்தார்.

டூயல் நடப்பதற்கு குறிப்பிடப்பட்டிருந்த இடம் ரஸ்தாவிலிருந்து சுமார் 80 அடிகளுக்கப்பால் இருந்தது. பனி வண்டிகளை ரஸ்தாவில் விட்டுவிட்டு, அந்த தேவதாரு மரக்காட்டில் தெளித்து வைக்கப்பட்டிருந்த ஒரு இடத்திற்குப் போய்ச் சேர்ந்தார். அந்தக் காடெல்லாம் உருகிக் கொண்டிருக்கும் உறை பனியால் மூடப்பட்டிருந்தது. கடந்த சில தினங்களாகத்தான் உறை பனி உருக ஆரம்பித்திருந்தது. இரண்டு எதிராளிகளும் மத்தியில் 40 அடி இடம்விட்டு இருவரும் அந்த மைதானத்தின் ஓரத்தில் நின்று கொண்டிருந்தார்கள். இவர்களுடைய பிரதிநிதிகள் மத்தியில் உள்ள இடத்தை அளந்தால் ஏற்பட்ட காலடி அடையாளங்கள், அந்த ஆழமான உறைபனி மீது காணப்பட்டன. நெஸ்வைட்ஸ்கி, டோலாகாவினுடைய பட்டாக்கத்திகள் பத்து அடி இடைவெளிவிட்டு குத்தி வைக்கப்பட்டிருந்தன. அவைதான் எல்லைக்கோடுகள். பனி உருகிக்கொண்டிருந்தது. மூடுபனி நிறைந்திருந்தபடியால் நாற்பது அடி தூரத்தில் எதையுமே பார்க்க முடியவில்லை. மூன்று நமிஷங்களாக எல்லாம் தயாராய் இருந்தன. ஆனால் இன்னமும் அவர்கள் தாமதித்துக்கொண்டு மௌனமாய் இருந்தார்கள்.

## 4 5

நல்லது, ஆரம்பிக்கலாம்' என்றார் டோலாகாவ்.

'ரொம்ப சரி' என்று இன்னமும் சிரித்துக் கொண்டே அதே முறையில் பீயர் பதில் சொன்னார்.

ஒரு பயங்கரமான உணர்ச்சி அங்கு பரவி நின்றது. ரொம்ப சாதாரணமாக ஆரம்பித்த அந்த விஷயத்தை இனி தவிர்க்க முடியாது. யார் என்ன நினைத்தாலும் அதன் போக்குப்படி நடந்துதான் தீரவேண்டும். டெனைசாவ் முதலில் எல்லைக் கோட்டிற்குப் போய்க் கூறினார்.

'எதிராளிகள் இருவரும் சமாதானத்திற்கு வர மறுத்துவிட்ட படியால், தயவு செய்து நீங்கள் ஆரம்பிக்கலாம். உங்கள் கைத் துப்பாக்கிகளை எடுத்துக்கொள்ளலாம். மூன்று என்று நான் சொல்லியவுடன் நீங்கள் முன்னேறலாம்.'

'ஒன்று, இரண்டு, மூன்று' என்று கோபமாகக் கத்திவிட்டு அவர் ஒதுங்கி நின்றார்.

ஒற்றை அடிப் பாதை வழியாக எதிராளிகள் இருவரும் முன்னேறினார்கள். ஒருவருக்கொருவர் நெருங்கிக்கொண்டே

வந்தார்கள். கடைசியில் அந்தப்பனி மூட்டத்தின் வழியாக ஒருவரையொருவர் பார்க்க ஆரம்பித்தார்கள். அந்த நடுத்தர எல்லைக் கோட்டிற்கு வந்ததும் எப்பொழுது வேண்டுமானாலும் சுடுவதற்கு அவர்களுக்கு உரிமையுண்டு. தமது கைத்துப்பாக்கியை உயர்த்தாமல் டோலாகாவ் மெதுவாக நடந்து வந்தார். எதிராளியின் முகத்தை தமது ஜொலிப்பான நீலக் கண்களால் குறிப்பாகப் பார்த்துக்கொண்டே வந்தார். அவருக்கு வழக்கமாயுள்ள புன்னகையின் சாயல் அவருடைய வாயில் காணப்பட்டது.

'ஆகவே, எனக்கு எப்பொழுது பிரியமோ அப்பொழுது நான் சுடலாம்' என்று பீயர் சொல்லிக்கொண்டு, 'மூன்று, என்ற வார்த்தையைக் கேட்டதும் வேகமாய் முன்னேறினார். ஆனால் அந்த ஒற்றையடி பாதையிலிருந்து அவர் விலகியபடியால், ஆழமான பனிக்குள் விழுந்துவிட்டார். தமது வலது கையில் தமது கைத்துப்பாக்கியைப் பிடித்துக்கொண்டிருந்தார். தம்மை எங்கு சுட்டுக்கொள்ளுவோமோ என்ற பயத்தில் அதை ஒரு முழ நீளத்திற்கு அப்பால் நீட்டி பிடித்துக்கொண்டிருந்தார். அவருடைய இடது கையை மிகுந்த கவனமாகப் பின்னால் மடித்து வைத்திருந்தார். ஏனெனில் அதைக் கொண்டு அவரது வலது கையை தாங்கிக்கொள்ள வேண்டுமென்பது அவருடைய ஆசை. ஆனால் அந்தச் சண்டையில் அம்மாதிரி செய்யக்கூடாது என்பதை அவர் அறிவார். 6 அடிகள் முன்னேறிப் போனதும் பாதையிலிருந்து விலகி அவர் பனிக்குள் விழுந்தார். தமது பாதத்தை பீயர் பார்த்தார். பின்னால் திடீரென்று டோலாகாவை நோக்கமிட்டு, அவரது விரலை மடக்கி, அவருக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டதுபோல சுட்டார். அவ்வளவு உரத்த சத்தத்தை அந்தக் கைத்துப்பாக்கி செய்யும் என்று அவர் எதிர்பார்க்காதபடியால், அந்த சப்தத்தைக் கேட்டதும் அவர் உடல் நடுங்கியது. பின்னால் தமக்கு ஏற்பட்டுள்ள உணர்ச்சிகளை கண்டு புன்முறுவல் கொண்டு அசையாமல் நின்றார். பனி மூட்டத்தை அந்தத் துப்பாக்கிப் புகை என்னும் அடர்த்தியாக செய்து விட்டபடியால், ஒருவினாடிக்கு எதையுமே பார்க்க முடியாமல் இருந்தது. ஆனால் எதிர்பார்த்தபடி இரண்டாவது துப்பாக்கிச் சுடும் சத்தம் கேட்கவில்லை. டோலாகாவின் அவசரமான காலடி ஓசைகளையே அவர் கேட்டார். புகைக்கிடையில் அவருடைய உருவம் கொஞ்சம் கொஞ்சமாக தெளிவாகிக்கொண்டு வந்ததைக் கவனித்தார். டோலாகாவ், தமது ஒரு கையால் இடது பக்கத்தை அமுக்கிக்கொண்டிருந்தார். மற்றொரு கையால் கீழே தொங்கிக் கொண்டிருந்த கைத்துப்பாக்கியை பற்றிக் கொண்டிருந்தார். அவருடைய முகம் வெளிறிப் போய் இருந்தது. ராஸ்டோவ் அவரிடம் ஓடி, எதையோ சொன்னார்.

'இ...ல்...லை... இல்லை அது இன்னும் முடியவில்லை' என்று டோலாகாவ் தமது பற்களின் வழியாக முனங்கினார். தம்முடைய பட்டாக் கத்தி குத்தி வைக்கப்பட்டிருந்த இடம் வரையில் தடுமாறிக் கொண்டு காலடி எடுத்துவைத்து அவர் போனார். அந்த இடத்தில் அந்தக் கத்திக்குப் பக்கத்தில் பனிமீது அவர் விழுந்துவிட்டார். அவரது இடது கை ரத்தமாய் இருந்தது. அதை தமது கோட்டில் துடைத்துவிட்டு, அந்தக் கையால் தமது இடுப்பைப் பிடித்துக் கொண்டிருந்தார். அவருடைய சுழித்த முகம் வெளுப்பாகவும், பதறிக் கொண்டும் இருந்தது.

'தயவு...' என்று டோலாகாவ் ஆரம்பித்தார். ஆனால் முதலில் அந்த வார்த்தை முழுவதையும் சொல்ல முடியவில்லை.

சிறிது முயற்சியோடு 'தயவு செய்து' என்ற வார்த்தையை அவர் கூறினார்.

தமது தேம்பல்களை பீயரால் அடக்க முடியவில்லை. டோலாகாவை நோக்கி அவர் ஓடினார். இரண்டு எல்லைக் கோட்டுக்கும் மத்தியில் உள்ள இடை வெளியை அவர் கடக்க ஆரம்பித்தபோது டோலாகாவ் கூச்சலிட்டார். 'உம்முடைய எல்லைக் கோட்டிற்குப் போம்' என்று டோலாகாவ் சொன்னார். அதனுடைய அர்த்தம் என்னது என்பதைப் புரிந்துகொண்ட பீயர் தமது பக்கத்தில் உள்ள பட்டாக் கத்தியின் பக்கத்தில் நின்றார். அவர்கள் இருவரையும் 10 அடிகள் தான் பிரித்து வைத்திருந்தன. பனி மீது டோலாகாவ் தமது தலையைச் சாய்த்தார். ஆவலோடு அந்த பனியைக் கடித்தார். மீண்டும் தலையை நிமிர்த்தினார். தம்மைச் சரி செய்துகொண்டு தமது கால்களை இழுத்து மடக்கி நிமிர்ந்து உட்கார்ந்தார்.

கீழே விழாமல் நன்றாய் உட்காருவதற்கு தம்மைச் சரி செய்து கொண்டார். அந்த குளிர்ந்த பனியை வாயில் உறிஞ்சி விழுங்கினார். அவருடைய உதடுகள் பதறின. அவருடைய கண்கள் இன்னமும் புன்முறுவலோடு எரிச்சலையும், அவர் தமது பலத்தை ஒன்று சேர்க்க முயற்சிக்கும் பிரயத்தனத்தையும் காட்டின. அவர் தமது கைத் துப்பாக்கியை உயர்த்தி குறி பார்த்தார்.

'பக்கவாட்டாக நில்லும். உமது கைத்துப்பாக்கியால் உம்மை பாதுகாத்துக்கொள்ளும்' என்று நெஸ்வைட்ஸ்கி கதறினார்.

'உம்மைப் பாதுகாத்துக்குகொள்ளும்' என்று டெனைசாவ்கூட தமது எதிராளியைப் பார்த்துக் கத்தினார்.

ஒரு அமைதியான இரக்கமும், பரிதாபமும் கொண்ட புன்னகையோடு பீயர் தமது கால்களையும், கைகளையும் பரப்பி

தமது அகலமான மார்பை முன்னால்காட்டி, நேராக டோலாகாவை சோகத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார். டெனைசாவும் ராஸ்டோவும் நெஸ்வைட்ஸ்கியும் தங்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். அதே வினாடியில் ஒரு குண்டு சப்தமும் டோலாகாவின் கோபக் கூச்சலும் கேட்டன.

'குறி தவறிவிட்டது' என்று டோலாகாவ் கூச்சலிட்டு, ஒன்றும் செய்ய முடியாதவராக முகம் குப்புறக் கீழே சாய்ந்தார். பீயர் தமது நெற்றிப் பொட்டுகளை அமுக்கிப் பிடித்து, அங்கிருந்து திரும்பி காட்டுக்குள்ளாக முழங்கால் அளவு பனியில் தொடர்ச்சியில்லாத வார்த்தைகளை முனங்கிக்கொண்டு போனார்.

'முட்டாள்தனம்... முட்டாள்தனம்... மரணம்...' என்று அவர் முகத்தை சுழித்துக்கொண்டு திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டிருந்தார்.

அவரை நெஸ்வைட்ஸ்கி நிறுத்தி வீட்டிற்கு அழைத்துப் போனார்.

காயம் அடைந்த டோலாகாவை ராஸ்டோவும், டெனைசாவும் அழைத்துப் போனார்கள்.

டோலாகாவை அந்த பனி வண்டியின் கீழே மூடிய கண்களோடு மௌனமாய் படுத்திருந்தார். அவரிடம் கேட்ட கேள்விகளில் ஒன்றுக்குக்கூட பதில் சொல்லவில்லை. ஆனால் அவர்கள் மாஸ்கோ பட்டணத்திற்குள் நுழைந்ததும், அவர் திடீரென்று உயிர் பெற்றவர் மாதிரி தலையை நிமிர்த்தி பிரயாசையோடு ராஸ்டோவின் கையைப் பற்றினார். டோலாகாவின் முகத்தில் திடீரென்று தோன்றிய அன்பு கனிந்த பரவசமான தோற்றத்தை ராஸ்டோவ் கண்டு பிரமித்துப் போனார்.

'நல்லது, உமக்கு இப்பொழுது எப்படி யிருக்கிறது?' என்று கேட்டார்.

'மோசம். ஆனால் அதைப்பற்றியல்ல, என்பது நண்பரே. நாம் இப்பொழுது எங்கே யிருக்கிறோம்? மாஸ்கோ பட்டணத்தில் என்பது எனக்குத் தெரியும். என்னைப் பற்றி ஒன்றும் கவலையில்லை. ஆனால் நான் அவளைக் கொன்றுவிட்டேன்... கொன்றுவிட்டேன்' என்று ஏக்கக் குரலோடு டோலாகாவ் கூறினார். 'இதிலிருந்து அவள் பிழைக்கமாட்டாள்... அவள் பிழைக்க மாட்டாள்.'

'யார்?' என்று ராஸ்டோவ் கேட்டார்.

'என்னுடைய தாயார், என்னுடைய தாயார், என்னுடைய தேவதை. நான் போற்றும் தேவ மாதா' என்று டோலாகாவ் கூறி, ராஸ்டோவின் கையை அழுத்தி கண்ணீர் விட்டார்.

அவர் சிறிது அமைதியானதும் ராஸ்டோவுக்கு விளக்கிச் சொன்னார். தாம் தமது தாயாருடன் வசிப்பதாகவும், தாம் சாவதை அவள் கண்டால் அவள் உயிர் தரிக்க மாட்டாள் என்றும் கூறினார். முன்னதாகப் போய் அவளைத் தயார் செய்யும்படி ராஸ்டோவிடம் அவர் கெஞ்சினார்.

அவரிடம் கேட்டுக் கொண்டபடியே ராஸ்டோவ் முன்னதாகச் சென்றார். அந்த சண்டைக்காரரான டோலாகாவ், அந்த போக்கிரியான டோலாகாவ், மாஸ்கோவில் தமது வயோதிகத் தாயாரோடும், கூனியான சகோதரியோடும் வசித்து வந்ததையும், அவளின் குழந்தைகளில் டோலாகாவ்தான் மிகுந்த செல்லமான குழந்தை என்பதையும் அவர் அறிந்தபோது அவர் மிகுந்த ஆச்சரியமடைந்தார்.



கடந்த சில காலமாக பீயர் தமது மனைவியைத் தனிமையாக சந்திப்பது அபூர்வமாய் விட்டது. பீட்டர்ஸ் பர்க்கிலும், மாஸ்கோவிலும் உள்ள அவர்களுடைய வீடுகளில் எப்பொழுதும் விருந்தாளிகள் நிறைந்து கொண்டேயிருந் தார்கள். அந்த டூயல் சண்டைக்குப் பின்னால் அன்றிரவு அவர் தமது படுக்கை அறைக்குப் போகவில்லை. அடிக்கடி அவர் போய் தங்கும் அவருடைய தகப்பனாரான கோமகன் பெஜுகாவ் மரண சமயத்தில் தங்கியிருந்த, அந்தப் பெரிய அறையில் போய் உட்கார்ந்தார்.

அங்கிருந்த சோபாவில் தூங்குவதற்காக அவர் படுத்தார். அவருக்கு அன்று நேர்ந்த காரியங்களையெல்லாம் மறந்துவிட நினைத்தார். ஆனால் அவரால் முடியவில்லை. அவருடைய உணர்ச்சிகளும் எண்ணங்களும் ஞாபகங்களும் திடீரென்று ஏராளமாய் அவருக்குள் தோன்றியபடியால் அவரால் தூங்க முடியவில்லை. ஒரு இடத்தில் தங்கியிருக்கவும் முடியவில்லை. ஆகவே, திடீர் திடீரென்று குதித்தெழுந்து இந்த அறைக்குள்ளாகவே வேகமாக உலவி வந்தார். இப்பொழுது, திருமணமான காலத்தின் ஆரம்பத்தில் இருந்த அவர் மனைவியினுடைய தோற்றங்கள், அவளுடைய ஆடையில்லாத தோள்கள், மெதுவான ஆவலான

உணர்ச்சிகொண்ட முகம், அவருக்குத் தோன்றின. உடனே அவளுக்குப் பக்கத்திலேயே டோலாகாவின் அழகான, அவமதிப்பான, கேலியான முகமும் அதாவது அந்த டின்னர் அன்று அவர் பார்த்த முகமும், அதற்குப் பின்னால் அந்த பனியில் அவர் கீழே உருண்டபோது அவரிடம் தோன்றிய வெளிறிய முகமும், அவருக்கு ஏற்பட்ட உதறலும் கஷ்டங்களும் அவர் மனக்கண்முன் தோன்றின.

'என்ன நடந்து விட்டது? நான் அவளுடைய காதலனைக் கொன்றுவிட்டேன். ஆம் என் மனைவியின் காதலனைக் கொன்றுவிட்டேன். ஆம், விஷயம் அதுதான். ஆனால் ஏன்? அதைச் செய்யும்படியாக எனக்கு ஏன் தோன்றியது?' என்று அவர் தம்மையே கேட்டுக்கொண்டார். 'ஏனென்றால், நீர் அவளை திருமணம் செய்திருக்கிறீர்' என்று ஒரு உள் ஒலி பதிலளித்தது.

'ஆனால் எந்த விதத்தில் என்னை குற்றம் சொல்ல முடியும்?' என்று அவர் கேட்டார். 'அவளிடம் காதல் கொள்ளாமலேயே, அவளை திருமணம் செய்ததால் நீர் உம்மையும் அவளையும் ஏமாற்றிக்கொண்டீர்.' இளவரசர் வாசைலியின் வீட்டில் இராச்சாப்பாட்டிற்குப் பின்னால் அன்று நடந்த சம்பவம் அவருக்குத் தெளிவாக ஞாபகத்திற்கு வந்தது. அச்சமயத்தில், 'நான் உன்னை காதலிக்கிறேன்' என்ற வார்த்தைகளை சொல்லுவதற்கு அவர் மிகுந்த சிரமப்பட்டார். இவை எல்லாம் அவற்றிலிருந்து ஏற்பட்டவைதான் என்று அவர் நினைத்தார். இதை அப்பொழுதே தாம் உணர்ந்ததாகவும் அவர் நினைத்தார். 'நான் காதலிக்கவில்லை என்றும், அம்மாதிரி சொல்லுவதற்கு உரிமை கிடையாதென்றும் நான் நினைத்தேன். இப்பொழுது முடிவில் அதேமாதிரி வந்துவிட்டது.

அவர் திருமணத்திற்கு பின்பு தமது தேன்மதிக் காலத்தை நினைவு கூர்ந்தார். அது நினைவிற்கு வந்ததும் அவருடைய முகம் நாணி சிவந்தது. இன்னொரு நாள் நடுப்பகலில் அவருடைய படுக்கை அறையைவிட்டு உடைகளைப் போட்டுக்கொண்டு படிப்பு அறைக்கு அவர் வந்தார். அச்சமயம் அவரைப் பார்க்க வந்த அவருடைய மேனேஜர், ஆச்சரியம் கொண்டு தலை குனிந்து மரியாதை செய்தபோதிலும், அவருடைய முகத்தையும் உடைகவுனையும் மாறிமாறிப் பார்த்து அவருடைய இன்பமான வாழ்க்கையை அறிந்து கொண்டதுபோல மெதுவான புன்னகை காட்டினால் இந்த சம்பவத்தை அவர் இப்பொழுது நினைத்தபோது அது ரொம்ப அவமானமாகவும் வெட்கங்கெட்டதாகவும் தோன்றியது.

'ஆனால் அவளுடைய கம்பீரமான அழகிற்காகவும், அவளுடைய சமயோசித புத்திக்காகவும் நான் எத்தனை தடவைகள் பெருமையடைந்திருப்பேன். என்னுடைய வீட்டைப் பற்றியும், பீட்டர்ஸ்பர்க்கில் என்னுடைய வீட்டில் அவள் விருந்தாளிகளை வரவேற்றதைப் பற்றியும், அவளுடைய அழகைப் பற்றியும், அவளிடம் யாரும் நெருங்க முடியாத தன்மையைப் பற்றியும் நான் எவ்வளவு பெருமை அடைந்திருக்கிறேன். அப்பொழுது நான் பெருமையடைந்தது எல்லாம் இதுதான் போலிருக்கிறது. அவளை நான் புரிந்து கொள்ளவில்லை என்று அப்பொழுது நினைத்தேன். அவளுடைய யோக்கியதையைப் பற்றி நான் சிந்தித்த போதெல்லாம் அவளை நன்றாகப் புரிந்துகொள்ளவில்லை என்று என்னையே நான் குறைகூறிக் கொண்டேன்... அவள் எப்பொழுதும் ஒருவித உணர்ச்சியும் இல்லாமல், எப்பொழுதும் அடக்கமாக திருப்தியான முகத்தோடு எவ்வித ஆசைகளும் அக்கறைகளும் இல்லாமல் இருந்ததை என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. அந்த முழு ரகசியமும் அந்த பயங்கரமான உண்மையில் அடங்கியிருக்கிறது. அந்த உண்மை என்னவென்றால், அவள் ஒரு கெட்டுப்போன ஸ்திரீ. இப்பொழுது அந்தப் பயங்கரமான வார்த்தையை நானே பேசிய பின்பு எல்லாம் எனக்குத் தெளிவாகிவிட்டது.

'அவளிடம் அடிக்கடி பணம் வாங்குவதற்காக அவளுடைய சகோதரன் அனடோல் வருவார். அவளுடைய திறந்த தோள்களை அவர் முத்தமிடுவது உண்டு. அவள் அவருக்கு பணம் கொடுக்கமாட்டாள். ஆனால் தன்னை முத்தமிடுவதற்கு சம்மதித்து சும்மாயிருப்பாள். அவளுடைய தகப்பனார் அவளிடம் பொறாமையை உண்டுபண்ணுவதற்கு வேடிக்கையாக முயற்சி செய்து பார்த்தார். ஆனால் ஒரு அமைதியான புன்சிரிப்போடு, பொறாமை கொள்ளுவதற்கு தான் அவ்வளவு முட்டாள் அல்ல என்று பதில் அளித்தாள். 'அவருக்கு இஷ்டமானது எதுவோ, அதை அவர் செய்து கொள்ளட்டுமே' என்று என்னைப் பற்றி அவள் கூறுவது உண்டு. அவள் கர்ப்பவதி ஆன மாதிரி ஏதாவது அடையாளங்கள் தெரிகின்றனவா என்று ஒரு நாள் அவளைக் கேட்டேன். ஆனால் அதற்கு அவள் துச்சமாக சிரித்து பதில் சொன்னாள். குழந்தைகளை விரும்புவதற்கு அவள் முட்டாள் அல்ல என்றும் என்மூலமாகக் குழந்தை பெறுவதற்கு அவளுக்கு ஒருபொழுதும் விருப்பமில்லை என்றும் சொன்னாள்'.

அவளுடைய மட்டரகமான வெளிப்படையான எண்ணங்களையும் ஆபாசமான பேச்சுக்களையும், அவளுக்கு இயற்கையான

அம்மாதிரி காரியங்களையும் அவர் நினைவிற்குக் கொண்டு வந்தார். பணக்கார சூழ்நிலையில் அவள் வளர்க்கப்பட்ட போதிலும் அந்தக் குணங்களோடுதான் அவள் இருந்தாள்.

'நான் ஒரு முட்டாள் அல்ல... நீ வேண்டுமானால் முயற்சி செய்து பார்.. இதைவிட்டு வெளியே போ' என்று அவள் அடிக்கடி சொல்வது உண்டு. வாலிப, வயோதிக ஆண்களோடும் பெண்களோடும் மிகுந்த வெற்றியோடு அவள் பழகி வரும்போது, தாம் மட்டும் அவளை ஏன் காதலிக்கவில்லை என்பதை பீயரால் புரிந்து கொள்ள முடியவில்லை.

'ஆம், நான் அவளை எப்பொழுதும் காதலிக்கவில்லை. அவள் ஒரு கெட்டுப்போன ஸ்திரீ என்பதை நான் அறிந்திருந்தேன். ஆனால் அதை நான் ஒப்புக்கொள்ள தைரியம் கொள்ளவில்லை. இப்பொழுது டோலாகாவ் ஒரு பலவந்தமான புன்னகையோடு செத்துக்கொண்டு பனியில் உட்கார்ந்திருக்கிறார். ஒரு வீரர் மாதிரி நான் காட்டிய வருத்தத்தை அவர் ஒருவேளை கேலி செய்து கொண்டிருக்கலாம்.

பலமில்லாதவர் போல பீயர் தோற்றத்தில் காணப்பட்டாலும் தமக்குக் கஷ்டங்கள் வந்தபொழுது இன்னொருவரிடம் சொல்ல வேண்டுமென்று நினைக்காத கூட்டத்தைச் சேர்ந்தவர். தமது கஷ்டங்களைத் தாமே தனியாக அனுபவித்துக் கொண்டிருப்பார்.

'அவையெல்லாம், அவையெல்லாம் அவளுடைய குற்றம். ஆனால், அதனால் என்ன? அவளுடன் ஏன் நான் இணைப்புக் கொண்டேன்? 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று எதற்காக அந்தப் பொய்யைச் சொன்னேன்? அது ஒரு கேடு கெட்ட பொய். நான் குற்றம் செய்தேன். அதற்காக நான் அனுபவித்தே ஆக வேண்டும். எதை? என் பேர் மீது உள்ள ஒரு அவமானத்தையா? அல்லது என் வாழ்க்கை பூராவாக ஏற்பட்டுள்ள துரதிருஷ்டத் தையா? ஓ, அவையெல்லாம் அசட்டுத்தனங்கள். என்னுடைய பேர் மீதோ யோக்கியதையின் மீதோ மாசு படிவது இருக்கட்டும். எனக்கும் அவற்றிற்கும் சம்பந்தமில்லை.

16-வது லூயிஸ் அயோக்கியன் என்றும் குற்றவாளி யென்றும் சொல்லி அவன் தலையை வாங்கினார்கள். அனால் அவர்களுடைய பார்வையிலிருந்து அவர்கள் செய்தது சரி. ஆனால் அந்த 16-வது லூயிஸை பெரிய தீரரென்றும் வீரரென்றும் போற்றி அவரை பெரிதாய் மதித்தவர்களும் உண்டு. அவர்களுடைய பார்வையிலிருந்து அவர்கள் நினைத்தது சரியே. பின்னால் ராப்ஸ்பியர் என்பவருடைய தலையையும் வாங்கினார்கள். அவர்

ஒரு யதேச்சதிகாரி என்பதற்காக அப்படிச் செய்தார்கள். ஆனால், யார் செய்தது சரி? யார் செய்தது தப்பு? ஒன்றுமில்லை. நீர் உயிரோடு இருந்தால் சரி. நீர் வாழ்ந்திடும். ஒரு மணி நேரத்திற்கு முன்னால் நான் சாவதாய் இருந்ததைப்போல நாளை நீர் சாகலாம். ஆகவே, நிரந்தர நிலைமையைக் கொண்டு பார்க்கும்போது, மனிதனின் வாழ்க்கை ஒரு வினாடி நேரம்போலவே தோன்றுகிறது. அப்பேர்ப்பட்ட வாழ்க்கையைப் பற்றி எண்ணி மனத்துயரம் அடைவதற்கு அவசியமா?'

இம்மாதிரி யோசனைகளால் தமது மனம் சாந்தி அடைந்து விட்டதென்று அவர் நினைத்துக் கொண்டிருந்த நேரத்தில், அவள் திடீரென்று அவர் மனதில் தோன்றினாள். அவளிடம் தமக்குக் காதல் கிடையாதென்று மிகுந்த பலமாக எப்பொழுது அவர் நினைப்பாரோ அப்பொழுதெல்லாம் அவள் உருவம் அவர் மனதில் தோன்றும். அதே மாதிரி இப்பொழுதும் தோன்றியது. உடனே அவருடைய ரத்தம் வேகமாய் இருதயத்திற்குப் பாய்ந்தது. மறுபடியும் எழுந்து வேகமாக உலாவி, கையில் அகப்பட்டதைக் கிழிக்கவோ உடைக்கவோ செய்தார். 'நான் அவளிடம், நான் உன்னைக் காதலிக்கிறேன் என்று ஏன் சொன்னேன்?' என்பதை திரும்பத்திரும்ப அவர் தமக்குள்ளே சொல்லிக்கொண்டிருந்தார். பத்து தடவைகள் அவர் சொல்லிய பின்பு, மாவீரன் வார்த்தைகள் அவருக்கு ஞாபகத்துக்கு வந்தன. 'அவன் என்ன சனியனுக்காக இந்த விவகாரத்தில் மாட்டிக்கொண்டான்' என்பவைகளே மாவீர் சொல்லியவார்த்தைகள். இவற்றை நினைத்ததும் மீண்டும் அவர் தமக்குள்ளேயே சிரிக்க ஆரம்பித்தார்.

தமது வேலைக்காரனை இரவில் அவர் அழைத்து தாம் பீட்டர்ஸ்பர்க்கிற்குப் போவதாகவும், தமது சாமான்களை யெல்லாம் கட்டிவைக்கும்படியும் சொன்னார். அவளுடன் எப்படிப் பேசுவது என்பதை அவரால் யூகிக்க முடியவில்லை. மறுநாள் அதைவிட்டுப் போய்விடுவதென்று அவர் தீர்மானித்தார். அவளை விட்டு இனி எப்பொழுதுமே தாம் பிரிந்திருக்கப் போவதாக செய்துள்ள தமது முடிவை ஒரு கடிதத்தில் எழுதி வைத்துவிட்டுப் போவதென்று தீர்மானித்தார்.

மறுநாள் காலையில் காபியோடு வேலைக்காரன் அவருடைய அறையில் வந்தபோது, சோபாவில் கையில் திறந்த புத்தகத்தோடு பீயர் படுத்து நன்றாய் தூங்கிக் கொண்டிருப்பதைக் கவனித்தான்.

அவர் விழித்து ஒரு பதற்றமான தோற்றத்தோடு சுற்றிலும் சிறிது நேரம் நோக்கினார். தாம் எங்கே இருக்கிறோம் என்பதை அவரால் அச்சமயம் உணர முடியவில்லை.

'மேன்மை தங்கியவரை இப்பொழுது பார்க்க முடியுமா என்று கோமகள் விசாரித்து வரச் சொன்னாள்' என வேலைக்காரன் கூறினான்.

என்ன பதில் சொல்லி அனுப்புவதென்று பீயர் முடிவு செய்வதற்குள்ளாக ஒரு வெள்ளை வெல்வெட் கவுன் அணிந்துகொண்டு கோமகளே அங்கு வந்துவிட்டாள் அவளுடைய தலைமுடி இரண்டு சடைகளாகப் பின்னப்பட்டு தலையைச் சுற்றி கிரீடம் மாதிரி கட்டப்பட்டிருந்தது. அவளுடைய கவுனில் வெள்ளியாலான பின்னல் வேலைப்பாடுகள் காணப்பட்டன. அமைதியாகவும், கம்பீரமாகவும் அவள் அறையில் நுழைந்தாள். அவளுடைய சலவைக்கல் போன்ற நெற்றியில் ஒரு கோபமான சுருக்கம் காணப்பட்டது. எதற்கும் கலங்காத அமைதியோடு காணப்பட்ட அவள், வேலைக்காரன் முன்பாக பேச விரும்பவில்லை. டூயல் சண்டையைப் பற்றி அவள் அறிவாள். அதைப் பற்றிப் பேசுவதற்காகவே இப்பொழுது வந்தாள். காபியை வைத்துவிட்டு வேலைக்காரன் போகிற வரையில் அவள் காத்திருந்தாள். தமது கண்ணாடிகளுக்கு மேலாக பீயர் பயத்தோடு அவளை பார்த்தார். வேட்டை நாய்களால் சூழ்ந்து கொள்ளப்பட்ட ஒரு முயல், எப்படி படுத்துக்கொண்டு காதுகளைப் பின்பாக மடக்கி எதிரிகளுக்கு முன்பாக எப்படி அசைவற்று இருக்குமோ, அதேமாதிரி அவர் தொடர்ந்து படித்துக் கொண்டிருக்க விரும்பினார். ஆனால் இம்மாதிரி செய்வது முடியாத காரியம் என்பதோடு கூட அர்தமற்றதுமாகும் என்று அவர் உணர்ந்தவுடன், பீதியோடு மீண்டும் அவளை நோக்கினார். அவள் உட்காரவில்லை. ஒரு துச்சமான புன்சிரிப்போடு வேலைக்காரன் போவதற்காகக் காத்துக்கொண்டு அவரை நோக்கிக் கொண்டிருந்தாள்.

'நல்லது. இப்பொழுது என்ன ஆயிற்று? இப்பொழுது நீர் என்ன செய்வதாய் உத்தேசம்? அது எனக்குத் தெரியவேண்டும்' என்று கடுமையோடு கேட்டாள்.

'நானா? நான் என்ன செய்தேன்?' என்று பீயர் தடுமாறினார்.

'ஆகவே நீர் இப்பொழுது வீரராய் விட்டீரோ? சரி வாரும். இந்த டூயல் சண்டை எதற்காக? எதை நிரூபிப்பதற்காக இது நடந்தது? என்ன? நான் உம்மைக் கேட்கிறேன்.'

அந்த சோபாவில் பீயர் புரண்டு படுத்தார். அவர் வாயைத் திறந்தார். ஆனால் அவரால் பதில் சொல்ல முடியவில்லை.

'உம்மால் பதில் சொல்ல முடியாவிட்டால், நான் உமக்குச் சொல்லுகிறேன்... உமக்கு யார் என்ன சொன்னாலும், அதை

யெல்லாம் நீர் நம்பிவிடுகிறீர். யார் என்ன சொன்னாலும் சரி' என்று சொல்லி ஹெலன் சிரித்தாள். 'டோலாகாவ் என்னுடைய காதலர் என்று (இந்த இடத்தில் அவள் பிரஞ்சு மொழியில் மட்டரகமான முறையில் பேசினாள். காதலர் என்ற வார்த்தையை மற்ற எந்த வார்த்தையையும்போல வெகு சாதாரணமாகச் சொன்னாள்) சொல்லியதை நீர் நம்பிவிட்டீர். நல்லது, இப்பொழுது எதை நீர் நிரூபித்திருக்கிறீர்? இந்த டூயல் சண்டை எதை நிரூபிக்கிறது? நீர் ஒரு முட்டாள் என்பதை நிரூபிக்கிறது. ஆனால் அதை ஒவ்வொருவரும் அறிவார். இதன்டைய முடிவு என்ன ஆகும்? மாஸ்கோ பூராவுக்கும் நான் சிரிப்புக்கிடமாவேன். நீர் என்ன செய்யப்போகிறீர் என்பதை அறியாமல், அவ்வளவு தூரம் குடித்துவிட்டு, ஒருவர்மீது காரணமில்லாமல் பொறாமை அடைந்து அவரை சண்டைக்கு இழுத்தீர் என்று எல்லாரும் சொல்லுவார்கள். (இந்த இடத்தில் ஹெலன் மேலும் மேலும் பரபரப்பு அடைந்து தனது தொனியையும் உயர்த்தி) அந்த மனிதர் உம்மைவிட ஒவ்வொரு விதத்திலும் சிலாக்கியமானவர்...'

'ஹிம்... ஹிம்...' என்று முகம் சுளித்து அவளைப் பார்க்காமலேயே பீயர் உறுமினார்.

'அவர் என்னுடைய காதலர் என்று சொல்லியதை நீர் எப்படி நம்ப முடியும்? ஏன்? நான் அவருடைய சகவாசத்தை விரும்புவதற்கு காகவா? நீர் அவரைவிட புத்திசாலியாகவும், அவரைவிட மனதிற்குப் பிடித்தமானவராகவும் இருந்தால், நான் உமது சகவாசத்தையே விரும்பியிருப்பேன்.'

'என்னிடம் பேசவேண்டாம்... நான் உன்னைக் கெஞ்சுகிறேன்' என்று பீயர் கரகரப்பாக முணுமுணுத்தார்.

'நான் ஏன் பேசக்கூடாது? நான் எனக்கு விருப்பமானதை பேசுவேன். உம்மைப் போன்ற கணவர்களைக் கொண்ட மனைவிகள் வேறு காதலர்களை வைத்துக் கொள்ளாமலிருப்பது ரொம்ப அபூர்வம். ஆனால் நான் அப்படிச் செய்யவில்லை' என்றாள்.

பீயர் எதையோ சொல்ல விம்பினார். அவருடைய கண்களில் ஒரு விசித்திரமான தோற்றம் காணப்பட்டது. அவளைப் பார்த்தார். அவளால் அந்தத் தோற்றத்தை அறிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே அவர் மீண்டும் படுத்துக்கொண்டார். அச்சமயத்தில் அவர் மிகவும் வருந்தினார். அவருடைய நெஞ்சில் ஏதோ ஒன்று அமுக்குவது போலவும், அதனால் மூச்சு விட முடியவில்லை என்பது போலவும் அவர் உணர்ந்தார். இந்தக் கஷ்டங்களுக்கு ஒரு

முடிவு காண்பதற்கு எதையாவது செய்ய வேண்டும் என்பதை அவர் அறிவார். ஆனால் அவர் செய்ய விரும்பியது மிகவும் பயங்கரமானது.

'நாம் இருவரும் பிரிந்திருப்பது நல்லது' என்று உடைந்த குரலில் அவர் முணுமுணுத்தார்.

'பிரிந்திருக்கவா? ரொம்ப நல்லது. ஆனால் அதற்காக ஏராளமாக நீர் எனக்கு செல்வம் கொடுத்தாக வேண்டும். பிரிந்திருக்க வேண்டுமாம். என்னை பயமுறுத்துவதற்காகச் சொல்லுகிறீர் என்றாள் ஹெலன்.

சோபாவிலிருந்து திடீரென்று பீயர் குதித்து தடுமாற்றத்தோடு அவள் இருந்த திசையில் பாய்ந்தார்.

'நான் உன்னைக் கொல்லுவேன்' என்று அவர் கத்தி, அங்கிருந்த மேஜையின் மீது உள்ள சலவைக்கல் மூடியை தூக்கினார். அப்பொழுது அவருக்கு இருந்த பலத்தைப் போல, அதற்கு முன் இருந்ததாக அவரால் உணர முடியவில்லை. இந்தச் சலவைக் கல்லை ஆட்டிக்கொண்டு அவளை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்தார்.

ஹெலனின் முகம் பயங்கரமாய் மாறியது. அவள் பயத்தால் கதறிக்கொண்டு மற்றொரு புறம் தாவினாள். தமது தகப்பனாரின் குணம் பீயரிடம் தோன்றியது. வெறி கொள்வதில் உண்டான மகிழ்ச்சியையும், கவர்ச்சியையும் அவர் உணர்ந்தார். அந்தச் சலவைக் கல்லை வீசியெறிந்தார். அது உடைந்தது. பின்னால் கைகளை நீட்டிக்கொண்டே அவள்மீது பாய்ந்தார். அந்த வீடு முழுவதுமே பயத்தால் நடுநடுங்கும்படி ஒரு பயங்கரமான சத்தத்தோடு, 'வெளியே போ' என்று கத்தினார். இந்த வினாடியில் மட்டும் அந்த அறையிலிருந்து ஹெலன் ஓடியிருக்காவிட்டால், அவர் என்ன செய்திருப்பார் என்பதை கடவுளே அறிவார்.

★ ★ ★

ருஷ்யாவில் உள்ள அவருடைய சகல எஸ்டேட்டுகளையும் ஆளக்கூடிய முழு அதிகாரத்தையும் தமது மனைவிக்கு ஒருவாரத்திற்குப் பின்னால் பீயர் கொடுத்துவிட்டு தனியாக பீட்டர்ஸ்பர்க்கிற்குப் போனார்.

4

7

ஆஸ்டர்லிட்ஜில் நடந்த சண்டையைப் பற்றியும், இளவரசர் ஆண்ட்ரூ காணாமல் போனதைப் பற்றியும், 'பால்டு ஹில்ஸ்' மாளிகைக்கு செய்திகள் வந்து இரண்டு மாதங்களாய் விட்டன. ஸ்தானாதிபதி காரியாலயங்கள் மூலமாக பல கடிதங்கள் அனுப்பியும் பல இடங்களில் தேடிப் பார்த்தும், அவருடைய சரீரம் இன்னும் அகப்படவில்லை. அல்லது யுத்தக் கைதிகளின் ஜாபிதாவிலும் அவர் பெயர் காணப்படவில்லை. யுத்த களத்தில் அவர் அந்தப் பிரதேச மக்களால் கண்டுபிடிக்கப்பட்டு இருக்கலாம் என்றும் தனிமையாக அந்த அந்நியர்களிடம் அவர் குணமாய்க் கொண்டோ அல்லது இறந்துகொண்டோ இருக்கலாமென்றும், தம்மைப் பற்றிய செய்திகளை அவர் அனுப்ப முடியாமல் இருக்கலாமென்றும், சாத்தியங்கள் இருப்பதாக சிலர் சொல்லி வந்தது இன்னும் அதிகமான கவலையைக் கொடுத்து வந்தது. ஆஸ்டர்லிட்ஜ் சண்டையில் ஏற்பட்ட தோல்வியைப் பற்றி கெஜட் மூலமாக வயோதிக இளவரசர் முதலில் அறிந்து கொண்டார். வழக்கம் போல சுருக்கமாவும் தெளிவில்லாமலும் அந்தக் கெஜட்டில் செய்திகள் பிரசுரிக்கப்பட்டிருந்தன. 'பிரமாதமாக ருஷ்யர்கள் போரிட்ட பின்பும், மிகவும் ஒழுங்கான முறையில் பின்வாங்கினார்கள்' என்று அதில் பிரசுரிக்கப்பட்டிருந்தது. உத்தியோக பூர்வமான இந்த அறிக்கையைப் பார்த்து, நமது ராணுவம் தோல்வி அடைந்துவிட்டது என்பதை வயோதிக இளவரசர் அறிந்துகொண்டார். ஆஸ்டர்லிட்சு சண்டையைப் பற்றி கெஜட்டில் அறிக்கை வெளிவந்த ஒரு வாரத்திற்கு பின்னால் குட்டுஜோவிட மிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் அவருடைய குமாரருக்கு நேர்ந்த கதியைப் பற்றி வயோதிக இளவரசருக்கு எழுதியிருந்தார்.

'எனது கண்களின் முன்பாக உமது குமாரர் கீழே விழுந்தார். ஒரு பட்டாளத்திற்குத் தலைமை வகித்து, கையில் கொடி தாங்கி ஒரு வீரரைப் போல தமது தந்தைக்கும் தந்தை நாட்டிற்கும் மிகுந்த கௌரவம் கொடுப்பவரைப் போல அவர் கீழே விழுந்தார். என்னுடையவும், என்னுடைய முழு ராணுவத்தினுடையவும் ஒரு பெரிய துயரம் என்னவென்றால், அவர் உயிருடன் இருக்கிறாரா இல்லையா என்ற விஷயம் இன்னமும் நிச்சயமில்லாமலே இருக்கிறது. உமது குமாரர் இன்னமும் உயிரோடு இருக்கிறதாக நம்பிக்கைகொண்டு, உம்மையும் என்னையும் நான் தேற்றிக்

கொள்ளுகிறேன். இல்லையென்றால், யுத்த களத்தில் கீழே கிடந்து அடையாளம் கண்டுபிடிக்கபட்டு அதிகாரிகளின் ஜாபிதாவில் அவருடைய பெயரும் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும்.

தமது படிப்பு அறையில் வயோதிக இளவரசர் இருந்தபோது, ஒருநாள் மாலை இச்செய்தி அவருக்குக் கிடைத்தது. மறுநாள் காலையில் வழக்கம்போல் அவர் உலாவப் போனார். அவருடைய மேனேஜரும் தோட்டக்காரரும் கட்டிட சிற்பியும் அவருடன் போனார்கள். ஆனால் அவர் மௌனமாய் இருந்தார். மிகுந்த வருத்தத்தோடு இருப்பதாக அவர் காணப்பட்டாலும், ஒருவரிடமும் எதையும் சொல்லவில்லை.

குறிப்பிட்ட நேரத்தில் இளவரசி மேரி அவரிடம் போனபோது, அவர் வழக்கம்போல தமது கடைசல் யந்திரத்தில் வேலை செய்து கொண்டிருந்தாரேயொழிய அவளைத் திரும்பிப் பார்க்கவில்லை.

‘ஹா, மேரி இளவரசியே’ என்று திடீரென்று இயற்கைக்கு விரோதமான குரலில் கூறி, தமது கையிலிருந்த சிற்றுளியைக் கீழே வீசினார். (அந்த யந்திரத்தின் சக்கரம் முதலில் கொடுத்த வேகத்தினால் இன்னும் சுற்றிக் கொண்டிருந்தது. அவர் அம்மாதிரி அந்த யந்திரத்தை விட்டு வந்த பின்பு அந்தச் சக்கரம் எம்மாதிரியாகச் சுற்றிச் சுற்றி ஓயும் என்பது இளவரசிக்கு அச்சமயம் ஞாபகத்திற்கு வந்தது)

அவள் அவரிடம் சென்று அவர் முகத்தைப் பார்த்தாள். தனக்குள் ஏதோ ஒன்று திடீரென்று அறுந்து போனதுபோல அவள் உணர்ந்தாள். அவளுடைய கண்கள் மங்க ஆரம்பித்தன. அவளுடைய தந்தையின் முகத்தில் காணப்பட்ட தோற்றம் துக்கமாக இல்லை. அடிபட்டதுபோல் இல்லை. ஆனால் கோபமாக, இயற்கைக்கு விரோதமாக வேலை செய்து கொண்டிருப்பதாகத் தோன்றியது. தனக்கு மேலாக ஏதோ பயங்கரமான துரதிருஷ்டம் தொங்கிக் கொண்டிருப்பது போலவும், அது தன்னை நசுக்கப் போவது போலவும், அம்மாதிரியான மோசமான காரியத்தை வாழ்க்கையில் இது வரை அனுபவித்ததில்லை என்றும், அது ஈடு செய்ய முடியாதது என்றும், அறிவுக்கு எட்டாதது என்றும் அவளுக்குத் தோன்றியது. அதாவது, அவள் மிகுந்த பிரியம் கொண்ட ஒருவரின் மரணமாய் இருக்கவேண்டும்.

‘அப்பா, ஆண்ட்ரூ’ என்று அந்த அழகற்ற விகாரமான இளவரசி சொல்ல முடியாத சோகத் தோற்றத்தோடு, அம்மாதிரி அவள் காணப்படுவதை அவளுடைய தந்தையால் தாங்கிக்கொள்ள முடியாதுஎன்பதையும் மறந்து கூச்சலிட்டு, தேம்பலோடு தன் முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

'ரொம்ப துக்கமான செய்தி. அவருடைய பெயர் கைதிகள் ஜாபிதாவிலும் இல்லை. கொல்லப்பட்டவர்கள் ஜாபிதாவிலும் இல்லை. குட்டுஜோவ் எழுதியிருக்கிறார்....' என்று அந்த இளவரசியை தமது கூச்சலினால் விரட்டிவிட நினைப்பவரைப் போல பயங்கரமாக அலறினார். 'அவன் கொல்லப்பட்டான்'

இளவரசி மூர்ச்சையாவும் இல்லை, கீழே விழவும் இல்லை. அவள் முகம் ஏற்கனவே வெளிறிப்போய்இருந்தது. இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அவளுடைய முகம் மாறி, எதோ ஒன்று அவளுடைய அழகிய பிரகாசமான கண்களை அதிகப் பிரகாசம் அடையும்படிச் செய்தது. அது ஒரு உயர்ந்த மகிழ்ச்சி என்று அவள் உணர்ந்தாள். இந்த உலகத்தின் சந்தோஷங்களுக்கும் துக்கங்களுக்கும் புறம்பான ஒரு உயரிய மகிழ்ச்சி அவளுக்குள் தோன்றிய அந்தப் பெரிய துக்கத்தை மூடியது. தனது தகப்பனாரைப் பற்றிய பயத்தையெல்லாம் அவள் மறந்தாள். அவரிடம் நெருங்கிப் போய் அவர் கையைப் பற்றி அவரைக் கீழே இழுத்து அவருடைய மெல்லிய தோள்களைக் கைகளால் வளைத்து சொன்னாள்:

'அப்பா, என்னை விட்டு நீர் போகவேண்டாம். நாம் இருவரும் சேர்ந்தே அழுதுகொண்டிருப்போம்'

'அயோக்கியர்கள், வீணர்கள்' என்று அந்த வயோதிகர் அலறி அவளிடமிருந்து முகத்தைத் திருப்பிக்கொண்டார். 'ராணுவத்தை நாசமாக்கிவிட்டார்கள். மனிதர்களைக் கொன்றுவிட்டார்கள். இவ்வளவும் எதற்காக? நீ போ, போய் லிசாவிடம் சொல்'

தனது தந்தைக்குப் பக்கத்தில் ஒரு சாய்வு நாற்காலியில் ஆதரவற்ற நிலையில் இளவரசி சாய்ந்து அழுதுகொண்டிருந்தாள். தன்னிடமும் லிசாவிடமும் விடை பெற்றுக்கொண்டு தன்னுடைய சகோதரர் போன சமயத்தில், அவருடைய தோற்றம் எவ்வளவு கனிவாகவும் பெருமையாகவும் இருந்தன என்பதை அச்சமயம் அவள் நினைவு கொண்டாள். ஒரு சிறிய தெய்வ பதக்கத்தை சகோதரரிடம் அவள் கொடுத்து அவர் பதக்கத்தை மாட்டிக்கொண்டபோது, அவருடைய கனிவான, வேடிக்கையான தோற்றத்தை இப்பொழுது அவள் கண்முன் கண்டாள். 'அவர் அதை நம்பினாரா? தம்முடைய அவநம்பிக்கையாக அவர் வருந்தினாரா? இப்பொழுது அவர் அங்கே இருக்கிறாரா? அந்த நிரந்தரமான அமைதியும், ஆசீர் வாதங்களும் நிறைந்த அந்த உலகத்தில் அவர் இருக்கிறாரா?' என்று நினைத்தாள்.

'அது எப்படி நடந்தது என்று சொல்லுங்கள், அப்பா' என்று அவள் கண்ணீரோடு கேட்டாள்.

'போ, போ, யுத்தத்தில் கொல்லப்பட்டான். அங்கேதான் ருஷ்யாவில் உள்ள மனிதர்களையும் ருஷ்யாவின் பெருமையையும் நாசமாக்குகிறார்கள். இளவரசி மேரியே, நீ போ. போய் லிசாவிடம் சொல்லு. நான் உன் பின்னால் வருகிறேன்'.

இளவரசி மேரி தமது தந்தையிடமிருந்து திரும்பினாள். பின்னல் வேலை செய்துகொண்டிருந்த குஞ்சு இளவரசி மகிழ்ச்சியான அமைதியோடு, அதாவது கர்ப்பமான ஸ்திரீகளுக்குத் தனியாக ஏற்படக்கூடிய அந்த மகிழ்ச்சியோடு அவளை நோக்கிப் பார்த்தாள். அவளுடைய கண்கள் இளவரசி மேரியைப் பார்க்கவில்லை. ஆனால் அவளின் உள்ளத்தைப் பார்ப்பதைப்போல, அவளுக்கு உள்ளே இருப்பதைப் பார்ப்பதைப்போல, அவளுக்கு உள்ள எதோ ஒன்று அதிசயமான, மகிழ்ச்சியான காரியம் நடைபெறுவதைப் பார்ப்பதைப் போலத் தோன்றியது.

தான் செய்துகொண்டிருந்த பின்னல் வேலையை அப்பால் வைத்துவிட்டு, சோபாவில் , சாய்ந்து 'மேரி, உன் கையை எனக்கு கொடு' என்று அவளுடைய மைத்துனியின் கையை எடுத்து அவளுடைய இடுப்பிற்குப் பக்கத்தில் பிடித்துக்கொண்டிருந்தாள்.

அவளுடைய கண்கள் எதையோ எதிர் பார்த்து புன் முறுவல் கொண்டன. அவளுடைய குட்டையான உதடு மேலே தூக்கி குழந்தைத்தனமான சிரிப்போடு அப்படியே நின்றது.

இளவரசி மேரி அவளுக்குப் பக்கத்தில் முழுங்கால் படியிட்டு, அவளுடைய முகத்தை மைத்துனியின் ஆடையில் மறைத்துக் கொண்டிருந்தாள்.

'அதுதான், அதுதான், உனக்குத் தெரிகிறதா? எனக்கு இந்த அதிசயமான உணர்ச்சி தோன்றுகிறது. நான் அந்தக் குழந்தையை அதிகமாய் நேசிக்கப்போகிறேன் என்பது உனக்குத் தெரியுமா, மேரி? என்று தன் மைத்துனியை சந்தோஷமான, பிரகாசமான கண்களால் பார்த்து லிசா கூறினாள்.

இளவரசி மேரியால் தனது தலையை நிமிர்த்த முடியவில்லை. அவள் அழுது கொண்டிருந்தாள்.

'என்ன சமாச்சாரம், மேரி?'

'ஒன்றுமில்லை... எனக்குதுக்கமாய் இருக்கிறது... ஆண்ட்ரூவைப் பற்றி நான் துக்கமாய் இருக்கிறேன்' என்று அவள் சொல்லி, அவளுடைய மைத்துனி முழங்காலில் விழுந்த கண்ணீர்த் துளிகளைத் துடைத்தாள். அன்று காலையில் இளவரசி மேரி தனது மைத்துனியை தயார் செய்வதற்கு பல தடவைகள் முயற்சிக்க ஆரம்பித்தாள். ஆனால் ஒவ்வொரு தடவையிலும் அவள்

அழுவதற்கே ஆரம்பித்தாள். குஞ்சு இளவரசி நன்றாக கவனிக்ககூடிய சுபாவம் இல்லாதபடியால், இந்தக் கண்ணீரின் காரணத்தை அறிந்துகொள்ள முடியாமல் பரபரப்பு கொண்டாள். அவள் ஒன்றும் சொல்லவில்லை. எதையோ ஒன்றைத் தேடுவது போல மனக் குழப்பத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள். வயோதிக இளவரசரைப் பற்றி அவளுக்கு எப்பொழுதுமே பயம். டின்னருக்கு முன்னால் அவர் அவளுடைய அறைக்கு வந்தார். ஒரு தனிப்பட்ட குழப்பமான வெறுப்பான தோற்றத்தோடு அவர் காணப்பட்டார். ஒருவார்த்தைகூட சொல்லாமல் மீண்டும் அறையை விட்டு வெளியே போனார். இளவரசி மேரியை அவள் பார்த்தாள் . சிறிது நேரம் யோசித்துக் கொண்டிருந்தாள். கர்ப்பமானவளுக்குத் தனியாக ஏற்படக்கூடிய ஒரு உணர்ச்சியோடு தன் வயிற்றுக்குள் உள்ள ஒன்றின்மீது கவனம் செலுத்தினாள். உடனே திடீரென அழ ஆரம்பித்தாள்.

'ஆண்ட்ரூவிடமிருந்து ஏதாவது செய்தி வந்ததா? என்று அவள் கேட்டாள்.

'இல்லை. செய்தி வருவதற்கு இன்னும் காலமாகவில்லை என்பது உனக்குத் தெரியும். ஆனால் தந்தை கவலையோடு இருக்கிறார். நானும் பீதி அடைகிறேன்'.

'அப்படியானால், விசேஷம் ஒன்றும் இல்லை அல்லவா?'

'ஒன்றுமேயில்லை' என்று இளவரசி மேரி பதில் சொல்லிவிட்டு, தனது பிரகாசமான கண்களால் தமது மைத்துனியை அழுத்தமாகப் பார்த்தாள்.

அவளிடம் சொல்லுவதில்லையென்று அவள் தீர்மானித்தாள். அந்தப் பயங்கரமான செய்தியை அவளுக்குப் பிரசவமாகிற வரையில் அவளிடம் சொல்லக்கூடாதென்று தனது தந்தையையும் கேட்டு சம்மதிக்கும்படிச் செய்துவிட்டாள். இன்னும் சில தினங்களில் பிரசவம் ஆய்விடுகிற மாதிரி இருந்தது. இளவரசி மேரியும். வயோதிக இளவரசரும்தங்களுடைய துக்கங்களை மறைத்து தாங்களே தனியாக அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். வயோதிக இளவரசருக்கு எந்த விதமான நம்பிக்கையும் இப்பொழுது இல்லை. இளவரசர் ஆண்ட்ரூ கொல்லப்பட்டு விட்டார் என்று அவர் மனதில் தீர்மானம் செய்துவிட்டார். அவரைத் தேடிப் பார்க்கும்படி ஒரு அதிகாரியை ஆஸ்திரியாவுக்கு அனுப்பியிருந்தபோதிலும், இளவரசர் ஆண்ட்ரூவுக்காக தமது சொந்தத் தோட்டத்தில் ஒரு ஞாபகச் சின்னம் ஏற்படுத்துவதற்கு அவர் மாஸ்கோவிற்கு உத்தரவு அனுப்பியிருந்தார். தம்மை

சந்திக்கிறவர்களிடத்திலும், தமது குமாரர் இறந்து போய்விட்டார் என்று சொல்லி வந்தார். பழைய நடைமுறைகளை மாற்றாமல் இருக்க அவர் முயற்சித்தார். ஆனால் அவருடைய உடல் வலிமை அதற்கு இடம்கொடுக்கவில்லை. அவர் நடப்பதையும் உண்ணுவதையும் உறங்குவதையும் வரவரக் குறைத்துக்கொண்டு வந்தார். நாளுக்கு நாள் அவர் பலவீனமாய்க்கொண்டு வந்தார். ஆனால் இளவரசி மேரி நம்பிக்கையை விடவில்லை. தனது சகோதரர் உயிரோடு இருப்பதாக எண்ணி, அவருக்காக அவள் பிரார்த்தனை செய்துவந்தாள். அவர் திரும்புவதைப் பற்றிய செய்தியை அவள் எப்பொழுதும் எதிர் பார்த்துக்கொண்டிருந்தாள்.

## 4

### 8

மார்ச் மாதம் 19-ம் தேதியன்று காலையில், சிற்றுண்டிக்குப் பின்னால், குஞ்சு இளவரசி, 'எனது அன்பிலும் அன்பானவளே' என்று கூறினாள். அவளுடைய குட்டையான உதடு பழைய வழக்கத்தினால் மேலே உயர்ந்தது. அந்த பயங்கரமான செய்தி வந்ததற்குப் பின்னால், அந்த வீட்டில் ஒவ்வொரு புன்னகையிலும், ஒவ்வொரு வார்த்தையின் குரலிலும், ஒவ்வொரு காலடி ஓசையிலும் துக்கமான தோற்றம் பரந்து நின்றது. ஆகவே இப்பொழுது அந்தக் குஞ்சு இளவரசியின் புன்னகை அங்குள்ள பொதுவான சூழ்நிலையின் காரணமாக- அதன் காரணத்தை அவள் அறியாள் - பொதுவான சோகத்தை ஒவ்வொருவருக்கும் ஞாபகமூட்டுவதாய் இருந்தது.

'எனது அன்பிலும் அன்பானவளே! இன்று காலை சாப்பிட்ட உணவு என் உடம்புக்குப் பிடிக்கவில்லை என்று தோன்றுகிறது'

'என் கண்ணே, உனக்கு உடம்புக்கு என்ன செய்கிறது? உன் முகம் வெளிறி இருக்கிறது. நீ மிகவும் அதிகமாக வெளிறிக் கொண்டிருக் கிறாய்' என்று இளவரசி மேரி பீதியோடு கூறி, தனது மைத்துனியிடம் மெதுவாக, ஜாக்கிரதையாக நடை எடுத்துவைத்து ஓடினாள்.

'மேன்மை தங்கியவரே, மேரி பாக்டாநாவ்னாவை அழைத்து வரவேண்டாமா?' என்று அங்கு ஆஜராய் இருந்த ஒரு வேலைக்காரி கேட்டாள். (மேரி பாக்டாநாவ்னா பக்கத்து நகரத்திலிருந்து வந்த ஒரு மருத்துவச்சி. அந்த பால்ட் ஹில்ஸ் மாளிகையில் கடந்த இரண்டு வாரங்களாக அவள் தங்கி வருகிறாள்)

'ஆமாம், ஒருவேளை அதுவாய் இருக்கலாம். நான் போகிறேன். தைரியமாய் இரு, எனது தேவதையே' என்று மேரி இளவரசி சொன்னாள். லிசாவுக்கு முத்தம் கொடுத்துவிட்டு, அவள் அறையை விட்டுப் புறப்படத் தயாரானாள்.

'ஓ, இல்லை, இல்லை' என்று அந்தக் குஞ்சு இளவரசி சொன்னாள். அந்தக் குஞ்சு இளவரசியின் முகத்தில் சரீர உபாதையும், பயத்தால் ஏற்பட்ட வெளிறலும் காணப்பட்டன. அவற்றோடு வரப்போகும் தவிர்க்க முடியாத பிரசவ வலியை நினைத்து குழந்தைத்தனமான பயமும் தோன்றியது.

'இல்லை, அது வெறும் அஜீரணமாய்த்தான் இருக்கும்... அஜீரணம் என்று சொல்லு, மேரி, அப்படியே சொல்லு... சொல்லு...'

உடம்புக்கு சரியில்லாத ஒரு குழந்தையைப் போல, குஞ்சு இளவரசி ஸ்திர புத்தியில்லாமல் அழ ஆரம்பித்தாள். கைகளை உதறினாள். ஆனால், மேரி பாக்டாநாவ்னாவை அழைத்து வருவதற்காக, இளவரசி மேரி அறையை விட்டு வெளியே ஓடினாள்.

'எனது தெய்வமே, எனது தெய்வமே, ஓ' என்ற குரல்களை அவள் வெளியே ஓடும்போது கேட்டாள்.

தமது முக்கியத்துவத்தைக் காட்டக்கூடிய தோற்றத்தில், தனது பருத்த வெள்ளைக் கைகளைத் தேய்த்துக்கொண்டு, அந்த மருத்துவச்சி வந்து கொண்டிருந்தாள்.

'மேரி பாக்டாநாவ்னா, அது ஆரம்பித்துவிட்டது என்று நினைக்கிறேன்' என இளவரசி மேரி, அந்த மருத்துவச்சியை பீதியுற்ற விரிந்த கண்களோடு நோக்கிக்கொண்டு சொன்னாள்.

'நல்லது, கடவுள் போற்றபடுவாராக, இளவரசியே' என்று மேரி பாக்டாநாவ்னா கூறினாள். ஆனால் அவள் நடையின் வேகத்தை அதிகரிக்கவில்லை. 'வாலிப சீமாட்டிகளான உங்களுக்கு அதைப் பற்றி ஒன்றும் தெரியக்கூடாது'.

'மாஸ்கோவிலிருந்து வரவேண்டிய டாக்டர் இன்னும் ஏன் வரவில்லை? என்று இளவரசி கேட்டாள். ( லிசாவினுடையவும், இளவரசர் ஆண்டரூவினுடையவும் விருப்பப்படி மாஸ்கோ விலிருந்து ஒரு டாக்டரை வரவழைக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். அவரை ஒவ்வொரு வினாடியும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.)

'அதைப்பற்றி கவலையில்லை, இளவரசியே. நீங்கள் பயப்பட வேண்டாம். ஒரு டாக்டர் இல்லாமலேயே நாம் எல்லாவற்றையும் நன்றாக சமாளித்துவிடலாம்' என்றாள் மேரி பாக்டாநாவ்னா.

ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு, எதையோ கனமான ஒன்றைத் தூக்கிக்கொண்டு போவதைப் போன்ற ஓசையை, தனது அறையில் இருந்த இளவரசி மேரி கேட்டாள். அவள் வெளியே பார்த்தாள். வேலைக்காரர்கள், இளவரசர் ஆண்ட்ரூவின் அறையில் இருந்த பெரிய சோபாவை, படுக்கை அறைக்குள் கொண்டு போய்க்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய முகத்தில் ஒரு அமைதியான பவித்திரமான தோற்றம் காணப்பட்டது.

இளவரசி மேரி தனியாகத் தன் அறையில் அமர்ந்து, அந்த வீட்டில் கேட்டுக்கொண்டிருந்த சத்தங்களைக் கவனித்துவந்தாள். தன் அறையின் முன்பு யாராவது போகும்போது இடையிடையே தன் அறையின் கதவைத் திறந்து அந்த ஆளோடியில் என்ன நடக்கிறதுஎன்பதைக் கவனித்து வந்தாள். மெதுவான காலடி எடுத்துவைத்து, படுக்கை அறையிலிருந்து உள்ளும்வெளியும் போய்க் கொண்டிருந்த சில பெண்கள், இளவரசி மேரியை நோக்கிவிட்டு திரும்பிக்கொண்டார்கள். அவள் எந்தக் கேள்வியையும் கேட்கத் துணியவில்லை. அதனால் மீண்டும் கதவைச்சாத்திக்கொண்டாள்.

தனது சாய்வு நாற்காலியில் உட்காருவதும் பிரார்த்தனைப் புத்தகத்தை எடுத்துப் படிப்பதும், தெய்வச் சிலையின் முன்பாக முழங்கால் படி இடுவதுமாய் இருந்தாள். அவளுடைய பிரார்த்தனைகளால் அவளுக்கு ஏற்பட்டிருந்த பரபரப்பை அடக்க முடியவில்லை என்பதைக் கண்டதும் அவளுக்கு ஆச்சரியமும் வருத்தமும் ஏற்பட்டன. திடீரென்று அவள் அறையின் கதவு மெதுவாய் திறக்கப்பட்டது. அவளுடைய பழைய தாதி பிராஸ்கோவியா சாவிஷ்னா தன்னுடைய தலையில் ஒரு சால்வையைப் போட்டுக்கொண்டு தோன்றினாள். அவள் அந்த அறைக்குள் வரக்கூடாதென்று வயோதிக இளவரசர் தடுத்திருந்தபடியால், அந்த அறைக்கு அவள் வருவதேயில்லை.

'உன்னுடன் சிறிது நேரம் இருக்கலாமென்று நான் வந்தேன், மாஷா. இளவரசரின் கல்யாண மெழுகுவத்திகளை இதோ நான் கொண்டு வந்திருக்கிறேன். அவருடைய மகாத்மாவின் முன்பு அவற்றைப் பொருத்தி வைக்கவேண்டும், எனது தேவதையே' என்று ஒரு பெருமூச்சோடு சொன்னாள்.

'அப்படியா, தாதியே? எனக்கு மிகுந்த சந்தோஷம்!'

'கடவுள் எப்பொழுதுமே கருணை உள்ளவர், என் அன்பே'

அந்தத் தாதி மெழுகு வத்திகளைப் பொருத்தி தெய்வச்சிலைக்கு முன்பாக வைத்துவிட்டு, கதவிற்குப் பக்கத்தில் அமர்ந்து தனது

பின்னல் வேலையை செய்துகொண்டிருந்தாள். ஒரு புத்தகத்தை எடுத்து இளவரசி மேரி வாசிக்க ஆரம்பித்தாள். காலடி ஓசையோ பேச்சுக் குரல்களோ கேட்கும்போது, ஒருவருக்கொருவர் பார்த்துக்கொள்ளுவார்கள். பரபரப்போடும் கேள்விக்குறியோடும் இளவரசி பார்ப்பாள். தைரியமாய் இருக்கும்படி தனது பார்வையால் அந்தத் தாதி தைரியமூட்டுவாள். இளவரசி மேரி தனது அறையிலிருந்து என்ன அனுபவத்தை அடைந்து கொண்டிருந் தாளோ, அதே அனுபவத்தைத்தான் அந்த வீட்டிலுள்ள ஒவ்வொருவரும் அடைந்து கொண்டிருந்தார்கள். ஆனால் ஒரு பெண் கஷ்டப்படும்போது, அதைப் பற்றி அறிந்தவர்கள் அதிகமாய் இல்லாமல் இருந்தால், அவள் அனுபவிக்கும் கஷ்டம் குறையும் என்ற ஒரு மூட நம்பிக்கை இருந்துவந்தபடியால், ஒவ்வொருவரும் தங்களுக்குத் தெரியாததுபோல் நடித்துவந்தார்கள். ஒருவரும் அதைப் பற்றி பேசுவதில்லை. இளவரசரின் மாளிகையில் சாதாரணமாகக் காணப்படுகிற மாரியாதையான நடையுடை பாவனைகள் வெளிப்பார்வைக்கு தெரிந்தபோதிலும், ஒரு பொதுவான கவலையும், மனங்கனிந்த நினைப்பும், ஒரு அதிசயமான பெரிய காரியம் அந்த வினாடியில் அங்கு நடந்து கொண்டிருப்பதாக ஏற்பட்டுள்ள பிரக்ஞையும் அங்கு காணப்பட்டன.

வேலைக்காரிகளின் பெரிய கூடத்தில் சிரிப்பு எதுவும் இல்லை. வேலைக்காரர்கள் எல்லாரும் கூடத்தில் அமைதியாவும், ஜாக்கிரதையாகவும் உட்கார்ந்து காத்துக்கொண்டிருந்தார்கள். வெளியே உள்ள அடிமைகளின் விடுதிகளில் தீவட்டிகளும் மெழுகு வத்திகளும் எரிந்து கொண்டிருந்தன. ஒருவரும் தூங்கவில்லை. வயோதிக இளவரசர், தமது குதிக்கால்களால் தமது அறையில் மேலும் கீழும் நடந்துகொண்டிருந்தார். தமது சேவகனான டிக்கனை அனுப்பி, என்ன செய்தி என்று மேரி பக்டாநாவ்னாவிடம் விசாரித்து வரும்படி சொன்னார். 'இளவரசர் கேட்கச் சொன்னார் என்று மட்டும் சொல்லு. அவள் என்ன பதில் சொல்லுகிறாளோ, அதை என்னிடம் வந்து கூறு' என்றார்.

'பிரசவவலி ஆரம்பமாய்விட்டதென்று இளவரசரிடம் போய்ச்சொல்லு' என்று ஒரு முக்கியத்துவ பார்வையோடு, மேரி பாக்டாநாவ்னா அந்த வேலைக்காரனிடம் சொல்லி அனுப்பினாள்.

இளவரசரிடம் டிக்கன் சென்று அதைக் கூறினான்.

'ரொம்ப சரி' என்று இளவரசர் சொல்லிவிட்டு, அறைக் கதவைச் சாத்திக்கொண்டார். அதற்குப் பின்னால் அந்த அறையிலிருந்து ஒரு இம்மி சப்தம்கூட வெளியே கேட்கவில்லை.

அவன் மீண்டும் மெழுகுவத்திகளைக் கொளுத்தி வைப்பதற்காக அறைக்குள் நுழைந்தபோது, இளவரசர் சோபாவில் படுத்திருந்ததை அவன் பார்த்தான். அவருடைய துயரமான முகத்தை அவன் பார்த்து தன் தலையை அசைத்துக்கொண்டு அவரிடம் சென்று மெதுவாக அவர் தோள்களில் முத்தமிட்டுவிட்டு, அவன் நினைத்து வந்த வேலையைச் செய்யாமலும் தான் எதற்காக அறைக்குள் வந்தான் என்பதைச் சொல்லாமலும் அறையை விட்டு வெளியே போனான். உலகத்தில் உள்ள ஒரு மிகுந்த பவித்திரமான ரகசியம் தனது வழியில் போய்க்கொண்டிருந்தது. மாலை கழிந்தது. இரவு வந்தது. அந்த ஆழம் காணமுடியாத சந்நிதானத்தில், அந்த ஆவலின் உணர்ச்சியும், உள்ளத்தை உருக்கும் காரியமும் இன்னும் குறையவில்லை. கூடிக்கொண்டே இருந்தது. ஒருவரும் தூங்கவில்லை.

  

மார்ச் மாதத்தில் ஓர் இரவு. குளிர்காலம் தனது ஆதிக்கத்தை மீண்டும் ஏற்படுத்த விரும்பி தனது கடைசியான பனித் தூவல்களைப் பெய்து, அசாத்தியமான கோபத்தோடு புயலை ஏவிவிட்ட மாதிரி தோன்றிற்று. மாஸ்கோவிலிருந்து வந்து கொண்டிருந்த ஜெர்மன் டாக்டரை அழைத்து வருவதற்காக, அங்கங்கே குதிரைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. கிராமாந்திர ரஸ்தாக்களில் பள்ளங்களும் பனி மூடிய குட்டைகளும் இருந்தபடியால், அதில் வழிகாட்டுவதற்காக ரஸ்தா சந்திப்புகளில் கையில் விளக்குகளுடன் வேலைக்காரர்கள் குதிரைமீது காத்திருந்தார்கள்.

இளவரசி மேரி தனது புத்தகத்தை அப்புறமாக வைத்து வெகு நேரம் ஆகிவிட்டது. அவள் மௌனமாய் அமர்ந்திருந்தாள். அவளுடைய ஒளிவிடும் கண்கள் அவளின் தாதியினுடைய சுருக்கம் விழுந்த முகத்தில் பதிந்திருந்தன. அந்தச் சுருக்கம் ஒவ்வொன்றையும் அவள் நன்றாய் அறிவாள். தலையில் கட்டியிருந்த கட்டிற்குள் அகப்படாமல் வெளியே நீட்டிக் கொண்டிருந்த அவளுடைய சாம்பல் வர்ண தலைமுடியையும் நாடிக்குக் கீழாகத் தொங்கிக்கொண்டிருந்த சதையையும் அவள் கவனித்தாள்.

அந்தத் தாதி சாவிஷ்னா கையில் பின்னல் வேலையைச் செய்து கொண்டே, மெதுவான குரல்களில் காதில் கேட்கவோ, அர்த்தம் புரிந்துகொள்ளவோ முடியாத தாழ்ந்த குரலில், இதற்கு முன்னால் நூற்றுக்கணக்கான தடவைகள் சொல்லி வந்ததை மீண்டும் சொல்லிக்கொண்டிருந்தாள். காலஞ்சென்ற இளவரசி, கிஷினெவ்

என்ற இடத்தில் மருத்துவச்சிக்குப் பதிலாக மால்டாவியன் விவசாயப் பெண் ஒருவளின் உதவியை மட்டும் கொண்டு, இந்த இளவரசி மேரியை எப்படிப் பிரசவித்தாள் என்று கூறிக் கொண்டிருந்தாள்.

'கடவுள் கருணை உள்ளர். டாக்டர்களுக்கு எப்பொழுதும் அவசியம் இருந்ததேயில்லை' என்று அவள் சொன்னாள்.

இச்சமயம் திடீரென்று ஒரு காற்று வேகமாக ஜன்னலின் சட்டத்தில் அடித்தது. அதிலிருந்த இரட்டைச் சட்டங்களை அகற்றிவிட்டார்கள். அதனால் ஜன்னல் கதவில் லேசாகப் பொருத்திவைத்திருந்த தாழ்ப்பாளை, அந்தக் காற்று தள்ளிக்கொண்டு உள்ளே வீசியது. அதன் பலனாக படுதாக்கள் ஆடின. அங்கிருந்த மெழுகுவத்தி அணைந்தது. உள்ளே குளிர் நிறைந்தது. (குளிர் காலத்தில் ரஷ்யாவில் ஜன்னல்களுக்கு இரண்டு கதவுச் சட்டங்கள் போட்டிருப்பார்கள். குளிர்காலம் முடிந்த பின்பு ஒரு சட்டத்தை அகற்றிவிடுவார்கள்)

இளவரசி மேரி நடுங்கினாள். அவளுடைய தாதி, தன் கையில் வைத்திருந்த பின்னல் வேலையை கீழே வைத்துவிட்டு, ஜன்னல் பக்கம் போய் ஜன்னல் கதவைப் பற்றி இழுக்க முயற்சித்தாள். ஜன்னல் வழியாக வந்த காற்று, அவளுடைய தலைமுடியையும், அதன் மேல் கட்டியிருந்த சால்வையையும் அசைத்து ஆட்டிக்கொண்டிருந்தது.

'யாரோ ஒருவர் சாலையில் வருகிறமாதிரி இருக்கிறது, எனது அன்பான இளவரசியே' என்று அவள் சொல்லிவிட்டு, ஜன்னலை அடைக்காமல் அதன் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தாள்.

'விளக்குகளோடு அவர்கள் வருகிறார்கள். அநேகமாய் டாக்டராயிருக்கலாம்'

'ஓ, எனது கடவுளே, கடவுளுக்கு நன்றி. நான் போய் அவரைச் சந்திக்கவேண்டும். ஏனெனில், அவருக்கு ருஷ்ய மொழி தெரியாது' என்று இளவரசி மேரி கூறினாள்.

தனது தலையின் மீது ஒரு சால்வையைப் போட்டுக்கொண்டு, புதிதாக வருகிறவரை சந்திப்பதற்கு இளவரசி மேரி ஓடினாள். வெளியறையைத் தாண்டி அவள் போனபோது, அங்கிருந்த ஜன்னல் வழியாக வெளியே விளக்குகளுடன் வாசலில் ஒரு வண்டி நிற்பதைப் பார்த்தாள். படிக்கட்டுகளின் வாசலுக்குப் போனாள். கைப்பிடிச் சுவர் தூணில் ஒரு மெழுகுவத்தி காற்றினால் உருகி ஓடி எரிந்துகொண்டிருந்தது. கீழே படிக்கட்டுகளின் அடியில் சேவகனான பிலிப் பீதியுற்ற முகத்தோடு கையில் ஒரு மெழுகு

வத்தியை வைத்துக்கொண்டு நின்றான். அவனுக்கும் கீழாக உள்ள படிக்கட்டுகளில், கனத்த பூட்ஸ் அணிந்த ஒருவர் வரும் காலடி ஓசை கேட்டது. அவர் எதையோ பேசிய குரல் இளவரசி மேரிக்கு பழக்கமானதாய் தோன்றியது.

'கடவுளுக்கு நன்றி. அப்பா எங்கே?' என்று அந்தக் குரல் கேட்டது.

'அவர் படுக்கப் போய்விட்டார்' என்று வீட்டு மேனேஜரான டெமியான் என்பவர் பதில் கூறினார். அவர் கீழே இருந்தார்.

மீண்டும் அந்தக் குரல் ஏதோ சொல்லியது. டெமியான் பதில்அளித்தாள். கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருந்த படிக்கட்டு வளைவில் வேகமாய்வரும் காலடி ஓசை கேட்டது.

'அது ஆண்ட்ரூதான் என்று நினைத்தாள் இளவரசி மேரி. 'இல்லை, அப்படியிருக்கமுடியாது. அப்படியிருந்தால் அது மிகுந்த அசாதாரணமான விஷயம், அவள் நினைத்த அதே வினாடியில் ஒரு ரோமத்தாலான வெளிச்சட்டையை அணிந்துகொண்டு, இளவரசர் ஆண்ட்ருவின் முகமும் உருவமும், வேலைக்காரன் கையில் வைத்திருந்த மெகுவத்தி வெளிச்சத்தில் தோன்றின. ஆம், அவரேதான். வெளிறிப்போய் மெலிந்துபோய் மாறிப்போய் அமைதியாய் இருக்கிறார். என்றாலும் அவருடைய முகத்தில் பரபரப்பான தோற்றம் காணப்படுகிறது. மெத்தைக்கு வந்த ஆண்ட்ரூ தமது சகோதரியைத் தழுவிக்கொண்டார்.

'எனது கடிதம் உனக்குக் கிடைக்கவில்லையா?' என்று அவர் கேட்டார். பதிலுக்கு அவர் காத்திருக்கவில்லை. ஏனெனில் இளவரசியால் பதில் சொல்ல முடியவில்லை. அவர் திரும்பிப் பார்த்தார். வேகமாக அப்பொழுதுதான் வீட்டிற்குள் வந்த டாக்டரோடு மீண்டும் மெத்தைப் படிகளில் ஏறினார். அவர்கள் இருவரும் கடைசியாகக் குதிரை மாற்றுகிற இடத்தில் சந்தித்தார்கள். மீண்டும் அவர் தமது சகோதரியைத் தழுவிக்கொண்டார்.

'எப்பேர்ப்பட்ட அதிசயமான விதி, என் மாஷா கண்ணே' என்று சொல்லிவிட்டு, தமது வெளிச்சட்டையையும் நீண்ட உல்லன் பூட்ஸுகளையும் கழற்றிவிட்டு குஞ்சு இளவரசியின் அறைக்குப் போனார்.

# 49

தலையில் ஒரு வெள்ளைத் தொப்பியை அணிந்துகொண்டு, சுற்றிலும் தலையணைகளால் சூழப்பட்டவளாய் குஞ்சு இளவரசி பயந்திருந்தாள். பிரசவ வலி அப்பொழுது தான் விட்டிருந்தது. அவளுடைய கருப்பான தலைமுடி அவளுடைய சிவந்த வியர்த்திருந்த கன்னங்களில் பரவிக் கிடந்தன. அவளுடைய சிவந்த கவர்ச்சியான வாய் அந்தக் குட்டையான உதட்டோடு திறந்திருந்தது. மகிழ்ச்சியோடு அவள்புன்னகை கொண்டிருந்தாள். அச்சமயம் இளவரசர் ஆண்ட்ரூ உள்ளே நுழைந்தார். அவள் படுத்திருந்த சோபாவின் காலடி பக்கத்தில் சிறிது நின்று அவளைக் கவனித்தார். அவளுடைய மின்னுகிற கண்கள் குழந்தைத்தனமான பயத்தையும் பரபரப்பையும் கொண்டிருந்தன. அந்தக் கண்கள் தோற்றத்தில் எவ்வித மாறுதலுமின்றி அவரைப் பார்த்தன. 'நான் உங்கள் எல்லோர் மீதும் பிரியமாய் இருக்கிறேன். நான் ஒருவருக்கும் ஒரு கெடுதியும் செய்யவில்லை. அப்படியானால் நான் ஏன் இப்படிக் கஷ்டப்பட வேண்டும்? எனக்கு உதவி செய்யுங்கள்' என்று சொல்லுவதைப் போல அவள் பார்வை இருந்தது. அவள் தனது கணவரைப் பார்த்தாள். ஆனால் இப்பொழுது அவர் அங்கு வந்து அவள் முன்னால் நின்றதின் முக்கியத்துவத்தை உணரவில்லை. சோபாவைச் சுற்றி இளவரசர் ஆண்ட்ரூ அவளிடம் போய் அவள் நெற்றியைமுத்தமிட்டார்.

'எனது பொக்கிஷமே' என்று அழைத்தார். இந்த வார்த்தையை இதற்கு முன்பு அவளைப் பார்த்து அவர் சொல்லியதேயில்லை. 'கடவுள் கருணை உள்ளவர்...'

குழந்தைத்தனமான கோபத்தோடும், கேள்விக் குறியோடும் அவள் அவரைப் பார்த்தாள்.

உங்களிடமிருந்து நான் உதவியை எதிர்பார்த்தேன். ஆனால் எனக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. என்று அவளுடைய கண்கள் கூறின. அவர் வந்ததைக் கண்டு அவள் ஆச்சரியப்படவில்லை. அவர் வந்திருக்கிறார் என்பதைக்கூட அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவருடைய வருகைக்கும் அவளுடைய கஷ்டங்களுக்கோ அல்லது அவற்றின் பரிகாரங்களுக்கோ எவ்வித சம்பந்தமும் இல்லை. பிரசவ வலி மீண்டும் ஆரம்பித்தது. மேரி பாக்டாநாவா, இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்து அறையை விட்டுப் போகும்படி கூறினாள்.

டாக்டர் உள்ளே வந்தார். இளவரசர் ஆண்ட்ரூ அறையை விட்டு வெளியேறி இளவரசி மேரியிடம் போனார். மிகுந்த தணிந்த குரல்களில் அவர்கள் பேச ஆரம்பித்தார்கள். அவர்களுடைய பேச்சு ஒவ்வொரு வினாடியும் தடைப்பட்டுத் தடைபட்டு நடந்து கொண்டிருந்தது. அவர்கள் கவனமாகக் கேட்டுக்கொண்டும் காத்துக்கொண்டும் இருந்தார்கள்.

'போய் வாரும், கண்ணே' என்று இளவரசி மேரி சொன்னாள்.

மீண்டும் இளவரசர் ஆண்ட்ரூ தமது மனைவியிடம் சென்று அவளுடைய அறைக்கு அடுத்த அறையில் காத்துக்கொண்டிருந்தார். அந்தப் படுக்கை அறையிலிருந்து ஒரு பயந்த முகத்தோடு வெளியே வந்த ஸ்திரீ இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்ததும் குழப்பம் மடைந்தாள். அவர் தமது முகத்தை மறைத்துக்கொண்டு, சில நிமிஷங்கள் அப்படியே இருந்தார். அந்த வாசல் வழியாக பரிதாபகரமான உதவியில்லாமல் தவித்த முனங்கல்கள் வந்து கொண்டிருந்தன. இளவரசர் ஆண்ட்ரூ எழுந்து கதவுக்குப் பக்கத்தில் போய் அதைத்திறக்க முயற்சித்தார். யாரோ ஒருவர் அதைத் திறக்க முடியாமல் சாத்தி வைத்துக்கொண்டிருந்தார்.

'நீர் உள்ளே வரமுடியாது. நீர் வரமுடியாது' என்று ஒரு பீதியான குரல் உள்ளிருந்து கேட்டது.

இந்த அறையில் முன்னும் பின்னும் அவர் நடக்க ஆரம்பித்தார். உள்ளே கேட்டிருந்த கூச்சல் நின்றது. சில வினாடிகள் கழிந்தன. திடீரென்று ஒரு பயங்கரமான கூச்சல் கேட்டது. அது அவளுடைய குரலாய் இருக்க முடியாது. ஏனெனில் அவள் அம்மாதிரி கூச்சல் போடமுடியாது. இளவரசர் ஆண்ட்ரூ கதவின் பக்கம் மீண்டும் ஓடினார். அந்தக் கூச்சல் நின்றது. ஒரு குழந்தையின் அழுகை சப்தம் அவருக்குக் கேட்டது.

'அவர்கள் எதற்காக அங்கே ஒரு குழந்தையைக் கொண்டு போக வேண்டும்?' என்று முதல் வினாடியில் இளவரசர் ஆண்ட்ரூ நினைத்தார். 'ஒரு குழந்தை? என்ன குழந்தை...? அங்கே எதற்காக ஒரு குழந்தை இருக்க வேண்டும்? அல்லது அந்தக் குழந்தை இப்பொழுது பிறந்ததா?'

உடனே அந்த அழுகையின் மகிழ்ச்சியான முக்கியத்துவத்தை அவர் உணர்ந்து கொண்டார். கண்ணீர் அவருடைய தொண்டையை நெருக்கியது. அந்த ஜன்னலில் முழங்கையை ஊன்றி ஒரு குழந்தையைப்போல தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தார்.

கதவு திறந்தது. தமது கைச்சட்டையை மேலே மடக்கிக் கொண்டு கோட்டு எதுவும் இல்லாமல், உதறிக்கொண்டிருந்த நாடியோடு

வெளிறியவராய் டாக்டர் வெளியே வந்தார். இளவரசர் ஆண்ட்ரூ அவரைப் பார்த்தார். டாக்டர் ஒரு குழப்பமான பார்வையோடு அவரைப் பார்த்துவிட்டு, ஒரு வார்த்தையும் பேசாமல் போய்விட்டார். ஒரு ஸ்திரீ வெளியே ஓடி வந்தாள். இளவரசர் ஆண்ட்ரூவைப் பார்த்ததும் அங்கே நின்று தயங்கிக் கொண்டிருந்தாள். தமது மனைவியின் அறைக்குள் அவர் போனார். ஐந்து நிமிஷங்களுக்கு முன்னால் அவள் எம்மாதிரி படுத்திருந்தாளோ, அந்த நிலைமையில் அவள் படுத்திருந்தாள். ஆனால் இறந்து போனாள். அவளுடைய கன்னங்கள் வெளிறிப்போயிருந்தாலும், அவளுடைய தோற்றம் மட்டும் அவளுடைய குழந்தைத்தனமான மனோகரமான முகத்தில், பழைய தோற்றம் மாதிரியே இருந்தது.

'உங்கள் எல்லோர் மீதும் எனக்குப் பிரியம் உண்டு. நான் ஒருவருக்கும் எவ்வித கெடுதியும் செய்யவில்லை. எனக்கு நீங்கள் என்ன செய்துவிட்டீர்கள்?' என்று அவளுடைய மனோகரமான பரிதாபகரமான உயிர்போன முகம் சொல்லியது.

அந்த அறையின் ஒரு மூலையில் மேரி பாக்டாநாவ்னாவின் நடுங்கிய வெள்ளைக் கைகளில், ஏதோ ஒரு சிகப்பான சிறிய உருவம் கூச்சல்போட்டது.

இரண்டு மணி நேரத்திற்கு பின்னால், இளவரசர் ஆண்ட்ரூ மெதுவாகத் தமது தந்தையின் அறைக்குப் போனார். எல்லா விஷயங்களையும் அந்த வயோதிகர் முன்பே அறிந்திருந்தார். கதவிற்குப் பக்கத்தில் அவர் நின்று கொண்டிருந்தார். ஆகவே கதவைத் திறந்ததும் அவருடைய முரடான வயோதிகக் கைகள் இடுக்கியைப்போலத் தமது குமாரனின் கழுத்தைப் பிடித்தன. அவர் ஒரு வார்த்தைகூட பேசாமல் ஒரு குழந்தையைப்போலத் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தார்.

★ ★ ★

மூன்று நாட்களுக்குப் பின்னால் குஞ்சு இளவரசி புதைக்கப்பட்டாள். சவப்பெட்டி வைக்கப்பட்டிருந்த இடத்திற்கு இளவரசர் ஆண்ட்ரூ படிக்கட்டுகள் வழியாக ஏறிப்போய், தமது கடைசி வழியனுப்பு முத்தத்தைக் கொடுக்க விரும்பினார். அங்கே அதே முகத்தோற்றத்தோடு, ஆனால் மூடிய கண்களோடு அந்தப் பெட்டியில் அவள் உருவத்தை அவர்பார்த்தார்.

'ஹா, நீங்கள் எனக்கு என்ன செய்துவிட்டீர்கள்?' என்று அந்த முகம் சொல்லுவதைப்போல இருந்தது. தமது உள்ளத்தில் ஏதோ ஒன்று உடைந்து போனதாக இளவரசர் ஆண்ட்ரூ உணர்ந்தார். ஏதோ

ஒரு பாபத்தை செய்துவிட்டதாகவும் அதற்குப் பரிகாரம் செய்யவோ அதை மறக்கவோ முடியாது என்றும் அவர் நினைத்தார். ஆனால் அவரால் அழ முடியவில்லை. அவளுடைய மார்பில் ஒன்றின் மேல் ஒன்றாக வைக்கப்பட்டிருந்த மரத்துப்போன அந்தக் கைகளை வயோதிகர் வந்து முத்தமிட்டார். அவளுடைய முகம் அவரைப் பார்த்ததும் 'ஹா, எனக்கு என்ன செய்துவிட்டீர்கள்? ஏன்?' என்று கேட்பதைப் போலத் தோன்றியது. அந்தப் பார்வையைப் பார்த்ததும் கோபத்தோடு வயோதிகர் திரும்பிக்கொண்டார்.

  

ஐந்து தினங்கள் கழிந்தன. 'இளவரசர் நிக்கலஸ் ஆண்ட்ரிவிச்' என்று அந்த குழந்தைக்கு ஞான ஸ்தானம் செய்து வைக்கப்பட்டது. அதை மூடியிருந்த துணியை எடுத்து அதற்குப் பால் கொடுத்து வந்த தாதி, தனதுநாடியின் கீழ் வைத்துக்கொள்ள அந்தக் குழந்தையின் சிறிய சிவந்த சுருக்கம் விழுந்த கால்களிலும் கைகளிலும், ஒரு வாத்து இறகினால் பாதிரியார் எண்ணெயைத் தடவினார்.

அந்தக் குழந்தையின் தாத்தாவே அதற்கு ஞானப்பிதாவானார். குழந்தையைக் கீழே போட்டுவிடுவோமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டு, அந்தக் குழந்தையைத் தூக்கி அங்கேயிருந்த புனிதத் தண்ணீர் பாத்திரத்தைச் சுற்றி வந்து, அதனுடைய ஞானமாதாவான இளவரசி மேரியிடம் கொடுத்தார். அடுத்த அறையிலிருந்த இளவரசர் ஆண்ட்ரூ, தமது குழந்தையை எங்கே அந்தத் தண்ணீரில் போட்டு மூழ்கடித்து விடுவார்களோ என்ற பயத்தோடு, அந்தச் சடங்கு முடிவதற்காகக் காத்துக்கொண்டிருந்தார். தம்மிடம் அந்தத் தாதி குழந்தையை கொண்டுவந்தபோது மகிழ்ச்சியோடு அதை நோக்கினார். குழந்தையின் முடியோடு கலந்த மெழுகு அந்தப் புனிதத் தண்ணீரில் மிதந்ததே தவிர மூழ்கவில்லை என்று தாதி சொல்லியபோது, மகிழ்ச்சியோடு இளவரசர் தலையை ஆட்டினார் (ருஷ்யாவில் ஞானஸ்நான சடங்கின்போது, குழந்தையின் முடியைக் கொஞ்சம் பாதிரி வெட்டி, மெழுகுவத்தியிலிருந்து கொஞ்சம் மெழுகை எடுத்து இரண்டையும் சேர்த்து தண்ணீரில் விடுவார். அந்த மெழுகு அந்தப் புனிதமான தண்ணீரில் கீழே அமுங்கினால், அதை துரதிருஷ்டம் என்று கருதுவார்கள்)

## 4

## 10

பெஜூகாவுடன் டோலாகாவ் செய்த டூயல் சண்டையில், ராஸ்டோவ் கலந்து கொண்ட விவரத்தை வெளியே தெரியவிடாமல் வயோதிக இளவரசர் மறைத்துவிட்டார். வெளியே தெரிந்திருந்தால் ராஸ்டோவ் தமது பதவியிலிருந்து இறக்கப்பட்டிருப்பார். ஆனால், பகிரங்கமாகாமல் தடுத்துவிட்டபடியால், மாஸ்கோவின் கவர்னர் ஜெனரலுக்கு அவர் ஒரு உதவியாளராக நியமிக்கப்பட்டார். அதன் பலனாக தமது குடும்பத்தோடு கிராமத்திற்குப் போக அவரால் முடியவில்லை. வசந்தகாலம் முழுவதிலும் தமது புதிய வேலைகளைக் கவனிப்பதற்காக அவர் மாஸ்கோவிலேயே தங்கினார். டோலாகாவ் குணமடைந்தார். அவர் தேறிவந்த காலத்தில் அவரும் ராஸ்டோவும் மிகுந்த நண்பர்களானார்கள். டோலாகாவ் தமது தாயார் வீட்டில் நோயாளியாய் படுத்திருந்தார். அந்தத் தாயார் அவரிடம் மிகுந்த கனிவோடும் ஆர்வத்தோடும் பிரியம் கொண்டிருந்தாள். அந்த வயோதிக மேரி ஐவாநாவ்னா, ராஸ்டோவ் மீது மிகுந்த பிரியம் கொள்ள ஆரம்பித்தாள். தனது குமாரரான பௌடியாவிடம் ராஸ்டோவ் நண்பராய் இருக்கிற படியால் அவர்மீதும் அன்பு கொண்டாள். தமது மகனைப்பற்றி அடிக்கடி அவரிடம் பேசுவாள்.

'ஆமாம், கோமகனே, இந்த தற்காலக் கேடுகெட்ட உலகத்தில் அவன்மிகுந்த கண்ணியமான பரிசுத்தமான உள்ளம் கொண்டவன்,' என்று அவள் சொல்லுவது உண்டு. நேர்மையை இப்பொழுது யாரும் விரும்புவதில்லை. ஒவ்வொருவருக்கும் அது விரும்பத்தகாத பொருளாகவே தோன்றுகிறது. இப்பொழுது எனக்குச் சொல்லும், கோமகனே, அந்த பெஜூகாவ் செய்தது நியாயமா? அல்லது கௌரவமா? தனது கண்ணியமான உள்ளத்தோடு பெடியா அவர்மீது பிரியம் கொண்டிருந்தான். இப்பொழுதும்கூட அவருக்கு விரோதமாக ஒரு வார்த்தையும் பேசுவதில்லை. அந்தப் பீட்டர்ஸ்பர்க்கில் போலீஸ்காரன்மீது செய்த கேலிக் கூத்துகளை, அவர்கள் இருவரும் சேர்ந்து செய்யவில்லையா? அதைப்பாரும். அதிலிருந்து பெஜூகாவ் சுலபமாகத் தப்பிவிட்டார். ஆனால் முழு பாரத்தையும் பெடியாதான் தாங்கிக் கொள்ளவேண்டியதாய் இருந்தது. எவ்வளவு கஷ்டங்களை அவன் அனுபவித்திருப்பான் தெரியுமா? [illegible] மீண்டும் பழைய பதவியில் வைத்துவிட்டார்கள் [illegible]

உண்மைதான். அப்படி வைக்காமல் இருக்க அவர்களால் எப்படி முடியும்? அவனைப் போன்ற வீரர்களான இந்த நாட்டின் புத்திரர்கள் அதிகம் பேர் இருக்கமாட்டார்கள். மேலும் இப்பொழுது பாரும், இந்த டூயல் சண்டையை. இந்த ஆட்களுக்கு உணர்ச்சியோ, அல்லது கெளரவமோ கிடையாதா? எனக்கு அவன் ஒரே மகன் என்று தெரிந்திருந்தும், அவனைப் போருக்கு அழைத்து நேருக்கு நேராக அவனைச் சுடுவதா? எல்லாம் நன்றாய் விட்டது. கடவுள் நம்மீது கருணை கொண்டிருந்தார். ஆனால் இதெல்லாம் எதற்காக? யார் தான் சூழ்ச்சிகள் செய்யாமல் இந்தக் காலத்தில் இருக்கிறார்கள்? பெடியாவைப்பற்றி பொறாமை ஏற்பட்டிருக்குமானால், அதை முன்பே சொல்லியிருக்க வேண்டும்? கடைசியாக எனது பெடியா அவருக்கு பணம் கொடுக்க வேண்டியிருக்கிற காரணத்தினால், திருப்பிச் சுடமாட்டான் என்று தெரிந்துகொண்டு, அவனைச் சண்டைக்கு அழைப்பது எப்படி இருக்கிறது? என்ன அற்பத்தனம்! என்ன கேடுகெட்ட செய்கை! எனது அருமையான கோமகனே பெடியாவைப் பற்றி நீர் நன்றாய் அறிந்திருக்கிறீர் என்பது எனக்குத் தெரியும். அதனால்தான் நான் உம்மீது மிகுந்த பிரியமாய் இருக்கிறேன். மிகவும் சொற்பமானவர்களே பெடியாவை அறிந்துகொண்டிருக்கிறார்கள். அவன் அவ்வளவு உயர்ந்த தெய்வீகமான ஆத்மா!'

அசெளக்கியமாய் படுத்துக் குணமடைந்து வந்த காலத்தில் ஒருவரும் அவரிடம் எதிர்பார்க்க முடியாத விதத்தில், டோலாகவ் ராஸ்டோவுடன் பேசி வந்தார். அவர் சொல்லுவார்:

'என்னைக் கெட்டவன் என்று மக்கள் நினைக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். அவர்கள் நினைத்துக்கொண்டு போகட்டும். நான் பிரியம் கொண்டிருப்பவர்களைத் தவிர, மற்றவர்களைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நான் யார் மீது பிரியம் கொண்டிருக் கிறேனோ அவர்களுக்காக உயிரைக் கொடுக்கும் விதத்தில் நான் பிரியமாய் இருப்பேன். ஆனால் எனது மற்றவர்களைப் பற்றி என்னவென்றால் எனது வழியியல் அவர்கள் குறுக்கிட்டால், அவர்களுடைய கழுத்தை நெறிப்பேன். நான் போற்றக்கூடிய விதத்தில் விலை மதிக்க முடியாத ஒரு தாயாரும், இரண்டு மூன்று நண்பர்களும்தான்எனக்குண்டு. அவர்களில் நீர் ஒருவர். மற்றவர்களைப்பற்றி அவர்கள் எனக்கு நன்மையாகவோ, கெடுதலாகவோ இருக்கிற காலங்களில் மட்டும்தான் நான் நினைப்பேன். அவர்களில்அநேகர், முக்கியமாகப் பெண்கள், கெடுதல்காரர்கள். ஆம், எனது அன்பாத சிறுவரே, அன்பும், [illegible]ரோக்கமும், கண்ணியமும் கொண்ட மனிதர்களை நான்

சந்தித்திருக்கிறேன். ஆனால் இதுவரை ஒரு (கோமகளாயிருந்தாலும் சரி, சமையல்காரியாய் இருந்தாலும் சரி) பெண்ணைக்கூட அதாவது சரீர சுகத்தைத் தவிர வேறு எதனாலும் அன்பு கொண்ட ஒரு பெண்ணைக் கூட, நான் சந்தித்ததில்லை. அந்தவிதமான தெய்வீக பரிசுத்தமும் பயபக்தியும் கொண்ட பெண்ணை இதுவரை நான் சந்தித்தில்லை. அம்மாதிரி ஒருத்தியை நான் கண்டு பிடிப்போனால், எனது உயிரை வேண்டுமானாலும் நான் அவளுக்குக் கொடுப்பேன். ஆனால் இந்தப் பெண்களோ... (பரிகாசமாக முகம் சுளித்தார்) நான் இன்னும் உயிரோடிருப்பதற்கு விரும்புகிறேன் என்றால், அம்மாதிரி ஒரு தெய்வீகமான பெண்ணை சந்திப்பேன் என்கிற நம்பிக்கை யினால்தான் நான் உயிர் வாழ்கிறேன். அம்மாதிரிப் பெண் புத்துயிர் கொடுத்து என்னைப் புனிதமாக்கி, என்னை உயர்த்துவதற்கு உதவியாயிருப்பாள். ஆனால் இதையெல்லாம் உம்மால் புரிந்து கொள்ள முடியாது.'

'ஓ, ஆமாம் எனக்கு நன்றாய் புரிகிறது' என்று ராஸ்டோவ் பதில் அளித்தார். அந்தப் புதிய நண்பரின் செல்வாக்கில் அவர் கட்டுண்டிருந்தார்.

★ ★ ★

ராஸ்டோவ் குடும்பத்தினர் இலையுதிர் காலத்தில் மாஸ்கோவுக்குத் திரும்பினார்கள். குளிர் காலத்தின் ஆரம்பத்தில் டெனைசாவும் திரும்பி வந்து அவர்களோடு தங்கினார். 1806-வது வருஷத்தில் குளிர் காலத்தின் முற்பகுதியில் நிக்கலஸ் ராஸ்டோவ் மாஸ்கோவில் இருந்தார். அந்தக் காலம், அவருக்கும் அவருடைய குடும்பத்தாருக்கும் மிகுந்த மகிழ்ச்சியையும் சந்தோஷத்தையும் கொடுத்த காலம். தம்முடைய வீட்டிற்கு வாலிபர்கள் பலரை நிக்கலஸ் அழைத்து வருவது உண்டு. இருபது வயதோடு, மிகுந்த அழகோடு வெரா காணப்பட்டாள். 16 வயது நிறைந்த சோனியா அப்பொழுது தான் மலரும் புஷ்பத்துக்குள்ள எல்லாக் கவர்ச்சிகளோடும் தோன்றினாள். பாதிவளர்ந்தும், பாதி குழந்தையாய் இருந்தும் வந்த நட்டாஷா, இப்பொழுது குழந்தையைப் போன்ற வேடிக்கையையும், குமரியைப் போன்ற கவர்ச்சியையும் கொண்டிருக்கிறாள்.

இளமையான கவர்ச்சிகரமான பெண்கள் இருக்கிற வீடுகளில் எம்மாதிரி காதல் பொலிவுகள் காணப்படுமோ, அதேமாதிரி ராஸ்டோவின் வீட்டில் காணப்பட்டன. அந்த சிறிய அழகிய முகங்களைப் பார்க்கிற ஒவ்வொருவரும், அந்தச் சிறிய அழகிகள் வளைத்து வளைத்து சுற்றிவருவதைக் காண்பரும், திடீரென்று

பாட்டுகளும் சங்கீதங்களும் ஒலிப்பதைப் கேட்பவர்களும், அந்தச் சிறு பெண்களின் பொருத்தமில்லாத, ஆனால் நட்போடு கூடிய கேலிப் பேச்சுகளைக் கேட்பவர்களும், மிகுந்த கவர்ச்சி கொண்டார்கள். ராஸ்டோவ் குடும்பத்தில் உள்ள வாலிப மக்களோடு, தாங்களும் மகிழ்சியை எதிர்பார்த்து காதலில் அமிழ்வதற்குத் தயாராய் இருந்தார்கள்.

தாம் அழைத்து வந்து அறிமுகப்படுத்தி வைத்த வாலிபர்களில் டோலாகாவ்தான் முதலாவது ஆனவர். அவரை நட்டாஷவைத் தவிர வீட்டில் உள்ள ஒவ்வொருவரும் விரும்பினார்கள். அவரைப் பற்றி அவள் தம்முடைய சகோதரருடன் சண்டைகூடப் போட்டுக் கொண்டாள். அவர் ஒரு கெட்ட மனிதரென்றும், பெஜுகாவோடு நடந்த டுயல் சண்டையில் பெஜுகாவின் கட்சிதான் நியாயமான தென்றும், டோலாகாவின் கட்சி அநியாயமானதென்றும், தவிர அவர் விரும்பத்தகாதவர் என்றும், செயற்கை சுபாவம் உள்ளவர் என்றும் அவள் சொன்னாள்.

'எனக்குத் தெரிந்துகொள்ளுவதற்கு ஒன்றுமேயில்லை. அவர் மிகவும் கெட்டவர். இருதயம் இல்லாதவர். இங்கே பார், உன்னுடைய டெனைசாவ், அவர் ஒரு குடிகாரராகவும் விபசாரராகவும் இருந்தாலும், எனக்கு அவர்மீது பிரியமுண்டு. நான்கூட விஷயங்களை அறிந்து கொள்ள முடியும் என்பதை நீ தெரிந்து கொள். அதை எப்படிச் சொல்லுவதென்று எனக்குத் தெரியவில்லை... இது ஒன்றுதான் அவருக்கு முக்கியமானது. இதை வைத்துக் கொண்டே மற்றவைகளை அவர் கணக்குப் போடுகிறார் அது எனக்குப் பிடிக்கவில்லை. ஆனால் டெனைசாவ்...'

'ஓ, டெனைசாவ் முற்றிலும் மாறுப்பட்டவர்' என்று நிக்கலஸ் பதில் சொன்னார். டோலாகாவோடு ஒப்பிடும்போது, டெனைசாவை ஒரு பொருட்டாகவே மதிக்க முடியாது என்று அவர் கூறுவதுபோல இருந்தது. 'டோலாகாவிடம் எப்பேர்பட்ட உயர்ந்த உள்ளம் இருக்கிறதென்பதை நீ அறிய வேண்டும். அவர் அவருடைய தாயாருடன் இருக்கும்போது நீ பார்க்க வேண்டும். எப்பேர்ப்பட்ட இருதயம்.'

'நல்லது, அதைப்பற்றி எனக்கும் ஒன்றும் தெரியாது. ஆனால் அவரோடு இருக்கும்போது என் மனம் சஞ்சலம் அடைகிறது. அவர் சோனியாவிடம் காதல் கொண்டிருக்கிறார் என்பது உனக்குத் தெரியுமா?

'என்ன அசட்டுப் பேச்சு...'

'எனக்கு நிச்சயமாகத் தெரியும். நீ பார்க்கப் போகிறாய்.'

நட்டாஷா சொல்லிய ஜோசியம் பலித்தது. உயர் வட்டார சீமாட்டிகளைப் பற்றி வழக்கமாக டோலாகாவ் லட்சியம் செய்வதில்லை. என்றாலும் டோலாகாவ் அடிக்கடி அந்த வீட்டிற்கு வந்து கொண்டிருந்தார். எதற்காக அவர் வந்து கொண்டிருக்கிறார் என்ற விஷயம், அதைப்பற்றி எவரிடமும் பேசாமல் இருந்தாலுங் கூட, சீக்கிரமாக முடிவாய் விட்டது. சோனியாவிற்காகவேதான் அவர் வந்தார். சோனியாவும் அதை அறிவாள். ஆனால், அதைச் சொல்லுவதற்கு அவளுக்குத் துணிவில்லை. ஆகவே, அவரைப் பார்த்தபோதெல்லாம் அவள் நாணி முகம் சிவப்பாள்.

அடிக்கடி ராஸ்டோவ் வீட்டில் டோலாகாவ் டின்னர் சாப்பிடுவதுண்டு. இருவரும் சேர்ந்தாற்போல ஒரு கச்சேரியைக் கூட பார்க்காமல் இருந்ததில்லை. அயாகெல் நடத்தி வந்த வாலிப மக்களுக்கான நடனக் கச்சேரிகளுக்கு ராஸ்டோவ் குடும்பத்தார்கள் எப்பொழுதும் போவதுண்டு. சோனியா மீது டோலாகாவ் மிகுந்த கவனத்தைக் காட்டி வந்தார். அவர் அவளைப் பார்க்கிற பார்வையை அவள் காணும்போது, அவளால் முகம்சிவக்காமல் இருக்க முடிந்ததில்லை. அந்தப் பார்வையைக் கண்டு வயோதிகக் கோமகளும் நட்டாஷாவும் கூட நாணி முகம் சிவப்பது உண்டு.

அந்த அழுத்தமான நிறங்கொண்ட மனோகரமான பெண்ணினுடைய தடுக்க முடியாத வலையில், அந்த அதிசயமான பலமான மனிதர் விழுந்துவிட்டார் என்பது தெளிவாய்த் தெரிந்தது. ஆனால் அவள் மற்றொருவரைக் காதலித்தாள்.

சோனியாவுடன் டோலாகவ் கொண்டிருந்த உறவுகளில், ஒரு புதிய விஷயத்தை ராஸ்டோவ் கவனித்தார். ஆனால் அந்தப் புதிய உறவுகள் என்ன என்பதை அவர் தாமே நன்றாய்ப் புரிந்து கொள்ளவில்லை. 'அவர்கள் எப்பொழுதுமே யாருடனாவது காதல் கொண்டேயிருக்கிறார்கள்' என்று சோனியாவைப்பற்றியும், நட்டாஷாவைப்பற்றியும் அவர் நினைத்தார். ஆனால், முன்பெல்லாம் போல சோனியாவுடனும் டோலாகாவுடனும் அவ்வளவு கலகலப்பாக அவர் நடந்து கொள்ளவில்லை. அவர் வீட்டில் தங்குவதும் வரவரக் குறைந்தது.

1806-வது வருஷத்தில் இலையுதிர் காலத்தில், நெப்போலியனுடன் நடக்கிற யுத்ததைப்பற்றி மீண்டும் பேச்சுக்கள் ஆரம்பமாயின. சென்ற வருஷத்தைவிட இப்பொழுது இன்னும் அதிகமான வேகத்தோடு எல்லாரும் பேசினார்கள். ராணுவத்திற்கு ஆட்களைச் சேர்க்கும்படி உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன. ஒழுங்கான ராணுவத்திற்கு மக்கள் தொகையில் 1000 பேருக்கு 10 பேர்

வீதமும் ரிஸர்வ் படைக்காக ஆயிரம் ஜனத்தொகையில் 9 பேர் வீதமும் ஆட்களைத் திரட்டும்படி உத்தரவிடப்பட்டது. எங்கு பார்த்தாலும் போனபார்ட்டைத் திட்டிக்கொண்டிருந்தார்கள். மாஸ்கோவில் வரப்போகிற யுத்தத்தைத் தவிர, வேறு எதைப்பற்றியுமே பேச்சு கிடையாது. மாஸ்கோவில் இனி தங்கவேண்டுமென்ற யோசனையை நிக்கலஸ் கேட்கமாட்டார் என்பதை ராஸ்டோவின் குடும்பத்தார்கள் அறிவார்களாகையால் இந்த யுத்த முயற்சிகளைக் கண்டு அவர்கள் பரபரப்படைந்து இருந்தார்கள். கிறிஸ்துமஸுக்குப் பின்னால் மீண்டும் தமது ராணுவத்தில் போய்ச் சேருவதற்காக டெனைசாவை எதிர்பார்த்துக் கொண்டு ராஸ்டோவ் இருந்தார். அவர் சீக்கிரமாக அதை விட்டுப் புறப்படுவதினால், தமது விளையாட்டுகளைக் குறைத்துக் கொள்ளவில்லை. அதனால் தமது இன்பங்களை அதிகரித்துக் கொள்ளுவதற்கு ஒரு தூண்டுகோலாய் இருந்தது. அவர் அநேகமாக வீட்டில் இருப்பதேயில்லை. எப்பொழுதும் விருந்து கச்சேரிகளிலும் மற்ற கச்சேரிகளிலும் நடனக் கச்சேரிகளிலும் காணப்படுவார்.

4

11

கிறிஸ்துமஸ்ஸிலிருந்து 3-வது நாள் அன்று, நிக்கலஸ் தமது வீட்டிலேயே டின்னர் அருந்தினார். சமீப காலமாக அவர் வீட்டில் டின்னர் சாப்பிடுவது அபூர்வமாய் விட்டது. எப்பிப்பன்னி என்ற திருநாள் (கிறிஸ்துமஸ் நாளிலிருந்து 12-வது தினத்தில், அதாவது ஜனவரி 6-ம் தேதியன்று எப்பிப்பன்னி என்ற இந்தத் திருநாள் வரும்) கழிந்து அவரும் டெனைசாவும் தங்களுடைய பட்டாளத்தில் போய்ச் சேர இருந்ததால், அன்றைய டின்னர் ஒரு பிரமாதமான வழியனுப்பு விருந்தாக இருந்தது. டோலாகாவ், டெனைசாவ் உட்பட சுமார் இருபது பேர்கள் வந்திருந்தார்கள்.

அந்த விடுமுறை நாட்களில் ராஸ்டோவ்கள் வீட்டில் காணப்பட்ட காதல் உணர்ச்சிகளும் சல்லாப சுற்றுணர்ச்சிகளும், அதற்கு முன்பு எப்பொழுதும் காணப்படாத அளவு பலமாய் இருந்தது. 'மகிழ்ச்சி அடையும் நேரத்தைப் பிடித்துக்கொள்ளுங்கள். காதல் கொள்ள வேண்டும் காதலிக்கப் படவேண்டும். அது ஒன்றுதான் உலகத்தில் உண்மையானது. மற்றவையெல்லாம் பொய்யானவை. இந்த இடத்தில் அந்த ஒரே விஷயந்தான்

எங்களுக்குப் பிரியமானது' என்று அந்த இடத்து சுற்றுணர்ச்சிகள் கூறுவதைப்போல் இருந்தன.

இரண்டு ஜோடி குதிரைகள் களைத்துப்போகும்படியான அளவுக்கு வழக்கம்போல நிக்கலஸ் வண்டியிலேறி சுற்றி வந்தார். அவர் போக விரும்பிய எல்லா இடங்களுக்குமோ அல்லது அவர் அழைக்கப்பட்ட எல்லா இடங்களுக்குமோ அவரால் போக முடியவில்லை. டின்னருக்கு சிறிது நேரத்திற்கு முன்புதான் அவர் வீடு திருபினார். அவர் வீட்டிற்குள் நுழைந்ததும்,வீட்டிற்குள் காணப்பட்ட சல்லாப சுற்றுணர்ச்சி முறுக்கேறி நிற்பதை அவர் உணர்ந்து கவனித்தார். அங்கிருந்த சிலரிடம் ஒரு விசித்திரமான தர்ம சங்கடம் காணப்படுவதையும் அவர் கண்டார். சோனியாவும் டோலாகவும் வயோதிகக் கோமகனும், மிகுந்த மனக்குழப்பம் அடைந்திருந்ததாகக் காணப்பட்டார்கள். அவர்களைவிட கொஞ்சம் குறைவான அளவில் நட்டாஷாவும் குழப்பமாய் இருந்தாள். டின்னருக்கு முன்பாக சோனியாவுக்கும் டோலாகாவுக்கு மிடையில், ஏதோ ஒன்று நடந்திருக்க வேண்டுமென்று அவர் உணர்ந்து கொண்டார். அகவே அவருக்கு இயற்கையாயுள்ள இனிமையான மென்மையோடு, மிகுந்த அமைதியாவும் ஜாக்கிரதையாகவும், டின்னர் சமயத்தில் அவர்களிடம் நடந்து வந்தார். அதே தினத்தில் இரவில் நடன ஆசிரியரான அயாகெல் நடத்துகிற ஒரு நடனக் கச்சேரி இருந்தது. விடுமுறை நாட்களில் தமது மாணவர்களுக்கு இம்மாதிரி அவர் ஏற்பாடு செய்வதுண்டு.

'நிக்கலஸ், அயாகெல் நடனத்திற்கு நீ வருகிறாயா? தயவுசெய்து வா. அவர் உன்னை வரும்படி அழைத்தார். வாசைலி டிமிட்லிச் (டெனைசாவ்) கூட வருகிறார்'

'கோமகளின் உத்தரவு வரும்போது, நான் எங்கேதான் போக மாட்டேன்' என்று டெனைசாவ் வேடிக்கையாக நட்டாஷாவின் வீராதிவீரனாக நடித்துக்கொண்டு சொன்னார். 'நான் சால்வை நடனமாடுவதற்குக்கூட தயாராய் இருக்கிறேன்.'

'எனக்கு நேரமிருந்தால் வருகிறேன். ஆனால் ஆர்க்காராவ் கச்சேரிக்கு வருவதாக நான் வாக்கு சொல்லிவிட்டேன்,' என்றார் நிக்கலஸ்.

'நீர் வரவில்லையா?' என்று டோலாகாவை கேட்டார். அவர் அதைக்கேட்டு முடிந்ததும், அந்த சமயத்தில் அந்தக் கேள்வியைக் கேட்டிருக்கக்கூடாதென்று அவருக்குத் தோன்றியது.

'ஒருவேளை வரலாம்' என்று கடினமாகவும், கோபமாகவும் டோலாகாவ் பதில் அளித்தார். சோனியாவை நோக்கிவிட்டு ஒரு

உறுமல் உறுமிக்கொண்டு, கிளப் டின்னர் என்று எம்மாதிரி நோக்கோடு பீயரைப் பார்த்தாரோ, அதே நோக்கோடு நிக்கலஸைப் பார்த்தார்.

'ஏதோ ஒரு காரியம் கொதித்துக்கொண்டிருக்கிறது' என்று நிக்கலஸ் நினைத்தார். டின்னருக்குப் பின்னர் டோலகாவ் உடனே எழுந்து போய் விட்டதால் அவருடைய நினைப்பு மேலும் உறுதியாயிற்று. அவர் நட்டாஷாவை அழைத்து, 'என்ன விஷயம்?' என்று கேட்டார்.

'நான் உன்னைத்தான் தேடிக்கொண்டிருந்தேன்' என்று நட்டாஷா அவரைப் பார்த்தது ஓடி வந்துகொண்டே சொன்னாள். 'நான் முன்பே சொன்னேன். ஆனால் நீர் நம்பவில்லை. தம்மைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி சோனியாவிடம் அவர் கேட்டார்' என்று வெற்றிக் குரலோடு பேசினாள்.

சமீப காலமாக சோனியாவுடன் நிக்கலஸ் அதிகமாகப் பேசுவதே இல்லை. இருந்தும் இந்தச் செய்தியைக் கேட்டதும், அவர் உள்ளத்தில் ஏதோ ஒன்று அறுந்துபோய்விட்டமாதிரி உணர்ந்தார். இந்த அநாதையான சீதனமில்லாத பெண்ணுக்கு டோலகாவ் மிகவும் பொருத்தமான ஜோடிதான். சில விஷயங்களில் ரொம்ப சிலாக்கியமான ஜோடியென்றுகூடச் சொல்லலாம். ஆகவே, வயோதிகக்கோமகளின் அபிப்பிராயப்படியும், உயர் வட்டாரத்தின் அபிப்பிராயப்படியும் தம்மைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று டோலகாவ் கேட்டபொழுது அதை சோனியா மறுத்திருக்கவே கூடாது என்று தோன்றியது. ஆகவே, அந்தச் செய்தியைக் கேட்டதும் நிக்கலஸுக்கு முதலில் சோனியாமீது கோபம் ஏற்பட்டது... 'அது ரொம்ப விசேஷமானது. அவளுடைய குழந்தைத் தனமான வாக்குறுதிகளை அவள் மறந்துவிட்டு இந்தப் பிரேரணையை நிச்சயம் அவள் ஒப்புக்கொள்ளவேண்டும்' என்று சொல்லுவதற்கு அவர் முயற்சித்தார். ஆனால் அவர் அதைச் சொல்லுவதற்கு முன்பாக மீண்டும் நட்டாஷா ஆரம்பித்தாள்.

'என்ன வேடிக்கை இது. கண்டிப்பாக அவருடைய பிரேரணையை ஒப்புக்கொள்ள முடியாது என்று மறுத்துவிட்டாள்' என்று சொல்லிவிட்டு சிறிது நேரம் கழித்து, 'தாம் இன்னொருவரை காதலிப்பதாக அவள் அவரிடம் சொன்னாள்' என்றாள்.

'ஆம், என்னுடைய சோனியா வேறுவிதமாகச் செய்திருக்க முடியாது' என்று நிக்கலஸ் நினைத்தார்.

'அம்மா எவ்வளவோ வற்புறுத்தியும்கூட அவள் மறுத்து விட்டாள். அவள் அம்மாதிரி சொல்லிவிட்ட பின்பு இனி மாறவே மாட்டாள் என்பது எனக்குத் தெரியும்...'

'அம்மா வற்புறுத்தினாளா?' என்று நிக்கலஸ் கண்டிப்பது போலக் கேட்டார்.

'ஆம், உனக்குத் தெரியுமா நிக்கலஸ்? கோபங் கொள்ளாதே நீ அவளை திருமணம் செய்யமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். எனக்குத் தெரியும். எப்படி என்பதைக் கடவுளே அறிவார். ஆனால் நீ அவளைக் கலியாணம் செய்து கொள்ளப்போவதில்லை என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும்' என்றாள் நட்டாஷா.

'உனக்கு அதெல்லாம் தெரியாது. நான் அவளிடம் பேசவேண்டும். இந்தச் சோனியா எப்பேர்ப்பட்ட பொக்கிஷம்' என்று புன் சிரிப்போடு நிக்கலஸ் சொன்னார்.

'ஹா, அவள் ஒரு கண்ணுதான் என்பது நிச்சயம். அவளை உன்னிடம் அனுப்புகிறேன்.'

தனது சகோதரரை முத்தமிட்டுவிட்டு நட்டாஷா அங்கிருந்து ஓடினாள்.

ஒரு நிமிஷத்திற்குப் பின்னால், பயமும் குற்றமும் பீதியும் நிறைந்த பார்வையோடு சோனியா அங்கே வந்தாள். அவளுடைய கையை முத்தமிடுவதற்காக நிக்கலஸ் எழுந்து சென்றார். அவர் திரும்பிய பிற்பாடு அவர்கள் தனியாக அவர்களுடைய காதலைப் பற்றிப் பேசுவது இதுதான் முதல் தடவை.

முதலில் மிகுந்த தயக்கத்தோடு, 'சோபி' என்று அவர் ஆரம்பித்து வரவரத் தைரியம்கொண்டு பேசினார். 'ஒரு சிலாக்கியமான, கண்ணியமான, மிகுந்த புத்திசாலியான, பொருத்தமான வாலிபரை நீ திருமணம் செய்து கொள்ள முடியாதென்று மறுப்பதாய் இருந்தால்... அவர் என்னுடைய நண்பர்...'

சோனியா அவரை இடை மறித்தாள்.

'நான் முடியாதென்று ஏற்கனவே சொல்லிவிட்டேன்' என்று அவள் அவசரமாய் பதில் அளித்தாள்.

'எனக்காக நீ முடியாதென்று சொல்லுவதாய் இருந்தால், நான்...'

சோனியா மீண்டும் இடைமறித்தாள். அவரைப் பரிதாபமாகவும், பீதியோடும் நோக்கினாள்:

'நிக்கலஸ், அதை நீர் எனக்குச் சொல்ல வேண்டாம்' என்றாள்.

'இல்லை, நான் சொல்லித்தான் ஆகவேண்டும். நான் அப்படிச் சொல்லுவது அகம்பாவமாய் இருக்கலாம். என்றாலும், அம்மாதிரி சொல்லிவிடுவதுதான் நல்லது. எனக்காக நீ அவரை ஒப்புக்கொள்ள முடியாதென்று மறுப்பதாய் இருந்தால், முழு உண்மையையும்

நான் உனக்குச் சொல்லியாக வேண்டும். நான் உன்னைக் காதலிக்கிறேன். வேறு யாரையும்விட அதிகமாக உன்னைக் காதலிக்கிறேன்...'

'அது எனக்குப் போதுமானது' என்று நாணி முகம் சிவந்து சோனியா சொன்னாள்.

'இல்லை, நான் இதற்கு முன்பு ஆயிரம் தடவைகளில் காதல் கொண்டிருக்கிறேன். இதேமாதிரி இன்னமும் காதல் கொள்ள நேரிடலாம். என்றாலும், உன்னிடம் நான் கொண்டுள்ள நட்பைப் போலவோ, நம்பிக்கையைப் போலவோ, அல்லது காதலைப் போலவோ, வேறு யாரிடமும் நான் கொள்ளவில்லை. நான் வாலிபனாய் இருக்கிறேன். அம்மாவுக்கு இஷ்டமில்லை. ஒரே வார்த்தையில் சொல்லுவதென்றால் நான் எந்த வித வாக்குறுதியும் உனக்குக் கொடுக்க முடியாது. டோலாகாவ் உன்னிடம் கேட்டுக்கொண்ட வேண்டுகோளைப் பற்றி, நீ மீண்டும் யோசிக்கும்படி உன்னைக் கெஞ்சுகிறேன்' என்று அவர் தமது நண்பரின் பெயரை மிகுந்த சிரமத்தோடு சொல்லிக்கொண்டு பேசி முடித்தார்.

'அம்மாதிரி நீர் என்னிடம் சொல்லவேண்டாம். எனக்கு எதுவும் தேவையில்லை. ஒரு சகோதரரைப்போல உம்மீது நான் பிரியமாய் இருக்கிறேன். இனியும் எப்பொழுதும் அப்படியே இருப்பேன். அதற்கு மேல் எனக்கு எதுவும் வேண்டியதில்லை.'

'நீ ஒரு தேவதை. நான் உனக்குத் தகுதியானவன் அல்ல. உன்னைத் தவறாக நடக்கும்படித்தான் நான் செய்துகொண்டிருக்கிறேன்.'

நிக்கலஸ் மீண்டும் அவள் கையை முத்தமிட்டார்.

# 4
## 12

அயாகெல் ஏற்பாடு செய்கிற நடனங்கள் தான், மாஸ்கோவிலேயே மிகுந்த அனுபவிக்கக் கூடிய நடனங்களாய் இருந்தன. தங்களுடைய சிறிய மக்கள் நடனமாடுவதற்குப் பயின்று கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கும் தாய்மார்கள், அம்மாதிரியே சொல்லி வந்தார்கள். அங்கே கீழே விழுகிற வரையில் நடனமாடிக் களைத்துப்போகும் வாலிபர்களும், கன்னிகைகளும் அம்மாதிரியே சொன்னார்கள். ஏதோ தொந்தரவிற்காக அங்கே வருகிற வயது வந்த ஆண்களும், பெண்களும் அங்கு வந்து பார்த்த

பின்பு அவர்களும் அம்மாதிரியே மிகுந்த அனுபவிக்கக் கூடிய நடனங்கள் என்று சொன்னார்கள். அந்த நடனங்களிலிருந்து இரண்டு திருமணங்கள் அந்த வருஷத்தில் நடந்து முடிந்திருக் கின்றன. கார்ஜாகோவ் இளவவரசிகளான இரண்டு அழகிய குமாரிகள், அந்த நடனங்களுக்கு வந்த இடத்தில்தான், தங்களுக்குப் பிடித்தமான கணவன்மார்களைச் சந்தித்து திருமணம் செய்து கொண்டார்கள். அதனால் இந்த நடனங்களின் புகழ் இன்னும் அதிகமாகப் பரவியது. மற்ற நடனங்களுக்கும் இதற்கும் உள்ள வித்தியாசம் என்னவென்றால் இங்கேவிருந்து அளிப்பவரோ, விருந்து அளிப்பவளோ யாருமே கிடையாது. அயாகெல் ஒருவர்தான், நல்ல சுபாவத்தோடு இறகுமாதிரி அங்குமிங்கும் பறந்துகொண்டு விருந்தாளிகளை வரவேற்று டிக்கட்டுகளை வசூலித்துக் கொண்டிருப்பார். 13 வயது, 14 வயது உள்ள பெண்கள், முதல் தடவையாக நீளமான உடைகள் அணிந்தால் எவ்வளவு சந்தோஷமாய் இருப்பார்களோ, அதேமாதிரி அங்கு வந்து நடனம் செய்து சந்தோஷம் அடையவேண்டுமென்ற விருப்பமுள்ளவர்கள் மட்டுமே அங்கு வந்தார்கள். அங்கு வருகிறவர்கள் முழுவதுமாக ஒருவர்கூட விதிக்கு இல்லாமல் எல்லாருமே மிகுந்த அழகானவர்களாய் தோன்றினார்கள். அவர்களுடைய இளநகைகள் பரவசமாக்கக் கூடியவைகளாகவும், கண்கள் ஜொலிக்கக் கூடியவைகளாகவும் விளங்கின. நட்டாஷா அவருக்கு முக்கியமான சீடர்களில் முதன்மையானவள். அவள் மிகுந்த ஒயிலானவள். சால்வை நடனத்தைக் கூட அவள் ஆடியிருக்கிறாள். அப்பொழுது மோஸ்தராயிருந்த மாஜுர்க்கா என்ற நடனத்தையும் வேறு நடனங்களையும், அந்த நடனக் கச்சேரியின் கடைசி நாளன்று ஆடினார்கள். பெஜுகாவின் வீட்டில் உள்ள ஒரு நடனசாலையை அயாகெல் பெற்று, அங்கு ஒரு நடனக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தார். அது மிகுந்த வெற்றிகரமாய் முடிந்ததென்று எல்லாருமே சொன்னார்கள். அங்கே பல அழகான பெண்கள் வந்தார்கள். அவர்களில் ராஸ்டோவ் வீட்டாரின் பெண்கள்தான் மிக அழகாய் இருந்தார்கள். அந்தப் பெண்கள் அன்று விசேஷமாக சந்தோஷமாகவும், உல்லாசமாகவும் இருந்தார்கள். அன்று மாலையில் டோலாகாவ் தன்னை திருமணம் செய்யக் கேட்டு, தான் மறுத்த பெருமையையும் நிக்கலஸுக்கு அவள் கூறிய சமாதானத்தையும் நினைத்துப் பெருமை கொண்டு சோனியா இங்குமங்கும் சுற்றி வந்ததால், அவளுடைய தலை முடியை வேலைக்காரியால் சடைபோட முடியவிலலை. ஆனால் சோனியா மிகுந்த பிரகாசமும், துடிப்பும் கொண்ட மகிழ்ச்சியோடு காணப்பட்டாள்.

தனக்கு முதல் முதலாக நீளமான உடை கிடைத்ததைப் பற்றி நட்டாஷாவும் மிகுந்த பெருமை கொண்டிருந்தாள். ஒரு உண்மையான நடனக் கச்சேரியில் பங்குகொள்ள நேர்ந்ததைப் பற்றி அவள் இன்னும் அதிகமாய் சந்தோஷம் கொண்டாள். அவர்கள் இருவரும் வெள்ளை மஸ்லின் உடை அணிந்து சிகப்பு ரிப்பன் கட்டியிருந்தார்கள்.

அந்த நடன மண்டபத்திற்குள் நுழைந்ததும், அந்த வினாடியே அதைப் பார்த்து அதன்மீது மிகுந்த பிரியம் கொண்டாள், நட்டாஷா. அவள் யார் மீதும் குறிப்பாகக் காதல் கொள்ளவில்லை. ஆனால் ஒவ்வொருவர் மீதும் காதல் கொண்டாள். யாரை அவள் பார்க்க நேரிடுகிறதோ அவர் மீது அந்த வினாடி மட்டும் காதல் கொள்வாள்.

'ஓ, எவ்வளவு மனோகரமாய் இருக்கிறது' என்று சொல்லிக் கொண்டே சோனியாவிடம் ஓடினாள்.

நிக்கலஸும், டெனைசாவும் மேலும் கீழும் நடந்துகொண்டு, நடனமாடுகிறவர்களைக் கனிவோடு பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

'அவள் எவ்வளவு இனிமையாய் இருக்கிறாள்? அவள்தான் ஒரு உண்மையான அழகியாக வரப்போகிறாள்' என்று டெனைசாவ் சொன்னார்.

'யார்?'

'கோமகள் நட்டாஷா' என்று டெனைசாவ் பதில் அளித்தார்.

'அவள் என்ன அழகாக ஆடுகிறாள்! என்ன அழகு!' என்று மீண்டும் சிறிது நேரத்தமிற்குப் பின்னால் சொன்னார்.

'நீர் யாரைப் பற்றி பேசிக் கொண்டிருக்கிறீர்?'

'உம்முடைய சகோதரியைப் பற்றி' என்று டெனைசாவ் வெடுவெடுப்பாய் சொன்னார்.

ராஸ்டோவ் புன்சிரிப்பு கொண்டார்.

'எனது அருமைக் கோமகனே, எனது சிறந்த மாணவர்களில் நீர் ஒருவர். நீர் கண்டிப்பாக நடனமாடவேண்டும்' என்று அந்த அயாகெல் நிக்கலஸிடம் வந்து கேட்டுக் கொண்டார்.

'அதோ, எத்தனை அழகான இளஞ்சீமாட்டிகள் இருக்கிறார்கள், பாரும்' என்று அவர் சொல்லிவிட்டு, டெனைசாவை நோக்கி அதேமாதிரி சொன்னார். டெனைசாவும் அவருடைய பழைய மாணவர்களில் ஒருவர்.

'இல்லை, எனது அன்பானவரே. நான் இந்த பூஞ்செடிகளுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருப்பேன். உம்மிடம் நான் நடனம் கற்றுக்கொள்ளும்போது, எவ்வளவு மோசமாய் நடந்து

கொண்டேன் என்பது உமக்கு ஞாபகம் இல்லையா?' என்று டெனைசாவ் சொன்னார்.

'இல்லை, இல்லை. நீர் பாடத்தைக் கவனிக்காமல் இருந்தீர். ஆனால் உம்மிடம் திறமை இருக்கிறது. ஆம், உம்மிடம் திறமை இருக்கிறது' என்று அயாகெல் பதில் சொன்னார்.

மாஜுர்க்கா என்ற நடனத்திற்காக பாண்டு வாத்தியம் முழங்கியது. அயாகெலின் வேண்டுகோளை நிக்கலஸால் மறுக்க முடியவில்லை. ஆகவே, தம்முடன் நடனம் செய்யும்படி சோனியாவைக் கேட்டுக் கொண்டார். வயோதிக சீமாட்டிகளின் பக்கத்தில் டெனைசாவ் அமர்ந்து, தமது உடைவாளின் மீது சாய்ந்துகொண்டு, தமது காலினால் தாளம் போட்டுக்கொண்டு, அவர்களிடம் எதையோ வேடிக்கையாகப் பேசி அவர்களைக் குஷிப்படுத்திக் கொண்டிருந்தார். அதே சமயத்தில வாலிப மக்கள் செய்யும் நடனத்தைக் கவனித்துக் கொண்டிருந்தார். அயாகெல் பெருமை கொள்ளும் தமது சிறந்த சீடராகக் கருதும் நட்டாஷாவும் அயாகெலும்தான்முதலில் நடனமாட இறங்கினார்கள். சப்தம் இல்லாமல் தமது சிறு பாதங்களால் சாமார்த்தியமாக அடியெடுத்து வைத்து, அந்தமண்டபத்தின் குறுக்காக நட்டாஷாவுடன் அயாகெல் பறந்து நாட்டியம் ஆரம்பித்தார். நட்டாஷா நாணம் கொண்டிருந்தபோதிலும், ஜாக்கிரதையாகத் தன்னுடைய அடிகளை எடுத்து வைத்தாள். அவள் மீது வைத்திருந்த பார்வையை டெனைசாவ் எடுக்கவில்லை. அவர் தமது உடைவாளால் தாளம் போட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்தால் அவர் ஏன் நடனம் ஆடவில்லை என்பது, அவருக்கு இஷ்டமில்லாததால் ஆடவில்லையே தவிர அவரால் ஆட முடியாது என்பதற்காக ஆடாமல் இருக்கவில்லை என்ற விஷயம் தெளிவாய்த் தெரிந்தது. அந்த நாட்டியம் நடந்து கொண்டிருக்கும்போது, அங்கு போய்க்கொண்டிருந்த ராஸ்டோவை அழைத்தார்.

'இது உண்மையான சரக்கல்ல. இது எம்மாதிரியான போலீஷ் மாஜுர்க்கா என்பது தெரியவில்லை? ஆனால் அவள் ரொம்ப பிரமாதமாக ஆடுகிறாள்' என்று அவர் சொன்னார்.

மாஜுர்க்கா நடனத்தில் போலந்தில் கூட டெனைசாவிற்கு மிகுந்த புகழ்ச்சி உண்டு. அவர் அவ்வளவு சிலாக்கியமாய் ஆடுவார். எனவே, நிக்கலஸ் நட்டாஷாவிடம் ஓடி, 'டெனைசாவிடம் போய் அவரை உன்னோடு நடனமாடுவதற்கு கூப்பிடு. அவர் ரொம்ப பிரமாதமாக நடனமாடுவார்' என்றார்.

அடுத்தபடியாக நடனமாடுவதற்கு ஜோடியைக் பொறுக்க வேண்டிய கட்டம் வந்தபோது, நட்டாஷா எழுந்து வேகமாக ஓடி, அங்கு மூலையிலிருந்த டெனைசாவிடம் வெட்கத்தோடு போய்ச் சொன்னாள். ஒவ்வொருவரும் அவளையே நோக்கி எதிர்பார்த்துக் கொண்டிருப்பதை அவள் பார்த்தாள். டெனைசாவும் அவளும் புன்முறுவலோடு ஏதோ தர்க்கம் செய்து கொண்டிருப்பதையும், டெனைசாவ் மனோகரமாக சிரித்தாலும், நடனமாட மறுத்துக்கொண்டிருப்பதையும் நிக்கலஸ் கண்டார். உடனே அவர்களிடம் ஓடினார்.

'வாசைலி டிமிட்ரிச், தயவு செய்து நடனமாட வாரும்' என்றாள் நட்டாஷா.

'ஓ, முடியாது. என்னை விட்டு விடு, கோமகளே' என்று பதிலளித்தார் டெனைசாவ்.

'இப்பொழுது, வாரும், வாஸ்கா' என்றார் நிக்கலஸ்.

'நான் ஏதோ வாஸ்கா என்ற பூனை என்று நினைத்துக் கொண்டு என்னை தாஜா செய்கிறார்கள்' என்று டெனைசாவ் தமாஷாகக் கூறினார்.

'உமக்காக ஒரு மாலை முழுவதும் வேண்டுமானாலும் நான் பாடுகிறேன்' என்றாள் நட்டாஷா.

'ஓ, தேவதையே, எனக்காக அவள் என்ன வேண்டுமானாலும் செய்வாள்' என்று டெனைசாவ் சொல்லி, தமது உடைவாளைக் கழற்றினார். நாற்காலிகளுக்குப் பின்னாலிருந்து அவர் வெளியே வந்து' தமது ஜோடியின் கையை அழுத்தமாய்ப் பற்றி, தமது தலையை பின்னால் சாய்த்து, காலை முன்பாக வைத்து தாளத்திற்குக் காத்திருந்தார். அவர் மாஜுர்க்கா நடனம் ஆடும்போதும், அவர் குதிரை மீது அமர்ந்திருக்கும்போதுதான் அவருடைய குள்ளமான உருவம் தெரிவதில்லை. இப்பொழுது அவர் தாம் எம்மாதிரி இருக்க வேண்டுமென்று நினைத்தாரோ, அதே மாதிரி சிறந்த பேர்வழியாக காணப்பட்டார். தாளம் தமக்கு சரியாக வந்தவுடன் கடைக்கண்ணால் தமது ஜோடியை பார்த்து ஆனந்தமும், வெற்றியும் கொண்ட தோற்றத்தோடு திடீரென்று ஒரு பாதத்தை தாளத்திற்குத் தக்கதாக அழுத்து வைத்து, ஒரு பந்து மாதிரி அந்த இடத்தை விட்டு தமது ஜோடியை அணைத்துக் கொண்டு அங்கிருந்து பாய்ந்து அந்த அறையைச் சுற்றி வந்தார். மெதுவாக ஒரு காலால் அந்த அறையின் பாதி தூரத்திற்கு அவர் வழுக்கி வந்தார். வழியில் கிடந்த நாற்காலிகளைப் பார்க்காமல் அவர் வந்தபடியால், அந்த நாற்காலிகளில் அவர்மோதுவதாய் இருந்தபோது, திடீரென்று தமது

தார்ச் சக்கரங்களை கலகலத்துக்கொண்டு, கால்களைப் பரப்பி தமது குதிக்கால்களில் நின்றார். ஒரு வினாடி தான் அம்மாதிரி நின்றிருப்பார். மீண்டும்அந்த இடத்தில் தமது பாதத்தால் அழுத்தி தார்ச்சக்கரத்தால் சப்தமிட்டுக் கொண்டு வேகமாகத் தம்மைச் சுற்றி, தமது இடது காலின் குதிகாலை வலது காலில் அடித்து மறுபடியும் வட்டமாகச் சுற்றி வருவதற்குப் பறந்து சென்றார். அவர் என்ன செய்யப்போகிறார் என்பதை நட்டாஷா யூகித்துக் கொண்டாள். ஆகவே அவரிடம் பூராவாக தன்னை ஒப்புவித்துவிட்டு எப்படி செய்வது என்பதைத்தெரியாமல் அவர் செய்கிறமாதிரியே செய்து வந்தாள். இடது கையாலும், பின்னால் வலது கையாலும் அவளை அவர் சுற்றினார். அதன் பின்னால் ஒரு முழங்காலைக் கீழே அழுத்திக் கொண்டு அவளை தம்மைச் சுற்றி, சுற்றினார். மீண்டும் குதித்து எழுந்து ரொம்ப ஆர்வத்தோடு முன்னால் பாய்ந்தார். அந்த அறைகள் எல்லாவற்றையுமே மூச்சுகூட விடாதபடி, தாம் பாய்ந்து போய்விட முடியும் என்பதைப் போல பாய்ந்தார். திடீரென்று அவர் நின்று எதிர்பாராத சில நடன அடிகளை எடுத்து வைத்தார். கடைசியாகத் தமது ஜோடியை அவளுடைய நாற்காலிக்கு முன்னால் ஒருதரம் சுற்றி, தாம் நிமிர்ந்து நின்று தம்முடைய தார்ச் சக்கரங்கள் கலகலக்கும்படி கால்களைக் கூட்டிவைத்து, அவளுக்கு தலை குனிந்து மரியாதை செய்தார். நட்டாஷா அதேமாதிரி மரியாதை செய்யவில்லை. அவள் ஆச்சரியத்தோடு, புன்னகையோடு, வெறித்த கண்களோடு, அவரை யார் என்பதைத் தெரியாதவள்போல அவரைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள்.

‘இதற்கு என்ன அர்த்தம்?’ என்று கடைசியாக அவள் சொன்னாள்.

இந்த நடனத்தை உண்மையான மாஜுர்க்கா நடனமென்று அயாகெல் ஒப்புக்கொள்ளவில்லை. இருந்தாலும் அங்கிருந்த ஒவ்வொருவரும் டெனைசாவின் சாமார்த்தியத்தைக் கண்டு மனம் பூரித்தார்கள். அவரை மீண்டும் மீண்டும் தங்களோடு நடனமாடும்படி பலர் கேட்டு வந்தார்கள். அங்கிருந்த வயோதிகர்கள் போலந்தைப்பற்றியும் தங்களுடைய பழங்கால நினைவுகளைப் பற்றியும் சிரித்துக்கொண்டே பேச ஆரம்பித்தார்கள். மாஜுர்க்கா நடனத்திற்குப் பின்னால் டெனைசாவின் முகம் சிவந்தது. கைக் குட்டையால் முகத்தை துடைத்துக்கொண்டு நட்டாஷா பக்கத்தில் அமர்ந்தார். அன்று மாலை பூராவும் அவளை விட்டு அவர் எழுந்து போகவேயில்லை.

# 4
## 13

அதற்குப் பின்னால் இரண்டு நாட்களாக டோலாகாவைத் தமது வீட்டிலோ அல்லது அவருடைய வீட்டிலோ ராஸ்டோவ் பார்க்கவில்லை. மூன்றாவது நாளன்று டோலாகாவிடமிருந்து அவருக்கு ஒரு கடிதம் வந்தது.

'உமது வீட்டிற்கு மறுபடியும் நான் வர உத்தேசிக்கவில்லை. காரணம் உமக்கே தெரியும் என்னுடைய பட்டாளத்தில் நான் போய் சேரப் போகிறபடியால், இன்றிரவு எனது நண்பர்களுக்கு ஒரு வழியனுப்பு இரவு சாப்பாடு விருந்து அளிக்கப் போகிறேன். இங்கிலீஷ் ஹோட்டலுக்கு வாரும்'

சுமார் 10 மணிக்கு நாடகக் கொட்டகையிலிருந்து நேராக இங்கிலீஷ் ஓட்டலுக்கு ராஸ்டோவ் சென்றார். அந்த நாடகத்திற்கு டெனைசாவுடனும், தமது குடும்பத்துடனும் அவர் சென்றிருந்தார். அன்று இரவு விருந்திற்காக டோலாகாவ் அமர்த்தியிருந்த அந்த ஹோட்டலிலேயே சிறந்த அறைக்கு அவரைக் கூட்டிப் போனார்கள். அங்கே ஒரு வட்ட மேஜையைச் சுற்றி சுமார் இருபதுபேர் கூடியிருந்தார்கள். டோலாகாவ் மட்டும் தமது இரு பக்கங்களுக்கும் இரண்டு மெழுகுவர்த்திகளை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். அந்த மேஜையில் தங்க நாணயங்களும், நோட்டுகளும் குவித்து வைக்கப்பட்டிருந்தன. அவர்கள் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். பணத்தைப் பார்த்துக்கொள்ளும் வேலையை டோலாகாவ் செய்து வந்தார். தம்மை திருமணம் செய்து கொள்ளும்படி சோனியாவை அவர் கேட்டு, அவள் மறுத்த பின்பு ராஸ்டோவ் அவரைப் பார்க்கவில்லை. நாங்கள் இருவரும் சந்திக்க வேண்டும் என்று நினைத்தவுடனேயே அவருக்கு தர்ம சங்கடமாய்த் தோன்றியது.

ராஸ்டோவ் உள்ளே நுழைந்ததும், டோலாகாவின் தெளிவான கடுமையான பார்வை ராஸ்டோவை நோக்கியது. அவரை வெகு நேரமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்ததைப் போலத் தோன்றியது.

'நாம் சந்தித்து வெகு காலமாயிற்று' என்று டோலாகாவ் சொன்னார். 'நீர் வந்ததற்காக நன்றிகள். முதலில் இந்த விவகாரத்தை முடித்துக் கொள்ளுகிறேன். பின்னால் இல்லூஷ்கா தனது பாட்டுக் கோஷ்டியுடன் வருவான்.'

'ஒன்றிரண்டு தடவைகளில் நான் உமது வீட்டிற்கு வந்திருக்கிறேன்' என்று ராஸ்டோவ் சொன்னார். அவருடைய முகம் சிவந்தது.

டோலாகாவ் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

'நீர் விளையாடலாமே?' என்று அவர் கேட்டார்.

டோலாகாவுடன் நாம் ஒரு தடவை பேசிக் கொண்டிருந்த அந்த விசித்திரமான உரையாடல் அச்சமயம் ராஸ்டோவுக்கு ஞாபகத்திற்கு வந்தது. 'சீட்டு விளையாட்டுகளில் முட்டாள்கள் மட்டுமே அதிருஷ்டத்தை நம்பிக் கொண்டிருப்பார்கள்' என்று அவர் சொன்னார்.

'அல்லது என்னுடன் சீட்டு விளையாடுவதற்கு நீர் பயப் படுகிறீரா? என்று ராஸ்டோவின் சிந்தனையை யூகிப்பதுபோல டோலாகாவ் கேட்டார்.

கிளப் டின்னர் சமயத்திலும், வேறு சமயங்களிலும் அவர் காட்டிய மனோபாவத்தை அந்த புன்சிரிப்பிற்குப் பின்பாக, ராஸ்டோவ் கண்டார். அவருக்கு எப்பொழுதாவது நித்திய வாழ்க்கையில்வெறுப்பு ஏற்பட்டு அதிலிருந்து தப்பித்துக் கொள்ள விரும்பினால், ஒரு விசித்திரமான கொடுமையான வழியின் மூலமாகவே அவர் செய்துகொள்ளுவது வழக்கம். அந்த குணத்தை ராஸ்டோவ் இப்பொழுது கண்டார்.

இதைக் கண்டதும் ராஸ்டோவுக்கு மன ஆயாசம் ஏற்பட்டது. டோலாகாவின் வார்த்தைகளுக்குப் பதிலாக, தமாஷாக எதையாவது சொல்ல அவர் முயன்றார். ஆனால் அவரால் முடியவில்லை. அவர் வேறு எதையாவது நினைப்பதற்குள்ளாக அவருடைய முகத்தை நேராக டோலாகாவ் பார்த்து, அங்கிருந்த ஒவ்வொருவருக்கும் கேட்கும்படி மெதுவாகவும் துணிவோடும் கூறினார்.

'சீட்டு விளையாட்டு பற்றி நாம்ஒரு தடவை பேசியது உமக்கு ஞாபகத்தில் இருக்கிறதா? முட்டாள் மட்டுமே அதிருஷ்டத்தை நம்பி இருப்பான் என்றும், நிச்சயமாக தன்னுடைய நிலையை அறிந்து கொள்ளவேண்டுமென்றும் நான் சொன்னேன். இப்பொழுது அதை முயற்சி செய்து பார்க்க விரும்புகிறேன்.

'அதிருஷ்டத்தை முயற்சி செய்யப் போகிறீரா? அல்லது நிச்சயத்தை முயற்சி செய்யப் போகிறீரா?' என்று ராஸ்டோவ் தம்மையே கேட்டுக்கொண்டார்.

'நல்லது, நீர் விளையாடாமல் இருப்பது நல்லது' என்று டோாகாவ் சொல்லிவிட்டு, ஒரு புதிய சீட்டுக் கட்டை எடுத்து முன்னால் போட்டு, 'நல்லது நாம் ஆரம்பிக்கலாம். கனவான்களே...' என்றார்.

பணத்தை முன்னால் நகர்த்திவைத்து ஆடுவதற்குத் தயாரானார். அவர் பக்கத்தில் ராஸ்டோவ் அமர்ந்தார். முதலில் அவர் விளையாட்டில் கலந்துகொள்ளவில்லை. டோலாகாவ் அவரை அடிக்கடி நோட்டமிட்டுக் கொண்டிருந்தார்.

'நீர் ஏன் விளையாடக் கூடாது?' என்று கேட்டார்.

தாம் சீட்டு விளையாடுவற்குத் தயாராய் இருப்பதைப் போன்ற ஒரு உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது. கொஞ்சம் பணம் வைத்து முதலில் ஆட்டத்தை ஆரம்பித்தார்.

'என்னிடம் பணம் இல்லை' என்றார் அவர்.

'உம்மீது எனக்கு நம்பிக்கையுண்டு'

ஐந்து ரூபிள்களை முதலில் ராஸ்டோவ் வைத்துத் தோற்றார் மீண்டும் வைத்து விளையாடினார். மீண்டும் தோற்றார். பத்துத் தடவைகள் அம்மாதிரியாக டோலாகாவிடம் ராஸ்டோவ் தோற்றார்.

'கனவான்களே, உங்கள் பணத்தை சீட்டுகள் மீது வையுங்கள், அல்லது கணக்குப் பார்ப்பதற்கு எனக்குக் கஷ்டமாய் இருக்கும்' என்றார்.

விளையாடிக் கொண்டிருந்தவர்களில் ஒருவர், தம்மை அவர் நம்புவார் என்று எதிர்பார்ப்பதாகச்சொன்னார்.

'ஆம் நீர் சொல்லுவது சரி. ஆனால் எனக்கு கணக்கில் குழம்பிவிடும். ஆகவே, நீங்கள் பந்தயம் வைக்க விரும்பும் பணத்தை சீட்டின் மீது வைப்பீர்களாக' என்று டோலாகாவ் சொன்னார். பின்னால் ராஸ்டோவைத் திரும்பிப் பார்த்து, 'நீர் ஒன்றும் கஷ்டப்படவேண்டாம். நமது கணக்கைப் பின்னால் தீர்த்துக்கொள்ளுவோம்' என்றார்.

சீட்டு விளையாட்டு ஆரம்பமாயிற்று. ஒரு பரிச்சாரகன் எல்லாருக்கும் அடிக்கடி ஷாம்பைன் என்ற மதுவைக் கொடுத்துவந்தான்.

ராஸ்டோவின் ஆட்டங்கள் எல்லாம் தோல்வியுற்றன. அவருக்கு இப்பொழுது 800 ரூபிள்கள் போய்விட்டன. ஒரு சீட்டின்மீது 800 ரூபிள்கள்' என்று அவர் எழுதினார். ஆனால் அந்தப் பரிச்சாரகன் தமது கோப்பையில் ஷாம்பைனை விட்டுக்கொண்டிருந்தபோது அவருடைய மனம் மாறியது. மீண்டும் இருபது ரூபிள்கள் பந்தயம் கட்டி விளையாட ஆரம்பித்தார்.

'விட்டுவிடும். நீர் எல்லாவற்றையும் சீக்கிரமாக ஜெயிக்கப் போகிறீர். நான் எல்லாரிடமும் தோற்கிறேன். ஆனால் உம்மிடம் மட்டும் ஜெயிக்கிறேன். என்ன, உமக்கு விளையாடுவதற்கு

பயமாயிருக்கிறதா?' என்று ராஸ்டோவைப் பார்க்காமலேயே அவர் பேசினார்.

ராஸ்டோவ் இணங்கினார். அந்த 800 ரூபிள்களை அப்படியே விட்டு விட்டு, 'ஆடுதன் 7' என்ற ஒரு முனை கிழிந்த சீட்டைத் தரையிலிருந்து பொறுக்கி எடுத்து மேஜை மீது வைத்தார். அந்த 7-ஐ அவர் பின்னால் நன்றாக ஞாபகத்தில் வைத்திருந்தார். அந்த ஆடுதன் 7 சீட்டின் மீதுதான் ஒரு உடைந்த சாக்குக் கட்டியால் 800 ரூபிள்கள் என்று தெளிவான இலக்கங்களில் எழுதினார். பின்னால் தமது கோப்பையில் இருந்த வெது வெதுப்பான ஷாம்பைனை காலி செய்துவிட்டு, டோலாகாவ் கூறிய வார்த்தைகளைக் கண்டு நகைத்தார். தம்முடைய உள்ளம் அமுங்கி நிற்க,அந்த 7-வது சீட்டு வருவதற்கு டோலாகாவின் கைகளை பார்த்துக்கொண்டேயிருந்தார். ராஸ்டோவ் தோற்பதோ அல்லது ஜெயிப்பதோ அந்த ஆடுதன் 7-ல்தான் இருந்தது. முந்திய ஞாயிற்றுக்கிழமையன்று வயோதிகக் கோமகன் தமது குமாரருக்கு இரண்டாயிரம் ரூபிள்களைக் கொடுத்தார். பணக்கஷ்டத்தைப் பற்றி பேசுவதற்கு அவருக்கு எப்பொழுதுமே பிடிப்பதில்லை. இருந்தாலும், மே மாதம் வரையில் இதற்கு மேலாக தம்மால் எதுவும் கொடுக்க முடியாதென்று நிக்கலஸிடம் அவர் கூறினார். இந்தத் தடவை மிகுந்த சிக்கனமாயிருக்கும்படி அவர் சொன்னார். அவருக்கு எவ்வளவு தேவையோ அதற்கு அதிகமாகவே கிடைத்துவிட்டதென்றும், மே மாதம் வரையில் தாம் எதையும் இனி கேட்கப் போவதில்லை என்றும், நிக்கலஸ் தமது தந்தைக்கு வாக்குறுதி கொடுத்தார். இப்பொழுது அந்த பணத்தில் 1200 ரூபிள்கள்தான் மீதமாயிருக்கின்றன. ஆகவே இந்த ஆடுதன் 7 அவருக்கு கிடைக்காவிட்டால், 1600 ரூபிள்கள் அவருக்கு நஷ்டமாவதோடு, தமது தந்தைக்குக் கொடுத்த வாக்குறுதியையும் மீற வேண்டிய அவசியம் ஏற்படும். ஆகவே, சோர்ந்த உள்ளத்தோடு டோலாகாவின் கைகளைப் பார்த்துக்கொண்டு அவர் நினைத்தார்:-

'இப்பொழுது இந்த சீட்டு எனக்கு சீக்கிரம் வருமாக. நான் உடனே எனது தொப்பியை எடுத்துக்கொண்டு வீட்டிற்கு வேகமாகத் திரும்பி டெனைசாவுடனும், நட்டாஷாவுடனும், சோனியவுடனும் இராச்சாப்பாடு சாப்பிடுவேன். இனி இந்த சீட்டை நான் கையாலும் தொடமாட்டேன்.

அந்த வினாடியில் அவருடைய வீட்டு வாழ்க்கை, பெட்டியாவுடன் அவர் செய்யும் தமாஷ், சோனியாவுடன் பேசும் பேச்சுக்கள், நட்டாஷாவுடன் நடத்திய உரையாடல்கள்,

தந்தையுடன் செய்து வந்த உரையாடல்கள் தமது வீட்டிலுள்ள மிக சொகுசான படுக்கை, இவை எல்லாம் மிகத் தெளிவாக மிக மகிழ்ச்சியாக அவருக்கு முன்னால் தோன்றின. இவை எல்லாம் தம்மால் அறிந்து தெரிந்துகொள்ள முடியாமல், இழந்துவிட்ட பேரானந்தங்கள் ஆகிவிட்டனவோ என்று தோன்றின. இந்தப் பேரானந்தங்களை, புதிதாய் அவர் அனுபவித்த, புதிதாய் பிரகாசம் அடைந்த இவற்றையெல்லாம், வெறும் ஆடுதன் 7 சீட்டின் அதிருஷ்டத்தை நம்பி இழந்து, அவரை இனந்தெரியாத அளவிடமுடியாத துக்கங்கள் நிறைந்த பாதாளத்தில் கொண்டு தள்ளும் என்பதை அவரால் யூகிக்க முடியவில்லை. அம்மாதிரி நேரிடாதென்று அவர் நினைத்தார். என்றாலும் டோலாகாவின் கை அசைப்புகளை சோர்ந்த உள்ளத்தோடு அவர் கவனித்துக் கொண்டிருந்தார். கைச்சட்டையின் வழியாகத் தெரிந்து கொண்டிருந்த அவருடைய அகலமான சிவந்த கைகள் சீட்டுக்கட்டை கீழே வைத்துவிட்டு, அவரிடம் கொடுக்கப்பட்ட ஒரு சுங்கானையும் ஒரு கோப்பையையும் வாங்கிக்கொண்டன.

'ஆகவே, நீர் என்னுடன் விளையாடுவதற்கு பயப்படவில்லை. அல்லவா?' என்று மீண்டும் டோலாகாவ் கேட்டார். கேட்டுவிட்டு எதோ ஒரு நல்ல கதை சொல்லப் போகிறவரைப் போல, சீட்டுகளைக் கீழே வைத்து நாற்காலியின் பின்னால் சாய்ந்து உட்கார்ந்து புன்சிரிப்போடு நிதானமாய், துணிகரமாய் சொன்னார்:

'ஆம், கனவான்களே, சீட்டு விளையாட்டுகளில் நான் கள்ளச் சீட்டு விளையாடுகிறவனென்று மாஸ்கோவில்' ஒரு வதந்தி பரவிவருகிறது. ஆகவே நீங்கள் ஜாக்கிரதையாக இருக்கும்படி உங்களுக்கு நான் சொல்லுகிறேன்.'

'சரி, ஆரம்பிக்கலாம்' என்று கத்தினார் ராஸ்டோவ்.

'ஓ, அந்த மாஸ்கோ வதந்திகள்' என்று டோலாகாவ் சொல்லி, புன்சிரிப்போடு தமது சீட்டுகளை மீண்டும் எடுத்துக்கொண்டார்.

'ஹா' என்று ஒரு பெரிய கூச்சலிட்டு ராஸ்டோவ் தமது இரண்டு கைகளாலும் தலையைத் தாங்கிக்கொண்டார். அவருக்கு வேண்டிய அந்த 7 எல்லாவற்றிற்கும் மேலாக இருந்தது. அந்தக் கட்டில் அது தான் முதலாவதாக இருந்தது. ஆகவே அவரால் எவ்வளவு தூரம் பணம் கொடுக்க முடியுமோ, அதற்கு மேலாக அவர் தோற்று விட்டார்.

'இருந்தாலும், நீர் உம்மை நஷ்டப்படுத்திக்கொள்ள வேண்டாம்' என்று கடைக்கண்ணோடு ராஸ்டோவைப் பார்த்துவிட்டு மீண்டும் விளையாட ஆரம்பித்தார்.

# 4

## 14

சுமார் 1.30 மணி நேரமான பின்பு, அங்கு விளையாடிக் கொண்டிருந்தவர்களில் பலர் அதிலிருந்து விலகிக்கொண்டார்கள். இப்போது ராஸ்டோவ் ஒருவர்தான் தீவிரமாக விளையாடிக் கொண்டு வந்தார். முதலில் 1600 ரூபிள்கள் தோற்றுப் போனதாக அவர் கணக்கு போட்டிருந்தார். பின்னால் அந்த தொகை 10,000 மாக உயர்ந்திருக்குமென்று அவர் நினைத்தார். ஆனால் இப்போது அந்தத்தொகை 15,000-த்திற்கு உயர்ந்திருக்குமென்று அவருக்குத் தோன்றியது. ஆனால் உண்மையில் 20,000 ரூபிள்கள் மேலாக அது உயர்ந்துவிட்டது. கதைகள் சொல்வதிலோ அல்து கதைகளைக் கேட்பதிலோ டோலாகாவுக்கு இப்போது சிரத்தை எதுவுமில்லை. ராஸ்டோவின் கைகள் என்ன செய்து கொண்டிருக்கின்றன என்பதைக் கவனிப்பதி லேயே, அவர் கவனம் கொண்டிருந்தார். இடையிடையே ராஸ்டோவ் எவ்வளவு தோற்றார் என்று தாம் பக்கத்தில் குறித்து வைத்திருந்த கணக்கையும் பார்த்துக் கொண்டிருந்தார். அந்தத் தொகை 43,000 ஆகிற வரையில் விளையாடி விடுவது என்று அவர் தீர்மானித்திருந்தார். 43 என்ற எண்ணிக்கை தம்முடைய வயதையும் சோனியாவின் வயதையும் சேர்த்துக் கூட்டினால் வருகிறது. அதனால்தான் 43,000 என்று அவர் முடிவு செய்தார். தமது இரண்டு கைகளிலும் தலையைத் தாங்கிக் கொண்டு, மேஜைக்கு முன்பாக ராஸ்டோவ் அமர்ந்து, அங்கு குறித்து வைத்திருந்த தமது கணக்கைப் பார்த்துக் கொண்டிருந்தார். மேஜை மீது சீட்டுகள் சிதறிக் கிடந்தன. அங்கங்கே ஒயின் கொட்டியிருந்தது. அவருடைய மனதை வருத்திக் கொண்டிருந்த தோற்றம் மட்டும் அவரை விட்டு விலகவேயில்லை. அதாவது டோலாகாவின் சட்டைக்கு வெளியே தெரிந்து கொண்டிருந்த அந்த அகலமான ரோமம் நிறைந்த சிவந்த மணிக் கட்டுகள், தம்மை அவருடைய ஆதிக்கத்தில் வைத்திருக்கின்றன என்று அவர் நினைத்தார்.

''600 ரூபிள்கள், ஒரு ஆஸ், ஒரு மூலை, ஒரு ஒன்பது... அதைத் திரும்பவும் வெற்றி கொள்வது முடியாத காரியம்... ஓ, வீட்டில் இருப்பது எவ்வளவு இனிமையாயிருந்தது. ராஜா, இரட்டை... அது இருக்க முடியாது. அவர் ஏன் இதை எனக்குச் செய்கிறார்?'' என்று ராஸ்டோவ் சிந்தித்தார். ஒரு சமயத்தில் ஒரு பெரிய தொகையை பந்தயமாக வைத்து ராஸ்டோவ் சொன்னார். ஆனால் டோலாகாவ் அதை மறுத்து விட்டு, தாம் ஒரு தொகையைச் சொன்னார். அவர்

சொல்லியதையே நிக்கலஸ் ஒப்புக்கொண்டார். என்ஸ் நதியின் பாலத்தில் அந்த யுத்த முனையில் அவர் எப்படி கடவுளைப் பிரார்த்தனை செய்தாரோ அதே மாதிரி இப்போதும் ஒரு வினாடி கடவுளைப் பிரார்த்தித்தார். அந்த மேஜை மீது கிடந்த குவியலிலிருந்து எடுக்கும் ஒரு சீட்டு தம்மைக் காப்பாற்றி விடுமென நம்பினார். பின்னால் தமது கோட்டிலுள்ள பின்னல் வரைகளை எண்ணினார். எத்தனை வரைகள் இருந்தனவோ, அந்த எண்ணிக்கையுள்ள சீட்டை எடுத்து தமது நஷ்டத்தை ஈடு செய்ய அதன் மீது பந்தயம் கட்ட முயற்சித்தார். பின்னால் அவர் சுற்றிப் பார்த்து மற்றவர்கள் தமக்கு உதவிக்கு வருகிறார்களா என்று எண்ணினார். அதன் பின்னால் கடுமையாகக் காணப்பட்ட டோலாகாவின் முகத்தை நோக்கி, அவர் மனதில் என்ன ஓடிக் கொண்டிருக்கிறது என்பதையறிய முயற்சித்தார்.

'எனக்கு இந்த நஷ்டத்தால் எவ்வளவு கஷ்டமேற்படுமென்பதை அவர் அறிவார். நான் அழிந்துபோக வேண்டுமென்று அவர் விரும்பமாட்டார். அவர் என்னுடைய நண்பரல்லவா? எனக்கு அவர் மீது மிகுந்த பிரியமிருக்கிறது அல்லவா? ஆனால் இது அவருடைய குற்றமல்ல. அவருக்கு அவ்வளவு பெரிய அதிருஷ்டம் இருக்குமானால் அவர் என்ன செய்வார்... ஆனால் இது என்னுடைய குற்றமல்ல. நான் தவறு எதையும் செய்ததில்லை. நான் யாரையாவது கொன்றிருக்கிறேனா, அல்லது யாருக்காவது கெடுதல்செய்யவேண்டுமென்று நான் விரும்பியிருக்கிறேனா? அப்படியானால் இந்த பயங்கரமான துரதிருஷ்டம் எனக்கு ஏன் வந்து சேர வேண்டும்? இந்த துரதிருஷ்டம் எப்போது ஆரம்பமாயிற்று? அம்மாவின் பெயர் தினத்திற்கு ஒரு அழகான பெட்டி வாங்கிக் கொடுப்பதற்கு, 100 ரூபிள்கள் சம்பாதித்து வீடு திரும்பலாமென்ற நினைப்போடு, சிறிது நேரத்திற்கு முன்னால் இந்த மேஜைக்கு நான் வந்தேன். அப்பொழுதெல்லாம் நான் மிகுந்த சந்தோஷமா யிருந்தேன்; மிகுந்த உல்லாசமாயிருந்தேன்; சுதந்திரமாயிருந்தேன். எவ்வளவு சந்தோஷமாய் அப்போது நான் இருந்தேன் என்பதை இப்போது அறியக்கூட என்னால் முடியவில்லை. அந்த சந்தோஷம் எப்போது முடிந்தது? இந்தப்புதிய பயங்கரமான நிலைமை எப்போது ஆரம்பமாயிற்று? இந்த மாறுதலுக்கு என்ன காரணம்? இதுவரை மேஜையில் இதே இடத்தில் நான் பூராவாக உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். இதே இடத்திலிருந்து நான் சீட்டுகளைப் போட்டு விளையாடிக் கொண்டிருக்கிறேன். அந்த அகலமான, சுறுசுறுப்பான கைகளை நான் பார்த்துக்கொண்டேதான் இருக்கிறேன். எப்போது அது

நடந்தது? என்ன நடந்தது? நான் நன்றாவும், பலமாகவும், இன்னும் அதே இடத்தில் அதே மாதிரி தான் இருக்கிறேன். இல்லை, அப்படியிருக்க முடியாது. நிச்சயமாக இவையெல்லாம் ஒன்றுமில்லை' என்று அவர் நினைத்தார்.

அவர் முகம் சிவந்து உடம்பெல்லாம் வியர்வை கொட்டிக் காணப்பட்டார். இவ்வளவிற்கும் அந்த அறை உஷ்ணமாயில்லை. அவருடைய முகம் பார்ப்பதற்கு பயங்கரமாயும் பரிதாபகரமாயும் தோன்றியது. அமைதியாயிருப்பதற்கு அவர் செய்த பயனற்ற முயற்சியும் காணப்பட்டது.

அந்த 43,000 என்ற தொகை வந்து சேர்ந்தது, ராஸ்டோவ் ஒரு சீட்டை எடுத்து, அதன் ஒரு மூலையை மடித்து, இரண்டு மடங்கு பந்தயம் கட்டுவதற்கு தயாரானார். அச்சமயம் டோலாகாவ் தமது கையிலிருந்த சீட்டுகளைக் கீழே வைத்து, பக்கத்தில் குறித்து வைத்திருந்த கணக்குகளைக் கூட்டினார் அவர் கூட்டியபோது கையில் வைத்திருந்த சாக்குத் துண்டுகூட முறிந்தது.

'இராச்சாப்பாட்டுக்கு நேரமாய் விட்டது. இதோ ஜிப்ஸிகள் வந்துவிட்டார்கள்.'

சில ஆண்களும், பெண்களும் ஜிப்ஸி மொழியில் பேசிக் கொண்டு அறைக்குள்ளே வந்தார்கள். விளையாட்டெல்லாம் முடிந்துவிட்டதென்பதை நிக்கலஸ் அறிந்து கொண்டார். ஆனால் ஒரு அலட்சியமான குரலில் அவர் பேசினார்.

'நல்லது. இன்னும் நீர் விளையாட மாட்டீரா? நான் ஒரு சிறந்த வீட்டை வைத்திருக்கிறேன்' என்று அவருக்கு மிகுந்த பிரியமான ஒரு விளையாட்டை ஆரம்பிக்கப் போவதுபோலப் பேசினார்.

'எல்லாம் முடிந்துவிட்டது. நான் ஒழிந்து போனேன்' என்று அவர் நினைத்தார். 'இப்போது என் மூளையில் ஒரு தோட்டாவைச் சுட வேண்டியதுதான். அது ஒன்றுதான் தற்சமயம் மீதமாயிருக்கிறது.' அதே சமயத்தில் மிகுந்த மகிழ்ச்சியான குரலில் அவர் பேசினார். இங்கே வாரும். இந்த ஒரே ஒரு விளையாட்டு மட்டும்'.

'ரொம்ப சரி' என்று தாம் கணக்குப் போட்டதை முடித்துவிட்டு டோலாகாவ் சொன்னார். 'ரொம்ப சரி, 21 ரூபிள்கள்' என்று அவர் சொல்லி, தமது கணக்கை அவர் காட்டினார். அந்தக் கணக்கில் ஏற்கனவே 43,000 போடப்பட்டிருந்தது. கையில் ஒரு சீட்டு எடுத்துக்கொண்டு விளையாடுவதற்குத் தயாரானார். ராஸ்டோவ் தமது கையில் வைத்திருந்த சீட்டின் மூலையில் போட்டிருந்த மடிப்பை எடுத்துவிட்டார். 6000 என்று அவர் நினைத்ததற்கு மாறாக 21 என்று எழுதினார். 'எனக்கு எல்லாம் ஒன்றுதான். இந்தத் தடவை

இந்தப் பத்தில் நான் ஜெயிக்கப் போகிறேனா என்பதைப் பார்த்துவிட விரும்புகிறேன்.'

விளையாட்டில் தீவிரமாக டோலாகாவ் இறங்கினார். அச்சமயத்தில் டோலாகாவின் சிவந்த கைகளை அவர் எவ்வளவு வெறுத்தார். தெரியுமா? குட்டையான சிவந்த விரல்களும், ரோமம் நிறைந்த மணிக்கட்டுகளும் உள்ள அந்த கைகள் தம்மை அவருடைய ஆதிக்கத்தில் வைத்திருப்பதாக அவர் நினைத்தார்... அவர் பந்தயம் வைத்த ''10'' விழுந்தது.

'கோமகனே, நீர் எனக்கு 43,000 கொடுக்க வேண்டும்' என்று சொல்லிவிட்டு உடம்பை முறித்துக்கொண்டு எழுந்து நின்றார். 'வெகு நேரம் உட்கார்ந்திருந்தால், யாருக்கும் களைப்பு ஏற்படும்' என்று சொன்னார்.

'ஆமாம், எனக்குக் கூட அதிகக் களைப்பாயிருக்கிறது' என்றார் ராஸ்டோவ்.

இச்சமயத்தில் தமாஷ் பேசுவதற்கு இடமில்லையென்று சொல்வதைப்போல, டோலாகாவ் அவரை இடை மறித்துப் பேசினார். 'கோமகனே, எப்போது எனக்குப் பணம் கொடுக்கப் போகிறீர்?'

ராஸ்டோவ் முகம் சிவந்து பக்கத்து அறைக்கு டோலாகாவை அழைத்துக்கொண்டு போனார்.

'உடனே என்றால் பணத்தைக் கொடுக்க முடியாது. நான் ஒரு பிராமிசரிநோட் எழுதிக்கொடுக்கிறேன். நீர் ஒப்புக்கொள்ளுகிறீரா?'

டோலாகாவ் புன்சிரிப்பு கொண்டு நிக்கலஸின் கண்களை நேராகப் பார்த்து தெளிவாகப் பேசினார். 'நான் சொல்லுகிறேன், ராஸ்டோவ், ''சீட்டில் தோல்வி, ஆனால் காதலில் வெற்றி'' என்ற பழமொழி இருப்பது உமக்குத் தெரியும். உம்முடைய மைத்துனி உம்மிடம் காதல் கொண்டிருக்கிறாள் என்பது எனக்குத் தெரியும்.'

'இந்த மனிதரின் ஆதிக்கத்தில் இருப்பதாக ஒருவர் நினைக்கும் போது அது எவ்வளவு பயங்கரமாயிருக்கிறது!' என்று ராஸ்டோவ் நினைத்தார். தமக்கு ஏற்பட்ட இந்த நஷ்டத்தை தமது தந்தையாரும் தாயாரும் அறியும்போது அவர்களுக்கு எவ்வளவு அதிர்ச்சியா யிருக்கும் என்பதை அவர் அறிவார். இந்தக் கஷ்டத்திலிருந்து தப்பிவிட்டால் எவ்வளவு நிம்மதியாயிருக்குமென்று அவர் நினைத்தார். இந்த துக்கத்திலிருந்தும் வெட்கத்திலிருந்தும் டோலாகாவ் தம்மைக் காப்பற்ற முடியுமென்பதை டோலாகாவ் அறிவார் என்பதை அவர் உணர்ந்தார். ஆனால் அவர் இப்போது ஒரு எலியிடம் பூனை விளையாடும் விளையாட்டை விளையாட

விரும்புகிறார் என்று அவர் நினைத்தார். 'உமது மைத்துனி...' என்று டோலாகாவ் பேச ஆரம்பித்ததும் நிக்கலஸ் அவரை இடை மறித்தார்.

'இந்த விவகாரத்திற்கும் என் மைத்துனிக்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது. ஆகவே அவளைப்பற்றிப் பேசவேண்டிய அவசியம் இல்லை' என்று கோபத்தோடு அவர் கூறினார்.

'அப்படியானால், எனக்கு எப்போது பணம் கொடுக்கப் போகிறீர்?'

'நாளை' என்று ராஸ்டோவ் சொல்லிவிட்டு அந்த அறையை விட்டு வெளியே போனார்.

## 4

## 15

நாளையென்று சொல்வதோ, அல்லது ஒரு கெளரவமான தோற்றத்தை மேற்கொள் வதோ, கஷ்டமான காரியமல்ல. ஆனால் தனிமையில் வீட்டிற்குத் திரும்பி, சகோதரி களிடமோ, சகோதரர்களிடமோ, தாயாரிட மோ, தந்தையாரிடமோ இந்த விஷயத்தைச் சொல்லிப் பணம் கேட்பதென்பது, ஒரு பயங்கரமான காரியம். அதுவும் இனிமேல் பணம் கேட்பதில்லை என்று வாக்குறுதி கொடுத்த பின்பு, அதைக் கேட்க அவருக்கு உரிமையே கிடையாது.

அவருடைய வீட்டில் இன்னும் ஒருவரும் படுக்கைக்குப் போகவில்லை. வீட்டிலுள்ள வாலிப வயதினர் நாடகத்திலிருந்து திரும்பிய பின்பு, இராச்சாப்பாட்டை முடித்துக்கொண்டு கிளாவிகார்ட் என்ற வாத்தியப் பெட்டியைச் சுற்றி அமர்ந்திருந் தார்கள். நிக்கலஸ் அச்சமயம் உள்ளே நுழைந்தார். அந்தக் குளிர் காலத்தில் ராஸ்டோவின் வீட்டில்நிறைந்து நின்ற காதலின் கவிதை மயமான சுற்றுணர்ச்சி அவரைச் சூழ்ந்து கொண்டது. இப்போது டோலாகாவ் சோனியாவை கல்யாணம் செய்துகொள்ளும்படி கேட்டதற்குப் பின்னால், அயாகெல் நடனத்திற்குப் பின்னால், சோனியாவையும் நட்டாஷாவையும் சுற்றி நின்ற அந்த காதல் சுற்றுணர்ச்சி இன்னும் அடர்த்தியாக வளர்ந்து நின்றதுபோலத் தோன்றியது. ஒரு பெரிய புயலுக்கு முன்னால், காற்று எப்படி இருக்குமோ, அம்மாதிரி இருந்தது. நடன மண்டபத்தில் நட்டாஷாவும் சோனியாவும் இளநீல நிற உடைகளை அணிந்து கொண்டிருந்தார்கள். அவற்றில் அவர்கள் அழகாய்க் காணப் பட்டார்கள். அதை அவர்கள் உணர்ந்ததாகவும் தோன்றியது. அந்த களாவிகார்ட் பெட்டிக்குப் பக்கத்தில், சந்தோஷமாகவும் புன்

சிரிப்போடும் நின்று கொண்டிருந்தார்கள். வரவேற்பறையில் ஷின்ஷைன் என்பவரோடு வெரா சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்தாள். தனது கணவன் வருவதை வயோதிக இளவரசி எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் தன் வீட்டிலேயே வசித்து வந்த ஒரு வயோதிக ஸ்திரீயுடன், சீட்டு விளையாடிக் கொண்டிருந்தாள். மின்னும் கண்களுடனும் குலைந்த தலைமுடிகளுடனும் தமது குட்டை விரல்களால் கிளாவிகார்ட் வாத்தியத்தின் கட்டைகளை டெனைசாவ் அழுத்தி வாசித்து கொண்டிருந்தார். அவர் தாமே இயற்றிய ஒரு பாட்டை தமது கால்களை பின்னால் தள்ளிக்கொண்டு, கண்களை உருட்டி விழித்துக்கொண்டு கம்மலான, ஆனால் நுண்மையான அவருடைய குரலில், 'மோகினி என்ற அந்த பாட்டை சங்கீதத்திற்கு பொருத்தமாக வாசிக்க முயற்சித்துக்கொண் டிருந்தார். அந்தப் பாட்டாவது:-

'ஏ, மோகினியே, என்னால் கைவிடப்பட்ட இந்த வாத்தியம் என் உள்ளத்தை உலுக்குவதற்கு, இதில் என்ன மந்திர வித்தை இருக்கிறது!

என் உள்ளம் பொங்கும்படி செய்ய எந்த உணர்ச்சி தூண்டியது! என் விரல்கள் நடுங்கும்படி செய்யும் இந்த ஆனந்தம் எப்பேர்ப் பட்டது!'

பயத்தோடும் சந்தோஷத்தோடும் அங்கு நின்று கொண்டிருந்த நட்டாஷாவை மின்னிக்கொண்டிருந்த தமது கண்களால் நோக்கிக் கொண்டு, உணர்ச்சி வேகத்தில் டெனைசாவ் பாடிக் கொண்டிருந்தார்.

'ரொம்ப அபாரம், பிரமாதமாயிருக்கிறது' என்று நட்டாஷா கூவிவிட்டு, இன்னொரு பாட்டு பாட வேண்டும்' என்று நிக்கலஸ் வருவதைக் கவனிக்காமல் பேசிக்கொண்டிருந்தாள்.

'இவர்களைப் பொறுத்தவரையில் எல்லாம் பழைய மாதிரியே இருக்கின்றன' என்று நிக்கலஸ் நினைத்து, வரவேற்பு அறைக்குள் நோட்டமிட்டார். அங்கே வெராவும் தமது தாயாரும் அந்த வயதான ஸ்திரீயும் இருக்கக் கண்டார்.

'ஆ, இதோ நிக்கலஸ் வந்துவிட்டார்' என்று நட்டாஷா கூச்சலிட்டு அவரிடம் ஓடினாள்.

'அப்பா வீட்டில் இருக்கிறாரா' என்று அவர் கேட்டார்.

'நீ வந்ததைப் பார்த்து எனக்கு ரொம்ப சந்தோஷம்' என்று நட்டாஷா அவர் கேட்டதற்கு பதில் சொல்லாமல் பேசிக் கொண்டிருந்தாள். 'நாங்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு இருக்கிறோம்.

வாசைலிடிமிட்ரிச் எனக்காக இன்னும் ஒரு நாள் அதிகமாகத் தங்குகிறார். உனக்கு அது தெரியுமா?

'இல்லை. அப்பா இன்னும் திரும்பி வரவில்லை' என்று சோனியா சொன்னாள்.

'நிக்கலஸ், வந்துவிட்டாயா? இங்கே வா, என் கண்ணே' என்று வரவேற்பு அறையில் இருந்தவாறு வயோதிகக் கோமகள் அழைத்ததும் நிக்கலஸ் அவளிடம் சென்று, அவள் கையை முத்தமிட்டு, அங்கிருந்த மேஜைக்கு முன்பாக மௌனமாக அமர்ந்து, அவள் சீட்டுகளை அடுக்கிக்கொண்டிருப்பதை கவனிக்க ஆரம்பித்தார். நடன மண்டபத்திலிருந்து இன்னமும் சிரிப்புகளும் நட்டாஷாவைப் பாடும்படி தூண்டிக்கொண்டிருந்த மகிழ்ச்சியான குரல்களும் கேட்டுக்கொண்டிருந்தன.

'ரொம்ப சரி; ரொம்ப சரி, இனிமேல் தட்டிக்கழிக்க முடியாது. இப்போது நீதான் பாடவேண்டும். நாங்கள் உன்னைக் கெஞ்சுகிறோம்' என்றார் டெனைசாவ்.

மௌனமாக இருந்த தனது குமாரரை கோமகள் நோக்கினாள்.

'என்ன விஷயம்?' என்று அவள் கேட்டாள்.

'ஓ, ஒன்றுமில்லை. அப்பா சீக்கிரம் வந்துவிடுவாரா?' என்று அம்மாதிரி கேள்விகளைக் கேட்டுக் கேட்டு சலித்தவர்போலப் பதில் சொன்னார்.

'அப்படித்தான் இருக்கவேண்டுமென்று நான் நினைக்கிறேன்'

'இவர்களைப் பொறுத்தவரையில் எல்லாம் பழைய மாதிரியே தான் இருக்கின்றன. இவர்களுக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது. 'நான் எங்கே போவேன்?' என்று நிக்கலஸ் நினைத்தார். அவர் கிளாவிகார்ட் வாத்தியப் பெட்டியிருந்த அந்த நடன மண்டபத்துக்கு மீண்டும் போனார். டெனைசாவின் பிரியமான பாட்டிற்கான ஆரம்பத்தை சோனியா கிளாவிகார்டில் வாசிக்க முற்பட்டாள். பாடுவதற்கு நட்டாஷா தயாராகிக்கொண்டிருந்தாள். பரவசம் கொண்ட கண்களோடு டெனைசாவ் அவளை நோக்கிக் கொண்டிருந்தார்.

அந்த இடத்தில் மேலும் கீழுமாக நிக்கலஸ் நடக்க ஆரம்பித்தார்.

'அவளைப் பாட வைக்க வேண்டுமென்று அவர்கள் ஏன் விரும்புகிறார்கள்? அவளால் எப்படி பாட முடியும்? அதில் சந்தோஷப்படுவதற்கு எதுவும் இல்லை' எனறு அவர் நினைத்தார்.

சோனியா சங்கீதப் பெட்டியின் கட்டையை திடீரென்று அழுத்தி சங்கீதத்தை ஆரம்பித்தாள்.

'அட கடவுளே, நான் அழிந்து போனேன். என்னுடைய கௌரவம் போய்விட்டது. என்னுடைய மூளையில் ஒரு தோட்டாவை சுடுவது ஒன்றுதான் இப்பொழுது மிஞ்சியிருக்கிறது பாட்டுகள் அல்ல' என்று அவருடைய நினைப்புகள் ஓடிக் கொண்டிருந்தன. 'போய்விடுவதா? எங்கே போவது? எல்லாம் ஒன்றுதான். அவர்கள் பாடிக் கொண்டு இருக்கட்டும்.'

சோர்ந்த முகத்தோடு டெனைசாவையும் அந்தப் பெண்களையும் பார்த்துக்கொண்டு, ஆனால் அவர்கள் பார்வையில் அகப்படாமல், அவர் அந்த அறையில் மேலும் கீழுமாக உலாவிக்கொண்டிருந்தார். 'நிக்கோலென்கா, என்ன விஷயம்?' என்று அவர் மீது தனது பார்வையைச் செலுத்தி சோனியா கேட்டாள். ஏதோ அவருக்கு ஒன்று நடந்திருப்பதுபோல அவளுக்குத் தோன்றியது.

அவளிடமிருந்து நிக்கலஸ் திரும்பி விட்டார். நட்டாஷா கூட தன்னுடைய நுணுக்கமான புத்திசாலித்தனத்தால் தமது சகோதரரின் நிலைமையை உடனே அறிந்து கொண்டாள். ஆனால் அவள் அறிந்திருந்தாலும், அவள் மிகுந்த உற்சாகத்தோடு அச்சமயம் இருந்தபடியால், துக்கத்திற்கோ துன்பத்திற்கோ தன்னையே கடிந்து கொள்வதற்கோ அவள் தயாராய் இல்லை. அதனால் வாலிப வயதினர் செய்வதைப் போல, அவள் வேண்டுமென்றே தன்னை ஏமாற்றிக்கொண்டாள். 'இல்லை, பிறருடைய துக்கத்துக்காக நான் அனுதாபம் காட்டி, என்னுடைய ம்கிழ்ச்சியைக் கெடுத்துக் கொள்ளமாட்டேன். நான் அவரைப்பற்றி நினப்பது ஒருவேளை தவறாயிருக்கலாம். நான் எவ்வளவு சந்தோஷமாயிருக்கிறேனோ, அதோமதிரி அவரும் சந்தோஷமாயிருக்கலாம்' என்று அவள் தனக்குள்ளாகவே சொல்லிக்கொண்டாள்.

'இங்கே பார், சோனியா' என்று அவள் சொல்லி, அந்த மண்டபத்தின் மத்திய இடத்திற்குச் சென்றாள். அங்கிருந்து பாடினால் குரல் நன்றாகக் கேட்குமென்பது அவளுடைய எண்ணம்.

தனது தலையை நிமிர்த்தி நடனக்காரர்கள் செய்வதைப்போலத் தனது கைகளை உயிரில்லாமல் கீழே தொங்கவிட்டு தனது முன்பாதத்தின் முனையில் உயர்ந்து நின்று, அந்த அறையின் மத்திய இடத்தில் அசையாமல் நின்றாள்.

டெனைசாவ் அவளைப் பரவசத்தோடு பார்ப்பதற்கு பதில் சொல்பவள்போல, 'ஆம், இங்கே நிற்பது நான்தான்' என்று தோன்றினாள்.

'அவள் எதற்காக இவ்வளவு மகிழ்ச்சியாயிருக்கிறாள்?' என நிக்கலஸ் நினைத்தார். 'ஏன் அவள் மந்தமாகவும் வெட்கப்படவு மில்லை?'

நட்டாஷா முதல் அடியைப் பாட ஆரம்பித்தாள். அவளுடைய தொண்டை விம்மியது. அவளுடைய மார்பு மேலே எழும்பியது. அவளுடைய கண்கள் கடுமையாயின. அந்த வினாடியில் தன்னைச் சுற்றியிருப்பவைகளை அவள் உணர்ந்ததாய்த் தெரியவில்லை. அவளுடைய புன்சிரிப்புக்கொண்ட இதழ்களிலிருந்து சங்கீதம் வெளியே கொட்டிக்கொண்டிருந்தது. அதே மாதிரி யார் வேண்டுமானாலும் பாடலாம். யார் வேண்டுமானாலும் மனதைக் கவரும்படி வைக்கலாம். ஆனால், அவள் பாடிய பாட்டு ஆயிரம் தடவைகள் கேட்டுக் கேட்டு அசையாமல் இருந்த ஒருவரை, ஆயிரத்தொன்றாம் தடவை கேட்கும் போது புளகாங்கிதம் அடையும்படி செய்து அழும்படி வைத்துவிடும்.

டெனைசாவ் அவளுடைய பாட்டில்மிகவும் மகிழ்ந்துபோய் இருந்ததால், அந்தக் குளிர்காலத்தில்தான் சிரத்தையோடு நட்டாஷா சாதகம் செய்ய ஆரம்பித்தாள். அவள் இப்போது குழந்தை மாதிரி பாடுவது இல்லை. அவளுடைய பாட்டில் அந்த கோமாளித் தனமான, குழந்தைத்தனமான, மிகுந்த சிரமப்படும் படியான அடையாளங்களே இல்லை. என்றாலும் அவளால் இன்னும் சரியாகப் பாட முடியவில்லையென்று அவளுடைய பாட்டைக் கேட்ட சங்கீத ரஸிகர்கள் சொன்னார்கள். ‘அவளுக்கு இன்னும் சாதகம் காணாது. ஆனால் அவளுடைய குரல் மிகவும் அற்புதமானது. அதைப் பழக்கிவைக்கவேண்டும்’ என்றார்கள். அவள் பாடி முடிந்த பின்புதான், பொதுவாக இம்மாதிரி அவர்கள் சொன்னார்கள். அவளுடைய சாதகமில்லாத குரலையும், ஒழுங்கில்லாத மூச்சு வாங்குதலையும், மிகுந்த சிரமப்பட்டு பாடுவதையும், சங்கீத ரஸிகர்கள் அறிந்து கொண்ட போதிலும், அவற்றைப் பற்றி அவர்கள் ஒன்றும் சொல்வதில்லை. ஆனால் அவள் பாடுவதைக் கேட்டு மகிழ்ந்து மீண்டும் கேட்பதற்கு விரும்பினார்கள். அவளுடைய குரலில் ஒரு கன்னியின் இனிமையும், தன்னுடைய சக்திகளை அறியாத தன்னை மறந்த நிலைமையும் இருந்தன. சாதகமில்லாத போதிலும் வெல்வெட் போன்ற அந்த மிருதுத் தன்மை சங்கீதக் கலையில் அவளுக்குள்ள திறமைக் குறைவோடு கலந்து நின்றபடியால், அந்த குரலில் எதையும் மாற்றுவது என்பது சாத்தியமில்லாமல் தோன்றியது. அப்படி மாற்றினால் அந்தக் குரலைக் கெடுப்பது போலவே இருக்கும்.

‘இது என்ன? என்று அவளை விரிந்த கண்களுடன் நோக்கிக் கொண்டிருந்த நிக்கலஸ் நினைத்தார்.

'அவளுக்கு என்ன நேர்ந்துவிட்டது? அவள் இன்று எம்மாதிரிதான் பாடுகிறாள்!' என்று அவர் மேலும் நினைத்தார். அவருடைய முழு கவனமும் அடுத்த அடியை, அடுத்த வாக்கியத்தை எதிர் பார்த்துக்கொண்டிருந்தது. உலகத்திலுள்ள எல்லா விஷயங்களுமே 'ஒன்று, இரண்டு, மூன்று' என்ற தாளத்திற்குள் அடங்கி நிற்பதாக அவளுக்கு தோன்றியது. 'ஒன்று... இரண்டு... மூன்று...'

'ஓ, நம்முடைய இந்த வாழ்ககை எவ்வளவு அசட்டுத்தனமானது' என்று நிக்கலஸ் நினைத்தார். 'இந்த கஷ்டங்கள், இநதப் பணம், இந்த டோலாகாவ், இந்தக் கோபம், இந்தக் கௌரவம் இவையெல்லாம் வெறும் அசட்டுத்தனங்கள். ஆனால் இந்த சங்கீதம் ஒன்றுதான் உண்மையானது. மேலும் பாடு, நட்டாஷா, மேலும் பாடு என் அன்பே' என்று சொல்லிக்கொண்டிருந்தார்.

நிக்கலஸ் தாமும் தம்மை அறியாமலேயே பாட ஆரம்பித்தார். தாம் பாடுவதை அவர் அறிந்து கொண்டதும், 'ஆ, கடவுளே, எவ்வளவு இனிமையாய் இருக்கிறது! உண்மையாகவே நான் தாளத்தோடு சேர்ந்து பாடினேனா? ஆஹா! எவ்வளவு அதிருஷ்டகரமானது!' என்று நினைத்தார்.

அந்த சங்கீத ஒலி அலைகளைக் கிளப்பியபோது, ராஸ்டோவின் உள்ளத்தில் இருந்த உயர்ந்த உணர்ச்சிகளையும் உயிர் பெறும்படி செய்தன. உலகத்தில் உள்ள வேறு எந்த விஷயத்திற்கும் புறம்பாகவும் உயர்வாகவும் இது தோன்றியது. 'நஷ்டங்கள் என்ன பிரமாதம்? டோலாகாவோ, அவருக்குக் கொடுத்த வாக்குறுதிகளோ என்ன பிரமாதம்? ... எல்லாம் அசட்டுத்தனங்கள். ஒருவன் கொலை செய்யலாம் அல்லது திருடலாம் எனறாலும் அவன் சந்தோஷமாய் இருக்க முடியும்...'

## 4
### 16

அன்று அவர் சங்கீதத்தில் அடைந்த ஆனந்தத்தைப்போல அவர் அடைந்து வெகு காலமாயிற்று. நட்டாஷா தன்னுடைய ஓடப்பாடலைப் பாடி முடித்தாள். உடனே காரியார்த்தமான இந்த உலகத்து விவகாரங்கள் அவருக்கு முன்வந்து நின்றன. அவர் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் எழுந்து கீழ் தளத்திலுள்ள தமது அறைக்குப் போனார். அரை மணி நேரத்திற்குப் பின்னால், வயோதிகக் கோமகன் மகிழ்ச்சியோடும் திருப்தியோடும் தமது கிளப்பிலிருந்து

திரும்பினார். அவருடைய வண்டி வருவதைக் கேட்டு அவரை சந்திப்பதற்கு நிக்கலஸ் போனார்.

‘நல்லது, சந்தோஷமாய் நேரம் கழிந்ததா?’ என்று மகிழ்ச்சியோடு புன்னகைகாட்டி, பெருமையோடு வயோதிகக் கோமகன் தனது குமாரரைக் கேட்டார்.

‘ஆமாம்’ என்று சொல்ல நிக்கலஸ் முயற்சி செய்தார். ஆனால் முடியவில்லை. அவர் விம்மி விம்மி அழுவதற்குத் தயாரானார். கோமகன் தன்னுடைய சுங்கானைப் பற்றவைத்துக் கொண்டிருந்ததால், குமாரரின் நிலைமையைக் கவனிக்கவில்லை.

ஆ, இனி அதைத் தவிர்க்க முடியாது என்று நிக்கலஸ் முதல் தடவையாகவும், கடைசி தடவையாகவும் நினைத்தார். திடீரென்று ரொம்ப சாவதானமான குரலில், அந்தக் குரல் தம்மை வெட்கத்திற்குள்ளாக்கிய போதிலும், அவர் துணிந்து பேச ஆரம்பித்தார். ஏதோ நகரத்திற்குப் போய் வருவதற்க வண்டி வேண்டும் என்ற கேட்பதைப் போல அவ்வளவு சர்வ சாதாரணமாகப் பேசினார்:

‘அப்பா, நான் ஒரு வேலையாக வந்திருக்கிறேன். அநேகமாக மறந்துவிட்டேன். எனக்குக் கொஞ்சம் பணம் வேண்டும்’

‘அட கடவுளே, நான் அப்பொழுதே சொன்னேனே, உனக்கு நான் கொடுத்த பணம் போதாதென்று. இப்போது உனக்கு என்ன வேண்டும்?’ என்று அவரது தந்தை பேசினார். அவர் அச்சமயம் மிகுந்த குஷியாய் இருந்தார்.

‘ரொம்ப வேண்டும்’ என்று நிக்கலஸ் முகம் சிவக்க ஒரு அசட்டுத் தனமான சிரிப்போடு சொன்னார். அதை அவர் வெகுகாலம்வரை மறக்கவில்லை. ‘நான் கொஞ்சம் இழந்துவிட்டேன். அதாவது ரொம்ப அதிமாக இழந்துவிட்டேன். ரொம்ப ரொம்ப அதிகம்; நாற்பத்து மூன்றாயிரம்.’

‘என்ன? யாருக்கு?... வெறும் அசட்டுத்தனம்’ என்று கோமகன் கத்தினார். வயதானவர்களுக்கு ஏற்படுகிற மாதிரி அவருடைய முகத்திலும் கழுத்திலும் திடீரென்று சிகப்பு நிறம் தோன்றியது.

‘நாளைக்கு அந்தப் பணத்தைக் கொடுத்துவிடுவதாக வாக்கு கொடுத்திருக்கிறேன்’ என்றார் நிக்கலஸ்.

‘நல்லது...’ என்று வயோதிகக் கோமகன் சொல்லிவிட்டு, தமது கைகளை விரித்துக் காட்டி, என்ன செய்வது என்று தெரியாமல் சோபாவில் அமர்ந்தார்.

'அதைத் தவிர்க்க முடியவில்லை. அம்மாதிரி எல்லோருக்கும் ஏற்படுகிறதுதான்' என்று தைரியமாகவும், அலட்சியமாகவும், கவலையில்லாமலும் அவருடைய குமாரர் பேசினார். ஆனால் அவருடைய மனதில் மட்டும், தம்மைப் போல ஒரு உபயோகமற்ற அயோக்கியன் கிடையாதென்றும், தாம் செய்த தவறுக்குத் தமது ஆயுள் பூராவாக பிராயச்சித்தம் பெற முடியாதென்றும் தோன்றியது. தமது தந்தையின் கைகளை முத்தமிட்டு, அவர் முன்பு முழங்கால் மண்டியிட்டு மன்னிக்கும்படி பிரார்த்தித்துக்கொள்ள வேண்டு மென்று அவர் விரும்பினார். ஆனால் அவர் பேசியதோ, கவலையில்லாத ஒரு முரட்டுக் குரலாயிருந்தது. தமது குமாரரின் வார்த்தைகளைக் கேட்டதும் வயோதிகக் கோமகன் தமது பார்வையைக் கீழே நோக்கினார். ஏதோ அவசரமாகப் பரபரப்புடன் தேட ஆரம்பித்தார்.

'ஆமாம், அது கஷ்டம்தான். அந்தப் பணத்தை சேகரிப்பது கஷ்டமென்று தான் தோன்றுகிறது. எல்லோருக்கும் ஏற்படுகிறதுதான். ஆம் அதை யார்தான் செய்யவில்லை?'

ஒரு கோபமான நோக்கோடு தமது குமாரரின் முகத்தைப் பார்த்துவிட்டு, அந்தக் கோமகன் அறையிலிருந்து வெளியே போனார்... தந்தையிடம் எதிர்த்துப் பேச வேண்டியிருக்குமென்று நிக்கலஸ் தயாராயிருந்தார். ஆனால் இம்மாதிரி நடப்பதை அவர் எதிர்பார்க்கவில்லை.

'அப்பா, அ...ப்... பா... என்னை மன்னியுங்கள்' என்று அவர் விம்மிக்கொண்டு, அவர் பின்னாலேயே போனார். தந்தையின் கையைப் பற்றி தம்முடைய இதழ்களில் அழுத்திக் கண்ணீர் வடித்தார்.

★ ★ ★

தந்தையும் மகனும் அம்மாதிரிப் பேசிக்கொண்டிருக்கும்போது, இதைவிட எவ்விதத்திலும் முக்கியத்துவத்தில் குறையாத மற்றொரு விஷயத்தைப் பற்றித் தயாரும் மகளும் பேசிக் கொண்டிருந்தார்கள். மிகுந்த பரபரப்போடு நட்டாஷா தாயாரிடம் ஓடிவந்தாள்.

'அம்மா... அம்மா... என்னிடம் அவர் சொன்னார்.'

'என்ன சொன்னார்?'

'என்னிடம் அவர் ஒன்று சொன்னார், அம்மா, அம்மா' என்று அவள் கூறினாள்.

தனது காதுகளைக் கோமகளால் நம்ப முடியவில்லை. திருமணம் செய்து கொள்வதற்காக டெனைசாவ் கேட்டார். யாரை? இந்த சிறிய

குழந்தை, இந்த நட்டாஷாவை வெகு சமீபகாலம் வரையில் பொம்மைகளை வைத்து விளையாடிக் கொண்டிருந்த, இன்னமும் பள்ளிக்கூடப் பாடங்களைப் படித்துக் கொண்டிருக்கற இந்த நட்டாஷாவிடம் கேட்டார்.

'வேண்டாம், நட்டாஷா. இது என்ன அசட்டுத்தனம்?' என்று இதை ஒரு தமாஷ் என்று தாயார் நினைத்துப் பேசினாள்.

'அசட்டுத்தனமா? நான் உன்னிடம் உண்மையைச் சொல்லுகிறேன்' என்று கோபமாக நட்டாஷா கூறினாள். 'என்ன செய்ய வேண்டுமென்பதைக் கேட்பதற்காக நான் உன்னிடம் வந்திருக்கிறேன். ஆனால் நீ அசட்டுத்தனம் என்று சொல்கிறாய்'

கோமகள் தனது தோள்களைக் குலுக்கினாள்.

'திருவாளர் டெனைசாவ் உன்னை திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று சொல்லியிருந்தால், அவர் ஒரு முட்டாள் என்று நீ அவரிடம் சொல். அவ்வளவுதான்.'

'இல்லை. அவர் முட்டாள் அல்ல' என்று கோபத்தோடு வேகமாய் நட்டாஷா பதில் அளித்தாள்.

'அப்படியானால், நீ என்ன செய்ய வேண்டுமென்கிறாய்? நீ இப்போதெல்லாம் எப்பொழுதும் காதலாகவே இருக்கிறாய். நீ அவரிடம் காதல் கொண்டிருந்தால், அவரைக் கல்யாணம் செய்துகொள்' என்று எரிச்சலான சிரிப்போடு கோமகள் சொன்னாள். 'உனக்கு அதிருஷ்டம் ஏற்படுவதாக.'

'இல்லை, அம்மா, நான் அவர் மீது காதல் கொண்டிருக்க வில்லை. நான் அவரிடம் காதல் கொண்டிருக்கவில்லையென்றே நினைக்கிறேன்'

'அப்படியானால், அவரிடம் அம்மாதிரி சொல்லு.'

'அம்மா, நீ கோபமாய் இருக்கிறாயா? என்னிடம் கோபம் கொள்ளாதே, என் அன்பே! இது என்னுடைய குற்றமா?'

'இல்லை. ஆனால் இது என்னது. என் அன்பே? நான் போய் அவரிடம் சொல்ல வேண்டுமென்று நீ விரும்புகிறாயா? என்று கோமகள் புன்சிரிப்போடு கேட்டாள்.

'இல்லை, நானே சொல்லிவிடுகிறேன். என்ன சொல்லவேண்டு மென்பதை மட்டும் நீ எனக்கு சொல்லு. எல்லாம் உனக்கு சரியாய்த்தானிருக்கும். ஆனால் அவர் என்னிடம் பேசுவதை நீ பார்க்க வேண்டுமே. அவர் அம்மாதிரி உண்மையாக நினைத்து சொல்லவில்லையென்று எனக்குத் தெரியும். ஏதோ தற்செயலாக அவர் கேட்டுவிட்டார்.'

‘நல்லது: எல்லாம் ஒன்றுதான். நீ மறுத்துவிட வேண்டும்.

‘இல்லை, நான் முடியாது. அதற்காக நான் வருந்துகிறேன். அவர் மிகவும் இனிமையானவர்...’

‘அப்படியானால், அவர் கேட்பதை ஒப்புக்கொள். உனக்கு திருமணமாவதற்கு வயது வந்துவிட்டது’ என்று கோமகள் துடுக்காக கேலியாகச்சொன்னாள்.

‘இல்லை, அம்மா, நான் அவருக்காக வருந்துகிறேன். அதை எப்படிச் சொல்வது என்பதுதான் எனக்குத் தெரியவில்லை’.

‘நீ சொல்வதற்கு ஒன்றுமே இல்லை. நானே அவரிடம் பேசிக் கொள்கிறேன்’ என்று கோமகள் சொல்லி இம்மாதிரி சிறிய குழந்தையான நட்டாஷாவை ஒரு வயது வந்த பெண்மாதிரி அவர்கள் நடத்தத் துணிந்ததைக் கண்டு சீறினாள்.

‘இல்லை, எனக்காகப் பேச வேண்டாம். நானே அவரிடம் சொல்லிவிடுகிறேன். இங்கே கதவு பக்கத்தில் இருந்து கேள், என்று நட்டாஷா சொல்லிவிட்டு வரவேற்பு அறையின் குறுக்காக நடனமண்டபத்திற்கு ஓடினாள். அங்கே டெனைசாவ் அந்த கிளாவிகார்ட் வாத்தியத்துக்குப் பக்கத்தில், அதே நாற்காலியில், தமது கைகளில் முகத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். இவளுடைய மெல்லிய காலடி ஓசையைக் கேட்டதும் அவர் குதித்தெழுந்தார்.

‘நட்டாஷா’ என்று அழைத்துக்கொண்டு வேகமாக அவளிடம் நடந்து வந்தார். ‘என்னுடைய விதியை நீ முடிவு செய். அது உன்னுடைய கைகளில்தான் இருக்கிறது’ என்றார்.

‘வாசைலி டிமிட்ரிச், உமக்காக நான் மிகவும் வருந்துகிறேன்... இல்லை, நீர் ரொம்ப இனிமையானவர்... ஆனால், அது நடக்காது... அது முடியாது... ஆனால், ஒரு நண்பரைப் போல நான் எப்போதும் உம்மீது பிரியம் கொண்டிருப்பேன்.’

அவளுடைய கையில் டெனைசாவ் குனிந்துஅவள் புரிந்த கொள்ள முடியாதபடி, ஏதோ அதிசயமான குரலில் முனங்கிக் கொண்டிருந்தார். அவருடைய சுருண்ட கறுத்த தலைமுடியை அவள் முத்தினாள். இச்சமயத்தில் கோமகளின் ஆடைகளின் வேகமான சலசலப்பு சப்தங்கள் கேட்டன. அவள் இவர்களிடம் வந்தாள்.

‘வாசைலிடிமிட்ரிச், நீர் காட்டிய மரியாதைக்காக உமக்கு வந்தனம், என்று ஒரு தர்ம சங்கடமான தொனியில் கூறினாள். ஆனால் அது கடுமையாக இருந்ததாக டெனைசாவுக்குத் தோன்றியது. ‘என்னுடைய மகள் மிகவும் சிறியவள். என்னுடைய

குமாரரின் நண்பர் என்ற முறையில் முதலில் நீர் என்னிடம் இதைப்பற்றிப் பேசியிருக்கவேண்டும். அம்மாதிரி நீர் செய்திருந்தால் இம்மாதிரி நான் சொல்ல வேண்டிய அவசியம் நேர்ந்திருக்காது.'

'கோமகளே...' என்று டெனைசாவ் கூறிவிட்டு, குற்றம் செய்த முகத்தோடு தமது பார்வையை கீழ் நோக்கினார். அவர் இன்னும் பேச விரும்பினார் ஆனால் அவரால் முடியவில்லை.

அம்மாதிரி நிலைமையில் அவரைப் பார்த்ததும், நட்டாஷாவால் அமைதியாயிருக்க முடியவில்லை. அவள் உரக்க விம்மி அழ ஆரம்பித்தாள்.

'கோமகளே, நான் தவறு செய்து விட்டேன்' என்று நடுங்கிய குரலில்பேசினார். 'ஆனால், உம்முடைய குமாரியை நான் மிகவும் போற்றுகிறேன். உம்முடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாரையுமே போற்றுகிறேன்'. உங்கள் எல்லோருக்கும் நான் இரண்டு தடவைகள் வேண்டுமானாலும் உயிரைக் கொடுக்கத் தயாராயிருக்கிறேன்' என்று அவர் சொல்லிவிட்டு கோமகளைப் பார்த்தார். கோமகளின் முகம் மிகவும் கடுகடுப்பாக இருந்தது. 'நல்லது, போய்வருகிறேன், கோமகளே' என்று சொல்லி அவள்கையை முத்தமிட்டு நட்டாஷாவைத் திரும்பிப் பார்க்காமல், உறுதியான வேகமான நடையில் அந்த அறையை விட்டு வெளியேறினார்.

★ ★ ★

மறுநாள் டெனைசாவுக்கு ராஸ்டோவ் வழியனுப்பினார். மாஸ்கோவில் மேலும் இன்னும் ஒரு தினம் தங்குவதற்கு பிரியப்படவில்லை. ஜிப்ஸிகளின் முகாமில அவருடைய மாஸ்கோ நண்பர்கள் எல்லோரும் அவருக்கு ஒரு வழியனுப்பு விருந்து நடத்தினார்கள். அதன்பின்பு, அவர் அந்த உறை பனி வண்டியில் எப்போது ஏறினார் என்பதை அவரால் உணர்ந்துகொள்ள முடியவில்லை. மூன்ற இடங்களில் குதிரைகளை மாற்றிய பின்புதான் சுய உணர்வு வந்தது.

டெனைசாவ் புறப்பட்டுப் போன பின்பு, மேலும் இரண்டு வாரங்கள் மாஸ்கோவில் ராஸ்டோவ் தங்கினார். அக்காலத்தில் அவர் வீட்டை விட்டு வெளியே போவதில்லை. அவருடைய தகப்பனார் முயற்சித்துக்கொண்டிருந்த பணத்தை எதிர் நோக்கியிருந்தார். அவர் தந்தையால் அந்தப் பணத்துக்கு சுலபமாக ஏற்பாடு செய்ய முடியவில்லை. ஆகவே பெண்கள் இருக்கும் அறையிலேயே ராஸ்டோவ் பெரும்பாலும் இருந்து வந்தார்.

அவரிடம் சோனியா மிகுந்த கனிவோடும் பக்தியோடும் நடந்து கொண்டாள். அவருக்கு ஏற்பட்ட நஷ்டத்தினால்தான் அவள் அவரை அதிகமாகக் காதலிக்க முடிகிறது என்பதைக் காட்ட விரும்புகிறவள் போலக் காணப்பட்டாள். ஆனால் அவளுக்கு தகுதியானவர் தாம் அல்ல என்று நிக்கலஸ் இப்போது நினைக்க ஆரம்பித்தார்.

அந்தப் பெண்களின் புஸ்தகங்களிலெல்லாம் பாட்டுகளையும், சங்கீதங்களையும் அவர் எழுதி நிரப்பினார். டோலாகாவுக்கு 43,000 ரூபிள்களை அனுப்பி, அவரிடமிருந்து ரசீதும் பெற்ற பின்பு, நவம்பர் மாதக் கடைசியில் அதை விட்டுப் புறப்பட்டார். தம் நண்பர்கள் யாரிடமும் அவர் வழியனுப்பிக் கொள்ளவில்லை. போலந்திற்கு ஏற்கனவே போய்ச் சேர்ந்துவிட்ட தமது பட்டாளத்திற்கப் போய்ச் சேர்வதற்காக அவர் புறப்பட்டுப் போனார்.



## விளக்கக் குறிப்புகள்

**4**
**2**

மாஸ்கோவில் உள்ள இங்கிலீஷ் கிளப் என்பது பெயரளவில் இங்கிலீஷாய் இருந்தது. பணக்காரர்களும், பிரதானமான பிரபுக்களும், கனதனவான்களும் மாஸ்கோவில் சந்திக்கும் இடமாக அது இருந்தது. காத்தரைன் காலத்திலிருந்து 1917-ஆம் வருஷம் நடந்த புரட்சி வரையில் அந்த கிளப் நடந்தது வந்தது. ராஜீய விவகாரங்களில் அது தீவிரமாய் ஈடுபட்டதில்லை. அதற்கு இருந்த சொற்ப செல்வாக்கும் நாளடைவில் தேய்ந்து போயிற்று. ஆனால், ராஜசபையின் அதிருப்தியைப் பெற்றவர்களும், அல்லது ராஜ சபையை விரும்பாதவர்களும், பீட்டர்ஸ்பர்க்கில் இருப்பதற்கு விரும்புவது இல்லை. மாஸ்கோதான் மற்றொரு தலைநகரம். அங்கேதான் இங்கிலீஷ் கிளப் இருந்தது ஆகவே, பெயரளவில் இருந்த எதிர்ப்புக் கூட்டத்திற்கு அது தலைமைப் பீடமாய் விளங்கியது. அந்த எதிர்ப்பு ஒன்றைத்தான் அவர்களால் ஜாக்கிரதையாகச் செய்ய முடிந்தது. பாக்ரேஷனுக்குக் கொடுத்த விருந்தானது, அந்த கிளப் ராஜீய விவகாரங்களில் எவ்வளவு தூரம் சிரத்தை கொண்டிருந்தது என்பதைக் காட்டக் கூடியதாய் இருந்தது. டின்னருக்குப் பின்னால், அங்கே சர்க்காருக்கு விரோதமாக, கூடுமான வரையில் கண்டித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

**4**
**6**

'அனடோல் அவளிடமிருந்து பணம் வாங்குவதற்கு வருவது வழக்கம்'. இந்த நாவலை முதலில் எழுதியபோது ஹெலனும் அவளுடைய சகோதரரும் தவறான நட்பு கொண்டிருந்தார்கள் என்பதை டால்ஸ்டாய் தெளிவாய் எழுதியிருந்தார். ஆனால், பின்னால் அதை மாற்றி, அந்த உறவைப் பற்றி லேசாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

**4**
**10**

'1806-ஆம் வருஷத்து இலையுதிர் காலத்தில், ஒவ்வொருவரும் நெப்போலியனுடன் நடக்கப் போகும் போரைப் பற்றியே பேச ஆரம்பித்தார்கள்! செப்டம்பரின் கடைசியில் பிரஷ்யாவை நெப்போலியன் தாக்கினார். வேகமாக அதை முறியடித்தார். ஜெனாவிலும், ஆர்ஸ்டாட் என்ற இடத்திலும் இரட்டை வெற்றிகள் பெற்றார். அவற்றின் கோட்டைகளையும், பெர்லினையும்

கைப்பற்றினார். நவம்பர் மாதத்தில் போலந்துக்குள் அவர் பிரவேசித்தார். அந்த இலையுதிர் காலத்தில், பிரஷ்யாவுக்கு உதவி செய்யும் நோக்கத்தோடு, போருக்கு ருஷ்யா தயார் செய்ய ஆரம்பித்து. ஆனால், அந்த நாட்டை மிக வேகமாக நெப்போலியன் கைப்பற்றி, விஸ்டுலாவுக்கு முன்னேறி வந்தபடியால், ருஷ்யர்கள் தங்களுடைய எல்லைகளைக் கடந்து போவதற்கு அவகாசம் கிடைக்கவில்லை. ருஷ்யர்கள் தங்களுடைய நாட்டின் எல்லைகளைப் பாதுகாக்கும் வேலையையே கவனிக்கும்படி நேரிட்டது. மாஸ்கோவில் ஏற்பட்ட பரபரப்பிற்கு இதுதான் காரணம். ராணுவத்திற்கும், பாதுகாப்புப் படைக்கும் ஆட்களைச் சேர்த்ததற்கும் இதுதான் காரணம். ராணுவத்திற்கு ஆட்களை அதிகமாகச் சேர்த்தார்கள். ஏனெனில், அவர்கள் சேர்த்த ஆறு லட்சம் பாதுகாப்புப் படையின் ஐந்தில் ஒரு பங்கினருக்கே துப்பாக்கிகளைக் கொடுக்க முடிந்தது. மற்றவர்களை எல்லாம், ஈட்டிகளை ஆயுதங்களாகக் கொண்டிருந்தார்கள்.



# 5
## 1

தமது மனைவியைச் சந்தித்துப் பேசிய பின்பு, பீயர் பீட்டர்ஸ்பர்க்கிற்குப் புறப் பட்டுப் போனார். டார்ஜோக் என்ற தபாலாபீஸில் குதிரை மாற்றுவது வழக்கம். அங்கிருந்த போஸ்ட்மாஸ்டர், தம்மிடம் குதிரை அச்சமயம் இல்லையென்று சொன்னார். அவரிடம் குதிரை இல்லையா, அல்லது குதிரைகளைக் கொடுப்பதற்கு அவருக்கு இஷ்டமில்லையா என்பது தெரியாது. ஆகவே குதிரைகளுக்காகப் பீயர் அங்கே காத்திருக்க வேண்டியதாயிற்று. ஒரு வட்டமேஜையின் முன்பாகக் கிடந்த ஒரு தோல்சோபாவில் தமது சட்டைகளைக் கழற்றாமலேயே பீயர் சாய்ந்தார். தமது நீண்ட பூட்ஸுகள் அணிந்த கால்களை அந்த மேஜை மீது போட்டுக்கொண்டு சிந்தனை யிலிறங்கினார்.

‘உங்கள் பெட்டியை உள்ளே எடுத்து வரட்டுமா? படுக்கையைப் போடட்டுமா? உங்களுக்கு தேநீர் கொண்டு வரட்டுமா’ என்று அவருடைய வேலைக்காரன் கேட்டான்.

பீயர் பதில் சொல்லவில்லை. அவர் எதையும் கேட்கவுமில்லை. பார்க்கவுமில்லை. கடைசியாக குதிரையை மாற்றிய இடத்திலிருந்தே அவர் சிந்தனையிலாழ்ந்தார். இன்னமும் அந்த விஷயத்தைப் பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தார். அந்த விஷயம் அவருக்கு முக்கியமாகத் தோன்றியபடியால், தம்மைச் சுற்றி என்ன நடக்கின்றன என்பதை அவர் கவனிக்கவில்லை. பீட்டர்ஸ் பர்க்கிற்கு சீக்கிரமாகப் போய்ச் சேருவோமோ, அல்லது தாமதமாகுமா என்பதைப் பற்றியோ அல்லது இந்தக் குதிரை மாற்றுமிடத்தில் தங்குவதற்கு வசதிகள் கிடைக்குமா என்பதைப் பற்றியோ, அவருக்கு இப்போது சிரத்தையெதுவுமில்லை. அவர் மனதில் குடிகொண்டிருக்கிற அந்த சிந்தனைகளை நோக்கும்போது இவையெல்லாம் அவருக்கு ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. இன்னும் சில மணி நேரங்கள் அங்கே தங்கவேண்டியிருக்குமா, அல்லது வாழ்க்கை பூராவுமே அங்கே இருந்துவிட நேருமா என்பதைப் பற்றிக்கூட அவருக்கு சிரத்ததையெதுவுமில்லை.

போஸ்ட்மாஸ்டரும், அவருடைய மனைவியும், வேலைக் காரனும், டார்ஜோக் பின்னல்வேலை சரக்குகளை விற்றுவந்த ஒரு விவசாய ஸ்திரீயும், அவருடைய அறைக்கு வந்து ஏதாவது தேவையிருக்கிறதா என்று கேட்டார்கள். தம்முடைய கவலையற்ற போக்கை சிறிதும் மாற்றிக்கொள்ளாமல், தமது கண்ணாடிகளுக்கு

மேலாக அவர்களை பீயர் பார்த்தார். அவர்கள் என்ன கேட்கிறார்கள் என்பதையோ, அல்லது அவருடைய மனதைக் கவர்ந்திருக்கிற அந்தப் பிரச்னைகளைத் தீர்க்காமல், அவர்கள் எப்படி வாழ்க்கையை நடத்திக்கொண்டிருக்கிறார்கள் என்பதையோ அவரால் அறிய முடியவில்லை. சாக்கோல்நிக்கி என்ற இடத்தில் நடந்த டூயல் சண்டைக்குப் பின்னால், அன்று இரவு முழுவதும் மனக் கவலையால் பீடிக்கப்பட்டு தூக்கமில்லாமலிருந்தார். அன்று முதல் அவருடைய உள்ளத்தை இந்தப் பிரச்னைகள் கவர்ந்து கொண்டிருந்தன. இப்போது பிரயாணத்தில் அவர் தனிமையா யிருந்தபடியால், அந்தப் பிரச்னைகள் அதிக வேகத்தோடு அவரைப் பற்றின. அவர் எதைப்பற்றி நினைத்தாலும் சரி, கடைசியாகத் திரும்பவும் தம் மனதிலுள்ள அந்தக் கேள்விகளே அவருடைய நினைப்புக்கு வந்து கொண்டிருந்தன. அந்தக் கேள்விகளை அவரால் தீர்க்க முடியவில்லை. என்றாலும் அதைப்பற்றி அவரால் தம்மைக் கேட்காமல் இருக்கவும் முடியவில்லை. அவருடைய வாழ்க்கையை சேர்த்து வைத்திருந்த ஒரு முக்கியமான மறை யாணியில் உண்டான மறை தேய்ந்துவிட்டது போலவும், அதனால் அந்த ஆணி உள்ளே போகவோ வெளியே வரவோ முடியாமல் ஒரே மாதிரி சுற்றிக்கொண்டேயிருப்பது போலவும் அவருக்குத் தோன்றியது.

போஸ்ட்மாஸ்டர் உள்ளே வந்தார். இன்னும் இரண்டு மணி நேரம் மேன்மை தங்கியவர் காத்திருக்க வேண்டுமென்று மிகுந்த மரியாதையோடு கெஞ்சிக் கேட்டுக்கொண்டார். தபால் குதிரைகள் வந்துவிடுமென்றும், என்ன நடந்தாலும் சரி, அவற்றை மேன்மை தங்கியவருக்கு கொடுக்கப் போவதாகவும் அவர் சொன்னார். பிரயாணியிடமிருந்து இவர் இன்னும் அதிகமாகப் பணத்தைப் பெற விரும்புகிறாரென்றும், அவர் சொல்வது எல்லாம் பொய் என்று தெளிவாய்த் தெரிந்தது.

'இது நல்லதா, அல்லது கெட்டதா?' என்று பீயர் தம்மையே கேட்டுக்கொண்டார். 'இது எனக்கு நல்லது; ஆனால் மற்றொரு பிரயாணிக்குக் கெட்டது. ஆனால் போஸ்ட் மாஸ்டருக்கு தமது சாப்பாட்டிற்காகப் பணம் வேண்டியிருக்கிறபடியால், அவராலும் இதைத் தவிர்க்க முடியவில்லை. இந்த தபால் குதிரைகளை ஒரு தடவை, இதே போஸ்ட்மாஸ்டர் ஒரு பிரயாணிக்கு கொடுத்த தற்காக, அந்த போஸ்ட்மாஸ்டரை ஒரு அதிகாரி சவுக்கால் அடித்தார் என்று ஒருவன் சொன்னான். சீக்கிரமாக அவர் போக விரும்பியதனால்தான், அந்த அதிகாரி போஸ்ட் மாஸ்டரை சவுக்கால் அடித்தார். எனக்கு டோலாகாவ் கெடுதல் செய்தார் என்று

நினைத்தபடியால் நான் அவரைச் சுட்டேன். 16-வது லூயிஸ் என்பவர் அயோக்கியன் என்று கருதியதால் அவருக்கு மரண தண்டனை கொடுத்தார்கள். ஆனால் அவருக்கு யார் மரண தண்டனை கொடுத்தார்களோ, அவர்களுடைய உயிர்களையும் ஒரு வருஷத்துக்குப் பின்னால், அதே காரணத்திற்காக மற்றவர்கள் பறித்தார்கள். இப்போது இதில் எது கெட்டது? எது நல்லது? ஒருவர் எதை விரும்ப வேண்டும். எதைப் பகைக்க வேண்டும்? ஒருவர் எதற்காக உயிர் வாழ்கிறார். நான் யார்? வாழ்க்கை என்றால் என்ன? மரணம் என்றால் என்ன? இவற்றையெல்லாம் ஆளுகிற சக்தி எது?'

இந்தக் கேள்விகளில் ஒன்றைத் தவிர, மற்றவை எதற்குமே அவருக்குப் பதில் கிடைக்கவில்லை. அந்தக் கேள்விக்கு கிடைத்த பதில் கூட பகுத்தறிவுக்குப் பொருத்தமான பதில் அல்ல. அவைகளுக்கு அது ஒரு பதிலே அல்ல. அந்தப் பதில் இதுதான்:-

'நீ மாண்டுபோவாய். அதோடு எல்லாம் முடிந்து போகும். நீ இறந்து போவாய். அதன் பின்பு உனக்கு எல்லாம் தெரியும். அல்லது கேள்வி கேட்பதே நின்றுவிடும்.' ஆனால் இறப்பதுகூட பயங்கரமாகவே இருக்கிறது.

அந்த டார்ஜோக் ஸ்திரீயான சில்லறை வியாபாரி தன்னிடமுள்ள சாமான்களை விலை கூறி விற்றுக்கொண்டிருந்தாள். அந்த சாமான்களில் வெள்ளாட்டுத் தோல் செருப்புகள் ஒரு ஜதை இருந்தன. 'என்னிடம் நூற்றுக்கணக்கான ரூபிள்கள் இருக்கின்றன. அவற்றை என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால், அவளோ ஒரு கிழிந்த மேல்சட்டையைப் போட்டுக்கொண்டு பயத்தோடு என்னைப் பார்க்கிறாள். அவள் எதற்காக இந்தப் பணத்தை விரும்புகிறாள்? இந்தப் பணம் அவளுக்குக் கிடைத்தால், அவளுடைய சந்தோஷமோ அல்லது மனசாந்தியோ ஒரு மயிரிழை அளவாவது அதிகமாகுமா? கெடுதியோ அல்லது மரணமோ, என்னையோ அவளையோ பற்றுவதைத் தடுப்பதற்கு, இந்த உலகத்தில் ஏதாவது செய்ய முடியுமா? மரணம் என்பது எல்லாவற்றையும் முடிவிற்குக் கொண்டுவருகிறது. அந்த மரணம் இன்றோ அல்லது நாளையோ வந்துதான் ஆகவேண்டும். ஆதியும் அந்தமும் இல்லாத நிலைமையோடு ஒப்பிடும்போது அந்தக் காலம் ஒரு வினாடிக்கு சமானமேயாகும்'. அந்த மறை தேய்ந்த ஆணியை மீண்டும் அவர் சுற்ற ஆரம்பித்தார். ஆனால்அது ஒரே இடத்திலேயே உபயோகமில்லாமல் சுற்றிக்கொண்டிருந்தது.

அவருடைய சேவகன் அவரிடம் ஒரு நாவல் புத்தகத்தைக் கொடுத்தான். அது திருமதி டிஸுஜா என்பவரால் கடிதங்கள் ரூபத்தில் எழுதப்பட்டது. எமிலி டி. மான்ஸ்பெல்ட் என்ற ஒருவன்

தான் பட்ட கஷ்டங்களைப் பற்றியும், ஒழுக்கத்திற்காகச் செய்த போராட்டங்களைப் பற்றியும் சொல்லியுள்ளதை அவர் வாசித்துக்கொண்டிருந்தார். அவளை ஆசை காட்டி மயக்கிய அந்தப் பேர்வழி மீது அவள் காதல் கொண்டிருக்கும்போது, எதற்காக அவருக்கு இணங்காமல் மறுக்கிறாள்? 'கடவுளுக்கு அது விருப்பம் இல்லையென்றால், இந்த ஆசையை அவள் மனதில்அவர் போட்டிருக்கமாட்டார். எனது மனைவி - ஒரு காலத்தில் மனைவியாய் இருந்தவள் - அம்மாதிரி போராடவில்லை. அவள் செய்தது ஒருவேளை சரியாயிருக்கலாம். ஒன்றையும் கண்டுபிடிக்க முடியவில்லை. எதையும் வெளிப்படுத்த முடியவில்லை' என்று பீயர் தமக்குள்ளாகவே சொல்லிக்கொண்டார். 'நமக்குத் தெரிந்ததெல்லாம் என்னவென்றால், நமக்கு எதுவுமே தெரியாது என்பதுதான். அதுதான் மனிதருடைய அறிவின் உச்சஸ்தான மாகும்'.

தமக்குள்ளும் தம்மைச் சுற்றியும் ஒவ்வொன்றும் குழப்பத் தோடும், புத்தியில்லாமலும், வெறுக்கத்தக்கதாகவும் இருப்பதாக அவருக்குக் காணப்பட்டன. ஆனால், அந்தச் சூழ்நிலைகளை யெல்லாம் அவர் இவ்வளவு வெறுப்பாக நோக்கிக்கொண்டிருந்த போதும், ஒரு மாயமான திருப்தி அவர் மனதில் காணப்பட்டது.

'இந்தக் கனவானுக்காகக் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்து, இடம் கொடுக்கும்படி, மேன்மை தங்கியவரைக் கேட்டுக்கொள்கிறேன்' என்று, அறைக்குத் தம்முடன் அழைத்து வந்த ஒரு பிரயாணியைக் காட்டி போஸ்ட் மாஸ்டர் சொன்னார். குதிரைகள் கிடைக்காததால் அவர் அங்கே தாமதிக்கும்படி நேர்ந்தது.

புதியதாய் வந்திருந்தவர், குள்ளமாகவும் மஞ்சள் முகத்தோடும் சுருக்கங்கள் கொண்டவராகவுமுள்ள ஒரு வயோதிகர். அவருடைய சாம்பல் நிறமான, பிரகாசமான கண்களுக்கு மேலாக, செழித்து வளர்ந்திருந்த சாம்பல் நிற புருவ ரோமங்கள் தொங்கிக் கொண்டிருந்தன.

பீயர் மேஜைமேலிருந்த தமது கால்களையெடுத்து எழுந்து அங்கிருந்த ஒரு படுக்கையில் படுத்தார். புதிதாய் வந்தவரை இடையிடையே நோட்டமிட்டார். அந்தப் புதியவர் ஒரு சோகமும் வாட்டமும் கொண்ட முகத்தோடு காணப்பட்டார். தமது மேலே போட்டுக்கொண்டிருந்த சட்டைகளைத் தமது சேவகன் உதவியால் அலுப்போடு களைந்துகொண்டிருந்தார். அவர் பீயரைப் பார்க்கவில்லை. அவருடைய மெலிந்த கால்களில் கம்பள பூட்ஸுகள் காணப்பட்டன. அவர் ஒரு நைந்துபோன கோட்டை

அணிந்துகொண்டு சோபாவில் அமர்ந்தார். அகலமான நெற்றியும் ஒட்டி வெட்டப்பட்ட தலைமுடியும் உள்ள தமது தலையைப் பின்னால் சாய்த்து பெஜுகாவைப் பார்த்தார். அவருடைய கூர்மையான கடுமையான ஊடுருவிப் பார்க்கும் பார்வை பீயரை அசைத்தது. அந்த அந்நியரிடம் பேச வேண்டுமென்று பீயர் விரும்பினார். அவர் அதற்காக தமது மனதை தயார் செய்து கொண்டு ரஸ்தாக்களைப்பற்றி அவரிடம் ஒரு கேள்வி கேட்க விரும்பிய போது, அந்தப் பிரயாணி தமது கண்களை மூடிக்கொண்டார். அவருடைய சுருக்கம் விழுந்த வயோதிகக் கைகள் முன்னால் மடக்கி வைக்கப்பட்டிருந்தன. அவர் விரல்கள் ஒன்றில் ஒரு பெரிய இரும்பு மோதிரத்தைக் கண்டார். அந்த மோதிரத்தில் ஒரு மண்டையோடு படம் இருப்பதையும் பார்த்தார். அந்த அந்நியர் கொஞ்சம்கூட அசையாமல் உட்கார்ந்திருந்தார். அவர் ஒன்று ஓய்வு எடுத்துக்கொண்டிருக்க வேண்டும் அல்லது பீயருக்குத் தோன்றியபடி ஆழ்ந்த அமைதியான தியானத்தில் அமுங்கியிருக்க வேண்டும். அவருடைய சேவகன் அவரைப் போலவே, மஞ்சள் நிறமாகவும் சுருக்கங்கள் கொண்டவனுமான ஒரு வயோதிகனாக இருந்தான். அவனுக்கு மீசையோ அல்லது தாடியோ இல்லை. அவற்றை அவன் க்ஷவரம் செய்துகொண்டிருந்ததாகவும் காணப்படவில்லை. அவை அவனுக்கு முளைக்கவே இல்லை. அந்த சேவகன் பிரயாணியினுடைய சமையல் பெட்டியைத் திறந்து தேநீர் தயாரிக்க ஆரம்பித்தான். சாமோவார் என்ற தேநீர் பாத்திரத்தை அவன் உள்ளே கொண்டுவந்தான். எல்லாம் தயாரான பின்பு, அந்த அந்நியர் தமது கண்களைத் திறந்தார். மேஜை அருகில் வந்தார். தமக்காக ஒரு கோப்பை தேநீரை எடுத்துக்கொண்டார். அந்த தாடியில்லாத வயோதிகனுக்கு ஒரு கோப்பையில் ஊற்றிக் கொடுத்தார். பீயரின் மனதில் அமைதியின்மை தோன்றுவது போல உணர்ந்தார். அதாவது அந்த பிரயாணியுடன் பேசியே தீரவேண்டிய அவசியமேற்பட்டுவிட்டதாக அவர் நினைத்தார்.

அந்த சேவகன் தனது கோப்பையைத் திரும்பக் கொண்டு வந்து, அதை கவிழ்த்து வைத்தான். (ருஷ்யாவில் அடிமைகளும் வேலைக்காரர்களும் தங்களுக்கு இனி வேண்டியதில்லை என்பதைக் காட்டுவதற்காக தேநீர் கோப்பைகளைக் கவிழ்த்து வைப்பார்கள். சர்க்கரையில் சிக்கனமாய் இருப்பதற்காக, தேயிலையில் சர்க்கரையைக் கலப்பதில்லை. இடையிடையே சர்க்கரைக் கட்டியைக் கடித்துக்கொண்டு தேநீர் குடிப்பார்கள்.) அந்த கோப்பை கூட இருந்த தட்டில், தான் உபயோகித்தது போக மீதமுள்ள சர்க்கரைக்கட்டி இருந்தது. 'இன்னும் ஏதாவது வேண்டுமா?' என்று அவன் கேட்டான்.

'இல்லை, எனக்கு அந்தப் புத்தகத்தைக் கொடு' என்றார் அந்த அந்நியர்.

சேவகன் அந்தப் புத்தகத்தைக் கொடுத்தான். அந்தப் புத்தகம் ஒரு பக்தி மார்க்கமானதாயிருக்கும் என்று பீயர் நினைத்தார். அதைப் படிப்பதிலேயே அந்த பிரயாணி முழுகிவிட்டார். பீயர் அவரைப் பார்த்தார். திடீரென்று அந்த அந்நியர் தமது புத்தகத்தை மூடினார். அதில் ஒரு அடையாளச் சீட்டை வைத்துவிட்டு, சோபாவில் பின்னால் சாய்ந்து, தமது கைகளையும் சோபாவின் பின்பக்கமாகப் போட்டுக்கொண்டு, முன்னாலிருந்தபடியே கண்களை மூடிக்கொண்டு அமர்ந்திருந்தார். பீயர் அவரைப் பார்த்தார். அவரிடமிருந்து தமது பார்வையை எடுப்பதற்கு முன்பாக அந்த வயோதிகர் தமது கண்களைத் திறந்து, தம்முடைய கடுமையான அசையாத பார்வையைப் பீயர் மீது வைத்தார்.

பீயருக்குக் குழப்பமேற்பட்டது. அந்தப் பார்வையிலிருந்து தப்ப விரும்பினார். அந்தப் பிரகாசமான வயோதிகரின் கண்கள், தடுக்க முடியாதபடி அவரைக் கவர்ந்து நின்றன.

## 5
## 2

'இப்போது நான் கோமகன் பெஜுகோவுடன் பேசிக் கொண்டிருக்கும் மகிழ்ச்சியைப் பெற்றிருக்கிறேன் என்று நினைக்கிறேன்.' அது தவறு இல்லையே' என அந்த அந்நியர் துணிந்த, பலமான குரலில் பேசினார்.

மௌனமாகவும் கேள்விக்குறியுடனும் தமது கண்ணாடிகளுக்கு மேலாகப் பீயர் நோக்கினார்.

'உம்மைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன், எனது அன்புள்ள ஐயாவே' என்று அந்த அநியர் மேலும் தொடர்ந்தார். 'உம்முடைய துரதிருஷ்டத்தைப் பற்றியும் நான் கேள்விப் பட்டிருக்கிறேன்.' அவர் அந்தக் கடைசி வார்த்தையை அழுத்திச் சொன்னதாகவும்-அதாவது 'ஆமாம்; துரதிருஷ்டம். நீர் என்ன வேண்டுமானாலும் அதை அழைக்கலாம். ஆனால், உமக்கு மாஸ்கோவில் நேரிட்டது துரதிருஷ்டம்தான்' என்று சொல்லுவது போல் இருந்தது- நான் அதற்காக மிகவும் வருந்துகிறேன், எனது அன்புள்ள ஐயாவே.'

பீயர் முகம் சிவந்தது, படுக்கையிலிருந்து கால்களை வேகமாய் கீழே இறக்கி வைத்து, அந்த வயோதிகர் முன்பாக குனிந்து, ஒரு பயந்த புன்சிரிப்பைக் காட்டினார். 'இதை ஒரு வேடிக்கைக்காக

நான்குறிப்பிடவில்லை, எனது அன்புள்ள ஐயா. ஆனால், முக்கியமான காரணங்களுக்காவே நான் குறிப்பிடுகிறேன்.

அவர் நிறுத்தினார். இன்னமும் அவருடைய பார்வை பீயர் மீதே இருந்தது. தாமிருந்த சோபாவிலிருந்து கொஞ்சம் நகர்ந்தார். பீயரை அதிலே வந்து உட்காரும்படி அழைப்பதைப்போல இருந்தது. இந்த வயோதிகரோடு உரையாடலில் இறங்குவதற்கு பீயர் தயங்கினார். ஆனால், தம்மை அறியாமலேயே அவருக்கு இணங்கி, எழுந்து வந்து அவர் பக்கத்தில் அமர்ந்தார்.

'நீர் துக்கமாயிருக்கிறீர். நீர் வாலிபர்; நான் வயதானவன். என்னுடைய சக்திக்கு உட்பட்டவரையில் எவ்வளவு தூரம் செய்ய முடியுமோ, அவ்வளவு தூரம் உமக்கு உதவி செய்ய நான் விரும்புகிறேன்' என்று அந்த அந்நியர் கூறினார்.

'ஆமாம், நான் உமக்கு மிகுந்த நன்றி உள்ளவனாக இருக்கிறேன். நீர் எங்கிருந்து பிரயாணமாய் வருகிறீர்?' என்று ஒரு பலவந்தமான புன்சிரிப்போடு கேட்டார்.

அந்த அந்நியரின் முகம் சுமுகமாயில்லை. அது கடினமாகவும் உற்சாகமில்லாலும் தோன்றியது. என்றாலும் புதிதாய் அறிமுகமானவரின் அந்த முகமும், அவருடைய வார்த்தைகளும் தடுக்க முடியாத விதத்தில் பீயருக்குக் கவர்ச்சிகரமாக இருந்தன.

'ஏதாவது ஒரு காரணத்திற்காக, என்னுடன் பேசுவதற்கு உமக்கு விருப்பமில்லாமலிருந்தால், அதைச் சொல்லிவிடும், எனது அன்புள்ள ஐயா' என்று அந்த வயோதிகர் சொன்னார். திடீரென்று எதிர்பாராத விதத்தில் கனிவோடு, தந்தைக்குரிய பாசத்தோடு அவர் புன்னகை கொண்டார்.

'இல்லை, இல்லவேயில்லை. உம்முடன் பழக்கம் ஏற்பட்ட தற்காக, நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்' என்று பீயர் சொல்லிவிட்டு, மீண்டும் அந்த அந்நியரின் கைகளை நோட்டமிட்டு மிகுந்த கவனமாக அவர் கையில் அணிந்திருந்த மோதிரத்தில் காணப்பட்ட அந்த மண்டையோட்டு சித்திரத்தை, அந்த பிரீமேஸன் சின்னத்தைக் கவனித்தார்.

'தயவு செய்து, எனக்கு அனுமதி கொடுக்க வேண்டும். நீர் பிரீமேஸன் சங்கத்தைச் சேர்ந்தவரா?'

'ஆமாம் நான் பிரீமேஸன் சகோதரர் கூட்டத்தைச் சேர்ந்தவன், என்று அந்த அந்நியர் கூறிவிட்டு, மேலும் மேலும் ஆழமாக பீயரின் கண்களை நோக்கினார். 'அவர்களின் சார்பாகவும், என்னுடைய சார்பாகவும், நான் உமக்கு சகோதரத்துவக் கையை நீட்டுகிறேன்'

அந்த பிரீமேஸனின் செல்வாக்கு அவரிடம் ஏற்படுத்திய நம்பிக்கைக்கும், தாம் பிரீமேஸன் கொள்கைகளை கேலிசெய்து வந்திருந்த வழக்கத்திற்குமிடையில், அவர் ஊசலாடி புன்முறுவல் கொண்டார். ‘எனக்கு எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை. நீங்கள் சொல்வதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நான் உலகத்தைப் பார்க்கிற விதத்திற்கும், நீங்கள் உலகத்தைப் பார்க்கிற விதத்திற்கும் நேர் விரோதம் இருக்கிறதென்று நான் நினைக்கிறேன்.

‘உமது மனோபாவம் எனக்குத் தெரியும். நீர் குறிப்பிடுகிறபடி வாழ்க்கையைப்பற்றி உமக்குள்ளக் கருத்துக்களும் எனக்குத் தெரியும். உம்முடைய மனோ முயற்சிகளினால் தான் அந்தக் கருத்துகளுக்கு நீர் வந்திருப்பதாக நீர் நினைக்கிறீர். மக்களில் பெரும்பாலோர் கொண்டிருக்கும் அதே கருத்துக்களைத்தான் நீரும் கொண்டிருக்கிறீர். அதாவது தற்பெருமை, சோம்பேறித்தனம், அறியாமை ஆகியவற்றால் ஏற்படும் பலன்தான் அந்தக் கருத்துக்கள் எனது அன்புள்ள ஐயா, என்னை மன்னிக்க வேண்டும். அதை நான் அறிந்திருக்காவிட்டால், நான் இப்போது உம்மிடம் பேசியிருக்க மாட்டேன். வாழ்க்கையைப்பற்றிய உமது கருத்து, ஒரு வருந்தக் கூடிய மாயையாகும்.’

‘நீர் ஒரு மாயையில் சிக்கியிருக்கிறீர் என்று நான் நினைப்பதைப் போலவா?’ என்று லேசான புன்னகை காட்டி பீயர் பேசினார்.

‘உண்மையை நான் அறிந்துவிட்டதாக எப்போதும் தைரியமாய் என்னால் சொல்லமுடியாது’ என்று அந்த பிரீமேஸன் சொன்னார். அவருடைய வார்த்தைகள், வரவரத் தெளிவாகவும் உறுதியாகவும் இருப்பதாகப் பீயர் உணர்ந்தார். ‘ஒருவரும் தாமாகவே உண்மை நிலையை அடைந்துவிட முடியாது. கோடிக்கணக்கான பரம்பரைகளால் நமது ஆதி தந்தையான ஆதமிலிருந்து, இப்போதுள்ள நிலைமை வரையில், எல்லாருடைய ஒத்துழைப்பின்மீது அந்த உண்மையென்ற கோயிலை ஒரு கல்லின்மேல் மற்றொரு கல்லாக வைத்து அடுக்கி, நாம் கட்டி வருகிறோம். அதை அந்த மஹா பெரிய கடவுளுக்கு தகுந்த கோயிலாகக் கட்டுவதற்கு ஆகும் முயற்சி செய்து வருகிறோம்’ என்று அவர் சொல்லிவிட்டு தமது கண்களை மூடிக்கொண்டார்.

‘எனக்குக் கடவுள் மீது நம்பிக்கையில்லை... நம்பிக்கையில்லையென்பதை நான் உமக்கு சொல்லியாகவேண்டும்’ என்று மிகுந்த முயற்சியோடு, வருத்தத்தோடு, உண்மையைப் பேசவேண்டியது அவசியம் என்ற உணர்ச்சியோடு பீயர் பேசினார்.

அந்தப் பிரீமேஸன் பீயரை கவனமாய் கூர்ந்து நோக்கி புன்னகை கொண்டார். கோடிக்கணக்காக பணம் வைத்திருக்கும் ஒரு

பணக்காரர், 'எனக்கு 5 ரூபிள்கள் இருந்தால் போதும் ; நான் சந்தோஷமாய் இருப்பேன்' என்று சொல்லும் ஒரு ஏழையைப் பார்த்து, எப்படி புன்னகை செய்வாரோ, அதேமாதிரி அவருடைய புன்னகை தோன்றியது.

'ஆமாம், உமக்கு அவரை தெரியாது, எனது அன்புள்ள ஐயா, உமக்கு அவரை அறிய முடியாது. உமக்கு அவரைத் தெரியாது. அதனால்தான் நீர் சந்தோஷமில்லாமலிருக்கிறீர்.'

'ஆமாம், நான் சந்தோஷமில்லாமலிருக்கிறேன். ஆனால், நான் என்ன செய்வது?' என்று பீயர் கேட்டார்.

'உம்மால் அவரை அறிய முடியவில்லை, எனது அன்புள்ள ஐயா. அதனால் நீர் சந்தோஷமில்லாமல் இருக்கிறீர். உம்மால் அறிய முடியவில்லை. ஆனால் அவர் இங்கே இருக்கிறார். இங்கே என்னிடம் இருக்கிறார். என்னுடைய வார்த்தைகளில் அவர் இருக்கிறார். உம்மிடம் அவர் இருக்கிறார். நீர் இப்போது பேசினீரே, தேவ துரோகமான வார்த்தைகள், அந்த வார்த்தைகளிலும் அவர் இருக்கிறார்' என்று அந்த பிரீமேஸன் கடுமையான, நடுநடுங்கிய குரலில் சொன்னார். அவர் சிறிது தயங்கி பெருமூச்சு விட்டார்; தம்மைச்சாந்தப்படுத்த முயற்சி செய்வது போலத் தோன்றியது.

'அவர் இல்லாமலிருந்தால், நீரும் நானும் அவரைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்க மாட்டோம், எனது அன்புள்ள ஐயா, எதைப் பற்றி, யாரைப்பற்றி நாம் இப்போது பேசிக்கொண்டிருக்கிறோம்? யார் இல்லையென்று நீர் மறுத்தீர்?' என்று அவர் திடீரென்று ஒரு எக்காளத்தோடு கூடிய கண்டிப்போடும், அதிகார தொனியோடும் கேட்டார்.

'அவர் இல்லாமலிருந்தால், அவரை உற்பத்தி செய்தது யார்? அறிவுக்கு அடங்காத அவர் ஒருவர் இருக்கிறார் என்ற கொள்கை எப்பொழுது ஏற்பட்டது? அறிவுக்கு அடங்காத, நித்தியமான சகல பராக்ரமும் கொண்ட, எல்லையற்ற குணங்களைக் கொண்ட அவர் ஒருவர் இருக்கிறார் என்ற கொள்கையை நீரும் உலகம் முழுவதும் எதற்காகக் கொள்ளவேண்டும்?...'

அவர் பேச்சை நிறுத்தி, வெகு நேரம் மௌனமாயிருந்தார்.

அந்த மௌனத்தைக் குலைப்பதற்கு பீயர் விரும்பவுமில்லை, அவரால் முடியவும் முடியாது.

'அவர் இருக்கிறார். ஆனால், அவரை அறிவது கடினம்' என்று பிரீமேஸன் ஆரம்பித்து பீயரைப் பார்க்காமல், தமக்கு நேராகப் பார்வையைச் செலுத்தி தமது வயோதிகக் கைகளால் புத்தகத்தின் தாள்களைத் திருப்பிக்கொண்டிருந்தார். அவருக்கு ஏற்பட்ட

பரபரப்பில், அந்தப் புத்தக இதழ்களைப் புரட்டாமலிருக்க முடியவில்லை. 'யாராவது ஒரு மனிதரைப்பற்றி, நீர் இம்மாதிரி இல்லையென்று கூறுவீரானால், அந்த மனிதனின் கையைப் பற்றி அழைத்து வந்து உம்மிடம் நான் காட்ட முடியும். ஆனால்ஒரு அற்பமான அழிந்து போகக்கூடிய நான் எம்மாதிரியாக அந்த சர்வ வியாபியான எல்லையற்ற கருணைக் கடலை, ஒரு குருடருக்குக் காட்ட முடியும்? அவன் குருடனாய் இருந்தாலும் சரி, அல்லது அவரைப் பார்க்கவேண்டாம். அல்லது அறிந்துகொள்ள வேண்டாம் என்று நினைத்து தனது கண்களை மூடிக்கொண்டு இருந்தாலும் சரி, அல்லது தன்னுடைய சொந்த பாவங்களையும், இழி செய்கைகளையும் பார்க்க வேண்டாம் அல்லது அறிந்துகொள்ள வேண்டாம் என்று நினைத்து அவன் கண்களை மூடிக்கொண்டிருந்தாலும் சரி,அவனுக்கு எப்படி நான் அவரைக் காட்ட முடியும்?' மீண்டும் அவர் பேச்சை நிறுத்தினார்.

'நீர் யார்? நீர் அந்த தெய்வ நிந்தனை மொழிகளைப் பேசியதால், நீர் மிகுந்த புத்திசாலியென்று கனவு கண்டுகொண்டிருக்கிறீர்?' என்று அவர் ஒரு வருத்தம் தோய்ந்த வெறுப்பான புன்னகை காட்டிப் பேசினார். 'ஒரு குழந்தையைவிட, நீர் அதிகமான அறிவில்லாமலும், நியாயத்தை உணரக்கூடிய தன்மையில்லாமலும் இருக்கிறீர். ஒரு குழந்தை மிகுந்த திறமைப்பாடோடு செய்யப்பட்ட ஒரு கடிகாரத்தைக் கையில் வைத்துக்கொண்டு அதனால் என்ன உபயோகம் என்பது தனக்குத் தெரியவில்லை என்றும், அதனால் அதை ஒருவர் செய்தார் என்பதைத் தான் நம்ப முடியாதென்றும் கூறுமானால், அது எப்படி அறிவீனமாகவும், நியாய விரோதமாகவும் இருக்குமோ அதைவிட அதிகமாக நீர் இருக்கிறீர். அவரை அறிவது கடினம்... எத்தனையோ யுகங்களாக நமது ஆதி தந்தை ஆதாமிலிருந்து, இன்று வரையில், அந்த ஞானத்தை அடைவதற்காக நாம் பாடுபட்டு வருகிறோமென்றாலும், இன்னமும் நாம் அதை விட்டு வெகு தூரத்தில் நிற்கிறோமே. ஆனால் நம்முடைய பலவீனத்தை மட்டும் காண்கிறோம். அவருடைய பெருமையை...'

தமது இருதயம் விம்ம பீயர் அந்த பிரீமேஸனின் பளபளப்பான கண்களை உற்றுநோக்கி கேட்டுக்கொண்டிருந்தார். அவர் பேசும்போது இடைமறிக்கவோ, கேள்வி கேட்கவோ இல்லை. ஆனால் தமது முழுமனதோடு அந்த அந்நியர் சொல்லி வந்ததை நம்பினார். அந்த பிரீமேஸனின் வார்த்தைகளில் காணப்பட்ட அறிவு மிக்க காரணங்களை அவர் ஒப்புக்கொண்டாரா? அல்லது பேசுகிறவரின் நம்பிக்கையையும் சிரத்தையையும், அவர் குரலில்

காணப்படுகிற நடுக்கத்தையும் கண்டு, சிறு குழந்தைகள் நம்புவது போல அவரும் நம்பினாரா? அல்லது இந்த நம்பிக்கையில் ஊறி வளர்ந்த அவருடைய பிரகாசமான கண்களைக் கண்டு அவர் நம்பினாரா? அல்லது தம்முடைய உபதேசத்தின் நிச்சயத்தையும் சாந்தமான உறுதியையும், தம்மிடமிருந்து பிரகாசிக்கச் செய்ததைக் கண்டு பீயர் நம்பினாரா? எதுவாய் இருந்தாலும் சரி, அவற்றை நம்பவேண்டும் என்று பீயர் தமது முழு மனதோடு ஏங்கினார். அதனால் ஒரு மகிழ்ச்சியான சௌக்கியமும் புத்துணர்ச்சியும் தமது வாழ்க்கையில் ஏற்பட்டிருப்பதாக அவர் உணர்ந்தார்.

'அவரைக் காரணத்தினால் நாம் அறிய முடியாது. நமது வாழ்க்கையை நடத்தும் விதத்தினால்தான் அறிய முடியும்' என்றார் பிரீமேஸன்.

'எனக்குப் புரியவில்லை, என்று பீயர் கூறினார்.அவருடைய பயமும், சந்தேகமும் மீண்டும் தோன்ற ஆரம்பித்தன. அந்த பிரீமேஸன் சொல்கிற வாதங்களில் தெளிவின்மையோ அல்லது ஆதாரமின்மையோ தோன்றி, அதனால் தாம் நம்பாமல் இருந்துவிடக்கூடாதே என்று அவர் பயந்தார். நீர் பேசுகிற அந்த ஞானத்தை மனிதர்களின் உள்ளங்களால் ஏன் அடைய முடியாது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை' என்று அவர் சொன்னார்.

அந்த பிரீமேஸன் தந்தைக்குரிய இனிய புன்முறுவலோடு இளநகை கொண்டார்.

'சுத்தமான தண்ணீரை குடிக்க விரும்புகிறோம். அதைப் போன்றதுதான் உயர்ந்த ஞானமும், உண்மையுமாகும். ஒரு அசுத்தமான பாத்திரத்தில் சுத்தமான தண்ணீரைப் பெற்று, அப்புறம் அந்த தண்ணீர் சுத்தமாயிருக்கிறதா என்று தீர்ப்புக் கூறுவது சரியாய் இருக்குமா? உள்ளத்தை சுத்தம் செய்வதனால்தான், நாம் பெறக்கூடிய அந்த அமிர்தத்தின் சுத்தத்தைக் காப்பாற்ற முடியும்.'

'ஆமாம் அப்படித்தான்' என்று மகிழ்ச்சியோடு பீயர் சொன்னார்.

'மெய்ஞ்ஞானம் என்பது காரணங்களின் மீது மட்டும் அமைந்தது அல்ல. உலகத்தின் விஞ்ஞானங்களான பௌதிகம், சரித்திரம், ரசாயனம் போன்றவைகள் மீது அமைக்கப்பட்டதுமல்ல. இந்த அறிவுகளெல்லாம் பலவிதமாய் பிரிக்கப்படக்கூடியவை. ஆனால் மெய்ஞ்ஞானம் என்பது பிரிக்க முடியாத ஒன்று அந்த மெய்ஞ்ஞானத்திற்கு ஒரே ஒரு விஞ்ஞானம்தான் உண்டு முழு படைப்பின் ரகசியத்தையும், அந்த படைப்பில் மனிதனுக்குள்ள நிலையையும் கூறுவதுதான், அந்த மெய்ஞ்ஞானத்தின் விஞ்ஞானம்.

அந்த விஞ்ஞானத்தை அறிய வேண்டுமானால், ஒருவர் தமது உள்ளத்தை சுத்தி செய்து புதுப்பிக்க வேண்டியது அவசியம். ஒருவர் அதை அறிவதற்கு முன்பாக, அதில் நம்பிக்கை கொள்ள வேண்டியதும், தம்மையே பூரணமாக்கிக்கொள்ள வேண்டியதும் அவசியமாகும். இந்த முடிவை நாம் அடைவதற்காகத்தான், கடவுள் நமது இருதயத்தில் வைத்திருக்கிற ஒளியான மனசாட்சி என்பது இருக்கிறது.'

'ஆமாம்; ஆமாம்' என்று பீயர் சம்மதித்தார்.

'அப்படியானால், நீர் உம்முடைய உள்ளத்தை அந்த நோக்கத்தோடு பார்த்து, உம்மிடம் நீர் திருப்தி அடைந்து இருக்கிறீரா என்று உம்மையே நீர் கேளும். காரணங்களை மட்டும் நம்பியிருந்து நீர் இதுவரை என்ன அடைந்துவிட்டீர்? நீர் யார்? நீர் வாலிபர்; பணக்காரர்; புத்திசாலி; நன்கு படித்தவர். ஆனால், இந்த நல்ல குணங்களைக்கொண்டு, நீர் இதுவரை என்ன செய்திருக்கிறீர்? உம்மைப் பற்றியோ, உமது வாழ்க்கையைப் பற்றியோ, நீர் திருப்தி அடைந்திருக்கிறீரா?'

'இல்லை, என்னுடைய வாழ்க்கையை நான் வெறுக்கிறேன்' என்று பீயர் பயத்தால் தயங்கி முணுமுணுத்தார்.

'நீர் வெறுக்கிறீர். அப்படியானால் அதை மாற்றும். உம்மை சுத்தமாக்கிக்கொள்ளும். நீர் சுத்தமாகும்போது உமக்கு ஞானமும் கிடைக்கும். உம்முடைய வாழ்க்கையை நீர் பாரும், எனது அன்புள்ள ஐயா. நீர் அதை எப்படி நடத்தி வந்திருக்கிறீர்? விபசாரத்திலும், வீண் செலவுகளிலும், கண்டமாதிரி உமது வாழ்க்கையை நடத்தி வந்திருக்கிறீர். சமுதாயத்திலிருந்து கிடைக்கக்கூடிய ஒவ்வொன்றையும், நீர் எடுத்துக்கொண்டீர். ஆனால், அதற்குப் பதிலாக நீர் சமுதாயத்திற்கு எதுவும் கொடுக்கவில்லை. ஏராளமான சொத்துக்களை நீர் அடைந்தீர். நீர் அவற்றை எப்படி உபயோகித்தீர்? உமது அண்டை அயலாருக்கு நீர் என்ன செய்தீர்? பத்தாயிரக் கணக்கான அந்த அடிமைகளைப்பற்றி எப்பொழுதாவது நீர் நினைத்ததுண்டா? அவர்களுக்கு ஸ்தூலமாகவோ, அல்லது தார்மீகமாகவோ ஏதாவது உதவி செய்ததுண்டா? இல்லை. அந்த அடிமைகளின் உழைப்பினால் ஏற்பட்ட பலனைக்கொண்டு, நீர் ஒழுக்கங்கெட்டு வாழ்க்கையை நடத்தி வந்தீர். நீர் செய்து வந்தது அதுதான். உம்மைச் சுற்றியிருப்பவர்களுக்குச் சேவை செய்வதற்கு ஏதாவது ஒரு உத்தியோகத்தை நீர் மேற்கொண்டீரா? இல்லை. வெறும் சோம்பேறித்தனத்தில் உமது வாழ்க்கையைக் கழித்தீர். அப்புறம் நீர் திருமணம் செய்து கொண்டீர், எனது அன்புள்ள ஐயா. ஒரு வாலிபப் பெண்ணிற்கு

வழிகாட்ட வேண்டிய பொறுப்பை நீர் மேற்கொண்டீர். ஆனால், நீர் என்ன செய்தீர்? அவள் உண்மையின் பாதையை அறிவதற்கு நீர் உதவி செய்யவில்லை, எனது அன்புள்ள ஐயா. ஆனால், அவளை துன்பமும், வஞ்சகமும் நிறைந்த பாதாளத்தில் தள்ளினீர். ஒருவன் உம்மை அவமானப்படுத்தினான் என்பதற்காக நீர் அவனைச் சுட்டீர். இப்போது உமக்கு கடவுளைத் தெரியாது என்றும், உமது வாழ்க்கையை வெறுக்கிறேன் என்றும் சொல்லுகிறீர். இதில் ஆச்சரியப்படக்கூடியது எதுவுமில்லை, எனது அன்புள்ள ஐயா.'

இம்மாதிரி நீளமாகப் பேசியதனால் களைப்படைந்தவர் போல அந்த பிரீமேஸன் இந்தப் பேச்சுக்குப் பின்னால் மீண்டும் சோபாவின் பின்பக்கத்தில் தம் கைகளைப் போட்டுக்கொண்டு கண்களை மூடினார். அந்த வயதான, கடுமையான, அசைவற்ற, அநேகமாய் உயிர் இல்லாததைப்போலத் தோன்றிய முகத்தை பீயர் நோக்கினார். தமது உதடுகளை அசைத்தார். ஆனால், ஒரு வார்த்தைகூட அவர் வாயிலிருந்து வரவில்லை. 'ஆமாம், ஒரு இழிவான, சோம்பேறித்தனமான, துன்மார்க்கமான வாழ்க்கை' என்று அவர் சொல்ல விரும்பினார். ஆனால், அங்கிருந்த அமைதியைக் குலைக்க அவருக்குத் தைரியம் ஏற்படவில்லை.

வயோதிகர்கள் செய்வதைப்போல, கரகரப்பான குரலோடு அந்த பிரீமேஸன் தமது தொண்டையைச் சரி செய்து கனைத்துக்கொண்டு, தமது சேவகனை அழைத்தார்.

'குதிரையைப்பற்றி என்ன?' என்று பீயரைப் பார்க்காமல் அவர் கேட்டார்.

'மாற்றுக் குதிரைகள் இப்பொழுதுதான் வந்தன. நீங்கள் இங்கே இளைப்பாறவில்லையா?' என்று அந்த சேவகன் கேட்டான்.

'இல்லை; அந்த குதிரைகளை வண்டியில் பூட்டச் சொல்லு'.

'அவர் உண்மையிலேயே என்னைத் தனியாக விட்டு விட்டு, எனக்குப் பூராவாகச் சொல்லாமல், எனக்கு உதவி செய்வதாக வாக்குறுதி கொடுக்காமல், அவர் போகப் போகிறாரா?' என்று பீயர் நினைத்து, பார்வையைக் கீழே நோக்கியவாறே எழுந்தார். அந்த அறையில் இடையிடையே அந்த பிரீமேஸனை நோட்டமிட்டுக் கொண்டு அவர் உலாவ ஆரம்பித்தார்.

'ஆமாம். அதைப்பற்றி நான் எப்போதும் நினைத்ததில்லை. நான் ஒரு துன்மார்க்கமான, கேவலமான வாழ்க்கையை நடத்தி வந்திருக்கிறேன். நான் அதை விரும்பவில்லை' என்று பீயர் நினைத்தார். 'ஆனால், இந்த மனிதர் உண்மையை அறிவார். அவருக்குப் பிரியமிருந்தால், அதை எனக்கு அவர் காட்டவும் கூடும்'

இதை பிரீமேஸனிடம் சொல்வதற்கு பீயர் விரும்பினார். ஆனால், துணிவு கொள்ளவில்லை. அந்தப் பிரயாணி தமது

சாமார்த்தியமாக கைகளால் தமது சாமான்களைக் கட்டிய பின்பு கோட்டை எடுத்து மாட்ட ஆரம்பித்தார். அதைச் செய்து முடித்ததும் பெஜுகாவை அவர் திரும்பிப் பார்த்து, ஒரு அலட்சியமான மரியாதையோடு பேசினார்.

'நீர் இப்போது எங்கே போகிறீர், எனது அன்புள்ள ஐயா?'

'நானா?... நான் பீட்டர்ஸ்பர்க்கிற்குப் போகிறேன்' என்று ஒரு குழந்தையைப் போலத் தயங்கி பதில் சொன்னார். 'நான் உமக்கு நன்றி கூறுகிறேன். நீர் சொன்னதையெல்லாம் நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், நான் ரொம்ப கெட்டவன் என்று நீர் நினைக்க வேண்டாம். நான் எம்மாதிரியிருக்கவேண்டுமென்று நீர் நினைக்கிறீரோ, அதேமாதிரியிருக்க வேண்டுமென்றே நான் முழு மனதோடு விரும்புகிறேன். ஆனால், யாரிடமிருந்தும் எனக்கு உதவி கிடைத்ததில்லை... ஆனால், எல்லாவற்றிற்கும் மேலாக என்னையே ஒவ்வொன்றிற்கும் நான் குறைகூறவேண்டும். எனக்கு நீர் உதவி செய்யும். எனக்கு நீர் உபதேசம் செய்யும். ஒருவேளை நான்...' பீயரால் மேலே பேச முடியவில்லை. அவர் விழுங்கிவிட்டு திரும்பிக் கொண்டார்.

பிரீமேஸன் வெகுநேரம் வரையில் மௌனமாயிருந்தார். ஒருவேளை அவர் சிந்தித்துக்கொண்டிருக்கலாம்.

'உதவி என்பது கடவுள் ஒருவரிடமிருந்தே வருகிறது. ஆனால், எங்கள் சங்கத்தினால் எவ்வளவு உதவி உமக்குச் செய்ய முடியுமோ, அதைச் சங்கம் செய்யும். நீர் பீட்டர்ஸ்பர்க்கிற்குப் போகிறீர். இதை கோமகன் வில்லார்ஸ்கியிடம் கொடுத்துவிடும். (அவர் தமது குறிப்புப் புத்தகத்தை எடுத்து ஒரு பெரிய காகிதத்தில் ஏதோ எழுதி, அதை நாலாக மடித்துக் கொடுத்தார்.) உமக்கு ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். நீர் தலைநகருக்குப் போனதும், முதலில் தினம் சிறிது நேரமாவது தனியாயிருந்து, உம்மை நீரே சுயசோதனை செய்துகொள்ள முயற்சி செய்யும். உம்முடைய பழைய வாழ்க்கைக்கு நீர் திரும்ப வேண்டாம். இப்போது உம்முடைய பிரயாணம் நன்றாக இருக்கவேண்டுமென்று ஆசி கூறுகிறேன், எனது அன்பான ஐயா' என்று அவர் சொன்னார். இச் சமயம் அவருடைய சேவகன் உள்ளே வந்தான்.

அந்தப் பிரயாணியின் பெயர் ஜோஸப் அலெக்சீவிச் பாஜ்டீன் என்பதாகும். நாவீகாவின் காலத்திலிருந்து இந்த பாஜ்டீவ் என்பவர் பிரசித்தமான பரீமேஸன்களில் ஒருவராயிருந்து வருகிறார். அவர் சென்று வெகுநேரம் வரையில் பீயர் தமது படுக்கைக்குத் திரும்பவில்லை; அல்லது குதிரைகளைக் கொண்டுவரும்படி உத்தரவிடவுமில்லை. அந்த அறையிலேயே மேலும் கீழும்

நடந்துகொண்டு, தமது துன்மார்க்கமான பழைய வாழ்க்கையை நினைத்துப் பார்த்தார். தாம் இப்போது புதிதாக ஆரம்பிக்கப்போகும் ஆனந்தமான, குற்றஞ் சொல்ல முடியாத புனிதமான புது வாழ்க்கையைப் பற்றி ஒரு பரவசமான உள்ளத்தோடு நினைக் கலானார். அந்த வாழ்க்கை சுலபமாகவும் அவருக்குத் தோன்றியது. தாம் தர்மத்தில் நடப்பது எவ்வளவு நன்மையானது என்பதை மறந்துவிட்டதால்தான், அந்த துன்மார்க்க வாழ்க்கையில் அவர் இறங்கியதாக அவருக்குத் தோன்றியது. அவருக்கு முன்னால் ஏற்பட்டிருந்த சந்தேகங்களில் ஒரு துளிகூட இப்போது அவர் உள்ளத்தில் காணப்படவிலலை. தர்மத்தின் வழியில் ஒருவர் மற்றவருக்கு உதவி செய்வதற்கு, மனித சமுதாயம் கூடி நிற்பது சாத்யமானது என்பதை அவர் இப்போது பலமாய் நம்பினார். அந்த வேலையைத்தான் பிரீமேஸன் செய்து வருகிறது என்று அவருக்குத் தோன்றியது.

# 5

## 3

பீட்டர்ஸ்பர்க்கிற்கு பீயர் வந்து சேர்ந்த பின்பு, தாம் வந்திருப்பதை யாரும் அறியும்படி விடவில்லை. அவர் வெளியே ஒரு பக்கமும் போகவில்லை. தாமஸ் கெம்பிஸ் என்பவர் எழுதிய புத்தகத்தை, யாரோ இனந்தெரியாத ஒருவர் அவருக்கு அனுப்பியிருந்தார். நாள் பூராவாக அந்தப் புத்தகத்தையே அவர் படித்துக்கொண்டிருப்பார். மனிதன் பூரணத்துவமடைய முடியும் என்ற நம்பிக்கையையும், மனிதர்களுக்குள் தீவிரமாக சகோதரத்வ அன்பைக் காட்ட முடியும்மென்ற நம்பிக்கையையும், அவருக்கு ஜோஸப் அலெக்ஸீவிச் என்பவர் திறந்து காட்டியதை அவர் நம்பினார். அம்மாதிரி நம்புவதால் ஏற்படும் ஆனந்தத்தை, இதுவரை அவர் அறியாத அந்த ஆனந்தத்தை, அந்தப் புத்தகத்தை அவர் படித்து வந்தபோது அவர் தொடர்ந்து அனுபவித்து வந்தார். கோமகன் வில்லார்ஸ்கி என்ற வாலிப போலந்துக்காரரை, பீட்டர்ஸ்பர்க் உயர் வட்டாரத்தில் ஏற்கனவே அவர் கொஞ்சம் அறிவார். அந்தக் கோமகன் பீயர் திரும்பி வந்த ஒரு வாரத்திற்கு அப்புறம், ஒரு நாள்மாலையில் அவருடைய அறைக்குள் வந்தார். அவர் வந்தது உத்தியோகத் தோரணையும், அலங்காரத் தோரணையும் கொண்டதா யிருந்தது. டோலாகாவுடன் டூயல் போராட்டத்திற்குப் போவதற்கு முன்பாக, டோலாகாவின் உதவியாளர் எம்மாதிரி வந்தாரோ, அதே மாதிரி இவருடைய வருகையும் அவருக்கு காணப்பட்டது. அவர்

அறைக்குள் வந்து கதவைச் சாத்தினார். அங்கு வேறு ஒருவரும் இல்லை என்பதை நிச்சயம் செய்துகொண்டு பீயரைப் பார்த்துப் பேசினார்.

'கோமகனே, நான் உமக்கு ஒரு செய்தியும், ஒரு ஆதரவையும் கொண்டுவந்திருக்கிறேன்' என்று அவர் சொன்னார். இன்னும் அவர் கீழே உட்காரவில்லை. 'நமது சகோதரத்வ கூட்டத்தைச்சேர்ந்த ஒரு உயர்ந்த நிலைமையில் உள்ளவர் உமக்காக எங்களிடம் ஒரு விண்ணப்பத்தை அனுப்பியிருக்கிறார். அந்த விண்ணப்பத்தில் சங்கத்தின் வழக்கமான காலத்திற்கு முன்பாக உம்மை எங்கள் சங்கத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்றும், நான் உமது பெயரைப் பிரேரிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டிருக் கிறார். அந்தக் கனவானின் ஆசையைப் பூர்த்தி செய்து வைப்பது எனது புனிதமான கடமை என்று நான் கருதுகிறேன். பிரீமேஸன் களின் சகோதரத்வத் கூட்டத்தில்சேர்ந்துகொள்வதற்காக, நான் பிரேரிப்பதில் உமக்கு விருப்பமா?' '

அந்த மனிதரை முன்னால் நடனக்கூடங்களில் அவர் சந்தித்த போது, மிகுந்த கவர்ச்சிகரமான கண்களுடன் அழகான பெண்களோடு ரொம்ப சுமுகமான புன்சிரிப்புடன் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டிருக்கிறார். அதே மனிதர் இப்போது ஒரு கடுமையான தோற்றத்தோடு பேசுவதைப் பார்த்ததும் பீயர் ஆச்சரியமடைந்தார்.

'ஆமாம், நான் அம்மாதிரி செய்ய விரும்புகிறேன்' என்றார் அவர். வில்லார்ஸ்கி தலை வணங்கினார்.

'இன்னும் ஒரே ஒரு கேள்வி, கோமகனே. நான் கேட்பதற்கு பூரண சிரத்தையோடு நீர் பதில் சொல்ல வேண்டுமென்று உம்மைக் கெஞ்சுகிறேன். வரப்போகிற ஒரு பிரீமேஸன் என்ற முறையில் அல்ல; ஒரு நாணயமான மனிதர் என்ற முறையில், பதில் சொல்ல வேண்டும். நீர் உம்முடைய பழைய நம்பிக்கைகளைத் துறந்து விட்டீரா? நீர் கடவுளிடம் நம்பிக்கை கொண்டிருக்கிறீரா?'

பீயர் சிந்தித்தார்.

'ஆமாம்... ஆமாம், நான் கடவுளிடம் நம்பிக்கை கொண்டிருக்கிறேன்' என்றார்.

'அப்படியானால்...' என்று வில்லார்ஸ்கி ஆரம்பித்தார். அதற்குள்ளாக பீயர் இடைமறித்தார்.

'ஆமாம். நான் கடவுளிடம் நம்பிக்கை கொண்டிருக்கிறேன்' என்று அவர் மீண்டும் சொன்னார்.

'அப்படியானால், நாம் போகலாம். எனது வண்டி உமக்காகக் காத்திருக்கிறது' என்று வில்லார்ஸ்க்கி சொன்னார்.

அந்த வண்டிப்பிரயாணம் முழுவதிலும் வில்லார்ஸ்கி மௌனமா யிருந்தார். என்ன செய்ய வேண்டும், எம்மாதிரி பதில் சொல்ல வேண்டுமென்று பீயர் கேள்விகள் கேட்டார். தம்மைவிட இன்னும் அதிகத் தகுதி வாய்ந்தவர்கள் அவரைச் சோதிப்பார்கள் என்றும், அங்கே உண்மையையே பீயர் சொல்ல வேண்டுமென்றும் வில்லார்ஸ்கி பதில் கூறினானர்.

ஒரு பெரிய வீட்டில் பிரீமேஸன் சபையின் காரியாலயம் இருந்தது. அதன் முற்றத்திற்கு அவர்கள் போய் இறங்கியதும், ஒரு இருண்ட படிக்கட்டு வழியாக ஏறினார்கள். நன்கு வெளிச்சமிடப் பட்ட ஒரு சிறிய முன் அறைக்குள் அவர்கள் போனார்கள். அங்கிருந்த ஒரு சேவகனின் உதவியைக் கொண்டு தங்கள் மேல் அங்கிகளை கழற்றினார்கள். அங்கிருந்து மற்றொரு அறைக்கு அவர்கள் போனார்கள். ஒரு விசித்திரமான உடையணிந்த ஒருவன் வாசலில் காணப்பட்டான். அவனை நோக்கி வில்லார்ஸ்கி சென்று பிரஞ்சு மொழியில் மெல்லிய குரலில் ஏதோ சொன்னார். சொல்லிவிட்டு அங்கிருந்து உடைகளை வைத்திருக்கும் ஒரு சிறிய பீரோவிடம் போனார். அங்கே இதற்கு முன்னால் தாம் பார்த்திராத உடைகளிருப்பதைப் பீயர் கவனித்தார். அந்தப் பீரோவிலிருந்து ஒரு கைக் குட்டையை எடுத்து பீயரின் கண்களைக் கட்டி தலைக்குப் பின்பாக முடிச்சுப் போட்டார். அந்த முடிச்சில் பீயரின் சில தலை ரோமங்களும் அகப்பட்டுக்கொண்டபடியால், அவருக்கு வலியைக் கொடுத்தது. பின்னால், அவர் குனிந்து பீயரை முத்தமிட்டு, அவர் கையைப் பற்றி, முன்னால் அழைத்துச் சென்றார். அந்த முடிச்சில் அகப்பட்ட தலை ரோமங்களினால் பீயருக்கு ஏற்றபட்ட வலியால், அவர் முகத்தில் வலி ரேகைகள் படர்ந்தன. ஒரு வெட்கமடைந்த புன்சிரிப்பு காணப்பட்டது. அவருடைய பிரம்மாண்டமான உருவம், கைகள் கீழே தொங்க, முகம் சுழிக்க, என்றாலும் புன்முறுவல்கொண்டு, வில்லார்ஸ்கிக்குப்பின்னால், நிச்சயமற்ற பயந்த அடிகளை எடுத்து வைத்துப் போய்க்கொண்டிருந்தது.

பத்தடி அவரை அழைத்துப் போனதும் வில்லார்ஸ்கி நின்றார்.

'உமக்கு என்ன நேர்ந்தாலும் சரி, அவற்றை மனிதரைப்போலச் சகித்துக்கொள்ள வேண்டும். நீர் எங்கள் சங்கத்தில் சேருவது என்று உறுதியாக முடிவு செய்திருப்பீரானால், அம்மாதிரியே செய்ய வேண்டும்' என்று வில்லார்ஸ்கி சொன்னார். பீயர் தாம் சம்மதிப்பதாகத் தலையை ஆட்டினார் 'அந்தக் கதவில், தட்டும் சப்தம் கேட்டவுடன், நீர் உமது கண்களைக கட்டியிருக்கும் துணியை எடுத்துவிடலாம். உமக்குத் தைரியமும் வெற்றியும்

ஏற்படுவதாகுக' என்று பீயரின் கைகளை அழுத்தி வில்லார்ஸ்கி சொல்லிவிட்டு வெளியே போனார்.

பீயர் முன்போலவே புன்முறுவல் காட்டிக்கொண்டு தனியாய் இருந்தார்.

தமது கண்ணில் கட்டப்பட்டிருக்கும் கட்டை எடுத்து விடுவதற்காக, தமது தோள்களைக் குலுக்கக்கொண்டு ஒன்று அல்லது இரண்டு தடவைகள் தமது கையை மேலே உயர்த்தினார். ஆனால், அம்மாதிரி செய்யாமல் மீண்டும் கீழே தொங்கவிட்டார். ஐந்து நிமிஷம் அவருடைய கண் கட்டப்பட்டிருந்தது, அவருக்கு ஒரு மணி நேரமாகத் தோன்றியது. அவர் கைகள் உணர்ச்சியற்றுப் போயின. அவருடைய கால்களும் பலனற்றுப் போயின. தாம் மிகவும் களைப்படைந்துவிட்டதாக அவருக்குத் தோன்றியது. பற்பலவிதமான மிகுந்த சிக்கலான மனோ உணர்ச்சிகளை அவர் அனுபவித்து வந்தார். தமக்கு என்ன நேருமோ என்று அவர் பயந்தார். தமது பயத்தை வெளியே காட்டுவதற்கு அதைவிட அதிகமாகப் பயந்தார். தமக்கு என்ன நேரப்போகிறது என்பதை அறியவும், தமக்கு எந்த விஷயம் திறந்து காட்டப்படப் போகிறது என்பதை அறியவும் அவர் ஆவலோடு இருந்தார். ஜோஸப் அலெக்ஸீவிச்சை சந்தித்ததிலிருந்து அவர் ஒரு கனவு கண்டு வந்தார். அதாவது தாம் ஒழுங்கான வாழ்க்கை வாழ ஆரம்பிக்கப்போவதாகவும், புனரமைப்பை ஏற்படுத்தும் அந்தப் பாதையில் நடக்கப் போவதாகவும் அவர் நினைத்து வந்ததே அந்தக் கனவு. அந்தக் கனவு இப்பொழுது காரியமாகப்போகும் நேரம் வந்துவிட்டது என்பதை அறிந்து அவர் மகிழ்ச்சி கொண்டார். இச்சமயம் அந்தக் கதவில் தட்டும் சப்தங்கள் கேட்டன. தமது கண்களில் கட்டப்பட்டிருந்த துணியை எடுத்துவிட்டு சுற்றிலும் பீயர் நோக்கினார். அந்த அறை ஒரே இருட்டாயிருந்தது. ஏதோ ஒரு வெள்ளை வஸ்துவுக்குள் ஒரு சிறிய விளக்கு மட்டும் அங்கே எரிந்துகொண்டிருந்தது. அதன் சமீபமாக நெருங்கி பீயர் பார்த்தபோது,அந்த விளக்கு ஒரு கறுப்பு மேஜைமீது இருந்ததையும், அந்த மேஜை மீது திறந்த புத்தகம் இருந்ததையும் கண்டார். அந்த புத்தகம் ஒரு சுவிசேஷப் புத்தகம். விளக்கை உள்ளாகக்கொண்டு தோன்றிய அந்த வெள்ளை வஸ்து ஒரு மனிதனின் மண்டை ஓடு. அந்த மண்டை ஓடு ஓட்டை களோடும் பற்களோடும் காணப்பட்டது. சுவிசேஷத்திலுள்ள முதல் வார்த்தைகளை அவர் படித்தார். 'ஆரம்பத்தில் மொழி இருந்தது. அந்த மொழி கடவுளோடு இருந்தது'. இதை பீயர் படித்துவிட்டு அந்த மேஜையைச் சுற்றிப் போனபோது, அங்கே ஒரு திறந்த பெரிய பெட்டியில் ஏதோ நிரப்பி வைக்கப்பட்டிருந்தது. அது ஒரு சவப்

பெட்டி. அதற்குள்ளாக எலும்புகள் இருந்தன. இதைப் பார்த்துப் பீயர் ஆச்சரியப்படவேயில்லை. பழைய வாழ்க்கையைப்போல இல்லாமல் முற்றிலும் ஒரு புதிய வாழ்க்கையில் நுழைவதற்கு நம்பிக்கை கொண்டிருந்த அவர், தாம் பார்க்கும் ஒவ்வொன்றும் பழக்கமில்லாததாகவே இருக்குமென்று எதிர்பார்த்தார். இவற்றை விட இன்னும் அதிகமாய் பழக்கமில்லாதவைகளைக் கூட அவர் எதிர்பார்த்தார். ஒரு மண்டையோடு; ஒரு சவப்பெட்டி; ஒரு சுவசேஷம் இவற்றையெல்லாம் தாம் எதிர்பார்த்ததைப் போலவும், இன்னும் அதிகமாக எதிர்பார்ப்பது போலவும் அவருக்குத் தோன்றியது. தமது உணர்ச்சியைப் பலப்படுத்துவதற்காக அவர் சுற்றிப் பார்த்தார். 'கடவுள், மரணம், அன்பு, மனிதர்களின் சகோதரத்வம்' என்று அவர் தமக்குள்ளாகவே செல்லிக்கொண்டு, அந்த வார்த்தைகளை ஒரு இனம் தெரியாத, மகிழ்ச்சியான எண்ணங்களோடு பிணைத்துக்கொண்டிருந்தார். கதவு திறந்தது. யாரோ ஒருவர் உள்ளே வந்தார்.

அந்த அறையிலிருந்த மங்கலான ஒளி பீயருக்குப் பழக்கமாய் விட்டது. அந்த ஒளியில் அங்கு வந்த ஒரு குட்டையான மனிதரை அவர் பார்த்தார். வெளிச்சத்திலிருந்து இருட்டுக்குள் அந்த மனிதர் வந்தபடியால்,சிறிது நேரம் தயங்கி நின்றார். பின்னால் ஜாக்கிரதையாக அடிகள் எடுத்து வைத்து மேஜைக்கு சென்று, அதன் மீது தம்மடைய கையுறையணிந்த கைகளை வைத்தார்.

அந்த குட்டை மனிதர் வெள்ளை தோல் சவுக்கத்தை முன்புறமாக அணிந்திருந்தார். அது அவருடைய மார்பையும், கால்களின் ஒரு பகுதியையும் மறைத்திருந்தது. கழுத்தில் ஒரு தினுசான கழுத்துப்பட்டி அணிந்திருந்தார். அதற்கு மேலாக ஒரு உயரமான வெள்ளையான ஜாலர் காணப்பட்டது. கீழிருந்து வந்த வெளிச்சம் அவருடைய நீண்ட முகத்தைக் காட்டியது.

'நீர் இங்கே எதற்காக வந்திருக்கிறீர்?' என்று புதிதாய் வந்தவர் பீயர் இருந்த திசையை நோக்கிக் கேட்டார். 'ஒளியின் உண்மையை நம்பாத நீர், ஒளியைப் பார்க்காத நீர், இங்கு எதற்காக வந்தீர்? எங்களிடமிருந்து நீர் என்ன எதிர்பார்க்கிறீர்? ஞானம், தர்மம், விவேகம் ஆகியவைகளை எதிர்பர்க்கிறீரா?'

தமது வாலிபப் பருவத்தில் பாதிரியிடம் குற்ற ஒப்புகொள்ளுதல் செய்தபோது, எம்மாதிரியான ஒரு பயபக்தியும், ஆச்சரியமும் அவருக்குத் தோன்றியதோ, அதே மாதிரியான உணர்ச்சிகள் அந்த அந்நியர் கதவைத் திறந்து உள்ளே வந்தபோது அவருக்குத் தோன்றியது. தமக்கு முற்றிலும் அந்நியரான ஒருவர் முன்பாக தாம் நிற்பது போலவும் , என்றாலும் சகோதரத்வ கூட்டத்தின் முன்பாக

அவர் தமக்கு வெகு சமீபத்தில் இருப்பதாவும் அவர் உணர்ந்தார். வேகமாய் மூச்சு விட்டுக்கொண்டு, வேகமாய் இருதயம் படபடக்க, அவர் அந்த ரெட்டர் முன்பாகப் போனார். அவரிடம் நெருங்கிய பின்பு, அந்த ரெட்டர் என்பவர் தமக்குப் பழக்கமான ஸ்மால்யானைனாவ் என்பவர்தான் என்பதைத் தெரிந்துகொண்டார். புதிதாய் வந்தவர் தமக்கு அறிமுகமானவர் என்பதை அவர் நினைத்தபோது, அவருக்கு அவமானமாய் இருந்தது. அவரை ஒரு சகோதரராகவும், தர்மங்களைப் போதிப்பவராகவுமே இருப்பதற்கு அவர் விரும்பினார். வெகு நேரம் வரையில் ஒரு வார்த்தைகூட அவரால் பேச முடியவில்லை. அதனால் ரெட்டர் திரும்பவும் தமது கேள்வியைச் சொல்ல வேண்டியதாயிற்று.

'ஆமாம்', நான்... நான்...புனர் ஜென்மம் அடைய விரும்புகிறேன்' என்று கஷ்டத்தோடு பீயர் சொன்னார்.

'ரொம்ப சரி' என்று ஸ்மால்யானைனாவ் கூறினார். 'நமது சங்கம் நீர் உமது நோக்கத்தை அடைவதற்குச் செய்யக்கூடிய உதவியைப் பற்றி உமக்கு ஏதாவது தெரியுமா?' என்று அவர் அமைதியாவும் வேகமாகவும் கேட்டார்.

'புனர் ஜென்மம் எடுப்பதில் நான்... உதவிக்காவும் ஆலோசனைக்காகவும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்' என்று பீயர் பேசுவதற்குக் கஷ்டப்பட்டு, நடுநடுங்கிய குரலில் சொன்னார். இந்த வேதாந்த விஷயத்தை ருஷ்ய மொழியில் பேசுவதற்கு அவருக்கு பழக்கமில்லாததினாலும், அவருக்கு பரபரப்பு ஏற்பட்டிருந்தபடியாலும் அம்மாதிரி அவர் பேசினார்.

'பிரீமேஸன் சங்கமென்றால் என்னவென்பது உமது கருத்து?'

'பிரீமேஸன் சங்கமென்றால், தர்மமான நோக்கம் கொண்டுள்ள மனிதர்களின் சகோதரத்துவமும்,சமத்துவமும் கொண்டுள்ளது என்று நான் நினைக்கிறேன்' என்றார் பீயர். அந்த பவித்ரமான நேரத்தில், அதற்குத் தகுந்த வார்த்தைகளை அவரால் உபயோகிக்க முடியாமலிருப்பதற்காக அவர் வெட்கமடைந்தார். 'நான் யூகிக்கிறேன்...'

'நல்லது' என்று அந்த ரெட்டர் வேகமாகப்பதில் சொன்னார். பீயர் கொடுத்த பதில்களைப் பார்த்து, அவர் திருப்தியடைந்ததாக் தோன்றியது. 'மதத்தில் உம்முடைய நோக்கத்தை அடைவதற்கு நீர் வழிகளைத் தேடியதுண்டா?'

'இல்லை, அது தப்பு என்று நான் கருதியபடியால் அதன்படி நடக்கவில்லை' என்று பீயர் சொன்னார். அவர் மெதுவாகச் சொல்லியபடியால் ரெட்டரால் அதைக் கேட்க முடியவில்லை ஆகவே, திரும்பவும் அவர் என்ன சொல்லுகிறார் என்று கேட்டார்.

'நான் ஒரு நிரீஸ்வரவாதி' என்றார் பீயர்.

'நீர் உமது வாழ்க்கையில் உண்மை விதிகளை அனுசரிப்பதற்காக நீர் உண்மையை அறிய விரும்புகிறீர். அதற்காகவே நீர் ஞானத்தையும், தர்மத்தையும் விரும்புகிறீர். அப்படித்தானே?' என்று ஒரு வினாடி தயக்கத்திற்குப் பின்னால் ரெட்டர் கேட்டார்.

'ஆமாம்; ஆமாம்' என்று பீயர் சம்மதம் தெரிவித்தார்.

அந்த ரெட்டர் தமது தொண்டையைக் கனைத்துக்கொண்டு, தம்முடைய கையுறைகளால் தமது மார்பில் சிலுவைக் குறி காட்டிக்கொண்டு பேச ஆரம்பித்தார். 'நம்முடைய சங்கத்தின் பிரதான நோக்கம் என்னவென்பதை நான் உமக்கு இப்போது சொல்ல வேண்டும். இந்தப் பிரதான நோக்கம் உம்முடைய நோக்கத்தோடு இணைந்து போவதாயிருந்தால் நீர் நம்முடைய சங்கத்தில் சேர்ந்து பலனடையலாம். முதலாவதாகவும், பிரதானமாகவுமுள்ள நமது சங்கத்தின் கொள்கை எதுவோ, அதில்தான் நமது சங்கம் நிலைத்து நிற்கிறது. அதை எந்தமனித சக்தியாலும் அழிக்க முடியாது. அந்த முக்கியமான ரகசியத்தை நாம் காப்பாற்றி, நமது பரம்பரைக்குக் கொடுக்க வேண்டும்... ஆதி மனிதரிடமிருந்து அந்த ரகசியம் எங்களுக்கு பரம்பரையாக வந்துகொண்டிருக்கிறது. மனித வர்க்கத்தின் விதியே அந்த ரகசியத்தைத் தொங்கி நிற்கிறது. நீண்ட காலமாக மிகுந்த அக்கறையோடு தம்மை பரிசுத்தமாக்கிக்கொள்ளாத ஒருவராலும் அதை அறியவோ, உபயோகப்படுத்தவோ முடியாத விதத்தில் அந்த ரகசியமிருக்கிறது.. சீக்கிரமாக அதை அடைய முடியுமென்று ஒவ்வொருவரும் நம்பியிருக்க முடியாது. ஆகவே, இரண்டாந்தர நோக்கமொன்று எங்களிடம் உண்டு. இந்த ரகசியத்தை அறிவதற்காக முயற்சி செய்தவர்கள், பரம்பரயாக எங்களிடம் விட்டுப்போன வழிகளைக்கொண்டு அதைச் செய்ய முடியும். அதாவது அவர்களுடைய இருதயத்தைக் கூடியவரையில் சீர் திருத்த, அவர்களுடைய உள்ளத்தைப் பரிசுத்தமாக்கி, விஷயங்கள் விளங்கும்படி செய்து, இந்த ரகசியத்தை அவர்கள்பெறுவதற்கு அருகதையுள்ளவர்களாகச் செய்ய வேண்டுமென்பது அந்த இரண்டாந்தர நோக்கம். எங்களுடைய சங்கத்தின் அங்கத்தினர் களைப் பரிசுத்தப்படுத்தி புனர் ஜென்மமாக்கி, மனித சமூகம் முழுவதையுமே உயர்வாக்குவதற்கு நாங்கள் முயற்சி செய்கிறோம். அவர்களிடமுள்ள தருமத்தையும், தெய்வ பக்தியையும் காட்டி, அதன் மூலம் உலகத்தை ஆட்டிவைக்கும் பாவங்களைத் தடுப்பதற்கு எங்கள் முழு பலத்தோடு முயற்சி செய்கிறோம். இதைப்பற்றி நீர் சிந்தனை செய்து பாரும். நான் மீண்டும் உம்மிடம் வருகிறேன்.'

'உலகத்தை ஆட்டிக்கொண்டிருக்கும் அந்தப் பாவத்தைத் தடுப்பது...' என்று பீயர் மீண்டும் தமக்குள் சொன்னார். எதிர்காலத்தில் தாம் இந்தவழியில் செய்யப்போகிற வேலைகளைப் பற்றிய தோற்றம் அவர் மனதில் தோன்றியது. இரண்டு வாரங்களுக்கு முன்னால் தாம் இருந்த விதத்தில் இருக்கக்கூடிய மனிதர்களைப்பற்றி அவர் மனோராஜ்யம் செய்தார். அவர்களுக்கு தாம் உபதேசம் செய்ததாக மனோராஜ்யம் செய்தார். துரதிருஷ்டமான கெட்ட வழியில் செல்லும் ஜனங்களைப் பற்றியும், அவர்களுக்கு தாம் வார்த்தையாலும் செய்கையாலும் உதவி செய்யப்போவதைப் பற்றி அவர் மனோராஜ்யம் செய்தார். அடக்கி ஒடுக்குகிறவர்களைப்பற்றியும் அவர்களிடம் அகப்பட்டுக்கொண்டவர்களை தாம் விடுவிக்கப்போவது பற்றியும் அவர் மனோராஜ்யம் செய்தார். மூன்று நோக்கங்களைப்பற்றி ரெட்டர் பீயருக்குச் சொல்லியிருந்தார். மனித சமூகத்தை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்பது, அந்த மூன்று நோக்கங்களில் கடைசியானது. இது பீயருக்க மிகவும் பிடித்திருந்தது. ரெட்டர் குறிப்பிட்ட அந்த முக்கியமான ரகசியம் என்னவென்று அறிய வேண்டுமென்று பீயருக்கு ஆவல் தோன்றியபோதிலும், அது அவருக்கு முக்கியமானதாகத் தோன்றவில்லை. தம்மைச் சுத்தப்படுத்தி புனர் ஜென்மம் பெறவேண்டும் என்ற அந்த இரண்டாவது நோக்கம், அவருக்கு அதிக அக்கறையைக் கொடுக்கவில்லை. ஏனென்றால்,அவருடைய முந்தைய தவறுகளிலிருந்து அவர் பூரணமாகத் திருந்திவிட்டதாகவும், நல்ல காரியங்களையே செய்வதற்கு அவர் தயாராய் இருக்கிற தாகவும், மிகுந்த மகிழ்ச்சியோடு அவர் உணர்ந்து வந்தார்.

சாலமன் கோயிலில் உள்ள ஏழு படிகளைக் கொண்ட ஏழு தர்மங்களை உபதேசிப்பதற்காக, அரை மணி நேரம் கழித்து ரெட்டர் திரும்பி வந்தார். அந்த ஏழு தர்மங்களையும் ஒவ்வொரு பிரீமேஸன்காரரும் கையாளவேண்டும். அந்த தர்மங்களாவன:- (1) ஜாக்கிரதை - சங்கத்தின் ரகசியங்களைக் காப்பாற்றுவது; (2) கீழ்படிதல் - சங்கத்தில் தமக்கு மேலான பதவியில் உள்ளவர்களுக்கு கீழ்ப்படிதல்; (3) ஒழுக்கம்; (4) மனித சமூகத்தின் மீது அன்பு (5) தைரியம் (6) தாராளம் (7) மரணத்தை விரும்புதல்.

'ஏழாவது படியான 'மரணத்தை விரும்புதல்' என்பதை அடிக்கடி சிந்தித்து, அதை ஒரு பயங்கரமான விரோதி என்று நினைப்பதை விட்டுவிட வேண்டும். தர்மத்திற்காக பாடுபட்டுக் களைத்துப்போன ஆத்மாவை, இந்தக் கஷ்டமனா வாழ்க்கையிலிருந்து விடுவித்து சாந்தியையும், பலனையும் அடையும்படி செய்யக்கூடிய ஒரு

நண்பன் என்று அந்த மரணத்தைக் கருதவேண்டும்' என்று ரெட்டர் சொன்னார்.

'ஆம், அப்படித்தான் இருக்கவேண்டும்' என்று ரெட்டர் பேசிய வார்த்தைகளைக் கேட்டு பீயர் நினைத்தார். தனியாக தியானம் செய்யும்படி பீயரை விட்டுவிட்டு ரெட்டர் போய்விட்டார். 'அப்படித்தான் இருக்கவேண்டும். நான் இன்னமும் மிகுந்த பலவீனமாய் இருக்கிறபடியால், என்னுடைய வாழ்க்கையில் எனக்கு இன்னும் ஆசை இருக்கிறது. அதனுடைய அர்த்தம் இப்பொழுதான் எனக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிந்து வருகிறது. பீயர் தமது விரல்களால் மற்ற ஐந்து தர்மங்களாகிய தைரியம், தாராளம், ஒழுக்கம், மனித சமூகத்தின் மீது அன்பு, கீழ்ப்படிதல் என்பவைகளை எண்ணினார். இவையெல்லாம் தமது உள்ளத்தில் ஏற்கனவே இருப்பதுபோல அவர் உணர்ந்தார். இவற்றில் கீழ்ப்படிதல் என்பது அவருக்கு ஒரு தர்மமாகத் தோன்றவில்லை; மகிழ்ச்சியைப் போலவே தோன்றியது. (தறுதலையான தமது வாழ்க்கையிலிருந்து மற்ற அந்த உண்மையை அறிந்தவர்களின் ஆக்ஞைக்கு உட்பட்டிருக்க அவர் தயாரா யிருந்தார்.) ஏழாவது தர்மம் என்ன என்பதை அவர் மறுத்துவிட்டார். அதை ஞாபகத்திற்குக் கொண்டுவரவும் அவரால் முடியவில்லை.

மூன்றாவது தடவையாக வெகு சீக்கிரமாக ரெட்டர் திரும்பி வந்தார். அவருடைய நோக்கத்தில் அவர் இன்னமும் உறுதியாய் இருக்கிறாரா என்றும், அவரிடம் என்ன கேட்கிறார்களோ, அவற்றையெல்லாம் ஒப்புக்கொள்ள அவர் தீர்மானமாய் இருக்கிறாரா என்றும் பீயரிடம் ரெட்டர் கேட்டார்.

'நான் எதற்கும் தயாராய் இருக்கிறேன்' என்று பீயர் சொன்னார்.

'நான் இன்னொன்னறு உமக்குச் சொல்ல வேண்டும். தனது உபதேசங்களை நமது சங்கம் வார்த்தைகளால் மட்டும் சொல்லுவதில்லை. வேறு வழிகளாலும் சொல்லுவதுண்டு. ஞானத்தையும் தர்மத்தையும் அறிய வேண்டும் என்று உண்மையோடு தேடுகிறவர்களுக்கு, அந்த முறைகள் அதிக பலமான பலனைக் கொடுக்கலாம். உமது இருதயம் சிரத்தையோடு இருக்குமானால், வார்த்தைகளால் சொல்லக்கூடியதைவிட இன்னும் அதிகமாக, இந்த அறையும், இங்கே காணப்படுகிற பொருள்களும் உமது உள்ளத்திற்கு முன்பே சொல்லியிருக்க வேண்டும். இதேமாதிரி மற்றொரு முறையில் உமக்கு ஞானம் ஏற்படும் விதத்தை உமது அடுத்த உபதேசத்தில் நீர் அறிவீர். சித்திரங்களினால் உபதேசங்களை விளக்கக்கூடிய புராதன சங்கங்களின் முறைகளை நமது சங்கம் கையாளுகிறது. இந்த

முறையில் காணப்படும் சித்திரத்தை உணர்ச்சிகளினால் அறிந்துகொள்ள முடியாது. அந்த சித்திரம் எதைக் காட்டுகிறதோ, அதன் குணங்களை அதிலிருந்து அறிந்துகொள்ளலாம்' என்று ரெட்டர் பேசினார்.

சித்திரச் சின்னம் என்றால் என்னவென்பதை பீயர் வெகு நன்றாய் அறிவார். என்றாலும் பேசுவதற்கு அவர் துணியவில்லை. ரெட்டர் பேசுவதை மௌனத்தோடு கேட்டு வந்தார். அவர் பேசிய வற்றிலிருந்து தமக்கு சோதனை ஆரம்பமாகப்போவாக உணர்ந்தார்.

'நீர் தீர்மானம் செய்துவிட்டால், உமக்கு தீட்சை கொடுப்பதை நான் ஆரம்பிக்க வேண்டும்' என்று ரெட்டர் சொல்லி, பீயரின் சமீபமாக வந்தார் 'உம்முடைய தாராளத்தின் அறிகுறியாக உம்மிடமுள்ள விலை உயர்ந்தவைகளையெல்லாம் என்னிடம் கொடும்.'

'என்னிடம் இங்கே எதுவும் இல்லை' என்றார் பீயர். தம்மிடமுள்ள சொத்துக்களையெல்லாம் கொடுக்கும்படி அவர் கேட்பதாக நினைத்துக்கொண்டு பீயர் இம்மாதிரி சொன்னார்.

'இங்கே உம்மிடம்என்ன இருக்கின்றனவோ, அவற்றையே கேட்கிறேன். கடிகாரம், பணம், மோதிரங்கள்...'

பீயர் உடனே தமது பணப் பையையும் கடிகாரத்தையும் வெளியே எடுத்தார். ஆனால் தமது கலியான மோதிரத்தை தமது பருத்த விரலிலிருந்து கழற்றுவதற்கு சிறிது நேரமாயிற்று. அதைச் செய்து முடித்ததும் ரெட்டர் சொன்னார்:-

'உம்முடைய கீழ்ப்படிதலின் அறிகுறியாக உம்டைய உடைகளையெல்லாம் கழற்றிவிடும்படி நான் கேட்கிறேன்'

பீயர் தமது கோட்டையும் உள் சட்டையும் கழற்றினார். ரெட்டர் சொல்லியபடி இடதுகாலின் ஜோட்டைமட்டும் கழற்றினார். பீயரின் இடது மார்பிலிருந்து அவருடைய ஷர்ட்டை பின்பக்கமாக அந்த ரெட்டர் இழுத்தார். கீழே குனிந்து இடது பக்கத்து கால் சட்டையை மொட்டுவரை உயர்த்தினார். பீயர் தமது வலது காலின் ஜோட்டை வேகமாய் கழற்ற ஆரம்பித்தார். வலது கால் சட்டையையும் மேலே இழுத்து மடக்கி அந்த அந்நியருக்கு தொந்தரவைக் குறைக்க முயற்சித்தார். ஆனால் அவர் அப்படிச் செய்யவேண்டியது அவசியமில்லை என்று அந்த பிரீமேஸன் சொல்லி, அவர் இடது காலுக்கு ஒரு செருப்பு கொடுத்தார். ஒரு தர்மசங்கடமான, குழந்தைத்தனமான புன்சிரிப்பும் சந்தேகமும் சுய இகழ்ச்சியும், அவருடைய விருப்பத்திற்கு விரோதமாக அவருடைய முகத்தில் காணப்பட்டன. கைகளைத் தொங்கவிட்டு

கால்களை அகற்றி வைத்து, அவருடைய சகோதர ரெட்டர் முன்பாக அவர் நின்று, அவருடைய மேல் உத்தரவுகளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

'இப்பொழுது உண்மையின் பெயரால் உம்முடைய பிரதானமான ஆசை என்ன என்பதை வெளிபடுத்தும்படி நான் உம்மைக் கேட்கிறேன்' என்று ரெட்டர் சொன்னார்.

'என்னுடைய ஆசையா? எனக்கு எத்தனையோ இருக்கின்றன' என்ற பீயர் பதில் அளித்தார்.

'தர்மத்தின் வழியிலிருந்து விலகும்படி உம்மைச் செய்த அந்த ஆசை, மற்ற ஆசைகளையெல்லாம்விட முக்கியமாக, அந்த ஆசை, என்னது என்பதைச் சொல்லும்' என்றார் பிரீமேஸன்.

என்ன பதில்சொல்லுவது என்று யோசித்து பீயர் தயங்கினார்.

'மதுவா? பெருந்தீனியா? சோம்பேறித்தனமா? எரிச்சலா? கோபமா? பெண்களா?' தம்முடைய அதர்ம குணங்களை ஒவ்வொன்றாக தமது மனதில் கொண்டுவந்து, எதற்கு பிரதான ஸ்தானம் கொடுப்பது என்பதை முடிவு செய்யமுடியாமல் யோசித்துக் கொண்டிருந்தார்.

'பெண்கள்' என்று வெளியே கேட்காத மெதுவான குரலில் சொன்னார்.

அந்த பிரீமேஸன் அசையவில்லை. இந்த பதிலுக்குப் பின்னால், அவர் வெகு நேரம் வரையில் ஒன்றும் சொல்லவில்லை. கடைசியாக பீயரிடம் நெருங்கி, மேஜை மீதிருந்த கைக் குட்டையை எடுத்து, மீண்டும் அவருடைய கண்களைக் கட்டினார்.

'கடைசி தடவையாக நான் உமக்குச் சொல்லுகிறேன் உமது கவனத்தையெல்லாம் உம்மீது திருப்பும். உமது உணர்ச்சிகளுக்கு ஒரு கடிவாளம் போடும். ஆசைகளில் ஆனந்தத்தைத் தேடவேண்டாம். உமது உள்ளத்திலேயே அதைத் தேடும். ஆனந்தத்தின் ஊற்று நம்முள்ளே இருக்கிறதே தவிர, வெளியில் இல்லை...'

அவருடைய உள்ளத்தை வெள்ளத்தில் அமுக்கிக் கொண்டிருக்கும் அந்த ஆனந்தத்தின் ஊற்றை பீயர் தமக்குள்ளாக முன்பே உணர ஆரம்பித்துவிட்டார்.

## 5

### 4

இதற்குப் பின்னால் பீயரை அழைத்துப் போக, அந்த இருட்டு அறைக்கு ஒருவர்

வந்தார். அவர் ரெட்டர் அல்ல; பீயரை பிரேரித்த வில்லார்ஸ்கி என்பவர்தான் வந்திருக்கிறார் என்பதை அவருடைய குரலில் இருந்து பீயர் தெரிந்துகொண்டார். பீயரின் உறுதியை சோதிப்பதற்காக, அவரிடம் கேட்கப்பட்ட புதிய கேள்வி களுக்கு பீயர், 'ஆமாம், நான் ஒப்புக் கொள்ளுகிறேன்' என்று பதில் அளித்தார். பிரகாசமான குழந்தைத் தனமான புன்முறுவல்கொண்டு, மார்பு மூடப்படாமல்,ஒரு காலில் செருப்பையும் ஒரு காலில் ஜோட்டையும் அணிந்து, தாறுமாறாக நடந்து முன்னால் போனார். அவருடைய மார்பில் வில்லார்ஸ்கி ஒரு பட்டாக்கத்தியை வைத்துக்கொண்டிருந்தார். அந்த அறையில் இருந்து முன்னாலும் பின்னாலும் போகக்கூடிய ஆளோடிகள் வழியாக அவரை அழைத்துச் சென்றார். கடைசியாக லாட்ஜின் வாசல் கதவுக்கு முன்பாக வந்து சேர்ந்தார்கள். வில்லார்ஸ்கி இருமினார். அவருக்குப் பதிலாக மரச் சம்மட்டியால் கதவுகள் தட்டப்பட்டன. உடனே அவர்களின் முன்பாக கதவுகள் திறந்தன. பீயரின் கண்கள் இன்னமும் துணியால் மறைத்துக் கட்டப் பட்டிருந்தன. ஒரு கரகரத்தக் குரல் அவரைப் பார்த்து,'அவர் யார்? எங்கே எப்போது பிறந்தார்?' என்பன போன்ற கேள்விகளைக் கேட்டது. அதன் பின்னால் அவரை மறுபடியும் கண்களைக் கட்டியே எங்கோ அழைத்துக்கொண்டு போனார்கள். போகும்போது அவருடைய க்ஷேத்திர யாத்திரையிலுள்ள கஷ்டங்களைப் பற்றியும், பரிசுத்தமான நட்பைப் பற்றியும், உலகத்தைப் படைத்த நிரந்தர சிற்பியைப் பற்றியும், துன்பங்களையும் ஆபத்துக்களையும் தாங்கிக்கொள்ள வேண்டிய தைரியத்தைப் பற்றியும் அவருக்கு கதைகள் மூலமாக சொல்லப்பட்டன. அப்படிச் சொல்லி அழைத்துக்கொண்டு போகும்போது, பல்வேறு இடங்களில் பட்டாக் கத்திகளாலும் மரச் சம்மட்டிகளாலும் கதவுகளைத் தட்டும் போது பல்வேறு விதமாக அவரை உண்மையைத் தேடுகிறவர் என்றும், கஷ்டப்படுகிறவர் என்றும், விசாரித்து அறிந்து கொள்ளுகிறவர் என்றும் அவரை வர்ணித்ததை அவர் கவனித்தார். தம்மைச் சுற்றி நிற்பவர்கள் குசுகுசுவென்று எதையோ வாதித்துக்கொண்டு இருப்பதையும் ஒரு குறிப்பிட்ட கம்பளத்தின் மீது அவரை அழைத்துச் செல்லவேண்டும் என்று ஒருவர் வற்புறுத்துவதையும் அவர் கவனித்தார். அதன் பின்னால், அவருடைய வலது கையை அவர்கள் பற்றி, ஏதோ ஒன்றின் மீது வைத்தார்கள். அவருடைய இடது கையில் ஒரு 'கம்பாஸை' கொடுத்து, அதை தமது மார்புக்கு நேராகப் பிடித்துக்கொண்டு, அச்சமயம் ஒருவர் வாசிக்கப்போகும் சங்கத்தின் சட்டங்களுக்கு உண்மையாக நடப்பதாகச் செய்யும் பிரமாணத்தை, அவர் திருப்பிச்

சொல்லும்படி கேட்டார்கள். மெழுகு வத்திகள் அணைக்கப் பட்டன. 'ஸ்பிரிட்' கொளுத்தப்பட்டது. அதை வாசனையிலிருந்து பீயர் அறிந்துகொண்டார். இப்பொது அவர் மங்கலான வெளிச் சத்தைப் பார்க்கப்போவதாகச் சொல்லப்பட்டது. அவருடைய கண்களில் கட்டப்பட்டிருந்த துணி அகற்றப்பட்டது. 'ஸ்பிரிட்' எரிந்து கொடுத்துக்கொண்டிருக்கும் அநத மங்கலான வெளிச்சத்தில் தமக்கு முன்னால் பல மனிதர்கள் நிற்கும் காட்சியை கனவில் காண்பது போல அவர் கண்டார். அவர்கள் எல்லாரும் ரெட்டர் அணிந்திருப்பதைப்போலவே முன் ஆடைகள் அணிந்திருந்தார்கள். எல்லாரும் தங்கள் கைகளில் வாள்களைத் தாங்கி பீயரின் மார்புக்கு நேராக அவற்றைப் பிடித்துக்கொண்டு நின்றார்கள். அவர்களில் ஒருவருடைய வெள்ளை ஷர்ட்டில் ரத்தக்கறை படிந்திருந்தது. அதைப் பார்த்தவுடன் தம்மை அந்த வாள்கள் குத்தும்படி தமது மார்பை முன் வைத்து பீயர் முன்னேறினார். ஆனால் உடனே அந்த வாள்கள் பின்னால் இழுத்துக்கொள்ளப்பட்டன. அவருடைய கண்களை மீண்டும் துணியால் கட்டினார்கள்.

'இப்பொழுது நீர் மங்கலான வெளிச்சத்தைப் பார்த்தீர்' என்று ஒரு குரல் சொல்லியது. பின்னால் மீண்டும் மெழுகு வத்திகள் கொளுத்தப்பட்டன. அவர் முழு வெளிச்சத்தையும் இப்பொழுது பார்க்கப் போவதாகச் சொல்லப்பட்டது. அவருடைய கண்களில் கட்டப்பட்டிருந்த துணியை அகற்றினார்கள். பத்துக் குரல்களுக்கு மேலாக ஒன்று சேர்ந்து, 'அம்மாதிரியாக உலகின்மகிமை மாறி வருகிறது' என்று சொல்லின.

பீயர் மெதுவாக தம்மை சுதாரித்துக்கொள்ள ஆரம்பித்தார். அந்த அறையையும் அதிலுள்ள நபர்களையும் சுற்றிப் பார்த்தார். ஒரு நீளமான மேஜை கறுப்புத் துணியால் மூடப்பட்டிருந்தது. அதைச் சுற்றிலும் அவர் முன்னால் பார்த்தபடி உடைகள் அணிந்து கொண்டு பன்னிரண்டு பேர்கள் இருந்தார்கள். அவர்களில் சிலரை பீட்டர்ஸ்பர்க்கின் உயர் வட்டாரத்தில் பீயர் முன்பு சந்தித்திருக் கிறார். தலைவரின் நாற்காலியில் அவருக்குப் பழக்கமில்லாத ஒரு வாலிபர் ஒரு விசித்திரமான சிலுவையை கழுத்தில் அணிந்து கொண்டு உட்கார்ந்திருந்தார். இரண்டு வருஷங்களுக்கு முன்பாக அன்னா பாவ்லாவ்னாவின் வீட்டில் சந்தித்த அந்த இத்தாலியப் பாதிரியார் அவருக்கு வலது பக்கமாக அமர்ந்திருந்தார். குராகின் மாளிகையில் வாத்தியாராய் இருந்த ஸ்விட்ஜர்லாந்து தேசத்தைச் சேர்ந்தவரும், மற்றொரு முக்கியமான பிரபலஸ்தரும் அங்கே காணப்பட்டார்கள். தலைவர் தமது கையில் ஒரு மரச் சம்மட்டியை வைத்திருந்தார். அவர் சொல்லும் வார்த்தைகளைக் கவனத்தோடு கேட்டு எல்லாரும் பவித்திரமான அமைதியோடு இருந்தார்கள்.

நட்சத்திர வடிவத்திலுள்ள ஒரு விளக்கு சுவரில் தொங்கிக் கொண்டிருந்தது. மேஜையின் ஒரு பக்கத்தில் பலவிதமான சித்திரங்கள் எழுதப்பட்ட ஒரு சிறு ஜமுக்காளம் இருந்தது. மற்றொரு பக்கத்தில் பலிபீடத்தைப்போல ஒன்று இருந்தது. அதன் மீது ஒரு பைபிளும் ஒரு மண்டை ஓடும் வைக்கப்பட்டிருந்தன. அதைச் சுற்றி மாதாக் கோயில்களில் வைக்கப்படுவதைப் போன்ற ஏழு உயரமான மெழுகு வத்திகள் நின்றுகொண்டிருந்தன. சங்க சகோதரர்கள் இருவர் பீயரை பீடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். பாதங்களை நேராக வைத்து நீளமாகப் படுக்கச் சொன்னார்கள் கோயிலின் வாசலுக்கு முன்பாக அவர் படுக்க வேண்டும் என்று கூறினார்கள்.

அவர் முதலில் கரண்டியைப் பெற வேண்டும் என்று ஒரு சகோதரர் மெதுவாய் பேசினார்.

'தயவு செய்து பேசாமல் இருங்கள்' என்றார் மற்றொருவர்.

தயக்கம் கொண்ட பீயர் எதுவும் செய்யாமல் தமது குறுகிய திருஷ்டிக் கண்களால் சுற்றிலும் பார்த்தார். திடீரென்று அவர் மனதில் சந்தேகங்கள் தோன்றின. 'நான் எங்கே இருக்கிறேன்? என்ன செய்துகொண்டிருக்கிறேன்? அவர்கள் எல்லாரும் என்னைப் பார்த்து சிரிக்கிறார்கள் அல்லவா? இவற்றையெல்லாம் நான் நினைக்கும்போது வெட்கம் அடையமாட்டேனா? ஆனால் இந்த சந்தேகங்கள் ஒரு வினாடிதான் நிலைத்து நின்றன. தம்மைச் சுற்றி நின்றவர்களின் சிரத்தையான முகங்களை பீயர் நோக்கினார். தீட்சைக்காக அதுவரை அவர் செய்த காரியங்களை நினைத்துப் பார்த்தார். இப்பொழுது மத்தியில் நிறுத்த முடியாது என்பதை உணர்ந்தார். தமது தயக்கத்தைக் கண்டு அவர் பேராச்சரியம் அடைந்தார். தம்முடைய முந்திய பக்தி உணர்ச்சியைத் தூண்டிவிட முயற்சித்து அந்தக் கோயிலின் வாசலில் சாஷ்டாங்கமாக கீழே படுத்தார். அந்த பக்தி உணர்ச்சி அதிக பலமாகவே உண்மையில் அவருக்குத் திரும்பியது. சிறிது நேரம் அவர் படுத்திருந்த பின்பு,அவரை எழுந்திருக்கும்படி சொன்னார்கள். மற்றவர்கள் தங்களுக்கு முன்பாக போர்த்தியிருந்த அதேமாதிரி வெள்ளைத் தோல் சவுக்கத்தை அவரது மார்பின் முன்பாகத் தொங்கவிட்டார்கள். அவரிடம் ஒரு கரண்டியையும் மூன்று ஜதைகள் கையுறைகளையும் கொடுத்த பின்பு,கிராண்ட் மாஸ்டர் அவரைப் பார்த்து பேசினார். தமக்கு முன்பாக அணிந்திருந்த அந்த வெள்ளை சவுக்கம் கறை படும்படியாக அவர் எதுவும் செய்ய முயற்சிக்கக் கூடாதென்று அவருக்குச் சொன்னார். அந்த வெள்ளைச் சவுக்கம் புனிதத்திற்கும் பலத்திற்கும் அறிகுறி என்றார். காரணம் சொல்லாமல் அவர்

கையில் கொடுக்கப்பட்ட அந்த கொத்து வேலைக் கரண்டியைப் பற்றி பின்னால் கூறினார். அதைக் கொண்டு வேலை செய்து அதர்மங்களிலிருந்து அவருடைய உள்ளத்தை புனிதமாக்க வேண்டுமென்றும், அதைக் கொண்டு கவனத்தோடு அவருடைய அண்டை அயலார்களின் உள்ளத்தை மிருதுவாக்க வேண்டு மென்றும் அவர் சொன்னார். அந்தக் கையுறைகளில் முதலாவது ஜதை ஆண்கள் அணியவேண்டியவை. அவற்றின் பொருளை பீயர் அறிய முடியாதென்றும், அவற்றை அவர் காப்பாற்றி வைத்துக் கொள்ளவேண்டுமென்றும் சொன்னார். ஆண்களின் கையுறை களாகிய இரண்டாவது ஜதையை சங்கத்தின் கூட்டங்களின்போது அவர் அணிய வேண்டுமென்று சொன்னார். மூன்றாவது ஜதை பெண்களுக்கு ஆனவை. அற்றைப் பற்றி அவர் சொன்னதாவது:- 'அன்புள்ள சகோதரரே, இந்தப் பெண்களின் கையுறைகளும் உமக்காகவேதான் கொடுக்கப்பட்டன. எந்தப் பெண்ணை நீர் மிக அதிகமாக கௌரவிக்கிறீரோ, அவற்றை அவளுக்குக் கொடும். நீர் தேர்ந்தெடுக்கும் அவள், உமக்கு சங்கத்தின் வேலைகளில் உதவியாய் இருப்பாள். நீர் அவளுக்குக் கொடுக்கும் இந்தப் பரிசு உமது உள்ளத்தின் புனிதத்தை அவளுக்குக் காட்டும். ஒரு பிரதிக்ஞையாய் இருக்கும்'. சிறிது நேரம் நிறுத்திய பின்பு மீண்டும் ஆரம்பித்தார்;- 'அன்புள்ள சகோதரரே, இந்தக் கையுறைகள் அசுத்தமான கைகளை அலங்கரிக்கும்படி விடாமல் நீர் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும்'. இந்தக் கடைசிவார்த்தைகளை கிராண்ட் மாஸ்டர் சொல்லிய பின்பு, தாம் குழப்பம் அடைந் திருப்பதாக பீயருக்குத் தோன்றியது. மேலும் மேலும் அவர் குழப்பம் அடைந்தார். கண்களில் நீர் நிறைகிறவரையில் குழந்தையைப்போல அவர் முகம் சிவந்தார். தம்மைச் சுற்றி ஆயாசத்தோடு அவர் பார்த்தார். ஒரு தர்மசங்கடமான தயக்கம் அங்கே தோன்றியது.

இந்த மௌனத்தை அங்கிருந்த ஒரு சகோதரர் நீக்கினார். ஜமுக்காளம் இருந்த இடத்திற்கு பீயரை அவர் அழைத்துச் சென்று, அந்த ஜமுக்காளத்தின் மீது போட்டிருந்த சித்திரங்களின் பொருள் பற்றி, தாம் கையில் வைத்திருந்த ஒரு கையெழுத்துப் புத்தகத் திலிருந்து வாசித்து அவருக்கு வியாக்யானம் செய்தார். அதில் சூரியன், சந்திரன், மரச் சம்மட்டி, நூல் குண்டு, ஒரு கொல்லத்துக் கரண்டி, ஒரு பாராங்கல், ஒரு சதுரமான கல், ஒரு தூண், மூன்று ஜன்னல்கள் ஆகிய சித்திரங்கள் இருந்தன. அதன் பின்னால் பீயருக்கு ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த இடத்தைக் காட்டினார்கள். சங்கத்தின் அடையாளங்களையும் சங்கேத வார்த்தையையும் அவருக்குச் சொல்லிய பின்பு அவரை உட்காரும்படி கூறினார்கள்.

சங்கத்தின் விதிகளைப்பற்றி கிராண்ட் மாஸ்டர் வாசிக்க ஆரம்பித்தார். அவை வெகு நீளமாக இருந்தன.மகிழ்ச்சியினாலும் கிளர்ச்சியினாலும் பரபரப்பினாலும் பீயர் சூழப்பட்டிருந்த படியால், வாசிக்கபடுபவைகளை அறிந்துகொள்ளக்கூடிய மனோபாவத்தில் அவர் இல்லை. விதிகளின் கடைசி வார்த்தைகளை மட்டும் அவர் கவனிக்க முடிந்தது. அவை அவருடைய உள்ளத்தில் நிலைத்திருந்தன.

'நமது கோயில்களில் தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் உள்ள வித்தியாசத்தைத் தவிர, வேறு எவ்வித வித்தியாசமும் காட்டப் படுவதில்லை. சமத்துவத்தை பாதிக்கக் கூடிய விதத்தில் எவ்வித வித்தியாசத்தையும் ஏற்படுத்தாதபடி ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். உதவி வேண்டியவர் யாராய் இருந்தாலும் சரி, உடனே அவரிடம் பறந்து சென்று உதவவேண்டும். வழி தவறிப் போகிறவருக்கு வழி காட்ட வேண்டும். கீழே விழுந்தவரைத் தூக்கவேண்டும். உமது சகோதரரிடம் ஒருபோதும் வெறுப்பையோ விரோதத்தையோ காட்டவேண்டாம். அன்பாகவும் மரியாதை யாகவும் இருக்க வேண்டும். தர்மத்தின் ஜோதியை எல்லா உள்ளங்களிலும் வளர்க்க வேண்டும். உமது மகிழ்ச்சியை அண்டை அயலாருக்கும் பகிர்ந்து கொடும். அந்த ஆனந்தத்தின் புனிதத்தை மங்கும்படி செய்யும் அந்தப் பொறாமையை விட்டுவிட வேண்டாம். விரோதியை மன்னிக்க வேண்டும். அவனுக்கு நன்மை செய்ய வேண்டுமெயொழிய அவனை பழிவாங்கக்கூடாது. இம் மாதிரியாக அந்த உயரிய சட்டங்களை நீர் நிறைவேற்றுவதன் மூலமாக, நீர் இழந்துவிட்ட அந்த பழங்காலத்து கம்பீரத்தின் சின்னங்களை மீண்டும் நீர் பெற முடியும்.'

அவர் பேசி முடித்த பின்பு எழுந்து பீயரைத் தழுவி முத்த மிட்டார். பீயர் தமது கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்க, தம்மைச் சுற்றிலும் பார்த்தார். அவரைச் சூழ்ந்து நின்று, அவருக்கு வாழ்த்துகளைக் கூறியவர்களுக்கு எம்மாதிரி பதில் சொல்லுவ தென்று அவருக்குத் தெரியவில்ல. தமக்கு முன்பே பழக்கமானவர் களும் அந்தக் கூட்டத்தில் இருந்தார்கள். ஆனால் அவருக்கு அப்பொழுது அந்த முன் பழக்கம் தனியாகத் தெரியவில்லை. எல்லோரும் ஒரே மாதிரியான சகோதரர்களாகவே தோன்றினார்கள். அவர்களுடன் சேர்ந்து தமது வேலையை ஆரம்பிக்க அவர் துடித்துக் கொண்டிருந்தார்.

கிராண்ட் மாஸ்டர் தமது சம்மட்டியால் மேஜையில் தட்டினார். எல்லா அங்கத்தினர்களும் தங்கள் ஸ்தானங்களில் அமர்ந்தார்கள். அவர்களில் ஒருவர் பணிவின் அவசியத்தைப் பற்றி ஒரு பிரசங்கத்தை வாசித்தார்.

கடைசி சடங்கைச் செய்யலாம் என்று கிராண்ட் மாஸ்டர் சொன்னார். 'தர்ம கலெக்டர்' என்ற பட்டம் பெற்றுள்ள ஒரு பிரதான அதிகாரி, அங்கிருந்த ஒவ்வொரு சகோதரரிடமும் வசூலுக்குச் சென்றார். தம்மிடமுள்ள எல்லாவற்றையுமே கொடுத்துவிட பீயர் விரும்பினார். ஆனால் அது ஒரு தற்பெருமையான காரியமாக இருக்குமோ என்று அவர் பயந்தார். ஆகவே மற்றவர்கள் என்ன கொடுத்தார்களோ, அதே மாதிரி அவரும் கொடுத்தார்.

கூட்டம் முடிந்தது. பல டஜன் கணக்கான வருஷங்களை ஒரு நீண்ட பிரயாணத்தில்கழித்துவிட்டுத் திரும்புகிறவரைப்போல, பீயர் வீடு திரும்பியதும் உணர்ந்தார். அவர் பூராவாக மாறிவிட்டார். தம்முடைய பழைய பழக்கங்களையும், பழைய வாழ்க்கை விதங்களையும் பூராவாக அவர் விட்டுவிட்டார்.

## 5
## 5

பிரீமேஸன் சங்கத்தில் சேர்ந்த தினத்திற்கு மறுநாள், பீயர் தமது வீட்டில் அமர்ந்து, ஒரு புத்தகத்தை வாசித்துக் கொண்டு, அதில் காணப்பட்ட சதுரம் என்பதின் முக்கியத்துவத்தை அறிவதற்கு முயன்றுகொண்டிருந்தார். அந்த சதுரத்தின் ஒரு பக்கம் கடவுளைக் காட்டுவதாகவும், மற்றொரு பக்கம் நீதி தர்மங்களைக் காட்டுவதாகவும், மூன்றாவது பக்கம் இகலோக விஷயத்தைக் காட்டுவதாகவும், நாலாவது பக்கம் இவற்றையெல்லாம் சேர்ந்தவைகளைக் காட்டுவதாகவும் இருந்தது. இடையிடையே அந்தப் புத்தகத்திலிருந்தும் சதுரத்திலிருந்தும் அவருடைய கவனம் வேறு பக்கமாகத் திரும்பி, தம்முடைய புது வாழ்க்கையைப்பற்றி மனோராஜ்யம் செய்ய ஆரம்பித்தது. முதல் நாளன்று மாலையில் சங்கத்தில் அவர் இருந்தபோது, அவர் முன்னால்செய்த டூயல் சண்டை விஷயம், சக்கரவர்த்தி வரை எட்டிவிட்டதாக ஒரு வதந்தியைக் கேள்விப்பட்டார். ஆகவே பீட்டர்ஸ்பர்க்கை விட்டு அவர் புறப்பட்டுப் போய்விடுவது நல்லதென்று அருக்குச் சொல்லப்பட்டது. தெற்கிலுள்ள தமது எஸ்டேட்டுகளுக்கு போவதற்கு அவர் எண்ணங்கொண்டார். அங்குள்ள அடிமைகளின் நலன்களைக் கவனிக்கலாமென்று அவர் நினைத்தார். இந்த புது வாழ்க்கையைப்பற்றி அவர் மகிழ்ச்சியோடு திட்டம் போட்டுக்கொண்டிருந்தபோது திடீரென்று அந்த அறையில் இளவரசர் வாஸைலி நுழைந்தார்.

'மாஸ்கோவில் நீர் என்ன செய்தீர், எனது அன்புள்ள நண்பரே? நீர் ஏன் ஹெலனோடு சண்டை போட்டீர்? நீர் ஒரு மதிமயக்கத்தில்

இருக்கிறீர்' என்று இளவரசர் வாசைலி அறைக்குள் நுழையும் போதே சொல்லிக்கொண்டு வந்தார். 'அவற்றை யெல்லாம் பற்றி எனக்குத் தெரியும். அந்த யூதர்களுக்கு முன்பாக கிறிஸ்து எப்படி குற்றமற்றவராக இருந்தாரோ, அதே மாதிரி ஹெலனும் குற்றமற்றவள் என்று நான் உமக்கு நிச்சயமாகச் சொல்ல முடியும்.'

பீயர் அதற்குப் பதில் சொல்வதற்கு முன்பாக, இளவரசர் வாசைலி இடைமறித்தார்.

'ஒரு நண்பரிடம் வருவதைப்போல, நீர் ஏன் நேராக என்னிடம் வந்திருக்கக் கூடாது? அதைப்பற்றி எல்லாம் எனக்குத் தெரியும். அதைப்பற்றி எல்லாம் எனக்குப் புரிகின்றன. ஒருவர் தம்முடைய கௌரவத்தைக் காப்பாற்றிக்கொள்ள எம்மாதிரி நடப்பாரோ, அதேமாதிரிதான் நீர் நடந்துகொண்டீர். ஆனால் நீர் மிகவும் அவசரப்பட்டுவிட்டீர். என்றாலும் அதைப்பற்றி எல்லாம் இப்போது நாம் பேசவேண்டாம். ஆனால் அவளையும் என்னையும் இந்த உயர்வட்டாரத்திலும் அரசர் சபையிலும் எம்மாதிரியான நிலைமையில் நீர் வைக்கிறீர் என்பதை யோசித்துப் பாரும்' என்று அவர் சொல்லிவிட்டு, தமது குரலைத் தாழ்த்தினார். 'அவள் மாஸ்கோவில் இருக்கிறாள்; நீர் இங்கே இருக்கிறீர். நினைத்துப் பாரும், அன்புள்ள சிறுவரே' என்று கூறி பீயரின் கையை கீழே இழுத்தார். 'அது வெறும் அபிப்பிராயபேதம். இப்படியே நீர் நினைப்பீர் என்று எதிர்பார்க்கிறேன். நாம் இருவரும் அவளுக்கு ஒரு கடிதம் எழுதுவோம். அவள் உடனே இங்கே வருவாள். எல்லாம் சரியாய்விடும். அப்படியில்லையென்றால், என் அன்புள்ள சிறுவரே, அதனால் நீர் துன்பப்பட நேரிடும் என்பதை உமக்கு நான் சொல்கிறேன்.'

இளவரசர் வாசைலி ஒரு முக்கியத்துவப் பார்வையோடு பீயரை நோக்கினார்.

'சக்கரவர்த்தியின் தாயார்கூட, இந்த விஷயத்தில் மிகுந்த சிரத்தைகொண்டிருப்பதாக, நம்பிக்கையான இடங்களிலிருந்து எனக்குத் தகவல் வந்திருக்கிறது. அவள் ஹெலனிடம் மிகுந்த கருணை காட்டுகிறவள் என்பது உமக்குத் தெரிந்த விஷயம்.'

பல தடவைகள் பேசுவதற்கு பீயர் முயன்றார். ஆனால் ஒரு பக்கம் இளவரசர் வாசைலி அவரைப் பேசவிடவில்லை. மற்றொரு பக்கம் தமது மறுப்பையும் தமது உறுதியான அபிப்பிராயபேதத்தையும் தாம் தமது மாமனாருக்கு சொல்லுவதற்கு பீயர் தயங்கினார். தவிரவும், எல்லாரிடமும் அன்பாகவும், மரியாதையாகவும் இருக்க வேண்டுமென்ற சங்கத்தின் விதிகள் அவருடைய ஞாபகத்திற்கு வந்தன. அவர் விழித்தார். முகம் சிவந்து இருப்பதைவிட்டு

எழுந்து, மீண்டும் உட்கார்ந்தார். தமது வாழ்க்கையிலேயே மிகுந்த கஷ்டமான காரியமொன்றைச் செய்வதற்கு அவர் தமக்குள்ளேயே போராடிக்கொண்டிருந்தார். ஒரு மன திருப்தி யில்லாத விஷயத்தை நேருக்கு நேர் சொல்வதற்கு தமக்கு எதிரில் இருப்பவர் யாராய் இருந்தாலும் சரி, எதிர்பாராத ஒரு விஷயத்தை சொல்லுவதற்கு அவர் தயங்கினார். இளவரசர் வாசைலியின் கவலையற்ற தன்னம்பிக்கையான குரலுக்கு அவர் பணிந்து நடப்பது வழக்கமாய்விட்டது. ஆனால் இப்போது அதைத் தாங்க முடியாதது போல அவருக்குத் தோன்றியது. தவிர, அவருடைய எதிர்காலம் அவர் இப்பொழுது என்ன சொல்லுகிறாரோ, அதில் அடங்கியிருப்பதாக அவர் நினைத்தார். அதாவது பழைய பாதையிலேயே போய்க் கொண்டிருப்பதா, அல்லது சங்கத்தார் அவருக்குக் காட்டிய கவர்ச்சிகரமான புதுப் பாதையில் போவதா என்று அவர் யோசித்தார். அந்தப் புதிய பாதையில்தான் அவருக்கு புது வாழ்வின் புனர்ஜென்மம் இருப்பதாக அவர் நிச்சயமாக நம்பினார்.

'இப்போது, எனது அன்புள்ள சிறுவரே, 'சரி' என்று சொல்லும். நானே அவளுக்கு கடிதம் எழுதுகிறேன். அந்த விஷயத்தை நாம் முடித்துவிடுவோம்.'

இளவரசர் வாசைலி தம்முடைய விளையாட்டுத்தனமான பேச்சை முடிப்பதற்கு முன்பாக, அவரைப் பார்க்காமலேயே அவருடைய தந்தைக்கு ஏற்படுவது போன்ற ஒருவிதமான கோபத்தோடு பீயர் முணுமுணுத்தார்:-

'இளவரசே, நான் இங்கே வரும்படி உம்மை அழைக்கவில்லை. நீர் போய்விடும். தயவுசெய்து போய்விடும்' என்று அவர் சொல்லி குதித்தெழுந்து,அவருக்காகக் கதவைத் திறந்தார்.

'நீர் போய்விடும்' என்று மீண்டும் அவர் கூறினார். தாம் கூறியது தமக்கே ஆச்சரியமாயிருந்தது. இளவரசர் வாசைலியின் முகத்தில் தோன்றிய குழப்பத்தையும் பீதியையும் கண்டு அவர் சந்தோஷம் கொண்டார்.

'உமக்கு என்ன வந்துவிட்டது? உமக்கு உடம்பு சரியில்லையா?'

'நீர்போய்விடும்' என்று நடுநடுங்கிய குரலில் பீயர் மீண்டும் சொன்னார். ஆகவே எந்த விதமான சமாதானத்தையும் அவர் பெற்றுக்கொள்ளாமல், அந்த இடத்தைவிட்டு இளவரசர் வாசைலி போகவேண்டியதாயிற்று.

தம்முடைய சங்கத்தைச் சேர்ந்த புதிய நண்பர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, தர்ம கைங்கர்யங்களுக்காக ஏராளான

பணங்களைக் கொடுத்துவிட்டு, ஒரு வாரத்திற்கு பின்னால் பீயர் தமது எஸ்டேட்டுகளுக்குப் போனார். கீவ், ஒடேசா ஆகிய இடங்களிலுள்ள சங்கத்தைச் சேர்ந்தவர்களுக்கு அவர்கள் அறிமுகக் கடிதங்கள் கொடுத்தார்கள். அவரின் புதிய நடவடிக்கைகளில் அவருக்கு உதவியாக அடிக்கடி கடிதம் எழுதி வழிகாட்டிக் கொண்டிருப்பதாக வாக்குறுதி கொடுத்தார்கள்.

## 5
### 6

பீயருக்கும் டோலாகவுக்கும் நடந்த டூயல் சண்டையை அமுக்கிவிட்டார்கள். அந்தக் காலத்தில் டூயல் சண்டைகளைப் பற்றி சக்கரவர்த்தி மிகவும் கடுமையாக இருந்தார். என்றாலும் அந்தச் சண்டையினால் அதில் கலந்துகொண்டதற்கோ, அல்லது அவருக்கு உதவியாயிருந்ததற்கோ யாருக்கும் எந்தவிதமான தண்டனையும் கிடைக்கவில்லை. ஆனால் பீயர் தமது மனைவியிடமிருந்து விலகிக்கொண்டது, அந்த டூயல் சண்டையை உறுதிப்படுத்திற்று. அதைப் பற்றியே மாஸ்கோவிலுள்ள உயர் வட்டாரங்களில் பேச்சாயிருந்தது. சோர புத்திரனாகப் பீயர் இருந்த காலத்தில், அவருக்கு ஏதோ தயவு காட்டுவதுபோல நடத்தப்பட்டார். அவர் திருமணம் செய்ய வேண்டிய பருவத்திற்கு வந்ததும், அவரை எல்லோரும் பிரமாதமாகப் பாராட்டினார்கள். ஆனால் திருமணத்திற்குப் பின்னால் திருமணத்திற்குத் தயாராய் இருந்த குமாரிகளும், அவர்களுடைய தாய்மார்களும் இனி அவரிடமிருந்து எதையும் எதிர்பார்ப்பதற்கில்லை என்பதனால், உயர் வட்டாரத்தில் அவருக்குள்ள மதிப்பு குறைந்தது. அது எப்படி நேர்ந்தது என்பது அவருக்குத் தெரியாது. உயர்வட்டாரத்தின் தயவை எதிர்பார்க்கவும் அவர் விரும்பவில்லை. இப்போது அவருக்கு நேர்ந்த கதிக்கு அவர்தான் காரணமென்று சொன்னார்கள். அவர் மிகுந்த பொறாமை கொண்டவராகவும், அவருடைய தந்தைக்குள்ள ரத்தவெறிகொண்ட கோபவெறி அவருக்கும் இருப்பதாவும் சொன்னார்கள். பீட்டர்ஸ்பர்க்கை பிட்டு பீயர் போன பின்பு, ஹெலன் பீட்டர்ஸ்பர்க்கிற்கு வந்தாள். அவளுக்கு அறிமுகமானவர்கள் எல்லாரும் அவளை மகிழ்ச்சியோடு வரவேற்றார்கள். அவளுக்கு ஏற்பட்ட துரதிருஷ்டத்திற்கு அவர்கள் பரிவும் காட்டினார்கள். அவளுடைய கணவரின் சுபாவங்களைப் பற்றிய பேச்சு வரும்போதெல்லாம், மிகுந்த கண்ணியமான தோற்றத்தோடு அவள் விளங்குவாள். அந்தத் தோற்றத்தின் அர்த்தம் என்னவென்பது

அவளுக்குத் தெரியாவிட்டாலும், அந்தத் தோற்றத்தோடு காணப்பட வேண்டுமென்ற சாதுர்யத்தை அவள் பெற்றிருந்தாள். தனக்கு ஏற்பட்டிருந்த கஷ்டங்களை முணுமுணுக்காமல் தாங்கிக் கொள்வதற்கு அவள் தீர்மானித்ததைப்போல, அவளுடைய தோற்றம் காட்டியது. அவளுடைய கணவரை அவள் பொறுத்துக் கொள்ள வேண்டுமென்று கடவுள் விதித்திருப்பதுபோல, அவள் காட்டிக்கொண்டாள். ஆனால் இளவரசர் வாசைலி தமது அபிப்பிராயத்தை மிகுந்த வெளிப்படையாகத் தெரிவித்தார். பீயரின் பெயரை யாராவது பிரஸ்தாபித்தால், உடனே அவர்தமது தோள்களைக் குலுக்கிக்கொண்டு, தமது நெற்றியை தொட்டுக் காட்டி, 'இங்கேதான் ஏதோ கோளாறு. நான் எப்போதுமே அதைச் சொல்லி வந்திருக்கிறேன் என்பார்.

'நான் ஆரம்பத்திலேயே சொன்னேன்' என்று பீயரைப்பற்றி அன்னா பாவ்லாவ்னா சொன்னாள். 'நான் ஆரம்பத்திலேயே எல்லாருக்கும் முன்பாக அந்த புத்தி கெட்ட வாலிபரைப் பற்றிச் சொல்லியிருக்கிறேன். இக்காலத்தின்கேடுகெட்ட கொள்கைகளினால் அவர் கெட்டுப்போனவர் என்பதையும் சொல்லியிருக்கிறேன். எல்லாரும் அவரைப்பற்றி மகிழ்ச்சி கொண்டிருந்த பொழுது, அவர் வெளிநாட்டிலிருந்து அப்பொழுதுதான் திரும்பி வந்தபோது, அவர் என்னுடைய ஒரு வரவேற்பு வைபவத்தில், ஏதோ ஒரு மாராட் மாதிரி நடந்துகொண்டபோது, நான் அதேமாதிரி சொல்லியிருக்கிறேன். இப்பொழுது அது என்ன மாதிரி முடிந்தது? அப்பொழுதே நான் இந்த திருமணத்தை எதிர்த்தேன். இப்பொழுது நடந்தவைகளை எல்லாம் முன்கூட்டியே அப்பொழுதே நான் சொன்னேன்.'

மாலை வேளைகளில் முன்னால் அவள் கொடுத்து வந்த மாதிரியான வரவேற்வு வைபவங்களை, இப்போதும் அன்னா பாவ்லாவனா கொடுத்து வந்தாள். இம்மாதிரி வைபவங்களை ஏற்பாடு செய்வதில் அவளுக்கு மிகுந்த திறமையுண்டு. அந்த வைபவங்களில் உயர் வட்டாரத்தைச் சேர்ந்த வெகு முக்கியமானவர்கள் கலந்துகொள்வார்கள். பீட்டர்ஸ்பர்க்கிலிருந்த கடைந்தெடுத்த புத்திசாலிகள் அங்கே இருப்பார்கள். அம்மாதிரி அவள் சொல்லிக்கொள்ளுவதுண்டு. இம்மாதிரியான உயர் நிலையிலுள்ள நபர்களை அவள் கூட்டிவைப்பதோடு, புதிதாக சுவாரஸ்யமுள்ள சில நபர்களையும் தனது விருந்தாளிகளுக்கு அவள் எப்போதும் அறிமுகப்படுத்துவதுண்டு. பீட்டர்ஸ்பர்க்கிலுள்ள அரசியல் நிலைமையை தெளிவாகவும் விளக்கமாகவும் காட்டக்கூடிய தெர்மாமீட்டர்போல அந்த வரவேற்புகள் இருக்கும்.

'ஜெனா என்ற இடத்திலும், ஆர்ஸ்டாட் என்ற இடத்திலும் பிரஷ்ய ராணுவத்தை நெப்போலியன் நாசமாக்கிய அந்த துக்ககரமான விவரங்களும், பெரும்பான்மையான பிரஷ்ய கோட்டைகள் சரண் அடைந்த விவரங்களும், 1806வது வருஷக் கடைசியில் கிடைத்தன. அதற்கு முன்பே நமது துருப்புகள் பிரஷ்யாவிற்குள் நுழைந்திருந்தன. நெப்போலியனுடன் நமது இரண்டாவது யுத்தம் ஆரம்பமாயிருந்தது. அந்த சமயத்தில்தான் அன்னா பாவ்லாவ்னா தமது வழக்கமான வரவேற்புகளில் ஒன்றை நடத்தினாள். உயர் வட்டாரத்தின் மிக உயர்வான நபர்கள் எல்லாரும், கணவனால் விலக்கப்பட்ட ஹெலன் உட்படி, மார்டிமார்ட் உட்பட, வியன்னாவிலிருந்து அப்பொழுதுதான் திரும்பி வந்திருந்த அந்த மனோகரமான இளவரசர் ஹிப்பாலைட் உட்பட, ராஜதந்திர சேவையைச் சேர்ந்த இருவர் உட்பட, அந்த வயோதிக அத்தையும் உட்பட, அந்த வரவேற்புக்கு வந்திருந் தார்கள். 'மிகச்சிறந்த யோக்யதை டெற்றவர்' என்று அந்த வரவேற்பறையில் வருணிக்கப்பட்ட வாலிபரும், புதிதாக நியமிக்கப்பட்ட சக்கரவர்த்தினியின் தோழி ஒருத்தியும், அவளுடைய தாயாரும், அந்தஸ்தில் குறைவான வேறு பல பேர்வழிகளும் அங்கு வந்திருந்தார்கள்.

அன்று மாலை நடந்த வரவேற்பில், தமது விருந்தாளிகளுக்கு அன்னா பாவ்லாவ்னா அறிமுகப்படுத்திவைத்த முக்கியமானவர் களில் போரிஸ் ட்ரூபெட்ஸ்கோய் என்பவராகும். அவர் அப்பொழுதுதான் பிரஷ்ய ராணுவத்திலிருந்து, விசேஷ தூதராக அங்க வந்து சேர்ந்தார். ஒரு முக்கியமான மேல் பதவியில் உள்ளவருக்கு, அவர் மெய்க்காப்பாளராக வேலை பார்த்து வந்தார்.

அன்று மாலையில் அங்கிருந்தவர்களுக்கு அந்த அரசியல் தெர்மாமீட்டர் காட்டிய சீதோஷ்ண நிலைமை பின்வருமாறு:-

'போனபார்ட்டை எதிர்ப்பதற்கு அல்லது என்னை எதிர்ப்பதற்கு, அல்லது பொதுவாக நம் எல்லாரையும் எதிர்ப்பதற்கு, என்னதான் ஐரோப்பிய சக்கரவர்த்திகளும், சேனாதிபதிகளும் செய்து நம்மை மனம் வருந்தும்படி செய்தபோதிலும், அந்த போனபார்ட்டைப் பற்றி நாங்கள் கொண்டுள்ள அபிப்பிராயத்தை மாற்ற முடியாது. அந்த விஷயத்தில் நமக்குள்ள உண்மையான கருத்துகளை வெளியிட நாம்தயங்க மாட்டோம். பிரஷ்ய ராஜாவுக்கும் மற்றவர்களுக்கும் நாம் இதைத்தான் சொல்வோம். 'உங்களுக்குத் தான் அதனால் கஷ்டம். நீங்கள் அப்படியே செய்துகொள்ளுங்கள்.'

போரிஸைத்தான் அன்று அங்கு வந்திருந்த விருந்தாளிகளுக்கு ஒரு ஸ்வாரஸ்யப் பொருளாக அன்னா காட்ட இருந்தாள். அவர்

வரவேற்பு அறையில் நுழைந்தபோது, எல்லாவிதமான விருந்தாளிகளும் கூடியிருந்தார்கள். சில உரையாடல்கள் நடந்து கொண்டிருந்தன. ஆஸ்திரியாவிடம் நமக்குள் ராஜதந்திர உறவுகளைப்பற்றியும், ஆஸ்திரியாவுடன் ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ளக்கூடிய நம்பிக்கையைப் பற்றியும், அன்னா பாவ்லாவ்னா விவாதத்தை ஆரம்பித்து நடத்திக் கொண்டிருந்தாள்.

போரிஸ் இப்போது நன்றாய் வளர்ந்துவிட்டார். புதிய உற்சாகத்தோடு சிவந்த நிறத்தில் காணப்பட்டார். தன்னம்பிக்கை மிகுதியாய்க் கொண்டிருந்தவர்போல விளங்கினார். ஒரு மெய்க்காப்பாளரின் அழகான சீருடையணிந்துகொண்டு, வரவேற்பு அறைக்கு வந்தார். முதலில் அந்த வயதான சித்தியிடம், அவருடைய மரியாதையைத் தெரிவிப்பதற்காக அழைத்துச் செல்லப்பட்டு, பின்னால் அங்கு வாதம் செய்து கொண்டிருந்த கூட்டத்திற்கு அழைத்து வரப்பட்டார்.

தன்னுடைய மெலிந்த கையை முத்தமிடுவதற்கு அன்னா பாவ்லாவ்னா அவரிடம் நீட்டினாள். அவருக்கு முன்பு பழக்கமில்லாத பலரிடம் அவரை அறிமுகப்படுத்தினாள். அறிமுகம் செய்யும்போது ஒவ்வொருவரைப் பற்றியும் சுருக்கமாக மெதுவான குரலில் அவரிடம் கூறினாள்.

‘இளவரசர் ஹிப்பாலைட் குராகின் - மகிழ்ச்சிகரமான வாலிபர்; திருவாளர் கிராங்க் - கோபன்ஹேகனிலிருந்து வந்துள்ள உதவி ஸ்தானாதிபதி, மிகுந்த புத்திசாலி; திருவாளர் ஷிட்டாவ் மிகுந்த திறைமை வாய்ந்தவர்.’ இம்மாதிரியாக அவள் அறமுகப்படுத்தி வைத்தாள்.

அன்னா மிக்காய்லாவ்னாவின் முயற்சிகளினாலும், தம்முடைய சொந்த குணங்களினாலும், தமக்கு சுபாவமாயுள்ள ஒதுங்கி நிற்கும் குணத்தினாலும், தம்முடைய உத்தியோக சேவையில் தமக்குச் சாதகமான நிலைமைகளை போரிஸ் பெற முடிந்தது. அவர் ஒரு முக்கியமான பிரமுகருக்கு மெய்க்காப்பாளராக இருந்தார். ஒரு முக்கியமான வேலை நிமித்தமாக, அவரை பிரஷ்யாவுக்கு அனுப்பினார்கள். பிரஷ்யாவிலிருந்து மீண்டும் ஒரு விசேஷ தூதராக அவர் அங்கே திரும்பியிருக்கிறார். அவர் ஆல்முட்ஜ் என்ற இடத்தில் அவர் மிகுந்த பிரியம் கொண்ட அந்த எழுதப்படாத விதிகளைப் பற்றி, இப்போது மிகவும் நன்றாகப் புரிந்துகொண்டார். ஒரு சாதாரண அதிகாரி ஒரு ஜெனரலுக்கு மேலாக விளங்க முடியுமென்பதையும், வெற்றியடைய வேண்டுமானால் அதற்கு முயற்சியோடு, வேலையோ, தைரியமோ, அல்லது உறுதியோ அவசியமில்லை; பதிவி உயர்வுகளையோ அல்லது

கௌரவங்களையோ கொடுக்கக் கூடியவர் யாரோ, அவர்களுடன் எப்படி சுமுகமாக நடந்து கொள்ள முடியும் என்பதைத் தெரிந்து கொண்டால் போதும் என்பதை அவர் அறிந்து கொண்டார். இவ்வளவு சீக்கிரமாகத் தமக்குக் கிடைத்த வெற்றியைப் பற்றியும் மற்றவர்களால் இதை அறிந்து கொள்ள முடியாதிருப்பதைப் பற்றியும், அவர் அடிக்கடி ஆச்சிரியப்படுவதுண்டு. இந்த ரகசியத்தை அவர் அறிந்து கொண்டதால், அவருடைய வாழ்க்கையின் முழுபோக்கும், பழைய நண்பர்களிடம் அவர் கொண்டிருந்த உறவுகளும், எதிர்காலத்திற்காக அவர் கட்டியிருந்த திட்டங்களும், எல்லாமே முழுவதும் மாறிவிட்டன. அவர் பணக்காரர் அல்ல, என்றாலும் மற்றவர்களைவிட நன்றாக ஆடை அணிந்து கொள்ள அவருக்குத் தெரியும். எத்தனையோ சௌக்கியங்களை தியாகம் செய்துதான், நன்றாக உடை தரிக்க முடியுமென்று ஏற்பட்டாலும்கூட, அம்மாதிரி அவர் செய்வாரேயொழிய, மோசமான உடையை அணிந்துகொண்டு பீட்டர்ஸ்பர்க் தெருக்களில் அவர் நடக்கமாட்டார். பதவிகளில் தமக்கு மேலாக இருந்து, தமக்கு உதவி செய்யக்கூடிய நிலைமையில் இருப்பவர்களிடம் மட்டுமே, அவர் நண்பராய் இருக்கவோ, அல்லது அறிமுகப்படுத்திக் கொள்ளவோ செய்து வந்தார். அவர் பீட்டர்ஸ்பர்க்கை விரும்பினார்; மாஸ்கோவை வெறுத்தார். ராஸ்டோவின் மாளிகையையும், நட்டாஷாவிடம் அவர் கொண்டிருந்த குழந்தைத்தனமான காதலையும், அவர் இப்போது நினைத்தபோது, அவருக்கு அவை மனோகரமாய் இல்லை. அவர் ராணுவத்திற்கு புறப்பட்டுப் போனதற்கு பின்பு, ராஸ்டோவ் குடும்பத்தாரைப் பார்ப்பதற்காக ஒரு தடவை கூட போனதில்லை. அன்னா பாவ்லாவ்னாவின் வரவேற்பறையில் இருப்பது, தமது உத்தியோக சேவையில் உயர்வதற்கு ஒரு முக்கியமான படியென்று அவர் கருதினார். ஆகவே அன்னா பாவ்லாவ்னா தம்மை எந்த விதமாக வேண்டுமானலும் உபயோகித்துக்கொள்ளட்டுமென்று அவர் நினைத்து, தாம் அங்கு செய்யப்போவது என்னவென் பதையும் அறிந்துகொண்டார். அவர் அங்கிருந்தவர்களின் முகங்களைக் கவனமாய்ப் பார்த்தார். அங்கிருந்தவர்களோடு நெருங்கிய தொடர்பு கொள்வதற்கு சாத்தியமிருக்கிறதாவென்பதை சிந்தித்துக் கொண்டிருந்தார். அப்படி தொடர்பு ஏற்படுத்தினால், அதனால் கிடைக்கக்கூடிய பலன்கள் என்னவென்பதையும் யோசித்துக் கொண்டிருந்தார். அழகிய ஹெலனுக்குப் பக்கத்தில், அவருக்குக் கொடுக்கப்பட்ட ஆசனத்தில் அவர் அமர்ந்து, அங்கு நடந்த பொதுவான உரையாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

'உத்தேசிக்கப்பட்டிருக்கிற ஒப்பந்தத்தின் அடிப்படைகளைப் பெறவே முடியாது என்று வீயன்னா நினைக்கிறது. தொடர்ச்சியான பிரமிக்கத்தக்க வெற்றிகள் கிடைத்தாலும் கூட, அவற்றைப் பெற முடியாது என்றும், அவற்றை நாம் அடைவதற்கு நம்மிடம் வழியிருக்கிறதா என்பதைப்பற்றி அது சந்தேகப்படுகிறதாகவும் தோன்றுகிறது. இவைதான் வீயன்னா மந்திரி சபை சொல்லும் வார்த்தைகள். அதே வார்த்தைகளைத்தான் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்' என்று அந்த டேனிஷ் உப-ஸ்தானாதிபதி கூறினார்.

'அந்த சந்தேகம்தான் ஆச்சர்யமாய் இருக்கிறது' என்று மிகுந்த புத்திசாலியென்று வருணிக்கப்பட்ட அந்த பேர்வழி ஒரு புன்னகையோடு கூறினார். 'வீயன்னா மந்திரி சபைக்கும், ஆஸ்திரிய சக்கரவர்த்திக்கும் வித்தியாசமுண்டு என்பதை நாம் கவனிக்க வேண்டும். ஆஸ்திரியாவின் சக்கரவர்த்தி அம்மாதிரி ஒரு விஷயத்தை எப்போதும் நினைத்திருக்கவே முடியாது. அம்மாதிரி சொல்வது மந்திரி சபையேயாகும்' என்று மார்டிமார்ட் கூறினார்.

'ஆ, எனது அன்புள்ள கோமகளே, ஐரோப்பா எப்பொழுதுமே நமது உண்மையான நண்பனாய் இருக்காது' என்று அன்னா பாவ்லாவ்னா கூறினாள்.

அந்த உரையாடலில் போரிஸை கலந்துகொள்ளும்படி செய்வதற்காக பிரஷ்யாவின் மன்னருடைய தைரியத்தைப் பற்றியும் உறுதியைப் பற்றியும், அன்னா பாவ்லாவ்னா பேச ஆரம்பித்தாள்.

ஒவ்வொருவர் பேசுவதையும் கவனத்தோடு போரிஸ் கேட்டு, தமது முறைக்காகக் காத்துக்கொண்டிருந்தார். இதற்கிடையில் பக்கத்திலிருந்த அழகிய ஹெலனை அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தார். அந்த அழகிய வாலிப மெய்க்காப்பாளரின் கண்களை அவளுடைய கண்கள் புன்னகையோடு அடிக்கடி சந்தித்தன.

பிரஷ்யாவின் நிலைமையைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்த போது, க்ளோகாவ் என்ற இடத்திற்கு போரிஸ் பிரயாணம் போனதைப் பற்றியும், அங்கே பிரஷ்ய ராணுவம் என்ன நிலைமையில் காணப்பட்டது என்பதைப் பற்றியும், தங்களுக்குச் சொல்லுமாறு போரிஸை அன்னா பாவ்லாவ்னா கேட்டாள். போரிஸ் மிகுந்த நிதானத்தோடு, சுத்தமான சரியான பிரஞ்சு மொழியில் அந்த ராணுவத்தைப் பற்றியும், மன்னர் சபையைப் பற்றியும், சுவாரஸ்யமான பல விஷயங்களைக் கூறினார். ஆனால் தாம் சொல்லுகிற விஷயங்களைப்பற்றித் தம்முடைய அபிப்பிராயங்கள் என்னவென்பதை, வெகு கவனமாக வெளியே சொல்லாமல் பேசி வந்தார். சில நேரத்திற்கு அங்கிருந்தவர்கள்

எல்லாருமே அவருடைய பேச்சில் ஈடுபட்டார்கள். தன்னுடைய விருந்தாளிகள் எல்லாரும் தான் அறிமுகப்படுத்திவைத்த அன்றைய விசேஷ விருந்தாளியின் பேச்சை மிகுந்த மகிழச்சியோடு கேட்டு வருகிறார்கள் என்பதை அன்னா பாவ்லாவ்னா உணர்ந்தாள். அங்கு கேட்டுக்கொண்டிருந்தவர்கள் எல்லாரையும்விட, மிகுந்த அதிகமான கவனத்தைக் காட்டியவள் ஹெலன்தான். அவருடைய பிரயாணத்தைப் பற்றியும், பிரஷ்ய ராணுவமிருந்த நிலைமையைப் பற்றியும், அவளுக்கு மிகுந்த சிரத்தையிருப்பதைப்போல பல கேள்விகளை அவரிடம் கேட்டாள். அவர் ஒவ்வொரு தடவையும் பேசி முடிந்ததும், அவள் தன்னுடைய வழக்கமான புன்னகையோடு அவரை திரும்பிப் பார்ப்பாள்.

'நீர் கட்டாயமாக வந்து என்னைப் பார்க்க வேண்டும்' என்று அவள் சொன்னாள். இது முற்றிலும் முக்கியமான அவசியமாயிருக்கிறது என்பது அவருக்குத் தெரியாமல் இருக்கலாமென்று அவள் நினைத்துப் பேசியதைப்போல அவளுடைய தொனி இருந்தது.

'செவ்வாயன்று 8 மணிக்கும் 9 மணிக்கும் இடையில். அது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கும்.'

அவளுடைய ஆசையைப் பூர்த்தி செய்துவைப்பதாக போரிஸ் வாக்களித்தார். அவளுடன் மீண்டும் அவர் உரையாடலை ஆரம்பிக்கவிருந்த சமயத்தில், அன்னா பாவ்லாவ்னா, தனது சித்தி-அவர் பேசுவதைக் கேட்க விரும்புகிறாள் என்ற காரணம் காட்டி அவரை அங்கிருந்து அழைத்தாள்.

'அவளுடைய கணவனைப்பற்றி உமக்கு தெரியுமல்லவா? என்று அன்னா பாவ்லாவ்னா கேட்டு, தனது கண்களை மூடி ஹெலனை ஒரு சோகமான செய்கையோடு சுட்டிக்காட்டினாள். 'என்ன மனோகரமான, என்ன துரதிருஷ்டமான பெண்; அவள் புருஷனைப்பற்றி அவளிடம் பேச வேண்டாம்; தயவு செய்து, பேச வேண்டாம். அது அவளுக்கு மிகுந்த துக்கமாயிருக்கும்.'

## 5 7

போரிஸும் அன்னா பாவ்லாவ்னாவும் மற்றவர்களிடம் திரும்பியபோது, அங்கே இளவரசர் ஹிப்பாலைட் பேசிக்கொண்டிருந்தார். அவர் தம்முடைய சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து, முன்னால் குனிந்து, 'பிரஷ்யாவின் மன்னருக்காக' என்று சொன்னார். இதைச் சொல்லியதும் அவர் சிரித்தார். ஒவ்வொருவரும் அவரைத் திரும்பிப் பார்த்தார்கள்.

'பிரஷ்யாவின் மன்னருக்காகவா?' என்ற கேள்விக்குறியாடு ஹிப்பாலைட் கேட்டுவிட்டு, மீண்டும் சிரித்தார். அப்புறம் அமைதியாக சிரத்தையோடு தமது நாற்காலியில் பின்னால் சாய்ந்தார். அவர் மேலே பேசட்டுமென்று அதைக் கேட்பதற்காக அன்னா பாவ்லாவ்னா காத்திருந்தாள். ஆனால் அவர் இனிமேல் பேசப் போவதில்லையென்று தீர்மானம் செய்துவிட்டதைப்போலத் தோன்றியபடியால், அவள் பேச ஆரம்பித்தாள். அந்த கர்வங் கொண்ட போனபார்ட், மகா பெரிய பிரடெரிக் சக்கரவர்த்தியின் உடைவாளை, பாட்ஸ்டாமில் எப்படி திருடிக்கொண்டார் என்பதை அவள் சொல்லிக்கொண்டிருந்தாள்.

'இந்த மகா பெரிய பிரடெரிக்கின் உடைவாளை...' என்று அவள் ஆரம்பித்தவுடன், ஹபிப்பாலைட் இடைமறித்து, 'பிரஷ்யாவின் மன்னருக்காக' என்று சொன்னார். இதைக் கேட்டதும், எல்லாரும் அவரைத் திரும்பிப் பார்த்தார்கள். மறுபடியும் அவர் மௌன மானார். மேலே எதுவும் பேசவில்லை.

அன்னா பாவ்லாவ்னா முகம் சுளித்தாள். ஹிப்பாலைட்டின் நண்பரான மார்ட்டிமார்ட் என்பவர் கடுமையோடு அவரைப் பார்த்துப் பேசினார்.

'இப்போது சொல்லும். நீர் சொல்கிற 'பிரஷ்யாவின் மன்னருக்காக' என்ற விஷயத்தைப்பற்றி என்ன சொல்லுகிறீர்?'

சிரிப்பதற்கு வெட்கப்படுகிறவரைப்போல ஹிப்பாலைட் சிரித்தார்.

'ஓ, அது ஒன்றுமில்லை. நான் சொல்ல விரும்பியது இதுதான்...'

(வீயன்னாவில் அவர் கேள்விப்பட்ட ஒரு தமாஷைச் சொல்ல விரும்பினார். அன்று மாலை முழுவதிலும், அதைச் சொல்வதற்கு அவர் முயற்சித்துக்கொண்டேயிருந்தார்) 'நான் சொல்ல விரும்புவது என்னவென்றால், 'பிரஷ்யாவின் மன்னருக்காக நாம் யுத்தம் செய்வது தவறு.'

போரிஸ் ஜாக்கிரதையோடு புன்முறுவல் காட்டினார். அது கேலி என்றோ, அல்லது அங்கீகரிப்பது என்றோ அவரவர்களுக்குத் தோன்றியபடி தீர்மானம் செய்துகொள்ளட்டும் என்பதைப்போல இருந்தது. ஒவ்வொருவரும் சிரித்தார்கள்.

'உமது தமாஷ் ரொம்ப கெட்டதாயிருக்கிறது. அது வேடிக்கையாக இருந்தாலும், மிகவும் நியாயமற்றது' என்று தனது மெலிந்த விரலை அவரை நோக்கி அசைத்துக்காட்டி அன்னா பாவ்லாவ்னா பேசினாள்.

'நாம் '' பிரஷ்யாவின் மன்னருக்காக'' யுத்தம் செய்யவில்லை. நியாயமான கொள்கைகளுக்காகவே யுத்தம் செய்கிறோம். ஓ! அந்த மோசமான இளவரசர் ஹிப்பாலைட்!' என்றாள் அவள்.

அன்று மாலை முழுவதிலும் உரையாடலில் கொஞ்சம்கூட சுவாரஸ்யம் குன்றவில்லை. முக்கியமாக அரசியல் விஷயங்களைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். அந்த வைபவத்தின் கடைசியில் உரையாடல் சிறிது சூடு கண்டது. அதாவது வெகுமதிகளை சக்கரவர்த்தி கொடுத்ததைப்பற்றிப்பேச்ச வந்தபோது பரபரப்பு ஏற்பட்டது.

'ஒரு படம்போட்ட பொடி டப்பியை 'நா' என்பவர் சென்ற வருஷம் பெற்றதை நீர் அறிவீர்' என்று அந்த மிகுந்த புத்திசாலியென்று கருதப்பட்டவர் சொன்னார். 'அப்படியானால் 'சா' என்பவர் ஏன் அதே மாதிரிப் பரிசைப் பெறக்கூடாது?'

'மன்னிக்க வேண்டும். சக்கரவர்த்தியின் படம் போட்ட ஒரு பொடி டப்பி, ஒரு பரிசாய் இருக்க முடியுமேயொழிய, அதை ஒரு பாராட்டுதல் என்றுகூற முடியாது' என்று ராஜதந்திர சேவையில் இருந்தவர் சொன்னார்.

'இவற்றிற்கு எல்லாம் முன் ஆதாரங்கள் இருக்கின்றன. ஸ்வார்ஜன்பெர்க் என்பவரை ஆதாரமாக நான் காட்ட முடியும்.'

'அது முடியாத காரியம்' என்றார் ஒருவர்.

'நீர் பந்தயம் கட்ட முடியுமா? பட்டம் என்பது வேறு விஷயம்.'

ஒவ்வொருவரும் போவதற்கு எழுந்தார்கள். அன்று மாலை முழுவதிலும் ஹெலன் வெகு சொற்பமாகவே பேசினாள். அவள் போரிஸை மீண்டும் திரும்பிப் பார்த்து ஒரு அன்பான முக்கியத்துவமுள்ள உத்தரவைப்போல, செவ்வாய்க்கிழமை தம்மிடம் வருமாறு சொன்னாள்.

'அது எனக்கு பெரிய முக்கியத்துவம் வாய்ந்ததாயிருக்கும்' என்று அவள் சொல்லி, ஒரு புன்னகையோடு அன்னா பாவ்லாவ்னாவை நோக்கினாள். சக்கரவர்த்தினியைப்பற்றி பேசும்போது, அன்னா பாவ்லாவ்னா காட்டும் அதே சோகமான புன்னகையோடு ஹெலனின் ஆசையை ஆதரித்தாள்.

அன்று மாலை பிரஷ்ய ராணுவத்தைப்பற்றி போரிஸ் பேசியவைகளிலிருந்து, அவரைப் பார்க்க வேண்டியது ஹெலனுக்குத் திடீரென்று அவசியம் நேர்ந்ததைப்போல தோன்றியது. அவர் செவ்வாய்க்கிழமை வரும்போது, அவரிடம் அந்த அவசியத்தை விளக்கிச் சொல்வதாக அவள் வாக்குறுதி கொடுத்ததைப்போல அவள் தோன்றினாள்.

ஆனால் செவ்வாய்க்கிழமையன்று மாலை ஹெலனுடைய பிரமாதமான அறைக்கு போரிஸ் வந்ததும், அன்று அவரை வரச் சொல்ல வேண்டிய அவசியம் என்ன என்பதைப்பற்றி எந்த தெளிவான விளக்கமும் அவருக்குக் கூறப்படவில்லை. அன்று வேறு பல விருந்தாளிகளும் இருந்தார்கள். ஆகவே கோமகள் அவரிடம் சுருக்கமாய்த்தான் பேசினாள். அவர் புறப்பட்டு போகும்போது, அவளுடைய கையை முத்தமிட்டபோதுதான், குசுகுசுப்பான குரலில் எதிர்பாராத விதத்தில், புன்சிரிப்பு இல்லாத ஒரு ஆச்சரியமான முகத்தோடு, 'நாளை டின்னருக்கு நீர் வாரும்... நாளை மாலை நீர் கட்டாயம் வரவேண்டும்... வாரும்' என்றாள்.

பீட்டர்ஸ்பர்க்கில் போரிஸ் தங்கியிருந்த காலத்தில், கோமகள் ஹெலனின் வீட்டிற்கு அடிக்கடி போய் வந்தார்.



யுத்தம் மிகுந்த வேகமாய் பொங்கி ருஷ்ய எல்லையை நெருங்கிக் கொண்டிருந்தது. 'அந்த மனித சமூகத்தின் எதிரியான போனபார்ட்டை சபிக்கும் குரல்களை ஒவ்வொரு இடத்திலும் எல்லாரும் கேட்டு வந்தார்கள். ராணுவத்திற்கும் ரிசர்வ் படைக்கும் வேண்டிய நபர்களை கிராமங்களில் சேகரித்துக் கொண்டிருந்தார்கள். யுத்த முனையிலிருந்து ஒன்றுக்கொன்று முரணாக செய்திகள் வந்துகொண்டிருந்தன. வழக்கம்போல அவையெல்லாம் பொய்யானவையாயிருந்தபடியால், அவற்றிற்கு பலவகையான வியாக்யானங்கள் செய்யப்பட்டன.

அந்த வயோதிக இளவரசர் பால்கோன்ஸ்கி, இளவரசர் ஆண்ட்ரூ இளவரசிமேரி ஆகியோர்களின் வாழ்க்கை 1805-ம் வருஷத்திலிருந்து மிகுந்த மாறுபாடு கொண்டதாயிருந்தது.

ருஷ்யா முழுவதிலும் ராணுவத்திற்கு ஆள் சேர்ப்பதற்காகப் பிரகடனப்படுத்தப்பட்டிருந்தது. அந்த வேலையை மேல்பார்ப்பதற்காக எட்டு பிரதம கமாண்டர்கள் நியமிக்கப் பட்டிருந்தார்கள். அவர்களில் ஒருவராக வயோதிக இளவரசர் பால்கோன்ஸ்கியும் நியமிக்கப்பட்டிருந்தார். தமது குமாரர் கொல்லப்பட்டார் என்று கேள்விப்பட்டதும், அவருடைய வயோதிகத்தின் தள்ளாமையை அவர் உணர ஆரம்பித்தார். இருந்தாலும் சக்கரவர்த்தியே தம்மை நியமித்திருப்பதால், அந்த ஆள் சேர்க்கும் வேலையை மேல்பார்க்கும் கடமையை அவர் மறுப்பது சரியென்று நினைக்கவில்லை.

புதிதாகத் தாம் சேவை செய்வதற்குக் கிடைத்த சந்தர்ப்பமானது, அவருக்கு புது உற்சாகத்தையும் பலத்தையும் கொடுத்தது. அவருடைய பொறுப்பில் விடப்பட்டிருந்த மூன்று மாகாணங் களையும், அவர் தொடர்ந்து சுற்றிப் பார்த்து வந்தார். தமது கடமையை நிறைவேற்றுவதில் அவர் தமது திறமை முழுவதையும் காட்டினார். தம்முடைய சிப்பந்திகளிடம் அவர் காட்டிய கண்டிப்பு கொடூரமாய் தோன்றியது. சிறு விஷயம் வரையில் ஒவ்வொன் றையும் தாமே கவனித்தார். தனது தந்தையிடம் கணக்குப் பாடங்கள் கற்றுக்கொள்வதை, இளவரசி மேரி விட்டுவிட்டாள். வயோதிக இளவரசர் வீட்டில் தங்குகிற வேளையில், சிறிய குழந்தையான குஞ்சு இளவரசர் நிக்கலஸையும் (அக்குழந்தையின் தாத்தா அப்படித்தான் அதை அழைத்து வந்தார்) அதற்குப் பால் கொடுக்கும் தாதியையும் அழைத்துக்கொண்டு, தமது தந்தையின் அறையில் போய் இருப்பாள். அந்தக் குழந்தை, தனக்கு பால் கொடுக்கும் தாதியோடும், தாதி சாவிஷ்னாவுடனும், தனது தாயினுடைய அறையில் அநேகமாய் இருப்பது வழக்கம். இளவரசி மேரி பெரும்பாலும் அந்தக் குழந்தை இருக்குமிடத்திலேயே இருந்து, தமது மருமகனுக்கு கூடியவரையில் தாய் ஸ்தானத்தை பூர்த்தி செய்து வந்தாள். குமாரி பௌரியன்கூட அந்தக் குழந்தை மீது மட்டற்ற ஆசை கொண்டிருந்தாள். அந்தக் குழந்தையை குஞ்சு தேவதையென்று இளவரசி மேரி அழைப்பது வழக்கம். பௌரியனை திருப்தி செய்வதற்காகத் தன்னுடைய ஆசையைக் கூட அடக்கிக் கொண்டு, அந்தக் குழந்தையிடம் தனது ஸ்நேகிதி அதிகமாக விளையாடி இன்பம் அடையும்படி விட்டு வந்தாள்.

அந்த பால்டு ஹில்ஸ் எஸ்டேட்டில் உள்ள மாதா கோயிலின் பலி பீடத்திற்குப் பக்கத்தில், குஞ்சு இளவரசியின் சமாதி இருந்தது. அதன்மேல் ஒரு சிறியமாடம் கட்டப்பட்டிருந்தது. அந்த மாடத்தினுள் இத்தாலியிலிருந்து வரவழைக்கப்பட்ட ஒரு சலவைக்கல் ஞாபகச் சின்னம் அமைக்கப்பட்டிருந்தது. ஒரு தேவதை தனது விரித்த இறகுகளோடு மேலே பறப்பதற்குத் தயாராயிருப்பதுபோல, இந்த ஞாபகச் சின்னம் செய்யப் பட்டிருந்தது. அந்த தேவதையின் மேல் உதடு, சிறிதளவு மேலே தூக்கி புன்சிரிப்புக் காட்டப்போவதைப்போலத் தோன்றியது. இளவரசர் ஆண்ட்ரூவும், இளவரசி மேரியும் அதைப் பார்த்துவிட்டு வெளியே வந்தவுடன், அந்த தேவதையின் முகம், ஆச்சரியகரமான விதமாக குஞ்சு இளவரசியை ஞாபகப்படுத்துகிறதென்று ஒருவருக்கொருவர் ஒப்புக்கொண்டார்கள். அதைவிட அதிசயமான ஒன்று இருந்தது. அதை இளவரசர் ஆண்ட்ரூ தமது சகோதரியிடம்

சொல்லவில்லை. அதாவது தமது மனைவி இறந்துபோனபின் அவள் முகத்தைப்பார்த்தபோது, 'ஆ, இதை எனக்கு ஏன் நீர் செய்தீர்?' என்று லேசாக கண்டிப்பதைப்போல இளவரசருக்குத் தோன்றியது. அதே மாதிரியான தோற்றத்தை இந்த தேவதைக்கும் அந்தச் சிற்பி கொடுத்திருப்பதாக இளவரசர் நினைத்தார்.

யுத்த முனையிலிருந்து திரும்பிய பிறகு, பால்டு ஹல்ஸிலிருந்து சுமார் 25 மைல் தூரத்திலுள்ள பாகுசாரவா என்ற ஒரு பெரிய எஸ்டேட்டை, அவரிடம் வயோதிக இளவரசர் ஒப்படைத்தார். பால்டு ஹில்ஸ் மாளிகை சம்பந்தமான, மனதிற்கு வருத்தத்தைக் கொடுக்கக்கூடிய விஷயங்கள் அவர் அங்கு இருக்கிற வரையில் அடிக்கடி தோன்றிக்கொண்டிருக்குமாகையால் அதற்காகவும், தமது தந்தையின் விசித்திரமான குணங்கள் எப்போதுமே தம்மால் சகித்துக்கொண்டிருக்க முடியாததாகை யாலும், தாம் தனித்திருக்க வேண்டுமென்று விரும்பியபடியாலும், பாகுசாரவா எஸ்டேட்டில் பெரும்பாலும் இளவரசர் ஆண்ட்ரூ காலம் கழிக்க ஆரம்பித்தார். அங்கே ஒரு கட்டிடமும் அவர் கட்ட ஆரம்பித்தார்.

ஆஸ்டர்லிட்ஜ் யுத்தத்திற்குப் பின்னால், இனி யுத்த சேவைக்குப் போவதில்லையென்று இளவரசர் ஆண்ட்ரூ உறுதியாக முடிவு செய்தார். யுத்தம் மீண்டும் ஆரம்பமானபடியால், ஒவ்வொருவரும் யுத்த சேவை செய்யவேண்டியதாய் இருந்தபடியால், தாம் முன்னணிக்குப் போவதைத் தவிர்க்கும்பொருட்டு படைக்கு ஆள் சேர்க்கும் வேலையில் தமது தந்தையின் கீழாக ஒரு பதவியை ஒப்புக்கொண்டார். 1805-ம் வருஷத்துப் படையெடுப்பிற்குப் பின்னால் வயோதிக இளவரசரும், அவருடைய குமாரரும் ஒருவருக்கொருவர் தங்கள் மனப்போக்குகளை மாற்றிக் கொண்டார்கள் என்று தோன்றின. வேலையினால் உற்சாகம் கொண்ட அந்த வயோதிகர் புதிய யுத்தத்தினால் நல்ல பலன்கள் கிடைக்குமென்று எதிர்பார்த்தார். ஆனால் இளவரசர் ஆண்ட்ரூ யுத்தத்தில் நேராகச் சம்பந்தம் கொள்ளாமல், அந்த யுத்தத்தைப்பற்றி அந்தரங்கத்தில் மிகுந்த வருத்தம் கொண்டு, அதனாலேற்படும் கெடுதிகளைப் பற்றியே நினைத்துக்கொண்டிருந்தார்.

1807-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 26-ம் தேதியன்று தாம் அடிக்கடி செய்துவந்த மாதிரி ஒரு சுற்றுப்பிரயாணத்திற்கு வயோதிக இளவரசர் புறப்பட்டார். தமது தந்தை வெளியே போயிருந்த காலத்தில், இளவரசர் ஆண்ட்ரூ பால்டு ஹில்ஸில் தங்கியிருந்தார். அந்த குஞ்சு நிக்கலஸுக்கு நான் நாட்களாக உடம்பு அசௌக்யமாய் இருந்தது. பட்டணத்திற்கு வயோதிக இளவரசரைக் கொண்டு போய் விடுவதற்காகப் போயிருந்த வண்டிக்காரன், திரும்பிவந்து இளவரசர்

ஆண்ட்ரூவிடம் சில கடிதங்களையும், தஸ்தாவேஜுகளையும் கொடுத்தான்.

இளவரசரை அவருடைய படிப்பு அறையில் காணாதபடியால், கடிதங்களை எடுத்துக்கொண்டு அந்த சேவகன் இளவரசி மேரியின் அறைக்கு போனான். அங்கேயும் அவரைக் காணவில்லை. குழந்தையின் இல்லத்திற்கு இளவரசர் போயிருப்பதாக் சொல்லப்பட்டது.

'சில தஸ்தாவேஜுகளை பெட்ருஷா கொண்டுவந்திருக்கிறான், மேன்மை தங்கியவரே' என்று குழந்தையோடிருந்த ஒரு தாதி, அங்கே ஒரு குழந்தையின் நாற்காலியில் உட்கார்ந்திருந்த இளவரசர் ஆண்ட்ரூவிடம் சொன்னாள். அவர் முகம் சுழித்துக்கொண்டு நடுங்கிய கைகளோடு, பாதிக் கோப்பை நிறைந்த தண்ணீரில் ஒரு புட்டியிலிருந்து சொட்டுசொட்டாக மருந்தை விட்டுக் கொண்டிருந்தார். 'அது என்னது?' என்று அவர் கோபத்தோடு கேட்டார். அவருடைய கை தம்மை அறியாமலேயே நடுங்கியது. ஆகவே மருந்தில் அதிகமாய் சில சொட்டுகளை விட்டுவிட்டார். அதைப் பார்த்த இளவரசர் ஆண்ட்ரூ, அந்த மருந்தைக் கொட்டிவிட்டு வேறு தண்ணீர் கொண்டுவரும்படி கேட்டார். தாதி கொண்டு வந்தாள்.

அந்த அறையில் ஒரு குழந்தையின் கட்டில், இரண்டு பெட்டிகள், இரண்டு சாய்வு நாற்காலிகள், ஒரு மேஜை, ஒரு குழந்தையின் மேஜை, இளவரசர் ஆண்ட்ரூ உட்கார்ந்திருந்த ஒரு சிறிய நாற்காலி இவ்வளவும் இருந்தன. படுதாக்கள் தொங்கிக் கொண்டிருந்தன. மேஜைமீது மெழுகுவத்தி எரிந்துகொண்டிருந்தது. அந்த வெளிச்சம் கட்டிலில் விழாதபடி ஒரு சங்கீதப் புத்தகத்தால் அதை மறைத்து வைத்திருந்தார்.

'என் அன்பே, சிறிது நேரம் பொறுத்திருப்பது நல்லது... பின்னால் பார்க்கலாம்...' என்று இளவரசி மேரி கட்டிலுக்குப் பக்கத்தில் தன்னுடன் நின்றுகொண்டிருந்த தனது சகோதரரைப் பார்த்துச் சொன்னார்.

'ஓ, நீ அதை விட்டுவிடு. நீ எப்பொழுதும் இந்தமாதிரி அசட்டுத்தனமாகப் பேசி, ஒத்திவைத்துக்கொண்டு போவதே வழக்கம். அதன் பலன் இதுதான்' என்று ஒரு வெறுப்போடு கூடிய தணிந்த குரலில், தமது சகோதரியைப் பார்த்து அவளைப் புண்படுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடு ஆண்ட்ரூ கூறினார்.

'என் கண்ணே, உண்மையாக... அவனை எழுப்பாமலிருப்பது நல்லது. அவன் தூங்கிக்கொண்டிருக்கிறான்' என்று கெஞ்சும் குரலில் இளவரசி சொன்னாள்.

இளவரசர் ஆண்ட்ரூ எழுந்தார். முன் பாதங்களில் நடந்து, தமது கையில் கோப்பையைப் பற்றிக்கொண்டு, அந்தச் சிறிய படுக்கையின் பக்கத்தில் போனார். 'அவனை எழுப்பாமலிருப்பது உண்மையிலேயே நல்லதுதான்' என்று அவர் தயக்கத்தோடு பேசினார்.

'உமது இஷ்டப்படி... உண்மையாகவே. நான் அப்படித்தான் நினைக்கிறேன்... ஆனால், உம் விருப்பம் எப்படியோ, அப்படியே செய்யும்' என்று இளவரசி மேரி, தன்னுடைய அபிப்பிராயத்தை ஒப்புக்கொண்டதற்காக, மனம் குழம்பிப் பேசினாள். ஒரு தாதி மெதுவான குரலில் இளவரசர் ஆண்ட்ரூவைக் கூப்பிட்டுக் கொண்டிருப்பதை அவள் சுட்டிக்காட்டினாள்.

அன்று இரண்டாவது நாள். இரவில் அவர்கள் இருவரும் தூங்காமல் குழந்தையைக் கவனித்து வந்தார்கள். குழந்தைக்குக் கடுமையாக ஜுரமிருந்தது. தங்களுடைய குடும்ப டாக்டரிடம் அவநம்பிக்கைகொண்டு, பட்டணத்திலிருந்து மற்றொருவரை அழைத்துவர ஏற்பாடு செய்திருந்தார்கள். முதலில் ஒரு மருந்து கொடுப்பதும், பின்னால் இன்னொரு மருந்து கொடுப்பதுமாய் இருந்தார்கள். தூக்கமில்லாமலும் பீதியோடும் அவர்களிருந்த படியால், தங்களுடைய துக்கங்களை ஒருவர் மீது மற்றொருவர் காட்டிக் கொண்டும், ஒருவருக்கொருவர் விவாதம் செய்து கொண்டும், கண்டித்துக்கொண்டுமிருந்தார்கள்.

'உம்முடைய தந்தையிடமிருந்து தஸ்தாவேஜுகளை பெட்ருஷா கொண்டுவந்திருக்கிறான்' என்றாள் வேலைக்காரி. இளவரசர் ஆண்ட்ரூ வெளியே போனார்.

'அவர்களைப் பிசாசு பிடிப்பதாக' என்று அவர் முனங்கினார். தமது தந்தை சொல்லியனுப்பியிருந்த விவரங்களை முதலில் கேட்டுவிட்டு, பின்னால் அவருக்கு வந்த கடிதங்களையும், தந்தையின் கடிதத்தையும் எடுத்துக்கொண்டு, குழந்தை இல்லத்திற்குத் திரும்பினார்.

'நல்லது, எப்படியிருக்கிறது?' என்று அவர் கேட்டார்.

'இன்னும் அதேமாதிரிதான். கடவுளுக்காக நீர் காத்திருப்பீராக. வேறு எதையும்விட தூக்கம்தான் ரொம்ப முக்கியமானது என்று கார்ல் ஐவானிச் எப்பொழுதுமே சொல்லுவதுண்டு' என்று இளவரசி மேரி ஒரு பெருமூச்சோடு, மெதுவான குரலில் சொன்னாள்.

இளவரசர் ஆண்டரூ குழந்தையிடம் சென்று, அதைத் தொட்டுப் பார்த்தார். அதன் உடம்பு மிகுந்த சூடாயிருந்தது.

'நீயும் உன்னுடைய கார்ல் ஐவானிச்சும் ஒழிவீர்களாக' என்று அவர் சொல்லிவிட்டு, அவர் மருந்து விட்டு வைத்திருந்த கோப்பையோடு, கட்டிலுக்குச் சென்றார்.

'ஆண்ட்ரூ கொடுக்க வேண்டாம்' என்று இளவரசி மேரி கூறினாள்.

ஆனால், அவர் அவளைப் பார்த்துக் கோபமாக உறுமினார். கண்களில் வேதனை தோன்றியது. கையில் கோப்பையுடன் குழந்தையிடம் குனிந்தார்.

'ஆனால், நான் கொடுக்க விரும்புகிறேன். நீ அதை குழந்தைக்குக் கொடு. உன்னை நான் கெஞ்சுகிறேன்' என்று அவர் சொன்னார்.

இளவரசி மேரி தமது தோள்களைக் குலுக்கினாள். ஆனால், பணிவோடு அவர் கையிலிருந்த கோப்பையை வாங்கி, அந்தத் தாதியை அழைத்து மருந்தைக் கொடுக்க ஆரம்பித்தாள். குழந்தை பலமாகக் கிரீச்சிட ஆரம்பித்தது. இளவரசர் ஆண்ட்ரூ பயத்தால் தயங்கினார். தமது தலையைப் பற்றிக்கொண்டு அடுத்த அறைக்குச் சென்று ஒரு சோபாவில் உட்கார்ந்தார்.

அவர் இன்னமும் எல்லாக் கடிதங்களையும் தமது கையிலேயே வைத்திருந்தார். ஒவ்வொன்றாகக் கடிதத்தைத் திறந்து, இயந்திரம் போல வாசிக்க ஆரம்பித்தார். வயோதிக இளவரசர் தமது பெரிய கையெழுத்துக்களால் இடைஇடையே வார்த்தைகளை சுருக்கம் சுருக்கமாக நீலக் காகிதத்தில் பின்வருமாறு எழுதியிருந்தார்:-

'இப்பொழுதுதான் ஒரு விசேஷ தூதர் மூலமாக ஒரு மகிழ்ச்சியான செய்தி கிடைத்தது. அது பொய்யாய் இல்லாமல் இருந்தால், ஐலாவ் என்ற இடத்தில், போனபார்ட்டை பூர்ணமாக பெனிக்ஸென் வெற்றிகொண்டதாகத் தெரிகிறது. பீட்டர்ஸ்பர்க்கில் இதைக் கேட்டு ஒவ்வொருவரும் மகிழ்ச்சியடைகிறார்கள். இதற்காக ராணுவத்திற்கு அனுப்பியுள்ள வெகுமதிகள் கணக்கில் அடங்காதவை அவர் ஒரு ஜெர்மானியராய் இருந்த போதிலும் நான் அவரைப் பாராட்டுகிறேன். கோர்செவா என்ற இடத்திலுள்ள கமாண்டர் என்ன செய்யப்போகிறார் என்பது தெரியவில்லை. அவர் பெயர் கான்டிரீகோவ். இதுவரை மேலும் வரவேண்டிய வீரர்களோ அல்லது உணவுப் பொருள்களோ இன்னும் வந்துசேரவில்லை. அவரிடம் உடனே குதிரை மீது நீ பாய்ச்சலில் போய், ஒரு வாரத்திற்குள் அவையெல்லாம் இங்கு வந்து சேராவிட்டால், அவருடைய தலையை நீக்கிவிடுவேன் என்று சொல். பெட்டங்கா என்பவர் அந்த யுத்தத்தில் கலந்து கொண்டவர். அவர் பிரஷிஷ்-ஐலாவ் யுத்தத்தைப்பற்றி எழுதிய கடிதம் ஒன்று எனக்குக் கிடைத்தது. அவையெல்லாம் உண்மை விஷமம் செய்கிறவர்கள்

தலையிட்டு குழப்பாமல் இருந்த, ஒரு ஜெர்மன்கூட போனபார்ட்டை தோற்கடிக்க முடிந்தது. கோர்செவா என்ற இடத்திற்கு தாமதமின்றி உடனே நீ போய், நான் சொல்லியவை களை நிறைவேற்றி வைப்பாயாக.'

இளவரசர் ஆண்ட்ரூ பெருமூச்சு விட்டு மற்றொரு கடிதத்தை உடைத்துப் பார்த்தார். அந்தக் கடிதம் நெருக்கமாக இரண்டு தாள்களில் பிலைபினால் எழுதப்பட்டிருந்தது. அவர் அந்தக் கடிதத்தை வாசிக்காமல் மடித்துவைத்து, மீண்டும் தமது தந்தையின் கடிதத்தை வாசித்தார். 'கோர்செவா என்ற இடத்திற்கு நீ பாய்ச்சலில் போய், நான் சொல்லியவைகளை நிறைவேற்றி வைப்பாயாக' என்ற கடைசி வார்த்தைகளை மீண்டும் படித்தார்.

'இல்லை, என்னை மன்னிக்க வேண்டும். குழந்தை சௌக்கியமாகிற வரையில் , நான் போகமாட்டேன்' என்று அவர் நினைத்து, வாசல் பக்கம் போய் குழந்தை இல்லத்தைப் பார்த்தார். கட்டிலுக்குப் பக்கத்தில் இளவரசி மேரி இன்னமும் நின்றுகொண்டு மெதுவாக குழந்தையை ஆட்டிக்கொண்டிருந்தாள்.

'ஆமாம், மனதிற்கு அதிருப்தியாக வேறு என்ன சொல்லியிருக்கிறார்?' என்று இளவரசர் நினைத்து, தமது தந்தையின் கடிதத்தை ஞாபகத்திற்குக் கொண்டுவந்தார்.

'ஆம், நான் யுத்த சேவையில் இல்லாத சமயத்தில், போனபார்ட்மீது நாம் வெற்றி பெற்றிருக்கிறோம். ஆமாம், ஆமாம்; அவர் எப்போதும் என்னை கேலி செய்து வருகிறார்.. ரொம்ப சரி, அவர் இஷ்டப்படி செய்யட்டும்.' இம்மாதிரி சொல்லிவிட்டு, பிலைபின் பிரஞ்சு மொழியில் எழுதியிருந்த கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தார். அதில் உள்ளதில் பாதிகூட புரியாதபடி அவர் வாசித்துக்கொண்டிருந்தார். வேறு எதையும்விட மிகுந்த அதிகமான வேதனையோடு நீண்ட நேரமாக அவர் நினைத்துக்கொண்டிருப் பதை, ஒரு வினாடியாவது மறப்பதற்காகவே அந்தக் கடிதத்தை வாசித்துக்கொண்டிருந்தார்.

## 5

## 9

தற்சமயம் ராணுவத் தலைமைக் காரியாலயத்தில், ராஜதந்திரசேவையில் இருக்கிறவர் என்ற முறையில் பிலைபின் இருந்து வந்தார். அவர் பிரஞ்சு மொழியில் எழுதினாலும், பிரஞ்சு மொழி பிரயோகங் களை உபயோகித்தாலும், பிரஞ்சு தமாஷ்களைச் சொன்னாலும், கொஞ்சம் கூட பயமில்லாமல் உண்மையான ருஷ்ய உணர்ச்சியோடு, அந்த

யுத்தத்தைப்பற்றி எழுதியிருந்தார். ராஜதந்திர சேவையில் இருப்பவர்களுக்கு எற்பட்டுள்ள விதிகள், தம்மைத் துன்புறுத்தி வருவதாக பிலைபின் கூறியிருந்தார். இந்த ராணுவத்தில் செய்யப்படுகிற காரியங்களையெல்லாம்பற்றி, தாம் தமது மனதில் சேர்ந்த கசப்புகளையெல்லாம் கொட்டுவதற்கு, ஒரு நம்பிக்கையான நண்பராக இளவரசர் ஆண்ட்ரூ கிடைத்திருப்பதனால், அவர் மகிழ்ச்சிகொண்டிருப்பதாக அதில் சொல்லியிருந்தார்.

'நமது மகாப் பிரகாசமான ஆஸ்டர்லிட்ஜ் வெற்றி தினத்திலிருந்து,எனது அன்புள்ள இளவரசரே, நான் தலைமைக் காரியாலயத்தைவிட்டு நீங்கவில்லை. இது உமக்குத் தெரியும். யுத்தத்தின் மீது நிச்சயமாக நான் பிரியத்தை வளர்த்துக் கொண்டிருக்கிறேன். அது எனக்கு நல்லதுதான். ஆனால் சென்ற மூன்று மாதங்களில் நான் கண்ட காட்சிகள் நம்ப முடியாதவைகளாய் இருக்கின்றன.

'நான் முதலிலிருந்து ஆரம்பிக்கிறேன். ''மனித சமூகத்தின் எதிரி'' பிரஷ்யாவைத் தாக்கினார். பிரஷ்யர்கள் நமக்கு நம்பிக்கையுள்ள நேச நாட்டினர். அவர்கள் சென்ற மூன்று வருஷங்களில், மூன்றே தடவைகள்தான் நமக்கு துரோகம் செய்திருக்கிறார்கள். அவர்கள் கட்சியை நாம் ஆதரித்தோம். ஆனால், அந்த 'மனித சமூகத்தின் எதிரி' நம்முடைய இனிமையான பேச்சுகளைக் கொஞ்சமும் கவனிக்காமல், அவருடைய முரட்டுத்தனமான மிருகத்தனமான வழியில் அந்த பிரஷ்யர்களைத் தாக்கினார். அவர்கள் நடத்திக்கொண்டிருந்த ராணுவ அணிவகுப்புக் காட்சியைக்கூட முடிவுபெறும்படி விடவில்லை. திடீரென்று பிரஷ்யாவின் கையைப்பற்றி இரண்டு தடவைகள் முறுக்கி அவர்களைத் துண்டு துண்டாக முறித்தெறிந்து, பாட்ஸ்டாம் அரண்மனையில் அமர்ந்துகொண்டார்.

போனபார்ட்டுக்கு பிரஷ்ய மன்னர் எழுதிய கடிதமாவது:- ''என்னுடைய அரண்மனையில் உமக்குப் பிடித்தமான முறையில், உம்மை நடத்திவைக்க வேண்டுமென்பது எனது தீவிரமான ஆசை, அதைச் செய்து முடிப்பதற்காக, சந்தர்ப்பங்கள் இடங்கொடுக்கிற அளவில் நான் எல்லா நடவடிக்கைளையும் எடுத்துக்கொண்டேன். அதில் நான் வெற்றி பெறுவேனாக''. பிரஞ்சுக்காரர்களிடம் மிகுந்த மரியாதையுடன் தாங்கள் நடந்துகொண்டதாக, பிரஷ்ய ஜெனரல்கள் தங்களை பெருமை பாராட்டிக்கொண்டு, ஒரு தடவை கேட்டவுடனேயே தங்களுடைய ஆயுதங்களை கீழே வைத்துவிட்டார்கள்.

கிளாகாவ் என்ற இடத்தில் பத்தாயிரம் வீரர்களுடன் இருந்த படைவீட்டின் தலைவர் தம்மைச் சரணடையும்படி கேட்டால், என்ன செய்யவேண்டுமென்று பிரஷ்ய மன்னரைக் கேட்டு, ஒரு கடிதம் எழுதியிருந்தார்... இதெல்லாம் உண்மைதான்.

போர்க்கோல மனோபாத்தை மேற்கொள்ளுவதால், இந்த விஷயங்களைத் தீர்த்துவிடலாமென்றும் நினைத்திருந்தோம். ஆனால், நாம் யுத்தத்தில் வந்து மாட்டிக்கொண்டோம். அதுவுமில்லாமல், அந்தயுத்தம் நமது எல்லைக்கே வந்துவிட்டது. அது பிரஷ்ய மன்னருடன் சேர்ந்து பிரஷ்ய மன்னருக்காக நடக்கும் யுத்தமாகும். ஒவ்வொரு காரியத்தையும் நாம் நன்றாகச் செய்து முடித்திருக்கிறோம். ஆனால், ஒரே சிறு விஷயத்தில்தான் நமக்கு குறை. அதுதான் பிரதம சேனாதிபதி. சேனாதிபதி அவ்வளவு தூரம் வாலிபராய் இல்லாமலிருந்தால், ஆஸ்ர்லிட்ஜில் நமக்கு கிடைத்த வெற்றி இன்னும் அதிக பலமானதாய் இருந்திருக்கும் என்று நினைத்தபடியால், சேனாதிபதி வேலைக்கு வயதானவர்களைத் தேட ஆரம்பித்தார்கள. பிராஜாரோவ்ஸ்கி என்பவரைப் பற்றியும், காமென்ஸ்கி என்பவரைப் பற்றியும் யோசித்தபோது, காமென்ஸ்கியே இருக்கட்டுமென்று தீர்மானித்தார்கள். சுவோராவ் மாதிரி அவர் நம்மிடம் வந்தார். அவரை மகிழ்ச்சியும் வெற்றியும் கலந்து வரவேற்றோம்.

'4-ந் தேதியன்று பீட்டர்ஸ்பர்க்கலிருந்து முதலாவது தபால்தூதன் வந்து சேர்ந்தான். தபால்களையெல்லாம் எடுத்துக்கொண்டு, பீல்ட் மார்ஷல் அறைக்குள் கொண்டுபோனான். ஏனென்றால், ஒவ்வொன்றையும் தாமே செய்யவேண்டுமென்று அவர் விரும்பினார். அந்தக் கடிதங்களைப் பிரித்து நமக்கான கடிதங்களை எடுத்துக்கொள்வதற்கு உதவி செய்வதற்காக என்னை அழைத்தார்கள். தமக்கு ஏதாவது கடிதம் வந்திருக்கிறதா என்பதை அறிவதற்காக, பீல்ட்மார்ஷல் ஆவலோடு பார்த்துக்கொண்டு இருந்தார். நாங்கள் கடிதங்களைப் பிரித்தோம். ஆனால், அவருக்கு ஒரு கடிதம்கூட இல்லை. இதைக் கண்டு பீல்ட் மார்ஷல் மிகுந்த அதிருப்தியடைந்தார். தாமே இந்தக் கடிதங்களின் விலாசங்களை ஒவ்வொன்றாக நோக்கினார். அச்சமயம் சக்கரவர்த்தியிடமிருந்து கோமகன் 'டி' என்பவருக்கு இளவரசர் 'வி' என்பவருக்கும், மற்றவர்களுக்கும் கடிதங்கள் வந்திருப்பதைப் பார்த்தார். உடனே அவர் தமது காட்டுத்தனமான கோபத்தில் மூழ்கினார். ஒவ்வொருவர் மீதும், ஒவ்வொன்றின் மீதும் கோபம் கொண்டிருந்தார். கடிதங்களை அப்படியே கைப்பற்றி, அவைகளைத் திறந்தார். மற்றவர்களுக்கு சக்கரவர்த்தி எழுதிய கடிதங்களைத் திறந்து வாசித்தார். 'ஓ, என்னை

அவர்கள் இப்படித்தான் நடத்துகிறார்களா? என்மீது அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. என்னை ஒரு கண் பார்த்துக்கொள்ளும்படி எழுதியிருக்கிறார். 'அப்படியானால், ரொம்ப சரி, நீங்கள் எப்படியும் போங்கள்' என்று சொல்லிவிட்டு, பின்கண்ட பிரசித்தி பெற்ற தினசரி உத்தரவை ஜெனரல் பெனிக்ஸென்னுக்கு எழுதினார்:

''நான் காயமடைந்திருக்கிறேன். அதனால் நான் சவாரி செய்ய முடியாது. ஆகவே ராணுவத்தை நடத்தவும் முடியாது. நீங்கள் புல்டுஸ்க் என்ற இடத்திற்கு உங்கள், முற்றிலும் முறியடிக்கப்பட்ட ராணுவத்தைக் கொண்டு வந்தீர்கள். அது இங்கே நிராதரவாய் இருக்கிறது. ராணுவத்திற்கு வேண்டிய குளிர் விறகுகளோ, குதிரைத் தீனிகளோ இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். இதற்கு ஏதாவது செய்தாக வேண்டும். கோமகன் பக்ஸ்ஹெளடன் என்பவரிடம் நேற்று நீர் அறிக்கையிட்டபடி, நமது எல்லைப்புறத்திற்கு பின்வாங்குவதைப் பற்றி நீர் யோசிக்க வேண்டும். இன்றே நீர் அதைச் செய்யும்.''

சக்கரவர்த்திக்கு அவர் பின்வருமாறு எழுதினார்:- ''நான் சாவரி செய்துகொண்டே இருந்ததனால், என்னால் இனி குதிரையில் ஏற முடியாதபடி ஆசனத்தில் புண்கள் ஏற்பட்டிருக்கிறபடியால், இவ்வளவு பிரம்மாண்டமான ராணுவத்தை நிர்வகிக்க முடியாதவனாக இருக்கிறேன். ஆகவே, எனக்கு அடுத்தபடியாக வுள்ள கோமகன் பக்ஸ்ஹெளடனிடம் எனது பொறுப்பை ஒப்படைத்திருக்கிறேன். எனது பரிவரம் முழுவதையும் பரிவாரத்தைச் சேர்ந்த மற்றவைகளையும் அவருக்கு அனுப்பி விட்டேன். ராணுவத்திற்கு உணவுப் பஞ்சமிருப்பதாகத் தோன்றினால் பிரஷ்யாவிற்குள் இன்னும் அதிகமாக நுழையும்படி சொல்லியிருக்கிறேன். ஏனெனில், ஒரு வேளைக்கு வேண்டிய ரொட்டிதான் இருக்கிறது. சில பட்டாளங்களில் அதுவும் கிடையாது என்று டிவிஷன் கமாண்டர்களான ஆஸ்டர்மேனும் செட்மாரெட்ஜ்கியும் சொல்லுகிறார்கள். விவசாயிகளிடம் இருந்தவைகளையெல்லாம் வாங்கி சாப்பிட்டாய் விட்டது. ஆஸ்டரேலெங்கா என்ற இடத்தில் உள்ள ஆஸ்பத்திரியில், நான் குணமாகும் வரையில் தங்கியிருப்பேன். நமது ராணுவம் கூடாரங்கள் இல்லாமல் இப்போது இருப்பதுபோலவே, இன்னும் இரண்டு வாரங்கள் இருக்குமானால், அடுத்த இலையுதிர் காலத்திற்குள்ளாக அந்த ராணுவத்தில் சரீர செளக்யமுள்ளவர்கள் ஒருவர்கூட இருக்கமாட்டார்கள் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எனக்குக் கொடுக்கப்பட்ட பெரிய

மகத்தான வேலையை, என்னால் செய்ய முடியாமல் என் கௌரவம் குறைந்து போயிருக்கும். இந்த வயதான மனிதன் தனது கிராமத்திற்கு திரும்பி ஓய்வு பெற்றுக்கொள்ளும்படி அனுமதி கொடுங்கள். உங்களுடைய அந்த மகத்தான கருணையுள்ள அனுமதியை எதிர்பார்த்துக்கொண்டு நான் ஆஸ்பத்திரியிலிருப்பேன். ராணுவத்தில் கமாண்டராயிருக்கும் வேலையைத் தவிர, வேறு எவ்விதமான காரியதரிசியாவுமிருப்பதற்கு எனக்குப் பிரிய மில்லை. இந்த ராணுவத்திலிருந்து நான் விலகிக் கொள்ளுவதால், சிறிது கூட எந்தவிதமான சலனமும் ஏற்படாது. ஒரு குருடன் அதைவிட்டு விலகிக்கொள்கிறான். அவ்வளவுதான். என்னைப் போல் ருஷ்யாவில் ஆயிரக்கணக் கான பேர் இருக்கிறார்கள்.''

சக்கரவர்த்தியிடம் அந்த பீல்ட் மார்ஷலுக்குக் கோபமேற்பட்டது. அதனால் நம் எல்லோரையும் அவர் தண்டிகிறார். அது நியாம்தானே?

இதுதான் முதலாவது நடவடிக்கை. இவற்றிற்குப் பின்னால் நடந்தவைகள் எல்லாம் இயற்கையாகவே மிகுந்த சுவாரஸ்ய மாகவும் வேடிக்கையாகவும் இருக்கின்றன. அந்த பீல்ட் மார்ஷல் அதை விட்டுப் போன பின்பு எதிரி நமது பார்வைக்குத் தோன்றினான். ஆகவே நாம் யுத்தம் ஆரம்பிக்க வேண்டியதாயிற்று. பதவியில் மூத்தவர் என்பதனால் பக்ஸ்ஹௌடன் சேனாதிபதி யானார். ஆனால், ஜெனரல் பெனிக்ஸென்னுக்கு இது புரிய வில்லை. அவரும் அவருடைய படைகளுமே எதிரிக்குப் பக்கத்திலிருந்தபடியால் ஒரு யுத்தத்தில் கலந்துகொள்ளக்கூடிய சந்தர்ப்பத்தினால் கிடைக்கக்கூடிய அனுகூலங்களை அனுபவிக்க விரும்பினார். ஆகவே அவர் அம்மாதிரி செய்தார். இந்த சண்டைதான் புல்டுஸ்க் என்ற இடத்தில் ஏற்பட்டது. இதைத்தான் பெரிய வெற்றியாகக் கருதுகிறார்கள். ஆனால், என்னுடைய அபிப்பிராயத்தில் அம்மாதிரி எதுவுமில்லை. ஒரு யுத்தம் வெற்றி பெற்றதா, அல்லது தோல்வியுற்றதா என்பதைத் தீர்மானிப்பதில், சிவிலியன்களாகிய நாங்கள் ஒரு விசித்திரமான வழியைப் பின்பற்றுகிறோமென்பது உமக்குத் தெரியும். ஒரு போராட்டம் நடந்து முடிந்த பின்பு, எந்தக் கட்சி பின்வாங்கப்போகிறதோ, அதுதான் அந்தப் போராட்டத்தில் தோல்வியுற்றதென்று நாங்கள் சொல்லுகிறோம். அந்த விதிப்படி பார்த்தால், புல்டுஸ்க் என்ற இடத்தில் நடந்த போராட்டத்தில், நாம்தான் தோல்வியுற்றோம். சுருக்கமாகச் சொன்னால், அந்தப் போராட்டத்திற்குப் பின்னால் நாம் பின்வாங்கிவிட்டோம். ஆனால், வெற்றி பெற்றுவிட்டதாக ஒரு செய்தியை தூதரிடம் கொடுத்து, பீட்டர்ஸ்பர்க்கிற்கு அனுப்

பினோம். இந்தச் செய்தியைப் பார்த்ததும் தமக்கு சேனாதிபதி பதவி இந்த வெற்றிக்காகக் கிடைக்குமென்று ஜெனரல் பெனிக்ஸென் நம்பினார். ஆகவே, தமது பதவியை ஜெனரல் பக்ஸ்ஹெளடனிடம் கொடுக்கவில்லை. இந்த இடைக்காலத்தில் மிகுந்த சுவாரஸ்யமான சில சூழ்ச்சிகள் ஆரம்பமாயின. எதிரியை எப்படித் தாக்குவது, அல்லது எதிரியின் தாக்குதலிலிருந்து எப்படி விலகுவது என்பது நமது நோக்கமாக முன்னால் இருந்தது. இப்போது அந்த நோக்கமில்லை. அதற்குப் பதிலாக ஜெனரல் பக்ஸ்ஹெளடனை பதவியில் மூத்தவர் என்ற காரணத்தினால், சேனாதிபதியாக வருபவரை எப்படித் தடுப்பது என்பது நமது நோக்கமாக மாறிற்று. இந்தக் கொள்கையை மிகுந்த உற்சாகத்தோடு நடத்திவந்தபடியால், ஒவ்வொரு கடக்கமுடியாத நதியை நாம் கடந்த பின்பு, எதிரிக்கும் நமக்கும் மத்தியிலுள்ள பாலங்களை நாம் கொளுத்திவிட்டோம். அதனால் எதிரி ஆற்றைக் கடக்க முடியாமல் போயிற்று. ஆனால், இச்சமயம் எதிரி என்பது போனபார்ட் அல்ல. ஜெனரல் பக்ஸ்ஹெளடனே எதிரியாகும். இம்மாதிரி செய்வதனால், ஜெனரல் பக்ஸ்ஹெளடனை எதிரி ராணுவம் தாக்கிக் கைப்பற்ற முடியும். பக்ஸ்ஹெளடன் நம்மை பின் தொடர்ந்தார். ஆனால் நாம் பாலத்தைக் கொளுத்திவிட்டோம். அவர் பாலத்தைக் கடந்து நமது பக்கம் வருவதற்குள்ளாக நாம் மீண்டும் அதைக் கடந்தோம். கடைசியாக பக்ஸ்ஹெளடன் நம்மை நெருங்கிப் பிடித்துக்கொண்டார். இரண்டு ஜெனரல்களும் கோபமாய் சந்தித்தார்கள். பக்ஸ்ஹெளடன் பெனிக்ஸென்னை சண்டைக்கு அழைத்தார். பெனிக்ஸென்னுக்கு காக்கைவலிப்பபு ஏற்பட்டது. இம்மாதிரியான ஒரு நெருக்கடியான சமயத்தில், புல்டுஸ்க் வெற்றியைப்பற்றி பீட்டர்ஸ்பர்க்குக்கு செய்தியைக் கொண்டுபோன தூதன் திரும்பி வந்தான். அவன் சேனாதிபதியின் நியமனத்தைப் பற்றிய உத்தரவைக் கொண்டுவந்தான். பக்ஸ்ஹெளடனை இப்போது நாம் தோற்கடித்தாய்விட்டது. ஆகவே, இரண்டாவது எதிரியான போனபார்ட் மீது நமது கவனத்தைத் திருப்பலாம். ஆனால், அந்தச் சமயத்தில் மூன்றாவது எதிரி ஒருவன் நமது முன்னால் தோன்றினான். அவர்கள்தான் நமது புராதன ருஷ்ய சிப்பாய்களாகும். அவர்கள் ரொட்டி, மாமிசம், பிஸ்கோத்து, வைக்கோல் ஆகியவைகள் வேண்டுமென்று பலமாகக்கூச்சல் போட ஆரம்பித்தார்கள். பண்டகசாலைகள் காலியாகிக் கிடந்தன. ரஸ்தாக்களோ கடக்கமுடியாதவைகளாய் இருந்தன. ஆகவே இந்த புராதனப் படைகள் கொள்ளையடிக்க ஆரம்பித்தார்கள். அதைப்பற்றி உம்மால் யூகிக்கவே முடியாது. பட்டாளத்தில் பாதிப்பேருக்கு மேலாக, கூட்டம் கூட்டமாகச்

சேர்ந்து கிராமங்களுக்குச் சென்று, தங்களுக்கு எதிர்படும் ஒவ்வொன்றையும் நெருப்பினாலும், வாளினாலும் துவம்சம் செய்தார்கள். குடிஜனங்கள் முற்றிலும் நாசமானார்கள். ஆஸ்பத்திரிகள் முழுவதிலும் அசௌக்யமானவர்கள் நிறைந்திருந்தார்கள். எங்கு பார்த்தாலும் பஞ்சமாயிருந்தது. இரண்டு தடவைகள் கொள்ளைக்காரர்கள் ராணுவத்தின் தலைமைக் காரியாலயத்தைக்கூடத் தாக்க ஆரம்பித்தார்கள். அவர்களைக் கலைத்து விரட்டுவதற்கு சேனாதிபதி ஒரு பட்டாளத்தை அழைக்க வேண்டியதாயிற்று. இம்மாதிரி ஒரு தாக்குதலின்போது, என்னுடைய வெறும் பெட்டியையும் கௌனையும் அவர்கள் அடித்துக்கொண்டு போய்விட்டார்கள். இந்தக் கொள்ளைக் காரர்களைக் கண்ணால் பார்த்தவுடன் சுட்டுத் தள்ளும்படி டிவிஷன் கமாண்டர்களுக்கு உரிமை கொடுப்பதற்காக, சக்கரவர்த்தி யோசித்து வருகிறார். இந்த ஏற்பாட்டினால் பட்டாளத்தில் பாதிப் பேர் மீதமுள்ள பாதிப் பேர்களை சுட்டுத்தள்ள வேண்டியதாய் நேரலாம். எனக்குப் பயமாய் இருக்கிறது.'

முதலில் இளவரசர் ஆண்ட்ரூ தமது கண்களால் மட்டும் படித்துக்கொண்டிருந்தார். சிறிது படித்த பின்பு (பிலைபின் எழுதுவதை எவ்வளவு தூரம் நம்ப முடியுமென்பதை அவர் அறிவார்),தம்மையும் மீறி அந்தக் கடிதத்தை வாசிப்பதில் அவருக்கு வரவர சிரத்தை அதிகமாயிற்று. இவ்வளவு தூரம் அவர் படித்த பின்பு அதைக் கசக்கித் தூர எறிந்தார். அவர் என்ன படித்தாரோ, அதனால் அவர் எரிச்சல் கொள்ளவில்லை. அந்த ராணுவத்தில் அவருக்கு தற்சமயம் சம்பந்தம் எதுவுமில்லாமல் இருந்தாலும், அங்கு தற்சமயம் இருக்கிற நிலைமையைக் கேட்டு அவருக்கு சஞ்சலம் ஏற்பட்டதைக் கண்டே அவர் எரிச்சல் கொண்டார். தமது கண்களை மூடினார். தாம் இதுவரை படித்ததில் எவ்வித சிரத்தையும் கொள்ளாமல் அகற்றிவிட நினைப்பதுபோலத் தமது நெற்றியைத் தேய்த்துக்கொண்டிருந்தார். அச்சமயத்தில் குழந்தை இல்லத்தில் நடப்பதையும் கவனித்துக்கொண்டிருந்தார். திடீரென்று ஒரு அதிசயமான குரல் அந்த வாசல் வழியாக அவருக்கு கேட்டதாக நினைத்தார். அவருக்கு பீதி ஏற்பட்டது. இந்தக் கடிதத்தைப் படித்துக்கொண்டிருக்கும்போது, குழந்தைக்கு ஏதாவது ஏற்பட்டு விட்டதோ என்று பயந்தார். அதனால் முன் பாதங்களால் நடந்து , குழந்தை இல்லத்திற்குப் போய்க் கதவைத் திறந்தார்.

அவர் உள்ளே நுழைந்தபோது, அந்தத் தாதி அவரிடமிருந்து எதையோ மறைத்தாள். அவளுடைய பார்வை பீதியுள்ளதாய் இருந்தது. அந்தக் கட்டிலுக்குப் பக்கத்தில் இளவரசி மேரியைக் காணவில்லை.

'எனது அன்பே' என்று அவளுடைய அதைரியமான குரல் அவருக்குப் பின்னால் மெதுவாய்ப் பேசுவதைப் போலக் கேட்டது.

வெகுநேரம் தூங்கியெழுந்ததற்குப் பின்னாலும், மிகுந்த கவலைக்குப் பின்னாலும், ஒரு காரணமில்லாத பீதி தோன்றுவது வழக்கம். அதைப்போல அவருக்கு ஏற்பட்டு, குழந்தை இறந்து போய்விட்டது என்று நினைக்கும்படி தோன்றியது. அவர் அங்கே பார்த்தவையும் கேட்டவையும்,இந்தப் பயங்கரத்தை உறுதி செய்பவைகளாகத் தோன்றின.

'எல்லாம் முடிந்துவிட்டது' என்று அவர் நினைத்தார். அவருடைய நெற்றியில் திடீரென்று குளிர்ச்சியான வியர்வை கண்டது. அவர் மனக்குழப்பத்தோடு கட்டிலுக்குப் போனார். அந்தக் கட்டில் காலியாயிருக்குமென்று அவர் நினைத்தார். அந்தத் தாதி செத்த குழந்தையை மறைப்பதாக அவர் நினைத்தார். அவர் அந்தக் கட்டிலில் படுதாவை அகற்றி அவருடைய பீதியுற்ற, அமைதியற்ற கண்களால் நோக்கியபோது, அங்கே குழந்தையைக் காணவில்லை. கடைசியாக அவர் அவனைப் பார்த்தார். அந்த சிவந்த பையன் படுக்கையில் உருண்டு குறுக்காகப் படுத்திருந்தான். தலையணையைவிட்டு அவன் தலை தணிவாக இருந்தது. அவன் உதடுகளை தூக்கத்தில் நக்கிக்கொண்டு நிதானமாக மூச்சு விட்டுக்கொண்டிருந்தான்.

அவனை முன்பே இழந்துவிட்டதைப்போல், அவனை அம்மாதிரி நிலைமையில் பார்த்தவுடன் இளவரசர் ஆண்ட்ரூ அவ்வளவு சந்தோஷமடைந்தார். அவன் மீது குனிந்து, தம்முடைய சகோதரி சொல்லிக்கொடுத்தபடி, குழந்தையை தமது உதடுகளால் தொட்டுவிட்டு, இன்னும் ஜுரம் இருக்கிறதா என்று பார்த்தார். மிருதுவான அவன் நெற்றி ஈரமாய் இருந்தது. அவன் தலையை தமது கையால் தொட்டார். அவன் தலைமுடிகூட நனைந்திருந்தது. அந்தக் குழந்தை அவ்வளவு அதிகமாக வியர்வையை விட்டிருந்தான். அவன் சாகவில்லை. அச்சமயம் ஏற்பட்ட கண்டத்திலிருந்து அவன் தப்பிவிட்டான். இப்போது குணமடைந்து வருகிறான். அந்தச் சிறிய ஜந்துவை அப்படியே எடுத்து, தம்முடைய இருதயத்தில் அணைத்து அழுத்த வேண்டுமென்று அவர் வெகுநேரமாக விரும்பியிருந்தார். ஆனால், அவர் அப்படிச் செய்யத் துணியவில்லை. அவன் பக்கத்தில் நின்று அவன் தலையைப் பார்த்தார். அதன் சிறிய கைகளும் கால்களும் கம்பளத்திற்குக் கீழாகத் தெரிந்ததைப் பார்த்தார். தமக்குப் பின்னால் ஒரு சலசலப்பு சப்தமும், கட்டிலில் படுதாவின் கீழ் ஒரு நிழலும் அவருக்குத் தோன்றியது. அவர் திரும்பிப் பார்க்கவில்லை. இன்னமும் குழந்தையின் முகத்தையே

பார்த்துக்கொண்டு அது நிதானமாய் மூச்ச விடுவதைகேட்டுக் கொண்டிருந்தார். இளவரசி மேரியின் நிழல்தான் அந்த நிழல். சப்தமில்லாத நடையில் அவள் கட்டிலுக்கு வந்து படுதாவைத் தூக்கி, அந்தப் படுதாவை தனக்குப் பின்பாகத் தொங்கவிட்டாள். அவளைப் பார்க்காமலேயே, அவள்தான் என்பதை இளவரசர் ஆண்ட்ரூ அறிந்து தமது கையை நீட்டினார். அவள் அந்தக் கையை அழுத்தினாள்.

'அவன் வியர்த்திருக்கிறான்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

'அதை உமக்கு சொல்லவதற்காகத்தான் நான் வந்து கொண்டிருந்தேன்.'

தமது தூக்கத்தில் குழந்தை கொஞ்சம் அசைந்து புன்முறுவல் காட்டியது. தன் நெற்றியை தலையணையில் தேய்த்தான்.

இளவரசர் ஆண்ட்ரூ தமது சகோதரியைப் பார்த்தார். அந்த மங்கலான படுதாவின் நிழலில் அவளுடைய பிரகாசமான கண்கள் வழக்கத்திற்கு அதிகமாகப் பிரகாசித்தன. அவளுடைய கண்களில் மகிழ்ச்சிக் கண்ணீர் ததும்பிக்கொண்டிருந்தது. தன் சகோதரர்மீது சாய்ந்து அவரை முத்தமிட்டாள். அந்தக் கட்டிலின் படுதாவை லேசாகப் பிடித்துக்கொண்டாள். சப்தம் போடக்கூடாது என்பதை ஒருவருக்கொருவர் சமிக்ஞையால் எச்சரிக்கை செய்து கொண்டிருந்தார்கள். இன்னமும் அந்த படுதாவுக்கு உள்ளாக உள்ள மங்கலான வெளிச்சத்திலேயே அவர்கள் அசையாமல் நின்றார்கள்.. உலகத்திலுள்ள எல்லாவற்றையும் விட்டுப் பிரிந்து அந்த மூவரும் தனிமையாக இருந்தார்கள். அந்தத் தனிமையிலிருந்து அவர்கள் இருவரும் போக விரும்பாததுபோலத் தோன்றினார்கள். முதலில் அதை விட்டுப் புறப்பட்டவர் இளவரசர் ஆண்ட்ரூ. கட்டில் படுதாவின் மஸ்லின் துணியில் தமது தலைமுடி உரச அந்த இடத்தை விட்டு வெளியே வந்தார்.

'இப்போது எனக்கு இது ஒன்றுதான் விடப்பட்டிருக்கிறது' என்று பெருமூச்சோடு சொன்னார்.




பிரீமேஸன் சங்கத்தில் தாம் சேர்ந்த பின்பு, பீயர் கீவ் மாகாணத்திற்கு போனார். அவரிடம் வேலை பார்க்கிற அடிமைகள் அங்கேதான் அதிகமாயிருந்தார்கள். தம்முடைய எஸ்டேட்டுகளில்தாம் என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றி, தம்முடைய ஞாபகத்திற்கு அவர் விவரமாக எழுதி வைத்துக்கொண்டிருந்தார்.

அவர் கீவ் என்ற இடத்திற்குப் போய்ச் சேர்ந்ததும், தமது காரியஸ்தர்களையெல்லாம் தம்முடைய தலைமைக் காரியாலயத்திற்கு வரவழைத்து, தம்முடைய ஆசைகளையும் நோக்கங்களையும் விளக்கிக் கூறினார். தமது அடிமைகள் விடுதலை அடைய உடனே நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று அவர் , அவர்களிடம் சொன்னார். அவர்கள் விடுதலை ஆகிறவரையில் அடிமைகளுக்கு அதிகமான வேலை கொடுக்கக் கூடாது என்றும், கைக் குழந்தையுள்ள பெண்களை வேலைக்கு அனுப்பக்கூடாது என்றும், அடிமைகளுக்கு உதவிகள் செய்யவேண்டுமென்றும், அவர்களுக்கு கொடுக்கிற தண்டனை களை வெறும் வாய்க் கண்டிப்பாக இருக்கவேண்டுமேயொழிய சரீர தண்டனையாக இருக்கக் கூடாது என்றும் சொன்னார். தம்முடைய எல்லா எஸ்டேட்டுகளிலும் அபிவிருத்திகளும், தங்குமிடங்களும், பள்ளிக்கூடங்களும் ஏற்பாடு செய்யவேண்டுமென்று அவர் சொன்னார். அந்த காரியஸ்தர்களில் அரைகுறை படிப்புள்ளவர்கள் பீயர் சொல்வதை பீதியோடு கேட்டார்கள். தங்களுடைய வேலையில் அதிருப்தியிருந்தோ, அல்லது தங்களுடைய நிர்வாகத்தைக் கண்டு திருப்திகொள்ளாமலோ,அல்லது தாங்கள் பணத்தைச் சுரண்டிவிட்டதாக எண்ணியோ கோமகன் இம்மாதிரி பேசுவதாக அவர்கள் முதலில் நினைத்தார்கள். ஆனால் முதலில் ஏற்பட்ட பீதி கொஞ்சம் தெளிந்ததும், பீயரின் மதலைச் சொற்கள் சிலருக்குக் களிப்பைக் கொடுத்தன, அவர்பேசிய புதிய வார்த்தைகளை அவர்கள் இதற்கு முன்பு கேட்டிராதபடியால், இதைக் கண்டு உள்ளம் களித்தார்கள். வேறு சில காரியஸ்தர்கள் தங்கள் எஜமான் எப்படிப் பேசுகிறாரென்பதைக் கேட்டு அனுபவித்துக் கொண்டிருந்தார்கள் அந்தக் காரியஸ்தர்களில் புத்திசாலிகளாக உள்ளவர்கள், பிரதம காரியஸ்தர் உள்பட, தங்களுடைய சுய நன்மைக்குத் தகுந்தபடி தங்கள் எஜமானரை எப்படி உபயோகித்துக் கொள்ளலாமென்பதை அவர் பேசியதைக் கேட்ட பின்பு அறிந்துகொண்டார்கள்.

பீயரின் நோக்கங்களுக்கு அந்த பிரதான காரியஸ்தர் மிகுந்த அனுதாபம் காட்டினார். ஆனால் இந்த மாறுதல்களோடு எஸ்டேட்டுகளின் பொதுவான நிலைமையைப் பற்றிய விஷயங்களையும் கவனிக்க வேண்டியதவசியமென்றும், அந்த விஷயங்கள் திருப்திகரமாக இல்லையென்றும் சொன்னார்.

கோமகன் பெஜுகாவுக்கு ஏராளமான சொத்து இருந்தபோதிலும், தமது தகப்பனார் வருஷம் 10,000 ரூபிள்கள் கொடுத்து வந்த காலத்தைவிட, இப்போது தாம் அதிக ஏழையாயிருப்பதாக நினைத்தார். கோமகன் பெஜுகாவின் எஸ்டேட்டுகளிலிருந்து

வருஷம் 5 லட்சம் ரூபிள்கள் வரும் வந்துகொண்டிருந்தது. வருஷம் என்ன செலவாகும் என்பது அவருக்கு ஏதோ நிச்சயமாயில்லாத விதத்தில் அடியிற்கண்டபடி தோன்றிக் கொண்டிருந்தது. எல்லா எஸ்டேட்டுகளுக்குமாக நில பாங்கிற்கு வருஷம் 80,000 ரூபிள்கள் கட்டப்பட்டு வந்தன. மாஸ்கோவுக்கும் பக்கத்திலுள்ள எஸ்டேட்டையும், நகரத்திலுள்ள வீட்டையும் பராமரித்து வருவதற்காகவும், மூன்று இளவரசிகளுக்கு உதவித் தொகைகள் கொடுப்பதற்காகவும், வருஷம் 30,000 ரூபிள்கள் செலவாய்க் கொண்டுவந்தன. பென்ஷன்களுக்காக வருஷம் 15,000 ரூபிள்கள்; கோமகளின் ஜீவனாம்சத்திற்காக வருஷம்1.5 லட்சம் ரூபிள்கள் ; வாங்கிய கடன்களுக்காக வட்டியாக வரும் 70,000 ரூபிள்கள் முன்னாலேயே கட்டுவதற்கு ஆரம்பமான புதிய மாதா கோவில் கட்டிடத்திற்காகக் கடந்த இரண்டு வருஷங்களாக வருஷம் ஒன்றுக்கு 10,000 ரூபிள்கள், இவ்விதம் செலவாகி வந்தன. மீதமுள்ள ஒரு லட்சம் ரூபிள்கள் எந்தவிதமாக செலவழிகின்றன என்பது அவருக்குத் தெரியாது. ஒவ்வொரு வருஷமும் கடன் வாங்கிக் கொண்டேயிருந்தார். இதைத் தவிர, ஒவ்வொரு வருஷத்திலும் நெருப்பினால் சேதமென்றும், விளைச்சல் இல்லையென்றும், தொழிற்சாலைகளும் வேலைக் கூடங்களையும் புதிதாய்க் கட்டவேண்டுமென்றும் பிரதம நிர்வாகி வருஷாவருஷம் எழுதிக் கொண்டேயிருப்பார். ஆகவே முதலாவதாகப் பீயருக்கு ஒரு முக்கியமான வேலை முன்னாலிருந்தது. அதுதான் காரியார்த்தமான வேலை. ஆனால் அதைப்பற்றி அவருக்கு அதிகமாக எதுவும் தெரியாது.

தம்முடைய பிரதம நிர்வாகியிடம் எஸ்டேட்டுகளின் நிலைமையைப் பற்றி தினம் அவர் விவாதித்துக் கொண்டேயிருப்பார். ஆனால் இப்படிப் பேசிக்கொண்டே இருப்பதனால், நிலைமை எவ்விதத்திலும் அபிவிருத்தியடையவில்லையென்பதை அவர் உணர்ந்தார். இந்தப் பேச்சுகளுக்கும், உண்மையான நடவடிக்கைகளுக்கும் சம்பந்தம் எதுவுமில்லையென்றும் அவர் உணர்ந்தார். ஒரு பக்கமாக அந்தப் பிரதம காரியஸ்தர் எஸ்டேட்டுகளின் நிலைமையைப் பற்றி, அதிக மோசமாகக் கூறி வந்தார். கடன்களை அடைக்க வேண்டிய அவசியத்தைப் பற்றியும், அடிமை உழைப்பைக் கொண்டு புதிய நடவடிக்கைகள் செய்ய வேண்டியதைப் பற்றியும் அவர் சொல்லிக் கொண்டே வந்தார். ஆனால் இவற்றை பீயர் ஒப்புக் கொள்ளவில்லை. மற்றொரு பக்கமாக அந்த அடிமைகளை விடுதலை செய்வதற்கு நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று பீயர் சொல்லிக் கொண்டிருந்தார். நில பாங்கிற்கு முதலில் கடன்களைக் கொடுத்து

தீர்த்தாலொழிய அடிமைகளுக்கு உடனே விடுதலை கிடைப்பது சாத்யமில்லையென்று பிரதம காரியஸ்தர் சொல்லிவந்தார்.

முற்றிலும் சாத்யமில்லையென்று அந்தக் காரியஸ்தர் சொல்லவில்லை. ஆனால் காஸ்ட்ராமா என்ற மாகாகணத்திலுள்ள காடுகளையும், மற்றொரு நிலத்தையும், கிரிமியன் எஸ்டேட்டையும் விற்று, பீயர் சொல்கிறபடி செய்யலாமென்று யோசனை கூறினார். இவற்றையெல்லாம் செய்வதென்றால் தடையுத்தரவுகளை ரத்து செய்தல், மனுக்கள் கொடுத்தல், பெர்மிட்டுகள் கொடுத்தல் போன்ற சிக்கலான பல நடவடிக்கைகளை மேற்கொள்ள இருக்க வேண்டுமென்று அவர் சொன்னார். இவற்றையெல்லாம் கேட்டு பீயர் முற்றிலும் குழப்பமானார். ஆகவே அவர் ‘ஆமாம், அப்படியே செய்யும்’ என்று சொன்னார்.

காரியங்களைத் தாமே பார்த்துக் கொள்ளக்கூடிய அனுபவ உறுதி பீயருக்கு இல்லை. அதனால் அதை அவர் விரும்பவில்லை. ஆகவே தாம் அதைக் கவனிப்பதாகக் காரியஸ்தரிடம் சொல்லி மழுப்ப முயற்சி செய்தார். அதேமாதிரி அந்த காரியஸ்தரும் நடிப்புக் காட்டினார். இந்த யோசனைகள் எல்லாம் எஜமானனுக்கு மிகுந்த சிலாக்கியமாய் இருக்கும் என்றும், தமக்குக் கஷ்டமாய் இருக்குமென்றும் அவர் நடித்தார்.

கீவ் மாகாணத்தில் தமக்குப் பழக்கமான சிலரைப் பீயர் சந்தித்தார். அவருக்குப் பழக்கமில்லாத அந்நியர்கள் அவருடன் அறிமுகமாக வேண்டுமென்று விரைந்தார்கள். அந்த மாகாணத்திலுள்ள மிகப் பெரிய மிராசுதாரரான பீயரை மகிழ்ச்சியோடு அவர்கள் வரவேற்றார்கள். பீயர் சங்கத்தில் சேரும்போது, தமக்கிருந்த ஒரு பெரிய பலவீனத்தை ஒப்புக்கொண்டார். அந்தப் பலவீனத்திற்கு ஏற்பட்ட கவர்ச்சிகள், இப்போது அதிகப் பலமுள்ளதாகத் தோன்றியபடியால், அவரால் அதை எதிர்க்க முடியவில்லை. மறுபடியும் நாட்களும், வாரங்களும், மாதங்களும் மிக வேகமாக அவருடைய வாழ்க்கையில் ஓடிக்கொண்டிருந்தன. பீட்டர்ஸ் பர்க்கில் இருந்ததைப்போலவே, இங்கேயும் மாலைக் கச்சேரிகளிலும், டின்னர்களிலும், சாப்பாடுகளிலும், நடனங்களிலும் அவருடைய நேரம் மிக அதிகமாய் கழிந்துகொண்டு வந்தது. தாம் எதைப் பற்றியும் சிந்திப்பதற்கு அவகாசமில்லாமல் இருந்தார். அவர் புது வாழ்க்கை வாழலாமென நம்பியிருந்தார். ஆனால் அவருடைய பழைய வாழ்க்கையே புதிய சுற்றுணர்ச்சிகளில் அவர் வாழ்ந்து கொண்டு வந்தார்.

பிரீமேஸன் சங்கத்தின் மூன்று கடமைகளில் ஒரு கடமையை தாம் நிறைவேற்றவில்லையென்பதை பீயர் உணர்ந்தார். அதாவது,

ஒழுக்கமான வாழ்க்கையில் ஒவ்வொரு அங்கத்தினரும் மற்றவர்களுக்கு வழிகாட்டும் விதத்தில் நடக்க வேண்டுமென்பதே அந்தக் கடமை. சங்கத்தின் ஏழு தர்மங்களில் தம்மிடம் இரண்டு தர்மங்கள் குறைவாயிருப்பதாகவும் அவர் உணர்ந்தார். அதாவது ஒன்று ஒழுக்கம். இன்னொன்று மரணத்தின்மீது பிரியம் கொள்வது. சங்கத்தின் மற்றொரு கடமையான மனித சமூகத்தை சீர்திருத்துவது என்ற கடமையை தாம் நிறைவேற்றியதாக நினைத்து அவர் தம் மனதை திருப்தி செய்தார். அதேமாதிரி தம்முடைய அண்டை அயலார்களை நேசிக்கவேண்டும், மிகுந்த தாராளமாய் நடந்துகொள்ளவேண்டும் என்ற மற்ற தர்மங்களை தாம் கடைபிடித்து வருவதாக நினைத்து தம் மனதைத் திருப்தி செய்துகொண்டார். 1807-ம் வருஷத்தில் இலையுதிர் காலத்தில் அவர் பீட்டர்ஸ்பர்க்குக்கு திரும்புவது என்று தீர்மானித்தார். திரும்புகிற வழியிலுள்ள அவருடைய எஸ்டேட்டுகளை யெல்லாம் பார்வையிட்டு, தம்முடைய உத்தரவுகளை எவ்வளவுதூரம் அங்கே நிறைவேற்றியிருக்கிறார்களென்பதை அறிந்துகொள்ளவும், தம்மிடம் கடவுளால் ஒப்படைக்கப்பட்டிருந்த தாம் நன்மை செய்ய விரும்பிய அந்த அடிமைகளின் நிலைமை எப்படியிருக்கிறது என்பதை அறிந்துகொள்ளவும் அவர் விரும்பினார்.

கோமகனின் முயற்சிகளை வெறும் பைத்தியக்காரத் தனமானவை என்று பிரதம காரியஸ்தர் நினைத்தார். அந்த முயற்சிகளால் கோமகனுக்கோ, தமக்கோ, அல்லது அடிமை களுக்கோ லாபம் எதுவுமில்லை என்பது அவரின் எண்ணம் என்றாலும், அடிமைகளுக்காகச் சில சௌகரியங்களைச் செய்தார். அடிமைகளை விடுதலை செய்வது என்பது காரிய சாத்தியமில்லாத விஷயமென்று அந்தப் பிரதம காரியஸ்தர் தொடர்ந்து சொல்லிக் கொண்டே இருந்தார். ஆனால் பள்ளிக்கூடங்களுக்காகவும், ஆஸ்பத்திரிகளுக்காகவும். விடுதிகளுக்காகவும் பெரிய பெரிய கட்டிடங்களை கட்டும்படி எல்லா எஸ்டேட்டுகளிலும் எஜமானரின் விஜயத்திற்கு முன்பாக நடக்க வேண்டுமென்று அவர் ஏற்பாடு செய்தார். ஒவ்வொரு இடத்திலும் அவருக்கு வரவேற்புகள் நடத்துவதற்கு தயார் செய்யப்பட்டன. ஆடம்பரமான வரவேற்புகளை பீயர் விரும்பமாட்டார் என்பதை அவர் அறிவார். ஆகையால், அம்மாதிரி அவர் தயார் செய்யவில்லை. ஆனால் நன்றியை காட்டுவதற்காக, மதபூர்வமான வரவேற்புகளை, அதாவது தெய்வ உருவச்சிலைகளையும், ரொட்டியையும் உப்பையும் எஜமானருக்குக் கொடுத்து மரியாதை செய்ய ஏற்பாடு செய்தார். அம்மாதிரி செய்தால் அவர் உள்ளம் இளகி ஏமாந்து போவார் என்பது அவரின் நினைப்பு.

வீயன்னா வண்டியில் சௌக்யமாகவும் வேகமாவும் பீயர் பிரயாணம் செய்துகொண்டு வந்தபடியாலும், தெற்கில் இலையுதிர் காலமானபடியாலும், ரஸ்தாவில் நிம்மதியான நிலைமையிருந்த படியாலும் இவையெல்லாம் சேர்த்து பீயருக்கு சந்தோஷத்தைக் கொடுத்தன. இதற்கு முன்பாகப் பார்க்காத எஸ்டேட்டுகள் எல்லாம், ஒன்றைவிட ஒன்று அழகாக இருந்தன. எல்லா இடங்களிலும் அடிமைகள் செழிப்படைந்து வருவதாகவும், அவர்களுக்குச் செய்த சௌகரியங்களுக்காக அவர்கள் உள்ளங்கனிந்த நன்றியோடு இருப்பதாகவும் காணப்பட்டார்கள். ஒவ்வொரு இடத்திலும் வரவேற்புகள் நடந்தன. அந்த வரவேற்புகளால் பீயருக்கு சங்கோஜம் ஏற்பட்ட போதிலும், அவருடைய உள்ளத்தின் ஆழத்தில் ஒரு மகிழ்ச்சியான உணர்ச்சி தோன்றியது. ஒரு இடத்தில் விவசாயிகள் ரொட்டியையும், உப்பையும், செயின்ட் பீட்டர், செயின்ட் பால் ஆகியோர்களின் உருவச் சிலைகளையும், பீயருக்குக் கொடுத்தார்கள். தங்களுக்குச் செய்த நன்மைகளுக்காக தங்களின் நன்றியைக் காட்டும் பொருட்டு மாதா கோயிலுக்குப் பக்கத்தில் தங்களுடைய சொந்த செலவிலேயே பீட்டரையும், பாலையும் கௌரவிக்கும் விதத்தில் ஒரு புதிய பூஜை மடம் கட்டுவதற்குப் பீயரிடம் அனுமதி கேட்டார்கள். பீட்டரும் பாலும்தான் பீயரின் பெயர்தின மகாத்மாக்கள். மற்றொரு இடத்தில், கையில் குழந்தைகள் வைத்திருந்த பெண்கள் அவரிடம் வந்து, தங்களுக்குக் கடுமையான வேலை கொடுக்காமல் இருப்பதற்காக, தங்கள் நன்றியைத் தெரிவித்தனர். மூன்றாவது எஸ்டேட்டில் ஒரு சிலுவையைத் தாங்கிக்கொண்டு குழந்தைகள் புடைசூழ ஒரு பாதிரி வந்தார். கோமகனின் தயாளத்தினால் ஏற்பட்ட பள்ளிக் கூடத்திலுள்ள அந்தக் குழந்தைகளுக்கு அந்தப் பாதிரி மதக் கல்வியையும் எழுதுவதற்கும் படிப்பதற்கும் கற்றுக் கொடுத்து வந்தார். எல்லா எஸ்டேட்டுகளிலும், புதிய கட்டிடங்கள் கட்டி முடிந்திருப்பதையும், அல்லது முடிகிற பருவத்திலிருப்பதையும், அந்த எல்லா கட்டிடங்களுமே ஆஸ்பத்திரிகளுக்காகவும் பள்ளிக்கூடங்களுக்காகவும், விடுதிகளுக்காகவுமே கட்டப் படுகின்றன என்பதையும் பீயர் தமது சொந்தக் கண்களால் கண்டார். கூலிகளின் தேக உழைப்பு வேலைகள் வெகுவாய்க் குறைந்து விட்டதைக் காட்டும் காரியஸ்தர்களின் கணக்கை ஒவ்வொரு எஸ்டேட்டிலும் அவர் பார்த்தார். அந்தக் கூலிகள் நீலவர்ண கோட்டுகள் அணிந்துகொண்டு, தங்களுடைய விடுதலைக்காக உள்ளம் கனிந்த நன்றியைத் தெரிவிப்பதற்கு தூது கோஷ்டிகளை பீயரிடம் அனுப்பினார்கள்.

பீயருக்குத் தெரியாத விஷயம் என்னவென்றால், எந்த இடத்தில் அவருக்கு ரொட்டியும் உப்பும் கொடுத்தார்களோ, பீட்டரையும் பாலையும் கௌரவிப்பதற்காக எந்த இடத்தில் ஒரு பூஜை மடம் கட்ட வேண்டுமென்று கேட்டார்களோ, அந்த இடம் ஒரு சந்தை இடம் என்பது அவருக்குத் தெரியாது. அங்கே செயின்ட் பீட்டரின் தினத்தில் ஒரு சந்தை நடப்பதுண்டு. அவரிடம் தூதுகோஷ்டியாக வந்த பணக்கார விவாசாயிகள், முன்பே அந்த இடத்தில் பூஜைமடம் கட்ட ஆரம்பித்துவிட்டார்கள். (பூஜை மடத்தில்தான் விவசாயிகள் கூடுவது வழக்கம். அங்கே பூஜை மடம் கட்டினால், பக்கத்து கிராமங்களிலுள்ள விவசாயிகள் அங்கே சந்தைக்கு வருவற்கு அது கவர்ச்சிகரமாய் இருக்குமென்றும் அதனால் உள்ளூர் விவசாயிகள் லாபம் அடையலாம் என்றும் அவர்கள் நினைத்தார்கள்) அந்த இடத்திலுள்ள சாதாரண விவசாயிகளில் 10-ல் 9 பேர்கள், மிக மோசமான தரித்திரத்தில் உழன்று கொண்டிருந்தனர். இவையெல்லாம் பீயருக்குத் தெரியாது. கைக் குழந்தைகள் இருக்கிறவர்களை தமது நிலத்தில் வேலைக்கு அனுப்பக்கூடாது என்ற விதி ஏற்பட்ட பின்பு இன்னும் அதிகமான கடினமான வேலைகளைச் செய்யும்படி தங்கள் நிலத்திற்கு அந்த விவசாயிகள் அனுப்புகிறார்கள் என்பது அவருக்குத் தெரியாது. சிலுவையைத் தூக்கிக் கொண்டு வந்தாரே, அந்தப் பாதிரியார், அவர் தங்களிடமிருந்து குழந்தைகளைப் பறித்துக்கொண்டு போனதற்காகக் குழந்தைகளின் பெற்றோர்கள் அழுது, புலம்பி நிறையப் பணம் கொடுத்துத் தங்கள் குழந்தைகளை விடுவிக்கவேண்டியிருக்கிறது என்பது பீயருக்குத் தெரியாது. கட்டி முடித்த செங்கல் கட்டிடங்கள் அந்த அடிமைகளால்தான் கட்டப்பட்டன என்பதும், அதனால் அவர்களுடைய வேலை இன்னும் அதிகமாயிற்று என்பதும் அவருக்குத் தெரியாது. ஆனால் அவர்கள் வேலை குறைந்திருப்பதாகக் காகிதத்தில் என்னவோ காணப்பட்டது. அடிமைகளுக்குக் கொடுக்கபட்டு வந்த சம்பளங்கள், மூன்றிலொரு பங்கு குறைந்து விட்டதாகக் காரியஸ்தர் கணக்கில் காட்டினாலும், அவர்களுடைய உடல் உழைப்பு வேலைகள் இன்னும் பாதி மடங்கு அதிகமாயிற்று என்பது அவருக்குத் தெரியாது. ஆகவே தமது எஸ்டேட்டுகளுக்கு விஜயம் செய்ததால், பீயர் மகிழ்ச்சி கொண்டார். பீட்டர்ஸ்பர்க்கை விட்டு அவர் புறப்பட்டபோதிருந்த ஜனோபகாரமான மனப்போக்கை அவர் இப்போது மீண்டும் பெற்றுவிட்டார். சங்கத்தைச் சேர்ந்த தமது கிராண்ட் மாஸ்டர் என்று அவரால் அழைக்கப்பட்ட நண்பருக்கு அவர் உற்சாகமாக பல கடிதங்கள் எழுதினார்.

'இவ்வளவு ஏராளமாக நன்மை செய்வது எவ்வளவு சுலபமாக யிருக்கிறது. இவற்றிற்கு முயற்சியே அவசியமில்லையென்பது போலத் தோன்றுகிறது. ஆனால் இவற்றைப் பற்றி நாம் மிகச் சொற்பமாகவே கவனிக்கிறோம்' என்று பீயர் நினைத்தார்.

தம்மிடம் நன்றி தெரிவித்ததற்காக அவர் சந்தோஷமடைந்தார். ஆனால் அந்த நன்றியைப் பெறுவதற்கு அவர் வெட்கமடைந்தார். அந்த சாதாரணமான அன்பான மக்கள் காட்டிய நன்றியானது, இன்னும் அவர்களுக்கு எவ்வளவு அதிகமாக அவர் நன்மை செய்ய முடியும் என்பதை ஞாபகமூட்டியது.

பிரதம காரியஸ்தர் ஒரு வடிகட்டிய முட்டாள், என்றாலும் தந்திரமானவர். இந்தக் குழந்தை சுபாவமுள்ள, புத்திசாலித்தனமான கோமகனின் உள்ளக் கருத்தை அவர் பூரணமாக அறிந்துகொண்டார். ஆகவே ஒரு பொம்மையோடு விளையாடுவதைப்போல அவரிடம் அவர் நடந்துகொண்டார். முன்பாகவே தயார் செய்து வைக்கப்பட்ட வரவேற்புகளினால், பீயரிடம் ஏற்பட்ட உணர்ச்சியைப் பார்த்து, தம்முடைய பேச்சுகளை வற்புறுத்த ஆரம்பித்தார். அதாவது அடிமைகளை விடுவிப்பது உபயோகமற்ற வேலையென்றும், அப்படிச் செய்வது நடக்க முடியாத காரியமென்றும், அந்த அடிமைகள் இப்போதுள்ள நிலைமையிலேயே சந்தோஷமாக இருக்கிறார்கள் என்றும் அவர் காட்ட விரும்பினார்.

அந்த மக்களைத்தவிர அவ்வளவு அதிகமான சந்தோஷம் கொண்ட மக்களை வேறு பார்ப்பது கஷ்டமென்று பீயர் அந்தரங்கமாய் தமது மனதிற்குள்ளாக தமது காரியஸ்தர் நினைப்பதைப் போல நினைத்தார். அந்த அடிமைகளை விடுதலை செய்துவிட்டால், அவர்களுக்கு என்ன கதி நேருமென்பதை கடவுளே அறிவார் என்று அவர் நினைத்தபோதிலும்,தாம் சொல்லியதை நிறைவேற்றவேண்டுமென்று தயக்கத்தோடு வற்புறுத்திக் கொண்டிருந்தார். கோமகனின் விருப்பங்களை நிறைவேற்றுவதற்கு தம்மால் கூடியதையெல்லாம் செய்வதாக அந்தக் காரியஸ்தர் வாக்குறுதி கொடுத்தார். நிலங்களையும் காடுகளையும் விற்பனை செய்வது என்ற வேலைகளையோ, நிலங்களை நில பாங்கியிலிருந்து விடுதலை பெற வேண்டிய வேலைகளோ பூராவாக கோமகன் கண்டுபிடிக்க முடியாது என்று காரியஸ்தர் நினைத்தபடியால், இவற்றைப் பற்றி அவர் ஒருபோதும் விசாரிக்கப்போவது இல்லையென்று நினைத்தபடியால், புதிதாகக் கட்டிய கட்டிடங்கள் காலியாகக் கிடக்கின்றன என்பதை அவர் அறிய முடியாது என்று நினைத்தபடியால், மற்ற அடிமைகளைப் போலவே தங்களுடைய அடிமைகளும் உழைப்பினாலேற்படும்

பலன்களை இன்னமும் கொடுத்துக் கொண்டிருக்கிறார்களென்பதை அவர் அறிய முடியாது என்று நினைத்தபடியால், அந்தக் காரியஸ்தர் வெறும் வாக்குறுதியைக் கொடுத்தார்.

5

11

மிகுந்த சந்தோஷமான மனதோடு தென் ருஷ்யா வழியாக தமது பிரயாணத்திலிருந்து பீயர் திரும்பினார். தமது நண்பர் பால்கோன்ஸ்கியை அவர் பார்த்து இரண்டு வருஷங்களாயின. அவரை சந்திக்கவேண்டு மென்று நீண்ட காலமாக அவர் விரும்பி வந்தபடியால், அந்த ஆசையை தாம் திரும்பி வரும்பொழுது நிறைவேற்றினார்.

பாகுசாராவா என்ற எஸ்டேட், கவர்ச்சியே இல்லாத ஒரு சமதளமான பூமியில், வயல்களுக்கும் காடுகளுக்கும் மத்தியில் இருந்தது. மரங்களில் பலவற்றை வெட்டியிருந்தார்கள். புதிதாக தோண்டப்பட்ட ஒரு குட்டத்துக்கு பின்பாக, அங்கு உள்ள வீடு இருந்தது. அந்த குட்டத்தின் விளிம்பு வரையில் தண்ணீர் நிரம்பியிருந்தது. அதன் கரைகள் புல் இல்லாமல் இருந்தன. ஒரு கிராமத்தின் கடைசியில் அது இருந்தது. அந்த கிராமம் ஒருகாட்டுக்கு மத்தியில் ரஸ்தாவின் ஓரமாக நீண்டிருந்தது.

அந்த எஸ்டேட்டில் ஒரு களம், வெளி வீடுகள், குதிரை லாயங்கள், ஒரு ஸ்நான வீடு, ஒரு சிறு மாளிகை, ஒரு பெரிய செங்கல் வீடு இவ்வளவும் இருந்தன. அந்த வீட்டின் முகப்பு அர்த்தசந்திர ரூபமாக இன்னும் பூர்த்தியாகாமல் இருந்தது. அந்த வீட்டைச் சுற்றி புதிதாக தோட்டம் போட்டிருந்தார்கள். அங்கிருந்த வேலிகளும் வாசல்கதவுகளும், புதிதாகவும் பலமாவும் இருந்தன. பச்சை வர்ணம் அடிக்கப்பட்ட ஒரு தண்ணீர் வண்டியும், இரண்டு நெருப்பு பம்புகளும், ஒரு கொட்டகையில் நின்றன. பாதைகள் எல்லாம் நேராகவும், பாலங்கள் எல்லாம் பலமாகவும், பக்கவாட்டில் கைப்பிடிகள் போடப்பட்டும் இருந்தன. சுத்தமாகவும் திறமையாகவும் நிர்வாகம் செய்யப்படுவதுபோல, அங்கிருந்த ஒவ்வொன்றும் காட்டின. பீயர் சந்தித்த சில வீட்டு வேலைக்கார அடிமைகளிடம் 'இளவரசர் எங்கே இருக்கிறார்?' என்று கேட்டார். புதிதாக கட்டப்பட்ட ஒரு சிறிய மாளிகையை, அந்த குட்டத்திற்கு பக்கத்திலிருந்த கட்டிடத்தை, அவர்கள் சுட்டிக்காட்டினார்கள். இளவரசர் ஆண்ட்ரூ குழந்தையாக இருந்த காலத்தில் அவரை மேல்பார்த்து வந்த ஆன்டன் என்பவர் பீயரை

சந்தித்து, வண்டியிலிருந்து அவர் இறங்குவதற்கும் அவர் உதவி செய்தார். இளவரசரை பார்க்கலாமென்று அவர் கூறிவிட்டு, ஒரு சுத்தமான முன் அறைக்கு அவரை அழைத்துச் சென்றார்.

அந்தச் சிறிய, ஆனால் சுத்தமான வீட்டின் அடக்கமான தோற்றம், பீயரின் உள்ளத்தைக் கவர்ந்தது. பீட்டர்ஸ்பர்க்கில் அவருடைய நண்பரை இதற்கு முன்பாக பிரமாதமான சூழ்நிலைகளில் அவர் சந்தித்திருக்கிறார்.

அவர் அவசரமாக அந்த சிறிய வரவேற்பு அறையில் நுழைந்தார். மரத்திலான அதன் சுவர்கள், தேவதாரு மரத்தின் மணத்தை வீசிக்கொண்டிருந்தன. அவர் இன்னமும் உள்ளே போயிருப்பார். ஆனால், அதற்குள்ளாக ஆன்டன் அவருக்கு முன்பாக ஓடி கதவைத் தட்டினார்.

'நல்லது, அது என்ன அது!' என்று ஒரு கனிவற்ற கண்டிப்பான குரல் கேட்டது.

'ஒருவர் வந்திருக்கிறார்' என்று ஆன்டன் பதிலளித்தார்.

'அவரைக் காத்திருக்கும்படி சொல்லு' என்று சொன்னார். ஒரு நாற்காலியை பின்னால் தள்ளும் சப்தம் கேட்டது.

வேகமாய் நடந்து அந்த வாசலுக்கு பீயர் போனார். வெளியே வந்துகொண்டிருந்த இளவரசர் ஆண்ட்ரூவை பீயர் திடீரென்று நேருக்கு நேராக சந்தித்தார். இளவரசர் ஆண்ட்ரூவின் முகம் சுளித்திருந்தது. அவர் வயதானவராகக் காணப்பட்டார். பீயர் அவரை ஆலிங்கனம் செய்து, அவருடைய கண்ணாடியை எடுத்துவிட்டு, தமது நண்பரை கன்னத்தில் முத்தமிட்டு, கவனமாய் அவரைப் பார்த்தார். 'நல்லது, நான் உம்மை எதிர்பார்க்கவில்லை. நான் மிகுந்த சந்தோஷமடைகிறேன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

பீயர் ஒன்றும் சொல்லவில்லை. நிலைத்த நோக்கோடு, ஆச்சரியத்தோடு நண்பரைப் பார்த்தார். அவரிடம் ஏற்பட்டுள்ள மாறுதல்களைக் கண்டு, அவர் உள்ளம் அதிர்ந்தார். அவருடைய வார்த்தைகள் அன்பானவையாக இருந்தன. அவருடைய உதடுகளிலும், முகத்திலும் புன்சிரிப்பு காணப்பட்டது. ஆனால், அவருடைய கண்கள் மந்தமாகவும் உயிரற்றவையாகவும் இருந்தன. அவற்றிற்கு மகிழ்ச்சியான, சந்தோஷமான, பிரகாசமுள்ள தோற்றத்தைக் கொடுக்க வேண்டுமென்று அவர் விரும்பியபோதிலும், அவரால் கொடுக்க முடியவில்லை. இளவரசர் ஆண்ட்ரூ மெலிந்து, முகம் வெளிறி, அதிகமான ஆண் தோற்றத்தோடு காணப்பட்டார். ஆனால், அவர் உற்சாகம் எதுவும் இல்லாமலும், எப்பொழுதும் தீவிரமாக ஏதோ ஒன்றைப் பற்றி

ஒருமனப்பட்டு யோசனை செய்தபடியால், அவருடைய நெற்றியில் ஏற்பட்ட சுருக்கத்தோடு காணப்பட்டது, பீயருக்கு மிகுந்த ஆச்சரியமாக இருந்தது.

வெகு காலம் பிரிந்திருந்து சந்திப்பவர்கள் பேச ஆரம்பிக்கும்போது, குறிப்பிட்ட எதையும் பற்றி நிலைத்து நின்று பேசமாட்டார்கள். அதேமாதிரி அவர்கள் பேசினார்கள். நீளமாக பேசவேண்டிய விஷயங்களைப் பற்றி சுருக்கமாக கேள்விகள் கேட்டு சுருக்கமாக பதில்களும் சொல்லிக்கொண்டு வந்தார்கள். கடைசியாக, ஆரம்பத்தில் லேசாக பேசிவிடப்பட்ட சில விஷயங்கள்மீது, மீண்டும் உரையாடல் திரும்பியது. அதாவது, அவர்களுடைய கடந்தகால வாழ்க்கை, எதிர்காலத்திற்கான திட்டங்கள், பீயரின் பிரயாணங்கள் அவர் செய்து வரும் வேலைகள், அப்பொழுது நடந்துவந்த யுத்தம், முதலியவைகளைப்பற்றி பேச ஆரம்பித்தார்கள். தமது நண்பரின் முகத்தில் காணப்பட்ட சிந்தனையும் சோர்வையும் பீயர் கவனித்தார். அவை இப்பொழுது பீயரிம் அவர் புன்சிரிப்பு கொள்ளும்பொழுது எல்லாம் மிகுந்த தெளிவாக காணப்பட்டன. முக்கியமாக, கடந்த காலத்தைப் பற்றியும், எதிர்காலத்தையும், பீயர் பரபரப்போடு பேசியபொழுது அதை கவனித்துக்கொண்டிருந்த ஆண்ட்ரூவிடம் அத்தகைய புன்சிரிப்பு காணப்பட்டது. பீயர் சொல்லுபவைகளுக்கெல்லாம் தமது அனுதாபத்தை காட்ட வேண்டுமென்று இளவரசர் ஆண்ட்ரூ விரும்புவதைப்போலவும், ஆனால் அப்படிச் செய்ய முடியாமல் இருப்பதைப்போலவும் அது தோன்றியது. தம்முடைய உற்சாகங்களையும், கனவுகளையும் சந்தோஷத்தின் அல்லது நல்ல காரியங்களின் நம்பிக்கைகளையும் பற்றி இளவரசர் ஆண்ட்ரூவின் முன்பாக பேசுவது பொருத்தமாயில்லை என்று பீயர் உணர ஆரம்பித்தார். அவருடைய புதிய பிரீமேஸன் கொள்கைகள், அவருடைய சுற்றுப் பிரயாணத்திற்கு பின்பாக முக்கியமாக உயிர் பெற்று இன்னும் அதிகமாக பலமடைந்திருந்தன. அவற்றைப்பற்றி அவர் பேசுவதற்கு வெட்கமடைந்தார். இப்பொழுது தாம் முற்றிலும் மாறியிருப்பதையும், பீட்டர்ஸ்பர்க்கில் இருந்ததைவிட அவர் இப்பொழுது மிகுந்த சிறப்பாய் இருப்பதையும் காட்டவேண்டுமென்று, பீயர் அடக்க முடியாத ஆவலினால் தூண்டப்பட்டார். என்றாலும், அதை சொல்லுவது அசட்டுத் தனமாய் இருக்குமென்று நினைத்து, அதை வெளியிடாமல் தம்மை அடக்கிக்கொண்டார்.

'அக்காலத்திலிருந்து நான் எவ்வளவு அனுபவம் அடைந்திருக்கிறேன் என்பதை என்னால் உமக்கு சொல்ல முடியாது' என்றார் பீயர்.

'ஆம், அப்பொழுதிலிருந்து நாம் மிக மிக அதிகமாய் மாறியிருக்கிறோம்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

'நல்லது, உம்மைப் பற்றி என்ன? உமது திட்டங்கள் என்ன?'

'திட்டங்களா? என்னுடைய திட்டங்களா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ அந்த வார்த்தையைக் கேட்டு ஆச்சரியப்பட்டவர்போல கேலியாக பதில்சொன்னார். 'நல்லது நீரே பாரும். நான் இப்பொழுது வீடு கட்டிக்கொண்டிருக்கிறேன். அடுத்த வருஷத்திலிருந்து நான் இங்கேயே தங்கி விடலாமென்று நினைக்கிறேன்.'

பீயர் மௌனமாகவும், ஊடுருவிப் பார்ப்பதுபோலவும், இளவரசர் ஆண்ட்ரூவின் முகத்தை நோக்கினார். அவருடைய முகம் மிகவும் வயதானதாக இருந்தது.

'இல்லை, நான் கேட்க விரும்பியது என்னவென்றால்...' என்று பீயர் ஆரம்பித்தார். ஆனால், இளவரசர் ஆண்ட்ரூ இடைமறித்தார்.

'ஆனால், என்னைப் பற்றி ஏன் பேசவேண்டும்?... என்னிடம் நீர் பேசும். ஆம், உம்முடைய பிரயாணங்களைப் பற்றியும், உம்முடைய எஸ்டேட்டுகளில் நீர் செய்துகொண்டிருக்கும் எல்லா காரியங்களைப் பற்றியும், என்னிடம் நீர் சொல்லும்.'

தமது எஸ்டேட்டுகளில் தாம் செய்த காரியங்களைப் பற்றி பீயர் விவரிக்க ஆரம்பித்தார். அங்கே ஏற்பட்டுள்ள அபிவிருத்திகளில் தாம் எடுத்துக்கொண்ட பங்கை கூடியவரை மறைக்க முயற்சித்தார். பீயர் என்ன செய்துகொண்டிருக்கிறார் என்பதை சொல்லும்படி இளவரசர் ஆண்ட்ரூ அவரை பல தடவைகளில் தூண்டினார். அவையெல்லாம் பழைய காலத்துக் கதை என்பதைப்போல, அவற்றை சிரத்தையில்லாமல் அவர் கேட்டு வந்தார். அதுமட்டுமல்ல, பீயர் தம்மிடம் சொல்லிக்கொண்டிருப்பதை கேட்பதைக் கண்டு வெட்கமடைவதுபோலக் கூட அவர் நினைத்தார். பீயர் தர்மசங்கடமான நிலைமயில் தவித்தார். தம்முடைய நண்பருடன் இருப்பதுகூட அவருக்கு மனச்சோர்வாய் இருந்தது. கடைசியாக மௌனமானார்.

'எனது அன்பான பேர்வழியே, விஷயம் என்ன என்பதை நான் உமக்குச் சொல்லுகிறேன்' என்று இளவரசர் ஆண்ட்ரூ ஆரம்பித்தார். அவர்கூட மனச்சோர்வு அடைந்திருப்பதுபோலவும், தமது நண்பருடன் இருப்பது கஷ்டமாய் இருப்பதுபோலவும் காணப்பட்டார். 'நான் இங்கே தற்காலிகமாகத்தான் இருக்கிறேன். இதைச் சுற்றிப் பார்ப்பதற்காக இப்பொழுதுதான் வந்தேன். இன்று திரும்பி எனது சகோதரி இருக்குமிடம் போகிறேன். அவளை உமக்கு

அறிமுகப் படுத்துகிறேன். ஆனால் அவளை உமக்கு முன்பே பழக்கம் உண்டு. டின்னருக்குப் பின்னால் நாம் போவோம். இப்பொழுது இந்த இடங்களை சுற்றிப் பார்க்க நீர் விரும்புகிறீரா?' என்று தமது நண்பருக்கும் தமக்கும் இடையில் பேசுவதற்கான ஒற்றுமையான கருத்துக்கள் எதுவும் இல்லாதவர்போலவும், என்றாலும் அவரை திருப்தி செய்ய முயற்சிப்பவர் போலவும் பதில் சொன்னார்.

டின்னர்சாப்பிடுகிற நேரம் வரையில், அவர்கள் வெளியே சென்று சுற்றிப் பார்த்தார்கள். அரசியல் விஷயங்களைப் பற்றியும், தங்களிருவருக்கும் பழக்கமானவர்களைப் பற்றியும் அவர்கள் பேசினார்கள். அந்நியோன்னியமாக பழக்கமில்லாதவர்கள் எப்படிப் பேசுவார்களோ, அதே மாதிரி அவர்கள்பேச்சு இருந்தது. கொஞ்சம் உற்சாகத்தோடும், சிரத்தையோடும், தம்முடைய புதிய வீட்டைப்பற்றியும் அங்கு கட்டிக்கொண்டிருக்கும் கட்டிடங் களைப் பற்றியும் இளவரசர் ஆண்ட்ரூ பேசினார். இங்கே கூட எதில்கால ஏற்பாடுகளைப்பற்றி ஒரு கட்டிட சாரத்தின்மீது நின்று அவர் பேசியபொழுது பின்வருமாறு சொன்னார்.:-

'என்றாலும் இவையெல்லாம் சுவாரஸ்யமாகவே இல்லை. நாம் டின்னருக்குப் போவோம். அதன் பின்னால் புறப்பட்டுப் போகலாம்.'

டின்னரின் போது பீயரின் திருமணத்தைப் பற்றி உரையாடல் திரும்பியது.

'அதைப் பற்றி நான் கேட்டபொழுது நான் மிகுந்த ஆச்சரியமடைந்தேன்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

திருமணத்தைப் பற்றி பேசும்பொழுதெல்லாம், பீயர் செய்வதைப் போலவே இப்பொழுதும் நாணி முகம் சிவந்தார். உடனே அவசரமாக அவர் சொல்லியதாவது:- 'அவையெல்லாம் எப்படி நடந்தன என்பதைப் பற்றி, நான் ஒரு சமயம் உமக்குச் சொல்லுகிறேன். ஆனால் இப்பொழுது அவையெல்லாம் பூராவாக எக்காலத்திற்கும் முடிந்துவிட்டன.

'எக்காலத்திற்குமா? எதுவுமே எக்காலத்திற்கும் இருக்க முடியாது' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

'ஆனால், அவையெல்லாம் எப்படி முடிந்தன என்பதை நீர் அறிவீர் அல்லவா? டுயல் சண்டையைப் பற்றி நீர் கேட்டீர் அல்லவா!'

'அப்படியானால், அதையும் கூட நீர் அனுபவிக்க வேண்டி இருந்ததா?'

'ஒரு விஷயம். அது என்னவென்றால், அந்த மனிதனை நான் கொல்லாமல் இருந்ததற்காக, கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன்' என்றார் பீயர்.

'ஏன் அப்படி? ஒரு கேடுகெட்ட நாயை கொல்வது உண்மையிலேயே மிக நல்ல காரியம்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ.

'இல்லை. ஒரு மனிதனை கொல்வது கெட்டது- தவறானது.'

'அது ஏன் தவறானது?' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார். 'எது சரியென்பதையும், எது தவறு என்பதையும் அறிந்து கொள்வதற்கு மனிதனுக்கு விதிக்கப்படவில்லை. மனிதர்கள் எப்பொழுதுமே எது சரியென்றும், எது தவறு என்றும் நினைக்கிறார் களோ, அதில் வேறு எதையும் விட அதிகமாக எப்பொழுதுமே தவறியிருக்கிறார்கள். இனியும் தவறுவார்கள்.'

'இன்னொருவருக்கு கெடுதி விளைவிக்கிற காரியம் தவறானது' என்று பீயர் சொன்னார். தாம் அங்கு வந்த பின்பு, முதல்தடவையாக இளவரசர் ஆண்ட்ரூ உணர்ச்சி கொண்டு பேச ஆரம்பித்ததினால், அவர் மகிழ்ச்சியான உணர்ச்சி கொண்டார். தற்கால நிலைமைக்கு அவர் வந்ததற்கு காரணம் என்ன என்பதை அவர் தெரிவிக்க விரும்பினார்.

'மற்றொருவருக்கு கெடுதலானது என்பதை உமக்கு யார் சொன்னது?' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

'கெட்டது! கெட்டது! நமக்கு எது கெடுதலானது என்பதை நாம் எல்லாரும் அறிவோம்' என்று பீயர் கூச்சலிட்டார்.

'ஆம், நாம் அதை அறிவோம். கெடுதலென்று என் உள்ளத்தில் தோன்றியதை நான் மற்றவர்களுக்குச் செய்யக்கூடாது' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். அவர் தமது புதிய மனப்போக்கை பீயருக்கு வெளிப்படுத்த விரும்பி, மேலும் மேலும் உற்சாகமாகப் பேசினார். அவர் பிரஞ்சு மொழியில் உரையாடல் செய்தார். 'இந்த வாழ்க்கையில் இரண்டு ரொம்ப உண்மையான தீங்குகளைத்தான் நான் அறிவேன். அதாவது வியாகூலமும், உடம்பு சௌக்கியமும் ஆகும். இவை இல்லாததுதான் ஒரே ஒரு நல்ல காரியம். இந்த இரண்டு தீங்குகளையும் தவிர்த்து நான் வாழ்க்கை நடத்துவதுதான் என்னுடைய தற்கால பூராவான தத்துவமாகும்.

'அண்டை அயலார்கள் மீது அன்பு கொள்வது, சுயநல தியாகம் செய்வது, ஆகியவைகளைப் பற்றி என்ன சொல்லுகிறீர்?' என்று பீயர் ஆரம்பித்தார். 'இல்லை, நான் நீர் சொல்வதை ஒப்புக்கொள்ள முடியாது. தீங்கு செய்யாமலும் பச்சாதாபப்படும்படி நடந்து

கொள்ளாமலும் வாழ்வது மட்டும் போதுமானவையல்ல. நான் அம்மாதிரி வாழ்ந்து, எனது வாழ்க்கையை பாழாக்கிவிட்டேன். இப்பொழுதுதான் நான் மற்றவர்களுக்காக வாழ ஆரம்பித்து, அல்லது வாழ்வதற்கு முயற்சிசெய்துகொண்டிருக்கிறேன்.' (பீயரின் தன்னடக்கம், அம்மாதிரி திருத்திச் சொல்லும்படி செய்தது) 'இப்பொழுதுதான் வாழ்க்கையில் உள்ள எல்லா சந்தோஷத்தையும் நான் அறிந்துகொண்டேன். இல்லை, நீர் சொல்வதை நான் ஒத்துக்கொள்ளமுடியாது. நீர் என்ன சொல்லுகிறீரோ அதை நீர் உண்மையில் நம்பவில்லை.'

ஒரு கேலிப் புன்னகையோடு மௌனமாக பீயரை இளவரசர் ஆண்ட்ரூ நோக்கினார்.

'நீர் எனது சகோதரி இளவரசி மேரியை பார்க்கும்பொழுது அவளுடன் மிகுந்த சுமுகமாக உம்மால் இருக்க முடியும். நீர் சொல்லுவது உமக்கு ஒருவேளை சரியாக இருக்கலாம்' என்று அவர் சொல்லிவிட்டு, சிறிது தயங்கி மேலும் சொன்னார். 'ஆனால் அவரவர்களுடைய வழிகளில் ஒவ்வொருவரும் வாழ்கையை நடத்துகிறார்கள். நீர் உமக்காக வாழ்ந்தீர். அதனால் உமது வாழ்க்கை பாழ்பட்டு விட்டதாக சொல்லுகிறீர். மற்றவர்களுக்காக நீர் வாழ ஆரம்பித்த பின்புதான், சந்தோஷத்தை கண்டுபிடித்ததாகக் கூறுகிறீர். ஆனால் என்னுடைய அனுபவம், நேர் விரோதமாக இருக்கிறது. நான் பெரும் புகழுக்காவே வாழ்ந்தேன்- கடைசியில், புகழ் என்ன? இதே மாதிரி பிறரிடம் அன்பு கொள்ளுவது, அவர்களுக்கு ஏதாவது செய்யவேண்டுமென்று விரும்புவது, அவர்கள் அதை அங்கீகரிக்க வேண்டுமென்று விரும்புவது, ஆகிய இவைதான்- ஆகவே, நான் பிறருக்காக வாழ்ந்தேன். ஆனால் என்னுடைய வாழ்க்கையை பூராவா, முற்றிலும் பாழாக்கினேன். எனக்காக நான் வாழ ஆரம்பித்த பின்புதான் நான் மனச்சாந்தி அடைந்தேன்.'

'உமக்காக நீர் வாழ்கிறீர் என்று சொல்வதற்கு என்ன அர்த்தம்?' என்று பீயர் அதிகமாய் பரபரப்பு அடைந்து கேட்டார். 'உமது மகனைப் பற்றியோ, சகோதரியைப் பற்றியோ, அல்லது உமது தந்தையைப்பற்றியோ, என்ன சொல்லப்போகிறீர்?'

'அவர்களும் என்னைப்போல, அதே மாதிரிதான். அவர்களைப் 'பிறர்' என்று சொல்ல முடியாது. 'பிறர்' என்பது அண்டை அயலார்களேயாகும். அந்த 'அண்டை அயலார்'களைப் பற்றித்தான், நீரும் இளவரசி மேரியும் பேசுகிற அந்த 'அண்டை அயலார்'கள்தான், உம்முடைய கீவ் மாகாணத்து விவசாயிகள். அவர்களுக்குத்தான் நன்மை செய்யவேண்டுமென்று நீர் விரும்புகிறீர்' என்று விளக்கினார் இளவரசர் ஆண்ட்ரூ.

கேலி செய்வது போலவும், சண்டைக்கு இழுப்பது போலவும் போன்ற தோற்றத்தோடு, பீயரை அவர் நோக்கினார். அவரை மேலும் பேசுவதற்கு இழுக்க விரும்புவதைப்போல தோன்றியது.

'நீர் கேலி செய்கிறீர்' என்று மேலும் பரபரப்படைந்து பீயர் பதிலளித்தார். 'நான் நன்மை செய்வதோ வெகு சொற்பம். அதையும் சரியாக எனக்கு செய்யத் தெரியவில்லை. அந்த நன்மையைச் செய்யவேண்டுமென்று நான் விரும்பினால், அதில் தவறோ அல்லது தீங்கோ, என்ன இருக்க முடியும்? துரதிருஷ்டம் பிடித்த மக்களான நமது அடிமைகளோ, நம்மைப் போன்றவர்களோ, கடவுளைப் பற்றியோ, உண்மையைப் பற்றியோ எதுவும் அறியாமல், மதச் சடங்குகளையும், அர்த்தமற்ற பிரார்த்தனைகளையும் செய்து, வளர்ந்து சாகிறோம். அப்பேர்ப் பட்டவர்களுக்கு எதிர்கால வாழ்க்கையைப் பற்றியும், நஷ்ட ஈடுகளைப் பற்றியும், மன சமாதானத்தைப்பற்றியும் சொல்லிக் கொடுத்து, அவற்றில் அவர்கள் சந்தோஷமான நம்பிக்கை கொள்ளும்படி செய்வதில் என்ன தீங்கு இருக்கிறது? எவ்விதமான உதவியும் இல்லாமல் மக்கள் பிணியினால் செத்துக்கொண்டிருக்கும் போது, அவர்களுக்கு செய்யக்கூடிய உதவியை சுலபமாகச் செய்ய முடியும்போது, ஒரு டாக்டரையோ, ஒரு ஆஸ்பத்திரியையோ வயதானவர்களுக்கு ஒரு விடுதியையோ கொடுத்து அவர்களை ஆதரிப்பதில் எம்மாதிரியான தீங்கோ தவறோ இருக்க முடியும்? கையில் குழந்தையுள்ள ஒரு ஸ்திரீயோ அல்லது ஒரு விவசாயியோ இரவும் பகலும் வேலை செய்யும்போது அவர்களுக்கு ஓய்வும் சௌகர்யமும் செய்து கொடுப்பது எல்லாரும் உணரக்கூடிய, யாரும் மறுக்க முடியாத ஒரு நன்மையல்லவா?' என்று பீயர் வேகமாகவும், மழலைப் பேச்சிலும் பேச ஆரம்பித்தார். 'அதை நான் செய்திருக்கிறேன். ஒருவேளை அது சிறிதாய் இருக்கலாம். என்றாலும் ஏதோ கொஞ்சம் அதற்காகச் செய்திருக்கிறேன். அது சரியான காரியம் அல்லவென்று என்னை உம்மால் இணங்கவைக்க முடியாது. அதுவும் தவிர, நீரும் அம்மாதிரி நினைக்கவில்லை என்று என்னை நம்பும்படி செய்யவும் உம்மால் முடியாது. இம்மாதிரி நன்மை செய்வதில் எற்படும் மகிழ்ச்சிதான் வாழ்க்கையில் நிச்சயமான ஒரே சந்தோஷமாகும். இதுதான் முக்கியமான விஷயம். இதை நான் அறிவேன். நான் நிச்சயமாக அறிவேன்.'

'ஆம், நீர் அம்மாதிரி சொல்லுவதாய் இருந்தால், அது முற்றிலும் வேறான விஷயம்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. 'நான் வீடுகட்டி தோட்டம் போடுகிறேன். நீர் ஆஸ்பத்திரிகள் கட்டுகிறீர். இவை நமக்கு நேரப்போக்காய் இருக்கலாம். ஆனால், எது சரி, எது நல்லது என்பதை எல்லாவற்றையும் அறிந்த ஒருவரால்தான் முடிவு

செய்யமுடியும். நம்மால் முடியாது. நல்லது, நீர் ஒரு விவாதம் செய்ய விரும்புகிறீர். சரி, இப்பொழுது வாரும்.''

மேஜை முன்பிருந்து அவர்கள் எழுந்து, முன் வழி மண்டபத்தில் அமர்ந்தார்கள். அது ஒரு வராண்டா மாதிரி உபயோகமாகி வந்தது.

'வாரும். இப்பொழுது நாம் விவாதத்தை ஆரம்பிக்கலாம். நீர் பள்ளிக்கூடங்களைப் பற்றிப் பேசுகிறீர்' என்று விரலை மடக்கி இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். 'படிப்பு முதலியவைகளைப்பற்றி கூறுகிறீர். அதாவது, அவனை உயர்த்த வேண்டுமென்று சொல்லுகிறீர். (அச்சமயம் அவ்வழியாக தனது தொப்பியைத் தூக்கி மரியாதை காட்டிவிட்டு போன ஒரு விவசாயியைச் சுட்டிக் காட்டினார்.) அவனை அவனுடைய மிருக நிலையிலிருந்து உயர்த்த வேண்டுமென்று நீர் விரும்புகிறீர். அவனிடம் ஆத்மார்த்தீக விஷயங்களை அவன் உள்ளத்தில் கிளப்பிவிட நீர் விரும்புகிறீர். ஆனால், அந்த மிருக இன்பம் இருக்கிறதே, அது ஒன்றுதான் சாத்தியமான இன்பமென்று எனக்குத் தோன்றுகிறது. அந்த ஒரு இன்பத்தையும் அவனிடமிருந்து பறித்துவிட நீர் விரும்புகிறீர். நான் அவனைப் பார்த்து பொறாமை கொள்ளுகிறேன். ஆனால், நீரோ என்னிடமுள்ள சொத்துக்களையும் அவனுக்குக் கொடுக்காமல், என்னைப்போல அவனையும் செய்துவிட விரும்புகிறீர். அவனுக்கு உள்ள வேலைகளைக் குறைக்க வேண்டுமென்றும் நீர் சொல்லுகிறீர். ஆனால், அவன் உயிர் வாழ்ந்து இருப்பதற்கு, அவனுடைய உடல் உழைப்பு அவனுக்கு மிகுந்த அவசியமாய் இருக்கிறது. உமக்கும் எனக்கும் எப்படி உள்ளக் கிளர்ச்சிகள் அவசியமாய் இருக்கினறனவோ, அதேமாதிரி அவனுக்கும் உடல் உழைப்பு அவசியமாய் இருக்கிறது. உம்மால் சிந்தனை செய்யாமல் இருக்க முடியாது. நான் காலை இரண்டு மணிக்குத்தான் படுக்கப் போகிறேன். அப்பொழுது சிந்தனைகள் வந்துகொண்டிருக்கின்ற படியால் விடிகிற வரையில் நான் புரண்டுகொண்டிருப்பேனே ஒழிய தூங்க முடியாது. ஏனெனில் நான் சிந்திக்கிறேன். அவனுக்கு எப்படி வயலை உழாமல் இருக்க முடியாதோ, அதேமாதிரி என்னால் சிந்திக்காமல் இருக்க முடியாது. அவன் அவனுடைய வேலையைச் செய்யாவிட்டால், ஒரு மதுக்கடைக்குப் போவான்; அல்லது அசௌக்கியமாய் படுப்பான். அவன் செய்யக்கூடிய கடுமையான அந்த உடல் உழைப்பை என்னால் செய்ய முடியாது. அப்படிச் செய்தால், ஒரு வாரத்தில் நான் மாண்டுபோவேன். ஆனால், உடல் உழைப்பு இல்லாத என்னுடைய சோம்பேறித்தனத்தை அவன் கைக்கொள்ள முடியாது. அப்படிச் செய்தால், அவன் உடல் பெருத்து மாண்டு போவான். மூன்றாவது விஷயம்- நீர் எதைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தீர்?' என்று

இளவரசர் ஆண்ட்ரூ சொல்லி, தமது மூன்றாவது விரலை மடக்கினார். 'ஆ, ஆமாம் ஆஸ்பத்திரிகள் மருந்துகள். அவனுக்கு ஒரு இழுப்பு வருகிறது. அவன் செத்துக்கொண்டிருக்கிறான். நீர்வந்து அவனுடைய ரத்தத்தை வெளியே எடுத்து அவனை குணப்படுத்துகிறீர். அவன் அதன் பின்னால், உடல் வலிமை எதுவுமில்லாமல், ஒவ்வொருவருக்கும் சுமையாக இன்னும் பத்து வருஷம் வாழ்கிறான். மிகுந்த சுலபமாகவும் சௌகர்யமாகவும் அவனுக்கு இருக்கக்கூடியது மரணம் ஒன்றுதான். மக்கள் பிறந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஏராளமாகவும் இருக்கிறார்கள். ஒரு தொழிலாளியை இழப்பதற்கு நீர் வருத்தப்படுவீரானால், அது வேறு விஷயம். நான் அப்படித்தான் நினைக்கிறேன். ஆனால் நீரோ, அவன்மீதுள்ள அன்பினால் அவனைக் காப்பாற்ற விரும்புகிறீர். அவனோ அதை விரும்பவில்லை. தவிரவும், மருந்தின் மூலம் யாரையும் குணப்படுத்திவிடலாம் என்று நினைப்பது, எப்பேர்ப்பட்ட நினைப்பு! மருந்தினால் ஏராளமான பேர் கொல்லப்பட்டார்கள் என்று சொன்னால், அதுதான் உண்மை' என்று அவர் சொல்லிவிட்டு, கோபமாக முகம் சுளித்து பீயரிடமிருந்து திரும்பிக்கொண்டார்.

தமது கருத்துக்களை இளவரசர் ஆண்ட்ரூ தெளிவாகக் கூறிய படியால் இந்த விஷயத்தைப்பற்றி ஒரு தடவைக்கு மேலாகவே அவர் சிந்தித்திருக்கிறார் என்பது தெளிவாய்த் தெரிந்தது. பல நாட்கள் பேசாமல் இருந்த ஒருவர் பேசியதைப் போல, வேகமாகவும், உடனுக்குடனேயும் அவர் பேசினார். அவருடைய முடிவுகள் உபயோகமற்றவை என்று அறிய அறிய, அவருடைய நோட்டம் வரவர அதிகமாய் பரபரப்பாயிற்று.

'ஓ, அது பயங்கரமானது, பயங்கரமானது' என்று பீயர் சொன்னார். 'இம்மாதிரி கருத்துக்களைக் கொண்டு, ஒருவர் இப்படி வாழ்க்கையை நடத்த முடியும் என்று என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. மாஸ்கோவில் நான் இருந்தபோதும், பிரயாணம் செய்துகொண்டிருந்தபோதும், இம்மாதிரி நினைப்புகள் எனக்கு ஏற்பட்டதுண்டு. அந்த சமயங்களில் எல்லாம் நான் தளர்ந்து வீழ்ந்துவிடுவதுண்டு. அதனால் வாழ முடியாமலேயே இருந்தேன்- ஒவ்வொன்றும் எனக்கு வெறுப்பாகவே தோன்றும்... எல்லாவற்றையும் விட அதிகமாக என்னைப் பற்றியே பொறுப்பு ஏற்படும் அப்பொழுது நான் சாப்பிடுவதில்லை, குளிப்பதில்லை... உமக்கு எப்படித் தோன்றியது?...

'ஏன் குளிக்காமல்இருக்கவேண்டும்? அது சுத்தமானதல்ல' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. 'ஒவ்வொருவரும் தமது

வாழ்க்கையைக் கூடுமானவரையில்இனிமையானதாக வைத்துக் கொள்ள வேண்டும். நான் உயிரோடு இருக்கிறேன். அது எனது குற்றமல்ல. ஆகவே, பிறரைத் துன்புறுத்தாதபடி நான் எவ்வளவு சிலாக்கியமாக வாழமுடியுமோ, அப்படி வாழவேண்டும்.'

'இம்மாதிரி கொள்கைகளைக் கொண்டு நீர் வாழ்க்கையை நடத்தும்போது, உமது வாழ்க்கைக்கு தூண்டுகோலாய் இருப்பது எது? அசையாமலும், ஒன்றும் செய்யாமலும் ஒருவர் சும்மா இருக்க முடியும்...'

'இப்பொழுது இருக்கிறபடி வாழ்க்கை என்பது ஒருவருக்கும் மனச்சாந்தியைக் கொடுப்பதில்லை. நான் ஒன்றும் செய்யாமல் இருப்பதற்கு மிகுந்த சந்தோஷமாய் இருப்பேன். இங்குள்ள சீமான்கள், ஆனால் ஒரு பக்கத்தில், இந்த மாவட்டத்திற்கு தங்கள் பிரதிநிதியாக என்னை 'மார்ஷல்' என்ற பதவிக்கு தேர்ந்தெடுத் தார்கள். அதைவிட்டு நான் வெளியே வந்துவிட்டேன். அது ஒன்றுதான் நான் செய்யக்கூடியது. அந்தப் பதவிக்கு வேண்டிய சுமுகமான சுபாவம், புத்தியில்லாத ஆடம்பரம் ஆகிய அவசியமான குணங்கள் என்னிடம் கிடையாது என்பதை அவர்களால் அறிந்து கொள்ள முடியவில்லை. அப்புறம் இந்த வீட்டை எடுத்துக்கொள்ளுவோம். அமைதியாக ஒருவர் தங்கி இருக்கவேண்டுமானால், ஒருவருக்குச் சொந்தமாக ஒரு வீடு வேண்டும் என்பதற்காக இதைக் கட்டினேன். இப்பொழுது பாரும். ராணுவத்திற்கு ஆள் சேர்ப்பது ஆரம்பமாய்விட்டது.'

'நீர் ஏன் ராணுவத்தில்சேவை செய்யவில்லை?'

'ஆஸ்டர்லிட்ஜ் யுத்தத்திற்கு பின்பா?' என்று இளவசர் ஆண்ட்ரூ கவலையோடு கேட்டார்.

'இல்லை, நான் சேரமாட்டேன். ருஷ்ய ராணுவத்தில் போர்முனையில் நான் மீண்டும் சேவை செய்வதில்லை என்று நான் தீர்மானித்திருக்கிறேன். நான் செய்யமாட்டேன்- இங்கே, ஸ்மாலென்ஸ்க்கு போனபார்ட் வந்து, இந்த பால்டு ஹில்ஸ் எஸ்டேட்டுக்கே அபாயம் வந்தால்கூட நான் ருஷ்ய ராணுவத்தில் அப்பொழுதும்கூட சேவை செய்யமாட்டேன்.' தமது அடக்கத்தை மீண்டும் மேற்கொண்டு அவர் தொடர்ந்து பேசினார். 'நல்லது, ராணுவத்திற்கு ஆள் சேர்க்கும் வேலை நடப்பதாக நான் சொல்லிக்கொண்டிருந்தேன். மூன்றாவது ஜில்லாவிற்கு இந்த வேலைக்கு எனது தந்தை பிரதான அதிகாரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். போர் முனைக்குப் போகாமல் நான் தப்பிக்க வேண்டுமானால், அவரின் கீழ் வேலை செய்வது ஒன்றுதான் வழி.'

'அப்படியானால், நீர் வேலை செய்துகொண்டிருக்கிறீரா?'

'ஆம், நான் செய்துகொண்டிருக்கிறேன்'

அவர் சிறிது தயங்கினார்.

'நீர் எதற்காக சேவை செய்யவேண்டும்?'

'ஏன், இதுதான் காரணம். எனது தந்தை, அவருடைய காலத்தில் மிகுந்த பிரக்யாதி பெற்றவர்களில் ஒருவர். அவர் இப்பொழுது வயோதிகமாய்க் கொண்டிருக்கிறார். அவர் ஒரு குரூரமானவர் அல்ல. என்றாலும் மிகுந்த உற்சாகமுள்ளவர். கங்கு கரையற்ற அதிகாரத்தை அனுபவித்து அவருக்கு வழக்கமானபடியால், அவர் பயங்கரமாய் இருப்பார். அதோடுகூட, படைக்கு ஆள் சேர்ப்பதற்காக அவரை ஒரு சேனாதிபதியாக சக்கரவர்த்தி நியமித்து அதிகாரத்தையும் கொடுத்திருக்கிறார். இரண்டு வாரங்களுக்கு முன்னால் நான் இரண்டு மணி நேரம் தாமதாகப் போய்ச் சேர்ந்திருந்தால் யுக்னாவா என்ற இடத்தில் உள்ள சம்பளப் பட்டுவாடா செய்யும் ஒரு குமாஸ்தாவை அவர் தூக்கில் போட்டிருப்பார், என்று இளவரசர் ஆண்ட்ரூ ஒரு புன்னகையோடு சொன்னார். 'என்னுடைய தந்தையிடம் எனக்கு மட்டும்தான் கொஞ்சம் செல்வாக்குண்டு. அதனால்தான் நான் சேவை செய்கிறேன். முதலில்செய்துவிட்டு, பின்னால்தாமே வேதனை அடையும் காரியங்களை அவரை செய்யவிடாமல் தடுப்பதற்காகத் தான் நான் சேவை செய்கிறேன்.'

'சரி, இப்பொழுது நீர் பாரும்.'

'ஆம், ஆனால் நீர் மனோராஜ்யம் செய்வதைப்போல், அது இல்லை' என்று இளவரசர் ஆண்ட்ரூ தொடர்ந்து கூறினார். 'அந்த அயோக்கியனான குமாஸ்தாவைப்பற்றி நான் கொஞ்சம்கூட கவலைப்பட்டதும் இல்லை, கவலைப்படவும் இல்லை. பட்டாளத்திற்குச் சேர்த்த ஆட்களிடமிருந்து சில ஜோடுகளை அவன் திருடிவிட்டான். அவனை தூக்கில் போட்டிருந்தால்கூட, நான் மிகுந்த சந்தோஷம் அடைந்திருப்பேன். ஆனால், எனது தந்தைக்காகவே நான் வருந்தினேன்- அதுவும் கடைசியில் எனக்காகவே என்பதில்தான் முடிகிறது.'

இளவரசர் ஆண்ட்ரூ மேன்மேலும் பரபரப்புக்கொண்டார். தம்முடை அண்டைஅயலாருக்கு நன்மை செய்யவேண்டும் என்ற ஆசை எதுவும் தமது செய்கைகளில் கிடையாது என்பதை பீயருக்கு நிரூபிக்க அவர் முயற்சி செய்தபோது, அவருடைய கண்கள் பரபரப்போடு மின்னின.

'இப்போது பாரும். உமது அடிமைகளை விடுவிக்க வேண்டுமென்று நீர் விரும்புகிறீர்' என்று அவர் தொடர்ந்து

சொன்னார். 'அது ரொம்ப நல்ல காரியம். ஆனால் உமக்கல்ல, உமது அடிமைகளுக்குமல்ல. உமது அடிமை யாரையும் சவுக்கால் அடிக்கவோ, அல்லது சைபீரியாவுக்கு அனுப்பவோ நீர் செய்யவில்லை என்று நினைக்கிறேன். அவர்களை அடித்தாலும் சரி, சவுக்கால் அடித்தாலும் சரி, அல்லது சைபீரியாவுக்கு அனுப்பினாலும் சரி, அதனால் அவர்களுடைய நிலைமை மோசமாகிவிடும் என்று நான் நினைக்கவில்லை. சைபீரியாவிலும் அதேமாதிரி மிருக வாழ்க்கையைத்தான் அவர்கள் நடத்துகிறார்கள். உடம்பில் பட்ட சவுக்கடி ஆறிவிடும். முன்போலவே அவர்கள் சந்தோஷமாய் இருப்பார்கள். ஆனால் அந்த அடிமைகளின் சொந்தக்காரர்கள் இருக்கிறார்களே, அவர்களுக்கு அது நல்லது. நியாயமாகவும் அநியாயமாகவும் அவர்கள் தண்டனைகள் கொடுத்துக்கொண்டே இருப்பதால் அவற்றின் பலனாக முதலில் அவர்களை வியாகூலம் வந்து அடைகிறது. கொஞ்சம் கொஞ்சமாக அந்த வியாகூலத்தை நசுக்கி தேய்த்துவிடுவதால் இரக்கமற்ற கடின சித்தத்தில் அவர்கள் வளருகிறார்கள். இதன் பலனாக தார்மீகமாய் அவர்கள் அழிந்து போகிறார்கள். இப்பேர்ப்பட்டவர்கள் மீதுதான் நான் இரக்கம் கொள்கிறேன். அவர்களுக்காகவேதான் அடிமை களை விடுதலை செய்ய நான் விரும்புகிறேன். அம்மாதிரியான பரம்பரைகளிலும், எல்லையற்ற அதிகாரங்களிலும் வளர்க்கப்பட்ட நல்ல மனிதர்கள் வயது ஆக ஆக மிகுந்த கோபமுள்ளவர்களாக மாறி கடினச்சித்தமும் குரூரச்சித்தமும் கொண்டவர்களாக விளங்குவதை நீர் பார்க்காமல் இருந்திருக்கலாம். ஆனால், நான் பார்த்திருக்கிறேன். அப்பேர்ப்பட்டவர்களுக்கு தங்களுடைய குணங்கள் நன்றகத் தெரியும். என்றாலும் தங்களால் அவற்றை அடக்க முடியாமல், அவற்றில் வளர்ந்து மேலும் துக்ககரமான நிலைக்கு வந்துவிடுகிறார்கள்.'

மிகுந்த சிரத்தையோடு இளவரசர் ஆண்ட்ரூ பேசியதால், இம்மாதிரியான சிந்தனைகள் அவருடைய தந்தையின் வாழ்க்கையில் இருந்தே அவருக்கு ஏற்பட்டிருக்க வேண்டுமென்று பியரால் நினைக்காமல் இருக்க முடியவில்லை.

அவர் பதில் சொல்லவில்லை.

'ஆகவே, அதற்காகத்தான் நான் வருந்துகிறேன். அதாவது மனிதனுடைய கண்ணியம், மனச்சாந்தி, பரிசுத்தம், இவைகளுக்காகவே நான் வருந்துகிறேன். அடிமைகளின் முதுகுகளுக்காகவோ தலைகளுக்காகவோ அல்ல. அவற்றை நீர் அடித்தாலும் சரி, ★சிரைத்தாலும் (★ஒரு சொந்தக்காரர் தனது அடிமையை சைபீரியாவுக்கு நாடு கடத்தல் செய்யலாம். அந்த அடிமை தப்பி ஓடினால் அவனை சுலபமாகப் பிடிப்பதற்காக

அவனை சைபீரியாவுக்கு அனுப்புவதற்கு முன்னால், தலையை ஒரு பக்கத்தில் க்ஷவரம் செய்து அனுப்புவார்கள்.) சரி, அவை எப்பொழுதுமே பழைய மாதிரியான முதுகுகளாகவும் தலைகளாகவுமே இருக்கும்.'

'இல்லை, இல்லை. ஆயிரம் தடவைகள் இல்லை. நீர் சொல்லுவதை நான் ஒருபோதும் ஒப்புக்கொள்ள மாட்டேன்' என்று சொன்னார் பீயர்.



மாலையில் இளவரசர் ஆண்ட்ரூவும் பீயரும் ஒரு திறந்த வண்டியில் ஏறி, பால்டு ஹில்ஸ் மாளிகைக்குப் புறப்பட்டுப் போனார்கள். இளவரசர் ஆண்ட்ரூ பீயரை அடிக்கடி நோக்கமிட்டு, மௌனத்தைக் கலைப்பதற்காக இடையிடையே பேசினார். அம்மாதிரி அவர் பேசியது, அவர் நல்ல சுபாவத்தில் இருப்பதைக் காட்டியது.

விவசாய வேலைகளில் அவர் எவ்வளவு தூரம் அபிவிருத்தி செய்திருக்கிறார் என்பதை அந்த வயல்களை சுட்டிக்காட்டி அவர் பேசினார்.

முகச் சோர்வுடன் மௌனமாக பீயுர் இருந்தார். தம்மிடம் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு ஒற்றை வார்த்தைகள் மூலம் பதில் சொல்லிக்கொண்டிருந்தார். தம்முடைய சொந்த சிந்தனைகளில் அவர் ஆழ்ந்திருப்பதாகத் தோன்றியது.

இளவரசர் ஆண்ட்ரூ சந்தோஷமில்லாமல் இருப்பதாகவும், அவர் வழி தவறிவிட்டதாகவும், உண்மையான ஒளியை அவர் பார்க்கவில்லையென்றும், ஆகவே தாம் அவருக்கு உதவி செய்து, கண்ணை திறந்து அவரை உயர்த்த வேண்டும் என்றும் அவர் நினைத்துக்கொண்டிருந்தார். ஆனால் தாம் அவரிடம் என்ன சொல்ல வேண்டுமென்று அவர் நினைத்தவுடன், ஒரே வார்த்தையில் தம்முடைய உபதேசங்களையெல்லாம் இளவரசர் ஆண்ட்ரூ கவனித்துவிடுவார் என்று அவர் உணர்ந்தார். ஆகவே அதை ஆரம்பிப்பதற்கு அவர் பின்வாங்கினார். தமக்கு புஸ்தமாகவும், விலையற்றதாகவும் தோன்றக்கூடியவைகளை அவர் கிண்டல் செய்யக்கூடும் என்று பயந்தார்.

'இல்லை, ஆனால் நீர் ஏன் அப்படி நினைக்கிறீர்?' என்று திடீரென்று பீயர் ஆரம்பித்தார். ஒரு காளைமாடு முட்ட நினைக்கும்போது எப்படி குனியுமோ, அதே மாதிரி பீயர் தமது

தலையை தாழ்த்தினார். 'நீர் ஏன் அப்படி நினைக்கிறீர்? நீர் அப்படி நினைக்கக் கூடாது.'

'நினைப்பதா? எதைப்பற்றி?' என்று இளவரசர் ஆண்ட்ரூ ஆச்சர்யத்தோடு கேட்டார்.

'வாழ்க்கையைப் பற்றி, மனிதனின் விதியைப் பற்றி. அப்படி இருக்க முடியாது. நான்கூட அப்படித்தான் நினைத்தேன். ஆனால் என்னை எது காப்பாற்றியது என்பது உமக்கு தெரியுமா? அந்த பிரீமேஸன் சங்கம்தான். இல்லை, நீர் இளநகை காட்டவேண்டாம். பிரீமேஸன் என்பது மதச்சடங்குகள் செய்யும் கூட்டமல்ல. நான் கூட அப்படித்தான் முன்பு நினைத்திருந்தேன். மனித சமூகத்தின் உயர்ந்த, நிரந்தரமான குணங்களை மிகச் சிறந்த முறையில் வெளிக்காட்டுவதுதான் பிரீமேஸன் சங்கமாகும்.'

பிரீமேஸன் சங்கத்தின் கொள்கைகளை பற்றி தாம் அறிந்த படி இளவரசர் ஆண்ட்ரூவுக்கு அவர் விளக்க ஆரம்பித்தார். சர்க்காருடையவோ, பாதிரிகளுடையவோ கட்டுப்பாடுகள் எதுவும் இல்லாத கிறிஸ்தவ மத உபதேசங்கள்தான் பிரீமேஸன் கொள்கைகளாகும் என்றும், சமத்துவம், சகோதரத்துவம், அன்பு ஆகியவைகளை உபதேசிப்பதே அந்தக் கொள்கைகள் என்றும் அவர் சொன்னார்.

'எங்களுடைய அந்த பரிசுத்தமான சகோதரத்துவ கூட்டந்தான், வாழ்க்கையில் உண்மையான அர்த்தத்தை கொண்டிருக்கிறது. மற்றவையெல்லம் ஒரு கனவு' என்றார் பியர். 'இந்த சங்கத்திற்கு புறம்பாயுள்ள எல்லாம், ஏமாற்றங்களாலும் பொய்களாலும் நிரப்பப்பட்டிருக்கின்றன என்பதை எனது அன்புள்ள நண்பரே, நீர் அறியவேண்டும். பிறருக்குக் கெடுதல் செய்யாமல் மட்டும் இருக்க முயற்சி செய்து, உம்மைப்போல தமது வாழ்க்கையை நடத்துவதைத் தவிர, வேறு எதுவும் ஒரு புத்திசாலியான நல்ல மனிதர் செய்யக்கூடியது இல்லை என்று நீர் சொல்வதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் எங்களுடைய அடிப்படை கொள்கைகளை நீர் ஒப்புக்கொண்டு, எங்கள் சங்கத்தில் சேரும். எங்களிடம் உம்மை ஒப்புவித்துவிடும். உமக்கு வழிகாட்டவும் எங்களிடம் விட்டுவிடும். அப்படிச் செய்தால், நீர் உடனே உம்மைப் பற்றி அறிந்து கொள்வீர். நானும் அப்படித்தான் அறிந்துகொண்டேன். அதாவது நாமெல்லாரும் கண்ணில் காணாத ஒரு சங்கிலித் தொடரின் அம்சங்கள் என்றும், அதனுடைய ஆரம்பம் தேவலோகத்தில் மறைக்கப்பட்டிருக்கிறதென்றும் நீர் உணர்ந்துகொள்வீர்.'

இளவரசர் ஆண்ட்ரூ நேராக தம் பார்வையை செலுத்தி, மௌனமாய் பீயரின் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தார். சக்கரங்களின் சப்தத்தால் பல தடவைகள் பீயரின் வார்த்தைகளை இடையிடையே அவர் கேட்க முடியாமல் இருந்தது. அச்சமயங்களில் எல்லாம் திரும்பவும் அவர் சொல்லியதை கூறும்படி அவர் கேட்டு வந்தார். இளவரசர் ஆண்ட்ரூவின் கண்களில் தோன்றிய அந்த விசித்திரமான பிரகாசத்தையும், அவருடைய மௌனத்தையும் கண்ட பீயர், தமது வார்த்தைகள் வீண்போகவில்லையென்றும், தம்மை இளவரசர், ஆண்ட்ரூ இடைமறிக்க மாட்டார் என்றும், தாம் சொல்லியதைக் கேட்டு அவர் நகைக்க மாட்டார் என்றும் நினைத்தார்.

அவர்கள் ஒரு ஆற்றின் பக்கத்தில் வந்தார்கள். அந்த ஆற்றில் தண்ணீர் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தது. அந்த தெப்பத்தின் மீது ஏறித்தான் அவர்கள் ஆற்றை கடக்க வேண்டியதாய் இருந்தது. அந்த தெப்பத்தின் மீது வண்டியையும் குதிரைகளையும் ஏற்றியபின்பு, தாங்களும் ஏறிக்கொண்டார்கள்.

அந்த தெப்பத்தின்கைப்பிடி கம்பியில் இளவரசர் சாய்ந்து கொண்டு, மாலைச் சூரியனின் ஒளியில் மினுமினுத்து வெள்ளமாய் ஓடிக்கொண்டிருந்த அந்த தண்ணீரை மௌனத்தோடு பார்த்து நின்றார்.

'நல்லது, அதைப்பற்றி நீர் என்ன நினைக்கிறீர்?' என்று பீயர் கேட்டார். நீர் ஏன் மௌனமாய் இருக்கிறீர்?'

'நான் அதைப்பற்றி என்ன நினைக்கிறேனா? நீர் சொல்லுவதை நான் கவனித்துக்கொண்டிருக்கிறேன். அதெல்லாம் ரொம்ப சரி... 'எங்களுடைய சங்கத்தில் சேர்ந்தால், வாழ்க்கையின் நோக்கத்தைப் பற்றியும், மனிதனின் விதியைப்பற்றியும், உலகத்தை ஆட்டிவைக்கும் கடவுளைப் பற்றியும் உமக்குக் காட்டுகிறோம்' என்று நீர் சொல்லுகிறீர். ஆனால், நாம் யார்? நாம் மனிதர்கள். ஒவ்வொன்றும் உமக்கு எப்படித் தெரிகிறது? நீர் பார்க்கிற அதை, என்னால் மட்டும் ஏன் பார்க்க முடியவில்லை? உலகத்தின் நன்மையும் உண்மையும் ஆட்சி புரிவதை நீர் பார்க்கிறீர். ஆனால், அவற்றை நான் பார்க்கவில்லை.'

பீயர் அவரை இடைமறித்தார்.

'எதிர்கால வாழ்க்கையைப் பற்றி நீர் நம்புகிறீரா?' என்று அவர் கேட்டார். ஆனால் அவர் பதில் சொல்வதற்கு பீயர் அவகாசம் கொடுக்காமல், அவர் திருப்பிக் கேட்டதை ஒரு மறுப்பா எடுத்துக்கொண்டார். ஏனெனில், இளவசர் ஆண்ட்ரூவின் முன்காலத்திய நிரீஸ்வர கொள்கைகளை அவர் அறிவார்.

'உலகத்தில் உண்மையும் நன்மையும் ஆட்சி புரிவதை உம்மால் பார்க்க முடியவில்லை என்று நீர் சொல்லுகிறீர். என்னாலும் பார்க்க முடியாது. நாம் இங்கே வாழ்கிற வாழ்க்கையே எல்லாவற்றிற்கும் முடிவான விஷயம் என்று நினைக்கிற வரையில் அவற்றை நாம் பார்க்க முடியாது. இந்த உலகத்தில், இங்கேயுள்ள இந்த உலகத்தில் (அங்கிருந்த வயல்களை பீயர் சுட்டிக்காட்டினார்.) உண்மை என்பதே கிடையாது. எல்லாம் பொய்யும் தீங்கும்தான். ஆனால் இந்தப் பிரபஞ்சத்தில் முழு பிரபஞ்சத்தில், உண்மையில் ஆட்சி ஒன்று இருக்கிறது. இன்று பூமியன் குழந்தைகளாக இருக்கிற நாம், நிரந்தரமாக பிரபஞ்சத்தின் குழந்தைகளாக இருக்கிறோம். இந்த அகன்ற சுமுகமான முழுமையில் நானும் ஒரு பாகம் என்பதை என்னுடைய உள்ளத்தில் உணரவில்லையா? தாழ்ந்தவர்களுக்கும் உயர்ந்தவர்களுக்கும் மத்தியில் நான் ஒரு படியாகவோ ஒரு சங்கிலி தொடர்பாகவோ இருப்பதை நான் உணரவில்லையா? இந்த பரந்தபலவகையான சுமுகமான உயிர்ராசிகளிடத்தில், அந்த கடவுள், அந்த பரம்பொருள் நமது கண்களுக்கு வெளியாக வில்லையா? செடி கொடிகளிலிருந்து மனிதனாய் வரக்கூடிய அந்த ஏணியை நான் பார்க்க முடியுமானானல், அந்த ஏணி என்னோடு ற்றிந்து போய்விடுமென்றும், நான் மேலும் மேலும் போக முடியாதென்றும், எதற்காக நினைக்க வேண்டும்? நான் மறைந்துபோக முடியாதென்று உணருகிறேன். ஏனெனில் இந்த உலகத்திலிருந்து மறைவது எதுவுமில்லை. நான் எப்பொழுதுமே இருந்து வருகிறேன். இதற்கு முன்னாலும் இருந்து வந்திருக்கிறேன். எனக்கு முன்னாலும், எனக்கு மேலாகவும் சக்திகள் இருக்கின்றன என்பதையும், இந்த உலகத்தில் உண்மை இருக்கிறதென்பதையும் நான் உணருகிறேன்.'

'ஆம், அது ஹெர்டர் என்பவரின் தத்துவம்' என்றார் இளவரசர் ஆண்ட்ரூ. 'ஆனால், எனக்கு நம்பிக்கை கொடுக்கக்கூடியது அதுவல்ல, அன்புள்ள நண்பரே - வாழ்க்கையும் மரணமும்தான் நம்பிக்கையை கொடுக்கின்றன. ஒருவருக்கு பிரியமாக ஒருவர் இருப்பதையும் அவரோடு வாழ்க்கை கலந்து நிற்பதையும் நாம் பார்க்கிறோம். அவர்களில் ஒருவருக்கு ஒருவர் தவறுகள் செய்து, அந்தத் தவறுகளுக்கு பரிகாரம் செய்ய நினைக்கும்போது, திடீரென்று அந்தத் தவறு செய்யப்பட்டவர் வலிகளாலும் கஷ்டங்களாலும் துன்புற்று திடீரென்று உயிர் நீங்கிவிடுகிறார். (இந்த இடத்தில் இளவரசர் ஆண்ட்ரூவின் குரல் நடுங்கியது. அவர் திரும்பிக்கொண்டார்.) ஏன்? இதற்கு பதில் எதுவும் கிடையாதென்று இருக்க முடியாது. பதில் இருக்கிறது என்றே நான்

நம்புகிறேன்... அதுதான் எனக்கு நம்பிக்கையை கொடுக்கிறது. என்னை நம்பும்படி செய்திருக்கிறது' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

'ஆம், ஆம், அப்படித்தான். நான் சொல்லிக்கொண்டிருப்பது அதுதானே?' என்று பீயர் கேட்டார்.

'இல்லை, எதிர்கால வாழ்க்கையின் அவசியத்தைப் பற்றி வாதங்களினால் என்னை நம்பும்படி செய்ய முடியாது. இதோ நான் சொல்லப்போகும் காரணம்தான் என்னை நம்பும்படி செய்தது. அதாவது, கையுடன் கைகோர்த்து இருவர் போய்க்கொண்டிருக்கும் போது, திடீரென்று ஒருவர் அங்கே மறைகிறார். எங்கேயோ போகிறார். திடீரென்று நீர் அங்கே ஒரு பாதாளத்தின் பக்கத்தில் விடப்படுகிறீர். நீர் அந்தப் பாதாளத்தை உள்நோக்கிப் பார்க்கிறீர். நானும் உள்நோக்கி பார்த்திருக்கிறேன்...'

'நல்லது, அப்புறம் அதுவேதான். 'அங்கே' என்று ஒன்று இருப்பதையும், அந்த 'அங்கே'யில், 'யாரோ ஒருவர்' இருப்பதையும் நீர் அறிவீர். 'அங்கே' என்ற அதுதான், எதிர்கால வாழ்க்கை. 'யாரோ ஒருவர்' என்பதுதான் - கடவுள்'

இளவரசர் ஆண்ட்ரூ பதில் சொல்லவில்லை. குதிரைகளையும் வண்டியையும் எதிர்க்கரையில் இறக்கி, குதிரைகளை வண்டியில் பூட்டினார்கள். சூரியன் அடிவானத்தில் பாதி இறங்கிவிட்டான். மாலை உறைபனி தெப்பத்திற்கு பக்கத்தில் விழுந்து கொண்டிருந்தன. வண்டிக்காரன், வேலைக்காரன், தெப்பக்காரன் ஆகியவர்கள் ஆச்சரியப்படும் விதத்தில் பீயரும் ஆண்ட்ரூவும் இன்னமும் தெப்பத்திலேயே நின்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

'கடவுளும் எதிர்கால வாழ்க்கையும் இருக்குமானால், அங்கே உண்மையும் நன்மையும் இருந்தே ஆகவேண்டும். அவற்றை அடைவதற்கு முயற்சி செய்வதுதான் மனிதனின் மிக உயர்ந்த மகிழ்ச்சியாகும். நாம் வாழவேண்டும். அன்பு காட்டவேண்டும். இந்த உலகத்தில் இன்று நாம் வாழ்ந்திருப்பது மட்டுமல்ல, இதற்கு முன்னாலும் இந்த பிரபஞ்சத்தில் வாழ்ந்திருக்கிறோம்;இனியும் வாழப்போகிறோம் என்பதில் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும்' என்று பீயர் சொல்லி ஆகாயத்தைச் சுட்டிக்காட்டினார். தெப்பத்திலுள்ள கைப்பிடிக் கம்பியில் சாய்ந்துகொண்டு, பீயர் சொல்வதை இளவரசர் ஆண்ட்ரூ கேட்டுக்கொண்டிருந்தார். அந்த நீல நிறத் தண்ணீரில் சூரிய பிம்பம் பிரதிபலிப்பதை தமது நிலைத்த கண்களால் நோக்கிக்கொண்டிருந்தார். பரிபூரண அமைதி அங்கு நிலவியது. பீயர் மௌனமானார். அந்தத் தெப்பம் அங்கு வந்து நின்று வெகு நேரமாயிற்று. காற்றினால் ஏற்படும் அலைகள்

மெதுவாக அதன் மீது அடித்துக்கொண்டிருந்தன. அந்த அலைகளின் சப்தம் பீயர் சொல்லும் வார்த்தைகளுக்கு தாளம் போட்டு, 'அது உண்மை, அதை நம்பும்' என்று குசுகுசுப்புக் குரலில் கூறுவதைப் போல் இருந்தது.

அவர் பெருமூச்சு விட்டார். ஒரு பிரகாசமான,குழந்தைத்தனமான கனிவுள்ள நோக்கோடு பீயரின் முகத்தைப் பார்த்து, முகம் சிவந்து பரவசமானார். என்றாலும் தம்மை விட உயர்ந்த படியிலுள்ள தமது நண்பரின் முன்பு வெட்கம் கொண்டார்.

'அது அப்படி இருக்குமானால், சரிதான்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். 'என்றாலும் நாம் போவதற்கு நேரமாய் விட்டது' என்று சொல்லி தெப்பத்திலிருந்து கீழே இறங்கி பீயர் காட்டிய வானத்தைப் பார்த்தார். ஆஸ்டர்லிட்ஜில் அந்தப் போர் முனையில்அவர் படுத்துக் கிடந்தபோது, அந்த உயர்ந்த, என்றென்றும் நிரந்தரமான வானத்தைப் பார்த்த பின்பு இப்பொழுதுதான் முதல்தடவையாக அவர் பார்த்தார். அவர் உள்ளத்தில் வெகுகாலமாய் தூங்கிக் கிடந்த ஏதோ ஒன்று, அவர் உள்ளத்தில் இருந்தவைகளில் எல்லாம் சிறந்த ஒன்று, அவருடைய உள்ளத்தில் திடீரென்று விழித்து மகிழ்ச்சியும் இனிமையும் கொண்டது. அவர் வாழ்க்கையின் பழக்கமான நிலைமைகளுக்குத் திரும்பியவுடன், அந்த உணர்ச்சி மறைந்தது. ஆனால் அந்த உணர்ச்சியை எப்படி வளர்ப்பது என்பது அவருக்குத் தெரியாமல் இருந்தாலும், அது அவர் உள்ளத்தில் உறைந்து நிற்கிறது என்பதை அவர் அறிவார். பீயரை சந்தித்ததினால் இளவரசர் ஆண்ட்ரூவின் வாழ்க்கையில் ஒரு சகாப்தம் ஆரம்பமாயிற்று. வெளிப் பார்வையில் அவர் பழைய வழியிலேயே வாழ்ந்து வருவதாகத் தோன்றிய போதிலும், உள்ளத்திலே அவர் ஒரு புதிய வாழ்க்கையை ஆரம்பித்துவிட்டார்.

# 5

## 13

பால்டு ஹில்ஸ் மாளிகையின் முன் வாசலுக்கு இளவசரசர் ஆண்ட்ரூவும் பீயரும் போய்ச் சேர்ந்தபோது, மாலை இருட்டும் நேரமாய்விட்டது. வீட்டை நெருங்கியவுடன் வீட்டின் பின் பக்கத்து முற்றத்தில் பரபரப்பான காரியங்கள் நடந்து கொண்டிருப்பதை, பீயருக்கு ஆண்ட்ரூ புன்னகையோடு சுட்டிக்காட்டினார். வயோதிகத்தினால் முதுகு குனிந்த ஒரு பெண் தனது முதுகின் மீது ஒரு சாக்குப் பையுடனும், ஒரு குட்டையான நீள தலை

ரோமம்கொண்ட கறுப்புச் சட்டையணிந்த ஒரு வாலிபனும் இவர்களின் வண்டி வருவதைப் பார்த்து பின்வாசலுக்கு ஓடினார்கள். அவர்களுக்குப் பின்னால் இரண்டு பெண்களும் ஓடினார்கள். நால்வரும் வண்டியைத் திரும்பிப் பார்த்துக்கொண்டு, பயத்தோடு பின் முற்ற மண்டபத்தின் படிக்கட்டுகளில் ஏறினார்கள்.

'அவர்கள்தான் மேரியின் ''கடவுளின் குழந்தைகள்'' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார். 'நாம் வருவதை எனது தந்தை வருகிறார் என்று அவர்கள் தவறாக நினைத்துக் கொண்டிருக் கிறார்கள். இந்த ஒரு விஷயத்தில்தான் அவள் அவருக்குக் கீழ்ப்படிவதில்லை. இந்த யாத்திரீகர்களையெல்லாம் விரட்டியடிக்க வேண்டுமென்று அவர் உத்தரவிடுகிறார். ஆனால், அவள் அவர்களை வரவேற்கிறாள்.'

'ஆனால், ''கடவுளின் குழந்தைகள்'' என்றால் என்ன?' என்று பீயர் கேட்டார்.

இதற்குப் பதில் சொல்வதற்கு இளவரசர் ஆண்ட்ரூவுக்கு நேரம் இல்லை. அவர்களைச் சந்திப்பதற்காகவே வேலைக்காரர்கள் வெளியே வந்தார்கள். முதிய இள்வரசர் எங்கே இருக்கிறார் என்றும், அவர் சீக்கிரம் திரும்புவாரா என்றும் அவர் அவர்களிடம் கேட்டார்.

முதிய இளவரசர் நகரத்திற்குப் போயிருந்தார். எப்போது வேண்டுமானலும் அவர் திரும்பி வரலாம்.

பீயரை தமது ஜாகைக்கு இளவரசர் ஆண்ட்ரூ அழைத்துச் சென்றார். தந்தையின் வீட்டிலுள்ள அவருடைய அந்த ஜாகை எப்போதும் ஒழுங்காகவும் தயாராகவும் இருக்கும். அங்கிருந்து அவர் குழந்தை இல்லத்திற்குப் போனார்.

அவர் திரும்பி வந்ததும் பீயரைப் பார்த்து, 'இப்போது நாம் போய் என் சகோதரியைப் பார்ப்போம்' என்று சொன்னார். 'அவளை இன்னும் நான் கண்டுபிடிக்க முடியவில்லை. அவள் இப்பொழுது ஒளிந்துகொண்டிருக்கிறாள். அவளுடைய ''கடவுளின் குழந்தை'' களுடன் அவள் உட்கார்ந்துகொண்டிருக்கலாம். நாம் திடீரென்று போவோம். அவளுக்குக் குழப்பம் ஏற்படும். அவளுடைய ''கடவுளின் குழந்தை'' களை நீர் பார்க்கலாம். அது உண்மையிலேயே விசித்திரமானது.'

''கடவுளின் குழந்தைகள்'' என்றால் யார்?' என்று பீயர் கேட்டார்.

'வாரும், நீரே பார்த்துக்கொள்ளலாம்.'

அவர்கள் மேரி இருந்த அறைக்குள் போனதும், மேரி உண்மையாகவே அமைதி குலைந்தவளாய் காணப்பட்டாள். அவளுடைய முகத்தில் சிவப்புப் புள்ளிகள் தோன்றின.

அவளுடைய செளக்கியமான அறையில் தெய்வச் சிலையின் முன்பாக விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. ஒரு நீண்ட நாசியும் நீளமான தலை ரோமமும் கொண்ட ஒரு வாலிபர் ஒரு சன்னியாசியின் ஆடை அணிந்து சோபாவில் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். அவர்களுக்குப் பக்கத்தில் சாமோவார் என்ற தேநீர் பாத்திரம் இருந்தது. அங்கிருந்த சாய்வு நாற்காலியில் மெலிந்த, உடல் சுருங்கிய ஒரு முதிய பெண் அவளுடைய குழந்தைத் தனமான முகத்தில் பணிவான தோற்றத்தோடு அமர்ந்திருந்தாள்.

'நீர் வரப்போவதாக என்னிடம் ஏன் சொல்லவில்லை, ஆண்ட்ரூ?' என்று இளவரசி மெல்லிய கண்டிப்போடு கூறினாள். அவளுடைய பயணிகளின் முன்பாக அவள் எழுந்து நின்றது, ஒரு பெட்டைக் கோழி தன் குஞ்சுக்கு முன்பாக நிற்பதைப்போல இருந்தது.

'உம்மைப் பார்ப்பதற்கு நான் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். உம்மைப் பார்ப்பதற்கு உண்மையிலேயே சந்தோஷம் அடைகிறேன்' என்று அவளுடைய கையை பீயர் முத்தமிடும்போது அவள் சொன்னாள். அவரைப்பற்றி அவளுக்குத் தெரியும். இப்போது ஆண்ட்ரூவுடன் அவர் நண்பராய் இருப்பதனாலும், அவருடைய மனைவியுடன் அவருக்கு மனக்கசப்பு ஏற்பட்டதாலும், எல்லாவற்றுக்கும் மேலாக அவருடைய அன்பான இனிய எளிய முகத்தினாலும் அவரிடம் ஒரு நட்பான மனப்பான்மையை அவள் கொண்டாள். அவள் அவரைப் பார்த்தாள். அவளுடைய அழகான ஒளி படர்ந்த கண்கள், 'உம்மை நான் மிகவும் விரும்புகிறேன். ஆனால், என்னுடைய ஜனங்களைப் பார்த்து தயவு செய்து நீர் சிரிக்கவேண்டாம்' என்று சொல்வதைப்போல இருந்தன. ஒருவருக்கொருவர் வந்தனங்கள் கூறிய பின்பு, அவர்கள் கீழே அமர்ந்தார்கள்.

'ஆ, ஐவானுஷ்காவும் இங்கே இருக்கிறாரா?' என்று அந்த வாலிப பயணியை ஒரு புன்சிப்போடு நோக்கிய இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

'ஆண்ட்ரூ' என்று கொஞ்சுகிற பாவனையில் இளவரசி மேரி சொன்னாள்.

'இவள் ஒரு பெண் என்பது உமக்குத் தெரியவேண்டும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ பீயரிடம் சொன்னார்.

'ஆண்ட்ரூ, கடவுளுக்காக' என்று இளவரசி மேரி மீண்டும் சொன்னாள்.

இந்த பயணிகளிடம் இளவரசர் ஆண்ட்ரூ கேலியாகப் பேசுவதும், அவர்களைக் காப்பாற்றுவதற்காக இளவரசி மேரி

பரிதாபமாய் முயற்சிப்பதும், வெகு காலமாக நடந்து வருகிற ஒரு விஷயம் என்பது தெளிவாய்த் தெரிந்தது.

'ஆனால், எனது அன்பே, நீ இந்த வாலிபருடன் கொண்டிருக்கிற அன்னியோன்னியத்தைப்பற்றி நான் பீயருக்குத் தெளிவாகச் சொன்னதற்காக, நீ எனக்கு நன்றி தெரிவிக்க வேண்டும்' என்று இளவரசர் ஆண்ட்ரூ சொன்னார்.

'உண்மையாகவா?' என்று பீயர் கேட்டு, தமது மூக்குக் கண்ணாடிகளுக்கு மேலாக விசித்திரத்துடனும், சிரத்தையுடனும் ஐவானுஷ்காவின் முகத்தைப் பார்த்தார். (அவர்கள் பிரஞ்சு மொழியில் பேசிக்கொண்டார்கள்). தன்னைப் பற்றித்தான் பேசுகிறார்கள் என்பதை அவள் அறிந்ததும், தன்னுடைய தந்திரமான கண்களால் அவர்களைப் பார்த்தாள். பீயரின் அம்மாதிரி பார்வையை இளவரசி மேரி நன்றியோடு கவனித்தாள்.

தன்னுடைய ஜனங்களுக்காக இளவரசி மேரி இம்மாதிரி கலக்கம் கொள்ளவேண்டியது கொஞ்சமும் அவசியமே இல்லை. அவர்கள் கொஞ்சம்கூட வெட்கம் அடையவில்லை. வயதான பெண் கண்களை கீழே நோக்கியிருந்தாலும், கடைக் கண்களால் புதிதாக வந்திருந்தவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தாள். தன்னுடைய கோப்பையைத் தலைகீழாகக் கவிழ்த்து வைத்து, தான் கடித்துத் தின்றது போக மீதம் உள்ள வெல்லக்கட்டியை அதன் பக்கத்தில் வைத்து, சாய்வு நாற்காலியில் அமைதியோடு மற்றொரு கோப்பை தேநீருக்காக எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தாள். தன்னுடைய தேநீரைத் தட்டிலிருந்து ஐவானுஷ்கா உறிஞ்சிக்கொண்டிருந்தாள். அவள் தன்னுடைய தந்திரமான கண்களினால் அந்த வாலிபர்களைக் கீழ்நோக்கிப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

'நீ எங்கே போயிருந்தாய்? கீவ் என்ற இடத்திற்கா? என்று இளவரசர் ஆண்ட்ரூ அந்த வயதான பெண்ணைக் கேட்டார்.

'நான் அங்கேதான் போயிருந்தேன், அன்புள்ள ஐயா' என்று அவள் விடாமல் பேசும் குரலில் பதில் அளித்தாள். 'அங்கிருந்த மகாத்மாவின் கோவிலில் நடந்த பரிசுத்தமான, தெய்வீகமான நற்கருணைத் திருவிழாவில் கலந்துகொள்ளும் பாக்கியத்தை, கிறிஸ்துமஸ் சமயத்தில் நான் பெற்றேன். இப்போது கால்யாஜின் என்ற இடத்திலிருந்து வருகிறேன், எஜமானரே. அங்கே ஒரு ஆச்சரியமான, மகத்தான ஆசீர்வாதம் மக்களுக்குக் காட்டப்பட்டது.'

'ஐவானுஷ்காவும் உன்னுடன் இருந்தாளா?'

'தர்ம தாதாவே, தான் மட்டும்தான் போவது வழக்கம் என்று ஒரு கரகரப்பான குரலில் பேசு முயற்சித்து ஐவாநுஷ்கா சொன்னாள். 'யுக்னாவா என்ற இடத்தில் பெலாகேயாவைச் சந்தித்தேன்.'

பெலாகேயா தன்னுடைய தோழியை இடைமறித்தாள். தான் பார்த்ததைச் சொல்ல விரும்பியதைப்போலத் தோன்றியது. 'கால்யாஜின் என்ற இடத்தில் ஒரு அதிசயமான ஆசீர்வாதம் மக்களுக்குக் காட்டப்பட்டது, எஜமானே.'

'அது என்ன அது' ஏதாவது நினைவுப் பொருளா?' என்று இளவரசர் ஆண்ட்ரூ கேட்டார்.

'ஆண்ட்ரூ தயவுசெய்து நீர் போகலாம். பெலாகேயா, நீ அவரிடம் சொல்லவேண்டாம்' என்று இளவரசி மேரி சொன்னாள்.

'இல்லை... எனது அன்பே. ஏன் கூடாது? ஏன் நான் செய்யக்கூடாது?... நான் அவரை விரும்புகிறேன். அவர் அன்பானவர். கடவுளுக்குப் பிரியமானவர்களில் அவர் ஒருவர். அவர் ஒரு தர்மதாதா. ஒரு சமயம் பத்து ரூபிள்கள் எனக்குக் கொடுத்தார். அதை ஞாபகத்தில் வைத்திருக்கிறேன். நான் கீவ் என்ற இடத்தில் இருந்தபோது, சிரில் என்பவர் என்னிடம் சொல்வது உண்டு. (கடவுளுக்குப் பிரியமானவர்களில் அவர் ஒருவர். வெயில் காலத்திலோ, குளிர் காலத்திலோ, காலில் எதுவும் அணியாமலேயே அவர் நடந்து போவார்.) அவர் சொன்னார்: 'சரியான இடத்துக்கு நீ ஏன் போவதில்லை? கால்யாஜின் என்ற இடத்துக்குப் போ. அங்கே உள்ள தெய்வ மாதாவின் சிலை ஒரு அதிசயத்தை மக்களுக்குக் காட்டுகிறது.' இந்த வார்த்தைகளைக் கேட்டதும், அங்கிருந்த பரிசுத்தமான மக்களுக்கு வழி அனுப்பிவிட்டு, நான் புறப்பட்டுப் போனேன்.'

எல்லாரும் மௌனமாய் இருந்தார்கள். அந்த பயணப்பெண் மட்டும் நிதானமான குரலில் பேசிக்கொண்டே மூச்சுவாங்கிக் கொண்டு இருந்தாள்.

'ஆகவே, நான் வந்தேன், எஜமானரே. மக்கள் என்னிடம் சொல்கிறார்கள்:- 'ஒரு ஆசீர்வாதம் மக்களுக்குக் காட்டப்படுகிறது. நம்முடைய தேவ மாதாவின் கன்னத்திலிருந்து பரிசுத்த எண்ணெய் வடிந்துகொண்டு இருக்கிறது...'

'ரொம்ப சரி, ரொம்ப சரி. பின்னால் நீ எங்களுக்குச் சொல்லலாம்' என்று முகம் சிவந்து இளவரசி மேரி சொன்னாள்.

'நான் அவளைக் கேட்கும்படி விடுங்கள்' என்று பீயர் சொல்லிவிட்டு, அவளைப் பார்த்து, 'நீயே அதைப் பார்த்தாயா?' என்று கேட்டார்.

‘ஓ, ஆம், எஜமானரே. எனக்கு அந்த பாக்கியம் கிடைத்தது. தேவலோக வெளிச்சம் மாதிரி அந்த முகத்தில் ஒளி பிரகாசித்தது. அந்த தேவலோக மாதாவின் கன்னத்திலிருந்து சொட்டு சொட்டாக...’

‘ஆனால், என் அன்பே, அது ஒரு மோசடியாய் இருக்க வேண்டும்.’ என்று கவனமாய் கேட்டுக்கொண்டிருந்த பீயர், அந்த யாத்ரீகரிடம் குழந்தைத்தனமாய் சொன்னார்.

‘ஓ, எஜமானரே, நீர் என்ன சொல்கிறீர்?’ என்று பீதி அடைந்த அந்த பெலாகேயா கூச்சலிட்டு, தனக்கு ஆதரவுக்காக இளவரசி மேரியிடம் திரும்பினாள்.

‘இவை எல்லாம் மக்களை ஏமாற்றுவதற்கு’ என்று பீயர் திரும்பவும் சொன்னார்.

‘ஏசு கிறிஸ்து பிரபுவே’ என்று அந்த பயணப்பெண், தனக்கு சிலுவைக் குறி காட்டிக்கொண்டு கூச்சலிட்டாள். ‘அம்மாதிரி பேசவேண்டாம், எஜமானரே. இதை நம்பாத ஒரு ஜெனரல் அங்கே இருந்தார். அவர் சன்னியாசிகளை ஏமாற்றுக்காரர்கள் என்று சொன்னார். இதை அவர் சொல்லி முடித்ததும், உடனே அவர் குருடரானார். அவருடைய கனவில் கீவ் நகரில் உள்ள பாதாள புதைகுழியைச் சேர்ந்த பரிசுத்த கன்னி மாதா தோன்றி, ‘‘நீ என்னை நம்பு. உன்னை பூரணமாக குணப்படுத்துகிறேன்’’ என்று சொன்னாள். உடனே அவர், ‘‘என்னை அந்த கன்னி மாதாவிடம் அழைத்துப் போங்கள், அழைத்துப் போங்கள்’’ என்று கெஞ்சினார். இந்த அசல் உண்மையை நான் உமக்குச் சொல்கிறேன். நானே இதைப் பார்த்தேன். ஆகவே, அவரை, முழுக் குருடராக இருந்த அவரை அந்தக் கன்னிமாதாவிடம் நேராக அழைத்து வந்தார்கள். அவர் நேராக அவளிடம் சென்று கீழே விழுந்து, ‘‘என்னைப் முழுமையாகக் குணம் ஆக்குவாயாக எனக்கு ஜார் சக்கரவர்த்தி என்ன கொடுத்தாரோ அதை நான் உனக்குக் கொடுத்துவிடுகிறேன்’’ என்று சொன்னார். அதை நானே பார்த்தேன், எஜமானரே. இப்போது அவர் தரித்திருந்த அந்த நட்சத்திரப் பதக்கத்தை, அந்த தெய்வச் சிலைக்கு மாட்டியிருக்கிறார். நல்லது, நீர் இப்போது என்ன நினைக்கிறீர்? அவருடைய கண் பார்வையை அவர் பெற்றுவிட்டார். ஆகவே, இழிவாகப் பேசுவது ஒரு பாவம். கடவுள் உம்மைத் தண்டிப்பார்’ என்று அவள் பீயரிடம் திரும்பி கண்டிப்போடு கூறினாள்.

‘தெய்வச் சிலைக்குள் அந்த நட்சத்திர பதக்கம் எப்படிப் போயிற்று?’ என்று பீயர் கேட்டார்.

‘அந்த பரிசுத்த மாதாவை ஜெனரல் பதவிக்கு உயர்த்தினார்களா?’ என்று இளவரசர் ஆண்ட்ரூ ஒரு புன்முறுவலோடு கேட்டார்.

பெலாகேயா திடீரென்று முகம் வெளிறி தனது கைகளைப் பிசைந்தாள்.

'ஓ, எஜமானே, எப்பேர்ப்பட்ட பாவம்' உமக்கு ஒரு புத்திரன் இருக்கிறான்' என்று அவள் ஆரம்பித்தாள். அவளுடைய வெளிறிய முகம் திடீரென்று சிவப்பாயிற்று. 'எஜமானே, நீர் என்ன சொன்னீர்? கடவுள் உம்மை மன்னிப்பாராக' என்று சொல்லிவிட்டு, சிலுவைக் குறியை தனக்குக் காட்டிக்கொண்டாள். 'கடவுளே, அவரை மன்னியும். என் அன்பே, இதற்கு என்ன அர்த்தம்' என்று அவள் சொல்லிவிட்டு, இளவரசி மேரியை திரும்பிப் பார்த்தாள். அவள் அநேகமாக அழுதுகொண்டு, எழுந்து நின்று தனது சாக்குபையை சரியாக வைக்க ஆரம்பித்தாள். இம்மாதிரி பேசப்படும் வீட்டில் தான் உதவி பெற்றதைப் பற்றி அவள் பயந்து வெட்கம் அடைந்ததைப் போலக் காணப்பட்டாள். அதே சமயத்தில் இந்த வீட்டில் கிடைக்கக்கூடிய பிச்சையை இழப்பதைப் பற்றியும் அவள் வருந்தினாள்.

'இப்போது அப்படி செய்யவேண்டியதற்கு என்ன அவசியம்? நீர் ஏன் என்னிடம் வந்தீர்?...' என்று இளவரசி மேரி கேட்டாள்.

'இங்கே வா, பெலாகேயா. நான் தமாஷாகச் சொன்னேன்' என்று பீயர் கூறினார். 'இளவரசியே, நான் உண்மையாகவே சொல்கிறேன், அவளைப் புண்படுத்த வேண்டுமென்று நான் பேசவில்லை.. நான் எதுவும் நினைத்துப் பேசவில்லை. தமாஷாகச் சொன்னேன்' என்று நாணத்தோடு, புன்முறுவலோடு தனது குற்றத்தை நீக்க முயற்சித்தார். 'இது எல்லாம் என்னுடைய தவறு. ஆண்ட்ரூகூட தமாஷாகத்தான் சொன்னார்.'

சந்தோஷத்தோடு பெலாகேயா நின்றாள். பீயரின் முகத்தில் ஒரு உண்மையான வருத்தம் காணப்பட்டது. இளவசரசர் ஆண்ட்ரூ மிகுந்த பணிவோடு அவளையும் பீயரையும் மாறி மாறிப் பார்த்தார். ஆகவே, அவளுக்கு இப்போது கொஞ்சம் கொஞ்சமாக நம்பிக்கை ஏற்பட்டது.

5 14

யாத்ரீக ஸ்திரீ சமாதானம் அடைந்தாள். ஆம்பிலாக்கஸ் என்ற பாதிரியைப் பற்றி நீண்ட நேரமாகப் பேசினாள். அவர் மிகுந்த பரிசுத்தமான வாழ்க்கையை நடத்தியதால், அவருடைய கைகள் சாம்பராணி வாசனைபோல மணம் வீசிற்று என்றாள். கடைசி தடவையாக அவள் கீவ் என்ற இடத்துக்கு போய் இருந்தபோது, பாதாள புதை

குழி சுரங்கத்துக்குப் போவதற்கு சாவிகளைக் கொடுப்பதாக அவளுக்குத் தெரிந்த சில பாதிரிகள் சொன்னார்களாம். அவள் தன்னுடன் காய்ந்த ரொட்டியை எடுத்துக்கொண்டு அங்கே போனாள். பாதாளச்சுரங்கத்திலுள்ள மகாத்மாக்களின் கல்லறை களின் பக்கத்தில் இரண்டு தினங்கள் அவள் இருந்தாள்.

'ஒருவரைப் பார்த்து சிறிது நேரம் பிரார்த்தனை செய்வேன். பின்னால் சிறிது சிந்தித்துவிட்டு, அப்புறம் இன்னொரு மகாத்மாவின் கல்லறைக்குப் போவேன். பின்னால் கொஞ்சம் தூங்கிவிட்டு மீண்டும் அந்தக் கல்லறைக்குப் போய் அங்கிருந்த ஞாபகச் சின்னங்களை முத்தமிடுவேன். அந்த இடம் அவ்வளவு அமைதியாகவும் மனோகரமாகவும் இருக்கிறபடியால், அங்கிருந்து வெளியே வர,வெளியே தேவலோக ஒளி இருந்தாலும் சரி, ஒருவரும் விரும்பமாட்டார்கள்.

அவள் பேசியதைச் சிரத்தையோடும், கவனத்தோடும் பீயர் கேட்டு வந்தார். இளவரசர் ஆண்ட்ரூ அறையை விட்டு வெளியே போனார். 'கடவுளின் குழந்தைகள்' தேநீரைச் சாப்பிட்டு முடிப்பதற்காக அவர்களை விட்டுவிட்டு, வரவேற்பறைக்கு இளவரசி மேரி பீயரை அழைத்துக்கொண்டு போனாள்.

'நீர் மிகுந்த அன்பாய் இருக்கிறீர்' என்று அவள் அவரிடம் சொன்னாள்.

'ஓ, அவளை புண்படுத்த வேண்டும் என்று உண்மையாகவே நான் விரும்பவில்லை. அவர்களை நான் மிக நன்றாக புரிந்துகொள்ளுகிறேன். அவர்களிடம் மிகுந்த மரியாதை உண்டு'

மௌனமாகவும், அன்பு கனிந்த புன்னகையோடும் இளவரசி மேரி அவரைப் பார்த்தாள்.

'வெகு காலமாக உம்மை நான் அறிவேன். ஒரு சகோதரர் மீது எவ்வளவு அன்பு உண்டோ, அவ்வளவு அன்பு உம்மிடமும் எனக்கு உண்டு' என்று அவள் சொன்னாள். 'ஆண்ட்ரூவைப் பற்றி நீர் என்ன நினைக்கிறீர்?' என்று அவளுடைய அன்பான வார்த்தைகளுக்குப் பதில் சொல்ல விடாமல், அவசரமாய் கேட்டாள். 'அவரைப் பற்றி எனக்கு மிகுந்த கவலை ஏற்பட்டிருக்கிறது. குளிர் காலத்தில் அவரின் உடல் சௌக்கியம் நன்றாய் இருந்தது. ஆனால் சென்ற வசந்த காலத்தில் அவருடைய காயம் மீண்டும் தொந்தரவு கொடுக்க ஆரம்பித்தது. அவருடைய உடம்பைத் தேற்றுவதற்காக, எங்கேயாவது போக வேண்டும் என்று டாக்டர் சொன்னார். அவருடைய ஆத்மீக விஷயங்களைப் பற்றியும் எனக்கு மிகுந்த பீதி ஏற்பட்டிருக்கிறது. பெண்களாகிய நாங்கள் துன்பங்கள் வந்தபோது

அழுது அழுது அவைகளைப் போக்கடிப்போம். ஆனால், அம்மாதிரி குணம் அவரிடம் கிடையாது. எல்லாவற்றையும் அவர் தமக்குள்ளாகவே அடக்கிவைத்துக்கொள்ளுகிறார். இன்று அவர் மகிழ்ச்சியாகவும், சந்தோஷமாகவும் இருக்கிறார். உம்முடைய விஜயத்தினால்தான் இவை ஏற்பட்டிருக்கின்றன. அவர் அம்மாதிரி அடிக்கடி இருப்பது இல்லை. வெளிநாட்டிற்குப் போகும்படி அவரை நீர் செய்யக் கூடுமானால்! அவருக்கு ஏதாவது வேலை இருந்துகொண்டே இருக்க வேண்டும். இம்மாதிரியான அமைதியான,ஒழுங்கான வாழ்க்கை அவருக்கு மிகுந்த கெடுதியைச் செய்யும். மற்றவர்களுக்கு இது தெரியாது. ஆனால் எனக்கு அது தெரியும்.'

முதிய இளவரசரின் வண்டி நெருங்கி வருவதைக்காட்டும் மணிகளின் சப்தங்கள் கேட்டன. அப்போது பத்து மணி இருக்கும். வேலைக்காரர்கள் முன் வாசலுக்கு ஓடினார்கள். இளவரசர் ஆண்ட்ரூவும், பீயரும் முற்ற மண்டபத்திற்குப் போனார்கள்.

'இது யார்?' என்று வண்டியிலிருந்து இறங்கியபோது, வயதான இளவரசர் பீயரைக் கேட்டார்.

'ஆ, ரொம்ப சந்தோஷம். என்னை முத்தமிடும்' என்று அந்த வாலிப அந்நியர் யார் என்பதைக் கேட்டுத் தெரிந்ததும் அவர் சொன்னார்.

முதிய இளவரசர் நல்ல சுபாவத்தோடு இருந்தார். மிகுந்த பிரியத்தோடு பீயரிடம் பேசினார்.

இராச் சாப்பாட்டிற்கு முன்பாக இளவரசர் ஆண்ட்ரூ தமது தந்தையின் படிப்பறைக்கு வந்தார். பீயருடன் அவர் காரமாக விவாதித்துக்கொண்டிருப்பதைக் கண்டார். யுத்தம் என்பதை இல்லாமல் போகக்கூடிய ஒரு காலம் வரும் என்று பீயர் சொல்லிக்கொண்டிருந்தார். அதை முதிய இளவரசர் ஒப்புக் கொள்ளாமல் கேலி செய்தார். ஆனால், கோபமும் கொள்ள வில்லை.

'மனித நரம்புகளில் ஓடும் ரத்தத்தை வெளியே எடுத்துவிட்டு , அதற்குப் பதிலாக தண்ணீரை நிரப்பும். அப்புறம்தான் யுத்தம் என்பதே இல்லாமல் இருக்கும். இதெல்லாம் கிழவிகளின் அசட்டுத் தனங்கள். கிழவிகளின் அசட்டுத்தனங்கள்' என்று அவர் சொன்னார். என்றாலும் மிகுந்த பிரியத்தோடு பீயரை அவருடைய தோளில் தட்டிக்கொடுத்து, இளவரசர் ஆண்ட்ரூ உட்கார்ந்திருந்த மேஜைக்கு சென்றார். இளவரசர் ஆண்ட்ரூ இந்த உரையாடலில் கலந்துகொள்ளப் பிரியப்படாமல், தமது தந்தை நகரத்திலிருந்து

கொண்டுவந்திருந்த கடிதங்களைப் பார்த்துக்கொண்டிருந்தார். முதிய இளவரசர் அவரிடம் சென்று, சில காரியங்களைப் பற்றி பேச ஆரம்பித்தார்.

'அந்த மார்ஷல், ஒரு கோமகன்; ராஸ்டோவ் என்பவர். அவர் அனுப்பவேண்டிய ஆட்களில் பாதிப்பேரைக்கூட அனுப்ப வில்லை. அவர் நகரத்திற்கு வந்து, டின்னருக்கு வரும்படி என்னை அழைத்தார். நான் அவருக்கு ஒரு அழகான டின்னர் கொடுத்தேன்... இங்கே இதைப் பார்... நல்லது, எனது பையனே' என்று தமது மகனைப் பார்த்து, முதிய இளவரசர் பேசிக்கொண்டிருந்தார். பீயரைத் தோளில் தட்டிக்கொடுத்தார். 'ஒரு சிறந்த பேர்வழி உனது நண்பர் நான் அவர் மீதும் பிரியம் கொள்ளுகிறேன். அவர் என் உள்ளத்தைக் கிளறுகிறார். புத்திசாலித்தனமான காரியங்களை ஒருவர் சொன்னாலும்,அவற்றை கேட்பதற்கு ஒருவருக்குப் பிடிப்பது இல்லை. ஆனால், இந்த ஆசாமி வெறும் குப்பைகளைப் பேசினாலும் கூட, ஒரு முதிய உள்ளத்தில் கிளர்ச்சி ஏற்படுகிறது. நல்லது,நீங்கள் போகலாம். நீங்கள் போங்கள். ஒருவேளை உங்களோடு வந்து இராச்சாப்பாடு நான் சாப்பிடலாம். மற்றொரு விவாதத்தை அப்போது வைத்துக்கொள்வோம். என்னுடைய குஞ்சு முட்டாளான இளவரசி மேரியோடு பிரியமாய் இரும்' என்று பீயர் போகும்போது சொன்னார்.

இளவரசர் ஆண்ட்ரூவின் நட்பில் உள்ள பலத்தையும், கவர்ச்சியையும் பால்டு ஹில்ஸுக்கு இப்போது வந்த பின்புதான் பீயர் முழுவதுமாக அறிந்தார். அவருடன் உள்ள தொடர்பில் அந்தக் கவர்ச்சி அவ்வளவு அதிகமாகக் காட்டப்படவில்லை. ஆனால் அவருடைய குடும்பத்தாருடன் கொண்ட தொடர்பில்தான் அந்த கவர்ச்சி முழுமையாய் விளங்கியது. கடுமையான அந்த முதிய இளவரசர், அமைதியான பயந்த இளவரசி மேரி, இவர்கள் இருவரையும் அவர் இன்னமும் நன்றாய் அறியாமல் இருந்தாலும் அவர்களுடைய ஒரு பழைய நண்பனைப்போல பீயர் உணர ஆரம்பித்தார். அவர்கள் எல்லாரும் ஏற்கனவே அவர் மீது பிரியம் கொள்ள ஆரம்பித்தார்கள். பயணிகளிடம் அவர் காட்டிய கண்ணியத்தைக்கண்டு, இளவரசி மேரி மனம் கவர்ந்தாள். தமது பிரகாசமான பார்வையால் அவரை நோக்கினாள். ஒரு வயதான அந்தக் குஞ்சு இளவரசர் நிக்கலஸ் கூட பீயரைப் பார்த்து புன்னகை கொண்டு, அவர் தன்னைத் தமது கைகளால் எடுத்துக்கொள்ளும்படி விட்டுவிட்டான். மைக்கேல் ஐவானாவிச்சும், குமாரி பௌரியனும், முதிய இளவரசருடன் பீயர் பேசிக்கொண்டிருந்த போது, இனிமையான புன்னகையோடு அவரைப் பார்த்தார்கள்.

இராச்சாப்பட்டிற்கு முதிய இளவரசர் வந்தார். பீயருக்காகவே தான் அவர் அங்கே வந்தார். அந்த வாலிபர் வந்திருந்த இரண்டு நாட்களிலும், அவர் மிகுந்த அன்பு காட்டினார். மீண்டும் வரவேண்டும் என்று சொன்னார்.

பீயர் புறப்பட்டுப் போய்விட்டார். அதன் பின்னால் அந்த வீட்டுக்காரர்கள் சந்தித்தபோது பீயரைப் பற்றிப் பேசினார்கள். புதிதாக வந்த ஒருவர் புறப்பட்டுப் போன பின்புதான் அவரைப் பற்றிய அபிப்பிராயங்களை மக்கள் சொல்வது உண்டு. அதே மாதிரி பீயரைப் பற்றியும் பேச ஆரம்பித்தார்கள். ஆனால் ஒருவர்கூட அவரைப்பற்றி நல்ல வார்த்தைகளைத் தவிர வேறு எதையும் சொல்லவில்லை. இம்மாதிரி நடப்பது அபூர்வம்.

# 5

## 15

நாஸ்டோவ் தமது ரஜா முடிந்து திரும்பினார். அவர் திரும்பிய பின்புதான், அவருக்கும் டெனைசாவுக்கும் அவருடைய பட்டாளம் முழுவதற்கும் இடையே இருந்த உறவு, எவ்வளவு நெருக்கமாய் இருந்தது என்பதை உணர்ந்தார்.

மாஸ்கோவில் அவருடைய வீட்டிற்குப் பக்கத்தில் அவர் நெருங்கியபோது எம்மாதிரி உணர்ச்சி கொண்டாரோ, அதே மாதிரி உணர்ச்சியை, தமது பட்டாளத்தை நெருங்கியபோதும் கொண்டார். சீருடையில் பொத்தான்களை அணியாமல் தமது பட்டாளத்தைச் சேர்ந்த ஒரு குதிரை வீரர் நின்றுகொண்டிருந்ததை முதலில் பார்த்தார். சிவப்பு தலைமுடியை உடைய டெமன்டீவ் என்பவரையும் அவர் அடையாளம் கண்டுகொண்டார். பழுப்பு நிறக் குதிரைகள் கட்டிப்போட்டிருப் பதையும் பார்த்தார். அச்சமயம் லாவ்ருஷ்கா சந்தோஷத்தோடு தனது எஜமானரிடம், 'கோமகன் வந்துவிட்டார்' என்று கூச்சலிட்டான். படுக்கையில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்த டெனைசாவ், அந்தக் களிமண் குடிசையிலிருந்த அவரை ஆலிங்கனம் செய்வதற்காக, அலங்கோலமாய் வெளியே ஓடிவந்தார். அங்கிருந்த அதிகாரிகளும் அங்கு கூடி புதிதாய் வந்தவரை வரவேற்றார்கள். ராஸ்டோவ் தமது வீட்டிற்கு வந்தபோது, எப்படி அவருடைய தயாயாரும் தகப்பனாரும் சகோதரியும் அவரை ஆலிங்கனம் செய்தபோது, அவருக்கு மகிழ்ச்சிக் கண்ணீர் பொங்கி தொண்டை அடைத்ததோ அதே மாதிரி இப்போதும் ஏற்பட்டு அவரால் பேச முடியவில்லை. பட்டாளம்கூட ஒரு வீடுதான். பெற்றோர்களின் வீட்டைப்

போலவே, மாற்ற முடியாத அருமையும் மதிக்க முடியாத மதிப்பும் கொண்டதுதான்.

அவர் கமாண்டரிடம் போய் ஆஜரானார். முன்னால் அவர் பார்த்த அதே பட்டாளத்தில், அவருக்கு வேலை கொடுக்கப்பட்டது. அவர் தமது அலுவலை மேற்கொண்டு, குதிரைகளுக்கான தீனியை சேகரிப்பதற்காக வெளியே போனார். மீண்டும் தமது பட்டாளத்திலுள்ள மற்ற விஷயங்களையும் கவனிக்கலானார். ஒரே மாதிரி வழியில்தாம் போக வேண்டியிருப்பதையும், தமது சுதந்திரம் பறிபோய்விட்டதைப் பற்றியும் அவர் உணர்ந்தார். ஆனால், அதே மாதிரியான சாந்தத்தையும் தார்மீக ஆதரவையும், அவர் தமது வீட்டில் இருக்கும்போது எம்மாதிரி உணர்ந்தாரோ, அதே மாதிரி இங்கேயும் உணர்ந்தார். வெளி உலகத்தில் சரியான காரியம் எது என்று தெரியாமல் தவறான தீர்மானத்தைச் செய்யவேண்டியது இருக்கலாம். ஆனால் இங்கே, பட்டாளத்தில் அம்மாதிரி எதுவும் கிடையாது. தமது காரியங்களைப்பற்றி விளக்கிச் சொல்வதற்கு, இங்கே ஒரு சோனியாவும் கிடையாது. அந்த இடத்திற்குப் போக வேண்டும், இந்த இடத்திற்குப் போகக்கூடாது என்ற காரியங்களும் இங்கே கடையாது. 24 மணி நேரத்தையும் பற்பல விதமான வழிகளில் செலவிடுவதுபோல, இங்கே செய்ய முடியாது. வெளியே கணக்கற்ற மக்கள் இருந்தபோதிலும், ஒருவர்கூட மற்றவரை விட நெருக்கமாகவோ அல்லது தூரமாகவோ இருப்பதில்லை. அம்மாதிரி இங்கு எதுவும் கிடையாது. வெளி உலகத்தில் தமது தந்தையுடன் இருந்ததைப்போல நிச்சயமற்ற, எண்ணிக்கையற்ற, பண விவகாரங்கள் இங்கே கிடையாது. டோலாகாவிடம் அவர் பயங்கரமாய் தோற்றதைப்போல, தோல்விகளும் இங்கே கிடையாது. இங்கே பட்டாளத்தில் எல்லாம் தெளிவாகவும் எளிதாகவும் இருந்தன. முழு உலகமும், சமமற்ற இரண்டு பிரிவாக பிரிக்கப்பட்டிருந்தது. ஒன்று, அங்குள்ள பாவ்லாகிராட் பட்டாளம். மற்றொன்று, அந்த ராணுவத்திலுள்ள மற்ற பட்டாளங்கள், வேறு எதையும்பற்றி, இவருக்கு எவ்விதக் கவலையும் கிடையாது. இவருடைய பட்டாளத்தில் ஒவ்வொன்றும் வரையறுக்கப்பட்டு இருந்தன. உதவி அதிகாரியார் காப்டன் யார், நல்ல மனிதன் யார், கெட்ட மனிதன் யார், எல்லாவற்றையும்விட நல்ல தோழர் யார், இவையெல்லாம் தெளிவாய் இருந்தன. பட்டாளத்தில் உள்ள கடைக்காரர், கடனுக்குச் சரக்குகள் கொடுப்பார். நான்கு மாதங்களுக்கு ஒரு தடவைதான், ஒவ்வொருவருக்கும் சம்பளம் வரும். ஆகவே, எதைப்பற்றியும் நினைப்பதற்கோ, தீர்மானிப்பதற்கோ அவசியமே கிடையாது. கெட்டது என்று பாவ்வலாகிராட் பட்டாளத்தில் எதைச்

சொல்கிறார்களோ, அதைச் செய்யாமல் இருப்பது ஒன்றுதான், ஒவ்வொருவரும் பின்பற்றவேண்டிய வேலை. ஒரு உத்தரவு கொடுக்கப்பட்டவுடன், தெளிவாகவும், நிச்சயமாகவும் சொல்லப்பட்டுள்ள அந்த உத்தரவை நிறைவேற்றிவைக்க வேண்டியதுதான், ஒருவருடைய வேலை. இவ்வளவையும் செய்துவிட்டால், மற்றவையெல்லாம் நன்றாகவே இருக்கும்.

இம்மாதிரியான வரையறுக்கப்பட்ட நிலைமைகளைக்கொண்ட இந்தப் பட்டாளத்தின் வாழ்க்கையில் மீண்டும் அவர் நுழைந்த பின்பு, ஒரு களைப்பான மனிதர் படுக்கையில் படுத்தவுடன் எப்படி சந்தோஷமாகவும் சிரமபரிகாரமாகவும் நினைப்பாரோ, அதே மாதிரி ராஸ்டோவும் நினைத்தார். இந்தப் படையெடுப்பில் பட்டாளத்திலுள்ள வாழ்க்கை, அவருக்கு மிகுந்த ரம்மியமாயிருந்தது. ஏனெனில், டோலாகாவிடம் அவர் இழந்ததற்குப் பின்னால், தம்முடைய தவறுக்காகப் பரிகாரம் செய்யவேண்டுமென்று அவர் முடிவு செய்துகொண்டார். அதாவது ஒரு முதல் தரமான தோழராகவும், முதல்தர அதிகாரியாகவும், எல்லா விதங்களிலும் ஒரு சிலாக்கியமான மனிதராகவும் தாம் நடந்து, தம்முடைய குற்றத்திற்குப் பரிகாரம் தேட வேண்டுமென்று அவர் நினைத்தார். அம்மாதிரி முதல்தரமான மனிதராக மாறுவது இந்த உலகத்தில் மிகுந்த கஷ்டமான காரியம். ஆனால், பட்டாளத்தில் அது சாத்தியமான காரியம். அவருடைய குடும்பத்தார்கள் அவரை அந்த மனக்கஷ்டத்திலிருந்து தேற்றுவதற்கு எவ்வளவோ சொன்னார்களென்றாலும், அவரால் அதை மறக்க முடியவில்லை.

தமது நஷ்டத்தை ஐந்து வருஷங்களில் தமது பெற்றோருக்கு திரும்பக் கொடுத்துவிடுவதென்று அவர் தீர்மானித்தார். வருஷத்திற்கு அவருக்கு 10,000 ரூபிள்கள் வந்துகொண்டிருந்தன. இப்போது 2,000 ரூபிள்களை மட்டும் தாம் எடுத்துக்கொண்டு, மீதமுள்ளதை தமது பெற்றோரிடம் பட்ட கடனுக்கக் கொடுப்பது என்று முடிவு செய்தார்.

புல்டுஸ்க்கிலும், புருஸிஷ்- ஐலாவிலும் நடந்த யுத்தங்களில், பல முன்னேற்றங்களையும் பின் ஓட்டங்களையும் செய்து முடித்தபின்பு, நமது ராணுவம் பார்டென்ஸ்டைன் என்ற இடத்தில் கூடி நின்றது. சக்கரவர்த்தியின் விஜயத்திற்காகவும், புதிய படையெடுப்பு ஆரம்பிப்பதற்காகவும் அது காத்துக் கொண்டிருந்தது.

அந்த ராணுவத்தில் 1805-ம் வருஷத்துப் படையெடுப்பில் கலந்துகொண்ட பாவ்லாகிராட் பட்டாளத்திற்கு வேண்டிய நபர்களை, ருஷ்யாவில் சேகரித்து வந்தார்கள். ஆனால், அந்த

படையெடுப்பின்ஆரம்ப போராட்டங்களில் வந்து கலந்துகொள்ள அவர்களால் முடியவில்லை. தாமதமாய் வந்தார்கள். அவர்கள் புல்டுஸ்கியிலோ அல்லது புரூஸிஷ்- ஐலாவிலோ வந்து சேர்ந்து கொள்ளவில்லை. அந்தப் படையெடுப்பின் பிற்பாதிச் சண்டையில்தான் அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்களை பிளாடாவ் பிரிவில் சேர்த்தார்கள்.

பிளாடாவ் பிரிவு ராணுவத்தின் மூல பலத்திற்கு புறம்பாக, சுயேச்சையாக நடந்து வந்தது. பல தடவைகளில் பாவ்லாகிராட் பட்டாளத்தின் சில பிரிவுகள் எதிரியுடன் துப்பாக்கிச் சண்டைபோட்டு, பல வீரர்களைக் கைது செய்து, மார்ஷல் அவுடினாட்டின் வண்டிகளையும் கைப்பற்றினார்கள். ஏப்ரல் மாதத்தில் முற்றிலும் நாசமாய்ப்போன ஒரு ஜெர்மன் கிராமத்திற்குப் பக்கத்தில், சில வாரங்கள் பாவ்லாகிராடுகள் அங்கிங்கு போகாமல் நிறுத்திவைக்கப்பட்டார்கள்.

உறைபனி முடியும் காலம் வந்தது. எங்கு பார்த்தாலும் சேறாகவும் குளிராகவும் இருந்தது. ஆறுகளில் உள்ள ஐஸ் கட்டிகள் வெடித்தன. ரஸ்தாக்கள் போக்கு வரவிற்கு தகுதியற்றதாய் இருந்தன. பல தினங்களாக பட்டாளத்திலுள்ள வீரர்களுக்கு உணவுப் பொருள்களோ, அல்லது குதிரைகளுக்குத் தீனிகளோ சப்ளை செய்யப்படவில்லை. வண்டிகள் வர முடியாமலிருந்தபடியால், வீரர்கள் பிரிந்து போய், மக்கள் காலி செய்துவிட்டுப்போன கிராமங்களுக்குச் சென்று, உருளைக்கிழங்கு கிடைக்குமாவென்று தேடினார்கள். ஆனால் இதுகூட அவர்களுக்கு மிகச் சொற்பமாகவே கிடைத்தது. சாப்பிடக்கூடியவைகளையெல்லாம் சாப்பிட்டுத் தீர்த்துவிட்டபடியால், கிராம குடிகள் அங்கிருந்து ஓடிவிட்டார்கள். யாராவது அங்கே தங்கியிருந்தால், அவர்கள் பிச்சைக்காரர்களைவிட மோசமான நிலைமையிலிருந்தபடியால், அவர்களிடமிருந்து பறிக்கக்கூடியது எதுவுமில்லை. வழக்கமாகவே சிப்பாய்கள் அனுதாபம் அற்றவர்களாய் இருப்பார்கள். அப்படியிருந்தும், இப்போது பிச்சைக்காரர்கள் போன்றிருந்த மக்களைப் பார்த்ததும், அவர்களிடம்பறிப்பதை விட்டு தங்களிடம் உள்ளதைச் சிறிது கொடுத்தார்கள்.

பாவ்லாகிராட் பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள் யுத்தத்தில் கலந்துகொண்டதனால், காயமடைந்தவர்கள் இரண்டே பேர்கள்தான். ஆனால், பசியினாலும், பிணியினாலும் பாதிக்கு மேற்பட்டோர்களை பட்டாளம் இழந்தது. ஜுரத்தினால் கஷ்டப்படுகிற சிப்பாய்களோ, அல்லது கேவலமான உணவினால் வீங்கிப்போன சிப்பய்களோ, தங்களுடைய கால்களை

இழுத்துவைத்து நடக்கக்கூட முடியாத சிப்பய்களோ, தாங்கள் யுத்த முனைக்குப் போகத் தயாராய் இருந்தார்களேயொழிய ஆஸ்பத்திரிகளுக்கப் போக விரும்பவில்லை. ஏனெனில், ஆஸ்பத்திரிகளுக்குப் போனால் சாவு நிச்சயமென்பது அவர்களுக்குத் தெரியும். இளவேனிற்காலம் ஆரம்பமானதும், பூமியிலிருந்து செடிகள் முளைக்க ஆரம்பித்தன. ஆஸ்பராகஸ் என்ற தண்ணீர் விட்டான் கிழங்குச் செடிகளைப்போல அவை தோன்றின. அற்றிற்கு 'மாஷ்கோவின் இனிப்பான கிழங்கு' என்று எதற்காகவோ சிப்பாய்கள் பேரிட்டார்கள். அது மிகவும் கசப்பாய் இருந்தது. என்றாலும் வயல்களில் அவர்கள் சுற்றித் திரிந்து, தங்கள் உடைவாள்களினால் அவற்றைத் தோண்டியெடுத்து உண்டு வந்தார்கள். அவை கெடுதலானவை என்றும், அவற்றை உண்ணக்கூடாது என்றும், ராணுவத்தில் உத்தரவு போட்டிருந்தும், சிப்பாய்கள் அதைக் கவனிக்கவில்லை. அதை உண்டுவந்ததால், ஒரு புதிய வியாதி அங்கே சிப்பாய்களிடம் தோன்ற ஆரம்பித்தது. கால்களும், கைகளும், முகமும் வீங்கலாயின. அந்தக் கிழங்கை உண்டுதான் இந்த வியாதி ஏற்பட்டது என்று டாக்டர்கள் சொன்னார்கள். இப்படியெல்லாம் இருந்துங்கூட, டெனைசாவின் பட்டாளத்திலுள்ள வீரர்கள், இந்த மாஷ்காவின் இனிப்புக் கிழங்குகளையே முக்கியமாக உண்டு வந்தார்கள். ஏனெனில், அவர்களுக்கு பிஸ்கோத் கொடுத்து இரண்டு வாரங்கள் ஆயின. அப்போதும் ஒரு ஆளுக்கு அரை பவுண்டு வீதமே கொடுத்தார்கள். அவர்களுக்கு கடைசியாகக் கொடுத்த உருளைக்கிழங்குகளும் முளைவிட்டுக் கடினமாய் போயின.

வீடுகளின் கூரைகளைப் பிரித்து அந்த வைக்கோல்களை குதிரைகளுக்கு இரண்டு வாரங்கள் தீனியாகப் போட்டு வந்தார்கள். ஆகவே, குதிரைகள் பயங்கரமான விதத்தில் மெலிந்து காணப்பட்டன.

இம்மாதிரியான கஷ்டங்களிருந்தபோதும், சிப்பாய்களும் அதிகாரிகளும் வழக்கம்போல வாழ்ந்து வந்தார்கள். அவர்களுடைய முகங்கள் வீங்கியிருந்தபோதிலும், சீருடைகள் கிழிந்திருந்த போதிலும், மேஜர் அழைப்புக்கு அந்த குதிரை வீரர்கள் ஒழுங்காக அணிவகுத்து நின்றும், மற்ற காரியங்களை ஒழுங்காய் கவனித்து வந்தும், தங்கள் குதிரைகளை ஒழுங்காய் தேய்த்துவிட்டும், ஆயுதங்களை நன்றாய் பாலிஷ் செய்தும் வந்தார்கள். குதிரை தீனிகளுக்குப் பதிலாக, வீடுகளின் கூரைகளிலுள்ள வைக் கோல்களை இழுத்துக் கொண்டுவந்தார்கள். சப்பிடுவதற்காக அண்டாக்களைச் சுற்றி அவர்கள் உட்கார்ந்து பசியோடு எழுந்த

போதிலும், அவர்களுக்குக் கிடைத்த மோசமான உணவைப் பற்றியும், பசியைப் பற்றியும் தமாஷ் செய்வதை மட்டும் அவர்கள் விடவில்லை. தங்களுக்குள்ள அவகாசமான வேளைகளில், வழக்கம்போல சொக்கப்பனைகள் கொளுத்துவது, நிர்வாணமாக அதன் முன்பு நின்று காய்ந்துகொள்வதும், புகை குடிப்பதும், கெட்டுப்போன உருளைக்கிழங்குகளை மென்று சாப்பிடுவதும், பாட்டெம்கினும் சுவோராவும் நடத்திய படையெடுப்புகளைப் பற்றிய கதைகளைக் கேட்டுக்கொண்டும் சொல்லிக்கொண்டும் இருப்பதும், அல்லது அலேஷாவின் கதைகளைக் கேட்பதும், அல்லது பாதிரியின் வேலைக்காரனான மிக்கோகாவுடன் பேசுவதுமாக நேரங்களைக் கழித்து வந்தார்கள்.

வழக்கம்போல அதிகாரிகள் இருவர்களாகவோ மூவர்களாகவோ சேர்ந்து, கூரையில்லாத பாதி பாழடைந்த வீடுகளில் வசித்து வந்தார்கள். தங்களுடைய வீரர்களுக்கு வேண்டிய உணவுகளையும், உருளைக் கிழங்குகளையும், வைக்கோல்களையும் சேகரிப்பதற்கு, பெரிய அதிகாரிகள் முயற்சித்தார்கள். ஆனால், வாலிபர்கள் மேலே சொல்லியதைப்போல் தங்கள் நேரங்களைச் செலவிட்டும், சீட்டு விளையாடியும் வந்தார்கள். அவர்களிடம் ஏராளமாகப் பணம் இருந்தது. ஆனால், உணவுதான் கிடைக்கவில்லை. அந்தப் படை எடுப்பின் போக்கைப்பற்றி அவர்கள் பேசிக்கொள்வதே அபூர்வம். ஏனெனில், நிச்சயமாக எதுவும் தெரியவில்லை. மற்றொரு காரணம், அந்தப் படையெடுப்பு பொதுவாக மிகுந்த மோசமாக நடந்து வருகிறது என்று அவர்களுக்கு ஒரு நிச்சயமில்லாத உணர்ச்சி இருந்து வந்தது.

முன்போலவே ராஸ்டோவ் டெனைசாவோடு வசித்து வந்தார். அவர்கள் ரஜாவிலிருந்து திரும்பியது முதல் எப்பொழுதையும்விட அதிகமான நட்பாய் இருந்தார்கள். ராஸ்டோவின் குடும்பத்தைப் பற்றி டெனைசாவ் எப்பொழுதும் பேசுவது இல்லை. ஆனால், தமது கமாண்டர் தம்மிடம் காட்டும் கனிவான அந்த நட்பிலிருந்து, அந்தக் கமாண்டர் நட்டாஷாமீது கொண்டுள்ள நட்பை பலப்படுத்தக் காரணமாய் இருந்தது என்று உணர்ந்தார். ஆபத்தான இடங்களுக்கு ராஸ்டோவை டெனைசாவ் கூடியவரை அபூர்வமாய்த்தான் அனுப்புவார். ஒரு சண்டைக்குப் போய் திரும்பி வந்தபின்பு, அவர் சௌக்யமாகத் திரும்பியதைக் கண்டு மகிழ்ச்சியோடு வரவேற்பார். குதிரை தீனிக்காக ராஸ்டோவ் சுற்றி வந்தபோது, ஒரு பாழடைந்த கிராமத்தில் உணவுப் பொருள் கிடைக்குமா என்ற விசாரிக்க வந்தார். அங்கே ஒரு குடும்பத்தை ராஸ்டோவ் கண்டார். போலந்து வாசிகளான ஒரு வயோதிகரும்,

அவருடைய குமாரியும் அவள் கையில் ஒரு குழந்தையும் இருந்தனர். அவர்கள் பாதி உடைகள்கூட இல்லாமல், பசியால்வாடி, கால்களினால் நடக்க முடியாமல், மிகுந்த பலவீனமாய் இருந்தார்கள். ஒரு வண்டியை ஏற்பாடு செய்வதற்குக்கூட அவர்களிடம் பணம் இல்லாமலிருந்தது. அவர்களை ராஸ்டோவ் தாம் தங்கியிருந்த இடத்திற்கு அழைத்து வந்து, தம்முடைய ஜாகையிலேயே அமர்த்தி வைத்தார். அந்த வயோதிகர் சௌக்கியமாகிற வரையில், சில வாரங்கள் அங்கேயே வைத்துக்கொண்டிருந்தார். அவர்களுடைய தோழர்களில் ஒருவர், ஒரு நாள் பெண்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்போது, ராஸ்டோவை புண்படுத்த ஆரம்பித்தார். அங்குள்ள மற்றவர்களைவிட, ராஸ்டோவ்தான் மிகுந்த தந்திரக்காரர் என்றும் அவரிடமுள்ள அந்த அழகிய போலிஷ் பெண்ணை, தம்மிடம் அறிமுகப்படுத்தி வைப்பதால் அவருக்கு என்ன நஷ்டம் என்று கேட்டார். இந்தப் பேச்சை ராஸ்டோவ் ஒரு அவமதிப்பாக எடுத்துக்கொண்டு கோபத்தினால் பொங்கினார். அந்த அதிகாரியைப் பார்த்து இனிமையற்ற பல விஷயங்களை அவர் சொன்னார். அச்சமயத்தில் டெனைசாவ் தலையிடாமல் இருந்திருந்தால், அது ஒரு டுயல் சண்டையில் வந்து முடிந்திருக்கும். அந்த அதிகாரி போன பின்பு டெனைசாவ் அவருடைய முன்கோபத்திற்காகக் கடிந்தார். அந்தப் போலிஷ் பெண்ணிடம் ராஸ்டோவுக்கு எவ்விதமான உறவு என்பதை அவர்கூட அறியார். ராஸ்டோவ் அதற்குப் பதில் சொன்னார்.

‘நீர் எதுவேண்டுமானாலும் சொல்லும்... அவள் எனக்கு ஒரு சகோதரியைப் போன்றவள். ஆகவே அந்த அதிகாரி பேசியது என்னை எம்மாதிரி துன்புறுத்தியது என்பதை என்னால் சொல்ல முடியாது... ஏனென்றால்... நல்லது, அதுதான் காரணம்.’

டெனைசாவ் அவருடைய தோளில் தட்டிக்கொடுத்துவிட்டு, ராஸ்டோவைப் பார்க்காமல், அந்த அறையிலேயே வேகமாக முன்னும் பின்னும் நடந்து வந்தார். ஆழ்ந்த உணர்ச்சி கொண்டிருக்கிற வேளைகளில், அவர் அப்படிச் செய்வது வழக்கம்.

‘ஆ, ராஸ்டோவ்களான நீங்கள், எம்மாதிரியான கோபக்காரர்கள்!’ என்று முனங்கினார். அவருடைய கண்களில் கண்ணீர் இருப்பதை ராஸ்டோவ் கவனித்தார்.

# 5
## 16

சக்கரவர்த்தி விஜயம் செய்யப்போகிறா ரென்ற செய்தியைக் கேட்டு, ஏப்ரல் மாதத்தில் துருப்புகள் உற்சாகம் அடைந் தார்கள். பார்டென்ஸ்டைன் என்ற இடத்தில் சக்கரவர்த்தி நடத்திய அணிவகுப்பு காட்சியில், ராஸ்டோவ் கலந்து கொள்வதற்கு சந்தர்ப்பமில்லை. ஏனெனில், அந்த இடத்திலிருந்து வெகு தூரத்தில் பாவ்லாகிராட் பட்டாளம் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

அவர்கள் அங்கு கூடாரம் அடிக்காமல், ஜாகைகளில் தங்கி வந்தார்கள். ஒரு மண் குடிசையை சிப்பாய்கள் கட்டி, மரக் கிளைகளை அதன் கூரையாக அமைத்திருந்தார்கள். அதில்தான் ராஸ்டோவும் டெனைசாவும் தங்கிவந்தார்கள் அந்தக் குடிசையை பின்வரும் விதத்தில் அமைத்தார்கள். அந்த அமைப்பு அச்சமயம் பழக்கத்தில் இருந்து வந்தது. அதாவது:

3.5 அடி அகலத்திலும், 4 அடி 8 அங்குல ஆழத்திலும், 8 அடி நீளத்திலும் முதலில் ஒரு அரணை வெட்டுவார்கள். அந்த அரணின் ஒரு பக்கத்தில் வாசற்படிகள் வெட்டி விடப்பட்டிருக்கும். இந்தப் படிகள்தான் உள்ளே நுழைவதற்கு வழியாக இருக்கும். அந்த அரண்தான் அறையாக விளங்கும். படைப் பிரிவின் கமாண்டர் போன்ற அதிருஷ்டசாலிகளுக்கு அங்கே ஒரு சௌகரியம் உண்டு. அதாவது, வாசலுக்கு எதிராக மற்றொரு பக்கத்தில் கழிகளின் மீது ஒரு பலகையை போட்டு, அதை மேஜையாக அவர்கள் உபயோகித்துக்கொள்ளுவார்கள். அந்த அரணின் இரண்டு பக்கங்களிலும் 2.5 அடி அகலத்தில் பூமி வெட்டி விடப் பட்டிருக்கும். இதைத் தங்கள் படுக்கையாகவோ, சோபாவாகவோ உபயோகப்படுத்திக் கொள்ளுவார்கள். அந்த அரணின் மத்தியில், ஒருவர் எழுந்து நின்றால் தலையில் இடிக்காத விதத்தில், கூரை போடப்பட்டிருக்கும். அந்த மேஜைக்கு சமீபத்தில் படுக்கையை போட்டுக்கொண்டால், படுக்கையில் எழுந்து உட்கார்ந்திருக்கக்கூட இடமிருக்கும். டெனைசாவ் பட்டாளத்திலுள்ள சிப்பாய்கள் அவர் மீது மிகுந்த பிரியம் கொண்டிருந்தபடியால், அவர் சொகுசாக வாழ்ந்து வந்தார். அந்தக் கூரையின் ஒரு பக்கக் கோடியில் ஒரு பலகையை வைத்து அதில் ஒரு உடைந்த கண்ணாடியை இணைத்து, ஜன்னல் மாதிரி சிப்பாய்கள் செய்து வைத்திருந்தார்கள். குளிர் அதிகமாயிருந்தால், சிப்பாய்களின் கணப்பு மூட்டங்களிலிருந்து ஒரு இரும்புத் தகட்டில் தீ கங்குகளை கொண்டுவந்து வாசல்படியில்- வரவேற்பறையல்- வைப்பார்கள். குடிசையின்

அந்தப் பகுதியை டெனைசாவ் அப்படித்தான் குறிப்பிடுவார். அச்சமயம் அங்கே வெதுவெதுப்பாய் இருந்தபடியால், டெனைசாவ், ராஸ்டோவுடன் எப்போதுமே வந்து பேசிக் கொண்டிருக்கும் அதிகாரிகளில் சிலரும் அங்கே உட்கார்ந்திருந் தார்கள். அச்சமயம் ஷர்ட்டுகள் மட்டும் அணிந்திருந்தார்கள்.

ஏப்ரல் மாதத்தில் ராஸ்டோவ் உத்தரவு அதிகாரி வேலையில் போடப்பட்டார். ஒரு நாள் காலையில், இரவு முழுவதுமாக வேலைசெய்துவிட்டு திரும்பி ஏழுமணிக்கும் எட்டு மணிக்குமிடையில் வந்தார். தீ கங்குகளைக் கொண்டு வரும்படி அவர் சொன்னார். மழையில் நனைந்த தம்முடைய உள் சட்டைகளைக் களைந்துவிட்டு, பிரார்த்தனை செய்த பின்பு தேநீர் பருகினார். அதன் பின்னால், அவர் கொஞ்சம் உஷ்ணம் அடைந்து தம்முடைய மேஜை மீதுள்ள சாமான்களை ஒழுங்குபடுத்தினார். காற்றினால் அவருடைய முகம் சிவந்திருந்தது. அவர் உடம்பில் ஷர்ட்டைத் தவிர வேறு எதுவுமில்லை. தமது கைகளை தலைக்குக் கீழாக வைத்து மல்லாந்து படுத்தார். தாம் வேவு பார்த்து வந்த வேலைக்காக இன்னும் சில தினங்களில் தமக்கு பதவி உயர்வு சாத்யமாகும் என்பதை அவர் மகிழ்ச்சியுடன் சிந்தித்து வந்தார். வெளியே எங்கேயோ போயிருந்த டெனைசாவுடன் அவர் பேச விரும்பியதால் அவர் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

திடீரென்று ஒரு நடுக்கமான குரலில் குடிசைக்குப் பின்னால் டெனைசாவ் கூச்சலிட்டது கேட்டது. அவர் மிகுந்த பரபரப் படைந்ததாகத் தோன்றியது. அவர் யாருடன் பேசிக்கொண்டிருக் கிறார் என்பதை அறிவதற்காக ராஸ்டோவ் ஜன்னல் வழியாகப் பார்த்தார். அங்கே ஜாகை வசதி அதிகாரி டாப்சீங்காவுடன் அவர் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டார்.

'அந்த மஷ்கா கிழங்குகளை அவர்கள் உண்ணாதபடி தடுக்க வேண்டுமென்று நான் உனக்கு உத்தரவு கொடுத்திருந்தேன்' என்று டெனைசாவ் கூச்சலிட்டார். 'லாஜார்சுக் என்பவன் வயல் களிலிருந்து அந்தக் கிழங்குகளை கொண்டுவருவதை நானே என்னுடைய கண்களால் பார்த்தேன்.'

'மேன்மை தங்கியவரே, நான் திரும்ப திரும்ப உத்தரவு கொடுத்துக்கொண்டேதான் இருக்கிறேன். ஆனால் அவர்கள் கீழ்ப்படிகிறதில்லை' என்றார் அந்த ஜாகை அதிகாரி.

ராஸ்டோவ் மீண்டும் தமது படுக்கையில் படுத்து, மனத் திருப்தியோடு யோசித்துக்கொண்டிருந்தார். 'அவர் என்னவேண்டு மானாலும் சந்தடியும் பரபரப்பும் செய்து கொண்டிருக்கட்டும்.

என்னுடைய வேலை முடிந்துவிட்டது. நான் சௌக்கியமாக படுத்திருக்கிறேன்' என்று எண்ணினார். டெனைசாவின் சேவகனான அந்த தந்திரமான, தைரியமான லாவ்ருஷ்காவின் குரல் அவருக்குக் கேட்டது. அதோடு ஜாகை வசதி அதிகாரியின் குரலும் கேட்டது. பிஸ்கோத்துகள், காளைமாடுகள், சரக்கு ஏற்றிய வண்டிகள் ஆகியவைகளைப்பற்றி, லாவ்ருஷ்கா வெளியே சாமான்கள் வாங்கப்போன இடத்தில்தான் கண்டதைப் பற்றி சொல்லிக்கொண்டிருந்தான்.

அப்புறம் தூரமாகவும், இன்னும் அதிக தூரமாகவும் டெனைசாவின் குரல், ' இரண்டாவது பட்டாளப் பிரிவினர்களே, சேணத்தில் ஏறுங்கள்' என்று உத்தரவிடுவது கேட்டது.

'இப்போது அவர்கள் எங்கே போகப்போகிறார்கள்?' என்று ராஸ்டோவ் எண்ணினார்.

ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு டெனைசாவ் குடிசைக்குள் வந்தார். சேறு நிறைந்த தமது ஜோடுகளோடு படுக்கையில் அமர்ந்து, தமது சுங்கானைப் பற்ற வைத்தார். தமது சாமன்களைக் கோபத்தோடு அங்குமிங்கும் வீசினார். தமது சவுக்கை எடுத்துக் கொண்டார். உடைவாளை மாட்டிக்கொண்டு மீண்டும் வெளியே போனார். அவர் எங்கே போகிறார் என்று ராஸ்டோவ் கேட்டதற்கு, கோபமாகவும், தெளிவில்லாமலும், ஏதோ ஒரு வேலையாகப் போவதாகப் பதில் சொன்னார்.

'என்னைப் பற்றிப் பின்னால் கடவுளும் நமது பெரிய சக்கரவர்த்தியும் தீர்ப்புக் கூறிக்கொள்ளட்டும்' என்று வெளியே போகும்போது டெனைசாவ் சொன்னார். சகதி வழியாகப் பல குதிரைகள் ஓடும் குளம்படி ஓசையை ராஸ்டோவ் கேட்டார். டெனைசாவ் எங்கே போகிறார் என்பதைக் கண்டுபிடிப்பதற்குக்கூட ராஸ்டோவ் சிரமம் எடுத்துக்கொள்ளவில்லை. தமது படுக்கையில் வெதுவெதுப்பாக அவர் படுத்திருந்தபடியால் அயர்ந்து தூங்கிவிட்டார். மாலைவரையில் அந்தக் குடிசையை விட்டு வெளியே வரவில்லை. இன்னும் டெனைசாவும் திரும்பி வரவில்லை. சீதோஷ்ண நிலை சௌகரியமாய் இருந்தது. அடுத்து குடிசைக்குப் பக்கத்தில் இரண்டு அதிகாரிகளும் ஒரு தொண்டரும் ஸ்வாய்கா என்ற விளையாட்டை விளையாடிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் சிரித்துக்கொண்டு, சகதியில் மறைந்திருந்த துண்டு துரும்புகளை எடுத்து வீசி எறிந்துகொண்டிருந்தார்கள். அவர்களோடு ராஸ்டோவும் சேர்ந்துகொண்டார். அவர்கள் விளையாடிக்கொண்டிருந்தபோது, சில சரக்கு வண்டிகள் அவர்களைப் பார்த்து வருவதையும், அவற்றின் பின்னால்

எலும்பாய் மெலிந்திருந்த குதிரைகள் மீது 15 குதிரை வீரர்கள் வருவதையும் அவர்கள் கண்டார்கள். அந்த வண்டிகளைக் காவல் காத்துக் கொண்டு வந்த குதிரை வீரர்கள், எல்லைக் கயிற்றுக்கு வந்ததும் நின்றார்கள். பல குதிரை வீரர்கள் அவர்களைச் சுற்றி நின்றுகொண்டார்கள்.

'இதோ பாருங்கள்! உணவுப்பொருள்கள் இல்லையென்று டெனைசாவ் கவலைப்பட்டுக்கொண்டிருந்தார். இதோ, உணவுப் பொருள்கள் வந்துவிட்டன' என்றார் ராஸ்டோவ்.

'ஆமாம், வந்துவிட்டன. நம்முடைய சிப்பாய்கள் இப்போது மகிழ்ச்சியாய் இருப்பார்கள் அல்லவா?' என்றார்கள் அந்த அதிகாரிகள். அந்த குதிரை வீரர்களுக்குச் சிறிது பின்னால் டெடைசாவ் இரண்டு காலாட் படை அதிகாரிகளுடன் பேசிக் கொண்டுவந்துகொண்டிருந்தார்.

அவர்களைச் சந்திப்பதற்காக ராஸ்டோவ் போனார்.

'கேப்டனே, நான் உம்மை எச்சரிக்கிறேன்' என்று அந்த அதிகாரிகளில் குட்டையாகவும் மெலிந்தும் இருந்த ஒருவர் கோபத்தோடு சொன்னார்.

'அவற்றை நான் விட்டுவிட முடியாது என்று உமக்கு நான் சொல்லவில்லையா?' என்று டெனைசாவ் பதிலளித்தார்.

'கேப்டனே, நீர் இந்த செய்கைக்கு பதில் சொல்ல வேண்டியிருக்கும். இது சிப்பாய் கலகத்தைப் போன்றது. அதாவது, சொந்தப் பட்டாளத்தைச் சேர்ந்த சரக்கு வண்டிகளை அபகரிப்பதாகும். எங்கள் வீரர்கள் இரண்டு தினங்களாக உணவு இல்லாமல் இருக்கிறார்கள்.'

'எங்களுடைய ஆட்கள் இரண்டு வாரங்களாக உணவு எதுவும் இல்லாமல் இருக்கிறார்கள்' என்றார் டெனைசாவ்.

'இது பகல் கொள்ளை. இதற்கு நீர் பதில் சொல்லியாக வேண்டும், ஐயா' என்று அந்த காலாட் படை அதிகாரி தமது குரலை உயர்த்திக் கூறினார்.

'இப்போது நீர் எதற்காக என்னைத் தொந்தரவு செய்கிறீர்?' என்று திடீரென்று கோபம்கொண்டு டெனைாவ் கத்தினார். 'நான் செய்த காரியங்களுக்கு, நான் பதில் சொல்லிக்கொள்வேன். நீர் அல்ல. நீர் இங்கே ஆர்ப்பாட்டம் செய்துகொண்டிருக்காமல், போய்விடுவது நல்லது. இல்லையென்றால், நீர் வருந்த நேரிடும். இப்போது போய்விடும். போம்' என்று அந்த அதிகாரிகளைப் பார்த்து அவர் கத்தினார்.

'அப்படியானல், ரொம்ப சரி' என்று சிறிதும் பணியாமல் அந்த சிறிய அதிகாரி கூச்சலிட்டார். ஆனால் அவர் அங்கிருந்து போகவில்லை. 'நீர் திருடுவது என்று முடிவு செய்துவிட்டால், நான்...'

'நீர் பிசாசிடம் போம். சீக்கிரமாக நடையைக் கட்டும். இப்போது, நீர் சௌக்கியமாகவும், பந்தோபஸ்தாகவும் இருக்கும்போதே, இந்த இடத்தைவிட்டுப் போய்விடும்'' என்று டெனைசாவ் கூறி, தமது குதிரையை அந்த அதிகாரியின் மீது திருப்பினார்.

'ரொம்ப சரி, ரொம்ப சரி' என்று அந்த அதிகாரி பயமுறுத்தலோடு பதில் சொல்லிவிட்டு, தமது குதிரையைத் திருப்பி பாய்ச்சலில் விட்டார். அந்தப் பய்ச்சலில் சேணத்தில் அமர்ந்திருந்த அவரது உடல் குலுங்கியது.

'வேலிக்குப் பின்னால் ஒரு நாய். வேலிக்குப் பின்னால் ஒரு உண்மையான நாய்' என்று அந்த அதிகாரி போன திசையை பார்த்துக் கத்தினார். (குதிரைமீதுள்ள ஒரு காலாட்படை வீரரை, ஒரு குதிரை வீரர் அவமதிக்கக்கூடிய மிகுந்த மோசமான ஏச்சு) ராஸ்டோவிடம் அவர் சவாரி போய் சிரிக்க ஆரம்பித்தார்.

'காலாட்படைக்குப் போய்க் கொண்டிருந்த பொருள்களை நான் பலவந்தமாகக் கைப்பற்றிக் கொண்டேன். என்ன இருந்தாலும் நமது வீரர்களை பட்டினி போட முடியாது' என்றார்.

அந்தக் குதிரைப் பட்டாளத்திற்கு வந்து சேர்ந்த சரக்கு வண்டிகள் காலாட்படைக்காக அனுப்பப்பட்டவை. அந்த வண்டிகளுக்குக் காவாலாகத் துருப்புகள் எதுவும் வரவில்லை என்பதை லாவ்ருஷ்கா மூலமாக டெனைசாவ் அறிந்ததும், தமது குதிரை வீரர்களோடு சென்று பலவந்தமாக அவற்றைக் கைப்பற்றிக்கொண்டார். சிப்பாய்களுக்கு தாராளமாக பிஸ்கோத்துகளை எடுத்து விநியோகம் செய்தார்கள். மற்ற பட்டாளங்களுக்கும் அவர்கள் கொடுத்தார்கள்.

மறுநாள் அந்தப் பட்டாளத்தின் கமாண்டர் டெனைசாவை அழைத்தார். தமது வீரர்களைக் கண்ணிற்கு முன்பாக பரப்பிவைத்துக் கொண்டு, அதன் வழியாக டெனைசாவை அவர் பார்த்து பின் வருமாறு சொன்னார்: 'இந்த விஷயத்தைப்பற்றி நான் இப்படித்தான் நினைக்கிறேன். இதைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது. நான் நடவடிக்கைகளை இப்பொழுது ஆரம்பிக்கவில்லை. ஆனால், நநீர் தலைமை காரியாலயத்துக்குச் சென்று, சப்ளை செய்யும் இலாகாவோடு இந்த விஷயத்தை முடிவு செய்து கொள்ளும். அவசியமானால் இந்த சரக்குகளைப் பெற்றுக்கொண்டதாக ஒரு ரசீது கொடுத்துவிடும். அப்படி இல்லையென்றால், இந்தச்

சரக்குகளை காலாட்படைக்கு அனுப்பியபடியால், பெரிய தொல்லைகள் ஏற்படலாம். அந்தத் தொல்லைகள் மிகவும் மோசமாக முடியலாம்.'

பட்டாளக் கமாண்டரிடமிருந்து நேராகத் தலைமை காரியாலயத்திற்கு டெனைசாவ் சவாரி போனார். அவருடைய யோசனைப்படி உண்மையிலேயே நடக்கவேண்டும் என்ற ஆசையோடு அவர் போனார். மாலையில் அவர் தமது குடிசைக்குத் திரும்பினார். அச்சமயம், அவர் இருந்த நிலைமையைப் போல, ராஸ்டோவ் அவரை எப்போதும் பார்த்தது இல்லை. டெனைசாவினால் பேச முடியவில்லை. மூச்சு வாக்கித் திணறினார். 'என்ன விஷயம்?' என்று ராஸ்டோவ் கேட்டபோது, ஏதோ சம்பந்தம் இல்லாத சில வசவுகளையும், பயமுறுத்தல்களையும், கரகரப்பான பலவீனமான குரலில் சொல்லிக்கொண்டிருந்தார்.

டெனசைாவின் நிலைமையைக் கண்டு பீதியுற்ற ராஸ்டோவ், அவரை உடைகளைக் களையும்படியும் தண்ணீர் குடிக்கும்படியும் சொன்னார். உடனே டாக்டருக்கும் சொல்லியனுப்பினார்.

'கொள்ளையடித்ததாக என்மீது வழக்காம். ஓ... இன்னும் கொஞ்சம் தண்ணீர்... அவர்கள் என்னை விசாரித்துக்கொள்ளட்டும். ஆனால் அந்த அயோக்கியர்களை நான் எப்போதும் உதைப்பேன்... நான் சக்கரவர்த்தியிடம் சொல்லுவேன். ஐஸ் கொண்டு வாருங்கள்' என்று அவர் முனங்கினார்.

பட்டாளத்தின் டாக்டர் வந்தார். டெனைசாவிடமிருந்து சிறிது ரத்தத்தை வெளிப்படுத்த வேண்டியது அவசியமென்று அவர் சொன்னார். ஒரு தட்டு நிறைய கறுப்பான ரத்தத்தை இந்த மனிதரிடமிருந்து எடுத்தார்கள். அதன் பின்னால்தான் அவருக்கு என்ன நேர்ந்தது என்பதை அவரால் சொல்ல முடிந்தது.

'நான் அங்கே போனேன்' என்று டெனைசாவ் ஆரம்பித்தார். ''அது இருக்கட்டும்; உம்முடைய தலைவரின் ஜாகை எங்கே இருக்கிறது?'' என்று கேட்டேன். அவர்கள் சுட்டிக்காட்டினார்கள். கொஞ்சம் தங்கியிருக்க வேண்டுமென்று சொன்னார்கள். நான் இருபது மைல்கள் சவாரி வந்திருப்பதாலும், எனக்கு வேலை இருப்பதாலும் நான் காத்திருப்பதற்கு அவகாசம் இல்லாமல் இருப்பதாலும், நான் வந்திருப்பதாக உடனே உங்கள் தலைவருக்குச் சொல்லுங்கள் என்றேன். ரொம்ப சரி, உடனே அவர்களின் தலைமைத் திருடன் வந்தான். உடனே என்னைப் பார்த்து அவன் பிரசங்கம் செய்ய ஆரம்பித்தான். ''இது கொள்ளை'' என்று சொன்னான். தமது சிப்பாய்களுக்குக் கொடுப்பதற்காக

உணவுப் பொருள்களைக் கைப்பற்றுவது கொள்ளையல்ல என்று நான் சொன்னேன். ''அவைகளைக் கைப்பற்றி தமது ஜேபிகளை நிரப்புவதுதான் கொள்ளை'' என்று நான் சொன்னேன். '' தயவு செய்து நீர் மௌனமாய் இருப்பீரா?''என்று அவன் கேட்டான். ''சரி'' என்று நான் சொன்னேன். மறுபடியும் அவன், ''நீர் போய் கமிஷனருக்கு ஒரு ரசீது கொடும். நான் இதைப்பற்றி தலைமைக் காரியாலயத்திற்கு எழுதுகிறேன்'' என்று அவன் சொன்னான். நான் கமிஷனரிடம் போனேன். அறைக்குள் நான் நுழைந்தேன். அங்கே மேஜைமீது... நீர் என்ன நினைக்கிறீர்?... ஒரு வினாடி பொறும். எங்களை பட்டினி போடுவது யார்?' என்று டெனைசாவ் கூச்சலிட்டு, சமீபத்தில் ரத்தம் எடுக்கப்பட்ட தமது கை முஷ்டியால் மேஜைமீது பலமாகக் குத்தினார். மேஜைமீதிருந்த கோப்புகள் துள்ளின. அந்த மேஜை உடைந்துவிடும்போலத் தோன்றியது. ''டெலியானின், என்ன? இப்போது எங்களைப் பட்டினி போட்டுக்கொல்வது 'நீதானா? அப்படித்தானா? இதோ,இதை வாங்கிக்கொள், இதையும் வாங்கிக்கொள்'' என்று நான் சொல்லிவிட்டு, அவனுக்கு முகத்தில் ஒரு குத்து விட்டேன். ஆ எப்பேர்ப்பட்ட குத்து! அவனை நான் உதைக்க ஆரம்பித்தேன். எப்பேர்ப்பட்ட தமாஷ் தெரியுமா' என்று டெனைசாவ் கத்தினார். கோபமாகவும் மகிழ்ச்சியோடும் அவர் கூச்சலிட்டபடியால் அவருடைய கறுப்பு மீசைக்கு கீழே அவருடைய வெள்ளைப் பற்கள் தெரிந்தன. அவர்கள் அங்கிருந்து அவனை அழைத்துப்போய் இருக்காவிட்டால், அவனை நான் கொன்றிருப்பேன்.'

'ஆனால், நீர் எதற்காக இம்மாதிரி கூச்சல் போடுகிறீர்? அமைதியாயிரும். நீர் மீண்டும் உமது கையிலிருந்து ரத்தம் சொட்டும்படி செய்து விட்டீர். கொஞ்சம் பொறும். அதை நாம் கட்டிவிட வேண்டும்' என்றார் ராஸ்டோவ்.

டெனைசாவின் கையை மீண்டும் கட்டி, அவரைப் படுக்கையில் படுக்க வைத்தார்கள். மறுநாள் அவர் விழித்தபோது, அமைதியாகவும், மகிழ்ச்சியாகவும் காணப்பட்டார். அன்று நடுப்பகலில் அந்தப் பட்டாளத்தின் உதவியாளர் ராஸ்டோவும், டெனைசாவும் தங்கியிருந்த குடிசைக்கு, ஒரு கடுமையான ஆழ்ந்த முகபாவத்தோடு அவர்களிடம் வந்து வருத்தத்தோடு ஒரு காகிதத்தைக் காட்டினர். அந்தக் காகிகதம் ரெஜிமெண்ட் கமாண்டரிடமிருந்து மேஜர் டெனைசாவுக்கு எழுதப்பட்டிருந்தது. நேற்று நடந்த காரியங்களைப் பற்றி அதில் கேள்விகள் கேட்கப்பட்டிருந்தன. அந்த விஷயம் மிகவும் மோசமாகத் திரும்பலாமென்று அந்த உதவியாளர் அவர்களுக்குச் சொன்னார்.

ஒரு ராணுவ விசாரணைக் கோர்ட்டை அமைத்திருப்பதாகவும், கீழ்ப்படியாமையையும் கொள்ளை அடித்தலையும் மிகுந்த மோசமான குற்றங்களாக தற்சமயம் கருதுவதாகவும், ஆகவே பதவி இறக்கத்தோடு அவர் விடப்பட்டால், அதுவே நாம் எதிர்பார்க்கக்கூடிய சிறந்த காரியமாயிருக்குமென்றும் அவர் சொன்னார்.

அவர், பறிகொடுத்தவர்கள் மேஜர் டெனைசாவின் மீது சாட்டிய குற்றங்களாவன:- டெனைசாவ் சரக்குகளைக் கைப்பற்றிய பின்பு, அவர் குடித்திருந்தபடியால், பிரதான ஜாகை வசதி அதிகாரியிடம் போனதாகவும், எவ்விதக் காரணமுமில்லாமல் அவரை திருடன் என்று அழைத்து அடிக்க வந்ததாகவும், அவரை வெளியே கொண்டுவந்துவிட்ட பின்பு, மீண்டும் அவர் காரியாலயத்திற்குள் வந்து இரண்டு அதிகாரிகளை அடித்து, ஒருவரின் கையை முறித்து விட்டதாகவும் சொன்னார்கள்.

ராஸ்டோவ் மீண்டும் மீண்டும் கேட்டதற்குப் பின்னால், டெனைசாவ் சிரித்துக்கொண்டே பதில் சொன்னார். அந்த அடிதடியில் மற்றொருவரும் கலந்துகொண்டிருந்தது, இப்போதுதான் அவருக்கு ஞாபகத்துக்கு வருகிறது என்றும் இவையெல்லாம் வெறும் அசட்டுத்தனங்கள் என்றும், குப்பைகள் என்றும் எந்தவிதமான விசாரணைக்கும் தாம் சிறிதளவுகூட கவலைப்படவில்லை என்றும் அந்த அயோக்கியர்கள் தம்மைத் தாக்க வந்தால் அவர்கள் சுலபமாக மறக்க முடியாதபடி அவர்களுக்குப் பதில் கொடுக்கப்போவதாகவும் அவர் சொன்னார்.

அந்த விஷயம் முழுவதையும்பற்றி, மிகுந்த துச்சமாக டெனைசாவ் பேசினார். ஆனால், அவர் மனதில் ராணுவக் கோர்ட் விசாரணையைப்பற்றி ஒரு பீதி இருக்கிறதென்றும், இந்தச்சம்பவம் மிகுந்த மோசமாகத் திரும்புகிறதைப்பற்றி அவர் கவலை கொண்டிருக்கிறார் என்றும், ராஸ்டோவ் அறிந்துகொண்டார். மற்றவர்களிடம் டெனைசாவ் மறைத்தாலும் ராஸ்டோவிடம் அவரால் மறைக்க முடியவில்லை. ஏனெனில், அவரை ராஸ்டோவ் நன்றாக அறிவார். ஒவ்வொரு நாளும் விசாரணை கடிதங்களும், அறிக்கைகளும் கோர்ட்டிலிருந்து வந்துகொண்டிருந்தன. மே மாதம் முதல் தேதியன்று டெனைசாவ் தமது அதிகாரத்தை, தமக்கு அடுத்தபடியாகப் பதவியில் உள்ளவரிடம் ஒப்பித்துவிடும்படியும், அவருடைய படையின் தலைமைக் காரியாலயத்தின் முன்பு ஆஜராகி, சப்ளை ஆபீஸில் அவர் காட்டிய பலாத்காரத்திற்குப் பதில் சொல்லும்படியும் உத்தரவு வந்தது. முதல் நாளன்று இரண்டு கோசாக் பட்டாளங்களுடனும், இரண்டு குதிரை வீரர்கள்

படைப்பிரிவினருடனும், பிளாடாவ் வேவு பார்த்து வந்தார். டெனைசாவ் யுத்த முனையிலுள்ள காவல் வீரர்கள் முன்பாக, தம்முடைய தைரியத்தைக் காட்டிவந்தவர். ஒரு குறி பார்த்துச்சுடும் பிரஞ்சுக்காரரின் தோட்டா ஒன்று அவருடைய காலின் தசையில் பாய்ந்தது. மற்ற காலமாய் இருந்தால், அந்த லேசான காயத்திற்காக அவர் பட்டாளத்தைவிட்டுப் போயிருக்க மாட்டார். ஆனால், இப்போது இந்தக் காரணத்தை மேற்கொண்டு. அதனால் தலைமைக் காரியாலயத்தின் முன்பு ஆஜராகத் தம்மால் முடியவில்லையென்று சொல்லி, ஆஸ்பத்திரியில் போய்ச் சேர்ந்தார்.

## 5

## 17

ஜூன் மாதத்தில் பிரீட்லாண்டில் யுத்தம் நடந்து. அந்த யுத்தத்தில் பாவ்லாகிராடுகள் கலந்துகொள்ளவில்லை. யுத்தத்திற்குப் பின்னால், யுத்த நிறுத்த உடன்படிக்கை பிரகடனப்படுத்தப்பட்டது. தமது நண்பர் தம்முடன் இல்லாமல் இருந்ததைப் பற்றி ராஸ்டோவ் வருத்தமடைந்தார். அங்கிருந்து அவர் புறப்பட்டுப் போனபின்பு, அவரைப்பற்றி எவ்விதமான செய்தியும் கிடைக்கவில்லை. அவருக்கு ஏற்பட்ட காயம் எப்படியிருக்கிறதென்பதைப் பற்றியும், அவருடைய காரியங்கள் எப்படி நடந்துகொண்டிருக்கின்றன என்பதைப் பற்றியும் அறிய ஆவல்கொண்டார். ஆகவே, யுத்த நிறுத்தப் பிரகடனத்தை உபயோகப்படுத்திக்கொண்டு, ஆஸ்பத்திரிக்குச் சென்று டெனைசாவைப் பார்ப்பதற்காக ரஜா வாங்கிக்கொண்டார்.

அந்த ஆஸ்பத்திரி ஒரு சிறிய பிரஷ்ய பட்டணத்தில் இருந்தது. அந்தப் பட்டணம் ருஷ்ய துருப்புகளாலும், பிரஞ்சு துருப்புகளாலும் இரு முறை தாக்கி பாழ்படுத்தப்பட்டது. அப்பொழுது வேனிற்காலமாய் இருந்தபடியால், வெளியே வயல்கள் மிகவும் அழகாய் இருந்தன. ஆனால், இந்தச் சிறிய நகரம் ஒரு மனச்சோர்வான காட்சியைக் கொடுத்தது. அதனுடைய கூரைகளும் வேலிகளும் பாழ்படுத்தப்பட்டிருந்தன. தெருக்கள் சுத்தமாக இருந்தன. கிழிந்த உடைகளை அணிந்துகொண்டு, அந்த ஊர்வாசிகள் நடமாடிக்கொண்டிருந்தார்கள். அசௌக்கியமடைந்தும், குடித்துமிருந்த சிப்பாய்கள், தெருக்களில் சுற்றி அலைந்தார்கள்.

அந்த ஆஸ்பத்திரி ஒரு செங்கல் கட்டடத்தில் இருந்தது. அங்கிருந்த சில ஜன்னல்களும், ஜன்னல் கண்ணாடிகளும்

உடைந்திருந்தன. உடைந்துபோன பிரித்துப்போடப்பட்ட வேலிகளின் குவியல்கள் முற்றத்தில் காணப்பட்டன. கட்டுக்கள் கட்டப்பட்ட பல சிப்பாய்கள் வெளிறிய,வீங்கிய முகங்களோடு உட்கார்ந்துகொண்டும், நடந்துகொண்டும் முற்றத்திலுள்ள சூரிய வெளிச்சத்தில் காணப்பட்டார்கள்.

வாசலுக்குள் ராஸ்டோவ் நுழைந்ததும், அழுகிய வாசனையும், ஆஸ்பத்திரி வாசனையும் அவரைச் சூழந்துகொண்டது. சுருட்டு பிடித்துக்கொண்டிருந்த ஒரு ருஷ்ய ராணுவ டாக்டரை அவர் படிக்கட்டில் சந்தித்தார். டாக்டருக்குப் பின்னால் ஒரு ரஷ்ய உதவியாளர் வந்துகொண்டிருந்தார்.

'நான் என்னை பல துண்டுகளாகப் பிய்த்துக்கொள்ள முடியாது. மாலையில் மாக்கர் அலெக்சீவிச்சிடம் வாரும். நான் அங்கே இருப்பேன்' என்று டாக்டர் சொன்னார்.

அந்த உதவியாளர் மேலும் சில கேள்விகளைக் கேட்டார்.

'ஓ, உன்னால் செய்யக்கூடியவைகளை நீ செய்; எல்லாம் ஒன்றுதானே?' என்று சொல்லிய டாக்டர், படிக்கட்டில் ராஸ்டோவ் மேலே வந்துகொண்டிருப்பதைக் கவனித்தார்.

'உமக்கு என்ன வேண்டும், ஐயா?' என்றார் டாக்டர். 'உமக்கு என்ன வேண்டும்? துப்பாக்கிக் குண்டிலிந்து நீர் தப்பிவிட்டீர். இப்பொழுது டைபாயிட் ஜுரத்தை அனுபவிக்க நீர் முயற்சி செய்கிறீரா? இது ஒரு தொத்து நோய் உள்ள இடம்,ஐயா.'

'எப்படி?' என்று கேட்டார் ராஸ்டோவ்.

'டைபாயிட் ஐயா, உள்ளே போனால் மரணம்தான். (தமது பக்கத்திலிருந்த உதவியாளரை சுட்டிக்காட்டி) இந்த மாக்கீவும் நானும்தான் உள்ளே இருக்கிறோம். எங்களைச் சேர்ந்த ஐந்து டாக்டர்கள் இங்கே மாண்டுபோனார்கள்... புதிதாக ஒருவர் வந்தால், ஒரு வாரத்திற்குள் அவர் போய்விடுகிறார். பிரஷ்ய டாக்டர்களை இங்கே அழைத்திருக்கிறார்கள். ஆனால், நமது நேச நாடுகள் அதை விரும்பவில்லை' என்று அந்த டாக்டர் வெளிப்படையான சந்தோஷத்தோடு சொன்னார்.

காயமடைந்து போன மேஜர் டெனைசாவை தாம் பார்க்க விரும்புவதாக ராஸ்டோவ் விளக்கினார்.

'எனக்குத் தெரியாது. நான் சொல்ல முடியாது ஐயா. ஆனால் யோசித்துப்பாரும். நானூறு பேர்களுக்கு அதிகமான வியாதியஸ்தர்கள் உள்ள மூன்று ஆஸ்பத்திரிகளையும் நான் ஒருவனே கவனித்து வருகிறேன். யாரோ தர்மசிந்தனை உள்ள பிரஷ்ய சீமாட்டிகள், இரண்டு பவுண்டு காப்பியையும், கொஞ்சம்

பஞ்சு துணியையும் மாதத்திற்கு ஒரு முறை அனுப்பி வருகிறார்கள். இல்லையென்றால்.நாம் கஷ்டப்படுவோம்' என்று கூறி அவர் சிரித்தார். 'நானூறு பேர், ஐயா! அவர்களைத் தவிர, புதிதாகவும் ஆட்களை அனுப்பிக்கொண்டே இருக்கிறார்கள். இப்பொழுது நானூறு பேர்கள் அல்லவா?' என்று கூறி, தமது உதவியாளரை திரும்பிப் பார்த்தார்.

அந்த உதவியாளர் களைத்துப் போயிருந்தார். இந்த வாய் பேச்சு டாக்டரிடம் அவர் எரிச்சலும் அதிருப்தியும் கொண்டிருந்த படியால், அவர் எப்பொழுது போவார் என்று காத்துக் கொண்டிருந்தார்.

'மேஜர் டெனைசாவ். அவர் மாலிடென் என்ற இடத்தில் காயமடைந்தார்' என்று ராஸ்டோவ் மீண்டும் சொன்னார்.

'செத்துப்போய் விட்டார் என்று நான் நினைக்கிறேன். இல்லையா, மாக்கீவி?' என்று ஒரு பராமுகமான தொனியில் டாக்டர் கேட்டார் என்றாலும், அந்த உதவியாளர் டாக்டர் சொல்லுவதை உறுதி செய்யவில்லை.

'அவர் உயரமானவரா? சிவந்த தலைமுடி உள்ளவரா?' என்று கேட்டார் டாக்டர்.

டெனைசாவின் தோற்றத்தை ராஸ்டோவ் வர்ணித்தார்.

'அம்மாதிரி ஒருவர் இருந்தார்' என்று டாக்டர் மகிழ்ச்சி அடைந்ததுபோல சொன்னார். 'அந்த ஆசாமி இறந்துபோய் விட்டார் என்று நினைக்கிறேன். என்றாலும், நமது ஜாபிதாவை நான் பார்க்கிறேன். எங்களிடம் ஒரு ஜாபிதா இருந்தது. மாக்கீவ், உம்மிடம் அது இருக்கிறதா?'

'மாக்கர் அலெக்சீவிச்சிடம் அந்த ஜாபிதா இருக்கிறது' என்றார் உதவியாளர். 'ஆமாம், அதிகாரிகளின் வார்டுகளுக்கு நீர் வந்தால், நீரே பார்த்துக்கொள்ளலாம்' என்று அவர் ராஸ்டோவைப் பார்த்து சொன்னார்.

'ஆ, நீர் போகாமல் இருப்பது நல்லது. போனீரானால், நீர் இங்கேயே தங்கிவிட நேரும்' என்றார், டாக்டர்.

ஆனால், ராஸ்டோவ் அவரிடம் தலைவணங்கிவிட்டு, தமக்கு வழி காட்டும்படி அவருடைய உதவியாளரைக் கேட்டார்.

'என்னை-நீர் அப்புறம் குறை கூறவேண்டாம்' என்று அந்த டாக்டர் கூச்சலிட்டார்.

ராஸ்டோவும் அந்த உதவியாளரும் இருட்டான ஆளோடி வழியாகப் போனார்கள். அங்கே துர்வாசனை பலமாய் இருந்தது.

ராஸ்டோவ் தமது மூக்கைப் பிடித்துக்கொண்டார். சிறிது தயங்கி, மேலே போவதற்கு முன்பாக தமது முழு பலத்தையும் திரட்டிக் கொண்டார். வலது பக்கம் ஒரு கதவு திறந்தது. மெலிந்த மஞ்சள் நிறமான ஒரு பேர்வழி, காலில் ஜோடு இல்லாமலும், உள்சட்டையைத் தவிர, வேறு எதுவும் இல்லாமலும் நொண்டிக்கொண்டு, வெளியே வந்து தாங்குகட்டையோடு கதவுகளில் சாய்ந்து கொண்டு, மினுமினுப்பான கண்களோடு அங்கு போய்க்கொண்டிருந்தவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தார். அந்த வாசல் வழியாக ராஸ்டோவ் உள்ளே பார்த்தபொழுது, அங்கே காயமடைந்தவர்கள் தரையில் வைக்கோல் மீதும், மேல் சட்டைகள் மீதும் படுத்திருந்ததைக் கவனித்தார்.

'நாம் உள்ளே போய் பார்க்கலாமா?'

'அங்கே பார்ப்பதற்கு என்ன இருக்கிறது' என்றார் உதவியாளர்.

அந்த உதவியாளர் உள்ள போக விரும்பவில்லை என்பது தெளிவாய்த் தெரிந்தது. அதைத் தெரிந்ததும், ராஸ்டோவ் சிப்பாய்களின் வார்டுக்குள் நுழைந்தார். ஆளோடியில் அவர் அனுபவித்த துர்வாசனை, இங்கே இன்னமும் அதிக பலமாய் இருந்ததை அவர் கண்டார். ஒரே ஒரு வித்தியாசம் என்னவென்றால், இந்த இடத்தில் அந்த துர்வாசனை மிக பலமாய் இருந்தபடியால், அங்குள்ள துர்வாசனைக்கு மூலமான இடம் இதுதான் என்று தோன்றியது.

பெரிய ஜன்னல்களின் வழியாக சூரிய வெளிச்சத்தினால் மிகுந்த பரிகாசமடைந்திருந்த ஒரு நீளமான அறையில், பார்க்கத் தலைவைத்து மத்தியில் ஆட்கள் போவதற்கு இடம்விட்டு, இரண்டு வரிசைகளில் காயம்பட்டவர்களும், அசௌக்கியம் அடைந்தவர் களும் படுத்திருந்தார்கள். அவர்களில் அநேகர் பிரக்ஞை இல்லாமல் இருந்தபடியால், புதிதாய் அங்கு வந்தவர்களைப்பற்றி கவனிக்கவேயில்லை. பிரக்ஞை உள்ளவர்கள் தாங்கள் சிறிது எழுந்தோ, அல்லது தங்களுடைய மெலிந்த மஞ்சள் நிறமான முகங்களை சிறிது உயர்த்தியோ காட்டினார்கள். ஆனால், எல்லாருமே அங்கு வந்த ராஸ்டோவை கூர்மையாகக் கவனித்தார்கள். தங்களுக்கு துன்ப நிவாரணமும் நம்பிக்கையும் கிடைக்கப்போவது போன்ற முகத்தோற்றம் காணப்பட்டது. அவருடைய ஆரோக்கியத்தை கண்டு பொறாமையும் கொண்டார்கள். அந்த அறையின் மத்திக்கு ராஸ்டோவ் சென்றார். திறந்த ஜன்னல்கள் வழியாக பக்கத்திலுள்ள இரண்டு அறைகளையும் பார்த்தார். அங்கே உள்ள காட்சியும் இதே போல இருந்தது. இன்னமும் அவர் அசையாது நின்று, மௌனமாக

தம்மைச் சுற்றிப் பார்த்தார். இம்மாதிரி ஒரு காட்சியைப் பார்க்க நேரிடுமென்று அவர் எதிர்பார்க்கவேயில்லை. அவருக்கு முன்பாக, மத்தியிலுள்ள நடைபாதைக்குக் குறுக்காக, வெறும் தரைமீது ஒரு அசௌக்கியமான மனிதன் படுத்திருந்தான். அவனுடைய தலைமுடி வெட்டிவிடப்பட்டிருக்கிற விதித்திலிருந்து, அவன் ஒரு கோசாக் மாதிரி தோன்றினான். அந்த மனிதன் மல்லாந்து படுத்திருந்தான். அவனுடைய பெரிய கைகளும் கால்களும் பரந்து கிடந்தன. அவனுடைய முகம் நீல நிறமாய் இருந்தது. கண்கள் மேலே செருகி இருந்தபடியால், வெள்ளை நிறம் மட்டும்தான் வெளியே தோன்றியது. அவனுடைய திறந்த கால்களும் கைகளும் சிவப்பாய் இருந்தன. அவற்றிலுள்ள நரம்புகள் கயிறுகள்போல புடைத்து நின்றன. தன்னுடைய பின்தலையை தரையோடு மோதிக்கொண்டு, கரகரப்பான தொண்டையில் எதையோ ஒரு வார்த்தையைத் திருப்பித் திருப்பி சொல்லிக்கொண்டிருந்தான். ராஸ்டோவ் அதைக் கவனித்துக் கேட்டு, என்ன வார்த்தை என்பதைப் புரிந்து கொண்டார். 'தண்ணீர், தண்ணீர், குடிப்பதற்கு தண்ணீர்' அந்த மனிதனை திரும்பவும் அவனுடைய இடத்தில் தூக்கிப்போட்டு, அவனுக்கு தண்ணீர் கொடுப்பதற்கு யாராவது இருக்கிறார்களா என்று அறிவதற்காக, ராஸ்டோவ் சுற்றிலும் நோக்கினார்.

'இந்த பிணியாளிகளை இங்கே பார்த்துக்கொள்ளுகிறவர் யார்? என்று அந்த உதவியாளரை அவர் கேட்டார்.

இச்சமயம் அந்த ஆஸ்பத்திரியின் சேவகனான ஒரு சிப்பாய், அடுத்த அறையிலிருந்து நிமிர்ந்து நடந்து வந்து ராஸ்டோவ் முன்னால் நின்றான்.

'வணக்கம், மேன்மை தங்கியவரே' என்று அவன் ராஸ்டோவைப் பார்த்து, கண்களை உருட்டிப் பேசினான். அந்த ஆஸ்பத்திரி அதிகாரிகளில் அவர் ஒருவராக இருப்பார் என்று அவன் தவறாக நினைத்துக்கொண்டான்.

'அவனுடைய இடத்திற்கு அவனை நகர்த்திக்கொண்டுபோய்ச் சேர்த்து, அவனுக்குக் கொஞ்சம் தண்ணீர் கொடு' என்று அந்த கோசாக்கை சுட்டிக்காட்டி ராஸ்டோவ் சொன்னார்.

'நல்லது, மேன்மை தங்கியவரே' என்று திருப்தியோடு அந்த சிப்பாய் பதிலளித்தான். அவன் தனது கண்களை மீண்டும் உருட்டி, இன்னும் அதிகமாக நிமிர்ந்து நின்றான். ஆனால், அவன் அசையவில்லை.

'இல்லை, இங்கே எதுவும் செய்வது சாத்தியமில்லை' என்று ராஸ்டோவ் நினைத்து, தமது பார்வையை கீழ்நோக்கி வெளியே

புறப்படலானார். ஆனால், தமக்கு வலது பக்கத்தில் யாரோ ஒருவர் மிகுந்த கூர்மையாக தம்மை நோக்குவதை அவர் உணர்ந்தார். மூலையின் பக்கமாக, ஒரு மேல்சட்டை மீது, க்ஷவரம் செய்யப்படாமல் வெள்ளைத் தாடியோடு, எலும்புக்கூடாக மெலிந்து, கடுமையான மஞ்சள் முகத்தோடு, கண்களை கூர்மையாக ராஸ்டோவ் மீது பதித்திருப்பதை அவர் கண்டார். அந்த மனிதனுக்கு பக்கத்திலுள்ளவர் மெதுவாக ஏதோ ஒன்றை அவருக்கு சொல்லி, ராஸ்டோவை கூட்டிக்காட்டினார். அந்த வயதான மனிதர் தம்மிடம் பேச விரும்புவதை ராஸ்டோவ் கவனித்தார். அவரிடம் ராஸ்டோவ் நெருங்கிப் பார்த்தபோது, அவருடைய ஒரு கால் உள்ளே மடங்கியிருப்பதையும், மற்றொரு கால் முட்டிக்கு மேலாக துண்டிக்கப்பட்டிருப்பதையும் கண்டார். அவருக்கு மற்றொரு பக்கத்திலுள்ள பேர்வழி அசையாமல் சிறிது தூரத்தில் படுத்திருந்தார். அவர் மூக்கு சப்பையாக இருந்தது. அவர் ஒரு வாலிப சிப்பயாக இருந்தார். இவருடைய கண்கள் மேலே செருகியிருந்தன. அவருடைய வெளிறிய முகத்தில் இன்னும் புள்ளிகள் காணப்பட்டன. அந்த வாலிப சிப்பாயை ராஸ்டோவ் பார்த்ததும், அவருடைய முதுகெலும்பு வழியாக ஒரு குளிர்ச்சி இறங்கியது.

'ஏன், இந்த ஆள்...' என்று உதவியாளரைப் பார்த்துத் திரும்பி பேச ஆரம்பித்தார்.

'மேன்மை தங்கியவரே, நாங்கள் எம்மாதிரியாக உம்மிடம் கெஞ்சிக்கொண்டிருக்கிறோம்' என்று வயோதிக சிப்பாய் தமது நாடி துடிதுடிக்கப் பேசினார். 'இன்று காலையிலேயே அவர் இறந்து விட்டார். என்ன இருந்தாலும் நாங்கள் எல்லாரும் மனிதர்கள், நாய்கள் அல்ல.'

'இப்பொழுதே யாராவது ஒரு ஆளை அனுப்புகிறேன். அவரை எடுத்துக் கொண்டு போய்விடுவார்கள். உடனே எடுத்துக்கொண்டு போவார்கள்' என்று அந்த உதவியாளர் வேகமாக சொன்னார். 'மேன்மை தங்கியவரே நாம் போகலாம்.'

'ஆம், ஆம், ஆம்; நாம் போவோம்' என்று ராஸ்டோவ் அவசரமாகச் சொல்லி, தமது பார்வையைக் கீழ்நோக்கினார். இரு வரிசைகளிலும் கோபமான, பொறாமையான கண்கள் அவர் மீது பாய்ந்து நிற்க, அவர் அவற்றிலிருந்து தப்ப முயற்சித்து உடல் குறுகி அறையை விட்டு வெளியே போனார்.

# 5

## 18

ஆளோடி வழியாக போய், அதிகாரிகளின் வார்டுகளுக்கு அந்த உதவியாளர் ராஸ்டோவை அழைத்துச் சென்றார். அந்த வார்டுகளில் மூன்று அறைகள் இருந்தன. கதவுகள் திறந்து கிடந்தன. இந்த அறைகளில் படுக்கைகள் போடப்பட்டிருந்தன. காயமடைந்தவர்களும் அசௌக்கியமானவர்களும் அந்த படுக்கைகளில் படுத்துக்கொண்டும், உட்கார்ந்து கொண்டும் இருந்தார்கள். ஆஸ்பத்திரி கவுன்களை அணிந்துகொண்டு, சிலர் அந்த அறைகளிலேயே அங்குமிங்கும் போய்க்கொண்டிருந்தார்கள். முதல் முதலாக அந்த அதிகாரிகளின் வார்டில் ராஸ்டோவ் ஒரு மெல்லிய; சிறிய மனிதரைச் சந்தித்தார். அவருக்கு ஒரு கை தான் இருந்தது. தலையில் ஒரு தொப்பியோடு, ஒரு ஆஸ்பத்திரி கவுனோடு, வாயின் பற்களிடையே ஒரு சுங்கானோடு, முதல் அறையில் அவர் சுற்றிக்கொண்டிருந்தார். அவரை முன்னால் எங்கே பார்த்தார் என்பதை நினைவு கொள்ள ராஸ்டோவ் முயற்சித்து அவரைப் பார்த்தார். 'நாம் மறுபடியும் எங்கே சந்திக்கிறோம் என்பதை, இதோ பாரும்' என்று அந்த சிறிய மனிதர் சொன்னார். 'ரூஷின்! உமக்கு ஞாபகம் வரவில்லையா? ஷார்ன் கிராபர்ன் என்ற இடத்தில் உமக்கு நான் பீரங்கி வண்டியில் இடம் கொடுக்க வில்லையா? என்னை கொஞ்சம் வெட்டிவிட்டார்கள். இதோ பாரும்...' என்று அவர் புன்னகையோடு, காலியாக தொங்கிக் கொண்டிருந்த தமது சட்டையின் கையைக் காட்டினார். 'வாசைலி டிமிட்ரிச் டெனைசாவை நீர் தேடிக் கொண்டிருக்கிறீரா? அவர் எனக்குப் பக்கத்திலிருப்பவர்' என்று சொல்லி, பக்கத்து அறைக்கு ரூஷின் அழைத்துச் சென்றார். அங்கிருந்து சிரிப்புக் குரல்கள் பல வந்து கொண்டிருந்தன.

'இந்த இடத்தில் அவர்கள் எப்படித்தான் சிரிக்க முடியும்? அல்லது வாழத்தான் எப்படி முடியும்? என்று ராஸ்டோவ் நினைத்தார். சிப்பாய்களின் வார்டில் அவர் அனுபவித்த மாமிசம் அழுகியதால் ஏற்பட்ட அந்த பலமான துர்வாசனையை, இன்னும் இவர் மறக்கவில்லை. அவர் அங்கிருந்து வெளியே வருகிற வரையில் இரு வரிசைகளிலுமிருந்து அவர் மீது பாய்ந்த அந்த கோபமான, பொறாமையான பார்வைகளையும், கண்கள் பின்னால் செருகிய அந்த வாலிப சிப்பாயின் முகத்தையும், அவர் இன்னும் மறக்கவில்லை.

டெனைசாவ் தமது படுக்கையில் தூங்கிக் கொண்டிருந்தார். நடுப்பகல் ஆகிவிட்டபோதிலும், அவருடைய தலையை கம்பளியால் மூடியிருந்தார்.

'ஆ, ராஸ்டோவ்! நீர் சௌக்கியமாய் இருக்கிறீரா? நீர் எப்படி இருக்கிறீர்' என்று பட்டாளத்தில் அவர் பேசும் அதே குரலில், இப்பொழுது அவர் பேசினார். அவருக்கு வழக்கமான, உற்சாகமான, கவலையில்லாத சுபாவத்திற்குப் பின்னால், புதிதான, கெடுதலான மறைந்து நின்ற உணர்ச்சிகள், டெனைசாவின் முகத்தோற்றத்திலும், அவருடைய வார்த்தைகளிலும் காணப் பட்டதை ராஸ்டோவ் துக்கத்தோடு கவனித்தார்.

அவருடைய காயம் அற்பமானதாய் இருந்தாலும், அவர் காயமடைந்து ஆறு வாரங்கள் ஆன பின்பும் இன்னும் குணமாகவில்லை. அந்த ஆஸ்பத்திரியிலுள்ள மற்ற நோயாளிகளின் முகங்களைப் போலவே, அவருடைய முகமும் வீங்கி வெளிறியிருந்தது. ஆனால், இதைக் கண்டு ராஸ்டோவ் ஆச்சரியப்படவில்லை. அவர் ஆச்சரியப்பட்டது என்னவென்றால், தம்மைப் பார்த்து டெனைசாவ் சந்தோஷமடையவில்லை என்பதே யாகும். தம்மைப் பார்த்து அவர் ஒரு செயற்கையான புன்சிரிப்பு கொள்கிறார் என்று நினைத்தார். பட்டாளத்தைப் பற்றியும், பொதுவான நிலைமையைப் பற்றியும் டெனைசாவ் கேள்விகள் கேட்டார். ஆனால், ராஸ்டோவ் பதில் சொல்லிய பொழுது, அவைகளை அவர் கவனிக்கவில்லை.

பட்டாளத்தைப்பற்றி ஞாபகமூட்டுவதைக் கூட, டெனைசாவ் விரும்பவில்லை என்பதையும் ராஸ்டோவ் கவனித்தார். ஆஸ்பத்திரிக்கு வெளியில் உள்ள அந்த சுதந்திரமான வாழ்க்கையைப் பற்றி பேசுவதையும் டெனைசாவ் விரும்ப வில்லை என்று கண்டார். அந்த பழைய வாழ்க்கைய மறப்பதற்கு அவர் முயற்சிக்கிறார் என்றும், சப்ளை அதிகாரியிடம் அவர் செய்துகொண்ட தகராறு ஒன்றிலேயே அவருடைய கவனம் இப்பொழுது இருக்கிறதென்றும் அவர் நினைத்தார். அந்த தகராறு எப்படி இருக்கிறது என்று ராஸ்டோவ் கேட்டபொழுது, கோர்ட்டிலிருந்து தமக்கு வந்த கடித்தத்தையும், அதற்கு தாம் தயாராய் எழுதி வைத்திருந்த நகலையும், தமது தலையணைக்கு அடியிலிருந்து எடுத்தார். அந்தக் கடிதத்தை வாசித்தபொழுது அவர் பரபரப்பு அடைந்தார். தமது விரோதிகளுக்கு எழுதியிருந்த தம்முடைய காரமான பதிலை, ராஸ்டோவிடம் அவர் சுட்டிக் காட்டியபொழுது, அவர் இன்னும் அதிகமாக பரபரப்பு அடைந்தார். அவருடைய ஆஸ்பத்திரி தோழர்கள் வெளியே இருந்து

புதிதாக வந்த ராஸ்டோவைச் சுற்றி சூழ்ந்து நின்றார்கள். டெனைசாவ் தமது பதிலை வாசிக்க ஆரம்பித்ததும், அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் கலைய ஆரம்பித்தார்கள். அந்தக் கதையை அவர்கள் பல தடவைகள் கேட்டுமிருப்பது போலவும், கேட்டு கேட்டு அலுத்துப் போய்விட்டது போலவும், அவர்களுடைய முகங்களிலிருந்து ராஸ்டோவ் கவனித்துக் கொண்டார். அவருக்கு பக்கத்து படுக்கையிலிருந்து ஒரு பருமனான உலான் மட்டும், தமது படுக்கையிலேயே சோர்ந்து முகம் சுளித்து ஒரு சுங்கானை பிடித்துக் கொண்டு, தொடர்ந்து உட்கார்ந்திருந்தார். அந்த சிறிய ஒற்றைக் கையுள்ள ரூஷின் இன்னும் கவனித்துக் கேட்டு, தம்முடைய அதிருப்தியை தலை அசைப்பு மூலம் தெரிவித்து வந்தார். வாசிப்பின் மத்தியில் டெனைசாவை அந்த உலான் இடைமறித்தார்.

அவர் ராஸ்டோவைப் பார்த்து, 'நான் என்ன சொல்லுகிறேன் என்றால், சக்கரவர்த்திக்கு மன்னிப்பு மனு கொடுப்பதுதான் மிகச்சிறந்ததாய் இருக்கும் என்று கூறுகிறேன். பெரிய பரிசுகள் இப்பொழுது வழங்கப்படப்போகின்றன என்று அவர்கள் சொல்லு கிறார்கள். ஆகவே, நிச்சயமாக மன்னிப்பு கொடுக்கப்படும்...'

'நான் சக்கரவர்த்திக்கு மனு கொடுப்பதா?' என்று டெனைசாவ் தமது பழைய ஊக்கமான, உணர்ச்சியான வேகத்தோடு பேச விரும்பி கூச்சலிட்டார். ஆனால், அவருடைய குரல், கையால் ஆகாத ஒரு கோபத்தைக் காட்டுவது போலவே இருந்தது. 'எதற்காக? நான் திருடனாய் இருந்தால், மன்னிப்பு கொடுக்கும்படி நான் கேட்பேன். ஆனால், திருடர்களைக் காட்டியதற்காக, என்னை ராணுவ கோர்ட்டார்கள் விசாரிக்கிறார்கள். அவர்கள் என்னை விசாரித்துக் கொள்ளட்டும். நான் யாரைக் கண்டும் பயப்பட வில்லை. நான், ஜாருக்காகவும், எனது நாட்டிற்காகவும் கண்ணியமாக சேவை செய்கிறேனே ஒழிய, நான் திருடவில்லை. இதற்காக என்னை பதவியிலிருந்து இறக்குவதா...? கவனமாய் கேளும். நான் அவர்களுக்கு நேரிடையாக எழுதப்போகிறேன். நான் அவர்களுக்குச் சொல்லுவது இதுதான். நான் கஜானாவை கொள்ளையடித்திருந்தால்...'0

'நிச்சயமாகவே அது நன்றாய் எழுதப்பட்டிருக்கிறது' என்றார் ரூஷின். 'ஆனால், வாசைலி டிமிட்ரிச், சே, விஷயம் அதுவல்ல. ஒருவர் கீழ்ப்படிந்தாக வேண்டும். ஆனால், வாசைலி டிமிட்ரிச் அப்படிச் செய்ய விரும்பவில்லை. நீர் செய்த காரியம் மிகுந்த மோசமானதென்று ஆடிட்டர் சொல்லியது உமக்குத் தெரியும்.

'நல்லது, மோசமாகவே இருக்கட்டும்' என்றார் டெனைசாவ்.

'உமக்காக இந்த ஆடிட்டர் ஒரு மனு தயாரித்துக் கொடுத்தார்' என்று ரூஷின் தொடர்ந்து கூறினார். 'அந்த மனுவில் நீர் கையெழுத்திட்டு அதை எடுத்துக் கொண்டு போகும்படி இந்த கனவானிடம் சொல்லவும். (அவர் ராஸ்டோவை சுட்டிக்காட்டி) தலைமைக் காரியாலயத்தில் அவருக்கு நல்ல தொடர்பு உண்டு. இதைவிட சிலாக்கியமான வேறு ஒரு சந்தர்ப்பம் உமக்குக் கிடைக்காது.'

'நான் பல்லைக் காட்டப்போவதில்லையென்று, உமக்கு நான் சொல்லியதில்லையா-' என்று டெனைசாவ் அவரை இடைமறித்துப் பேசி, தமது கடிதத்தைத் தொடர்ந்து வாசிக்க ஆரம்பித்தார்.

டெனைசாவை இணங்கும்படி செய்வதற்கு ராஸ்டோவுக்கு தைரியமில்லை. ரூஷினும் மற்ற அதிகாரிகளும் சொல்லுகிற யோசனைதான் சிறந்தது என்பதை அவர் உள்ளூர உணர்ந்தார். டெனைசாவுக்கு சேவை செய்வதற்கு அவர் தயாராய் இருந்தார். அவருடைய பிடிவாதமான குணத்தையும், நேரிடையான அவசரமான கோபத்தையும் அவர் அறிவார்.

டெனைசாவின் காரசாரமான பதிலைப் படித்து முடிப்பதற்கு ஒரு மணி நேரம் ஆயிற்று. அதன் பின்னால், ராஸ்டோவ் ஒன்றும் சொல்லவில்லை. அன்று பிற்பகல் பூராவாக மிகுந்த சோர்வுற்ற மனதோடு தம்மைச் சூழ்ந்திருந்த ஆஸ்பத்திரியிலுள்ள டெனைசாவின் தோழர்களோடு பேசிக்கொண்டிருந்தார். அவர்களுடைய கதைகளைக் கேட்டுக்கொண்டும், தம்முடைய கதைகளை சொல்லிக்கொண்டும் இருந்தார். டெனைசாவ் மௌனமாக முகம் தொங்கி மாலை பூராவாக இருந்தார்.

பின் மாலையில் தாம் புறப்படப்போகிற சமயத்தில், தாம் ஏதாவது அவருக்கு செய்யவேண்டுமா என்று டெனைசாவை ராஸ்டோவ் கேட்டார்.

'ஆம், ஒரு நிமிஷம் பொறும்' என்று டெனைசாவ் சொல்லி, அங்கிருந்த அதிகாரிகளை சுற்றி நோட்டமிட்டுவிட்டு, தமது தலையணைக்குக் கீழ் இருந்த காகிதங்களை எடுத்து, ஜன்னலுக்குப் பக்கத்தில் அமர்ந்து எழுத ஆரம்பித்தார். அங்கேதான் மை புட்டி இருந்தது.

'சுவரில் போய் மோதிக்கொள்வதால் ஒரு பயனுமில்லை என்று தெரிகிறது' என்று ஜன்னலிலிருந்து திரும்பிய அவர் சொல்லிவிட்டு, ராஸ்டோவிடம் ஒரு பெரிய காகிதக் கூட்டை கொடுத்தார். சக்கரவர்த்திக்கு ஆடிட்டர் தயார் செய்த அந்த மனு அதற்குள்ளிருந்தது.

சப்ளை அதிகாரிகளின் புகாரைப் பற்றிய குற்றங்கள் மீது எதுவும் சொல்லாமல், தமக்கு மன்னிப்பு கொடுக்கும்படி சக்கரவர்த்தியைப் பிரார்த்திப்பதாக அந்த மனு இருந்தது.

'இதை நீர் கொடுத்துவிடும். எனக்கு தோன்றுகிறது...?

அவர் முடிக்கவில்லை. ஆனால், ஒரு வேதனையான, இயற்கைக்கு விரோதமான புன்முறுவலைக் காட்டினார்.

## 5

## 19

ராஸ்டோவ் தமது பட்டாளத்திற்குத் திரும்பி வந்து, டெனைசாவின். அங்கிருந்து விவகாரங்களைப்பற்றி தமது கமாண்டரிடம் சொன்னார். அங்கிருந்து சக்கரவர்த்திக்குக் கடித்தை எடுத்துக் கொண்டு டில்ஸிட்டுக்குப் போனார்.

ஜுன் மாதம் 13-ந் தேதியன்று பிரஞ்சு, ருஷ்ய சக்கரவர்த்திகள் டில்ஸிட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். டில்ஸிட்டில் இருக்கப் போகிற பரிவாரங்களில், தம்மையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று, தாம் எந்த உயர்ந்த பிரபலஸ்தரிடம் சேவை செய்து வந்தாரோ, அவரிடம் போரிஸ் ட்ரூபெட்ஸ்கோய் கேட்டுக் கொண்டார்.

'அந்த பெரிய மனிதரைப் பார்க்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன்' என்று நெப்போலியனைப்பற்றி அவர் சொன்னார். இதுவரை மற்றவர்களைப் போலவே, அவரும் போனபார்ட் என்று சொல்லி வந்தார்.

'நீர் போனபார்ட்டைப் பற்றிப் பேசுகிறீரோ?' என்று அந்த ஜெனரல் புன்முறுவலோடு கேட்டார்.

'நான் போனபார்ட்டைப் பற்றிப் பேசுகிறீரோ?' என்று அந்த ஜெனரல் புன்முறுவலோடு கேட்டார்.

கேள்விக்குறியோடு போரில் அந்த ஜெனரலை நோக்கினார். தம்மைச் சோதனை செய்வதற்காகவே, அம்மாதிரி கேட்பதாக அவர் அறிந்து கொண்டார்.

'நான் அந்த நெப்போலியன் சக்கரவர்த்தியைப் பற்றியே பேசுகிறேன், இளவரசரே', என்று அவர் பதில் அளித்தார். இந்த ஜெனரல் ஒரு புன்முறுவலோடு அவருடைய தோளில் தட்டிக் கொடுத்தார்.

'நீர் வெகு தூரம் முன்னுக்கு வருவீர்' என்று சொல்லி, அவரை டில்ஸிட்டிற்கு தம்முடன் அழைத்துச் சென்றார். நீமென்

நதிக்கரையில் சக்கரவர்த்திகள் சந்தித்த அந்த தினத்தில், அங்கு ஆஜராய் இருந்த சொற்ப பேர்களில் போரிஸூம் ஒருவர். மிகுந்த அலங்காரங்கள் செய்யப்பட்ட தெப்பத்தையும், பிரஞ்சு காப்பாளர்களின் முன்பாக நெப்போலியன் போவதையும் ஆற்றின் அக்கரையில் அவர் பார்த்தார். நீமென் நதியின் இக்கரையில் நெப்போலியனுடைய விஜயத்திற்காக எதிர்பார்த்து, அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி மௌனமாக ஆழ்ந்த யோசனையோடு ஒரு ஹோட்டலில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார். இரண்டு சக்கரவர்த்திகளும் படகுகளில் போவதையும் பார்த்தார். நெப்போலியன் முதலாவதாக தெப்பத்திற்கு வந்து சேர்ந்ததும், அவர் அவசரமாக அதிலிருந்து காலடி எடுத்து வைத்து, அலெக்ஜாண்டரை நெருங்கி தமது கையை அவரிடம் நீட்டியதையும் அவர் பார்த்தார். அங்கு அமைக்கப்பட்டிருந்த பெரிய கூடாரத்திற்குள் அவர்கள் இருவரும் போவதையும் அவர் பார்த்தார். உயர் வட்டாரங்களில் போரில் நடமாட ஆரம்பித்த பின்பு, தம்மைச் சுற்றிலும் நடக்கிற விஷயங்களை மிகுந்த கவனமாகக் கவனித்து, அவற்றைக் குறித்து வைத்துக் கொள்வதை வழக்கமாக்கிவிட்டார். டில்ஸிட்டில் நடந்த அந்த சந்திப்பின்போது, நெப்போலியனுடன் வந்தவர்களின் பெயர்களையும், அவர்கள் அணிந்திருந்த யூனிபாரங்களைப்பற்றிய விவரங்களையும், அவர் கேட்டுத் தெரிந்துகொண்டார். பெரிய இடத்து பிரபலஸ்தர்கள் பேசுகிற ஒவ்வொரு வார்த்தைகளையும் கவனமாய் கேட்டுவந்தார். இரண்டு சக்கரவர்த்திகளும் கூடாரத்திற்குள் போனவுடன், தமது கடிகாரத்தைப் பார்த்தார். அந்தக் கூடாரத்தை மீண்டும் பார்க்க அவர் மறக்கவில்லை. அந்தப் பேட்டி சரியாக ஒரு ஐம்பத்து மூன்று நிமிஷங்கள் நடந்தன. அன்று மாலையில் இதைப் பற்றியும், இன்னும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்கள் என்று அவர் நினைத்தவைகளையும் அவர் எழுதி வைத்துக் கொண்டார். டில்ஸிட்டில் இந்தச் சந்திப்பின்போது இருக்க வேண்டுமென்று தாம் விரும்பி, தாம் அதில் வெற்றி பெற்றதற்காக போரிஸ் சந்தோஷமடைந்தார். ஏனெனில், சக்கரவர்த்தியின் பரிவாரம் மிக சிறிதானது. அதில் உள்ளவர்கள் தங்கள் உத்தியோகத்தில் வெற்றி பெற விரும்பினால், அதற்கு இச்சமயம் டில்ஸிட்டில் இருப்பது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஆகவே, இந்த வெற்றியினால் தம்முடைய ஸ்தானம் நிச்சயமாகிவிட்டதை அவர் உணர்ந்தார். அவர் பிரபலமானது மட்டுமல்ல, அவருடன் அறிமுகம் கொண்ட நபர்களின் பழக்கம் வளர்ந்தது. தங்களில் சக்கரவர்த்தியிடம் நேராகக் கடிதம் கொண்டு கொடுக்கக்கூடிய சேவை அவருக்குக் கிடைத்தது. அதன் பலனாக, சக்கரவர்த்திக்கு இவர் முகம் நன்றாய் பழக்கமா

யிற்று. முதலில் இவரைப் பார்த்ததும், ஒரு புதிய நபரைப் பார்ப்பதைப்போல ராஜ சபையில் சந்தோஷம் இல்லாமல் வரவேற்றார்கள். இப்போது அதே நபர்கள் எந்தக் கூட்டத்திலாவது இவர் இல்லையென்றால், அதற்காக ஆச்சரியப்படுவார்கள்.

மற்றொரு உதவியாளரான போலந்து தேசத்து கோமகன் ஜிலின்ஸ்கி என்பவருடன் போரிஸ் ஜாகை வைத்துக் கொண்டிருந்தார். ஜிலின்ஸ்கி என்ற அந்த போலந்துக்காரர் மிகுந்த பணக்கரார். பாரிஸில் வளர்ந்தவர். பிரஞ்சு மொழியில் மிகுந்த ஆர்வம் கொண்டவர். அங்கே டில்ஸிட்டில் தங்கிய ஒவ்வொரு நாளிலும் அங்கிருந்த பிரஞ்சு காப்பாளர் படையைச் சேர்ந்த அதிகாரிகளும், பிரஞ்சு தலைமைக் காரியாலயத்திலிருந்து வந்தவர்களும், அநேகமாய் அவருடனும், போரிஸுடனம் உணவு அருந்தி வந்தார்கள்.

ஜுன் மாதம் 24-ம் தேதியன்று மலையில், கோமகன் ஜிலின்ஸ்கி தம்முடைய பிரஞ்சு நண்பர்களுக்கு ஒரு இராச் சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்திருந்தார். அந்த விருந்தாளிகளில் பிரதானமானவர் நெப்போலியனின் மெய்க்காப்பாளர். காப்பாளர் படையைச் சேர்ந்த வேறு பல பிரஞ்சு அதிகாரிகளும் வந்திருந்தார்கள். நெப்போலியனின் சொந்த வேலைகளைக் கவனிக்கும் சிறுவன் ஒருவன் வந்திருந்தான். அவன் ஒரு பணக்கார பிரஞ்சு குடும்பத்தைச் சேர்ந்த வாலிபன். அதே நாளில், தம்மை அடையாளம் தெரிந்துகொள்ள முடியாத விதத்தில், இருட்டில் சிவிலியன் உடையோடு, டில்ஸிட்டுக்கு போரிஸும் ஜிலின்ஸ்கியும் தங்கியிருந்த ஜாகைக்கு ராஸ்டோவ் வந்தார்.

பிரஞ்சுக்காரர்களும் நெப்போலியனும், இதுவரை எதிரியாய் இருந்தவர்கள், திடீரென்று நண்பர்களாய்விட்டார்கள். இந்த மாறுதல் தலைமைக் காரியாலயத்திலும் போரிஸிடமும்கூட காணப்பட்டது. ஆனால், ராஸ்டோவோ, அந்த முழு ராணுவமோ, இம்மாதிரியான சிநேகபாவத்தை இன்னும் மேற்கொள்ளவில்லை. போனபார்ட்டையும் பிரஞ்சுக்காரர்களையும், இன்னும் கோபத்தோடும் அருவருப்போடும் பயத்தோடும் ராணுவத்தில் உள்ளவர்கள் எண்ணி வந்தார்கள். நெப்போலியன் கைதியாக பிடிக்கப்பட்டால், அவரை ஒரு சக்கரவரத்தியாக நடத்தப் போவதில்லை என்றும், ஒரு குற்றவாளியாகவே நடத்தப்படுவார் என்றும், சமீபத்தில் ஒரு கோசாக் அதிகாரியுடன் ராஸ்டோவ் பேசிக்கொண்டிருக்கும்போது சொன்னார். சமீபத்தில் ஒரு காயமடைந்த பிரஞ்சுக் கர்னலை ரஸ்தாவில் ராஸ்டோவ் சந்திக்க நேர்ந்தது. அவருடன் ராஸ்டோவ் மிகுந்த உஷ்ணத்தோடு

பேசியபோது, ஒரு நியாயமான சக்கரவர்த்திக்கும், ஒரு குற்றவாளியான போனபார்ட்டுக்கும் இடையில் சமாதானம் என்பது நடக்க முடியாத விஷயம் என்று கூறினார். ஆகவே, போரிஸ் ஜாகையில் தாம் தூரத்தில் இருந்து கவனித்து வந்திருந்த அதே பிரஞ்சு யூனிபாரங்களில் பிரஞ்சு அதிகாரிகளைப் பார்த்ததும் ராஸ்டோவிற்கு மனவருத்தம் ஏற்பட்டது. ஒரு பிரஞ்சு அதிகாரி வாசல் வழியாக தமது தலையை நீட்டியதை ராஸ்டோவ் கண்டபோது, எதிரியைப் பார்க்கும்போது எம்மாதிரியான விரோத குணம் ஏற்படுமோ, அதே மாதிரி உணர்ச்சி ராஸ்டோவைப் பீடித்தது. வெளி வாசலில் அவர் நின்று, அங்கே ட்ரூபெட்ஸ் கோய் என்பவர் வசிக்கிறாரா என்று ருஷ்ய மொழியில் கேட்டார். வெளி அறையில் கேட்ட ஒரு அந்நியக் குரலை போரிஸ் கேட்டதும், அவரைச் சந்திப்பதற்காக வெளியே வந்தார். ராஸ்டோவை அவர் அறிந்துகொண்டதும், ஒரு வினாடி அவருடைய முகத்தில் எரிச்சல் தோன்றியது.

'ஆ, நீர்தானா? உம்மைப் பார்ப்பதற்காக ரொம்ப சந்தோஷப் படுகிறேன். ரொம்ப சந்தோஷப்படுகிறேன்' என்று அவர் சொல்லி ஒரு புன்சிரிப்போடு அவரிடம் வந்தார். ஆனால் அவரிடம் ஏற்பட்ட முதல் உத்வேகத்தை ராஸ்டோவ் கவனித்தார்.

ஒரு அசந்தர்ப்பமான வேளையில் நான் வந்துவிட்டதாக நினைக்கிறேன். நான் வந்திருக்கக்கூடாது. இருந்தாலும் ஒரு வேலையாக வந்திருக்கிறேன்' என்று உணர்ச்சியில்லாமல் அவர் பேசினார்.

'இல்லை, நீர் எப்படி உமது பட்டாளத்திலிருந்து இங்கே வருவதற்குச் சமாளித்துகொண்டீர் என்று நான் ஆச்சிரியப்படுகிறேன். இதோ, ஒரு நிமிஷத்தில் வந்துவிடுகிறேன். என்று சொல்லிவிட்டு, அவரைக் கூப்பிட்டவரிடம் திரும்பிப் போனார்.

'நான் இப்போது உங்களுக்கு இடையூறாய் இருக்கிறேன் என்று நினைக்கிறேன்' என்று ராஸ்டோவ் மீண்டும் கூறினார்.

அந்த எரிச்சல் தோற்றம் போரிஸ் முகத்திலிருந்து முன்பே மறைந்துவிட்டது. எம்மாதிரி அச்சமயம் நடந்துகொள்ள வேண்டும் என்று அவர் சிந்தித்து முடிவு செய்துவிட்டபடியால், அமைதியோடு ராஸ்டோவின் இரண்டு கைகளையும் பற்றிக்கொண்டு, பக்கத்து அறைக்கு அழைத்துப் போனார். அவருடைய கண்கள் அமைதியுடனும் நேராகவும் ராஸ்டோவைப் பார்த்தன. சம்பிரதாயம் என்ற நீல நிறக் கண்ணாடிகளால் அந்தப் பார்வை மறைந்திருப்பது போல ராஸ்டோவுக்குத் தோன்றியது.

'ஓ, இப்போது வாரும். ஒரு தவறான காலத்தில் வந்துவிட்டதாகச் சொன்னீர்' என்று போரிஸ் கூறி, அவரைச் சாப்பாட்டு அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கே தம்முடைய விருந்தாளிகளுக்கு அவரை அறிமுகப்படுத்தினார். அவர் சிவிலியன் உடையை தரித்து இருந்தாலும், அவர் சிவிலியன் அல்ல என்றும், ஒரு குதிரைப் படையின் அதிகாரி என்றும், தம்முடைய பழைய நண்பர் என்றும் கூறினார்.

'கோமகன் ஜிலின்ஸ்கி-கோமகன் என்.என்-காப்டன் எஸ்.எஸ்.' என்று இம்மாதிரியாக அங்கிருந்த விருந்தாளிகளை பெயர் சொல்லி அறிமுகப்படுத்தினார். ராஸ்டோவ் முகம் சுழித்து அந்தப் பிரஞ்சுக்காரர்களைப் பார்த்தார். தயக்கத்தோடு தலைவணங்கி மௌனமாய் இருந்தார்.

இந்தப் புதிய ருஷ்யரைத் தம்முடைய கூட்டத்தில் வரவிடுவதற்கு ஜிலின்ஸ்கி பிரியப்படவில்லை என்று தோன்றியது. அவர் ராஸ்டோவுடன் பேசவில்லை. புதிதாய் வந்த இந்த நண்பர் அங்கு ஏற்படுத்திய நிர்பந்தமான உணர்ச்சியைக் கவனிக்காதவர் போல போரிஸ் நடந்துகொண்டார். பழைய மாதிரியான இனிய அடக்கத்துடனும், ராஸ்டோவை அவர் சந்தித்தபோது அவர் கண்களில் காணப்பட்ட மறைவான தோற்றத்துடனும், அங்கு நடந்த உரையாடல்களை உற்சாகப்படுத்த முயற்சித்தார். தம்முடைய நாட்டிற்கு தனி குணமான மரியாதையோடு, ஒரு பிரஞ்சுக்காரர் பிடிவாதம் கொண்டிருந்த ராஸ்டோவைப் பார்த்து, ஒருவேளை சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்காக அவர் டில்ஸிட்டுக்கு வந்திருக்கிறாரா என்று கேட்டார்.

'இல்லை, நான் ஒரு காரியமாக வந்தேன்' என்று போரிஸ் சுருக்கமாகப் பதிலளித்தார்.

போரிஸின் முகத்தில் அதிருப்தியைக் கண்டது முதல் ராஸ்டோவுக்கு அமைதி இல்லை. மன அமைதி இல்லாத காலத்தில் எப்படி மற்றவர்களை தங்களைக் கோபத்தோடு பார்ப்பதாகவும், மற்றவர்களுக்கு தாம் இடையூறாய் இருப்பதாகவும் தோன்றுமோ, அதே மாதிரி அவருக்கும் தோன்றியது. உண்மையிலேயே அவர்களுடைய வழியில் அவர் குறுக்கே இருந்தார். ஏனெனில், அங்கே நடந்த உரையாடல்களில் மட்டும்தான் கலந்து கொள்ளவில்லை. அங்கிருந்த விருந்தாளிகள் அவரைப் பார்த்த பார்வைகள், 'இவர் எதற்காக இங்கே இருக்கிறார்' என்று கேட்பதுபோலத் தோன்றியது. அவர் எழுந்து போரிஸிடம் சென்றார்.

'எப்படியோ நான் உங்களுக்கு இடையூறாய் இருக்கிறேன்' என்று அவர் ஒரு தணிந்த குரலில் சொன்னார். 'நீர் வந்து என்னுடைய காரியத்தைப் பற்றிப் பேசும்; நான் போய்விடுகிறேன்!'

'ஓ, இல்லை. இல்வே இல்லை. நீர் களைப்பாய் இருந்தால், என்னுடைய அறைக்கு வந்து படுத்திருந்து ஓய்வு எடுத்துக்கொள்ளும்' என்றார் போரிஸ்.

'ஆமாம், உண்மையிலேயே....'

போரிஸின் சிறிய படுக்கை அறைக்கு அவர்கள் போனார்கள். ராஸ்டோவ் கீழே உட்காராமல், கோபத்தோடு பேச ஆரம்பித்தார். போரிஸ்தான் அதற்கு ஒரு வழியில் பொறுப்பானவர் என்று சொல்லுவதைப் போல இருந்தது. டெனைசாவின் காரியத்தைபற்றி அவரிடம் சொல்லிவிட்டு, அவருடைய ஜெனரல் மூலமாக சக்கரவர்த்தியிடம் டெனைசாவுக்காக டெனைசாவின் மனுவைக் கொடுக்க ஏற்பாடு செய்ய முடியுமா என்று கேட்டார். போரிஸூம் அவரும் தனியாக இருந்தபோது, போரிஸின் முகத்தை தர்மசங்கடமில்லாமல் பார்ப்பதற்கு தம்மால் முடியவில்லை என்பதை ராஸ்டோவ் முதன் முதலாக உணர்ந்தார். கால் மேல் கால் போட்டுக் கொண்டு, தமது இடது கையை வலது கையில் மெல்லிய விரல்களினால் தட்டிக்கொண்டு, ராஸ்டோவ் சொல்வதை, ஒரு ஜெனரல் தம்முடைய சிப்பந்தி சொல்வதை கேட்பதுபோல, போரிஸ் கேட்டுக்கொண்டிருந்தார். ஒரு சமயம் அப்பக்கம் பார்ப்பதும் மற்றொரு சமயம் ராஸ்டோவின் கண்களைப் பார்ப்பதுமாகச் செய்துகொண்டிருந்தார். இம்மாதிரி ஏற்படும் ஒவ்வொரு தடவைகளிலும் ராஸ்டோவ் மன அமைதி குறைந்து தமது பார்வையைக் கீழ் நோக்கினார்.

'இம்மாதிரி விவகாரங்களை நான் கேட்டு இருக்கிறேன். மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தி, இவ்விஷயங்களில் ரொம்பக் கண்டிப்பானவர். சக்சரவர்த்தியிடம் இதைக் கொண்டுபோகாமல், பட்டாளத்தின் கமாண்டரிடம் கொண்டுபோவது நல்லது என்று நான் நினைக்கிறேன்... ஆனால், பொதுவாக, நான் நினைக்கிறேன்..'

'அப்படியனால், நீர் எதுவும் செய்ய விரும்பவில்லையா... நல்லது.... அப்படியனால், அம்மாதிரி சொல்லிவிடும்' என்று ராஸ்டோவ் போரிஸைப் பார்க்காமலே, அநேகமாய் கூச்சலிட்டார்.

போரிஸ் புன்னகை கொண்டார்.

'அல்ல, என்னால் என்ன செய்யமுடியுமோ, அதை நான் செய்வேன். நான் நினைத்தது..'

அந்தச் சமயத்தில் போரிசை ஜிலின்ஸ்கி அழைக்கும் குரல் கேட்டது.

'அப்படியானால், சரி. போம்...போம்...போம்...' என்று ராஸ்டோவ் சொன்னார்.

அவர்களுடன் உணவு அருந்த மறுத்துவிட்டு, அந்தச் சிறிய அறையில் தனியாய் இருந்து, மேலும் கீழுமாக வெகு நேரம் வரையில் நடந்துகொண்டு, பிரஞ்சு மொழியில் தமாஷாகப் பக்கத்து அறையில் பேசிக்கொண்டிருந்தைக் கேட்டுக்கொண்டிருந்தார்.



டெனைசாவுக்காக மனு கொடுப்பதற்கு கொஞ்சங்கூடப் பொருத்தம் இல்லாத நாளில், ராஸ்டோவ் டில்ஸிட்டுக்கு வந்தார். ஜெனரலிடம் அவர் நேராகப் போக முடியவில்லை. ஏனெனில், உத்தியோக உடை இல்லாமல், அனுமதி கூட இல்லாமல், அவர் டில்ஸிட்டிற்கு வந்திருக்கிறார். போரிஸ் விரும்பி இருந்தாலும் கூட, மறுநாள் அவரால் எதுவும் செய்ய முடிந்திருக்காது. ஏனெனில் அன்றைய தினமாகிய ஜுன் மாதம் 27-ந் தேதியன்று, சமாதானத்திற்கான ஆரம்பப் பேச்சுக்கள் கையெழுத்திடப்பட்டன. சக்கரவர்த்திகள் இருவரும் ஒருவருக் கொருவர் பட்டங்களை வழக்கினார்கள். அலெக்ஜாண்டருக்கு 'லீஜியன் ஆப் ஹானர்' என்ற சிலுவை பதக்கத்தை நெப்போலியன் கொடுத்தார். நெப்போலியனுக்கு 'ஆர்டர் ஆப் செயின்ட் ஆண்ட்ரூ' என்ற பதக்கத்தின் முதல் தரமானதை அலெக்ஜாண்டர் கொடுத்தார். அன்று மாலையில் பிரஞ்சுக் காப்பாளர்களின் ஒரு பட்டாளம், ப்ரோப்ராஜென்ஸ்க் பட்டாளத்திற்கு விருந்து கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த விருந்தில் சக்கரவர்த்திகள் பிரசன்னமாய் இருக்க வேண்டும்.

போரிஸுடன் இருப்பதற்கு ராஸ்டோவுக்குப் கொஞ்சங்கூட மனம் சமாதானமாய் இல்லை. ஆகவே இராச்சாப்பாடு முடிந்துபோரிஸ் திரும்பி வந்ததும் தாம் தூங்குவதைப்போல பாசாங்கு செய்தார். மறுநாள் அதிகாலையில் போரிஸை சந்திக்காமலேயே அவர் புறப்பட்டுப் போய்விட்டார். தம்முடைய சிவிலியன் ஆடைகளிலும் ஒரு வட்டமான தொப்பியுடனும், அவர் அந்த நகரத்தைச் சுற்றி வந்தார். பிரஞ்சுக்காரர்களையும், அவர்களின் யூனிபாரங்களையும் ருஷ்ய பிரஞ்சு சக்கரவர்த்திகள் தங்கி இருக்கும் வீடுகளையும் தெருக்களையும் வெறித்துப் பார்த்தார். ஒரு

சதுக்கத்தில் டின்னருக்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்து, மேஜைகள் போடப்பட்டு வருவதைப் பார்த்தார். தெருக்களில் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கம் வரையில் ருஷ்ய-பிரஞ்சுக் கொடிகள் பறக்கவிடப் பட்டிருப்பதையும் 'அ'. 'நெ'. என்ற எழுத்தங்கள் பெரிய அளவில் தொங்கவிடப்பட்டு இருப்பதையும் கண்டார். வீடுகளின் ஜன்னல்களிலும் கூட, கொடிகளும் தோரணங்களும் காணப்பட்டன.

'எனக்கு உதவி செய்ய போரிஸுக்கு இஷ்டம் இல்லை. அவரிடம் கேட்க நான் விரும்பவும் இல்லை. இது முடிவான விஷயம்' என்று நிக்கலஸ் நினைத்தார். 'எங்களுக்கு இடையில் எல்லாம் முடிந்துவிட்டது. ஆனால், டெனைசாவுக்காக என்னால் என்ன செய்யமுடியுமோ, அவ்வளவையும் செய்யாமலும், அந்தக் கடிதத்தைச் சக்கரவர்த்தியிடம் கொடுக்காமலும், நான் இதை விட்டுப் போகப் போவதில்லை. சக்கரவர்த்தி... அவர் எங்கே இருக்கிறார்?' என்று ராஸ்டோவ் நினைத்தார். தம்மை அறியாமலேயே சக்கரவர்த்தி இருந்த வீட்டுக்கு அவர் வந்து சேர்ந்தார்.

சேணம் இடப்பட்ட குதிரைகள் அந்த வீட்டுக்கு முன்பாக நின்றுகொண்டிருந்தன. பரிவாரங்கள் கூடி நின்றார்கள். சக்கரவர்த்தி வெளியே வருவதற்காக அவர்கள் காத்திருப்பதாகத் தோன்றியது.

'எந்த வினாடியிலும் நான் அவரைப் பார்க்க நேரிடலாம். அந்தக் கடித்தை நேராகக் கொடுத்து, எல்லா விஷயங்களையும் சொல்லும்படியாய் இருந்தால்... நான் சிவிலியன் ஆடை அணிந்திருப்பதற்காக, என்னை அவர்கள் உண்மையில் கைது செய்ய முடியுமா? நிச்சயமாக முடியாது. யார் பக்கம் நியாயம் இருக்கிறது என்பதை அவர் புரிந்துகொள்வார். அவருக்கு ஒவ்வொன்றும் புரியும், ஒவ்வொன்றையும் அவர் அறிவார். அவரைவிட யார்தான் அதிகமாய் நியாயமாகவோ, பெருந்தன்மையாகவோ இருக்க முடியும்? நான் இங்கே இருப்பதற்காக என்னைக் கைது செய்தால் கூட, அதனால் என்ன?' என்று ராஸ்டோவ் நினைத்தார். அச்சமயம் சக்கரவர்த்தியின் வீட்டுக்குள் ஒரு அதிகாரி போவதைப் பார்த்தார். 'மக்கள் உள்ளே போய்க்கொண்டிருக்கிறார்கள்...அதெல்லாம் அசட்டுத்தனம். நானும் உள்ளே போய், கடிதத்தை சக்கரவர்த்தியிடம் நேராகக் கொடுப்பேன். இம்மாதிரி செய்யும்படி ட்ரூபெட்ஸ்கோய் என்னைச் செய்துவிட்டார்.' திடீரென்று அவரே எதிர்பாராதவிதமாக ஒரு உறுதியோடு, ராஸ்டோவ் தமது ஜேபியில் கடிதம் இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டு, அந்த வீட்டிற்கு நேராகப் போனார்.

'ஆஸ்டர்லிட்ஜில் எனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தை நான் கைநழுவவிட்ட மாதிரி, இச்சமயம் நான் விடமாட்டேன்' என்று நினைத்து ஒவ்வொரு வினாடியும் சக்கரவர்த்தியைச் சந்திக்கப் போவதாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அந்த நினைப்பு அவருக்கு ஏற்பட்டபோதெல்லாம், அவருடைய ரத்தம் இருதயத்தை நோக்கிப்பாயும். 'நான் அவருடைய காலில் விழுந்து அவரைக் கெஞ்சுவேன். அவர் என்னைக் தூக்கி நிறுத்தி, நான் சொல்வதைக் கேட்பார். எனக்கு வந்தனம்கூடச் சொல்வார். என்னால் நன்மை செய்ய முடிவதற்காக, நான் சந்தோஷப் படுகிறேன். ஆனால், ஒரு அநீதிக்குப் பரிகாரம் தேடுவது என்பது சந்தோஷங்களில் மிக உயர்ந்ததாகும்' என்று சக்கரவர்த்தி சொல்வதைப்போல ராஸ்டோவ் மனோராஜ்யம் செய்தார். அவரை ஆச்சிரியத்தோடு பார்த்துக் கொண்டிருந்த மக்களைக் கடந்து, சக்கரவர்த்தி வீட்டின் முற்றமண்டபத்தில் நுழைந்தார்.

முன் அறையிலிருந்து ஒரு அகலமான படிக்கட்டு, மேலே போய்க்கொண்டிருந்தது. வலது பக்கத்தில் ஒரு கதவு மூடப் பட்டிருந்தது. படிக்கட்டிற்குக் கீழாக, கீழ்த் தளத்திற்கு போகக் கூடிய ஒரு வாசல் இருந்தது.

'உமக்கு யார் வேண்டும்?' என்று ஒருவர் கேட்டார்.

'சக்கரவர்த்திக்கு இந்தக் கடிதத்தை, இந்த மனுவை, கொடுக்க வேண்டும்' என்று தமது குரலில் ஒரு நடுக்கத்தோடு நிக்கலஸ் பதில் சொன்னார்.

'ஒரு மனுவா? இந்த வழியாக வாரும். அங்கே அலுவலிலிருக்கும் அதிகாரியைப்பாரும். (கீழ்த்தளத்திற்கு போய்கொண்டிருந்த வாசலை அவருக்குக் காட்டினார்கள்) ஆனால், மனுவை வாங்கிக் கொள்ளமாட்டார்கள்.'

இம்மாதிரியான, பராமுகமான குரலைக் கேட்டதும், தாம் செய்வதைப்பற்றி ராஸ்டோவ் பயந்து போனார். எந்த வினாடியும் சக்கரவர்த்தியைச் சந்திக்க நேரும் என்ற நினைப்பு அவருக்கு மிகுந்த கவர்ச்சிகரமாய் இருந்தாலும், இப்போது மிகுந்த பீதி கொடுப்பதாயிருந்தது. அதைவிட ஓடிப்போவதற்கு அவர் தயாராயிருந்தார். ஆனால், அவரைக் கேள்வி கேட்ட அதிகாரி கதவைத் திறந்தார். ராஸ்டோவ் அதில் நுழைந்தார்.

ஒரு குட்டையான, பருமனான, முப்பது வயதான ஒருவர் வெள்ளைக்கால் சட்டையும், உயரமான ஜோடுகளும் ஷர்ட்டும் அணிந்து, அந்த அறையில் நின்றுகொண்டிருந்தார். அவருடைய கால் சட்டையில் பின்பாகத்தில், அவருடைய வேலைக்காரன் ஒரு அழகான பட்டு வேலைப்பாடுள்ள இணைப்புப் பட்டியில்

பொத்தான்களை மாட்டிக் கொண்டிருந்தான். ஏதோ ஒரு காரணத்திற்காக, ராஸ்டோவின் கவனத்தை அது இழுத்தது. இந்த மனிதர் பக்கத்து அறையிலிருந்த ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தார்.

'ஒரு அழகான உருவம். அவளுடைய முதலாவது மலர்ச்சி?' என்று சொல்லிக்கொண்டிருந்தவர், ராஸ்டோவ் பார்த்ததும் முகம் சுளித்தார்.

'என்ன இது! ஒரு மனுவா?'

'என்ன இது' என்று பக்கத்து அறையிலிருந்தவர் கேட்டார்.

'மற்றொரு மனுதார்' என்று இணைப்புப் பட்டியோடு நின்ற அந்த மனிதர் பதிலளித்தார்.

'பின்னால் வரும்படி அவருக்குச் சொல்லும். இப்போது சக்கரவர்த்தி நேராக இங்கே வருவார். நாம் போகவேண்டும்.'

'பின்னால் வாரும்....பின்னால் வாரும். நாளை வாரும். இப்போது நேரமாகிவிட்டது....'

ராஸ்டோவ் போவதற்காகத் திரும்பினார். அந்த இணைப்புப் பட்டி அணிந்து கொண்டிருந்தவர் நிறுத்தினார்.

'யாரிடமிருந்து நீர் வந்திருக்கிறீர்? நீர் யார்?'

'நான் மேஜர் டெனைசாவிடமிருந்து வந்திருக்கிறேன்' என்று பதிலளித்தார் ராஸ்டோவ்.

'நீர் ஒரு அதிகாரியா?'

'லெப்டினன்ட் கோமகன் ராஸ்டோவ்'

'என்ன அக்கிரமம்! உம்முடைய கமாண்டர் மூலமாக அனுப்பும். நீர் இதைவிட்டுப் போம்...போய்விடும்' என்று தமது சேவகன் கொடுத்த சீருடையை அணிந்து கொண்டே பேசினார்.

ராஸ்டோவ் திரும்பவும் ஹாலுக்கு வந்தார். முற்ற மண்டபத்தில் அணிவகுப்பு யூனிபாரங்கள் அணிந்து, பல ஜெனரல்களும் அதிகாரிகளும் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தார். அவர் அந்த வழியாக அவர்களைக் கடந்துதான் போகவேண்டும்.

தம்முடைய துணிச்சலை சபித்துக் கொண்டார். எந்த வினாடியும் நேருக்கு நேராக சக்கரவர்த்தியைப் பார்க்க நேரிடும் என்ற நினைப்பு தோன்றியபோது, அவருடைய உள்ளம் ஆழ்ந்தது. சக்கரவர்த்திக்கு முன்பாகத் தம்மைக் கைது செய்து அவமானப் படுத்துவார்கள் என்று அவர் நினைத்தபோதும் வெட்கமடைந்தார். இம்மாதிரி செய்வது தவறானது என்பதை அவர் அறிந்து, அதற்காக வருந்தினார்.

கீழ்நோக்கிய பார்வையோடு, அந்த வீட்டிலிருந்து வெளியே போவதற்கு அவர் ஆரம்பித்தார். பரிவாரங்கள் பக்கமாக அவர் போய்க் கொண்டிருக்கும்போது, அவருக்குப் பழக்கமான குரல் அவரைக் கூப்பிட்டது. கூப்பிட்டவர் தமது கையால் அவரைப் பிடித்து நிறுத்தினார்.

'சிவிலியன் உடையில் நீர் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர், ஐயா?' என்று அவர் கேட்டார்.

அவர் ஒரு குதிரைப் பட்டாளத்தின் ஜெனரல். கடந்த சண்டையில் சக்கரவர்த்தியின் விசேஷ அன்பைப் பெற்றவர். ராஸ்டோவ் முன்பு சேவை செய்து வந்த பட்டாளத்திற்கு, அவர் முன்பு கமாண்டராக இருந்தவர். அதைரியத்தோடு தாம் அங்கு வந்ததற்கு நியாயம் சொல்ல ராஸ்டோவ் முயற்சித்தார். ஆனால், ஜெனரலின் அன்பான, தமாஷான முகத்தைப் பார்த்ததும், அவரைத் தனியாக அழைத்துச் சென்று, பரப்பரப்பான குரலில் முழு விஷயங்களையும் சொன்னார். டெனைசாவை அந்த ஜெனரல் அறிவார். அவருக்காகத் தலையிடும்படி கேட்டுக் கொண்டார். கடைசி வரையில் ராஸ்டோவ் சொல்வதை ஜெனரல் கேட்ட பின்பு, தமது தலையைக் கவலையோடு ஆட்டினார்.

'நான் வருந்துகிறேன். அந்த சிலாக்கியமான பேர்வழிக்காக வருந்துகிறேன். கடித்தத்தை என்னிடம் கொடும்' என்று சொன்னார்.

டெனைசாவின் விவகாரத்தை விளக்கிச் சொல்லி, அந்தக் கடிதத்தை ராஸ்டோவ் கொடுத்து அதே சமயத்தில், படிக்கட்டு வழியாக அவசரமாக வரும் காலடி ஓசைகளும், தார்ச்சக்கரங்களின் சலசலப்புகளும் கேட்டன. அந்த ஜெனரல் ராஸ்டோவை விட்டு நீங்கி, மண்ட முற்றத்திற்குப் போனார். சக்கரவரத்தியின் பரிவாரத்தைச் சேர்ந்தவர்கள் படிகள் வழியாக ஓடிவந்து, தங்கள் குதிரைகளிடம் சென்றார்கள். ஆஸ்டர்லிட்ஜில் குதிரைக்காரனாக இருந்த அதே ஹேன் என்பவன், சக்கரவர்த்தியின் குதிரையைக் கொண்டுவந்து நிறுத்தினான். ராஸ்டோவுக்கு முன்பே தெரிந்த ஒரு மென்மையான காலடிச் சப்தம், படிக்கட்டுகளில் கேட்டது. தம்மை அடையாளம் புரிந்துகொண்டால் ஏற்படக் கூடிய ஆபத்தை மறந்தவராக, ராஸ்டோவ் மற்ற வேடிக்கை பார்க்கும் சிவிலியன்களோடு, சேர்ந்து மண்டப முற்றத்தின் பக்கத்திற்கு போனார். இரண்டு வருஷங்களுக்குப் பின்னார், அவர் முன்பு பார்த்த அதே முகச் சாயல்களைப் பார்த்தார். அதே முகம்; அதே பார்வை, அதே நடை, அதே கம்பீரம்... தம்முடைய சக்கரவர்த்திக்கு முன்பாக, அன்பும் உணர்ச்சியும் மீண்டும் பழைய வேகத்தோடு வளர்ந்தது. ப்ரோப்ராஜென்ஸ்க் பட்டாளத்தின் சீருடையோடு-சாமாய்ஸ் தோல்

கால் சட்டையோடும், உயர்ந்த ஜோடுகளுடனும்-ஒரு நட்சத்திர பதக்கத்தை அணிந்துகொண்டு, சக்கரவர்த்தி மண்டப முற்றத்திற்கு வந்தார். (அதுதான் 'லீஜியன் ஆம் ஹானர்' என்ற பதக்கம் என்பது ராஸ்டோவுக்குத் தெரியாது) கையில் உறைகள் போட்டு கையின் கீழ் தமது தொப்பியைப் தாங்கி வந்தார். அவர் அங்கு நின்று தம்மைச் சுற்றிப்பார்த்து, தமது பார்வையினால் ஒவ்வொன்றையும் ஒளிபடாச் செய்தார். சில ஜெனரல்களிடம் சில வார்த்தைகள் பேசினார். ராஸ்டோவின் முந்திய கமாண்டரை அடையாளம் தெரிந்து கொண்டு அவருக்கு புன்முறுவல் காட்டி அவரை அழைத்தார்.

பரிவாரத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் பின்வாங்கினர். அந்த ஜெனரல் சிறிது நேரம் சக்கரவர்த்தியோடு பேசிக்கொண்டிருந்ததை ராஸ்டோவ் கண்டார்.

சக்கரவர்த்தி அவரிடம் சில வார்த்தைகள் பேசிய பின்பு, தமது குதிரையை நோக்கி ஒரு அடி எடுத்துவைத்தார். அவருடைய பரிவாரத்தைச் சேர்ந்தவர்களும் எதிரில் வேடிக்கை பார்த்து நின்றவர்களும் (அவர்களில் ராஸ்டோவும் ஒருவர்) மீண்டும் சக்கரவர்த்தியிடம் நெருங்க ஆரம்பித்தார்கள். தமது குதிரையின் பக்கத்தில் நின்றுகொண்டு, சேணத்தின் மீது ஒரு கையை வைத்துக் கொண்டு, குதிரைப் படையின் ஜெனரலைத் திரும்பிப் பார்த்து, உரத்த குரலில், அங்கிருந்த எல்லொரும் கேட்கவேண்டுமென்ற விருப்பத்தில் பேசினார். 'என்னால் செய்ய முடியாது, ஜெனரல் என்னால் முடியாது. ஏனெனில், சட்டம் என்னைவிட பலமானதாய் இருக்கிறது' என்று அவர் சொல்லி, தமது காலை அங்கபடியில் தூக்கி வைத்தார்.

அந்த ஜெனரல் மரியாதையோடு தலை வணங்கினார். சக்கரவர்த்தி குதிரையின் மீது ஏறி, அந்தத் தெரு வழியாகப் பாய்ச்சலில் போனார். ராஸ்டோவ் உற்சாகமடைந்து மற்றவர் களோடு அவருக்குப்பின் ஓடினார்.

## 5
### 21

சக்கரவர்த்தி சதுக்கத்திற்கு சவாரி வந்தார். அங்கே ப்ரோப்ரா ஜென்ஸ்க் பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள், வலது பக்கம் நின்று கொண்டிருந்தார்கள். இடது பக்கத்தில் கரடித்தோல் தொப்பிகள் அணிந்து, பிரஞ்சுக் காப்பாளர்கள் பட்டாளத்தார் நின்று கொண்டிருந்தார்கள். இரண்டு பட்டாளங்களும் ஒன்றுக்கொன்று எதிராக நின்றிருந்தன.

பட்டாளத்தின் ஒரு பக்கவாட்டிற்கு ஜார் சவாரி போனதும், அவர்கள் துப்பாக்கிகளைத் தூக்கி மரியாதை செய்தார்கள். குதிரை வீரர்களின் ஒரு கூட்டம், எதிர் பக்கவாட்டிற்கு போனார்கள். அதன் தலைமையில் நெப்போலியன் போனதை ராஸ்டோவ் அடையாளம் கண்டார். அவர் வேறு யாராகவும் இருக்க முடியாது. ஒரு நீல நிற யூனிபாரமணிந்து, ஒரு சிறிய தொப்பியை அணிந்து, தமது தோள் பட்டையில் செயின்ட் ஆண்ட்ரூ ரிப்பன் அணிந்து பாய்ச்சலில் வந்தார். சாம்பல் வர்ண, ஒரு சிறந்த அரபுக் குதிரையில் அவர் சவாரி வந்தார். சிகப்பான தங்கவேலைப்பாடு செய்யப்பட்ட ஜூல் துணியால் அந்தக் குதிரை மூடப்பட்டிருந்தது. அலெக்ஜாண்டரை நெருங்கியதும் நெப்போலியன் தமது ஆசனத்தில் சரியாகவோ, ஸ்திரமாகவோ இருக்கவில்லை என்பதை ஒரு குதிரை வீரரின் கண்களோடு ராஸ்டோவ் கவனிக்கத் தவறவில்லை. பட்டாளங்கள், 'ஜே, ஜே', என்றும் 'சக்கரவர்த்தி வாழ்க' என்றும் கோஷமிட்டன. அலெக்ஜாண்டரிடம் நெப்போலியன் ஏதோ சென்னார். இரு சக்கரவர்த்திகளும் குதிரைகளை விட்டு இறங்கி, ஒருவர் கையை ஒருவர் பற்றினார்கள். நெப்போலியன் முகத்தில் இனிமையற்ற, செயற்கையான புன்னகை காணப்பட்டது. அவருக்கு இதமாக அலெக்ஜாண்டர் எதையோ சொல்லிக் கொண்டிருந்தார்.

பிரஞ்சு குதிரை வீரர்கள் அங்கிருந்த கூட்டத்தை முன்னே வரவிடாமல், பின்னால் தள்ளிக் கொண்டிருந்தார்கள். அந்தக் கூட்டத்திலிருந்த ராஸ்டோவ் மட்டும், அலெக்ஜாண்டரும் போனபார்ட்டும் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் விடாமல் கவனித்து வந்தார். போனபார்ட்டை தமக்குச் சம அந்தஸ்துள்ள ஒருவரைப் போல அலெக்ஜாண்டர் நடத்தியதையும், சக்கரவர்த்திகளுடன் இம்மாதிரி தொடர்பு கொள்ளுவது தாம் தினம் செய்துவரும் ஒரு வேலையைப் போன்றது போல ஜார் சக்கரவர்த்தியுடன் போனபார்ட் மிகுந்த சுமுகமாகப் பழகுவதையும், கண்ட ராஸ்டோவ் ஆச்சரியப்பட்டார்.

அலெக்ஜாண்டரும், நெப்போலியனும் தங்களுடைய ஏராளமான பரிவாரங்களுடன் ப்ரோப்ராஜென்ஸ்க் என்ற பட்டாளத்தின் வலது பக்கவாட்டிற்கு வந்தார்கள். அங்கே நின்ற கூட்டத்தின் பக்கத்தில் அவர்கள் வந்து சேர்ந்தார்களை. அந்தக் கூட்டம் எதிர்பாராத விதமாக சக்வர்த்திகள் சமீபமாக வந்துவிட்டனர். அந்தக் கூட்டத்தில் முதல் வரிசையில் ராஸ்டோவ் நின்றுகொண்டிருந்த படியால், தம்மை எங்கே அடையாளம் கண்டு விடுவார்களோ என்று பயந்தார்.

''மாட்சிமை தங்கியவரே, உங்களுடைய சிப்பாய்களில் மிகுந்த தைரியமானவருக்கு 'லீஜியன் ஆப் ஹானர்' என்ற இந்தப் பதக்கத்தைக் கொடுப்பதற்கு உங்கள் அனுமதியை வேண்டுகிறேன். என்ற ஒரு கூர்மையான தொனி, ஒவ்வொரு எழுத்தையும் தெளிவாகச் சொல்லிக் கேட்டது.

இம்மாதிரி சொல்லியது குட்டையான அந்த நெப்போலியனே ஆகும். அவர் அலெக்ஜாண்டர் முகத்தை நேராகப் பார்த்துக் கொண்டிருந்தார். தம்மிடம் சொல்வதை கவனமாகக் கேட்டு வந்த அலெக்ஜாண்டர், மகிழ்ச்சிப் புன்னகையோடு தமது தலையை வணங்கினார்.

'கடந்த யுத்தத்தில் யார் மிகுந்த தைரியத்துடன் நடந்து கொண்டார்களோ, அவருக்கு இதைக் கொடுக்கப் போகிறேன்' என்று ஒவ்வொரு வார்த்தையும் நிறுத்தி நெப்போலியன் சொன்னார். நெப்போலியன் நம்பிக்கையும், அடக்கத்தையும் கண்ட ராஸ்டோவுக்கு எரிச்சல் ஏற்பட்டது. அவர் அங்கு நிறுத்தப் பட்டிருந்த் ருஷ்ய அணி வரிசைகளைப் பார்த்தார். அவர்கள் எல்லாரும் சக்கரவர்த்தி மீது தங்கள பார்வையைப் பதித்து, துப்பாக்கிகளைத் தாக்கி மரியாதை செய்தார்கள்.

'கர்னலை கலந்துகொள்வதற்கு, மாட்சிமை தங்கியவரே, என்னை அனுமதிப்பீரா' என்று அலெக்ஜாண்டர் சொல்லிவிட்டு, அவசரமாக இளவரசர் காஜ்லோவ்ஸ்கி என்ற பட்டாளத்தின் கமாண்டரிடம் நெருங்கினார்.

இதற்கிடையில் போனபார்ட் தம்முடைய வெள்ளைக் கைகளின் மீது போடப்பட்டிருந்த கையுறைகளைக் கழற்றினார். கழற்றும் போது அது கிழிந்து விட்டபடியால், அவற்றைத் தூர எறிந்தார். அவருக்குப் பின்னால் நின்ற ஒரு மெய்க்காப்பாளர் அவற்றைப் பொறுக்கியெடுத்தார்.

'அந்தப் பரிசை யாருக்குக் கொடுக்க வேண்டும்? என்று காஜ்லோவ்ஸ்கியிடம் சக்கரவர்த்தி அலெக்ஜாண்டர் தணிந்த குரலில் ருஷ்ய மொழியில் கேட்டார்.

'மாட்சிமை தங்கிய நீங்கள் யாருக்குக் கொடுக்க வேண்டுமென்று உத்தரவிடுகிறீர்களோ, அவருக்குக் கொடுப்போம்.'

சக்கரவர்த்தி தமது புருவங்களை அதிருப்தியால் நெறித்துக் கொண்டு, பின்பக்கமாக நோட்டமிட்டு, 'நாம் அவருக்குப் பதில் சொல்லவேண்டும்' என்றார்.

காஜ்லோவ்ஸ்கி அந்த அணி வரிசைகளை உறுதியோடு, ராஸ்டோவ் உள்பட, ஒரு பார்வை பார்த்தார்.

‘ஒரு வேளை எனக்குக் கொடுக்கப்படலாமோ?’ என்று ராஸ்டோவ் நினைத்தார்.

‘லாஜாரெவ்’ என்று முகம் சுளித்து, அந்தக் கர்னல் அழைத்தார். அந்த வரிசையில் முதலாவதாக நின்ற லாஜாரெவ் என்ற சிப்பாய், உற்சாகமாய் முன்னால் அடி எடுத்து வைத்தார்.

‘நீர் எங்கே போகிறீர்? இங்கேயே நில்லும்’ என்று, எங்கே போவது என்று தெரியாமல் திகைத்துக்கொண்டிருந்த லாஜாரெவ்விடம், பல குசு குசுப்பான குரல்கள் சொல்லின. லாஜாரெவ் அங்கே நின்று, பீதியோடு தமது கர்னலை கடைக்கண்ணால் பார்த்தார். அணி வரிசைகள் முன்பாக சிப்பாயை அழைக்கும்போது, முகம் சுளிப்பது வழக்கம். அதேமாதிரி அவருடைய முகமும் சுளித்தது. நெப்போலியன் தமது தலையை சிறிது திருப்பி, எதையோ எடுக்க விரும்புவதைப்போல, தம்முடைய தடித்த சிறிய கையை நீட்டினார். அவருடைய பரிவாரங்களைச் சேர்ந்தவர்கள், அவர் என்ன விரும்புகிறார் என்பதை உடனே அறிந்து கொண்டு, தணிந்த குரலில் அங்கிருந்து ஒருவருக்கொருவர் சொல்லியனுப்பினார்கள்.

போரிஸினுடைய வீட்டில் முதல் நாள் இரவு பார்த்த அதே கையாள் முன்னால் ஓடிவந்தார்கள். நெப்போலியனின் நீட்டிய கைக்கு முன்பாக, மரியாதையோடு தலை தாழ்த்தி, சிகப்பு நாடாவில் கட்டப்பட்ட அந்தப் பதக்கத்தை அவர் கையில் வைத்தார். நெப்போலியன் அதைப் பார்க்காமலேயே, இரண்டு விரல்களையும் ஒன்றாய் சேர்த்தார். அந்தப் பதக்கம் அந்த விரல்களுக்கு இடையில் இருந்தது. அங்கே கண்களைச் சுழற்றிக் கொண்டு, தமது சக்கரவர்த்தியைப் பார்த்துக்கொண்டே நின்ற லாஜாரெவ் என்பவரிடம் நெருங்கினார். அலெக்ஜாண்டர் சத்ரவர்த்தியைத் திரும்பிப் பார்த்து, தம்முடைய சாவுக்காகவே தாம் இதைச் செய்வதுபோல பாவனையில் சொல்லி, தம்முடைய சிறிய வெள்ளைக் கையால் பதக்கத்தை லாஜாரெவ் பொத்தான் ஒன்றில் வைத்தார். அந்த சிப்பாய் என்றென்றும் சந்தோஷமாய் இருப்பதற்கு அந்தச் சிப்பாயின் மார்பை தொட்டுவிட நெப்போலியனின் கை இணங்கினாலே போதுமென்றும், அதே பரிசு என்றும், உலகத்தில் மற்றவர்களைவிட அவர் சிறந்து விளங்குவதற்கு அதுவே போதுமென்றும், நெப்போலியன் அறிந்திருந்ததைப் போலத் தோன்றியது. லாஜாரெவ்வின் மார்பில் நெப்போலியன் அதை சும்மா வைத்து, தமது கையை கீழே தொங்கவிட்டு, தாம் வைத்தவுடனேயே அது அங்கே நின்றுவிடும் என்று நிச்சயமாக நம்பியவரைப்போல அலெக்ஜாண்டரைப் பார்த்தார்.

உண்மையிலேயே அந்தப் பதக்கம் அங்கே ஒட்டிக்கொண்டது. அங்கிருந்த ருஷ்யர்களும் பிரஞ்சுகாரர்களும், அந்தப் பதக்கத்தை உடனே பற்றி, அந்த யூனிபாரத்தில் மாட்டினார்கள். அந்த வெள்ளைக்கைகளை உடைய சிறிய மனிதர் தம்மிடம் எதோ செய்துகொண்டிருந்தபோது லாஜாரெவ் சடைவான தோற்றத்தோடு அவரை நோட்டமிட்டார். துப்பாக்கியைத் தூக்கிப் பிடித்து, இன்னமும் அசையாமல் நின்றுகொண்டிருந்தார். மீண்டும் நேராக அலெக்ஜாண்டரின் கண்களைப் பார்த்தார். இன்னமும் அங்கே நிற்க வேண்டுமா, போய்விடலாமா, அல்லது வேறு ஏதாவது செய்ய வேண்டுமா என்று கேட்பதைப் போல, அவருடைய பார்வை இருந்தது. எவ்விதமான உத்தரவும் கிடைக்காதபடியால், அதேமாதிரி விறைப்பான நிலைமையில் இன்னும் சிறிது நேரம் நின்று கொண்டிருந்தார்.

சக்கரவர்த்திகள் தங்கள் குதிரைகளில் மீண்டும் ஏறி சவாரி போனார்கள். ப்ரோப்ராஜென்ஸ்க் பட்டாளம் அணி வகுப்பிலிருந்து கலைந்தது. பின்னால் பிரஞ்சுக் காப்பாளர்களுடன் கலந்து, அங்கே போடப்பட்டிருந்த மேஜைகளுக்கு முன்பாக அமர்ந்தார்கள்.

மிகுந்த மதிப்பு கொடுக்கக்கூடிய இடத்தில் லாஜாரெவ் அமர்ந்தார். ருஷ்ய பிரஞ்சு அதிகாரிகள், அவரை ஆலிங்கனம் செய்து வாழ்த்துக்கூறி அவர் கைகளை அழுத்தினார்கள். அதிகாரிகளின் கூட்டங்களும் சிவிலியன் கூட்டங்களும் அவரைப் பார்ப்பதற்காக அவரிடம் நெருங்கினார்கள். அந்தச் சதுக்கத்தில் போடப்பட்டிருந்த மேஜைகளைச் சுற்றி அமர்ந்திருந்தவர்களின் ருஷ்ய, பிரஞ்சுக் குரல்களும், சிரிப்புகளும் அந்த இடத்தில் நிரம்பிக் கொண்டிருந்தன. சிவந்த முகங்களோடு, மிகுந்த மகிழ்ச்சியோடு, சந்தோஷத்தோடு, இரண்டு அதிகாரிகள் ராஸ்டோவைக் கடந்து போனார்கள்.

'விருத்தைப் பற்றி நீர் என்ன நினைக்கிறீர்? எல்லாவற்றையும் வெள்ளித் தட்டுகளில் பரிமாறினார்கள். லாஜாரெவ்வை நீர் பார்த்திருக்க வேண்டுமே அப்போது. லாஜாரெவ்வை அங்கே பார்த்தீரா?' என்று அவர்களில் ஒருவர் கேட்டார்.

'நான் பார்த்தேன்.'

'நாளை ப்ரோப்ராஜென்ஸ்க் பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள், அவர்களுக்கு ஒரு டின்னர் கொடுக்கப் போவதாக கேள்விக் படுகிறேன்.'

'ஆமாம், இந்த லாஜாரெவ்வுக்குத்தான் என்ன அதிருஷ்டம்! ஆயுள் பூராவாக 1200 பிராங்குகள் பென்ஷனாகக் கிடைக்கும்.

'இதோ ஒரு தொப்பி, வாலிபர்களே' என்று ஒரு ப்ரோப்ரா ஜென்ஸ்க் சிப்பாய் கூச்சலிட்டு, ஒரு ரோமம் நிரம்பிய கரடித்தோல் தொப்பியை தலையில் தரித்துக் கொண்டிருந்தார்.

'அது ரொம்ப அழகானது; முதல்தரமானது.'

'அந்த சங்கேத வார்த்தையை நீர் கேட்டீரா?' என்று ஒரு காப்பாளர் அதிகாரி மற்றொரு அதிகாரியைக் கேட்டார்.

''நேற்று வரையல் அந்த சங்கேத வார்த்தை, 'நெப்போலியன் பிரான்ஸ், தைரியம்' என்றிருந்தது. நேற்று முதல் அலெக்ஜாண்டர், ருஷ்யா, மகிமை'' என்று மாறியது. ஒருநாள் அதை நமது சக்கரவர்த்தி கொடுக்கிறார்; மற்றொரு நாள் அதை நெப்போலியன் கொடுக்கிறார்; நாளை நமது சக்கரவர்த்தி செயின்ட் ஜார்ஜ் சிலுவைப் பதக்கத்தை பிரஞ்சுக் காப்பாளர்களில் வீரமானவருக்குக் கொடுக்கிறார். அதைச் செய்தாக வேண்டும். பதிலுக்குப் பதில் அவர் கொடுத்தாகவேண்டும்.''

ப்ரோராஜென்ஸ்க் விருந்தைப் பார்ப்பதற்கு ஜிலின்ஸ்கி என்ற தமது நண்பரோடு போரிஸூம் வந்திருந்தார். தாம் திரும்பிப் போகும்போது, ஒரு வீட்டின் மூலை ஓரத்தில் ராஸ்டோவ் நிற்பதைப் பார்த்தார்.

'ராஸ்டோவ், சௌக்யமாய் இருக்கிறீரா? நாம் ஒருவரை யொருவர் சந்திக்காமல் போய்விட்டோம்'' என்று அவர் சொல்லி, 'விஷயம் என்ன?' என்று கேட்டார். ஏனெனில், ராஸ்டோவின் முகத்தில் அதைரியமும், துக்கமும் ஆச்சரியப்படும்படியான விதத்தில் காணப்பட்டன.

'ஒன்றுமில்லை; ஒன்றுமில்லை' என்றார் ராஸ்டோவ்.

'நீர் என் ஜாகைக்கு வரமாட்டீரா?'

'ஆமாம், நான் வருவேன்.'

அதே மூலையில் வெகுநேரம் ராஸ்டோவ் நின்றுகொண்டு, தூரத்தில் நடந்த அந்த விருந்தைக் கவனித்துக் கொண்டிருந்தார். அவருடைய மனத்தில் ஒரு வேதனையான மாறுதல் நடந்துகொண்டிருந்தது. அதை முடிவுக்குக் கொண்டுவர அவரால் முடியவில்லை. பயங்கரமான சந்தேகங்கள் அவருடைய உள்ளத்தில் கிளம்பின. டெனைசாவ் மாறிப் போயிருப்பதையும், அவருடைய சரணாகதியையும், அந்த ஆஸ்பத்திரியையும், அங்கே கை, கால் இழந்த நபர்கயையும், அங்கு காணப்பட்ட அசுத்தங் களையும், வியாதிகளையும், அவர் நினைவு கூர்ந்தார். அந்த ஆஸ்பத்திரியில் மாமிசம் அழுகி வீசிய போது, அது அங்கிருந்து வருகிறது என்று கண்டு பிடித்தது. இப்போது மிகத் தெளிவாக அவர்

ஞாபகத்திற்கு வந்தது. அடுத்தபடியாக, சுயதிருப்தி கொண்ட அந்த போனபார்ட்டைப் பற்றியும், அவருடைய சிறிய வெள்ளைக் கையைப் பற்றியும், அவர் இப்போது ஒரு சக்கரவர்த்தியாய் விட்டதைப் பற்றியும், அலெக்ஜாண்டாரால் விரும்பப் படுவதையும், மதிக்கப் படுவதைப் பற்றியும் அவர் நினைத்தார். அப்படியானால் இந்த மனிதர்கள் எதற்காக காலையும், கையையும் இழந்து கொண்டிருக்க வேண்டும்...? அடுத்தபடியாக, லாஜாரெவ்வுக்குப் பரிசு கிடைத்ததையும், டெனைசாவ் தண்டிக்கப் பட்டதையும், அவருக்கு மன்னிப்பு கொடுக்கப்படாததையும் அவர் நினைத்தார். இம்மாதிரியான விசித்தரமான நினைப்புகள் அவர் உள்ளத்தில் நிறைந்து நிற்பதைக் கண்டு அவருக்கு பீதி ஏற்பட்டது.

ப்ரோப்ராஜென்ஸ்க் பட்டாளத்தார் உண்டுகொண்டிருந்த உணவின் வாசனையும், அவருக்கு ஏற்பட்ட பசியும் அவருடைய ஏற்பட்ட பசியும் அவருடைய சிந்தனைகளை மாற்றின. புறப்பட்டுப் போவதற்கு முன்பாக, அவர் எங்கேயாவது சாப்பிட்டாக வேண்டுமென்று நினைத்தார். அன்று காலையில் அவர் கவனித்த ஒரு ஹோட்டலுக்குச் சென்றார். அங்கே தம்மைப் போன்ற அதிகாரிகள் சிவிலியின் உடையிலும் வேறு பலரும் ஏராளமாய் இருந்தபடியால், அவருக்கு டின்னர் கிடைப்பதற்குக் கஷ்டமாயிருந்தது. அவருடைய பிரிவைச் சேர்ந்த இரண்டு அதிகாரிகள், அவரோடு சேர்ந்துகொண்டார்கள். உடனே அவர்களின் உரையாடல் இயற்கையாக, சமாதானப் பேச்சில் திரும்பியது. அந்த அதிகாரிகள், அவருடைய தோழர்கள் ஆகியவர்கள், அந்த ராணுவத்திலுள்ள பெரும்பாலானவர்களைப் போலவே, பிரீலாண்ட் யுத்தத்திற்குப் பின்னால் ஏற்பட்ட இந்த சமாதானத்தைக் கண்டு அதிருப்தி அடைந்தார்கள். இன்னும் சிறிது நேரம் நாம் தாக்குப் பிடித்திருந்தால், நெப்போலியனை அங்கேயே சமாப்தி பண்ணியிருக்கலாம் என்றும், அவருடைய துருப்புகளுக்கு உணவுப் பொருளோ, யுத்தத் தளவாடங்களோ இல்லை என்றும் அவர்கள் சொன்னார்கள். நிக்கலஸ் மௌனமாக உண்டும் குடித்தும் வந்தார். உண்பதைவிட குடிப்பதையே அதிகமாயச் செய்தார். இரண்டு புட்டி ஒயினை அவர் குடித்தார். அவர் மனத்தில் நடந்துகொண்டிருந்த அந்த மாறுதல் ஒரு முடிவிற்கு வராமல் அவரை வேதனை செய்து கொண்டே இருந்தது. அந்த நினைப்புகளுக்கு இடம் கொடுப்பதற்கு அவர் பயந்தார். என்றாலும் அவற்றை ஒதுக்கித் தள்ள அவரால் முடியவில்லை. திடீரென்று அங்கிருந்த ஒரு அதிகாரி பிரஞ்சுக்காரர்களைப் பார்ப்பதற்கு இளப்பாய் இருக்கிறதென்று சொன்னார். உடனே ராஸ்டோவ் மிகுந்த அவசியமில்லாத உணர்ச்சிகொண்டு கூச்சலிட

ஆரம்பித்தார். அங்கிருந்த அதிகாரிகள் அதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். அதாவது:

'எது நல்லது என்பதை உங்களால் எப்படித் தீர்மானிக்க முடியும்? என்று அவர் கூச்சலிட்டபோது அவருடைய ரத்தம் முகத்தில் பாய்ந்தது. 'சக்கரவர்த்தியின் காரியங்களைப் பற்றி, நீர் எப்படி குணதோஷம் கூற முடியும்? அவற்றைப்பற்றி விவாதிப்பதற்கு நமக்கு என்ன உரிமை இருக்கிறது? சக்கரவர்த்தியின் நோக்கங்களைப் பற்றியோ, செய்கைகளைப் பற்றியோ நாம் எதையும் புரிந்து கொள்ள முடியாது.'

'சக்கரவர்த்தியைப்பற்றி ஒரு வார்த்தைகூட நான் சொல்லவில்லையே!' என்று சமாதானம் கூறுபவரைப்போல் அந்த அதிகாரி சொன்னார். ராஸ்டோவின் திடீர் சல சலப்பை அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர் குடித்திருப்பதால் அப்படிப் பேசுகிறாரா என்று நினைத்தார்.

ஆனால் ராஸ்டோவ் அவர் சொன்னதைக் கவனிக்கவில்லை.

'நாம் எல்லோரும் ராஜதந்திர சேவையைச் சேர்ந்த அதிகாரிகள் அல்ல. நாம் சிப்பாய்கள். அதற்கு மேலாக எதுவுமில்லை' என்று அவர் மேலும் பேசினார். 'சாக வேண்டுமென்று நமக்கு உத்தரவு கொடுக்கப்பட்டால், நாம் சாகத்தான் வேண்டும். நாம் தண்டிக்கப்பட்டால், தண்டனைக்கு உரியவர்கள் என்றுதான் அர்த்தம். அவற்றைப்பற்றி தீர்ப்புக் கூறுவது நம்மைச் சேர்ந்ததல்ல. நமது சக்கரவர்த்தி, போனபார்ட்டை ஒரு சக்கரவர்த்தியாக அங்கீகரிக்க வேண்டுமென்று விரும்பினால், அவருடன் உடன்படிக்கை செய்து கொள்ள வேண்டுமென்று விரும்பினால், அந்தக் காரியங்கள் சரியான காரியங்கள் என்பதுதான் அதற்கு அர்த்தம். ஒவ்வொரு காரியத்தைப் பற்றியும் நாம் விவாதிக்கவும் முடிவு கூறவும் ஆரம்பித்துவிட்டால், அப்புறம் புனிதமான காரியமென்று எதுவுமே இருக்காது. அந்த வழியில் 'கடவுள் இல்லை, ஒன்றுமே கிடையாது' என்றுகூட நாம் சொல்ல ஆரம்பிக்கலாம்' என்று நிக்கலஸ் மேஜையைத் தட்டிக் கூச்சலிட்டார். பேசிக்கொண்டிருந்த விஷயத்திற்கும், அவர் பேசுவதற்கும் கொஞ்சங்கூட சம்பந்தமோ தொடர்போ இல்லையென்று, அங்கிருந்தவர்கள் உணர்ந்தார்கள். ஆனால், ராஸ்டோவின் மனதில் என்ன எண்ணங்கள் ஓடிக்கொண்டிருந்தனவோ, அவற்றிற்கு அவை தொடர்பு உள்ளவையாய் இருந்தன.

'நம் கடமையைச் செய்வதுதான் நம்முடைய வேலை. அதாவது நாம் யுத்தம் செய்ய வேண்டுமேயொழிய, யோசனை செய்யக் கூடாது. அவ்வளவுதான்...' என்றார் அவர்.

'இப்போது நாம் குடிக்கலாம்' என்று அந்த சண்டையை விரும்பாத அங்கிருந்த ஒரு அதிகாரி சொன்னார்.

'ஆமாம், இப்போது நாம் குடிக்கலாம். அங்கே யார்? இன்னொருபாட்டில் கொண்டுவா?' என்று அவர் கூச்சலிட்டார்.

# 5

## 22

எர்பர்ட் என்ற இடத்திற்கு 1808-ம் வருஷத்தில் நெப்போலியன் சக்கரவர்த்தியோடு மற்றொரு முறை பேசுவதற்காக அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி போனார். இந்த முக்கியமான சந்திப்பின்போது நடந்த மகத்தான ஆடம்பர வைபவங்களைப்பற்றி, பீட்டர்ஸ்பர்க்கின் உயர் வட்டாரங்களில் மிக அதிகமாகப் பேசப்பட்டன.

'உலகத்தின் இரண்டு நீதிபதிகள்' என்று அலெக்ஜாண்டரும், நெப்போலியனும் அழைக்கப்பட்டார்கள். 1809-ம் வருஷத்தில் அவர்கள் இடையில் ஏற்பட்ட அன்னியோன்னியம் மிக அதிகமாய் வளர்ந்தபடியால், ஆஸ்திரியாமீது நெப்போலியன் யுத்தப் பிரகடனம் செய்தபோது, அது பழைய விரோதியான போனபார்ட்டுக்கு உதவி செய்வதற்காகவும், நம்முடைய பழைய நண்பரான ஆஸ்திரிய சக்கரவர்த்திக்கு எதிராக நடவடிக்கை எடுப்பதற்காகவும், ஒரு ருஷ்யப் பட்டாளம் எல்லையைக் கடந்து சென்றது. அலெக்ஜாண்டரின் சகோதரிகளில் ஒருவளை, நெப்போலியனுக்கு திருமணம் செய்து கொடுப்பதுகூட சாத்யமாய் இருக்கலாமென்று, அரச சபை வட்டாரங்களில் பேசப்பட்டு வந்தன. வெளிநாட்டுக் கொள்கைகளைப் பற்றி சிந்தித்து வந்ததோடு, ருஷ்ய சமூகம் அச்சமயம் மிகுந்த சிரத்தையோடு, சர்க்காரின் சகல இலாகாக்களிலும் உள்நாட்டில் நடந்துவந்த மாறுதல்களையும் கவனித்து வந்தது.

இதற்கிடையில் வாழ்க்கை, உண்மையான வாழ்க்கை, அதற்கு அவசியமான பிரச்சினைகளான ஆரோக்கியம், அசௌக்கியம், உழைப்பு, ஓய்வு ஆகியவைகளிலும், அதன் சிந்தனை பிரச்னைகளான கருத்துகள், விஞ்ஞானம், சங்கீதம், காதல், நட்பு, விரோதம், ஆசைகள், ஆகியவைகளிலும் உண்மையான வாழ்க்கை - வழக்கம்போல், நெப்போலியன் போனபார்ட்டிடம் அரசியல் நட்பு ஏற்பட்டிருக்கிறதா, அல்லது விரோதம் ஏற்பட்டிருக்கிறதா என்பதை கவனிக்காமலே, அதன் வழியில் நடந்துகொண்டிருந்தது.

★★★

## விளக்க உரைகள்

**5 (2)**

'பிரீமேஸன்களின் சகோதரக் கூட்டம்'. 1760-ஆம் வருஷத்தில் ருஷ்யாவில் பிரீ மேஸன் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. இங்கிலாந்து, ஸ்காட்லாந்து தேசங்களில் இருந்த சங்கங்களின் உறவுகளைக் கொண்டு அது ஸ்தாபிக்கப்பட்டது. ஆனால், அரசியல் சீர்திருத்தங் களில் அதற்கு சிரத்தையுண்டு என்ற சந்தேகம் ஏற்பட்டது. அதனால், காத்தரைன் ஆட்சி காலத்தில், அதன் மீது அடக்கு முறையினால் கஷ்டப்பட்டது. முதலாவது அலெக்ஜாண்டர் காலத்தில், அது முழுவதுமாக அழிக்கப்பட்டு விட்டது. அவருடைய ஆட்சி காலத்தில், எந்த ரகசிய சங்கதையும் அவர் விட்டு வைக்கவில்லை.

**5 (3)**

ரூம்யாண்ட்சேவ் பொருட்காட்சி சாலை மாஸ்கோவில் இருக்கிறது. அங்கே மிகச் சிறந்த புத்தகங்கள் ஏராளமாய் உண்டு. அங்கிருந்த புத்தகங்களிலிருந்தும் கையெழுத்துப் பிரதிகளி லிருந்தும் பிரீ மேஸன் சங்கத்தின் சடங்குகளைப்பற்றி டால்ஸ்டாய் படித்தறிந்திருக்கிறார். 1866-ஆம் வருஷத்து இலையுதிர் காலத்தில் தம்து மனைவிக்கு அவர் எழுதிய ஒரு் கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :-

'நான் காபி சாப்பிட்ட பின்பு ரூம்யாண்ட்சேவ் பொருட்காட்சி சாலைக்குப் போய் இருந்தேன். அங்கே மூன்று மணி வரையில் உட்கார்ந்து, பிரீ மேஸன் சங்கத்தைப் பற்றிய ஸ்வாரஸ்யமான கையெழுத்துப் பிரதிகளைப் படித்துக் கொண்டிருந்தேன். அதை நான் வாசித்ததால் எனக்கு ஏற்பட்ட சோர்வு எம்மாதிரி இருந்தது என்பதை, என்னால் உனக்கு வருணிக்க முடியாது.' அன்று முழுவதுமாக அந்த சோர்விலிருந்து நான் தப்ப முடியவில்லை. எல்லாவற்றையும் விட மனதிற்குக் கஷ்டமானது என்னவென்றால், அந்த பிரீ மேஸன்கள் அத்தனை பேரும் முட்டாள்களாய் இருக்கிறார்கள்.' டால்ஸ்டாய் அந்த சங்கத்தின் நோக்கங்களில் அனுதாபம் காட்டினார். ஆனால், அதனுடைய முறைகள் பயனற்றவை என்று நினைத்தார்.

**5**
**6**

'உத்தேசிக்கப்பட்ட ஒப்பந்தத்தின் அடிப்படைகள் கை கூடுபவை அல்லவென்று வீயன்னா கருதுகிறது.' இங்கே டால்ஸ்டாய், சம்பவங்கள் உண்மையாக நடப்பதற்கு முன்பாகவே எழுதிவிட்டார். பிரஷ்யாவுக்கும் ருஷ்யாவுக்கும் மத்தியில் உத்தேசிக்கப்பட்ட பார்டென்ஸ்டைன் ஒப்பந்தத்தைப் பற்றிப் பேசப்படுகிறது. அந்த ஒப்பந்தத்தில் சேரும்படி ஆஸ்திரியாவை அழைத்தார்கள். 1807-ம் வருஷம் ஏப்ரல் மாதம் வரையில் அந்த ஒப்பந்தம் பூர்த்தியாக வில்லை. ஐலாவ் போரும், இன்னும் வேறு சில சம்பவங்களும், அடுத்த அத்தியாயத்தில் குறிப்பிடுகிறபடி நடைபெறுவதற்கு முன்பாக அந்த ஒப்பந்தம் பூர்த்தியாகவில்லை. அந்தப் போரில் நெப்போலியனுக்கு வெற்றி கிடைக்கவில்லை. அதனால், சமாதானத்தை அவர் விரும்பினார் என்று தோன்றுகிறது. இந்த சந்தர்ப்பத்தை தாம் உபயோகித்துக் கொள்ள அலெக்ஜாண்டர் விரும்பினார். ஆகவே, அந்த உத்தேசித்த ஒப்பந்தத்தில் நேச நாடுகள் சில நிபந்தனைகளை விதித்தன. ஆனால், வீயன்னா மட்டும், நெப்போலியனுக்கு நிபந்தனைளை விதிப்பது உபயோகமில்லை யென்று கருதியது. ஏனெனில், அவைகளை அவர் நிராகரித்து விடுவது நிச்சயம் என்று நினைத்து. இம்மாதிரியாக மே மாதம் வரையில் விஷயங்கள் இழுத்துக்கொண்டே போகப்பட்டன. அச்சமயம், பிரீட் லாண்டில் நெப்போலியனுக்குக் கிடைத்த வெற்றியானது இந்த விஷயங்களின் தோற்றத்தை மாற்றியது. பார்டென்ஸ்டைன் ஒப்பந்தம் அமலுக்கு வரவே இல்லை. ஆனால், நெப்போலியனுக்கு சம்மதமான ஒரு சமாதான உடன்படிக்கை டில்சிட்டில் முடிந்தது.

**5**
**8**

'போனபார்ட் மீது பெனிக்ஸன் ஒரு பூரண வெற்றியை அடைந்தார் என்று தோன்றுகிறது'. பிரிஷிஷ்-ஐலாவ் என்ற இடத்தில் ஜனவரி கடைசியில் நடந்த போரைப்பற்றியே இது குறிப்பிடுகிறது. நெப்போலி யனுடைய முழு திட்டத்தையும் கவிழ்ப்பதற்கு ருஷ்யரால் முடிந்தது என்றாலும், அவர்கள் பின்வாங்கினார்கள். புதிதாகப் போர் தொடுக்க அவர்களால் முடியவில்லை. நெப்போலியனைப் பொறுத்த வரையில் ஐலாவிலேயே சில தினங்கள் தங்கினார். களைப்படைந்த தமது ராணுவத்தை சில தினங்கள் அங்கேயே வைத்திருந்து, பின்னால் பின்வாங்கிக் கொண்டார். ஆனால், பொய்யின் மேல் பொய்யாக அடுக்கிவைத்த, ஒரு வெற்றி தமக்குக் கிடைத்ததாக அறிவித்தார். ருஷ்யார்களும் அதே மாதிரி தான் செய்தார்கள்.

**5** (13)

'கடவுளின் மக்களோடு' இளவரசி மேரி செய்துவந்த உரையாடல்களை டால்ஸ்டாய் தமது குடும்பத்து கதைகளைக் கொண்டும், தம்முயை குழந்தைப் பருவத்தில் தாம் கவனித்த விஷயங்களைக் கொண்டும் எழுதினார். அம்மாதிரியான யாத்ரீகர்கள் பல மாதங்களோ, வருஷங்களோ, அல்லது அவர்கள் ஆயுள் பூராவுமோ செலவிட்டு, புண்ணிய ஸ்தலங்களை தரிசித்து வந்தார்கள்... சாலாவெட்ஸ் சந்நியாசி மடத்திலிருந்து, ஜெருசலம் வரையில் அவர்கள் போவார்கள். போகிற வழிகளில் பிச்சையெடுத்துக் கொண்டு போவார்கள். இது ருஷ்யாவில் மிகவும் சாதாரணமானது. இந்த யாத்ரீகர்களில் ஏராளமானவர்கள், அங்கஹீனமாகவும், புத்தி சுவாதீனம் இல்லாமலும் இருப்பார்கள். இளவரசி மேரியைப் போன்ற மதப்போக்கு உள்ளவர்களுக்கு, அவர்களை ஆதரிப்பது மிகவும் சாதாரண வழக்கமாய் இருந்தது. யாஸ்னாயா பாலியானா என்ற இடத்தில், டால்ஸ்டாயின் அத்தையான கோமகள் ஆஸ்டன் - சாக்கன் என்பவள் அவர்களுக்கு உதவி செய்வதுண்டு.



**5** (15)

'மனிதர்களுக்கு உணவோ, குதிரைகளுக்குத் தீனியோ கிடைக்கவில்லை'. *1806-07* யுத்தங்களைப் பற்றி எழுதிய புத்தகத்தில் மிக்கார்ய்லாவ்ஸ்கி சொல்லுகிறார்:

'இலை துளிர் காலத்தில் தானியங்கள் கிடைக்காமல் இருந்ததால், மேலிடத்தில் அசதி ஏற்பட்டது. சப்ளை இலாகாவில் ஏற்பட்ட ஊழல்களை அவர்களால் தவிர்க்க முடியவில்லை. ராணுவத்தில் பசி இருக்கிறது என்று அனுப்பிய அறிக்கைக்குப் பதிலாக பெனிக்ஸ்ன் ஒரு தடவை பின்வருமாறு பதில் அளித்தார்: 'சகித்துக் கொள்வது எப்படி என்று அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். என்னுடைய சொந்த டின்னருக்கே எனக்கு மூன்று வகை உணவுதான் கிடைக்கிறது'. உணவுப் பொருளை, மற்றொரு ஜெனரல் அடித்துப் பறிப்பது வழக்கம். அநேகமாக பெனிக்ஸனின் முன்னோடித் துருப்புக்கு ரொட்டி கிடைப்பதே இல்லை. சிப்பாய்கள் பசியினால் உடல் வீங்கி மாண்டார்கள். ஆஸ்பத்திரிகள் மிகுந்த மோசமான நிலைமையில் இருந்தன.'

5

19

டில்சிட்டில் சக்கரவர்த்திகளின் சந்திப்பைப்பற்றி டால்ஸ்டாய் செய்திருக்கும் வருணனை, சரித்திரத்திற்கு மிகவும் நெருக்கமான தொடர் புள்ளதாக இருக்கிறது. பிரஷ்யாவின் மன்னர் மீது காட்டப்பட்ட அவமரியதையைப்பற்றி, டால்ஸ்டாய் எதுவும் சொல்லவில்லை. சக்கரவர்த்திகள் கூடியிருந்த கூடாரத்திற்கு பிரஷ்ய மன்னரை அழைக்கவில்லை. அவர்கள் இரண்டு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தபோது, அந்த பிரஷ்ய மன்னர், அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் தூதரான இளவரசர் வால்கோன்ஸ்கியோடு நீமென் நதிக்கரையில், ஒரு தண்டனை அடைந்த பள்ளிக்கூடச் சிறுவனைப்போல, எதுவும் பேசாமல் நின்றுகொண்டிருந்தார். அலெக்ஜாண்டரின் வேண்டுகோளின் மீதுதான், நெப்போலியன் மறுநாள் பிரஷ்ய மன்னரை வரவேற்றார். ப்ரோப்ராஜென்ஸ்க் பட்டாளம், பிரஞ்சு காப்பாளர் படை செய்த உபசாரத்திற்கு சமமாக, உபசாரம் செய்ய முடியவில்லை யென்பதை டால்ஸ்டாய் குறிப்பிடாமல் விட்டுவிட்டார். ஏனெனில், அவர்களிடம் வெள்ளித் தட்டுகள் இல்லை. அதிகமாக விலை கொடுக்கத் தயார் என்று அலெக்ஜாண்டர் சொல்லிய போதும்கூட, அவைகளை அவர்களால் பெறமுடியவில்லை.

★★★

லியோ டால்ஸ்டாய்

# போரும் அமைதியும்

## முதல் பாகம்



சீதை பதிப்பகம்